# கழகவழி வெளிவந்துள்ள
# காப்பிய நூல்கள்

விளக்கவுரை யாசிரியர் :

பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனார்

சிலப்பதிகாரம்

சீவகசிந்தாமணி (2 பகுதிகள்)

வளையாபதி, குண்டலகேசி

சூளாமணி (2 பகுதிகள்)

நீலகேசி

உதயண குமார காவியம்

…ங்கதை

இலாவாண காண்டம்

உஞ்சைக் காண்டம்

மகத காண்டம்,

வத்தவ, நரவாண காண்டங்கள்

---

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
சென்னை-1

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம் திருச்சிராப்பள்ளி-2

# பதிப்புரை

சீரிய செந்தமிழ் மொழியிலே சிறந்து விளங்குவன சங்க காலச் செந்தமிழ் நூல்களாம். அவை ஐம்பெருங்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு என்பனவாம். சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பன ஐம்பெருங்காப்பியங்களாம். ஐம்பெருங்காப்பிய நூல்களில் மூன்றாவதாகத் திகழும் இம் மணிமேகலை சிலப்பதிகாரத்தோடு தொடர்புடையது. இந்நூலை இயற்றியவர் மதுரை மாநகரிலே கூலவாணிகஞ் செய்து கொண்டிருந்த 'சாத்தனார்' என்னும் புலவர் பெருமானாவர். இவர் கூலவாணிகராயினும் பேரறிவு சான்றவர். இளங்கோவடிகளாலும் பாராட்டிப் போற்றப் பெற்றவர்.

பேரறிவும் பெரும்புலமையும் அமையப்பெற்ற சாத்தனார் தாமாராய்ந்து கண்ட நுண்பொருள்கள் அவமே கழிந்தொழியாவாறு உலகில் நிலைபெறுத்துவான் எண்ணங்கொண்டவராய் இம் மணிமேகலையை இயற்றினார். இம் மணிமேகலை நுட்பமான கருத்துகளை மிகுதியாகத் தன்னிடத்தே கொண்டதென்பது 'மணிமேகலை நுட்பங் கொள்வதெங்ஙன்?' என்னும் ஆன்றோர் உரையானும் நன்குணரப் பெறும். செந்தமிழ் நங்கைக்கு நூல்களை அணிகலன்களாகக் கற்பிக்கத் தொடங்கிய ஆன்றோர் ஐம்பெருங்காப்பிய நூல்களையும் ஐந்து அணிகலன்களாகக் கற்பித்துள்ளனர். அவற்றுள் இம் மணிமேகலை 'மேகலை' என்னும் அணியாகும்.

இவ்வரும்பெருங் காப்பியம் முதற்கண் பெரும் பேராசான் கலை மருத்துவர் (மகாமகோபாத்யாய டாக்டர்) உ. வே. சாமிநாதையரவர்களால் மிகுந்த முயற்சியெடுத்துப் பல ஓலைச் சுவடிகளை ஒப்புநோக்கிச் செப்பஞ் செய்தும், கதைச் சுருக்கம், மேற்கோள் விளக்கம் எழுதியும் அருஞ்சொற்பொருள் விளக்கத்தோடு வெளியிடப் பெற்றது. றந்த

ாமகளைக்

ஏறக்குறைய ஐம்பதாண்டுகள் வரை இம் ம கவே புத்தருக்கும் பதிப்பே விளங்கி வந்தது. அதன்பின் 19

நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார், திரு. ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளை ஆகியவர்களைக்கொண்டு பதவுரை விளக்கவுரைகள் எழுதப்பெற்றுப் பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்க வெளியீடாகத் திரு. மு. காசி விசுவநாதன் செட்டியாரவர்கள் பொருளுதவி கொண்டு கழக வாயிலாக வெளியிடப் பெற்றது. இவ்வுரையும் மூன்று பதிப்புக்கள் வரை வெளிவந்தது.

மணிமேகலைக்கு மேலுஞ் சிறந்த முறையில் விரிவான உரையை எழுதி வெளியிட வெண்டுமென்று தமிழறிஞர்களும் புலவர் கல்லூரி மாணவர்களும் விரும்பியவாறு சங்க நூல்கள் பலவற்றிற்கும் சிறந்த முறையில் உரையெழுதிப் புகழ்பெற்ற பெருமழைப் புலவர் திரு. பொ. வே. சோமசுந்தரனர் அவர்களைக் கொண்டு இப்பொழுது இச் சீரிய உரையை எழுதச் செய்து கழகம் வெளியிடுகிறது. இவ்வுரைக்கண் விளக்கப்பெற வேண்டிய நுட்பக் கருத்துகளும் பௌத்த சமயக் கொள்கைகளும் தெள்ளத் தெளிய நன்கு விளக்கப் பெற்றுள்ளன. ஆண்டாண்டு அருஞ்சொற்களுக்கு உரையெழுதப்பட்டிருத்தலோடு நூலின் இறுதியில் விரிவான அருஞ்சொற்பொருள் அகரவரிசையுந் தொகுத்தமைக்கப்பட்டிருக்கிறது.

இதன்கண் உரையாசிரியரவர்கள் எழுதியுள்ள விரிந்ததோர் ஆராய்ச்சி முன்னுரை இந்நூலின் தனிப்பெருஞ் சீரினையும் சிறப்பினையும் எடுத்து விளக்குவதாகும். இவ்வுரைகளைக் கொண்டே மணிமேகலையின் நுண்பொருள்களை யெல்லாம் ஆசிரியர் உதவியின்றி இனிதுணர்ந்து கொள்ளலாம். இப்புத்துரை தமிழறிஞர்கட்கும் மணிமேகலை பயில்வார்க்கும், புலவர் கல்லூரி மாணவர்கட்கும் பெரிதும் மகிழ்ச்சியை அளிக்கும் என்பது ஒருதலை. கழகத்தார் விரும்பியவாறு இவ்வுரையை அமைத்துத் தந்த பெருமழைப் புலவர் திரு. பொ. வே. சோமசுந்தரனர் அவர்கட்குக் கழகத்தாரின் நன்றி உரியதாகுக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# அணிந்துரை

## நூலும் நூல்நுதலிய பொருளும் :

மணிமேகலை என்னும் இந்நூல் பெருங்காப்பியம் ஐந்தனுள் ஒன்ருகும். இதனை இயற்றியவர் 'மதுரைக் கூல வாணிகன் சாத்தனுர்' என்னும் நல்லிசைப் புலவராவார். சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் இவையே ஐம்பெருங் காப்பியங்களாகும். இக் காப்பியங்கள் ஐந்தனுள் நடுநாயக மணிபோன்று நடுவண் நின்று திகழ்வது இம் மணிமேகலையேயாம். இறுதியில் நின்ற இரு காப்பியங்களின் ஒரு சில செய்யுள்கள் நிற்ப எஞ்சிய பகுதி யெல்லாம் இறந்தொழிந்தன. மணிமேகலை என்னும் இக் காப்பியம் நுதலிய பொருளாகிய பௌத்த சமயம் இந் நிலவுலகிற் பற்பல நாட்டைத் தனதாட்சியின்பாற் படுத்திக் கொண்டுளது. இப் பௌத்த சமயம் இற்றைக்கு ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு-அஃதாவது கடைச் சங்க காலத்தே - தனது புதுமைப் பொலிவுடன் இத் தமிழகத் தியேலும் பரவி மாந்தர் உளத்தைக் கவர்வதாயிற்று. புத்தர் கூறிய அறங்களைக் காட்டினும் அப் பெருமானுடைய ஒப்பற்ற ஒழுக்கமே அக் காலத்தே இத்தமிழகத்து அறிஞர் உளத்தையும் கவர்வதா யிருந்தது.

## புத்த பெருமான் :

புத்த பெருமான், தமக்கென வாழாது பிறர்க்கெனவே வாழ்ந்ததொரு பெருந்தகையாளராவார். இவர் வட நாட்டில் ஒரு மன்னனுக்கு அரும்பெறல் மகவாகத் தோன்றியவர். இவர் பிறந்தநாள் தொடங்கிக் கட்டிளங் காளைப் பருவம் எய்துமளவும் பிறவுயிர்கள் படும் துயர் கண்டு ஆற்ருமற் பெரிதும் வருந்தும் இயல்புடையவராக இருந்தார். மேலும் தமக்குரிய அரசாட்சி செல்வம் செல்வாக்கு முதலியவற்றிற் சிறிதும் பற்றில்லாதவருமாக இருந்தார். இவருடைய இத்தகைய இயல்பைக் கண்டு தந்தையாகிய சுத்தோதன மன்னன் பெரிதும் கவலையுற்ருன். இவர் துறவியாய் விடுவரோ என்று அஞ்சினுன். இவர் துறவியாகாமைப் பொருட்டுச் சிறந்த அழகும் குணமும் செறிந்த அசோதரை என்னும் கோமகளைக் கடிமணமும் செய்து வைத்தான். அணித்தாகவே புத்தருக்கும்

அசோதரைக்கும் ஆண்மகவும் ஒன்று பிறந்தது. மகவன்பு தம்மைப் பற்றி யிர்த்தலை யுணர்ந்த புத்தருடைய உள்ளுணர்வு விழித்துக் கொண்டது. அதன் தூண்டுதலாலே உலகப் பற்றினைத் துவர நீத்துத் துறவுமேற் கோடற்குத் துணிந்தனர்.

ஒருநாளிரவின் முற்பகுதியில் அயர்ந்துறங்கிக் கொண்டிருந்த பொழுது அவருடைய கனவில், 'சுத்த வாசுதேவர்' என்னும் தெய்வம் துறவுக் கோலத்தோடு தோன்றி ஏதோ அறஞ்சில கூறி மறைந்தது. விழிப்புற்ற புத்தர் அப்பொழுதே துறக்குந் துணிவுபூண்டு எழுந்து துயில் கொண்டிருக்கும் தம் அன்பு மனைவியாகிய அசோதரை யறியாவண்ணம் படுக்கை யறையின் வாயில்வரையிற் சென்றார். சென்றவர் உள்ளத்தே மகவன்பு முனைத்தெழுந்து அவரைத் தடைசெய்து மயக்கியது; மயங்கியவர் மீண்டு சென்று மணிவிளக்கின் ஒளியிலே துயில்கின்ற மனைவியின் மருங்கே இளங்கதிர் எனத் துயில் கொண்டிருக்கின்ற மைந்தன் இராகுலன் முகத்தைக் கூர்ந்து நோக்கிய வண்ணம் சிறிது பொழுது நின்று மயங்கினர். அப்பொழுது அவர் உள்ளுணர்வு தலையெடுத்து அவர் மயக்கத்தைத் தெளிவிப்ப 'இதுவோ காமத்தியற்கை இதுவே யாயின் கெடுக அதன் திறம்' என்று தெளிவும் துணிவும் பெற்றுத் தேரிலேறி அந் நள்ளிரவிலேயே அரண்மனையையும் நாட்டையும் கடந்து மெய்ப்பொருளை நாடிக் கானகத்தினூடே தொலைதூரம் சென்றனர். அவர் போக்கினை உலகத்தவர் அறியா வண்ணம் தெய்வங்கள் உதவி செய்தன. தேர்ப்பாகனைத் தேற்றித் தம்மிருப்பிடத்தைப் பிறர்க் கறிவிக்க வேண்டா என்று அறிவித்துத் தாம் தமியராகவே மக்கள் வழக்கற்ற அக் காட்டினூடு பின்னும் நெடுந் தொலைவு சென்றனர்.

**புத்தர் காலத்துச் சமயக் கணக்கர் புன்மை :**

புத்தபெருமான் காலத்தே வைதிக சமயவாதிகளே பல்வேறு கிளைகளாகப் பிரிந்து மதியிலிகளாகிய மன்னர்களை மயக்கி அவர் துணை கொண்டு செல்வமும் செல்வாக்கு முடையராகி, வேதவேள்வி என்னும் பெயரால் யாண்டும் ஆக்களும் குதிரைகளும் இன்னோரன்ன பிறவுமாகிய உயிரினங்களை அவ் வேள்விக் களத்திலே கொன்று அவற்றின் இறைச்சிகளையும் தின்றுகொண்டு சோமரசம் என்னும் ஒரு வகைக் கள்ளையும் வேண்டுமளவு பருகி இவையே கடவுள் வழிபாடு என்று சொல்லிக் கொண்டு நாடெங்கும் களியாட்டம் நிகழ்த்துவாராயினர். இவ் வேத வேள்விகள் செய்வோர்

துறக்கம் புகுவர், வீட்டுலகமும் எய்துவர் என்றும் யாங்களே கடவுளுக்கு மிகவும் அணுக்கமானவர், எம்மையும் வேள்விகளையும் இகழ்வோர் நிரையம் புகுவர் என்றும் மக்களை அச்சுறுத்தினர்.

சமயங்களின் இயல்பு :

சமயங்களை ஆறுகளோடு ஒப்பிடுவர் சான்றோர். ஒரு வகையில் இவ்வுவமை பெரிதும் பொருந்துவதே யாகும். என்னை ? யாதேனும் ஒரு சமய நெறியை முதன் முதலாக வகுப்பவர் மாந்தர்க்கு உறுதி பயக்கும் நல்லறங்களையே அச் சமய வொழுக்கமாக அறிவுறுத்தி யிருப்பர். பிற்காலத்தே தன்னலம் பேணும் கயவர் தாம் விரும்புகின்ற பொருளும் புகழும் தாம் வேண்டுமளவு ஈட்டுதற்குரிய நெறிகளாகவும் தாமும் தமது வஞ்சகமும் கரந்துறையும் வெங் குகைகளாகவும் அந் நன்னெறிகளைப் புன்னெறிகளாக மாற்றி விடுகின்றனர். இவ்வாற்றால், பெரும்பாலும் சமயங்கள் அனைத்துமே மாசுடையனவாகவே காணப்படுகின்றன. எனினும் அம் மாசுகளைப் போக்கி அவற்றின் குறிக்கோளை நோக்க வல்லார்க்கு அவற்றினூடும் செம்பொருள் காண்டல் கூடும். இவ் விளக்கம் எல்லாச் சமயங்கட்கும் பொருந்தும். முகில் தூய்தாகவே பெய்கின்ற நீர் தாம் வீழ்ந்த நிலத்தியல்பால் திரிந்து தாம் வருகின்ற வழியிலுள்ள அழுக்குகளோடும் ஓடி வருதலாலே உண்ணுதற்குந் தகுதி யில்லாத பேரியாறுகளைச் சமயங்களுக் குவமை கூறுதல் பொருத்தமாகவே உளது. யாற்றுநீர் தூய்மைப் படுத்திப் பருகுவார்க் குண்ணும் நீராயும் ஆதல் போன்று சமயங்களையும் காலந்தோறும் தூய்தாக்க வேண்டும். இனி இது நிற்க.

புத்தர் புலைசூழ் வேள்விகளைக் கடவுள் வழிபாடு என்றும் அவற்றில் ஆ முதலியவற்றைக் கொன்று உயிர்ப் பலியீதல் பெரிய புண்ணியச் செயல் என்றும் இவற்றைச் செய்பவர்களை அந்தணர் என்றும் பூதேவர் என்றும் வழங்கும் உலகவழக்கைக் கண்டு வியப்பும் திகைப்பும் எய்தினர்.

*"ஆக்களைக் கொல்பவர் துறக்கம் புகுவார் எனின்*
*பின்னர் யாரே நரகம் புகுதற் குரியார்"*

என்று புத்த பெருமான் ஓரந்தணரை வினவினர் என்று ஒரு செவிவழிச் செய்தியும் கேட்கப்படுகின்றது.

இத்தகைய சமயச் சழக்குகளைத் தவிர்த்து மாந்தர் எய்தும் இம் மடமையையும் இன்னலையும் தீர்க்கும் நெறியொன்று கண்டன்றி யான் மக்கள் வாழும் இடங்கட்கு மீள்கிலேன் என்னும் சூளுறவோடு புத்தர் பெருமான் பல யாண்டுகள் காட்டினூடிருந்தே ஆங்குத் தவம் புரியும் முனிவர்களை வினவியும் தம்முடைய கூர்த்த அறிவினால் ஆராய்ந்தும் தாம் எதிர்பார்க்கும் மெய்யறிவு தலைப்படாது வருந்தினர்.

ஒருநாள், விடியற் காலத்தே ஓரியாற்றங் கரையில் ஐந்து கிளைகளோடு தழைத்து நின்ற ஓர் அரைய மரத்தின் நீழலில் அமர்ந்து அவர் சிந்தனையில் ஆழ்ந்திருந்தபோது அவர் உள்ளத்தே சில மெய்க் காட்சிகள் தோன்றலாயின. அவற்றை யுணர்ந்த புத்தர் பெரிதும் மகிழ்ந்து நாட்டினுட் புகுந்து அவற்றை மக்கட் கறிவுறுத்தினர். அவருடைய தூய வுளத்திற் பிறந்த அறவுரைகளைக் கேட்டு மாந்தர் அவர் காலத்திலேயே திரள் திரளாக அவர் காட்டிய நன்னெறியிலே ஒழுகலாயினர் என்ப. இது புத்தருடைய வரலாற்றின் சுருக்கமாகும்.

"உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்"

என்னும் பொய்யா மொழிக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்பவர் புத்த பெருமான் என்பது தேற்றம்.

புத்தருடைய பெருமை மிக்க வரலாற்றோடு கூடிய அவருடைய அறங்கள் இற்றை நாளும் உயிரோட்டமுடையன வாகவே திகழ்கின்றன. அவருடைய வரலாறும் அறவுரைகளும் புலவர் பெருமானாகிய சாத்தனாருடைய உள்ளத்தைப் பெரிதும் கவர்தல் இயல்பே. இக் காரணத்தால் புத்த பெருமானுடைய அறிவுச் செல்வங்களை உள்ளுறையாகக் கொண்டு ஒரு காப்பியம் செய்தல் வேண்டும் என்று அவர் இம் மணிமேகலையை இயற்றி யிருத்தல் வேண்டும்.

ஆசிரியர் இளங்கோவடிகளார் தாமும் புத்தபெருமான்பால் எத்துணை நன்மதிப்புடையவராக இருந்தார் என்பதனை—

"பணையைந் தோங்கிய பாசிலைப் போதி
அணிதிகழ் நீழல் அறவோன் திருமொழி"

என்று அடிகளார் புத்த பெருமானையும் அவர் திருமொழியையும் ஒரு சேரப் பாராட்டுகின்ற அவருடைய இத் திருவாக்கே நன்கு புலப்படுத்தும்.

தண்டமிழ் ஆசான் சாத்தன் :

ஆசிரியர் இளங்கோவும் தண்டமிழ் ஆசான் சாத்தனும் நந் தமிழன்னையின் திருவயிற்றில் ஒரே காலத்து ஒரு சேரப் பிறந்த அறிவறிந்த இரட்டைக் குழந்தைகள் என்னலாம். இவருள் ஒருவர் சேரமன்னர் குடியிற் பிறந்து தந்தமையன் பொருட்டு இளமையிலே அரசு துறந்து குணவாயிற் கோட்டத்து வீற்றிருந்த பெருந்தகையாளர். மற்றொருவர் மாமதுரையில் வணிகர் குடியிற் பிறந்தனரேனும் புலமை வாழ்க்கையையே குறிக்கோளாகக் கொண்டவர். இவர் முத்தமிழ் நாட்டையும் விரும்பி முத்தமிழ் நாட்டியல்களையும் ஆங்காங்குச் சென்று நன்குணர்ந்தவர். சேரன் செங்குட்டுவன் அனைய முடிமன்னர்களாலும் நன்கு மதிக்கப்பட்டிருந்தவர். அப்பாலும், இளங்கோவடிகளாராகிய முத்தமிழ் வித்தகரோடு உயிரும் உணர்ச்சியும் ஒன்ற உறஉற நட்புப் பூண்டொழுகும் பேறும் பெற்றவர். சாத்தனாருடைய நற்றமிழைக் கேட்குந் தோறும் உள்ளம் குளிர்ந்து 'என்னே இவர்தம் புலமை மாண்பு! இவர் புலவர் பெருமக்கட்கெல்லாம் ஆசான் ஆகும் தகுதியுடையார்' என்று மதித்த அடிகளார் தமது கருத்துத் தோன்ற இவரைத் "தண்டமிழாசான் சாத்தன்" எனத் தமது திருவாய் மலர்ந்து தமது அருமந்த காப்பியத்திலேயே பதிய வைத்துள்ளனர் எனின் இப் புலவர் பெருந்தகையின் பெருமையை யாம் எடுத்துக் கூறவல்லமோ?

அடியற்ற ஆலமரம் :

மணிமேகலையை நினையும் பொழுதெல்லாம் கீழ்க்காணும் நாலடி நானூற்றின் வெண்பா வொன்று எம் நினைவிலெழும்.

"சிதலை தினப்பட்ட ஆல மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகண் தோன்றில் தான்பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும்"

எனவரும் வெண்பாவே அது.

ஆம், இம் மணிமேகலை தோன்றுதற்கு முதலாக அமைந்த பௌத்த சமயம், வள்ளுவம் பிறந்த இத் தமிழகத்திலே தனது புதுமை காரணமாக யாண்டும் புதுவெள்ளம் போன்று பரவியதேனும், மெய்க் காட்சியில் இத் தமிழகம் அதனினும் சாலச் சிறப்புடையதாக இருந்தமையின் புதுவெள்ளம் வடிவது போலவே அப் பௌத்தசமயமும் தான் வந்து புகுந்த சுவடே

தெரியாமல் முழுதும் மறைந்தே போயிற்று. முதல் மறைந்த பின்னரும் அதன் கிளையாகிய இம் மணிமேகலை என்னும் இம் மாபெருங்காப்பியம் மட்டும் நன்கு நிலைபெற்று இற்றை நாளும் தன்னைப் பயிலுகின்ற நல்லிசைப் புலவருடைய உள்ளங்களைத் தான் ஊன்றிய எண்வகைச் சுவைகளாகிய விழுதுகளாலே உயிரூட்டி நாற்றிசையினும் தண்ணிழல் பரப்பிக் குளிரச் செய்தே வருகின்றதன்றோ?

மணிமேகலையின் தனிப்பெருமாண்பு :

மணிமேகலை தமிழகத்திலே நிலைபெற்றிருப்பது அதன் உள்ளுறையாகிய பௌத்த சமயத்தின் வலிமையாலன்று. அதனை ஆக்கித் தந்த தண்டமிழ் ஆசான் சாத்தனுடைய மாவண் தமிழ்த் திறத்தாலேயாம். இக் காப்பியம் தனதினிமை காரணமாகத் தமிழ்மொழி நின்று நிலவும் காலமெல்லாம் இத் தமிழகத்திலே நின்று நிலவும என்பதில் ஐயமில்லை. இளங்கோ வியற்றிய சிலப்பதிகாரம் என்னும் தீந்தமிழ்க் காப்பியத்திற்கும் இத்தண்டமிழ் ஆசான் சாத்தனாரே ஏவுதற்கருத்தா ஆவர் என்பது சிலப்பதிகாரத்தாலே அறியப்பட்டதோருண்மையாம்! மாவண் தமிழ்த் திறம் தெரிக்கும் இம் மணிமேகலைக்குச் சாத்தனாரே இயற்றுதற் கருத்தா ஆகலின், நந்தமிழன்னையின் சீரடிகளிலே கிடந்து முரன்று அவளுடைய பெரும்புகழை உலகெலாம் பரப்பும் சிலம்பும், அவளுடைய சிற்றிடைக் கணியாயமைந்து தன்கட் பதிந்த தண்டமிழ்ச் சொற்களாகிய மணிகளின் ஒளியாலே பயில்வோர் உளம் இன்பங் கெழும ஒளி யேற்றும் இம் மணிமேகலையும் ஆகிய இரண்டு அருங்கலங்களும், கன்னித் தமிழ்ச் செல்விக்குத் தண்டமிழாசான் வழங்கிய நன்கொடைகளே என்று கருதுதலும் பெரிதும் பொருந்துவதாம்.

இரட்டைக் காப்பியம் :

இனித் தண்டமிழ் ஆசான் செய்தருளிய இம் மணிமேகலையின் செயற்கைத் திறத்தையும், நுணுக்கங்களையும், இக் காப்பியத்திற் புகுந்து இதனைப் பயிலும் மாணவர்க்கு முன்னோடியாக ஒருசில எடுத்துக்காட்டுதும்.

ஆசிரியர் இளங்கோவும் சாத்தனாரும் உயிரும் உணர்வும் ஒன்றிய தமது நட்புக் கேண்மையால் ஒன்றுபட்டிருத்தல் போன்றே அவர்கள் செய்த சிலம்பும் மணிமேகலையும் இரண்டு தனிக்காப்பியங்களாகாமல் ஒன்றோடொன்று ஊடுருவி ஒன்றி

நிற்கின்றன. அதனால் இவற்றை 'இரட்டைக் காப்பியம்' என்றும் வழங்குவதுண்டு.

தண்டமிழ் ஆசான் சாத்தனாராற் கூறப்பட்ட கண்ணகி வரலாற்றைக் கேட்ட இளங்கோ அவ் வரலாற்றின்கண் ஒரு காப்பியத்திற்கு வேண்டிய கருப்பொருளமைந்திருத்தல் கண்டு,

*"சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்*
*சிலப்பதி கார மென்னும் பெயரால்*
*நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுளென"*

நுதலிப் புகுந்தவர் அக் காப்பியத்தைத் திறம்பட முடிக்கு மிடத்தே,

*"மணி மேகலைமே லுரைப்பொருள் முற்றிய*
*சிலப்பதிகாரம் முற்றும்"*

என்று முடித்திருத்தலைக் காணலாம். இதன் கருத்து இக் காப்பியத்தின் பொருள்களில் சிலம்பு காரணமாக யாமெடுத்துக் கொண்ட பொருள் முடிவுற்றது. ஆனால், இக் காப்பியத்தின் பொருள் இன்னும் எஞ்சியுளது. அது மணிமேகலை என்னும் மற்றொரு காப்பியமாக மலர்ந்தே முடிவுறும் என்பதேயாம். எனவே, மணிமேகலைக்கு வேண்டிய முதல் இச் சிலம்பிலேயே கருவாகி யுளது. ஆதலின் இதனைத் தொடர்ந்துவரும் மணி மேகலையைப் பயில்வோர் முன்னரே சிலப்பதிகாரத்தை நன்கு பயின்று கொள்க என்பதும் அடிகளார் கருத்தாயிற்று. இக் கருத்திற்கேற்பவே சாத்தனார் தாமும் தங் காப்பியத்தைத் தொடங்கும் பொழுதே அக் காப்பியத்திற்கு ஏற்புடைய புத்தருக்குக் கூட வாழ்த்துக் கூறாமல் வாளாது கதையையே கூறத் தொடங்கிவிடுகின்றார். இதன்பயன், சிலப்பதிகாரத்தில் இளங்கோவா லியம்பப்பட்ட மங்கல வாழ்த்துப் பாடலே இக் காப்பியத்திற்கும் மங்கல வாழ்த்தாகும் என்னும் தமது கருத்தைக் குறிப்பாகப் புலப்படுத்துதலேயாம்.

**கவலைதேங்கிய முகத்தோடு காட்சிதரும் நகரநம்பியர் குழு :**

இனி, மணிமேகலையைத் திறந்து நோக்கியவுடன் பூம்புகார் நகரத்தே நகராட்சி மன்றத்தே ஒரு கூட்டம் கூடி யிருத்தலைக் காண்கின்றோம். அவர்கள் யார்? அவர்கள் இந்நகர நலம் நாடும் சான்றோராகிய

"சமயக் கணக்கரும் தந்துறை போகிய
அமயக் கணக்கரும் அகலா ராகிக்
கரந்துரு வெய்திய கடவு ளாளரும்
பரந்தொருங் கீண்டிய பாடை மாக்களும்
ஐம்பெருங் குழுவும் எண்பே ராயமும்"

ஆவர். இவர்கள் எதற்கு இங்கே கூடியிருக்கின்றனர்? இவர்கள் ஆரவாரம் சிறிதும் இன்றி அமைதியாகவும் இருக்கின்றனர். மேலும் இவர்கள் அனைவரும் கவலையுள் அழுந்தியிருப்பவராகவும் தோன்றுகின்றனர். இந்த யாண்டு இந்திர விழா நடைபெறுமோ! பெருதோ! என்பதே இவருடைய கவலை போலும். இக் கூட்டத்துள் ஒருவர் "எது எப்படியிருந்தாலும் இந்திரவிழா எடுத்தே தீரவேண்டும்! அவ் விழாக்கோள் மறப்பின்

"கொடித்தேர்த் தானைக் கொற்றவன் துயரம்
விடுத்த பூதம் விழாக்கோள் மறப்பின்
மடித்த செவ்வாய் வல்லெயி றிலங்க
இடிக்குரல் முழக்கத்து இடும்பை செய்திடும்
தொடுத்த பாசத்துத் தொல்பதி நரகரைப்
புடைத்துணும் பூதமும் பொருந்தா தாயிடும்"

என அச் சான்ருேர் கூறுவதும் நமது அகச்செவியில் கேட்கின்றது. இவர் கூற்றினின்றும் சில செய்திகள் நமக்குப் புலப்படுகின்றன. அவையாவன:— விழாச் செய்யாமல் கைவிட்டு விடுகின்ற சூழ்நிலை இப் புகார் நகரத்திலே இப்பொழுதிருக்கின்றது என்பதும், விழாவைச் செய்யாது விட்டால் சதுக்கப்பூதம் சினந்து நம்மனோர்க்குப் பேரிடர் விளைவியாமற் போகாது என்று இவரெல்லாம் அஞ்சுகின்றனர் என்பதும் ஆகும். இத் தீமை நிகழாமற் றடுத்தற் பொருட்டே நகரநலத்தைப் பேணுமியல்புடைய சான்ருேரும் அரசியலாரும் ஒருங்கு கூடித் தம்முள் ஆராய்கின்றனர் என்பதும் இவர் கூற்ருல் நமக்கு விளங்குகின்றன. ஆராய்ச்சி செய்து அக் கூட்டத்திலே எடுக்கப்பட்ட முடிபு இன்னதென்பதை அடுத்து வருகின்ற இரண்டடிகளே நமக்குணர்த்திவிடுகின்றன. அவை,

"மாயிரு ஞாலத்து அரசுதலை மீண்டும்
ஆயிரங் கண்ணோன் விழாக்கால் கொள்க"

என்பன. இதனுல் அக் கூட்டத்தார் செய்த முடிபு புலப்படுகின்றது.

நகரத்திற்கு நேர்ந்தது என்ன :

ஒரு பெரிய கோநகரத்து வாழ்வோரெல்லாம் கவலைப் படவும், திருவிழாவையே மறந்திட்டிருக்கவும், அந் நகரத்திற்கு இப்பொழுது என்ன நேர்ந்து விட்டது? இவற்றை அறிவிக்கவே, சிலப்பதிகாரம் என்று ஒரு காவியமே தோன்ற லாயிற்று. சென்ற யாண்டு இந் நகரத்திலே நிகழ்ந்த இந்திர விழாவையும் யாம் சிலப்பதிகாரத்திலே கண்டிருக்கின்றோம். சென்ற யாண்டு அம்மம்ம எத்துணைப் பேராரவாரத்தோடு இவ் விந்திரவிழா இங்கு நிகழ்ந்தது! சென்ற யாண்டின் நிகழ்ந்த இந்திர விழாவே காரணமாக அந் நகரத்து வாழ்ந்திருந்த "மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக் காதலாளாகிய" கண்ணகி நல்லாளும், பண தேய்த்த மொழியினர் ஆயத்துப் பாராட்டிக் கொண்டேத்தும் கிழமையான் கோவலனும் இற்றை நாள் இந்திரவிழாவிற்கு ஈங்கில்லை. கண்ணகியும் கோவலனும் பிரிந்து போனமைக்கே அற்றை நாள் அம் மாநகரம்,

*"பெருமகன் ஏவ லல்லது யாங்கணும்*
*அரசே தஞ்சம்என் றருங்கா னடைந்த*
*அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்*
*பெரும்பெயர் மூதூர் பெரும்பே துற்றது"*

என்று, அடிகளாரே (மதுரை-புறஞ்-கூ௩-கூ) அறிவித் துள்ளனர். அப்பாலும், கோவலனுக்கும் கண்ணகிக்கும் எய்திய கொடுந்துயரத்தை மாமறை முதல்வன் மாடலன் வந்து அந் நகரத்தே அறிவித்த பின்னர், மாகவானிகர் வண்கை மாநாய்கன் குடும்பமும், பெருநில முழுதாளும் பெரு மகன் தலைவைத்த ஒரு தனிக்குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வத்தோடே வருநிதி பிறர்க்கார்த்தும் மாசாத்துவான் குடும்பமும் ஆகிய இருபெருவள்ளற் பெருமக்கள் கொழுங்குடி இரண்டுமே பூண்டோடு அழிந்தொழிந்தன. இவற்றிற்கு மேலும்,

*"மற்றது கேட்டு மாதவி மடந்தை*
*நற்றாய் தனக்கு நற்றிறம் படர்கேன்*
*மணிமே கலையை வான்துயர் உறுக்கும்*
*கணிகையர் கோலம் காணா தொழிகெனக்*
*கோதைத் தாமம் குழலொடு களைந்து*
*போதித் தானம் புரிந்தறம்"*

கொண்ட நிகழ்ச்சியும், அம் மாநகரம் கையற்றுக் கலங்கிக் கவலைகொள்ளப் போதிய காரணங்கள் ஆகாவோ? அடிகளார்

மாதவி மணிமேகலையொடு போதித் தானம் புகுந்து அறங் கொண்டபொழுது,

"ஆங்கது கேட்ட அரசனும் நகரமும்
ஓங்கிய நன்மணி உறுகடல் வீழ்த்தோர்
தம்மின் துன்பந் தாம்நனி கொள்ள"

என்றோதுதலும் ஈண்டு உன்னித்து நோக்குக.

திருவிழாச் செய்தே தீர வேண்டும் என்று முடிவெடுத்த பின்னர், அரசன் கட்டளையாலே முதுக்குடிப் பிறந்த வள்ளுவன் வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசத்தைக் கச்சையானைப் பிடர்த்தலையேற்றி,

"தோரண வீதியும் தோமறு கோட்டியும்
பூரண கும்பமும் பொலம்பா லிகைகளும்
பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்"

என்பது முதலாக,

"பற்றா மாக்கள் தம்முட னாயினும்
செற்றமும் கலாமும் செய்யா தகலுமின்"

என்பதீருக அரசன் ஆணை பலவற்றை முரசறைந்து அறிவிக்கின்றான்.

**கூற்றுக்கண் விளிக்கும் குருதி வேட்கை முரசு :**

இவை அரசன் ஆணை; இவையிற்றைச் செய்யா தொழியின் அரசனால் ஒறுக்கப்படுவீர் என்றுணர்த்துதற்கே ஈண்டு அறையும் முரசிற்கும் புலவர் பெருமான், 'கூற்றுக்கண் விளிக்கும் குருதி வேட்கை முரசு' எனக் கேட்போர் நெஞ்சு துணுக்குறும் அடைமொழிகளைப் புணர்த்தார் போலும். மாதவியில்லாமலும் ஒரு திருவிழாவோ! என்று மனச்சலிப் படைந்து விழாவினை மறந்திட்டிருக்கும் நகர்வாழ் பொது மக்கட்கு அரசன் ஆணையை அறிவிக்கும் இம் முரசம் அவனுடைய ஆணை முரசு போலும் ஆதலாற்றான் அவ் வண்ணம் அடைபுணர்த்தனர். சிலப்பதிகாரத்தில் இவ்வாறு இன்னின்ன செய்யுமின் எனக் கட்டளையிட்டு முரசறையக் கண்டிலோம். ஆண்டு, இந்திரவிழா இன்னநாளில் தொடங்கி இன்னநாளில் முடிவுறும் என்னுமாததிரையே அறிவிக்கப் படுகின்றது. மற்று அம் முரசறையு முன்பே அம் மாநகரத்து மாந்தர், தாமே முன்வந்து சதுக்கப்பூதத்திற்கு,

"புழுக்கலும் நோலையும் விழுக்குடை மடையும்
பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து"

யாண்டும் துணங்கைக் கூத்தும் குரவைக் கூத்தும் ஆடி அரசனை வாழ்த்தி மகிழ்தலைக் காண்கின்றோம். ஐவகை மன்றத்தும் அரும்பலி யுறீஇய பின்னரே வச்சிரக்கோட்டத்து மணங்கெழு முரசத்தைக் கச்சையானைப் பிடர்த்தலையேற்றிக் கால்கோள் விழாவின் கடைநிலை சாற்றப்படுகின்றது. இந்திர விழாவிற்கு முன்னோடிச் சடங்குகளாகிய இவையெல்லாம் இந்த யாண்டின் விழாவிற்கு இனித்தான் நிகழ்த்தல் வேண்டும்போலும்.

**ஊரலர் :**

இந்திர விழாவிற்கு வழக்கம் போலவே இன்னின்ன செய்யுமின் என்று அரசன் ஆணை பிறந்தபின்னர் ஒருவாறு நகரமும் அணிசெய்யப் பெற்று விழாவும் நிகழ்வதாயிற்று. நகரத்திலே யாண்டும் மக்கள் கூட்டம் கூட்டமாகக் கூடிக் கொண்டு என்ன நிகழ்ந்தாலும் நாடகக் கணிகையாகிய மாதவி துறவு பூண்டது அடாது; அஃது அத் துறவறத்திற்கே ஓரிழுக் காகவே ஆயிற்று என்பாரும், மனமாசு தீர்ந்த மாதவர் எங்கே? இம் மாதவி எங்கே? என்பாருமாய்ப் பொதுமக்கள் எங்கு நோக்கினும் மாதவியைப் பற்றிப் பழிதூற்றுபவராகவே காணப் படுகின்றனர். மாதவியையும் தன் குலக்கொழுந்தாகிய மணி மேகலையையும் ஒருசேர இழந்த சித்திராபதி தன் துன்பத் திற்கோர் எல்லை காணமாட்டாமல் ஏங்கிக் கிடந்தவள் உள் ளத்தில் இப்பொழுது ஒரு நசை பிறந்தது. அஃதாவது ஊரவர் தூற்றும் இப் பழியை மாதவிக்கு எடுத்துக் கூறினல், ஒருவேளை மாதவியும் மணிமேகலையும் இப் பழிக்கு நாணி மீள்தலும் கூடும் என்னும் நசையே அது. உடனே மாதவியின் தோழியாகிய வயந்தமாலையைக் கூப்பிட்டு, நீ போய் ஊரவர் தூற்றும் இப் பழியை அவட்குக் கூறுக என்றுமட்டும் கூறிவிடுகின்றாள் அளியள் அச் சித்திராபதி. அதுகேட்ட வயந்தமாலையும் அங்ங னமே சென்று,

"மணிமேகலையொடு மாதவி யிருந்த
அணிமலர் மண்டபத்து அகவயிற் செலீஇ
ஆடிய சாயல் ஆயிழை மடந்தை
வாடிய மேனி கண்டுஉளம் வருந்தினள்"

என்னுமளவே, காவியம் தொடங்கும் சாத்தனர் கூறித் தொடங்கிவிடுகின்றார். சித்திராபதி யார்? மாதவி யார்? மணிமேகலை யார்? மலர்மண்டபம் யாருடையது? என்னும்

ஐயங்கள் சிலப்பதிகாரம் பயிலாமல் இக் காப்பியத்தை மட்டும் பயில்கின்றவர்க்குண்டாத லியல்பே. இவ்வாறு இவர், இக் காப்பியத்தலைவியைக்கூட நம்மனோர்க்கு அறிவியாமல் தொடங்குவதற்குக் காரணம் என்ன?

இக் காப்பியத்தின் முற்பகுதி சிலப்பதிகாரம். சிலப்பதி காரத்தைப் பயின்றவர் மாதவி மணிமேகலை வயந்தமாலை ஆகிய இவர்களைப்பற்றி நன்கறிகுவர்; ஆதலின் அவர்களைப் பற்றி ஈண்டு யாம் யாதொன்றும் கூறவேண்டுவதில்லை என்பது பற்றியே இப் புலவர் பெருமான் வாளாது பெயர் மட்டுமே கூறிக் காப்பியத்தைத் தொடங்குகின்றார். இவ்வாற்றானும் சிலப்பதிகாரத்திற்கும் இம் மணிமேகலைக்கு முள்ள இயைபினை இவர் இனிதின் உணர்த்தி விடுகின்றனர்.

**சிலம்பொலி கேட்டிலாதார்க்கு மணிமேகலையின் ஒளியும் புலப்படாது :**

இனி, மாதவியை அவள் ஐயாட்டைப் பருவத்தினளாய் ஆடற்கலை பயிலுகின்ற பள்ளிப் பருவந் தொடங்கியே சிலப்பதி காரத்தில் யாமறிகுவம் அல்லமோ? அவள் சோழமன்னன் திருமுன்னர் ஆடரங்கேறி மண்ணவரும் விண்ணவரும் வியப்ப ஆண்டு ஆடற்கலையை அரங்கேற்றி அரசன்பால் 'தலைக்கோலி' என்னும் சிறப்புப் பெயரோடு ஆயிரத்தெண் கழஞ்சு பொன் பரிசிலாகப் பெற்றமையும், ஆடலும் பாடலும் அழகும் முதலிய நாடகமகளிர்க்கு நன்கனம் வகுத்த நலன் முழுவதற்கும் அவள் உறைவிடமாகத் திகழ்ந்தாள் என்பதும், மேலும் அவள்பால் வானநாட்டு நாடகக்கணிகை ஊர்வசி சாபம் ஏற்று மண்ணுலகத்தே கணிகையர் குடியிற் பிறந்து மாதவி என்னும் பெயரோடு சாபந் தீருந் துணையும் வாழ்ந்திருந்தவளுடைய மரபிலே பிறந்த கணிகையருள் இவளிடத்தே ஊர்வசிக் கியன்ற வானநாட்டு நாடக மடந்தையர்க்குரிய தெய்வப் பேரழகு பெரிதும் பொருந்தி யிருத்தல் கண்டு, இவட்குச் சித்திராபதி, மாதவி என்றே பெயர் சூட்டினள் என்பதும், கோவலன் இத்தகைய சிறப்பழகோடு கூடிக் கலைக்கும் தலை வரம்பாகத் திகழ்ந்த இம் மாதவியைப் பெரிதும் காதலித்துக் கண்ணகி நல்லாளையும் மறந்தொழுகினமையும் மாதவியும் கோவலனும் ஊடியும் கூடியும் வாழ்ந்திருந்த பெறற்கரிய இவளுடைய வாழ்க்கைச் சிறப்பும் யாழிசை வாயிலாக ஊழ் வினை உருத்துவந் தூட்டிய பொழுது கோவலன் கடற்கரை யிலேயே இவளைக் கைவிட்டுச் சென்ற செய்தியும் அவன் பாலவள் கொண்டிருந்த பேரன்பு காரணமாகப் பிரிவாற் றாமல் அவள் மலரணையிலே மயங்கி வீழ்ந்தமையும், கோவலனுக்கும் கண்ணகிக்கும் நேர்ந்த கொடுந்துயரத்தை

மாடலன் வாயிலாய்க்கேட்ட பின்னர் இவள் துயர் பொருளாய் மாதவர் பள்ளியுட் புகுந்தது வரையில், யாம் சிலம்பிலேயே நன்கறிகுவம் ஆதலால் இப் புலவர் பெருமான், ஈண்டு வாளாது மாதவி என்று மட்டுமே கூறி யொழிந்தார். அவளிருக்கு மிடம் பௌத்தப்பள்ளி என்பதும் யாம் அறிவே மாதலின், அதனையும் வாளாது மலர் மண்டபம் என்றே கூறி யொழிந் தார்.

அஃதொக்கும், இம் மாபெருங் காப்பியத் தலைவி யாகின்ற மணிமேகலையைப்பற்றியாதல் சிறிது விளக்கமாக இவர் வண்ணித்தல் வேண்டாவோ? அவள் திறத்தினும் இப் புலவர் அடைமொழி யொன்றேனும் புணர்த்திடாமல் வாளாது மணிமேகலையொடு மாதவி என்று மட்டுமே கூறிப் போதல் அமையாதாம் பிறவெனின்! அற்றன்று, இக் காப்பியத் தலைவியைப் பற்றியும் யாமறிய வேண்டிய அனைத்துமே அடிகளாரே தமது காப்பியத்தே திறம்படக் கூறி விட்டனர். என்னை? மணிமேகலை பிறந்தபின் வாலாமை நீங்கிய நாள் அவட்கு மாமுது கணிகையர் பெயர் சூட்டும் நன்னாளிலேயே இவள் தந்தை இம் மகவு தங்குல தெய்வமாக நின்று தங்குடியைப் பாதுகாத்து வருகின்ற மணிமேகலா தெய்வத்தின் நன்கொடையே என்று கருதியவனாய் அத் தெய்வத்தின் திருவருளையும் தன்னெஞ்சத்தே நினைந்து இம் மகவிற்கு மணிமேகலை என்றே அத் தெய்வத்தின் திருப் பெயரையே இடுக என்று அம் மாமுது கணிகையர்க்குப் பணித் தான் என்பதும், அன்பு மிக்க இவள் தந்தை இவள் பிறந் தமையாலுண்டான மகிழ்ச்சிக் கறிகுறியாகவும் இவள் நலங் கருதியும்,

> ''அணிமே கலையா ராயிரங் கணிகையர்
> மணிமே கலையென வாழ்த்திய ஞான்று
> மங்கல மடந்தை மாதவி தன்னொடு
> செம்பொன் மாரி செங்கையிற்''

பொழிந்த செய்தியும் யாம் சிலம்பிலேயே கண்டிருக்கின்றோம். இவற்றால் இம் மணிமேகலை எத்தகைய செல்வச் சூழ் நிலை யிலே பிறந்தவள் என்பதனையும் அவளுடைய இருமுதுகுரவ ரானும் எத்துணைப் பேரன்போடும் வளர்க்கப்பட்டவள் என் பதனையும் யாம் நன்கறிகுது மல்லமோ!

**மணிமேகலையின் பருவச்சிறப்பு:**

இனி, மாதவி மாதவர் பள்ளியி லடைந்தபொழுது இம் மணிமேகலை எத்தகைய பேரழகோடு திகழ்ந்தனள் என்

பதனையும் இளங்கோ இவர்க்கு விட்டு வைக்கவில்லை. சிலப்பதிகாரத்திலே இவள் தவப்பள்ளி புக்கபொழுது எய்தியிருந்த இவளுடைய பருவச் சிறப்பை, இதோ கண்ணகியின் ஆருயிர்த் தோழியாகிய தேவந்திகை கூறுகின்றாள் கேண்மின்: மணிமேகலை தன் தாயோடு மாதவர் பள்ளியிற் புக்கபொழுது அவள்—

"மையீ ரோதி வகைபெறு வனப்பின்
ஐவகை வகுக்கும் பருவங் கொண்டது
செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்கண்
அவ்விய மறிந்தன அதுதா னறிந்திலள்
ஒத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த
நித்தில இளநகை நிரம்பா அளவின
புணர்முலை விழுந்தன புல்லக மகன்றது
தளரிடை நுணுகலுந் தகையல்குல் பரந்தது
குறங்கிணை திரண்டன கோலம் பொறாஅ
நிறங்கிளர் சீறடி நெய்தோய் தளிரின"

என்று, அப் பார்ப்பனி மாதவி அவளையும் பள்ளிபுகுத்திய கொடுமை நம்மனோர்க்கும் நன்கு விளங்கித் தோன்ற வண்ணித்தவள், பின்னரும், அம் மாதவி தாயாக விருந்தும் மனந்துணிந்து,

"வருகஎன் மடமகள் மணிமேகலை யென்று
உருவி லாளன் ஒருபெருஞ் சிலையொடு
விரைமலர் வாளி வெறுநிலத்து எறியக்
கோதைத் தாமங் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறம் படுத்தனள்
ஆங்கது கேட்ட அரசனும் நகரமும்
ஓங்கிய நன்மணி உறுகடல் வீழ்த்தோர்"

போன்றுளந் துடித்தனர், என்று இப் பார்ப்பனி இச் செய்தியைக் கூறும்போது நாமும் அவலத்தில் ஆழ்ந்து வருந்துகின்றோமல்லமோ? இருந்தவாற்றால் தண்டமிழ் ஆசான் சாத்தனார் இவளைப்பற்றி யாம் ஈண்டு யாதும் கூறல் வேண்டா என்று கருதியே வாளாது மணிமேகலை என்னுமளவிலே அமைவாராயினர்.

சித்திராபதி :

இனி, ஆசிரியர் இளங்கோவடிகள் மாதவியின் நற்றாய் பெயர் "சித்திராபதி" என்பதைச் சிலம்பில் ஓரிடத்திலேனும்

குறிப்பிட்டிலர். இக் காரணத்தாலே சித்திராபதி என்பது தான் மாதவின் தாய் பெயர் என்பதை நம்மனோர் குறிப்பாக உணர்ந்து கொள்ளட்டும் என்று கருதியவராய் ஈண்டு—

"மணிமே கலையோடு மாதவி வாராத்
தணியாத் துன்பம் தலைத்தலை மேல்வரச்
சித்திரா பதிதான் செல்லலுற் றிரங்கித்
தத்தரி நெடுங்கண் தன்மகள் தோழி
வயந்த மாலையை வருகெனக் கூஉய்"

எனப் பெரிதும் நினைவாற்றலோடு விதந்து கூறுகின்றார்.

சித்திராபதி பெயர் சிலப்பதிகாரத்திலே இல்லை என்பது இப் புலவர் பெருமான் நினைவிற் பதிந்திருத்தல் இவர் சிலப் பதிகாரத்தை எத்துணை விழிப்போடு பயின்றிருக்கின்றார் என் பதையும் நமக்கறிவிக்கின்றது. இங்ஙனமாதலின் இவர் சித்திராபதி வயந்த மாலையை அழைத்து என்னமல் தன்மகள் தோழி வயந்தமாலையை அழைத்து என்கின்றனர். என்னை? வயந்தமாலை என்பவள் மாதவியின் தோழி என்பதனை யாம் சிலப்பதிகாரத்திலேயே அறிந்துள்ளோம் அல்லமோ? மாதவி கடலாட்டுக் காணக் கோவலனுடன் சென்று ஆண்டுக் கடற்கரையில்,

"புன்னை நீழல் புதுமணற் பரப்பில்
ஓவிய எழினி சூழவுடன் போக்கி
விதானித்துப் படுத்த வெண்கா லமளிமிசை"

கோவலனுடன் வீற்றிருந்த பொழுது தன் மெல்லிடை,

"வருந்துபு நின்ற வயந்த மாலைகைத்
திருந்துகோல் நல்லியாழ் செவ்வனம் வாங்கி"

என்னுமிடந் தொடங்கிப் பல்வேறிடங்களில் இவ் வயந்தமாலை மாதவியின் அணுக்கத்தோழி என்பதனை அடிகளார் அறி வுறுத்தி யுள்ளனர். ஆகவே சாத்தனர் வயந்த மாலையைக் கூஉய் என்றலே போதியதாம். அவ் வயந்த மாலையை 'தத்தரி நெடுங்கண் தன் மகள் தோழி வயந்தமாலை' என்று நீண்டதொரு அடைமொழி புணர்த்து விதந்து கூறுதல் சித்திராபதி என்பது தான் மாதவியின் தாய் பெயர் என்று நம்மனோர்க்குணர்த்தற் பொருட்டேயாம். அடிகளார் இவள் பெயரைத் தங்காப்பியத் திலே யாண்டும் குறிப்பிடாமையை இவர் கருத்துட்கொண்டே இவ்வாறு விழிப்புடன் வேண்டா கூறி வேண்டியது முடித்தல்

அப் புலவர் பெருமானுடைய நினைவாற்றலையும் புலமைத் திறத்தையும் ஒருங்கே நம்மனோர்க்குணர்த்துகின்ற தன்றோ?

மாதவியின் நிலை :

இனி, மாதவி, தன்னை ஆரா அன்புடன் அழைக்க வந்த வயந்தமாலை, தன்னை நோக்கி நீ பெரிதும் நாணங்கெட்டு நடக்கத் தொடங்கி விட்டாய். என் பின்னே வா! நகர மாக்கள் உன்னைப்பற்றி என்னென்ன இகழ்ச்சியுரை கூறு கின்றனர். அந்தோ அவற்றைக் கேட்டு யானே பெரிதும் நாணுகின்றேன். புறப்படு! என்னோடு வா! என்னும் பொருள் பட இடித்துரை பல கூறுகின்றாள். ஆயினும் அவற்றை இவள் நனி நாகரிகமாகப் பேசுகின்றாள்.

வயந்தமாலையின் இடித்துரைகள் அவள் மாதவிபால் வைத்த கெழுதகை அன்பினையே புலப்படுத்துகின்றன. சித்திராபதி ஏவிய வொரு தூதாக மட்டும்—பணிமகள் மாத்திரையாக—இவள் இங்கு வந்திலள். மாதவியை மீட்டுக் கொண்டுவர வேண்டும் ஆர்வத்தில் இவள் சித்திராபதிக்குக் குறைந்தவள் அல்லள் என்பதை அறிவுறுத்தவே ஆசிரியர் சாத்தனார்—

*"வயந்த மாலையும் மாதவி துறவிக்கு*
*அயர்ந்துமெய் வாடிய அழிவினள் ஆதலின்"*

என்று இவளைப்பற்றியும் இரண்டடிகள் செலவு செய்வா ராயினர்.

மாதவியின் கெழுதகைமையும் பெருந்தகைமையும் :

பெருமாட்டியே! நீ பெற்றிருந்த கலையினால் நீ பெற் றிருந்த புகழ் வெள்ளிமால்வரை வியன்பெருஞ் சேடியை உள் ளிட்ட இந்நிலவுலகம் முழுவதுமே பரந்திருந்ததே! விண்ண கத்துத் தேவரும் கரந்துரு வெய்தி வந்து நின் ஆடற்கலையைக் கண்ணாரக் கண்டு களிக்கவில்லையா! அத்தகைய மாபெருங் கலைச் செல்வத்தை ஆண்டுதொறும் நுகர்ந்தின்புற்ற மாந்தர் உன்பால் எய்திய வெறுப்புக் காரணமாக நாடகக் கணிகை எங்கே, துறவுநிலை எங்கே, இவள் துறவு பூண்டது அவ்வறத் திற்கே பெரியதோரிழுக்காம் என்றிப்படி அலர் தூற்று வதனைக் கேட்கும்போது வாய்மையாக நம்மனோர் நாணவே வேண்டும் என்பது தோன்றவே இவ் வயந்தமாலை மாதவி துறவு பூண்டமைக்குப் பரிந்து இடித்துரை கூறுகின்றாள்

ஆயினும் இவற்றைக் கேட்டு மாதவி வருந்தாமைப் பொருட்டு வயந்தமாலை பழிக்குரிய செயலையே நீ செய்திருக்கின்ருய் ஆதலின் நீ அதற்கு நாணவே வேண்டும் ஆயினும் நீயோ நாணுகின்றிலை என்பதையே

> "பலர்தொகு புரைக்கும் பண்பில் வாய்மொழி
> நயம்பா டில்லை நா ணுடைத்து"

என்று வேறு வாய்பாட்டாற் கூறுகின்ருள். ஆயினும் பிறர் பழி தூற்றுதல் மக்கட் பண்பிற் கொவ்வாதென்பாள் போன்று அதன் கொடுமையைச் சிறிது குறைத்தற்கே அவற்றைப் பண்பில் வாய்மொழி என்றேதினுள்.

அதுகேட்ட மாதவி ஏடி வயந்தமாலை! நீ கேள்விக்கின்னு தென்று கருதி இன்மொழியாற் பேசினும் நீ கூறுவது முழு உண்மைகாண்! நாணங்கெட்டுத்தான் நானிருக்கின்றேன். நானும் குலமகளிர்போலக் கற்புடையவளாகவே இருக்க வேண்டும் என்ற கோட்பாட்டோடேதான் அந்தப் பெருங்குடி மகனேடு செருக்கோடு வாழ்ந்திருந்தேன். ஆனுல் அவாது சாக்காட்டிற்குப்பின் நான் இழிதகைக் கணிகை மகளே என்பதை உலகத்திற்குக் காட்டியேவிட்டேன் அல்லனே? நான் கருதியபடி கற்புடையேனுய் இருந்தால் என் காதலர் இறந்தார் என்று கேட்டபொழுதே என் உயிர் இவ் வுடலை விட்டுப் போயிருத்தல் வேண்டாவோ? இவ்விழிதகையுயிர் அவ்வாறு போயிற்றில்லையே! என்செய்குவல்? பத்தினிப் பெண்டிர் முத்திறப்படுவர் என்பர். அவருட் கடைத்திறத்தாளு மல்லேனுய், கணிகை மகளேயாகி இவ் வுயிரோடிருத்தலா லேயே நான் மானங்கெட்ட பரத்தை என்பது வாய்மையே. பலர் கூடிப் பழிதூற்றுதலும் எனக்குப் பொருந்துவதேயாம். மற்று எம் ஆயிழை கண்ணகி நல்லாளோ அம் முத்திறத்தா ரினும் மேம்பட்டுத் தனது தெய்வக் கற்பின் திறத்தை இம் மாயிரு ஞாலத்திற்கே காட்டி மறைந்தனள். அவள் வயிற்றில் பிறக்க வேண்டியவள் மணிமேகலை. என் தவறு காரணமாக என் இழிதகை வயிற்றிற் பிறந்துவிட்டாள். இருந்தாலும் யான் இத் தவற்றிற்குக் கழுவாய் செய்தே தீர்தல் வேண்டும். அக் கழுவாய் யாதெனில் கண்ணகி மகளாகவே உலகம் நோக்கும்படி இவளைத் திண்ணிய கற்புடையவளாக்கி விடுவ தேயாம். அங்ஙனம் ஆதற்கு இத் தவப்பள்ளியே தகுந்த இடம் ஆதலால் அவளை யான்,

> "அருந்தவப் படுத்தல் அல்லது யாவதும்
> திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்"

ஆக்குவல் என்று இவள் தன் தோல்வியைத் தன்னொடு துலையில்லா வயந்தமாலைக்குமுன் ஒப்புக்கொண்டு பேசுகின்ற மொழிகள் பெரிதும் அவலச்சுவை கெழுமிய பெருந்தகை மொழியாகத் திகழ்வதனை இதனைப் பயில்வோர் கருத்தூன்றிப் பயின்று மகிழ்தல் வேண்டும். இதோ வருவன அம் மாதவி யின் அவலச் சுவை கெழுமிய மொழிகளாம்:

''போதல் செய்யா உயிரொடு நின்றே
நற்றொடி நங்காய் நாணுந் துறந்தேன்''

என அவள் தான் நாணங்கெட்டவள் என்ற வசையுரையைத் தன் தோழிமுன் ஒப்புக்கொள்கின்றனள். இவள் மொழிகள் பெரிதும் சான்றாண்மை யுடையன. என்னை ?

''சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்'' (கூஅசு)

என்பது திருக்குறள் சால்பிற்குக் கூறும் அளவுகருவியன்றோ ? அப்பாலும் இவள்,

''காதலர் இறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
இன்னுயிர் ஈவர்''

என்னுமிது அவ்வாறு என் இழிதகைய உயிர் போயிற்றில்லையே! போகாமையால் யான் கற்பிலாக் கணிகையாகவே இருக்கின் றேன். அவ்வாறு அற்றைநாள் என் உயிர் தானே போயிருக்கு மானால் இப்பொழுது இந் நகரமக்கள் பலர் கூடி என் புகழுரையை யாண்டும் பேசுவர் அல்லரோ ? யான் அங்ஙனம் ஆகாமையின் உலகர் கூறும் பழியும் வாய்மையாயிற்று என்பதுபட இவள் பேசும் உரைகள், இவள் குறிப்பாகத் தன்னை நோகின்ற கட்டுரையே ஆகும்.

எம்பெருமான் எம்பாற்கொண்ட காதலுக்கு யான் அவ்வா றுயிர் நீத்திருத்தல் வேண்டும்; அவ்வாறு செய்திலேனாயினும் அவருள் இடையும் கடையுமாகிய கற்புடை மடந்தையரளவும் யான் சிறந்திலேனே என்னும் தன் கருத்துக் குறிப்பாகத் தோன்றவே அவள் பின்னும்—

''ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையின் நளிஎரி புகுவர்
நளியெரி புகாஅ ராயின் அன்பரோடு

உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர்''

என்றும் எடுத்துக்காட்டிப் பின்னர்த் தான் செய்த தவறு தோன்ற—

''.........................ஞாலத்து
அத்திறத் தாளு மல்லள்எம் ஆயிழை
கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅள்
மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக்
கண்ணீர் ஆடிய கதிரிள வனமுலை
திண்ணிதில் திருகித் தீயழல் பொத்திக்
காவலன் பேரூர் கனையெரி மூட்டிய
மாபெரும் பத்தினி மகள்மணி மேகலை''

என்று இவள் பேசும்போது, கோவலன் தன்னுருத்தியால் மட்டும் கவரப்பட்டான். யான் கவர்ந்திலேன் எனின் அவன் பொருட் பெண்டிரைத் தன் கடைக்கண்ணாலும் நோக்கியிரான். இவ்வாற்ருல் அவன் அக் கண்ணகி நல்லாளை ஒருபொழுதும் தணந்துறையான். அத்தகைய பேராண்மையாளன் அவன் என ஒரு வகையாலே கோவலனையும் இவள் பாராட்டுகின்ருள். என்னை? கடற்கரையிலே விளையாட்டு வகையால் கோவலன் பாடிய கானல்வரிப் பாடலிலே அவன் பாட்டிற்கு மறுதலை யாகக் காமமிக்க கழிபடர் உடையாளொரு தலைவி கூற்ருகத் தான் பாடிய பாட்டைக் கொண்டே 'இவள் மற்ருென்றின்மேல் மனம் வைத்தாள்' என்றுட்கொண்டு தன்னைக் கைவிடுத்துக் கழன்று போனவன் ஆதலின், அவன் தன்னைப் போன்று அன்பின் விழையும் ஆய்தொடியாரையன்றிப் பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கத்தை ஒருபொழுதும் விழையான் என இம் மாதவி மடந்தை அவன் ஆண்மைச் சிறப்பை நன்கனம் அறிந்திருந்தனள் ஆகலின் பொருட் பெண்டிர் குலத்திலே பிறந்து வைத்தும் இம் மாதவி குலமகளிர் போன்றே அவன்பால் மெய்யன்போடும் கற்பென்னும் திட்பத்தோடும் வாழ்ந்திருந்தாள். இந்நலங்கண்டே கோவலனும் தன்னைக் கைவிடமாட்டானுய்க் கண்ணகியைத் துவரமறந்து ஒழுகினன். இவ்வாற்ருல் மணிமேகலை அம் மாபெரும் பத்தினி வயிற்றில் பிறக்கும் செவ்வியைப் பெற்றிருந்தும் தன் தவறு காரணமாக அச் செவ்வியை இழந்து தன் வயிற்றில் பிறந்துவிட்டாள். இது தான் செய்ததொரு தவற்றின் வாயிலாய் மணிமேகலைக்கு நேர்ந்ததோரிழுக்கு என்பது தோன்றவே இவள் ''மாபெரும் பத்தினி மகள் மணிமேகலை'' என்கின்ருள். என்னுல் அவளுக்

செய்திய அவ் விழுக்கொழிய அவளை உலகம் போற்றுமொரு துறவியாக்கி விடுவல் என்று இம் மாதவி சூளுறவும் செய்து கொண்டவள் ஆதலின், ஈண்டு, இவள் மாபெரும் பத்தினி மகள் ஆதலால் அப் பெருமைக் கேற்ப யான் இவளை—அருந் தவப்படுத்தல் அல்லது அவள் ஒருபொழுதும் 'திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்'' என்று அறிவித்துப் பின்னரும் வயந்த மாலையை ஆயிழாய் என்று அன்புரிமை தோன்ற இனிதின் விளித்து,

''இது கேள்!
ஈங்கிம் மாதவர் உறைவிடம் புகுந்தேன்
மறவணம் நீத்த மாசறு கேள்வி
அறவண அடிகள் அடிமிசை வீழ்ந்து
மாபெருந் துன்பங் கொண்டுள மயங்கிக்
காதலன் உற்ற கடுந்துயர் கூற''

அதுகேட்ட அடிகளாரும் அடிச்சிக்கு இரங்கி ''நங்காய்! அஞ்சற்க! மக்களுடைய அறிவாற்றலைக் கடந்து வருகின்ற துன்பம் உலகத்தே யாதொன்று மில்லைகாண்!

''வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்''

என்பது முக்காலும் உண்மை. நீயோ நிலையுதலில்லாத பொய்யாய பொருளை மெய்ப்பொருள் என்று கருதி இதுகாறும் அவற்றைப் பற்றிக்கொண்டுழன்றாய். அக் காரணத்தால் ஆற்றொணாத் துன்பத்திற்கும் ஆளாகி அலமருகின்றாய். அப் பற்றுக்களை நீ நின் மனத்தின்கண்ணின்று அகற்றிவிடவில்லை ஆகுவையாயின் அந்த நொடிப்பொழுதிலேயே நீ எய்துமித் துன்பக்கடல் முழுதும் வற்றி இன்பப் பூம்பொழிலாய் மாறி விடும். அஃதன்றி நீதான் இப் பற்றுக்களை விடாது பற்றிக் கொள்ளுமளவும் அவற்றிற்கியல்பான துன்பமும் உன்னைப் பற்றிக்கொண்டே கிடக்கும். ஆதலால் யாமுரைக்கும் இம் மெய்க் காட்சிகளை நீ உள்ளத்திற் பதித்துக் கொள்ளக் கடவாய்! அவையாவன —

''பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோர் உறுவது அறிகென் றருளி
ஐவகைச் சீலத் தமைதியும் காட்டி
உய்வகை இவைகொளென்று உரவோன் அருளினன்''

அவ்வருள் பெற்றபின் ஒருவாறுய்ந்து அமைதியுங் கொண்டுள்ளேன். நீ போய்ச் சித்திராபதி முதலியோர்க்குச் செப்புதி என்று கூறினள். அதுகேட்ட வயந்தமாலை அரும் பெறன் மாமணி ஓங்குதிரைப் பெருங்கடல் வீழ்த்தோர் போன்று கையற்றுப் பெயர்ந்தனள் என்று தண்டமிழ் ஆசான் சாத்தனுர் இரண்டாவதாகிய இக் காதையிலேயே இவ்வாறு இக் காப்பியக் கருப்பொருளை ஐந்தடிகளிலே சுருக்கமாகவும் தெளிவாகவும் நுணுக்கமாகவும் சூத்திரம் போன்று தொகுத் தமைத்துக் கொள்கின்றனர். அறவண அடிகளார் மாதவிக்குச் செவியறிவுறுத்த இவ்வறிவுரை புத்தபெருமான் திருவாய் மலர்ந்தருளிய பிடகநூல் முழுவதையும் தம்பாலடக்கிக் கொண்டிருக்கின்றன.

இக் காப்பியத்திற் சிறந்து விளங்கும் சிறப்புறுப்பினர் இருவர்:

அன்பர்களே! கற்பகமனைய அக் கவிஞர் நாட்டிய சொற் பொருள் ஆழ்ந்து நோக்குவார் உணர்ச்சியின் வன்மைக்கேற்ப நோக்குந்தோறும் நோக்குந்தோறும் பின்னும் ஆழ்ந்த பொருளைத் தந்த வண்ணமே இருப்பதாம். இம் மணிமேகலை அத்தகையதொரு சிறந்த காப்பியமே என்பது எம் நுகர்ச்சி யுணர்வானும் ஆராய்ச்சி அறிவானும் கண்ட தொன்ரும். ஆகவே, இவ்வணிந்துரை கருதியது ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்னும் முறைமைபற்றி ஒல்லும் வகை ஒரு சில இதனைப் பயில்வார்க்குக் கூறிக் காட்டுவதே ஆம். அங்ஙன மன்றி இக் காப்பிய நலமனைத்தும் கட்டுரைத்தல் எளியதன்று. இதுகாறும் கூறியவை இக் காப்பியக்கடலின் இறங்கு துறையில் நின்றே கூறப்பட்டவையேயாம். இவற்ருல் இக் காப்பி யத்தை எவ்வாறு ஆழ்ந்து பயின்று இன்புறுவது என்பதை யாம் ஒல்லும் வகை ஒருவாறு அறிவித்துள்ளேம். இனி இக் காப்பியத்தில் ஆசிரியர் தாம் நுதலிய பொருள்களை ஏற்றி யங்குந் தகுதியுடையோராய் இரண்டுறுப்பினர்களையே அமைத் திருக்கின்றனர். மணிமேகலையும் ஆபுத்திரனும் ஆகிய இந்த இரண்டு பாத்திரங்களுமே ஆசிரியர் கருத்தை யெல்லாம் காட்டுங் கருவிகளாகத் திகழாநின்றனர்.

மணிமேகலையும் புத்த பெருமானும் :

மணிமேகலை துறவை இப் புலவர் பெருமான் தம்மாற் பெரிதும் மதிக்கப்பட்ட புத்தருடைய துறவிற்குச் சமமான பெருந்தகைமையுடைய துறவாகவே காட்டியிருக்கின்றனர். புத்தர் துறந்து விடுவாரோ என்றஞ்சிய சுத்தோதனன் அவர் துறந்து போகாமைப் பொருட்டு அழகான்மிக்க அசோதரையை

அவர்க்கு மனைவியாக்கினன் என்றும் அரசாட்சி முதலிய செல்வத்தை அவர் கைக்கொள்ளுதற்குப் பல்லாற்ருனும் முயன்றனன் என்றும் அவர் வரலாறு கூறுகின்றது. ஈண்டும் சித்திராபதி மணிமேகலை துறந்து போகாவண்ணம் அவளை அழகான் மிக்க அரசிளங்குமரன் ஒருவனுக்குக் காதலியாக்கி அவளை அரசவின்பத்திற் காளாக்கி அவள் துறந்து போகா வண்ணம் தன்னுல் இயன்ற சூழ்ச்சி பலவும் செய்வதனைக் காண்கின்ருேம்.

புத்தர் துறந்து போகத் துணிந்து எழுந்து போகும் பொழுது அவர் அசோதரையின்பாலும் மைந்தன் இராகுலன் பாலும் வைத்த பற்று அவரை மீண்டும் போய்த் துயில்கின்ற அவ்விருவருடைய முகங்களையும் நோக்கிய வண்ணம் சிறிது பொழுது திகைத்து நிற்கச் செய்தது என்றும், பின்னரே துறந்து போகத் துணிந்தார் என்றும் அவர் வரலாறு கூறு கின்றது. ஈண்டும், மணிமேகலை நெஞ்சத்தை உதயகுமரன் பேரழகு பற்றி இழுத்தலாலே அம் மன்னன் மகன் பின்னர்ச் சென்று மயங்கும் தன்னெஞ்சத்தை அவள் 'இதுவோ காமத் தியற்கை இதுவே ஆயின் கெடுக இதன் திறம்' என்று வலிந்து பிடித்து மீண்டும் துறவு நெறியிலே நிறுத்திக் கொள்ளுகின்ருள்.

புத்தர் துறந்து போங்கால் நள்ளிரவில் போயினர் எனவும் அவர் போக்கினை அந்நகர் வாழ்வோர் யாரும் அறியா வண்ணம் அவருக்குத் தெய்வங்கள் துணை நின்று அவர் குதிரையின் அடியோசையையும் பிறர் அறியா வண்ணம் செய்தன எனவும் அவர் வரலாறு கூறுகின்றது.

மணிமேகலை மலர் வனத்திலே மன்னவன் மகனைக் கண்டு மனம் பறிகொடுத்து மயங்கிய செய்தியும், மற்று அவளை நள்ளிரவில் அம் மாநகரத்தே யாரும் அறியா வண்ணம் மணி மேகலா தெய்வம் எடுத்துப்போய் மணி பல்லவத்திடையே வைத்துப்போன செய்தியும் மேலே கூறிய புத்தர் வர லாற்ருேடு பெரிதும் ஒத்திருத்தலுணர்க.

இனி, மக்கள் வாழ்க்கையிலெய்துகின்ற இன்பங்களைக் காட்டினும் அவரெய்தும் துன்பங்களே மேன்மேலும் அவரை உயர்த்துகின்றன என்னுமோருண்மை இக் காப்பியத்தில் யாண்டும் ஊடுருவி நிற்றலைக் காணலாம். இதற்கு எடுத்துக் காட்டாக மாதவி தன்னிளைமைப் பொழுதிலே கலைச் செல்வ மும் பொருட் செல்வமும் ஒருங்கே யுடையவளாய் மனக்கினிய பேரழகும் பெருந்தகைமையும் உடைய கோவலனேடு கூடி

இன்புற்றமையால் அவள் உயர்ந்துவிடவில்லை என்பதையும், மற்று அவளுடைய அத்தகைய வாழ்க்கை யெல்லாம் பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் அழிந் தொழிந்த பொழுதே அவள் இவ் வுலக நிலையாமையை யுணர்ந்து ஆற்ருெணுத் துன்பக்கடலுள் அழுந்திய பொழுதுதான் அவள் உய்யும நெறி காண முயன்று அதனையும் தலைப்பட்டு மேல் மேல் உயர்வடைகின்ருள் என்பதையும் நோக்குக. மணி மேகலைக்கு இந்நிலை இளம் பருவத்திலேயே வந்தெய்தி விடுகின்றது. அவள் காதலின்பம் உணராத கன்னெஞ்சம் உடையள் அல்லள். அடிப்பட்டுப் பற்பல பிறப்பிலே பயின்று வந்த நல்லொழுக்கம் அவள் உள்ளத்திலே உண்மையறிவாய் உறுதிப்பட்டிருத்தலாலே ஊழ்வலியாலே புறத்தே படர் கின்ற தன்னெஞ்சத்தைச் செல்லுமிடத்தால் செலவிடாது தீது ஒரீஇ நன்றின்பால் உய்த்தற்கு இவள் தாழாது முயன்று அம் முயற்சியில் வெற்றியும் பெற்று விடுகின்ருள். இவ்வாற்ருல் இம் மணிமேகலை,

> "ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
> தாழா துஞற்று பவர்"

எனவரும் பொய்யில் புலவன் பொருளுரைக்குச் சிறந்த எடுத் துக் காட்டாகவும் திகழ்கின்ருள்.

புத்த பெருமானும் இவ்வுலக அவாவை அடக்கிப் பற்றறுத் துய்யுமொரு நன்னர் நெஞ்சத்தைப் பெறுதற்குப் பண்டும் பண்டும் இருபத்தெட்டு முறை புத்தராகவே பிறந்து பயின்று பின் கௌதம புத்தராய்ப் பிறந்த பொழுதே அவ்வாற்றலை முழுதும் பெற்றனர் என்று அவர் வரலாறு பேசும். மணி மேகலையும் அவ்வாறு பல் வேறு பிறப்புற்று அறத்தில் அடிப் பட்ட உள்ளுணர்ச்சி பெற்றவள் என்பதை இக் காவியம் சிறப் பாகப் பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதையினும், பொது வாக வேறு சில இடங்களினும் நம்மனோர்க் கறிவுறுத்திச் செல்கின்றது.

புத்தர் கடவுளைப் பற்றியாதல் உயிரைப் பற்றியாதல் யாதொன்றும் கூருமையால் அவரை நாத்திகர் என்று வைவது புன்மதிச் சமயக்கணக்கர் செயலாம். மற்று இக் காவியமோ மக்கள் உயர்தற்குத் தெய்வத்தின் திருவருள் இன்றியமை யாதது எனவும், உய்யும் நெறி தேடிச் செல்லும் நல் லோர்க்கு அத் தெய்வந்தானும் மடிதற்றுத் தான் முந்துற்று நிற்கும் எனவும் பல்வேறிடங்களில் அறிவுறுத்துகின்றது.

இவ்வாற்ருல் புத்தர் சூனியவாதி என்று கோடற்கு இக் காப்பியம் இடந்தந்திலது.

ஒரு வேளை புத்த பெருமான் தம்முள்ளேயே தெய்வத்தின் திருவருள் முழுமையாக நிறைந்திருந்த காரணத்தால் அவர் தமதுள்ளத்திற் கயலதாய்ப் பிறிதொரு பெரும் பொருளைக் காணமாட்டாமையான் கடவுள் உண்டோ? இல்லையோ? என்று தம்மை வினவியவர்க்கும், அங்ஙனமே உயிர் உண்டோ இல்லையோ என்று தம்மை வினவுவோர் தாம் உயிருடையவராய் நின்றே வினவுதலின், இவ்வினு என் தாய் மலடியோ? மகப் பேறுடையளோ? என்று வினவுவான் ஒருவனுடைய வினப் போன்று மடமையுடைய வினவாதல் பற்றி, அவர்க்கும் விடை கொடாமல் வாய்வாளா திருந்திருக்கலாம். மடவோர் வினுவிற்கு விடை கூருமல் வாய்வாளாதிருந்திடுக! என்பது அவருடைய அறிவுரைகளுள் ஒன்ரும். அதனை,

"வினுவிடை நான்குள
துணிந்து சொல்லல் கூறிட்டு மொழிதல்
வினுவின் விடுத்தல் வாய்வாளாமை என"

இந் நூலில், அறவணவடிகளார் கூறுதலானும் அறிக. (௯௰ - ௨௯௫ - எ)

இனி, இஃதொக்கும் அவ்வறவணவடிகளாரே "எப் பொருட்கும் ஆன்மா இலை என இப்படியுணரும் இவை வீட்டியல்பாம்" என்றறிவுறுத்துகின்றனரே! எனின் இதன் பொருள் பொறிகளாலறியப்படும் எல்லாப் பொருளும் பொய்ப் பொருள்களே அவற்றிற்கு உயிரில்லை ஆதலின் அவற்றின்பாற் பற்று விடுதலே வீடு என்பதே யாதலின் இக் கருத்து ஏனைய சைவ சமய முதலிய பிறசமயத்தாரும் கூறுகின்ற கருத்தேயாம். இதனைக் கொண்டு புத்தர் சூனியவாதி எனல் சாலாது என விடுக்க.

இனி, புத்த பெருமான் கடவுளியல்பையாதல் உயிரியல்பையாதல் மக்கள் முழுதுணரும் ஆற்றலுடையர் அல்லர் ஆதலின் அவற்றை உண்டென மனங்கொளலன்றித் தந்து காட்ட முயலும் முயற்சி பயனில் முயற்சியாம் என்று கருதியே இத்தகைய வினக்கள் எழும்போது வாய் வாளாமையை மேற்கொண்டனர் என்றே நினைத்தல் வேண்டும். இவற்றையன்றி இந் நூலில் வருகின்ற அறமெல்லாம் முழுதும் திருவள்ளுவர் அறத்தோடு பெரிதும் பொருந்தியே வருதலை யாம் இந் நூலின் உரையில் இடந்தோறும் எடுத்துக்காட்டியுமிருக்கின்ருேம். புத்த பெருமான் கூறிய அறங்களை எல்லாம்

எஞ்சாமல் கடைப்பிடித் தொழுகுவோள் இக் காப்பியத் தலைவி யாகிய மணிமேகலையே யாவள்.

ஆபுத்திரன் :

இனி, இம் மணிமேகலையில் ஒரு பாத்திரமாகப் படைக்கப் பட்டிருக்கின்ற ஆபுத்திரன் புத்தர் அறத்தை முழுதும் மேற் கொண்டொழுகுபவனாயினும் தான் மேற்கொண்டொழுகும் அறத்தின்பாற் பெரும்பற்றுடையவனாகின்றான். இவ் வாற்றால் அறஞ்செய்ய வேண்டும் என்று அவாவுவது தானும் பிறப்பீனும் வித்தாகி விடும். ஆதலின் அறமே செய்ம்மின் செய்யுங்கால் அதன் மீதும் பற்றின்றிச் செய்திடுக ! என்பது புத்தர் கருத்தென்று தோன்றுகின்றது. இக் கருத்து ''ஆசை அறுமின் ஈசனோ டாயினும் ஆசையறுமின்'' என வருகின்ற சைவ சித்தாந்தத்தோ டொத்ததாகவே திகழ்கின்றது. ஆபுத்திரன் அறவோனா யிருந்தும் மாறிப் பிறக்கு மாற்றால் இக் கருத்திற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றான். இம் மணிமேகலையில் இவனுடைய வரலாறு பெரிதும் காவியச் சுவை கெழுமிய வரலாறாக அமைந்துளது.

பிறப்பால் உயர்வு தாழ்வு பேசும் மடமை :

வடவர் நாட்டில் புத்த சமயம் தோன்றுதற்கே காரண மாக இருந்தவர் இயல்பாகவே தாங்கள் பிறப்பினாலேயே உயர்ந்தவர் என்று சொல்லிக்கொண்டு அறத்திற்குப் பொருந் தாத கொலைச் செயலும் புலையுணவும் மேற்கொண்டொழுகிய வைதிக சமயத்தவர்களேயாவர். வைதிக சமயத்திற்காணப்படு கின்ற இழுக்கெல்லாம் ஆபுத்திரன் வரலாற்றில் நன்கு விளக் கப்படுதல் காணலாம். பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும். பிறப்பினால் உயர்வு தாழ்வு பேசுதல் பேதைமை என்பதை வலியுறுத்தற் பொருட்டே போலும், இக் காவியத்திற் சிறந்த பாத்திரமாகத் திகழ்கின்ற மணிமேகலையும், இவ்வாபுத்திரனும் பிறப்பு வகையாலேயே இழுக்குடையவராகக் காட்டப்பட்டிருக் கின்றனர் போலும். யாரே அறிவர் நல்லாள் பிறக்குங் குடி? ஆபுத்திரன் கற்பொழுக்கத்தில் இழுக்கிய சாலி என்னும் பார்ப் பனி வயிற்றிற் பிறந்த மகனாகக் காட்டப்பட்டிருக்கின்றான். தாய் உயர்ந்த குலமாகிய பார்ப்பனியே ஆயினும் கற்பிலிழுக் கினாள் என்றும் இழிந்த குலம் என்று கருதப்படுகின்ற மாதவி யும் மணிமேகலையும் ஒழுக்கத்தே தலைசிறந்தவர் என்றும் காட்டு மாற்றால் பிறப்பால் உயர்வு தாழ்வு பேசும் மடமையை இக் காப்பியம் திறம்படப் புலப்படுத்திய நுணுக்கம் உணர்ந்து மகிழற்பாற்று. இதனால் ''பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும்

சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யான்'' எனவரும் வள்ளுவர் அறமே புத்தர்க்கும் ஒத்த அறமென்பதுணரப்படும். இன்னும் பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து கொண்டோர்ப் பிழைத்த தண்ட மஞ்சிச் சூன்முதிர் பருவத்துத் தான் செய்த தவற்றிற்குக் கழுவாயாகக் குமரியாட இருள் நெறியிலே போகின்றவள் வழியிலே ஈன்ற குழவிக் கிரங்காளாகிப் பிறர் கண்ணுக்குத் தோன்றாத ஒரு தோட்டத்தினூடு எறிந்துவிட்டுப் போகின்றாள். இதன்கண் மேற் குலத்தவளாகிய பார்ப்பனி மகவிற்கும் இரங்காத வன்கண்மையுடையளா யிருத்தல் நோக்குக. தீவினை செய்தவர்க்குத் தீர்த்தமாடுவது அத் தீவினை தீர்க்கும் ஒரு கழுவாய் என்று கூறுவது வைதிக சமயத்தினர் கோட்பாடாகும். இன்னோரன்ன பொருந்தாக் கொள்கைகள் என்பது பௌத்த சமயத்தார் கோட்பாடு ஆதலால் இதுவும் வைதிக சமயத்தார் பொருந்தாக் கொள்கை யையே புலப்படுத்துவதாம்.

### அந்தணர் என்போர் யார்?

உயர் குலத்தவள் இரக்கமின்றி எறிந்துவிட்டுப்போன குழவியை எடுத்து வளர்த்தவனும் ஓரந்தணனே. அவனுடைய ஊரில் ஓர் அந்தணன் மனையில் வேள்வியிற் கொல்லுதற்குக் கொணர்ந்து ஒரு பசு கட்டப்பட்டு நின்றது. அப் பசு கண்ணீர் உகுத்துக் கதறுவதனைக் கண்டு ஆற்றாது நடுங்குகின்றான் பள்ளிச் சிறுவனும் பருவமுடைய ஆபுத்திரன். இவன் இழி பிறப்புடையனாயினும் அவனுள் ஓர் அருள் உள்ளம் இருக் கின்றது. எப்படியாயினும் இந்தப் பசுவை இந்தப் பார்ப் பனர் அறியாவண்ணம் களவாடிக் கொடுபோய்க் காட்டினூடு விட்டு இதன் உயிரைக் காப்பாற்றுவேன் என்று துணிகின்றது அவனுடைய அருட்பேருள்ளம்.

தான் செய்யும் செயலை அறிந்தால் இவ்வந்தணர் தன்னைப் பெரிதும் துன்புறுத்துவர் என்பது கருதியே இவன் களவினிற் கொடுபோகக் கருதுகின்றான். ஆயினும் என்னை? இவர் என்னைக் கொல்லினும் கொல்க. என்னால் இப் பசு காப்பாற்றப்படும் அன்றோ என்று இச் சிறுவன் கருது கின்றான். இவன் கருத்து ஈண்டு வள்ளுவத்தையும் சிறிது விஞ்சி நிற்கின்றது; என்னை?

> "தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
> இன்னுயிர் நீக்கும் வினை''

என்பது வள்ளுவம். மற்றிவ் வாபுத்திரனோ,

"என்னுயிர் நீப்பினும் செய்திடுவல் யான்பிறிது
இன்னுயிர் ஓம்பும் வினை"

என்றன்றே துணிகின்றான்; ஆதலால் என்க.

இனி, ஆபுத்திரன் தான் கருதியவாறே அந்த ஆவினைக் களவுகொண்டு போயபின் அவ் வந்தணர் விழிப்புற்று அதனைக் காணாது அவ் வூரிலுள்ள அடர்க்குறு மாக்கள் (கயமாக்கள்) பலரையும் கூட்டிக்கொண்டு அவரோடு குழூஉக் கொண்டு அடிச்சுவடு பற்றிப் பின் தொடர்ந்து போய் ஆபுத்திரனைக் காட்டினூடு கையும் களவுமாய்ப் பற்றிக் கொள்கின்றனர். தடியாலே நையப்புடைத்து வசைமொழி பலவும் கூறி அவனைப் பெரிதும் துன்புறுத்துகின்றனர். இந்த ஆரவாரத்தால் அந்தப் பசு அவ் வந்தணர் உவாத்தியைக் கோட்டாற் குத்திக் குடரைச் சரித்துவிட்டு விரைந்தோடிக் காட்டினுட் புகுந்து உயிருய்ந் தது. இதனால் மகிழ்ந்த ஆபுத்திரன் அந்தணரைச் சினவா மலே அவர்க் கறமுரைக்கவே முற்படுகின்றான். இவன் கூறும் அறங்கள் ஆற்றவும் இனியனவாம்.

**கடிஞையிற் கல்லிடல்:**

வேள்விப் பசுவைத் திருடும் திருடன் என்று பெயர் சூட்டி அந்தணர் அவனைப் பழிதூற்றிவிட்டதோடன்றி ஊரைவிட்டே துரத்திவிடுகின்றனர். இவ்வாற்றால் ஆதரவற்ற ஆபுத்திரன் அயலூர்களில் அந்தணர் சேரியிற் சென்று பிச்சை ஏற்குங் கால், அயலூர் அந்தணரும் அவன்பாற் சினங்கொண்டு அவனுடைய பிச்சைப் பாத்திரத்தில்சோறிடுதற்கு மாறாகக் கற் களைப் பொறுக்கியிட்டனர் என்று இப் புலவர் பெருமான் இயம்பு கின்றனர். பிச்சைப் பாத்திரத்தில் கல்லிடுதற்குக் கயவருந் துணியார். இவ் வந்தணர் அதுவும் செய்தனர் என்று தண் டமிழ் ஆசான் சாத்தனார் அவருடைய புன்மையைத் திறமாக விளக்கிவிட்டனர். பிச்சைப் பாத்திரத்தில் கல்லிட யாருந் துணியார் என்பதை இவ் வெண்பாவினாலும் உணர்க:

"வினைத்த திதுவென்றந் நீர்மையை நோக்கி
மனத்த தறிந்தீவார் மாண்டார்—புனத்த
குடிஞை யிரட்டுங் குளிர்வரை நன்னாட
கடிஞையிற் கல்லிடுவார் இல்"

(பழமொழி - உசகூ)

**ஆபுத்திரன் அறமும் அமைதியும் :**

ஈண்டு ஆசிரியர்—

"............அந்தணர் உறைதரும்
கிராமம் எங்கணும் கடிஞையிற் கல்லிட"

என விதந்தெடுத் தோதுதலும் எம் கருத்தை வலியுறுத்தும். இவ்வாறு அந்தணராற் றுன்புறுத்தப்பட்ட ஆபுத்திரன் பின்னர் அறவோர் மல்கிய மதுரை நகரத்தை எய்தி ஆங்குள்ள கலைமகள் திருக்கோயிலின் முன்றிலிலமைந்த அம்பலப் பீடிகையையே இருப்பிடமாகக் கொண்டு வதிபவன்—

"ஐயக் கடிஞை கையின் ஏந்தி
மையறு சிறப்பின் மனைதொறும் மறுகிக்
காணார் கேளார் கான்முடப் பட்டோர்
பேணுநர் இல்லோர் பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருகஎன்று இசைத்துடன் ஊட்டி
உண்டொழி மிச்சில்உண்டு ஓடுதலை மடுத்துக்
கண்படை கொள்ளும் காவலன்"

என்பர் சாத்தனார். "ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே செல்லும் வாய் எல்லாம் செயல்" என்பது பொய்யாமொழி.

**தெய்வத்தின் திருவுள்ளம் :**

அருளுருவமாகிய தெய்வம் ஒன்று இருப்பது வாய்மையாயின் அஃது ஒரு மனிதனுடைய துன்பத்திற்கிரங்கி அவன் முன்னர் எழுந்தருளி அவனுக்குத் திருவருள் வழங்கும் என்பதும் வாய்மையாயின் அத் தெய்வம் இப்படிப்பட்டதொரு செவ்வியிலேதான் அவன் முன்னர் எழுந்தருள வேண்டும் என்று, யாம், அம் மனிதனுடைய துன்பத்தையும், அதற்கிரங்கி அவன் வேண்டுகோளின்றியே தானே எழுந்தருளி வந்து அவனது துன்பத்தைத் துடைக்கும் அத் தெய்வத்தின் திருவருளையும், சீர்தூக்கி அவ்வை இரண்டும் ஒன்றற்கொன்று சமமாயிருத்தலை எண்ணி எண்ணி இன்புற்றுள்ளம் உருகும் ஒரு செவ்வி இந்த ஆபுத்திரன் வரலாற்றிலே கண்டிருக்கின்றேம். அக் காட்சி எம் நெஞ்சில் என்றென்றும் நின்று நிலவி எண்ணும்போதெல்லாம் பேரின்பம் ஊற்றெடுக்கச் செய்வதாகவும் உளது. ஆதலால் அதனையும் யாம் ஈண்டுக் கூறிவைக்கின்றேம். அது வருமாறு :—

பகற்பொழுதெல்லாம் மதுரை மாநகரத்தினூடே இல்லந்தோறும் பிச்சைப் பாத்திரத்தை ஏந்திச் சிறிதும் சோம்புதலின்றி இடையறாது உணவிரந்து வந்து குருடர் முதலிய ஆற்றாமாக்கள் அரும்பசி களைவதையே தன் குறிக்கோளாகக் கொண்டு ஆபுத்திரன் அத் தொழிலையே ஆர்வத்துடன் செய்பவன், இரவில் அப் பிச்சைப் பாத்திரத்தில் எஞ்சிய உணவை உட்கொண்டு எம்மன்னை கலைத் தெய்வத்தின் திருக்கோயில் முன்றிலிலமைந்த அம்பலத்தே அமைந்த மேடையே மலரணையாகத் தனது திருவோடே தலையணையாகக் கொண்டு கவலை சிறிதுமின்றி உறங்குவதையே வழக்கமாகக் கொண்டிருக்கின்றான். மழை 'சோ' என்று பொழிந்துகொண்டிருக்கின்ற ஒரு நாளின் நள்ளிரவிலே மழையில் நனைந்துகொண்டே உடல் நடுங்கவும் பல் பறை கொட்டவும் அவ்வம்பலத்தே வந்து புகுந்த இரவலர் சிலர் அவ் வள்ளலை அல்லது பிச்சை ஏற்போனைத் தட்டி எழுப்பி ஐயனே பசி எங்களைக் கொல்கின்றது. நெடுந் தொலைவிலிருந்து வருகின்றோம். இனி இப் பசிக்காற்றுகிலேம். இப்பொழுதே உயிர் போய்விடும்போல் தோன்றுகின்றது. ஏதேனும் உணவளித்து எம்மைக் காத்தருள மாட்டாயோ என்று உணவு இரப்பாராயினர்.

**சாதலினும் இன்னாதுமன்னே ஈதலியையாமை :**

அளியன் ஆபுத்திரன் பசி எம்மைக் கொல்லுகின்றது என்னும் அவ்விரவலர் மொழி கேட்டலும் துடித்தெழுந்து நோக்கினான். ஏற்றூண் அல்லது வேற்றூண் சிறிதுமில்லாத அவ்வறவோன் அவ்விரவலர் பசித் துன்பத்தை ஆற்றிவிடுதற்கு யாதொரு வழியும் காணப்பெறானாய்த் தானே சாந்துன்பத்தினும் மிக்கதொரு துன்பத்திலே விழுந்து மனம் மறுகுவானாயினன். தெய்வம் உளது. அஃது எங்குமுளது. எப்பொழுதும் விழிப்புடனும் இருக்கின்றது. இருந்தவாற்றால் அங்கு அத் திருக்கோயிலினும் அருளுருவம் கொண்டிருக்கின்ற அத் தெய்வமாகிய சிந்தாதேவி அவன் படுந்துன்பத்திற்குத் தானே ஆற்றுகிலாது அவன் கண் முன்னர் அவன் மட்டும் கண்டு களிக்கும் ஓர் அருளுருவத்தோடு விரைந்து தோன்றி—

"ஏடா ! அழியல் எழுந்து இதுகொள்ளாய்
நாடு வறங்கூரினும் இவ்வோடு வறங்கூராது
வாங்குநர் கையகம் வருந்துதல் அல்லது
தான்தொலை வில்லாத் தகைமையது"

என்னும், ஒரு சிறு முன்னுரையோடு தன் கையிலிருந்த பிச்சைப் பாத்திரம் ஒன்றனை அவன் கையிலே கொடுத்து

...தனைப் பெற்ற ஆபுத்திரனுடைய மகிழ்ச்சியை யாரே கூறவல்லுநர்? எடுக்க எடுக்க உணவு சுரந்தளிக்கும் அமுதசுரபியாகிய அத் தெய்வப் பாத்திரத்தினின்றும் முதன் முதலாக அவ்விரவலர் வேண்டியாங்கு வேண்டிய உணவையெல்லாம் ஊட்டி மகிழ்கின்ருன் அவ் வாருயிர்க் காவலன். அன்பர்களே! இக் காட்சிதான் எம் நெஞ்சினின்று என்றும் அகலாத பேரின்பக் காட்சியாயிருந்து எண்ணும்போதெல்லாம் எம்முள்ளத்தினும் அமுதம் சுரக்கின்றது. அவ்வுள்ளமும் அச் செழுங்கலை நியமத்துச் சிந்தாதேவியாகிய அத் தெய்வம் அளித்ததோர் அமுதசுரபியேயன்ருே! இன்னும் இவ்வாபுத்திரனுடைய செய்தி முழுவதுமே இக் காப்பியத்தில் பல்வேறு சுவைகளையும் பயக்கும் இன்பக் கருவூலமாகவே திகழ்கின்றது.

அன்பர்களே! தனக்கென வாழாது பிறர்க்கென வாழுமொரு தன்னலத் துறப்பே புத்தர் திருவாய் மலர்ந்தருளிய தலையாய அறமாகும். இவ்வாபுத்திரன் செய்யும் அறத்தைத் தவிர்த்தற்கு இந்திரனே ஒரு முதுபார்ப்பான் வடிவத்திலே வந்து இவனைத் தனது துறக்கத்திற்கு அழைக்குங்கால் இவன் இந்திரனை எள்ளி நகைத்துக் கூறும் கூற்றுகள் பெரிதும் மேதகவுடையனவாம்; இங்கு இவன் கூறுவன ஆசிரியர் தொல்காப்பியனுர்—

"எல்லா வுயிர்க்கும் இன்பம் என்பது
தான்அமர்ந்து வரூஉ மேவற் ருகும்"

என்ருேதிய இலக்கணத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகவும் திகழ்வனவாம். அங்ஙனமே இவன் மணிபல்லவத்தில் தமியனுய் அகப்பட்டுக்கொண்ட பொழுது—

"அங்கு வாழ்வோர் யாவரும் இன்மையின்
மன்னுயிர் ஓம்புமிம் மாபெரும் பாத்திரம்
என்னுயி ரோம்புதல் யானே பொறேன்என்று"

அமுதசுரபியினின்றும் ஒரு வேளை யுணவும் உண்ணுனய் அங்கிருந்த கோமுகி என்னும் பொய்கை நீரில் அப் பாத்திரத்தை இடும்பொழுதும் அறந்தரும் அருள் உள்ளத்தோடு—

"ஓரியாண் டொருநாள் தோன்றுளன விடுவோன்
அருளறம் பூண்டாங் காருயி ரோம்புநர்
உளரெனின் அவர்கைப் புகுவாய் என்ருங்கு
உண்ணு நோன்பொடு உயிர்பதிப்"

பெயர்க்கின்றுன். இவன் திருத்தகு முள்ளமே புத்த பெருமானின் அறம் முழுவதையும் தன்பாற் காட்டி அவ்வற மாகிய குணக்குன்றத்தின் கொடுமுடியாகவும் காட்சிதருத லுணர்க.

இனி, சாவக நாட்டிற் சென்று ஆங்கு ஆற்ருமாக்களின் அரும்பசி களேகுவன் என்னும் அவாவோடும் இவன் ஆருயிர் விட்டமையின் அவ்வவாவும் அவனுக்கு மறுபிறப்பிற்கு வித் தாயிற்று ஆதலால் அறவினையும் பற்றின்றி நின்றே செய்தல் வேண்டும் என்னுமொரு, புத்த பெருமானுடைய கோட் பாட்டை இவன் மறுபிறப்புவரலாறு நம்மனேர்க்குணர்த்துதலே நுண்ணுணர்வுடையார் உணர்ந்து மகிழ்வர். இக் கோட் பாட்டைச் சிவஞான சித்தியாரினும் பகவத் கீதையினும் காண லாம். இக் கோட்பாடு மெய்ஞ்ஞானத்தின் மேல்வரம்பாகத் திகழ்வதொன்ரும்.

புத்தர் மெய்க்காட்சியின் மேம்பாடு :

புத்தபெருமானின் அறவொழுக்கங்களில் வேறு எந்தச் சமயத்தினும் காணப்பெருது அவருக்கே சிறந்துரிமையுடைய ஒழுக்கமாகக் காணப்படுவது ஒன்றுளது. அதனை மாறிப்பிறந்து அரசனுகிய ஆபுத்திரன் கூற்றினும், அமைச்சனுகிய சன மித்திரன் கூற்றினும் வைத்துத் தண்டமிழ் ஆசான் சாத்தனர் காட்டுகின்றனர். அது வருமாறு: மணிமேகலையின் கூட்டர வாலே மணிபல்லவம் வந்துற்ற புண்ணியராசன் புத்த பீடிகையைக் கண்டு ஆபுத்திரனுயிருந்த தன் பழம் பிறப் பினை உணர்ந்தமையாலே தனக்கு நல்வினை காரணமாக வந்துற்ற அரச வின்பத்தையெல்லாம் கைவிட்டுத் "தூவறத் துறத்தல் நன்று எனத்" தன் அமைச்சனுகிய சனமித்திரனுக்குக் கூறினன். அவன்ருனும் கூர்த்த மெய்யறிவோடு புத்தரறங் கொண்ட மேதையாவான், ஆகலின் அவன் அப்பொழுது அம் மன்னனுக்குக் கூறிய அறிவுரை உதோ கீழே தரப்படுகின்றது:

"அரசர் பெருமானே! இச் சாவக நாடு வற்கடம் எய்தி மன்னுயிர் மடிகின்ற இன்னற் பொழுதிலே நீ இந்த நாட்டில் வந்து பிறப் பெய்தினை; நிரைத்தார் அண்ணலே! இந் நாட்டில் நீ—

"தோன்றிய பின்னர்த் தோன்றிய உயிர்கட்கு
வானம் பொய்யாது மண்வளம் பிழையாது
ஊனுடை உயிர்கள் உறுபசி அறியா

நீயொழி காலை நின்னு டெல்லாம்
தாயொழி குழவி போலக் கூஉம்
துயர்நிலை உலகம் காத்தல் இன்றிநீ
உயர்நிலை உலகம் வேட்டனை யாயின்
இறுதி உயிர்கள் எய்தவும் இறைவ
பெறுதி விரும்பினை ஆகுவை அன்றே
தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயிர் ஓம்பும்
மன்னுயிர் முதல்வன் அறமும் ஈதன்றால்
மதிமா று ஓர்ந்தனை மன்னவ''

என்னும் இடித்துரையே அம் மதி நுட்பம் நூலோடுடைய அமைச்சன் கூற்றாகும்.

அரசே! நீ நல்வினை செய்தமையால் இச் சாவக நாட்டு மன்னனாகப் பிறந்தனை; நீ பிறக்குமுன் பன்னீராண்டு வற்கட முற்றுப் பெரும்பாலும் மன்னுயிர்கள் மடிந்து கொண்டிருந்த தொரு சூழ்நிலையிலேதான் நீ இச் சாவக நாட்டிற் பிறந்தனை. அதற்கு இந்நாடு செய்த தவம் காரணமாயிருக்கலாம். நீ பிறந்த நாள் தொடங்கி இந் நாட்டிலுள்ள மன்னுயிரெல்லாம் எவ்வாற்றானும் வளம்பெற்று இனிதே வாழ்கின்றன. நின் தவமும் இந் நாடு செய்த தவமும் ஆகிய இரண்டும் நல்லனவே. ஆயினும் நீ இப்பொழுது அறிவு பிறழ்ந்து ஏதேதோ கூறு கின்றனை.

இந்நாட்டு மன்னுயிர்கள் எக்கேடேனும் கெட்டொழிக! நான் மட்டும் இவற்றைத் துறந்துபோய்ப் பேரின்பப் பெரு வாழ்வு பெறுவேன் என்கின்றனை! இங்ஙனம் பேசுவது ''செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம் சேர்ந்திடலாம் என்னும் பித்த மனிதர் பேயுரை''யையே பெரிதும் ஒக்கும். இவ்வறம் மன்னுயிர் முதல்வனாகிய புத்தபெருமான் அறிவுறுத்த அறமும் அன்று என்று சனமித்திரன் அரசன் துறவை மறுக்கின்றான். நீ மேற் கொள்வது புத்தர் கூறிய அறமும் அன்று என்று இவன் சிறப்பும்மையோடு செப்புகின்றான். ஆயின் அவர் கூறிய அறத்தையும் இதனை எதிர்மறையாக வைத்துக் கண்டு கொள்ளல் கூடும். அஃதாவது:

ஒருவன் தன்னுயிர்க்கு மட்டும் உறுதி வேண்டி உலகத் தைத் துறந்து போதலும் தன்னலமே பேணுவதாகலின் அஃதோர் அறம் எனலும் பேதைமையாம்; மெய்யான அற வாழ்க்கையாவது பிறர் நலத்தின் பொருட்டுத் தொண்டு பூண்டு வாழும் தன்னலம் சிறிதும்பேணாத வாழ்க்கை மட்டுமே என்பது

புத்தர் இவ்வுலகிற் குணர்த்திய அறமாம். இதுவே இத் தமிழகத்திலே இற்றைக் கிரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே இத் தமிழகத்துச் சான்றோர் கண்ட மெய்ந்நெறி வாழ்க்கையு மாகும் என்பதனை—

"உண்டா லம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர் பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"

என இத் தமிழகத்து இளம்பெரும்வழுதி என்னும் முடிமன்னன் பெருமிதம்படப் பாடி வைத்த புறப்பாடலினும் காணலாகும்.

அன்பர்களே! இவ்வாறு இம் மாபெருங் காப்பியத்தின் மாண்பெல்லாம்—நுணுக்கமெல்லாம்—எடுத்துக் காட்டுதற்கு இவ் வணிந்துரை இடந்தராது. எனினும் இறுதியாகவும் ஒரு சிலவற்றைத் தொட்டுக் காட்டியேனும் இதனை முடிப்பாம்.

மணிமேகலையும் ஆபுத்திரனுமாகிய சிறந்த பாத்திர மாவார் இருவரை மட்டுமே ஒரு சில இதுகாறும் பேசினேம். இன்னும் இக் காப்பியத்திலே வருகின்ற சின்னஞ் சிறிய பாத்திரங்களும் ஒவ்வொரு பென்னம் பெரிய சிறப்புப் பொருளைத் தாங்கியே வருகின்றனர்.

**ஆதிரை நல்லாள் :**

தன் கணவன் கடலுள் மூழ்கி இறந்தான் என்று பிறர் கூறிய பொய்ச் செய்தியை வாய்மையாகக் கொண்டு தீமூட்டிய ஈமவிறகின் மேலேறுகின்றாள் ஆதிரை என்பாள் ஒருத்தி. இந்த ஆதிரை நல்லாளின் கற்பு மாண்பினால் அவ்வீமத் தீ நாற் புறமும் கொழுந்து விட்டெரியும் பொழுதும் அவளைச் சுடாமல் அவளுக்கென,—

"படுத்துடன் வைத்த பாயற் பள்ளியும்
உடுத்த கூறையும் ஒள்ளெரி யுறாஅது"

அவள் தீயின் முழுகுதற் பொருட்டு—

"ஆடிய சாந்தமும் அசைந்த கூந்தலிற்
சூடிய மாலையும் தொன்னிறம் வழாது
விரைமலர்த் தாமரை ஒருதனி இருந்த
திருவின் செய்யோள் போன்று"

இனிது அத் தீயினுல் சிறிதும் இன்னலுருதிருந்தாள். இந் நிகழ்ச்சி பற்றி அவள் செருக்குறவும் தகும். ஆயினும் கணவன் மாண்டபின் மாளாதிருத்தல் பற்றியே வருந்தி,—

"தீயுங் கொல்லாத் தீவினை யாட்டியேன்
யாது செய்வேன் என்றுஅவள் ஏங்கலும்"

அப்பொழுது அசரீரி அந்தரம் தோன்றி ஆதிரை கேள்! உன் அரும்பெறற் கணவன் ஆருயிர் உய்ந்து இருக்கின்ருன். கவலற்க! என்று தேற்றத் தேறி அழுதுயர் நீங்கி உள்ளங் குளிர்ந்து பொய்கை புக்காடிப் போதுவாள் போன்று மனையகம் புகுகின்ருள். இவளுடைய கற்பினது திட்பத்தை எண்ணி மகிழ்மின்.

மருதி :

காமுகக் கயவனுகிய ஒரு மன்னிளங்குமரன் காவிரியில் நீராடி வருகின்ற தமிழ் நாட்டுப் பார்ப்பன மகள் மருதி என்பவளை யாப்பறை என்று கருதிக் காம நோக்குடன் நீ வா என்று அழைத்தனன். அது கேட்ட மருதி—

"மண்டிணி ஞாலத்து மழைவளந் தரூஉம்
பெண்டி ராயின் பிறர்நெஞ்சு புகாஅர்
புக்கேன் பிறன் உளம்"

என்று அத் தவற்றினைத் தன்னுடையதாக்கிக்கொண்டு மனையகம் புகாது சதுக்கப் பூதத்தின்பாற் சென்று முறையிடுகின்ருள். அப் பூதம் அவட்குக் கூறும் விடைகளும் கற்புடைமைக்கே புதியதோர் இலக்கணம் வகுக்கின்றன. மருதி ஈண்டுக் கூறும் பத்தினிப் பெண்டிர் பிறர் உளம்புகாஅர் என்னும் இவ்விலக்கணத்தை யாம் வேறு எந்த இலக்கியத்தினுங் கண்டிலேம். இவ்விலக்கணம் இவ்விலக்கியத்திற்கே சிறந்துரிமை யுடையது போலும்.

ககந்தன் செங்கோன்மை :

இனிக் ககந்தமன்னன் பத்தினிப் பெண்டிர் பின்புளம் போக்கிப் பிழை செய்த தன் மக்கள் இருவரையும் தன் கை

வாளாலே எறிந்து கொல்கின்றான். இவ்வாற்றால் இவன் மனுநீதிச் சோழன் செங்கோன்மையையே புதுப்பித்து விடுகின்றான்.

மாவண் கிள்ளி :

உதய குமரனைக் கொலை செய்தமையை அவன் தந்தையாகிய மாவண்கிள்ளி கேட்டு மகிழ்கின்றான். இவ்வாறு இன்னும் விசாகை வரலாறும் ஆதிரை கணவன் சாதுவன் வரலாறும் பிறவுமாய் இக் காப்பியத்திலே தொட்ட தொட்ட இடமெல்லாம் சுவை தருகின்ற காட்சிகள் பற்பல உள்ளன. இன்னும் தொட்ட தொட்ட இடமெல்லாம் இந்நூல் ஒப்பற்ற அறங்கள் பலவற்றையும் பயில்வோருளத்தே அழுதூற அறிவுறுத்துதலையும் காணலாம்.

இனி, தண்டமிழ் ஆசான் சாத்தனார் இக் காப்பியத்திலே கையாளுகின்ற உவமைகள் அவருக்கே சிறந்துரிமையுடையனவாக மிளிர்கின்றன.

மணிமேகலையை மணிமேகலா தெய்வம் மணிபல்லவத் தீவிற் கொடுபோய் வைத்து நீங்கிய பின்னர் மணிமேகலை தனக்கு முற்றிலும் புதிய இடமாகிய மணிபல்லவத் தீவில் துயிலுணர்ந்தெழுந்து பண்டறி கிளையொடு பதியுங் காணாளாய்க் கண்டறியாத புதியவற்றையே கண்டு மருண்டு நிற்பவளுக்கு—

"காதற் சுற்றம் மறந்து கடைகொள
வேறிடத்துப் பிறந்த"

உயிரை இவர் உவமையாக எடுத்தோதுதலும்,

உலகத்தே புத்தபெருமான் திருவவதாரஞ் செய்யும் காலத்தின் தன்மையையும் அவர் தோற்றத்தையும்—

"உயிர்க ளெல்லாம் உணர்வு பாழாகிப்
பொருள் வழங்கு செவித்துளை தூர்ந்து அறிவிழந்த
வறந்தலை உலகத் தறம்பாடு சிறக்கச்
சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலையோர்
இளவள ஞாயிறு தோன்றிய தென்ன
நீயோ தோன்றினை"

எனச் சிறந்ததோருவமை தேர்ந்துரைத்தலும் (இக் கொள்கை பகவத்கீதையில் கண்ணபெருமான் கூற்றை யொத்திருத்தலும் காண்க).

புத்தபெருமானுடைய திருவடிச் சுவடுகள் சமனொளி மலையில் பதிந்து கிடப்பவற்றிற்கு—

"பிறவி என்னும் பெருங்கடல் விடூஉம்
அறவி நாவாய்"

என்று அதன் தெய்வத் திறந்தோன்ற ஆசிரியர் குறிப்புவமம் கூறிதலும்,

இரவலர் அணுகுமுன்பே அவர் விரும்பும் இன்சுவை உணவைத் தன் அகன் சுரை நிரம்பச் சுரந்தளிக்கும் அமுத சுரபிக்கு—

"ஈன்ற குழவி முகங்கண் டிரங்கித்
தீம்பால் சுரப்போள் தன்முலை போன்றே
நெஞ்சுவழிப் படூஉம் விஞ்சைப் பாத்திரம்"

எனச் சிறந்ததோ ருவமை தேர்ந்து கூறுதலும்,

அறவணவடிகளார் தம்முடைய காளைப் பருவத்திலே தாரையும் வீரையும் இலக்குமியும் என்னும் பெயர் பூண்டு மன்னவன் மகளிராய் ஒரு வயிற்று ஒருங்குடன் பிறந்தோரா யிருந்ததனைத் தாமே கண்கூடாகக் கண்டு அம் மகளிராற் பேணவும் பட்டிருந்தார். மற்று அம் மகளிர் தாமே மாறிப் பிறந்து தம்முள் ஒருவர்பால் ஒருவர் கொண்டுள்ள பற்றுள்ளம் காரணமாக மாதவியாகியும், சுதமதியாகியும், மணிமேகலை யாகியும் ஒருவரோடொருவர் அன்புத் தொடர்புடையராகிப் புகார் நகரத்தே தம்மைக் கண்டடி வணங்க ஒருசேர வந்தெய் தியபொழுது இவர்களுடைய முற்பிறப்பையும் மறுபிறப்பையும் தமதொரு பிறப்பிலேயே முற்பகுதியினும் பிற்பகுதியினும் தாமே காண நேர்ந்தமையை நினைந்து அடிகளார் வியந்து நிற்கின்றார். இவ்வருமையான நிகழ்ச்சியை அறிந்த யாமும் வியக்கின்றோம் அல்லமோ? யாமும் மாறிப் பிறந்துலகில் வரும்போது முற்பிறப்பிலே நம்மோடு அன்புத் தொடர்புடைய ராயிருந்து மாறிப் பிறந்து இவ்வுலகில் வாழ்பவர் நமக்கு அணுக்கராகி நண்பராகவும் இருத்தல் கூடும். அவருடைய முற்பிறப்பையும் நம்முடைய முற்பிறப்பையும் யாமறிகின் றிலேம். அறியக் கூடுமாயின் இவ்வாறே யாமும் அறிதல் கூடும். அவ்வாறு அறியும் இருத்தி பெற்ற அறவணர் அவர் களைக் கண்டு வியப்பவர்,

"ஆடுங் கூத்தியர் அணியே போல
வேற்றோ ரணியோடு வந்தீரோ!"

என உவமை தேர்ந்துரைத்து வியத்தலும்,

மணிமேகலை காயசண்டிகை வடிவோடு நின்று உதய குமரனுக்கு அறங்கூறுஞ் செவ்வியில் காயசண்டிகையைத் தேடிவந்த அவள் கணவன் காஞ்சனன் மணிமேகலையையே காயசண்டிகை என்று நினைத்து அவளை அணுகித் தன் உரிமை தோன்றப் பாராட்டினன். மணிமேகலையோ உதயகுமரன்பால் அன்புகூர்ந்து அவனுக்கே அறங்கூறுதலன்றிக் காஞ்சனனை ஏதிலன்போல் நோக்கி அவன் சொற்குச் செவிகொடாளாகவே அது கண்ட காஞ்சனன் காயசண்டிகையே இம் மன்னன் மகன்பாற் காதல்கொண்டு தன்னைப் புறக்கணிக்கின்றனள் என்று கருதி இதனை ஒளிந்திருந்து ஆராய்ந்து காண்பேன் என்று பெருஞ் சினத்தோடு அயலில் ஒரு மறைவிடத்திலே கரந்துறைவானாயினன். இவன் கரந்துறைதற்குவமை கூறும் ஆசிரியர்—

"மற்றவள் இருந்த மன்றப் பொதியில்
புற்றடங் கரவிற் புக்கொளித் தடங்கினன்"

எனச் சூழ்நிலைக்குத் தகவோ ருவமை தேர்ந்துரைத்தனர். மீண்டும் உதயகுமரன்றானும் தன்னோடு சொல்லாட்டம் நிகழ்த்துபவள் மணிமேகலையே, அவளே காயசண்டிகையாய் உருவங் கொண்டிருக்கின்றாள் என்று கருதினன். அச் செவ்வியில் காஞ்சனன் வரவு கண்டு உதயகுமரன் இவன் வரவும் நல்லதே யாயிற்று, இன்று நள்ளிரவில் யாருமறியாமல் இங்கு வந்து பார்த்தால் இவள் காயசண்டிகையா? மணிமேகலையா? என்னும் ஐயத்தைத் தீர்த்துண்மையைக் கண்டு கொள்ளலாம் என்று கருதி அரண்மனையை அடைந்தான். மீண்டும் உதயகுமரன் ஊர்துஞ்சும் நள்ளியாமத்திலே ஒரு தனியெழுந்து மணிமேகலையிருக்கும் அம்பலம் புகுவானையும் அங்குக் காஞ்சனனால் அவன் கொலையுண்டலையும் அறிவிக்கின்ற ஆசிரியர் சாத்தனார் சூழ்நிலைக்கேற்பவே அஞ்சுதகும் உவமைகள் தேர்ந்து கூறும் அழகைக் கூர்ந்து நோக்குமின்.

உதயகுமரன்—

"ஊர் துஞ்சு யாமத்து ஒருதனி யெழுந்து
வேழம் வேட்டெழும் வெம்புலி போலக்
கோயில் கழிந்து வாயி னீங்கி
ஆயிழை யிருந்த அம்பல மணைந்து

வேக வெந்தி நாகங் கிடந்த
போகுயர் புற்றளை புகுவான் போல
ஆகந் தோய்ந்த சாந்தலர் உறுத்த
ஊழடி யிட்டதன் உள்ளகம் புகுதலும்
ஆங்குமுன் இருந்த அலர்தார் விஞ்சையன்
ஈங்கிவன் வந்தனன் இவள்பால் என்றே
வெஞ்சின அரவம் நஞ்செயிறு அரும்பத்
தன்பெரு வெகுளியின் எழுந்துபை விரித்தென
இருந்தோன் எழுந்து பெரும்பின் சென்றவன்
சுரும்பறை மணித்தோள் துணிய''

காஞ்சனன் தன் கதிர்வாளால் எறிந்து அப்பாற் போகின்றனன்.

மேலே கூறிய இப் பகுதியிலே ஊழ்வினை தன் பயனை நுகர்வித்தற்கு எத்தகைய சூழ்நிலைகளை உருவாக்கிக் கொண்டு விளையாடுகின்றது என்னும் ஒருண்மையை அழகிய உவமைகளோடு ஆசிரியர் படைத்திருக்கின்றார். தீயவினையின் அக் கொடுஞ் செயலை அஞ்சுதகும் உவமையைத் தேர்ந்துரைக்குமாற்றால் பயில்வோர் நெஞ்சகத்தே நன்கு பதித்து விடுகின்ற அவருடைய வித்தகப்புலமை தெய்வத்தன்மையுடையதென்பது மிகையன்று. 'ஊழ்வினை உருத்துவந் தூட்டும்' என்பது இளங்கோ சிலப்பதிகாரத்திற்கு எடுத்துக்கொண்ட கருப்பொருள் மூன்றனுள் ஒன்றாகும். அதனை உணர்த்துவதில் இம் மணிமேகலை ஆசிரியர் இக் காவியத்தில் பல்வேறு சூழ்நிலைகளைப் படைத்து நன்கு விளக்குகின்றார். இத்திறத்தில் இரண்டாசிரியர் உள்ளமும் உணர்ச்சியால் ஒன்றுபட்டிருத்தலைக் கானலாம்.

''கம்பர் வீட்டுக் கட்டுத்தறியும் கவிசொல்லும்'' என்பர் அறிஞர். தண்டமிழ் ஆசான் சாத்தனார் தாமும் இக் காப்பியத்திலே ஒருதறியையே சிறந்ததொரு பாத்திரமாக்கி அதன்கட் பொறித்த பாவையைக் கந்திற் பாவையாக்கிப் பேசுவிக்குமாற்றால் இக் காப்பியத்தையே உருவாக்கித் தருகின்றார். இக் காப்பியத்தில் கந்திற்பாவை வாயிலாய் இவர் யாத்துள்ள செய்யுள்கள் ஆற்றவும் இனியன. இவர் இக் காப்பியத்தின் வாயிலாய் மக்களைத் தெய்வங்களோடும் பழம்பிறப்போடும் பெரிதும் ஊடாடச் செய்திருக்கின்றார். அவர்தம் பழம்பிறப் புணர்ச்சிகளையும் தம் அகவுலகிலேயே ஆராய்ந்து கண்டு கொள்ள வழியும் காட்டியிருக்கின்றார். கதையிலே வருகின்ற புத்தபீடிகையும் அதனைக் காணுந் திருவுடையோர் தத்தம் பழம்

பிறப்புக்களை யுணரும் செய்தியும் மெய்யறிவுடையோர் இப் பிறப்பில் தமக்கு வருகின்ற இன்பதுன்பங்களைச் சீர்தூக்கி நோக்கின், தமது பழம்பிறப்பு இத்தகையதாயிருந்திருத்தல் கூடும் என்றுணர்தல் கூடும். இவ்வியற்கையையே இக் காவியம் மணிமேகலை புத்தபீடிகை கண்டு பழம்பிறப்புணர்ந்ததாக நூனெறி வழக்கிற் கூறுகின்றது.

வாய்மையிலே ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய அக வுலகிலே அத்தகையதொரு புத்த பீடிகையை உடையவனுகவே இருக்கின்ருன். அதனைக் காண மனிதன் இப் பொய்யுலக மயக்கத்தினின்றும் விடுபடட்டும். இவ் வுலகவாழ்க்கையை வறிய கானல் நீரெனக் கண்டுகொள்ளட்டும்! அவன் பிறர் யாருமறியாமல் தனது தெய்வத்திருவருளின் துணைகொண்டு தன்னுடைய அகவுலகிலே புகுதட்டும்! அங்கே அவன் அகக் கண்ணின் துயில் கலைந்து ஆற்ருமையால் அழுது புலம்பட்டும்! தன்னை அங்குக் கொணர்ந்த தெய்வத்திருவருளை அகங்குழைந் துருகி நாடி அதனைக் காணத் தன் அகவுலகிலேயே அலைந்து திரியட்டும்! ஆம், அப்பொழுது அவன் அகக்கண்முன் அங்கேயே மறைந்திருக்கின்ற அவனுடைய மெய்யறிவாகிய புத்தபீடிகை தானே வெளிப்பட்டு அவனுக்கு முக்காலவுணர் வையும் தந்து உய்விக்கும். அப்பொழுது உள்ளம் தெளிந்து ஓர்த்து அவன் உள்ளதை யுணருவான். அதுவே அவனது நிருவாண நிலை அல்லது, தன் அகவுலகிலேயே அவனது பேராவியற்கையாம்; என்னும் இவ்வரிய தத்துவத்தையே தண்டமிழ் ஆசான் சாத்தனுர் தமது தெய்வப் புலமைத் திறத்தாலே தமக்கியன்ற நூனெறி வழக்காலே மாவண் தமிழ்த் திறமாகிய இம் மணிமேகலை துறவு என்னும் காப்பியமாக வடித்துத் தந்திருக்கின்ருர். இக் காப்பித்திற்கு நுண்ணுரை எழுதுதற்குத் தோன்றும் துணையாய் நின்ற உயர்திரு. தாமரைச் செல்வர். வ. சுப்பையாபிள்ளை அவர்கட்கு யாம் என்றென்றும் நன்றிக்கடன் பட்டுள்ளேம். இவ்வரும் பெரும் பணியை எம்மை ஒரு கருவியாகக் கொண்டு செய்வித்துக் கொண்ட எம்மன்னை தமிழ்த் தெய்வத்தின் மலரடிகள் என் றென்றும் எமது நெஞ்சத்தில் நின்று நிலவுவனவாகுக.

வாழ்க சாத்தனுர் மாவண்டமிழ்த்திறம்!

வணக்கம்

இங்ஙனம்

உரையாசிரியன்

**பொ. வே. சோமசுந்தரன்**

# உள்ளுறை

உ

ஓம்

# மணிமேகலை

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. (திருக்குறள்)

## பதிகம்

## [கதைபொதி பாட்டு]

அஃதாவது—இந்நூலின்கட் போந்த பொருளை நிரலாகத் தொகுத்துக் கூறும் சிறப்புப் பாயிரம் என்றவாறு.

"பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத்
தொகுதி யாகச் சொல்லுத லாகும்"

என்பது முணர்க.

இனி, பதிகம் என்ற சொல் பாயிரம் என்னும் பொருட்டு மாகும் என்பதனை,

"முகவுரை 'பதிகம்' அணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்"

என வரும் நன்னூற் சூத்திரத்தால் உணர்க.

பாயிரம் பொதுவும் சிறப்பும் என இரு வகைத்து. அவற்றுள் இப்பதிகம் இந்நூற்கேயுரிய சிறப்புப் பாயிரம் ஆகும்.

இனி இதன்கண் 'மணிமேகலை' என்னும் இப்பெருங் காப்பியத்தின பிறப்பிடமாகிய காவிரிப்பூம்பட்டினத்தின் வரலாறும் அதனைத் தலைநகராகக் கொண்ட சோழ நாட்டைப் புரக்கும் காவிரி என்னும் பேரியாற்றின் வரலாறும், காவிரிப்பூம்பட்டினத்தின்கண் ஒரு நூறு வேள்வி யுரவோனாகிய இந்திரனுக்கு விழாவெடுத்தற்கு முரசறைதல் தோற்றுவாயாகவும் மணிமேகலை பிறப்பற வேண்டி நோன்பு மேற்கொள்ளல் இறுவாயாகவும் அமைந்த கதையைத் தம் மகத்துட் கொண்ட உள்ளுறுப்புக்களும் நிரல்படுத்திக் கூறப்பட்டுள்ளன.

இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து
விளங்கொளி மேனி விரிசடை யாட்டி
பொன்றிகழ் நெடுவரை உச்சித் தோன்றித்
தென்றிசைப் பெயர்ந்தவித் தீவத் தெய்வதம்
சாகைச் சம்பு தன்கீழ் நின்று
மாநில மடந்தைக்கு வருந்துயர் கேட்டு
வெந்திற லரக்கர்க்கு வெம்பகை நோற்ற
சம்பு வென்பாள் சம்பா பதியினள்
செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளக்கும்
கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட
அமர முனிவன் அகத்தியன் றனாது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை
செங்குணக் கொழுகியச் சம்பா பதியயல்
பொங்குநீர்ப் பரப்பொடு பொருந்தித் தோன்ற
ஆங்கினி திருந்த அருந்தவ முதியோள்
ஓங்குநீர்ப் பாவையை உவந்தெதிர் கொண்டாங்கு
ஆணு விசும்பின் ஆகாய கங்கை
வேணவாத் தீர்த்த விளக்கே வாவெனப்
பின்னிலை முனியாப் பெருந்தவன் கேட்டிங்கு
அன்னை கேளிவ் வருந்தவ முதியோள்
நின்னால் வணங்குந் தகைமையள் வணங்கெனப்
பாடல்சால் சிறப்பிற் பரதத் தோங்கிய
கோடாச் செங்கோற் சோழர்தங் குலக்கொடி
கோள்நிலை திரிந்து கோடை நீடினும்
தான்நிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை
தொழுதனள் நிற்பவத் தொன்மூ தாட்டி
கழுமிய உவகையிற் கவாற்கொண் டிருந்து
தெய்வக் கருவுந் திசைமுகக் கருவும்
செம்மலர் முதியோன் செய்த அந்நாள்
என்பெயர்ப் படுத்தஇவ் விரும்பெயர் மூதூர்
நின்பெயர்ப் படுத்தேன் நீவா ழியவென
இருபாற் பெயரிய உருகெழு மூதூர்
ஒருநூறு வேள்வி உரவோன் றனக்குப்
பெருவிழா அறைந்ததும் பெருகிய தலரெனச்
சிதைந்த நெஞ்சிற் சித்திரா பதிதான்
வயந்த மாலையான் மாதவிக் குரைத்ததும்
மணிமே கலைதான் மாமலர் கொய்ய
அணிமலர்ப் பூம்பொழில் அகவயிற் சென்றதும்
ஆங்கப் பூம்பொழில் அரசிளங் குமரனைப்
பாங்கிற் கண்டவள் பளிக்கறை புக்கதும்

பளிக்கறை புக்க பாவையைக் கண்டவன்
துளக்குறு நெஞ்சில் துயரொடும் போயபின்
மணிமே கலாதெய்வம் வந்துதோன் றியதும்
மணிமே கலையைமணி பல்லவத் துய்த்ததும்
உவவன மருங்கினவ் வுரைசால் தெய்வதம்
சுதமதி தன்னைத் துயிலெடுப் பியதூஉம்
ஆங்கத் தீவகத் தாயிழை நல்லாள்
தான்றுயி லுணர்ந்து தனித்துய ருழந்ததும்
உழந்தோ ளாங்கணோர் ஒளிமணிப் பீடிகைப்
பழம்பிறப் பெல்லாம் பான்மையி னுணர்ந்ததும்
உணர்ந்தோள் முன்னர் உயர்தெய்வந் தோன்றி
மனங்கவ லொழிகென மந்திரங் கொடுத்ததும்
தீப திலகை செவ்வனந் தோன்றி
மாபெரும் பாத்திரம் மடக்கொடிக் களித்ததும்
பாத்திரம் பெற்ற பைந்தொடி தாயரொடு
யாப்புறு மாதவத் தறவணர்த் தொழுததும்
அறவண வடிகள் ஆபுத் திரன்றிறம்
நறுமலர்க் கோதைக்கு நன்கனம் உரைத்ததும்
அங்கைப் பாத்திரம் ஆபுத் திரன்பால்
சிந்தா தேவி கொடுத்த வண்ணமும்
மற்றப் பாத்திரம் மடக்கொடி யேந்திப்
பிச்சைக் கவ்வூர்ப் பெருந்தெரு வடைந்ததும்
பிச்சை யேற்ற பெய்வளை கடிஞையிற்
பத்தினிப் பெண்டிர் பாத்தூண் ஈத்ததும்
காரிகை நல்லாள் காயசண் டிகைவயிற்று
ஆனைத் தீக்கெடுத் தம்பல்ம் அடைந்ததும்
அம்பலம் அடைந்தனள் ஆயிழை யென்றே
கொங்கலர் நறுந்தார்க் கோமகன் சென்றதும்
அம்பல மடைந்த அரசிளங் குமரன்முன்
வஞ்ச விஞ்சையின் மகள்வடி வாகி
மறஞ்செய் வேலோன் வான்சிறைக் கோட்டம்
அறஞ்செய் கோட்டம் ஆக்கிய வண்ணமும்
காயசண் டிகையென விஞ்சைக் காஞ்சனன்
ஆயிழை தன்னை அகலா தணுகலும்
வஞ்ச விஞ்சையன் மன்னவன் சிறுவனை
மைந்துடை வாளில் தப்பிய வண்ணமும்
ஐயரி யுண்கண் அவன்றுயர் பொறுஅள்
தெய்வக் கிளவியிற் றெளிந்த வண்ணமும்
அறைகழல் வேந்தன் ஆயிழை தன்னைச்
சிறைசெய் கென்றதுஞ் சிறைவீடு செய்ததும்

நறுமலர்க் கோதைக்கு நல்லற முரைத்தாங்கு
ஆய்வளை ஆபுத் திரனா டடைந்ததும்
ஆங்கவன் றன்னோ டணியிழை போகி
ஓங்கிய மணிபல் லவத்திடை யுற்றதும்
உற்றவ ளாங்கோர் உயர்தவன் வடிவாய்ப்
பொற்கொடி வஞ்சியிற் பொருந்திய வண்ணமும்
நவையறு நன்பொரு ளுரைமி னோவெனச்
சமயக் கணக்கர் தந்திறங் கேட்டதும்
ஆங்கத் தாயரோ டறவணர்த் தேர்ந்து
பூங்கொடி கச்சி மாநகர் புக்கதும்
புக்கவள் கொண்ட பொய்யுருக் களைந்து
மற்றவர் பாதம் வணங்கிய வண்ணமும்
தவத்திறம் பூண்டு தருமங் கேட்டுப்
பவத்திற மறுகெனப் பாவை நோற்றதும்
இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப
வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்
மாவண் தமிழ்த்திறம் மணிமே கலைதுறவு
ஆறைம் பாட்டினுள் அறியவைத் தனனென்.

## உரை

### தோற்றுவாய்

**க - அ: இளங்கதிர்.........பதியினள்**

(இதன் பொருள்) பொன் திகழ் நெடுவரை உச்சி இத் தீவத் தெய்வதம் - பொன் மயமாக விளங்குகின்ற நெடிய மேரு மலையின் உச்சியின்கண் இந்த நாவலந் தீவின் காவல் தெய்வமானது; இளங்கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து விளங்கு ஒளி மேனி விரி சடையாட்டி தோன்றி - இளமையுடைய கதிர்களையுடைய ஞாயிற்று மண்டிலத்தையும் இகழ்தற்குக் காரணமான பேரொளியோடு காணப்படுகின்ற விளக்கமான ஒளிப் பிழம்பாகிய திருமேனியையும் விரிந்த சடையையும் உடையவளாய் அருளுருவங் கொண்டு தோன்றி; மாநில மடந்தைக்கு வரும் துயர் கேட்டு - பெரிய நிலமகளுக்கு அரக்கர்களால் உண்டாகின்ற துன்பங்களைத் தன்பால் முறையிடுகின்ற அமரர்கள் வாயிலாய்க் கேள்வியுற்று,

வெம்திறல் அரக்கர்க்கு வெம்பகை - வெவ்விய ஆற்றலுடைய அவ்வரக்கர்களுக்கும் அச்சமுண்டாக்கும் பகையாவதற்குரிய ஆற்றலைப் பெறும் பொருட்டு; சாகை சம்பு தன்கீழ் நின்று நோற்ற - கிளைகளை யுடைய நாவல் மரத்தின் கீழே நின்று தவம் செய்தமையாலே; சம்பு என்பாள் - சம்பு என்று பெயர் பெற்றவள்; தென் திசை பெயர்ந்த சம்பா பதியினள் - அம் மேரு மலையினின்றும் தெற்குத் திசையை நோக்கி எழுந்தருளிய காலத்தே சம்பாபதி என்னும் தன் பெயரோடு படைக்கப்பட்டி ருந்த பூம்புகார் நகரத்திலே திருக்கோயில் கொண்டு வீற்றிருப்பா ளாயினள்; என்க.

(விளக்கம்) ஞாயிறு திருமேனிக்கும் கதிர் விரிசடைக்கும் உவமை. இஃது எதிர் நிரல் நிறை உவமை. ஆகவே ஞாயிற்றை எள்ளும் மேனியை யும் அதன் இளங்கதிரை எள்ளும் சடையையும் உடைய அருளுருவம் கொண்டு பொன்வரை உச்சியில் தோன்றித் துயர் கேட்டுச் சம்புவின் கீழ் நின்று நோற்றமையால் சம்பு எனப் பெயர் பெற்று, பொன் மலையினின் றும் தென்றிசை நோக்கிப் பெயர்ந்து வந்து தென்றிசையின்கண் தனக் கெனப் பிரமனால் தன் பெயரோடே படைக்கப்பட்டிருந்த சம்பாபதி என்னும் நகரத்தில் எழுந்தருளி இருப்பாளாயினள் என்பது கருத்தாகக் கொள்க.

இதனால் காவிரி ஒரு பேரியாறாகக் காட்சி தருதற்கு முன்பு சம்பாபதி என்னும் பெயரையுடையதாய் இருந்த அந்நகரமே காவிரியாறு சோழ மன்னர்களால் பெரிய யாறாகச் செய்யப்பட்ட பின்னர் 'காவிரிப் பூம்பட்டினம்' எனவும் காவிரி கடலொடு கலக்கும் சிறப்புக் கருதிப் 'பூம்புகார் நகரம்' எனவும் பெயர் பெற்றது என்று உணரப்படும்.

இதனை (உக-ருo) ஆம் அடிகளில் கூறுமாற்றான் அறியலாம். ஆகவே, சம்பு வென்பாள் சம்பாபதியினள் என்றது, சம்பு என்னும் அக் காவற்றெய்வம் பொன்வரையுச்சியினின்றும் தென்திசைப் பெயர்ந்து வந்து நான்முகன் தன் பெயர்ப்படுத்த சம்பாபதி என்னும் இடத்திலே உறைந்தது என்றவாறு. இத் தெய்வம் காவிரியாறு தோன்று முன்பே அவ்விடத்திலே எழுந்தருளியிருந்தது என்பதும் பின்னர்க் கூறுமாற்றா னுணரலாம்.

## காவிரியின் தோற்றம்

### கூ - கஅ: செங்கதிர்..........வாவேன

(இ - ள்.) செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளக்கும் வேட்கையின் காந்தமன் - சிவந்த ஒளியையுடைய கதிரவன் வழித் தோன்றிய தெய்வத் தன்மையுடைய தான் பிறந்த குலத்தினைப் புகழால் உலகுள்ள துணையும் விளக்க வேண்டும் என்றெழுந்த தொரு விருப்பங் காரணமாகச் சோழர் குலத்திலே தோன்றிய காந்தன் என்னும் மன்னவன்; அமர முனிவன் அகத்தியன்

கஞ்சம் வேண்ட - தேவமுனிவனாகிய அகத்தியன்பாற் சென்று தன்னாட்டை வளம் படுத்துதற்கு இன்றியமையாத நீர் வழங்க வேண்டுமென்று வேண்டா நிற்றலால்; தனது கரகம் கவிழ்த்த காவிரிப் பாவை - அம் முனிவன், நீர் பேரியாறாகப் பெருகிச்சென்று அச் சோழ நாட்டினை வளம்படுத்தத் திருவுளங்கொண்டு அதற்குக் கால்கோள் செய்பவன் தனனுடைய நீர்க் கரகத்தைக் குடகமலையுச்சியிலே சென்று கவிழ்த்தமையாலே அதிலிருந்து ஒழுகிய நீர் அம்முனிவன் கருதியாங்குப் பேரியாறாகப் பெருகிக் காவிரிப்பாவை என்னும் பெயரோடு; செங்குணக்கு ஒழுகி - நேர் கிழக்குத் திசை நோக்கி ஒழுகி; அச் சம்பாபதி அயல் பொங்கு நீர்ப் பரப்பொடு பொருந்தித் தோன்ற - சம்பாபதி என்னும் தெய்வம் எழுந்தருளியிருந்த சம்பாபதி என்னும் அத் திருப்பதியின் மருங்கே மிக்க நீரையுடைய கடற் பரப்பிலே புகுந்து பொலியா நிற்ப; ஆங்கினிதிருந்த - அச் சம்பாபதியிலே மகிழ்ந்தெழுந்தருளியிருந்த; அருந்தவ முதியோள் - அரிய தவத்தினையுடைய பழையோளாகிய அச் சம்பாபதி என்னும் தெய்வம்; உவந்து - அந் நதி நங்கை வரவு கண்டு பெரிதும் மகிழ்ந்து; ஓங்கு நீர்ப் பாவையை எதிர்கொண்டு-உயரிய தெய்வத் தன்மையுடைய அக் காவிரி நங்கையை எதிர் சென்று அன்புடன் வரவேற்று; ஆங்கு ஆனுவிசும்பின் ஆகாய கங்கை - அவ்விடத்திலேயே தன்னேனைக கூறுபவள் ஆருயிர்களின்பால் அன்பு மிக்கவளே! விசும்பாகிய உயர் குலத்துப் பிறந்த ஆகாய கங்கையாகிய நங்கையே!; வேணவாத் தீர்த்த விளக்கே - சோழ மன்னனும் அவன் குடிமக்களும் நீண்ட காலமாகத் தம்முட் கொண்டிருந்த பெரிய அவாவினை நிறைவேற்றி அவர்களுடைய துன்பவிருளைத் துவரப் போக்கிய ஒளி விளக்கே; வா என - வருக! வருக! என்று பாராட்டி வரவேற்ப; என்க.

**(வி - ம்.)** திருக்குலம் - தெய்வத் தன்மையுடைய குலம். சோழ மன்னர், கதிரவன் குலத்து மன்னர் என்பது நூனெறி வழக்கம். காவிரி தோன்று முன்னர்ச் சோழர் நாடு நீர் வளம் பெறாது வறுமையுற்றுக் கிடந்தமையால் அந்த நாட்டரசனாகிய காந்தன் அக் குறை தீர்த்துத் தான் பிறந்த அந்த நாட்டையும் தான் பிறந்த சோழர் குலத்தையும் புகழுடைய தாக்க விரும்பி அகத்தியன்பாற் சென்று வரம்வேண்டினனாக, அவன் வேண்டுகோட் கிணங்கிய அகத்தியன் அந் நாட்டினை நீர் நாடாக்கத் திருவுளங் கொண்டு அந் நாட்டினைப் புரக்கும் ஒரு பேரியாற்றைப் படைத்து வழங்க விரும்பி அதற்குக் கால்கோள் செய்பவன் குடகமலையுச்சியில் ஏறிச் சென்று தன் கரக நீரைக் கவிழ்த்துவிட, அந் நீர் பெருகிப் பேராறாகிச் செங்குணக் கொழுகிச் சோணாட்டிற் புக்குப் புனல் பரப்பி வளஞ் செய்து சம்பாபதியின் மருங்கே கடலிற் பாய்ந்தது எனவும், அக் காவிரி வருகையால் மகிழ்ந்த சம்பாபதி என்னும் தெய்வம் அந் நீர் மகளை எதிர் சென்று வரவேற்று மகிழ்ந்தாள் எனவும் இப் பகுதி காவிரியின் தோற்றமும் காரணமும் கட்டுரைத்த படியாம்.

கம்சம் - நீரைப் பிறப்பித்தல். கஞ்ச வேட்கை எனச் சொற் கிடந்தாங்கே நீருண்டாக்கும் விருப்பத்தால் எனினுமாம். கஞ்சம் என்பதே நீர் என்னும் பொருட்டெனினுமாம். (கஞ்சம் கலங்குவன என்பது நள வெண்பா) காந்தன் - சோழர் குலத்து மன்னருள் ஒருவன். மன் - அரசன். பகீரதன் தானே தவம் செய்து கங்கையை நிலவுலகிற்குக் கொணர்ந்தனன். காந்தன் தவத்தினால் பேராற்றலுடைய அகத்தியனை வணங்கி அவன்பால் வரமாகப் பெற்று அவ்வாகாய கங்கையையே காவிரிப் பாவையாகச் சோழநாட்டிற்குக் கொணர்ந்தான் என்க. அகத்தியன் கடல் குடித்தவன். அவன் பேரியாறு படைத்தல் பெரிதில்லை. தன் கரகத்திலிருந்த ஆகாய கங்கையாகிய நீரையே காவிரிப் பேரியாறாகப் பெருகவிரைச் செய்தான் ஆதலின் அவன் கரக நீர் ஆகாய கங்கை என்பது தோன்ற அமர முனிவன் அகத்தியன் என்று விதந்தார். ஆனு : பண்பாகு பெயர் ; விளி. அன்பே! என்று விளித்தபடியாம். ஆனுவே! ஆகாய கங்கையே! விளக்கே! வா! என்று தன் ஆர்வந் தோன்ற மும்முறை விளித்தபடியாம். பொங்குநீர்ப் பரப்பு என்னும் பன்மொழித் தொடர், கடல் என்னும் ஒரு பொருள் மேனின்றது. "மலைத்தலைய கடற்காவிரி" என்பது பட்டினப்பாலை (௬). விளக்கு என்றமையால் துன்பவிருள் போக்கும் விளக்கு என்று கூறிக் கொள்க. வேணவா - மிக்க அவா.

## அகத்தியன் காவிரிநங்கைக்கு அத் தெய்வத்தை அறிமுகப் படுத்துதலும், காவிரி வணங்குதலும்

### ௧௯ - ௨௯ : பின்னிலை..........நிற்ப

(இ - ள்.) பின்னிலை முனியாப் பெருந்தவன் - தன்னாற் படைக்கப்பட்டுச் செங்குணக்காக இயங்கி வருகின்ற அக் காவிரிப் பாவையின் பின்னே அவளது இயக்கங் கண்டு மகிழ்தற்கு அவள் பின்னரே தொடர்ந்து வருவதனை வெறுமல் விருப்பத்தோடு வந்த பெரிய தவத்தையுடைய அவ்வமர முனிவன் ; கேட்டு - சம்பாபதி அந் நதிமகளை வரவேற்கும் பாராட்டுரையினைக் கேட்டு மகிழ்ந்து ; அன்னை கேள் இ அருந்தவ முதியோள் நின்னால் வணங்குந் தன்மையள் வணங்கு என - மன்னுயிர்க் கெல்லாம் அன்னையாகிய காவிரி மகளே கேள், நின்னைப் பாராட்டும் இந்த அரிய தவத்தையுடைய இவள் கன்னிகையாகக் காணப்படினும் சிலமடந்தையின் காவல் தெய்வமாகிய கொற்றவை ஆதலின முன்னைப பழமைக்கும் முன்னைப் பழமையோளாகிய இறைவியே ஆதலின் உன்னால் வணங்கப்படுதற் கியன்ற பெருமையுடையாள் காண்! ஆதலால் அத் தெய்வத்தை வணங்குவாயாக என்று பணித்தலாலே ; பாடல்சால் சிறப்பின் பரதத்து ஓங்கிய கோடாச் செங்கோல் சோழர் தங்குலக் கொடி - நல்லிசைப் புலவராலே பாடுதற் கமைந்த பெருஞ் சிறப்பமைந்த இப் பாரத நாட்டிலே புகழாலுயர்ந்ததும் எஞ்ஞான்றும் வளைந்திலாததுமாகிய செங்கோலையுடைய சோழ மன்னருடைய குலத்திற்கே உரிமைபூண்ட பூங்கொடிபோல்

வாளும்; கோள் நிலை திரிந்து கோடை நீடினும் தான் நிலை திரியாத் தண் தமிழ்ப்பாவை - கோள்கள் நன்னிலை பிறழ்ந்து கோடைக் காலமே நீண்டாலும், தான் தனது புனலாலே மன்னுயிர் புரக்கும் தனது நிலை பிறழாதவளும் குளிர்ந்த தமிழ் மொழியைத் தனது வளத்தாலே வளர்ப்பவளும் திருமகள் போல்பவளுமாகிய அக் காவிரி நங்கை அம் முனிவன் பணித்தாங்கு; தொழுதனள் நிற்ப - சம்பாபதியைக் கைகுவித்துத் தொழுது தலையாலே வணங்கி நிற்ப என்க.

(வி - ம்.) தன்னாற் படைக்கப்பட்ட காவிரி ஒழுகும் வனப்பினைக் கண்டுகளிக்கும் கருத்தாலே அம் மாபெருந்தவனும் பின்னிலை முனியாது விரும்பி அவளைப் பின் தொடர்ந்து வந்தான் என்றவாறு. அவன் பின்னிற்றற்கு ஒவ்வாத பெருமையுடையான் என்பது தோன்ற 'பெருந் தவன்' என்றார். காவிரியின் பால் மகவன்பு கொண்டு அவனும் பின்னிலை முனியாது அவளைத் தொடர்ந்தான் என்று அவனுடைய அன்பின் நிலை கூறியவாறு. 'அன்னை' என்று விளித்தான் தன்மகளாதலின். உயிர்கட்கெல்லாம் அன்னை என்பது பற்றி அங்ஙனம் விளித்தான் எனினுமாம். பாரத நாட்டிலமைந்த ஏனைமன்னர் செங்கோல்களினும் காட்டில் உயர்ந்த செங்கோல்; எஞ்ஞான்றும் கோடாச் செங்கோல் என்று தனித் தனி இயையும். ஏனை மன்னரால் கைப்பற்ற வியலாமைபற்றிச் சோழர் தங்குலக்கொடி என்றார்.

இனி, "கோணிலை திரிந்து...பாவை" என்னும் இதனோடு-"வசையில் புகழ் வயங்கு வெண்மீன் - திசைதிரிந்து தெற்கேகினும்-தற்பாடிய தளி யுணவின்-புட்டேம்பப் புயன்மாறி-வான்பொய்ப்பினும் தான்பொய்யா மலைத்தலைய கடற் காவிரி - புனல் பரந்து பொன் கொழிக்கும்" எனவும், (பட்டினப்-க-எ) "இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும், அந்தண்காவிரி வந்து கவர்பூட்ட" எனவும், (புறம். ௩௲ - அ) "கரிய வன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர் வெள்ளி தென் புலம் படரினும்......காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை" எனவும், (சிலப்-௧0 : ௧0௨-அ) வரும் பிற சான்றோர் பொன்மொழிகளையும் ஒப்பு நோக்குக. வளமில்வழி மொழிவளனும் கலைப்பெருக்கமும், உண்டாதல் இன்மையின் தமிழ் மொழியின் ஆக்கத்திற்கும் காவிரி காரணமாதல் பற்றி, "தண்டமிழ்ப் பாவை" என்றொரு பெயரும் கூறினர். தொழுதனள்-தொழுது.

## சம்பாபதி காவிரியை வாழ்த்துதல்

### உ௬ - ௩௧ : அத்தொல்.........வாழியவென

(இ - ள்.) அத் தொல் மூதாட்டி கழுமிய உவகையின் கவான் கொண்டு இருந்து - அவ்வாறு காவிரிப் பாவையாலே தொழப்பட்ட மிக்க முதுமையையுடைய அச் சம்பாபதி என்னும் தெய்வம் தானும் அந் நதிமகளோடு உளம் ஒன்றிய அன்பினாலே மகிழ்ந்து அக் காவிரிப் பாவையைத் தழுவித் தன் மடிமிசை இருத்திக் கொண்டிருந்து கூறுபவள் அன்னையே!; செம்மலர் முதியோன்-

**செந்தாமரை மலரில் உறையும் முதுபெருங் கடவுளாகிய பிரமன் உலகங்களைப் படைக்கத் தொடங்கி; தெய்வக் கருவும் திசைமுகக் கருவும்-மகாராசிகலோக முதலிய அறுவகை உலகங்களையும் அவற்றில் வாழும் தெய்வகணப் பிண்டங்களையும் நான்கு திசைகளினும் அமைந்துள்ள இருபது வகைப்பட்ட பிரமகணப் பிண்டங்களையும் படைத்துப் பின் இந்நிலவுலகத்தையும் இதன்கண் வாழும் மக்கட் பிண்டங்களையும்; செய்த அந்நாள் - படைத்த அப் பண்டைக் காலத்திலேயே; என் பெயர்ப்படுத்த இவ் இரும்பெயர் மூதூர் - சம்பாபதி என்னும் எனது பெயரோடு படைத்தருளிய பெரிய புகழையும் பழைமையையும் உடைய இந்த ஊரினை; நின் பெயர்ப் படுத்தேன் - இற்றை நாள் தொடங்கி யான் 'காவிரிப் பூம்பட்டினம்' என வழங்குமாறு நினது பெயரோடும் இணைத்தேன் காண்!; நீ வாழிய என - நீ நீடூழி வாழ்வாயாக என்று வாழ்த்தியருள என்க.**

(வி - ரை.) படைப்புக் காலத்திலேயே படைப்புக் கடவுள் முக்காலமும் உணர்ந்தவன் ஆதலின் இந்நகரத்தை யான் இருத்தற்கியன்ற இடமாகப் படைத்துச் சம்பாபதி என்னும் பெயரும் சூட்டினன். ஆதலின் யானும் எனக்குரிய பொன்வரையுச்சியிலே தோன்றி நிலமடந்தைக்கு அரக்கரால் அழிவு வரும் என்று பிறதெய்வங்கள் கூறக் கேட்டு அவ்வரக்கர் அஞ்சத்தகுந்த பேராற்றலை அப் பொன்வரையுச்சியில் நிற்கும் சாகைச்சம்புவின் கீழ் நெடுங்காலம் தவம்செய்து பெற்றுப் பின்னர், இச் சம்புத்தீவத்தின் காவற்றெய்வமாகியகோற்றவையாகி இச் சம்பாபதி நகரத்திலே வதிகின்றேன். ஆதலின் இந் நகரம் மாபெருஞ் சிறப்புடையதாம். இற்றைநாள் தொடங்கி இம் மூதூர் காவிரிப் பூம்பட்டினம் என்னும் பெயரோடும் நிலவுக! நீவாழ்க! என்று அத் தெய்வம் அந்நகர் வரலாறும் பெருமையும் பழைமையும் காவிரிக்கு அறிவுறுத்து வாழ்த்திற்று என்க.

இனி, உலகங்கள் முப்பத்தொன்று என்பதும் அவைபொன்மலையை நடுவண் கொண்டு அதன் மேலும் கீழும் நடுவிலும் உள்ளன என்பதும் பௌத்தர் கொள்கையாம். இவற்றைப் படைப்புக் கடவுள் படைக்கும் பொழுது தெய்வலோக முதலிய மேலுலகத்தைப் படைத்துப் பின்னர் மக்கள் உலகாகிய இந்நிலவுலகத்தைப் படைத்தான்என்பதும் அங்ஙனம் நிலவுலகத்தைப் படைக்கும் பொழுதும் சம்புத்தீவையே முற்படப் படைத்து அதன் தென்றிசைமருங்கில் அதன் காவற்றெய்வமாகிய சம்பு என்னும் தெய்வம் உறைதற்பொருட்டுச் சம்பாபதி என்னும் பெயரோடு ஒரு நகரையும் படைத்தான் என்பதும் இப்பகுதியில் பாட்டிடை வைத்த குறிப்புப் பொருளாகக் கொள்க. ஈண்டுத் தெய்வக் கரு என்றது, ஆறுவகைப்பட்ட தெய்வங்களையும் அவர் வாழும் உலகங்களையுமாம்; திசைமுகக் கரு என்றது, இருபது வகைப்பட்ட பிரமலோகங்களையும் அவற்றில் உறையும் பிரமகணங்களையும் என்க. இனி இவ்விருவகை உலகங்களையும் படைத்துழி என்பெயர்ப்படுத்த இவ்விரும் பெயர் மூதூர் என்றமையின் பின்னர் நிலவுகத்தைப் படைக்கும்பொழுது முற்படப் புகார் நகரம் படைக்கப்பட்டது என்பதும் பெற்றும். எனவே புகார் நகரம் படைப்புக் காலந்தொட்டு அதனை ஆளும் அரசரால்

சோழமன்னரால் வழிவழி ஆளப்பட்டுப் பதியெழுவறியாப் பழங்குடி கெழீஇய பண்பாட்டோடு புகழையும் பெற்று வருகிறதென்றவாறு யிற்று. இதனோடு,

"வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரிதல் இன்று" (௯௫௫)

என்னும் குறளிற்கு, ஆசிரியர் பரிமேலழகர் வகுத்த விளக்கவுரையில் "தொன்று தொட்டு வருதல் சேர சோழ பாண்டியர் என்றாற்போலப் படைப்புக்காலந் தொடங்கி மேம்பட்டு வருதல்" என்பதனை ஒப்பு நோக்கி இரண்டற்குமுள்ள உறவுணர்ந்து மகிழ்க.

இனி, இவ் வுலகங்களைப் பற்றிய விரிவான விளக்கம் சக்கரவாளக் கோட்ட முரைத்தகாதையில் தரப்படும். அவற்றை ஆண்டுக் கண்டு கொள்க.

## இப் பெருங்காப்பியத்தின் உள்ளுறுப்புக்கள்

**௩-௨ - ௯௭: இருபால் ..............உய்த்ததும்**

**(இ - ள்.)** இருபால் பெயரிய உருகெழு மூதூர் - இவ்வாற்றால சம்பாபதி என்றும் காவிரிப்பூம்பட்டினம் என்றும் இருவகையான பெயர்களைக் கொண்டு பகைவர்க்கு அச்சத்தைத் தரும் பழைய ஊராகிய அந்த நகரத்தே; ஒரு நூறு வேள்வி உரவோன் தனக்கு பெருவிழா அறைந்ததும் - ஒப்பற்ற நூறு வேள்விகளைச் செய்து முடித்தமையாலே அமரர்க்கு அரசனும் பேறு பெற்ற ஆற்றலுடைய இந்திரனுக்குப் பெரிய விழா வெடுத்தற் பொருட்டு மன்னவன் பணிமேற் கொண்டு தொல்குடி வள்ளுவன் முரசறைந்ததூஉம்; அலர் பெருகியது என சிதைந்த நெஞ்சின் சித்திராபதிதான் வயந்த மாலையான் மாதவிக்கு உரைத்ததும் - மாதவி துறவு பூண்டமையால் தங்குடிக்குப் பழி பெரிதாயிற்றென்று கருதிய தனாற் கலங்கிய நெஞ்சத்தையுடைய சித்திராபதி வயந்தமாலை என்னும் கூனியை ஏவி அப் பழியை மாதவிக்கு அறிவுறுத்தியதூஉம்; மணிமேகலை தான் மாமலர் கொய்ய அணிமலர் பூம்பொழில் அகவயின் சென்றதும் - மாதவியால் துறவிற் புகுத்தப்பட்ட மணிமேகலை புத்தருக்கு அணிவித்தற்குச் சிறந்த புதுமலர் கொய்துவரும் பொருட்டு அழகிய மலர்வனத்தினுள்ளே சென்று புகுந்ததூஉம்; ஆங்கு அப் பூம்பொழில் அரசிளங் குமரனைப் பாங்கிற் கண்டு அவள் பளிக்கறை புக்கதும் - அப்பொழுது அம் மலர்வனத்தினூடே மன்னிளங்குமரனாகிய உதயகுமரன தன் பக்கலிலே வருதலை அவன் தேர் ஒலியாற் கண்டு அம் மணிமேகலை அங்கிருந்த பளிக்கறையினுட் புகுந்து கொண்டதூஉம்; பளிக்கறை புக்க பாவை

**யைக் கண்டவன் - பளிக்கறையின்கண் புகுந்திருந்த மணிமேகலையைப் பளிங்கினூடே கண்ட அம் மன்னிளங்குமரன்; துளக்குறு நெஞ்சில் துயரொடு போய பின் - காமத்தாலே கலங்கிய நெஞ்சில் நிறைந்த துன்பத்தோடே அம் மலர்வனத்தைவிட்டுச் சென்ற பின்னர்; மணிமேகலா தெய்வம் வந்து தோன்றியதும் - மணிமேகலா தெய்வம் அங்கு மக்களுருக் கொண்டு வந்து தோன்றியதூஉம்; மணிமேகலையை மணிபல்லவத்து உய்த்ததும் - அத் தெய்வம் மணிமேகலையை உறங்கும்பொழுது எடுத்துப் போய் மணி பல்லவம் என்னும் சிறியதொரு தீவின்கண் வைத்ததும் என்க;**

(**வி - ம்.**) இருபாற் பெயரிய : சம்பாபதி, காவிரிப்பூம்பட்டினம் என்னும் இரண்டு பெயர்களையுடைய. நூறு பெருவேள்வி செய்து முடித்தவனே இந்திரனும் தகுதிபெறுவான் ஆதலின் அவ் வரலாறு தோன்ற வாளாது இந்திரன் என்னாது ஒருநூறு வேள்வி உரவோன் என்றார். இந்திரவிழா ஆண்டுதோறும் சித்திரா பருவத்திலே தொடங்கி இருபத்தெட்டு நாள் நிகழ்த்தப்பட்டுக் கடலாட்டோடு நிறைவுறும் ஒரு மாபெருந்திருவிழா ஆகலின் '**பெருவிழா**' என்றார். அலர்-பழி. அஃதாவது "வேத்தியல்......உரைநூற் கிடக்கையும் கற்றுத் துறைபோகிய ஒரு நாடகக்கணிகை நற்றவம் புரிந்தது நாணுடைத்து" என மாக்கள் தூற்றும் பழிச்சொல். சித்திராபதி - மாதவியின் தாய். வயந்தமாலை - மாதவியின் பணிமகள். மணிமேகலை - கோவலனுக்கும் மாதவிக்கும் தோன்றியவள். இக் காப்பியத்தலைவியுமாவாள். அரசிளங்குமரன் - உதய குமரன். பளிங்கு அறை - வேற்றுமைப் புணர்ச்சியால் மென்றொடர் வன்றொடராயிற்று. பளிங்கினாலியன்ற அறை என்க. பாவை : மணிமேகலை. மணிமேகலாதெய்வம் - இந்திரன் பணிமேற்கொண்டு மணி பல்லவம் முதலிய சில தீவுகளைக் காக்குமொரு தெய்வம்; கோவலனுடைய குலதெய்வமுமாம். இத் தெய்வம் தன் முன்னோன் ஒருவனைக் கடலில் மூழ்கி இறவாவண்ணம் செய்த உதவியைக் கருதி அத் தெய்வத்தின் நினைவுக்கறிகுறியாகவே தன் மகட்குக் கோவலன் மணிமேகலை என்னும் பெயரும் சூட்டினான்.

## இதுவுமது

### ௨௫ - ௩௦ : உவவன.................உணர்ந்ததும்

(**இ - ள்.**) **உவவனம் மருங்கின் அவ் உரை சால் தெய்வதம் சுதமதி தன்னைத் துயில் எடுப்பியதூஉம் - அம் மலர்வனத்தின் பக்கத்திலே அப் புகழ் மிக்க மணிமேகலா தெய்வம் மீண்டும் வந்து ஆங்குத் தூங்கு துயிலெய்திக் கிடந்த சுதமதி என்பவளைத் துயிலுணர்த்தியதூஉம்; ஆங்கு அத் தீவகத்து ஆயிழை நல்லாள் தான் துயில் உணர்ந்து தனித்துயர் உழந்ததும் - மணிமேகலா தெய்வம் மணிமேகலையைத் துயில் கலையாவண்ணம் எடுத்துப் போய்த் துயிலக்கிடத்தி வந்த அவ்விடத்தே (அஃதாவது -**

அம் மணிபல்லவத் தீவின் கண்ணே) அழகிய அணிகலன் அணிதற்கியன்ற பெண்ணின் நல்லாளாகிய மணிமேகலை வழி காட் காலையிலே தானே துயிலுணர்ந்து தனக்கு நேர்ந்த தென்னென்றறியாமையாலே மாபெருந் துன்பத்தாலே வருந்திய தும்; உழந்தோள் ஆங்கண் பான்மையின் ஓர் ஒளி மணி பீடிகை பழம் பிறபபு எல்லாம் உணர்ந்ததும் - அவ்வாறு துன்ப மெய்திய அம் மணிமேகலை ஏதுநிகழ்ச்சி எதிர்ந்துள்ளமையால் அவ்விடத்தேயிருந்த ஓர் ஒளியுடைய மணிகளாலியன்ற புத்த பீடிகையைக் கண்டு தொழுதமையால் தன் பழம் பிறப்பும் அதன் கண் நிகழ்ந்த நிகழ்ச்சிகளுமாகிய அரிய செய்திகள் பலவற்றையும் தானே உணர்ந்து கொண்டதும் என்க.

(வி - ம்.) உவவனம்-மக்களால் உண்டாக்கப்பட்ட பூம்பொழில். உரை - புகழ். சுதமதி-மாதவியின் தோழியும் மணிமேகலைக்குத் துணையாய்ச் சென்றவளும் ஆகிய ஒரு பார்ப்பனப்பெண் துறவி(பிக்குணி). துயிலெடுப்பியது-துயிலினின்றும் எழுப்பியது. அத்தீவகம்-முன் கூறப்பட்ட மணிபல்லவம். உழந்தோள் : பெயர். பீடிகை - புத்தபீடிகை. பான்மையின் -ஏது நிகழ்ச்சி எதிர்ந்தமையின்; ஊழ்வினைநிகழ்ச்சியை ஏதுநிகழ்ச்சி என்பது பௌத்தருடைய வழக்கு.

இதுவுமது

ருக - ருஅ : உணர்ந்தோள்...........உரைத்ததும்

(இ - ள்.) உணர்ந்தோள முன்னர் உயர்தெய்வந் தோன்றி மனம் கவல் ஒழிக என மந்திரம் கொடுத்ததும் - பழம் பிறப்புணர்ந்த அம் மணிமேகலையின முன்னர் உயரிய பண்புடைய மணிமேகலா தெய்வம் தானே எளிவந்து தோன்றி மகளே! நின் நெஞ்சத்துத் துன்பங்களை யெல்லாம் ஒழித்திடுக என ஆறுதல் கூறி, அரிய மூன்று மறை மொழிகளை அறிவுறுத்ததும்; தீப திலகை செவ்வனம் தோன்றி மாபெரும் பாத்திரம் மடக்கொடிக்கு அளித்ததும் - தீவ திலகை என்னும் மற்றொரு தெய்வம் மணிமேகலை முன்னர்த் தோன்றிச் செவ்விதாக மிகப் பெரிய சிறப்பு வாய்ந்த அமுதசுரபி என்னும் பிச்சைப் பாத்திரம் ஒன்றனை இளங்கொடிபோல்வாளாகிய அம் மணிமேகலைக்கு வழங்கியதும்; பாத்திரம் பெற்ற பைந்தொடி தாயரொடு யாப்புறும் மாதவத்து அறவணர்த் தொழுததும் - அமுத சுரபியைப் பெற்று மறைமொழியினுதவியாலே அம் மணிமேகலை வான் வழியாகப் பறந்துவந்து புகார் நகரம் எய்தித் தன் தாயராகிய மாதவியோடும் சுதமதியோடும் கூடிக் கட்டமைந்த பெரிய தவவொழுக்கத்தையுடைய அறவணவடிகளைக் கண்டு வணங்கியதும்; நறுமலர்க் கோதைக்கு - நறிய மலர்

மாலைமணியைத் தகுந்த இளமையுடைய மணிமேகலைக்கு; அறவண வடிகள் ஆபுத்திரன் திறம நன்கனம் உரைத்ததும் - அறவணவடிகளார் அமுதசுரபிக்குரியவனை ஆபுத்திரன என்பானுடைய வரலாறும் பண்புமாகிய செய்திகளை யெல்லாம் விளக்கமாக விளம்பியதும் எனக.

(வி - ரை.) உணர்ந்தோள் : பெயர்; மணிமேகலை. தீய தெய்வமும் உள வாகலின் அவற்றினீக்குதற்கு உயர் தெய்வம் என்றார்; அஃதாவது-மணி மேகலாதெய்வம். கவல் - துன்பம். மந்திரம் - மறைமொழி. மணிமேகலா தெய்வம் மணிமேகலைக்கு வேற்றுரு வெய்தவும்; வானத்தே இயங்கவும், பசிப்பிணியின்றி இருத்தற்கும் வேண்டிய ஆற்றல் தரும் மூன்று அரிய மந்திரங்களை செவியறிவுறுத்தது; இவற்றை ஈந்தமையால் இனி நீ மனங் கவல வேண்டா என்று ஆறுதலும் கூறிற்று என்க. செவ்வனம்-செம்மை யாக. திருவுருவங்கொண்டு தோன்றி என்க. வேண்டுவார் வேண்டும் உண்டியை வேண்டுமளவும் சுரந்தளிக்கும் மிகப் பெரிய சிறப்புடைய பாத்திரம் என்றவாறு. பெருமை ஈண்டு அதன் அளவின் மேல் நில்லாது, சிறப்பின் மேனின்றது. மடக்கொடி என்றது அவளது இளமையை விதந் தபடியாம். பைந்தொடி : மணிமேகலை. சுதமதி மணிமேகலையின் பால் தாய்மை யன்புடையாளாதல் பற்றி அவளையும் உளப்படுத்துத் தாயர் எனப் பன்மைச் சொல்லாற் கூறினர். பிறுண்டும் இங்ஙனமே கூறுதல் காணலாம். யாப்புறுமாதவம் - பொறிபுலன்களைக் கட்டியொடுக்கும் பெரிய தவம். ஆபுத்திரன் - இக் காப்பிய வுறுப்பினுள் சிறந்ததோர் உறுப்பாக அமைந்தவன்; அமுதசுரபியைத் தெய்வத்திடம் முதன் முத லாகப் பெற்றவன்; தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த பெருந் தகை; ஆவால் பாலூட்டி வளர்க்கப்பட்டவன். நன்கனம் - நன்கு; நன்றாக.

## இதுவுமது

### ௫௧ - ௬௮: அங்கை.........சென்றதும்

(இ - ள்) அங்கைப் பாத்திரம் ஆபுத்திரன்பால் சிந்தா தேவி கொடுத்த வண்ணமும் - தன் அகங்கையி லேந்திய அமுத சுரபி எனனும் பிச்சைப் பாத்திரத்தை ஆபுத்திரனுடைய அரு ளுடைமை கண்டிரங்கிய கலைமகளாகிய சிந்தாதேவி எனனும் தெய்வம் அவன்பால் கொடுத்த திறமும்; மற்று அப்பாத்திரம் மடக்கொடி ஏந்திப் பிச்சைக்கு அவவூர்ப் பெருந்தெரு அடைந் ததும் - மேலும் அவ்வமுத சுரபியை மணிமேகலை அகங்கையிலேந்தி முதனமுதலாக அதனகண் பிச்சை ஏற்கும் பொருட்டு அகன்ற புகார் நகரத்துத் தெருவிலே எய்தியதும்; பிச்சை ஏற்ற டெய்வளை கடிஞையின் பத்தினிப் பெண்டிர் பாத்தூண் ஈத்ததும-அவவாறு பிச்சைபுக்க மணிமேகலை ஏந்திய அம்மாபெரும் பாத்திரத்தினகண் முதன முதலாகச் சிறந்த கற்புடை மகளாகிய ஆதிரை நல்லாள் பலரும் பகுத்துண்டற் கியன்ற உணவினைப பிச்சையாகப் பெய்ததும்; காரிகை நல்லாள் காயசண்டிகை வயிற்று ஆனைத்தீக்

கெடுத்து அம்பலம் அடைந்ததும் - அழகுமிக்க மணிமேகலை அமுத சுரபியில் ஏற்ற பிச்சை யுணவினை ஊட்டிக் காயசண்டிகை என்பவளை நீண்ட காலமாகப் பற்றி வருத்திய 'ஆனைத்தீ' எனனும் வயிற்று நோயைத் தீர்த்துப் பின்னர் உலகவறவி எனனும் அம் பலத்தை எய்தியதும்; ஆயிழை அம்பலம் அடைந்தாள் என று கொங்கு அலர் நறுந்தார்க் கோமகன் சென்றதும் – மணிமேகலை உலக வறவி என்னும் அம்பலம் எய்திய செய்தி கேட்டுத்தேனேடு மலர்ந்த நறிய ஆத்திமாலை சூடிய சோழமன்னன் மகனுகிய உதய குமரன அவளைக் கைப்பற்றும் கருத்தோடு அவ்வம்பலத்திறகுச் சென்றதும்; என்க.

(வி - ம்.) அங்கை - அகங்கை; உள்ளங்கை. அகம் என்னும் நிலை மொழி ஈற்றுயிர்மெய்கெட்டது சிந்தாதேவி - தலைமகள். நகரமாதலின் பெருந்தெரு என்ருர். பத்தினிப் பெண்டிர் என்றது ஆதிரையை; பத்தினி ஆகலின் ஒருவரைக் கூறும் உயர்மொழியாகக் கருதிப் பன்மைக்கிளவி யால் கூறினர். பன்மையொருமை மயக்கம் எனினுமாம். பாத்தூண் - பகுத்துண்ணும் உணவு. காரிகை - அழகு அம்பலம் - உலக அறவி என்னும் பெயருடையதாய்ப் புகார் நகரத்திருந்ததொரு பொதுவிடம். ஆங்கு இரவலர் வந்து குழுமுவர் ஆதலின் அவர்க்கூட்டும் பொருட்டு அங்கு மணிமேகலை எய்தினன் என்பது கருத்து. ஆயிழை : மணிமேகலை. அவள் உலகவறவி புகுந்தாள் என்று கேள்வியுற்று அரசிளங்குமரன் அவளைக் கைப்பற்றி வருங் கருத்துடன் அம்பலம் அடைந்தான் என்பது கருத்து.

## இதுவுமது

கூகூ - எஅ : அம்பலம்.........வண்ணமும்

(இ - ள்.) அம்பலம் அடைந்த அரசிளங்குமரன் முன் வஞ்ச விஞ்சையன் மகள் வடிவாகி - தன்னைப் பெரிதும் காமுற்று அவ்வம்பலம் புக்க அக்கோமகன் முன் அவன் தன்னை அறியா வண்ணம் வஞ்சித்துப் போக்கும் பொருட்டு விச்சாதரன் மனைவி யாகிய காயசண்டிகையின் உருவத்தை மேற்கொண்டு அவனைப் போக்கியபின் அவ் வுருவத்தோடு அந்நகரத்துச் சிறைக் கோட்டம் புகுந்து ஆங்குப் பசியால் வருந்துவோர் துயர் களையு மாற்றுல்; மறனுசெய் வேலோன் வான் சிறைக் கோட்டம் அறக் கோட்டம் ஆக்கிய வண்ணமும் - வீரப்போர் செய்யும் வேலேந்திய சோழ மன்னனுடைய உயர்ந்த சிறைக் கோட்டத்தையே அறக் கோட்டமாக மாற்றிய செய்கையும்; விஞ்சைக் காஞ்சனன் காய சண்டிகை என - மணிமேகலை காயசண்டிகை யுருவத்தோடு அம்பலத்திலே வந்த அரசிளங்குமரனேடு சொல்லாட்டம் நிகழ்த் தியபொழுது அவளைக் காணவந்தவனுகிய விச்சாதரன் அவளைத் தன் மனைவியாகிய காய சண்டிகை என்றே கருதி அவள் ஒழுக்

கத்தை ஐயுற்று அவ்வையன் தீர்தற்குக் கரந்துறைபவன் : ஆயிழை தன்னை அகலாது அணுகலும் - அரசன் மகன் மணிமேகலையைக் காணும் வேட்கையால் அறங்கேட்டும் அகலாதவனும் மீண்டும் அங்கு வந்தமையால் : வஞ்ச விஞ்சையன் மன்னவன் சிறுவனை மைந்துடை வாளில் தப்பிய வண்ணமும்-வஞ்சத்தாலே கரந்திருந்த அவ்விச்சாதரன் மன்னவன் மகனாகிய உதயகுமரனை வலிமை மிக்க வாளால் எறிந்து போனதுப; மை அரி யுண்கண் அவன துயர் பொறுஅள் தெய்வக் கிளவியில் தெளிந்த வண்ணமும் - கரிய நிறமும் செவ்வரியும் உடையவாய்க் கண்டோர் நெஞ்சத்தைப் பருகும் பேரெழில் படைத்த கண்ணையுடைய மணிமேகலை அரசன் மகன இறந்தமையா லெய்திய துன்பத்தைப் பொறுமல் வழிந்திப் பினனர்க் கந்திற் பாவையாகிய தெய்வம் வருவதுரைத்துத் தேற்றத் தெளிந்த தன்மையும்; என்க.

(வி - ம்.) வஞ்சத்தாலே விஞ்சையன் மகள் வடிவாகி என்க. விஞ்சையன் - விச்சாதரன். மகள் - மனைவி மனைவியை மகள் என்னும் வழக்கு இந்நூலில் பிறுண்டும் காணப்படும். கதைத்தொடர்பு நன்கு விளங்குதற் பொருட்டு ஈண்டைக்கு வேண்டுவன சில சொற்கள் தந்துரைக்கப்பட்டன. இவ்வாறு தந்துரைப்பன இசையெச்சத்தாற் கொள்ளப்படுவன. யாண்டும் இதனை அறிந்து கடைப்பிடிக்க. வேலோன் : சோழமன்னன். மக்களைச் சிறைசெய்தலும் வேந்தற்கு வடுவன்று அவனுக்கியன்ற கடமை என்பார் மறஞ்செய் வேலோன் என மன்னனை விதந்தார். கோட்டம் இரண்டும் ஈண்டுக் கட்டிடம் என்னுந் துணையாம். வாளில் தப்புதல் - வாளாலெறிந்து கொல்லுதல். மை அரி உண் கண் என்னும் பன்மொழித்தொடர் மணிமேகலை என்னும் துணையாய் நின்றது. அவன் என்றது உதயகுமரனை. மணிமேகலை பற்பல பழம் பிறப்புக்களிலே அவன் மனைவியாகி அவனோடு வாழ்ந்தவளாதலின் பழம் பிறப்புணர்ச்சியுடைய மணிமேகலை அவன் இறந்தமை பொருது வருந்தினள் என்பது கருத்து. தெய்வம் - கந்திற் பாவையினிற்குந் தெய்வம். கிளவி - சொல்.

இதுவுமது

௭௯ - ௮௮ : அறைகழல்..........கேட்டதும்

(இ - ள்.) அறை கழல் வேந்தன் ஆயிழை தன்னைச் சிறை செய் கென்றதும்-ஆரவாரிக்கும் வீரக் கழலணிந்த சோழ மன்னன மணிமேகலையைச் சிறையிடச் செய்ததும் ; சிறைவீடு செய்ததும் - பினனர்ச் சிறைவீடு செய்வித்ததும் ; ஆய்வளை நறுமலர்க் கோதைக்கு நல் அறம் உரைத்து ஆங்கு ஆபுத்திரன் நாடு அடைந்ததும் - சிறை வீடு பெற்ற மணிமேகலை நறிய மலர் மாலை யணிந்த கோப்பெருந் தேவிக்கு நல்லனவாகிய அறங்கள் பல வற்றையும் அறிவுறுத்து அப்பால் ஆபுத்திரன் மறுமையில் மன்னவனகி அருளாட்சி செய்கின்ற சாவக நாட்டிற்குச் சென

றதும்; அணியிழை ஆங்கு அவன் தன்னேடு போகி ஓங்கிய மணி பல்லவத்திடை உற்றதும் - மணிமேகலை அந் நாட்டரசனுகிய ஆபுத்திரனேடு சென்று உயர்ந்த மணி பல்லவத் தீவினகட் புகுந்ததும்; உற்றவள் ஆங்கு ஓர் உயர் தவன் வடிவாய்ப் பொற் கொடி வஞ்சியின் பொருந்திய வண்ணமும் - மணி பல்லவத்தை எய்திய மணிமேகலை அவ்வாசனை அவனுட்டிற்குப் போக்கி அப்பால் அத் தீவினின்றும் ஓர் உயரிய தவவொழுக்க முடைய துறவோன் வடிவத்தை மேற்கொண்டு அழகிய கொடியுயர்த்தப் பட்ட வஞ்சிமா நகரத்தே வந்துற்ற செய்தியும்; நவை அறு நன் பொருள் உரைமினே எனச் சமயக் கணக்கர் தம திறம் கேட்டதும்- அவ் வஞ்சிமா நகரத்திலே அம் மாதவன் வடிவத்தோடே சென்று, பிறப்புப்பிணி அறுதற் கியன்ற நன்மை தருகின்ற நுமது தத்து வங்களைக் கூறுங்கோள்! என்று பல்வேறு சமயத் தலைவர்களை யும் தனித்தனியே கண்டு வினவி, அவ்வவர் சமயங்கட்கியன்ற தத்துவங்களை யெல்லாம் கேட்டறிந்ததும் என்க.

(வி - ம்.) அறை கழல்: வினைத்தொகை. சிறைவீடு. சிறைக் கோட்டத்தினின்றும் விடுதலை செய்தல். நறுமலர்க் கோதை: கோப் பெருந்தேவி. ஆய்வளை: மணிமேகலை. அவன் நாடு - ஆபுத்திரன் மறு பிறப்பில் அரசனுகி ஆட்சி செய்கின்ற நாடு. அஃதாவது சாவகநாடு. பொற்கொடி வஞ்சி - அழகிய கொடியுயர்த்திய வஞ்சிநகரம் என்க. வெளிப்படை. நவை - பிறவிப்பிணி. நன்பொருள் - தத்துவம். சமயக் கணக்கர் - சமய முதல்வர்.

## இதுவுமது

### ௮௧ - ௯௮: ஆங்க.........வைத்தனன்

(இ - ள்.) ஆங்கு அத்தாயரோடு அறவணர்த் தேர்ந்து-அவ் விடத்திலே தன் தாயராகிய மாதவியையும் சுதமதியையும் நல்லா சிரியராகிய அறவணடிகளாரையும் கண்டு அடிவணங்க விரும்பி யும்; பூங்கொடிகச்சி மாநகர் புக்கதும்-மணிமேகலை ஆங்குத் துறவி யாயிருந்த மாசாத்துவான் வேண்டுகோட் கிணங்கியும் வானத்தே இயங்கிக் காஞ்சிமா நகரத்தே சென்று புகுந்ததும்; புக்கவள் கொண்ட பொய்யுருக் களைந்து - காஞ்சியிற் புகுந்தவள் தான் மேற் கொண்டிருந்த மாதவன் வடிவத்தைத் துறந்து; மற்று அவர் பாதம் வணங்கிய வண்ணமும் - தான காணவிரும்பிய தாயரும் அடிகளாரும் தன்னைத்தேடி வந்தவரைக் கண்டு மகிழ்ந்து அவரடி களிலே வீழ்ந்து வணங்கிய வண்ணமும்; தவத்திறம் பூண்டு தருமம் கேட்டு - தவக்கோலம் பூண்டு அறவணவடிகளார்பால் பௌத்த தருமங்களைக் கேட்டுணர்ந்தும்; பாவை பவத்திறம் அறுகென நோற்றதும்; மணிமேகலை தருமங் கேட்ட பின்னர்ப்

பிறப்பிற்குக் காரணமான பழவினைத் தொகுதி துவரக் கெடுவதாக என்னும் குறிக்கோளோடு பொருள்களின்பால் பற்றறுதற்குரிய நெறியில் அதற்கியன்ற நோன்புகளைக் கடைப்பிடித் தொழுகி யதும் ஆகிய இவற்றையெல்லாம்; இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப - இளங்கோ வடிகளார் என்னும் சோமுனிவன் தலைமை வீற்றிருந்தருளி விரும்பிக் கேளாநிற்ப; வளமகெழு கூல வாணிகன் சாத்தன் - வளம் பொருந்திய மதுரைக் கூல வாணிக னாகிய தண்டமிழ்ப் புலவன்; ஆறு ஐம் பாட்டினுள் - முப்பது காதைகளிலே அரங்கேற்றி; மணிமேகலை துறவு மாவண் தமிழ்த் திறம் அறிய வைத்தனன் - 'மணிமேகலை துறவு' என்னும் இத் தொடர்நிலைச்செய்யுளா லியன்ற மணிமேகலை துறவு என்னும் பெயரையுடைய இவ் வனப்பியல் நூல் வாயிலாக எழுத்து வளமும் சொல்வளமும் பொருள்வளமும் ஆகிய வளம் பலவும் பெற்றுச் சிறந்துள்ளமையாலே பெருவளமுடைய மொழியாக விளங்குகின்ற நந்தமிழ் மொழியினது சிறப்பினை உலகுள்ள துணையும் மக்கள் அறியும்படி மாபெருங் காப்பியமாக இயற்றி விறுவினன் என்பதாம்.

(வி - ம்.) பொய்யுரு- வேற்றுருவம். இளங்கோ வேந்தன் என்றது இளகோவடிகளாரை. இளங்கோ என்ற பின்னரும் வேந்தன் என்று வேண்டாது கூறியது, அவர் தாமும் சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்து அந்தம் இல் அரசாள் வேந்தாக இருத்தலைக் கருதிக் காணுமாறு தாம் வேண்டிய தொன்றனை முடித்தற் பொருட்டென்க. கண்ணகித் தெய்வமே அவரை இளங்கோ வேந்தனுகவே கண்டு பாராட்டியதனை (சிலப், வர - கஅ0 -ஙு, சிலப்பதிகாரத்தில் காண்க.

''மணிமேகலை துறவு'' என்பதே இக் காப்பியத்திற்கு ஆசிரியரிட்ட பெயர் என்பதனை இப் பதிகத்தால் அறியலாம். இவ்வாறே ''நீலகேசித் தெருட்டு'' என அதன் ஆசிரியர் இட்ட பெயர் இறுதிச்சொல் மறைந்து நீலகேசி என்று வழங்கிவருவதும் நினைக.

கூலவாணிகன் சாத்தனர் கொள்கை பௌத்த தருமத்தை மக்கள் அறியவைத்தலே யாகும். ஆயினும் அவருடைய கருத்து நிறைவேறிற் றில்லை. மற்று மணிமேகலையால் எய்திய பயன், ''மாவண் தமிழ்த் திறமே'' யாய் முடிந்தது. அத் தமிழ்த்திறம் பற்றியே இந்நூல் தமிழ கத்தே தமிழ் மொழி நிற்கும் அளவும் நின்று நிலவும் ஆற்றல் பெற்றுத் திகழ்கின்றது என்பதில் ஏதும் ஐயமில்லை.

இப் பாயிரம் (பதிகம்) பிறராற் செய்யப்பட்டது. சாத்தன் என ஆசிரியரைப் படர்க்கையாகப் பேசுவதே இதற்குச் சான்று. இனி இப் பாயிரத்தில்—

ஆக்கியோன் பெயர் சாத்தன் என்பதனாலும் வண்டமிழ்த்திறம் என்றதனால் அதற்கியன்ற எல்லையே இதற்கும் எல்லை என்பதும் போந்தன. முதனூலாகலின் வழிகூற வேண்டாவாயிற்று. மணிமேகலை துறவு என்பது நூற்பெயர். காலம் களம் காரணம் என்னும் பாயிரவுறுப்புக்கள் பலவும் அமைந்துள்ளமையும் அறிக.

பதிகம் முற்றிற்று

## க. விழாவறை காதை*

[முதலாவது விழாவறைந்த பாட்டு]

அஃதாவது: பூம்புகார் நகரத்து வாழ்கின்ற சமயக் கணக்கர் முதலிய பெரியோர் ஒருங்கு கூடி அந் நகரத்திலே ஆண்டு தோறும் நிகழ்த்தப்பட்டு வருகின்ற 'இந்திர விழா' என்னும் பெருவிழா எடுத்தற்குரிய சித்திரைத் திங்களின் முழுமதி நாள் அணுகி வருதலானே அவ் விழாவிற்குக் கால் கொள்ள வேண்டும் என்று முடிவு செய்து அதனை நகரமக்கட்கு அறிவிக்கும்படி வழக்கம் போல விழா முரசம் அறையும் முதுகுடிப் பிறந்த வள்ளுவனுக்கு அறிவிப்ப, அது கேட்ட வள்ளுவன்றானும் வச்சிரக் கோட்டத்தில் வைக்கப்பட்டிருக்கின்ற மணங்கெழு முரசத்தைக் கச்சையானைப் பிடர்த்தலை ஏற்றித் தானும் ஏறியிருந்து அவ் விழா நிகழப் போவதனையும் அதற்குக் கால் கோள் செய்யும் நாளையும் விழாவின்பொருட்டு நகர மாந்தர் செய்ய வேண்டிய செயல்களையும் கிளந்தெடுத்துக் கூறி அந் நகரத் தெருக்கள் தோறும் முரசறைந்த செய்தியைக் கூறும் பாட்டு என்றவாறு. இக் காதையினால் இற்றைக்கிரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் தமிழகத்து மாந்தர் விழா நிகழ்த்தும் முறையும், அவர் ஒப்பற்ற நாகரிகமும் இனிது விளங்கும்.

**உலகந் திரியா ஓங்குயர் விழுச்சீர்ப்**
**பலர்புகழ் மூதூர்ப் பண்புமேம் படீஇய**
**ஓங்குயர் மலயத் தருந்தவ னுரைப்பத்**
**தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்**
**விண்ணவர் தலைவனை வணங்கிமுன் னின்று**
**மண்ணகத் தென்றன் வான்பதி தன்னுள்**
**மேலோர் விழைய விழாக்கோ ளெடுத்த**
**நாலேழ் நாளினும் நன்கினி துறைகென**
**அமரர் தலைவன் ஆங்கது நேர்ந்தது**
**கவராக் கேள்வியோர் கடவா ராகலின்**

---

* மணிமேகலை சிலப்பதிகாரம் என்னும் பெருங்காப்பியத்தின் ஒரு பகுதியேயன்றி, தனிக்காப்பியமன்று என்னும் கருத்தினால் தண்டமிழ் ஆசான் சாத்தனார் இக் காப்பியத்தைக் கடவுள் வாழ்த்து இல்லாமலே இயற்றியுள்ளார்; எனவே சிலப்பதிகாரத்திலே ஆசிரியர் இளங்கோவடிகளார் திருவாய்மலர்ந்தருளிய மங்கல வாழ்த்துப் பாடலே இந் நூலுக்கும் கடவுள் வாழ்த்தாகக் கொள்ளல் வேண்டும்.

மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடெனும்
இத்திறந் தத்தம் இயல்பினிற் காட்டும்
சமயக் கணக்கருந் தந்துறை போகிய
அமயக் கணக்கரும் அகலா ராகிக்
கரந்துரு வெய்திய கடவு ளாளரும்
பரந்தொருங் கீண்டிய பாடை மாக்களும்
ஐம்பெருங் குழுவும் எண்பே ராயமும்
வந்தொருங்கு குழீஇ வான்பதி தன்னுள்
கொடித்தேர்த் தானைக் கொற்றவன் துயரம்
விடுத்த பூதம் விழாக்கோள் மறப்பின்
மடித்த செவ்வாய் வல்லெயி றிலங்க
இடிக்குரல் முழக்கத் திடும்பை செய்திடும்
தொடுத்தபா சத்துத் தொல்பதி நரகரைப்
புடைத்துணும் பூதமும் பொருந்தா தாயிடும்
மாயிரு ஞாலத் தரசு தலையீண்டும்
ஆயிரங் கண்ணோன் விழாக்கால் கொள்கென
வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி
ஏற்றுரி போர்த்த இடியுறு முழக்கின்
கூற்றுக்கண் விளிக்குங் குருதி வேட்கை
முரசுகடிப் பிடூஉம் முதுகுடிப் பிறந்தோன்
திருவிழை மூதூர் வாழ்கென் றேத்தி
வான மும்மாரி பொழிக மன்னவன்
கோள்நிலை திரியாக் கோலோ னாகுக
தீவகச் சாந்தி செய்தரு நன்னாள்
ஆயிரங் கண்ணோன் தன்னோ டாங்குள
நால்வேறு தேவரும் நலத்தகு சிறப்பில்
பால்வேறு தேவரும் இப்பதிப் படர்ந்து
மன்னன் கரிகால் வளவன் நீங்கியநாள்
இந்நகர் போல்வதோர் இயல்பின தாகிப்
பொன்னகர் வறிதாப் போதுவ ரென்பது
தொன்னிலை யுணர்ந்தோர் துணிபொரு ளாதலின்
தோரண வீதியுந் தோமறு கோட்டியும்
பூரண கும்பமும் பொலம்பா லிகைகளும்
பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்
காய்க்குலைக் கமுகும் வாழையும் வஞ்சியும்
பூக்கொடி வல்லியுங் கரும்பும் நடுமின்
பத்தி வேதிகைப் பசும்பொற் றூணத்து
முத்துத் தாமம் முறையொடு நாற்றுமின்
விழவுமலி மூதூர் வீதியும் மன்றமும்

பழமணல் மாற்றுமின் புதுமணற் பரப்புமின்
கதலிகைக் கொடியுங் காழூன்று விலோதமும்
மதலை மாடமும் வாயிலும் சேர்த்துமின்
நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீ றாக
வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய்வினை
ஆறறி மரபின் அறிந்தோர் செய்யுமின்
தண்மணற் பந்தருந் தாழ்தரு பொதியிலும்
புண்ணிய நல்லுரை அறிவீர் பொருந்துமின்
ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்
பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின்
பற்றா மாக்கள் தம்முட னாயினும்
செற்றமுங் கலாமுஞ் செய்யா தகலுமின்
வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையும்
தண்மணல் துருத்தியுந் தாழ்பூந் துறைகளும்
தேவரு மக்களும் ஒத்துடன் றிரிதரு
நாளேழ் நாளினும் நன்கறிந் தீரென
ஒளிறுவாள் மறவருந் தேரும் மாவும்
களிறுஞ் சூழ்தரக் கண்முர சியம்பிப்
பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி
அணிவிழா அறைந்தனன் அகநகர் மருங்கென்.

---

## ௧. விழாவறை காதை

### உரை

### இந்திர விழாவின் வரலாறு

### ௧ - ௧௦ : உலகம்.........ஆகலின்

(இ - ள்.) உலகம் திரியா ஓங்கு உயர் விழுச்சீர் பலர் புகழ் மூதூர்ப் பண்பு மேம்படீஇய - சான்றோர் சென்ற நெறி நின்றொழுகுதலில் ஒரு பொழுதும் பிறழா தொழுகுதல் காரணமாகப் பெரிதும் உயர்ந்துள்ள தனது மாபெரும் சிறப்பினைப் பிறநாட்டிலுள்ள சான்றோர் பலரும் புகழாநிற்றற் கிடமான பழைய ஊராகிய புகார் நகரத்தின் தெய்வத் தன்மை காலந்தோறும் மேம்பட்டு வளர்தற் பொருட்டாக; ஓங்கு உயர் மலயத்து அருந்தவன் உரைப்ப - வானுற உயர்ந்து புகழானும் உயர்ந்த பொதிய மலையின்கண் இறைவன் ஏவலாலே எழுந்தருளியிருக்கும் செய்தற்கரிய தவங்களைச் செய்துயர்ந்த அகத்திய முனிவன் பணிப்ப: தூங்கு எயில் எறிந்த தொடித்தோள் செம்பியன் - வானத்திலே இயங்குகின்ற மதில்களை அழித்த வீர வளை யணிந்த சோழ மன்னன் ஒருவன்; விண்ணவர் தலைவனை வணங்கி முன்னின்று - தனக்கு நன்றிக் கடன்பட்டுள்ள அமரர்கோமானை வணங்கி அவன் முன்னிலையிலேயே நின்று; மண்ணகத்து என்றன் வான்பதி தன்னுள் - நிலவுலகத்திலமைந்த என்னுடைய தலை நகரத்தினுள்; மேலோர் விழைய விழாக்கோள் எடுத்த நால் ஏழ் நாளினும் நன்கு இனிது உறைக என - விண்ணவரும் கரந்துரு வெய்தி வந்து காண்டற்கு விரும்புதற்குக் காரணமான பெரியதொரு திருவிழாவை நினக்கு யாங்கள் எடுத்தலை மேற்கொண்ட இருபத்தெட்டு நாளினும் நீ அந்நகரத்தே அவ்விழாவினை ஏற்றுக் கொண்டு உறுதியாக அங்கேயே இனிதாக வீற்றிருந் தருளல் வேண்டும் இது யான் நின்பால் பெற விரும்பும் வரம் என்று வேண்டா நிற்ப; அமரர் தலைவன் ஆங்கு அது நேர்ந்தது - தேவர் கோமானும் மறுஅது அவ்வாறே தந்த வரத்திற்கு; கவராக் கேள்வியோர் - ஐயுறாமைக்குக் காரணமான மெய்ந்நூற் கேள்வியினையுடைய சான்றோர்; கடவார் ஆதலின் - மாறுபட் டொழுகாராதலின் என்க.

(வி - ம்.) உலகம் என்றது சான்றோருடைய ஒழுக்கத்தை, ஓங்குயர் விழுச்சீர், என்று ஒருபொருட்பன்மொழி பலவற்றை அடைபுணர்த்

தோதினர். புகார் நகரத்துப் புகழ் சாலவும் உயர்ந்த புகழ்; தனக்குத் தானே நிகரான புகழ் என்றுணர்த்தற்கு. அப் புகழ் அத்தகையதாதலை புறவிற்காகத் துலாம் புக்கதும் ஆன்கன்றிற்கு மகனை ஆழியின் மடித்ததும் தூங்கெயில் எறிந்து அமரரைப் புரந்ததும் ஆகிய இன்னோரன்ன அந்நாட்டு மன்னர் செயற்கரிய செயல்களாலறிக. "நாகநீள் நகரொடும் போகநீள் புகழ்மன்னும் புகார்" என இளங்கோவடிகளாரும் (மங்கல) பாராட்டுதலறிக. பலர் அயல் நாட்டுச் சான்றோர் பலரும் என்க! என்னை? புகழத்தகுந்தவர் அவரேயாகலான். பண்பு-தெய்வப்பண்பு. அருந்தவன்-அகத்தியன். அகத்தியன் சோழனுடைய மூதூர் மேம்படுதற் பொருட்டுச் செம்பியன்பால் நீ இவ்வரத்தைக் கேள் என்றுரைத்தமையாலே செம்பியன் இந்திரன்பால் நீ விழாக்கோள் எடுத்த நாலேழ் நாளினும் என் பதியில் நன்கினிது உறைதல் வேண்டும் என வரங் கேட்டான்; அவனும் செய்ந்நன்றிக் கடன்பட்டிருத்தலான் அவ் வரத்தை மறுது நேர்ந்தலன் என்றவாறு. வானத்தே இயங்கு மதிலினுள் இருந்து அரக்கர் வானவரூரெல்லாம் புகுந்து அவர்க்குக் கேடு விளைத்தனர். அம் மதிலை ஒரு சோழன் அழித்து அமரரைப் பாதுகாத்தனன், இவ்வாற்றால் நன்றிக் கடன்பட்ட இந்திரன் நீ விரும்பும் வரங்கேள் என்ன அச் சோழன் அகத்தியர் அறிவுறுத்தபடி வரம்கேட்டனன். அவனும் நேர்ந்தனன் என்க.

இவ் வீரச் செயல்பற்றி அச் சோழமன்னன் தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன் எனப்பட்டான்.

"விண்ணவர் தலைவனை வணங்கி முன்னின்று மண்ணகத்து என்றன் வான்பதி" என்று பாட்டிடைவைத்த குறிப்பினாலே வரங்கேட்டது வானவருலகத்திலே என்பதும் பெற்றாம். இச் சோழன் அசுரர் மதிலை அழித்து அமரரைக் காத்தமையால் அடுதல் அவர்க்கு ஒரு புகழாகாது என மாறோக்கத்து நப்பசலையார் நவில்வர்.

"ஒன்னா ருட்கும் துன்னருங் கடுந்திறல்
தூங்கெயி லெறிந்த நின்னூங்க ணோர்நினைப்பின்
அடுதல் நின்புகழும் அன்றே" (புறம்-கக)

என்பது அந் நல்லிசைப்புலவர் மணிமொழி.

மேலோர் - அமரர்.

### விழாக் குழுவினர்

### கக - கசு : மெய்த்திறம்.........குழீஇ

(இ - ள்.) மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடு எனும் இத்திறம் தம் தம் இயல்பில் காட்டும் - மெய்ந்நூல் வழக்கும் உலகியல் வழக்கும் நன்மைதருகின்ற அணி பொருளும் வீடுபேறும் ஆகிய இவையிற்றைச் சொல்லான் மட்டும் அறிவுறுத்துதலையன்றித் தம் தம் ஒழுக்கத்தானும் நன்கு தெரியக் காட்டும் சிறப்புடைய; சமயக் கணக்கரும் - பல்வேறு சமயக் குரவர்களும்; தம் துறை போகிய அமயக் கணக்கரும் -

தமக்குரிய கணிதத்துறையில் கற்று மிகுந்த புகழுடைய காலக் கணிவரும்; அகலாராகி கரந்துரு வெய்திய கடவுளாளரும் - தமக்குரிய விண்ணவர் பதியினும் இந்நகரம் சிறந்ததென்று கருதித் தம்முருவம் கரந்து மக்களுருவிற் றிரிகின்ற தேவர்களும்; பரந்து ஒருங்கு ஈண்டிய பாடை மாக்களும் - வணிகத் தொழிலின் பொருட்டு உலகத்துள்ள நாடெல்லாம் சென்று மீண்டு வந்து ஒருங்கு கூடியிருக்கின்ற பல்வேறு மொழி பேசுகின்ற வேற்று நாட்டு வணிகத்தலைவரும்; ஐம்பெருங் குழுவும் - அமைச்சர் முதலிய ஐம்பெருங்குழுவினுள்ளாரும்; எண் பேராயமும் - கரணத் தியலவர் முதலிய எண் பேராயத்தாரும் ஆகிய கோத் தொழிலாளரும்; வந்து ஒருங்கு குழீஇ-ஊரம்பலத்தே வந்து ஒருங்கே கூடியிருந்து என்க.

(வி - ம்.) மெய்த்திறம் - மெய்ந்நூல் வழக்கு; வழக்கு-உலகியல் வழக்கு; நன்பொருள் - தத்துவங்கள். வீடு - வீட்டினியல்பு. இத்திறம் தம்தம் இயல்பில் காட்டுதலாவது இவற்றின் வழி நின்று ஒழுக்கத்தைத் தம்தம்மிடத்தேயே பிறர் அறிந்து கொள்ளுமாறு ஒழுகுமாற்றால் பிறரை அறியச்செய்யும் சிறப்புடையோராதல். எனவே சொல்லுதல் யார்க்கும் எளிதாதலால் இவர் தம்தம் சமயத்தைத் தமது ஒழுக்கத்தாலேயே அறிவுறுத்துபவர் என அவர் பெருமையை விதந்தோதிய படியாம்.

"சோழநாடு நீர் நாடாகலின் மருதத்திணைத் தெய்வத்தின் பெயரால் பெருவிழா எடுப்பதாயிற்று; ஆயினும் இவ்விழா நிகழும் போது அந்நகரத்தமைந்த பல்வேறு சமயஞ்சார்ந்த கடவுளர்க்கும் அவ்வவ் முறைப்படியே விழா நிகழ்த்தும் வழக்கம் உண்மையின் விழா வெடுத்தற்குப் பல்வேறு சமயக் கணக்கர்களும் வந்து குழுமினர் என்றுணர்க. இதனால் அக்காலத்தே சமயப் பூசலில்லாமை நன்குணரப்படும். இரப்போரும் ஈவாரும் இல்லாமையால் தமக்குரிய விண்ணுலக வாழ்க்கையை வெறுத்துக் கடவுளாளரும் பூம்புகாரில் கரந்துருவெய்தி மக்களூடே மக்களாய் வாழ்ந்தனர் என்க. அவர்க்கே விழா வெடுக்கப் போவதால் அவரும் அக்குழுவினுள் கலந்து கொண்டனர் என்க.

ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் கோத்தொழிலாளராவார். அவருள் ஐம்பெருங்குழு -"அமைச்சரும் புரோகிதரும் சேனாபதியரும் தூதுவரும் ஒற்றரும்" என்னும் இவர்கள் குழு. எண்பேராயம்-கரணத் தியலவர் கருமவிதிகள் கனகச்சுற்றம் கடைகாப்பாளர் நகரமாந்தர் நளிபடைத்தலைவர் யானைவீரர் இவுளி மறவர் இனையர் என்க.

இப்பகுதியால் பண்டைக்காலத்தே ஊர்ப்பொதுக் காரியங்களை நகர் வாழ் மக்களும் சான்றோரும் அரசியற் சுற்றத்தாரும் பிறநாட்டு வணிகத்தலைவரும் ஒருங்குகுழுமியேஎண்ணித்துணியும் வழக்கமிருந்தமை அறியப்படும். இஃது அக்காலத்து நாகரிகச் சிறப்பிற்கு ஓர் எடுத்துக் காட்டாகும். குழீஇ - கூடி.

### விழாக்கோள் மறப்பின் விளையுந் தீமைகள்

### கரு - உக: வான்பதி.........கொள்கென

(இ - ள்.) விழாக் கோள் மறப்பின் நம் தலை நகரத்தே இந்திர விழா வெடுத்தலை நம்மனோர் மறந்தொழியின்; வான்பதி தன்னுள் கொற்றவன் துயரம் விடுத்த பூதம் - பண்டு அமராபதி யிடத்தே நம் வேந்தனாகிய முசுகுந்தனுக்கு அசுரரால் நேர்ந்த துன்பத்தைத் துடைத்த நாளங்காடியிடத்துப் பூதமானது; மடித்த செவ்வாய் வல் எயிறு இலங்க இடிக்குரல் முழக்கத்து இடும்பை செய்திடும் - சினத்தாலே மடித்த சிவந்த தன வாயின வலிய பற்கள் திகழும்படி இடிபோன்ற தன் குரலாலே முழக்கஞ் செய்து மாந்தர்க்குத் துன்பஞ் செய்யாநிற்கும்; தொடுத்த பாசத்துத் தொல்பதி நரகரைப் புடைத்துணும் பூதமும் பொருந்தா தாயிடும் - அதுவுமன்றித் தன் கைக் கயிற்றினாலே நமது பழைய இந்நகரத்திலுள்ள நயமாக்களைக் கட்டிக் கொடுபோய்ப் புடைத்து விழுங்குமாற்றால் நன்மை செய்திடும் சதுக்கப் பூதமும் அத் தொழிலில் பொருந்தாது நல்லோர்க்கும் இடும்பை செய்யும்; மாயிரு ஞாலத்து அரசு தலை ஈண்டும் ஆயிரம் கண்ணோன் விழாக் கால் கொள்கென - ஆதலின் இப் பேருலகத்து மன்னரெல்லாம் வந்து கூடுதற்குக் காரணமான இந்திரவிழாவிற்குக் கால் கோள் செய்க என்று முடிவு செய்யாநிற்ப என்க.

(வி - ம்.) வான்பதி-வானநாட்டுத் தலைநகரம், அமராபதி. கொற்றவன் - முசுகுந்தன் என்னும் சோழமன்னன். இவன் இந்திரனுக்கு உற்றுழியுதவச் சென்று அமராபதியைக் காத்துநின்ற பொழுது அசுரர் இருட்கணையால் அவன் கண்ணை மறைத்தபொழுது அவ்விருட்கணை ஒரு பூதம் போக்கியது. அப் பூதம் இந்திரனால் ஏவப்பட்டுப் புகார் நகரத்தே நாளங்காடியிடத்தே இருந்து அந்நகரத்தைக் காவல் செய்துவந்தது என. (சிலப்-கு: கூ) இச்செய்தி கூறப்பட்டுளது. புடைத்துணும் பூதம்-சதுக்கப்பூதம். இதனியல்பினை "தவமறைந் தொழுகும் தன்மையி லாளர், அவமறைந் தொழுகும் அலவைப்பெண்டிர், அறைபோ கமைச்சர், பிறர்மனை நயப்போர், பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளரென், கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரெனக், காத நான்கும் கடுங்குர லெடுப்பிப் பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்" எனவரும் சிலப்பதிகாரத்தானு மறிக. (இ: கஉஅ - கூசு).

ஞாலத்துள்ள அரசர் முதலாக அனைவரும் வந்தீண்டும் விழா என்க. ஆயிரங்கண்ணோன் - இந்திரன். கொள்க என்று முடிவுசெய்ய என்க.

இனி இந்திரவிழாவை மறந்து கைவிடத்தகுந்த சூழ்நிலை அந்நகரத் திருந்தமையால் இங்ஙனம் கூடி முடிவுசெய்தல் வேண்டிற்று. என்னை? கோவலன் அந்நகரத்தை நீங்கியதற்கே அந்நகரத்து மாந்தர் இராமன் வனம் போன நாள் அயோத்தி மாந்தர் அவலமுற்றாற்போல அவலமுற்றனர் என்பது சிலப்பதிகாரத்தால் அறியப்பட்டது. இதனை—

"அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
பெரும்பெயர் மூதூர் பெரும்பே துற்றதும்"
........ (சிலப்-௬௫-௬)

எனவரும் கோசிகமாணி கூற்றாலறிக. அப்பாலும் கோவலனுக்கும் கண்ணகிக்கும் நேர்ந்த நிகழ்ச்சிகளும் அதுகேட்டு மாசாத்துவானும் மாநாய்கனும் துறவு பூண்டமையும் இருவர் மனைவிமாரும் இறந்தமையும் இவற்றிற்கெல்லாம் மேலாக மாதவி துறவு பூண்டமையும் அம் மாநகரத்திற்குப் பேரிழவாகத் தோன்றியிருத்தல் கூடும் என்பதும், இக் காரணத்தால் அவர் விழா வெடுத்தற்கண் ஊக்கமின்றி இருத்தல் கூடும் என்பதும் ஈண்டு நுண்ணுணர்வாற் கண்டு கொள்ளல் கூடும் அன்றே. இது "விழாக்கோள் மறப்பின" எனப் பாட்டிடை வைத்த குறிப்பினாற் போந்த பொருளாம். எனவே விழாக்கொள்ளாது விடலாம். விட்டால் இன்னின்ன இன்னல் உண்டாகும் ஆதலால் விழாவெடுத்தலே நன்று என்று அக் குழுவினர் முடிவு செய்தபடியாம். ஈண்டு இக்குறிப்புப் பொருள் கொள்ளாக்கால் இப் பகுதி வேண்டா கூறலாய் முடியும் என்க.

## வள்ளுவன் விழாவறையத் தொடங்குதல்

### ௨௭ - ௩௪: வச்சிரக்...........ஆகுக

(இ - ள்.) வச்சிரக் கோட்டத்து மணங் கெழு முரசம் - வச்சிரக் கோட்டத்திலே முரசு கட்டிலில் வைக்கப்பட்டு நாள் தோறும் வழிபாடு செய்துவருதலாலே நறுமணங் கமழாநின்ற விழா முரசினை; கச்சையானைப் பிடர்த்தலை ஏற்றி - கச்சை கட்டிய அரசு யானையின் பிடரிடத்தே ஏற்றிவைத்து; ஏற்றுரி போர்த்த இடி உறுமுழக்கின் கூற்றுக் கண் விளிக்கும் குருதி வேட்கை முரசு கடிப்பு இடும் முதுகுடிப் பிறந்தோன - தன்னோடு ஒத்த ஆனேற்றினோடு பொருது வென்ற இளைய ஆனேற்றினது தோலை உரித்துப் போர்த்துக் கட்டப்பட்டதும் இடிபோன்று முழங்கும் முழக்கத்தையுடையதும் கூற்றுவனைத் தான் முழங்குமிடத்திற்கு அழைப்பதும் பகைவர் குருதியைக் காணும் வேட்கையையுடையதுமாகிய வீரமுரசத்தைக் குறுந்தடியால் முழக்கும் உரிமை பூண்ட பழைய குடியிற் பிறந்த வள்ளுவன் தானும் ஏறியிருந்து; திருவிழைமூதூர் வாழ்க என்று ஏத்தி - திருமகள் எப்பொழுதும் விரும்பி வீற்றிருத்தற்குக் காரணமான பூம்புகார் நகரம் நீடூழி வாழ்க! என்று முதன் முதலாக நகரத்தை வாழ்த்திப் பின்னர்; வானம் மும்மாரி பொழிக மன்னவன் கோள் நிலை திரியாக் கோலோன் ஆகுக - வானம் திங்கள் தோறும் மும்முறை மழை பொழிவதாக என்றும் மன்னன் கோள்கள் நிலைதிரியாமல் நன்னெறியில் இயங்குதற்குக் காரணமான செங்கோன்மை உடையன் ஆகுக! என்றும் வாழ்த்திப் பின்னர் விழாவறிவுறுப்புவன்; என்க.

(வி - ரை.) விழாமுரசம் எப்பொழுதும் வச்சிரக்கோட்டத்தில் முரசுக் கட்டிலில் வைக்கப்பட்டிருக்கும். நாள்தோறும் நறுமலர் சூட்டி நறுமணப்புகையும் எடுத்தல் தோன்ற மணங்கெழு முரசம் என்றார். "வச்சிரக்......ஏற்றி" என்னும் இந்த இரண்டடிகளும் இளங்கோவடிகளாருடைய மணிமொழியைப் பொன்போலப் போற்றித் தண்டமிழாசான் சாத்தனார் ஈண்டுப் பொதிந்துவைத்துள்ளனர். (சிலப் - ரு : கசக-௨) வச்சிரக்கோட்டம் - இந்திரனுடைய வச்சிரப்படை நிற்குங்கோயில். கச்சை-யானையின் கீழ்வயிற்றிற் கட்டும் கயிறு. பிடர்த்தலை என்புழித் தலை, ஏழாவதன் சொல்லுருபு.

வீரமுரசத்திற்கு வீரப்பண்புமிக்க ஆனேற்றின் வளங்கெழுமிய தோலை மயிர்சீவாது போர்த்தல் ஒரு மரபு; இதனை "ஏறிரண்டுடன் மடுத்து வென்றதன் பச்சை சீவாது போர்த்த......முரசம்" என்பதனானும் (புறநா - ௨அ௮) உணர்க. முழக்கினாலே கூற்றினைத் தன்னிடத்திற்கு வருமாறு அழைக்கும் முரசு எனினுமாம். குருதிவெள்ளத்தைக் காணும் வேட்கை என்க. மன்னனுடைய வீரமுரசத்தை முழக்கும் உரிமை பெறுதல் வள்ளுவர்க்கு ஒரு பேறு. வழிவழியாக அம் முரசம் முழக்கும் உரிமையுடையோன் என்பார் முதுகுடிப்பிறந்தோன் என்றார்.

முரசறைவோர் நகரத்தையும் மழையையும் செங்கோலையும் முதலில் வாழ்த்திப் பின்னரே செய்தி அறிவிப்பது மரபு. அரசன் கோல் கோடின் கோள்நிலை திரியுமாதலின் செங்கோலன் ஆகுக என்பான் இங்ஙனம் கூறினன்.

## விழாச் சிறப்பு

### ௩௫ - ௪௨ : தீவக.........ஆதலின்

(இ - ள்.) தீவகச் சாந்தி செய்தரு நல் நாள் - இந் நாவலந் தீவினுள்ள மாந்தர் எல்லாம் பகை பசி பிணி முதலியவற்றால் இடுக்கணுறாமைப் பொருட்டுத் தெய்வத்தைக் கருதிச் செய்யும் சாந்தியாகிய இப் பெருவிழா நிகழ்த்தா நின்ற இருபத்தெட்டு நாள் முடியும் துணையும்; ஆயிரம் கண்ணோன் தனனோடு ஆங்குள நால் வேறு தேவரும - இந் நகரத்தில் இனிது உறைவனாக வரமீந்த இந்திரனோடு அவ் வானுலகத்தே வதிகின்ற நால்வேறு வகைப்பட்ட தேவர்களும்; நலத்தகு சிறப்பின் பால் வேறு தேவரும் - தத்தமக்கே சிறந்துரிமையுடைய பல்வேறு நன்மைகள் காரணமாகப் பல்வேறு பகுதியினராகிய ஏனைய தேவர்களும்; இப பதிப் படர்ந்து-இந்நகரத்திருத்தலாலுண்டாகும் இன்பத்தை நினைந்து; மன்னன் கரிகால் வளவன நீங்கிய நாள் - இந் நகரத்து மன்னனாயிருந்த கரிகாற் சோழன் வடநாட்டரசரைப் போரில் வென்று புகழ் பெறக் கருதி வடநாட்டின் மேல் சென்ற நாளிலே; இந் நகர் போல்வது ஓரியல்பினது ஆகி - இப் பூம்புகார் நகரம் வறிதாய்க் கிடந்ததொரு தன்மையுடையதாய்; பொன்னகர் வறிதா

போதுவர் - தாம் வாழுகின்ற பொன்னகரமாகிய அமராபதி நகரம் வறிதாகக் கிடக்கவிட்டு இப் புகார் நகரத்திற்கு வந்திடுவர் என்பது; தொல்லிலை உணர்ந்தோர் துணி பொருள் ஆதலின் - பண்டும் பண்டும் இத் திருவிழாக் காலத்துத் தன்மையைக் கூர்ந்துணர்ந்த சான்றோர் தெளிந்ததோருண்மையாதலாலே (என்றுன) என்க.

(வி - ம்.) தீவகம் - நாவலந்தீவு. இத் தீவகத்தெய்வத்தின் பெயரால் படைப்புக் காலத்திலேயே சம்பாபதி என்னும் நகரம் படைக்கப் பட்டமையான் அதன்கண் நிகழ்த்தும் சாந்தி இத் தீவக முழுமைக்கும் உரியதாம் என்பார் தீவகச் சாந்தி என்றார். ஆயிரங் கண்ணோன் அப் பெருவிழா நிகழ்தரு நாலேழ் நாளும் அங்கு வந்து இனிதிருப்பதாக வரந்தந்தமையால் அங்கு வரும் கடப்பாடுடையான் ஆதலின் அவன் வரவு கூறுமலே அமையு மாகலின் ஏனைய தேவர் வரவை உடனிழுகழ்ச்சி ஒடு உருபு கொடுத்தோதினன், நால் வேறு தேவர் என்றது, வசுக்களும் கதிரவரும் உருத்திரரும் மருத்துவருமாய் நால்வகைப்பட்ட தேவர் என்றவாறு.

பால் வேறு தேவர் என்றது பதினெண் வகைப்பட்ட தேவர்களை. படர்ந்து - நினைந்து. கரிகால்வளவன் நீங்கிய நாள் என்றது - கரிகாற் சோழன் வடநாட்டரசரை வென்று வாகை சூடக் கருதி நால்வேறு படைகளோடும் புகார் நகரத்தினின்றும் வடதிசையிற் சென்று விட்டமையால் புகார் நகரம் பொலிவற்று வறிதாய்க் கிடந்த அந்த நாளில் போல என்றவாறு. இந்திரன் முதலியோர் வந்துவிட்டமையால் வறிதே கிடக்கும் பொன்னகரத்திற் குவமையாதல் வேண்டி இங்ஙனம் கூறினர். இவ் வரலாற்றினை, "இருநில மருங்கின்......அந்நாள்" எனவரும் சிலப்பதிகாரத்திற் காண்க (இ : ௮௯-௯௪). தொன்னிலை-பண்டு இப் பெருவிழாவிற்கு அத் தேவர் அவ்வாறு வந்த நிலமை.

### வள்ளுவன் நகர் அணி செய்யுமாறு அறிவித்தல்

#### ௪௫ - ௫௫ : தோரண..........சேர்த்துமின்

(இ - ள்.) தோரண வீதியும் தோமறு கோட்டியும் பூரண கும்பமும் பொலம் பாலிகைகளும் பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின் — தோரணங்களையுடைய பெருந்தெருக்களிடத்தேயும் குற்றமற்ற அறவோர் கூடும் ஊர்மன்றங்களிடத்தும் நிறை குடங்களையும் பொற்பாலிகைகளையும பாவை விளக்குக்களையும் பலப்பலவாக ஒருங்கே வைத்து அணி செய்யுங்கோள் எனவும்; காய்க்குலைக் கமுகும் வாழையும் வஞ்சியும் பூக்கொடி வல்லியும் கரும்பும் நடுமின - காய் நிரம்பிய குலைகளோடு கூடிய கமுகுகளையும் வாழைகளையும் வஞ்சிக்கொடிகளையும் அழகிய மலர்க்கொடிகளையும் கரும்புகளையும் நட்டு அணி செய்யுங்கோள்! எனவும்; பத்தி வேதிகைப் பசும்பொன் தூணத்து முத்துத் தாமம் முறையொடு நாற்றுமின் - நிரலாகத் தெற்றிகளிலே நிறுத்தப்பட்டுள்ள பசும்

பொன்னுற் செய்யப்பட்ட தூண்கள் தோறும் முத்து மாலைகளை நிரல்படத் தூக்கி அணி செய்யுங்கோள்! எனவும்; விழவுமலி மூதூர் வீதியும் மன்றமும் பழமணல் மாற்றுமின் புதுமணல் பரப்புமின் - திருவிழா மிக்கு நிகழ்தற் கிடமான பழைய இந் நகரத்துச் சிறப்பு வீதிகளிடத்தும் சிறப்பு மன்றங்களிடத்து முள்ள பழைய மணலை மாற்றி அவ்விடமெல்லாம் புதிய மணல் கொணர்ந்து அழகாகப் பரப்புங்கோள்! எனவும்; கதலிகைக் கொடியும் காழ் ஊன்று விலோதமும் மதலை மாடமும் வாயிலும் சேர்த்துமின்!-நூலிலே நிரல்படக் கோத்துக் கட்டும் கதலிகைக் கொடிகளையும் மூங்கிற் கோலை ஊன்றி அதன் உச்சியிற் கட்டுதற் குரிய கொடிகளையும் இல்லந்தோறும் மதலை மாடங்களினும் முன்றிலினும் நிரலே உயர்த்துங்கோள்! எனவும் என்க.

(வி - ரை.) தோரண வீதி என்பது தோரணத்தால் அழகு செய்தற் கியன்ற சிறப்பான வீதிகளை. தோரணங் கட்டுதல் கூறுமலே அமையும் ஆதலின் தோரணங் கட்டுமின் என்னுது உடம்படுத்துத் தோரண வீதி என்றான். அல்லது எஞ்ஞான்றும் தோரணம் கட்டப்பட்ட வீதி எனக் கோடலுமாம். நன்மக்கள் குழுமி யிருத்தற்குரிய மன்றங்கள் என்பான் தோம் அறு கோட்டி என்றான். தோம் - களவு முதலிய குற்றங்கள். கோட்டி - கூட்டம். கூடுமிடத்தை ஆகுபெயரால் கோட்டி என்றான். பொலம் - பொன். பாவை விளக்கு - படிமம் கையிலேந்திய விளக்கு. காய்க் குலையை வாழைக்கும் கூட்டுக. வஞ்சி - பொன்னிறமான ஓர் அழகிய பூங்கொடி. இதனைப் "பொற்கொடிப் பெயர் வஞ்சி" என வெளிப்படைப் பொருளுக்கு அடைபுணர்த்தலான் அறிக. இதனை ஒரு வகை மரமாகக் கருதுவாரும் உளர்.

பத்தியாக வேதிகையில் நிறுத்தப்பட்ட பொற்றூண். தூணம் - தூண். முத்து மாலைகளையும் அழகாக நாலவிடுதல் வேண்டும் என்பான் முறையொடு நாற்றுமின் என்றான். மூதூரில் விழவு மலிதற் கிடமான வீதியும் மன்றமும் என்றவாறு.

கதலிகைக் கொடி மதலை மாடத்தும் வாயிலில் காழூன்றுவிலோதமும் சேர்த்துமின் என்ற குறிப்பினால் கதலிகைக் கொடி யென்றது நூலிலே கோத்துத் தோரணம் போன்று கட்டப்படும் துகிற் கொடி என்க. காழ்-கோல். விலோதம் என்பது உருவினாற் பெரிய துகிற் கொடி போலும். இதனைக் கோல் உச்சியிற் சேர்த்துயர்த்து நடப்படும் என்பது தெரித்தோதப் பட்டது. வினை வேறுபடுதலால் சேர்த்துமின் எனப் பொது வினையால் அறிவித்தனன்.

மதலை மாடம் - மாளிகையின் முகப்பிலமைந்த சிறு மாடம்.

### இதுவுமது

ருச - கூரு : நுதல்விழி.........அகலுமின்

(இ - ள்.) நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலாப் பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக - நெற்றிக் கண்ணையுடைய

கடவுள் முதலாக இந்நகரத்திலே வதிகின்ற சதுக்கப்பூதம் ஈருக வமைந்த தெய்வங்கட்கெல்லாம் தம்முள் வேறு வேறு வகைப்பட்ட விழாக்களையும் வேறு வேறு வகையான செய்தொழில்களையும்; ஆறு அறிமரபின் - செய்யும் நெறியினை அறிந்தவர்கள் அவ்வவற்றிற் கேற்ப நிகழ்த்துங்கோள் எனவும்; தண் மணல் பந்தரும் தாழ்தரு பொதியிலும் புண்ணிய நல்லுரை அறிவீர் பொருந்துமின் - குளிர்ந்த புதுமணல் பரப்பப் பட்ட பந்தரிடத்தும் தங்குதற்கியன்ற பொதியில்களிலும் அறமாகிய நன்மொழியை அறிவுறுத்தற்கு அறிந்த சான்றோர் சென்று சேருங்கோள்! எனவும்; ஒட்டிய உறுபொருள் வாதிகள் பட்டி மண்டபத்துப் பாங்கு அறிந்து ஏறுமின் - யாமே வெல்வேம் எனச் சூள் மொழிந்து தத்தமக்குப் பொருந்திய பொருளைச் சொற்போரில் வென்று நிலைநாட்டும் சமயவாதிகள் ஆங்காங்குள்ள பட்டிமண்டபங்களிலே ஏறும் மரபறிந்து ஏறக் கடவீர்! எனவும்; பற்று மாக்கள் தம்முடன் ஆயினும் செற்றமும் கலாமும் செய்யாதகலுமின் - பகைவரிடத்தேயும் சினமும் கலகமும் செய்யாது விலகிச் செல்லுங்கோள் எனவும் என்க.

(வி - ம்.) நெற்றியில் தோற்றுவித்துக் கொண்டு விழித்த கண்ணை யுடைய முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் என்க. பெருந் தெய்வத் திற்குச் சிவபெருமானையும் சிறு தெய்வத்திற்குச் சதுக்கப் பூதத்தையும் எடுத்தோதியபடியாம். எனவே, இந்திரனுக்கு எடுக்கும் அவ் விழா நாட்களிடையே அந்நகரத்து உறைகின்ற எல்லாத் தெய்வங்களுக்கும் விழா நிகழ்த்தப்படும் வழக்க முண்மை பெற்றும். இதனை,

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும்"

என்றற் றொடக்க முதலாக,

"வேறுவேறு கடவுளர் சாறுசிறந் தொருபால்"

என்னுந் துணையும் நிகழும் இளங்கோவடிகளார் திருமொழியானும் (சி: ககூக - எஅ) அறிக. ஆறு அறி மரபின் அறிந்தோர் என்றது - விழா நிகழ்த்தும் நெறியினை அறியும் முறையானே அறிந்தோர் என்ற வாறு. "நிருத்தம் முதலிய ஆறங்கங்களையு முணர்ந்த முறைமை யுடைய அந்தணர்" என்பாருமுளர். இவ்வுரை பொருந்தாது. என்னை? வேத நெறிப்படாத பாசண்டிகள் தெய்வங்களும் உளவாகலின் என்க. ஈண்டுப் 'புண்ணிய நல்லுரை அறிவீர் பொருந்துமின்', என்றதற் கேற்பச் சிலப்பதிகாரத்தினும் "திறவோர் உரைக்கும் செயல் சிறந் தொருபால்" (சி: கஅக) என வருதலும் நினைக. ஒட்டிய - சூளுரைத்த. பட்டி மண்டபம் - சொற்போர் நிகழ்த்துமிடம்; கலைமன்றம் என்பாரு முளர். பாங்கு - சொற்போர் நிகழ்த்தும் முறைமை. பற்று மாக்கள் - பகைவர். செற்றம் - தீராச் சினம். கலாம் - கலகம்; போர்.

இதுவுமது

கூச - எஉ : வெண்மணல்..........மருங்கேன்

(இ - ள்.) நன்கு அறிந்தீர் வெள்மணல் குன்றமும் விரி பூஞ்சோலையும் தண்மணல துருத்தியும் தாழ் பூந்துறைகளும் - நன்மை யறிந்த மாந்தர்களே! வெள்ளிய மணற் குன்றுகளி டத்தும் மலர்ந்த பூம்பொழில்களிடத்தும்; குளிர்ந்த மணற் பரப்புக்களையுடைய ஆற்றிடைக் குறைகளிடத்தும் ஆழ்ந்த அழகிய நீர்த்துறைகளிடத்தும் விழாக் காண்டற்கு; தேவரும் மக்களும் ஒத்து உடன திரிதரும் நால் ஏழ் நாளினும் - தேவர் களும மக்களும தம்முள் வேற்றுமை பாராட்டாமல் ஒருங்கே திரி தற்குக் காரணமான விழா நிகழும் இருபத்தெட்டு நாள்களும், எனவும் எடுத்துக் கூறி; ஒளிறுவாள் மறவரும் தேரும் மாவும் களிறும் சூழ்தரக் கண முரசு இயம்பி - விளங்குகின்ற வாட்படை ஏந்திய மறவரும் தேர்களும் குதிரைகளும் களிற்றியானைகளும் தன்னைச் சூழ்ந்து வருமாறு குறுந்தடியாலே அவ்விழா முரசின் முகத்திலே தாக்கி முழக்கி; பசியும் பிணியும் பகையும் நீங்கி வசியும் வளனும் சுரக்க என - (இறுதியில) மக்கள் பசிப்பிணியும் உடற்பிணியும் தம்முள் மாறுபட்டுப் பகைக்கின்ற பகைமையும் நீங்கப்பெற்று நாடெங்கணும் மழையும் செல்வ முதலிய பொருள் வளமும் மிகுவனவாக என்று வாழ்த்தி; அகநகர் மருங்கு அணி விழா அறைந்தனன் - அகநகரத்தும் புறநகரத்தும் அவ் வள்ளுவன் அழகிய இந்திர விழாவை முரசறைந்து அறிவித் தனன்; என்பதாம்.

(வி - ம்.) மணற்குன்றம், பட்டினப் பாக்கத்திலுள்ளவை. துருத்தி, காவிரியின் கண்ணுள்ளவை. துறை என்றது. காவிரியில் நீராடுதுறையும் கடலின்கட் டுறையும் நீர்நிலைகளிற் றுறையும் ஆகிய அனைத்திற்கும் பொது. தேவர் கரந்துரு வெய்தி மக்கட் குழுவினுட் புகுந்து திரிதலின் ஒத்துடன் திரிதரும் என்றார். முரசறையும் வள்ளுவன் தொடக்கத்தினும் முடிவினும் இங்ஙனம் நாடு அரசன் மக்கள் முதலியோரை வாழ்த்துதல் மரபு. "பசியும் பிணியும் பகையும் நீங்கி வசியும் வளனும் சுரக்கென" எனவரும் இவ்வடிகள் சிலப்பதிகாரத்தும் இவ்வாறே நிகழ்தலுமறிக. (சிலப்-ரு : எஉ - ரு).

இனி இக்காதையை - அருந்தவன் உரைப்ப செம்பியன் வானவர் தலைவனை உறைகென நேர்ந்தது கடவாராதலின் சமயக்கணக்கர் முதலி யோர் குழீஇ, கால்கொள்கெனப் பிறந்தோன் ஏற்றி இயம்பி ஏத்தி வாழ்த்தி பொழிக ஆகுக பரப்புமின் நடுமின் நாற்றுமின் மாற்றுமின் பரப்புமின் சேர்த்துமின் செய்யுமின் பொருந்துமின் ஏறுமின் அகலுமின் என அணிவிழா நகரினும் மருங்கினும் அறைந்தனன் என இயைத்திடுக.

**விழாவறை காதை முற்றிற்று.**

## உ. ஊரலருரைத்த காதை

[இரண்டாவது ஊரலருரைத்த பாட்டு]

அஃதாவது: விழாவறைதல் கேட்ட மாந்தர் மாதவியை இகழ்ந்து "நாடகக் கணிகை துறத்தல் நாணுத்தக வுடைத்து" என யாண்டும் பழிதூற்றுதல் கேட்ட சித்திராபதி அப் பழி பிறந்தமையை வயந்த மாலையை ஏவி மாதவிக்கு அறிவித்த செய்தியைக் கூறுகின்ற செய்யுள் என்றவாறு.

இதன்கண் - விழாவறைந்த வண்ணமே பூம்புகார் நகரம் மக்களால் அணி செய்யப் பட்டது. உரியநாளிலே இந்திர விழாவும் தொடங்கி நிகழ்வதாயிற்று. இறந்த யாண்டில் இவ் விழாவிற் கலந்து கொண்டு மக்கட்குக் கிடைத்தற்கரிய கலையின்பம் நல்கிய தன் மகள் மாதவி, கோவலனுக்கும் கண்ணகிக்கும் ஊழ்வினை உருத்து வந்தூட்டிய கொடுந் துயர் கேட்டு 'மணிமேகலையை. வான் துயர் உறுக்கும் கணிகையர் கோலம் காணு தொழிகெனக் கோதைத் தாமம் குழலொடு களைந்து போதித்தானம் புரிந்தறங்" கொண்டமையாலே, இவ் விழாவிற்கு மாதவியும் மணிமேகலையும் வாராமையாலே சித்திராபதி பெரிதும் வருந்தியவளாய் மாதவியின் தோழியாகிய வயந்த மாலையை அழைத்து நீ மாதவியின்பாற் சென்று இம் மாநகரத்து மக்கள் அவளைப் பற்றித் தூற்றுகின்ற பழிச் சொல்லை எடுத்துக் கூறுக; என்று பணித்தமையும் அத் தோழியும் அவள் துறவுக்குப் பெரிதும் வருந்தியிருந்தமையாலே அவ்வாறே சென்று மாதவியிருந்த தவப் பள்ளியில் மலர் மண்டபத்தே சென்று அவள் வாடிய மேனிகண்டு உளம் வருந்தி அந் நகரத்து மாந்தர் எல்லாம் "நாடகக்கலை கற்றுத் துறைபோகிய நீ நற்றவம் புரிந்தது நாணுத் தகவுடைத்து" என்று தூற்றும் பண்பிலலாப் பழிமொழியை எடுத்துக் கூறித் தனனோடு வருமாறு அழைத்த செய்தியும்—

அதுகேட்ட மாதவி தான் உயிரோடிருந்ததே நாணம் அற்ற செயலாம் என்று வருந்துபவள் பத்தினிப் பெண்டிரியல்பு கூறி அவருள் கண்ணகி தலை சிறந்தமையும் கூறி அவள் மகளாகிய மணிமேகலை இழி தகவுடைய நாடகக் கணிகையாகாள், யானும் இத் துறவினின்று மீண்டு வருவேன் அல்லேன் காண்! என்றியம்பி அறவண அடிகளார் தனக்கு அறங்கூறி ஒருவாறும்

வித்தலாலே உயிரோடிருக்கின்றேன். யான் இனி இப் பள்ளியினின்று வருவேனல்லேன் எனக் கூறி விடுப்பதும் வயந்தமாலை கையறவுடையளாய் மீண்டு செல்லுதலும் ஆகிய இச் செய்திகள் கூறப்படும்.

நாவ லோங்கிய மாபெருந் தீவினுள்
காவற் றெய்வதந் தேவர்கோற் கெடுத்த
தீவகச் சாந்தி செய்தரு நன்னாள்
மணிமே கலையொடு மாதவி வாராத்
தணியாத் துன்பந் தலைத்தலை மேல்வரச்
சித்திரா பதிதான் செல்லலுற் றிரங்கித்
தத்தரி நெடுங்கட் டன்மக டோழி
வயந்த மாலையை வருகெனக் கூஉய்ப்
பயங்கெழு மாநக ரலரெடுத் துரையென
வயந்த மாலையும் மாதவி துறவிக்கு
அயர்ந்துமெய் வாடிய அழிவின ளாதலின்
மணிமே கலையொடு மாதவி யிருந்த
அணிமலர் மண்டபத் தகவயிற் செலீஇ
ஆடிய சாயல் ஆயிழை மடந்தை
வாடிய மேனி கண்டுளம் வருந்திப்
பொன்னே ரனையாய் புகுந்தது கேளாய்
உன்னோ டிவ்வூர் உற்றதொன் றுண்டுகொல்
வேத்தியல் பொதுவியல் என்றிரு திறத்துக்
கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும்
பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலும்
தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலும்
கந்துகக் கருத்தும் மடைநூற் செய்தியும்
சுந்தரச் சுண்ணமுந் தூநீ ராடலும்
பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமும்
காயக் கரணமுங் கண்ணிய துணர்தலும்
கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும்
வட்டிகைச் செய்தியும் மலராய்ந்து தொடுத்தலும்
கோலங் கோடலுங் கோவையின் கோப்பும்
காலக் கணிதமுங் கலைகளின் றுணிவும்
நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த

ஓவியச் செந்நூல் உரை நூல் கிடக்கையும்
கற்றுத் துறைபோகிய பொற்றொடி நங்கை
நற்றவம் புரிந்தது நாணுடைத் தென்றே
அலகின் மூதூர் ஆன்றவ ரல்லது
பலர்தொகு புரைக்கும் பண்பில் வாய்மொழி
நயம்பா டில்லை நாணுடைத் தென்ற
வயந்த மாலைக்கு மாதவி யுரைக்கும்
காதல னுற்ற கடுந்துயர் கேட்டுப்
போதல் செய்யா உயிரொடு நின்றே
பொற்கொடி மூதூர்ப் பொருளுரை யிழந்து
நற்றொடி நங்காய் நாணுத் துறந்தேன்
காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்கா
தின்னுயி ரீவர் ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்
நளியெரி புகாஅ ராயின் அன்பரோ
டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்து
அத்திறத் தாளும் அல்லளெம் மாயிழை
கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅள்
மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக்
கண்ணீ ராடிய கதிரிள வனமுலை
திண்ணிதிற் றிருகித் தீயழற் பொத்திக்
காவலன் பேரூர் கனையெரி யூட்டிய
மாபெரும் பத்தினி மகள்மணி மேகலை
அருந்தவப் படுத்தல் அல்ல தியாவதும்
திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்
ஆங்கன மன்றியும் ஆயிழை கேளாய்
ஈங்கிம் மாதவர் உறைவிடம் புகுந்தேன்
மறவணம் நீத்த மாசறு கேள்வி
அறவண வடிகள் அடிமிசை வீழ்ந்து
மாபெருந் துன்பங் கொண்டுள மயங்கிக்
காதல னுற்ற கடுந்துயர் கூறப்
பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்

பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோ ருறுவ தறிகென் றருளி
ஐவகைச் சீலத் தமைதியுங் காட்டி
உய்வகை இவைகொளென் றுரவோ னருளினன்
மைத்தடங் கண்ணார் தமக்குமெற் பயந்த
சித்திரா பதிக்குஞ் செப்பு நீயென
ஆங்கவ ளுரைகேட் டரும்பெறன் மாமணி
ஓங்குதிரைப் பெருங்கடல் வீழ்த்தோர் போன்று
மையல் நெஞ்சமொடு வயந்த மாலையும்
கையற்றுப் பெயர்ந்தனள் காரிகை திறத்தென்.

———

## உ. ஊரலருரைத்த காதை

### உரை

#### க - கூ : நாவல்..........உரையேன

(இ - ள்.) நாவல் ஓங்கிய மாபெருந் தீவினுள் - நாவல் மரம் உயர்ந்து நிற்பதனால் நாவலந்தீவு எனப் பெயர் பெற்ற மிகவும் பெரிய இத்தீவின்; காவல் தெய்வதம் தேவர் கோற்கு எடுத்த தீவகச் சாந்தி செய்தரு நன்னாள் - முதன் முதலாகச் சம்பாபதி என்னும் காவல் தெய்வமானது பொதுவாக இத் தீவில் வாழ்வோர்க்கு அரக்கர் முதலியோரா லுண்டாகும் தீங்கு அகலவும் பசியும் பிணியும் பகையும் நீங்கி வசியும் வளனும் உடையராய் இனிது வாழ்தற் பொருட்டும் அமரர்க்கரசனாகிய இந்திரனுக்குச் செய்த பெருவிழா இவ்வாண்டினும் நிகழ்த்தப் பெற்று வருகின்ற நன்மையுடைய நாளிலே; சித்திராபதி மணிமேகலையொடு மாதவி வாராத் தணியாத் துன்பம் தலைத்தலை மேல்வர - சித்திராபதி யானவள் மணிமேகலையும் மாதவியும் வந்து கலந்து கொள்ளா மையாலே வேறெவ்வாற்றானும் தணிக்க வொண்ணாத துன்பம் நினைக்குந்தோறும் ஒருகாலைக்கு ஒருகால் பெருகியே வருதலானே; செல்லல் உற்று இரங்கி - பெரிதும் வருந்தி அவர் திறத்திலே மிகவும் இரக்கமெய்தி; அரிதத்து நெடுங்கண் தன் மகள் தோழி - செவ்வரி படர்ந்த நெடிய கண்ணை யுடைய தன மகளாகிய மாதவியின் உசாஅத்துணைத் தோழியாகிய; வயந்த மாலையை வருக எனக் கூஉய் - வயந்த மாலை என்பாளைத் தன்பால் வருக என்று அழைத்து; பயம்கெழு மாநகர் அலர் எடுத்து உரைஎன - வயந்தமாலாய் நீ இப்பொழுதே மாதவியின்பாற் சென்று பயன் மிக்க இப் பெரும் நகரத்துள் வாழும் மாந்தர் இடந்தொறும் இடந் தொறும் அவள் திறத்திலே தூற்றுகின்ற பழிமை அவள் உளங் கொள்ளுமாற்றால் எடுத்துக் கூறுவாயாக! என்று ஏவா நிற்றலாலே; என்க.

(வி - ம்.) காவல் தெய்வதம் - சம்பாபதி. தீவகத்தே வாழ் வோரைக் காத்தலே தன் கடமை யாதலின் அவர்கட்குத் தீங்கு வாராமைப் பொருட்டும் நலம் பெருகுதற் பொருட்டும் மருதத்திணைத் தெய்வமாகிய இந்திரனைக் குறித்து முதன் முதலாகத் தொடங்கிய விழா வென்க சோழனாடு மருதவைப்பு மிக்க நாடாதலின் அந்நாட்டுத் தலை நகரத்தில் இவ் விழா வெடுத்தல் பொருத்தமாதலுணர்க.

செய்தருநாள் என்னும் வினைத்தொகை: செய்கின்ற நாள் என நிகழ்காலங் குறித்து நின்றது. சித்திராபதி, மாதவியின் கலை நல வளர்ச்

சிக்குப் பெரிதும் பாடுபட்ட நற்றாய் ஆகலானும் மாதவியின் துறவு காரணமாக மாதவியையும் அவள் மகளாகிய மணிமேகலையையும் அவர் தம் கலைச்செல்வத்தையும் ஒருசேர இழந்தவளாதலானும் அவட்கெய்திய துன்பம் தணியாத் துன்பமாய் மேன்மேலும் பெருகுந் துன்பமும் ஆம் என்பார் "தணியாத் துன்பம் தலைத்தலை மேல்வர" என்றார். தலைத்தலை என்றது நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் எனக் காலத்தின் மேனின்றது. செல்லல் - துன்பம். மாதவி கண்ணழகில் மிகவும் சிறப்புடையள் ஆதலால் அவள்தன்கண்ணே அவள் நினைவின் முன்னிற்றல் தோன்ற, தத்தரி நெடுங்கண் தன் மகள் என்றார். ஆசிரியர் இளங்கோவடிகளாரும் அவளைக் குறிப்பிடுந்தோறும் மறவாமே "மாமலர் நெடுங்கண் மாதவி" என்றே இனிதினியம்புவர். கூஉய்-கூவி; அழைத்து. மாதவி வாராள் என்னும் நினைவால் உரைத்து அழைத்து வருதி என்றது. 'உரை' என்றெழுந்தாள். அவள் பழியஞ்சும் பண்புடையாள் ஆதலின் வருவதாயின் இது கேட்டுவருதல் கூடும் என்னும் கருத்தினால் அலர் எடுத்துரை என்றாள். தன் துயர முதலிய கூறற்க என்பது குறிப்பு.

## வயந்த மாலையின் அன்பு

கo - கரு : வயந்த.........வருந்தி

(இ - ள்.) வயந்த மாலையும் மாதவி துறவிக்கு அயர்ந்து பெய்வாடிய அழிவினள் ஆதலின் - அவ் வயந்தமாலை என்னும் தோழி தானும் மாதவியின்பால் பேரன்பு கொண்டவளாதலின் அவள் மேற்கொண்ட துறவொழுக்கத்திற்குச் சித்திராபதியினுங் காட்டில் மிகவும் நெஞ்சழிந்து ஊணும் உறக்கமும் அருகி உடல் மெலிதற்குக் காரணமான துன்பமுடையளாதலாலே; மணிமேகலையொடு மாதவியிருந்த அணிமலர் மண்டபத்து அகவயின் செலீஇ- ஏது நிகழ்ச்சி எதிர்ந்துள்ளமையாலே மணிமேகலையோடு அம் மாதவி யிருந்ததொரு செவ்வியிலே புத்தப் படிமத்திற்கு அணிதற்குரிய மலர்மாலை தொடுக்கு மிடமாகிய மண்டபத்திற்குள்ளே புகுந்து; ஆடிய சாயல் ஆய் இழை மடந்தை வாடிய மேனி கண்டு உளம் வருந்தி - பண்டு அசைந்த சாயலையும் அழகிய அணிகலன் கலையுமுடைய அழகிய இளையளாயிருந்த அம் மாதவியினுடைய துயரத்தாலும் நோன்பாலும் வாடியிருந்த திருமேனியைக் கண்டு மேலும் வருந்திக் கூறுபவள் என்க.

(வி - ரை.) துறவி - துறவு. மாதவியின்பாற் சென்ற வயந்தமாலை அவளைத் தனியிடத்தேயும் காணலாம்; அவ்வாறன்றி இவள்வாயிலாய் மணிமேகலைக்கு ஏது நிகழ்ச்சி எதிர்ந்துள்ளமையின் அதற்கிணங்க மணிமேகலையோடிருந்ததொரு செவ்வியிற் காண்பாளாயினள் என்பது குறிப்பு.

ஆடிய சாயல் - அசைந்த மென்மை. மடந்தை - ஈண்டு இளமையுடையோள் என்னும் குறிப்புப் பொருள் மேனின்றது. செலீஇ-சென்று.

### வயந்தமாலை மாதவிக்குக் கூறுதல்

### கக - உக : பொன்னே..........கணக்கும்

(இ - ள்.) பொன் நேர் அனையாய் - திருமகளையே ஒக்கும் நங்காய்!; புகுந்தது கேளாய்-உன் செயல் காரணமாக இப்பொழுது நம் மாநகரத்தே நிகழ்ந்ததொரு செய்தியைக் கூறுவேன் கேட்டருள்க; உன்னோடு இவ்வூர் உற்றது உண்டு கொல்-காடகமேத்தும் ஆடலணங் காகிய நின்னோடு இம் மாநகரத்து மாந்தர்க் குண்டான பகைமை ஏதேனும் உளதோ! இல்லையன்றே! அங்ஙனமாகவும்; வேத்தியல் பொதுவியல் என்று இரு திறத்து கூத்தும்-பாட்டும் தூக்கும் துணிவும் வேந்தர்க்காடும் கூத்தும் எல்லா மாந்தர்க்கும் பொதுவாக ஆடும் கூத்தும் என்று வகுத்துக் கூறப்படுகின்ற இருவகைப்பட்ட கூத்துக்களின் இலக்கணங்களும், அவற்றிற் கியன்ற பண் வகையும் செந்தூக்கு முதலிய எழுவகைப் பட்ட தூக்கு வகையும் தாளவகையும்; பண் யாழ் கரணமும் - பண்ணுறுத்திய யாழ்க் கரணங்களும்; பாடைப் பாடலும் - அகக் கூத்தும் புறக் கூத்துமாகிய இருவகைக் கூத்திற்குமுரிய உருக்கள் எனப்படும் பாடல்களும்; தண்ணுமைக் கருவியும் - தண்ணுமை முதலிய தோற் கருவி வாசிக்கும் வகையும்; தாழ் தீங்குழலும் - மந்த இசையினாற் சிறப்பெய்தும் வேய்ங் குழல் வாசிக்கும் வகையும்; கந்துகக் கருத்தும் மடைநூல் செய்தியும் - பந்தாடுதலின்கண் சிறந்த கருத்து வகையும், அட்டில் நூலறிவும் அடிசில் சமைக்கும் தொழில் வகையும்; சுந்தரச் சுண்ணமும்-அழகு தருகின்ற பொற் சுண்ணம் முதலியன செய்தலும்; தூநீராடலும்-தூய நீர்விளையாட்டு வகையும்; பாயல் பள்ளியும் - காதலரொடு இனிதாகப் பள்ளி கொள்ளுதற் கியன்ற கலைகளும்; பருவத்து ஒழுக்கமும் - வேனிற் பருவ முதலிய அறுவகைப் பருவங்கட்கும் ஏற்ப ஒழுகும் ஒழுக்கமும்; காயக் கரணமும் - உடம்பினாற் கல்விப் பொழுதின் நிகழ்த்தும் அறுபத்துநான்கு வகைத் தொழின் முறைகளும்; கண்ணியது உணர்தலும் - குறிப்பறிந்து கொள்ளும் திறமும்; கட்டுரை வகையும் - பொருள் பொதிந்த சொற்களாலே பேசுகின்ற வகைகளும்; கரந்துறை கணக்கும் - பிறர் அறியாவண்ணம் மறைந்தொழுகும் முறையும் என்க.

(வி - ம்.) வேத்தியல் - அரசர் பொருட்டுச் சிறப்பாக ஆடும் கூத்து. பொதுவியல் - பொதுமக்கள் எல்லாரும் கண்டு களிக்க ஆடும் கூத்து. இங்ஙனம் கூறுவர் (சிலப்) அரும்பதவுரையாசிரியர். அடியார்க்கு நல்லார், "இவையிரண்டும் நகைத்திறச் சுவைபற்றி நிகழும் விநோதக் கூத்து; எனவும் இவற்றை வசைக்கூத்தும் என்ப" எனவும் விளக்குவர். பாட்டு - பண். இவற்றியல்பெலாம் சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதையில் கண்டுகொள்க.

தூக்கு - தாளங்களின் வழிவரும் செந்தூக்கு மதலைத்தூக்கு துணிபுத்தூக்கு கோயிற்றூக்கு நிவப்புத்தூக்கு கழாற்றூக்கு நெடுந்தூக்கு என்னும் எழுதூக்குக்களுமாம். துணிவு - தாளம். அவை - கொட்டும், அசையும், தூக்கும், அளவும். இவற்றுள் கொட்டென்பது அரை மாத்திரை; வடிவு 'கூ' அசையென்பது ஒரு மாத்திரை; வடிவு, 'எ' தூக்கென்பது இரண்டு மாத்திரை; வடிவு, 'உ' அளவு என்பது மூன்று மாத்திரை; வடிவு '∴' என்பர். பண்ணியாழ்: வினைத்தொகை. கரணம்-செய்கை. பாடைப்பாடல்-அகக்கூத்திற்கும் புறக்கூத்திற்கும் இயன்ற இசைப்பாடல்கள். இசைப்பாடல் எனினும் உருக்கள் எனினும் ஒக்கும். இக்காலத்தார் 'உருப்படி' எனலும் காண்க. தண்ணுமை, இதனை அகப்புறவு முழவு என்ப. குழல் - வேய்ங்குழல். கந்துகம்-பந்து மடைநூல்-சமையற்கலை பற்றிய நூல். செய்தியும் - மடைநூலும் மடைத்தொழிற் செய்தியும் என்க. பாயற் பள்ளி-இடக்கரடக்கல். பருவம் - வேனில் முதலிய பருவம். மகளிர்க்குரிய பேதை பெதும்பை முதலியனவுமாம். காயக்கரணம்:இடக்கர் அடக்கு. கட்டுரை-சொல்லாட்டம். கரந்துறை கணக்கு-மறைந்து வதிதற்கியன்ற முறை.

### இதுவுமது

**௨௭ - ௩௭ : வட்டிகை.........உரைக்கும்**

(இ - ள்.) வட்டிகைச் செய்தியும் - எழுதுகோல் கொண்டியற்றும் தொழிற்றிறமும்; மலர் ஆய்ந்து தொடுத்தலும்- மலர்களை வண்ணம் வடிவம் மணம் முதலியவற்றால் ஆராய்ந்து அழகாகத் தொடுத்தலும்; கோலங் கோடலும் - உள்வரிக் கோலம் புனைந்து கொள்ளலும்; கோவையின் கோப்பும்-முத்துப் பவழம் முதலியவற்றைக் கோவைப் படுத்தலும்; காலக் கணிதமும் - காலக்கணக்கிய லறிதலும்; கலைகளின் துணிவும் - அறுபத்துநான்கு வகைப்பட்ட கலைகளை அறிந்து தெளிதலும்; நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த ஓவியச் செந்நூல் உரை நூல் கிடக்கையும் - நாடகமாடும் மகளிர் பயில்வதற் கென்றே அறிஞர்களால் நன்றாக வகுத்து வரையப்பட்ட ஓவியங்களையுடைய செவ்விய நூலில் அவை கிடக்கும் முறையை அறிதலும் ஆகிய இக் கலைகளை எல்லாம்; கற்றுத் துறைபோய பொற்றொடி நங்கை - நன்கு ஐயந்திரிபறப் பயின்று அந் நாடகத் துறையில் தலைவரம்பாகத் திகழ்கின்ற பொன்தொடி யணிந்த நாடகமகளிரிற் றலைசிறந்த நாடகக் கணிகை யொருத்தி; நல்தவம் புரிதல் - சிறந்த தவவொழுக்கத்தை மேற்கொள்வது; நாண் உடைத்து - ஆராயுங்கால் நாணுதற்குரிய தொரு செயலாகும் என்று சொல்லி; அலகில் மூதூர் ஆன்றவர் அல்லது - அளவில்லாத மாந்தர் வாழுகின்ற நந்தம் பழைய நகரத்தின்கண்ணுறைகின்ற ஆன்றவிந் தடங்கிய சான்றோரை யல்லதும்; பலர் தொகுபு உரைக்கும் பண்பு இல் வாய்மொழி - பிறரும் இடந்தொறும் கூடிக்கூட்டம்

கூட்டமாகக் கூடியிருந்து பேசுகின்ற பண்பாடு இல்லாத உண்மையோடு கூடிய பழிமொழி; நயம்பாடு இல்லை - நம்மனோர்க்கு அழகுண்டாக்குதல் இல்லையாகலின்; நாணுடைத்து என்ற - அதனைக் கேட்கும் நம்மனோர்க்கும் நாணந் தருதலைத் தன்பாலுடையதாகவே உளதுகாண்! என்று கூறிய; வயந்தமாலைக்கு மாதவி உரைக்கும் - வயந்தமாலைக்கு மறுமொழியாக அவளை நோக்கி மாதவி கூறுகின்றாள் என்க.

(வி - ரை.) வட்டிகை - எழுதுகோல். கோலம் - உள்வரிக்கோலம்; அஃதாவது பல்வேறு வேடங்களும் புனைந்து கொள்ளும் திறம். காலக் கணிதம்-காலத்தைக் கணிக்கும் தொழில். துணிவு - தெளிவு. ஓவியச் செந்நூல்-நாடகமகளிர்க் கியன்ற நிற்றல் இருத்தல் முதலியவற்றையும் ஒற்றைக்கை இரட்டைக்கை முதலிய அவிநய வகைகளையும் ஓவியமாக வரைந்து காட்டப்பட்ட நூல் என்க. அவ்வோவியங்கள் முறைப்படுத்திக் கிடத்தப்பட்டு அவற்றின் விளக்கவுரைகளும் வரையப்பட்டிருத்தலும் இந்நூல் நாடக மகளிர் பொருட்டே ஆக்கப்பட்டது என்பதும் தோன்ற "நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த ஓவியச் செந்நூல் உரைநூற் கிடக்கை" என்று விதந்தோதினர். இப் பழி கூறுதற்குரியோர் ஆன்றவிந் தடங்கிய சான்றோரேயாவர், அவரையன்றியும் ஏனையோரும் தூற்று கின்றனர் என்பாள் ஆன்றவரல்லது பலர்தொகுபுரைக்கும் வாய்மொழி என்றாள். பிறர்பழிதூற்றும் மொழி தியமொழியாதலின் பண்பில் மொழி என்றாள். வாய்தந்தன கூறுகின்றனர் என்பாள் வாய்மொழி என்றாள். அவர்மொழியில் வாய்மையும் உளது என்பாள் அங்ஙனம் கூறினள் என்பதும் ஒன்று. என்னை? அச் செயல் வாய்மையாகவே நாணுத் தருவ தொன்றே என்பது அவட்கும் உடம்பாடாகலின் என்க.

## மாதவி வயந்தமாலைக்குக் கூறும் மறுமொழி

### ரூ௪ - ச௪: காதலன்.........பெண்டிர்

(இ - ள்.) நற்றொடி நங்காய் காதலன் உற்ற கடுந்துயர் கேட்டே போதல் செய்யா உயிரொடு நின்றே - அழகிய வளையலணிந்த நங்கையாகிய தோழியே கேள்! யான் துறவினால் நாணுந் துறந்தேனல்லேன் எளியேன் என் அருயிர்க் காதலனாகிய கோவலன் எய்திய பெரிய துயரச் செய்தியைக் கேட்டிருந்தேயும் யாக்கையை விட்டுத் தானே போகமாட்டாத புல்லிய உயிரைத் தாங்கிப் பின்னும் வாழ்வுகந்திருக்கின்றமையால்; பொன் கொடி மூதூர் பொருள் உரை இழந்து - அழகிய கொடியுயர்த்தப்பட்ட இப் பழைய நகரத்துள் வாழும் மாந்தர் எல்லாம் ஒருவாயாய் என்னைப் பாராட்டுதற் கியன்ற பொருள் பொதிந்த புகழ் மொழியையும் இழந்து; நாணுத் துறந்தேன்-நாணத்தைக் கைவிட்டவளே ஆகின்றேன் காண்! பத்தினிப் பெண்டிர்-வாய்மையான பத்தினி மகளிரின் இயல்பு கேள்!; காதலர் இறப்பின்-தம்மாற் காதலிக்கப்

பட்ட தங்கேள்வர் ஊழ்வினை காரணமாக இறந்துபடின்; கனை எரி பொத்தி - மிக் கெரியுமாறு நெருப்பை மூட்டி; உலை ஊது குருகின் உயிர்த்து - கொல்லனுலையில் ஊதப்படுகின்ற துருத்தியின் மூக்குக் கனலோடு உயிர்க்கும் உயிர்ப்புப் போன்று வெய்தாக உயிர்த்து; அகத்து அடங்காது - தம்முள்ளத்தே அடங்க மாட்டாமையாலே; இன் உயிர் ஈவர் - தமதினிய உயிரையே நீத் தொழிவர்; ஈயாராயின் - அவ்வாறு உயிர் நீத்திலராய விடத்தே; நல்நீர்ப் பொய்கையின் நளி எரி புகுவர் - குளிர்ந்த நீர்நிலை புகுமாறு போலே சிறிதும் தயங்காமல் செறிந்த தீயினுட் புகுந்து மாய்ந்தொழிவர்; நளி எரி புகாஅர் ஆயின அன்பரோடு உடனுறை வாழ்க்கைக்கு நோற்று உடம்படுவர் - அவ்வாறு செறிந்த தீயினுள் முழுகி மாயாதவிடத்தே இறந்துபட்ட தம் காதலரோடு மறுமைக்கண் கூடியுறையும் வாழ்க்கையை எய்தும் பொருட்டுக் கைம்மை நோன்பினை மேற்கொண்டிருந்து இம்மை மாறியபொழுது அக் காதலரோடு கூடி வாழா நிற்பர்காண் என்றாள் என்க.

(வி - ம்) வயந்தமாலை 'கற்றுத்துறைபோகிய நங்கை நற்றவம் புரிந்தது நாணுடைத்து'' என்று ஊர் அலர் தூற்கின்றது என்றுளாதலின், மாதவி அங்ஙனம் அலர்தூற்றுதற்குக் காரணம், அவர் தவறுமன்று; நான் தவம் புரிந்ததுமன்று. காதலன் கொலையுண்ட செய்தி கேட்டபின்னரும் யான் உயிர்தாங்கி இருக்கின்றேன் அல்லனோ அதனாலேயே யான் நாணம்கெட்டவளாகின்றேன். அவர் தூற்றும் அலரும் இவ்வகையால் வாய்மையே ஆகின்றது. எனவும், வாய்மையாகவே யான் பத்தினிமகளாயிருந்தால் கடுந்துயர் கேட்டவுடன் என் உயிர் தானே போயிருத்தல் வேண்டும்; அங்ஙனம் போந்துணிவற்ற புல்லுயிர் தாங்கிப் பின்னும் வாழ்வுகந்திருக்கின்றமையாலே புகழையும் இழந்தேன். பழியையும் சுமந்தேயிருக்கின்றேன் என்று தன்னையே நொந்துரைக்கின்ற இம்மொழிகள் அவளுடைய பேரன்பை மிகத்தெளிவாகக் காட்டுதலுணர்க. நற்றொடிநங்காய் என்று விளித்தது இகழ்ச்சிக் குறிப்பு.

கனை எரி-மிக்க நெருப்பு. எரி-உலையின்கண்ணிடப்பட்ட நெருப்பு. இதனைத் துன்பமாகிய தீமூளப்பட்டு என்பாருமுளர். அவ்வுரை பொருந்தாமை யுணர்க. நளி-செறிவு. எரிபுகுவர் என்றது தீயிலே மூழ்கி இறப்பர் என்றவாறு. உடம்பு அடுவர் எனக் கண்ணழித்து உடம்பை வருத்துவர் என்பாருமுளர்.

இனி, இம் மாதவி கூற்றிற்கு,

"ஒருயிராக உணர்க உடன்கலந் தோர்க்(கு)
ஈருயி ரென்ப ரிடைதெரியார்—போரில்
விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையி னாட்கும்
உடனே யுலந்த துயிர்'' (புற-வெண்பாமாலை, உகஅ)

என வரும் வரலாற்று வெண்பாவிற் றலைவியும்,

"அரிமா னேந்திய அமளிமிசை யிருந்த
திருவீழ் மார்பின் தென்னர் கோமான்
தயங்கிணர்க் கோதை தன்துயர் பொறாஅன்
மயங்கினன் கொல்லென மலரடி வருடித்
தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள்
கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பொறாஅள்
மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத்
தன்னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போல்
பெருங்கோப் பெண்டு மொருங்குடன் மாய்ந்தனள்"

என வரும் நெடுஞ்செழியன் பெருந்தேவியும் காதலர் இறந்தவுடன் இன்னுயிரீந்தமைக்கும், நன்னீர்ப்பொய்கையின் நளியெரிபுக்கமைக்கு,

"பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கரி தாகுக தில்ல எமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே" (புறம்-உசக)

எனக் கூறித் தன் கணவன் பூதப்பாண்டியன் இறந்துழி, தீப்பாய்ந்திறந்த பெருங்கோப்பெண்டு என்னும் புலமையாட்டியும் சிறந்த எடுத்துக் காட்டாவார். மேலும், உடனுறைவாழ்க்கைக்கு நோற்கும் நோன்பி னியல்பை,

"அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டா
தடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிபெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவற் பெண்டிர்" (புறம்-உசக)

எனவரும். அப் பெருங்கோப் பெண்டின் கூற்றே சான்றுதலும் உணர்க.

## மாதவி மணிமேகலை நாடகக்கணிகை யாகாளெனல்

சஅ - ருஎ : பரப்பு.........படாஅள்

(இ - ள்.) பரப்பு நீர் ஞாலத்து அத்திறத்தாளும் அல்லள் - கடல் சூழ்ந்த இந்நிலவுலகத்தே யான் கூறிய அத்தகைய பத்தினிப் பெண்டிர் போல்வாளும் அல்லள்; எம் ஆயிழை - எங்கள் கண்ணகி நல்லாள்; கணவற்கு உற்ற கடுந்துயர் பொறாஅள் - தன் காதலனுக்கு எய்திய பெருந்துன்பத்தைக் கேட்டு நெஞ்சு

பொறுக்கொணாத துன்பமுடையளாகி; மணம்மலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக் கண்ணீராடிய கதிர் இளவனமுலை - நறுமண மிக்குக் கமழுகின்ற தன கூந்தல் சரிந்து தன் முதுகினை மறைப்பவும்; தன கண்ணினின்றும் விழுந்த துன்பக் கண்ணீரின மூழ்கிய ஒளியுடைய அழகிய இளமுலையில் ஒன்றனைத் தன் கையாலேயே; திண்ணிதின திருகி - திட்பமாகப் பற்றித் திருகி வட்டித்து எறிந்து; தீ அழல் பொததி - தீயாகிய அழலைக் கொளுவி; காவலன் பேரூர் கனை எரி மூட்டிய - பாண்டிய மன்னனுடைய தலை நகரமாகிய மதுரை முழுவதும் பெரிய தீயை மூட்டிய தெய்வத்தன்மையுடைய; மாபெரும் பத்தினி - மிகப் பெரிய பத்தினியல்லளோ?; மகள் மணிமேகலை - அக் கற்புத் தெய்வத்தின் மகள் ஆவாள் இம் மணிமேகலை; அருந்தவப் படுத்தல் அல்லது - ஆதலின் அக் கற்புத் தெய்வத்தின சிறப்பிற் கேற்ப இம் மணிமேகலையை அரிய தவவொழுக்கத்தினபால செலுத் துவதல்லது; யாவதும் திருந்தாச் செய்கைத் தீத்தொழில் படாஅள் - சிறிதும் உளம் திருந்துதற்குக் காரணமாகாத தீய செய்கைகளையுடைய பரத்தைமைத் தொழிலில் ஈடுபடாள் காண்! என்றாள் என்க.

(வி - ம்.) தன் அன்புரிமை தோன்றக் கண்ணகியை மாதவி எம்மாயிழை என்கின்றாள். எம் மென்னும் பொதுப் பெயர் கோவலனையும் மணிமேகலையையும் உளப்படுத்தியது. திருகுதல் அருமை தோன்றத் திண்ணிதிற்றிருகி என்றாள். எம் மாயிழை ஞாலத்துள்ள யான் கூறிய பத்தினிப் பெண்டிரின் திறத்தினும் மேம்பட்டுப் பேரூர் எரிமூட்டிய தெய்வக் கற்புடையாள். அத்தகைய பத்தினி மகள் மணிமேகலை. ஆதலின் தவப் படுத்தற்கே உரியள் தீத் தொழிலில் ஈடுபடாள் என மணிமேகலையைக் கண்ணகி மகளாகவே கொண்டு கூறினள். என்னை? கோவலன் என்னோடு கேண்மை கொண்டிராவிடின் இவள் அவள் திருவயிற்றிலேயே கருவாகிப் பிறந்திருப்பாள் மன்! என்னும் கருத்தால். இப்பொழுது நிலம் இழிந்ததேனும் வித்து உயர்ந்ததாகலின் அஃது இந் நிலத்தினும் தனக்கியன்ற விளைவையே செய்யும் என்பாள் தீத் தொழிற் படாள் என்றாள்

## மாதவி அறவணர்பால் அறங்கேட்டு அமைதி கொண்டமை கூறித் தானும் மீளாமையைக் குறிப்பாக அறிவித்தல்

### ௫௭ - ௬௬ : ஆங்கனம்.........கூற

(இ - ள்.) ஆங்கனம் அன்றியும் - அவ்வாறு மணிமேகலை நிலையிருப்பதுமல்லாமல்; ஆயிழை கேளாய் - வயந்தமாலாய்! இனி என்னிலைமை இயம்புவேன கேட்பாயாக; ஈங்கு இம் மாதவர் உறைவிடம் புகுந்தேன் - யான கணிகையே ஆதலின் காதலன் உற்ற கடுந்துயர் கேட்டுப் போதல் செல்லாவுயிரொடு நின்றேனாயினும் ஆற்றொணாத் துயருழந்து அதற்கு ஆறுதல்

தேடி இங்கு இப் பௌத்த சங்கத்தார் உறைகின்ற இத் தவப் பள்ளியிற் புகுந்தேன் காண்! ஏது நிகழ்ச்சி எதிர்ந்துளதாதலாற் போலும். இவ்விடத்தே; மறவணம் நீத்த மாசு அறு கேள்வி அறவணவடிகள் அடிமிசை வீழ்ந்து - தீவினையின் நிழலும் ஆடாவண்ணம் அவற்றைத் துவரக் கடிந்தமையால மாசு அற்ற அறக் கேள்வியையுடைய அறவணவடிகள என்னும் சிறப்புப் பெயர் பெற்ற அறவோரைக் காணப்பெற்று அவர் திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி; மாபெருந் துன்பம் கொண்டு - மிகப் பெரிய துன்பத்தைச் சுமந்து கொண்டு ஆற்றாமையாலே; உளம் மயங்கி - நெஞ்சழிந்து செய்வதறியாமல மயங்கி அவர்பால்; காதலன் உற்ற கடுந்துயர் கூற - என் ஆருயிர்க் காதலன் கொலைக்களப் பட்ட மிக்க துன்பத்தைக் கூறுகிற்றலாலே; என்க.

(வி - ம்.) ஆங்கனம் அன்றியும்-என்றது மணிமேகலை அவ்வாறு ஆதலன்றியும் இனி என்றிறம் உரைப்பேன் என்பதுபட நின்றது. ஆயிழை: வயந்தமாலை; அண்மைவிளி. எனக்கும் ஏது நிகழ்ச்சி எதிர்ந் துளதாதலாற் போலும் ஈங்கு இம் மாதவர் உறைவிடம் புக்கேன் என்பது அவள் கருத்தாகக் கொள்க. மறவணம் - மறத்தின் வண்ணம். தீவினை யின் தன்மை நீத்த அறவண அடிகள், மாசறு கேள்வி அறவண அடிகள் எனத் தனித்தனி இயையும். அறவணன்-அறத்தின் திருவுருவமானவன். எனவே இஃது அச் சங்கத்தாரீந்த சிறப்புப் பெயர் என்பதுணரப்படும். சாதலில் இன்னாதது இல்லை ஆகலின் கொலையுண்டமையைக் கடுந்துயர் என்றாள்.

## அறவணர் அருளிய அறவுரைகள்

### ௬௪ - ௬௯ : பிறந்தோர்..........அருளினன்

(இ - ள்.) பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம் - அது கேட்ட அடிகளார் அடிச்சிக்குப் பெரிதும் இரங்கி என துயரத் திற்கு ஆறுதல் கூறுபவர் அளியோய் வருந்தற்க! உலகின்கண் பிறப்பெடுத்துழலவோர் யாவரேனும் எய்துவது ஒருகாலைக் கொருகால் மிகுந்து வருந்துன்பமட்டுமே காண்!; பிறவார் உறுவது பெரும் பேரின்பம்-இனிப் பிறவாநிலை எய்தினோர் யாவர் அவர்க்கு மட்டுமே எய்துவதாம் மக்கள் அவாவுகின்ற மாபெரும் பேரின்பம்; முன்னது பற்றின் வருவது - துன்பம் அனைத் திற்கும பிறப்பிடமாகிய முற் கூறப்பட்ட பிறப்புப் பற்றினாலே வருவதொன்றாம்; பின்னது-பின்னே கூறப்பட்ட இன்பநிலைக் களமாகிய பிறவாமையோ; அற்றோர் உறுவது அறிக - பற்றற் றோர்க்குத் தாமே எய்துவதொன்றாம்; அறிக எனறருளி - இவ் வாய்மைகள் நான்கினையும் நன்கு அறிந்து கொள்ளக் கடவாய்! என்று முற்பட இவற்றை அறிவித்துப் பின்னர்; ஐவகைச் சீலத்து அமைதியும் காட்டி-பற்றறுதிக்குக் காரணமான

ஐந்து வகைப்பட்ட ஒழுக்கங்களி னிலக்கணங்களையும் நன்கு அறிவுறுத்து; இவை உய்வகை கொள் என்று உரவோன் காட்டினன் - இவையே நீ எய்திய மாபெருந் துன்பக்கடலி னின்றும் கரையேறி உய்தற்கியன்ற உபாயங்களாகும், இவையிற்றை உறுதியாகக் கடைப்பிடித்துக் கொள்ளக் கடவாய் என்று அப் பேரறிவாளர் திருவாய் மலர்ந்தருளினர் காண்! என்றாள் என்க.

(வி - ர்.) ''ஆதலால் யான் ஒருவாறு அம் மாபெருந் துன்பத்தி னின்றும் நீங்கி அமைதி பெற்றுள்ளேன் காண்!'' என்பது இதனாற் போந்த குறிப்புப் பொருளாம் என்க.

இப் பகுதியில் புத்தபெருமான் போதி மூலத்துப் பொருந்தியிருந் துழிக் கண்ட மெய்க் காட்சிகள் நான்கும் சுருங்கக்கூறி விளங்க வைத் திருக்கும் தண்டமிழ் ஆசான் சாத்தனார்தம் புலமை வித்தகம் நினைந்து நினைந்து மகிழற்பாலதாம்.

பௌத்த சமயத்தின் உயிராக விளங்குவன இந்த நான்கு வாய்மை களேயாம். அவை, துன்பம், துன்பந் துடைத்தல், துன்பவருவாய், துன்பம் துடைத்தல் நெறி என்னும் இவையேயாம்.

இவையிற்றுள் - பிறப்பு துன்பங்கட் கெல்லாம் நிலைக்களனாதலின், 'பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்' என முதல் வாய்மை கூறப்பட்டது. பிறவாமையே இன்பநிலையம் ஆதலின், ''பிறவார் உறுவது பெரும் பேரின்பம்'' என இரண்டாம் வாய்மை இயம்பப்பட்டது. முன்னது என்றது பிறப்பினை; அதற்குக் காரணம் பற்றுடைமை ஆதலின், ''முன்னது பற்றின் வருவது' என மூன்றாவதாகிய வாய்மை துன்ப வருவாய் (வரும் வழி) கூறப்பட்டது. பிறவாமையே துன்பம் துடைக்கும் நெறி ஆகலின் பின்னது - பற்றறுதி. ''பின்னது அற்றோர் உறுவது'' என்பதனால் நான்காம் வாய்மை நவிலப் பட்டமை நுண்ணிதின் உணர்க. இவ் வாய்மைகள் நான்கும் உலகிலுள்ள எல்லாச் சமயங்கட்கும் எல்லா நாட்டிற்கும் எக் காலத்திற்கும் பொருந்தும் சிறப்புடையன வாதலும் உணர்க.

இங்ஙனம் துணிபொருள் கூறியவர் அவற்றை எய்துதற்குரிய ஏதுவும் இயம்பினர் என்பாள் ஐவகைச் சீலத்து அமைதியும் காட்டி அருளினன் என்றாள். சீலம்-ஒழுக்கம். அவையாவன: ''காமம் கொலை கள் பொய் களவு'' என்னும் ஐந்து தீவினைகளையும் துவரத் துறந்தொழுகு தலாம். காமத்தைத் துறந்தபொழுதே துன்பம் இல்லையாக; இவ் வாற்றால் யான் ஈண்டு ஒருவாறு துன்பந் துடைக்கும் நெறிநிற்றலால் உய்ந்திருக்கின்றேன் என்று மாதவி வயந்த மாலைக்குத் தன்னிலை கூறித் தானும் வரமாட்டாமையைக் குறிப்பினால் கூறியபடியாம். தான் உழந்த மாபெருந் துன்பத்தை ஆற்றுவித்த அறவண அடிகளின் அறிவாற்றலின் சிறப்புத் தோன்ற அவரை உரவோன் என்று அறிவும் ஆற்றலும் ஒருங்கே உணர்த்தும் பெயரால் கூறினள் என்க.

### வயந்தமாலை வறிதே மீண்டுபோதல்

**௭௦ - ௭௫ : மைத்தடங்கண்.........திறத்தேன்**

(இ - ள்.) நீ மைத்தடங் கண்ணார் தமக்கும் என் பயந்த சித்திராபதிக்கும் செப்பு என-வயந்தமாலாய்! நீ இப்பொழுதே போய் மையெழுதிய பெரிய கண்ணையுடைய தோழிமார்க்கும் என்னையீன்ற தீவினையாட்டியாகிய சித்திராபதிக்கும் என்னிலைமையைக் கூறுவாயாக! என்று; ஆங்கு அவள் உரை கேட்டு-அவ்விடத்தே மாதவி கூறிய மொழியைக் கேட்டவளவிலே; வயந்த மாலையும் காரிகை திறத்துக் கையற்று - மாதவியை மீட்டுச் செல்லும் கருத்தோடு வந்த அவ் வயந்தமாலை தானும் அம் மாதவி திறத்திலே தான் பின் ஏதும் சொல்லவோ செய்யவோ இயலாத கையறு நிலையுடையளாகி; அரும் பெறல் மாமணி ஓங்கு திரைப் பெருங்கடல் வீழ்த்தோர் போன்று-அரிதாகப் பெற்றதொரு மாணிக்க மணியை உயர்ந்த அலைகளையுடைய பெரிய கடலிலே போகட்டுவிட்டவர் போலே; மையல் நெஞ்சமொடு பெயர்ந்தனள் - பெரிதும் மயக்கமுற்ற நெஞ்சத்தோடே வறிதே செல்வாளாயினள்; என்பதாம்.

(வி - ம்.) தன் தோழிமார் தன் கூற்றிற்குப் பொருளுணரார் ஆயினும் அவர்க்கும் கூறுக என்னும் இகழ்ச்சி தோன்ற அவரை மைத் தடங்கண்ணார் என்றாள். என்னை? அழகு செய்த புறக்கண்ணே யுடையர் அகக் கண்ணில்லா அவர்க் கெல்லாம் இவை விளங்க மாட்டா என்பதே அவள் கருத்தாதலின் என்க.

இனி, இத்துணைத் துன்பத்திற்கும் ஆளாகும் என்னைப் பெற்றமையாலும் அவள் கருதியது நிறைவேறாமையாலும் அவள் தீவினையாட்டியே ஆதல்வேண்டும் என்பது குறிப்பாகத் தோன்றற் பொருட்டு அன்னைக்கு என்னாது தனக்கும் அவட்கும் அயன்மை விளங்கித் தோன்ற எற்பயந்த சித்திராபதி எனத் தன் நற்றாயைக் கூறினள். இதனால் அவட்குப் பற்றறுதி கைவந்தமையும் புலப்படுதலறிக. வயந்தமாலையும் அன்பு பொருளாக அன்றிப் பொருட்பொருட்டே அழைக்கவந்தவள் ஆதலின் அவட்கு மாமணியை இழந்தவர் உவமையாக எடுக்கப்பட்ட நயமுணர்க.

இனி இக்காதையை - நன்னாளில் மாதவி வாராத்துன்பம் மேல்வர, சித்திராபதி இரங்கி வயந்தமாலையைக் கூவி அலரை மாதவிக்கு உரைஎன அவள் சென்று மாதவியைக் கண்டு வருந்தி அனையாய் கேளாய் வாய்மொழி நாணுடைத்து என அவட்கு மாதவி உரைக்கும்துறந்தேன், மணிமேகலை தீத்தொழில் படாஅள் யான் புகுந்து வீழ்ந்து மயங்கிக் கூற உரவோன் அறிகென்று நாட்டி, அருளினன். இதனைக் கண்ணார்க்கும் சித்திராபதிக்கும் நீ சென்று செப்பு என வயந்தமாலையும் கையற்றுப் பெயர்ந்தனள் என இயைத்திடுக.

**ஊரலர் உரைத்த காதை முற்றிற்று**

# ௩. மலர்வனம் புக்க காதை

[மூன்றாவது மலர்வனம் புக்கபாட்டு]

அஃதாவது—மாதவியும் வயந்த மாலையும் சொல்லாட்டம் நிகழ்த்தும் பொழுது மணிமேகலை புத்த படிமத்திற்கு அணிய வேண்டிய மலர் மாலை தொடுக்கும் செயலிலீடுபட்டிருந்தாளாக, அவிர்கள் சொல்லாட்டத்திடையே மாதவி கூற்றில் தன அன்புத் தந்தையாகிய கோவலன உற்ற கொடுந்துயரும் பேசப்பட்டமை யால் அச் செய்தியால் அவள் உள்ளத்தே துன்ப நினைவுகள் தோன்ற அவன உகுத்த கண்ணீர் மலர்மாலையில் விழுந்து அதனை வாலாமையுடையதாக்கியது. அதனால் அற்றை நாள் வழி பாட்டிற்குப் புதிய மலர் பறித்து வந்து தொடுக்கக் கருதி அம்மலர் பறித்து வருதற்கு மாதவி மணிமேகலையை ஏவினள்; அவட்குத் துணையாகச் செலவதற்குச் சுதமதி என்னும் அன்புமிக்க பிக்குணி தானே முனவந்தனள். ஆகவே மணிமேகலையும் சுதமதியும் புதிய மலர் கொண்டு வருதற் பொருட்டுத் தீதற்றதாகக் கருதப்படும் உவவனம் என்னும் மலர் வனத்திலே சென்று புகுந்த செய்தியைக் கூறும் செய்யுள் என்றவாறு.

இதன்கண் - மணிமேகலைக்குத் தந்தையின் பாலுள்ள அன்பின் தன்மையும்; அவளுடைய பேரழகின் சிறப்பும் சாத்தனு ரால் வியத்தகுமுறையில் கூறப்பட்டுள்ளன.

மேலும் சுதமதி தன் வரலாறு கூறுதலும்; அந்நகரத்தி லுள்ள மலர்ப்பொழில்கள் பலவற்றின பல்வேறு தன்மைகளைக் கூறுதலும் உவவனத்திலுள்ள பளிக்கறை பற்றிய வரலாறு கூறுதலும் பெரிதும் சுவை பயபபனவாம். சுதமதியும் மணிமேகலையும் மலர் வனம் நோக்கிச் செல்லும் பொழுது வழியிலே நிகழும் ஒரு களிமகன் செயல் நகைச்சுவை தருவதாம்- மணிமேகலையைக் கண்டிரங்குவார் மொழிகள் வாயிலாய்ப் புலவர் மணிமேகலையின் பேரழகைப் புலப்படுத்தும் வித்தகப் புலமை பெரிதும் இன்பம் பயப்பதாம். இவ்வாறு இக் காதையில் பல்வேறு சுவைகள் நிரம்பியுள்ளன.

வயந்த மாலைக்கு மாதவி யுரைத்த
உயங்குநோய் வருத்தந் துரைமுன் றேன்றி
மாமலர் நாற்றம் போன்மணி மேகலைக்கு

ஏது நிகழ்ச்சி எதிர்ந்துள தாதலின்
தந்தையுந் தாயுந் தாநனி யுழந்த
வெந்துய ரிடும்பை செவியகம் வெதுப்பக்
காதல் நெஞ்சங் கலங்கிக் காரிகை
மாதர் செங்கண் வரிவனப் பழித்துப்
புலம்புநீ ருருட்டிப் பொதியவிழ் நறுமலர்
இலங்கிதழ் மாலையை இட்டுநீ ராட்ட
மாதவி மணிமே கலைமுகம் நோக்கித்
தாமரை தண்மதி சேர்ந்தது போலக்
காமர் செங்கையிற் கண்ணீர் மாற்றித்
தூநீர் மாலை தூத்தகை இழந்தது
நிகர்மலர் நீயே கொணர்வா யென்றலும்
மதுமலர்க் குழலியொடு மாமலர் தொடுக்கும்
சுதமதி கேட்டுத் துயரொடுங் கூறும்
குரவர்க் குற்ற கொடுந்துயர் கேட்டுத்
தணியாத் துன்பந் தலைத்தலை எய்தும்
மணிமே கலைதன் மதிமுகந் தன்னுள்
அணிதிகழ் நீலத் தாய்மல ரோட்டிய
கடைமணி யுகுநீர் கண்டன னாயிற்
படையிட்டு நடுங்குங் காமன் பாவையை
ஆடவர் கண்டால் அகறலு முண்டோ
பேடிய ரன்றோ பெற்றியின் நின்றிடின்
ஆங்கன மன்றியும் அணியிழை கேளாய்
ஈங்கிந் நகரத் தியான்வருங் காரணம்
பாரா வாரம் பல்வளம் பழுநிய
காராளர் சண்பையிற் கௌசிக னென்போன்
இருபிறப் பாளன் ஒருமக ளுள்ளேன்
ஒருதனி யஞ்சேன் ஓரா நெஞ்சமோடு
ஆரா மத்திடை அலர்கொய் வேன்றனை
மாருத வேகனென் பானோர் விஞ்சையன்
திருவிழை மூதூர் தேவர்கோற் கெடுத்த
பெருவிழாக் காணும் பெற்றியின் வருவோன்
தாரன் மாலையன் றமனியப் பூணினன்
பாரோர் காணப் பலர்தொழு படிமையன்
எடுத்தனன் எற்கொண் டெழுந்தனன் விசும்பிற்
படுத்தன னாங்கவன் பான்மையே னாயினேன்
ஆங்கவன் ஈங்கெனை அகன்றுகண் மாறி
நீங்கினன் றன்பதி நெட்டிடை யாயினும்
மணிப்பூங் கொம்பர் மணிமே கலைதான்
தனித்தலர் கொய்யுந் தகைமைய ளல்லள்

பன்மல ரடுக்கிய நன்மரப் பந்தர்
இலவந் திகையின் எயிற்புறம் போகின்
உலக மன்னவன் உழையோர் ஆங்குளர்
விண்ணவர் கோமான் விழாக்கொள் நன்னாள்
மண்ணவர் விழையார் வானவ ரல்லது
பாடுவண் டிமிரா பன்மரம் யாவையும்
வாடா மாமலர் மாலைகள் தூக்கலின்
கைபெய் பாசத்துப் பூதங் காக்குமென்று
உய்யா னத்திடை உணர்ந்தோர் செல்லார்
வெங்கதிர் வெம்மையின் விரிசிறை யிழந்த
சம்பாதி யிருந்த சம்பாதி வனமும்
தவாநீர்க் காவிரிப் பாவைதன் தாதை
கவேரனும் இருந்த கவேர வனமும்
மூப்புடை முதுமைய தாக்கணங் குடைய
யாப்புடைத் தாக அறிந்தோ ரெய்தார்
அருளும் அன்பும் ஆருயி ரோம்பும்
ஒருபெரும் பூட்கையும் ஒழியா நோன்பிற்
பகவன தாணையிற் பன்மரம் பூக்கும்
உவவன மென்பதொன் றுண்டத னுள்ளது
விளிப்பறை போகாது மெய்புறத் திடூஉம்
பளிக்கறை மண்டப முண்டத னுள்ளது
தூநிற மாமணிச் சுடரொளி விரிந்த
தாமரைப் பீடிகை தானுண் டாங்கிடின்
அரும்பவிழ் செய்யும் அலர்ந்தன வாடா
சுரும்பின மூசா தொல்யாண்டு கழியினும்
மறந்தேன் அதன்திறம் மாதவி கேளாய்
கடம்பூண் டோர்தெய்வங் கருத்திடை வைத்தோர்
ஆங்கவ ரடிக்கிடின் அவரடி தானுறும்
நீங்கா தியாங்கணும் நினைப்பில ராயிடின்
ஈங்கிதன் காரணம் என்னை யென்றியேல்
சிந்தை யின்றியுஞ் செய்வினை யுறுமெனும்
வெந்திறல் நோன்பிகள் விழுமங் கொள்ளவும்
செய்வினை சிந்தை யின்றெனின் யாவதும்
எய்தா தென்போர்க் கேது வாகவும்
பயங்கெழு மாமல ரிட்டுக் காட்ட
மயன்பண் டிழைத்த மரபின ததுதான்
அவ்வன மல்ல தணியிழை நின்மகள்
செவ்வனஞ் செல்லுஞ் செம்மை தானிலள்
மணிமே கலையொடு மாமலர் கொய்ய

அணியிழை நல்லாய் யானும் போவலென்
றணிப்பூங் கொம்பர் அவளொடுங் கூடி
மணித்தேர் வீதியிற் சுதமதி செல்வுழி இச்
சியிலிக் கரண்டையன் நுழைகோற் பிரம்பினன்
தவலருஞ் சிறப்பின் அராந்தா ணத்துளோன்
நாணமும் உடையும் நன்கனம் நீத்துக்
காணா உயிர்க்குங் கையற் றேங்கி
உண்ணா நோன்போ டுயவ லியானையின்
மண்ணா மேனியன் வருவோன் றன்னை
வந்தீ ரடிகளும் மலரடி தொழுதேன்
எந்தம் அடிகள் எம்முரை கேண்மோ
அழுக்குடை யாக்கையிற் புகுந்த நும்முயிர்
புழுக்கறைப் பட்டோர் போன்றுளம் வருந்தா
இம்மையும் மறுமையும் இறுதியி லின்பமும்
தன்வயிற் றருஉமென் தலைமக னுரைத்தது
கொலையு முண்டோ கொழுமடற் றெங்கின்
விளைபூந் தேறலின் மெய்த்தவத் தீரே
உண்டு தெளிந்திவ் யோகத் துறுபயன்
கண்டா லெம்மையுங் கையுதிர்க் கொண்மென
உண்ணா நோன்பி தன்னொடுஞ் சூளுற்
றுண்மென இரக்குமோர் களிமகன் பின்னரும்
கணவிரி மாலை கட்டிய திரணையன்
குவிமுகி ழெருக்கிற் கோத்த மாலையன்
சிதவற் றுணியொடு சேணோங்கு நெடுஞ்சினைத்
ததர்வீழ் பொடித்துக் கட்டிய உடையினன்
வெண்பலி சாந்த மெய்ம்முழு தறீஇப்
பண்பில் கிளவி பலரொடும் உரைத்தாங்கு
அழூஉம் விழூஉம் அரற்றுங் கூஉம்
தொழூஉம் எழூஉஞ் சுழலலுஞ் சுழலும்
ஓடலு மோடும் ஒருசிறை யொதுங்கி
நீடலும் நீடும் நிழலொடு மறலும்
மைய லுற்ற மகன்பின் வருந்திக்
கையறு துன்பங் கண்டுநிற் குநரும்
சுரியற் றாடி மருள்படு பூங்குழல்
பவளச் செவ்வாய்த் தவள வாள்நகை
ஒள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் தோட்டுக்
கருங்கொடிப் புருவத்து மருங்குவளை பிறைநுதல்
காந்தளஞ் செங்கை ஏந்திள வனமுலை
அகன்ற அல்குல் அந்நுண் மருங்குல்
இகந்த வட்டுடை எழுதுவரிக் கோலத்து

வாணன் பேரூர் மறுகிடைத் தோன்றி
நீணில மளந்தோன் மகன்முன் னாடிய
பேடிக் கோலத்துப் பேடுகாண் குநரும்
வம்ப மாக்கள் கம்பலை மூதூர்ச்
சுடுமண் ணோங்கிய நெடுநிலை மனைதொறும்
மையறு படிவத்து வானவர் முதலா
எவ்வகை உயிர்களும் உவமங் காட்டி
வெண்சுதை விளக்கத்து வித்தக ரியற்றிய
கண்கவர் ஓவியங் கண்டுநிற் குநரும்
விழவாற்றுப் படுத்த கழிபெரு வீதியிற்
பொன்னாண் கோத்த நன்மணிக் கோவை
ஐயவி யப்பிய நெய்யணி முச்சி
மயிர்ப்புறஞ் சுற்றிய கயிற்கடை முக்காழ்
பொலம்பிறைச் சென்னி நலம்பெறத் தாழச்
செவ்வாய்க் குதலை மெய்பெறு மழலை
சிந்துபு சின்னீர் ஐம்படை நனைப்ப
அற்றங் காவாச் சுற்றுடைப் பூந்துகில்
தொடுத்தமணிக் கோவை உடுப்பொடு துயல்வரத்
தளர்நடை தாங்காக் கிளர்பூட் புதல்வரைப்
பொலந்தேர் மீமிசைப் புகர்முக வேழத்
திலங்குதொடி நல்லார் சிலர்நின் றேற்றி
ஆலமர் செல்வன் மகன்விழாக் கால்கோள்
காண்மி னோவெனக் கண்டுநிற் குநரும்
விராடன் பேரூர் விசயனும் பேடியைக்
காணிய சூழ்ந்த கம்பலை மாக்களின்
மணிமே கலைதனை வந்துபுறஞ் சுற்றி
அணிமை தோற்றத் தருந்தவப் படுத்திய
தாயோ கொடியள் தகவிலள் ஈங்கிவள்
மாமலர் கொய்ய மலர்வனந் தான்புகின்
நல்லிள வன்னம் நாணு தாங்குள
வல்லுந கொல்லோ மடந்தை தன்னடை
மாமயி லாங்குள வந்துமுன் நிற்பன
சாயல்கற் பனகொலோ தையல் தன்னுடன்
பைங்கிளி தாமுள பாவைதன் கிளவிக்
கெஞ்சல கொல்லோ இசையுந வல்ல
என்றிவை சொல்லி யாவரும் இனைந்துகச்
செந்தளிர்ச் சேவடி நிலம்வடு வுறுமல்
குரவமும் மரவமுங் குருந்துங் கொன்றையும்
திலகமும் வகுளமுஞ் செங்கால் வெட்சியும்
நரந்தமும் நாகமும் பரந்தலர் புன்னையும்

பிடவமுந் தளவமும் முடமுட் டாழையும்
குடசமும் வெதிரமுங் கொழுங்கா லசோகமும்
செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண் பகமும்
எரிமல ரிலவமும் விரிமலர் பரப்பி
வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே
ஒப்பத் தோன்றிய உவவனந் தன்னைத்
தொழுதனள் காட்டிய சுதமதி தன்னொடு
மலர்கொய்யப் புகுந்தனள் மணிமே கலையென்.

## ௩. மலர்வனம் புக்க காதை

### உரை

### மணிமேகலை தந்தையையும் தாயையும் நினைந்து வருந்துதல்

க – ௩ : வயந்த..........வெதுப்ப

(இ - ள்.) மாமலர் நாற்றம் போல் - பெரிய நாளரும்பு மலர்ந்துழி அதன்கண் மணம் தோன்றுமாறு போலே; மணிமேகலைக்கு ஏது நிகழ்ச்சி எதிர்ந்துளது ஆதலின் - மணிமேகலை முற்பிறப்பிலே செய்த வினைத்தொகுதி அவளுள்ளே முதிர்ந்து தன் பயனை ஊட்டுதற்கியன்ற செவ்வி பெற்றிருத்தலாலே; வயந்தமாலைக்கு மாதவி உரைத்த - சித்திராபதியின் ஏவலாலே தனக்கு ஊரலர் உரைத்துத் தெருட்டவந்த வயந்தமாலைக்கு மறுமொழியாக மாதவி கூறிய; உயங்கு நோய் வருத்தத்து உரைமுன் தோன்றி - வாடுதற்குக் காரணமான நோயாகிய துன்பக்கிளவியை நிலைக்களனாகக் கொண்டு பிறந்து; தந்தையும் தாயும் தாம் நனி உழந்த வெம்துயர் இடும்பை செவியகம் வெதுப்ப - தன் தந்தையும் தாயுமாகிய கோவலனும் கண்ணகியும் பெரிதும் நுகர்ந்த வெவ்விய துன்பத்தோடு கூடிய தீச் சொல்லாகிய நெருப்பு அவளுடைய செவியினுட் புகுந்து நெஞ்சத்தைச் சுடா நிற்றலாலே, என்க.

(வி - ம்.) வயந்தமாலைக்கு மாதவியுரைத்த உரை. உயங்குநோய் வருத்தத்து உரை எனத் தனித்தனி இயையும். உயங்குதல் - வாடுதல். நோயாகிய வருத்தத்தைத் தன் பொருளாகக் கொண்ட உரையை ஒற்றுமை கருதி வருத்தத்து உரை என்றார். வருத்தத்தின் மிகுதிதோன்ற உயங்கு நோய்வருத்தம் என ஒரு பொருட்பலசொல் அடுக்கி அடை புணர்த்தார்.

பருவமெய்தி மலரும் மலரின்கண் நாற்றம் தோன்றுதல் முதிர்ந்து செவ்விபெற்ற வினையினின்றும் அதன் பயனாகிய நுகர்ச்சி தோன்றுதற்கு உவமை. ஊழ்வினை விளைவினை ஏது நிகழ்ச்சி எதிர்தல் என்பது பௌத்த நூல் வழக்கு.

மாதவி முன்னைக் காதையில் உரைத்த உயங்கு நோய் வருத்தத்து உரை என்றது "அவள் காதலன் உற்ற கடுந்துயர் கேட்டுப்போதல் செய்யா வுயிரொடு நின்றேன்" என்றும், "கணவற்குற்ற கடுந்துயர் பொறுஅள்...கூந்தல் புதைப்பத்...திருகி எரியூட்டிய பத்தினி" என்றும் கூறிய உரைகளை என்க. இவை செவியுட்புகுந்து அவள் தந்தைதாயர் பட்ட துயரமெல்லாம் நினைப்பித்து நெஞ்சத்தை வெதுப்பின என்றவாறு.

## மணிமேகலை கண்ணீர் உகுத்தலும் மாதவி செயலும்

எ - கரு : காதல்..........என்றலும்

(இ - ள்.) காரிகை காதல் நெஞ்சம் கலங்கி - அம் மணிமேகலை அவர்பாற் கொண்டுள்ள அன்பு காரணமாகப் பெரிதும் நெஞ்சம் கலங்கி உருகுதலாலே; மாதர் செங்கண் - அவளுடைய காதல் கெழுமிய சிவந்த கண்கள்; புலம்பு நீர் - துன்பக் கண்ணீரைப் பெருக்கி; வரிவனப்பு அழித்து - தம்பாற் படர்ந்த செவ்வரிகளை மறைத்து; உருட்டி போதி அவிழ் நறுமலர் இலங்கு இதழ் மாலையை நீராட்ட - உகுத்து அவள் தொடுக்கின்ற கட்டவிழ்ந்து மலராநின்ற நறிய மலரினது விளங்குகின்ற இதழ் களையுடைய மாலையின்மேல் வீழ்த்தி அதனை நனைத்து வாலாமைப் படுத்தி விட்டமையாலே; மாதவி மணிமேகலை முகம் நோக்கி-இது கண்ட மாதவி மணிமேகலையின் முகத்தைப் பரிவுடன் நோக்கி; தாமரை தண்மதி சேர்ந்தது போலக் காமர் செங்கையின் கண்ணீர் மாற்றி - தாமரை மலர் ஒன்று குளிர்ந்த திங்கள் மண்டிலத்தைத் தீண்டியது போன்று தன் அழகிய கையை அவள் முகத்திலே சேர்த்துச் சிவந்த அக் கையினாலே அவள் கண்ணீரைத் துடைத்துவிட்டுக் கூறுபவள்; தூநீர் மாலை தூத்தகை இழந்தது - அன்புடையோய்! தூய நீர்மையையுடைய இம் மலர் மாலை நின் கண்ணீர் பட்டுத் தனது தூய தன்மையை இழந்துவிட்டது; நீயே நிகர் மலர் கொணர்வாய் - இம் மாலை நம்மிறை வழிபாட்டிற்காகாதாகலின் இப்பொழுது நீயே மலர் வனத்திற் சென்று புதிய மலர்களைக் கொய்து கொணர்வாயாக! என்று கூறுகிற்ப; என்க.

(வி - ம்.) மணிமேகலைக்கு ஏதுநிகழ்ச்சி எதிர்ந்துளதாகலின் உரை வாயிலாய் இடும்பை தோன்றி அவளது செவியகம் வெதுப்ப அதனால் அக் காரிகை நெஞ்சு கலங்க அவள் செங்கண் புலம்பு நீர் பெருக்கி வரி வனப்பு அழித்து உருட்டி மாலையில் இட்டு நீராட்ட அது கண்ட மாதவி மணிமேகலை முகம் நோக்கித் தன் செங்கையின் கண்ணீர் மாற்றிக் கூறு பவள் மாலை இழந்தது நீயே நிகர் மலர் கொணர்வாய் என்று கூறலும் என்று இயைத்திடுக. இப் பகுதி பெரிதும் அவலச் சுவை பயத்தலுணர்க. காரிகை: மணிமேகலை. மாதர்-அழகு; காதல் எனினுமாம். வரி-செவ் வரி. அதன் வனப்பை அழித்து என்றது கண்ணீர் பெருகி அவற்றை மறைத்தலை. புலம்பு நீர் - துன்பக்கண்ணீர். வனப்பு-அழகு. இட்டு நீராட்டல் என்பதனை ஒரு சொன்னீர்மைத்தாகக் கோடலுமாம். தாமரை மாதவி கைக்கும் மதி, மணிமேகலை முகத்திற்கும் உவமைகள். தூநீர் - தூயதன்மை. தூத்தகை என்பதுமது. நிகர்மலர், புதுமலர். ஒளி மலர் என்பாருமுளர்.

சுதமதியின் பரிவுரைகள்

கசு - உரு : மதுமலர்............நின்றிடின்

(இ - ள்.) மதுமலர்க் குழலியொடு மாமலர் தொடுக்கும் சுதமதி கேட்டுத் துயரொடுங் கூறும்-தேன் பொருந்திய மலரணி தற்கியன்ற கூந்தலையுடைய மணிமேகலையோடே சிறந்த மலர்மாலை தொடுத்துக் கொண்டிருந்த சுதமதி யென்னும் பெயரையுடைய மற்றொரு பிக்குணி மாதவி கூறிய மொழியைக் கேட்டவளவிலே மணிமேகலை திறத்திலே துன்பமுடைய நெஞ்சத்தோடே மாதவியை நோக்கிக் கூறுவாள்; குரவர்க்குற்ற கொடுந்துயர் கேட்டு - அன்னாய்! நின்னுடைய மொழி வாயிலாகவே தன் தந்தையும் தாயுமாகிய இருமுது குரவர்க்கும் ஊழ்வினை உருத்து வந்தூட்டுதலானே வந்தெய்திய கொடிய துன்பத்தைச் செவி யேற்று அவரை நினைந்து ஆருத பெருந்துயரம் எண்ணுந் தோறும் எண்ணுந்தோறும் எய்தாநின்ற; மணிமேகலை தன் மதிமுகந் தன்னுள் அணிதிகழ் நீலத்து ஆய் மலர் ஓட்டிய கடை மணி உகுநீர் கண்டனன் ஆயின் - இம் மணிமேகலையின் நிறை மதி போன்ற திருமுகத்தின்கண் ணமைந்த அழகு விளங்குகின்ற நீலத்தின் ஆராய்தற்கியன்ற மலரின் அழகைப் புறமிடச் செய்த கண்ணின் மணியின் கடைப்பகுதியினின்றும் துளித்த துன்பக் கண்ணீரைக் கண்டுளனாயின்; காமன் படை இட்டு நடுங்கும்- காமவேள் தன் கருப்பு வில்லும் அருப்புக் கணையுமாகிய படைக் கலன்களை நிலத்திலே எறிந்து விட்டு ஆற்றொணுத் துயரத்தாலே நடுங்குவான் அல்லனே; பாவையை - அத்தகைய பேரழகு படைத்த பாவை போன்ற இவள் மலர் கொய்யப் போகும் வழியிலே; ஆடவர் கண்டால் அகறலும் உண்டோ-ஆண்மக்கள் கண்டக்கால் அக் காட்சியைவிட்டு அப்பாற் போதலும் உளதாகுமோ?; பெற்றியின் நின்றிடின் பேடியர் அன்றோ-கண்ட பின் மயங்காமல் தமக்கு இயல்பான அறிவோடு நின்றால் அவர் பேடியர் ஆதல் ஒருதலையன்றோ என்றாள் என்க.

(வி - ம்.) சுதமதியின் வரலாற்றினை அடுத்து அவளே கூறக்கேட் போம். இவள் மணிமேகலைபால் தாய்மையன்பு கொண்டிருப்பவள் ஆதலின், அவளை மலர்கொய்யப் போம்படி மாதவி பணித்தமையால் அங்ஙனம் போனால் அவட்குத் தீமையுண்டாகும் என்னுங் கருத்தால் துயருற்றுக் கூறுகின்றாள் என்க. அவளுடைய பேரழகே அவட்குத் தீமைபயக்கும் என்பாள் அவ்வழகினை இவ்வாறு விதந்தோதுகின்றாள். காமனுக்கு மகளிரே சேனையாகலின் அச்சேனைக்கு இவள் தலைவியாதலின் அவள் துன்பக்கண்ணீரைக்கண்டுகாமன்பொறுனப் படையிட்டுநடுங்கு வான் என்றவாறு. இவளைக் கண்ட ஆடவர் எத்தகையோராயினும் மயங் காதிரார் என்பதனை, பெற்றியின் நின்றிடின் அவர் பேடியராகத் தாமிருப்பர் என்றாள். இவ்வாற்றால் இச் சுதமதி மணிமேகலையின்

பேரழகை நுண்ணிதில் கூறிக்காட்டுதல் பெரிதும் இலக்கிய இன்பம் நல்குதல் உணர்க.

மகளிர் யாண்டும் தனியே செல்லுதல் தகாது என்பதற்குச் சுதமதி தன்னையே எடுத்துக் காட்டாகக் காட்டல்

உசு - ரூ௫ : ஆங்ஙனம்.........வருவோன்

(இ - ள்.) ஆங்ஙனம் அன்றியும் - அவ்வாறன்றியும் (இவள் தனித்தலர் கொய்யப் போகாமைக்குப் பிறிது காரணமும் உளது அது என் வரலாறு கூறவே நீ அறிந்து கொள்வாய் ஆதலின்) அணியிழை ஈங்கு யான் இந்நகரத்துவரும் காரணம் கேளாய் - அணியிழாய்! இங்கிருக்கும் யான் இப் பூம்புகார் நகரத்திற்கு வர நேர்ந்த காரணத்தைக் கூறுவல் கேட்பாயாக! பாராவாரம் பல்வளம் பழுநிய காராளர் சண்பையின் கௌசிகன் என்போன் - பல்வேறு கடல்படுபொருள் வளமும் நிரம்பிய காராளர் என்னும் வகுப்பினர் மிக்குவாழ்கின்ற சண்பை என்னும் நகரத்தே குடியிருப்புடைய கௌசிகன் என்னும் பெயரையுடைய; இருபிறப்பாளன் ஒரு மகள் உள்ளேன் - பார்ப்பனனுக்கு ஒரே மகளாயிருந்த யான்; ஓரா நெஞ்சமொடு ஒருதனி அஞ்சேன் ஆராமத்திடை அலர் கொய்வேன்றனை - யாதொன்றனையும் ஆராய்ந்தறியாத என் பேதை நெஞ்சத்தால் மிகவும் தனிமையுடையேனாய்ச் சிறிதும் அஞ்சாமல் ஒரு மலர்ப்பொழிலுட் புகுந்து மலர் கொய்கின்ற என்னை; மாருத வேகன் என்பான் ஓர் விஞ்சையன் - மாருத வேகன் என்னும் பெயரையுடையான் ஒரு விச்சாதரன்; திருவிழை மூதூர் தேவர் கோற்கு எடுத்த பெருவிழா காணும் பெற்றியின் வருவோன் - திருமகள் பெரிதும் விரும்புமியல்புடைய இப் பழைய நகரத்தின்கண் அவ்வாண்டைக்கு நிகழ்த்தும் பெரிய இந்திரவிழாவைக் கண்டு களிக்கும் கருத்தொடு விசும்பின் வழியே வருபவன்; தாரன் மாலையன் தமனியப் பூணினன் பாரோர் காணாப் பலர் தொழும் படிமையன் - அவன்றானும் எத்தகையனோவெனின் தாரும் மாலையும் உடையனும் பொற் கலன்கள் பூண்டவனும் இந்நிலவுலகத்தார் கண்டறியாததும் கண்டோர் பலரும் கை தொழத் தகுந்ததுமாகிய உருவச் சிறப்புமுடையன் காண்!; என் எடுத்தனன் கொண்டு எழுந்தனன் விசும்பின் படுத்தனன் - அவன் என்னைப் பற்றி எடுத்துக் கொண்டு வானத்திலே பறந்து போயினன்; ஆங்கு அவன் பான்மையேன் ஆயினேன் - அவ் வானத்தின்கண் யானும் அவன் கருதியாங்கியைந் தொழுகலானேன்காண்! ஆங்கு அவன் ஈங்கு எனை கண்மாறி அகன்று - ஆங்கு அவ்வாறு

செய்த அவ் விச்சாதரன் இந் நகரத்திலே எனைக் கைவிட்டுச் சிறிதும் கண்ணோட்டமின்றிப் பிரிந்து; தன்பதி நெட்டிடை ஆயினும் நீங்கினன் - தன்னூர் மிகவும் நீண்ட வழியுடையதாக இருப்பினும் என்னைச் சிறிதும் நினையாதவனாய்த் தான் மட்டுமே போயொழிந்தான் காண்! என்றாள் என்க.

(வி - ம்.) ஆங்ஙன மன்றியும் - என்றது அவ்வாறன்றியும் வேறு காரணங்களாலும் அவட்குத் தீமை வரலாம் என்பதுபட நின்றது. இது பாட்டிடைவைத்த குறிப்பாற் போந்த பொருள். இனிஆங்ஙனமன்றியும் என்பதனுடன் சஉ ஆம் அடிக்கட்கிடந்த "மணிமேகலைதான் தனித் தலர் கொய்யும் தகைமையள் அல்லள்" அதற்கு எடுத்துக்காட்டாக (உசு) "அணியிழை கேள்" என இயைத்துப் பொருள் கூறினும் அமையும். என்னை? "அகன்று பொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும் இயன்று பொருள் முடியத் தந்தனர் உணர்த்தல் மாட்டு என மொழிப பாட்டியல் வழக்கின்" என்பது ஓத்தாகலின் என்க (தொல்-செய்யு - உகO). பாரா வாரம் - கடல். காராளர் - ஒரு சாதியினர்: பூவைசியர்; அவராவார் வணிகருள் உழுதுண்போர். இவர் உழுதுண்ணலே அன்றிக் கலத்தினுஞ் சென்று பொருளீட்டுவோராதலின், பாராவாரம் பல்வளம் பழுநிய காரா ளர் சண்பை என்றார். சண்பை சீகாழிநகர்போலும். "அஞ்சுவ தஞ்சல் அறிவார் தொழில்" என்பதை ஓரா நெஞ்சமொடு என்றவாறு. ஆராமம்-மலர்ப்பொழில். பூம்புகார்என்பது தோன்றத் திருவிழைமூதூர் என்றாள். பெருவிழா என்றது - இந்திரவிழாவை. இந்திரவிழவிற்கு விச்சாதரரும் வருகுவர் என்பதை, சிலப்பதிகாரத்தில் கடலாடு காதையானும், (க-ஙச வெள்ளி......காண்போன்) இந் நூலிற் காயசண்டிகை வரலாற்று னும் உணர்க. விஞ்சையன்-விச்சாதரன். படிமையன் - உருவமுடை யோன். அவன் பான்மையேன் ஆயினேன் என்றது இடக்கரடக்கு. கண் மாறி, கண்ணோட்டமின்றி-இதற்கு வேறு கூறுவாருமுளர். அதற்கு எடுத்துக்காட்டும் காட்டுவர். ஆயினும் ஈண்டைக்கு அவ்வுரை பொருந் தாமை நுண்ணுணர்வாற் கண்டுகொள்க. "நெட்டிடையாயினும் நீங்கினன்" என மாறுக.

## இதுவுமது

**சஉ - சஙு : பணி.........அல்லள்**

(இ - ள்.) மணிப்பூங்கொம்பர் மணிமேகலை தான் - இக் காரணங்களாலே அழகிய மலர்க் கொடி போன்று பருவம் கெழுமிய நம் மணிமேகலை நல்லாள்; தனித்து அலர் கொய்யும் தகைமையள் அல்லள் - நீ ஏவியாங்குத் தமியளாய்ச் சென்று மலர்வனம் புக்கு மலர் கொய்து வருந்தன்மையுடையள் அல்லள் காண் என்றாள் என்க.

(வி - ம்.) இக்காரணங்களாலே தனித்து அலர் கொய்யப் போதல் கூடாது என்பது கருத்து.

மலர்ப் பொழில்களும் அவற்றின் சிறப்பியல்பும்

௬௪ - ௩௮: பன்மலர்.........எய்தார்

(இ - ள்.) பல் மலர் அடுக்கிய நல்மரப் பந்தர் இலவந்திகையின் எயில்புறம் போகின் உலக மன்னவன் உழையோர் ஆங்குளர் - பன்னிறமுடைய மலர்க் கொடிகளை நிரல்பட நட்டுப் படரவிட்ட நல்ல மரத்தாலியன்ற பூம்பந்தர்களையுடைய இலவந்திகையினது மதிலின் புறத்தே சென்றக்கால் உலகாள் மன்னனுடைய பணி மாக்கள் ஆங்கிருப்பர் ஆதலின் அந்நெறிச் செல்லல் தகாதுகாண் !; விண்ணவர் கோமான் விழாக்கொள் நல் நாள் வானவர் அல்லது மன்னவர் விழையார் - இந்திரனுக்கு விழா நிகழ்த்தும் இருபத்தெட்டு நல்ல நாளினும் இந்திரன்சுற்றத்தாராகிய வானுலகத்துத்தேவர் வந்து தங்குதலன்றி நிலவுலகத்து மாந்தர் உட்புக விரும்பார் என்பதும் ; பாடு வண்டு இமிரா பல் மரம் யாவையும்-இசை பாடும் வண்டுகள் தாமும் முரன்று மூசுதலில்லாத பல்வேறு வகைப்பட்ட மரங்களிலெல்லாம் ; வாடா மாமலர் மாலைகள் தூக்கலின் - வானவர் நாட்டுக் கற்பக மரங்களினின்றும் அத் தேவர்கள் கொணர்ந்த வாடாத சிறப்புடைய மலர்களாற் றொடுக்கப்பட்ட மாலைகளைத் தூங்கவிட்டிருத்தலானே; கை பெய் பாசத்துப் பூதம் காக்குமென்று - அங்கெல்லாம் கையிடத்தே கயிற்றையுடைய பூதம் காவல் செய்யும் என்று ; உணர்ந்தோர் உய்யானத்திடைச் செல்லார் - அறிந்த மாந்தர் அரசன் உரிமையோடும் ஆடுதற்கியன்ற உய்யானத்தின் வழியே செல்வாரல்லர், இவையிரண்டு பொழிலும் இங்ஙனமாக ; வெங்கதிர் வெம்மையின் விரிசிறை இழந்த-கதிரவனை அணுகப் பறத்தலானே அவன் வெம்மையாலே விரிந்த சிறகை இழந்து; சம்பாதியிருந்த சம்பாதி வனமும்-சம்பாதி யென்னுங் கழுகரசன் தவமிருந்தமையாலே சம்பாதி வனம் என்று கூறப்படுகின்ற மலர்வனமும்; ஆங்கு - அவ்வாறே ; தவா நீர்க் காவிரிப்பாவை தன் தாதை கவேரன் இருந்த கவேர வனமும் - கெடாத நீரையுடைய காவிரியாகிய நீர்த்தெய்வத்தின் தந்தையாகிய கவேரன் என்னும் மன்னன் தவமிருந்தமையாலே கவேர வனம் என்று கூறப்படுகின்ற மலர்வனமும் ; மூப்புடை முதுமைய - ஏனைய மலர் வனங்களினுங் காட்டில் காலத்தால் மூப்புடைய பழைமையுடையனவாதலால் ; தாக்கு அணங்கு உடைய - அணைமக்களைத் தீண்டி வருத்தும் தெய்வங்களைத் தம்பாலுடையன காண் ; யாப்புடைத்தாக அறிந்தோர் எய்தார் - இவ்வுலகுரையை உறுதியுடையதாக வுணர்ந்தவர் யாரும் அவ்விரண்டினூடும் புகுதார் காண் !; என்றாள் என்க.

(வி - ம்.) பல்வேறு மணமும் நிறமுமுடைய மலர்க்கொடிகளை நிரல் படவைத்துப் படரவிட்ட மரப்பந்தர் என்க. இவற்றைப் பூம்பந்தர் என்றது மரநிழல் என்பாருமுளர். நன்மரம் என்றது பந்தரிட்ட மரத்தை. இலவந்திகை-இயந்திரவாவி; அஃதாவது நீரை வேண்டும் பொழுது நிரப்பவும் ஏனையபொழுது வடித்துவிடவும் பொறியமைத்த வாவி. இஃது அரசனும் உரிமை மகளிரும் நாடோறும் நீராடற்குரியதாம். இதனியல்பை "இலவந்திகை - நீராவியைச் சூழ்ந்த வயந்தச் சோலை; அஃது அரசனும் உரிமையும் ஆடும் காவற் சோலை" என வரும் அடியார்க்கு நல்லார் உரையானும் (சிலப் - கo: ௩o - ௩க) "நிறைக்குறின் நிறைத்துப் போக்குறின் போக்கும் பொறிப்படை யமைந்த பொங்கில வந்திகை" எனவரும் பெருங்கதையானும் (க - சo: ௩கக-உ) உணர்க. உலக மன்னவன் என்றது - சோழமன்னனை. உழையோர்-பணிமாக்கள். உழையோரிருத்தலான் அங்குப் போதல் கூடாது என்பது குறிப்பு.

விழாக்கோள் ஈரேழ் நாளும் விண்ணகர் வறிதே கிடப்ப அமரர் எல்லாம் ஈங்கு வந்து உய்யானத்திடை இருத்தலின் அங்கு அவர் கொணர்ந்த கற்பகமலர்மாலை மரந்தொறும் தூக்கப்பட்டிருக்கும். மேலும் பூதங்காக்கும் ஆதலால் உணர்ந்தோர் செல்லார் என்றவாறு. இனிச் சம்பாதிவனமும் கவேரவனமும் முதுமைய அணங்குடைய ஆதலின் அவற்றினுள்ளும் போதல் கூடாது. யாப்புடைத்தாக அறிந்தோர் என்றது, (அணங்குடைய என்னும் இவ்வுலகுரையை) உறுதியுடையதாக அறிந்தோர் என்றவாறு.

சம்பாதி - சடாயுவின் உடன்பிறந்தவன். இவன் வானுலகம் புகப் பறந்து போனபொழுது கதிரவன் சினத்திற்கு ஆளாகிச் சிறகு தீயப் பெற்றான். இதனை,

"ஆயுயர் உம்பர் நாடு காண்டும் என்றறிவு தள்ளி
மீயுயர் விசும்பி னூடு மேக்குறச் செல்லும் வேலை
காய்கதிர்க் கடவுட் டேரைக் கண்ணுற்றும் கண்ணு றாமுன்
தீயையுந் தீக்குந் தெய்வச் செங்கதிர்ச் செல்வன் சீறி
.....................................................
வெந்துமெய் யிறகு தீந்து விழுந்தனென் விளிகி லாதேன்"
(கம்பரா - சம்பா - ருசூ-ரு)

எனவரும் அச்சம்பாதி கூற்றானே யுணர்க.

## உவவனமும் பளிக்கறையும்

ருகூ - சூஅ: அருளும்.........கழியினும்

(இ - ள்.) அருளும் அன்பும் ஆர் உயிர் ஓம்பும் ஒரு பெரும் பூட்கையும் ஒழியா நோன்பின்-இனி இவையிற்றைத்தவிர ஆருயிர்களின்பால் பேரருளும் அன்பும் அவ்வாருயிரைப் பாதுகாக்க வேண்டும் என்னும் ஒப்பற்ற பெரிய கோட்பாடும் ஒரு பொழுதும் தன்னைவிட்டு நீங்காத தவத்தினை

யுடைய; பகவனது ஆணையின் பல் மரம் பூக்கும் உவவனம் என்பது ஒன்றுண்டு - புத்த பெருமானுடைய கட்டளையினாலே பருவமல்லாத பொழுதும் மலருகின்ற சிறப்பினையுடைய உவவனம் என்னும் ஒரு மலர்ப் பொழிலும் உளதுகாண்!; அதன் உள்ளது - அவ் வுவ வனத்தின் உள்ளிடத்ததாம்; விளிப்பு அறை போகாது மெய்புறத்திடும் பளிக்கு அறை மண்டபம் உண்டு - தன்னுட் புகுந்தவர் எழுப்பும் ஒலி வெளிப்படாது உருவத்தை மட்டும் புறத்தே காட்டும் பளிங்கினாலியன்ற அறையினையுடைய மண்டபம் ஒன்று உளது காண்!; அதன் உள்ளது - அம் மண்டபத்தின் உள்ளிடத்ததாய்; தூநிறமாமணிச் சுடர் ஒளி விரிந்த தாமரைப் பீடிகைதான் உண்டு - தூயநிறமுடைய மாணிக்க மணியின் சுடர் போலச் சுடர்விடுகின்ற ஒளியோடு மலர்ந்த தாமரை மலர் வடிவிற்றாகிய மேடையொன்றும் உளதுகாண்; ஆங்கு இடின் - அம் மேடையின் மேலிட்டால்; அரும்பு அவிழ் செய்யும் - அரும்புகள் நன்கு மலர்தலைச் செய்யும்; தொல் யாண்டு கழியினும் மலர்ந்தன வாடா சுரும்பினம் மூசா - தொன்று தொட்டுத் தோன்றி மறையுமியல்புடைய யாண்டுகள் பல கழிந்தாலும் மலர்ந்த அம் மலர்கள் வாட மாட்டா அவையிற் றில் வண்டினமும் மொய்க்கமாட்டா காண்! என்றாள் என்க.

(வி - ம்.) அருள் - எல்லாவுயிரிடத்தும் பரந்து பட்டுச் செல்லும் நெஞ்சநெகிழ்ச்சி. அன்பு-தொடர்புடையார்மாட்டுச் செல்லும் நெஞ்ச நெகிழ்ச்சி. பகவனுக்கு அணுக்கமில்லாதனவும் அணுக்கமுடையனவு மாக உயிர்கள் இருவகைப்படுதலின் இரண்டும் கூறினள். பூட்கை-கொள்கை. நோன்பு-தவம். பகவன் - புத்தர். ஆணையின் என்றமையால் மலரும் பருவமல்லாத போதும் மலரும் என்றாளாயிற்று. உள்ளது - உள்ளிடத்ததாய்; மண்டபம் ஒன்றுண்டு. அதனகத்ததாய்ப் பீடிகை ஒன்றும் உளது என்க. விளிப்பாகிய அறை: இருபெயரொட்டு. தூநிறம்-தூய நிறம். ஆங்கு - அப் பீடிகையில். அரும்பு மலரும் மலர்ந்தவை வாடா மூசப்படா. தொல்யாண்டு பொருட்கேற்ற அடை. தொன்று தொட்டுத் தோன்றி மறையும் யாண்டு என்க.

### இதுவுமது

#### சுக - எக : மறந்தேன்..........அதுதான்

(இ - ள்.) மாதவி அதன் திறம் மறந்தேன் - மாதவி நங்காய்! அப் பீடிகையின் தன்மை யொன்றனைக் கூற மறந் தொழிந்தேன்; கேளாய் - அதனையும் கூறுவேன் கேள்; ஓர் தெய்வம் கருத்திடை வைத்துக் கடம் பூண்டோர் ஆங்கு அவர் அடிக்கு இடின் அவர் அடிதான உறும் - யாதானும் ஒரு தெய்வத்தைத் தம் நெஞ்சத்தே திண்ணிதாக நினைந்து அத் தெய்வத்தை வழிபாடு செய்தலையே தங்கடமையாகக் கொண்

டனர் அம் மேடையின்மேல் அத் தெய்வத்தின் திருவடிக்கிடு வதாக நினைத்து மலரை இட்டால் அஃது அவ்விடத்தி னின்றும் மறைந்து அத் தெய்வத்தின் திருவடியைச் சென்று சேர்வதாம்; நினைப்பிலராய் - இடின் - யாரேனும் யாதொரு தெய்வத்தையும் நினைத்தலின்றி அதன்மேல் மலரை வறிதே இடுவாராயின்; யாங்கணும் நீங்காது - அம் மலர் யாண்டும் போகாமல் அம் மேடையின் மேலேயே கிடவாநிற்கும்; ஈங்கு இதன் காரணம் என்னை என்றியேல் - இம் மேடையி லிவ்வாறு நிகழும் அற்புத நிகழ்ச்சிக்குக் காரணந்தான் என்னையோ? என்று வினவுவாயாயின் கூறுவேன் கேள். அதுதான் - அத் தாமரைப் பீடிகை தானும்; பண்டு மயன் - முன்பொரு காலத்தே அமரர் தச்சனாகிய மயன் என்பவன்; சிந்தை இன்றியும் செய்வினை உறும் எனும் வெந்திறல் நோன்பிகள் விழுமங் கொள்ளவும் - ஒருவன் இதனைச் செய்யவேண்டும் என்னும் நினைவின்றியே செய்ததொரு வினையின் பயனும் அவனுக்கு வந்துறுமல் வீண் போகாது என்னும் கோட்பாடுடைய வெவ்விய ஆற்றலுடைய தவத்தோர் தம் கொள்கை தவறென்று தமது அறியாமைக்கு வருந்த வேண்டும் என்றும்; சிந்தையின்று எனின் செய்வினை யாவதும் எய்தாது என்போர்க்கு ஏதுவாகவும் - தான் செய்யும் வினையின்கண் செய்யவேண்டும் என்னும் தன்முனைப்பு இல்லை யாயவழி ஒருவன் செய்த வினையின் பயன் அவனுக்குச் சிறிதேனும் வந்துறுது என்னும் கொள்கையுடையவர்க்கு அக் கொள்கையைச் சாதிக்குமோர் ஏதுவாக வேண்டும் என்றும் கருதி; பயன்கெழு மாமலர் இட்டுக்காட்ட இழைத்த மரபினது - இருவழியும் இவ்வாறு பயன்தரும் சிறந்த மலரை இட்டு மெய்யறிவு காட்டற் பொருட்டே இயற்றிய முறைமையினை உடைத்தாகலான்; அதுதான் - அப் பீடிகைதானும் இவ்வற்புதம் நிகழ்த்துகின்றது காண் என்றாள் என்க.

(வி - ம்.) அதன்திறம் - அப் பீடிகையின் சிறப்பு. கடம்-கடமை. ஒரு தெய்வத்தைக் கருத்திடைவைத்து என்றது ஒரு தெய்வத்தை வழி படுதெய்வமாக மதித்து என்றவாறு. அவர்-அத்தெய்வம். இதன் காரணம் இங்ஙனம் நிகழ்கின்ற அற்புதச் செயலுக்கான காரணம். வெந்திறல் நோன்பிகள் என்றது இகழ்ச்சி. அவராவார் ஆருகதர். அவர் நினையாது வினைசெய்யினும் அவ்வினையும் செய்தவனுக்குத் தன் பயனை ஊட்டாது கழியாதெனும் கோட்பாடுடையர். அதனை,

"ஒத்த வன்றனை யுறுபகை யேயெனக்
குத்தி னுனுக்கும் கொலைவினை யில்லெனப்
புத்த னீருரைத் தீரங்கோர் புற்கலம்
செத்த வாறது சிந்திக்கற் பாலதே"

எனவரும் நீலகேசியானும் அதனுரையானும் உணர்க. (நீல - இசை) மற்றிச்செய்யுளே, செய்வினை சிந்தையின்றெனின் யாவதும் எய்தாதென் போர் பௌத்தர் என்பதற்கும் எடுத்துக்காட்டாதலறிக.

ஆருகதர் உடலை வருத்தும் கடுநோன்புடையராதலின் அவரை வெந்திறல் நோன்பிகள் என்றிகழ்ந்தபடியாம். அது-அப் பீடிகை.

## மணிமேகலைக்குத் துணையாகச் சுதமதியும் செல்லுதல்

அ௦ - அரு : அவ்வனம்..........செல்வுழி இ

(இ - ள்.) அணியிழை நின்மகள் அவ்வனம் அல்லது செவ்வனம் செல்லும் செம்மைதான் இலள்-மகளிர்க்கு அணிகலன் போல்பவளாகிய நின்மகளாகிய மணிமேகலை மலர் கொய்தற்குச் செல்வதாயின் அவ் வுவவனத்திற்கு நேராகச் செல்வதல்லது பிற வனத்திற்குச் செல்லும் தகுதியுடையாள் அல்லள்; மாமலர் கொய்ய-சிறந்த மலரைக் கொய்துவருதற்கு; மணிமேகலையொடு அணியிழை நல்லாய் - உவவனத்திற்கும் அவள் தமியளாய்ப் போகவறியாள் ஆகலின் அவளோடு மாதவி நல்லாய்; யானும் போவல் என்று - யானும் துணையாகச் செல்வேன் காண்! என்று தானே முற்பட்டு எழுந்து; அணிப் பூங்கொம்பர் அவளொடும் கூடி மணித்தேர் வீதியில் சுதமதி செல்வுழி - அழகிய பூங்கொம்பு போன்ற அம் மணிமேகலையோடு கூடி மணி யொலிக்கும் தேர்க ளியங்கும் பெருந் தெருவின்மேல் சுதமதி அவட்கு வழி காட்டிச் செல்லுகின்ற பொழுது என்க.

(வி - ம்.) அவ்வனம்-அந்த உவவனம். அணியிழையாகிய நின்மகள் என்க. செவ்வனம்-நேர். செம்மை-தகுதி. கொம்பர் போன்றவளோடு கூடி என்க.

## களிமகனும் சமணத்துறவியும்

அசு - கூக : சிமிலி.........கேண்மோ

(இ - ள்.) சிமிலிக் கரண்டையன் நுழை கோல் பிரம்பினன்- உறியிலிட்டுத் தூக்கிய நீர்க்கரகத்தையுடையவனும் நுண்ணிதாகத் திரண்ட பிரம்பைப் பற்றியவனும்; தவல் அருஞ் சிறப்பின அரர்ந்தாணத்துளோன் - கேடில்லாத சிறப்பினையுடைய அரா் தாணம் என்னும் அருகன் கோயிலில் உறைபவனும் ஆகிய அமணசமயத்துத் துறவியொருவன்; நாணமும் உடையும் நன்கனம் நீத்து - நாணத்தையும் ஆடையையும் துவரத்துறந்து; காணா உயிர்க்கும் கையற்று ஏங்கி - கண்ணுக்குப் புலப்படாத நுண்ணுயிர்க்கும் தன்னியக்கத்தால் இன்னல் உண்டாமோ என்று நிலத்தை மிதிக்கவும் அஞ்சிச் செயலறவுடையனாய் ஏக்கமுற்று; உண்ணாநோன்பொடு உயவல் யானையின் மண்ணா

மேனியன் வருவோன் றன்னை - உண்ணா நோன்பினாலே பசியால் வருந்தும் யானை போலக் கழுவாத உடம்பையுடையனாய் அவ் வீதியின்கண் வருபவனை ; (௧௦௩) ஓர் களி மகன் — கள்ளுண்டு களித்தானொரு கயவன் ; வந்தீர் அடிகள் நும்மடி தொழுதேன் - எதிர்நின்று மறித்துக் கூறுபவன் அடிகேள்! வருக வருக நீவிரே எளிவந்தருளினிர்! அடியேன் நும்முடைய திருவடிகளைத் தொட்டுக் கைகுவித்துத் தொழுதேன்! ஏற்றருளுக! எம்தம் அடிகள் - எங்கள் அடிகளே!; எம் உரை - எளியேம் வேண்டுகோளையும்; கேண்மோ - செவியேற்றருள்க! என்றான் என்க.

(வி - ம்.) சிமிலி-உறி. கரண்டை-கரகம். நுழைகோல்-நுண்ணிய திரட்சி. தவல்-கேடு. அராந்தாணம்-அருகன்கோயில். காணாவுயிர்-கண்ணுக்குப் புலப்படாத நுண்ணுயிரினம். அவற்றினை மிதித்துழிக் கொலைத்தீவினை வருமென்று வருந்தி ஏங்கினன் என்பது கருத்து. அவ்வாறு சமணசமயத்துறவோர் வருந்துதலை—

‘குறுநரிட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞ ரெய்தி
அறியா தடியாங் கிடுதலுங் கூடுங்
எறிநீ ரடைகரை யியக்கந் தன்னின்
பொறிமா ணலவனும் நந்தும் போற்றா
தூழடி யொதுக்கத் துறுநோய் காணின்
தாழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணா’’

(சிலப். ௧௦ : ௮௪ - ௯௩)

எனவரும் கவுந்தியடிகளார் கூற்றானுமுணர்க. உயவல் யானை-வருந்து கின்ற யானை. மண்ணா மேனி - கழுவாத உடம்பு. வந்தீர் - எளிவந்தீர். இஃது அசதியாடியபடியாம். களிமகன் என்னும் எழுவாய் (௧௦௩) முன்னே கூட்டப்பட்டது. கேண்மோ-ஓ: முன்னிலையசை.

## இதுவுமது

### ௯௪ - ௧௦௩ : அழுக்குடை.........பின்னரும்

(இ - ள்.) அழுக்குடை யாக்கையில் புகுந்த நும் உயிர் புழுக்கறைப் பட்டோர் போன்று உளம் வருந்தாது - அழுக்கோடு கூடிய நும்முடைய உடம்பினுள் புகுந்துறைகின்ற நுமதுயிரானது புழுக்கமிக்க அறையாகிய சிறையிலிடப்பட்டவர் போன்றுள்ளம் பெரிதும் வருந்தாவண்ணஞ் செய்து; இம்மையும் மறுமையும் இறுதியில் இன்பமும் தன்வயின் தரூஉம் - (இதோ! இக் கலத்திலுள்ள இக்கள்ளை நோக்குமின் இஃதெத்தகைய தோவெனின்) இஃது இம்மையில் நுகர வேண்டிய இன்பத்தையும் இம்மை மாறித் துறக்கத்தே நுகர்தற்கியன்ற அமராருலகவின்பத்தையும்

இவற்றிற்கும் அப்பாற் பெறக் கிடந்த கடையிலாவின்பம் என்று நுங்கள் இறைவன் கூறும் வீட்டின்பத்தையும் தன்னுள்ளிருந்தே வழங்கும் என்று; என் தலைமகன் உரைத்தது- இதன் பெருமை என் நல்லாசிரியர் செவியறிவுறுத்து எனக்கருளிய தொன்றாம்; கொழுமடல் தெங்கின் விளை பூந்தேறலின் கொலையும் உண்டோ - வளமான மடல்களையுடைய தென்னையின் பூவாகிய பாளையிற் பிறந்த இந்தக் கள்ளில் கொலைத்தீவினையும் உண்டோ! இல்லையாகலின்; மெய்த் தவத்தீரே - கொல்லாமை மேற்கொண்டொழுகாநின்ற வாய்மையான தவத்தையுடையீரே!; உண்டு தெளிந்து இவ்யோகத்து உறுபயன் கண்டால் எம்மையும் கையுதிர்க் கொண்ம் என - இக் கலத்திலுள்ள கள்ளை ஒருமுறை பருகி அதனொடு கலந்து ஒன்றுபட்டு நும் நெஞ்சந் தெளிந்து இந்த யோகத்தினது மிக்க பயனை நீயிர் கண்டுகொண்டு எம்முரை பொய்யாயின் பின்னர் இக் கள்ளோடு எம்மையும் கையை அசைத்துப் போக்குமின் என்று சொல்லி; உண்ணா நோன்பி தன்னொடும் சூள் உற்று உண்ம் என இரக்கும் ஓர் களிமகன் - உண்ணா நோன்பையுடைய அத் துறவி முன்னர் நின்று பருகீராயின் நும்மை விடேன் என்று வஞ்சினங்கூறி அடிகேள்! சிறிது பருகிப் பாருங்கோள் என்று வேண்டுகின்ற அக் களிமகன் பின்பும் என்க.

(வி - ம்.) சமணத்துறவோர் நீராடார் ஆதலின் அதனை விதந்து அழுக்குடையாக்கை என்றான். அழுக்கால் மயிர்த்துளைகளும் அடைபட்டிருத்தலின் அவர் உடம்பைப் புழுக்கறையோ டுவமித்தான். புழுக்கறை - கடிய குற்றமிழைத்தோரை இட்டுவைக்கும் புழுக்கமிக்க நிலவறை. எனவே அக்காலத்துச் சிறைக்கோட்டத்துள் இஃதொன்றென்றறிக. "கடையிலாவின்பம்" எனச் சமணர் கூறும் வழக்கிற்கேற்ப இறுதியிலின்பம் என்றான். கள்ளின் பெருமை கூறுவான் மூவகை யின்பத்தையும் இது தன்னுள்ளிருந்தே வழங்கும் என்றான். நுமக்குத் தலைமகனாகிய அருகன் போன்று எமக்கும் ஒரு முதல்வனுளன் அவனே இதனருமையை அறிவுறுத்தினன் என்பான் என்தலைமகன் உரைத்தது என்றான். நுங்கள் கோட்பாடாகிய கொல்லா விரதத்திற்கும் கள் பொருந்தும் என்பான் தேறலிற் கொலையும் உண்டோ? என்றான்; வினா அதன் எதிர்மறைப்பொருளை வலியுறுத்து நின்றது. யோகம் - இரண்டறக்கலத்தல். கள்ளின் வெறி உண்டவர்களை விழுங்கி அவர் அறிவை இல்லையாக்கித் தானேயாய் நிற்றலால் இதுவே பயனால் சிறந்ததொரு யோகம் என்பான் இவ்யோகத்தின் உறுபயன் என்றான். கண்டால் ஏற்றுக்கொண்மின் இன்றேல் எம்மையும் கையுதிர்த்துப் போக்குமின் என்றவாறு. சமணத்துறவோர் தந்நெறியொழுகாதாரைக் கண்டக்கால் அவரொடு வாயாற் பேசாமல் கையை அசைத்தே அகற்றுவர் ஆதலின் எம்மையும் கையுதிர்க்கொண்மின் என்றான். கையுதிர் - கையை அசைத்தல். உண்ணாநோன்பி - இரண்டுவாவும் அட்டமியும் முட்டுப்பாடும் பட்டினி விட்டுண்ணும் விரதி. களிமகன் பின்னரும், மையலுற்ற மகன் பின்பும் வருந்தி (கக௫), நிற்குநரும் என இயையும்.

## ஒரு பித்தன் செயல்

### ௧௦௪ - ௧௧௫ : கணவிர.........நிற்குநரும்

(இ - ள்.) கணவிர மாலையிற் கட்டிய திரள் புயன் - அலரிப் பூமாலையாலே கட்டப்பட்ட திரண்ட புயங்களையுடையவனும்; குவிமுகிழ் எருக்கின் கோத்த மாலையன் - கூம்பிய அரும்புகளையுடைய எருக்கம் பூவினால் தொடுக்கப்பட்ட மாலையினை மார்பில் அணிந்தவனும் ;சிதவல் துணியொடு சேண் ஓங்கு நெடுஞ்சினைத் ததர் வீழ்பு ஒடித்துக் கட்டிய உடையினன் - இடையிலே நைந்து சிதைந்த கந்தையோடு மிகவும் உயர்ந்த நெடிய மரக்கிளைகளினின்று உலர்ந்து தாமே உதிர்ந்த சுள்ளிகளை ஒடித்து அக் கந்தல் துணியில் மடிகோலிக் கட்டிய ஆடையை உடையவனும் ஆகி; பலரொடும் பண்பு இல்மொழி உரைத்து - எதிர்வரும் ஏதிலார் பலரோடும் வாய்தந்த பொருளற்ற மொழிகளைப் பேசி; ஆங்கு அழூஉம் விழூஉம் அரற்றும் கூஉம் தொழூஉம் எழூஉம் - அங்ஙனம் பேசும் பொழுதே அழுவான் தரையிலே விழுவான் அழுது ஏதேனும் பிதற்றுவான் கூவுவான் கை கூப்பித் தொழுது வீழ்ந்து வணங்குவான் பின்னர் எழுவான்; சுழலலும் சுழலும் ஓடலும் ஓடும்-நின்றவாறே சுழலுதலும் செய்வான் பொள்ளென அவ்விடத்தினின்று விரைந்து ஓடுதலையுஞ் செய்வான்; ஒரு சிறை ஒதுங்கி நிற்றலும் நிற்கும் - ஒரு பக்கத்தே ஒதுங்கி நெடிது நிற்றலும் செய்வான்; நிழலொடு மறலும் - தனது நிழலொடு பகைத்து மறவுரை பல கூறுவான்; மையல் உற்ற மகன் பின் - இவ்வாறு பித்தேறி உழலுகின்ற ஒருவன் பின்னே; வருந்திக் கையறு துன்பம் கண்டு நிற்குநரும் - அவன் நிலைக்குப் பெரிதும் இரங்கி வருந்தி அவன் திறத்திலே தாம் கையற்று நிற்றற்குக் காரணமான அவன் துன்பங்களைக் கண்டு நிற்பவர்களும் என்க.

(வி - ம்.) கணவிரமாலை-அலரிப்பூமாலை. எருக்கிற் கோத்த மாலை-எருக்கம் பூக்கள் கோக்கப் பெற்ற மாலை என்க. சிதவற்றுணி-கந்தற்றுணி. ததர்வீழ்பு-செறிந்து வீழ்ந்தவையாகிய சுள்ளி. சுழலலும் சுழலும் என்றது அதன் மிகுதி தோற்றுவித்து நிற்கும் ஒரு சொன்னீர்மைத்து. ஓடலும் ஓடும் என்பதுமது. நிழலொடு மறலுதல் - நிழலைப் பகைவனைப் பார்க்குமாறு சினந்து நோக்கி வீரம் பேசிப் போரிடுவான் போலாதல்.

## பேடியாடல்

### ௧௧௬ - ௧௨௫ : சுரியல்.........காண்குநரும்

(இ - ள்.) நீள் நிலமளந்தோன் மகன் - நெடிய நிலத்தை ஓரடியாலே அளந்தருளிய திருமாலின் அவதாரமாகிய கண்ணன்

மகனாகிய காமன் அவதாரமாகிய பிரத்தியும்நன் என்பவன்; மூன் - பண்டு தன் மகனாகிய அநிருத்தனைச் சிறைவீடு செய்தற் பொருட்டுச் சென்று; வாணன் பேர் ஊர் மறுகிடை - வாணாசுரனுடைய பெரிய நகரமாகிய 'சோ'வினது வீதியிடத்தே; சுரியல் தாடி மருள் படு பூங்குழல் பவளச் செவ்வாய்த் தவள வாள் நகை - சுருண்ட தாடியையும் கண்டோர் மயங்குதற்குக் காரணமான அழகிய கூந்தலையும் பவளம் போன்று சிவந்த வாயினையும் வெள்ளிய ஒளி தவழும் எயிறுகளையும்; ஒள் அரி நெடுங்கண் வெள்ளி வெள் தோட்டுக் கருங் கொடி புருவத்து - ஒள்ளிய செவ்வரி படர்ந்த நீண்ட கண்ணையும் மிகவும் வெண்மையான சங்கினாற் செய்த தோடணிந்த செவியினையும் கரிய ஒழுங்குபட்ட புருவத்தையும்; மருங்குவளை பிறைநுதல் - இருபக்கத்தும் வளைந்த பிறைத்திங்கள் போன்ற நெற்றியினையும்; காந்தள் அம் செங்கை ஏந்து இள வன முலை அம் நுண் மருங்குல் அகன்ற அல்குல் - காந்தள் மலர் போன்ற அழகிய சிவந்த கையினையும் அணந்துநிற்கும் இளமையும் எழிலுமுடைய முலையினையும் அழகோடு நுணுகிய இடையினையும் அகலிதாகிய அல்குலையும்; இகந்த வட்டுடை எழுது வரிக்கோலத்து - மகளிர்க்கியன்ற ஆடை மரபினைக் கடந்த முழந்தாளளவிற்றாகிய வட்டுடையினையும் தோளினும் முலையினும் எழுதிய பத்திக் கீற்றின் அழகினையுமுடைய; பேடிக்கோலத்து - ஆண்மையிழந்து பெண்மையவாவிய பேடியின் கோலம் பூண்டு; ஆடிய பேடு காண்குநரும் - ஆடியருளிய பேடு என்னும் புறநாடகமாடுவார் ஆடுங்கூத்தினைக் கண்டு களிப்போரும் என்க.

(வி - ம்.) சுரியல்-சுருண்ட. கண்டோர் மருள்படும் கூந்தல் என்க. நகை - எயிறு. அரி-செவ்வரி. தோடு-ஒருவகைக்காதணி. கொடி-புருவம். மகளிர் உடுக்கும் ஆடை மரபினை இகந்த வட்டுடை. இகத்தல்-கடத்தல். வட்டுடை-முழந்தாள் அளவிற்றாகிய ஒருவகை உடை. வாணன் பேரூர்-வாணாசுரன் நகரம்; இதற்குச் சோநகரம் என்பது பெயர். நிலமளந்தோன் - திருமால்; ஈண்டுக் கண்ணன் மேற்று. அவன் மகன் பிரத்தியும்நன். இவன் மகன் அநிருத்தன் சிறையிடப்பட்டான். அவனை மீட்கச் சென்றுழி, பிரத்தியும்நன் அந் நகரமறுகில் பேடிக்கோலங்கொண்டு கூத்தாடினன். அக் கூத்திற்குப் பேடு என்று பெயர். இதனைப் புறநாடகம் பதினொன்றனுள் ஒன்று என்ப. வாணன் பேரூரில் "ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக் காமன் ஆடிய பேடியாடலும்" (சிலப்-கூ-கூசு-எ) என்பர் இளங்கோ. பிரத்தியும்நன் காமனின் அவதாரம் ஆதலின் காமன் என்றார். இனி இதனோடு—

"சுருளிடு தாடி மருள்படு பூங்குழல்
அரிபரந் தொழுகிய செழுங்கய னெடுங்கண்
விரிவெண் டோட்டு வெண்ணகைத் துவர்வாய்ச்
சூடக வரிவளை ஆடமை பணைத்தோள்

வளரிள வனமுலைத் தளரியன் மின்னிடைப்
பாடகச் சீறடி ஆரியப் பேடி''

எனவரும் இளங்கோ வாக்கு (உள : கஅக-சு) ஒப்புக்காணத் தகும்.

## கண்கவர் ஓவியம்

### கஉசு - கஙுக : வம்ப.........நிற்குநரும்

(இ - ள்.) வம்பமாக்கள் - இந்திர விழாக் காண்டற் பொருட்டு அந் நகரத்திற்கு வந்துள்ள புதிய மாந்தர்; கம்பலை மூதூர் - ஆரவார மிக்க பழைய அப் பூம்புகார் நகரத்திலே காட்சி பலவும் கண்டு வருபவர் அத் தேர்வீதியின் இருமருங்கும் அமைந்த; சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனைதொறும் - செங் கல்லாலியன்ற உயர்ந்து நிற்கின்ற நெடிய ஏழடுக்கு மாளிகை ஒவ்வொன்றினும்; மை அறு படிவத்து வானவர் முதலா எவ்வகை உயிர்களும் உவமம் காட்டி - குற்றமற்ற வடிவத்தை யுடைய எத்தகைய உயிர்களுக்கும் அவ்வவற்றிற்கு உவமை யாமாறு தங் கலைத்திறத்தைக் காட்டி; விளக்கத்து வெள்சுதை- தீற்றிய விளக்கமான வெண் சாந்தினையுடைய சுவரின் கண் ; வித்தகர் இயற்றிய - ஓவியக்கலை கற்றுத் துறை போகிய வித்தகப் புலமையோர் வரைந்துள்ள; கண்கவர் ஓவியம் கண்டு நிற்குநரும் - காண்போர் கண்களைத் தம் அழகாலே கவருமியல் புடைய ஓவியங்களைக் கண்டு வியந்து நிற்போரும் என்க.

(வி - ம்.) சுடுமண் - செங்கல். நெடுநிலைமனை - எழுநிலை மாட மாளிகை. படிவம்-வடிவம். வானவர் முதலா எவ்வகையுயிரும் என்றது அறுவகைப் பிறப்பினையும் உடைய உயிர்களையும் என்றவாறு. ஓவியங் காண்போர்க்கு இப்படித்தான் இந்திரன் இருப்பான்; இப்படித்தான் திருமகள் இருப்பாள் என அவ்வோவியங்கள் உவமமாகும்படி கலைத் திறத்தால் காட்டி என்க. பன்னிறங்கொண்டு வரையவேண்டுதலின் வெண்சுதை வேண்டிற்று. விளக்கத்து வெண்சுதை என மாறுக. விளக் கத்து இயற்றிய என இயைப்பினும் ஆம். ''எவ்வகைச் செய்தியும் உவமங் காட்டி நுண்ணிதினுணர்ந்த நுழைந்த நோக்கின் கண்ணுள் வினைஞரும்'' என, (மதுரை - ருகசு) பிறரும் ஓதுதல் காண்க.

## தளர்நடை தாங்காக் கிளர்பூண் புதல்வர்

### கஙூஉ - கசடு : விழாவாற்று.........நிற்குநரும்

(இ - ள்.) விழா ஆற்றுப்படுத்த கழிபெரு வீதியில் - இந்திரவிழா இனிது நிகழுமாறு அணி செய்து அதன்வழிப் படுத்தப்பட்ட மாபெருந் தெருவிடத்தே; பொன் நாண் கோத்த நல்மணிக் கோவை ஐயவி அப்பிய நெய்யணி முச்சி - பொன்னு

லியன்ற நாணிலே கோக்கப்பட்ட அழகிய மணிக் கோவையும் சிறுவெண் கடுகினை அப்பிய நெய்யணிந்த உச்சியில் அமைந்த; மயிர்ப்புறம் சுற்றிய கயில் கடை முக்காழ் பொலம் பிறை - மயிரைக் கொண்டையாகக் கட்டி அதைச் சுற்றிக்கட்டப்பட்ட கோக்கியை நுனியிலுடைய முப்புரியாகிய முத்துமாலையும் அதனோடு கட்டிய பொன்னாற் செய்த பிறையும்; சென்னி நலம் பெறத்தாழ – தலை அழகு பெறுமாறு தாழ்ந்து கிடப்பவும்; செவ்வாய்க்குதலை மெய் பெறா மழலை சிந்துபு சில்நீர் ஐம்படை நனைப்ப-பொருள் விளங்காததும் எழுத்துருவம் பெறாததும் ஆகிய மழலை மொழியோடு சிந்தித் தம் வாயூறல் தம் மார்பிடைக் கிடக்கும் ஐம்படைத்தாலியை நனைப்பவும்; அற்றம் காவாச் சுற்றுடைப் பூந்துகில் - மறைக்க வேண்டிய உறுப்பை மறைத்துக் காக்கும் கருத்தாலன்றி வாளாது அழகின் பொருட்டு இடையிலே சுற்றிவிடப்பட்ட உடையாகிய அழகிய துகிலானது; தொடுத்த மணிக் கோவை உடுப்பொடு துயல்வர - தொடுக்கப்பட்ட மணிக்கோவையாலியன்ற உடையினோடு சேர்ந்து அசையா நிற்பவும்; தளர் நடை தாங்காக் கிளர்பூண் புதல்வரை - இயல்பாகவே தளர்ந்து நடக்கும் அவர்தம் நடை தாங்கா வண்ணம் மிகுதியாக அணிந்துவிடப்பட்ட விளங்குகின்ற அணிகலன்களையுடைய தத்தம் மக்களை; பொலம் தேர்மிசைப் புகர்முக வேழத்து - பொன்னாலியன்ற தேரின்மீது அமைத்தமையால் மேலும் உயர்ந்துள்ள புள்ளிகளையுடைய முகத்தையுடைய பொன்னாலியன்ற யானையினது பிடரிடத்தே; இலங்கு தொடி நல்லார் சிலர் நின்று ஏற்றி ஆலமர் செல்வன் மகன் விழாக் கால்கோள் காண்மினோ என - விளங்குகின்ற பொன் வளையலணிந்த மகளிர் சிலர் தரைமீதும் தேரின்மீதும் நின்று ஏற்றி வைத்து ஆலமர் செல்வனாகிய நம் இறைவன் மகன் முருகன் இதோ வீதிவலஞ் செய்தல் ஆகிய விழாவைத் தொடங்குகின்றான். எல்லீரும் வந்து காணுங்கோள் என்று ஏனைய ஆயமகளிர்க்குக் காட்ட; கண்டு நிற்குநரும் - அங்ஙனமே வந்து அக் காட்சியைக் கண்டு மகிழ்ந்து நிற்போரும் என்க.

(வி - ம்.) விழா வாற்றுப்படுத்த வீதி என்றது விழா நிகழ்த்துதற்குத் தகுந்ததாக அணிமுதலியவற்றான் நெறிப்படுத்தப்பட்ட வீதி என்றவாறு. அது தேர்வீதியாதலின் கழிபெருவீதி என்றார். ஐயவி - வெண்சிறு கடுகு. இது பேய் முதலியவற்றால் துன்பம் வாராமைப் பொருட்டுச் சிறுவர் தலையில் அப்பிவிட்டபடியாம். "புதல்வர்க்குக் காவற் பெண்டிர் கடிப்பகை எறிந்து தூபம் காட்டித் தூங்குதுயில் வதியவும்" எனப் பிறாண்டும் ஓதுவர் (எ:௫௭-௯.) முச்சியில் கொண்டையாகப் புனைந்த மயிர்ப்புறஞ் சுற்றி என்க. கயில்-கோக்கி; (கொக்கி)கயிற் கடை-கோக்கியில். கடை : ஏழாவதன் உருபு. கயிற் கடைப்பிறை என்க. நலம்-அழகு. குதலை-பொருள் விளங்காச் சொல். மெய் - எழுத்துருவம்.

சின்னீர் என்றது வாயூறலை. ஐம்படை - திருமாலுடைய சங்கு முதலிய ஐந்து படைகளின் வடிவமாகச் செய்து மகவிற்கு மார்பின்கண் அணியும் ஒருவகை அணிகலன். அற்றம் - சோர்வு; இடக்கரடக்கு. மறைக்க வேண்டிய உறுப்புக்களை மறைத்து மானங்காத்தற் பொருட்டன்றி வாளாது அழகின் பொருட்டுச் சுற்றிய பூந்துகில். மணிக் கோவைகளைத் தூங்கவிட்டு ஆடைபோல அற்றங் காத்தற்கு அரையிற் கட்டும் அணியை உடுப்பு என்றார். தம்முடம்பையே தாங்காது தளரும் நடைக்கு மேலும் பொறையாக அணியப்பட்ட பூண் என்பார் நடைதாங்காப்பூண் என்றார். தேர் - பொற் சிறுதேர் அதன் மிசை பொன் யானையை ஏற்றி அதன் பிடரில் புதல்வரை ஏற்றிவைத்து முருகன் விழாத்தொடங்குகின்றார்கள் காண்மினோ என்றவாறு. ஆலமர் செல்வன் மகன் - முருகன்.

## மணிமேகலை மலர் கொய்யப் போவாளைக் கண்டு மாந்தர் பெரிதும் மனம் மறுகுதல்

### ௧௪௬ - ௧௫௮ : விராடன்..........இணைந்துக

(இ - ள்.) விராடன் பேரூர் விசயன் ஆம் பேடியைக் காணிய சூழ்ந்த கம்பலை மாக்களின்-விராடனுடைய தலை நகரத்து வீதியிலே செல்லாநின்ற விசயனாகிய பேடியைக் காணுதற்கு அவாவிச் சூழ்ந்துகொண்ட ஆரவாரமுடைய அந்நகரத்து மாந்தரைப் போன்று; மணிமேகலைதனை வந்து புறஞ் சுற்றி-சுதமதியோடு மலர் கொய்ய அவ்வீதியிலே செல்லாநின்ற மணிமேகலையைக் கண்ட அந்நகரத்து மக்கள் பலரும் அவள் பக்கலிலே வந்து சூழ்ந்துகொண்டு; அணி அமை தோற்றத்து அருந்தவப் படுத்திய தாயோ கொடியள் தகவு இலள் - செய்யாக் கோலத்தோடு இவளைச் செயற்கரிய தவநெறியிலே செலுத்திய மாதவியும் ஒரு தாய்மையுடையள் ஆவாளோ? அவள் தாயல்லள் பெரிதும் கொடியவள், பண்பற்றவள்! ஈங்கு இவள் மலர் வனம்தான் புகின் - இவ்வாறே இவள் மலர்ப் பொழிலினூடே புகுந்தக்கால்; ஆங்கு உள நல் இள அன்னம் மடந்தை தன் நடை நாணாது வல்லுந கொல்லோ - அப் பொழிலில் வாழ்கின்ற அழகிய அன்னப் பறவைகள் இவள் நடையைக் கண்டு நாணி ஓடுவதல்லது நாணாமல் அங்கு வாழ வல்லமையுடையன ஆகுமோ? ஒருதலையாய் ஓடியேபோம்; ஆங்குள மாமயில் தையல் முன் வந்து நிற்பன தன்னுடன் சாயல் கற்பன கொல்லோ - அப் பொழிலிடத்தே வாழ்கின்ற அழகிய மயில்களுள் வைத்து நாணாது துணிந்து வந்து நிற்கின்ற மயில்கள் ஒரோவழி இவளிடத்தேயுள்ள சாயலைத் தாமும் கற்க விரும்புவன ஆதல் வேண்டும்; உள பைங்கிளிகள் தாம் பாவை தன் கிளவிக்கு எஞ்சல கொல்லோ இசையுந அல்ல - அப் பொழிலிலே மழலை பேசித்திரிகின்ற பச்சைக்கிளிகள் தாமும் இனிமையினாலே இவளுடைய மொழிதரு மினிமையை விஞ்சி விடமாட்டா! ஏன் ?

ஒப்பாவனவும் இல்லை!; என்று இவை சொல்லி - என்று இவை யும் இவை போல்வனவும தத்தம் வாய்தந்தனவெல்லாம் பரிந்து சொல்லி; யாவரும் இனைந்து உக - எத்தகையோரும் இவள் பொருட்டுப் பெரிதும் நெஞ்சழிந்து ஒழுகுமாறு வருந்த என்க.

(வி - ம்.) பன்னிரண்டாண்டு காட்டிலுறைந்த பின்னர் ஓராண்டு பிறர் அறியாவண்ணம் கரந்துறைதல் வேண்டும் என்று துரியோதன னுடன் உடன்படிக்கை செய்துகொண்ட பாண்டவர் விராடநகரத்தில் உள்வரிக்கோலம் பூண்டுறைந்தனர் என்பது மகாபாரதம். அப்பொழுது அருச்சுனன் பேடியுருத்தரித்து அந்நகரத்திற் செல்ல அப்பேடியைக்காண நகரமாந்தர் ஆரவாரத்துடன் வந்து அப் பேடியைச் சூழ்ந்தது ஈண்டுத் துறவோர் பள்ளியினின்றும் மலர்வனம் புகச்செல்லும் மணிமேகலையை மாந்தர் சூழ்ந்தமைக்குவமை.

கம்பலை-ஆரவாரம். அணியமை தோற்றம் - அணிகலன் இல்லாம லும் திகழும் இயற்கை அழகு. இதனைச் செய்யாக்கோலம் என்பர் இளங்கோ. தாயோ என்னும் வினா எதிர்மறைப் பொருளை வற்புறுத்தி நின்றது. வல்லுந - பொறுக்கும் வன்மை யுடையன. ஓ : எதிர்மறை. கற்பன கொல்லோ என்புழி, கொல்லும் ஓவும் அசைச்சொற்கள். வினவாக்கி - கற்கவியலா தெனினுமாம். எஞ்சல - விஞ்சா; மிகா. இசையுநவும் அல்ல எனல் வேண்டியஎச்சவும்மை தொக்கது. இசையுந- ஒப்பாவன. இவை என்றது தாயோ கொடியள் என்பது முதலியவற்றை.

## மணிமேகலையும் சுதமதியும் மலர்வனம் புகுதல்

### கஞ்கூ - கஎக : செந்தளிர்............மணிமேகலையென்

(இ - ள்) செந்தளிர்ச் சேவடி நிலம் வடுவுறுமல்- சிவந்த தளிர்போன்று சிவந்த அடியினாலே நிலத்தில் சுவடு தோன்றுதபடி நடந்து; குரவமும் மரவமும் குருந்தும் கொன்றை யும் திலகமும் வகுளமும் செங்கால் வெட்சியும் நரந்தமும் நாகமும் பரந்தலர் புன்னையும் - குராமரமும் வெண் கடப்ப மரமும் குருந்தும் கொன்றையும் திலகமரமும் வகுள மரமும் சிவந்த காலையுடைய வெட்சியும் நரந்த மரமும் நாகமரமும் பரந்து மலரும் புன்னையும்; பிடவமும் தளவமும் முடமுள் தாழையும் குடசமும் வெதிரமும் கொழுங்கால் அசோகமும் - குட்டிப்பிடவங் கொடியும் செம்முல்லையும் வளைந்த முள்ளையுடைய தாழையும வெட்பாலையும் செருந்தியும் மூங்கிலும் வளவிய காலையுடைய அசோக மரமும்; செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண்பகமும் எரிமலர் இலவமும்-செருந்தி மரமும் வேங்கை மரமும் பெருஞ் சண்பக மரமும் நெருப்புப் போன்ற மலரையுடைய இலவ மரமும் ஆகிய இவையெல்லாம்; விரிமலர் பரப்பி - மலர்ந்த மலர்களைப் பரப்பியிருத்தலாலே; வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச் சித்திரச் செய்கைப்படாம் போர்த்ததுவே ஒப்பத்

தோன்றிய - ஓவியப் புலவர் வரைந்த விளக்கமான கைத் தொழிலாகிய சித்திரங்கள் அமைந்த செய்கையையுடைய படாஅத்திரல் போர்க்கப்பட்டதை ஒத்துக்காணப்பட்ட; உவவனம் தன்னை தொழுதனள் காட்டிய சுதமதி தன்னொடு - உவவனமென்னும் அத் தெய்வப் பூம்பொழிலை அணுகியவுடன் அதனைக் கைகூப்பித் தொழுது இதுதான் அம் மலர் வனமென்று தனக்குக் காட்டிய சுதமதி என்பாளொடு; மணிமேகலை மலர் கொய்யப் புகுந்தனள் - மணிமேகலை மலர் கொய்தற்கு அவ் வனத்தினுள் புகுந்தனள் என்பதாம்.

(வி - ம்.) குரவமுதலாக இலவமீறுக் கூறப்பட்ட மரங்களும் கொடிகளும் பிறவும் பகவனதாணையால் ஒருசேர மலர்ந்து பரப்பித் தோன்றுதற்கு ஓவியப்புலவர் திறம்பட வரைந்த சித்திரங்களையுடைய துகில் உவமை.

தொழுதனள் : தொழுது முற்றெச்சம். பகவனதாணையிற் பன்மரம் மலர்தலும் மயனிழைத்த பீடிகையை உடையதாதலும் ஆகிய தெய்வத் தன்மைபற்றிச் சுதமதி அதனை அணுகியவுடன் கைகூப்பித் தொழுது காட்டினள் என்க.

இனி, இக் காதையை மாதவியுரைத்த வுரைமுன் தோன்றி மணிமேகலைக்கு ஏது நிகழ்ச்சி எதிர்ந்துளதாகலின் வெதுப்பக் கலங்கி அழித்துருட்டி நீர் ஆட்ட மாதவி நோக்கிக் கொணர்வாயென்றலும் சுதமதி கூறும் காமன் நடுங்கும் ஆடவர் அகறலும் உண்டோ நின்றிடிற் பேடியர் அன்றோ அன்றியும் யான் வரும் காரணங்கேளாய் கொய்வேனை எடுத்தனன் எழுந்தனன் படுத்தனன் ஆயினேன் நீங்கினன் ஆதலால் நின்மகள் செவ்வியிலள் போகின் ஆங்குளர் செல்லார் எய்தார் உவவனம் ஒன்றுண்டு யானும் போவல் என்று செல்வுழி நிற்குநரும் காண்குநரும் நிற்குநரும் இனைந்துகக் காட்டிய சுதமதியோடு மணிமேகலை கொய்யப் புகுந்தனள் என இயைத்திடுக.

**மலர்வனம் புக்க காதை முற்றிற்று**

# ச. பளிக்கறை புக்க காதை

[நான்காவது மணிமேகலை உதயகுமரனைக் கண்டு
பளிக்கறை புக்க பாட்டு]

அஃதாவது — உவவனத்தினுட் சுதமதியோடு மணிமேகலை புகுந்தனளாக, அவள்பால் பெருங்காதல் கொண்டிருந்த அரசிளங்குமரனாகிய உதயகுமரன் அவளைத் தன் தேரிலேற்றிவரத் துணிந்து தேரோடு அவ் வுவவனத்தை அணுகியபொழுது மணிமேகலை அவன் வரவினைத் தேரின் ஒலியாலுணர்ந்து அக் கோமகன் தன்பால் கன்றிய காமமுடையவனாதலைப் பண்டே கேள்வியுற்றிருந்தனளாகலின் பெரிதும் அஞ்சி அவ் வுவவனத்திருந்த பளிக்கறையினுட் புகுந்து தாழக் கோலையிட்டுக் கொண்டதும் பின்னர் ஆங்கு நிகழ்ந்தனவும் கூறுகின்ற செய்யுள் என்றவாறு.

இதன்கண் — மணிமேகலைக்குச் சுதமதி அம்மலர்ப்பொழிலின் அழகைக் காட்ட அவள் கண்டு மகிழ்தலும், உதயகுமரன் மதங் கொண்ட யானையை அடக்கி மறவர் சூழத் தேரிலேறி மணிமேகலை சென்ற வீதியில் வருபவன், ஆங்கு எட்டிகுமரன் வாயிலாக மணிமேகலை மலர்வனம் புகப்போனமை அறிந்து அங்ஙனமாயின ஆங்குச் சென்று அவளை என் தேரிலேற்றி வருகுவென், என்று சூள்மொழிந்து தன் தேரை உவவனம் நோக்கிச் செலுத்தி அதனை அணுகுதலும், அதன் ஆரவாரத்தால் அங்ஙனம் வருபவன் அரசன் மகனே யாதல் வேண்டும் என்று மணிமேகலை சுதமதிக்குக் கூறுதலும், அவள் அஞ்சி நடுங்கி மணிமேகலையை அங்குள்ள பளிக்கறை மண்டபத்துட் புகுத்திப் பளிக்கறையின் அகத்தே தாழக்கோல் இட்டுக் கொண்டிருக்கச் செய்தபின் அதனயலே ஐந்து விற்கிடைத் தொலைவில் நிற்றலும், கழிபெருங் காம வேட்கையுடன் உதயகுமரன் தேரினின்றிழிந்து உவவனத்துள்ளே மணிமேகலையைத் தேடி வருபவன் அவளைக் காணாமல் சுதமதியை மட்டும் கண்டு அவள்பால் மணிமேகலையின் இயல்பினைத் தனது வேட்கை தோன்ற வினவுதலும், சுதமதி அச்சத்தோடு அவ்வரசிளங்குமரனுக்கு மக்கள் யாக்கையின் இழிதகைமையை எடுத்தோதுதலும், அதனைக் கேட்கும் பொழுதே மணிமேகலையைத் துருவித் திரியும் அவன் கண்ணில் பளிக்கறை புக்க பாவையின் உருவம் பளிங்கினூடே வந்து புகுந்ததுவும் பிறவும் அழகாகக் கூறப்பட்டுள்ளன.

பரிதியஞ் செல்வன் விரிகதிர்த் தானைக்கு
இருள்வளைப் புண்ட மருள்படு பூம்பொழில்
குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட
மழலை வண்டினம் நல்லியாழ் செய்ய
வெயில்நுழை பறியாக் குயில்நுழை பொதும்பர்
மயிலா டரங்கின் மந்திகாண் பனகாண்
மாசறத் தெளிந்த மணிநீ ரிலஞ்சிப்
பாசடைப் பரப்பிற் பன்மல ரிடைநின்
றொருதனி யோங்கிய விரைமலர்த் தாமரை
அரச வன்னம் ஆங்கினி திருப்பக்
கரைநின் றாலும் ஒருமயில் தனக்குக்
கம்புட் சேவற் கனைகுரன் முழவாக்
கொம்ப ரிருங்குயில் விளிப்பது காணாய்
இயங்குதேர் வீதி யெழுதுகள் சேர்ந்து
வயங்கொளி மழுங்கிய மாதர்நின் முகம்போல்
விரைமலர்த் தாமரை கரைநின் றோங்கிய
கோடுடைத் தாழைக் கொழுமட லவிழ்ந்த
வால்வெண் சுண்ணம் ஆடிய திதுகாண்
மாதர் நின்கண் போதெனச் சேர்ந்து
தாதுண் வண்டின மீதுகடி செங்கையின்
அஞ்சிறை விரிய அலர்ந்த தாமரைச்
செங்கயல் பாய்ந்து பிறழ்வன கண்டாங்கு
எறிந்தது பெறூஅ திரையிழந்து வருந்தி
மறிந்து நீங்கு மணிச்சிரல் காணெனப்
பொழிலும் பொய்கையுஞ் சுதமதி காட்ட
மணிமே கலையம் மலர்வனங் காண்புழி
மதிமருள் வெண்குடை மன்னவன் சிறுவன்
உதய குமரன் உருகெழு மூதூர்
மீயான் நடுங்க நடுவுநின் றோங்கிய
கூம்புமுதன் முறிய வீங்குபிணி யவிழ்ந்து
கயிறுகால் பரிய வயிறுபாழ் பட்டாங்கு
இதைசிதைந் தார்ப்பத் திரைபொரு முந்நீர்
இயங்குதிசை யறியா தியாங்கணு மோடி
மயங்குகால் எடுத்த வங்கம் போலக்
காழோர் கையற மேலோ ரின்றிப்
பாகின் பிளவையிற் பணைமுகந் துடைத்துக்
கோவியன் வீதியும் கொடித்தேர் வீதியும்
பீடிகைத் தெருவும் பெருங்கலக் குறுத்தாங்கு
இருபாற் பெயரிய வுருகெழு மூதூர்
ஒருபாற் படாஅ தொருவழித் தங்காது

பாகும் பறையும் பருந்தின் பந்தரும்
ஆதுல மாக்களும் அலவுற்று விளிப்ப
நீல மால்வரை நிலனொடு படர்ந்தெனக்
காலவேகங் களிமயக் குற்றென
விடுபரிக் குதிரையின் விரைந்துசென் றெய்திக்
கடுங்கண் யானையின் கடாத்திற மடக்கி
அணித்தேர்த் தானையொ டரசிளங் குமரன்
மணித்தேர்க் கொடிஞ்சி கையாற் பற்றிக்
காரலர் கடம்பன் அல்ல னென்பது
ஆரங் கண்ணியிற் சாற்றினன் வருவோன்
நாடக மடந்தையர் நலங்கெழு வீதி
ஆடகச் செய்வினை மாடத் தாங்கண்
சாளரம் பொளித்த கால்போகு பெருவழி
வீதிமருங் கியன்ற பூவணைப் பள்ளித்
தகரக் குழலாள் தன்னொடு மயங்கி
மகர யாழின் வான்கோடு தழீஇ
வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையின்
எட்டி குமரன் இருந்தோன் றன்னை
மாதர் தன்னொடு மயங்கினை யிருந்தோய்
யாதுநீ யுற்ற இடுக்கண் என்றலும்
ஆங்கது கேட்டு வீங்கிள முலையொடு
பாங்கிற் சென்று தான்றொழு தேத்தி
மட்டவி ழலங்கன் மன்ன குமரற்கு
எட்டி குமரன் எய்திய துரைப்போன்
வகைவரிச் செப்பினுள் வைகிய மலர்போல்
தகைநலம் வாடி மலர்வனம் புகூஉம்
மாதவி பயந்த மணிமே கலையொடு
கோவல னுற்ற கொடுந்துயர் தோன்ற
நெஞ்சிறை கொண்ட நீர்மையை நீக்கி
வெம்பகை நரம்பின் என்கைச் செலுத்தியது
இதுயா னுற்ற இடும்பை யென்றலும்
மதுமலர்த் தாரோன் மனமகிழ் வெய்தி
ஆங்கவள் தன்னையென் அணித்தே ரேற்றி
ஈங்கியான் வருவேன் என்றவற் குரைத்தாங்
கோடுமழை கிழியும் மதியம் போல
மாட வீதியின் மணித்தேர் கடைஇக்
காரணி பூம்பொழிற் கடைமுகங் குறுகவத்
தேரொலி மாதர் செவிமுதல் இசைத்தலும்
சித்திரா பதியோ டுதய குமரனுற்
றென்மேல் வைத்த உள்ளத் தானென

வயந்த மாலை மாதவிக் கொருநாள்
கிளந்த மாற்றம் கேட்டே னாதலின்
ஆங்கவன் தேரொலி போலும் ஆயிழை
ஈங்கென் செவிமுதல் இசைத்ததென் செய்கென
அமுதுறு தீஞ்சொல் ஆயிழை யுரைத்தலும்
சுதமதி கேட்டுத் துளக்குறு மயில்போல்
பளிக்கறை மண்டபம் பாவையைப் புகுகென்
றொளித்தறை தாழ்கோத் துள்ளகத் திரீஇ
ஆங்கது தனக்கோர் ஐவிலின் கிடக்கை
நீங்காது நின்ற நேரிழை தன்னைக்
கல்லென் தானையொடு கடுந்தேர் நிறுத்திப்
பன்மலர்ப் பூம்பொழிற் பகன்முளைத் ததுபோல்
பூமரச் சோலையும் புடையும் பொங்கரும்
தாமரைச் செங்கண் பரப்பினன் வரூஉம்
அரசிளங் குமரன் ஆருமில் ஒருசிறை
ஒருதனி நின்றாய் உன்றிற மறிந்தேன்
வளரிள வனமுலை மடந்தை மெல்லியல்
தளரிடை யறியுந் தன்மையள் கொல்லோ
விளையா மழலை விளைந்து மெல்லியல்
முளையெயி றரும்பி முத்துநிரைத் தனகொல்
செங்கயல் நெடுங்கண் செவிமருங் கோடி
வெங்கணை நெடுவேள் வியப்புரைக் குங்கொல்
மாதவ ருறைவிடம் ஒரீஇமணி மேகலை
தானே தமியளிங் கெய்திய துரையெனப்
பொதியறைப் பட்டோர் போன்றுளம் வருந்தி
மதுமலர்க் கூந்தற் சுதமதி யுரைக்கும்
இளமை நாணி முதுமை யெய்தி
உரைமுடிவு காட்டிய உரவோன் மருகற்கு
அறிவுஞ் சால்பும் அரசியல் வழக்கும்
செறிவளை மகளிர் செப்பலு முண்டோ
அனைய தாயினும் யானொன்று கிளப்பல்
வினைவிளங்கு தடக்கை விறலோய் கேட்டி
வினையின் வந்தது வினைக்குவிளை வாயது
புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
மூத்துவிளி வுடையது தீப்பிணி இருக்கை
பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
அவலக் கவலை கையா றழுங்கல்
தவலா உள்ளந் தன்பா லுடையது
மக்கள் யாக்கை இதுவென உணர்ந்து

மிக்கோய் இதனைப் புறமறிப் பாராய்
என்றவ னுரைத்த இசைபடு தீஞ்சொல்
சென்றவ னுள்ளஞ் சேரா முன்னர்ப்
பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவையின்
இளங்கொடி தோன்றுமால் இளங்கோ முன்னென்.

---

## ச. பளிக்கறை புக்க காதை

### உரை

[க - முதலாக உகு - இறுதியாக, உவவனத்தினுள் புக்க மணிமேகலைக்கு அதன் எழிலையும் அங்குறையும் பறவை முதலிய வற்றையும் சுதமதி காட்டிக் கூறுவதாய் வரும் ஒரு தொடர்]

### மயிலாடரங்கு

#### க - கூ: பரிதி..........காண்பன காண்

(இ - ள்.) பரிதி அம் செல்வன் விரிகதிர் தானைக்கு இருள் வளைப்புண்ட மருள்படு பூம்பொழில் - ஞாயிற்றுக் கடவுளாகிய உலக முழுதாள்கின்ற அழகிய அரசனுடைய திசையெலாம் விரிந்த கதிர்களாகிய படைமறவர்க்கு அஞ்சிப்புகுந்த இருளானது அப் படைமறவர்களாலே நாற்றிசையும் சூழ்ந்து முற்றுகையிடப் பட்டமையால் உள் புகுந்தோர் இது பகலோ இரவோ என்று மருள்தற்குக் காரணமான அம் மலர்ப் பொழிலினூடே; தும்பி குழல் இசை கொளுத்திக் காட்ட — தும்பிகள் வேய்ங்குழலின் இசையைக் கூட்டிக்காட்டா நிற்பவும்; வண்டு இனம் மழலைசல் யாழ் செய்ய — வண்டுக் கூட்டங்கள் கேள்விக்கினிய அழகிய யாழிசையை உண்டாக்கவும்; வெயில் நுழைபு அறியா குயில் நுழை பொதும்பர் - ஞாயிற்றின் ஒளி ஒரு பொழுதும் நுழைதல் அறிந்திலாததும் குயில்களும் நுழைந்தே செல்லுதற் கியன்ற செறிவுடையதுமாகிய அப் பொழிலிடத்தே; மயில் ஆடு அரங்கின் மந்தி காண்பன காண் - மணிமேகலாய்! அதோ மயிலாகிய நாடகக் கணிகை கூத்தாடா நின்ற கூத்தாட்டரங்கின் கண் மந்தியாகிய அவையோர் இருந்து காண்பனவற்றைக் காண்பாயாக! என்றுள் என்க.

(வி - ம்.) பரிதி - ஞாயிறு. செல்வன் - அரசன். அழியாத ஒளிச் செல்வன் என்பார், அஞ்செல்வன் என்றார். அவன் பகையாகிய இருளை நாற்றிசையும் பரந்து சென்று அழித்தலின் விரிகதிர் தானையாயிற்று. பகையாகிய இருள் புக்குக் கரந்திருத்தலான் அத் தானையால் வளைப் புண்டிருக்கும் அரணுகிய பொழில் என்றவாறு.

தும்பி - வண்டு. இசை கொளுத்துதல் - இசையைப் பொருத்துதல். மழலை-இன்பம். வெயிலாகிய பகை நுழையவியலாது. குயில் இருட்கின

மாதலின் அவைமட்டும் புகும் பொதும்பர் எனவும் ஒருபொருள் தோன்றிற்று. கணிகையாகிய மயில் எனவும் அவையோராகிய மந்தி எனவும் கூறிக்கொள்க.

அரசவன்னம் கொலுவிருத்தல்

எ - கக : மாசற..........காணாய்

(இ - ள்.) மாசு அறத் தெளிந்த மணிநீர் இலஞ்சிப் பாசடைப் பரப்பின் - அழுக்கற்றமையாலே நன்கு தெளிந்துள்ள படிகமணி போன்று தூயதாகிய பொய்கையாகிய தன் அரண்மனையகத்தே பசிய இலையாகிய கம்பளம் விரிக்கப்பட்ட திருவோலக்க மண்டபத்தில்; பல்மலர் இடைநின்று ஒரு தனி ஓங்கிய விரைமலர்த்தாமரை ஆங்கு - பல்வேறு மலர்க் கூட்டங்களாகிய இருக்கைகளுள் வைத்துத் தனக்கே சிறந்துரிமையுடைய தொரு பேரழகோடு உயர்ந்து மலர்ந்துள்ள நறுமணங் கமழுகின்ற தாமரையாகிய அரசு கட்டிலின் மேலே; இனி அரச அன்னம் இருப்ப - காட்சிக்கினிதாக அன்னமாகிய அரசன் கொலுவீற்றிருப்ப; கரை நின்று ஆலும் ஒரு மயிலுக்குக் கம்புட் சேவல் கனைகுரல் முழவு ஆக - அவ்விலஞ்சியின் கரையாகிய ஆடலரங்கினின்று கூத்தாடுகின்ற ஒப்பற்ற மயிலாகிய விறலியினது ஆடலுக்கியையச் சம்பங்கோழிச் சேவலாகிய முழவோனுடைய மிக்கவொலி மத்தள முழக்கம் ஆக; கொம்பர் இருங்குயில் விளிப்பது காணும் - பூங்கொம்பிலுள்ள கரிய குயிலாகிய பாணன் பாடுவதனையும் காண்பாயாக! என்றாள் என்க.

(வி - ம்.) மணி - படிகமணி. பாசடை - பசியஇலை. இது பச்சைக் கம்பளமென்க. அமைச்சர் முதலியோர் இருக்கும் இருக்கைக்குப் பல்வேறு பறவைகள் இருக்கும் பல்வேறு நீர்ப்பூக்கள் உவமை; தனிநின்றோங்கிய விரைமலர்த் தாமரையாகிய அரசு கட்டில் என்க. கரை - ஆடலரங்கு எனவும், மயில் விறலி எனவும் கொள்க. கம்புட்சேவல் - சம்பங்கோழியிற் சேவல்: இதனை முழவோன் எனவும், குயிலைப் பாணனெனவும் கூறிக் கொள்க. என்னை? அன்ன அரசன் கொலுவீற்றிருத்தலால், இங்ஙனம் இனிதின் இயம்பினர். இது குறிப்புவமம் என்னும் அணி. விளிப்பது - பாடுவது. "விளித்த இன்னமிர் துறழ்கீதம்" (சீவக - கஃசக) என்புழியும் அஃதப்பொருட்டாதலறிக.

வேறு பல காட்சிகள்

கச - உரு : வயங்குதேர்...........காட்ட

(இ - ள்.) தேர் இயங்கு வீதி எழுதுகள் சேர்ந்து வயங்கு ஒளி மழுங்கி நின் மாதர் முகம் போல் - யாம் வந்த தேரோடும் வீதியிலே கம்பலை மாக்கள் சூழ்தலாலே எழுந்த புழுதி படிந்தமை

னாலே விளங்கும் ஒளி மழுங்கியிருக்கின்ற நின்னுடைய அழகிய முகத்தைப் போன்று; கரை நின்று ஓங்கிய கோடு உடைத் தாழைக் கொழுமடல் அவிழ்ந்த வால் வெள் சுண்ணம் ஆடிய - இவ்விலஞ்சியின் கரையிலே நின்றுயர்ந்துள்ள கொம்பின் மலர்ந்துள்ள தாழம்பூவினது கொழுவிய அகமடலில் உதிர்ந்த மிக்க வெள்ளிய துகள் மூடியதனால் தன்னொளி மழுங்கிய; விரை மலர்த்தாமரை இது காண் - மணமுடைய மலராகிய தாமரை மலரிதனையும் காண்பாயாக!; மாதர் நின்கண் போது எனச் சேர்ந்து தாது உண் வண்டினம் மீது கடிசெங்கையின் அலர்ந்த தாமரை - அழகிய நின்னுடைய கண்ணை மலர் என நினைத்து வந்து விழ்ந்து தாதுண்ண முயலுகின்ற வண்டுகளின் மேலோச்சிக் கடிகின்ற நின் சிவந்த கையைப் போன்று மலர்ந்துள்ள தாமரை மலரின் மேல்; செங்கயல் பாய்ந்து பிறழ்வன - சிவந்த கயல் மீன்கள் பாய்ந்து பிறழ்கின்றவற்றை; அம் சிறை விரிய ஆங்குக் கண்டு எறிந்து அது பெறாஅது - வானத்தே தனது அழகிய சிறகுகள் விரிய அசையாமல் பறந்து அப்பொழுது கண்டு சிறகொடுக்கி விரைந்து எறிந்தும் அம் மீனைப் பற்றமாட் டாமல்; இரை இழந்து - தனக்கியன்ற இரையினை இழந்து; வருந்தி மறிந்து நீங்கும் மணிச்சிரல் காண் என - உளம் வருந்தி மீண்டு போகும் அழகிய அச்சிரற் பறவையின் செயலையும் அழகையும் காண்பாயாக என்று; பொழிலும் பொய்கையும் சுதமதி காட்ட - அப் பூம்பொழிலின் அழகையும் பொய்கையின் அழகையும் மணிமேகலைக்குச் சுதமதி காட்டா நிற்ப; என்க.

(வி - ம்.) இதன்கண்—மணிமேகலைக்குக் கூறுகின்ற சுதமதியின் கூற்றை ஞாபகவேதுவாக வைத்து நம்மனோர்க்கு நினைவூட்டும் செய்தியும் உண்டு. அச் செய்தியை ஈண்டுக் கருப்பொருட் புறத்தே தோற்றுவிக்கும் இப் புலவர் பெருமான் வித்தகம் பெரிதும் வியக்கத்தக்கதாம்.

அது வருமாறு: தாமரை மலரில் பிறழ்ந்த செங்கயல் கண்டு வானத்தே சிறைவிரியக்காத்துநின்ற மணிச்சிரல் தனக்கு எளிதாகக்கிட்டு மோரிரை என்று கருதி விரைந்து அதன் மேல் வீழ்ந்து பற்றியும், அவ் விரை பெறுமல் மறிந்து விண்ணில் மீண்டது என்னுமிதன் புறத்தே, 'மலர்வனம் புக்கமையால் மணிமேகலை தனக்கு எளிதாகக் கிடைத்து விடுவாள் என்று கருதி அவள்மேற் சென்ற அரசிளங்குமரன் தன்கருத்து நிறைவேறுமல் வாளாது மறிந்து (இறந்து) விண்ணேறினன்' என்னும் பின்னிகழ்ச்சியை இப் புலவர் பெருமான் நம்மனோரை நினைக்குமாறு செய்கின்றார். இதுஞாபகவேது எனப்படும். புலவர்நினைந்த தொன்றனைக் கதையோடு தொடர்பு படுத்தாமலே பயில்வோருளத்தே தோற்று விக்கக் கருதி அதற்கு ஏதுமாத்திரையே புறத்தே தோற்றுவித்தலாம். இஞ்ஞாபகம் காரணமாகச் சிரல் இரைபெறாது இழந்து வருந்தி மறிந்து நீங்கியது என்று விதந்தோதியிருத்தலறிக. மறிந்து நீங்கும் என்ற சொல் பெய்தது உதயகுமரன் திறத்திலே இறந்தொழிந்தான் என்னும்

பொருட்கியைதற் பொருட்டேயாம் என்பது நுண்ணுணர்வாற் கண்டு கொள்க.

## நகரத்தின்கண் காலவேகம் என்னும் யானை மதமயக்குற்றுச் செய்யும் செயல்கள்

உ௬ - ௩௪: மணிமே..........போல

(இ - ள்.) மணிமேகலை அம் மலர்வனம் காண்புழி - இவ்வாறு மணிமேகலை அந்த மலர்ப் பொழிலின் இயற்கை யழகினைக் கண்டு மகிழாநிற்கும் பொழுது; மதிமருள் வெள் குடை மன்னவன் சிறுவன் உதயகுமரன் - திங்கள் மண்டிலம் போன்ற வெண் கொற்றக் குடையையுடைய சோழ மன்னனுடைய மகன் உதயகுமரன் என்பான் (செய்தன சொல்வாம்); உருகெழு மூதூர்-பகைவர்க்கு அச்சந்தருகின்ற அப் பூம்புகார் நகரத்திலே; (௪௪) கால வேகம் களிமயக்கு உற்றென - காலவேகம் என்னும் களிற்றியானையானது காமத்தாற் களித்தற்குக் காரணமான மதவெறிப்பட்டபடியாலே; நீயான் நடுங்க நடுவுநின்று ஓங்கிய கூம்பு முதல் முறிய வீங்கு பிணி அவிழ்ந்து - மாலுமியானவன் செயலறவினாலே திகைத்து நடுங்கும்படியும் மரக்கலத்தின் நடுவிடத்தே நின்றுயர்ந்த பாய்மரம் முறிந்து போம்படியும் செறியக் கட்டின கட்டவிழ்ந்து கயிறுகள் புரியற்றுப் போகவும்; இதை வயிறு பாழ் பட்டாங்குச் சிதைந்து ஆர்ப்ப - பாயின் நடுவிடம் கிழிந்து பாழ்வெளியாய் விடவும் பாய் சிதைந்தொழிய வும் அகத்துள்ள மாக்கள் எல்லாம் அழுது ஆரவாரம் செய்யவும்; திரை பொரு முந்நீர் இயங்குதிசை அறியாது - அலைகள் மோதா நின்ற கடலிடத்தே தான் செல்ல வேண்டிய திசையையும் அறியமாட்டாமல்; யாங்கணும் ஓடி - தள்ளிய திசைகளிலெல்லாம் ஓடியலைந்து; மயங்கு கால் எடுத்த - சுழற் காற்றாலியக்கப்படுகின்ற; வங்கம் போல - மரக்கலத்தைப் போன்று, என்க.

(வி - ம்.) மதிமருள் என்னும் அடைமொழி வெண்குடைக்குவமை யாதலோடன்றி மதிமருள்...சிறுவன் என்பதனோடும் இயைவிக்கலா மாதலின் ஏதுநிகழ்ச்சி எதிர்ந்துள்ளமையாலே பிக்குணியாகிய மணி மேகலையின் பால் கன்றிய காமமுடையனைய் அறிவுமயங்கிய அரசிளங் குமரன் எனவும் பொருள் கோடற்கும் இயைந்து நிற்றலால் இஃது இரட்டுறமொழிதல் என்னும் உத்தியின் பாற்படுதலும் உணர்க. எழுவாய் செய்மையிற் கிடந்தமையின் ஈண்டுக்கொண்டு கூட்டப்பட்டது. காலவேகம் என்பது பட்டத்தியானையின் பெயர். களிமயக்கம்-காமவெறி யாலுண்டான அறிவு மயக்கம். நீயான் - மாலுமி. கூம்பு - பாய்மரம். இதை வயிறுபாழ்பட என இயைக்க. இதை-பாய். நடுவிடம் கிழிந்து வெளியாகிவிட என்றவாறு. நீயான் - யானைப்பாகனுக்கும், மரக்கலம்- யானைக்கும், மயங்கு கால் - களிமயக்கத்திற்கும் உவமைகளாக உணர்க. மயங்குகால் - சுழற்காற்று மூதூர்க்குக் கடலுவமை.

இதுவுமது

கூரு - சச: காழோர்.........படர்ந்தென

(இ - ள்.) காழோர் கை அற மேலோர் இன்றி - குத்துக்கோற்காரர் தம்மாலாந்துணையும் குத்தியும் மடங்காமையாலே செயலற்றொழியத் தன் மேலிருந்து செலுத்தும் பாகர் யாருமில்லாமல் செய்து; பாகின் பிளவையின் பணை முகந்துடைத்து-அப் பாகர் தோட்டியாற் குத்திப் பிளந்த புண்ணின்பரிய வாயினின்றொழுகும் குருதியைத் தன் கையாற் றுடைத்துக் கொண்டு; கோ இயல் வீதியும் கொடித் தேர் வீதியும் பீடிகைத் தெருவும் பெருங் கலக்குறுத்து - அரசற்கியன்ற வீதியிடத்தும் கொடி உயர்த்திய தேரோடும் வீதியிடத்தும் அங்காடித் தெருவிடத்தும் புகுந்து மாபெருங் கலக்கத்தை மக்கட்குண்டாக்கி; ஆங்கு இருபால் பெயரிய உருகெழு மூதூர் - அவ்வாறே பட்டினப்பாக்கமும் மருவூர்ப் பாக்கமும் என்னும் இருவகைப் பெயரையுடைய அச்சம் பொருந்திய அம் மூதூரின்கண், யாங்கணும்; ஒருபால் படாஅது ஒருவழித் தங்காது - ஒரு பக்கத்திலே படாமலும் ஓரிடத்திலே நில்லாமலும்; பாகும் பறையும் பருந்தின் பந்தரும் ஆகுலமாக்களும் அலவுற்று விளிப்ப - பாகுத் தொழிலோரும் பறையறைவோரும் பந்தர் போல் நிழலிட்டுத் தன்னைச் சூழ்ந்து பறக்கும் பருந்துக் கூட்டமும் ஆற்று மாந்தரும் மனஞ்சுழன்று துன்பக் குரல் எழுப்பும்படி; நீலமால்வரை நிலத்தொடு படர்ந்தென - நீல நிறமுடைய மலையொன்று நிலத்திலே இயங்கினாற் போன்று இயங்காநிற்ப, என்க.

(வி - ம்.) காழ்-குத்துக்கோல். மேலோர்-பிடரிலிருந்து செலுத்தும் பாகர். பாகின் பிளவை-பாகர் தோட்டியாற் குத்திப்பிளந்தபுண். முகம்-புண்ணின் வாய். காழோரும் பாகரும் தன் முகத்திற் குத்துதலாலே பிளவுண்ட பணைத்த முகத்திற் புண்களைக் கையினாற்றுடைத்து எனினுமாம். பீடிகைத்தெரு-அங்காடித்தெரு. இருபாற்பெயரிய என்றது ஈண்டுப் பட்டினப்பாக்கம் மருவூர்ப்பாக்கம் என்னும் இருபகுதியாகிய பெயரையுடைய என்பதே கருத்து. என்னை? ஒருபாற் படாஅது என்பதனால். இனி காவிரிப்பூம்பட்டினம் சம்பாபதி என்னும் இருபாற் பெயரிய மூதூர் என்றல் ஈண்டுச் சிறப்பில்லை. (கால....படர்ந்தென என்னும் அடி முன் கூட்டிப் பொருள் கூறப்பட்டது.)

உதயகுமரன் மறச்செயல்

சுரு - ருo: விடுபரி.........வருவோன்

(இ - ள்.) அரசு இளங்குமரன் விடுபரிக் குதிரையின் விரைந்து சென்று எய்தி – யானையால் நிகழுகின்ற இன்னலைப்

பணிமாக்கள் அறிவித்தவுடனே இளவரசனுகிய உதயகுமரன் தனக்கெனவே விடப்பட்டிருக்கின்ற விரைந்த செலவினையுடைய ஒரு குதிரையில் ஏறி விரைந்து அக் களிற்றியானையின் பால் சென்றடைந்து; கடுங்கண் யானையின் கடாத்திறம் அடக்கி - சினமிக்க அக் களிற்றியானையின் மதவெறியை அடக்கித் தளையிடுவித்து; அணித்தேர்த் தானையொடு - அழகிய தேர்ப் படையோடு; தானும் மணித்தேர் கொடுஞ்சி பற்றி - தானும் ஒரு மணிகட்டி அணி செய்யப் பெற்ற தேரில் ஏறி அத் தேரிலுள்ள இருக்கையில் அமராமல் தன்னைக் காண விரும்பும் மக்களுக்கு நன்கு காட்சி நல்குதற் பொருட்டு அவ் விருக்கையைக் கையாற் பற்றி நின்றவாறே, கார் அலர் கடம்பன் அல்லன் என்பது ஆரங்கண்ணியில் சாற்றினன் வருவோன் - தன்னைக் காண்பவர்க் கெல்லாம் தான் கார் காலத்தே மலருங் கடப்பமாலை யணியும் முருகவேள் அல்லன் சோழமன்னன் மகனே என்னும் உண்மை யைத் தான் அணிந்திருக்கின்ற ஆத்திமாலையினாலே அறிவித்துத் தேரூர்ந்து வருகின்றவன்; என்க.

(வி - ம்.) விடுகுதிரை பரிக்குதிரை எனத்தனித்தனிகூட்டுக. தனக் காக விடப்பட்ட விரைந்த செலவையுடைய குதிரை என்றவாறு. இனி, குதிரைப்படையொடு கூட்டாமல் ஏறியூர்தற் பொருட்டு விடப்பட்ட குதிரையுமாம். கொடுஞ்சி தாமரைவடிவிற்உருகச் செய்து தேர்த்தட்டில் இடப்பட்ட இருக்கை. காலவேகத்தை அடக்கிய வெற்றிபற்றித் தன்னைக் காண்டற்கு அவாவி இருமருங்கும் கூடிநிற்கும் மாந்தர் நன்கு கண்டு களித்தற் பொருட்டு இருக்கையிலமராமல் அதனைப் பற்றிநின்றவாறே வருபவன் என்பது கருத்து. இக்காலத்தும் ஊர்வலம்வருந் தலைவர் இவ்வாறு ஊர்தியில் இராமல் எழுந்து நின்று வருதலைக் காணலாம். உதயகுமரனைக் காண்போர் இவன் முருகனோ உதய குமரனோ என்று ஐயுறுதல் கூடும். ஆதலின் அங்ஙனம் ஐயுறாமைப் பொருட்டு உதய குமரன் ஆத்திசூடி வருகின்றான் என்னும் இது தற்குறிப்பேற்றம் என்னும் அணியாகும்.

கடம்பன் - முருகன். ஆரங்கண்ணி - ஆத்திமாலை. இது சோழ மன்னர்க்குரிய அடையாளப் பூமாலை.

இனி, கொடுஞ்சி என்பதற்கு உ. வே. சா ஐயரவர்கள், "தாமரைப்பூ வடிவமாகப் பண்ணித் தேர்த்தட்டின் முன்னே நடுவது என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்" என எடுத்துக்காட்டி, மேலும் "இது தாமரைமொட்டு வடிவமுள்ளது" என்றும் விளக்கினர். இவ்விளக்கம் விளங்காவிளக்கமாம். என்னை? கொடுஞ்சி என்பது தேரிலிடப்படும் இருக்கையே அன்றி வேறன்று. இவ் வுண்மை அவ்விளக்கங்களால் விளக்கமாகாததோடு அது தாமரை மொட்டு வடிவமுள்ளது என்பது இருக்கைக்குப் பொருந்தாமை யும் உணர்க. இனி அஃது இருக்கையே என்பது சிலப்பதிகாரத்தில் காணப்பட்டது. அதனை—

"கடும்படை மாக்களைக் கொன்று களங்குவித்து
நெடுந்தேர்க் கொடுஞ்சியும் கடுங்களிற் றெருத்தமும்
விடும்பரிக் குதிரையின் வெரிநும் பாழ்பட" (௨௬: ௧௨ - ௧௪.)

என்புழி கொடுஞ்சி என்பது களிற்றெருத்தமும் குதிரையின் வெரிநும் - (முதுகு) போன்று மறவர் இருக்குமிடம் என்பது நன்கு விளக்கமாதல் நுண்ணுணர்வாற் கண்டு கொள்க.

உதயகுமரன் எட்டிகுமரனை வினுதல்

௫௬ - ௬௦ : நாடக............என்றலும்

(இ - ள்.) நாடக மடந்தையர் நலம் கெழு வீதி ஆடகச் செய்வினை மாடத்து ஆங்கண் - நாடகக் கணிகையர் வாழ்கின்ற அழகு பொருந்திய வீதியில் வரும்பொழுது அவ் வீதியிலுள்ள தொரு பொன்னாலியன்ற கலைத்தொழிற் சிறப்பமைந்த ஒரு மாளிகையின் மேல்மாடத்தின்கண், பொளித்த கால் போகு பெருவழிச் சாளரம் - குடையப்பட்ட காற்றுப் புகுதும் பெரிய வழியாகிய சாளரத்தின் அருகிலே; வீதி மருங்கு இயன்ற பூ அணைப்பள்ளி - தெருப்பக்கமாக இடப்பட்டதொரு மலர்ப் பள்ளிக் கட்டிலின் மேல்; தகரக் குழலாள் தன்னொடு மயங்கி - மயிர்ச் சந்தனம் நீவிய கூந்தலையுடைய தன் காமக்கிழத்தியோடே மனம் மயங்கி; மகரயாழின் வான் கோடு தழீஇ வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையின் இருந்தோன் - மகர யாழினது சிறந்த கோட்டினை ஒரு கையால் பற்றிய வண்ணம் எழுதுகோலால் எழுதப்பட்டதோர் ஓவியமே போன்று சிறிதும் இயக்கமின்றி அமர்ந்திருந்த; எட்டிகுமரன் தன்னை - எட்டிப்பட்டம் பெற்ற கொழுங்குடிச் செல்வனாகிய வணிக விளைஞனை உதயகுமரன் கண்டு வினவுபவன்; மாதர் தன்னொடு மயங்கினை இருந்தோய் - நங்கையொருத்தியொடு பெரிதும் மயங்கி இருக்கின்றாய்; நீ உற்ற இடுக்கண் யாது என்றலும் - நண்பனே நீ இவ்வாறு மயங்கியிருத்தற்கு இப்பொழுது நீ எய்திய துன்பம் என்னையோ? என்று வினவுதலும், என்க.

(வி - ம்.) ஆடகம் - ஒருவகைப் பொன். பொளித்த - குடைந்த. கால் - காற்று. பெரிய சாளரம் என்பார் பெருவழி என்றார். அஃது அம்மாளிகையின் மேன்மாடத்து வீதிப்பக்கமாக இருந்தது என்பதும், அச் சாளரத்தின் அருகே பள்ளிக்கட்டில் இடப்பட்டிருந்தது என்பதும் அதன்மேல் எட்டிகுமரன் தன்னை மறந்திருந்தான் என்பதும் அவன் மருங்கே அவன் காமக்கிழத்தியும் வாளாதிருந்தாள் என்பதும் அச் சாளரத்தின் வழியே உதயகுமரன் ஓவியம் போன்றிருக்கும் அவனைக் கண்டு வினவினன் என்பதும் அவன்றானும் செல்வக் குடியிற் பிறந்த பெருநிதிக் கிழவன் என்பதும் தண்டமிழ் ஆசான் சாத்தனார் சொற் சுருங்கத் திறம்பட விளக்கியிருத்தல் உணர்க.

எட்டி - வணிகருட் சிறந்தோருக்கு அரசனால் வழங்கப்படும் ஒரு பட்டம். குமரன் என்றது உதயகுமரனுக்கு நண்பனாகும் அவனது இளமை கூறியவாறு.

மகிழ்ந்திருக்க வேண்டிய செவ்வியில் மயங்கியிருக்கின்றனை என்பான் மாதர்தன்னொடும் மயங்கினை இருந்தோய் என்றான். இங்ஙனம் இவன் மயங்குதற்குக் காரணம் மனத்துன்பமே ஆதல் வேண்டும் என்னும் ஊகத்தால் இவ்வாறு வினவினன். இவ் வூகத்திற்கு இவன் மாதர் அத்துன்பத்திற்குக் கழுவாய் ஏதும் செய்யாமல் வாளாவிருந்தமையே ஏதுவாயிற்று என்க.

## எட்டிகுமரன் காரணம் இயம்புதல்

### ௬௩ - ௭௧ : ஆங்கது..........என்றலும்

(இ - ள்.) ஆங்கு அதுகேட்டு - அவ்வாறு வினவிய உதயகுமரன் குரல் கேட்டவுடனே மயக்கத்தினின்று விழிப் படைந்தவனாய்; எட்டி குமரன் வீங்கு இளமுலையொடு தான் பாங்கிற் சென்று தொழுது ஏத்தி - துணுக்குற்றெழுந்த அவ் வெட்டி குமரன் பருத்த கொங்கைகளையுடைய தன் காமக் கிழத்தி யோடே விரைந்து உதயகுமரன் தேர் மருங்கே எய்திக் கை கூப்பித் தொழுது கொற்றவ நீடூழி வாழ்க! நின் வரவறியாது கெட்டேன் என்று தன் பிழைக்கு வருந்திப் பின்னும் புகழ்ந் தேத்தி; மட்டு அவிழ் அலங்கல் மன்ன குமரற்கு-தேன் துளிக்கும் மலர் மாலை அணிந்த அக் கோவிளங்குமரனுக்கு; எய்தியது உரைப்போன் - விடையாக அங்கு நிகழ்ந்ததனைக் கூறுபவன், வகை வரிச் செப்பினுள் வைகிய மலர் போல் தகைநலம் வாடி மலர்வனம் புகூஉம் மாதவி பயந்த மணிமேகலை யொடு - ஒழுங்காக வரிந்து கட்டப்பட்ட செப்புக் கலத்தினூடே வைக்கப்பட்டிருந்த மலர் போன்று தன் பருவத்திற்குத் தகுதி யான தனது பேரழகு வாடி இத் தெருவிலே நடந்து சிறிது முன்பு சென்றவளாகிய மாதவி ஈன்ற மணிமேகலையைக் கண்டதனாலே; கோவலன் உற்ற கொடுந்துயர் தோன்ற நெஞ்சு இறை கொண்ட நீர்மையை நீக்கி - அக் காட்சி வாயிலாய் அவள் தந்தையாகிய கோவலன் எய்திய கொடிய துயரம் என்னெஞ்சிலே தோன்றவே அது கலங்கிற்றாக அது காரணமாக என்னெஞ்சமானது தன்பால் நிலைபெற்றிருந்த பண்ணிற்கியன்ற நரம்பினை இயக்கும் தன் பண்பிற்கு மாறாக; வெம்பகை நரம்பில் என்கைச் செலுத்தியது; அதற்குப் பகை நரம்பிலே என் கையைச் செலுத்திவிட்டது; இது யான் உற்ற இடும்பை என்றலும் - இதுவே யான் பெருமானுடைய வரவும் அறியாதவண்ணம் பெரிதும் மயங்கி இருந்தமைக்கு எய்திய காரணமாம்; பெருமான் நீடு வாழ்க! என்றறிவுறுத்தலும் என்க.

(வி - ம்.) ஆங்கது கேட்டு என்றது அங்குநிகழும் ஆரவாரமும் அறியமாட்டாதிருந்த அவன் மயக்கமிகுதி தோன்ற நின்றது. வீங்கிள முலை-காமக்கிழத்தி. எய்தியது-நிகழ்ந்த காரணம். பௌத்தப்பள்ளியின் கட்டுக்காவன் மிகுதிபற்றி அதனுள் அடங்கி இருந்த மணிமேகலையை வகைவரிச் செப்பினுள் வைகிய மலர் என்றான். மணிமேகலையினால் தோன்றிய கொடுந்துயர் என்றது, கோவலன் கொலைப்பட்டதனை. துயர் தோன்ற நெஞ்சு தான் மேற்கொண்டிருந்த இசைத்தொழின் நீர்மையில் நீங்கித் தன்னை அறியாது பகைநரம்பில் கையைச் செலுத்திப் பண்ணையும் கெடுத்தது இவ்வாற்றால் மயக்கமுற்றேன் என்றவாறு: பகைநரம்பு-நின்ற நரம்பிற்கு ஆறுவதும் மூன்றுவதுமாகும். 'நின்ற நரம்பிற்கு ஆறும் மூன்றும் சென்று பெற நிற்பது கூடமாகும்' என்பது அடியார்க்கு நல்லார் மேற்கோள் (சிலப் - அ; ௩௩ - ௪).

### உதயகுமரன் அதுகேட்டு மகிழ்ந்து மணிமேகலையைக் கைப்பற்றத் துணிதல்

எ௩ - எ௮ : மதுமலர்............இசைத்தலும்

(இ - ள்.) மதுமலர்த் தாரோன் மனம் மகிழ்வெய்தி - தேன் பொதுளிய மலர்மாலையணிந்த அவ்வரசிளங் குமரனானும் மணிமேகலை மலர்வனத்திற்குச் சென்ற செய்தியை எட்டிகுமரன் வாயிலாய்க் கேட்டுப் பெரிதும் மனம் மகிழ்ச்சி அடைந்து; ஆங்கு அவள் தன்னை என் அணித்தேர் ஏற்றி வருவேன் என்று அவற்கு உரைத்து; நண்பனே! நன்று சொன்னாய் அம் மலர் வனத்தே யானும் சென்று அம் மணிமேகலையை என் அழகிய தேரில் ஏற்றிக் கொண்டு மீண்டும் இங்கு வருவேன் காண் என்று அவ் வணிகனுக்கு அறிவித்துப் பின்னர்; ஆங்கு ஓடு மழை இழியும் மதியம் போல மாடவீதியின் மணித்தேர் கடைஇ - வானத்தே இயங்குகின்ற ஒரு முகிலைக் கிழித்தியங்கும் திங்கள் மண்டிலம் போன்று மாட மாளிகைகளையுடைய வீதியிலே தன் தேரினை மக்கட் கூட்டத்தினின்றும் தனியே செலுத்தி; கார் அணி பூம்பொழில் கடைமுகம் குறுக—விரைந்து முகிலைத் தன் தலையிலே அணிந்து கொள்ளும் உவவனம் என்னும் அப் பூம்பொழிலின் வாயிலை அணுகிய பொழுது; அத் தேர் ஒலி மாதர் செவி முதல் இசைத்தலும் - அத் தேர் செய்யும் ஆரவாரம் அப் பொழிலகத்திருந்த மணிமேகலையின் செவி யிடத்தே சென்று ஒலித்தலாலே என்க.

(வி - ம்.) உதய குமரன் மணிமேகலையின்பால் இயற்கையாகவே காதலுடையவனா யிருந்தும் சித்திராபதியால் தூண்டப்பட்டிருந்தும் அவள் தவப்பள்ளியிடத்தாளா யிருத்தல் அறிந்து அவளை நாடி உயர் குடித்தோன்றலாகிய தான் அங்குப் போதல் பழிதருஞ் செயலாம் என்றுணர்ந்து அதுகாறும் மனமடக்கியிருந்தான் ஆதலின் அவள் இப் பொழுது பூம்பொழிலிலிருக்கின்றமை எட்டிகுமரனால் அறிந்து அங்குச்

சென்று அவளைப் பற்றிவருதல் கூடும் என்று மனமகிழ் வெய்தினன் என்றவாறு. எட்டிகுமரன் உதயகுமரனுக்கு நண்பனுதலானும் அச்செயல் அவனுக்கும் உடன்பாடாம் என்பதனுனும் அவளைத் தேரேற்றி ஈங்கு வருவேன் என்று அவனுக்குக் கூறினன் என்க.

உதயகுமரன் தன்னைக் காணவந்து குழுமிய நகரமாந்தர் குழுவினூடே தேரூர்ந்து வந்தவன் இச்செய்தி கேட்டவுடன் தன்தேரோடு ஒத்தியங்கும் அக்கூட்டம் விலகுமாறு தன்தேரைக் கடவித் தனியே செல்கின்ருன் ஆகவின் அதற்கு ஓடுமழை கிழியும் மதியம் போலத் தேர் கடைஇ என்று உவமை எடுத்தோதினர். மதியம் தேர்க்கும் முகில் மக்கட் கூட்டத்திற்கும் உவமை. இவ்வுவமையின் அழகுணராது இதற்குத் தத்தம் வாய்தந்தன கூறுவாருமுளர்: வானத்தே முகிலாற் சூழப்பட்ட திங்கள் அம் முகில்களியங்குதல் தோன்ருமல் தான் இயங்குதல் போன்று காட்சிதரும். முகில்கள் திங்களைவிட்டு நீங்கிய பொழுதில் திங்கள் முகில்களைக் கிழித்துக்கொண்டு தனித்து விரைந்தியங்குமாறு போலே காட்சி தரும். இது மயக்கக் காட்சியே ஆயினும் அதனையே உவமையாக எடுத்தனர் என்று நுண்ணிதின் அறிந்திடுக. மக்கட்குழுமேனின்று நோக்குவார்க்குக் கூந்தலும் குஞ்சியும் செறிந்து முகில் போறலும் உணர்க.

## தேரொலிகேட்ட மணிமேகலை நிலையும்
## சுதமதி அவளைப் பளிக்கறை புகுத்தலும்

### ௭௧ - ௮௮ : சித்திரா..............இரீஇ

**(இ - ள்.)** ஆயிழை சித்திராபதியோடு உதயகுமரன் உற்று என்மேல் வைத்த உள்ளத்தான் என - அன்னாய்! ஈதொன்று கேள்! சித்திராபதியோடு தொடர்புற்று உதயகுமரன் என்னும் வேந்தன் மகன் என்பால் காமுற்ற நெஞ்சுடையனுக இருக்கின்ருன் என்று; வயந்தமாலை மாதவிக்கு ஒருநாள் இளந்த மாற்றம் கேட்டேன் - வயந்தமாலை என் அன்னையாகிய மாதவிக்கு ஒரு நாள் அறிவித்த செய்தியை யான் என் செவியாலே கேட்டிருக்கின்றேன்; ஆதலின் ஈங்கு என் செவிமுதல் இசைத்தது ஆங்கு அவன் தேர் ஒலி போலும் - ஆகையால் இப்பொழுது என் செவியால் கேட்ட ஒலி அம் மன்னன் மகன் என் பொருட்டு ஊர்ந்து வருகின்ற தேரின் ஒலியே போலும்; என் செய்கு- அங்ஙனமாயின் யான் என் செய்வேன்!'' என அமுது உறு தீஞ்சொல் ஆயிழை உரைத்தலும் - என்று பெரிதும் அஞ்சி அமிழ்தம் போன்ற இனிய சொல்லையுடைய மணிமேகலை சுதமதிக்குக் கூருநிற்ப; சுதமதி கேட்டுத் துளக்குறு மயில்போல் - சுதமதி அவள் கூறிய அஞ்சுதகு சொற்களைக் கேட்டு நடுங்குகின்ற மயில் போன்று நடுங்கி; பாவையைப் பளிக்கறை மண்டபம்புகுக என்று ஒளித்து - பாவை போலும் மணிமேகலையை விரைந்து அழைத்துக் கொடுபோய்ப் பளிக்கு அறை மண்டபத்தினூடே புகுவாயாக என்று கூறிப் புகு

வித்து மறைத்து ; அறை உள்ளகத்து தாழ்கோத்து இரீஇ- அப் பளிக்கறையின் உள்ளே அமைந்த தாழக்கோலைக் கோத்துக் கொண்டு இருக்கச் செய்து என்க.

(வி - ம்.) சித்திராபதியோடுற்று என்றது சித்திராபதி அவ்வழி முயலுதலின் அவளோடு தொடர்புற்று என்பதுபட நின்றது. சித்திராபதி அங்ஙனம் முயலுதல் பின்னரும் அறியப்படும். கிளந்த-கூறிய. போலும்: ஒப்பில் போலி. ஈங்கு-இப்பொழுது. செய்கு-செய்வேன் ; என்செய்கு என்றுள் உய்தற்கு வழிகாணுக் கையறவினல். வேடர்வரவு கண்டு துளக் குறுமயில் என வருவித்துக் கூறலுமாம். கோத்து-கோப்பித்து எனப் பிறவினைப் பொருட்டாய் நின்றது. என்னை? மணிமேகலையை உள்ளகத்தே தாழ்கோத்துக் கொண்டிருப்பித்து என்பதே கருத்தாகலான். தாழக் கோல் உள்ளகத்தேயே அமைந்திருக்குமாகலின் சுதமதி அதனைக் கோத்த லியையாமையும் உணர்க. புறத்திருந்தும் உள்ளகத்தே தாழ் கோத்தலும் கூடுமாம் பிறவெனின் அது பாதுகாவலுக்கு அமையா தென்க. இரீஇ - இருப்பித்து.

## உதயகுமரன் சுதமதியைக் காண்டல்

### அகூ - கூசு : ஆங்கது..........அறிந்தேன்

(இ - ள்.) ஆங்கு அது தனக்கு ஓர் ஐவிலின் கிடக்கை நீங்காது நின்ற நேரிழை தன்னை - அப் பளிக்கறையினின்றும் ஏறத்தாழ ஐந்து விற்கிடைத் தொலைவிற்கு அப்பாற் செல்லாமல் அணுக்கமாகவே நின்ற சுதமதி ; கல்லென் தானையொடு கடுந்தேர் நிறுத்தி - செய்தி யறியாமையாலே தன் தேரினைக் கலீர் என்னும் ஆரவாரத்தோடு தொடர்ந்து வந்த படைமறவரோடே தனியே விரைந்து வந்த தன் தேரினையும் நிறுத்தித் தேரினின்று மிழிந்து தமியனும் உவவனத்தினுட் புகுந்து ; பல்மலர்ப் பூம்பொழில் பகல் முளைத்தது போல் - பல்வேறு மலர்களையுடைய அப் பூம்பொழிலி னூடே ஒரு கதிரவன் தோன்றி வருமாறு போலே காணப்பட்டு மணிமேகலை நிற்குமிடத்தை அறிதற் பொருட்டு ; பூமரச் சோலை யும் புடையும் பொங்கரும் தாமரைச் செங்கண் பரப்பினன் வரூஉம்- பூமரங்கள் செறிந்த சோலையினூடும் பக்கங்களினும் செய்குன்று களின் பாலும் தனது செந்தாமரை மலர் போன்ற கண்ணின் பார்வையைப் பரப்பிப் பார்த்து வருகின்ற ; அரசிளங் குமரன்- அம் மன்னவன் மகன் ஆங்கு நின்றவளை நோக்கி ; ஆரும் இல் ஒரு சிறை நின்றாய் - யாரும் இல்லாத தனியிடத்தே நின்றனை! ; உன் திறம் அறிந்தேன் - உன்னைப் பற்றிய செய்தி யான் முன்னமே அறிந்துள்ளேன் ! என்றான் ; என்க.

(வி - ம்.) அது - பளிக்கறைமண்டபம். வில்-ஒரு நீட்டலளவை. ஒருவில்-நான்கு முழம். ஐவிலின் கிடக்கை என்றது, ஏறத்தாழ இருபது முழத்தொலைவு என்பதாயிற்று. மன்னர் முதலியோரைத் தொழுபவர்

ஐந்துவிற்கிடைக்கு அப்பால் நின்றுதொழவேண்டும் என்னும் ஒரு மரபுமுளது. இதனை, "ஐவிலின்கல நின்றுங் கடிதொழு திறைஞ்சினுற்கு" எனவரும் சிந்தாமணியானு முணர்க (கஎ0ச). தானையொடு நீறுத்தி என்றமையால் தானை மறவரும் விரைந்தோடும் வேந்தன் மகன் தேரினை விடாது தொடர்ந்து வந்துற்றமை பெற்றும். பகல்-கதிரவன். கண்பரப்பினன் - கட்பார்வையை இடையீடின்றிச் செலுத்தி. பரப்பினன்: முற்றெச்சம். மணிமேகலை எங்குளள் என்று ஆராய்வான் அவ்வாறியாண்டும் நோக்கி வந்தான் என்பது கருத்து. கூ0 - நேரிழை தன்னைக் கண்டு என ஒரு சொல்பெய்து இயைக்க. தனியே நின்றனை நீ யார் எனவினவத் தொடங்கியவன் அணுகிய பொழுது அவள் சுதமதியாதலை அறிந்து கொண்டமையின் உன்திறமறிந்தேன் என்கின்றுன் நீ மணிமேகலைக்குத் துணையாக வந்தசெய்தியும் அறிந்துளேன் என்பது குறிப்பு.

### மன்னவன் மகன் மணிமேகலையின்றிறம் சுதமதியின்பால் வினுதல்

கூஎ - கஎ0ச: வளரிள..........உரையென

**(இ - ள்.) வளர் இள வன முலை மடந்தை தளர் இடை அறியும் தன்மையள் கொல்லோ - நன்று நங்காய்!** வளருகின்ற இளைய அழகிய முலையிணையுடைய மணிமேகலை தன் காதலன் காமத்தாலே தளர்கின்ற செவ்வியைத் தானே தெரிந்து கொள்கின்ற தன்மை யுடையளாயிருப்பாளல்லளோ?; **மெல்லியல் விளையா மழலை விளைந்து முளை எயிறு அரும்பி முத்து நிரைத்தன கொல் -** அம் மெல்லியலாளுக்கு எழுத்துருவம் பெறாத இள மழலை எழுத்துருவம் பெற்றுச் செவ்வாயில் பாற் பற்கள் விழுந்து எயிறுகள் முளைத்து வளர்ந்து தம்முள் ஒத்து முத்துக்கள் போன்று நிரல்பட்டு விட்டன வன்றோ?; **செங்கயல் நெடுங்கண் செவிமருங்கு ஓடி வெங்கணை நெடுவேள் வியப்பு உரைக்கும் கொல்-** சிவந்த கயல்மீன் போன்ற அவளுடைய சிவந்த கண் அவளது செவியினருகே அடிக்கடி ஓடிப்போய் வெவ்விய மலரம்புகளை யுடைய நெடிய காமவேள் தம்மைக் கொண்டு உலகினை மருட்டும் வியத்தகு செயலைக் கூறுமல்லவோ; **மணிமேகலை மாதவர் உறைவிடம் தானே ஒரீஇ தமியள் இங்கு எய்தியது உரை என -** இனி இவை கிடக்க மணிமேகலை பெரிய துறவோர் உறைகின்ற இடத்தினின்றும் தானே நீங்கித் தமியளாய் இவ் வுவவனத்திற்கு வந்ததற்குரிய காரணம் என்னை? இதற்கு மட்டுமேனும் விடை தருக! என்று பணிப்ப என்க.

**(வி - ம்.)** ஈண்டு உதயகுமரன் சுதமதியை நோக்கி மணிமேகலையின் உறுப்புகளின் இயல்பையும் அவளியல்பையும் வினுதல் அவற்றின் இயல்பினை அறிந்துகொள்ளுங் கருத்தால் வினவும் அறியாவினுக்கள் அல்ல; அவையெல்லாம் அவள்பாலெழுந்த காமவேட்கை மிகுதியினுலே; இவ்வாறு அவற்றின் இயல்புகளைத் தன்னுள்ளே நினைந்து நினைந்து

தானே இன்புறுதற் பொருட்டாம். ஆதலாற்றான் வினவியதொன்றற்கு விடை வருதலை எதிர்பாராமல் மேலும்மேலும் வினாக்களை அடுக்கிக் கொண்டே போகின்றான். இங்ஙனம் ஆதல் கைக்கிளைத் திணைக்கு இயல்பு. இதனை "சொல்எதிர் பெருஅன் சொல்லி இன்புறல் புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே" எனவரும் தொல்காப்பியத்தானும் உணர்க. (அகத் - ருக).

தளரிடை - காமத்தால் நெஞ்சந்தளரும் செவ்வி. விளையாமழலை- இளமழலை. முத்துக்கள் போன்று நிரல்பட்டனவா? என்றவாறு. சங்கத்தை நீங்கிவந்தமை கருதித் தமியள் இங்கு எய்தியது என்றான். இவ் வினாவிற்கு மட்டும் ஒருதலையாக நீ விடைதருக என்பான் ஈங்கு எய்தியது உரை என்றான்.

## சுதமதி உதய குமரனுக்குக் கூறும் நயவுரைகள்

### கoரு - ககஉ : போதியறை.........கேட்டி

**(இ - ள்.)** மதுமலர்க் கூந்தல் சுதமதி பொதி அறைப் பட்டோர் போன்று உளம் வருந்தி - அதுகேட்ட சுதமதி புழுக் கறையிடத்தே அகப்பட்டுக் கொண்டவர் விடுபெற வழிகாணமல் வருந்துதல் போன்று உள்ளத்தினூடே பெரிதும் வருந்தி; உரைக்கும் - உதய குமரனுக்குக் கூறுவாள்; இளமை நாணி முதுமை எய்தி உரை முடிவு காட்டிய உரவோன் மருகற்கு - தான் இளையனாயிருத்தலால் இவன் முறைகூற அறியான் என்று முறை வேண்டினர் கருதுவர் என்று எண்ணி நாணமெய்தி முதியோனாக உள்வரிக் கோலம் பூண்டு அவையமேறி யிருந்து வழக்குரைக்குஞ் சான்றோர் பாராட்டும் வண்ணம் தீர்ப்புரை வழங்கிய திருமாவளத் தான் வழித் தோன்றலாகிய பெருமானுக்கு; அறிவும் சால்பும் அரசியல் வழக்கும் செறிவளை மகளிர் செப்பலும் உண்டோ - அறிவு பற்றி யாதல் சால்புடைமை பற்றியாதல் அரசியல் வழக்குப் பற்றியாதல் கையிற் செறிய வளையலணியும் பேதை மகளிராகிய எம் மனோர் ஏதேனும் அறிவுறுத்துதலும் உண்டேயோ!; அனையது ஆயினும் யான் ஒன்றுகிளப்பல் - என்னிலை அத் தன்மையுடை யதே யாயினும் பெருமான் வினவியபடியால் யான் ஒன்று கூறத் துணிகின்றேன்; வினை விளங்கு தடக்கை விறலோய் கேட்டி - ஆட்சித் தொழில் விளங்குகின்ற பெரிய கையினையுடைய கொற் றவனே கேட்டருள்க; என்றாள் என்க.

**(வி - ரை.)** வேந்தன் சீரின் ஆந்துணை இன்மையாலே சுதமதி இவனிடமிருந்து மணிமேகலையை மீட்டுக்கொடுபோதற்குச் சிறிதேனும் வழிகாணமல் தன்னுள்ளே வருந்துகின்றாளாகலின் பொதியறைப் பட்டோர் போன்று என உவமை தேர்ந்துரைத்தார். இனி ஒழுக்கொடு புணர்ந்த அவனுடைய விழுக்குடிப்பிறப்பே ஒரோவழி நமக்கு உய்தி தருதல் கூடும் என்னும் கருத்தால் அதனையே அவனுக்கு எடுத்துக்காட்டு வாள். இளமை......மருகற்கு என அவனைப் பாராட்டுஞ் சுதமதியின்

நுண்ணறிவு பாராட்டத்தக்கதொன்றும். இதனால் அவளறிவுறுத்தும் வரலாறு வருமாறு—

கரிகாலன் இளம்பருவத்திலேயே அரசு கட்டிலேறியவன்; அப்பொழுது முறை வேண்டிவந்த வாதியும் பிரதிவாதியும் ஆகிய இருதிறத்தாருமே இத்துணை இளைஞன் நம் வழக்கிற்குத் தீர்வுகாணமாட்டுவனோ என்று ஐயுறுவாராயினர். இதனைக் குறிப்பினால் அறிந்துகொண்ட கரிகாலன் நாளை அறனறிந்து மூத்த அறிவுடையார் ஒருவரைக்கொண்டு நுங்கள் வழக்கிற்கு முடிவு கூறுவிப்பேம் என்று அவரைப் போக்கிவிட்டான். மறுநாள் தானே முதியோன் கோலம்பூண்டு அறங்கூறவையமேறி இருந்து அவ் வழக்கிற்கு முடிவு கூறினன்; அம் முடிவு உலகம் உவப்ப தொன்றாயிருந்தது என்பதாம். இதனை—

‘ உரைமுடிவு காணான் இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப—நரைமுடித்துச்
சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமல் பாகம் படும்'' (உக)

எனவரும் பழமொழி வெண்பாவானு முணர்க.

இனி இதன்கண் சுதமதி ‘‘நினக்கு அறிவும் சால்பும் அரசியல் வழக்கும் செறிவளை மகளிர் செய்பலும் உண்டோ ?'' என்று அவனைப் பாராட்டுஞ் சொற்றொடர் ‘அரசன் மகனே! நீ இப்பொழுது மேற்கொண்டிருக்குஞ் செயல் நின் அறிவுக்கும் பொருந்தாது, சான்றாண்மைக்கும் பொருந்தாது, அரசியலுக்கும் பொருந்தாது. ஆயினும் இவற்றை உனக்குக் கூறுந்தகுதி எனக்கில்லை. என்செய்கோ? என்னும் கருத்தினைக் குறிப்பாக அடக்கியிருத்தலும் உணரற்பாற்று.

கிளப்பல் - சொல்வேன். கேட்டி - கேள்.

## மக்கள் யாக்கையின் இயல்பு

### ககரு - கஉரு : வினையின்.........முன்னேன்

(இ - ள்.) மக்கள் யாக்கை வினையின் வந்தது - மக்கள் பெற்றிருக்கின்ற உடம்பு முன்னே செய்த வினையின் பயனாக வந்து தோன்றிய தொன்றும்; வினைக்கு விளைவு ஆயது - மீண்டும் வினைகள் விளைதற் கிடனாயது; புனைவன நீங்கின் புலால் புறத்து இடுவது - அது தானும் தனது இழிதகைமையை மறைத்தற் பொருட்டுப் புனைகின்ற ஆடை முதலியவற்றைப் புனையாது நீக்கிவிடிலோ புலால் நாற்றத்தைப் புறமெல்லாம் பரப்புமொரு புன்மையுடையதாம்; மூப்பு விளிவு உடையது - கணந்தோறும் முதுமையுறுவதும் ஒருநாள் இறந்து படுவதுமாம்; தீப்பிணி இருக்கை- துன்பந் தரும் பிணிகள் பலவும் இருத்தற் கிடமாம்; பற்றின் பற்று இடம் - பற்றுக்கள் பற்றுதற்கியன்றதோ ரிடமாம்; குற்றக் கொள்கலம் - காம முதலிய குற்றங்களை எல்லாம் தன்பாற்

கொண்டிருக்கின்ற மட்கலம் போல்வதாம்; அரவு அடங்கு புற்றின் செற்றச் சேக்கை - நச்சுப் பாம்பு அடங்கி யிருக்குமொரு புற்றைப் போன்று சினம் என்னும் தீய பண்பு அடங்கியிருக்குமொரு இருக்கைமாம்; அவலம் கவலை கையாறு அழுங்கல் தவலா உள்ளம் தன்பால் உடையது - அவலமும் கவலையும் கையாறும் அழுங்கலும் என்று கூறப்படுகின்ற நால்வகைத் துன்பங்களும் நீங்காததொரு நெஞ்சத்தைத் தன்பால் எஞ்ஞான்றும் கொண்டிருப்பதாம்; இது என வுணர்ந்து - இஃதென்று இதனியல்புகளை ஆராய்ந்துணர்ந்து; மிக்கோய் இதனைப் புறமறிப் பாராய் - அறிவு மிக்க அரசன் மகனே இவ்வுடம்பினை அகம் புறமாக மாற்றி அகக் கண்ணால் நோக்கி யருள்வாயாக!; என்று அவள் உரைத்த இசைபடு தீஞ்சொல் - என்று அச் சுதமதி கூறிய பொருத்தமான இனிய சொல்; சென்று அவன் உள்ளம் சேரா முன்னர் - சென்று அவன் நெஞ்சத்திலே பதியு முன்பே; இளங்கோ முன் பளிங்கு புறத்து எறிந்த பவளப் பாவையின் - இளவரசனாகிய உதயகுமரன் கண் முன்னர்ப் பளிங்குப் பேழையுள் வைக்கப்பட்டுத் தன் உருவத்தைப் புறத்தே தோற்றுவிக்கும் பவளத்தாலியன்றதொரு பாவையைப் போன்று; இளங்கொடி தோன்றும் - மணிமேகலையின் உருவம் பளிக்கறையூடிருந்து தோன்றா நிற்கும் என்பதாம்.

(வி - ம்.) வினை - மனமொழிமெய் என்னும் மூன்றிடத்தும் தோன்றும் பத்துவகைப்படுந் தீவினையும் அவற்றிற்கு மாறாகிய நல்வினைகளுமாம். முற்பிறப்பிலே செய்த வினையின் பயனாகத் தோன்றியது; பின்னும் பிறத்தற்கேதுவாகிய வினைகள் விளைதற்கிடனாவது என்றவாறு. பிணி - புணர்வன - ஆடையும் நறுமணப் பொருள்களுமாம். விளிவு - சாவு. பிணி - வாதபித்த சிலேத்துமங்களின் சமமின்மையாலே உடம்பிற்றோன்றும் எண்ணிறந்த பிணிகள். "பிணியெனப்படுவது சார்பிற் பிறிதாய் இயற்கையிற்றிரிந்து உடம்பு இடும்பைபுரிதல்" என இந்நாலுள் (௩௦ - ௧௮ - ௧) கூறப்படுதலறிக. "மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர், வளிமுதலா எண்ணிய மூன்று" எனவரும் திருக்குறளும் (௯௪௧) நினைக. பற்று - பசைஇய அறிவு, அவ்வறிவு பற்றியிருக்குமிடம் என்க. குற்றம் காமவெகுளி மயக்கங்கள். அரவு அடங்கு புற்றின் என மாறுக. செற்றம் - சினம். சேக்கை - தங்குமிடம். அவலம் - துன்பம் தோன்றியநிலை. கவலை அதுதீர்க்க வழிதேடும் நிலை. கையாறு - வழிகாணாது திகைக்கும் நிலை. அழுங்கல் துன்பத்தே அழுந்திவருந்தும் நிலை. தவலா - நீங்காத, ஈறுகெட்டது. இதுவென இத்தன்மைத்தென்று. அறிவுமிக்கோய் என்க. புறமறிப்பார்த்தலாவது யாதானும் ஒரு பையைப் புறம் அகம் ஆகும்படி புரட்டிப்பார்த்தல், "மற்றதனைப் பைமறியாப் பார்க்கப் படும்" என்பது நாலடி (௪௨). அங்ஙனம் பார்க்குங்கால் 'என்பும் தடியும் உதிரமும்" அன்றி இவ்வாக்கையில் வேறு ஏதும் சிறப்பின்மை அறியப்படும் என்பது குறிப்பு. இங்ஙனம் கூறியது இத்தகைய இழிதகைய யாக்கையே மணிமேகலையின் யாக்கையும், அதனை நீ வளரிளவனமுலை எனவும், முளையெயிறு அரும்பி முத்து நிரைத்தன்ன

எனவும், செங்கயல் நெடுங்கண் எனவும் பாராட்டுதல் நின் அறிவுடைமைக்கு அழகாகுமோ. அங்ஙனம் கூறுதே கொள்'' என்னும் குறிப்பெச்சப்பொருள் தோற்றுவித்தற் பொருட்டாம். இவள்மொழி பொருளியல்புணர்த்தும் மெய்ம்மைத் தன்மைத்தாதல் கருதி இசைபடுதீஞ்சொல் என்றார். அவ்வறையின் பளிங்கு புறத்தே புறப்படவிட்ட இளங்கொடி உருவம் பவளப் பாவையின் இளங்கோமுன் தோன்றும் என இயைப்பினுமாம்.

இனி, இக்காதையினை-காண்பன காண் காண் எனச் சுதமதி காட்ட மணிமேகலை காண்புழி மன்னவன் சிறுவன் வருவோன் இருந்தோன் றன்னை போது என்றலும் உரைப்போன் என்றலும் எய்தி உரைத்துக் கடைஇக் குறுக ஒலிமணிமேகலை செவிமுதல் இசைத்தலும் மணிமேகலை உரைத்தலும் இரீஇ நின்ற நேரிழை தன்னை உதயகுமரன் நின்றோய் அறிந்தேன் தன்மையள் கொல்லோ உரைக்குங்கொல் உரையெனச் சுதமதி உண்டோ கிளப்பல் கேட்டி என்றுரைத்தசொல் சேராமுன்னர் இளங்கோமுன் இளங்கொடி தோன்றுமால் என இயைத்திடுக.

## பளிக்கறை புக்க காதை முற்றிற்று

## ரு. மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை

[ஐந்தாவது மணிமேகலை உதயகுமரன்பால் உள்ளத்தாள் என மணிமேகலை தனக்கு மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய பாட்டு]

அஃதாவது : பளிக்கறைக் குள்ளிருக்கின்றாள் மணிமேகலை என்றறிந்த உதயகுமரன் அவளைக் கைப்பற்றுதற்கு முயன்றும் மாட்டாமையால் இகழ்ச்சி மொழி சில கூறி இவளை இனி யான் சித்திராபதி வாயிலாய் எய்துவேன் என்று காமத் துன்பத்தோடே அச் சோலையை விட்டுப் போயினன் பின்னர்ப் பளிக்கறையினின்று வெளிவந்த மணிமேகலை தன்னெஞ்சமும் நிறை கடந்து அவன் பின்னே செல்லலுற்றது. காமம் பெருவலியுடைய தொன்று போலும் என்று அதனை வியந்து நிற்கின்ற பொழுது இந்திர விழாக்காண அந் நகரத்திற்கு வந்திருந்த மணிமேகலா தெய்வம் அப் பொழிலில் இருக்கின்ற புத்த பீடிகையைத் தொழுதன் மேலிட்டு (அந் நகரத்தில் வாழுகின்ற மாயவித்தை செய்பவளாய்) மணிமேகலைக்கும் சுதமதிக்கும் அறிமுகமாயிருந்த ஒரு மானிட மகள் வடிவத்தோடு அங்கு வந்து புத்த பீடிகையைத் தொழுதமை கூறும் செய்யுள் என்றவாறு.

இதன்கண் - பளிக்கறை உள்ளே தாழக்கோல் கோத்திருந்தமையாலேயும் அது தெய்வத் தன்மையை யுடைய பொழில் என்பது கருதியும், தான் பெருங்குடித் தோன்றலாதலானும், மணிமேகலையை வலிந்து கைப்பற்ற முயலாமலே பக்கலிலே நின்ற சுதமதியை நோக்கி மணிமேகலையினியல்புகளை மன்னன் மகன் வினவுதலும், அவள் மணிமேகலை காமத்தை வென்றவள் சாபமிடும் ஆற்றல் உடையள் ஆதலின் பெருமான் அவளை மறந்தொழிக என்று அறிவுறுத்துதலும், அதுகேட்டு அவன் நகைத்து அவள் அத்தகையளாயினும் யான் கைப்பற்றியே தீர்வேன் என்று கூறிப் பின்னர்ச் சுதமதியின் வரலாறு வினவுதலும், அவள் தன் வரலாற்றைச் சுவைபடச் சொல்லுதலும், பின்னர் உதயகுமரன் அவ்விடம் விட்டகன்று போதலும், மணிமேகலை பளிக்கறையி னின்றும் புறம் போந்து தன்னெஞ்சம் தன்னை இகழ்ந்த அம் மன்னன் மகன் பின்னே சென்றதென்று கூறிக் காமம் அத்தகைய பெருவலியுடையது போலுமென்று

வியந்து நிற்க; மணிமேகலா தெய்வம் மானுடமகள் வடிவத்தோடு அவ்வுவனத்தே வந்து புத்தபீடிகையைத் தொழுதலும், அந்தி மாலை வரவும் அழகாகக் கூறப்பட்டுள்ளன.

இளங்கோன் கண்ட இளம்பொற் பூங்கொடி
விளங்கொளி மேனி விண்ணவர் வியப்பப்
பொருமுகப் பளிங்கின் எழினி வீழ்த்துத்
திருவின் செய்யோள் ஆடிய பாவையின்
விரைமல ரைங்கணை மீன விலோதனத்
துருவி லாளனொ டுருவம் பெயர்ப்ப
ஓவிய னுள்ளத் துள்ளியது வியப்போன்
காவியங் கண்ணி யாகுதல் தெளிந்து
தாழொளி மண்டபந் தன்கையில் தடைஇச்
சூழ்வோன் சுதமதி தன்முக நோக்கிச்
சித்திரக் கைவினை திசை தொறுஞ் செறிந்தன
எத்திறத் தாள்நின் இளங்கொடி யுரையெனக்
குருகுபெயர்க் குன்றங் கொன்றோ னன்னநின்
முருகச் செவ்வி முகந்துதன் கண்ணால்
பருகா ளாயினிப் பைந்தொடி நங்கை
ஊழ்தரு தவத்தள் சாப சரத்தி
காமற் கடந்த வாய்மைய ளென்றே
தூமலர்க் கூந்தற் சுதமதி யுரைப்பச்
சிறையு முண்டோ செழும்புனல் மிக்குழீஇ
நிறையு முண்டோ காமங் காழ்க்கொளின்
செவ்விய ளாயினென் செவ்விய ளாகென
அவ்விய நெஞ்சமொ டகல்வோ னுயிடை
அஞ்செஞ் சாய லராந்தா ணத்துளோர்
விஞ்சைய னிட்ட விளங்கிழை யென்றே
கல்லென் பேரூர்ப் பல்லோ ருரையினை
ஆங்கவ ருறைவிடம் நீங்கி யாயிழை
ஈங்கிவள் தன்னொ டெய்திய துரையென
வார்கழல் வேந்தே வாழ்கநின் கண்ணி
தீநெறிப் படரா நெஞ்சினை யாகுமதி
ஈங்கிவள் தன்னொ டெய்திய காரணம்
வீங்குநீர் ஞால மாள்வோய் கேட்டருள்
யாப்புடை யுள்ளத் தெம்மனை யிழந்தோன்
பார்ப்பன முதுமகன் படிம வுண்டியன்
மழைவளந் தரூஉம் அழலோம் பாளன்
பழவினைப் பயத்தால் பிழைமண மெய்திய
எற்கெடுத் திரங்கித் தன்தக வுடைமையின்

குரங்கு செய்கடற் குமரியம் பெருந்துறைப்
பரந்துசென் மாக்களொடு தேடினன் பெயர்வோன்
கடன்மண்டு பெருந்துறைக் காவிரி யாடிய
வடமொழி யாளரொடு வருவோன் கண்டீங்
கியாங்ஙனம் வந்தனை யென்மக ளென்றே
தாங்காக் கண்ணீ ரென்றலை யுதிர்த்தாங்
கோத லந்தணர்க் கொவ்வே னாயினும்
காதல னுதலிற் கைவிட லீயான்
இரந்தூண் தலைக்கொண் டிந்நகர் மருங்கில்
பரந்துபடு மனைதொறுந் திரிவோ னொருநாள்
புனிற்றாப் பாய்ந்த வயிற்றுப் புண்ணினன்
கணவிரி மாலை கைக்கொண் டென்ன
நிணநீடு பெருங்குடர் கையகத் தேந்தி
என்மக ளிருந்த இடமென் றெண்ணித்
தன்னுறு துன்பந் தாங்காது புகுந்து
சமணீர் காள்நுஞ் சரணென் றேனை
இவணீ ரல்லவென் றென்னொடும் வெகுண்டு
மையறு படிவத்து மாதவர் புறத்தெனைக்
கையுதிர்க் கோடலின் கண்ணிறை நீரேம்
அறவோ ருளிரோ ஆருமி லோமெனப்
புறவோர் வீதியிற் புலம்பொடு சாற்ற
மங்குலோய் மாட மனைதொறும் புகூஉம்
அங்கையிற் கொண்ட பாத்திர முடையோன்
கதிர்சுடும் அமயத்துப் பனிமதி முகத்தோன்
பொன்னிற் றிகழும் பொலம்பூ வாடையன்
என்னுற் றனிரோ என்றெமை நோக்கி
அன்புட னளைஇய அருண்மொழி யதனால்
அஞ்செவி நிறைத்து நெஞ்சகங் குளிர்ப்பித்துத்
தன்கைப் பாத்திர மென்கைத் தந்தாங்
கெந்தைக் குற்ற இடும்பை நீங்க
எடுத்தனன் றழீஇக் கடுப்பத் தலையேற்றி
மாதவ ருறைவிடங் காட்டிய மறையோன்
சாதுயர் நீக்கிய தலைவன் றவமுனி
சங்க தருமன் தானெமக் கருளிய
எங்கோ னியல்குணன் ஏதமில் குணப்பொருள்
உலக நோன்பிற் பலகதி உணர்ந்து
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
இன்பச் செவ்வி மன்பதை யெய்த
அருளறம் பூண்ட ஒருபெரும் பூட்கையின்
அறக்கதி ராழி திறப்பட உருட்டிக்

காமற் கடந்த வாமன் பாதம்
தகைபா ராட்டுத லல்லது யாவதும்
மிகைநா வில்லேன் வேந்தே வாழ்கென
அஞ்சொ லாயிழை நின்திற மறிந்தேன்
வஞ்சி நுண்ணிடை மணிமே கலைதனைச்
சித்திரா பதியாற் சேர்தலு முண்டென்
றப்பொழி லாங்கவன் அயர்ந்து போயபின்
பளிக்கறை திறந்து பனிமதி முகத்துக்
களிக்கயல் பிறழாக் காட்சிய ளாகிக்
கற்புத் தானிலள் நற்றவ உணர்விலள்
வருணக் காப்பிலள் பொருள்விலை யாட்டியென்
றிகழ்ந்தன ளாகி நயந்தோ னென்னாது
புதுவோன் பின்றைப் போனதென் னெஞ்சம்
இதுவோ அன்னாய் காமத் தியற்கை
இதுவே யாயிற் கெடுகதன் றிறமென
மதுமலர்க் குழலாள் மணிமே கலைதான்
சுதமதி தன்னொடு நின்ற எல்லையுள்
இந்திர கோடணை விழாவணி விரும்பி
வந்து காண்குறூஉ மணிமேகலா தெய்வம்
பதியகத் துறையுமோர் பைந்தொடி யாகி
மணியறைப் பீடிகை வலங்கொண் டோங்கிப்
புலவன் றீர்த்தன் புண்ணியன் புராணன்
உலக நோன்பின் உயர்ந்தோ யென்கோ
குற்றங் கெடுத்தோய் செற்றஞ் செறுத்தோய்
முற்ற உணர்ந்த முதல்வா என்கோ
காமற் கடந்தோய் ஏம மாயோய்
தீநெறிக் கடும்பகை கடிந்தோய் என்கோ
ஆயிர வாரத் தாழியன் றிருந்தடி
நாவா யிரமிலேன் ஏத்துவ தெவனென்
றெரிமணிப் பூங்கொடி இருநில மருங்குவந்
தொருதனி திரிவதொத் தோதியி னொதுங்கி
நிலவரை யிறந்தோர் முடங்குநா நீட்டும்
புலவரை யிறந்த புகாரெனும் பூங்கொடி
பன்மலர் சிறந்த நன்னீ ரகழிப்
புள்ளொலி சிறந்த தெள்ளரிச் சிலம்படி
ஞாயி லிஞ்சி நகைமணி மேகலை
வாயின் மருங் கியன்ற வான்பணைத் தோளி
தருநிலை வச்சிரம் என இரு கோட்டம்
எதிரெதி ரோங்கிய கதிரிள வனமுலை
ஆர்புனை வேந்தற்குப் பேரள வியற்றி

ஊழி யெண்ணி நீடுநின் றோங்கிய
ஒருபெருங் கோயிற் றிருமுக வாட்டி
குணதிசை மருங்கின் நாண்முதிர் மதியமும்
குடதிசை மருங்கிற் சென்றுவீழ் கதிரும்
வெள்ளிவெண் டோட்டொடு பொற்றோ டாக
எள்ளறு திருமுகம் பொலியப் பெய்தலும்
அன்னச் சேவல் அயர்ந்துவிளை யாடிய
தன்னுறு பெடையைத் தாமரை யடக்கப்
பூம்பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண்
டோங்கிருந் தெங்கின் உயர்மட லேற
அன்றிற் பேடை அரிக்குர லழைஇச்
சென்றுவீழ் பொழுது சேவற் கிசைப்பப்
பவளச் செங்காற் பறவைக் கானத்துக்
குவளை மேய்ந்த குடக்கட் சேதா
முலைபொழி தீம்பால் எழுதுக ளவிப்பக்
கன்றுநினை குரல மன்றுவழிப் படர
அந்தி யந்தணர் செந்தீப் பேணப்
பைந்தொடி மகளிர் பலர்விளக் கெடுப்ப
யாழோர் மருதத் தின்னரம் புளரக்
கோவலர் முல்லைக் குழன்மேற் கொள்ள
அமரக மருங்கிற் கணவனை யிழந்து
தமரகம் புகூஉம் ஒருமகள் போலக்
கதிராற்றுப் படுத்த முதிராத் துன்பமோ
டந்தி யென்னும் பசலைமெய் யாட்டி
வந்திறுத் தனளால் மாநகர் மருங்கென்.

—

# ரு. மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை

## உரை

### பளிக்கறையின் புறந்தோன்றிய மணிமேகலையின் உருவத்தைக் கண்ட உதயகுமரன் ஓவியமென்றே கருதி வியத்தல்

### க - எ : இளங்கோன்.........வியப்போன்

(இ - ள்) இளங்கோன் கண்ட இளம் பொற்பூங்கொடி விளங்கு ஒளி மேனி - இளவரசனாகிய உதயகுமரன் கண்ட பளிக்கறைப் புறத்தே புறப்படவிட்ட இளமையுடைய பொன்னிறமான காமவல்லி போல்வாளாகிய மணிமேகலையின் விளங்குகின்ற ஒளியுடைய திருமேனியை; விண்ணவர் வியப்ப - அமரர்களும் வியக்கும்படி; ஓவியன் பளிங்கின பொருமுக எழினி வீழ்த்து - ஓவியத் துறை கைபோகிய ஓவியப் புலவன் ஒருவன் பளிங்குநிறம் உடையதொரு பொருமுக எழினி என்னும் திரைச் சீலையைத் தூககவிட்டு அதன்மேல் தான வரையும் ஓவியம்; திருவின் செய்யோள் ஆடிய பாவையின் - செல்வததிற் கியனற தெய்வமாகிய திருமகள் மேற்கொண்டு ஆடிய கொல்லிப் பாவையின் உருவம் போனறு; விரைமலர் ஐங்கணை மீன விலோதனத்து உருவிலாளனெடு உருவம் பெயர்பப - மணங்கமழும் மலரம்புகளையும் மீனக் கொடியையும் உடைய காமவேளின குறும்பினலே தன்னைக் கணடோருடைய உருவத்தை மாறுபடுத்த வேண்டும் என்று; உள்ளத்து உள்ளியது - தன் உளளத்திலே கருதி வரையப்பட்டதோர் ஓவியமே எனறு கருதி; வியப்போன - மருண்டு நோக்குபவன்; என்க.

(வி - ம்.) உதயகுமரன் பளிக்கறையின் உள்ளிருந்து தோன்றும் மணிமேகலையின் விளங்கொளிமேனியை அதனுட்புறத்தே சிறந்த ஓவியனால் வரையப்பட்டதோர் ஓவியமே என்று கருதி அவ்வோவியம் தனது காமத்தைப் பெருக்கி உடம்பை மெலிவித்தலாலே, இதனை எழுதியவன் இவ்வோவியம் தன்னைக் கண்டோரை இவ்வண்ணம் மெலிவித்தல் வேண்டும் என்று கருதியே வரைந்திருத்தல் வேண்டும் என்று துணிந்து பின்னும் அவன் கலைத்திறத்தை வியந்து நிற்கின்முன் என்பதாம்.

பொற்கொடி - கற்பகத்தின் மேற்படரும் ஒரு வானுலகத்துப் பூங்கொடி. ஈண்டு மணிமேகலையின் நெஞ்சமும் உதயகுமரன் என்னும் கற்பகத்தின் மேற்படர்தலின் அப் பொற்கொடியையே உவமை எடுத்தார். இது கருத்துடை அடைகொளி என்னும் அணியின் பாற்படும். பாவை -

கொல்லிப்பாவை. அஃதாவது—திருமகள், போர்க்கு வந்தெதிர்ந்த அசுரர் மோகித்து மெலிந்து வீழும்படி புனைந்துகொண்டதொரு பெண்மைக்கோலம். இவ்வுருவம் கொல்லிமலையின் மேற்புறத்தில் வரையப்பட்டுளதென்றும் அதனைக் கண்டோர் அப்பொழுதே மோகித்து மயங்குவர் என்றும் கூறுப. இவ்வோவியனும் அப்பாவையுருவத்தைக் கண்டோரை மயக்குறுத்தும் கருத்தோடு இதனை இங்கு வரைந்துள்ளானென்று இம்மன்னன்மகன் கருதுகின்றான். என்னை? அதுதானும் தன்னைப் பெரிதும் மோகித்து மயங்கும்படி செய்தலான். பாவையைக் கண்டவுடனே காமவேள் குறும்பும் கண்டோர் உளத்தே தோன்றி அவற்றின் மெய்ப்பாட்டையும் தோற்றுவித்து உருவத்தை மாறுபடுத்துதலின் இங்ஙனம் உடனிகழ்ச்சிப் பொருளுடைய ஒடு உருபு பெய்து கூறியவாறு காமவேளின் செயலும் உடன் தோன்றுதல் பற்றி அவனுடைய மலரம்புகளையும் உடனோதினன். பளிங்கின் நிறமமைந்த படாஅஞ் செய்து அதன்மேல் எழுதியிருந்தலின் அது வியத்தகு செயலாயிற்று. தன்னை அது தன்பாலீர்த்தலின் உருவம் பெயர்ப்ப உள்ளியதிது என்று கருதினன்.

## உதயகுமரன் செயலும் சொல்லும்

அ - கஉ : காவியம்..........உரையேன

(இ - ள்.) காவியங் கண்ணி ஆகுதல் தெளிந்து - வியந்து கூர்ந்து நோக்கிய உதயகுமரன் அதன் கண்ணழகிலீடுபட்டு நெடிது நோக்கியவழி அவை இமைத்தலைக் கண்டு நீலமலர் போலும் கண்களையுடைய மணிமேகலையே இவள் ஓவியம் அல்லள் என்று ஐயந்தெளிந்து அவளைக் கைப்பற்றுதற் பொருட்டு; ஒளி தாழ் மணடபம தன கையின தடைஇச் சூழவோன - ஒளி தங்கியிருக்கின்ற அப் பளிக்கறை மண்டபத்துள்ளே தானும் புகவிரும்பி அதற்கு வாயில் காணுதற்கு முயன்று அஃதிருக்குமிடம் அறிதற்குத் தன கையாலே தடவிப் பார்த்தவண்ணம் அதனைச் சுற்றி வருபவன்; சுதமதி தன் முகம் நோக்கி-சுதமதியை நோக்கி நஙகாய்! இம மண்டபம் சாலவும் அழகியது காண்!; சித்திரக் கைவினை திசைதொறுஞ் செறிந்தன - இதனுள் நான்கு பக்கங்களினும ஓவியங்களாகிய கலைஞர் செய்தொழிற்றிறம் செறிந்துளளன ஆதலால் என்று கூறிப பின்னரும அவளை நோக்கி; எத்திறத்தாள் நின் இளங்கொடி உரை என - இவை கிடக்க; உன் தோழியாகிய மணிமேகலை எத்தன்மையுடையவள் இதற்கு விடைதருதி என்றிரப்ப என்க.

(வி-ரை.) மணிமேகலையை ஓவியம் என்று கருதி அதன் உறுப்புநலங்களைக் கூர்ந்து பார்த்து வருங்கால் அவள் தன்னை நோக்கியிருக்கும் அவள் கண்களில் தன்பார்வையை நேருக்கு நேர் செலுத்தியவழி அவள் நாணத்தால் இமைகளை இறுக மூடிக்கொண்டனள் ஆதலின் இவ்வுருவம் மணிமேகலையின் உருவமே என்று தெளிந்துகொண்டான் எனினும் இத்துணையும் குறிப்பாகப் புலப்படுமாறு பிற சொல்லாற் கூறுது "காவியங்

கண்ணி ஆகுதல் தெளிந்து'' என அவன் தெளிவிற்குக் காரணமான கண் மேலிட்டு அறிவுறுத்தும் நுணுக்கம் பேரின்பம் பயப்பதொன்றாம்.

பின்னும் பளிக்கறையுள் புகுந்து அவளைக் கைப்பற்றுவதே தன் கருத்தாகவும், உட்புகுதும் வழிநாடி நாற்புறமும் சூழ்வருபவன் அஃதுட்புறம் தாழ்கோத்த பளிங்குக் கதவமாதலின் உட்புகுதவும் இயலாமல் தானுற்ற ஏமாற்றத்தையும் உள்ளிருப்பவள் மணிமேகலை என்று தான் அறிந்து கொண்டமையையும் சுதமதி அறியாவண்ணம் மறைத்தற் பொருட்டு இவ்வரசிளங்குமரன் சுதமதி தன் முகம் நோக்கிச் 'சித்திரக் கைவினை திசை தொறும் செறிந்தன'' என்று கூறிக்கொள்கின்றான், என்னை? தான் இம் மண்டபத்தினூடே வரைந்துள்ள ஓவியங்களைக் காண்டற்கு விழைந்தே அதனைச் சுற்றி வந்ததாகவும், பளிக்குமண்டபத்தின் நான்கு பக்கங்களினும் மணிமேகலை உருவம் தோன்றுவதனைத் தான் இதன் நாற்புறத்தும் சித்திரச் செய்வினை செறிந்துள்ளதாக நினைப்பதாகவும் அச் சுதமதி நினைப்பாளாக என்பதே அவன் கருத்தாதலின் என்க. இஃது எத்துணை நுணுக்கமான கருத்து! நோக்கி மகிழ்மின்.

நன்று, ஓவியக்காட்சி கண்டாயிற்று. இனி, என்னை? சுதமதியை மதியுடம்படுவித்து அவள் வாயிலாகவே மணிமேகலையை எய்தக்கருதி அதற்குத் தோற்றுவாய் செய்பவன் தான் அவள் பின்னிற்கும் தன் எளிமைதோன்ற, 'நின் இளங்கொடி எத்திறத்தாள்' என்று நம்மனோரும் அவன் திறத்திலே பரிவுகொள்ளுமாறு வினவிச் செயலற்று நிற்றல் உணர்க. இதன்கண் மணிமேகலையை நின் இளங்கொடி என்றது "நீ நினைத்தவண்ணம் அவள் நடப்பாள் அவளை என் முயற்சியால் எய்தவியலாது'' எனத் தான் அவள் பின்னிற்றலைத் தெற்றென வுணர்த்துதல் இயலாமையின் குறிப்பாக அவள் உணரும் பொருட்டே இவ்வாறு வினவுகின்றான். இவ்வாற்றால் இக் காதனிகழ்ச்சி அகப்புறமாகி, காட்சி ஐயம் தெளிதல் மதியுடம்படுத்தல் என்னும் துறைகளை யுடையதாதலும் உணர்க.

### சுதமதியின் பரிவுரை

### ௧௫ - ௧௯ : குருகு.........உரைப்ப

(இ - ள்.) குருகு பெயர்க்குன்றம் கொன்றோன் அன்ன நின் முருகச் செவ்வி முகந்து தன கண்ணால் பருகாள் ஆயின் - கிரவுஞ்சம் என்னும் பறவையின் பெயர் கொண்ட மலையைத் தகர்த்தொழித்த முருக வேளையே ஒத்து விளங்குகின்ற நினனுடைய இவ்விளமைப் பேரழகினை நிரம்ப முகந்துகொண்டு தன் கண்களாகிய வாயால் பருகா தொழிவாளாய்விடின் பின்னர் வாய்ச் சொற்கள் என்ன பயனுமில; பைந்தொடி நங்கை - அவளுடைய அத் திட்பம் ஒன்றே அவள்; ஊழ்தரு தவத்தள் சாப சரத்தி காமற் கடந்த வாய்மையள் - பற்பல பிறப்பிலே அடிப்பட்டு வருகின்ற ஊழாலே தரப்பட்ட மாபெருந் தவத்தையுடையாளென்பதும் சாபமாகிய கொல்கணைகளை யுடையாள் என்பதும் காம வேளின் குறும்புகளையெல்லாம்

கடந்துயர்ந்த மெய்யுணர்வுடையாள் என்பதும் தேற்றமாம் அன்றோ என்று; தாமலர்ச் சுதமதி உரைப்ப - தூய மலர் போன்ற உள்ளமுடைய அச் சுதமதி அவளுடைய திறம் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் இஃதென்று அறிவியா நிற்ப எனக.

(வி - ரை.) மன்னவன் மகனே உன்னைக் கண்டும் நிலைகலங்காமல் அம் மணிமேகலை இருப்பாளானால் பின்னர் அவளைப்பற்றி நீ கேட்டறிவதற்கே யாதொன்றுமில்லை. உன்னைக் கண்டுவைத்தும் உன் அழகை வாரிப் பருகாத அவள திட்பமே அவள் மாபெருந் தவவாற்றல் உடையாள் என்பதையும் அவள் சாபமிடும் ஆற்றல் பெற்றிருப்பாள் என்பதையும் மெய்யுணர்வு பெற்றவள் என்பதையும் அறிவுறுத்தும் சான்றுதமன்றோ என்கின்றாள். இதனால் உன்னை அவள் நேருக்குநேரே பார்த்தும் நிலைகலங்காதிருத்தலை நீயுந்தான் அறிகின்றனை, யானும் நீ மறைத்தாயேனும் அறிகின்றேன். ஆதலால் இதனை நீயே உணர்ந்து கொள்ளலாமே? என்னைக் கேட்பது வீண் என்ற இடித்துரையைக் கேட்டற்கினிய மொழிகளாலே கூறும் இவள் நாநலம் வியத்தற்பாலதாம்.

## உதயகுமரன் பின்னும் பின்னிலை முயறல்

### கக - உஎ : சிறை..........உரையென

(இ - ள்.) செழும்புனல் மிக்குழீஇ சிறையும் உண்டோ காமம் காழ் கொளின் நிறையும் உண்டோ - அது கேட்ட உதயகுமரன் நன்று நங்காய்! நீ அறியாது கூறுதி, வளவிய நீர் மிகுப் பெருகினால் அதனைத் தடுத்து நிறுத்தும் அணைதானும் உளதாமோ உளதாகாதன்றே! அங்ஙனமே ஆடவராயினென? பெண்டிர் ஆயினென்? காமப்பண்பு மிக்குப் பெருகியக்கால் அதனைத்தடுத்து நிறுத்தும் நெஞ்சுறுதியும உளதாமோ? ஆகாது காண்; செவ்வியள் ஆயின் என் செவ்வியள் ஆக என - மற்று மணிமேகலைதான நீ கூறுமாறு காமற் கடந்த வாய்மையளாகும் செம்மையுடையளாயினும் அதனால் என்? அவ்வாறே அவள் செம்மையுடையளாகவே இருந்திடுக! என்று கூறி; வவ்விய நெஞ்சமொடு அகல்வோன - அவள் திருவுருவத்தைக் கவர்ந்து கொண்டதொரு கள்ளவுள்ளத்தோடே அவ் வுவவனத்தை விட்டுச் செல்லத் தொடங்குபவன்; ஆயிடை - அதற்கிடையிலே மீண்டும் சுதமதியை நோக்கி; அம்செஞ்சாயல் - அழகிய செம்மையுடைய மெல்லியால! நீதானும; அராந்தாணத்துள் ஓர் விஞ்சையன் இட்ட விளங்கிழை என்று - அருகன் கோயின் மருங்கில் யாரோ ஒரு விச்சாதரனால் பற்றிக் கொணர்ந்து விடப்பட்ட பெண் என்று; கல் என பேரூர் பல்லோர் உரையினை - கல்லென்று ஆரவாரிக்கும் இப் பெரிய நகரத்திலே பலராலும் கூறப்படும் கூற்றையுடையை அல்லையோ!; ஆங்கு

அவர் உறைவிடம் நீங்கி - அவ்வருகத்தானத்தே அவ்வாருகதர் உறையுமிடத்தினின்றும் விலகி; ஈங்கு ஆயிழை இவள் தன்னொடு எய்தியது உரை எனா - இங்குப், பௌத்தர் சங்கத்திற் சேர்ந்திருக்கின்ற மணிமேகலையாகிய இவளோடு பகவனதாணையில் பன்மரம் பூக்கும் பௌத்தர் உவவனத்திற்கு வந்ததற்கியன்ற காரணம் என்னையோ? கூறுதி என்று பணிப்ப என்க.

(வி - ம்.) சுதமதி மணிமேகலையைக் காமற் கடந்த வாய்மையள் என்றதனை மறுத்து அவட்குப் பேதைமையூட்டுவான் "சிறையும் உண்டோ......செவ்வியள் ஆக" என்கின்றான். இதனால் நீ காமப்பண்பின் இயல்பறிவாயல்லை; ஒரோவழி மணிமேகலைக்குக் காமம் இன்னும் காழ் கொண்டிலது போலும்! அது காழ்கொள்ளும் பொழுதுதான் அவள் காமற் கடந்த செவ்வியளா? அல்லளா? என்பது தெரியவரும்; அது காழ்கொள்ளும் துணையும் செவ்வியளாகவே இருந்திடுக என்று அசதியாடுகின்றான். இவ்வாறு உதயகுமரன் கூறுவதன் கருத்து மணிமேகலை தன்னைக் கண்ணிமையாது பார்த்து நின்றவள் தான் அவள் கண்ணை நோக்கிய பொழுது இமைத்துக் கண்களை மூடிக்கொண்டமையால் அவள் தன்னைப் பெரிதும் காதலிக்கின்றாள் என்னும் குறிப்புணர்ந்தமையாலே; யாம் இங்ஙனமாகவும் அவளியல்பறியாது பேசும் சுதமதியை எள்ளிப்பேசிய பேச்சே இவை என்றுணர்க. வவ்விய நெஞ்சமொடு என்றுகொண்டு அவள் உருவத்தை முழுதும் (தன்னுள்ளக் கிழியில் வரைந்து கவர்ந்துகொண்ட நெஞ்சமொடு என்பதே சிறப்பு. அவ்வியம் என்று பிரித்து அழுக்காறு என்று பொருள் கொண்டு "பிறர்க்கு இவள் உரியளாதல் கூடுமோ என்பதால் உளதாகிய பொறாமை" என்பாருமுளர். இங்ஙனம் கூறுவோர் அக்கூற்று அவனது ஆண்மையையே இழுக்குப்படுத்துதலை அறியார் போலும்.

இழுக்கொடு புணரா விழுக்குடிப்பிறப்பினனாதலின் கடவுள் மலர் வனத்தில் அப்பாலும் காமவிளையாடல் புரியத்துணியாது அகல்வோன் பின்னும் சுதமதியை அவளது உசாஅத்துணைத் தோழியாகவே கருதி அவளைப் பின்னும் மகிழ்வுடைப்படுத்த வேண்டி அவள் வரலாற்றை நன்கறியும் பொருட்டே நங்காய் உன்னை யான் 'அராந்தாணத்து விஞ்சையன் இட்ட விளங்கிழை' என்னுந்துணையே அறிவேன்: அங்ஙனமாயின் இவட்கும் உனக்கும் தொடர்பு எவ்வாறுண்டாயது என்றறிய இங்ஙனம் வினவினன் என்க.

ஆவர் உறைவிடம் என்றது ஆருகதர் உறையும் அருகத்தானத்தை. அராந்தாணம் என்பதும் அது.

### சுதமதி உதயகுமரன் வினாவிற்கு விடைகூறுதல்

௨௮ - ௯௮: வார்கழல்.........பெயர்வோன்

**(இ - ள்.) வார் கழல் வேந்தே வாழ்க நின் கண்ணி - நெடிய வீரக்கழலணிந்த வேந்தர் பெருமானே! நீடூழி வாழ்க நின் ஆரங்கண்ணி; நீ நெறிப்படாத நெஞ்சினை ஆகுமதி - நின முன்**

னோர் போன்று நீதானும் தீய நெறியிலே செல்லாத நன்னர் நெஞ்சம் உடையையாகுக!; வீங்கு நீர் ஞாலம் ஆள்வோய் ஈங்கு இவள் தன்னொடு எய்திய காரணம் கேட்டருள - கடல் சூழ்ந்த நிலவுலகத்தை ஆளும் தகுதிமிக்கோய்! யான இவ்வுவவனத்திற்கு இம் மணிமேகலையோடு கூடி வருதற்கியன்ற காரணத்தைக் கூறுவல் திருச்செவியேற்றருள்க!; யாப்புடை உள்ளத்து எம் அனையிழந்தோன - என்னை இழந்ததோடன்றிக் கற்புடைமையாற் பெரிதும் தனக்குப் பொருந்திய உள்ளத்தையுடையளாயிருந்த எம் அன்னையாகிய தன் மனைவியையும் இழந்துவிட்டவனாகிய என் தந்தையாகிய; பார்ப்பன முதுமகன் படிமவுண்டியன் - பார்ப்பன முதியவனாகிய எத்தகையனோவெனின் நோற்றுப் பட்டினி விட்டுண்பவனும்; மழை வளம் தரூஉம் அழலோம்பாளன் - உலகிற்கு மழை வளத்தைத் தருதற்குரிய வேள்வித்தீயை முறைப்படி ஓம்புபவனும் ஆவான்காண்!; பழவினைப்பயத்தால் பிழை மணம் எய்திய என கெடுத்து இரங்கி - பழவினையின் பயனாகத் தவறான மணம் எய்திய என்னை இழந்து அன்பு மிகுதியால் என பொருட்டுப் பெரிதும் இரககமுற்று; தன் தகவு உடைமையின் - தனக்குரிய பெருந்தகைமையை உடையவனாயிருந்தமையாலே; குரங்கு செய்கடல் குமரியம் பெருந்துறை - குரங்குகளாலே இயற்றப்பட்ட திருவணையையுடைய கடலின்கண் அமைந்த பெரிய புண்ணியத் துறையாகிய கன்னியாகுமரித் துறையில் ஆடுதற் பொருட்டு; பரந்து செல் மாக்களொடு - பரவிச் செல்லாநின்ற மாந்தரோடு கூடி; தேடினன் பெயர்வோன் - என்னைத் தேடிக் காணுங் குறிக்கோளோடு வருபவன்; என்க.

(வி - ர.) தீநெறிப்படரா நெஞ்சினையாகுமதி என்றது வாழ்த்துவதுபோன்று அப் பெருந்தகைக்கு இன்றியமையாத அறிவுரை கூறியவாறும். நீயோ உலகம் ஆளும் வேந்தன்: யாமோ ஆற்றவும் எளியேமாகிய பிக்குணிகள்; எம்திறத்திலே பெருமான் ஏதம் செய்யாதொழுகுதல் வேண்டும் என்று நினைவூட்டுகின்றாள். மதி: முன்னிலையசை. காரணம் கூறுவல் கேட்டருள் என்றவாறு.

எம்மனை - எம் அன்னை என்னையிழந்ததேயன்றியும் எம் மன்னையையும் இழந்தோன் என்பதுபட நிற்றலின் இறந்தது தழீஇய எச்சவும்மை தொக்கது. எம்மனை என்றது எம்மூர் என்றாற் போலத் தன்னுடன் பிறந்தாரையும் உளப்படுத்தபடியாம். உயர்ந்த தாய் தந்தையர்க்குத் தோன்றியும் பழவினைப் பயத்தாற் பிழைமணம் எய்தினேனல்லது என் பிழையன்று என்பாள் தந்தையையும் தாயையும் பெரிதும் பாராட்டுகின்றனள். படிமம் - நோன்பு. தன்தகவு என்றது அந்தணனுக்கியன்ற அருளுடைமையை. குரங்கு செய்கடல் என்றது தென்கடல் என்னுமாத்திரையை அறிவித்து நின்றது. குரங்கு அணைசெய்த கடல் என்றவாறு. குமரி - கன்னியாகுமரி. குமரி ஒரு நதி என்பதும் அஃது கடல்கோட்பட்டமையின் அக்கடலும் குமரிக்கடல் எனப் பெயர்

பெற்றதெனவும் கூறுப. "நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்" என்பது சிலப்பதிகாரம். (௧ : ௧. என்னைத் தேடியவனுய் என்க. அங்ஙனம் அவன் தகவுடைமையை ஏதுவாக்கினள்.

## இதுவுமது

### ௩௬ - ௪௬ : கடல் மண்டு..........திரிவோன்

(இ - ள்.) கடல் மண்டு பெருந்துறைக் காவிரி ஆடிய வடமொழியாளரொடு வருவோன் - கடலிற் புகுதும் பெரிய துறையையுடைய காவிரியில் நீராடுதற் பொருட்டு ஈண்டு வருகின்ற வடமொழியையுடைய ஆரியரொடு கூடி வருபவன்; ஈண்டு என் மகள் ஈங்கு யாங்கனம் வந்தனை என்றே - என்னைக் கண்டு அந்தோ என அருமை மகளே! நீ இந்நகரத்திற்கு எவ்வாறு வந்துற்றனை என்று சொல்லி வாய்விட்டுக் கதறியழுது; தாங்காக் கண்ணீர் என் தலை உதிர்த்து - தடைசெய்தற்கியலாத அன்புக் கண்ணீரை என தலைமேல் உதிர்த்து; ஓதல் அந்தணர்க்கு ஒவ்வாவன் ஆயினும் - பிழை மணம் பட்டமையாலே ஓதற்றொழிலை முதன்மையாகக் கொண்ட பார்ப்பன வாழ்க்கைக்குப் பொருந்தேன் ஆயதனையும் பொருளாகக் கருதாத; காதலன் ஆதலின ஆங்குக் கைவிடலீயான் - பேரன்புடையவன் ஆதலாலே அவ்விடத்தையே என்னைக் கைவிட்டுப் பிரிதலாற்றானாகி; இரந்தூண் தலைக்கொண்டு - அந்தணரில்லத்தே பிச்சை புக்குண்ணும் வாழ்க்கையை மேற்கொண்டு; இந்நகர் மருங்கின பரந்துபடு மனைதொறும் திரிவோன - பிச்சையின பொருட்டு இம்மாநகரத்திலே பரவலாக வமைந்துள்ள பார்ப்பனர் இல்லந்தோறும் சென்று திரிபவன்; என்க.

(வி - ரை.) கடல் மண்டு பெருந்துறை என்றது காவிரி கடலொடு கலக்கும் புகாரை. அதனாலேயே அதற்குப் புகார் நகரம் என்பது பெயராயிற்று. புகார் - சங்கமுகம். அது புண்ணியத் தீர்த்தமாதலின் நீராடு பெருந்துறையும் ஆயிற்று வடமொழியாளர் என்றது ஆரியப் பார்ப்பனரை. என் மகள் ஈங்கு யாங்கனம் வந்தனை என்றது அரற்று; வினவன்று. என்று கதறியழுதனன் என்பது கருத்து. தாங்காக் கண்ணீர் - தடுத்தலியலாத அன்புக் கண்ணீர் என்றவாறு; ஈண்டு,

> "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ழார்வலர்
> புன்கணீர் பூசல் தரும்"
>
> (குறள் - ௭௧)

எனவரும் பொன்மொழி நினைக்கத் தகும். தகுதி பற்றி, பார்ப்பனர் மனைதொறும் என்றும்.

## இதுவுமது

### ௪௯ - ௫௫ : ஒருநாள்.............கோடலின்

(இ - ள்.) ஒருநாள் புனிற்றுப் பாய்ந்த வயிற்றுப் புண்ணினன் - அங்ஙனம் திரிகின்ற நாள்களுள் வைத்து ஒருநாள் அணித்தாக ஈன்ற ஆவொன்று சினந்து பாய்ந்தமையாலே அதன் கோட்டாற் கிழிக்கப்பட்ட பெரியபுண்ணை வயிற்றிலுடையவனாய்; நிணம்நீடு பெருங்குடர் கணவிரமாலை கைக்கொண்டு என்ன கையகத்து ஏந்தி - அப்புண்வழியே நிணத்தோடு கூடிய நீண்ட தனது பெருங்குடர் சரிந்துகுவது அறுந்தொழியா வண்ணம் செவ்வலரிப்பூமாலையைச் சுருட்டிக் கையிலேந்தி வருமாறுபோலே தோன்றும்படி தன் கையகத்தே தாங்கி ஏந்திக்கொண்டு; என்மகள் இருந்த இடம் என்று எண்ணி - இவ்வாரணம் என்மகள் நெடுநாள் இருந்து பழகியவிடம் என்று நினைந்து அவ்வுரிமைபற்றி; தன் உறு துன்பம் தாங்காது புகுந்து - தனக்குண்டான பெருந்துன்பம் பொறானாய் அவ்வாரணத் தானத்திலே புகுந்து; சமணீர்காள் நும்சரண் என்றோனை - சமணச் சான்றோரே! சமணச் சான்றோரே! அளியேன் நுங்கட்கு அடைக்கலம் கண்டீர்! என்று கதறியழுதவனைக் கண்டு; மை அறு படிவத்து மாதவர் - குற்றந்தீர்ந்த தவவேடந்தாங்கிய மாபெருந் துறவோர் எல்லாம் ஒருங்குகூடி; என்னொடும் வெகுண்டு - அவன் மகள் என்பதுபற்றி அவனையும் என்னையும் ஒருசேரச் சினந்து உரப்புபவர்; இவண் நீர் அல்ல என்று - இத்தகையோரை ஏற்றுக்கோடலும் பரிவுகாட்டலும் தெய்வத் தன்மையுடைய இவ்வாரணத்திற்குப் பொருந்தும் நீர்மைகள் ஆகா என்னும் கருத்தோடு; புறத்துக் கைஉதிர்க்கோடலின் - வாயாற் கூறாமல் தமது கையை அசைக்குமாற்றால் எமைப் புறத்தே துரத்திவிட்டமையாலே; என்றாள் எனக.

(வி - ம்.) புனிற்று ஆ - அணிமையில் கன்றீன்ற ஆ. அதற்கு அணுகியவரைச் சினந்து பாய்தல் இயல்பு. பாய்ந்த என்றது பாய்ந்து வயிறு கிழியக் குத்திய என்பதுபட நின்றது. பாய்ந்தமையாலே பட்ட புண்ணினன் என்க. கணவிர மாலையின் சுருள் கையிலேந்திய குடர்ச் சுருளிற் குவமை. கணவிரம் - செவ்வலரிப்பூ; ஆகுபெயர். பெருங்குடர் என்றது - மலக்குடரை. என் மகளிருந்து பழகிய இடம் என்று எண்ணி அவ்வுரிமை பற்றி வந்து சரண்புகுந்தான் என்பது கருத்து. இஃது அத் துறவோரின்பால் கண்ணோட்டம் எட்டுணையும் இல்லை என்று காட்டற் குக் கூறியது. என்னை? கண்ணோட்டம் என்பது தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்க மாட்டாமைக்குக் காரணமான ஒரு பண்புடைமையே யாதலின். கண்ணோட்ட மின்மையையும் வெகுளி யுண்மையையும் முற்படக் காட்டிப் பின்னர் மையறுபடிவத்து மாதவர் என்றது முற்றிலும் அவற்றிற்கு எதிர்மறைப் பொருள் பயக்கும்

இகழ்ச்சி மொழியாதல் உணர்க. புற வேடத்திற்குக் குறைவில்லை என்பாள் மையறுபடிவத்து மாதவர் என்கின்றாள். இவண் என்றதும் இகழ்ச்சி. என்னை? கடவுள் உறையுமிடமாகிய அவ்விடத்திற்கு அருளுடைமை நீரல்ல என்பதுபட நிற்றலின். மௌன விரதிகளாதலின் கையுதிர்க் கோடல் வேண்டிற்று. இதுவும் இகழ்ச்சி. இச் சுதமதி வாயிலாய்த் தண்டமிழாசான் சாத்தனார் திறம்பட அவர் காலத்துச் சமணத் துறவோரின் இழிதகைமையை எடுத்துக் காட்டினர். இதனைக் காட்டவே இங்ஙனம் ஒரு சூழ்நிலையை அவர் உருவாக்கியுள்ளனர்; அவர் ஆருகதரின் இப்புன்மை பொருது பௌத்த சமயம் புக்கு அச் சமயத்தைப் பரப்பும் நோக்கமுடையோராதல் ஈண்டு நினையற்பாலதாம். இனி, அவர் காலத்துப் பௌத்தத் துறவிகளின் சான்றாண்மையும் இவர் இச் சுதமதியின் வாயிலாகவே உணர்த்துவதனைக் காண்பாம்.

## இதுவுமது

### ௫௫ - ௬௪: கண்ணிறை............குளிர்ப்பித்து

(இ - ள்) கண் நிறை நீரேம் புறவோர் வீதியில் ஆரும் இலேம் அறவோர் உளிரோ என புலம்பொடு சாற்ற - இவ்வாறு அச் சமண சமயத்து மாதவர் எம்மைத் துரத்திவிட்டமையால் உறுதுயர் பொறாமையாலே கண்களில் வெள்ளமாய்ப் பெருகி வீழும் நீரையுடையேமாய் அவ்வாராந்தாணத்தின் புறத்தே வாழ்வோருடைய தெருவிலே சென்று மாபெருந்துயரத்திற்கு ஆளாயினேம் களைகணாவார் ஒருவரையேனும் உடையேமல்லேம். ஆதலால் அளியேமாகிய எமமிடுக்கண் தீர்க்கும் அறவோர் யாரேனும் உளிரோ உளிராயின் எம்மைப் புறந்தம்மின் என்று அரற்றிக் கூவாநிற்ப; மங்குல் தோய் மாடமனை தொறும் புகூஉம் அங்கையிற் கொண்டபாத்திரம் உடையோன் - அவ்வீதியிலமைந்த முகில் தவழும் மாடங்களையுடைய இல்லந்தோறும் பிச்சை புகுதற்கியன்ற கோரகை என்னும் அகங்கையிற் கொண்ட பாத்திரத்தையுடையவனும்; கதிர்சுடும் அமயத்தும் பனி மதிமுகத்தோன் - ஞாயிறு சுடுகின்ற அந்த நண்பகற்பொழுதினும் குளிர்ந்த திங்கள் மண்டிலம் போலே அருள் பொழியும் திருமுகத்தையுடையவனும்; பொன்னில் திகழும் பொலம் பூவாடையன் - பொன்போலத் தூய்தாக விளங்குகின்ற பொன்னிற மருதம் பூந்துவருட்டிய ஆடையையுடையவனும் ஆகிய பௌத்தத்துறவோன் ஒருவன் எம்மையணுகி; என உற்றனிரோ - நீயிர் என்ன இடுக்கண் எய்தினிரோ என்று; எமை நோக்கி - எம்மைப் பரிந்து நோக்கி எமதிடுக்கணை அறிந்துகொண்டபின்; அன்புடன் அளைஇய அருள் மொழியதனால் அஞ்செவி நிறைத்து நெஞ்சகம் குளிர்ப்பித்து - அஞ்சன்மின் நீயிர் உற்ற துயரத்தை யாமகற்றுவேம் என்பன போன்ற அன்போடளாவிய அருள்மொழி பலகூறி எமது

உட்செவியை நிறைத்து எமதுள்ளத்தையும் குளிரப்பண்ணி என்க.

(வி - ரை.) அறவோர் - எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுவோர். அராந்தாணத்து அறவோர் ஒருவரேனும் இலர் என்பது இதனாற் போந்தமையும் உணர்க. அருகரல்லாத புறவோர் வாழும் வீதி என்றவாறு: காணார் கேளார் கான்முடப்பட்டோர் முதலிய ஆதுலர்க்கும் அன்னம் இடவேண்டுதலின் மாடந்தொறும் புகுதல் வேண்டிற்று. அங்கை - அகங்கை; உள்ளங்கை. உள்ளம் எப்பொழுதும் குளிர்ந்திருந்தலின் கதிர் சுடும் அமயத்தும் பனிமதி முகமுடையன் ஆயினன் என்பது கருத்து. பொன்னிற்றிகழும் ஆடையன் என்றது, ஆடையின்றியாதல் பாயுடுத்தாதல் அமண் துறவோர் போல்பவ னல்லன் என்பது குறிப்பாகத் தோற்றுவித்தபடியாம். மூன்னர் நாணமும் ஆடையும் நன்கனம் நீத்து மண்ணு மேனியன் என (கூ : அஅ-கக) ஆருகதத்துறவோனை அறிவித்தமையும் நினைக. பொலம்பூ வாடையன் - பொன் போன்ற நிறமுடைய அழகிய துவராடை யுடுத்தோன். அது மஞ்சள் நிறத்தது ஆகலின் வண்ணம் பற்றிப் பொன் உவமமாகியது. அகனமர்ந்து முகத்தான் அமர்ந்து நோக்கி அன்புடன் அளைஇய அருள்மொழி கேட்டவளவிலே எம் துன்பம் முழுதும் தீர்ந்தாற் போன்று உள்ளம் குளிர்ந்தோம் என்றது. இங்ஙனம் பேசுவதே மொழியாற் செய்யும் நல்வினை என்னும் புத்தருடைய கொள்கையை அவன் முழுதும் மேற்கொண்டொழுகுபவன் என்பதைப் புலப்படுத்து நின்றது.

இதுவுமது

கூ௫ - எ0: தன்கை..........அருளிய

(இ - ள்.) தன்கைப் பாத்திரம் என்கைத் தந்து - தன் அங்கையிலேந்திய பிச்சைப் பாத்திரத்தை எனது கையிலே கொடுத்துவிட்டு; ஆங்கு எந்தைக்கு உற்ற இடும்பை நீங்க - அப்பொழுதே என் தந்தை எய்திய துன்பம் நீங்கும் வண்ணம்; தழீஇ எடுத்தனன் தலை ஏற்றிக் கடப்ப மாதவர் உறைவிடம் காட்டிய - தனனிருகைகளானும் மகவினை எடுப்பார் போன்று தழுவி எடுத்துத் தன் தலையாலே சுமந்து விரைந்துசென்று தன்னோரனைய சிறந்த துறவோர் உறைவிடத்தை எமக்கு உறையுளாகக் காட்டியவனும்; மறையோன் சாதுயர் நீக்கிய தலைவன் - பார்ப்பனனாகிய எந்தைக்குப் பின்னும் மருத்துவஞ்செய்து அவன் சாதற்குரிய பெருந்துயரத்தை நீக்கியவனும் தலைமையுடையவனும்; தவமுனி சங்கதருமன் தான் எமக்கு அருளிய - வினையின் நீங்கி விளங்கிய அறிவுடையவனுமாகிய சங்கதருமன் என்னும் சிறப்புப் பெயருடைய நல்லாசிரியன் தானே முன்வந்து எந்தையும் யானும் ஆகிய எம்மிருவருக்கும் திருவாய் மலர்ந்தருளிய; என்க.

(வி - ரை.) ஆங்கு - அப்பொழுதே. இரண்டு கைகளானும் தழுவி எடுக்க வேண்டித் தன்கைப் பாத்திரத்தை என் கைத்தந்து என்பது

கருத்து. குடர் சரிந்து வீழாதபடி எடுக்க வேண்டுதலின் தழீஇ எடுத்தல் வேண்டிற்று. இரண்டு கைகளானும் அவனை மேனோக்கிய வண்ணம் மகவினை எடுக்குமாறு போலவே எடுத்துத் தலைமிசை ஏற்றிக் கொடு விரையச் சென்றுமாதவர் உறைவிடத்தை எமக் குறையுளாகக் காட்டிப் பின்னும் மருத்துவத்தால் சாதுயர் நீக்கியவன் என்றாள் என்க. தலைவன் என்றது சங்கத் தலைமையுடைமையை. சங்கதருமன் என்றது சிறப்புப் பெயர். சங்கத்தார்க்கு அறம் அறிவுறுத்தும் ஆசான் என்பது கருத்து. அவன்றானே முன்வந்து எமக்கு அறிவுறுத்தருளிய என்க. இவ்வாற்றால் நூலாசிரியர் பௌத்தத் துறவோரின் சான்றாண்மை புலப்படுத்திய நுணுக்க முணர்க.

## இதுவுமது

### ௭௧ - ௭௯: எங்கோன்..........வாழ்கென

(இ - ள்.) எம்கோன் - எம்முடைய இறைவனும்; இயல்குணன் - இயல்பாகவே மெய்யுணர்வு தலைப்பட்டவனும்; ஏதம் இலகுணப் பொருள் - குற்றமில்லாத குணங்கட்கெல்லாம் தானே பொருளானவனும்; உலகநோன்பின் பலகதி உணர்ந்து - துறவாமலே நோன்பு நோற்று உயிர்கள பிறக்கும் பலவேறு பிறப்புக்களினும் பிறந்து பிறர்க்குழன்று தானேயுணர்ந்து; தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன - தனக்கென முயன்று வாழாமல் பிறர் வாழ்தற் பொருட்டே முயல்பவனும் ஆகிய; இன்பச் செவ்வி மன்பதை எய்த - தான் கண்ட வீட்டின்பம் எய்துதற்குரிய செவ்வியை மன்னுயிரெல்லாம் எய்துதற்குரிய; அருளறம் பூண்ட ஒருபெரும் பூட்கையின் - அருளாகிய அறத்தைமேற்கொண்டெழுந்தமொரு பெரிய கோட்பாட்டோடு; அறக்கதிர் ஆழி திறப்பட உருட்டி - அறமாகிய ஒளியுடைய சக்கரத்தைச் சிறிதும் சோர்வின்றி உருட்டி; காமனை கடந்த வாமன் - காமனை வென்றுயர்ந்த அழகனாகிய புத்ததேவனுடைய; தகைபாராட்டுதல் அல்லது - தெய்வத்தன்மையை இடையறாது பாராட்டுகின்ற செந்நாவை யுடையேனல்லது; மிகைநாவிலேன் வேந்தே வாழ்க என - வேறு தெய்வங்களைப் பாராட்டற்கியன்ற மிகையான செயலை யுடைய நாவில்லேன் அரசே நீடூழி வாழ்க! என்றாள் என்க.

(வி - ம்.) எங்கோன் - எமக்கு ஆத்தனானவன். பௌத்தர்கள் ஆத்தனாகிய புத்தனையே கடவுளாகவும் கொள்ளுவர். இதனை,

"முற்றுணர்ந்து புவிமீது கொலையாதிய
தீமை முனிந்து சாந்தம்
உற்றிருந்து கருணையினாற் பரதுக்க
துக்கனு யும்பரோடு
கற்றுணர்ந்த முனிவரருங் கண்டுதொழப்
பிடகநூல் கனிவான் முன்னம்

சொற்றிருந்த வுரைத்தருளுந் தோன்றலே
கடவுள்அருட் டோன்ற லாவான்''

எனவரும் மெய்ஞ்ஞான விளக்கத்தானும் (சருக்கம் கூஉ-ச) உணர்க. குணமாகிய பொருள என்க. உலக நோன்பு - துறவாமலே மேற்கொள்ளும் நோன்பு. புத்தர் வினையாலன்றி அருள் காரணமாகக் கைவந்த முத்தியைக் கைவிட்டு வாலறிவுடன் விலங்கு முதலிய பிறப்புக்களினும் புக்குப் பிறர்க் குழன்றூர் என்பர். இதனை—

''வாளுடும் பரியாயும் மரிணமாயும்
வனக்கேழற் களிருயு மெண்காற்புண்மான்
ருனையு மனையெருமை ஒ நந்தலாயுந்
தடக்கையிளங் களிருயுஞ் சடங்கமாயு
மீனுயு முயலாயு மன்னமாயு
மயிலாயும் பிறவாயும் வெல்லுஞ்சிங்க
மாளுயும் கொலைகளவு கட்பொய்காமம்
வரைந்தவர்தா முறைந்தபதி மாளுவூரே''

எனவரும் நீலகேசியில்(உ0சு)யாமெடுத்துக்காட்டிய பழஞ்செய்யுளானு முணர்க. ஏதமில் குணப் பொருள் என்றதனை—

''மீனுருவாகி மெய்ம்மையிற் படிந்தனை
மா னுருவாகியே வான்குண மியற்றினை''

எனவும்,

''எறும்புகடை அயன்முதலா எண்ணிறந்த வென்றுரைக்கப்
பிறந்திறந்த யோனிதொறும் பிரியாது சூழ்போகி
எவ்வுடம்பி லெவ்வுயிர்க்கும் யாதொன்ருல் இடரெய்தின்
அவ்வுடம்பி லுயிர்க்குயிரா யருள்பொழியுந் திருவுள்ளம்''

எனவும், வரும் பழம் பாடல்களையும் (வீரசோழியம் யாப்பு எடுத்துக் காட்டுக்கள்) ஒப்பு நோக்குக. இன்பச் செவ்வி என்றது - வீடுபெறும் நிலைமையை. இதனை கூ0 ஆம் காதையில் விளங்கக் காணலாம். மன்பதை-மன்னுயிர். தகை - கடவுட்டன்மை யாகிய பெருந்தகைமை. மிகைநா - இதனைக் கடந்து பிற தெய்வங்களை வாழ்த்தும் நா.

## உதயகுமரன் போதலும் மணிமேகலை தன்னிலை சுதமதிக்கு இயம்பலும்

### அ0 - அகூ: அஞ்சோல்.........நேஞ்சம்

(இ - ள்.) அம்சொல் ஆயிழை நின்திறம் அறிந்தேன் - அழகிய சொற்றிறமமைந்த சுதமதி நல்லாய்! நன்று யான் நின் வரலாறு அறிந்துகொண்டேன; வஞ்சி நுண்ணிடை மணிமேகலை தனைச் சித்திராபதியால் சேர்தலும் உண்டு என்று அயர்ந்து -

வஞ்சிக் கொடிபோலும் நுண்ணிய இடையையுடைய மணி மேகலையை யான் சித்திராபதிவாயிலாய்ச் சேர்தற்கும் இடன் உண்டுகாண்! அவள் செவ்வியளாயின் செவ்வியளாகுக என்று தன் செயலறவினைற் கூறியவனாய்; ஆங்கு அப் பொழில் அவன் போயபின் – அவ்வளவின் அம் மலர்ப் பொழிலினின்றும் அவ்வர சிளங்குமரன் அகன்றுபோய பின்னர்; பளிக்கறை திறந்து – மணிமேகலை அப் பளிக்கறையின் தாழ்நீக்கித்திறந்து வந்தவள்; பனிமதி முகத்துக் களிக்கயல் பிறழாக் காட்சியளாகி – குளிர்ந்த திங்கள் மண்டிலம் போன்ற தன முகத்தினகண் களிக்கின்ற கயல்மீன் போன்ற கண்கள் அவனைக் கண்டகாட்சி கலங்கா மைப் பொருட்டுப் பிறழாது நிலைத்த காட்சியையுடையளாய்ச் சுதமதியை அணுகிக் கூறுபவள்; (௩௰) அன்னாய் – அன்னையே! ஈதொன்றுகேள!; புதுவோன – நமக்குப் புதியவனாகிய இவ்வரசன் மகன் என்னை; கறபுததான இலள நல் தவ உணர்வு இலள் வருணக் காப்பு இலள் பொருள விலைபாட்டி என்று இகழ்ந்தனன் ஆகி நயந்தோன் என்னது – இவள் நிறையில்லாதவள், நன்மை மிக்க தவத்திற்குக் காரணமான மெய்யுணர்வு கைவரப் பெரு தவள், வருணததாலே தன்னைத்தான காக்கும் குலமகளும் அல்லள்; பொதுமகள், பொருட் பொருட்டுத் தனனையே விற்த மியல்புடையள் என்று இன்னோரன்ன கூறி இகழ்ந்தவனாய் என அழகின் பொருட்டே காமுறுபவன் என்று தானும் இகழ்ந்து புறக்கணியாமல்; என் நெஞ்சம் (புதுவோன்) பின் போனது – எனது புல்லிய நெஞ்சம் அவ்வேதிலானையும் விரும்பி அவனைத் தொடர்ந்து அவன் பின்னே போயொழிந்தது! என்றாள் என்க.

(வி – ம்.) கண் களிக் கயல்போல் இடையறாது பிறழ்தல் தமக்கியல் பாகவும் அவனைக் கண்ட காட்சி மறையும் என்று அஞ்சிப் பிறழாதிருக் கின்ற காட்சியளாகி என்றவாறு. 'கற்புத்தானிலள்' என்று இகழ்ந்தான் என்றது அவன் "நிறையும் உண்டோ காமம் காழ் கொளின்" என்றதன் குறிப்புப் பொருளை உட்கொண்டு கூறியபடியாம். நிறை கைகூடா தாகவே தவவுணர்வும் இலள் என்பதும் குலமகள் அல்லள் என்பதும் வருணக் காப்பின்மையும் பொருள் விலையாட்டியாதலும் ஆகிய வசைச் சொற்கள் அனைத்தும் அதன் குறிப்புப் பொருளாக மணிமேகலைகொண்டு கூறுகின்றாள் போலும். இனி அவன் இங்ஙனம் இகழ்ந்தமையை வழி மொழிதல் வாயிலாய்ப் பெறவைத்தவாறுமாம். இகழ்ந்தனனாகி நயந் தோன் என்றது அவன் நம்மழகை மட்டுமே நயக்கின்றான் என்றவாறு. என்னெஞ்சம் என்றது என் புல்லிய நெஞ்சம் என்பதுபட நின்றது.

> "செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
> உற்றார் அறிவதொன் றன்று" (௧௨௫௫)

எனவரும் திருக்குறள் ஈண்டு நினைக்கத்தகும். புதுவோன் என்பதனை எழுவாயாகவும் எடுத்துக் கூட்டுக.

மணிமேகலா தெய்வம் வந்து தோன்றுதல்

௬௦ - ௬௬ : இதுவோ..........பைந்தொடியாகி

(இ - ள்.) அன்னாய் இதுவோ காமத்தியற்கை - அன்புடையோய்! இவ்வாறு உயர்வும் இழிதகைமையும் உன்னிப்பாராமல் சென்றவிடத்தால் நெஞ்சத்தைச் செலுத்தும் இத் தீய பண்புதான் காமத்தின இயல்போ யான் இதுகாறும் அறிந்திலேன்காண்; அதன திறம் இதுவே ஆயின் அதன திறம் கெடுக என - அக் காமத்தின தன்மை இவ்விழிதகைமையே ஆயின அதன் ஆற்றல் ஒழிவதாக! என்று வியந்துகூறி; மதுமலர்க் குழலாள் மணிமேகலைதான - தேன பொதுளிய மலரணியும் பருவமுடைய கூந்தலையுடைய அம் மணிமேகலை நல்லாள; சுதமதி தனனொடு நின்ற எல்லையுள் - அன்புடைய சுதமதியோடு சொல்லாடி நின்ற பொழுதில; இந்திரகோடணை விழா அணி விரும்பி - தேவேந்திரனுக்கு அந் நகரத்தே நிகழ்கின்ற ஆரவாரமுடைய விழாவின அழகைக் காண விரும்பி; வந்து காண்குறூஉம் மணிமேகலா தெய்வம் - வந்து காணுகின்ற மணிமேகலா தெய்வம் எனனும் மணிமேகலையின தந்தைவழிக்குல தெய்வமானது மணிமேகலை நெஞ்சம காமுற்றுப புதுவோன் பின்போன செவ்வி அறிந்து அவளைத் தடுத்து நனனெறிப்படுத்துதற் பொருட்டு; பதியகத்து உறையும் ஓர் பைந்தொடியாகி - அந் நகரத்திலே வாழுமொரு பசிய வளையலையுடையா ளொரு மானுடமகள் வடிவந் தாங்கி; என்க

(வி - ம்.) இதுவோ - இத்தகைய இழிதகவுடையதோ என்புழி ஓகாரம் ஒழியிசை. எனனை? அனையதாயினும் அழிக்குதும் என்பது குறித்து நிற்றலின். கோடணை - ஆரவாரம். அணி - அழகு. காண் குறூஉம் - என்றமையால் அத் தெய்வம் இந்திர விழாக் கால் கொண்ட பொழுதே அங்கு வந்தமை பெற்றாம். ஈண்டு வருதற்குக் காரணம் மணிமேகலைக்கு எதிர்ந்துள ஏது நிகழ்ச்சியை அறிந்து அவ்வழி அவளை ஆற்றுப்படுத்தற்குக் கருதியதாம் எனக. என்னை? அஃது அவட்குக் குல தெய்வமும் ஆகலான். அதனை,

"வந்தேன் அஞ்சன் மணிமேகலை யான்
ஆதிசால் முனிவன் அறவழிப் படூஉம்
ஏதுமுதிர்ந் துளது இளங்கொடிக் காதலின்
விஞ்சையிற் பெயர்த்துநின் விளங்கிழை தன்னை
வஞ்சமின் மணிபல் லவத்திடை வைத்தேன்"

எனப் பின்னர் அத் தெய்வமே (துயிலெழுப்பிய காதையில்) இயம்புதலானும் அறிக. இக் கருத்தை யுட்கொண்டே இக் காதை முகப்பில் [......உதயகுமரன் பால் உள்ளத்தாள் என மணிமேகலைக்கு மணிமேகலா

தெய்வம் வந்து தோன்றிய பாட்டு.] என்று முன்னையோர் வரைந்தனர் என்றுணர்க.

## மணிமேகலா தெய்வம் புத்தபீடிகையை வலஞ்செய்து வாழ்த்தி வணங்குதல்

௬௬ - ௧௦௭ : மணியறை.........நீட்டும்

(இ - ள்.) மணி அறைப் பீடிகை வலங்கொண்டு ஓங்கி - உவவனத்தின் கண்ணதாகிய அப் பளிக்கறையின் உள்ளே அமைந்த புத்தபீடிகையை வலமாக வந்து பின்னர் வானத்தின் கண் உயர்ந்து நின்று ; புலவன் - எல்லார்க்கும் அறிவாயுள்ளவனே ; தீர்த்தன் - தூயோனே! ; புண்ணியன் - அறத்தின் திருமூர்த்தியே! ; புராணன் - பழைமையுடையோனே! ; உலக நோன்பின் உயர்ந்தோய் என்கோ - உன்னை, துறவாமலே நோன்பு செய்து உயர்ந்தோன் என்று புகழ்வேனோ? ; குற்றம் கெடுத்தோய் - காம வெகுளி மயக்கமாகிய குற்றங்களை அழித்தவனே என்றும் ; செற்றம் செறுத்தோய் - அடிப்பட்ட சினத்தையே சினந்தவனே என்றும் ; முற்றவுணர்ந்த முதல்வா என்கோ - முழுதும் ஓதாமலே உணர்ந்திட்ட முழுமுதல்வனே என்றும் பாராட்டுவேனோ? ; காமற் கடந்தோய் ஏமம் ஆவோய் தீநெறிக் கடும்பகை கடிந்தோய் என்கோ - காமனை வென்றவனே மன்னுயிர்க்கெல்லாம் காவலானவனே தீமை பயக்கும் வழியிற் செலுத்தும் ஐம்பொறிகளாகிய கடிய பகையை வென்றொழித்தவனே என்று சொல்லிப் புகழ்வேனோ? ; ஆயிர ஆரத்து ஆழி அம் திருந்து அடி - நின்னுடைய ஆயிரம் ஆரக்கால்களோடு கூடிய சக்கர ரேகையுடைய அழகிய திருவடிகளை ; ஆயிரம் நா இலேன் - ஆயிரம் நாவுகளின்றி ஒரே நாவுடைய யான் ; ஏத்துவது எவன் - புகழ்ந்து பாராட்டுதல் எங்ஙனமாம் ; என்று - என்று பலவும் சொல்லிப் புகழ்ந்து ; எரிமணிப் பூங்கொடி இரு நிலம் மருங்கு வந்து ஒருதனி திரிவது ஒத்து - ஒளிவீசும் அழகிய காமவல்லி என்னும் வானநாட்டுப் பூங்கொடி ஒன்று தனித்து நிலவுலகத்திலே திரிந்தாற் போன்று ; ஓதிப் பின் ஒதுங்கி - ஓதி ஞானத்தோடே இயங்கி ; நிலவரை இறந்து (ஓர்) முடங்கு நா நீட்டும் - நிலப்பரப்பினைக் கடந்து வானிலந் தோயாமலே நின்று அவன் புகழ் கூறமாட்டாமையால் முடங்கிய தன் நாவினை நிமிர்த்துப் புகழாநிற்கும் என்க.

(வி - ம்.) மணியறை - பளிக்கறை. வானத்திலோங்கி என்க புண்ணியன் - அறவோன் குற்றம்-காமவெகுளி மயக்கம். என்கோ-என்பேனோ? புராணம் - பழைமை. ஏமம் - பாதுகாவல்; இன்பமுமாம். தீநெறி - தீயவழியில் ஒழுகும் ஒழுக்கம். தீயநெறியிற் செலுத்தும் கடியபகை. ஆயிரம் ஆரங்களையுடைய சக்கரக் குறி கிடந்த திருந்தடி என்க. நின்னைப் புகழ நாவாயிரம் வேண்டும் அவையிலேன் எவ்வாறு

புகழ்வல்? என்றவாறு. ஓதி - மெய்யறிவு; முக்காலமும் அறியும் முற்றறிவுமாம். ஓர் : அசை. கூற மாட்டாது முடங்கி நாவை மீண்டும் நிமிர்த்து என்க. நிமிர்த்திப் பாராட்ட என்று முடித்திடுக. நீட்டும் - நீட்டிப் பாராட்டிப் பரவுவாள் என்க. நீட்டும் : செய்யும் என்னும் முற்றுச் சொல்.

### அந்திமாலையின் வரவு

[௧௦௬ஆம் அடி முதலாக, ௧௪௧ஆம் அடி முடியப் புகார் நகரத்தே அற்றைநாள் அந்திமாலை வரவின் வண்ணனையாய் ஒரு தொடர்.]

### ௧௦௬ - ௧௨௨ : புலவரை.........பெய்தலும்

(இ - ள்) புலவரை இறந்த புகார் எனும் பூங்கொடி - அறிவினது எல்லையையும் கடந்து திகழ்கின்ற பேரழகோடு கூடிய பூம்புகார் நகரம் என்னும் மலர்ந்த கொடிபோலும் மடந்தை எத்தகையளோ வெனின் அவள்தான்; பல்மலர் சிறந்த நன்னீர் அகழி அடி - பல்வேறு வண்ணமலர்களாலே நல்ல நீர்மையை யுடைய (நீரையுடைய) அகழியாகிய திருவடிகளையும் அவ்வகழியின் கண்ணிருந்து ஆரவாரிக்கின்ற; புள் ஒலி சிறந்த தெள் அரிச் சிலம்பு - பறவை இனமாகிய அவ்வடியிற் கிடந்து முரலும் சிறந்த தெளிந்த ஓசையைச் செய்யும் பரல்களையுடைய சிலம்புகளையும்; ஞாயில் இஞ்சி - ஞாயிலெனும் உறுப்போடு கூடிய மதில்வட்டமாகிய; நகை மணிமேகலை - (அந்நகர் நங்கை இடையிலணிந்த) ஒளிநிக்க மணிகளாலியன்ற மேகலை என்னும் அணிகலனையும்; வாயில் மருங்கு இயன்ற வான் பணைத்தோளி - வாயிலின் இருமருங்கும் நடப்பட்டுள்ள உயர்ந்த மூங்கிலாகிய தோள்களையும் உடையாள்; தருநிலை வச்சிரம் என எதிர் எதிர் ஓங்கிய இரு கோட்டம் - தருநிலைக் கோட்டம் எனவும் வச்சிரக் கோட்டம் எனவும் கூறப்படுகின்ற ஒன்றற்கொன்று எதிர் எதிராக உயர்ந்து திகழும் இரண்டு கோட்டங்களாகிய; கதிர் இளவன முலை - ஒளியும் இளமையும் அழகும் உடைய இரண்டு முலைகளையும்; ஆர்புனை வேந்தற்குப் பேரளவு இயற்றி ஊழி எண்ணி நீடுநின்று ஓங்கிய - ஆத்திமாலை சூடிய சோழமன்னனுக்கென்றே உலகத்து அரண்மனைகளுள் வைத்துப் பெரிய அளவுடையதாக இயற்றப்பட்டு ஊழிபலவும் எண்ணியிருந்து நீடூழிகள் நிலைத்து நின்று புகழால் உயர்ந்திருக்கின்ற; ஒரு பெருங்கோயில் - உலகில் ஒப்பற்ற பெரிய அரண்மனையாகிய; திருமுகவாட்டி - அழகிய முகத்தினையும் உடையவளாவாள்; குணதிசை மருங்கின் நாள் முதிர் மதியமும் குடதிசை மருங்கின் சென்றுவீழ் கதிரும் - அற்றை நாள் கீழ்த்திசை

யினின்றும் எழாநின்ற வளர்பிறைப் பக்கத்து நாளெல்லாம் முதிர்ந்தமையாலே முழுவுருவமும் பெற்ற நிறைத் திங்கள் மண்டலமும் மேற்றிசையிலே சென்று வீழ்கின்ற ஞாயிற்று மண்டிலமும்; வெள்ளி வெள்தோட்டொடு பொன்தோடு ஆக-வெள்ளியாலியன்ற வெள்ளைத் தோடாகவும் பொன்னாலியன்ற செந்தோடாகவும்; ஏள் அறு திருமுகம் பொலியப் பெய்தலும் - குற்றமற்ற அந் நகர நங்கையின் அழகிய முகமானது மேலும் பொலிவுறும்படி காலம் என்னும் அவளுடைய தோழியானவள் அணிந்து விடாநிற்பவும் என்க.

(வி - ர்.) புலவரை - அறிவின் எல்லை; அழகு அறிவிற்கன்றி உணர்ச்சிக்குப் புலனாதலின் அறிவின் எல்லை இறந்த என்றார். அகழி யாகிய அடியையும் அதன்கண் பன்னிற மலரினின்று ஆரவாரிக்கின்ற புள்ளொலியாகிய அவள் தன் சிலம்பையும், இஞ்சியாகிய மேகலையையும், இருமருங்கும் நடப்பட்ட மூங்கில்களாகிய தோள்களையும், கோட்ட மாகிய முலையினையும், அரண்மனையாகிய திருமுகத்தையும் உடைய பூம்புகார் என்னும் நகர் மடந்தைக்கு அற்றைநாள் எழுகின்ற திங்கள் மண்டிலத்தை ஒரு செவியினும், வீழ்கின்ற ஞாயிற்று மண்டிலத்தை ஒரு செவியினும் வெள்ளித் தோடாகவும் பொன் தோடாகவும் அரண்மனையாகிய திருமுகம் பொலியும்படி. காலமாகிய அந் நகர் நங்கையின் தோழி அணிந்து விடவும் என்க. இது குறிப்புவமை அணி. காலமாகிய தோழி என வருவித்துக் கூறுக.

தருநிலை வச்சிரம் என இரு கோட்டம் என்றது தருநிலைக் கோட்டமும் வச்சிரக் கோட்டமும் ஆகிய இரு கோட்டங்களும் என்றவாறு. தரு - கற்பகம். கற்பகத்தரு நிற்கும் கோட்டமும் வச்சிரப்படை நிறுத்தப்பட்ட கோட்டமும் என்க. கோட்டம் - கோயில். இவை ஒன்றற்கொன்று அணித்தாக ஒன்றுபோல உயர்ந்த கோட்டங்களாதலின் இங்ஙனம் உருவகஞ் செய்தார்.

### இதுவுமது

**கஉரு - கருஉ: அன்னச்சேவல்.........படர**

(இ - ள்.) அன்னச் சேவல் அயர்ந்து விளையாடிய தன் உறுபெடையைத் தாமரை அடக்க - அன்னப்பறவையினுள் வைத்துச் சேவலன்னமானது பெரிதும் தன்னை மறந்து காதல் விளையாடல் நிகழ்த்திய தனக்குரிய பெடையன்னத்தைக் கதிரவன் மேலைக்கடலில் மறைதலாலே ஆட்டத்திற்குக் களமாயிருந்த தாமரை மலரானது இதழ்குவித்துத் தன்னுள்ளே அடக்கி மறைத்துக் கொள்ளுதலாலே; பூம் பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண்டு ஓங்கு இரு தெங்கின் உயர்மடல் ஏற - அத் தாமரையின் இதழ்களாலியன்ற பொதி சிதைந்தழியும்படி கிழித்து அச் சேவலன்னம் தன் பெடையன்னத்தை எடுத்துக்கொண்டு உயர்ந்து நிற்கின்ற தெங்கினது உயர்ந்த மடலினூடே ஏறியிருப்

பவும்; அன்றில் பெடை அரிக்குரல் அழைஇச் சென்றுவீழ் பொழுது சேவற்கு இசைப்ப - பெடையன்றில் தனது அரித்தெழுகின்ற குரலாற் கூவுமாற்றாலே குடகடலிலே கதிரவன் சென்று வீழுகின்ற அந்திமாலையாகிய பொழுதின் வரவினைத் தன் சேவலன்றிலுக்கு அறிவிப்பவும்; பவளச் செங்கால் பறவைக் கானத்துக் குவளை மேய்ந்த - பவளம் போன்று சிவந்த கால்களையுடைய அனனப்பறவைகள் செறிந்துள்ள கானகத்தினூடே குவளை மலர்களை மேய்ந்த; சேதா குடம் முலைக்கண பொழி தீம்பால் எழுதுகள அவிப்ப - செவ்விய பசுக்களின் குடம்போனற முலையிற் கணகளிற் சுரந்து பொழியாநின்ற இனிய பாலே அவற்றின் இயக்கத்தாலே எழுகின்ற துகளை அடக்கும்படி; கன்று நினை குரல - தத்தம் கனறை நினைத்துக் கூபபிடுகின்ற குரலையுடைய வாய் விரைந்து; மன்றுவழிப படர - தத்தம் மன்றங்களிற்குச் செலகின்ற வழியின்மேற் செல்லா நிற்பவும எனக.

(வி - ம்) இதன்கண் தனக்குரிய பெடையை, தாமரை பொதிந்து கொள்ள அதுகண்ட அன்னச் சேவலானது அப் பொதியைச் சிதைத்து அப் பெடையை எடுத்துக் கொண்டு தெங்கின் உயர் மடலில் ஏறிற்றுகக் கூறிய இக் கருப்பொருட் புறத்தே உதயகுமரனுடைய உள்ளத் தடத்தில் மலர்ந்துள்ள ஏது நிகழ்ச்சியாகிய தாமரை மலரானது மணிமேகலையாகிய தூய அன்னத்தைத் தன்னுள் வைத்துக் காமமாகிய தன்னிதழ்களாலே மறைத்துக் கொள்ளா நிற்ப அவ் விதழ்கள் சிதையும்படி மணிமேகலா தெய்வம் மணி பல்லவத்திற்கு எடுத்துப் போய் உயரிய துறவு நெறியில் சேர்ப்பித்தலாகிய பொருள் தோன்றி அற்றை நாளிரவு நிகழ்ச்சியை ஒருவாறுக நினைப்பித்து நிற்றலையும் நினைக. இவ்வாறு ஒன்று கூற அதுவே பிறிதொரு பொருளையும் நினைவூட்டுவதாக அமைக்குந் திறம் சாத்தனார் போன்ற மாபெருங் கலைஞர்க்கே இயல்வது போலும். இங்ஙனம் தோன்றுவதனை, (தொனிப் பொருள் என்னும்) குறிப்புப் பொருள் என்க.

காதற்றுணையைப் பிரிந்துறைய நேரின் அன்றிற் பறவை இறந்துபடும் ஆதலால் தனக்கிரை கொணரச் சென்றுள்ள சேவலுக்குத் தனது அரிக்குரலாலே கதிரவன் மறைவதனை அறிவிக்கின்றது என்க. அரிக்குரல் - அரிந்தெழூம் ஒலி; இஃது இழுமென்னும் இனிய வொலிக்கு முரண் ஆய வொலியாம். அழைஇ - அழைத்து. குடக்கண் - குடப்பால் கறக்கும் முலையின்கண் என லுமாம் இத்தகைய பசுக்களைக் 'குடச்சுட்டு என்னும் பெயராலும் குறிப்பதுண்டு. இதனை—

"புல்லார் நிரைகருதி யாஞ்செல்லப் புண்ணலம்
பல்லார் அறியப் பகர்ந்தார்க்குச்—சொல்லால்
கடஞ்சுட்ட வேண்டா கடுஞ்சுரையா ஒன்கு
குடஞ்சுட் டினத்தாற் கொடு"

எனவரும் புறப்பொருள் வெண்பாமாலை வரலாற்று வெண்பாவானும் அதன் உரையானும் உணர்க (வெட்சி-௧௮).

சேதா - செவ்விய பசு. சிவந்த நிறமுடைய பசு எனினுமாம். பசுக்களில் சிவப்புப் பசுவே சிறந்தது என்பது இதன் கருத்தென்க.

'சேதா.........படர' என்னுமிதனோடு "மதவுநடை நல்லான் வீங்குமாண் செருத்தல் தீம்பால் பிலிற்றக் கன்று பயிர் குரல மன்று நிறை புகுதரும் மாலையும்" எனவும், (அகநா - ௧௪) "ஆன்கணங் கன்று பயிர் குரல மன்று நிறை புகுதர" (குறிஞ்சி - ௨௧௮) எனவும் வரும் பிறநூற் சொற்றொடர்களையும் ஒப்பு நோக்குக.

### இதுவுமது

### ௧௩௩ - ௧௪௧ : அந்தியந்தணர்.........மருங்கேன்

(இ - ள்.) அந்தணர் அந்திச் செந்தீப் பேண - மறையவர் தம்மறை விதித்தாங்கு அந்திப் பொழுதிலே வளர்க்க வேண்டிய வேள்வித் தீயை அவிசொரிந்து வளர்ப்பவும்; பைந்தொடி மகளிர் பலர் விளக்கெடுப்ப - பசிய பொன் வளையலணிந்த மங்கல மகளிர் பலரும் தத்தம் மனைதொறும் திருவிளக் கேற்றித் தொழா நிற்பவும்; யாழோர் மருதத்து இன்னரம்பு உளர - யாழ் வாசிக்கும் இசைவாணராகிய பாணர்கள் மருதப்பண் எழீஇ இனிய இசை தரும் யாழ் நரம்புகளை வருடா நிற்பவும்; கோவலர் முல்லைக்குழல் மேற் கொள்ள - கோவலராகிய ஆயர்கள் தமக்குரிய முல்லைப் பண்ணை வேய்ங்குழலிடத்தே ஊதா நிற்பவும்; அமரகம் மருங்கில் கணவனை இழந்து தமர் அகம் புகூஉம் ஒருமகள் போல - போர்க்களத்திடத்தே தன் கணவன் இறந்துபடுதலாலே பெருந்துன்பத்தோடே தன் பெற்றோர் இல்லத்திற்குத் தனியே செல்லும் ஒரு மங்கையைப் போல; கதிர் ஆற்றுப்படுத்த முதிராத் துன்பமோடு அந்தி என்னும் பசலை மெய்யாட்டி - கதிரவனாகிய தன் கணவனை மறைந்தொழியும்படி போக்கி விட்டமையாலே முடிவில்லாத பிரிவுத்துன்பத்தோடே அந்தி மாலை என்னும் பெயரையுடைய பசலை பாய்ந்த மெய்யினையுடைய நங்கை; மாநகர் மருங்கு வந்து இறுத்தனள் - பெரிய அப் பூம்புகார் நகரிடத்தே வந்து தங்குவாளாயினள்; என்பதாம்.

(வி - ம்.) (௨௩-௪௧) இவ்வந்திமாலை வண்ணனையில் அன்னச் சேவல் தாமரை முதலிய மருதக்கருப் பொருளும் அன்றிற் சேவல் பெடை முதலிய நெய்தற் கருப்பொருளும், ஆவும் கோவலருமாகிய முல்லைக் கருப்பொருளும் வந்து மயங்கின.

கதிரவனைப் போக்கிய என்க. பிரிவாற்றாமையால் பசலைபூத்த மெய்யினை உடையளாய் என்றவாறு. செக்கர் வானத்தை அவளுடைய பசலை மெய்யாக உருவகித்த படியாம்.

மணிமேகலை தமரையும் காதலனாகிய உதயகுமரனையும் பிரிந்து போய் வருந்துதலைக் கருத்துட் கொண்டு புலவர் பெருமான் இச்

காதையைத் துன்பியல் முடிவுடைத்தாக இயற்றினர். என்னை? அடுத்து வருவன அவலச் சுவையே நிரம்பிய காதைகளாதலால் அச் சுவைக்கு இவ்வாறு கால்கோள் செய்கின்றனர், காப்பியவுத்தி பலவும் கைவந்த தண்டமிழ் ஆசான் சாத்தனார் என்க.

இனி இக் காதையை—இளங்கோன் கண்ட பூங்கொடி உருவம் பெயர்ப்ப வியப்போன் தெளிந்து சூழ்வோன் உரையென, உரைப்ப ஆகென அகல்வோன், உரையினை உரையென வேந்தே கேட்டருள், இழந்தோன் வருவோன் கண்டு உதிர்த்துத் திரிவோன் புண்ணினன் புகுந்து என்றேனை, என்னொடும் கையுதிர்க் கோடலின், உடையோன் நோக்கித், தந்து ஏற்றிக் காட்டிய சங்கதருமன். அருளிய தகை பாராட்டுதல் அல்லது. இல்லேன் என அறிந்தேன் எஃறு. போயபின் என் நெஞ்சம் போனது கெடுக என, தெய்வம் ஆகி நீட்டும் நீட்ட; அடக்க இசைப்பப் படர எடுப்ப உளரக் கொள்ள இழந்து மெய்யாட்டி மாநகர் மருங்கு இறுத்தனள் என்று இயைத்திடுக.

மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை முற்றிற்று.

# ௬. சக்கரவாளக்கோட்டம் உரைத்த காதை

[ஆறுவது மணிமேகலை தனக்கு மணிமேகலா தெய்வம் சக்கரவாளக் கோட்டம் உரைத்து அவளை மணிபல்லவத்துக் கொண்டுபோன பாட்டு]

அஃதாவது—அரசன் மகன் சென்ற பின்னர் அங்குப் பதியகத் துறையுமோர் பைந்தொடியாகி வந்த மணிமேகலா தெய்வம் நீயிர் எற்றிற்கு இங்கு நிற்கின்றீர் என வினவ, சுதமதி மன்னன் மகன் நிலைமை கூறுதலும் அது கேட்ட தெய்வம் நீங்கள் வந்த வழியே சென்றால் மன்னன் மகன் மணிமேகலையைப் பற்றிக் கொள்வான் ஆதலால் இப் பொழிலின் மேற்றிசை மதிலிலமைந்த சிறிய வழியே சென்று, சக்கரவாளக் கோட்டத்தேயுள்ள துறவோர் இருக்கைக்குச் செல்லுமின், என அதுகேட்ட சுதமதி சுடுகாட்டுக் கோட்டம் என்பதனை நீ சக்கரவாளக் கோட்டம் என்கின்றனை அதற்குக் காரணம் என்? என வினவ அத் தெய்வம் அதன் வரலாற்றை விரிவாகக் கூறக் கேட்டிருந்த சுதமதி, உறங்கி விட்டாள். அப்பால் அத் தெய்வம் மணிமேகலையை மயக்கி எடுத்து வான் வழியே சென்று மணிபல்லவத்திடையே துயில்வித்தவாறே இட்டுச் சென்ற செய்தியைக் கூறுஞ்செய்யுள் என்றவாறு.

இதன்கண் சக்கரவாளக் கோட்டத்து வரலாறு கூறுமாற்றால், தமிழ்ச்சான்றோருடைய புறப்பொருளின்பாற்படும் காஞ்சித்திணைப் பொருள் பயில்வோருளத்தே நனகு பதியுமாறு சாத்தனார் மிகவும் திறம்பட வகுத்தோதுகின்றார். அப்பாலும் ஒரு பார்ப்பனச் சிறுவன் அச் சக்கரவாளக் கோட்டத்துட் புகுந்து அஞ்சி இல்லம் புகுந்து உயிர் துறந்தமையும், அவன் தாய் கோதமை யெனபாள் குழந்தையின் பிணத்தை எடுத்துக் கொண்டு சென்று சம்பாபதி கோயிலின் முன்னின்று முறையிடுதலும், சம்பாபதி அவட்கு வெளிப்பட்டுக் கூறுதலும் அத் தெய்வத்தின் அறிவுரைகளும் செயலும் கற்போருளத்தே,

> "பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும்
> நில்லா வுலகம் புல்லிய நெறித்தே"

என ஆசிரியர் தொல்காப்பியனார் ஓதிய காஞ்சித் திணைப் பொருளுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் தோன்றுமாறு இக் காதை திகழ்கின்றது. இது துறவு நூலாகலின் நிலையாமை யுணர்ச்சி கைவந்தாலொழிய மெய்யுணர்வு பெறுதல் சாலாமையின் அவ் வுணர்ச்சியைத் தோற்றுவிக்கும் இக் காதை இந் நூலுக்கு இன்றியமையாச் சிறப்புடையதுமாகும்.

அந்தி மாலை நீங்கிய பின்னர்
வந்து தோன்றிய மலர்கதிர் மண்டிலம்
சான்றோர் தங்கண் எய்திய குற்றம்
தோன்றுவழி விளங்குந் தோற்றம் போல
மாசறு விசும்பின் மறுநிறங் கிளர
ஆசற விளங்கிய வந்தீந் தண்கதிர்
வெள்ளிவெண் குடத்துப் பால்சொரி வதுபோல்
கள்ளவிழ் பூம்பொழில் இடையிடை சொரிய
உருவு கொண்ட மின்னே போலத்
திருவில் விட்டுத் திகழ்தரு மேனியள்
ஆதி முதல்வன் அறவாழி யாள்வோன்
பாத பீடிகை பணிந்தன ளேத்திப்
பதியகத் துறையுமோர் பைந்தொடி யாகிச்
சுதமதி நல்லாள் தன்முகம் நோக்கி
ஈங்கு நின்றீர் என்னுற் றீரென
ஆங்கவ ளாங்கவன் கூறிய துரைத்தலும்
அரசிளங் குமரன் ஆயிழை தன்மேல்
தணியா நோக்கந் தவிர்ந்தில னாகி
அறத்தோர் வனமென் றகன்றன னாயினும்
புறத்தோர் வீதியிற் பொருந்துத லொழியான்
பெருந்தெரு வொழித்துப் பெருவனஞ் சூழ்ந்த
திருந்தெயிற் குடபாற் சிறுபுழை போகி
மிக்க மாதவர் விரும்பின ருறையும்
சக்கர வாளக் கோட்டம் புக்கால்
கங்குல் கழியினுங் கடுநவை யெய்தாது
அங்குநீர் போமென் றருந்தெய்வ முரைப்ப
வஞ்ச விஞ்சையன் மாருத வேகனும்
அஞ்செஞ் சாயல் நீயு மல்லது
நெடுநகர் மருங்கின் உள்ளோ ரெல்லாஞ்
சுடுகாட்டுக் கோட்ட மென்றல துரையார்
சக்கர வாளக் கோட்ட மஃதென
மிக்கோய் கூறிய உரைப்பொரு ளறியேன்
ஈங்கிதன் காரண மென்னை யோவென
ஆங்கதன் காரணம் அறியக் கூறுவன்
மாதவி மகளொடு வல்லிருள் வரினும்
நீகே ளென்றே நேரிழை கூறுமிந்
நாமப் பேரூர் தன்னொடு தோன்றிய
ஈமப் புறங்கா டங்கதனயலது
ஊரா நற்றேர் ஓவியப் படுத்துத்
தேவர் புகுதரூஉஞ் செழுங்கொடி வாயிலும்

நெல்லுங் கரும்பு நீருஞ் சோலையும்
நல்வழி யெழுதிய நலங்கிளர் வாயிலும்
வெள்ளி வெண் சுதை இழுகிய மாடத்
துள்ளுரு வெழுதா வெள்ளிடை வாயிலும்
மடித்த செவ்வாய்க் கடுத்த நோக்கின்
தொடுத்த பாசத்துப் பிடித்த சூலத்து
நெடுநிலை மண்ணீடு நின்ற வாயிலும்
நாற்பெரு வாயிலும் பாற்பட் டோங்கிய
காப்புடை யிஞ்சிக் கடிவழங் காரிடை
உலையா உள்ளமோ டுயிர்க்கடன் இறுத்தோர்
தலைதூங்கு நெடுமரந் தாழ்ந்துபுறஞ் சுற்றிப்
பீடிகை யோங்கிய பெரும்பலி முன்றில்
காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்
அருந்தவர்க் காயினும் அரசர்க் காயினும்
ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க் காயினும்
நால்வேறு வருணப் பால்வேறு காட்டி
இறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த
குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன
சுடும ணோங்கிய நெடுநிலைக் கோட்டமும்
அருந்திறற் கடவுட் டிருந்துபலிக் கந்தமும்
நிறைக்கற் றெற்றியும் மிறைக்களச் சந்தியும்
தண்டு மண்டையும் பிடித்துக் காவலர்
உண்டுகண் படுக்கும் உறையுட் குடிகையும்
தூமக் கொடியுஞ் சுடர்த்தோ ரணங்களும்
ஈமப் பந்தரும் யாங்கணும் பரந்து
சுடுவோ ரிடுவோர் தொடுகுழிப் படுப்போர்
தாழ்வயி னடைப்போர் தாழியிற் கவிப்போர்
இரவும் பகலும் இளிவுடன் றரியாது
வருவோர் பெயர்வோர் மாறாச் சும்மையும்
எஞ்சியோர் மருங்கின் ஈமஞ் சாற்றி
நெஞ்சு நடுக்குறூஉம் நெய்த லோசையும்
துறவோ ரிறந்த தொழுவிளிப் பூசலும்
பிறவோ ரிறந்த அழுவிளிப் பூசலும்
நீண்முக நரியின் தீவிளிக் கூவும்
சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்
புலவூண் பொருந்திய குராலின் குரலும்
ஊண்டலை துற்றிய ஆண்டலைக் குரலும்
நன்னீர்ப் புணரி நளிகட லோதையின்
இன்னா இசையொலி என்றுநின் றறாது
தான்றியும் ஒடுவையும் உழிஞ்சிலு மோங்கிக்

கான்றையுஞ் சூரையுங் கள்ளியு மடர்ந்து
காய்பசிக் கடும்பேய் கணங்கொண் டீண்டும்
மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும்
வெண்ணிணந் தடியொடு மாந்தி மகிழ்சிறந்து
புள்ளிறை கூரும் வெள்ளின் மன்றமும்
சுடலை நோன்பிகள் ஒடியா வுள்ளமொடு
மடைதீ யுறுக்கும் வன்னி மன்றமும்
விரத யாக்கைய ருடைதலை தொகுத்தாங்
கிருந்தொடர்ப் படுக்கும் இரத்தி மன்றமும்
பிணந்தின் மாக்கள் நிணம்படு குழிசியில்
விருந்தாட் டயரும் வெள்ளிடை மன்றமும்
அழற்பெய் குழிசியும் புழற்பெய் மண்டையும்
வெள்ளிற் பாடையும் உள்ளீட் டறுவையும்
பரிந்த மாலையும் உடைந்த கும்பமும்
நெல்லும் பொரியுஞ் சில்பலி யரிசியும்
யாங்கணும் பரந்த ஓங்கிரும் பறந்தலை
தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டி ராற்றாப் பாலகர்
முதியோ ரென்னான் இளையோ ரென்னான்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பவும்
அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ
ஆங்கது தன்னையோ ரருங்கடி நகரெனச்
சார்ங்கல னென்போன் தனிவழிச் சென்றோன்
என்புந் தடியு முதிரமு மியாக்கையென்
றன்புறு மாக்கட் கறியச் சாற்றி
வழுவொடு கிடந்த புழுவூன் பிண்டத்து
அலத்தகம் ஊட்டிய அடிநரி வாய்க்கொண்
டுலப்பி லின்பமோ டுளைக்கு மோதையும்
கலைப்புற அல்குல் கழுகுகுடைந் துண்டு
நிலைத்தலை நெடுவிளி யெடுக்கு மோதையும்
கடகஞ் செறிந்த கையைத் தீநாய்
உடையக் கவ்வி யொடுங்கா வோதையும்
சாந்தந் தோய்ந்த ஏந்திள வனமுலை
காய்ந்தபசி யெருவை கவர்ந்தூ ணோதையும்
பண்புகொள் யாக்கையின் வெண்பலி யரங்கத்து
மண்கணை முழவ மாக ஆங்கோர்
கருந்தலை வாங்கிக் கையகத் தேந்தி

இரும்பே ருவகையின் எழுந்தோர் பேய்மகள்
புயலோ குழலோ கயலோ கண்ணே
குமிழோ மூக்கோ இதழோ கவிரோ
பல்லோ முத்தோ வென்னு திரங்காது
கண்டொட் டுண்டு கவையடி பெயர்த்துத்
தண்டாக் களிப்பி னாடுங் கூத்துக்
கண்டனன் வெரீஇக் கடுநவை யெய்தி
விண்டோர் திசையின் விளித்தனன் பெயர்ந்தீங்
கெம்மனை காணாய் ஈமச் சுடலையின்
வெம்முது பேய்க்கென் உயிர்கொடுத் தேனெனத்
தம்மனை தன்முன் வீழ்ந்துமெய் வைத்தலும்
பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்தவித்
தீத்தொழி லாட்டியென் சிறுவன் றன்னை
யாருமில் தமியே யென்பது நோக்காது
ஆருயி ருண்ட தணங்கோ பேயோ
துறையு மன்றமுந் தொல்வலி மரனும்
உறையுளுங் கோட்டமுங் காப்பாய் காவாய்
தகவிலை கொல்லோ சம்பா பதியென
மகன்மெய் யாக்கையை மார்புறத் தழீஇ
ஈமப் புறங்காட் டெயிற்புற வாயிலில்
கோதமை யென்பாள் கொடுந்துயர் சாற்றக்
கடிவழங்கு வாயிலிற் கடுந்துய ரெய்தி
இடையிருள் யாமத் தெனையீங் கழைத்தனை
என்னுற் றனையோ எனக்குரை யென்றே
பொன்னிற் பொலிந்த நிறத்தாள் தோன்ற
ஆருமி லாட்டியென் அறியாப் பாலகன்
ஈமப் புறங்காட் டெய்தினோன் றன்னை
அணங்கோ பேயோ ஆருயி ருண்டது
உறங்குவான் போலக் கிடந்தனன் காணென
அணங்கும் பேயும் ஆருயி ருண்ணா
பிணங்குநூன் மார்பன் பேதுகந் தாக
ஊழ்வினை வந்திவன் உயிருண்டு கழிந்தது
மாபெருந் துன்பநீ ஒழிவா யென்றலும்
என்னுயிர் கொண்டிவன் உயிர்தந் தருளிஎன்
கண்ணில் கணவனை இவனாக் கோம்பிடும்
இவனுயிர் தந்தென் உயிர்வாங் கென்றலும்
முதுமூ தாட்டி இரங்கினள் மொழிவோள்
ஐயமுண் டோ ஆருயிர் போனால்
செய்வினை மருங்கிற் சென்றுபிறப் பெய்துதல்
ஆங்கது கொணர்ந்துநின் ஆருயிர் நீக்குதல்

ஈங்கெனக் காவ தோன்றுநீ யிரங்கல்
கொலையற மாமெனுங் கொடுந்தொழின் மாக்கள்
அவலப் படிற்றுரை யாங்கது மடவாய்
உலக மன்னவர்க் குயிர்க்குயி ரீவோர்
இலரோ இந்த ஈமப் புறங்காட்
டரசர்க் கமைந்தன ஆயிரங் கோட்டம்
நிரயக் கொடுமொழி நீயொழி யென்றலும்
தேவர் தருவர் வரமென் றொருமுறை
நான்மறை யந்தணர் நன்னூ லுரைக்கும்
மாபெருந் தெய்வ நீயரு ளாவிடின்
யானோ காவேன் என்னுயி ரீங்கெனை
ஊழி முதல்வன் உயிர்தரி னல்லது
ஆழித் தாழி யகவரைத் திரிவோர்
தாந்தரின் யானுந் தருகுவன் மடவாய்
ஈங்கெ னுற்றலுங் காண்பா யென்றே
நால்வகை மரபி னரூபப் பிரமரும்
நானல் வகையி னுருபப் பிரமரும்
இருவகைச் சுடரும் இருமூ வகையிற்
பெருவனப் பெய்திய தெய்வத கணங்களும்
பல்வகை யசுரரும் படுதுய ருறூஉம்
எண்வகை நரகரும் இருவிசும் பியங்கும்
பன்மீ னீட்டமும் நாளுங் கோளும்
தன்னகத் தடக்கிய சக்கர வாளத்து
வரந்தரற் குரியோர் தமைமுன் நிறுத்தி
அரந்தை கெடுமிவ ளருந்துய ரிதுவெனச்
சம்பா பதிதான் உரைத்தஅம் முறையே
எங்குவாழ் தேவரும் உரைப்பக் கேட்டே
கோதமை யுற்ற கொடுந்துயர் நீங்கி
ஈமச் சுடலையின் மகனையிட் டிறந்தபின்
சம்பா பதிதன் ஆற்றல் தோன்ற
எங்குவாழ் தேவருங் கூடிய இடந்தனில்
சூழ்கடல் வளைஇய ஆழியங் குன்றத்து
நடுவு நின்ற மேருக் குன்றமும்
புடையி னின்ற எழுவகைக் குன்றமும்
நால்வகை மரபின் மாபெருந் தீவும்
ஓரீ ராயிரஞ் சிற்றுடைத் தீவும்
பிறவும் ஆங்கதன் இடவகை யுரியன
பெறுமுறை மரபின் அறிவுவரக் காட்டி
ஆங்குவா ழுயிர்களும் அவ்வுயி ரிடங்களும்
பாங்குற மண்ணீட்டிற் பண்புற வகுத்து

மிக்க மயனால் இழைக்கப் பட்ட
சக்கர வாளக் கோட்டமீங் கிதுகாண்
இடுபிணக் கோட்டத் தெயிற்புற மாதலின்
சுடுகாட்டுக் கோட்ட மென்றல துரையார்
இதன்வர விதுவென் றிருந்தெய்வ முரைக்க
மதனின் நெஞ்சமொடு வான்றுய ரெய்திப்
பிறந்தோர் வாழ்க்கை சிறந்தோ னுரைப்ப
இறந்திருள் கூர்ந்த இடையிருள் யாமத்துத்
தூங்குதுயி லெய்திய சுதமதி யொழியப்
பூங்கொடி தன்னைப் பொருந்தித் தழீஇ
அந்தரம் ஆறா ஆறைந் தியோசனைத்
தென்றிசை மருங்கிற் சென்றுதிரை யுடுத்த
மணிபல் லவத்திடை மணிமே கலாதெய்வம்
அணியிழை தன்னைவைத் தகன்றது தானென்.

---

## ௬. சக்கரவாளக்கோட்டம் உரைத்த காதை

### உரை

### திங்கள் மண்டிலத்தின் தோற்றம்

#### க - ஆ: அந்தி.........சோரிய

(இ - ள்.) அந்தி மாலை நீங்கிய பின்னர் - அவ்வாறு வந்திறுத்த அந்திமாலைப் பொழுது போன பின்பு; வந்து தோன்றிய மலர் கதிர் மண்டிலம் - குணகடலினின்று மெழுந்து வானத்தே தனது ஒளியாலே விரிந்து தோன்றிய திங்கள் மண்டிலமானது; சான்றோர் தங்கண் எய்திய குற்றம் தோன்றுவழி விளங்கும் தோற்றம போல - நற்பண்புகளால் நிறைந்த உயர்குடிப்பிறந்தார் மாட்டுளதாகும் குற்றம் தான சிறிதேயாயினும் அது பிறரால் காணப்படும்பொழுது பெரிதாக விளங்கித் தோன்றுமாறு போலே; மாசு அறு விசும்பின் மறுநிறம் கிளர - குற்றமற்ற வானிடத்தே தன மறுவானும் ஒளியானும் விளங்கித் தோன்று நிற்ப; ஆசு அற விளங்கிய அம் தீம் தண் கதிர் வெள்ளி வெள் குடத்துப் பால் சொரிவது போல் - குற்றமில்லாமல் விளங்கிய அதனுடைய அழகிய இனிய குளிர்ந்த நிலாக்கதிர்கள் வெள்ளியா லியனற தூய வெண்மையான குடத்தினின்றும் பால் பொழியுமாறு போலே; கள் அவிழ் பூம்பொழில் இடை இடைச் சொரிய - தேன் துளிக்கின்ற உவவனம் என்னும் அம் மலர்ப்பூம் பொழிலகத்தே இடையிடையே பொழியா நிற்ப என்க.

(வி - ம்.) வந்து தோன்றிய என்றது வானத்திலே உயர்ந்து வந்து தோன்றிய என்பதுபட நின்றது. மலர்கதிர்: வினைத்தொகை. "சான்றோர் தங்கன் எய்திய குற்றம்போல......மறுநிறம் கிளர" என்னு மிதனோடு;

> "குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
> மதிக்கண் மறுப்போ லுயர்ந்து" (குறள்)

எனவரும் திருக்குறளையும் நினைவு கூர்க.

மாசு அறு விசும்பின் என்புழி மாசு என்றது முகில் மழை முதலிய வற்றை. மறுவானும் நிறத்தானும் கிளர என்க. இனி மறுவானது அதன் மார்பிலே மட்டும் விளங்க, அதன் கதிர்கள் பூம்பொழிலினும் வந்து இடை இடையே சொரிய எனக்கோடலுமாம். நிறம் - ஈண்டு மார்பு. கள் - தேன். பொழில் - உவவனம்.

## மணிமேகலா தெய்வம் சுதமதியையும் மணிமேகலையையும் அணுகி வினவுதல்

௯ - ௧௫ : உருவு.........உற்றீரேன

(இ - ள்.) உருவு கொண்ட மின்னே போலத் திருவில் இட்டுத் திகழ்தரு மேனியள் - பெண்ணுருக் கொண்டதொரு மின்னல் போன்ற மணிமேகலா தெய்வம் இந்திரவில் போன்று பல்வேறு நிறங்களையும் வானிடத்தே பரப்பி விளங்குகின்ற திருமேனியுடையவளாய்; ஆதி முதல்வன் அற ஆழி ஆள்வோன் பாத பீடிகை பணிந்தனள் ஏத்தி - எண்ணில புத்தர்கட்கும் முற்படத் தோன்றிய முதல்வனும் உலகினைத் தனது அறமாகிய சக்கரத்தையுருட்டி அருளாட்சி செய்பவனும் ஆகிய புத்த பெருமானுடைய பாதபங்கயம் கிடந்த பீடிகையை வலஞ்செய்து வணங்கி வாழ்த்தியவள் பின்னர்; பதியகத்து உறையும் ஓர் பைந்தொடியாகி - அப் பூம்புகார் நகரத்தே வாழ்வாள் ஒருத்தியின் வடிவத்தை மேற்கொண்டு; சுதமதி நல்லாள் மதி முகம் நோக்கி சங்கு நின்றீர் என உற்றீர் என - ஐந்து விற்கிடைத் தொலைவில் அங்குநின்ற சுதமதி என்னும் அறப்பண்பு மிக்கவளது திங்கள் போன்ற திருமுகத்தை நோக்கி நீவிருவிரும் இப்பொழுது இவ்விடத்திலே தமியராய் நிற்கின்றீர், இவ்வாறு நிற்றற்குக் காரணமான இடுக்கண் ஏதேனும் எய்தினிரோ இயம்புக! என்று வினவ என்க.

(வி - ம்.) உருவு கொண்ட மின்னே போல என்றாரேனும் மின் ஒரு பெண்ணுருவு கொண்டாற் போல என்பது கருத்தாகக் கொள்க. திருவில்-இந்திரவில். இந்திரவில் போன்று பல்வேறு ஒளிகளையும் பரவவிட்டு என்க ஆதிமுதல்வன் என்றது-கௌதம புத்தரை. உலகத்தே அறத்தைச் சான்றோர் உள்ளத்தே புகுத்தி அருளாட்சி செய்தலின், அறவாழி ஆள்வோன் என்றார். ஆழி என்றது ஆணையை. அதனை ஆழியாகக் கூறுவது மரபு. "இந்திரவில் இன்னவாறு தோன்றும் எனப் புலப்படாமையினால் அங்ஙனம்தோன்றுகின்றதெய்வங்கட்குவமையாயிற்று" என்பாருமுளர். அவ் விளக்கம் போலி. என்னை? அஃது எவ்வாறு தோன்றுகின்றது என்பது யாவர்க்கும் இனிது விளங்குதலின். பாத பீடிகை என்றது. பளிக்கறையினகத்தே மயனால் இயற்றப்பட்ட பீடிகையை. பணிந்தனள் - பணிந்து. பைந்தொடி, என்றது பெண் என்னுந் துணையாய் நின்றது. மதிமுகம்: உவம உருபு தொக்கது. மகளிர் நிற்கத்தகாத இடத்தினும் பொழுதினும் நிற்கின்றீர் என்பாள் சங்கு நின்றீர் என்றாள். அதற்கொரு காரணம் இருத்தல் வேண்டும், அது தெரிந்திலது என்பாள் போல வினவியபடியாம். பதியகத்து உறையுமோர் பைந்தொடியாகி வந்தமைக் கிணங்க வினவியவாறு. என்-என்ன இடுக்கண். சுதமதியோடு மணிமேகலையையும் உளப்படுத்திப் பன்மையால் வினவினள்.

### மணிமேகலா தெய்வம் அம் மகளிர்க்குக் கூறுதல்

### ௧௫ - ௨௫ : ஆங்கவள்.........உரைப்ப

(இ - ள்.) ஆங்கு அவள் ஆங்கு அவன் கூறியது உரைத்தலும் - அங்ஙனம் வினவிய பொழுது அச் சுதமதி நல்லாள் அத் தெய்வத்திற்கு முன்பு அவ்விடத்தே அவ்வரசிளங்குமரன் கூறியதனை எடுத்துக் கூறுகிற்ப; அரசு இளங்குமரன் ஆயிழை தன்மேல் தணியா நோக்கம் தவிர்ந்திலன் ஆகி - அது கேட்ட அம்மணிமேகலா தெய்வம் அம் மகளிரை நோக்கி அன்புடையீர்! அவ்வரசன் மகனாகிய இளமையுடைய உதயகுமரன், நீ கூறியவாறு இம் மணிமேகலையின்பால் தணியாத காம நோக்கம் தவிராதவனாயிருந்தும்; அறத்தோர் வனம் என்று அகன்றனன் ஆயினும் - இழுக்கொடு புணரா விழுக்குடிப் பிறப்புடையோன் ஆதலின் இவ் வுவவனம் பகவனதாணையிற் பன்மரம் பூக்கும் இயல்புடையதாய் அச் சமயத் துறவோர்க்கே உரிய தெய்வத் தன்மையுடையதாகலின் இதனூடே இவளைக் கைப்பற்றுதல் பழியாம் என்பது கருதி இப்பொழுது இவ்விடத்தனின்று நீங்கினன் ஆயினும்; புறத்தோர் வீதியில் பொருந்துதல் ஒழியான் - துறவோரல்லாத ஏனையோர் வாழுகின்ற வீதியினிடத்தே நீயிர் செல்லுங்கால் அவன் இவளைக் கைப்பற்றுதலின்றிப் போகான்காண!; பெருந்தெருவொழித்துப் பெருவனம் சூழ்ந்த திருந்து எயில் குடபால் சிறுபுழை போகி - ஆதலால் நீயிர் நுமது பள்ளிக்குச் செல்லும் பொழுது நீவிர் வந்த அந்தப் பெரிய தெருவழியே செல்லுதலைத் தவிர்த்துப் பெரிய இந்த உவவனத்தைச் சூழ்ந்துள்ள அழகிய மதிலிடத்தே மேற்றிசையிலுள்ள சிறியதொரு புழைக்கடைவாயில் வழியே சென்று; மிக்க மாதவர் விரும்பினர் உறையும் சக்கரவாளக் கோட்டம் புக்கால் - மிகுந்த பெரிய தவத்தையுடைய துறவோர் விரும்பித் தங்குஞ் சிறப்புடைய சக்கரவாளக்கோட்டத்துள் புகுந்துவிட்டால்; கங்குல் கழியினும் - அதனூடேயே இவ்விரவுப் பொழுது முழுவதும் கழிந்தாலும்; கடுநவை எய்தாது அங்கு நீர் போம் என்று அருந்தெய்வம் உரைப்ப - கடிய துன்பம் ஒன்றும் நுமக்குண்டாக மாட்டாது ஆதலாலே அவ்வழியே சென்று அச் சக்கரவாளக் கோட்டத்திற்கே நீவிரிருவீரும் போவீராக என்று காண்டற்கரிய அத் தெய்வம் கட்டுரைப்ப; என்க.

(வி - ம்.) ஆங்கு இரண்டனுள் முன்னது காலத்தையும் பின்னது இடத்தையும் சுட்டியவாறு. அவள் : சுதமதி. அவன் : உதயகுமரன். தணியாத காமநோக்கம் - பெயரெச்சத்தின் ஈறு கெட்டது. அறத்தோர் என்றது துறவோரை. அவன் உயர்குடிப் பிறப்பினன் ஆகலின் ஈண்டு இவளைக்கைப்பற்றுதல் பழியென்றுட்கொண்டு அகன்றனன் என்றவாறு.

பெருந்தெருவில் இவளைக் கைப்பற்றுதல் அவனுக்குப் பழியாகாமையின் அவன் இவள் வரவு பார்த்து அங்குத் தேற்றமாக இருப்பான்; ஐயமில்லை, ஆதலின் அவ்வழியே செல்லற்க என்று தெரித்தோதிய படியாம். புழை - புழைக்கடைவழி. பெருவனம் என்றது உவவனத்தை. சக்கரவாளக் கோட்டத்தே கடுநவை எய்தாமைக்கு ஏதுக்கூறுவாள், மிக்க மாதவர் விரும்பி யுறையும் சக்கரவாளக் கோட்டம் என்றாள்.

காண்டற்கரிய தெய்வம் இங்ஙனம் எளிவந்துரைப்ப என்பார், அருந்தெய்வம் உரைப்ப என்றார்.

### சுதமதி மணிமேகலா தெய்வத்தை வினுதல்

### உஎ - ௩௬: வஞ்ச.........கூறும்

(இ - ள்.) வஞ்ச விஞ்சையன் மாருத வேகனும் அஞ்செஞ் சாயல் நீயும் அல்லது - அது கேட்ட சுதமதி அத்தெய்வத்தை நோக்கி அன்புடையோய்! வஞ்ச நெஞ்சமுடைய மாருதவேகன் என்னும் விச்சாதரனும் அழகிய செவ்விய மென்மையுடைய நங்கையே நீயும் அல்லது; நெடுநகர் மருங்கின் உள்ளோர் எல்லாம் - நெடிய இப் பூம்புகார் நகரத்தில் வாழுகின்ற மாந்தர் எல்லாருமே இன்னுற் கூறப்பட்ட கோட்டத்தை; சுடுகாட்டுக் கோட்டம் என்றலது உரையார் - சுடுகாட்டுக் கோட்டம் என்று குறிப்பிட்டுக் கூறுவதேயன்றிப் பிறிதொரு பெயரானும் கூறுதலிலர்; மிக்கோய் அது சக்கரவாளக் கோட்டம் எனக் கூறிய உரைப்பொருள் அறியேன் - அறிவான் மிக்க நீதானும் அதனைச் சக்கரவாளக் கோட்டம் என்றே கூறிய சொல்லின் பொருளை யான் சிறிதும் தெரிகிலேன்; ஈங்கு இதன் காரணம் என்னையோ என - இங்கு நீ இவ்வாறு இதற்குப் பெயர் கூறுதற்கேற்ற காரணந்தான் யாதோ? என்று வினவாநிற்ப; ஆங்கு அதன் காரணம் அறியக் கூறுவன் - அது கேட்ட அத்தெய்வம் நல்லாய் நன்று வினவினை அவ்வாறு அதனைக் கூறுவதற்குரிய காரணம் நீ நன்கு அறிந்து கொள்ளுமாறு விளக்கமாகக் கூறுவேன்; நீ மாதவி மகளொடு வல் இருள் வரினும் கேள - நீ தானும் இம் மாதவி மகளொடு பொறுமையுடனிருந்து நள்ளிரவு வந்துறினும் கேட்டறிந்து கொள்ளக்கடவை, கேட்பாயாக என்று; நேரிழை கூறும் - முற்பட வலியுறுத்துப் பின்னர் நேரிய அணிகலன்களையுடைய அம் மணிமேகலா தெய்வம் கூறாநிற்கும் என்க.

(வி - ம்.) தன்னைக் கண்ணுற்றுஞ் சிறிதுமின்றிக் கைவிட்டுப் போனமையாலே விஞ்சையன் என்றது வஞ்சவிஞ்சையன் என்றாள். நெடுநகர் என்றது - பூம்புகார் நகரத்தை. வஞ்ச விஞ்சையன் கூற்றும் பொய்யாதலும் கூடும் என்றிருந்தவள் இவளும் அங்ஙனம் கூறுதலின் ஒரு காரணம் உளதாதல் வேண்டும் என்னும் ஊகத்தால் வினவுகின்றாளாகலின் மிக்கோய் கூறிய உரைப்பொருள் என்றாள். வஞ்சவிஞ்சையனே

அன்றி மிக்கோயும் கூறுகின்றனை ஆதலின் அது பொருள் உரையே ஆதல் வேண்டும் அஃதறிகிலேன் என்றவாறு.

இனி, அத் தெய்வந்தானும் அஃதறிந்து கொள்ள வேண்டிய தொன்றே ஆதலால் கூறுவன் கேள் என்கின்றது. மணிமேகலையும் உணரற்பாலது அச் செய்தி என்பது தோன்ற மாதவி மகளொடு வல்லிருள் வரினும் கேள் என்றாள். என்னை? அவட்குத் துறவின் செல்லும் ஏது நிகழ்ச்சி எதிர்ந்துண்மையின் அதற்கின்றியமையாத நிலையாமை யுணர்ச்சியைத் தோற்றுவிக்கும் செய்தியாகலின்; வல்லிருள் - என்றது ஆகு பெயராய் இரவு என்னும் துணை. இச் செய்தியைக் கேட்டல் அவட்கு ஆக்கமாம் ஆதலின் என்க. நிலையாமை யுணர்ச்சி மெய்யுணர் வார்க்கு இன்றியமையாத தென்பதனை :

"அவற்றுள் நிலையாமையாவது - தோற்ற முடையன யாவும் நிலையுதலிலவாந்தன்மை. மயங்கிய வழிப் பேய்த்தேரிற் புனல்போலத் தோன்றி, மெய்யுணர்ந்த வழிக் கயிற்றில் அரவுபோலக் கெடுதலிற் பொய்யென்பாரும், நிலைவேறுபட்டு வருதலால் கணந்தோறும் பிறந்திறக்குமென்பாரும் ஒருவாற்றான் வேறுபடுதலும் ஒருவாற்றான் வேறு படாமையும் உடைமையின் நிலையாமையும் நிலையுதலும் ஒருங்கேயுடைய வென்பாருமெனப் பொருட்பெற்றி, கூறுவார் பலதிறத்தராவார்; எல்லார்க்கும் அவற்றது நிலையாமை உடம்பாடாகலின் ஈண்டு அதனையே கூறுகின்றார். இஃதுணர்ந்துழியல்லது பொருள்களின்மேல் பற்று விடாதாகலின், இது முன் வைக்கப்பட்டது'' எனவரும் பரிமேலழகர் பொன் மொழிகள் ஈண்டு நினைவிற் கொள்ளற் பாலனவாம் (குறள். அதி - ௩௪ - முன்னுரை).

**[௩௬—'இந்நாமப் பேரூர்' என்பது முதலாக; ௨௦௫— "இதன் வரவு இது'' என்னுமளவும் மணிமேகலா தெய்வத்தின் கூற்றாய் ஒரு தொடர்.]**

## சக்கரவாளக்கோட்டவண்ணனை

**௩௬ - ௪௯ : இந்நாம..........இஞ்சி**

**(இ - ள்.)** இந்நாமப் பேரூர் தன்னொடு தோன்றிய ஈமப் புறங்காடு ஈங்கு - பகைவர்க்கு அச்சம் விளைவிக்கும் பெரிய தலை நகரமாகிய இந் நகரம் தோன்றிய காலத்தே அதனோடு தோன்றிய முதுமையுடைய ஈமவிறகுகளையுடைய சுடுகாடு இவ் வுவவனத்தின்; அயலது - பக்கத்திலே உளதாம்; ஊரா நல்தேர் ஓவியப் படுத்துத் தேவர் புகுதரூஉம் செழுங்கொடி வாயிலும் - அது தானும் வலவன ஏவா வானவூர்தியின் ஓவியம் வரையப்பட்டுத் தேவர்கள்மட்டுமே உள்ளே புகுதற்கமைத்த வளவிய கொடி யுயர்த்தப்பட்ட வாயிலும்; நெல்லும் கரும்பும் நீரும் சோலையும் நல்வழி எழுதிய நலங்கிளர் வாயிலும் - நெற்பயிரும கரும்பும் நீர் நிலைகளும் சோலையும் உடைய நல்ல நெறியும் வரைந்து ஓவியப்

படுத்தப்பட்ட அழகுமிகும் வாயிலும்; வெள்ளி வெள்சுதை இழுகிய மாடத்து உள்உருவு எழுதா வெள் இடை வாயிலும் - மிகவும் வெண்மையான சுண்ணச்சாந்து தீற்றிய மாடத்தையும் அதனுள் ஓவியம் ஒன்றும் வரையாமல் வெற்றிடமாக விடப்பட்டிருக்கின்ற வாயிலும்; மடித்த செவ்வாய்க் கடுத்த நோக்கின் தொடுத்த பாசத்துப் பிடித்த சூலத்து - உதடுகளை மடித்துள்ள சிவந்த வாயையும் கடிய வெகுளியையுடைய நோக்கத்தையும் நரகன் ஒருவனைக் கட்டிய கயிற்றையும், அவனை எறிதற்கு ஓக்கிய சூலப்படையையும் உடையதாய்க் கட்டிவிடப் பட்ட; நெடுநிலை மண்ணீடுநின்ற வாயிலும் - நேராக உயர்ந்து நிற்கின்ற நிலையினையுடைய பூதப்படிமம் நிற்கின்ற வாயிலும் ஆகிய; நால்பெருவாயிலும் பால்பட்டு ஓங்கிய காப்பு உடை இஞ்சி - நான்கு பெருவாயில்கள் நான்கு பக்கங்களினும் அமைக்கப்பட்டு நாற்புறமும் சூழ்ந்து உயர்ந்த காவலையுடைய மதிலையும்; என்க.

(வி - ம்.) நாமம் - அச்சம். ஊராநற்றேர் - வலவனேவா வான வூர்தி. தேவர் புகுதரூஉம் செழுங்கொடி வாயிலும் என்றது, தேவராதற்குரிய நல்வினை செய்தார் நுண்ணுடம்போடு கூடிய உயிரைத் தங்களுலகிற்கு அழைத்துச் செல்லுதற்கு அச் சக்கரக் கோட்டத்தில் வந்து புகுவாராதலின் அவர்க்கெனவே சிறப்பாக வகுக்கப்பட்டு அச் சிறப்புக்கு அறிகுறியாக வானவர் ஊர்தியாகிய வலவனேவா வானவர் ஊர்தியின் ஓவியம் வரையப்பட்டும் அதற்கேயுரிய கொழுங்கொடி உயர்த்தப்பட்டும் திகழும் வாயிலும் என்றவாறு.

இனி இதனைப் பாட்டிடைவைத்த குறிப்பினாலே ஏனைய மூன்று வாயிலின் சிறப்புக்களையும் இப் புலவர் பெருமான் இதனைப் பயில்பவர்களே குறிப்பாக வுணர்ந்து கொள்ளுமாறு புனைந்திருக்கும் பேரழகு நம்மைப் பேரின்பத்திலே திளைப்பிக்கின்றது. அக் குறிப்புப் பொருளை இனி ஈண்டு ஆராய்ந்தெடுத்துக் காட்டுவாம்.

உயிரினங்கள் தத்தம் வினையின் பயனாக மூன்றுலகங்களினும் சென்று பிறக்கும் என்பதும், பற்றற்ற உயிர் பேராவியற்கையாகிய பேரின்ப வாழ்வைப் பெறும் என்பதும், உலகாயத சமயத்தார்க் கல்லது ஏனைய சமயத்தார்க்கும் பெரும்பாலும் ஒப்பமுடிந்த கொள்கையாம். பேராவியற்கை என்னும் இந் நிலையையே வீடு எனவும் முத்தி எனவும் கூறுவர் பௌத்தர் இந் நிலையையே நிருவாணம் என்று கூறுவர். ஆகவே, இம்மையே நல்வினை செய்த உயிர்கள் தேவர்களால் வரவேற்கப்பட்டு அச் சக்கரவாளக் கோட்டத்தினின்றும் புறப்படும் வாயிலை மட்டும் விளக்கினர். இனி, நல்வினையும் தீவினையும் விரவச் செய்த வுயிர்கள் மீண்டும் இன்பமும் துன்பமும் விரவிய நுகர்ச்சியையுடைய மக்கள் பிறப்பையே எய்தும் ஆகலின் அவ்வுயிர் புறப்படுதற்கும் அவற்றிற்குரிய கடன்கள் செய்தற்குரிய மக்கள் புகுதருதற்கும் உரிய வாயில் என்பதற்குரிய அடையாளங்களாகவே இவ் வுலக வாழ்விற்கின்றியமையாத பொருள்களாகிய "நெல்லும் கரும்பும் நீரும்

சோலையும் நல்வழி மருங்கே'' பொறிக்கப்பட்டது ஒரு வாயில் எனவும். இனித் தீவினை செய்தவுயிர்கள் காலதூதர்களாலே பாசத்தால் பிணிக்கப்பட்டு நரகிலிடப்பட்டு வதைக்கப்படும் என்பதற்கறிகுறியாகவும் அவ்வினைத்துப் பேயும் பூதமும் புகுதருதற்கும் அத் தீய வுயிர்கள் புறப்படுதற்கும் உரிய வாயிலிது என்றறிவுறுத்தற்கு—

"மடித்த செவ்வாய்க் கடுத்த நோக்கின்
தொடுத்த பாசத்துப் பிடித்த சூலத்து
நெடுநிலை மண்ணீடு''

ஒருவாயிலின்கண் சிற்பியரால் கட்டி நிறுத்தப்பட்டது எனவும், இனி மெய்யுணர்வு சிறந்து அவாவறுத்த தூயவுயிர்கள் பேராவியற்கை பெறுதற்கு இவ்வுலகிற்கு ஈண்டு வாராநெறிச் செல்வன புறப்பட்டுப் போதற்கியன்ற வாயில் என்பதற்கு அறிகுறியாகவே ஒரு வாயில்

"வெள்ளி வெண்சுதை இழுகிய மாடத்து
உள்ளுரு எழுதா வெள்ளிடை வாயில்''

மயனால் அமைக்கப்பட்டது. என்னை? வீடெய்துவோர் உளம் இவ் வுலகப் பொருள்களில் யாதொன்றனிடத்தும் பற்றில்லாமல் முழுத் தூய்மை பெற்று வறிதிருக்குமாதலின், அவ் வுயிர் போகும் அவ் வாயில் தூய்மைக்கே அறிகுறியாகிய வெள்ளி வெண்சுதை தீற்றி ஓவியப் பொருள் ஏதும் வரையப்படாமல் வெள்ளிடையாக (வெற்றிடமாக) விடப்படல் வேண்டிற்று. இவையெல்லாம் யாம் நுண்ணுணர்வாற் காணுங்கால் அக் காட்சி பேரின்பம் பயத்தலும் உணர்ந்து கொள்க.

இவ்வாறு நான்கு வாயிலும் நால் வேறு வகைப் பட்டனவாகப் புலவர் பெருமான் ஓதுதற்குக் காரணம் இருத்தல் வேண்டும் என்னும் கருத்தாலே ஆராய்ந்து கூறும் பொருள் இவை.

மண்ணீடு - சுடுமண் கொண்டு செய்து சுதை தீற்றிய படிவம் (உருவம்). இத் தொழில் செய்வோரை மண்ணீட்டாளர் என்று அறிவுறுத்துவர் ஆசிரியர் இளங்கோவடிகளார் (சிலப். ரு-௩௦). "மண் மாண்புனை பாவை'' என்பர் வள்ளுவனார். அதற்குப் பரிமேலழகர் "சுதையான் மாட்சிமைப்படப் புனைந்த பாவை'' என்றுரை வகுப்பர் (௪௦எ - குறள்). வாயிலும் வாயிலும் வாயிலும் வாயிலும் ஆகிய நாற் பெருவாயிலும் என இயையும். இஞ்சி - மதில்.

## இதுவுமது

### ௪௬ - ருங : கடி..........கோட்டமும்

(இ - ள்.) கடி வழங்கும் ஆர் இடை - அம் மதிலக வரைப்பினூடே மக்கள் வழங்குதலரிய நிலப்பரப்பிலே; உலையா உள்ளமோடு உயிர்க்கடன் இறுத்தோர் தலைதூங்கு நெடுமரம் தாழ்ந்து புறம் சுற்றி - உறுதியிற்றளராத நெஞ்சத்தோடே நின்று தம் தலைமயிரால் மரக்கிளையில் நன்கு முடிபிட்ட பின்னர்த்

தாமே தம் கழுத்தை யரிந்து தாம் தமது பராவுக்கடனாகிய உயிரைக் கொடுத்த வீரமறவருடைய தலைகள் தூங்காநின்ற, நெடிய மரங்களின் கிளைகள் தாழ்ந்து பக்கமெல்லாம் சூழப்பெற்று; பீடிகை ஓங்கிய முன்றில் காடு அமர் செல்வி கழிபெருங் கோட்டமும்- சுடுகாட்டை விரும்பியுறையும் இறைவியாகிய கொற்றவை எழுந்தருளியிருக்கின்ற மிகவும் பெரிய திருக்கோவிலும் என்க.

(வி - ம்.) உயிர்க்கடன் இறுத்தோர்-தம் தலையைத் தாமே அரிந்து தமதின்னுயிரை இறைவிக்குப் பலியாக வழங்குபவர். இங்ஙனம், உயிர்க் கடன் இறுத்தலை அவிப்பலி என்று தமிழருடைய பொருளியல் நூல் கூறும். அவி - ஆவி. ஆவிப்பலி கொடுக்கும் மறவரே மறத்திற்குத் தலைவரம்பாவார் என்ப. இங்ஙனம் அவிப்பலி கொடுத்தலை,

"ஆர்த்துக் களங்கொண்டோர் ஆரம ரழுவத்துச்
சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை
வெற்றி வேந்தன் கொற்றங் கொள்கென
நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்கு
உயிர்ப்பலி யுண்ணும் உருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி"

எனவரும் சிலப்பதிகாரத்தானும் (ரு : அ௯ - அ), அங்ஙனம் உயிர்க் கடனிறுக்குங் காலத்தே அம் மறவருடைய உலையா உள்ளத்தினியல்பை,

"மோடி முன்றலையை வைப்பரே
முடிகுலைந்த குஞ்சியை முடிப்பரே
ஆடிநின்று குருதிப்புதுத் திலதமும்
அம்மு கத்தினி லமைப்பரே"

எனவரும் (சிலப் - ரு : எசு - அஅ : அடியார்க் - உரைமேற்கோள்) தாழிசையானும்,

"அடிக்கழுத்தின் நெடுஞ்சிரத்தை அரிவராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்பராலோ
கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவுமாலோ
குறையுடலம் கும்பிட்டு நிற்குமாலோ"

எனவரும் கலிங்கத்துப் பரணியானும் (கோயில் - கரு) அறிக.

இனி உயிர்க்கடனிறுப்போர் சிலர் தமது சிகையை மரக்கிளையில் முடிந்துவிட்டுப் பின் கழுத்தை அரிதலால் தலைதூங்கு நெடுமரம் என்றார். இதனை—

"வீங்குதலை நெடுங்கழையின் மிசைதோறும்
திசைதோறும் விழித்து நின்று

தூங்குதலை சிரிப்பனகண் டுறங்குதலை
மறந்திருக்குஞ் சுழல்கட் சூர்ப்பேய்''

என்பதனுலறிக. (கலிங்க - கோயில் - உக.)

பெரும்பலி என்ருர் அவிப்பலி யாதலின். பீடிகை - பலிபீடம். காடமர் செல்வி - கொற்றவை.

இதுவுமது

௫௪ - ௫௫: அருந்தவர்.........பரந்து

(இ - ள்.) அருந் தவத்தார்க்கு ஆயினும் அரசற்கு ஆயினும் ஒருங்கு உடன்மாய்ந்த பெண்டிர்க்காயினும் - அரிய தவவொழுக்கந் தாங்கிய துறவோர்க் காதல், அரசருக்கு ஆதல் தங்கணவர் மாய்ந்தக்கால் அவரோடு ஒருங்கே தம்முயிரையும் மாய்த்துக் கொண்ட கற்புடைய மகளிர்க்காதல்; நால்வேறு வருணப் பால் வேறுகாட்டி - அந்தணரும் அரசரும் வணிகரும் வேளாளரும் ஆகிய பகுதிகளையுடைய மாந்தர்களுக்கு அப் பகுதி களுக்குரிய மரபுகளையும் வேறு வேறு தெரியும்படி அவற்றிற்குரிய அடையாளங்களோடு காட்டி; இறந்தோர் மருங்கில் சிறந்தோர் செய்த-இறந்துபட்டவர் திறத்திலே அவரவர்க்குச் சிறந்த கேளிரா யோர் எடுத்த; குறியவும் நெடியவும் குன்று கண்டன்ன சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டமும் - குறியனவாகவும் நெடியன வாகவும் அமைந்த மலைக்கூட்டத்தைக் கண்டாற் போன்ற காட்சியையுடைய செங்கலாலியற்றப்பட்ட உயர்ந்த நிலையினை யுடைய கோயில்களும்; அருந் திறல் கடவுள் திருந்து பலிக் கந்தமும் - தடுத்தற்கரிய பேராற்றல் பொருந்திய கடவுளர்க்குத் திருத்தமுடைய பலிகளையிடுதற்பொருட் டமைக்கப்பட்ட பல வேறுவகையான தூண்களும்; நிறைக் கல் தெற்றியும் - வீரமற வர்க்கு நிறுத்தப்பட்ட கல்களையுடைய மேடைகளும்; மிறைக் களச் சந்தியும் - குற்றம்புரியும் கொடியாரைக் கொலை செய் தொறுத்தற்கியன்ற கொலைக்களமாகிய சந்தியும்; தண்டும் மண்டையும் பிடித்துக் காவலர் உண்டுகண் படுக்கும் உறையுள் குடிகையும் - தடியும் மட்கலமும் கையிற்கொண்டு அச் சக் கரவாளக் கோட்டத்தைக் காவல் செய்கின்ற காவலர்கள் உண வுண்டு உறங்குதற்கியன்ற இடமாகிய குடில்களும்; தாமக் கொடியும்-எரிகின்ற ஈமத்தினின்று ஒழுங்குறப்படருகின்ற புகை யொழுங்குகளும்; சுடர்த் தோரணங்களும் - ஈமத்தில் எரிகின்ற தீப்பிழம்புகளாகிய தோரணங்களும்; ஈமடபந்தரும் யாங்கணும் பரந்து - ஈமவிருப்பு மழையாலவியாமைப் பொருட்டு இடப்

பட்டுள்ள சாரப்பந்தர்களும் ஆகிய இவையெல்லாம் எங்கும் பரந்து காணப்படு ; என்க.

(வி - ம்.) அருந்தவர்க்கும் அரசர்க்கும் கற்புடை மகளிர்க்கும் இடுகாட்டில் கோவில் எடுக்கும் வழக்கம் உண்மை அறிக. அந்தணர் முதலிய வருணம் நான்கிற்கும் வேறு வேறு அடையாளம் உண்மையின் கோயில்களினும் அவ்வடையாளமிட்டு இவர் இணையர் இன்ன வகுப்பினர் என யாவரும் அறியும்படி காட்டி என்பது கருத்து. சிறந்தோர்-இறுதிக்கடன் செய்தற்குச் சிறப்புரிமையுடையோர் எனினுமாம்.

பொருளுடைமைக்கும் இறந்தோர் தகுதிக்கும் ஏற்பக் குறியவும் நெடியவுமாக எடுக்கப்பட்டவை என்க.

சுடுமண் - செங்கல். கந்தம் - தூண். நிறைக்கல் - வீரமறவர்க்கு நினைவுச்சின்னமாக நிறுத்தப்பட்ட கல். இறுத்தல் - இறை என்றாற் போன்று, நிறுத்தல் - நிறை என்றாயிற்று. தெற்றி - மேடை. மிறை-குற்றம். களம் என்றமையால் இது கொலையால் கொடியாரை வேந்தொறுக்கும் கொலைக்களம் என்பது பெற்றாம். இக் களம் பலகோத்தொழிலாளரும் கூடுமிடமாகலின் சந்தி எனப்பட்டது. இதற்குப் பிறரெல்லாம் சிறப்பில்லாவுரை கூறிப்போந்தார்.

உறையுளாகிய குடிகை, குடில் என்பன தூய தமிழ்ச்சொற்களே. குடி - வீடு. கை, இல் என்னும் சிறுமைப் பொருட்பின்னொட்டு சேர்ந்து குடிகை, குடில் என ஆயிற்று. கொடி - ஒழுங்கு. கொடி என்றதற்கிணங்க நூலாசிரியர் தோரணமும் பந்தரும் என்ற நயமுணர்க.

## சக்கரவாளக் கோட்டத்தெழும் ஓசைவகைகள்

### ௬௬ - ௭௬ : சுடுவோர்..........நின்றழுது

(இ - ள்.) சுடுவோர் இடுவோர் தொடுகுழிப்படுப்போர் தாழ்வயின் அடைப்போர் தாழியின் கவிப்போர் - அச் சக்கரவாளக்கோட்டத்து மக்கட்பிணத்தை ஈமத்தேற்றிச் சுடுபவரும் அவற்றைக் கொணர்ந்து ஒருபுறத்தே வாளாது போகடுவோரும் தோண்டப்பட்ட குழியிலிட்டுப் புதைப்பவரும் தாழ்ந்த பள்ளங்களிலே அடைத்து வைப்பவரும் மண்ணாற்செய்த தாழியிலிட்டுக் கவிழ்ப்பவருமாய் ; இரவும் பகலும் இளிவுடன் தரியாது வருவோர் பெயர்வோர் மாறாச்சும்மையும் - இரவும் பகலுமாகிய இருபொழுதினும் வாலாமையுடன் இருத்தல் பொறாமல் வருபவரும் கடன்முடித்துப் போவாரும் எழுப்புகின்ற இடையறாத ஆரவாரமும் ; எஞ்சியோர் மருங்கின் ஈமம் சாற்றி - இறவாதிருந்தோர்க்கெல்லாம் நுங்கட்கும் இவ்வாறு செய்யும் ஈமச்சடங்குண்டு என்பதனை அறிவுறுத்துக் கேட்டோர் ; நெஞ்சு நடுக்குறூஉம் நெய்தல் ஓசையும் - நெஞ்சத்தை அச்சத்தால் நடுங்கப் பண்ணுகின்ற நெய்தற்பறை முழக்கமும் ; துறவோர் இறந்த

தொழுவிளிப் பூசலும் - துறவுபூண்டவர் இறந்தமையாலே ஏனையோர் அவரைத் தொழுது வாழ்த்தும் வாழ்த்தொலியும்; பிறவோர் இறந்த அழுவிளிப் பூசலும் - துறவாத மாந்தர் இறந்தமையால் அவர் சுற்றத்தார் அழுதலாலே எழுகின்ற அழுகை ஒலியும்; நீள் முக நரியின் தீவிளிக் கூவும் - நீண்ட முகத்தையுடைய நரிகள் ஊளையிடுகின்ற கேள்விக்கின்னாததாகிய கூக்குரலும்; சாவோர்ப் பயிரும் கூகையின் குரலும் - சாகக்கிடக்கின்றவரை விரைந்து சாகும்படி கூப்பிடுகின்ற கூகையின் குழறல் ஒலியும்; புலவூண் பொருந்திய குராலின் குரலும் - ஊன் உண்ணுதலிலே பொருந்திய கோட்டான் குரல்களும்; ஊண் தலைத் துற்றிய ஆண்டலைக் குரலும் - உணவாக மாந்தர் தலைமூளையை உண்ட ஆண்டலைப்புள் மகிழ்ந்தெடுத்த குரலோசையும்; இன்னா இசையொலி ஆகிய - இன்னாமை தருகின்ற இசைகளின் கூட்டமாகிய பேரொலியானது; நல்நீர் புணரி நளிகடல் ஓதையின் - நல்ல நீரையுடைய ஆறுகள் புக்குப் புணர்தலையுடைய செறிந்த கடலினது முழக்கம் போன்று; என்றும் நின்று அறாது - எப்பொழுதும் நிலைபெற்று நிற்பதல்லது ஒருபொழுதும் ஒழியமாட்டாது என்றாள் என்க.

(வி - ரை.) பிணங்களைச் சுடுவோரும் இடுவோரும் குழிப்படுப்போரும் அடைப்போரும் கவிப்போருமாய்ப் பல்வேறுவகையாக இறுதிக்கடன்கள் செய்ய, இரவும் பகலுமாகிய இருபொழுதும் வருவோரும் செல்வோரும் செய்யும் ஆரவாரமும் நெய்தற்பறை முழக்கும் ஓசையும் தொழும் பூசலும் அழும் பூசலும் நரி கூகை குரால் ஆண்டலைப்புள்ளும் ஆகிய இவை செய்யும் ஆரவாரமும் ஆகிய எல்லாம் இன்னா இசையாய் ஒன்றாகிக் கடலோதை போல எப்பொழுதும் ஒலிக்க.

இடுவோர் - வாளாது போகட்டுச் செல்வோர். மக்கட் பிணமும் நரிமுதலிய பிறவுயிர்கட்கு உணவாதலின் அவற்றைச் சுடுதல் முதலியன செய்யாமற் போகட்டுப் போவதும் சிறந்த அறமாம் என்று கருதும் கோட்பாடுடையோரும் அக்காலத்திருந்தனர் என்பது இதனால் அறியப்படும். தாழ்வயின் அடைத்தலாவது பள்ளத்திலிட்டுப் பிணத்தைப் பல விடங்கட்கும் இழுத்தேகாமல் அவ்விடத்திலேயே தின்றுவிடும்படி வழியை அடைத்து விடுதலாம். தாழி - மட்பாண்டம். இதனை முதுமக்கட்டாழி என்ப. கீழே ஒரு தாழியிலிட்டு மற்றொரு தாழியாற் கவிப்பது என்க. இளிவு-வாலாமை தரியாது என்றது-காலந்தாழ்த்தாமல் என்றவாறு. சும்மை-ஆரவாரம். எஞ்சியோர் மருங்கின் ஈமஞ்சாற்றுதலாவது சாப்பறை முழக்கம். சாவுண்டென்பதனை மறந்துவாழ்வோர்க்கு நுமக்கும் சாவுண்டென்பதனை அறிவுறுத்தல். இதனை,

"மணங்கொண்டீண் டுண்டுண்டுண் டென்னும் உணர்வினாற் சாற்றுமே டொண்டொண்டொண்ணென்னும் பறை" எனவரும் நாலடியானும் (உரு) உணர்க.

கூகை குழறுதலை இறக்கும் காலம் அணித்தாக வந்துற்றோரை அறிந்து விரைவில் இறந்துபட்டு ஈமப்புறங்காட்டிற்கு வருமாறு அழைப்

பதாகக் கருதுமொரு கோட்பாடு பற்றிச் 'சாவோர்ப் பயிரும் கூகையின் குரலும்' என்றார். இல்லத்திற் கணுக்கமாகக் கூகையிருந்து குழறினால் இற்றைநாளும் அஞ்சி அதனை ஓட்டுவாரும், அணுமையில் யாரேனும் ஈண்டுச் சாவார் உளர் என்பாரும் உளர். தலையூண் துற்றிய ஆண்டலை என மாறுக. ஈண்டு ஊண் என்றது மூளையாகிய உணவை. துற்றுதல் - தின்னல். நன்னீராகிய யாறுகள் சென்று புணர்தலையுடைய நளிகடல் என்க. ஓதை - முழக்கம்.

## சக்கரவாளக் கோட்டத்துள்ள மரங்களும் மன்றமும்

௮௦ - ௯௧ : தான்றியும்.........மன்றமும்

(இ - ள்.) தான்றியும் ஒடுவையும் உழிஞ்சிலும் ஓங்கி கான்றையும் சூரையும் கள்ளியும் அடர்ந்து - தான்றியும் ஒடுவையும் உழிஞ்சிலும் ஆகிய மரங்கள் வளரப் பெற்றுக் கான்றையும் சூரையும் கள்ளியுமாகிய செடிகள் செறியப்பெற்று; காய்பசிக் கடும் பேய் கணம் கொண்டு ஈண்டும் மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும் - உடம்பு வற்றுதற்குக் காரணமான பதியையுடைய கடிய பேய் கூட்டமாகக் கூடியிருக்கின்ற முகில் தவழ்கின்ற பெரிய கிளைகளோடு கூடிய வாகை மரம் நிற்றலாலே வாகை மன்றம் என்று கூறப்படுகின்ற மன்றமும்; புள்வெள் ணிணம் தடியொடு மாந்தி மகிழ் சிறந்து இறைகூரும் வெள்ளில் மன்றமும் - பல்வேறு பறவைகளும் மக்கள் யாக்கையின் வெள்ளிய நிணத்தையும் தசையையும் நிரம்பத் தின்றமையாலே மகிழ்ச்சி மிகப்பெற்று நெடும்பொழுது தங்குதற்கிடமான விளாமரம் நிற்றலாலே வெள்ளில்மன்றம் எனப்படும் மன்றமும்; சுடலை நோன்பிகள் ஒடியா உள்ளமொடு மடை தீ உறுக்கும் வன்னி மன்றமும் - சுடலையிலேயே சாந்துணையுமிருந்து இறந்துபடுவது என்னும் நோன்பினை மேற்கொண்டு அந் நோன்பின்கண் தளராத உள்ளத்தோடிருந்து தாம் பெற்ற வாய்க்கரிசியாலே சோறு சமைத்தற்கு மண்டையிலிட்டுத் தீயின் மேல் ஏற்றும் இடமாகிய வன்னிமரம் நிற்கும் மன்றமும்; விரத யாக்கையர் உடைதலை தொகுத்து ஆங்கு இருந்தொடர்ப் படுக்கும் இரத்தி மன்றமும் - விரதங்காக்கும் யாக்கையினையுடையோர் உடைந்த தலைகளைத் தொகுத்துப் பெரிய மாலையாகத் தொடுக்குமிடமாகிய இலந்தை மரம் நிற்கும் மன்றமும்; பிணம் தின் மாக்கள் நிணம்படு குழிசியில் விருந்தாட்டு அயரும் வெள்ளிடை மன்றமும் - பிணத்தைத் தின்று வாழும் இயல்புடைய மாக்கள் நிணமுடைய பானையில் கொணர்ந்த ஊனைத் தின்று விருந்து கொண்டாடும் வெற்றிடமாகிய மன்றமும் ஆகிய இவ்விடங்களிலெல்லாம் என்க.

(வி - ம்.) தான்றி முதலிய மூன்றும் மரங்கள் என்றும், கான்றை முதலிய மூன்றும் செடிகள் என்றும் கொள்வாருமுளர். காய்பசி: வினைத்தொகை எனினுமாம். காய்தற்குக் காரணமான பசியுமாம்; காய்தல்-வற்றுதல்; "நெடும்பசியால் அறவுலர்ந்து நெற்றுய் அற்றேம்" என்பது பேய் முறைப்பாடு (கலிங்கத்து). பேய்ப் பிறப்பிற் பெரும் பசியே எஞ்ஞான்றும் அலைக்கும் என்னும் கோட்பாடு பற்றி; "காய்பசிக் கடும்பேய்" என்று விதந்தார். மால் - முகில். மால் - என்பதற்கு மயக்கம் எனவே பொருள் கொண்டு மயக்கமே உருக்கொண்டு எஞ்ஞான்றும் அமர்ந்திருத்தற்கிடமான பெருஞ்சினை எனலுமாம். பேய்கள் இருந்து மயக்குறுத்துதல் பற்றி அங்ஙனம் கூறினர் என்க.

மன்றம் - உயிரினங் கூடும் இடம். பெரும்பாலும் மன்றங்களில் யாதானும் மரம் நிற்பதுண்டு. ஈண்டு வாகை மரம் நிற்கும் மன்றம் வாகை மன்றம் எனவும், வெள்ளில் நின்ற மன்றம் வெள்ளில் மன்றம் எனவும், வன்னி மரம் நின்ற மன்றம் வன்னி மன்றம் எனவும், இரத்தி மரம் நின்ற மன்றம் இரத்தி மன்றம் எனவும் கூறப்படுகின்றன. மர மொன்றும் நில்லாத மன்றத்தை வெள்ளிடை மன்றம் என்றனர். சிலப்பதிகாரத்தினும் நகரத்துள்ளே அமைந்த மன்றம் பல கூறப் பட்டன. அவற்றுள்ளும்—

"உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றம்"

என ஒரு மன்றம் கூறப்படுதலறிக (ரு-கஎ).

இனி, ஈமப்புறங்காட்டிலிருந்து நோன்பு செய்வாரும் உளர் என்பதனை, நீலகேசியில்,

"இறைவி கோட்டத்து ளீரிரு திங்கள தகவை
உறையு ளாகவவ் வுறையருங் காட்டகத் துறைவான்
பொறையும் ஆற்றலும் பூமியு மேருவு மனையான்
சிறைசெய் சிந்தைய னந்தமில் பொருள்களைத் தெரிந்தான்"

ஆகிய முனிச்சந்திர பட்டாரகன் எனும் பெயர் முனிவன் பலாலயம் என்னும் சுடுகாட்டினுடிருந்தே நோன்பு செய்தான் எனக் கூறப் பட்டிருத்தலானுணர்க. இத்தகையோரும் சுடலை நோன்பிகள் ஆகுவர். இனி இவரைக் காபாலிக சமயத்துறவோர் என்பாரும் உளர் (நீலகேசி-௬௬).

சுடலை நோன்பிகள் தம் வயிற்றுத் தீத்தணித்தற்கு அங்குக் கிடைக்கும் வாய்க்கரிசியை மண்ணுலியன்ற மண்டையில் உலை நீர் பெய்து சோறு சமைத்தற்கு அம் மண்டையை ஈமத்தியில் வைப்பர் என்று கொள்க. அவருறையுமிடம் வன்னி மன்றம் என்று கொள்க. விரத யாக்கையர் என்றது மாவிரத சமயத் துறவோரை. இவர் மாந்தர் தலை யோட்டினை மாலையாகக் கோத்து அணிவாராதலின் "உடைதலை தொகுத்து இரத்தி மன்றத்தே" தொடர்ப்படுத்துவர் என்க. "மாவிரதமாவது......சாத்திரத்திற் கூறும் முறையே தீக்கை பெற்று எலும்பு மாலை யணிதல முதலிய சரியைகளின் வழுவாதொழு கினவர் முத்தராவார்" என்பது மாதவச் சிவஞான யோகியாரின் மணி மொழி. (சிவஞானபாடியம். அவையடக்கம்.) பிணந்தின் மாக்கள் நிணம்படு குழிசியில் விருந்தாட்டயரும் வெள்ளிடை மன்றமும் என்

புழிக் கூறப்படும் மாக்களும் ஒரு வகைச் சமயத் துறவோர் என்று கோடலுமாம். என்னை? காபால சமயத் துறவோர் "நாடோறும் மனிதர் தலையோட்டில் ஐயமேற்றுண்பவர்" எனச் சிவஞான முனிவர் கூறுதலானும் (சிவ-அவையடக்) "மெய்ஞ்ஞான விளக்கத்தில் இவரைக் காளாமுக மதத்தினர்" என்று கூறி இவர் "கபால பாத்திர போசனம் சவ பஸ்மதாரணம் சவமாம் சபுத்துவம் தண்டதாரணம்: சுராகும்பத் தாபன பூசை முதலியன உடையவர்" (மெய்ஞ். மதவிளக்) எனக் கூறப் படுதலால், இவரையே ஈண்டு வெள்ளிடை மன்றத்து நிணம்படு குழிசியில் விருந்தாட்டயரும் பிணந்தின் மாக்கள் என்று சாத்தனுர் குறிப்பிடுகின்றனர் எனல் மிகையன்று.

## அவ்விமப்புறங்காட்டிற் காணப்படும் பொருள்கள்

கூஉ - கூரு : அழற்பெய்..........பறந்தலை

**(இ - ள்.)** அழல் பெய் குழிசியும் புழல் பெய் மண்டையும் - **நெருப்பை அகத்திட்டுக் கொணருகின்ற மட்பாண்டமும் புழல் என்னும் தினபண்டத்தைப் பெய்து கொணரும் மட்பாண்டமும்; வெள்ளில் பாடையும் - வெள்ளிலாகிய பாடையும்; உள்ளீட்டு அறுவையும் - பிணத்தை அகத்தே இட்டு மூடிக்கொணர்ந்த கோடிச் சீலையும்; பரிந்த மாலையும் - பாடை பிணம இவற்றிற் கணியப்பட்டு அறுத்தெறியப்பட்ட மலர் மாலைகளும்; உடைந்த கும்பமும் - உடைக்கப்பட்ட குடங்களின் ஓடுகளும்; நெல்லும் பொரியும் சில் பலி அரிசியும் - சிதறிய நெல்லும் பொரிகளும் ஆவிக்குப் பலிப் பொருளாகப் பிணத்தின் வாயிலிடும் சில அரிசி களும்; யாங்கணும் பரந்த ஓங்கு இரும் பறந்தலை - எவ்விடத்தும் பரந்து கிடக்கின்ற உயர்ந்த பெரிய அப் பாழிடமாகிய சுடு காடுதானும்; என்க.**

(**வி - ம்.**) அழல் - பிணஞ்சுடக் கொணரும் நெருப்பு. குழிசி - பானை. வெள்ளில்-பாடை; வெள்ளிலாகிய பாடை என்க. பிணமாகிய உள்ளீட்டை உடைய அறுவை என்க. பாடையின் உள்ளே விரித்த அறுவையுமாம். அறுவை-துகில். நெல்சிந்தும் வழக்கமும் பலி அரிசி யிடுதலும் இக்காலத்தும் உண்டு. ஆவிக்குப் பலியாகப் பிணத்திலிடும் அரிசியைச் சில்பலியரிசி என்றார். என்னை? ஒரு பிடியளவாகச் சிலரே இடுதலின் சிலவாகிய பலியரிசி என்றார். இக்காலத்தே வாய்க்கரிசி என்பது மது.

இனி ஈண்டுக் கூறப்படும் இவ் வருணனைகளோடு—

"ஆங்கமாநக ரணைந்தது பலாலைய மென்னும்
பேங்கொள் பேரதவ் வூரது பிணம்படு பெருங்காடு
ஏங்கு கம்பலை யிரவினும் பகலினு மிகலி
யோங்கு நீர்வையத் தோசையிற் போயதொன் றுளதே"

எனவும்,

"விண்டு நீண்டன வேய்களும் வாகையும் விரவி
இண்டு மீங்கையு மிருள்பட மிடைந்தவற் றிடையே
குண்டு கண்ணின பேய்களும் கூகையும் குழறிக்
கண்ட மாந்தர்தம் மனங்களைக் கலமலக் குறுக்கும்"

எனவும்,

"ஈமத் தூமமு மெரியினு மிருளொடு விளக்கா
லூமைக் கூகையு மோரியு முறமுறம் கதிக்கும்
யாமத் திண்டிவந் தாண்டலை மாண்பில வழைக்கும்
தீமைக் கேயிட னுயதோர் செம்மலை யுடைத்தே"

எனவும்,

"வெள்ளின் மாலையும் விரிந்தவெண் டலைகளுங் கரிந்த
கொள்ளி மாலையுங் கொடிபடு கூறையு மகலும்
பள்ளி மாறிய பாடையு மெலும்புமே பரந்து
கள்ளி யாரிடைக் கலந்ததோர் தோற்றமுங் கடிதே"

எனவும்,

"காக்கை யார்ப்பன கழுதுதங் கிளையொடு கதறித்
தூக்க வீர்ப்பன தொடர்ந்தபல் பிணங்களுந் தூங்கச்
சேக்கை கொள்வன செஞ்செவி யெருவையு மநவி
யாக்கை கொண்டவர்க் கணைதலுக் கரிதது பெரிதும்"

எனவும்,

"கோளி யாலமும் கோழரை மரங்களுங் குழுமித்
தாளி யார்த்தெழு சுடலையும் உடலமுந் துவன்றி
மீளி யாக்கைய தாக்கியுண் பேய்க்கண மிகைசூழ்
கூளி தாய்க்கென வாக்கிய கோட்டமொன் றுளதே"

எனவும் வரும், நீலகேசிச் செய்யுள்கள் ஒப்பு நோக்கற்பாலன. (தரும வுரை : ௨௭, ௨௮, ௨௯, ௩0, ௩௧, ௩௨.)

### மணிமேகலா தெய்வம் மக்களின் அறியாமைக் கிரங்குதல்

### ௯௭ - ௧0௪ : தவத்துறை..........உண்டோ

(இ - ள்.) (நங்கையீர்! ஈதொன்று கேண்மின்!;) தவத்துறை மாக்கள மிகப் பெருஞ்செல்வர் ஈற்றிளம் பெண்டிர் ஆற்றுப் பாலகர் முதியோர் என்னுன இளையோர் என்னுண்-இவர் உயர்ந்த தவநெறியிலே ஒழுகுகின்ற பெரியோர் இவர் மிகப் பெரிய செல்வ முடையோர் இவர் அணிமைக் காலத்தே மகவீன்ற இளம் பருவ

முடைய மகளிர், இவர் துன்பம் பொறுக்கமாட்டாத இளங் குழவிகள், இவர் ஆண்டான் முதிர்ந்த சான்றோர், இவர் ஆண்டிளைய காளையர் என்று சிறிதும் எண்ணிப் பார்த்து இரங்காதவனும்; கொடுந் தொழிலாளன் கொன்றனன் குவிப்ப - கொடிய கொலை செய்யுந் தொழிலையே மேற் கொண்டிருக்கின்ற கூற்றுவன் நாள்தோறும் மன்னுயிர்களைக் கொன்று குவியாநிற்ப; இவ்வழல் வாய்ச் சுடலை தின்னக் கண்டும் - இந்த நெருப்பையே வாயாகக் கொண்ட ஈமப்புறங்காடு கொன்று போகட்ட உடல்களைத் தின்று தீர்ப்பதனைக் கண்கூடாகக் கண்டு வைத்தும்; கழிபெருஞ் செல்வக் கள்ளாட்டயர்ந்து - மிகப் பெரிய செல்வமாகிய களளை யுண்டு களித்து விளையாடி; மிக்க நல் அறம் விரும்பாது வாழும் - மிகச் சிறந்த நல்ல அறங்களைச் செய்தற்கு விரும்பாமல் உயிர் வாழுகின்ற; மக்களில் சிறந்த மடவோர் உண்டோ - மாந்தரினும் காட்டில் பெரிய மடமையுடையோர் பிறர் உளரோ? கூறுமின்! என்றாள் என்க.

(வி - ம்.) துறவின்கட்புகுதற் கியன்ற ஏது நிகழ்ச்சி எதிர்ந்துள்ள மணிமேகலைக்கும் அந்நெறிக்கட் பயிலும் சுதமதிக்கும் ஒரு சேர யாக்கை நிலையாமை செல்வம் நிலையாமை இளமை நிலையாமை என்னும் மூவகை நிலையாமைகளும் உள்ளத்தின்கண் நன்கு பதியுமாறு முதன் முதலாக மணிமேகலா தெய்வம் சக்கரவாளக் கோட்ட வரலாறு கூறுதலைத் தலைக்கீடாகக் கொண்டு கேட்போர்க்கு அவ் வுணர்ச்சி தலைதூக்குமாறு தனது தெய்வ மொழியாலே செவியறிவுறுத்துகின்றது என்பதனை இதனைப் பயில்வோர் நன்குணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

ஈண்டு யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை ஆகிய மூன்று நிலையாமைகளும் போதரத் துறவோர் இறந்துபடுதலையும் மிகப் பெருஞ்செல்வர் இறந்து படுதலையும் இளம் பெண்டிர் இறந்துபடுதலையும் பாலகர் இறந்துபடுதலையும் நிரல்பட வோதுதல் உணர்க. ஈங்குக் கூறப்படுவோருள் துறவோரிறந்து பாடுறுதல், தவத்தாலும் யாக்கையை அழியாதபடி செய்தல் சாலாது என்பதுணர்த்தற் பொருட்டாம். இனிச் செல்வ நிலையாமையும் இரு வகைப்படும். அவை யாவன செல்வத்தை யீட்டிய செல்வர் இறத்தலும் அவருளராகச் செல்வமே அவரைக் கைவிட்டழிந்து போதலுமாம். சிறப்பு நோக்கிச் செல்வம் நிற்கச் செல்வரே இறந்துபடுதல் கூறியவாறு. இளமை நிலையாமை தோன்ற இளம் பெண்டிர் எனப்பட்டது. இன்பம் நுகர்தற்கியன்ற பருவம் வந்துறு முன்னரும் யாக்கை அழிதலுண்மையின் ஆற்றுப் பாலகர் அழிவையும் உடன் கூறிற்று. ஈற்றிளம் பெண்டிர் என்றமையால் பீட்பிதுக்கியும் கூற்றம் கொல்லுதலும் போந்தமையுணர்க. மெய்யுணர்வார்க்கு நிலையாமையுணர்ச்சி இன்றியமையாமையை முன்னும் கூறினும்.

கொடுந் தொழிலாளன் - கூற்றுவன். கொன்றனன் - கொன்று. அழலாகிய வாய். சுடலை-சுடுகாடு. கண்டும் என்றது காட்சியளவையால் கண்கூடாகத் தாமே ஐயந்திரிபறக் கண்டு வைத்தும் என்பதுபடநின்றது.

செல்வம் செருக்கைத் தோற்றுவித்தலின் கள்ளாகக் குறிப்புவமம் செய்யப்பட்டது. அறம் ஒன்றே செல்வத்துப் பயனாகவும் பிறந்தோர்க்கு ஆக்கமாகவும், பொன்றுங்காற் பொன்றாத் துணையாகவும் மீண்டும் பிறப்புற்று வாழ்நாள் வழியடைக்கும் கல்லாகவும் அமையும் மாபெருஞ் சிறப்புடையது என்பது தோன்ற 'மிக்க நல்லறம்' என்றும் அத்தகைய பேற்றினை அறியத்தகும் பிறப்பு மக்கட் பிறப்பே என்பது தோன்றவும் அதனை மறப்பது பெரியதொரு மடமையாம் என்பது தோன்றவும் மக்களிற் சிறந்த மடவோர் உண்டோ? என்றும் ஓதியவாறும். ஓகாரம் வினா. அதன் எதிர்மறையாகிய இல்லை என்னும் பொருளை வற்புறுத்தி நின்றது.

இனி, மணிமேகலை நெஞ்சம் காமத்தால் நெகிழ்ந்து புதுவோன் பின்றைப் போயதனை அங்ஙனம் போகாமைப் பொருட்டுத் தானிற்கின்ற துறவறத்தை உறுதியாகக் கடைப்பிடித்திடுக என்று ஈண்டு வற்புறுத்துவதே அத் தெய்வத்தின் கருத்தாகலின் ஈண்டு அறம் என்பது துறவின் மேனின்றது. அது தோன்றவே அறம் என வாளாது கூறாமல் மிக்க அறம் என்று அத் தெய்வம் விதந்து கூறிற்று.

## யாக்கையின் இழிதகைமை

### ௧௦௫ - ௧௧௫ : ஆங்கது.........ஓதையும்

**(இ - ள்.)** ஆங்கு அது தன்னை - அவ்வாறிருக்கின்ற அச் சக்கரவாளக் கோட்டத்தை; ஓர் அருங்கடி நகர் என - ஓர் அரிய காவலமைந்த நகரம் எனறு கருதி அதனூடே புகுந்து; தனிவழிச் சென்றோன் சார்ங்கலன் என்போன் - இரவிலே தமியனாய்ச் சென்றவனாகிய சார்ங்கலன் என்னும் ஒரு பார்ப்பனச் சிறுவன் அவ்விடத்தே; யாக்கை என்புந் தடியும் உதிரமும் என்று அன்பு உறும் மாக்கட்கு அறியச் சாற்றி-மாக்களே உடம்பென்று நும்மால் பேணப்படும் பொருள் வறிய எலும்பும் தசையும் குருதியுமாகிய அருவருக்கத் தகுந்த இவ்விழிதகைப் பொருள்களின் கூட்டமேயன்றிப் பிறிதொரு பெருந்தகைமையும் உடையதன்று காண்! எனறு அதன்பால் பெரிதும் அன்பு கொள்ளுகின்ற அறிவிலிகளுக்குத் தன்னையே சான்றாக்கி நன்கு அறிவுறும்படி; வழுவொடு கிடந்த புழுவூண் பிண்டத்து - பிணத்தோடு கிடந்த புழுக்கள் நெளிகின்ற அழுகிய ஊனோடு கூடிய பிணத்தினது; அலத்தகம் ஊட்டிய அடி நரி வாய்க்கொண்டு உலப்பில் இன்பமொடு உளைக்கும் ஓதையும் - பண்டு செம்பஞ்சுக் குழம்பூட்டி அழகு செய்யப்பட்டிருந்த அடிகளை நரிகள் தம் வாயாற் கொண்டு அழியாத இன்பத்தோடு ஊளையிடாநின்ற ஒலியையும்; கழுகு கலைப்புற அல்குல் குடைந்து உண்டு நிலத்தலை நெடுவிளி எடுக்கும் ஓதையும்-கழுகு மேகலையென்னும் அணிகலனாலே பண்டு புறத்தே அழகு செய்யப்பட்ட அல்குலை அலகினாலே குடைந்து குடைந்து வயிறு நிரம்பத் தின்றமையாலே பெரிதும் மகிழ்ந்து நிலத்தின்

மேனின்று நீளிதாகக் கூவுகின்ற ஒலியும்; கடகம் செறிந்த கையைத் தீ நாய் உடையக் கவ்வி ஒடுங்கா ஓதையும் - பண்டு கங்கணம் செறிந்து கிடந்த கையைச் சுடுகாட்டு நாய் என்புமுறிய வாயாற் கவ்வித் தின்று மகிழ்ந்து ஒழியாமல் குரைக்கின்ற ஒலியும்; என்க.

(வி - ம்.) ஈண்டுக் கூறப்படும் பிணம் பெண்பிணம் என்பது கூறுமலே விளங்கும். கேட்போர் மகளிராதலின் தம்முடம்பிலேயே அருவருப்புத் தோன்றுதற் பொருட்டு அத்தெய்வம் பெண்ணுடம்பையே விதந்தெடுத்துக் கூறியபடியாம். பின்னும் இவ் விளக்கம் கொள்க.

தடி-தசை. வழு-உடம்பிலுள்ள நிணம். அலத்தகம்-செம்பஞ்சுக் குழம்பு. உளைக்கும் - ஊளையிடும். நிலைத்தலை என்ற பாடத்திற்கு நிமிர்த்திய தலை என்க. கலை-மேகலை. கடகம்-கங்கணம். தீநாய்-சுடு காட்டிலேயே வாழும் நாய். இதனை ஒரு சாதி நாய் என்பாருமுளர். என்புடையக் கவ்வி என்க.

இனி இப் பகுதியோடு—

> ''குடருங் கொழுவுங் குருதியு மென்பும்
> தொடரும் நரம்பொடு தோலும்-இடையிடையே
> வைத்த தடியும் வழும்புமாம் மற்றிவற்றுள்
> எத்திறத்தா ளீர்ங்கோதை யாள்'' (சஅ)

எனவரும் நாலடி வெண்பா ஒப்புநோக்கற்பாலது.

### இதுவுமது

#### ககசு - கஉஎ : சாந்தம்.........எய்தி

(இ - ள்.) சாந்தம் தோய்ந்த ஏந்து இளமுலை காய்ந்த பசி எருவை கவர்ந்து ஊண் ஓதையும்-சந்தனம் நீவப்பெற்ற அணந்த இளமுலையின் ஊனை மிகவும் வருத்திய பசியோடு வந்த பெருங் கழுகு அலகினாலே கவர்ந்து தின்று மகிழ்ந்து கூவும் ஒலியும்; பண்பு கொள் யாக்கையின் வெள்பலி யரங்கத்து - பல்வேறு பண்புகளைக் கொண்டிருந்த மக்கள் உடம்பைச் சுட்டமையாலே யுண்டான வெண்ணிறமான் சாம்பற் குவியலாலியன்ற மேடை மேலே: ஓர் பேய் மகள் ஆங்கு ஓர் கருந்தலை வாங்கி - ஒரு பெண் பேயானது ஆங்குக் கூந்தலாலே கறுட்பாகக் கிடந்த தலையைத் திருகித் தன்; கையகத்து - கையிடத்திலே; மண்கணை முழவம் ஆக ஏந்தி - மண் பூசப்பெற்ற தண்ணுமையாக ஏந்திக் கொண்டு; இரும்பேர் உவகையின் எழுந்து - மிகவும் பெரிய மகிழ்ச்சியோடு எழுந்து நின்று அத் தலையின்கண் அமைந்த உறுப்புக்களைத் தனித்தனி நோக்கிக் காமுகர்; புயலோ குழலோ கயலோ கண்ணோ குமிழோ மூக்கோ இதழோ கவிரோ பல்லோ முத்தோ

என்றது இரங்காது - இது முகிலோ அல்லது கூந்தல் தானோ? இவை கயல் மீனகளோ அல்லது கண்கள் தாமோ? இது குமிழ மலரோ அல்லது மூக்குத்தானோ? இவை அதரங்களோ அல்லது முருக்கமலரிதழ்களேயோ? இவை பற்களோ அல்லது முத்துக் கோவையோ? என்று அவற்றைச் சிறிதும் பாராட்டாமலும் அவற்றின் பால் இரக்கங் கொள்ளாமலும்; கண்தொட்டு உண்டு- அத் தலையிலமைந்த கண்களை அகழ்ந்தெடுத்துத் தின்றவாறே; தலைவ அடிபெயர்த்து - தனது கவைத்த விரல்களையுடைய அடிகளைப பெயர்த்து; தண்டாக் களிப்பின் ஆடும் - தணியாத மகிழ்ச்சியோடே ஆடா நின்ற கூத்தினை; கண்டனன் வெரீஇ கடுநவை எய்தி - கண்டு அச்சத்தாலே பெருந் துன்பமெய்தி என்க.

(வி - ம்.) சார்ங்கலன் என்போன், ஓதைபல கேட்டுச் சென்றவன், பேய்மகள் ஆடும் கூத்துக்கண்டு நவை எய்தி என்க. கடுநவை எய்தி என்பதற்குப் பேயாற் பிடிக்கப்பட்டு என்று கூறுவாருமுளர். அவ்வுரை போலி. என்னை? அணங்கும் பேயும் பிடிப்பதுமில்லை உயிருண்பதுமில்லை என்று சாதிப்பதே இந்நூலாசிரியரின் மேற்கோளாதலின் பேயாற் பிடியுண்டதாகவும் பேய் உயிருண்டதாகவும் கருதுவதற்குக் காரணம், பேதைமையேயன்றி அந் நிகழ்ச்சியெல்லாம் ஊழ்வினையின் நிகழ்ச்சிகளே என்று காட்டுவதற்கே நூலாசிரியர் இச் சார்ங்கலன் கதையை ஈண்டுப் படைத்துள்ளார் ஆதலின் என்க.

எருவை-கழுகில் ஒருவகை. பண்புகொள் யாக்கை என்றது இகழ்ச்சி எனினுமாம். வெண்பலி யரங்கம் என்றது சாம்பலாலியன்ற மேட்டினை. மண்பூசப் பெற்ற திரண்ட முழவம் என்க. உவகை - சிறந்த ஊன் கிடைத்தமை பற்றி யுண்டாயது. காமுகர் கூந்தல் முதலியவற்றைப் புயல் முதலியனவாகக் குறிப்புவமஞ் செய்து பாராட்டுதலை நலம் பாராட்டுதல் என்ப. இப் பேய் அங்ஙனம் பாராட்டிற்றில்லை: பரிவு கொள்ளவுமில்லை என்பாள் "புயலோ.........என்றது இரங்காது" என்றாள். தொட்டு - அகழ்ந்து. தண்டா - தணியாத.

## சார்ங்கலன் செயல்

### கஉகூ - கருக: விண்டோர்.........வைத்தலும்

(இ - ள்.) விண்டு ஓர்திசையின் விளித்தனன் பெயர்ந்து - அவ்விடத்தினின்றும் நீங்கி மெய்ம்மறந்து தானசென்ற திசையை நோக்கி அம்மையே என்று கூவியவனாய் விரைந்து தன்னில் முன்றிலை எய்தி ஆங்கெதிர்வந்த அன்னையை நோக்கி; எம்மனை ஈங்கு காணாய் ஈமச் சுடலையின் - என் அன்னையே ஈங்கு என்னை நோக்குதி ஈமம் எரிகின்ற சுடுகாட்டின்கண்; வெம் முதுபேய்க்கு என் உயிர் கொடுத்தேன் என-வெவ்விய முதுமையுடைய ஒரு பேய்க்கு யான் என் உயிரைக் கொடுத்தொழிந்தேன்! என்று

பிதற்றிய வண்ணம்; தம்மனை தன்முன் வீழ்ந்து மெய்வைத்தலும்- தன் தாயின் முன்னிலையிலேயே வீழ்ந்து உயிர்நீத்தலும்; என்க.

(வி - ம்.) விண்டு - நீங்கி. ஓர் திசை என்றது தான் சென்று கொண்டிருந்த அத் திசையில் என்றவாறு. விளித்தனன் என்றது அம்மையே! என்று தன் அன்னையை அழைத்து அலறியவனாய் என்றவாறு. பெயர்ந்து - ஓடி. எம்மனை - எம்மன்னை: மரூஉவழக்கு. தம் மனை என்பதும் அது: வெம்முது பேய்க்கு என்னுயிர் கொடுத்தேன் என்றது இவ்வாறு சொல்லிப் பிதற்றி என்றவாறு. மெய்வைத்தலும் என்றது வீழ்ந்து இறத்தலும் என்றவாறு.

## சார்ங்கலன் தாய் கோதமை செயல்

### ௧௩௨ - ௧௩௯: பார்ப்பான்.........பதியேன

(இ - ள்.) பார்ப்பான் தன்னொடு கண் இழந்து இருந்த இத் தீத்தொழிலாட்டி - தன்கணவனாகிய பார்ப்பனனோடு தானும் கண்ணிழந்திருந்த இந்தப் பார்ப்பனிதானும் காவற்றெய்வமாகிய சம்பாபதியை உள்ளத்தால் நோக்கி; சம்பாபதி - சம்பாபதி யென்னுந் தெய்வமே! கேள்!; என் சிறுவனை - அளியேனாகிய என் ஒரு மகனாகிய இச் சிறுவனை; யாருமில் தமியேன் என்பது நோக்காது - களைகணாவார் யாரும் இல்லாதேன என்பதனை எண்ணியிரங்காமல்; ஆர் உயிர் உண்டது அணங்கோ பேயோ - அரிய உயிரையுண்டது தெய்வமேயோ அல்லது அவன் கூறிய வாறு முதுபேய்தானோ? அறிகிலேன்; துறையும் மன்றமும் தொல்வலிமரனும் உறையுளும் கோட்டமும் காப்பாய் - நீர்த்துறைகளிடத்தும் மன்றங்களிடத்தும் பழைமையான வலிமையுடைய மரங்களிடத்தும் மக்கள் வதியும் பிறவிடங்களினும் கோயில்களிடத்தும் மக்களுக்குத் தெய்வத்தானாதல் பேய்களினாதல் தீங்கொன்றும் நிகழாவண்ணம் காக்கும் பேரருள் உடையாய்; காவாய் - எளியேமாகிய எம்மைக் காவாது கைவிட்டனை; தகவு இல்லைகொல்லோ - எம்மாட்டு அத்தகைய அருள் உடையாய் அல்லையோ! என்று அரற்றி; எனக.

(வி - ம்.) பார்ப்பான் என்றது - பார்ப்பனனாகிய என் கணவன் என்பதுபட நின்றது. பார்ப்பானொடு கண்ணிழந்திருந்த இத் தொழிலாட்டி என்றமையால் தானும் கண்ணிழந்தமை குறித்தாள். இவ் வாற்றால் தீத் தொழிலாட்டி என்றது தீவினையாட்டி என்னும் பொருளுடைய தெனினுமாம். சிறுவன் என்றாள் அவனும் இரங்கற் குரியான் என்பது தோற்றுவித்தற்கு. யாருமில் தமியேன் என்பதுமது. அணங்கு- தீண்டி வருத்துந் தெய்வம். துறை - நீராடுதுறை. துறை முதலியன அணங்கானும் பேயானும் தீங்குறுத்தப் படுமிடம். தகவு என்றது மன்னுயிர்புரக்கும் பேரருளுடைமையை. எல்லார்க்கும் அருள் செய்யும் அருளுடையாய்க்கு எம்பால் அஃதொழிந்ததோ என்றரற்றியபடியாம்.

இனி, இக்காதையில் சக்கரவாளக் கோட்டத்தின் வரலாறு கூறுதல் தலைக்கீடாக ௩௬. "இந் நாமறப் பேரூர் தோன்றிய ஈமப்புறங்காடு" என்பது தொடங்கி ௧௩௧ : "வீழ்ந்து மெய் வைத்தலும்" என்பதீறாக, பிறப்பாகிய துன்பம் எய்துதற்குக் காரணமான, காம வெகுளி மயக்கங்கள் என்னும் முக்குற்றமும்வினைதற்குக் காரணமானபிறப்பினை உண்டாக்கும் பற்றினை அறுத்தற்கு இன்றியமையாத ஐவகைப் பாவனை யுள்ளும் தலைசிறந்த (துன்பியல்) அசுப பாவனை மணிமேகலைக்குக் கைவருதற் பொருட்டு இவ் வுடம்பு,

"அநித்தம் துக்கம் அநான்மா அசுசி"

என்னும் நான்கு மெய்புணர்ச்சிகளையும் மிகவும் நுண்ணிதாகச் செவியறி வுறுத்திய அருமையை உணர்க. இவ்வுண்மை அறியப்படாவிடின் இதனைப் பயில்வோர் இக் காதையின் சிறப்பைச் சிறிதும் உணராராவர் என்க. மேலே கூறப்பட்ட ஐவகைப் பாவனைகளும் ௩௦. பவத்திற மறு கெனப் பாவை நோற்ற காதையில் நன்கு விளக்கப்படும்.

### கோதமை சம்பாபதியிடம் முறையிடுதல்

#### ௧௩௩ - ௧௪௩ : மகன்மெய்.........காணென

(இ - ள்.) கோதமை என்பாள் மகன் மெய் யாக்கையை மார்பு உறத் தழீஇ - இவ்வாறு அரற்றிய கோதமை என்னும் அப் பார்ப்பனி செய்தமை கேண்மின்! அவள்தான் தன் மகனு டைய உயிரற்ற மெய்யாகிய அவ்வுடம்பினைத் தன் கைகளாலே எடுத்துத் தன்மார்போடு நன்கு பொருந்துமாறு தழுவிச் சுமந்து கொடுபோய் ; ஈமப் புறங்காட்டு எயில் புற வாயிலின் கொடுந்துயர் சாற்ற - அச் சுடுகாட்டுக் கோட்டத்தின் மதிலினது வாயிற்புறத் திலே இட்டுநின்று சம்பாபதியை மனத்தானினைந்து வாயால் அழைத்துத் தானெய்திய கொடிய அத் துன்பத்தைக் கூறி முறை வேண்டாநிற்ப ; பொன்னின் பொலிந்த நிறத்தாள் - பொன் போன்ற நிறமுடையவளாகச் சம்பாபதி என்னும் அத் தெய்வந் தானும் அவளுடைய அகக்கண் முன்னர் வந்து ; கடை வழங்கு வாயிலின் கடுந்துயர் எய்தி இடை இருள் யாமத்து என்னை ஈங்கு அழைத்தனை என் உற்றனையோ எனக்கு உரை என்று தோன்ற - நங்காய்! பேய்கள் திரிகின்ற இவ் வாயிலிடத்தே கொடிய துன்ப மெய்தி நள்ளிரவில் இவ்விருள்மிக்க யாமத்திலே என்னை இங்கு வருமாறு அழைக்கும் நீதான் எத்தகைய இன்னல் எய்தினையோ அதனை எனக்கு இயம்புக என்று பரிவுரை கூறித் தோன்றுநிற்ப; ஆரும் இல்லாட்டி என அறியாப் பாலகன் ஈமப்புறங் காட்டு எய்தினேன் தன்னை - பாதுகாவல் செய்தற்குரிமார் யாருமில்லாத அளியேனுடைய என் ஒருமகனுடைய விரகறியாத சிறுவன் நீயே எழுந்தருளியிருக்கின்ற இச் சுடுகாட்டின்கண் வந்தவனை ; ஆருயிர் உண்டது அணங்கோ பேயோ - அரிய

உயிரைக் குடித்தது நின் ஆட்சியிலடங்கிய அணங்கேயோ பேயோ யான் அறிகின்றிலேன்; உறங்குவான் போலக் கிடந்தனன் காண் என - உதோ துயில்பவனைப் போன்று கிடக்கின்றனன் நீயே கண்டருளுதி என்று கூற; என்க.

(வி - ம்.) மெய்யாகிய யாக்கை: இருபெயரொட்டு. கொடுந்துயர்-மகனை இழந்த பொறுக்கொணாத் துன்பம். சாற்ற-கூறிமுறை வேண்ட என்க. புறக்கண் குருடாகலின் அகக்கண் முன்னே உருவத்தோடு தோன்ற என்க. என்னுற்றனையோ எனக்குரை என்றது பரிவுரை. பொன்னிற் பொலிந்த நிறத்தாள் தோன்ற என்றமையால் அத் தெய்வம் அவள் அகக் கண்ணால் காண்டற்கியன்ற அருளுருவம் கொண்டு தோன்ற என்க. இக்காட்சி கனாக்காட்சி போல்வதாம் என்றுணர்க.

கணவனும் கண்ணிலன் யானும் கண்ணிலேன் எம்மைத் தாங்குங் கேளிரும் இலேன் எமக்குதவியாயிருந்த இச் சிறுவனைக் கொன்றது உன் அருளாட்சிக்கண் நிகழத் தகாததொரு கொடுமை; இங்ஙனம் நிகழவும் நீ வாளாதிருந்தது என்னையோ? என்று முறையிட்டபடியாம்.

## சம்பாபதி மறுமொழியும் கோதமை வேண்டுகோளும்

### கரு௦ - கருரு: அணங்கும்..........என்றவும்

(இ - ள்.) அணங்கும் பேயும் ஆர் உயிர் உண்ணா - அது கேட்ட அத் தெய்வம் அவள் வினாவிற்கு மறுமொழியாக, பார்ப்பனியே ஈதொன்றுகேள்! நீ நினைக்கின்றபடி அணங்காதல் பேயாதல் அரிய உயிரை உண்ண மாட்டா; பிணங்கு நூல் மார்பன் பேதுகந்து ஆக ஊழ்வினை வந்து இவன் உயிர் உண்டு கழிந்தது - முறுக்குண்ட பூணூலணிந்த இச் சிறுவனுடைய பேதைமையையே பற்றுக்கோடாகக் கொண்டு இவன் முற்பிறப்பிலே செய்த தீவினையாகிய இவனது ஊழே இவன் உயிரைக் கவர்ந்து கொண்டு போயிற்றுக்காண்! இஃதியற்கை என்றுணர்ந்து கொள்வாயாக!; மாபெருந்துன்பம் நீ ஒழிவாய் என்றலும் - நின் பேதைமை காரணமாக நீ எய்துகின்ற இம் மாபெருந்துன்பத்தைக் களைந்து அமைதிகொள்வாயாக என்று தேற்றுரை கூறுகிற்ப என்க.

(வி - ம்.) அணங்கு - பிறவுயிரைத் தீண்டி வருத்தும் தெய்வம். உயிர் அணங்கு முதலியவற்றால் உண்ணப்படும் உணவுப் பொருளன்று ஆதலால் அதனை அவை உண்ணும் என்று கருதுவதே அறியாமை என்று விளக்கியபடியாம். இனி "தீதும் நன்றும் பிறர்தர வாரா" அவை முன்பு செய்த பழவினைப் பயனைத் தாமே வருவன. உன் மகன் இறந்தமைக்கும் அவன் பழவினையே காரணம் என்றுணர்ந்து துன்பந்தவிர் என்று ஆறுதல் கூறியபடியாம்.

இதுவுமது

௧௯௪ - ௧௯௫ : என்னுயிர்.........மடவாய்

(இ - ள்.) என் உயிர் கொண்டு இவனுயிர் தந்து அருளின் இவன்கண் இல் என் கணவனைக் காத்து ஓம்பிடும் - அதுகேட்ட அவ்வன்புமிக்க தாயாகிய கோதமை அத் தெய்வத்தை நோக்கி எல்லாம்வல்ல தெய்வம் நீ ஆதலாலே இவன் வாழ்வினை வேண்டுவது ஓர் உயிரேயாகலின் என்னுயிரைக் கைக்கொண்டு இச்சிறுவன் உயிரைமீட்டுத் தந்தருள்வாயாயின் அளியேனுடைய கண்ணில்லாத கணவனை இச் சிறுவன் பேணிக்காப்பாற்றுவனாகலின்; இவன் உயிர் தந்து என் உயிர்வாங்கு என்றலும் – இச் சிறுவன் உயிரை மீட்டுத்தந்து அதற்கீடாகக் கண்ணற்றவளாகிய என் உயிரைக் கவர்ந்து கொண்டருள்க! என்று வேண்டாநிற்ப; முது மூதாட்டி இரங்கினள் மொழிவோள் - அவ் வேண்டுகோள் கேட்ட அம் மிகப் பழைய தெய்வமாகிய சம்பாபதிதானும் அவள் பொருட்டுப் பெரிதும் பரிவு கொண்டு அவட்குக் கூறுபவள்; மடவாய் - மடப்பமிக்க பார்ப்பன மகளே கேள்!; ஆருயிர் போனால் செய்வினை மருங்கின் சென்று பிறப்பெய்துதல் ஐயம் உண்டோ - ஒருடலின்கண்ணிருந்து வாழும் உயிர் இறந்துபோனக்கால் அவ்வுயிர் மீண்டும் அப் பழவினைசார்பாகவே போய் மற்றுமொரு பிறப்பினை எய்தும் என்னும் நிறவோர் காட்சியில் உனக்கு ஐயமும் உண்டேயோ? ஐயுறுதே கொள், அஃது அங்ஙனமே சென்று மீண்டும் பிறப்பெய்தா நிற்கும் என்பது தேற்றமேகாண்; ஆங்கு அது கொணர்ந்து நின் ஆர் இடர் நீக்குதல்-அவ்வாறுஇய நின்மகன் உயிரை மீட்டுக்கொணர்ந்து இறந்துபட்ட இவ்வுடம்பிலே புகுத்தி நீ எய்திய ஆற்றுதற்கரிய துன்பத்தைக் களைதல்; ஈங்கு எனக்கும் ஆவது ஒன்று அன்று - ஈங்குக் காவற்றெய்வமாயிருக்கின்ற எனக்கும் ஆற்றலாகும் ஓர் எளிய செயல் அன்று காண்!; நீ இரங்கல் - நீ இங்ஙனம் வருந்தாதே கொள்; ஆங்கது- நீ கூறுவது; கொலை அறம் ஆம் எனும் - ஓர் உயிரின துயர் களைதற்குப் பிறிதோர் உயிரைக் கொலை செய்தலும் அறம் ஆகும் என்று கூறுகின்ற; கொடுந்தொழில் மாக்கள் அவலப் படிற்று உரை - கொலைத்தொழில் செய்கின்ற மடவோர் கூறுகின்ற துன்பத்திற்குக் காரணமான வஞ்சகமொழியே காண்!; என்க.

(வி - ம்.) மன்பதையின் துயர்தீர்த்தற் பொருட்டு வேள்விக் களத்திலே உயிர்ப்பலி செய்கின்றவர் கொள்கையே ஒருயிர்க்கு ஈடாக மற்றோர் உயிரைப் பலி யிடுவதும் அறமாம் என்பது. அது தீவினையேயன்றி அறமாகாது அதனல் விளைவது மீண்டும் துன்பமேயன்றிப் பிறிதில்லை; ஊன் உண்ணுதற்கு விரும்பும் தீயோர் கூறும் வஞ்சக மொழியே அஃது; அதனைக் கைவிடுக என்று தேற்றியபடியாம். இங்ஙனம் கூறுவோர்

இயல்பும் அவர்வினை இயல்பும் அவர் மொழியியல்பும் ஒருசேரத் தெரித் தோதுகின்ற அத்தெய்வம், "கொலை அறம் ஆம் எனும் கொடுந்தொழின் மாக்கள் அவலப படிற்றுரை ஆங்கது" எனச் சொற்றிறம் தேர்ந்து கூறுத லறிக.

ஈங்கு எனக்கும் ஆவது ஒன்றன்று எனல் வேண்டிய சிறப்பும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது.

போன நின்மகன் உயிரும் புதுப்பிறப்பெய்தி வாழும். ஆதலால் நீ இரங்கல் என்று தேற்றியபடியாம். இரங்கல் - இரங்காதேகொள். அவலம் - துன்பம்; படிறு - வஞ்சம். ஆங்கது ஒருயிர்க்கு ஈடாக மற்றோருயிரைக் கொடுத்து மீட்கலாம் என்னும் நின்கோட்பாடு.

## இதுவுமது

### கசுரு - கசுஎ: உலக.........என்றலும்

(இ - ள்.) ஆங்கது மடவாய் - மடவோய் அவ்வுண்மை கேட்பாயாக! உலக மன்னர்க்கு உயிர்க்கு உயிர் ஈவோர் இலரோ-அன்புடையோய்! இந்நிலவுலகத்தை ஆளும் திருவுடைய மன்னர்கள் இறந்தபொழுது அவர் உயிர்க்கு ஈடாக உயிர் வழங்குவோர் இப் பேருலகில் இலர் என்றோ நினைதி!; எண்ணிறந் தோர் உயிர்வழங்க முன்வருபவர் உளர்காண்; இந்த ஈமப் புறங்காட்டு அரசர்க்கு அமைந்தன ஆயிரம் கோட்டம் - பார்ப்பன மகளே! இந்தச் சுடுகாட்டுக் கோட்டத்தினுள்ளேயே இறந்த அரசரைப் புதைத்து அதன்மேல் நினைவுக்குறியாக எடுக்கப்பட்ட கோயில்கள் ஆயிரத்திற்கு மேலும் இருக்கின்றனகாண்!; நிரயக் கொடு மொழி நீ ஒழி என்றலும் - ஆதலாலே, உயிர்க்குயிர் ஈவேன் என்னும் நிரயத்துன்பந்தரும் இம் மொழியைக் கூறாது விடுக என்று; கூறியருளுதலும் என்க.

(வி - ம்.) உலக மன்னவர் என்றது சோழ மன்னர்களை. இலரோ என்புழி ஓகாரம் எதிர்மறை. பலர் உயிரீவோர் உளராவர் என அதன் எதிர்மறைப் பொருளை வற்புறுத்து நின்றது. ஆயிரங் கோட்டம் என்றது மிகுதிக்கு ஒரெண் காட்டியவாறு. நிரயக் கொடுமொழி என்றது, 'இவனுயிர்க்கு என்னுயிர் கொள்' என்றதனை.

## கோதமை கூற்று

### கசுஅ - கஎக: தேவர்.........ஈங்கென

(இ - ள்.) தேவர் வரம் தருவர் என்று நால்மறை அந்தணர் நல்நூல் ஒரு முறை உரைக்கும் - தெய்வமே கேட்டருள் துன்புழந்து வருந்தினோர் வழிபாடு செய்து வேண்டினால் தெய்வங்கள் அத் துயர் தீர்க்கும் வரத்தை வழங்குவர் என்று நான்கு மறைகளாகிய அந்தணருடைய மெய்ந்நூல்கள் அவர்க்கு

உய்திபெறும் ஒரு முறைமையினைக் கூறுகிற்கும்; மாபெருந் தெய்வம் நீ அருளாவிடின்- அத் தெய்வங்களுள்ளும் மிகப் பெரிய தெய்வமாகிய நீயே யான் கேட்ட இவ் வரத்தை வழங்கி அருளா தொழியின்; யான் ஈங்கு என் உயிர் காவேன் என - அளியேன் இவ்வுலகத்துப் பின்னும் வாழ்வுகந்து என் உயிரைப் பேணுவேனல்லேன் காண்! என்றுள் என்க.

(வி - ம்.) ஒரு முறை - துன்புற்றோர்க்குய்தி பயக்கும் ஒரு வழி. நான்மறையாகிய நன்னூல் அந்தணர் நன்னூல் எனத் தனித்தனி இயையும். தெய்வங்களுள் வைத்துத் தலைசிறந்த தெய்வமாகிய நீயே என்பாள், மாபெருந் தெய்வம் நீ என்றாள். பிரிநிலை ஏகாரஞ் செய்யுள் விகாரத்தால் தொக்கது.

## சம்பாபதியின் மறுமொழி

### ௧௭௨ - ௧௮௫ : ஊழிமுத........இதுவென

(இ - ள்.) ஊழி முதல்வன் உயிர்தரின் அல்லது - ஊழி முடிவின் மீண்டும் உலகியற்றும் பெருங்கடவுளாகிய பிரமன இறந்தொழிந்த உயிரைப் படைத்துத் தந்தால் (தருதல் கூடும் அவன்) அல்லது; ஆழித்தாழி அகவரைத் திரிவோர் தாம் தரின் யானும் தருகுவன - சக்கரவாளமாகிய தாழியினூடே என்னைப் போன்று திரிகின்ற தேவர்கள் தாம நீ வேண்டும அறு நின் மகன் உயிரை மீட்டுத் தருவார் உளராயின யானும் நினமகன் உயிரை மீட்டுத் தருகுவேன் காண்!; மடவாய் - மடபப மிக்க பார்ப்பன மகளே நீயே; ஈங்கு என் ஆற்றலும் காண்பாய் என று- இப்பொழுதே என்னுடைய ஆற்றலையும் காணக்கடவாய் என று கூறி; நால்வகை மரபின் அரூ ப் பிரமரும் நால் நால வகையின உருபப் பிரமரும் - நால்வேறு முறைமையினையுடைய அரூபப் பிரமர்களும், பதினாறு வகைபபட்ட உரூ ப பிரமருமம; இருவகைச் சுடரும் - ஞாயிறுந் திங்களுமாகிய இருவகைப் ட்ட ஒளிக் கடவுளரும்; இரு மூவகையின் பெருவனப்பு எய்திய தெய்வத கணங்களும் - ஆறுவகைப் ட்ட பேரழகுடைய தெய்வக் கூட்டங் களும்; பல்வகை அசுரரும் - பலவேறு வகைப் ட்ட அசுரர்களும்; படுதுயர் உறூஉம் எண்வகை நரகரும்-பெருந்துனபத்தை எய்தா நின்ற எட்டு வகைப்பட்ட நரகரும்; இருவிசும்பு இயங்கும பல் மீன் ஈட்டமும் - பெரிய வானத்திலே இயங்கா நின்ற பலவாகிய மீன் கூட்டமும்; நாளும் கோளும் தன அகத்து அடக்கிய - நாண்மீன்களும் கோளகளும் ஆகிய தேவ கணங்களையெல்லாம் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருக்கினற. சக்கரவாளத்து-சக்கர வாளமாகிய இவ்வண்டத்தினுள்ளே உறைகினற; வரந்தார்க்கு உரியோர் தமை முன் நிறுத்தி-மாந்தர்க்கு வரந்தருதற்கு உரிமை

யுடையோரை எல்லாம் சம்பாபதி தனது ஆற்றலாலே வரவழைத்து அக்கோதமையின் அகக்கண் முன்னர் நிறுத்தி வைத்து; இவள் அருந்துயர் இது - தேவர்களே கேண்மின்! இப் பார்ப்பனிக்கு இப்போது எய்தியிருக்கின்ற தீர்த்தற்கரிய துயரம் இஃதேயாம்; அரந்தை கெடுமின் என - நும்மில் யாரேனும் இவளுடைய இத் துன்பத்தைப் போக்கியருளுமின் என்று வேண்டாநிற்ப என்க.

(வி - ம்.) ஊழி முதல்வன் என்றது இவ் வுலகம் அழிந்தொழிந்த ஊழியின் பின்னர் மீண்டும் உலகத்தைப் படைக்கின்ற பிரமதேவனை இவன் செந்தாமரை மலர்மேல் வீற்றிருப்பவன் என்பது பௌத்தர் கொள்கை. பிரமர் பலவகைப்பட்டுப் பலராதலின் இவனை ஊழி முதல் வன் என்றும், செம்மலர் முதியோன் என்றும் மகாப்பிரமா என்றும் விதந்தோதுவர். உலகப் படைப்பு அந்தம் ஆதி என்மனார் புலவர் எனச் சைவசித்தாந்தத்தே கூறப்படுமாறே இவரும் ஊழிக்குப்பின் உலகம் படைக்கும் முதல்வன் என்றே கூறுதல் உணர்க. ஆழித்தாழி - சக்கர வாளக் கோட்டமாகிய தாழிவடிவிற்றாகிய அண்டம் என்க.

திரியுந் தேவரில் யாரேனும் தருவார் உளராயின் யானுந் தருகுவன் என்றது, அவ் வரந்தருதற்கு எத் தேவராலும் இயலாது என்பதுபட நின்றது. எனக்குரிய ஆற்றல் எனக்குளது அதனைக் காட்டுவல் நீயே அதனையும் காண்க. நீ கேட்கும் வரந்தரும் ஆற்றல் ஊழி முதல்வற் கன்றிப் பிற தேவருக்கில்லை என்பதனைத் தெரிந்து விளக்கியபடியாம். தேவர்களை எல்லாம் ஒருங்கழைத்துக் காட்டுமாற்றால் சம்பாபதி தன் ஆற்றலை வெளிப்படுத்திக் காட்டியவாறும்.

**நால்வகை மரபின் அருபப் பிரமர்** - நால்வகை உலகங்களின் வாழும் உருவமற்ற பிரமர்கள்; இவர்கள் ஐந்தாந்தியானத்தில் தேறி யவர்என்பர். இவர் இருப்பிடம் (க) ஆகாசாநந்தியாயதன லோகம்; (உ) விஞ்ஞான நந்தியாயதன லோகம்; (௩) ஆகிஞ்சந் யாயதன லோகம்; (௪) நைவசம்ச்ஞான சம்ச்ஞானயதன லோகம் என்னும் நான்குமாம். இவை நான்கும் அருபப்பிரம லோகங்கள் எனப்படும்.

**பதினறு வகை மரபின் உருபப்பிரமர்** : பதினறு வகை உலகங்களில் உருவத்தோடு வாழும் பிரமர்கள் என்பர்; இவர்களில் முதலாந் தியானத்தில் தேறியவர் வாழுமுலகம் (க) பிரமகாயிக லோகம்; (உ) பிரமபுரோகித லோகம், (௩) மகாப்பிரம லோகம்; (௪) பரித் தாப லோகம் என்னும் நான்குமாம்.

இரண்டாந்தியானத்தில் தேறியவர் வாழுமிடம் (க) அப்பிர மாணபலோகம்; (உ) ஆபாசுவர லோகம்; (௩) பரித்தசுப லோகம்; (௪) அப்பிரமாணசுப லோகம் என்னும் நான்குமாம்.

மூன்றுந் தியானத்தில் தேறியவர் வாழுமிடம் - (க) சுபகிருஞ்ஞ லோகம்; (உ) பிருகத்பல லோகம்; (௩) அசஞ்ஞாசத்துவ லோகம்; (௪) அப்பிருக லோகம் என்னும் நான்குமாம்.

நான்காந்தியானத்தில் தேறியவர் வாழுமிடம் - (க) அதப லோகம்; (உ) சுதரிச லோகம்; (௩) சுதரிசி லோகம்; (௪) அகநிட்டலோகம்

என்னும் நான்குமாம். இவை தியானவகையால் நால் நான்கு வகைப் படுதலின் நானல்வகையின் உருபப் பிரமரும் என்று தெரித்தோதினர்.

இனி அருபப்பிரமரும் உருபப்பிரமரும் ஆகிய இருவகைப் பிரமரும் வாழும் உலகம் இருபதனையும் நிட்காம லோகங்கள் என்றும் ஓதுப.

இருவகைச் சுடரும் என்றது - ஞாயிற்றுத் தேவனையும் திங்கட்டே வனையுமாம்.

பெருவனப் பெய்திய தெய்வதகணங்களும் என்றது இந்நிலவுலகத் திலே செய்த நல்வினையின் பயனாகிய இன்ப நுகர்ச்சி எய்துதற்கியன்ற ஆறுவகைப்பட்ட தேவலோகங்களினும் வாழும் தேவரினங்களை. இவர் இன்ப நுகர்தற் குரிய லோகம் என்பது தோன்ற பெருவனப் பெய்திய தெய்வதகணம் என்றார்.

நல்வினையால் தேவராய்ப் பிறந்த இவர் வாழும் உலகங்கள் - (க) மகாராசிக லோகம்; (௨) திரயத்திரிஞ்ச லோகம்; (௩) யாம லோகம்; (௪) துடிதலோகம்; (௫) நிருமாணரதி லோகம்; (௬) பர நிருமித வய வருத்தி லோகம் என்னும் இந்த ஆறுலகங்களுமாம்.

மேலே கூறப்பட்ட இருபத்தாறுலகங்களும் நல்வினை செய்தோர்க் குரிய மேலுலகங்களாம்.

இனி, மக்கள் வாழும் இந்நிலவுலகம் ஒன்றுமே நடுவிலமைந்த உலகமாம். ஆகவே நல்வினை தீவினை என்னும் இருவகை வினைகளும் விரவிய உயிர்கள் இதன்கட் பிறந்து இன்பம் துன்பம் என்னும் இரு வகை நுகர்ச்சிகளையும் எய்தும் என்ப. இக் காரணத்தால் பௌத் தர்கள் வினைகளின் கூட்டத்தை வேதனைக் கந்தம் என்பர். வினைகள் இரண்டென்னாது மூன்று என்பர். இதனை,

> "இனிவே தனையா வனஇன்ப மொடு
> துனிவே தருதுன் பமுமாம் இடையும்
> நனிதா நலதீ வினையன் மையினும்
> பனிவே யிணைபன் னியதோண் மடவாய்" (௪௮௮)

எனவரும் நீலகேசிச் செய்யுளானும்; அதற்கு "நுகர்ச்சிக் கந்தம் - இன்ப நுகர்ச்சியும் துன்பநுகர்ச்சியும். இவ்விரண்டும் விரவிய சமநுகர்ச்சியும் என மூவகைப்படும்" என்று விளக்கிய விளக்கவுரையானும் உணர்க.

பல்வகை அசுரர் என்றார் அவர் தாமும் தாஞ்செய்த தீவினையின் பயனை அவற்றின் வன்மை மென்மைகட் கேற்பப் பலவகைப்படுதலின். தீவினை மிகுதியால் எட்டுவகைப்பட்ட நரகப் புரைகளிலே இடப்பட்ட உயிர்களைப் பிரித்து எண்வகை நரகர் என்றார். இவ்வெண்வகை நரகப் பகுதிகளும் நரகலோகம் என்னும் ஒருலகத்தின் உட்பகுதிகளாம்.

அந் நரகங்கள் - (க) மகாநிரயம்; (௨) இரௌரவம்; (௩) கால சூத்திரம்; (௪) சஞ்சீவனம்; (௫) மகரவீசி; (௬) தபனம்; (௭) சம் பிரதாபனம்; (௮) சங்கதம் என்னும் இவ் வெட்டுமாம்.

இனித் தீவினைப் பயனுகச் சென்று பிறப்பெய்தும் உலகங்களை இருள் உலகம் என்ப. அவை தாமும் நான்கு வகைப்படும். (க) நரக லோகம்; (உ) திரியக்குலோகம்; (ங) பிரேதலோகம்; (ச) ஆசுரிக லோகம் என்னும் இந்த நான்குமாம்.

நிலவுலகத்தின் கீழுள்ள இவை நான்கும் கீழுலகம் எனத் தொகுத் தோதப்படும்.

இனி, நல்வினை தீவினை இரண்டும் விரவு வினையுமாகிய மூன்று வினைகளானும் உயிர்கள் எய்தும் இருள் உலகம் நான்கும் நிலவுலகம் ஒன்றும் ஒளி உலகம் ஆறுமாகிய பதினெருலகத்தையும் காமலோகங்கள் என்றும் தொகுத்தும் கூறுப.

மேலே கூறியவாற்ருல் பௌத்த சமயத்தார் கூறுகின்ற காம லோகம் பதினென்றும் நிட்காம லோகம் இருபதும் ஆகிய முப்பத்தோருலகங்களையும் அவற்றினியல்புகளையும் அறிக.

பன்மீனீட்டம் என்றது விசும்பிலே எண்ணிறந்தனவாகக் காணப்படுகின்ற விண்மீன்களை. நாள் என்றது அசுவனி முதலிய இருபத்தேழு மீன்களையுமாம். கோள்களில் முன்னர்த் தேவரோடு கூட்டிய ஞாயிற்றையும் திங்களையும் தவிர்த்து எஞ்சிய ஏழு கோள்களையுமாம். மேலே கூறப்பட்ட முப்பத்தோருலகங்களையும் பன்மீன்களையும் கோள்களையும் நாள்களையும் தன்னகத்தே அடக்கியிருக்கும் ஓர் அண்டமே சக்கரவாளம் ஆம். இங்ஙனமே எண்ணிறந்த சக்கரவாளங்கள் உள என்பது பிடக நூலோர் துணிவாம் என்றுணர்க.

வரந்தருதற் குரியோர் என்றது இவற்றுள் மேலுலகத்தும் நிலவுலகத்தும் உறையும் தெய்வங்களை. அரந்தை-துன்பம்.

## தேவர் கூற்றும் கோதமையின் செயலும்

### கஅசு - கஅகூ : சம்பாபதி...... ...இறந்தபின்

**(இ-ள்.) எங்கு வாழ் தேவரும் - எவ்வெவ்வுலகத்தும் வாழ்வோராய்ச் சம்பாபதியின் ஆணைக்கடங்கிச் சுடுகாட்டுக் கோட்டத்தே வந்து சேர்ந்த தேவரெல்லாம்; சம்பாபதி தான் உரைத்த அம்முறையே உரைப்பக் கேட்டு-அச் சம்பாபதி என்னும் ஆற்றல் சால் தெய்வம் உரைத்தவாறே ஊழி முதல்வன் உயிர்தரின் அல்லது ஆழித்தாழி அகவரைத் திரியும் யாந்தர வல்லேம் என்று கூற அது கேட்டு; கோதமை உற்ற கொடுந்துயர் நீங்கி - மெய்யுணர்ந்தமையாலே கோதமை என்னும் அப்பார்ப்பனி தானும் பேதைமை காரணமாகப் பண்டு தான் எய்திய கொடிய துன்பத்தினின்று நீங்கி; மகனை ஈமச் சுடலையின் இட்டு இறந்தபின் - சார்ங்கலன் உடம்பினை ஈமவிறகின் எரிகின்ற தீயிலிட்டுத் தானும் இறந்த பின்னர் என்க.**

(வி - ம்.) எல்லாத் தேவலோகங்களினும் வாழ்கின்ற எல்லாத் தேவரும் சம்பாபதி உரைத்தவாறே தமது ஆற்றாமையைக் கூற அது கேட்ட கோதமை துயர்துறந்து மகனுடம்பையும் தீயிலிட்டுத் தானும் தீயினுட்புக் கிறந்த பின்னர் என்றவாறு.

### மயன் சக்கரவாளக் கோட்டம் சமைத்தல்

௧௯0 - ௨0௨ : சம்பாபதி.........இதுகாண்

(இ - ள்) சம்பாபதி தன் ஆற்றல் தோன்ற - சம்பாபதி என்னும் அக்காவற்றெய்வத்தின் ஆற்றல் கோதமை முதலிய உலகமாந்தர்க்கெல்லாம் நன்கு விளங்கும் பொருட்டு; எங்கு வாழ் தேவரும் கூடிய இடந்தனில் - அத் தெய்வத்தின் ஆணை வழியே நிலவுலகமுதலாக மேலுள்ள இருபத் தேழுலகங்களினும் உறைகின்ற தேவரெல்லாம் ஒருங்குடன் வந்து கூடிய சிறப்பினை யுடைய இந்தச் சுடுகாட்டுக் கோட்டத்திலே; சூழ்கடல் வளைஇய ஆழி அம்குன்றத்து நடுவு நின்ற மேருக்குன்றமும் - நாற்புறமும் சூழ்ந்த கடலையுடைய சக்கரவாளத்தினுள்ள மலைகளின் நடுவண் நிலை பெற்றுநின்ற மேருமலையும்; புடையின் நின்ற எழு வகைக் குன்றமும் - அதன் மருங்கிலே நிற்கின்ற ஏழுவகையான குலமலை களும்; நால்வகை மரபின் மாபெருந்தீவும் - நான்கு வகைப்பட்ட மிகப் பெரிய நாவலந்தீவு முதலிய தீவுகளும்; ஓர் ஈர் ஆயிரம் சிறு இடைத்தீவும் - அப்பெருந்தீவுகளைச் சூழ்ந்துள்ள இரண் டாயிரம் சிறிய தீவுகளும்; பிறவும் - இவையல்லாதனவாகிய இடவகை காட்டுதற்குரியவற்றை அவ்வவற்றிற்குரிய இடத்தைப் பெறுமாறு; அறிவுவரக் காட்டி - காண்பவர்க்கு சக்கரவாளத்தின் இயல்புபற்றிய அறிவு பிறக்கும்படி இயற்றி; ஆங்கு வாழ் உயிர் களும் அவ்வுயிர் இடங்களும் - ஆங்கே வாழும் உயிர் வகைகளும், அவ் வுயிரினங்கள் சிறப்புரிமை கொண்டுவாழு முலகங்களும்; பாங்கு உற மண்ணீட்டின் பண்பு உற வகுத்து - அழகுற மண்ணீடுகளிலே அவ்வவற்றின் இயல்பு பொருந்தும்படி வகுத்து; மிக்க பயனால் இழைக்கப்பட்ட சக்கரவாளக் கோட்டம் ஈங்கு இது காண் - தொழிற்றிறமிக்க மயனால் இயற்றப்பட்ட சக்கரவாளக் கோட்டமே இங்குள்ள இக் கோட்டம் என்றறிதி. இதுவே எம்மனோர் அப் பெயராற் கூறுதற்குரிய காரணம் என்று அத் தெய்வம் கூறுகிற்ப என்க.

(வி - ம்.) எங்குவாழ் தேவரும் சம்பாபதியின் கட்டளையின்படி ஓரிடத்தே வந்து கூடியதனால் அத் தெய்வத்தின் தலைமைத் தன்மை யுடைய பேராற்றல் தோன்றிற்று என்பது கருத்து. நிகழ்தற்கரிய நிகழ்ச்சி ஒரு காலத்தே இவ்விடத்தே நிகழ்ந்தது என்று பிற்காலத்து மாந்தர் அறிந்து கொள்ளற் பொருட்டு மயன் என்னும் தெய்வச் சிற்பி சக்கரவாளத்தின் அமைப்பைச் சிற்பங்களாலே இவ்விடத்து அமைத் தனன் என்றவாறு.

கடல் வளைஇய-பெரும் புறக்கடல் சூழ்ந்துள்ள. ஆழியங் குன்றம்-சக்கரவாளத்துளடங்கிய மலைகள் என்க. அக் குன்றத்து நடுவே மேரு மலையும்; அதன் பக்கங்களிலே ஏழுகுல மலைகளும், மாபெருந் தீவுகளும், இரண்டாயிரம் இடைத் தீவுகளும், இவையல்லாத இடவகைகளும், ஆங்காங்கு வாழும் உயிர் வகைகளும், மயனால் அழகிய சிற்பப்படிமங்களாக இயற்றப்பட்டன என்க.

மண்ணீடு - சுதை (சிற்பப்படிமம்). பாங்கு - அழகு. பண்பு - இயல்பு.

### மணிமேகலை நிலையாமையை நினைவு கூர்தல்

#### உ0௧ - உ0௫ : இடுபிண.........உரைக்க

**(இ - ள்.) இடுபிணக் கோட்டத்து எயில்புறம் ஆதலின்-பிணங்களைக் கொணர்ந்து போகடுகின்ற கோட்டத்தோடு அக நகரத்தின் மதிலின் புறம்பாகிய இடமாதலாலே இதனை; சுடுகாட்டுக் கோட்டம் என்றலது உரையார் - இவ்வரலாறறியாத மாந்தர் சுடுகாட்டுக்கோட்டம் என்று கூறுதலல்லது சக்கரவாளக் கோட்டம் என்று கூறுதலிலர்; இது இதன் வரவு என்று இருந்தெய்வம் உரைப்ப - இதுவே இதன் வரலாறு ஆதலான் இதனைச் "சக்கரவாளக் கோட்டம்" என்று யான் கூறினேன் காண்! என்று அப் பெருந்தெய்வம் அறிவியாநிற்ப என்க.**

(வி - ம்.) மக்கள் உள்ளத்தே இவ் வரலாறு பதிவது அரிதாகலின் அவர்கட்கு இவ்விடத்தே நிகழும் நிகழ்ச்சியால் பிணஞ்சுடுமிடம் என்பதே நன்கு புலப்படுதலான் அவர் சுடுகாட்டுக் கோட்டம் என்றல் இயல்பேகாண். வரலாறறிந்த எம்மனோர்க்கு இது, சக்கரவாளக் கோட்டம் என்றே தோன்றுதலின் அவ்வாறு யான் கூறினேன் என்று விடுத்தபடியாம்.

### மணிமேகலா தெய்வம் மணிமேகலையை எடுத்துப் போதல்

#### உ0௬ - உ௧௪ : மதனின்.........தானேன்

**(இ - ள்.) சிறந்தோன் - அத் தெய்வங் கூறிய வரலாற்றைக் கேட்டிருந்த மகளிர் இருவருள் ஏது நிகழ்ச்சி எதிர்ந்துள்ளமையாலே அவ்வரலாற்று வழியாக அத் தெய்வம் அறிவுறுத்திய நிலையாமையுணர்ச்சியை ஏற்றுக் கோடற்குச் சிறந்த மாணாக்கியாயிருந்த மணிமேகலையானவள்; வான் துயர் எய்தி - அவ் வுணர்ச்சி காரணமாக மிகப் பெரிய துன்பத்தை உடையவளாகி; மதன் இல் நெஞ்சமொடு - செருக்கவிந்த தன்னெஞ்சத்திற்கு; பிறந்தோர் வாழ்க்கை உரைப்ப - பிறந்தவர் இவ்வுலகில் எய்தும் பெருகிய துன்பத்தையும் அதன் நிலையாமையையும் எடுத்துக் கூறாநிற்ப; இறந்து இருள் கூர்ந்த இடை இருள்**

யாமத்து-அற்றை நாளிரவிற் பொழுது ஒருபாதி கழிந்தமையாலே அவ் வுவவனத்தின் இயற்கையாகவே புக்கிருந்த நள்ளிரவாகிய இடையாமத்திலேயே; தூங்கு துயில் எய்திய சுதமதி ஒழிய - மிக்குத் தூங்குதலாகிய ஆழ்ந்த துயிலில் அழுந்தியிருந்த மகளிர் இருவருள் சுதமதியை அந்நிலையிலேயே இருக்கவிட்டு; பூங்கொடி தன்னைப் பொருந்தி தழீஇ அந்தரம் ஆரு - காமவல்லி போல் வாளாகிய மணிமேகலையை அணுகித் துயில் கலையாவண்ணம் தழுவி எழுத்துக் கொண்டு வான் வழியாகப் பறந்து போய் அவ்வுவவனத்தினின்றும்; ஆறு ஐந்து யோசனை தென் திசை மருங்கில் சென்று - முப்பது யோசனைத்தொலைவு தென் திசை நோக்கிச் சென்று; திரை உடுத்த மணிபல்லவத்து இடை - நாற் புறமும் கடல் அலைகளைப் பூண்டுள்ள மணிபல்லவம் என்னுந் தீவினிடத்தே; மணிமேகலா தெய்வம் - அந்த மணிமேகலா தெய்வம்; அணி இழை தன்னை வைத்து அகன்றது - மாதவி மகளாகிய மணிமேகலையை அவளது துயில் கலையாவண்ணம் வைத்து அவ்விடத்தினின்றும் நீங்கியது; என்பதாம்.

(வி - ம்.) மதன் - செருக்கு. சிறந்தோள்: மணிமேகலை. தெய்வத்தின் கூற்றின் பயனாகிய மெய்க் காட்சியை; அஃதாவது நிலையாமையை உணர்தற்குச் சிறந்திருந்த மணிமேகலை என்பது கருத்து. தூங்குதுயி லெய்திய இருவருள் சுதமதி யொழிய என அவாய் நிலைபற்றி ஒருசொல் பெய்துரைக்க. இங்ஙனம் உரையாக்கால் மணிமேகலை விழிப்பு நிலையின ளாகவே தெய்வம் எடுத்துப் போயதாகி மேல் வருவனவற்றோடும் முரணும் என்க.

இனித் தெய்வம் மணிமேகலையை மயக்கி எடுத்துப் போயது எனின் அதற்குஞ் சொல்லின்மையால் யாம் கூறியவாறே கூறுதலே அமையும் என்க.

இனி, இக் காதையை, மண்டிலம் சொரியத் திகழ்தரு மேனியள் பீடிகை ஏத்தி நல்லாள் முகம் நோக்கி என் உற்றீர் என அவள் அவன் கூறிய துரைத்தலும் குமரன் நீங்கான் வீதியில் பொருந்துதல் ஒழியான் சிறுபுழை போகிக் கோட்டம் புக்கால், நவை எய்தாது அங்கு நீர் போமென்று அருந்தெய்வம் உரைப்ப மிக்கோய் சக்கரவாளக் கோட்டம் அஃதெனக் கூறிய பொருள் அறியேன் என அதன் காரணம் கூறுவன் இருள் வரினும் நீ கேள் என்று கூறும்-கூறுபவள் இதன் வரவு இதுவென மயனால் இழைக்கப்பட்ட சக்கரவாளக் கோட்டம் இது காண் என சிறந்தோள் நெஞ்சமொடுரைப்ப, இடையாமத்துத் துயிலெய்திய (இருவருள்) சுதமதி ஒழியப் பூங்கொடி தன்னைத் தழீஇ அந்தரம் ஆருச் சென்று மணிபல்லவத்திடை அத் தெய்வம் அணியிழையை வைத்து அகன்றது என இயைபு காண்க.

சக்கரவாளக்கோட்டமுரைத்த காதை முற்றிற்று.

# எ. துயிலெழுப்பிய காதை

[ஏழாவது மணிமேகலா தெய்வம் உவவனம் புகுந்து சுதமதியைத் துயிலெழுப்பிய பாட்டு]

அஃதாவது : மணிமேகலையை உவவனத்தினின்றும் எடுத்துப் போய் முப்பது யோசனைத் தொலைவில் கடலினுள்ளிருக்கும் மணிபல்லவம் என்னும் தீவின்கண் வைத்து அவ்விடத்தினின்றும் மீண்டும் புகார் நகரத்து உவவனத்தினூடே துயிலில் ஆழ்ந்திருந்த சுதமதியை எழுப்பித் தான் செய்தமையைக் கூறி மாதவிக்கும் அந் நற்செய்தியைக் கூறும்படி பணித்து மறைந்த செய்தியைக் கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இதன்கண் - உவவனத்தின்கண் மணிமேகலையைக் கண்ணெதிரே கண்டு வைத்தும்; அவளது "மடங் கெழுநோக்கின் மதமுகந் திறப்புண்டு இடங்கழி தன் நெஞ்சத்திளமையானை கல்விப்பாகன் கையகப்படாஅது ஒல்காவுள்ளத் தோடுமாயினும் ஒழுக்கொடு புணர்ந்த விழுக்குடிப் பிறந்தோர்" ஆதலின் பகவனது ஆணையிற் பன்மரம் பூக்கும் அத்தெய்வப் பூம்பொழிலில் அவளைக் கைப்பற்றுதல் குடிபபழியாம் என்றஞ்சி அகன்ற அரசிளங் குமரனாகிய உதயகுமரன் தன் அரண்மனைக்கண் காம நோயாற் பெரிதும் வருந்தி நாளைக்கு அவளை யான் எப்படியும் கைப்பற்றுவேன் என்னும் துணிவுடன் பொங்கு மெல்லமளியில் கண்டுயிலாது கிடந்தோன் முன்னர், மணிமேகலா தெய்வம் தோன்றி மன்னறம் கூறி "மன்னவன் மகனே! தவத்திறம் பூண்டோள் தன்மேல் வைத்த அவத்திறம் ஒழிக" என்றறிவுறுத்து அப்பால் உவவனத்திலே துயில் கொண்டிருந்த சுதமதியை எழுபபித் தான் மணிமேகலா தெய்வம் என்றறிவித்து மணிமேகலைக்கு எதுநிகழ்ச்சி எதிர்ந்துளதாதலின் அவளை நன்னெறிக்கட் செலுத்தவே யான் எடுத்துப் போயினேன், என்னை மாதவி முன்னரே அறிகுவள், மணிமேகலை இற்றைக்கு ஏழா நாள் நலம் பல எய்தி இங்கு வந்து சேர்வாள் என்று கூறும் அத் தெய்வத்தின் அருட்டிறமும், பின்னர்ச் சுதமதி சக்கரவாளக் கோட்டம் புக்கதும்; ஆங்குக் கந்திற் பாவை சுதமதிக்குக் கூறும் அற்புதக் கிளவியும்; இரவு வண்ணனையும் பெரிதும் இன்பம் பயப்பனவாக அமைந்திருத்தலைக் காணலாம்.

மணிமே கலைதனை மணிபல் லவத்திடை
மணிமே கலாதெய்வம் வைத்து நீங்கி
மணிமே கலைதனை மலர்ப்பொழிற் கண்ட
உதய குமரன் உறுதுய ரெய்திக்
கங்குல் கழியிலென் கையகத் தாளெனப்
பொங்குமெல் லமளியிற் பொருந்தா திருந்தோன்
முன்னர்த் தோன்றி மன்னவன் மகனே
கோல்நிலை திரிந்திடிற் கோள்நிலை திரியும்
கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயி ரென்னுந் தகுதியின் றாகும்
தவத்திறம் பூண்டோள் தன்மேல் வைத்த
அவத்திறம் ஒழிகென் றவன்வயி னுரைத்தபின்
உவவனம் புகுந்தாங் குறுதுயில் கொள்ளும்
சுதமதி தன்னைத் துயிலிடை நீக்கி
இந்திர கோடணை இந்நகர்க் காண
வந்தே னஞ்சல் மணிமே கலையான்
ஆதிசான் முனிவன் அறவழிப் படூஉம்
ஏது முதிர்ந்த திளங்கொடிக் காதலின்
விஞ்சையிற் பெயர்த்துநின் விளங்கிழை தன்னையோர்
வஞ்சமில் மணிபல் லவத்திடை வைத்தேன்
பண்டைப் பிறப்பும் பண்புற உணர்ந்தீங்
கின்றேழ் நாளில் இந்நகர் மருங்கே
வந்து தோன்றும் மடக்கொடி நல்லாள்
களிப்புமாண் செல்வக் காவற் பேரூர்
ஒளித்துரு வெய்தினும் உன்திற மொளியாள்
ஆங்கவள் இந்நகர் புகுந்த அந்நாள்
ஈங்கு நிகழ்வன ஏதுப் பலவுள
மாதவி தனக்கியான் வந்த வண்ணமும்
ஏதமில் நெறிமகள் எய்திய வண்ணமும்
உரையாய் நீயவள் என்திறம் உணரும்
திரையிரும் பௌவத்துத் தெய்வமொன் றுண்டெனக்
கோவலன் கூறியிக் கொடியிடை தன்னையென்
நாமஞ் செய்த நன்னாள் நள்ளிருள்
காமன் கையறக் கடுநவை யறுக்கும்
மாபெருந் தவக்கொடி ஈன்றனை யென்றே
நனவே போலக் கனவகத் துரைத்தேன்
ஈங்கிவ் வண்ணம் ஆங்கவட் குரையென்
றந்தரத் தெழுந்தாங் கருந்தெய்வம் போயபின்

வெந்துய ரெய்திச் சுதமதி எழுந்தாங்
ககன்மனை யரங்கத் தாசிரியர் தம்மொடு
வகைதெரி மாக்கட்கு வட்டணை காட்டி
ஆடல் புணர்க்கும் அரங்கியன் மகளிரில்
கூடிய குயிலுவக் கருவிகண் டுயின்று
பண்ணுக்கிளை பயிரும் பண்ணியாழ்த் தீந்தொடை
கொளைவல் லாயமோ டிசைகூட் டுண்டு
வளைசேர் செங்கை மெல்விர லுதைத்த
வெம்மைவெய் துறுது தன்மையிற் றிரியவும்
பண்பில் காதலன் பரத்தமை நோனது
உண்கண் சிவந்தாங்கு ஒல்குகொடி போன்று
தெருட்டவுந் தெருளா தூடலொடு துயில்வோர்
விரைப்பூம் பள்ளி வீழ்துணை தழுவவும்
தளர்நடை யாயமொடு தங்கா தோடி
விளையாடு சிறுதேர் ஈர்த்துமெய் வருந்தி
அமளித் துஞ்சும் ஐம்படைத் தாலிக்
குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்க்குக்
காவற் பெண்டிர் கடிப்பகை யெறிந்து
தூபங் காட்டித் தூங்குதுயில் வதியவும்
இறையுறை புறவும் நிறைநீர்ப் புள்ளும்
காவுறை பறவையும் நாவு ளழுந்தி
விழவுக்களி யடங்கி முழவுக்கண் டுயின்று
பழவிறன் மூதூர் பாயல்கொள் நடுநாள்
கோமகன் கோயிற் குறுநீர்க் கன்னலின்
யாமங் கொள்பவர் ஏத்தொலி யரவமும்
உறையுணின் றுருடுங்கிய உண்ணு உயக்கத்து
நிறையழி யானை நெடுங்கூ விளியும்
தேர்வழங்கு தெருவுஞ் சிற்றிடை முடுக்கரும்
ஊர்காப் பாளர் எறிதுடி ஓதையும்
முழங்குநீர் முன்றுறைக் கலம்புணர் கம்மியர்
துழந்தடு கள்ளின் றேப்பியுண் டயர்ந்து
பழஞ்செருக் குற்ற அனந்தர்ப் பாணியும்
அரவாய்க் கடிப்பகை ஐயவிக் கடிப்பகை
விரவிய மகளிர் ஏந்திய தூமத்துப்
புதல்வரைப் பயந்த புனிறுதீர் கயக்கம்
தீர்வினை மகளிர் குளனு டரவமும்
வலித்த நெஞ்சின் ஆடவ ரின்றியும்
புலிக்கணத் தன்னோர் பூத சதுக்கத்துக்
கொடித்தேர் வேந்தன் கொற்றங் கொள்கென
இடிக்குரன் முழக்கத் திடும்பலி யோதையும்

ஈற்றிளம் பெண்டிர் ஆற்ருப் பாலகர்
கடுஞ்சூன் மகளிர் நெடும்புண் உற்ருேர்
தந்துயர் கெடுக்கும் மந்திர மாக்கள்
மன்றப் பேய்மகள் வந்துகைக் கொள்கென
நின்றெறி பலியின் நெடுங்குர லோதையும்
பல்வே ருேதையும் பரந்தொருங் கிசைப்பக்
கேட்டுளங் கலங்கி ஊட்டிரு ளழுவத்து
முருந்தேர் இளநகை நீங்கிப் பூம்பொழில்
திருந்தெயிற் குடபாற் சிறுபுழை போகி
மிக்கமா தெய்வம் வியந்தெடுத் துரைத்த
சக்கர வாளக் கோட்டத் தாங்கண்
பலர்புகத் திறந்த பகுவாய் வாயில்
உலக அறவியின் ஒருபுடை இருத்தலும்
கந்துடை நெடுநிலைக் காரணம் காட்டிய
அந்தி லெழுதிய அற்புதப் பாவை
மைத்தடங் கண்ணுள் மயங்கினள் வெருவத்
திப்பிய முரைக்குந் தெய்வக் கிளவியின்
இரவி வன்மன் ஒருபெரு மகளே
துரகத் தானைத் துச்சயன் றேவி
தயங்கிணர்க் கோதை தாரை சாவுற
மயங்கி யானைமுன் மன்னுயிர் நீத்தோய்
காராளர் சண்பையிற் கௌசிகன் மகளே
மாருத வேகனே டிந்நகர் புகுந்து
தாரை தவ்வை தன்னெடு கூடிய
வீரை யாகிய சுதமதி கேளாய்
இன்றேழ் நாளில் இடையிருள் யாமத்துத்
தன்பிறப் பதனெடு நின்பிறப் புணர்ந்திங்கு
இலக்குமி யாகிய நினக்கிளை யாள்வரும்
அஞ்சலென் றுரைத்த தவ்வுரை கேட்டு
நெஞ்சம் நடுக்குறூஉம் நேரிழை நல்லாள்
காவ லாளர் கண்டுயில் கொள்ளத்
தூமென் சேக்கைத் துயில்கண் விழிப்ப
வலம்புரிச் சங்கம் வறிதெழுந் தார்ப்பப்
புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்கப்
புகர்முக வாரணம் நெடுங்கூ விளிப்பப்
பொறிமயிர் வாரணங் குறுங்கூ விளிப்பப்
பணைநிலைப் புரவி பலவெழுந் தாலப்
பணைநிலைப் புள்ளும் பலவெழுந் தாலப்
பூம்பொழி லார்க்கைப் புள்ளொலி சிறப்பப்
பூங்கொடி யார்க்கைப் புள்ளொலி சிறப்பக்

கடவுட் பிடிகைப் பூப்பலி கடைகொளக்
கலம்பகர் பீடிகைப் பூப்பலி கடைகொளக்
குயிலுவர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழக்
கொடுப்போர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழ
ஊர்துயி லெடுப்ப உரவுநீ ரழுவத்துக்
காரிருள் சித்துக் கதிரவன் முளைத்தலும்
ஏவுறு மஞ்ஞையின் இனைந்தடி வருந்த
மாநகர் விதி மருங்கிற் போகிப்
போய கங்குலிற் புகுந்ததை யெல்லாம்
மாதவி தனக்கு வழூவின் றுரைத்தலும்
நன்மணி இழந்த நாகம் போன்றவள்
தன்மகள் வாராத் தனித்துய ருழப்ப
இன்னுயி ரிழந்த யாக்கையி லிருந்தனள்
துன்னிய துரைத்த சுதமதி தானென்.

---

## எ. துயிலெழுப்பிய காதை

### உரை

### உதயகுமரன் முன்னர் மணிமேகலா தெய்வம் வந்து தோன்றல்

க - எ : மணிமே..........தோன்றி

(இ - ள்.) மணிமேகலா தெய்வம் மணிபல்லவத்திடை மணிமேகலை தனை வைத்து நீங்கி - இவ்வாறு மணிமேகலா தெய்வமானது உவவனத்தினின்று மூப்பது யோசனைத் தூரத்தில் தென் கடலிற் கிடக்கும் மணிபல்லவம் என்னும் தீவினிடை மணிமேகலையைக் கொடுபோய்த் துயில் கலையாவண்ணம் மெத்தென வைத்துப் பின்னர் அத் தீவினின்றும் நீங்கி; மணிமேகலை தனை மலர்ப்பொழில் கண்ட உதயகுமரன் உறுதுயர் எய்தி - அம் மணிமேகலையைப் பகவனதாணையில் பல்மரம் பூக்கும் தெய்வத்தன்மையுடைய உவவனமாகிய மலர்ப் பொழிலிற் கண்ட அரசிளங்குமரனாகிய உதயகுமரன் அவ்விடத்தே அவளைக் கைப் பற்றுதற் கஞ்சி மீண்டவன் மிக்க காம நோயாலே வருந்தி; கங்குல் கழியில் என் கையகத்தாள் என - இற்றை நாளிரவு கழிந்தக்கால் அவள் என் கையகத்தே இருப்பாள் அதற்காவன செய்குவல் என்னும் துணிவோடு; பொங்கு மெல் அமளியில் பொருந்தாது இருந்தோன் முன்னர்த் தோன்றி - ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கப்பட்டுயர்ந்த மெல்லிய படுக்கையின் மேலே கண்ணிமைகள் பொருந்தாமல் படர்மெலிந்திருப்பவன் கண்முன் மின்னே போலப் பெண்ணுருவங் கொண்டு நின்று என்க.

(வி - ம்.) மணிமேகலா தெய்வம் மணிமேகலையைப் பாதுகாத்துக் கடைபோக நன்னெறியிலே செலுத்தும் குறிக்கோளுடன் அவளை எடுத்து மணிபல்லவத்திடை வைத்தாலும், அவள் மீண்டும் புகார் நகரத்திற்கு வரும் பொழுது அவள் பால் கழிபெருங் காமம் கொண்டவனாய் உதயகுமரன் அவளைக் கைப்பற்றவே முயல்வான் ஆகலின் அவள் தெய்வத்தின் துணைவலியும் தவவலியும் உடையாள் என்று அவன் அறியும்படி செய்து அச்சுறுத்தற் பொருட்டு அப்பொழுதே அவன் முன் தோன்றியவாறு. இஃது எதிரதாக் காக்கும் அறிவு எனப்படும். என்னை?

> "எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
> அதிர வருவதோர் நோய்" (சுஉகூ)

என நிகழும் தமிழ் மறையும் நினைக.

## மணிமேகலா தெய்வம் உதயகுமரனுக்குச் செங்கோல் காட்டல்

### ௭ - ௧௪: மன்னவன்.........உரைத்தபின்

(இ - ள்.) மன்னவன் மகனே! - எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப் புள்ளுறு புன்கண் தீர்த்தோனன்றியும், வாயிற் கடைமணி நடுநா நடுங்க ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சு சுடத் தான் தன் அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோனு மாகிய செங்கோன் மன்னர் வழிவழிச் சிறந்து வந்த சோழ மன்னவன் மகனே! ஈதொன்று கேள்!; கோல் நிலை திரிந்திடின் கோள் நிலை திரியும் - அரசன் குறிக்கொண்டு பேணுதற் கியன்ற செங்கோன்மை பிறழுமானால் வெள்ளி முதலிய கோள்கள் தம் நிலையி லியங்காமல் பிறழ்ந்தியங்கா நிற்கும்; கோள் நிலை திரிந்திடின் மாரி வறங்கூரும் - அங்ஙனம் கோள்கள் நிலை பிறழ்ந் தியங்கினாலோ மழை பொய்த்து உலகிலே வற்கட மிகாநிற்கும்; மாரி வறங்கூரின் மன்னுயிர் இல்லை - மாரி பொய்த்து வற்கடமிகு மாயின் உடம்பொடு தோன்றி நிலைபெற்று வாழ்கின்ற உயிர்கள் இறந்துபடும்; மன்னுயிர் எல்லாம் மண் ஆள் வேந்தன் தன் உயிர் என்னும் தகுதி இன்று ஆகும்-இங்ஙனம் ஆயின் உலகில் நிலைபெற்று வாழ்கின்ற உயிர்கள் எல்லாம் அரசனுடைய உயிரே ஆகும் என்று ஆன்றோர் கூறும் பெருந்தகைமை அவ்வரசன்பால் சிறிதும் இல்லையாம்; தவத்திறம் பூண்டோள் தன் மேல் வைத்த அவத்திறம் ஒழிக என்று அவன்வயின் உரைத்தபின்-செங்கோன் முறை பிறழாது அத்தகைய பெருந்தகைமையோடு அருளாட்சி புரிந்த நின்முன்னோர் நெறிநின்று நீதானும் தவவொழுக்கத்தை மேற்கொண்டொழுகுகின்ற மணிமேகலையின்பாற் கொண்டுள்ள நின் கேட்டிற்கே காரணமான இடங்கழி காமத்தைக் கைவிட்டு விடுவாயாக! என்று அத் தெய்வம் அவனுக்குக் கூறி அச்சுறுத் திய பின்பு என்க.

(வி - ம்.) மன்னவன் என்றது - செங்கோன்மை பிறழாத சிபியும் மனுவும் போன்ற புகழ் மிக்கோர் மரபின் வந்த சோழமன்னன் என்பது பட நின்றது. கோல் - அரசியலறம். அஃது ஒருபாற் கோடாது செவ்விய கோல் போறலின் செங்கோல் என வழங்கப்படும். ஈண்டு அடைமொழியின்றிக் கோல் என நின்றது. முறைகோடுதலை ஈண்டுக் கோல் திரியின் என்றார்.

> ''முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
> யொல்லாது வானம் பெயல்''
>
> (௫௫௯)

எனவரும் திருக்குறளையும் நினைக.

கோள் - மழைதரும் வெள்ளி முதலிய கோள்கள். மாரிவறங் கூர்தல் - மழை பெய்யா தொழிதல்.

மன்னுயிரெல்லாம் மண்ணாள் வேந்தன் தன்னுயிர் என்பதனோடு —

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால் யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே" (புறநா-கஅசு)

எனவரும் மோசிகீரனார் பொன்மொழி ஒப்புநோக்கற் பாலதாம்.

இனி ஈண்டுத் தண்டமிழ் ஆசான் சாத்தனார் கூறிய இதனை, ஆசிரியர் திருத்தக்க தேவரும் தம் பெருங்காப்பியத்தூடே—(சீவக : உஉரு)

"கோள்நிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கண் மிஞ்சி
நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியும் நீடி
பூண்முலை மகளிர் பொற்பின் கற்பழிந் தறங்கண் மாறி
ஆணையிவ் வுலகு கேடாம் அரசுகோல் கோடி னென்றான்"

எனப் பொன்போற் பொதிந்து வைத்துள்ளமையும் உணர்க.

தவத்திறம் - நோன்பு. அவத்திறம் - கேட்டிற்குக் காரணமான பொருந்தாக் காமம். அது நோன்முறையன்றாகலின் ஒழிக என்றறி வுறுத்தபடியாம்.

## மணிமேகலா தெய்வம் உவவனத்தே சென்று சுதமதியைத் துயிலெழுப்பித் தெருண்மொழி கூறுதல்

[கரு - உவவனம் என்பது தொடங்கி சo - போயின் என்னு மளவும் ஒரு தொடர்]

### கரு - உரு: உவவனம்.........தோன்றும்

(இ - ள்.) உவவனம் புகுந்து ஆங்கு உறுதுயில் கொள்ளும் சுதமதி தன்னைத் துயில் இடை நீக்கி - மீண்டும் மணிமேகலா தெய்வம் உவவனத்திலே புகுந்து அவ்விடத்தே மிக்க துயில் கொண்டிருந்த சுதமதியைத் துயிலுணர்த்தி; அஞ்சல் யான் மணிமேகலை இந்நகர் இந்திரகோடணை காண வந்தேன் - சுதமதி அஞ்சாதே கொள்! யான் நும்மோடுறவு கொண்டுள்ள மணிமேகலா தெய்வங்காண்! இப் பூம்புகார் நகரத்தே நிகழாநின்ற இந்திரவிழாக் காண்டற்கு ஈண்டு வந்தேன்!; இளங்கொடிக்கு ஆதிசால் முனிவன் அறவழிப்படூஉம் ஏது முதிர்ந்துளது ஆகலின் - இப்பொழுது இளமையுடைய மணிமேகலைக்குப் புத்த பெருமான் திருவாய் மலர்ந்தருளிய அறநெறியில் ஒழுகுதற்குக் காரணமான பழவினைத் தொகுதி முதிர்ச்சியுற்றுப் பயனளிக்கும் செவ்வி பெற்றிருத்தலாலே; நின்

விளங்கு இழை தன்னை விஞ்சையில் பெயர்த்து ஓர் வஞ்சம் இல் மணிபல்லவத்திடை வைத்தேன் - நின் வளர்ப்பு மகளாகிய மணிமேகலையை என் வித்தையினாலே துயில் கலையாவண்ணம் இவ்விடத்தினின்றும் எடுத்துப்போய் என் காவலிலமைந்தமையின் சிறிதும் வஞ்சச் செயல் நிகழ்தலில்லாத மணிபல்லவம் என்னும் தீவிடத்தே வைத்துள்ளேன்; பண்புற பண்டைப் பிறப்பும் உணர்ந்து - அவள் அவ்விடத்தே நிகழும் தெய்வப் பண்பு எய்துதலாலே அவளுடைய அறிதற்கரிய பழைய பிறப்பின் வரலாற்றையும் உணர்ந்துகொண்டு; ஈங்கு இந்நகர் மருங்கே இன்று ஏழ் நாளில் வந்து தோன்றும் - இந் நாவலம் பொழிலகத்துள்ளே இப் பூம்புகார் நகரத்தின்கண் இற்றைக்கு ஏழா நாள் வான் வழியாக வந்து தோன்றுவள்; என்க.

(வி - ம்.) உறுதுயில் - மிக்கவுறக்கம். இந்திரகோடணை - இந்திர விழா. மணிமேகலை - மணிமேகலா தெய்வம். ஆதிசான் முனிவன் என்றது கௌதம புத்தரை. ஏது - பழவினை. இளங்கொடி: மணிமேகலை. விஞ்சை - வித்தை. மணிபல்லவத் தீவின்கண் அவட்கு ஏதம் சிறிதும் வரமாட்டா தென்பாள், வஞ்சமில் மணிபல்லவம் என்றாள். ஈங்கு - இந் நாவலந் தீவின்கண். நகர் - புகார் நகரம்.

## இதுவுமது

### ௫௫ - ௬௫ : மடக்கொடி..........நன்னாள்

(இ - ள்.) மடக்கொடி நல்லாள் களிப்புமாண் காவல் பேரூர் ஒளித்துரு எய்தினும் உன் திறம் ஒளியாள் - மடப்பமுடைய பூங்கொடி போலும் அழகுடைய அம் மணிமேகலை களித்து வாழ்தற்குப் பெரிதும் மாட்சிமையுடைய செல்வச் செழிப்பும் காவலும் அமைந்த தலைநகரமாகிய இப் பூம்புகாருக்கு அவள் மீண்டும் வரும்பொழுது தனக்குரிய வுண்மையுருவத்தோடு வாராமல் வேற்றுருக் கொண்டே வருவள் காண்! அவ்வாறு அவள் வேற்றுருவில் வந்து ஈண்டுக் கரந்துவருவாளாயினும் தன்னை உனக்கு மறையாமல் உன் திறத்திலே தன்னை வெளிப்படுத்திக் காட்டுவள்; ஆங்கு அவள் இந்நகர் புகுந்த அந்நாள் ஈங்கு நிகழ்வன ஏதும் பலவுள - அவ்வாறு அவள் வேற்றுருவத்தோடு இம் மாநகர் புகுந்த அக்காலத்தே இங்கே நிகழவிருக்கின்ற பழவினை நிகழ்ச்சிகள் பற்பல உள அவை நிகழுங்காண்!; நீ மாதவி தனக்கு யான் வந்த வண்ணமும் மகள் ஏதம் இல் நெறி எய்திய வண்ணமும் - நங்காய்! இவை நிற்க! இனி நீ போய் மாதவியைக் காண்புழி, யான் இந்நகரத்திற்கு வந்த செய்தியையும் என் வாயிலாய் அவள் அருமை மகளாகிய மணிமேகலை குற்றமில்லாத நன்னெறியிலே சென்றுள்ள செய்தியையும்;

உரையாய் - கூறுவாயாக; அவள் என்திறம் உணரும் - அம் மாதவி என் பெயர் கேட்கு மளவிலேயே என்னை இன்னார் என்று உணர்ந்து கொள்ளுவள், எங்ஙனமெனின்; கோவலன் திரை இரும் பௌவத்துத் தெய்வம் ஒன்று உண்டு எனக் கூறிக் கொடியிடை தன்னை என் நாமம் செய்த நல் நாள்-மணிமேகலையின் தந்தையாகிய கோவலன் அலையெறியும் பெரிய கடலிடத்தே எங் குலதெய்வம் ஒன்றுளது என்று என் வரலாற்றை மாதவி முதலியோர்க்கு எடுத்துச் சொல்லித் தன் குழவியாகிய அவட்கு மணிமேகலை என்னும் என் பெயரையே சூட்டிய அந்த நல்ல நாளில்; என்க.

(வி - ம்.) நல்லாள்: மணிமேகலை. களிப்பு - ஈண்டு வாழ்க்கை யின்பம் என்னும் பொருட்டு. பேரூர் - தலைநகரமாகிய பூம்புகார். ஒளித்துரு - வேற்றுருவம். உன்திறம் - உனக்கு. ஆங்கு - அவ்வாறு. அந்நாள் என்றது அக்காலத்தே என்பதுபட நின்றது. ஏது நிகழ்ச்சி - பழவினை விளைவுகள். தெய்வமாகலின் எதிர்காலத்து நிகழ்ச்சிகளாகிய உதயகுமரன் கொலையுண்ணல் முதலியவற்றைக் கருதி ஏதுநிகழ்ச்சி பலவுள என்று கூறுகின்றது. யான் வந்த வண்ணம் என்றது மணிமேகலா தெய்வமாகிய யான் வந்த வண்ணமும் என்பதுபட நின்றது.

இனி, சுதமதி, மாதவி இத் தெய்வத்தை அறியாளாகலின் தெய்வத்தால் எடுத்துப் போகப்பட்ட தன்மகட்கு என்னுறுமோ? என்று அஞ்சுதல் இயல்பாதல் பற்றிச் சொல்லாது விடுவாளாதலின், அத் தெய்வம் என்பெயர் கேட்குமளவிலேயே மாதவி என்னை அறிந்து கொள்வாள். மேலும் தன் மகட்கு ஏதம் சிறிதும் நிகழமாட்டாதென்று ஆறுதலும் அடைகுவள்; ஆதலால் நீ இவற்றை அஞ்சாது அவட்குக் கூறுக என்று தெளிவித்தற் பொருட்டு இக் கருத்தெல்லாம் அடங்க, "அவள் என்றிறம் உணரும்" என்று கூறும் நுணுக்கம் உணர்க. பின்னும் அவள் அறிந்தமை எவ்வாறு என்னும் ஐயம் சுதமதிக்குப் பிறக்கு மாகலின் அவ்வையம் அகற்றுதற்கு அவ் வரலாற்றையும் அறிவித்தல் வேண்டிற்று.

மணிமேகலைக்குப் பெயர் சூட்டிய நாளில் கோவலன் எங்குல தெய்வம் ஒன்றுளது, அதன் பெயரையே இக் குழவிக் கிடுக என்று என் பெயரை இடுவித்த பொழுது என் வரலாற்றையும் மாதவி முதலி யோர்க்குக் கூறினன்; இவ்வாற்றால் மாதவி என்னை அறிகுவள் என்றவாறு.

இனி, ஈண்டுக் கூறும் இச் செய்தியை—

"மாந்தளிர் மேனி மாதவி மடந்தை
பால்வாய்க் குழவி பயந்தன ளெடுத்து
வாலா மைந்நா ணீங்கிய பின்னர்
மாமுது கணிகையர் மாதவி மகட்கு
நாம நல்லுரை நாட்டுது மென்று
தாமின் புறூஉந் தகைமொழி கேட்டாங்

இடையிருள் யாமத் தெறிதிரைப் பெருங்கடல்
உடைகலப் பட்ட வெங்கோன் முன்னாள்
புண்ணிய தானம் புரிந்தோ னாகலின்
நண்ணுவழி யின்றி நாள்சில நீந்த
இந்திரன் ஏவலின் ஈங்கு வாழ்வேன்
வந்தே னஞ்சன் மணிமே கலையான்
உன்பெருந் தானத் துறுதி யொழியாது
துன்ப நீங்கித் துயர்க்கடல் ஒழிகென
விஞ்சையிற் பெயர்த்து விழுமந் தீர்த்த
எங்குல தெய்வப் பெயரீங் கிடுகென
அணிமே கலையார் ஆயிரங் கணிகையர்
மணிமே கலைஎன வாழ்த்திய ஞான்று
மங்கல மடந்தை மாதவி தன்னொடு
செம்பொன் மாரி செங்கையிற் பொழிய
..............................கருணை மறவ!''

எனவரூஉம் சிலப்பதிகாரத்து, அடைக்கலக் காதையில் (உஉ-இரு) மாடல மறையோன் கூற்றானும் உணர்க.

மாதவிக்கு யான் நேரிலே தோன்றியும் உவகை கூறியுளேன்;
ஆதலின் அவள் அறிகுவள் என்று அத் தெய்வம் கூறுதல்

௩௫ - ௪௦ : நள்ளிருள்..........போயபின்

(இ - ள்.) நள் இருள் கனவு அகத்தே நனவு போல - செறிந்த இருளையுடைய இடையாமத்தே துயிலிலாழ்ந்திருந்த அம் மாதவியின் கனவிலே நனவிலே தோன்றுமாறு போல அவள் நன்குணர்ந்து கொள்ளும்படி உருவங் கொண்டு தோன்றி; காமன் கை அறக் கடுநவை அறுக்கும் மாபெருந் தவக்கொடி ஈன்றனை என்றே உரைத்தேன் - நங்காய்! காம வேளின் குறும்பு தன்பாற் செல்லாமையாலே கையறவு கொள்ளும்படி பெருந் துன்பத்திற் கெல்லாம் பிறப்பிடமாகிய பிறவிப் பிணியை அறுத் தொழிக்கும் மிகப் பெரிய நோன்புகளாகிய நறுமண மலர்களைப் பூத்தற் கியன்றதொரு தெய்வப்பூங்கொடியையே நீ பெற்றுள்ளனை நீடூழி வாழ்க! என்று அவளை வாழ்த்தியுமிருக்கின்றேன்; ஈங்கு இவ்வண்ணம் ஆங்கு அவட்கு உரை என்று - ஈங்கு இப்பொழுது கூறுகின்ற இந் நிகழ்ச்சியையும் நீ ஆங்கு அவள்பாற் சென்று கூறக்கடவை என்று சுதமதிக்குப் பணித்து; அருந்தெய்வம் ஆங்கு அந்தரத்து எழுந்து போயபின் - காண்டற்கரிய அம் மணிமேகலா தெய்வம் அப்பொழுதே அவள் கட்புலங் காண விசும்பிலே எழுந்து மறைந்து போனபின்பு; என்க.

(வி - ம்.) நள்ளிருள்-என்றது மாதவி துயிலில் ஆழ்ந்திருந்த இடையாமம் என்பதுபட நின்றது. காமன் கையற என்றது - காமன் தன் செயலில் இவள்பால் தோல்வியுற்று வருந்த என்பதுபட நின்றது. இனி இவள் துறவுபூணுவதால் தன் வெற்றிக்கு இனி இவள் துணையாகாள் என்று காமன் கையறவு கொண்டான் என்பது மொன்று. கடுநவை என்றது பிறப்பினை. நோன்பாகிய மலர்களை மலரும் பூங்கொடி போல்வாள் என்க.

> ''எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
> பண்புடை மக்கட் பெறின்'' (குறள்-சுஉ)

என்பதும்,

> ''தம்மிற் றம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
> மன்னுயிர்க் கெல்லா மினிது'' (குறள்-சுஅ)

என்பதும் கருதி மாதவி மகிழுமாற்றால் மணிமேகலா தெய்வம் அத்தகு மகவினைப் பெற்றாய் எனப் பாராட்டற் பொருட்டு ''மாபெருந்தவக் கொடியீன்றனை'' என ஓகை கூறினேன் என்று சுதமதிக்குக் கூறிய படியாம். கனவிற் பெரும்பாலன விழிப்புற்ற பின்னர்த் தெளிவாகத் தோன்றா அத்தகைய கனவன்று, அவள் நெஞ்சில் அழியாது பதிவுற்றிருக்கும் கனவு என்பது தோன்ற நனவே போலக் கனவகத் துரைத்தேன் என்றது. யான் ஈங்குக் கூறிய இந் நிகழ்ச்சியை நான் கூறியவாறே கூறிக் காட்டுக என்பதற்கு ஈங்கிவ் வண்ணம் ஆங்கவட்குரை என்று பணித்தது எனலுமாம்.

### சுதமதி துயரொடு சக்கரவாளக் கோட்டம் புகப்போதலும்
### புகார் நகரத்து நள்ளிரவு வண்ணனையும்

**(சஉ ஆம் அடி முதலாக அசு ஆம் அடி முடியுந் துணையும் நள்ளிரவின் வண்ணனையாம் ஒரு தொடர்)**

சக - சகூ : **வெந்துயர்..........திரியவும்**

(இ - ள்.) **சுதமதி வெம்துயர் எய்தி ஆங்கு எழுந்து** - சுதமதி மணிமேகலையின் பிரிவாற்றாமையாலுண்டான வெவ்விய துன்பத்தை எய்தி அம் மலர்ப்பொழிலின்கண் அவ்விடத்தினின்றும் எழுந்து செல்பவள்; **அகல் மனை அரங்கத்து ஆசிரியர் தம்மொடு வகை தெரி மாக்கட்கு வட்டணை காட்டி** - அகன்ற தமதில்லத்திலே இயற்றப்பட்ட ஆடலரங்கத்திலே அக் கலைப் பயிற்சி செய்விக்கும் இயலாசிரியனும் ஆடலாசிரியனும் யாழாசிரியனும் குழலோனும் தண்ணுமையோனுமாகிய ஆசிரியரோடிருந்து ஆடற்கலையின் வகைகளைப் பயின்று கொள்ளும் மக்கட்கு வட்டணை முதலிய அபிநய வகைகளை யெல்லாம்

செய்து காட்டி; ஆடல்புணர்க்கும் அரங்கு இயல் மகளிரின் - ஆடல் கலையைப் பயிற்றுவிக்கின்ற அரங்கத்தே ஆடும் மகளிர் அத் தொழிலை நிறுத்திக் கண் முகிழ்த்துத்துயிலுதல் போன்றே; கூடிய குயிலுவக் கருவி கண் துயின்று - அவ்வாடன் மகளிரோடு கூடி முழங்கிய, குழல் முதலிய குயிலுவக் கருவிகளும் தத்தம் கண்ணவிந்து வாளாது கிடப்பவும்; பண்ணுக்கிளை பயிரும் பண் யாழ்த் தீந்தொடை கொளைவல் ஆயமோடு இசை கூட்டு உண்டு - பண்களையும் திறன்களையும் நன்கிசைக்கின்ற பண்ணுறுத்தப்பட்ட இனிய ஒலிகளையுடைய நரம்புகளை வருடிப் பண்பாடுதலில் வல்ல மகளிரோடே கூடியிருந்து யாழிசையும் மிடற்றுப் பாடலும் பிறவும் ஆகிய இசையின்பங்களை இனிது நுகர்ந்து பின்னர்; வளைசேர் செங்கை மெல்விரல் உறைத்த வெம்மை வெய்து உருது தன்மையில் திரியவும் - துயில் மயக்கத்தால் மகளிர் வளையணிந்த சிவந்த தம்முடைய கைவிரலாலே மெல்லென வருடிய நரம்புகள் வெப்பம் வேண்டுமளவு வெய்தாக உறாமையாலே தளர்ந்து அவற்றிலெழும் இசை தன் தன்மையில் பிறழா நிற்பவும் என்க.

(வி - ம்.) ஆசிரியர் - ஆடற்கலைக் கின்றியமையாத குழலாசிரியர் முதலியோர். வட்டணை - வர்த்தனை; கமலவர்த்தனை. அஃதாவது கைத்தலங் காட்டல். இதனை, ''தோற்பொலி முழவும் யாழுந் துளைபயில் குழலு மேங்கக் காற்கொசி கொம்புபோலப் போந்து கைத்தலங்கள் காட்டி'' எனவரும் சிந்தாமணிக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் ''வலக்கால் முன் மிதித்தேறி வலத்தூணைச் சேர்ந்து கைத்தலங் காட்டுதல் கமலவர்த்தனை'' என்னும் விளக்கவுரையானு முணர்க. மாக்களை என்பதற்கு முதனீண்டதெனக் கொண்டு தம்மக்கட்கு எனக் கொள்க. ஆடற்கலையைக் கற்பிக்கும் மகளிர் என்க. குயிலுவக் கருவி குழல் முதலிய இசைக் கருவிகள். இதனை, ''கூடிய குயிலுவக் கருவிக ளெல்லாம் குழல் வழி நின்ற தியாழே யாழ் வழித் தண்ணுமை நின்றது தகவே, தண்ணுமைப் பின் வழி நின்றது முழவே முழவொடு கூடிநின் றிசைத்த தாமந் திரிகை'' என்பதனானுமுணர்க. (சிலப். ௩ : ௧௩௮ - ௧௪௨) பண்ணும் கிளையும் என்க. கிளை - திறம். கொளை - பண். துயில் மயக்கத்தாலே மெல்விரலால் மெல்ல வருடலின் நரம்பில் வெப்பம் வெய்தாக உருதாக ஒலி தன்மையில் திரியவும் என்க.

### இதுவுமது

#### ௫௦ - ௫௧ : பண்பில்.........வதியவும்

(இ - ள்.) பண்பு இல் காதலன் பரத்தமை நோனாது - தமது பாடறிந்தொழுகும் பண்பற்றவராகிய தம் காதலர் பரத்தையரோடு கூடியொழுகும் ஒழுக்கத்தைப் பொறாத குலமகளிர்; உண் கண் சிவந்து - அவர்பா லெழுந்த சினத்தாலே தம் மையுண்ட கண்கள் சிவக்கப் பெற்று; தெருட்டவும் தெருளாது ஊடலொடு துயில்வோர் - தம் கணவர் தம் பள்ளியிடத்தே

வந்து தமது குற்றமின்மையைக் கூறி ஊடலுணர்த்தா நிற்பவும் ஊடல் தீராதாராய்ப் பொய்த்துயில் கொள்பவர்; விரைப் பூம்பள்ளி வீழ்துணை தழுவவும் - தம் சினத்திற்கஞ்சி மணமலர் பரப்பிய அப் பள்ளியிலே ஒரு புறத்தே கிடக்கின்ற தம்மால் விரும்பப்படும் அக் காதலரைத் துயில் மயக்கத்தாலே தழுவுவார் போலத் தழுவிக் கொள்ளவும் என்க.

(வி - ம்.) காதலன் பரத்தமை நோனாது துயில்வோர் என்றது ஒருமைப் பன்மைமயக்கம். இதனை, "அஃதை தந்தை அண்ணல் யானை அடுபோர்ச் செழியர்" என்புழிப் போலக் கொள்க.

ஊடலொடு பொய்த்துயில் கொள்வோர், தம் ஆற்றாமையால் தம் மருகே அஞ்சிக் கிடக்கும் காதலரைத் துயில் மயக்கத்தாலே தம்மை யறியாது தழுவுவார் போலத் தழுவவும் என்க. என்னை? குலமகளிர்க்குத் தங் காதலர் பரத்தைமை நோனாது கடிந்தொழுகல் கூடாமையான் இங்ஙனம் உபாயத்தால் தழுவினர் என்க. இதனை—

"சேக்கை இனியார்பாற் செல்வான் மனையாளால்
காக்கை கடிந்தொழுகல் கூடுமோ கூடா"

எனவரும் பரிபாடலினுங் காண்க. (பரி-௨0-அகூ-எ).

### இதுவுமது

௫௪ - ௬௨ : தளர்நடை.........நடுநாள்

(இ - ள்.) தளர் நடை ஆயமொடு தங்காது ஓடி விளையாடு சிறு தேர் ஈர்த்து - தளர்ந்த நடையையுடைய சிறுஅர் கூட்டத்தோடு கூடி ஓரிடத்தும் தங்கி இளைப்பாறுதலின்றி ஓடுதலைச் செய்து தாம் விளையாடுதற்கியன்ற சிறிய தேர்களை இழுத்து; மெய் வருந்தி-உடல் வருந்தி; அமளித் துஞ்சும் ஐம்படைத்தாலிக் குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்க்கு-அவ் வருத்தம் தீரப் பஞ்சணைமிசை ஆழ்ந்து துயில்கொண்டுள்ள ஐம்படைத்தாலி என்னும் பிள்ளைப் பணி பூண்டுள்ள மழலை பேசுகின்ற சிவந்த வாயையும் குறுகுறு நடக்கும் நடையையுமுடைய மக்களுக்கு; காவல் பெண்டிர் கடிப்பகை எறிந்து தூபம் காட்டித் தூங்கு துயில் வதியவும் - செவிலித் தாயர் ஐயவியைத் தூவி அகிற்புகை காட்டிய பின்னர் அவர் பக்கலிலே தாமும் மிக்க துயிலிலே ஆழ்ந்து கிடப்பவும்; இறை உறை புறவும் நிறை நீர்ப்புள்ளும் கா உறை பறவையும் - இல்லிறப்பிலே தங்குகின்ற புறாக்களும் நிறைந்த நீர் நிலைகளிலே மலரின் மேலுறைகின்ற பறவைகளும் பொழிலிலே உறைகின்ற பறவைகளும்; நாஉள் அழுங்கி - தத்தம் நாஅலகினூடே அழுங்கி ஒலியவிந்து தங்கியிருப்பவும்; விழவுக்

களி அடங்கி முழவுக்கண் துயின்று பழவிறல் மூதூர் பாயல் கொள் நடுநாள் - விழாவின் மகிழ்ச்சியாரவாரமும் அடங்கி முழவு முதலிய இசைக் கருவிகளும் தம் கண்களில் ஒலியெழாது அவிந்து கிடப்பவும் பழைதாகிய வெற்றியையுடைய முதுமையுடைய அப் பூம்புகார் நகரமே இவ்வாறு பள்ளி கொண்டிருக்கின்ற இரவின் நடுயாமத்தே; என்க.

(வி - ம்.) தளர்நடை ஆயம் என்றது இளஞ்சிருஅர் கூட்டத்தை அவர் ஆடும் பொழுது இளைப்பாற வேண்டும் என்று கருதி ஓரிடத்தும் தங்கியிருத்தலில்லை, இஃதவரியல்பு ஆகலின் தங்காது ஓடி என்றார்.

தேரில் ஏறி யின்புறுதற்கு மாறாக இவர் தேரினை ஈர்த்தலிலேயே பேரின்பம் எய்துவர், விளையாட்டினாலே மெய்வருந்திய வருத்தம் தீர இவர் பள்ளியில் ஆழ்ந்து துயிலுவர். இவர்க்குக் காவற் பெண்டிர் எறிந்து காட்டிப் பின் தாமும் துயில என்க. காவற் பெண்டிர் - செவிலித்தாயர். தூங்குதுயில் - மிக்கதுயில். கடிப்பகை - ஐயவி; வெண்சிறு கடுகு. ஐம்படைத்தாலி - திருமாலின் சங்கு முதலிய ஐந்து படைகளையும் பொன்னாற் செய்து கோத்ததொரு பிள்ளைப்பணி. திருமால் காவற் கடவுளாதலின் மக்களைக் காத்தற் பொருட்டு அணிவது இவ் வைம்படைத்தாலி என்க.

இறை - இறப்பு. புறவு - புறா, நீர்ப்புள் - நீரில் வாழுமியல்புடைய பறவைகள். பறவைகள் துயிலுங் காலத்தே மிகவும் ஆழ்ந்து துயில்வன ஆதலின் அவ்வியல்பு தோன்ற நாவுள்ளழுந்தி என்றார். அழுந்தித் துயிலவும் அடங்கித் துயின்றும் மூதூர் பாயல்கொள் நடுநாள் என்க.

### நள்ளிரவில் அந் நகரத்துள் நிகழும் நிகழ்ச்சிகள்

**௬௪ - ௭௬ : கோமகன்.........அரவமும்**

(இ - ள்.) கோமகன் கோயில் குறுநீர்க் கன்னலின் - சோழமன்னனுடைய அரண்மனையின்கண் நாழிகை வட்டிலின் உதவியாலே; யாமங் கொள்பவர் ஏத்தொலியரவமும் - பொழுதினை அளந்து காணும் கணிமாக்கள் அரசனை வாழ்த்தும் பாடலோடு தாங்கண்ட பொழுதினை நகரத்துள்ளார்க்கு அறிவிக்கின்ற அரச வாழ்த்துப் பாடலாகிலெழுகின்ற ஒலியும்; உறையுள் நின்று ஒடுங்கிய உண்ணா உயக்கத்து நிறை அழி யானை நெடுங் கூவிளியும் - கட்டப்பட்டிருக்கின்ற கொட்டிலினூடேயே நின்று கவளமும் கொள்ளாமையாலுண்டான மெய் வருத்தத்தோடே காம மிகுதியாலே நெஞ்சத்தின்கண் நிறையழிந்து யானைகள் தத்தம் காதற் றுணையைக் கருதி நீளிதாகப் பிளிறுகின்ற பிளிற்றொலியும்; தேர் வழங்கு தெருவும் சிற்றிடை முடுக்கரும் - தேரோடுதற்குரிய பெருந் தெருக்களிடத்தும் சிறிய வழியாகிய முடுக்குகளிடத்தும்; ஊர் காப்பாளர் எறி துடி யோதையும் - நகரங்காக்கும் காவலன் மறவர்

முழக்கும் துடியும் முழக்கமும்; முழங்கு நீர் முன் துறைக் கலம் புணர் கம்மியர் - ஆரவாரிக்கின்ற கடற்றுறையிடத்தே மரக்கலம் இழைக்கின்ற கம்மத் தொழிலாளர்; துழந்து அடுகள்ளின் தோப்பியுண்டு அயர்ந்து பழஞ் செருக்கு உற்ற அனந்தல் பாணியும் - தம்மில்லத்திலேயே துழாவிச் சமைத்த நெல்லா லியன்ற கள்ளைப் பருகித் தம்மை மறந்து முதிர்ந்த செருக்குடனே அக் கள் மயக்கத்தாலே பாடுகின்ற பாடலோசையும்; அரவாய்க் கடிப்பகை ஐயவிக் கடிப்பகை விரவிய மகளிர் ஏந்திய தூமத்து - அரம் போன்ற வாயினையுடைய வேப்பிலையாகிய பேய்ப் பகையினையும் வெண்சிறு கடுகாகிய பேய்ப்பகையினையும் விரவியிட்ட தூபக்காலை மகளிர் கையிலேந்திய புகையினோடும் வந்து; புதல்வரைப் பயந்து புனிறு தீர் கயக்கம் தீர்வினை மகளிர் - மகவீன்றமையால் வாலாமையுடைய அணுமைக் காலம் தீர்ந்து தாயராகிய மகளிர் ஈனுதலாலெய்திய கயக்கத்தை நீராடுதலாலே தீர்க்கின்ற தொழிலையுடைய குலமகளிர்; குளன் ஆடு அரவமும் - பிறர் தம்மை நோக்காமைப் பொருட்டு அவ்விடையிருள் யாமத்தே குளத்தின்கண் நீராடுதலாலே எழுகின்ற ஒலியும் என்க.

(வி - ம்.) கோமகன் : சோழமன்னன். கோயில் - அரண்மனை. குறுநீர்க் கன்னல் - காலத்தை அளந்து காண்டற்குரியதொரு கருவி. அஃதாவது ஒரு வட்டிலின்கண் நீரை நிரப்பி அதன் அடியில் மிகச்சிறிய தொரு துளையமைத்து அத் துளை வழியாக நீர் வடியும் பொழுதினை நொடி நாழிகை முதலிய காலக் கூறுபாடாக அறிதற்கு வரையிட்டுப் பொழுதினை அளந்து காண்டல். இதனை—

"பொழுதளந் தறியும் பொய்யா மாக்கள்
தொழுது காண்கையர் தோன்ற வாழ்த்தி
எறிநீர் வையகம் செலீஇய செல்வோய்நின்
குறிநீர்க் கன்னல் இனைத்தென் றிசைப்ப"

எனவரும் முல்லைப் பாட்டானும் (௫௫-௫௮) அறிக.

யாமங் கொள்பவர் - நாழிகைக் கணக்கர். "அவர் அரசனுக்குச் சென்று நாழிகைக்குக் கவி சொல்லுவார்" எனவும்,

"பூமென் கணையும் பொருசிலையும் கைக்கொண்டு
காமன் திரியும் கருவூரா—யாமங்கள்
ஒன்றுபோ யொன்றுபோ யொன்றுபோய் நாழிகையும்
ஒன்றுபோ யொன்றுபோய் ஒன்று"

என்றோர் எடுத்துக் காட்டும் தந்தனர் அடியார்க்கு நல்லார் (சிலப்-௫: ௪௯ - உரை விளக்கம்).

உறையுள் - யானைக் கொட்டில். காமக்குணம் மேலிட்டிருத்தலால் கவளங் கொள்ளாது உடம்பு மெலிந்து வருந்தும்யானை, விறையழியானை எனத் தனித்தனி கூட்டுக.

துடி - ஒருவகைத் தோற் கருவி. கலம் புணர் கம்மியர் என்றது மரக்கலஞ் செய்யும் கம்மாளரை. இனி மரக்கலத்தில் சேர்ந்து தொழில் செய்வோருமாம். துழந்தடுதல் - துடுப்பினாலே துழாவிச் சமைத்தல். தோப்பி - நெல்லாற் சமைத்த ஒருவகைக் கள். "இல்லடுகள்ளின் தோப்பி பருகி' எனவரும் பெரும்பாணாற்றுப் படையும் நோக்குக (கசஉ). செருக்கு - ஈண்டுக் கள்ளினா லெய்திய வெறி. அது தானும் நெடுங்கால மாகப் பயின்று முதிர்ந்த வெறி யென்பார், பழஞ்செருக்கு என்றார். அனந்தர் - மயக்கம். எனவே வாய்தந்தன பாடும் பாட்டு என்க. பாணி - பாட்டு. அரவாய் - வேப்பிலை: அன்மொழித்தொகை. ஐயவி - வெண்சிறு கடுகு. கடிப்பகை - பேய்ப்பகை. அஃதாவது பேய் அஞ்சி யகலுதற்குக் காரணமாதலின் அதற்குப் பகையாகிய பொருள் என்றவாறு. புனிற்று மகளிராதலின் இருவகைக் காப்பும் வேண்டிற்று. கயக்கம் என்றது மகப்பேற்றால் உண்டான பொலிவழிவினை.

மகவீன்ற சில நாளில் அக் கயக்கம் தீர்தற்கு நீராடி ஒப்பனை செய்தற்கேற்றதாக உடம்பு சீர்படும் அன்றோ, அத்தகைய செவ்வியைப் புனிறு தீர்ந்த செவ்வியாகக் கோடல் மரபு. அங்ஙனஞ் செவ்வியுறுதற்கு ஒன்பது நாட்கள் வேண்டும். பத்தா நாளிரவிற் சென்று குளிர்ந்த நீராடி வாலாமை கழிப்பர் எனக் கூறும் நூல் உளது என்பர் அறிஞர். இவ்வாறு நீராடும் வழக்கத்தை—

"கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து
பணைத்தேந் திளமுலை யமுத மூறப்
புலவுப்புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு
வளமனை மகளிர் குளநீ ரயர"

எனவரும் மதுரைக் காஞ்சியானும் (சு00-சு0க) உணர்க. குளன்:போலி.

இதுவுமது

எஎ - அஎ: வலித்த.........கலங்கி

(இ - ள்.) வலித்த நெஞ்சின் ஆடவர் அன்றியும் - தம்முள் ஒருவரோடொருவர் பகை கொண்டு கறுவு கொண்ட நெஞ்சினை யுடைய பகை மறவர் யாருமில்லாதிருந்தும்; புலிக்கணத்து அன்னோர் பூத சதுக்கத்து - புலிக்கூட்டத்தையே ஒத்தவராகிய அந்நகரத்து மறக்குடிப் பிறந்த போர் வீரர்கள் பூத சதுக்கம் என்னுமிடத்திற்குத் தாமே வந்து; கொடித்தேர் வேந்தன் கொற்றம் கொள்க என - புலிக்கொடி யுயர்த்திய தேரையுடைய நங்கள் சோழ மன்னன் சென்ற போர்தொறும் வென்றியே கொள்வானாக என்று பராவி; இடிக்குரல் முழக்கத்து இடும்பலி ஓதையும் - இடி போன்று முழங்கும் வீர முரசமுழக்கத்தோடே சதுக்கப்பூதத்திற்குத் தம்முயிரைத் தாமே வழங்குகின்ற ஆரவார மும்; ஈற்றிளம் பெண்டிர் ஆற்றாப் பாலகர் கடுஞ்சூல் மகளிர் நெடும்புண் உற்றோர் தம் துயர் கெடுக்கும் மந்திரமாக்கள் -

மகவீன்ற இளமகளிரும் துன்பம் பொருத பால்வாய்ச் சிறு குழவிகளும் தலைச் சூல் உற்றிருக்கின்ற மகளிரும் நெடிய புண் பட்டு வருந்துவோரும் ஆகிய இத்தகையோர் பேய் முதலியவற்றா னும் பிணியானும் எய்திய துன்பத்தைத் தீர்த்தற் பொருட்டு மந்திரம் பண்ணும் மந்திரவாதியர்; மன்றப் பேய்மகள் வந்துகைக் கொள்கென வின்று எறி பலியின் நெடுங்குரல் ஓதையும் - வாகை மன்றத்திலே வதிகின்ற பேய்த்தலைவி வந்து யாம் தருகின்ற ஆடு கோழி முதலியவற்றின் குருதிப் பலியை ஏற்றருள்கவென்று அப்பேயை வண்ணித்துப் பாடிக் கூவி அழைக் கின்ற நெடிய அழைப்பாரவாரமும்; பல்வேறு ஓதையும் பரந்து ஒருங்கு இசைப்பக் கேட்டு உளங் கலங்கி - நரியின் ஊளையும் நாயின் குரைப்பும் ஆகிய இன்னோரன்ன பிற ஆரவாரங்களும் திசையெலாம் பரவி ஒருங்கே கேட்கும் பேராரவாரத்தைக் கேட்டு நெஞ்சம் அச்சத்தாலே கலங்கி; என்க.

(வி - ம்.) பகைவர் இல்லாத காலத்தேயும் மன்னவன் கொற்றம் நாளும் நாளும் உயர்க என்று வீரமறவர் தம் முயிரையே தெய்வத் திற்குப் பலியிடும் வழக்க முண்மையை,

> "ஆர்த்துக் களங்கொண்டோர் ஆரம ரழுவத்துச்
> சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை
> வெற்றி வேந்தன் கொற்றங் கொள்கென
> நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்
> குயிர்ப்பலி யுண்ணும் உருமுக்குரன் முழக்கத்து
> மயிர்க்கண் முரசமொடு வான்பலி யூட்டி"

எனவரும் சிலப்பதிகாரத்தானும் (டு: அ௭ - அ) உணர்க. இதனை அவிப்பலி என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார். இது வீரச்சுவை: அவிப் பலி செய்வோர் பலிக்கும் வலிக்கும் தலைவரம்பாயோர் என்னும் மாபெரும் புகழ்க்குரியோர் என்ப.

ஈற்றிளம் பெண்டிர் முதலியோர் பிணி முதலியவற்றிற்கியன்ற மருந்துண்ணவும் பத்தியங் காக்கவும் வலியற்றவர் ஆவர். இவர்க்கு மனவலியும் இன்மையின் பேயாலே எளிதிற் பற்றப்படுவர். ஆதலின் இவர் துயர் மந்திர மாக்களாலேயே தீர்க்கப்படும்; ஆதலால் இத்தகை யோரைத் தனியே வாங்கி எண்ணினர். இச் செயல் தமக்குடன்பாடன் மையின் மந்திர மாக்கள் என்றார். என்னை? உயிர்க் குயிரீதல் மடமை என்பாள் சம்பாபதி—

> "கொலை அறமாமெனும் கொடுந்தொழி லாளர்
> அவலப் படிற்றுரை ஆங்கது"

என முன்னைக் காதையில் (௧௬௨ - ௧௬௩) அறிவுறுத்துதலும் நினைக.

மன்றம் - வாகைமன்றம். "காய்பசிக் கடும்பேய் கணங்கொண் டுண்டு மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும்" என முன்னும்கூறினமை (சக்கர. அ௨ - அ௩) நினைக.

நின்றெறி பலி என்றது ஆடு கோழி முதலியவற்றின் குருதியிற் குழைத்த சோற்றினை வானத்தே எறியும் பலி என்றவாறு. இவ்வோசையெல்லாம் சுதமதி கேட்டுக் கலங்கி என்க.

### சுதமதி உலக வறவியிற் புகுதல்

அஎ - கூஉ : ஊட்டிருள்..........இருத்தலும்

(இ - ள்.) முருந்து ஏர் இளநகை ஊட்டு இருள் அழுவத்து பூம்பொழில் நீங்கி - முருந்து போன்ற கூர்த்த வெள்ளிய பற்களையுடைய அச் சுதமதியானவள் காரரக்கின் குழம்பினை ஊட்டினாற் போன்று பெரிதும் இருண்டுகிடக்கும் பரப்பினையுடைய அந்த உவவனமாகிய பூம்பொழிலினின்றும் நீங்கி; திருந்து குடபால் எயில் சிறுபுழை போகி - அழகிய மேற்றிசைமதிலி னமைந்த சிறிய வாயிலிற் புகுந்து சென்று; மிக்க மா தெய்வம் வியந்து எடுத்து உரைத்த சக்கரவாளத்து ஆங்கண் - மிகவும் சிறந்த அருளுடைய பெரிய மணிமேகலா தெய்வம் வியந்து எடுத்துக் கூறிய சக்கரவாளக் கோட்டத்தே ஆங்கோரிடத்தே; பலர் புகத் திறந்த பகுவாய் வாயில் – வருவோர் பலரும் புகுதற் பொருட்டுத் திறந்தே கிடக்கின்ற பிளந்தவாய் போன்ற வாயிலிற் புகுந்து; உலக வறவியின் ஒருபுடை இருத்தலும் - உலக வறவி என்னும் ஊரம்பலத்தே ஒரு பக்கத்திலே அமர்ந்திருத்தலும்; என்க.

(வி - ம்.) அருளுடைமைபற்றி மணிமேகலா தெய்வத்தை மிக்க மா தெய்வம் என்றார். பகுவாய் - பிளந்த வாய். வாய் போன்ற வாயில் என்க. உலகவறவி - பூம்புகார் நகரத்துப் பெரியதோர் ஊரம்பலம். அஃதுலகத்துள்ள மாந்தர்க் கெல்லாம் பொதுவிடம் என்பது புலப்பட அதற்கு அப் பெயர் இடப்பட்ட தென்க.

### கந்திற்பாவை சுதமதியை விளித்தல்

கூச - கூ௰ : கந்துடை.........கேளாய்

(இ - ள்.) நெடுநிலை உடைக் கந்து அந்தில் - நெடிதாக நிற்கும் நிலையினையுடைய தூணாகிய அவ்விடத்தே; காரணம் காட்டிய எழுதிய அற்புதப் பாவை - பண்டு மயன் என்பான் வருபவர் பிறப்பிற்குக் காரணமாகிய அவருடைய முற்பிறப்பு முதலியவற்றை அறிவித்தற் பொருட்டியற்றிய வியத்தகு படிமத்திலே உறைகின்ற தெய்வம் ஒன்று; மைத்தடங் கண்ணாள் மயங்கியருள் வெருவ - அச் சுதமதி பின்னும் அவ்விருளில் மயங்கி அஞ்சும்படி; திப்பியம் உரைக்கும் தெய்வக்கிளவியின் - இறந்த கால எதிர்கால நிகழ்ச்சிகளைக் கூறுகின்றதெய்வத்தன்மையுடைய தனக்குரிய தெய்வ மொழியாலே பேசத் தொடங்கி; இரவி வன்

மன் ஒரு பெருமகளே துரகத்தானைத் துச்சயன் தேவி - இரவி வன்மன் என்பவனுடைய ஒப்பற்ற பெருமையுடைய மகளே! குதிரைப்படை மிக்க துச்சயன் என்பவனுடைய மனைவியே!; தயங்கு இணர்க்கோதை தாரை சாவு உற - விளங்குகின்ற மலர் மாலையணிந்த நின் தமக்கையாகிய தாரை என்பாள் பொறுக்க இல்லாது இறந்தொழியும்படி; மயங்கி யானை முன் மன்னுயிர் நீத்தோய் - மயக்கமுற்று யானை முன் சென்று நிலைபெற்ற உயிரை விட்டவளே!; காராளர் சண்பையில் கௌசிகன் மகளே - காராளர் மிக்கு வாழ்கின்ற சண்பை மாநகரத்தேயுறையும் கௌசிகன் என்னும் பார்ப்பனன் மகளே! மாருத வேகனொடு இந்நகர் புகுந்து தாரை தன்னொடு கூடிய வீரையாகிய சுதமதி கேளாய் - மாருதவேகன் என்னும் விச்சாதரன் கைபற்றினமையாலே அவனோடு இப்பூம்புகார் நகரத்தே வந்து தாரையாகிய நின் தமக்கை மாதவியோடு கூடி யுறைகின்ற வீரையாகிய சுதமதியே! ஈதொன்று கேட்பாயாக! (என்று விளித்து முன்னிலைப்படுத்தி) என்க.

(வி - ம்.) நெடுநிலை உடைக்கந்து அந்தில் என மாறிக் கூட்டுக. காரணம் - இப் பிறப்பிற்குக் காரணமான பழம்பிறப்பு. காட்டிய: செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; காட்ட என்க. மயன் எழுதிய பாவை, அற்புதப் பாவை எனத் தனித்தனி கூட்டுக. மைத் தடங் கண்ணாள் என்றது சுதமதி என்னும் பெயராந்துணை. மயங்கி வெருவ என்க. திப்பியம் - தெய்வத் தன்மையான செய்தி. அஃதாவது, பழம்பிறப் புணர்த்துதல் எதிரது கூறல் முதலியன. தெய்வக்கிளவி - தெய்வத்திற் கியன்ற மொழி. அஃதாவது வாயாற் கூறுமல் வானொலி மாத்திரையாகவே கூறுதல்.

இரவிவன்மன் - அசோதர நகரத்து அரசன். சுதமதியின் முற்பிறப்பில் அவட்குத் தந்தையானவன்.

துச்சயன் - சுதமதியின் முற்பிறப்பிற் கணவனுயிருந்தவன். இவன் கச்சய நகரத்து மன்னன்.

தாரை - சுதமதியின் முற்பிறப்பிலே அவளுக்குத் தமக்கையாயிருந்தவள். வீரை என முற்பிறப்பிற் பெயர் பெற்றிருந்த சுதமதி, யானையாலறையுண் டிறந்தாள்; அது பொறுமல் தாரை தானே உயிர் விட்டாள் என்பது கருத்து.

சண்பை - சீகாழி. அங்க நாட்டிலுள்ள சம்பா நகரம் என்பாருமுளர். மயங்கி - கள்ளால் மயங்கி என்பதுபட நின்றது. தாரை மறுபிறப்பில் மாதவியாகப் பிறந்தாள்; வீரையாகிய நீ சுதமதியாகப் பிறந்து அவளோடு கூடினை என்றறிவித்தபடியாம்.

இனி, அன்புக் கேண்மை கொண்டு வாழ்பவர் இம்மை மாறி மறுமை எய்திய விடத்தும் மீண்டும் கூடி அவ்வன்பினை வளர்த்துக் கொள்வார் என்பது பௌத்த சமயத்தினர் கோட்பாடாதல் பெற்றும். ஆசிரியர் இளங்கோவும் இக்கொள்கையை யுடையர் என்பதனைச் சிலப்பதிகாரத்து (கூ0) வரந்தரு காதையின் நிகழ்ச்சிகளால் அறியலாம். மேலும் அவர்—

"நற்றிறம் புரிந்தோர் பொற்படி யெய்தலும்
அற்புளஞ் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்"

என்றோதியதற்கு ஈண்டுத் தாரையும் வீரையுமாகிய அற்புளஞ் சிறந்த உடன் பிறந்த மகளிரிருவரும், மறுபிறப்பில் மாதவியும் சுதமதியும் வேறு இடங்களினும் குடிகளினும் பிறந்திருந்தும் "பற்றுவழி" மீண்டும் கூடியது சிறந்த எடுத்துக் காட்டாதலும் அறிக.

## இதுவுமது

### ௧௦௬ - ௧௧௦ : இன்றேழ்.........நல்லாள்

**(இ - ள்.)** இன்று ஏழ் நாளில் இடை இருள் யாமத்து - இற்றைக்கு ஏழ்நாளின் இரவின் இருள் செறிந்த இடையாமத்திலே; இலக்குமியாகிய நினக்கு இளையாள் தன் பிறப்பதனொடு நின்பிறப்பு உணர்ந்து ஈங்கு வரும் - முற்பிறப்பிலே இலக்குமி என்னும் பெயரோடிருந்த நின் தங்கை தன் முற்பிறப்பினையும் உன்னுடைய முற்பிறப்பினையும் அறிந்துகொண்டு இந் நகரத்திற்கு வருவாள் காண்!; அஞ்சல் என்று உரைத்தது அவ் உரை கேட்டு - ஆதலால் நீ அஞ்சாதே கொள்! என்று அக் கந்திற் பாவை தன் தெய்வக் கிளவியாலே தெரித்துக் கூறியதாக அந்த மொழிகளைக் கேட்டு; நெஞ்சம் நடுக்குறூஉம் நேரிழைநல்லாள் - அச்சத்தால் தன்னுள்ளம் நடுங்குகின்ற அச் சுதமதி நல்லாள்; என்க.

**(வி - ம்.)** இடையிருள் யாமம்-நள்ளிரவு. இலக்குமி என்றது மணிமேகலையின் முற்பிறப்பின்கண் அவட்கெய்திய பெயரை. இதனால் மாதவியும் சுதமதியும் மணிமேகலையும் முற் பிறப்பிலே நிரலே தாரையும் வீரையும் இலக்குமியும் என்னும் பெயர்களையுடைய ஒரு தாய்வயிற்றுடன்பிறந்த மகளிராயிருந்தனர் என்பது பெற்றும். தெய்வம் கூறிற்றேனும் அது தெய்வமொழியாதல் பற்றியும் மகளிர் இயல்பு பற்றியும் சுதமதிக்கு அச்சமே பிறந்தது. என்னை?

"அணங்கே விலங்கே கள்வர்தம் மிறையெனப்
பிணங்கல் சாலா அச்சம் நான்கே" (மெய் - அ)

எனவரும் தொல்காப்பியம் அணங்கும் அச்சம் பிறத்தற்கு நிலைக்களமாம் எனக் கூறுதலும் நினைக. அணங்கு - தெய்வம். நேரிழை நல்லாள் என்றது வாளாது சுதமதி என்னும் பெயர் மாத்திரையாய் நின்றது.

[௧௧௧ ஆம் அடிமுதலாக ௧௨௪ ஆம் அடிமுடிய வைகறைப் பொழுதின் வண்ணனையாய் ஒரு தொடர்]

## பூம்புகாரில் வைகறை யாமத்து நிகழ்ச்சிகள்

### ௧௧௧ - ௧௨௪ : காவலாளர்.........பரந்தெழ

**(இ - ள்.)** காவலாளர் கண் துயில் கொள்ள - இரவெல்லாம் துயிலின்றி நகரங்காத்த காவற் றொழிலாளர் கண் மூடித் துயிலா

நிற்பவும்; தூமென் சேக்கைத் துயில் கண் விழிப்ப-தூய மெல்லிய பஞ்சணையிற் றுயின்று கொண்டிருந்த காதலர்கள் கண்கள் துயிலுணர்ந்து விழித்துக் கொள்ளவும்; வலம்புரிச் சங்கம் வறிது எழுந்து ஆர்ப்ப-வலம்புரிச் சங்கங்கள் பொருளின்றி மங்கலமாக ஆரவாரிப்பவும்; புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க-அறிவை விரும்புகின்ற புலவர் கூட்டம் கடவுள் வாழ்த்தாகிய பொருளோடு பாடி முழங்கா நிற்பவும்; புகர்முக வாரணம் நெடுங்கூ விளிப்ப-புள்ளிகளையுடைய முகத்தையுடைய யானைகள் தம்மைக் குளிர் நீராட்டும் பாகரை நெடிதாகக் கூவிப் பிளிறவும்; பொறிமயிர் வாரணம் குறுங்கூ விளிப்ப-புள்ளி பொருந்திய மயிரையுடைய கோழிச் சேவல்கள் குறிய கூவுதலாலே கதிர்வரவியம்பா நிற்பவும்; பணைநிலைப் புரவி பல எழுந்து ஆல-பந்தியிற் கட்டப் பெற்று நிற்றலையுடைய பலப்பலவாகிய குதிரைகளும் அந்நிலையை வெறுத்து நிலை பெயர்ந்து கனையா நிற்பவும்; பணைநிலைப் புள்ளும் பல எழுந்து ஆல-மரக்கிளைகளிலே உறக்கத்தே நிலைபெற்ற காக்கை முதலிய பறவைகளும் எழுந்து ஆரவாரிப்பவும்; பூம்பொழில் ஆர்கை புள்ளொலி சிறப்ப-மலர்ப் பொழில்களினூடே நிறைந்துள்ள பறவைகளின் பாட்டொலி மிகா நிற்பவும்; பூங்கொடியார் கை புள்ளொலி சிறப்ப-மலர்க் கொடி போன்ற மகளிரின் கையிலணிந்த வளையல்களின் ஒலியும் மிகா நிற்பவும்; கடவுள் பீடிகைப் பூப்பலி கடைகொள-இரவில் விழாக் கொள்ளும் கடவுளர்க்குப பலிபீடங்களிலே மலர்ப்பலியிட்டு விழாவை முடிவு செய்யா நிற்பவும்; கலம்பகர் பீடிகை கடை பூம் பலி கடை கொள-அணிகலம் விற்கும் அங்காடித் தெருவில் கடைகளிலெல்லாம் முற்றத்தே மலர்ப்பலி கொள்ளா நிற்பவும்; குயிலுவர் கடைதொறும் பண் இயம் பரந்து எழ-இசைக்கருவியாளர் உறையுமிடமெல்லாம் பண்ணிசையும் கருவியிசையும் பரவி எழாநிற்பவும்; கொடுப்போர் கடைதொறும் பண்ணியம்-சிற்றுண்டி செய்து கொடுப்போர் கடைதோறும் சிற்றுண்டிகள்; பரந்து எழ-பரவுதல் செய்து மிகா நிற்பவும்; என்க.

(வி - ம்.) காவலளார் - ஊர்காப்பாளர்; "தேர் வழங்கு தெருவும் சிற்றிடை முடுக்கரும் ஊர்காப்பாளர் எறிதுடி யோதையும் என இக்காதையில் (௩௮-௩௯) முன்னும் கூறப்பட்டமை யுணர்க. சேக்கைத் துயில்கண் என்றது காதலர் கண்களை. "துயில்வோர் விரைப் பூம்பள்ளி வீழ்துணை தழுவவும்" என முன்னும் (௫௨-௫௩) கூறப்பட்டமை உணர்க. வலம்புரிச்சங்கம்-சங்குகளிற் சிறந்தது. இது மங்கலச் சங்கு. புலம்-அறிவு. புகர்முக வாரணம்-யானை. பொறிமயிர் வாரணம்-சேவல். பொழில் ஆர்கை-பொழிலில் நிறைதலையுடைய. பூங்கொடியார் கைப்புள் என்றது-வளையலை. மாதர் இல்லத்தே தொழிலில் முனைதலின் வளைகள் மிக்கொலித்தன என்றவாறு. இனி, பூங்கொடியில் தாதுண்ணும் அறுகாற் சிறு பறவையின் இசையொலி எனினுமாம்.

கலம்பகர் பீடிகை - அணிகலம் விற்கும் அங்காடித் தெரு. கடை - அங்காடித் தெருவிலுள்ள பல்வேறு கடைகளும் என்க. கடை வாயிலில் வைகறையில் பூவிடுதல் மரபு.

குயிலுவர்-இசைக் கருவி குயிலுவோர். "கூடிய குயிலுவக் கருவி கண் துயின்று" என முன்னும் வந்தமை யறிக. பண்ணியம் - தின் பண்டங்கள். கொடுப்போர் - செய்து கொடுப்போர். இவர் உணவு விற்போர் என்க.

சுதமதி மாதவியைக் கண்டு மணிமேகலையைப்
பற்றிக் கூறுதலும்; இருவர் நிலைமையும்

கஉ௫ - க௩௪: ஊர்துயில்..........தானேன்

(இ - ள்.) ஊர் துயில் எடுப்ப - இவ்வாறு அம் மூதூரில் வாழ்வாரையெல்லாம் உறக்கத்தினின்றும் எழுப்புதற்கு; உரவு நீர் அழுவத்துக் கார் இருள் சீத்துக் கதிரவன் முளைத்தலும் - வலிமைமிக்க நீர்ப்பரப்பாகிய குணகடலினின்றும் கரிய இருளைத் துரந்து கதிரவன் தோன்றா நிற்பவும்; (சுதமதி நல்லாள்) ஏ உறு மஞ்ஞையின் இனைந்து - அம்பேறுண்ட மயில் போன்று பெரிதும் உளம் வருந்தித் தன் மெல்லடிகள் வருந்துமாறு, மாநகர் வீதி மருங்கின் போகி - அப் பூம்புகார் நகரத்து வீதி வழியாக நடந்து சென்று; போய கங்குலிற் புகுந்ததை யெல்லாம்- கழிந்த இரவிலே நிகழ்ந்த நிகழ்ச்சிகளை யெல்லாம்; மாதவி தனக்கு வழுவின்று உரைத்தலும் - மாதவிக்குச் சிறிதும் பிறழாமல் கூறியதனாலே; அவள் நல் மணி இழந்த நாகம் போனறு தன் மகள் வாராத் தனித்துயர் உழப்ப - அம் மாதவிதானும தான உமிழ்ந்த அழகிய மணியை இழந்துவிட்ட நாகப் பாமபு போன்று தன் மகளாகிய மணிமேகலை மீண்டு வாராமையாலே எழுந்த மாபெருந்துன்பத்திலே அழுந்தா நிற்ப; துன்னியது உரைத்த சுதமதி-மணிமேகலைக்கு நிகழ்ந்ததனை மாதவிக்குக் கூறிய அச் சுதமதி தானும்; இன் உயிர் இழந்த யாக்கையின் இருந்தனள் - தனக்கினிய உயிரையே இழந்தொழிந்த உடம்புபோல இருப்பாளாயினள்; என்பதாம்.

(வி - ம்.) உரவுநீர்-கடல். ஆக்கல் அளித்தல் அழித்தல் என்னும் மூன்று பேராற்றலும் உடையதாகலின் அதற்கது பெயராயிற்று. உரவு - ஆற்றல். அழுவம் - பரப்பு. ஏ-அம்பு. இனைதல் - வருந்துதல். இஃது உள்ளத்தின்கண் எய்திய துயரத்திற்குவமை ஆதலின் அடிவருத்தத்தை வேறு கூறினர். போய கங்குல் - கழிந்த இரவு. எல்லாம் - எஞ்சாமைப் பொருட்டு. வழு - குற்றம்; ஈண்டுப் பிறழ்ச்சி. வாராத் துயர் என்புழி பெயரெச்சத் தீறு கெட்டது. தனித் துயர் - பெருந் துன்பம். சுதமதிதானும் எனல் வேண்டிய எச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

இனி இக் காதையை—மணிமேகலையை மணிபல்லவத்திடை மணிமேகலா தெய்வம் வைத்து நீங்கி உதயகுமரன் இருந்தோன் முன்னர்த் தோன்றி மகனே! கோல் திரிந்திடின் கோள் திரியும் கோள் திரிந்திடின் வறங்கூரும் கூரின் உயிர் இல்லை. உயிர் வேந்தன் உயிர் என்னும் தகுதி இன்றாகும். அவத்திறம் ஒழிகென உரைத்தபின் சுதமதி தன்னைத் துயிலிடை நீக்கி அஞ்சல், மணிமேகலை யான், ஏது முதிர்ந்தது, இளங்கொடிக்கு; ஆதலின் பெயர்த்து வைத்தேன் இன்று ஏழ் நாளில் வந்து தோன்றும். ஒளியாள் ஈங்கு நிகழ்வன பலவுள. மாதவிக்கு உரையாய்! என்திறம் உணரும்! கனவகத்துரைத்தேன் உரை எனப் போயபின், சுதமதி எழுந்து கேட்டுக் கலங்கிப் போகி ஒரு புடை இருத்தலும், பாவை கிளவியின் மகளே! தேவி நீத்தோய், சுதமதி கேளாய் இளையாள் வரும் அஞ்சல் என்றுரைத்த உரை கேட்டு, நல்லாள் கதிரவன் முளைத்தலும் வருந்தப் போகி மாதவிக்கு உரைத்தலும், அவள் உழப்ப, சுதமதி இருந்தனள் என இயைத்துக் கொள்க.

துயிலெழுப்பிய காதை முற்றிற்று.

# அ. மணிபல்லவத்துத் துயருற்ற காதை

[எட்டாவது மணிமேகலை மணிபல்லவத்துத்
துயிலெழுந்து துயருற்ற பாட்டு]

அஃதாவது : மணி பல்லவத்தின்கண் மணிமேகலா தெய்வம் மணிமேகலையைத் துயில் கலையாமலே வைத்துப் போன பின்னர் அத்தீவகத்தில் துயில்கொண்டிருந்த மணிமேகலை கங்குறையிலேயே வழக்கம்போல் துயிலுணர்ந்து நோக்கினவள் அவ்விடம் தான் கண்டிராத புதிய இடமாயிருத்தல் கண்டு யாதொன்றும் காரணங் காணமாட்டாளாய்ப் பெரிதும் திகைத்தனள். கதிரவன் தோன்றிய பின்னர் ஆங்கு எழுந்து சுற்றிப் பார்த்து மக்கள் வழக்கமும் இல்லாமையால் வருந்தித் தன் தந்தையை நினைந்து அழுதரற்றும் செய்தியைக் கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இதன்கண் — மணிமேகலா தெய்வம் மணிமேகலையைத் துயிலக்கிடத்திய மணிபல்லவத்தின் வண்ணனையும் பூம்புகார் நகரத்து உவவனத்தே துயில்கொண்டு மணிபல்லவத் தீவின்கண் துயிலுணர்ந்த மணிமேகலை பண்டறி கிளையொடு பதியும் காணாளாய்க் கண்டறியாதன கண்ணிற் கண்டு மருள்பவளின் நிலைமையை இப் புலவர் பெருமான் தன்மை நவிற்சியாகக் கூறிக் காட்டும் புலமைத்திறமும் பெரிதும் போற்றத் தகுவனவாக அமைந்திருத்தல் காணலாம் :

மணிமேகலை மருண்டு தந்தையை நினைந்து அழுதரற்றும் பகுதி ஓதுபவர் உள்ளத்தை உருக்கும் இயல்பிற்றாக அமைந்துளது. மணிபல்லவத் தீவு அழகொழுகப் புனைந்துரைக்கப் பட்டுள்ளது. அப்பால் அத் தீவிலுள்ள புத்தபீடிகையின் வரலாறும் தெய்வத்தன்மையும் இக் காதையில் இனிது கூறப்பட்டுள்ளன.

ஈங்கிவ ளின்னண மாக இருங்கடல்
வாங்குதிரை யுடுத்த மணிபல் லவத்திடைத்
தத்துநீ ரடைகரைச் சங்குழு தொடுப்பின்
முத்துவிளை கழனி முரிசெம் பவளமொடு
விரைமர முருட்டுந் திரையுலாப் பரப்பின்

ஞாழல் ஓங்கிய தாழ்கண் அசும்பின்
ஆம்பலுங் குவளையும் தாம்புணர்ந்து மயங்கி
வண்டுண மலர்ந்த குண்டுநீ ரிலஞ்சி
முடக்காற் புன்னையும் மடற்பூந் தாழையும்
வெயில்வர வொழித்த பயில்பூம் பந்தர்
அறல்விளங்கு நிலாமணல் நறுமலர்ப் பள்ளித்
துஞ்சுதுயி லெழூஉம் அஞ்சி லோதி
காதற் சுற்றம் மறந்து கடைகொள
வேற்றிடத்துப் பிறந்த உயிரே போன்று
பண்டறி கிளையொடு பதியுங் காணாள்
கண்டறி யாதன கண்ணிற் காணா
நீல மாக்கடல் நெட்டிடை யன்றியுங்
காலை ஞாயிறு கதிர்விரித்து முளைப்ப
உவவன மருங்கினில் ஓரிடங் கொல்லிது
சுதமதி ஒளித்தாய் துயரஞ் செய்தனை
நனவோ கனவோ என்பதை அறியேன்
மனநடுக் குறூஉம் மாற்றந் தாராய்
வல்லிருள் கழிந்தது மாதவி மயங்கும்
எல்வளை வாராய் விட்டகன் றனையோ
விஞ்சையில் தோன்றிய விளங்கிழை மடவாள்
வஞ்சஞ் செய்தனள் கொல்லோ அறியேன்
ஒருதனி யஞ்சுவென் திருவே வாவெனத்
திரைதவழ் பறவையும் விரிசிறைப் பறவையும்
எழுந்துவீழ் சில்லையும் ஒடுங்குசிறை முழுவலும்
அன்னச் சேவல் அரசனாகப்
பன்னிறப் புள்ளினம் பரந்தொருங் கீண்டிப்
பாசறை மன்னர் பாடி போல
வீசுநீர்ப் பரப்பின் எதிரெதி ரிருக்கும்
துறையுந் துறைசூழ் நெடுமணற் குன்றமும்
யாங்கணுந் திரிவோள் பாங்கினங் காணாள்
குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழ
அரற்றினள் கூஉய் அழுதனள் ஏங்கி
வீழ்துய ரெய்திய விழுமக் கிளவியில்
தாழ்துய ருறுவோள் தந்தையை உள்ளி
எம்மிதிற் படுத்தும் வெவ்வினை யுருப்பக்
கோற்றொடி மாதரொடு வேற்றுநா டடைந்து
வைவா ளுழந்த மணிப்பூண் அகலத்து
ஐயா வோவென் றழுவோள் முன்னர்
விரிந்திலங் கவிரொளி சிறந்துகதிர் பரப்பி
உரைபெறு மும்முழம் நிலமிசை ஓங்கித்

திசைதொறும் ஒன்பான் முழநில மகன்று
விதிமா ணாடியின் வட்டங் குயின்று
பதும சதுர மீமிசை விளங்கி
அறவோற் கமைந்த ஆசன மென்றே
நறுமல ரல்லது பிறமாஞ் சொரியாது
பறவையும் முதிர்சிறை பாங்குசென் றதிராது
தேவர்கோ னிட்ட மாமணிப் பீடிகை
பிறப்புவிளங் கவிரொளி அறத்தகை யாசனம்
கீழ்நில மருங்கின் நாகநா டாளும்
இருவர் மன்னவர் ஒருவழித்தோன்றி
எமதீ தென்றே எடுக்க லாற்றார்
தமபெரும் பற்று நீங்கலும் நீங்கார்
செங்கண் சிவந்து நெஞ்சுபுகை உயிர்த்துத்
தம்பெருஞ் சேனையொடு வெஞ்சமம் புரிநாள்
இருஞ்செரு ஒழிமின் எமதீ தென்றே
பெருந்தவ முனிவன் இருந்தற முரைக்கும்
பொருவறு சிறப்பிற் புரையோ ரேத்தும்
தரும பீடிகை தோன்றிய தாங்கென்.

---

# அ. மணிபல்லவத்துத் துயருற்ற காதை

## உரை

### மணிபல்லவத்தே மணிமேகலை துயிலுமிடத்தின் மாண்பு

### க - கஉ : ஈங்கிவள்.........அஞ்சிலோதி

(இ - ள்.) இவள் ஈங்கு இன்னணம் ஆக - இப் பூம்புகார் நகரத்திலே மணிமேகலையைப் பிரிந்து ஆற்றாமையால் பெரிதும் வருந்திய சுதமதி என்பாளின் நிலைமை இவ்வாறாக; இருங்கடல் வாங்கு திரை உடுத்த மணிபல்லவத்து இடை - பெரிய கடலினது நாற்புறமும் வளைந்து வந்து மோதுகின்ற அலைகளை அணிந்துள்ள மணி பல்லவம் என்னும் தீவினகத்தே; தத்து நீர் அடைகரை சங்கு உழு தொடுப்பின் முத்து விளை கழனி - தவழுகின்ற நீரை அடைக்கின்ற கரையினையும் சங்குகளால் உழப்பட்டு விதைத்த விதைப்பின்கண் முத்துக்களாகிய கூலம் விளைகின்ற வயல்களையும்; மூரி செம்பவளமொடு விரை மரம் உருட்டும் திரை உலாப் பரப்பின் - கொடிகளிலே முரிந்த சிவந்த பவளக் கொடிகளையும் உடை கலங்களினின்றும் மிதந்த சந்தனம் முதலிய நறுமண மரங்களையும் சுமந்து வந்து உருட்டுகின்ற அலைகள் உலாவுகின்ற நெய்தனிலப்பரப்பினையும்; ஞாழல் ஓங்கிய தாழ்கண் அசும்பின் - புலிநகக் கொன்றை மரங்கள் உயர்ந்து வளர்ந்துள்ள தாழ்ந்த நன்னீர் ஊற்றுக் கண்களையுடைய ஈரம்புலராத நிலப்பகுதியினையும், ஆம்பலும் குவளையும் தாம் புணர்ந்து மயங்கி வண்டு உண மலர்ந்த - ஆம்பலும் குவளையுமாகிய கொடிகள் தம்முள் விரவிப் படர்ந்து கலந்து பசித்துவருகின்ற வண்டுகள் தாதுண்டு மகிழுமாறு மலர்ந்திருக்கின்ற; குண்டு நீர் இலஞ்சி - ஆழமான நீரையுடைய பொய்கைக் கரையினையும்; முடக்கால் புன்னையும் மடல் பூந் தாழையும் வெயில் வரவு ஒழித்த - அக்கரையின் மேனின்ற முடம்பட்ட காலையுடைய புன்னை மரமும் மடலாற்சிறந்த பூவினையுடைய தாழையும் தழைத்துச் செறிதலாலே வெயில் புகுதாதபடி தடுத்துள்ள; பயில் பூம் பந்தர் - பயிலுதற் கினிய பூக்களோடியைந்த நிழலின் கீழ்; அறல் விளங்கு நிலாமணல் நறுமலர்ப்பள்ளி - வரிவரியாகத் திகழாநின்ற நிலவொளி போன்ற நிறமமைந்த மணற்பரப்பின் மேல் மணிமேகலா தெய்வம் பரப்பிய நறிய மலராகிய பாயலின்

மேலே; துஞ்சு துயில் எழூஉம் அம்சில் ஓதி - ஆழ்ந்து துயின்ற துயிலினின்றும் வழக்கம் போன்று எழுகின்ற மணிமேகலை; என்க.

(வி - ம்.) ஈங்கு இவள் என்றது புகார் நகரத்துள்ள சுதமதி என்றவாறு. இன்னணம் - இவ்வாறு இவள் இவ்வாருக எனவே, இஃது இனி யாம், மணிமேகலா தெய்வம் விஞ்சையிற் பெயர்த்து மணி பல்லவத்திடை வைத்து நீங்கிய மணிமேகலையின் திறங் கூறுவாம் என்று குறிப்பாக நுதலிப் புகுந்தவாருயிற்று. வாங்கு - வளைந்த. அடைகரையினையுடைய கழனி சங்கு உழுகழனி தொடுப்பின் கழனி முத்துவிளை கழனி என்று தனித்தனி கூட்டுக. இது சொல் மாத்திரையால் மருதத்திணை கூறியபடியாம். உழுதல் கூறவே வித்தலும் விளைபொருளும் கூறினர். சங்கு உழுது முத்தாகிய விதையை விதைப்ப முத்தாகிய கூலங்களே விளையும் கழனி என்றார். கழனி - மருதத்திணையில் விளை நிலம். முரி செம்பவளம்: வினைத்தொகை. கொடியில் முரிந்த செம்பவளம் என்றவாறு. விரை மரம்-சந்தன மரம் முதலியன. இவை உடை கலத்தினின்றும் மிதந்தவை. நீரினின்றும் மரங்களைக் கரை யேற்றுவார் அவற்றை உருட்டியே ஏற்றுவர் ஆதலின் உருட்டுந்திரை என்றார். மரமுருட்டியவர் இளைப்புற்றுச் சிறிது வாளாதுலாவுதலும் இயல்பாதலின், இத் திரைகளும் அங்ஙனமே உலாவும் என்றார்.

ஞாழல் - புலிநகக் கொன்றை. தீவுகளின் கரையோரப் பகுதிகள் தாமே நன்னீர் ஊற்றெடுக்கும் ஊற்றுக் கண்களையுடையனவாய் எப்பொழுதும் ஈர்க்கசிவுடையவாய் வளமுடையவாகவும் இருத்தல் இயல்பு. அவ்விடத்தே ஞாழல் முதலிய மரங்கள் செழித்து வளர்ந்துள்ளன. அசும்பு - நீர்க்கசிவுடைய நிலம். அவ்விடத்தே இலஞ்சியும் ஒன்றுளதாயிருந்தது. அதன் கரையில் புன்னையும் தாழையும் தழைத்தோங்கி வெயில் புகாதபடி தடுத்து நிழலிட்டிருந்தன. அதன்கீழ் நிலவொளி தவழும் மணற் பரப்பின் மேலே புதிய மலர்களைப் பரப்பி அம் மலர்ப் பாயலின் மேல் மணிமேகலா தெய்வம் தனது பேரருளுக்கு ஆளான மணிமேகலையைத் துயிலவிட்டு அத் தெய்வம் அகன்றது என்பது இதனல் இனிது பெற்றும். கதிரவன் எழுமுன்னர்த் துயிலுணர்ந்து எழுகின்ற தன் வழக்கப்படியே மணிமேகலை துயிலெழுந்தாள் என்பது தோன்ற அங் நறுமலர்ப் பள்ளித் துஞ்சுதுயில் எழு மஞ்சில் ஓதி என்றார். என்னை? ஆண்டுத் துயிலுணர்த்துவார் பிறர் யாரும் இன்மையின் அப்பொழுது அங்ஙனம் துயிலுணர்ந் தெழுவது அவள் வழக்கம் என்பது போதருதலறிக. துஞ்சு துயில் என்றது துஞ்சுதல் போன்று தன்னையறியாது ஆழ்ந்து துயிலும் துயில் என்றவாறு. துஞ்சினர் செத்தாரின் வேறல்லர் என்பார் வள்ளுவனர். நல்லுறக்கத்திற்கு இயல்பும் இதுவே என்றுணர்க.

## மணிமேகலையின் மருட்கை நிலை

கூ - உஎ : காதல்........வாவென

(இ - ள்.) காதல் சுற்றமும் மறந்து கடைகொள வேறு இடத்துப் பிறந்த உயிரே போன்று - அன்பு காரணமாகத்

தனக்குத் தாயே தந்தையே மாமனே மாமியே இன்னோரன்ன
உறவுத் தொடர்ப்பாட்டோடு தன்னைச் சூழ விருந்த சுற்றத்
தாரை எல்லாம் ஒருசேர மறந்து இம்மை வாழ்க்கை இறுதி
எய்த மீண்டும் வேறோர் இடத்தே சென்று புதிய பிறப்பினை
எய்தியதோர் உயிர் போலவே; பண்டு அறிகிளையொடுபதியும்
காணாள் - முன்பு தான் பயின்றறிந்த தாய் முதலிய சுற்றத்தா
ரோடு தான் வாழ்தற் கிடமான புகார் நகரத்தையும் காணாதவ
ளாகி; கண்டு அறியாதன கண்ணிற் காணா - முன்பு ஒரு
பொழுதும் கண்டறியாத புதிய பொருள்களையும் இடத்தையுமே
தன் கண்களாலே கண்டு மருளும் பொழுது; நீல மாக்கடல்
நெட்டிடை அன்றியும் காலை ஞாயிறு கதிர்விரித்து முளைப்ப -
நீலநிறமுடைய பெரிய கடல் நெடுந்தூரத்திற் கிடத்தலின்றித்
தன்னருகே கிடத்தலாலே அந்த விடியற்காலத்தே ஞாயிற்றுமண
டிலம் தன் கதிர்களை விசும்பிலே பரப்பி அக்கடலினின்றும் தோன்
றுதல் கண்டு தான் இருக்கும் இடத்தை ஐயுற்று ஆராய்பவள்;
உவவனம் மருங்கினில் இது ஓர் இடம் கொல் - நெருநல் யான்
சுதமதியோடு மலர் கொய்ய வந்துபுக்க உவவனத்தினுள் அமைந்
துள்ள ஓரிடமே இவ்விடம் ஆதல்வேண்டும். ஆம். ஆம். இஃதுவ
வனத்தில் ஓரிடமே; ஆயின், சுதமதி யாண்டுப் போயினள்? அவள்
நம்மை அசதியாடக் கருதி அயலிலே ஒளிந்திருப்பாள் என்று
கருதி; சுதமதி ஒளித்தாய் துயரஞ் செய்தனை - சுதமதி! சுதமதி!
நீ ஒளித்திருக்கின்றாய்காண்! விளையாடுஞ் செவ்வி இஃதன்று
காண்! ஒளித்துறைதல் வாயிலாய் நீ எனக்குத் துன்பமே
செய்தொழிந்தாய்!; நனவோ கனவோ என்பதை அறியேன் -
அன்புடையோய்! யான் இப்பொழுது விழிப்பு நிலையிலிருக்கின்
றேனா! அல்லது துயிலிடத்தே கனவுதான் கண்டு மருள்கின்
றேனா! இவற்றுள் எந்நிலையினேன் என்று அறிகின்றிலேன்;
மனம் நடுக்குறூஉம் மாற்றம் தாராய் - என் நெஞ்சம் அச்சத்
தாலே நடுங்குகின்றது ஆதலால விளையாடாதே கொள்! மறு
மொழி தருவாய்!; வல் இருள் கழிந்தது மாதவி மயங்கும் -
வலிய இரவு எப்படியோ கழிந்தொழிந்தது நம்மைக் காணாமை
யால் அன்னையாகிய மாதவி பெரிதும் மயங்கித்துன்புறுவாள்
அல்லளோ?; எல்வளை வாராய்-ஓ சுதமதி! இத்துணை கூறியும்
நீ என்முன் வந்தாயில்லையே!; விட்டு அகன்றனையோ - அன்
புடையோய் ஒரோவழி நீ என்னைத் தமியளாய் ஈண்டே துயில
விட்டுப் போய்விட்டனையோ? அவ்வாறு போகவும் துணியாயே!
விஞ்சையில் தோன்றிய விளங்கு இழைமடவாள் வஞ்சம் செய்த
னள் கொல் அறியேன் - என்னிது! என்னிது! ஒரோவழி
நெருநல் இரவு விந்தையுடையவளாய் நம்பால் வந்தெய்திச் சக்கர
வாளக் கோட்டத்து வரலாறு கூறிக்கொண்டிருந்த மங்கை ஏதே

னும் வஞ்சகச் செயல் செய்தொழிந்தனளோ? அவள் அன்னயி னள் என்றும் அறிகின்றிலேனே!; ஒரு தனி அஞ்சுவென் திருவே வா என - பெருந்தனிமையாலே எய்தும் துன்பத்திற்கும் அஞ்சுகின்றேன் அருட்செல்வமேயனைய சுதமதியே விரைந்து என்முன் வருதி! என்று பற்பலவும் கூறிக்கொண்டு; என்க.

(வி - ம்.) மணிமேகலா தெய்வத்தாலே முழுதும் வேறாய இடத்திலே விஞ்சையாற் பெயர்த்து வைத்த மணிமேகலைக்கு இம்மைமாறி வேறிடத்திற் பிறந்த உயிரை இப் புலவர் பெருமான் உவமையாக எடுத்துக்கூறும் புலமைத்திறம் நினைந்து நினைந்து மகிழற் பாலதாம்.

ஓரிடத்தே துயின்று அத் துயில் கலையாமலேயே மற்றோரிடத்தே பெயர்த்திடப்பட்ட ஒரு பெண் துயிலுணர்ந்து கொள்ளும் மருட்கையை இவர் எத்துணைத் திறம்படத் தன்மை நவிற்சியாகப் புனைந்துள்ளார், நோக்குமின்!

மணிபல்லவத்தின் கீழ்ப்பகுதியில் கடன் மருங்கிலமைந்தது மணி மேகலையை வைத்த இலஞ்சிக்கரை ஆதலால் கதிரவன் நீரினின்றே அணித்தாகத் தோன்றும் காட்சியை மணிமேகலை நன்கு கண்டனள் என்பது தோன்ற "நீல மாக்கடல் நெட்டிடை யன்றியும் காலை ஞாயிறு கதிர் விரித்து முளைப்ப" எனக் கதிரவன் தோற்றத்தை விதந்தெடுத்து விளம்பினர்.

முன்னாளிரவு உவவனத்திலேயே இரவிடை இவள் துயில்கொண்டவளாதலின் இஃது உவவனத்தின்கண்ணமைந்த ஓரிடமே என்று ஊகிக்கின்றாள். அங்ஙனமாயின் நம்மோடிருந்த சுதமதி யாண்டுளள் என்று பின்னர் ஆராய்கின்றனள். மற்று அவளைக் காணாமையின், அவள் நம்பால் கழிபெருங் காதலுடையாள் ஆதலின் நம்மைக் கைவிட்டுப்போகத் துணியாள். ஆயின் அவள்? ...அவள் முன்பே துயிலுணர்ந்தவள் நம்மை எழுப்பவும் மனமின்றி இவள் தானே எழுக! என்றிருந்தவள் நாம் எழுந்து திகைப்பது கண்டு நகைப்பது கருதி இவ்விடத்திலே மறைந்துறைபவள் ஆதல் வேண்டும் என்று மணிமேகலை ஊகிக்கின்றாள்; இஃது இயற்கையோடு எத்துணைப் பொருத்தமாக அமைந்துளது காண்மின்! இங்ஙனம் ஊகித்தவள் உரத்த குரலில் சுதமதீ! சுதமதீ! சுதமதீ! என்று பன்முறை கூவி அழைத்திருப்பாள்; அங்ஙனம் அழைத்தாள் என்பதனைப் புலவர் பெருமான் அடுக்கிக் கூறாது சுதமதி ஒளித்தாய்! என ஒருமுறை விளித்தாள் போலக் கூறினரேனும் இதனைப் பாட்டிடை வைத்த குறிப்பால் யாம் உரையில் அடுக்கிக் கூறினும்.

சுதமதி ஒளிந்துறைந்தாலும் அண்மையிலேயே ஒளிந்திருப்பாள் என்னும் கருத்தால் சுதமதி ஒளித்தாய் என அண்மை விளியால் விளித்தனள்; விளித்து நீ ஒளித்திருக்கின்றனை என்பது தெரிந்து கொண்டேன் எழுந்து வருதி என்பது இதன் குறிப்பாம். பின்னர்ப் பன்முறை விளித்தும் அவள் வாராமையாலே, இது கனவோ நனவோ என்பதை யறியேன் மனம் நடுக்குறாஉம் மாற்றந்தாராய் என்று தன்னிலை கூறி விரைந்து வெளிவர வேண்டுகின்றனள். பின்னும் சுதமதி அசதியாட ஒளிந்தே இருக்கின்றாள் என்றுட் கொண்டு அங்ஙனம் விளையாட்டயரும்

செவ்வியோ இஃது என்று அவட்குப் பேதைமை யூட்டுவாள் வல்லிருள் கழிந்தது நம் வரவு காணாமையாலே மாதவி பெரிதும் மயங்குவளே அதனை நீ நினைந்திலையோ என அவள் விரைந்து வருதற்கு ஏதுவும் கூறி அழைக்கின்றாள். பின்னும் சுதமதி வாராமையால் முன்னுளிரவு தம்மோடு சொல்லாடி யிருந்த விஞ்சையிற் றோன்றிய விளங்கிழை மடவாள் நினைவு அவள் உள்ளத்தே அரும்புகின்றது. அவள் ஏதேனும் வஞ்சம் செய்திருப் பாளோ என்று ஐயுறுகின்றாள்; மருள்கின்றாள். பின்னும் சுதமதியே ஒரு தனி அஞ்சுவன் திருவே வா என்றிரந்து வேண்டுகின்றாள். இத்துணையும் நிகழ்ந்தபின் சுதமதி ஈண்டில்லை. ஆதலின் அவ் வஞ்சவிஞ்சை மகளால் ஏதோ குறும்பு செய்யப்பட்டுளதோ என்று ஐயுறுகின்றாள்; இஃது உவவனம் அன்று போலும்! அதனை ஆராய்வல் என்னும் எண்ணத்தாலே எழுந்து ஆராயத் தலைப்படுகின்றனள். இப் புலவர் பெருமான் தாமே ஈண்டு அம் மணிமேகலையாய் மாறிவிடுகின்ற அவர்தம் வித்தகப் புலமையை எத்துணைப் புகழ்ந்தாலும் மிகையாகாது. வாழ்க அவர் புகழும் அவர் வழங்கிய தண்டமிழ்க் காப்பியமும்.

## மணிமேகலை எழுந்து திரிந்து இடம் ஆராய்தல்

உவ - கூரு : திரைதவழ்..........காணாள்

(இ - ள்.) திரை தவழ் பறவையும் விரிசிறைப் பறவையும் எழுந்துவீழ் சில்லையும ஒடுங்கு சிறை முழுவலும் - நீரின் மேலே தவழ்ந்து சென்று இரை தேர்கின்ற கடற்பறவைகளும் விரிந்த சிறகுகளோடு வானத்தில் பறந்து திரிந்து இரை தேர்கின்ற பறவைகளும் ஓரிடத்தினின்றும் மற்றோரிடத்திற்கு நீரினின்றும் எழுந்து பறந்துபோய் வீழுகின்ற சில்லைச்சாதிப் பறவைகளும், ஒடுங்கிய சிறகுகளுடனே நீரினுள் முழுகித் தமக்கியன்ற இரையைப் பற்றிக்கொண்டு தலை தூக்கும் முழுவற் சாதிப் பறவைகளும் ஆகிய நால் வேறு வகைபபட்ட பறவைகளும் நால்வேறு படைமறவர்களாகவும்; சேவல் அன்னம் அரசனாக - அவற்றுள் சேவலாகிய அன்னப் பறவையே அரசனாகவும்; பல் திறப் புள்ளினம் பரந்து ஒருங்கு ஈண்டி - பல்வேறு திறம் அமைந்த பறவைக் கூட்டம் பரந்து தனித்தனியிடத்தே குழுமி; பாசறை மன்னர் பாடி போல - பகை மன்னரிருவர் போர் ஆற்றுதற் பொருட்டு நால் வேறு படைகளுடனே வந்து பாசறையிலிருப்போர் ஒருவர்க்கொருவர் எதிர் எதிர் ஆகத் தத்தம் படையை எதிர் எதிரே விட்டிருந்தாற் போன்று; வீசு நீர்ப்பரப்பின் எதிர் எதிர் இருக்கும் - அலை எறிகின்ற நெய்தனிலப் பரப்பிலே (துறையினது) இருபக்கங்களினும் எதிர் எதிரே இருக்கின்ற கடற்றுறையும்; அத் துறைசூழ் நெடுமணற் குன்றமும் யாங்கணும் திரிவோள் - அத் துறையைச் சூழ்ந்துள்ள நெடிய மணற் குன்றுகளும் ஆகிய எவ்விடத்தும் திரிந்து நோக்கி வருபவள்; டாங்கு இனம் காணாள் -

பண்டு தன் பக்கத்திலே காணப்படும் பொருள்களுக்கு இனமாகிய எப் பொருளையும் காணப்பெறுளாகி என்க.

(வி - ம்.) இவர் கடற்பறவையை அவை இரைதேருமாற்ருலேயே ஈண்டு நான்கு வகையாகப் பிரித்துக் காட்டுகின்றனர். அவையாவன: நீரின்மேல் தவழ்ந்து தமது தோலடியாலே நீரை உதைத்துச் சென்று எதிர்ப்படுகின்ற இரையை அலகாற் பற்றிக்கொள்வனவும்; விசும்பிலே பறந்த வண்ணமே திரிந்து இரையைக்காணும்பொழுது வீழ்ந்து பற்றிக் கொள்வனவும், ஓரிடத்தினின்றும் மற்ருேரிடத்திற்குப் பறந்துபோய் விழுந்து இரை தேர்ந்து பற்றிக்கொள்வனவும், சிறகொடுக்கி நீரினுள் முழுகி நீரினூடேயே இயங்கி ஆங்ககப்படும் இரையைப்பற்றிப் பின் தலை தூக்குவனவுமாம். இவற்றிற்கு (க) அன்னம், (உ) சிரல், (ஙு) கடற் காக்கை, (ச) குருவை முதலியவற்றை எடுத்துக் காட்டுகளாகக் கொள்க. இவற்றுள் அன்னச் சேவல் சிறந்திருத்தலின் அதனை அரசன் என்ருர். நால் வேறுபடைகளுக்கு நால்வேறு பறவை இனம் காட்டினர். வீசு நீர்ப்பரப் பென்றது அலைதவழும் நிலப் பகுதியை. துறை கூறினர் ஆங்கு மக்கள் இலரேனும் மரக்கலங்கள் வந்து நங்கூரமிட்டு நிறுத்தப் படுவதும் மக்கள் கலத்தினின்றும் இறங்கித் தங்கியிருத்தலும் நிகழ்தலின் அதற்கான துறையும் அங்கு உண்டு என்பதுணர்த்தற்கு. இதனை,

"வங்க மாக்களொடு மகிழ்வுட னேறிக்
கால்விசை கடுகக் கடல்கலக் குறுதலின்
மாவிதை மணிபல் லவத்திடை வீழ்த்துத்
தங்கிய தொருநாள் தானுங் கிழிந்தனன்
இழிந்தோன் ஏறினன் என்றிதை எடுத்து
வழங்குநீர் வங்கம் வல்லிருள் போதலும்
வங்கம் போயபின் வருந்துதுயர் எய்தி
அங்கு வாழ்வோர் யாவரும் இன்மையின்"

எனவும், (கச-எகூ-அசு)

"கம்பளச் செட்டி கலம்வந் திறுப்ப"

எனவும் இந்நூலில் பிறண்டும் வருவனவற்ருலறிக. (உகி: கஅச)

இனி, இதனோடு—

"கம்புட் கோழியுங் கனைகுர லுறையுஞ்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்கும்
கானக் கோழியு நீர்நிறக் காக்கையும்
முள்ளு மூரலும் புள்ளும் புதாவும்
வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்
பல்வேறு குழூஉக் குரல்பரந்த வோதையும்"

எனவரும் சிலப்பதிகாரப் பகுதியை (க0. ககச - ககஙு) ஒப்பு நோக்குக.

### மணிமேகலை தந்தையை நினைந்து அழுதல்

**௩௩ - ௪௩ : குரற்றலை.........முன்னர்**

(இ - ள்.) குரல் தலைக் கூந்தல் குலைந்து பின் வீழ - கொத்துக் கொத்தாக அடர்ந்துள்ள தன் தலையின்கட் கூந்தல் சரிந்து பின்புறத்தே வீழுமாறு; அரற்றினள் கூஉய் அழுதனள் - வாய்விட்டு அரற்றிக் கூவி அழுதவளாய்; ஏங்கி வீழ்துயர் எய்திய விழுமக்கிளவியில் தாழ்துயர் உறுவோள் - ஏங்கி நிலத்தில் வீழ்தற்குக் காரணமான துன்பமுடைய துயரந் தருகின்ற மொழிகளைக் கூறுதலோடே ஆழ்ந்த தனிமைத் துன்பத்தை நுகர்பவள்; தந்தையை உள்ளி - தன் அன்புத் தந்தையாகிய கோவலனை நினைவு கூர்ந்து; எம் இதின் படுத்தும் வெவ்வினை உருப்ப - எம்மை இந்நிலைமைக் காளாக்கிய வெவ்விய ஊழ்வினை வந்துருத்தலாலே; கோல் தொடி மாதரொடு வேற்று நாடு அடைந்து வைவாள் உழந்த - திரண்ட வளையலணிந்த காதலாளாகிய என் அன்னையுடனே வேற்றுவர் நாட்டிலே சென்று ஆங்குக் கூரிய வாளே றுண்ணும் கொடிய துன்பத்தை நுகர்ந்த; மணிப்பூண் அகலத்து ஐயாவோ என்று அழுவோள் முன்னர் - மணியணிகலன் அணியும் அழகிய மார்பினையுடைய ஐயாவோ என்று கதறி அழுகின்ற அம் மணிமேகலையின் முன்னர் என்க.

(வி - ம்.) குரல் தலைக்கூந்தல் - கொத்துக் கொத்தாகத் தலையிலுள்ள கூந்தல் என்க. துன்பத்தானுதல் இன்பத்தானுதல் நெஞ்சம் நெகிழ்ந்துழிக் கூந்தல் நெகிழ்தல் ஒரு மெய்ப்பாடாம்; இதனை, "கூழைவிரித்தல்" என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார். (மெய்ப்-௧௪) விழுமக் கிளவி - துன்பத்திற் பிறந்த சொல். துன்ப மிக்கவர் அன்புடையோரை உள்ளுதலியற்கை. மகளிர்க்கு அவ்வழி அழுகை வருதல் இயல்பு.

தந்தைக்கு வந்த வெவ்வினையே தம்மை இந் நெறியிற் செலுத்தியது என்னுமல் எம்மை இங்ஙனம் துன்புறும் நெறியிற் செலுத்தவந்த யாஞ் செய் வெவ்வினையே நும்மை வைவாள் உழப்பித்தது என்பாள் எம்மிதிற் படுத்தும் வெவ்வினை என்கின்றாள். மாதர் - காதல். மாதர் என்றாள் கண்ணகியின் கற்புச்சிறப்பு மேம்பட்டுத் தோன்றுதற்கு. ஐயா என்றது அத்தனே என்றவாறு.

### மணிமேகலைக்குப் புத்த பீடிகை புலப்படுதல்

[௪௪ ஆம் அடி முதலாக, ௬௨ ஆம் அடி முடியப் புத்த பீடிகையின் வண்ணனையாய் ஒரு தொடர்]

**௪௪ - ௫௫ : விரிந்திலங்.........ஆசனம்**

(இ - ள்.) விரிந்து இலங்கு அவிர் ஒளிசிறந்து கதிர் பரப்பி - நாற்றிசையினும் பரவித்திகழும் பேரொளி இடையறுது

மிகுதலாலே எப்பொழுதும் சுடரைப் பரப்பிக்கொண்டு, உரை பெறும் மும்முழம் நிலமிசை ஓங்கி - சிற்பநூலிற் கூறப்படுகின்ற முறைப்படி மூன்று முழம் நிலத்தினின்று முயர்ந்தும்; திசை தொறும் ஒன்பான் முழம் நிலம் அகன்று - நான்குதிசைகளினும் ஒன்பதுமுழம் நிலப்பரப்பின்மேல் அகன்றும்; மீமிசை - அப் பீடத்தின் உச்சியிலே நடுவிடத்தே, விதிமாண் ஆடியின் வட்டம் குயின்று - நூல்விதியினாலே மாண்புடைய பளிங்கினாலே வட்ட வடிவமான பீடமிட்டு; பதும சதுரம் விளங்கி - அதன் காப்பண் புத்தருடைய பாதபங்கயம் அழுந்திக் கிடந்த சதுரவடிவிற்றாகிய மேடையால் விளக்கமெய்தி; தேவர்கோமான் - அமரர்க்கு அரசனாகிய இந்திரன் இதுதான்; அறவோற்கு அமைந்த ஆசனம் என்று - அறத்தின் திருவுருவமாகிய புத்த பெருமான் எழுந்தருளுதற்குப் பொருந்திய இருக்கையாம் என்று சொல்லி, இட்ட மாமணிப் பீடிகை - இடப்பட்ட சிறந்த மணிகள் இழைத்த பீடிகையாதலாலே; மரம் நறுமலர் அல்லது பிற சொரியாது - அயலில் நிற்கின்ற மரங்கள் தாமும் தன்மேலே நறிய மணங்கமழும் புதிய மலர்களைச் சொரிவதல்லது பிறவற்றைச் சொரியப்படாததும்; பறவையும் உதிர் சிறை பாங்கு சென்று அதிராது - பறவைகள் தாமும் உதிரும் இயற்கையையுடைய சிறகுகள் தமக்கிருத்தலாலே தன் பக்கலிலே தம் சிறகுகளை அடித்துப் பறத்தலில்லாததும்; பிறப்பு விளங்கு அவிர் ஒளி அறத்தகை ஆசனம் - தன்னைக் கண்டவர்க்கெல்லாம் அவரவர் முற்பிறப்பு விளங்கித் தோன்றுவதற்குக் காரணமாய் விளங்கு கின்ற தெய்வத்தன்மையுடைய ஒளியையுடையதும் ஆகிய அறப் பெருந் தகையாளனாகிய புத்தருடைய இருக்கையாம்; என்க.

(வி - ம்.) அப்பீடிகை தன்னைக் கண்ட மாந்தர்க்கு முற்பிறப்புக்களை யுணர்த்துவது. அவ்வாறே பறவைகளும் மரமும் பறவையும் அதன் தெய்வத்தன்மையை உணர்தலின் மரம் மலரன்றிப் பிறவற்றைச் சொரி யாது. பறவை அதன் அருகே சிறகதிர்ந்து பறவாது என்றவாறு.

பரப்பி ஓங்கி அகன்று குயின்று விளங்கி அமைந்த ஆசனம் அது தானும் சொரியப் படாததும் அதிர்க்கப்படாததும் தேவர்கோன் இட்ட தும் ஆகிய பீடிகை, அதுதானும் பிறப்பு விளங்கும் ஒளியையுடைய அறத்தகை ஆசனமுமாம் என இயைத்திடுக. அறத்தகை - புத்தர்.

இதுவுமது

௫௪ - ௬௨: கீழ்நில.........ஆங்கேன்

(இ - ள்) கீழ்நில மருங்கின் நாகநாடு ஆளும் இருவர் மன்னவர் ஒருவழித் தோன்றி ஈது எமது என்றே எடுக்கல்

ஆற்றூர் - கிழக்குத் திசையிலுள்ள நாகநாட்டினை ஆளுகின்ற இருவேறு மன்னர்கள் அம் மணிபல்லவத்திலே ஒரே செவ்வியில் வந்து, இத் தீவு எம்முடையதாகலின் இம் மாமணிப்பீடிகையும் எமக்கே உரியதாகும் என்று இருவரும் தனித் தனியே உரிமை கொண்டாடி அதனைத் தத்தம் நாட்டிற்குக் கொண்டுபோக எண்ணித் தனித்தனியே நிலத்தினின்றும் பெயர்த்தெடுத்தற்குப் பெரிதும் முயன்றும் அது செய்யவியலாதாராகிய பின்னரும்; தம்பெரும் பற்று நீங்கலும் நீங்கார் - அதன்பால் பசைஇய தத்தம் அவாவினை விலக்குதலும் செய்யவியலாதாராய்த் தம்முடையதே என்னும் உரிமையை நிலைநாட்டுதற் பொருட்டு ஒருவரோடொருவர் இகலி; செங்கண் சிவந்து நெஞ்சு புகை உயிர்த்து தம் பெருஞ் சேனையோடு வெஞ்சமம் புரிநாள் - இயற்கையாகவே சிவந்துள்ள தங்கண்கள் சினத்தாலே மேலும் சிவக்க நெஞ்சம் புகையை உயிர்ப்பத் தத்தமக்குரிய பெரிய படைகளைத் திரட்டிக் கொண்டு வெவ்விய போர்த்தொழிலைச் செய்கின்றபொழுது; பெருந்தவ முனிவன் - பெரிய தவத்தினையுடைய வினையினீங்கி விளங்கிய அறிவினையுடைய முனைவனாகிய புத்தபெருமான் எழுந்தருளி; ஈது எமது இருஞ்செரு ஒழிமின் என்றே - இப் பீடிகை எமக்கே உரிமையுடையதாகும் ஆதலால் நீயிர் ஆற்றும் போரினை ஒழிமின் என்று இருவரையும் அமைதியுறச் செய்த பின்னர்; இருந்து அறமுரைக்கும் — அதன்மேலமர்ந்து அவ்விருவருக்கும் தமது அறத்தைச் செவியறிவுறுத்தியருளிய; பொருவு அறு சிறப்பின் புரையோர் ஏத்தும் தரும பீடிகை தோன்றியது - ஒப்பற்ற சிறப்புண்மையாலே மேலோர் வாழ்த்தி வணங்குகின்ற அத் தரும பீடிகை மணிமேகலை கண்ணிற்றுப் புலப்படுவதாயிற்று; என்பதாம்.

(வி - ம்.) நாவலந் தீவிற்குக் கிழக்கே கடலினூடமைந்த நாக நாட்டை ஆட்சி செய்யும் இருவேறு மன்னர் என்க. தீவுந்தமக்கே உரிய தாகலின் அதன் கண்ணமைந்த மாமணிப் பீடிகையும் எமக்கே உரியதாம் என்று உரிமை கொண்டாடி எடுக்க முயன்று இயலாமையால் தம் முடைய தென்னும் உரிமையை நிலைநாட்ட இருவரும் படை கூட்டிப் பெரும்போர் செய்தனர் என்பது கருத்து.

அவர் போரை ஒழித்து அவ்வரசர்க்கு அதன் மேலிருந்து புத்தர் தாமே அறமுரைத்தலாலே அப் பீடிகை பொருவறு சிறப்புடையதாயிற் றென்க.

மற்று அவ்வரசர் அதனைக் கண்டபோது அவர்க்கு அவர்தம் பழம் பிறப்புணர்ச்சி வாராமைக்குக் காரணம் அவர் உள்ளம் அன்பிற்படாது அவாவின்பாற் பட்டிருந்தமை என்க. அன்றி, புத்தன் எழுந்தருளித் தன்மேலமர்ந்து அறமுரைத்த பின்னரே அப் பீடிகைக்கும் அவ்வாற்றல் வந்துற்றதெனக் கோடலுமாம்.

பற்று-பொருள்களின்பால் பசைஇய அறிவு. இருஞ்செரு-பெரும் போர். பெருந்தவ முனிவன்: புத்தன். உலகிலுள்ள பிற புத்த பீடிகைகளுக்கு முற்பிறப்புணர்த்தும் ஆற்றலின்மையின் பொருவறு சிறப்பின் தருமபீடிகை என அதன் தனித்தன்மையை விதந்தோதினர்.

இனி இக் காதையை — ஈங்கு இவள் இன்னணமாக, மணிபல்லவத்திடை நறுமலர்ப் பள்ளித் தூங்கு துயில் எழூஉம் அஞ்சில் ஓதி, காணுள் கண்டு, முளைப்பச் சுதமதி துயரஞ் செய்தனை அறியேன மாற்றம் தாராய் மாதவி மயங்கும் அகன்றனையோ மடவாள் செய்தனள் கொல்லோ அஞ்சுவன் வா எனத் திரிவோள் காணுள் வீழ ஏங்கி உறுவோள் உள்ளி அழுவோள் முன்னர்ப் பீடிகையாகிய ஆசனம், முனிவன் அறமுரைக்கும் அத் தருமபீடிகை தோன்றியது என இயைத்திடுக.

மணிபல்லவத்துத் துயருற்ற காதை முற்றிற்று.

## ௯. பிடிகைகண்டு பிறப்புணர்ந்த காதை

### [ஒன்பதாவது மணிமேகலை மணிபல்லவத்திடைப் பீடிகை கண்டு பிறப்புணர்ந்த பாட்டு]

அஃதாவது: மணிமேகலை மணிபல்லவத்தில் நறுமலர்ப் பள்ளியினின்றும் துயிலுணர்ந்தவள் அவ்விடத்துப் புதுமையால் பெரிதும் மருண்டு ஞாயிறு தோன்றிய பின்னர் எழுந்து யாங்கணும் திரிபவள் தன்முன்னே தோன்றிய புத்தபீடிகையைக் கண்ணுற்றபொழுது அப் பீடிகையின தெய்வத்தன்மை காரணமாகத் தனது பழம் பிறப்பு வரலாற்றை உணர்ந்துகொண்ட செய்தியைக் கூறுஞ்செய்யுள் என்றவாறு.

இதன்கண் ஏது நிகழ்ச்சி எதிர்ந்துள்ள காரணத்தாலே மணிமேகலை புத்தபீடிகையைக் கண்டவுடனேயே இறையன்பாலே அவட்கெய்திய மெய்ப்பாடுகளும், அதனை அன்புடன் வலம் வந்து நிலத்தில் விழுந்து வணங்கி எழுந்தவுடனே தனது முற்பிறப்பின் செய்திகளை எல்லாம் உணர்ந்துகோடலும், முற்பிறப்பிலே பிரமதருமன் என்னும் முனிவனைத் தான கண்டவாறே தன் அகக்கண் முன்னர்க் காண்டலும், முற்பிறப்பிலே காயங்கரை என்னும் யாற்றின் கரையிலிருந்து அம் முனிவர் பெருமான் தனக் குரைத்தவை எல்லாம் அவ்வாறே நிகழ்கின்றன என்று விம்மிதமெய்துதலும், தான அசோதரம் ஆளும இரவிவன்மன் என்னும் அரசனுக்கும் அமுதபதி என்னும அரசிக்கும் மகளாய் இலக்குமி என்னும் அரசிளங்குமரியா யிருந்தமையும்; தான், சித்திபுரம் என்னும் நகரத்து அரசன் தேவியாகிய நீலபதி என்னும் அரசி வயிற்றிற் றோன்றிய அரசிளங் குமரனாகிய இராகுலனுக்கு வாழ்க்கைத்துணைவியாகியதும் பிறவும் ஆகிய செய்திகள் பலவும் மருட்கையணி தோன்ற மிகவும் அழகாகப் புனைந்துரைக்கப்படுகின்றன.

ஆங்கது கண்ட ஆயிழை அறியாள்
காந்தளஞ் செங்கை தலைமேற் குவிந்தன
தலைமேற் குவிந்த கையள் செங்கண்
முலைமேற் கலுழ்ந்துமுத் தத்திர ளுகுத்ததின்
இடமுறை மும்முறை வலமுறை வாராக்
கொடிமின் முகிலொடு நிலஞ்சேர்ந் தென்ன
இறுநுசுப் பலச வெறுநிலஞ் சேர்ந்தாங்கு
எழுவோள் பிறப்பு வழுவின் றுணர்ந்து

தொழுதகை மாதவ துணிபொரு ளுணர்ந்தோய்
காயங் கரையினீ யுரைத்ததை யெல்லாம்
வாயே யாகுதன் மயக்கற உணர்ந்தேன்
காந்தார மென்னுங் கழிபெரு நாட்டுப்
பூருவ தேயம் பொறைகெட வாழும்
அத்தி பதியெனும் அரசாள் வேந்தன்
மைத்துன னாகிய பிரம தருமன்
ஆங்கவன் றன்பால் அணைந்தற னுரைப்போய்
தீங்கனி நாவல் ஓங்குமித் தீவிடை
இன்றேழ் நாளில் இருநில மாக்கள்
நின்றுநடுக் கெய்த நீணில வேந்தே
பூமி நடுக்குறூஉம் போழ்தத் திந்நகர்
நாகநன் னாட்டு நானூறு யோசனை
வியன்பா தலத்து வீழ்ந்துகே டெய்தும்
இதன்பா லொழிகென இருநில வேந்தனும்
மாபெரும் பேரூர் மக்கட் கெல்லாம்
ஆவும் மாவுங் கொண்டுகழி கென்றே
பறையிற் சாற்றி நிறையருந் தானையோ
டிடவய மென்னும் இரும்பதி நீங்கி
வடவயின் அவந்தி மாநகர்ச் செல்வோன்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரைச்
சேயுயர் பூம்பொழிற் பாடிசெய் திருப்ப
எங்கோன் நீயாங் குரைத்தவந் நாளிடைத்
தங்கா தந்நகர் வீழ்ந்துகே டெய்தலும்
மருளறு புலவநின் மலரடி யதனை
அரசொடு மக்க ளெல்லாம் ஈண்டிச்
சூழ்ந்தனர் வணங்கித் தாழ்ந்துபல ஏத்திய
அருளறம் பூண்ட ஒருபே ரின்பத்து
உலகுதுயர் கெடுப்ப அருளிய அந்நாள்
அரவக் கடலொலி அசோதரம் ஆளும்
இரவி வன்மன் ஒருபெருந் தேவி
அலத்தகச் சீறடி அமுதபதி வயிற்று
இலக்குமி யென்னும் பெயர்பெற்றுப் பிறந்தேன்
அத்தி பதியெனும் அரசன் பெருந்தேவி
சித்திபுரம் ஆளுஞ் சீதரன் திருமகள்
நீல பதியெனும் நேரிழை வயிற்றில்
காலை ஞாயிற்றுக் கதிர்போற் றோன்றிய
இராகுலன் றனக்குப் புக்கேன் அவனொடு
பராவரு மரபினின் பாதம் பணிதலும்
எட்டிரு நாளிலிவ் விராகுலன் றன்னைத்

திட்டி விடமுணுஞ் செல்லுயிர் போனால்
தீயழல் அவனொடு சேயிழை மூழ்குவை
ஏது நிகழ்ச்சி ஈங்கின் றாகலின்
கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய
தவாக்களி மூதூர்ச் சென்றுபிறப் பெய்துதி
அணியிழை நினக்கோர் அருந்துயர் வருநாள்
மணிமே கலாதெய்வம் வந்து தோன்றி
அன்றப் பதியில் ஆரிருள் எடுத்துத்
தென்றிசை மருங்கிலோர் தீவிடை வைத்தலும்
வேக வெந்திறல் நாகநாட் டரசர்
சினமா சொழித்து மனமாசு தீர்த்தாங்கு
அறச்செவி திறந்து மறச்செவி யடைத்துப்
பிறவிப்பிணி மருத்துவன் இருந்தற முரைக்கும்
திருந்தொளி யாசனஞ் சென்றுகை தொழுதி
அன்றைப் பகலே உன்பிறப் புணர்ந்தீங்
கின்றியா னுரைத்த உரைதெளி வாயெனச்
சாதுயர் கேட்டுத் தளர்ந்துகு மனத்தேன்
காதலன் பிறப்புங் காட்டா யோவென
ஆங்குனைக் கொணர்ந்த அரும்பெருந் தெய்வம்
பாங்கிற் றோன்றிப் பைந்தொடி கணவனை
ஈங்கிவன் என்னும் என்றெடுத் தோதினை
ஆங்கத் தெய்வதம் வாரா தோவென
ஏங்கினள் அழூஉம் இளங்கொடி தானென்.

# ௬. பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதை

## உரை

### மணிமேகலை புத்தபீடிகையை வலம்வந்து வணங்கலும் பழம் பிறப்புணர்தலும்

### க - ௪ : ஆங்கது.........உணர்ந்து

(இ - ள்.) ஆங்கு அதுகண்ட ஆயிழை அறியாள் - அம் மணிபல்லவத்தின்கண் புத்த பெருமானுக்கியன்ற அத் தரும பீடிகையைக் கண்ணுற் கண்ட துணையானே மணிமேகலை நல்லாள் தான் எய்திய துயரங்களைச் சிறிதும் அறியாள் என்பதென்னை? அவள் தன்னை முழுதும் அறியாதவொரு நிலையினை எய்தினள்; காந்தள் அம்செங்கை தலைமேல் குவிந்தன - அவளுடைய செங் காந்தள்மலர் போன்ற சிவந்த கைகள் தாமே எழுந்து அவள் தலையின்மேல் கூம்பிக் கும்பிட்டன; தலைமேல் குவிந்த கையள் செங்கண் கலுழ்ந்து முலைமேல் முத்தத்திரள் உகுத்து-தாமே தலை மேலேறிக் குவிந்து கும்பிட்ட சிவந்த கைகளையுடைய மணிமேகலை அன்பு மேலீட்டாலே நெஞ்சுருகி அழுது தன் சிவந்த கண்களி னின்றும் கண்ணீர்த்துளிகளை முத்துக்கள் போன்று மிகுதியாக முலைமேற் சொரிந்து; அதினிடம் முறை மும்முறை வலமுறை வாரா - அப் பீடிகையின் மருங்கே சென்று நூல்சொன்ன முறைப் படியே மூன்று முறை அதனை வலமுறையாகச் சுற்றி வந்து; கொடிமின் முகிலொடு நிலம் சேர்ந்தென்ன - கொடியுருவமுடைய மின்னலொன்று முகிலோடே நிலத்தில் வந்து பொருந்தினாற் போன்று; இறும் நுசுப்பு அலச ஆங்கு - ஒடிவது போன்று நுணுகிய தன்னிடை வருந்தும்படி அப் பீடிகையின் முன்னர்; வெறு நிலம் சேர்ந்து எழுவோள் - வெற்றிடத்திலே விழுந்து வணங்கி அந்நிலத்தினின்றும் எழுபவள்; பிறப்பு வழுவு இன்று உணர்ந்து - தனது முற்பிறப்பின வரலாற்றைச் சிறிதும் குற்ற மில்லாமல் நன்குணர்தலாலே; என்க.

(வி - ம்.) அது - அத் தரும பீடிகை. ஆயிழை - மணிமேகலை. அறியாள் என்றது தன்னைக் கவ்விய துயரத்தோடு தன்னையும் அறியாமல் மெய்மறந்தாள் என்பதுபட நின்றது. புத்த பீடிகையைக் கண்டவுடன் மணிமேகலை தன்னை மறத்தற்குக் காரணம் பழவினை காரணமாக அவள் நெஞ்சத்தின்கண் நிகழ்ந்த இறையன்பு மேலிட்டமையே யாகும்.

ஆகவே இஃது அன்பின் மெய்ப்பாடேயாகும். பண்டும் பண்டும் பல பிறப்புக்களிலே புத்தன்பால் அடிப்பட்டுவந்த அன்புதான் வெளிப்படு தற்கியன்ற ஏது நிகழ்ச்சி எதிர்ந்தமையாலே ஈண்டு மணிமேகலைக்கு நிகழும் மெய்ப்பாடுகள் எல்லாம் அவ்விறையன்பின் மிகுதியால் பிறப்பனவே என்றுணர்க.

"இது புதுமை பற்றிவந்த மருட்கை என்னும் மெய்ப்பாடு" என்பாருமுளர். அது பொருந்தாது. என்னை? ஈண்டு மணிமேகலையின் பால்நிகழும் மெய்மறத்தலும் கைகுவித்தலும் கண்ணீரரும்பலும் பிறவும் இறையன்பு மிக்குழி யுண்டாகும் மெய்ப்பாடுகளோடு ஒத்திருத்தலும் மருட்கை யுற்றோர்க்கு இம் மெய்ப்பாடுகள் சிறிதும் ஒவ்வாதிருத் தலும் கீழே தரும் எடுத்துக் காட்டுக்களாலே இனிதினுணர்க. அவற்றுள் இறையன்பின் மேலீட்டால் நிகழும் மெய்ப்பாடுகளை—

"கையுந் தலைமிசை புனையஞ் சலியன
கண்ணும் பொழிமழை யொழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுடன்
உருகும் பரிவின பேறெய்தும்
மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரு
மின்றும் சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்கும் பிடுமவர்
ஆர்வம் பெருகுத லளவின்றால்"

(திருத்தொண்டர் - கசஙஅ)

எனவரும் அருமைச் செய்யுளை ஈண்டு மணிமேகலை நிலைகூறும் பகுதி யோடு ஒப்பு நோக்கி யுணர்க.

இனி, மருட்கை யுற்றோர் மெய்ப்பாடுகள் வருமாறு : "அற்புத அவிநய மறிவரக் கிளப்பிற் சொற்சோர்வுடையது சோர்ந்தகையது, மெய்ம்மயிர் குளிர்ப்பது வியத்தக வுடைய தெய்திய திமைத்தலும் விழித்தலும் இகவாதென் றையமில் புலவர் அறைந்தன ரென்ப" என வரும் அடியார்க்கு நல்லார் மேற்கோளான் (சிலப். ந. கஉ - உசு) உணர்க. அல்லதூஉம், புதுமை பற்றி வந்த மருட்கையணி முன்னைக் காதையிலே கஞ ஆம் அடி முதலாக சஙு ஆம் அடிகாறும் கூறிப் போந்தமையும் அறிக.

அதினிடம் முறை எனக் கண்ணழித்து முறை நான்முறைப்படி என்க. மணிமேகலையின் திருமேனிக்கு மின்னற்கொடியும் அவள் கூந்தலுக்கு முகிலும் உவமை.

இறுநுசுப்பு : வினைத்தொகை. இறும் என்றையுறுதற்குக் காரண மான நுசுப்பு என்க. வெறுநிலம் என்றது வெற்றிடம் என்றவாறு. அலச-வருந்த. வழுவின்றுணர்ந்து என்புழி இன்றி என்னும் குற்றிய விகரம் குற்றியலுகரமாய்த் திரிந்தது.

## மணிமேகலை பிரமதருமன் என்னும் முனிவனை முன்னிலைப்படுத்துப் பழம்பிறப்பி னிகழ்ச்சிகளை உரைத்தல்

கூ - கசு : தொழுதகை.........உரைப்போய்

(இ - ள்.) தொழு தகை மாதவ துணிபொருள் உணர்ந்தோய்-அமரரும் முனிவரும் தொழுதற்கியன்ற தகுதியையுடைய பெரிய தவத்தையுடையோய்! தெளிதற்குரிய மெய்ப்பொருளை உணர்ந்த பெரியோய்!; காயங் கரையின் நீ உரைத்ததை எல்லாம் வாயே ஆகுதல் மயக்கு அற உணர்ந்தேன் - காயங்கரை என்னும் பேரியாற்றின் கரையின்மேல் பூம்பொழிலின்கண்ணிருந்தருளி அடிச்சிக்குத் திருவாய் மலர்ந்தருளிய செய்தி எல்லாம் உண்மையே ஆதலை அடிச்சி ஐயமும் திரிபுமாகிய மயக்கஞ் சிறிதும் இல்லாமல் உணர்ந்துள்ளேன்; காந்தாரம் என்னும் கழிபெரு நாட்டு பூருவதேயம் பொறைகெட வாழும் - காந்தாரம் என்னும் பெயரையுடைய மிகப் பெரிய நாட்டின்கண்ணதாகிய பூருவதேயம் என்னும் நாட்டின்கண் நிலமகட்குப் பொறையாகிய தீவினையாளர் மிகாவண்ணம் செங்கோலோச்சி வாழ்கின்ற; அத்திபதி எனும் அரசு ஆள் வேந்தன் மைத்துனன் ஆகிய பிரமதரும - அத்திபதி என்னும் பெயரோடு அரசாட்சி செய்கின்ற மன்னனுக்கு மைத்துனனாகிய பிரமதருமனென்னும் சிறப்புப் பெயர் பெற்ற பெருமானே!; ஆங்கு அவன்றன்பால் அணைந்து அறன் உரைப்போய்-அப் பூருவதேயத்தே அம் மன்னன்பாற் சென்று அறஞ்செவியறிவுறுத்துகின்ற நீதானும்; என்க.

(வி - ம்.) புத்தபீடிகையை வணங்கி எழும்பொழுதே பழம் பிறப்புணர்ச்சியோடே எழுந்த மணிமேகலை முற்பிறப்பிலே தான் காயங்கரை என்னும் யாற்றங்கரையிற் கண்டளவளாவிய பிரமதத்தமுனிவனைத் தனது அகக்கண் முன்னர்க் கண்டு அக்காலத்தே அவன் கூறியவையனைத்தும் உண்மையாகவே நிகழ்ந்து வருதலைக் கண்டு அம் முனிவனைப் பாராட்டுபவள் அவனை மாதவ எனவும் உணர்ந்தோய் எனவும் முன்னிலைப்படுத்திப் பாராட்டுகின்றபடியாம். காயங்கரை-ஓரியாறு உரைத்ததை என்புழி ஐகாரம் சாரியை. வாய்-உண்மை. காந்தாரம் என்னும் கழிபெரு நாட்டின் கீழ்த்திசை நாட்டை ஆளும் அரசன் எனினுமாம். பூருவம் - கீழ்த்திசை. பிரமதருமன் என்னும் முனிவன் அத்திபதி என்னும் அரசனுடைய மைத்துனனாயிருந்து துறவு பூண்டவன் என்பது இதனாற் பெற்றும். பிரமதரும என்றது விளி. ஆங்கு-அப் பூருவதேயத்தில். அவன்:அத்திபதி என்னும் அரசன். உரைப்போய் : விளி.

## இதுவுமது

### ௧௭ - ௨௮ : தீங்கனி.........செல்வோன்

(இ - ள்.) நீள் நிலவேந்தே தீங்கனி நாவல் ஓங்கும் இத்தீவு இடை இன்று ஏழ் நாளில் - நெடிய நிலத்தை ஆளுகின்ற அத்திபதியரசே! ஈதொன்று கேட்பாயாக! இனிய கனி தரும் நாவல் மரம் நிலைபெற்று ஓங்கி நிற்கும் இந்நாவலந்தீவினிடத்தே இற்றைக்கு ஏழா நாளிலே; இரு நில மாக்கள் நின்று நடுக்கு எய்த - பெரிய நிலத்திலே வாழுகின்ற மாந்தரெல்லாம் செயலற்று நின்று அச்சத்தால் நடுக்கமுறும்படி; பூமி நடுக்குறூஉம் போழ்தத்து - நிலநடுக்கம் உண்டாகும் அப்பொழுது; இந்நகர் நாக நல் நாட்டு நால் நூறு யோசனை வியன் பாதலத்து வீழ்ந்து கேடு எய்தும் — நினது தலைநகரமாகிய இந்த நகரமும் கிழக்குத் திசையிலமைந்த நாகருடைய நல்ல நாட்டின்கண் நானூறு யோசனை நிலப்பரப்பும் அகன்ற பாதலத்திலே அழுந்தி அழிந்தொழியும் காண்!; இதன் பால் ஒழிக என - ஆதலால் இங்கு நின்றும் புறம் போவாயாக! என்று அறிவுறுத்தியருளுதலாலே; இரு நில வேந்தனும் - அது கேட்ட பெரிய நிலத்தை ஆள்கின்ற அத்திபதி யரசன்றானும் நின் பணி தலைமேற்கொண்டு; மா பெரும் பேரூர் மக்கட்கு எல்லாம் - மிகமிகப் பெரியதாகிய தனது நகரத்தே வாழுகின்ற தன் குடிமக்கட்கெல்லாம்; ஆவும் மாவும் கொண்டு கழிக என்றே பறையில் சாற்றி - அச் செய்தியை அறிவிப்பவன் நுங்கள் ஆக்களையும் ஏனைய விலங்கினங்களையும் கைக்கொண்டு அப்பாற் சென்றுய்யுங்கோள் என்று பறையறைவிக்குமாற்றால் அறிவித்து; நிறை அருந் தானையோடு - தன்பாலமைந்த நிறைந்த வெலற்கரிய நால்வேறு வகைப் படைகளோடே; இடவயம் என்னும் இரும்பதி நீங்கி வடவயின் அவந்தி மாநகர்ச் செல்வோன - இடவயம் என்னும் தனது பெரிய தலைநகரத்தினின்றும் புறப்பட்டு வடதிசையிலுள்ள அவந்தி என்னும் பெரிய நகரம் புகச் செல்லுபவன்; என்க.

(வி - ம்.) தீங்கனி நாவலோங்குமித் தீவிடை என்றது நாவலந்தீவத்தை. இதன் பெயர்க் காரணம் தெரித்தோதிய படியாம். இந்நகரும் - என்றது இடவய நகரத்தை. இந் நகரும் நாகநன்னாட்டு நானூறு யோசனையும் எனல் வேண்டிய எண்ணும்மை தொக்கன. நாகநன்னாடு நாவலந்தீவின் கீழ்த்திசையிற் கடலின்கண்ணமைந்ததொரு பெரிய நாடு. இதனை முன்னைக் காதையினும் (௫௪) "கீழ்நில மருங்கின் நாகநாடு" என்று குறிப்பிட்டமை யுணர்க.

"பூமி நடுக்குறூஉம் போழ்தத்து" என்றாரேனும் பூமி நடுக்குறும் என்றும் அப்போழ்தத்து என்றும் அறுத்தோதுக. விலங்குகளில் ஆக்கள்

தம்முயிர் கொடுத்தும் காப்பாற்றப்படுஞ் சிறப்புடைமை பற்றி அதனைத் தனித்து வாங்கி ஏனையவற்றை 'மா' என்னும் பொதுப் பெயரா லோதிய வாறு. ஆவிற்கு அச் சிறப்புண்மையை—

"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும்... ...
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை"

எனவரும் நெட்டிமையார் கூற்றானும்,

"பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி எனுமிவரைக் கைவிட்டு"

எனவரும் கண்ணகியார்கூற்றானும் (சிலப் - உக : ருந - ச) இனிதி னுணர்க

## இதுவுமது

உகூ - ஙஎ : காயங்கரை.........அந்நாள்

(இ - ள்.) காயங்கரை யெனும் பேரியாற்று அடைகரை சேய் உயர் பூம் பொழில் பாடி செய்திருப்ப - காயங்கரை என்னும் பெரிய யாற்றினது சேடைகரையிடத்தே மிகவும் உயர்ந்து வளர்ந்துள்ளதொரு பொழிலின்கண் அவ்வரசன கட்டிரமைத்துப் படைகளோடு தங்கியிருந்தானாக; எங்கோன் நீ ஆங்கு உரைத்த அந்நாளிடை அந்நகர் தங்காது வீழ்ந்து கேடு எய்துதலும் - எம்பெருமானே நீ இடவயநகரத்தே கூறியவாறே அறறைக்கு ஏழாநாளிலேயே அவ்விடவய நகரம் ஒறிதும் எஞ்சாது பாதலத்திலே நில நடுக்கத்தாலே வீழ்ந்தழிந் தொழிதலும்; மருள் அறு புலவ - பேதைமை அற்ற மெய்க்காட்சியாளனே; அரசொடு மக்கள் எல்லாம நின் மலர் அடியதனை ஈண்டி சூழ்ந்தனர் வணங்கித் தாழ்ந்து பல ஏத்திய - அந் நிகழ்ச்சி வாய்மையே ஆதல் அறிந்த அத்திபதி யரசனோடு ஏனைய மக்களும் நின்னுடைய செந்தாமரை மலர் போன்ற திருவடியிற் புகல் புகுந்து நின்னைச் சூழ்ந்துகொண்டு வணங்கித் திருவடியிலே வீழ்ந்து நின் புகழ் பலவும் கூறி ஏத்தியதும்; அருள் அறம் பூண்ட ஒரு பேரின்பத்து - ஆதிபகவன் திருவாய் மலர்ந்தருளிய அனைத்துயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுதலாகிய அருள் அறத்தை மேற்கொள்ளுமாற்றால் வந்துறும் ஒப்பற்ற பேரினபத்தை எய்துவித்து; உலகு துயர் கெடுப்ப அருளிய அந்நாள் - நின்னைச் சரண்புகுந்த அம் மக்களே யன்றி இப் பேருலகத்து வாழும் மாந்தரனைவருடைய துயரத்தையும் போக்கி உய்யக் கொள்வான் திரு

வுளங் கொண்டு அவ்வருளறத்தை எல்லா மக்கட்கும் செவி யறிவுறுத்தியதும் ஆகிய அந்தக் காலத்திலே; என்க.

(வி - ம்.) (உஅ) செல்வோன் பாடி செய்திருப்ப என்க. பாடி - கட்டூர்; படைவீடு. எங்கோன் : முன்னிலைப் புறமொழி. ஆங்கு - அவ் விடவய நகரத்தில். அந்நாள் - அற்றைக்கு ஏழாநாள். தங்காது - சிறிதும்எஞ்சாமல். சூழ்ந்தனர் : முற்றெச்சம். பூண்டமையால் வந் துறும் ஒரு பேரின்பம் என்க. அஃதாவது நிருவாண நிலை. அதனை எய்தினலன்றித் துயரம் போகாமையின் அதனை ஏதுவாக்கினர். தாழ்ந்து பல ஏத்தியதும் அருளியதும் ஆகிய அந்நாள் என இயைக்க. அந்நாள் என்றது அந்தக்காலத்திலே என்பதுபட நின்றது

மணிமேகலை தன் முற்பிறப்பின் வரலாறு கூறுதல்

௬வ - சஎ : அரவ......... பணிதலும்

(இ - ள்.) அரவக் கடல் ஒலி அசோதரம் ஆளும் இரவி வன்மன் ஒரு பெருந்தேவி - ஆரவார முடைய கடல் இடையறு தொலிக்குமாறு இடையறாத பேராரவாரமுடைய அசோதரம் என்னும் நகரத்திருந்து அரசாட்சி செய்கின்ற இரவிவன்மன் என்னும் அரசனுடைய முதன் மனைவியாகிய கோப்பெருந்தேவி; அலத்தகச் சீறடி அமுதபதி வயிற்று இலக்குமி என்னும் பெயர் பெற்றுப் பிறந்தேன் - செம்பஞ்சிக் குழம்பூட்டிய சிறிய அடிகளை யுடைய அமுதபதி என்பவளுடைய வயிற்றிலே அடிச்சி இலக்குமி என்னும் பெயருடையேனாய்ப் பிறந்திருந்தேன ; அத்திபதி எனும் அரசன் பெருந்தேவி - அடிச்சிக்குப் பெதும்பைப் பருவம் வந்துற்றபோது மான், அத்திபதி என்னும் அரச னுடைய கோப்பெருந் தேவியும்; சித்திபுரம் ஆளும் சீதரன் திருமகள் - சித்திபுரத்தில் ஆட்சி செய்யும் சீதரன் என்னும் அரசனுடைய அழகிய மகளும் ஆகிய ; நீலபதி என்னும் நேர் இழைவயிற்றின் காலை கதிர் ஞாயிறு போல் தோன்றிய - நீலபதி யென்னும் நேரிய அணிகலன் அணிந்த அரசியின திருவயிற்றிலே காலையில் தோன்றும் கதிர்களையுடைய ஞாயிறு போல் தோன் றிய; இராகுலன் தனக்குப் புக்கேன - இராகுலன் எனனும் கோக்குமரனுக்கு வாழ்க்கைத் துணையாகப் புகுந்தேன் ; அவ னோடும் பாரவரும் மரபின் நின் பாதம் பணிதலும் ; ஒரு நாள் என் கணவனாகிய இராகுலனோடு வந்து யான் நின்னைக் கண்டு புகழ்தற்கரிய முறைமையினையுடைய நின் திருவடிகளிலே வீழ்ந்து வணங்கினேனாக அப்பொழுது எனக.

(வி - ம்.) அரவக்கடல் போன்ற ஒலியினையுடைய அசோதர நகரம் என்க. அலத்தகம் - செம்பஞ்சிக் குழம்பு. அமுதபதி : பெயர். இலக்குமி என்னும் பெயர் பெற்றுப் பிறந்தேன் என்றாரேனும் பிறந்து இலக்குமி என்னும் பெயர் பெற்றேன் என்பது கருத்தாகக் கொள்க.

சிதரன் - சிதர மன்னன். காலைக் கதிர் ஞாயிறுபோல் என்க. புக்கேன் என்றது வாழ்க்கைத் துணைவியாகப் புக்கேன் என்றவாறு. பராவு அரும் - பராவுதல் அரிய.

இதுவுமது

சஅ - ருஎ : எட்டிரு.........வைத்தலும்

(இ - ள்.) எட்டு இரு நாளின் இவ் இராகுலன் தன்னை திட்டிவிடம் உண்ணும் - எம்பெருமான் அடிச்சிலையை நோக்கி இற்றைக்குப் பதினாறுநாள் நின் கணவனாகிய இந்த இராகுலனைத் திட்டிவிடம் என்னும் நாகம் உயிர் பருகிவிடும்; செல் உயிர் போனால் சேயிழை அவனொடு தீ அழல் மூழ்குவை - செல்லுதற்குரிய போகூழ் தலைப்பட்ட நின் கணவன் உயிர் போனக்கால் நீ அவனோடு ஈமத் தீயாகிய நெருப்பில் முழுகி உயிர் துறப்பாய் காண் என்றும்; ஈங்கு ஏது நிகழ்ச்சி இன்று ஆதலின் - அப்பால் இந் நாட்டில் நினக்குப் பழவினையாலுண்டாகும் நிகழ்ச்சி யாதும் இல்லையாதலின் ; கவேரகன்னிப் பெயரொடு விளங்கிய தவாக் களி மூதூர் சென்று பிறப்பு எய்துதி - நீ கவேரன் மகளாகிய காவிரியின் பெயரை அடை மொழியாகப் பெற்றுக் கெடாத மகிழ்ச்சியையுடைய பழைமையுடைய காவிரிப்பூம் பட்டினத்திலே போய்ப் பிறப்பாய் காண் என்றும்; அணியிழை நினக்கு ஓர் அருந்துயர் வருநாள் மணிமேகலா தெய்வம் வந்து தோன்றி - அழகிய அணிகலன்களையுடைய இலக்குமியே இன்னும் கேள், இம்மை மாறி மறுமையாகி அந்தப் பிறப்பிலே நின்னால் கடத்தற்கரிய ஒப்பற்ற துயர் (ஒன்று வந்துறும்) வந்துறுகின்ற அந்த நாளிலே, மணிமேகலா தெய்வம் என்னும் நின்குல தெய்வம் தானே நின்னை அத் துயரத்தினின்றும் எடுத்து நன்னெறிப் படுத்துதற்கு எளிவந்து நின் கண் முன தோன்றி; அன்று அப் பதியின் ஆர் இருள் எடுத்துத் தென் திசை மருங்கில் ஓர் தீவு இடைவைத்தலும் - அற்றை நாளிலேயே நள்ளிரவிலே நின்னை எடுத்துப் போய்த் தென்திசையிலமைந்த ஒரு தீவின்கண் இட்ட பின்னர்; என்க.

(வி - ம்.) இராகுலன் - முற்பிறப்பில் இலக்குமியா யிருந்த மணிமேகலையின் காதலன். எட்டிருநாள் - பதினாறும் நாள். இதனால் பிரமதத்த முனிவர் இந் நிகழ்ச்சிகளை அவள் கணவன் அறியாவண்ணம் இலக்குமிக்கு மட்டும் தனித்துக் கூறியதாதல் வேண்டும் என்று கருதுக. செல்லுயிர் என்றாள் இறந்துபாடுறும் போகூழ் வந்தெய்தப் பெற்ற உயிர் என்பதறிவித்தற்கு.

திட்டிவிடம் - தன் நோக்கம் பட்ட துணையானே உயிர்கள் இறந்து படுதற்குக் காரணமான கொடிய நச்சுத் தன்மையை நோக்கத்திலேயே

கொண்டிருக்கும் ஒரு நாகப் பாம்பு. இதனால் இதற்குத் 'திட்டிவிடம் என்பதே பெயராயிற்று. புத்தர் பிறந்த பிறப்புக்களிலே 'திட்டிவிடம்' என்னும் நச்சுப் பாம்பாகப் பிறந்து கண் விழித்தாற் பிறவுயிர் சாமென் றஞ்சிக் கண் விழியாதே கிடந்தார் என்னும் ஒரு கதை புத்தசாதகக் கதையிலுள்ள தென்பது நீலகேசி உரையிற் காணப்படுதலு முணர்க.

"திட்டிவிட மன்ன கற்பின் செல்வியை"

என்பது கம்பர் வாக்கு; (தாடகை - கo.)

கவேரன் என்னும் அரசன் தவம் செய்து பெற்ற பெண் காவிரிநதி யாகினள் என்பது பௌராணிக மதம். கவேரகன்னிப் பெயரொடு விளங்கிய மூதூர் என்றது காவேரி என்னும் அடைபுணர்த்தோதப்படும் காவிரிப் பூம்பட்டினத்தை. அருந்துயர் என்றது-கடத்தற்கரிய துயரம் என்றவாறு. அஃதாவது உதயகுமரன் மணிமேகலையின்பாற் கழிபெருங் காமமுடையவனாய் அவளைக் கைப்பற்ற முயன்றதனை. மணிமேகலையின் நெஞ்சமும் அவன் பின்னர்ப் போனமையால் அஃது அவளால் கடத்தற் கரிய துயர் ஆயிற்றென்பார் ஆயிழை நினக்கோர் அருந்துயர் வரும் நாள் என்று பிரமதத்த முனிவர் அறிவித்தனர் என்றவாறு. அப் பதி - பூம் புகார் நகரம். தீவு - மணிபல்லவம்.

இதுவுமது

ரு அ - கூச:  வேக..........தெளிவாயென

(இ - ள்.) வேக வெந்திறல் நாக நாட்டு அரசர் சினமாசு ஒழித்து - ஒருவர்பால் ஒருவர் கொண்ட சினத்தினது வேகத் தையும் வெவ்விய போராற்றலையும் உடையராய், நெஞ்சு புகை யுயிர்த்துத் தம் பெருஞ்சேனையுடனே போர் செய்த நாகநாட்டரச ரிருவருடைய இவ்வெஞ்சினமாகிய மனவழுக்கினை முதற்கண் அகற்றி நண்பராக்கிப் பின்னரும்; மனம் மாசு தீர்த்து ஆங்கு மறச் செவி அடைத்து - அம் மன்னவர் முதலிய மக்கட்கு அழுக் காறும் அவாவும் வெகுளியும் இன்னாச் சொல்லும் ஆகிய தீவினை கட்கு நிலைக்களமாகிய மனத்தின அழுக்குகளை அகற்றியவாறே பின்னும் தீவினைகட்குக் காரணமான தீச் சொற்களைக் கேட்டுப் பயின்ற அவர் தம் மறச் செவிகளை மீட்டும் அவற்றைக் கேளாத படி அடைத்து; அறச் செவி திறந்து-எக்காலத்தும் நல்லறங் களையே நயந்து கேட்குமாறு அவருடைய அறச் செவிகளைத் திறந்துவிட்டு; பிறவிப்பிணி மருத்துவன் - பிறப்பாகிய பிணிக்கு மருத்துவம் செய்பவனாகிய புத்த பெருமான்; இருந்து அறம் உரைக்கும் திருந்து ஒளி ஆசனம் சென்று கை தொழுதி - தன் னைக் கண்டோர் திருந்துதற்குக் காரணமான தெய்வ வொளி படைத்த பீடிகையாகிய இருக்கையின் மருங்கே சென்று கண்டு அதனைக் கைதொழுது வணங்குவாய் என்றும்; அன்றைப்

பகலை உன் பிறப்பு உணர்ந்து ஈங்கு இன்று யான் உரைத்த உரை தெளிவாய் என - அற்றைநாட் பகற் பொழுதிலேயே உன்னுடைய இப்பிறப்பின் வரலாற்றினை உணர்ந்து மேலும் இற்றைநாள் இங்கியான் உனக்குக் கூறுகின்ற இம் மொழியெல்லாம் வாய்மையே ஆதலையும் நீயே உணர்ந்து கொள்வாய் என்றும் கூறுகின்றனை என்றாள் என்க.

(வி - ரை.) வேகம் - சினமிகுதி. திறல் - போர் செய்யும் ஆற்றல். மனமாசு - அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் என்னும் நான்குமாம். மறச்செவி - தீயவற்றைக் கேட்டற்கவாவும் செவி. இது பயிற்சியா லெய்துமொரு வழக்கம். அறச்செவி - அறங்கேட்டற்கு அவாவுடைய செவி. இதுவும் பயிற்சியா லெய்துவதேயாம். பிறவிப்பிணி மருத்துவன் - பிறவிநோய் தீர்தற் கியன்ற நல்லற மருந்துகளை ஊட்டி மீண்டும் பிறவிப்பிணி வாராமற் செய்யும் மருத்துவனாகிய புத்த பெருமான். ஈங்கு என்றது முற்பிறப்பிலே பிரமதத்த முனிவரைக் கண்ட இடத்தை. உரை வாயேயாதலை நீயே தெளிந்து கொள்ளுவாய் என்று நீ கூறியவாறே இற்றைநாள் 'காயங்கரையின் நீ உரைத்ததையெல்லாம் வாயே ஆகுதல் மயக்கற உணர்ந்தேன்' என்று முன்பே நுதலிப் புகுதல் (௪௦ - ௪௧) ஈண்டு நினைக.

## (முற்பிறப்பிலே இலக்குமி யாகிய) மணிமேகலை பிரமதத்தனை வினவினமையும் அவன் கூறிய மாற்றமும் :

சூ௫ - ௭௧ : சாதுயர்..........தானேன்

(இ - ள்.) சாதுயர் கேட்டுத் தளர்ந்து உகும் மனத்தேன் காதலன் பிறப்பும் காட்டாயோ என - என ஆருயிர்க் கணவனை திட்டிவிடத்தாற் சாதலும் யான் தீயினிற் புகுந்து சாதலும் ஆகிய சாதற்றுன்பங்களைக் கேட்டு அப்பொழுதே தளர்ந்துருகி ஒழுகும் மனத்தை யுடையேனாகிய யான் பெரும! அடிச்சியின் மறுபிறப்பிஃதென்று மட்டும் கூறியருளினை அதனினும் காட்டில் யான் பெரிதும் அறிந்துகொள்ள விரும்புகின்ற என் காதலன் மறுமையில் எய்தும் பிறப்பினையும் அறிவித்தருள மாட்டாயோ? என்று நின்னை அவலத்தோடு வினவ; ஆங்கு உனைக்கொணர்ந்த அரும் பெருந்தெய்வம பாங்கின் தோன்றி ஈங்கு இவன் பைந்தொடி கணவனை என்னும் என்று எடுத்து ஓதினை - அது கேட்ட நீ அம் மணிபல்லவத்திற்கு உன்னைக் கொண்டுவந்த அந்த மாபெருஞ் சிறப்புடைய மணிமேகலா தெய்வந்தானே மீண்டும் நின்பக்கலிலே வந்து தோன்றி இன்ன விடத்துப் பிறந்திருக்கின்ற இன்ன பெயருடையவனே நின் கணவனாகிய இராகுலன் என்று அறிவிக்கும் என்று எடுத்துக்கூறு கின்றனை; ஆங்கு அத்தெய்வம் வாராதோ என இளங்கொடி ஏங்கினள் அழூஉம் - நீ கூறியாங்கு அவ்வரும் பெருந் தெய்வம் (இப்பொழுது என்பக்க

லிலே வரத்பாலது) வாராதொழியுமோ? என இளமையுடைய அம மணிமேகலை பின்னும் தன் பேதைமை காரணமாக ஏங்கி அழாநின்றனள்; என்பதாம்.

(வி - ம்.) (சஅ) "எட்டிரு நாளிலிவ் விராகுலன் றிட்டி விட முணும்" என்பது முதலாக; (கூச) "இன்றியான் உரைத்த உரை தெளிவாய்" என்பதீருக நீ காயங்கரையில் உரைத்தவை எல்லாம் வாயே ஆகுதல் மயக்கற வுணர்ந்தேன். பின்னர் அரும் பெருந் தெய்வம் பாங்கிற்றேன்றி ஈங்கு இவன் என்னும் என்று எடுத்தோதினை அல்லையோ! அத் தெய்வம் வரக் கண்டிலேன் அது மட்டும் பொய்ப்ப ஓரோ வழி வாரா தொழியுமோ என்று சொல்லி ஏங்கி அழுதனள் என்றவாறு.

காதலன் சாவாகிய துயர் கேட்டு என்றவாறு. காதலன் பிறப்புங் காட்டாயோ? என்றது என் பிறப்புக் காட்டினை அங்ஙனமே காதலன் பிறப்புங் காட்டாயோ என்பதுபட நின்றது. பைந்தொடி: முன்னிலைப் புறமொழி. கணவனை: ஐகாரம் அசைச்சொல். நின் கணவன் இன்ன விடத்தே பிறந்து இப் பெயரோடிருக்கும் இவன் என்று நினக்குக் கூறும் என்று எடுத்தோதினை என்றவாறு. அது மட்டும் பொய்க்குமோ என்றையுற்றேங்கி அழுதனள் என்க.

இனி, இக் காதையை—ஆங்கு அது கண்ட ஆயிழை அறியாள் கைதலைமேற் குவிந்தன, குவிந்த கையள் வலமுறை வாராச் சேர்ந்து எழுவோள் உணர்ந்து மாதவ உணர்ந்தோய் நீ உரைத்ததை எல்லாம் வாயே ஆகுதல் உணர்ந்தேன், பிரமதரும! உரைப்போய் இந்நகர் கேடெய்தும் ஒழிகெனச் சாற்றிச் செல்வோன் இருப்ப நீ உரைத்த கேடெய்தும் நாளிடைகேடெய்தலும், புலவ அருளிய அந்நாள் பிறந்தேன் புக்கேன் பணிதலும், விடமுணும் மூழ்குவை ஈங்கின்றுதலின் சென்று பிறப்பெய் துதி துயர்வருநாள் தெய்வம் தோன்றி எடுத்து வைத்தலும் சென்று தொழுதி தெளிவாய் என, தளர்ந்துகு மனத்தேன் காட்டாயோ என, தெய்வம் தோன்றி இவன் என்னும் என்று ஓதினை அத் தெய்வம் வாராதோ என இளங்கொடி அழூஉம் என்றியைத்திடுக.

பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதை முற்றிற்று.

# ௧௦. மந்திரங் கொடுத்த காதை

[பத்தாவது மணிமேகலா தெய்வம் வந்து தோன்றி
மந்திரங் கொடுத்த பாட்டு]

அஃதாவது: மணிமேகலையை மணிபல்லவத்திடை வைத்து நீங்கிய மணிமேகலா தெய்வம் அவள் மாமலர்ப் பள்ளியினின்றும் துயிலுணர்ந்து மருட்கையாலே பெரிதும் வருந்தி எழுந்து யாங்கணும் திரிபவள் தந்தையை உள்ளி ஐயாவோ என்று அழுது புலம்புங்கால் தன் கண்ணுக்குத் தோன்றிய மாமணிப் பீடிகையைக் கண்டு தன்னையும் மறந்து அதனை வலஞ்செய்து வீழ்ந்து வணங்கி எழுந்த பொழுது தனது பழம்பிறப்புணர்ச்சியோ டெழுந்தாளன்றே; எழுந்தவள் முற்பிறப்பில் காயங்கரை என்னுமிடத்துப் பிரமதத்தன் கூறியவை எல்லாம் வாய்மையாதல் கண்டு அவனை முன்னிலைப்படுத்து அவன் உரைத்தவை எல்லாம் உரைத்து, யான பழம் பிறப்புணர்ந்துழி மாபெருந் தெய்வம் வந்து உனக்குப் பேருதவி செய்யும் என்றாயன்றே! அத் தெய்வம் வந்திலதே என் செய்கோ? என்று அழுபவள் முன்னர் மணிமேகலா தெய்வம் தோன்றி அவள் மேற் கொள்ளும் அருளறம் முட்டின்றி நடைபெறுதற்கு இன்றியமையாத மந்திரஞ் சிலவற்றைச் செவியறிவுறுத்த செய்தியைக் கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இதன்கண்—மணிமேகலா தெய்வம் வந்தவுடன் மணிமேகலைக்கு அப் பீடிகையே நங்கடவுள் என்றுணர்த்தற் பொருட்டு அதனைப் புகழ்ந்தேத்தி வணங்குதலும்; மணிமேகலை அத் தெய்வத்தைத் தன் கணவனாகிய இராகுலன எங்குளன் என்று வினாதலும், அத் தெய்வம் முற்பிறப்பிலே இலக்குமியாகி இராகுலனோடு இல்லறம் நிகழ்த்துங்கால் மணிமேகலை சாதுசக்கரன் என்னும் துறவோனை உண்டி கொடுத்து வழிபாடு செய்தமையும் அதனாலாம் பயனும் அம் முற்பிறப்பிலே மாதவியும் சுதமதியும் அவட்குடன் பிறந்தாராயிருந்தமையும் இப் பிறப்பில் மணிமேகலைக்கு அவர் தாயும் தோழியுமாயிருப்பதுவும்; இனி எதிர்காலத்தே நிகழவிருப்பனவும் இனிதின் அறிவுறுத்தலும் பின்னர் மந்திரங்களைச் செவியறிவுறுத்தலும் பிறவும், அழகாகக் கூறப்படுகின்றன.

அறவோ னாசனத் தாயிழை யறிந்த
பிறவிய ளாயினள் பெற்றியு மைத்தென
விரைமல ரேந்தி விசும்பூ டிழிந்து
பொருவறு பூங்கொடி பூமியிற் பொலிந்தென
வந்து தோன்றிய மணிமே கலாதெய்வம்
முந்தைப் பிறப்பெய்தி நின்றோள் கேட்ப
உயிர்க ளெல்லாம் உணர்வுபா ழாகிப்
பொருள்வழங்கு செவித்துளை தூர்ந்தறி விழந்த
வறந்தலை யுலகத் தறம்பாடு சிறக்கச்
சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலையோர்
இளவள ஞாயிறு தோன்றிய தென்ன
நீயோ தோன்றினை நின்னடி பணிந்தேன்
நீயே யாகிநிற் கமைந்தஇவ் வாசனம்
நாமிசை வைத்தேன் தலைமிசைக் கொண்டேன்
பூமிசை யேற்றினேன் புலம்பறு கென்றே
வலங்கொண் டாசனம் வணங்குவோள் முன்னர்ப்
பொலங்கொடி நிலமிசைச் சேர்ந்தெனப் பொருந்தி
உன்றிரு வருளால் என்பிறப் புணர்ந்தேன்
என்பெருங் கணவன் யாங்குள னென்றலும்
இலக்குமி கேளாய் இராகுலன் றன்னொடு
புலத்தகை யெய்தினை பூம்பொழி லகவயின்
இடங்கழி காமமொ டடங்கா னயவன்
மடந்தை மெல்லியல் மலரடி வணங்குழிச்
சாது சக்கரன் மீவிசும்பு திரிவோன்
தெருமர லொழித்தாங் கிரத்தின தீவத்துத்
தரும சக்கரம் உருட்டினன் வருவோன்
வெங்கதி ரமயத்து வியன்பொழி லகவயின்
வந்து தோன்றலும் மயங்கினை கலங்கி
மெல்லியல் கண்டனை மெய்ந்நடுக் குற்றனை
நல்கூர் நுசுப்பினை நாணினை யிறைஞ்ச
இராகுலன் வந்தோன் யாரென வெகுளலும்
விராமலர்க் கூந்தல் அவன்வாய் புதையா
வானூ டிழிந்தோன் மலரடி வணங்காது
நாநல் கூர்ந்தனை என்றவன் றன்னொடு
பகையறு பாத்தியன் பாதம் பணிந்தாங்
கமர கேள்நின் தமரல மாயினும்
அந்நீந் தண்ணீர் அமுதொடு கொணர்கேம்
உண்டி யாமுன் குறிப்பின மென்றலும்
எம்மனை யுண்கேன் ஈங்குக் கொணர்கென
அந்நா ளவனுண் டருளிய அவ்வறம்

நின்னுங் கொழியாது நின்பிறப் பறுத்திடும்
உவவன மருங்கில் உன்பாற் றோன்றிய
உதய குமரன் அவனுன் னிராகுலன்
ஆங்கவ னன்றியும் அவன்பா லுள்ளம்
நீங்காத் தன்மை நினக்குமுண் டாகலின்
கந்த சாலியின் கழிபெரு வித்தோர்
வெந்துகு வெங்களர் வீழ்வது போன்மென
அறத்தின் வித்தாங் காகிய வுன்னையோர்
திறப்படற் கேதுவாய்ச் சேயிழை செய்தேன்
இன்னுங் கேளாய் இலக்குமி நீநின்
தவ்வைய ராவோர் தாரையும் வீரையும்
ஆங்கவர் தம்மை யங்கநாட் டகவயின்
கச்சய மாளுங் கழற்கால் வேந்தன்
துச்சய னென்போன் ஒருவன் கொண்டனன்
அவருட னங்கவன் அகன்மலை யாடிக்
கங்கைப் பேரியாற் றடைகரை யிருந்துழி
மறவண நீத்த மாசறு கேள்வி
அறவண னங்கவன் பாற்சென் றோனை
ஈங்கு வந்தீர் யாரென் றெழுந்தவன்
பாங்குளி மாதவன் பாதம் பணிதலும்
ஆதி முதல்வன் அறவாழி யாள்வோன்
மாதுய ரெவ்வ மக்களை நீக்கி
விலங்குந் தம்முள் வெரூஉம்பகை நீக்கி
உடங்குயிர் வாழ்கவென் றுள்ளங் கசிந்துகந்
தொன்றுகா லத்து நின்றற முரைத்த
குன்ற மருங்கிற் குற்றங் கெடுக்கும்
பாத பங்கயங் கிடத்தலின் ஈங்கிது
பாதபங் கயமலை எனும்பெயர்த் தாயது
தொழுது வலங்கொள்ள வந்தேன் ஈங்கிப்
பழுதில் காட்சியீர் நீயிருந் தொழுமென
அன்றவ னுரைத்த அவ்வுரை பிழையாது
சென்றுகை தொழுது சிறப்புச் செய்தலின்
மாதவி யாகியுஞ் சுதமதி யாகியும்
கோதையஞ் சாயல் நின்னொடு கூடினர்
அறிபிறப் புற்றனை அறம்பா டறிந்தனை
பிறவற முரைப்போர் பெற்றியுங் கேட்குவை
பல்வேறு சமயப் படிற்றுரை யெல்லாம்
அல்லியங் கோதை கேட்குறு மந்நாள்
இளையள் வளையோ ளென்றுனக் கியாவரும்
விளைபொரு ளுரையார் வேற்றுரு வெய்தவும்

அந்தரந் திரியவும் ஆக்குமிவ் வருந்திறன்
மந்திரங் கொள்கென வாய்மையி னோதி
மதிநாண் முற்றிய மங்கலத் திருநாள்
பொதுவறி விகழ்ந்து புலமுறு மாதவன்
திருவற மெய்துதல் சித்தமென் றுணர்நீ
மன்பெரும் பீடிகை வணங்கினை யேத்தி
நின்பதிப் புகுவாய் என்றெழுந் தோங்கி
மறந்தது முண்டென மறித்தாங் கிழிந்து
சிறந்த கொள்கைச் சேயிழை கேளாய்
மக்கள் யாக்கை உணவின் பிண்டம்
இப்பெரு மந்திரம் இரும்பசி யறுக்குமென்
றுங்கது கொடுத்தாங் கந்தர மெழுந்து
நீங்கிய தாங்கு நெடுந்தெய்வந் தானென்.

---

## ௧௦. மந்திரங் கொடுத்த காதை

### உரை

தனிமைத்துயராலே தெய்வத்தின் வரவு காணாமல் அழுது நிற்கும் மணிமேகலை காணும்படி மணிமேகலா தெய்வம் வானத்தினின்றும் மலர் ஏந்திய கையளாய் இறங்கி வந்து மலர்தூவி மணிமேகலை கேட்கும் வண்ணம் புத்த பீடிகையைப் பரவிப் பணிந்து ஏத்தல்

௧ – ௧௨ : அறவோன்.........பணிந்தேன்

(இ - ள்.) அறவோன் ஆசனத்து ஆயிழை அறிந்த பிற வியள் ஆயினள் பெற்றியும் ஐது என – புத்த பெருமானுடைய இருக்கையாகிய பீடிகையைக் கண்டு கை தொழுது வணங்கினமை யாலே மணிமேகலை நல்லாள் தன் பழம்பிறப்பை அறிந்தவளா யினள் இனி மேலே நன்னெறிக்கண் செல்லுதற் கியன்ற பழ வினையாகிய ஏதுவும் நன்கு முதிர்ந்து அவள் பண்பும் அழகிதா யிருக்கின்றது என மகிழ்ந்து, விரை மலர் ஏந்தி - கைகளிலே பீடிகைக்குப் பலிதூவுதற்குரிய நறுமணங் கமழும் மலர்களை ஏந்திக்கொண்டு; விசும்பு ஊடு இழிந்து - மணிமேகலை கண்காண வானத்துள்ளிருந்து இறங்கி; பொருவு அறு பூங்கொடி பூமியிற் போலிந்தென வந்து தோன்றிய - ஒப்பற்ற காமவல்லி என் னும் வானநாட்டுப் பூங்கொடி ஒன்று நிலவுலகத்திலிறங்கிப் பொலிந்து தோன்றுமாறு போலே மணிமேகலையின் பக்கலிலே வந்து தோன்றிய; மணிமேகலா தெய்வம் முந்தைப் பிறப்பு எய்தி நின்றோள் கேட்ப - மணிமேகலா தெய்வமானது தனது பழம்பிறப்பு புணர்ச்சி கைவரப் பெற்றமையால் தன்வரவினை எதிர் பார்த்து அழுது நிற்கும் அம் மணிமேகலை கேட்கும்படி, பீடி கையை நோக்கிக் கை தொழுது கூறுபவள்; உயிர்கள் எல்லாம் உணர்வு பாழாகி பொருள் வழங்கு செவித்துளை தூர்ந்து அறிவு இழந்த வறந்தலை உலகத்து - எந்தையே! இந்நிலவுலகத்திலே வாழுகின்ற மாந்தரெல்லாம் தமக்குரிய நல்லுணர்வு அழியப் பெற்று உறுதிப் பொருள்கள் புகும் வழியாகிய அவர்தம் செவித் துளை யெல்லாம் தீமொழிகள் செறிந்து தூர்ந்து போதலாலே மெய்யறிவினை இழந்தொழிந்தமையால் மெய்யறிவின் திறத்திலே

வற்கடமுற்றுக் கிடந்த இந் நிலவுலகத்திலே; அறம் பாடு சிறக்க - மீண்டும் அந் நல்லறம் தனக்குரிய பெருமையோடு சிறந்து தழைக்கும்படி; சுடர் வழக்கு அற்றுத் தடுமாறு காலை ஓர் இளவள ஞாயிறு தோன்றியது என்ன - ஞாயிற்று மண்டிலம் தோன்றாமலொழிந்து போதலாலே உயிர்கள் நெறியறியாது தடுமாற்றமுறுகின்ற பொழுது ஒப்பற்ற இளஞாயிறு குணகடலினின்றுந் தோன்றினாற் போலே; நீ தோன்றினை; துடிதலோகம் ஒழிய நீ வந்து பிறந்து இவ்வுலகத்தை உய்யக் கொண்டனை யல்லையோ!; நின் அடி பணிந்தேன் - நின் மலர் அடிகளில் இம் மலர்களை இட்டுப் பணிகின்றேன் காண்! என்றாள் என்க.

(வி - ம்.) இது மணிமேகலா தெய்வம் மணிமேகலையை நன்னெறிப் படுத்தும் குறிக்கோள் உடையதாகலின் ஈண்டுத் தமக்குத் தெய்வம் புத்த பெருமானே என்றும், அத் தெய்வத்தைப் பீடிகையாகிய அவனுடைய அறிகுறியை அவனாகவே மதித்து இவ்வாறு வாழ்த்தி வணங்குதல் வேண்டும் என்றும் அறிவுறுத்தற் பொருட்டு அதனை வாயாற் கூறாமல் தனது செயலாலே அறிவுறுத்திய படியாம்.

மக்கட்கு நல்லறிவு கொளுத்தும் நல்லாசிரியன் எந்தச் சமயத்தைச் சார்ந்தவனாயினும் தனது சொல்லாலே அறிவுறுத்துதலினுங் காட்டில் தனது ஒழுக்கத்தாலே அறிவுறுத்துதலே தலைசிறந்த வழியாகும் என்பதனை ஈண்டு இம் மாபெருந் தெய்வத்தின் செயலே அறிவுறுத்துதலறிக.

உலகத்தில் அறவொழுக்கம் தலைதடுமாறும்பொழுதெல்லாம் அறவோர் தோன்றி இவ் வுலகத்தை மீண்டும் அறந்தலை நிறுத்துவர் என்பது பல சமயத்தார்க்கும் ஒப்ப முடிந்ததொரு கொள்கையாம். அதற்கிணங்கவே ஈண்டுப் புத்தருடைய பிறப்பு நிகழ்ச்சியையும் இத் தெய்வம் - உயிர்கள் எல்லாம்.........நீயோ தோன்றினை! என்று பாராட்டுதலும் அறிக. பௌத்த சமயத்தவர் உலகம் அநாதியாக உள்ளது அதன்கண் ஆருயிரை அறஞ் செவியறிவுறுத்திய புத்த பெருமானே இறைவன் ஆவான் என்னும் சித்தாந்த முடையவராவார். அப் புத்த பெருமானைப் பீடிகையிற் கண்டு பீடிகையை அவனாகவே கருதி வழிபாடு செய்தல் வேண்டும் என்பது அவர்தம் பிடகநூல் காட்டும் நெறியாம். இதனை, மேலே "நீயேயாகி நிற்கமைந்த இவ்வாசனம்" என இத் தெய்வம் கூறுமாற்றானுணர்க.

இனிப் பௌத்தர்கள் புத்த பெருமானையே கடவுளாகக் கருதுபவர் என்பதனை—

"முற்றுணர்ந்து புவிமீது கொலை முதலா
 கியதீமை முனிந்து சாந்த,
முற்றிருந்து கருணையினாற் பரதுக்க
 அக்கனு யும்ப ரோடு,

கற்றுணர்ந்த முனிவரருங் கண்டுதொழப்
பிடகநூல் கனிவான் முன்னம்,
சொற்றிருந்த வுரைத்தருளுந் தோன்றலே
கடவுள்அருட் டோன்ற லாவான்''

எனவரும் மெய்ஞ்ஞான விளக்கத்தானும் (கஉ - புத்த...சருக்கம்) உணர்க. ஈண்டு மணிமேகலா தெய்வம் சொல்வனவும் செய்வனவும் மணிமேகலை கண்டும் கேட்டும் அறிந்து கொள்ளற் பொருட்டேயாம் என்பது ''முந்தைப் பிறப்பெய்தி நின்றோள்கேட்ப'' என்றமையாற் பெறும்.

சுடர் வழுக்கற்றுத் தடுமாறு காலை ஞாயிறு தோன்றிய தென்ன என்னும் உவமை இல்பொருளுவமையாம், என்னை? சுடர் வழுக்கறுதல் எஞ்ஞான்று மின்மையின்.

நீயோ தோன்றினை என்புழி ஓகாரம் பிற கடவுளர் அவ்வாறு தோன்றினாரிலர் எனப் பொருள் கொள்ளின் பிரிநிலையாம்; வாளாது அசைநிலை என்னலுமாம்.

## இதுவுமது

### கரு - கசு: நீயே.........முன்னர்

(இ - ள்.) நீயே ஆகி நிற்கு அமைந்த இவ் ஆசனம் நாமிசை வைத்தேன் - பெருமானே எம்மனோர்க்கு நீயாகவே காட்சி தருகின்ற நீ இருந்தற முரைத்தற் கமைந்த இத் தரும பீடிகையை யான் இடையறாது வாழ்த்துமாற்றால் எனது நாவின் மேலேயே வைத்திருக்கின்றேன்; தலை மிசைக் கொண்டேன் - தலையாலே வணங்குமாற்றால் எஞ்ஞான்றும் என் தலைமேலும் தாங்கியிருக்கின்றேன்; பூமிசை ஏற்றினேன் - என் உள்ளத் தாமரைப்பூவில் இடையறாது நினையுமாற்றால் எழுந்தருளவும் செய்துள்ளேன்; புலம்பு அறுக என்றே - அஃது எற்றுக்கெனின் துன்பத்திற் கெல்லாம் காரணமாயிருக்கின்ற என் பவத்திறம் அற்றொழிவேணுதற் பொருட்டே என்று சொல்லி; வலங்கொண்டு ஆசனம் வணங்குவோள் முன்னர் - வலம் வந்து அத் தரும பீடிகையை வணங்கி வழிபாடு செய்கின்ற அம் மணிமேகலா தெய்வத்தின் முன்பு என்க.

(வி - ம்.) இதனால் மனமொழி மெய்களாகிய முக்கருவிகளாலும் புத்த பெருமானை வழிபாடு செய்யும் மரபு அறிவுறுத்தமை அறிக. இவ்வாறு வணங்கும் மரபினை ''மும்மையின் வணங்கி'', எனப் பிறுண்டும் (பவத்திற மறுகென......ரு) கூறுதலாலறிக.

பூ - நெஞ்சத் தாமரைப்பூ. புலம்பு: ஆகுபெயர்; பிறவிப்பிணி. அறுக - அறுவேன். வணங்குவோள் - வணங்கும் தெய்வம்.

### மணிமேகலை மணிமேகலா தெய்வத்தை வணங்கி வினவுதலும் அத்தெய்வம் விடை கூறுதலும்

௧௭ - ௨௫ : போலங்கோடி..........வணங்குழி

(இ - ள்.) பொலம் கொடி நிலமிசைச் சேர்ந்தெனப் பொருந்தி - அவ்விடத்தே அத் தெய்வத்தின் வரவு பார்த்து நின்ற மணிமேகலை தன் வழிபாட்டை முடித்தெழுந்த மணிமேகலா தெய்வத்தின் திருவடிகளிலே பொற்கொடி ஒன்று நிலத்தின் மேலே வீழ்ந்து கிடப்பது போலே வீழ்ந்து வணங்கி எங்கள் குல தெய்வமே நீயே எளிவந்து என்னை இத் தீவினிடை இட்டனை ஆதலால்; உன் திரு அருளால் என்பிறப்பு உணர்ந்தேன் - நின்னுடைய திருவருளாலே இப் புத்த பீடிகையைக் கண்டு தொழுது அடிச்சி என்னுடைய பழம்பிறப்பினை உணர்ந்து கொண்டிருக்கின்றேன்!; என் பெருங் கணவன் யாங்கு உளன் என்றலும் - என் முற்பிறப்பிற் கணவனாயிருந்து திட்டி விடத்தாலிறந்து போயவன் இப்பொழுது எங்கே இருக்கின்றனன் இதனை எனக்கறிவித்தருளுக! என்று வேண்டா நிற்றலும்; இலக்குமி கேளாய் - இலக்குமியே கேள்!; இராகுலன் தன்னொடு பூம் பொழில் அகவயின் புலத்தகை எய்தினை - நீ தானும் நின் கணவனொடு கூடிக் களித்து வாழுங்காலத்தே ஒரு நாள் பூம் பொழிலிடத்தே சென்று அவனோடாடிய நீ சிறிது ஊடல் கொண்டு அவனுக்கு முகங்கொடாயாயினை; இடங்கழி காமமொடு அடங்கானாயவன் - நின் கணவன் பணிமொழி பல கூறி ஊடலுணர்த்தியும் நீ உணராது பின்னும் ஊடுதலாலே நின்பாற் கொண்ட மிகப் பெரிய காமம் காரணமாக நின் சினத்திற்கு அடங்கானாகியவன்; மடந்தை மெல்லியல் மலரடி வணங்குழி - மடந்தாய்! நின்னுடைய மெல்லியல்புடைய மலர் போன்ற அடிகளிலே வீழ்ந்து வணங்கும் பொழுது, என்க.

(வி - ம்.) பொலம் கொடி - பொன்னிறமான காமவல்லி என்னும் மலர்க்கொடி. இது மணிமேகலைக்குவமை. தான் அத் தீவிற்கு வந்ததும் பீடிகை கண்டு தொழுதலும் பழம்பிறப் புணர்ந்ததும் எல்லாம் அத் தெய்வத்தின் அருள் காரணமாக எய்திய நலங்களே என்பாள் உன் திருவருளால் உணர்ந்தேன் என்றாள். என் கணவன் யாண்டுளன் என்று இப்பொழுது நீ எனக்கறிவுறுப்பாய் என்று யான் அறிகுவெனாயினும் அவனிலை அறிய விதுப்புறும்நெஞ்சம் உண்மையால்அதனை இப்பொழுதே கூறியருள்க என்பதுதோன்ற 'என் பெருங் கணவன் யாங்குளன்' என்று விதுப்புற்று வினவுகின்றனள்.

நீ நின் பழம்பிறப்புணர்ந்தமையையும் யானறிகுவன் என்பது மணிமேகலையுணரும் பொருட்டு மணிமேகலை என்று விளியாது இலக்குமி! என்றே அத் தெய்வம் அவளை விளிப்பதாயிற்று. அதனைக் கூறுவன் கேள் என்பதுபட இலக்குமி கேளாய் என்று பணித்தது.

புலத்தகை - புலக்குந் தன்மை. ஊடுதல் காமத்திற் கின்பமாதலின் நீ புலத்தகை எய்தினை. அவனுடைய அல்லல் நோய் காண்கஞ் சிறிது என நீ அவன் உணர்த்தவும் உணராயாய் ஊடனீட்டித்தனை; அவ்வழி நீயே ஊடல் திரும் அளவும் அடங்குதலே அவன் செய்யற்பாற்றாகவும் அங்ஙனம் அடங்காளுய் அவன் நின் மலரடி வணங்கினன், அத்துணைப் பெரிது அவன் நின்பாற் கொண்ட காமம் என்பாள் இடங்கழி காமமொடு அடங்கானாய் என்றாள். இத்துணையும் இடங்கழி காமம் எனப் பாட்டிடை வைத்த குறிப்பினாற் கொண்ட பொருளென்றுணர்க.

மடந்தை: விளி; முன்னிலைப்புறமொழியுமாம்.

## சாதுசக்கரன் வரவும், இராகுலன் சினத்தலும்

### உச - நடு: சாது.........பணிந்தாங்கு

(இ - ள்.) சாதுசக்கரன் மீவிசும்பு திரிவோன்-சாதுசக்கரன் என்னும் பெயருடையவனாய் உயர்ந்த வானத்திலே இயங்கி நாடு தோறும் சென்று அறங்கூறும் சாரணன் ஒருவன்; இரத்தின தீவத்து தெருமரல் ஒழித்து-இரத்தினத் தீவிற் சென்று அங்கு வாழும் மாந்தர் மனச்சுழற்சியைத் தனது அறவுரையாலே அகற்றி; ஆங்கு தருமசக்கரம் உருட்டினன் வருவோன்-அத் தீவிலே அறவாழி இடைமருது உருளும்படி செய்து வான்வழியே வருபவன்; வெங்கதிர் அமயத்து வியன் பொழில் அகவயின் வந்து தோன்றலும்-வெவ்விய வெயில் சுடுகின்ற நண்பகலிலே நீவிர் காம விளையாட்டயர்ந்த அகன்ற அப் பூம்பொழிலினூடே இழிந்து நுங்கள் முன்பு வந்து தோன்றுகிற்ப; மெல்லியல் கண்டனை மயங்கினை கலங்கி மெய்ந் நடுக்குற்றனை நல்கூர் நுசுப்பினை நாணினை இறைஞ்ச-மெல்லியலாகிய இலக்குமியே நீயே அவன் வரவினை முற்படக் கண்டனை உடல் நடுங்கினாய் மயங்கினாய் நெஞ்சு கலங்கினை ஒருவாறு தெளிந்து அம்முனிவனை எதிர் கொண்டு நின் நுண்ணிடை துவள நாணி வணங்கினாய்; இராகுலன் வந்தோன் யார் என வெகுளலும்-இடங்கழி காமத்தாலே நின்னடிக்கண் வணங்கிய இராகுலன் அவன்வரவு தனக்கு இடையூறு விளைத்தலின் இப்பொழுது ஈங்கு வந்திருந்தவன் யாவன் என்று வெகுண்டு உரப்புதலும்; விரா மலர்க் கூந்தல்-விரவிய மலர் அணிந்திருந்த கூந்தலையுடைய நீ பெரிதும் அஞ்சி; அவன் வாய் புதையா வானூடு இழிந்தோன் மலரடி வணங்காது நாநல் கூர்ந்தனை என்று-அவ்விராகுலனுடைய வாயினை நின்கையாற் பொத்தி வானத்தினின்றும் இழிந்து வருகின்ற இருத்தியுடைய இம்முனிவரை மலரடியிலே வீழ்ந்து வணங்காதொழிந்ததுமன்றி நாவினால் இன்சொலியம்பாமல் சிறுமையுற்றனை என்று அறிவுறுத்துப் பின்பு; அவன் தன்னொடு-தன்பிழையுணர்ந்து

கொண்ட இராகுலனோடு நீ சென்று; பகை அறு பாத்தியன் - காம முதலிய உட்பகை அறுதற்குக் காரணமான புத்தருடைய திருவடிக்கணபணிஎங்கிய அச் சாதுசக்கரனுடைய; பாதம் பணிந்து ஆங்கு - திருவடிகளில் வீழ்ந்து வணங்கியவுடன் என்க.

(வி - ம்.) சாதுசக்கரன் அறவோர் குழுவிலுள்ளோன். என்னை? குழு மண்டலித்துக் குழுமி இருத்தலியல்பாகலின் அதற்குச் சக்கரம் என்பது பெயராயிற்று. எனவே சாதுசங்கத்துள்ளோன் என்பதாயிற்று. ஈண்டுச் சாதுசங்கம் என்றது பௌத்தரில் துறவோர் கூட்டத்தை. மீவிசும்பு திரிவோன் என்றதனுல் இவன் இருத்தி (சித்தி) கை கூடப் பெற்றவன் என்பது பெற்றும்; இருத்தி பெற்றவர், நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச் சலத்தில் திரியும் தெய்வத்தன்மை யுடையராயிருப்பர் என்பது "நிலத்திற் குளித்து நெடுவிசும்பேறிச் சலத்திற் றிரியுமோர் சாரணன் தோன்ற" என இந் நூலில் வருதலானும் (உச: சகூ - எ.) உணர்க.

இத்தகைய சாரணர் நாடுகள்தோறும் சென்று மக்கட்கு அறஞ் செவியறிவுறுத்துவது வழக்கம். சமண் சமயத்தும் இத்தகைய சாரணர் உளர் என்பது—

"பெரும்பெயர் ஐயர் ஒருங்குட னிட்ட
இலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளிப்
பெருமக னதிசயம் பிறழா வாய்மைத்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தோன்ற"

எனவரும் சிலப்பதிகாரத்தானும் (கo-கசுo-கசுஞ) தெளிக.

இவரை அந்தரசாரிகள் என்றும்கூறுப. "பாசிலைப்போதி அணிதிகழ் நீழலறவோன் திருமொழி அந்தரசாரிகள் அறைந்தனர் சாற்றும்" என்பர்இளங்கோவடிகளார்; (சிலப்-கக-கஞ). இனி அறத்தை ஆழியாக உருவகித்த லுண்டாகலின் அறஞ் செவியறிவுறுத்தலையே சக்கரம் உருட்டுதலாகக் கொண்டு இவனை அறவாழி யுடையோன் என்னும் பொருள்படச் சாதுசக்கரன் என்றழைத்தனர் எனினுமாம். இதனை இரத்தினத் தீவத்துத் தரும சக்கர முருட்டினன் வருவோன் என்பது வலியுறுத்துதலுணர்க.

இனி, பௌத்தத் துறவோர் "ஓம் மணிபத்மே கூஉம்" என்ற மறைமொழி பொறித்த வட்டவடிவமாகப் பொன்னுற் செய்யப்பட்ட சக்கரத்தைக் கையிற் கொண்டுருட்டும் வழக்க முடையோராதலின், இவனும் அச்சக்கரத்தை உருட்டுபவனுய் வருபவன் எனினுமாம் என்பாருமுளர். "தரும சாரணர் தங்கிய குணத்தோர் கருமுகிற் படலத்துக் ககனத் தியங்குவோர்" எனப் பிறண்டும் ஓதுதல் போன்று ஈண்டும் வீசும்பு திரிவோன் என்றமையாது, மீவிசும்பு திரிவோன் என்ருர். இரத்தின தீவம் மணிபல்லவத்திற்கு அணித்தாகிய மற்ருெரு தீவு. சாதுசக்கரன் நிலத்திலிழிந்தமைக்குக் குறிப்பாக ஏதுக் கூறுவார் வெங்கதிர்மையத்து வியன்பொழி லகவயின் வந்து தோன்றலும் என்ருர்.

நின் கணவன் நின் அடியில் வீழ்ந்து வணங்கும் செவ்வியில் அச் சாது சக்கரன் வந்துற்றமையால் செய்வதறியாது மயங்கினை, கலங்கி மெய்ந் நடுக்குற்றனை, நாணினை என்று அத் தெய்வம் கூறியபடியாம்.

இனி, நின் கணவன் இடங்கழி காமமுடையனாய் நின்னூடல் தீர்க்குஞ் செயலுக்கு இடையூறாக விருந்தமையால் வெகுண்டு இன்னாச் சொல் கூறி உரப்பினன் என்பாள் "இராகுலன் வந்தோன் யாரென வெகுளலும்" என்றாள். இதனால் காமவெகுளி மயக்கங்களின்புன்மையை இத் தெய்வம் எடுத்துக் காட்டிய நுணுக்கமும் ஈண்டு நினைக.

மலரடி வணங்குதற்கு நீ ஏதுக்காட்டுவாய் "வானாடிழிந்தோன் மலரடி வணங்காது நாநல் கூர்ந்தனை" என்றவாறு. இன் சொல்லே நாவிற்கியன்ற செல்வம் ஆதலின் அது கூறி வரவேலாததாஉமன்றி வந்தோன் யார் என இன்னாச்சொல் இயம்பி நின் நாவினது வறுமையைக் காட்டினை என்று நீ நின் கணவனை அறிவுறுத்தினை என்றவாறு. பாத்தியன் என்பது அடியவன் என்னும் பொருளுடையது. "திருவாதவூர்ச் சிவபாத்தியன்" எனவரும் நம்பியாண்டார் நம்பி வாக்கிற்கும் சிவனடியான் என்பதே பொருள் என்க. பகையறு பாதத்திற்கு அன்பன் என்பாள் பகையறு பாத்தியன் என்றாள். பகையறுபாதம் என்றது புத்தர் திருவடியை. பகை காம முதலியன.

இனி, இலக்குமி மெய்ந்நடுக்குறுதல் இறைபொருளாகப் பிறந்த அச்சம் என்னும் மெய்ப்பாடு.

இராகுலனுக்குத் தன் கருத்து நிறைவேறுதற்கு இடையூறாகத் தோன்றி அலைத்தல் பற்றி வெகுளி பிறந்தது என்க. தன் மனைவி இறைஞ்சக் கண்டு வெகுளி பிறந்ததெனின் மனைவியையே வெகுள்வான் மன். என்னை? ஈண்டுக் குடிகொன்றவள் இலக்குமியே யாதலின் அக் கருத்துப் போலி என்க.

## இதுவுமது

கூ - சுக : அமர.........அறுத்திடும்

(இ - ள்.) அமர கேள் - தேவனே! அடிச்சியின் வேண்டுகோளிதனைக் கேட்டருள்வாயாக!; நின் தமர் அலம் ஆயினும் - அடியேங்கள் உனக்குச் சுற்றத்தாராகும் தகுதியுடையேமல்லேமாயினும்; அமுதொடு அம் தீம் தண்ணீர் கொணர்கேம் - உணவினோடு அழகிய இனிய குளிர்நீரும் கொணர்வேம்; உண்டி - அவற்றை உண்டருள்க; யாம் உன குறிப்பினம் - அடியேங்கள் முன்னர் அறியாமையாற் பிழை செய்தேமாயினும், இனிப் பெருமான் குறிப்பின் வழி ஒழுகுவேம், என்று நீ அச் சாது சக்கரனுக்கு இனியன கூறவே; அவனும் 'சம் அனை உண்கேன் ஈங்குக் கொணர்க' என - அம் முனிவன் நினது சரம் அனை இப் படிறிலவாகிய இன் சொல்லால் உள்ளமுருகி "எம்மனோர்க்கெல்லாம் அன்னை அனையாய் ஒருத்தியாக நீ கொணருபவற்றை யான்

உண்பேன் காண்! அவற்றை இங்கே கொண்டு வருவாயாக" என்று ஆர்வத்தோடே பணிப்ப, நீயும் கொணர்ந்து அன்புடன் அம் முனிவனை ஊட்டினையல்லையோ!; அந்நாள் அவன் உண்டருளிய அவ்வறம்-அக்காலத்தே அச் சாது சக்கரன் நின் உணவை ஏற்று உண்டருளினமையாலே நினக்கெய்திய நல்வினை; நின் ஆங்கு ஒழியாது நின் பிறப்பு அறுத்திடும்- அப் பிறப்பிலேயே நின்னிடத்தினின்றும் ஒழியாமல் இப் பிறப்பினும் தொடர்ந்து வந்து நின் பிறவிப்பிணியையும் அறுத்திடும் காண்! அத் தகையது அறவோர்க் கெதிரும் நல்வினை என்றான் என்க.

(வி-ம்.) சாதுக்கரன் நிலவுலகத்திலேயே மக்கள் யாக்கையிலேயே அமரனாகி விட்டான் என்பது தோன்ற அமர! என்று இலக்குமி விளித்த வாறும். தன் கணவன் சாதுசக்கரனைக் கண்டபொழுதே மலரடி வணங்காமல் 'வந்தோன் யார்!' என வெகுண்டமை கருதி அவனெனத் தான் என, வேற்றுமை நோக்காது அப் பிழையை இருவருடையதாகவும் கொள்க என்பாள் யாம் நின் தமரலம் ஆயினும் என்றான், சிறியேம் பிழையைப் பொறுத் தருள்க. அதற்கு அறிகுறியாக யாம் கொணரும் அமுதும் நீரும் உண்டருளுதல் வேண்டும் என்றிரந்த படியாம்.

இனி, சாது சக்கரனும் இலக்குமியின் அன்பின் பெருமையைத் தான் உணர்ந்தமை தோன்ற ''எம்மனை உண்கேன் ஈங்குக் கொணர்க'' என்று விதுப்புற்றுப் பணித்ததின் இலக்கிய நயமுணர்க. இனி, அந்நாள் அவன் உண்டருளிய அறம் ஒழியாது நின்பிறப் பறுத்திடும் எனவரும் இதனோடு—

''சிவஞானச் செயலுடையோர் கையிற் றானம்
திலமளவே செய்திடினும் நிலமலைபோல் திகழ்ந்து
பவமாயக் கடலினமுந் தாதவகை யெடுத்துப்
பரபோகம் துய்ப்பித்துப் பாசத்தை அறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
சரியைகிரி யாயோகந் தன்னிலுஞ் சாராமே
நவமாகும் தத்துவஞா னத்தை நல்கி
நாதனடிக் கமலங்கள் நண்ணுவிக்குந் தானே''

எனவரும் சிவஞானசித்தியார்ச் (சுப - உஎ௮) செய்யுளை ஒப்பு நோக்கி இரண்டற்கும் நெருங்கிய உறவுண்மை உணர்க. ஈண்டு

''இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்'' (௮எ)

எனவரும் அருமைத் திருக்குறளும் நினைக.

## இதுவுமது

௬௨ - ௬௬ : உவவன.........செய்தேன்

(இ - ள்.) சேயிழை உவவனம் மருங்கில் உன்பால் தோன்றிய உதயகுமரன் அவன் உன் இராகுலன்-மணிமேகலையே

கேள்! புகார் நகரத்துப் பகவனது ஆணையிற் பன்மரம் பூக்கும் உவவனத்துள் பளிக்கறையின்பக்கலிலே உனக்குமுன் வந்து தோன்றிய அரசிளங்குமரனாகிய உதயகுமரனே நீ இலக்குமியா யிருந்தபொழுது நின் கணவனாயிருந்தவனாகிய அந்த இராகுலன் காண்!; ஆங்கு அவன் அன்றியும் - பழவினை காரணமாக அவ்வாறு மாறிப்பிறந்த பிறப்பினும் உன்னைக் காமுற்று வந்தனாகிய அவ்வுதயகுமரனே யன்றியும்; அவன் பால் உள்ளம் நீங்காத்தன்மை நினக்கும் உண்டாகலின்-முற்பிறப்பிற் கணவனா யிருந்தமையாலே அவ்வுதயகுமரன் பால் நின் நெஞ்சம் சென்று அவனை மறவாது காமுற்றிருக்குமொரு பண்பு உன்னிடமும் உளது ஆதலாலே; கந்த சாலியின் கழிபெருவித்து ஓர் வெந்துகு வெள் களர் வீழ்வது போன்ம் என-நின் னெஞ்சம் அவனைத் தொடர்ந்து செல்லுமிந்நிகழ்ச்சி நெற்களுள் சிறந்ததாகிய கந்தசாலி என்னும் நெற்பயிரினது வளமுடைய மிகப் பெரியதொரு விதையானது வெந்து மாவாகி உதிர்வதற்கிடனான வெள்ளிய களர்நிலத்திலே வீழ்வதனை ஒக்கும் என்று யான் கருதி; அறத்தின் வித்து ஆகிய உன்னை ஓர் திறப்படற்கு ஏதுவாச் செய்தேன்-நல்லறத்தின் சிறந்த வித்தாகத் திகழுகின்ற நின்னை அவ்வறம் முளைத்துப் பயிராகித் தழைத்துத் தன் பயனை விளைவிக்கும் தன்மையைப் பெறுதற்குத் தகுதியாக நின்னை உவவனத்தினின்று என் விஞ்சையிற் பெயர்த்துப் பழம் பிறப்புணர்த்தும் இத்தரும பீடிகையைக் கண்டு நீ ஆக்கமுறுதற்கு அதனயலிலே யான் நின்னை இட்டனென்றேன் காண்; என்று கூறிற்று என்க.

(வி - ம்.) (சக) சேயிழை என்னும் விளி ஈண்டு மணிமேகலை என விளித்தபடியாம்.

உதயகுமரனாகிய அவனே முற்பிறப்பில் உன் கணவனாயிருந்த இராகுலன் என்றவாறு. அவன் முற்பிறப்பின் பால் நின்னிடத்தே இடங்கழி காம முடைமையின் அப் பற்றுக் காரணமாகவே ஊழ்வினை அவனை நின்பாற் கொணர்ந்தது; நீயும் அவன்பாலங்ஙனமே காம முடையை ஆதலின் நின்னெஞ்சமும் (நி: அகூஅ) "கற்புத்தானிலள் நற்றவவுணர்வு இலள் வருணக்காப்பிலள் பொருள் விலையாட்டி யென்று இகழ்ந்தனனாகி நயந்தோன் என்னாது" அவன் பின் சென்றதன்றே! அந் நெகிழ்ச்சியை நீ அறியுமாறே யானும் அறிந்தேன், அந் நிகழ்ச்சி நல் வித்துக் களர் நிலத்துகுவது போன்றதாம். யான் என் விஞ்சையிற் பெயர்த்து ஈங்குக் கொணருமாற்றால் உன் ஊழ் வலியைக் கெடுத்து நன்னெறிப் படுத்தினேன் காண் என்று அத் தெய்வம் கூறுகின்றது. ஈண்டு,

"ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்" (சுஉ0)

என்னும் அருமைத் திருக்குறள் நினைக்கத்தகும்.

மணிமேகலாய்! புதுவோன் பின்னை நின்னெஞ்சம் போனதெனினும் "காமத்தியற்கை இதுவே யாயின் அதன் திறம் கெடுக" என்று அதற்குலைவின்றி நெஞ்சுறுதியும் பூண்டு நின்றனை. யானும் அச் செவ்வியறிந்து காமத்தின் திறங்கெடுதற் கேதுவாக ஓர் திறப்பட இது செய்தேன் என்று கூறுகின்றது. அத் தெய்வம் ஈண்டு—

"குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்" (௧0௨௩)

எனவரும் திருக்குறள் நினைக்கத்தகும்.

ஓர் திறப்படலாவது பொறிவழி மனஞ் செல்லாமல் தடுத்து மெய்ப்பொருளை உணரும் ஒரே நெறியில் மனத்தைச் செலுத்துதல், அது ஈண்டு அருளறம் பூணுதலாம் என்க.

## தெய்வம் மாதவி, சுதமதி, என்னும் இருவருடைய பழம் பிறப்புக்களையும் மணிமேகலைக்கு அறிவித்தல்

### ௫0 - ௬0 : இன்னும்..........பணிதலும்

(இ - ள்) இன்னும் கேளாய் - மணிமேகலாய்! இன்னும் நீ அறிந்துகொள்ள வேண்டிய செய்திகளும் உள அவற்றையும் கூறுவல் கேட்பாயாக!; நீ இலக்குமி-முற்பிறப்பிலே நீ இலக்குமியாயிருந்தனையல்லயோ அப் பிறப்பிலே; நின் தவ்வையர் ஆவோர் தாரையும் வீரையும்-நினக்குத் தமக்கையராய்த் தாரை என்பாளும் வீரை என்பாளும் ஆகிய இருமகளிருளராயினர் காண்; ஆங்கு அவர் தம்மை அங்க நாட்டு அகவயின் கச்சயம் ஆளும் கழற்கால் வேந்தன் துச்சயன் என்போன் ஒருவன் கொண்டனன்-அங்ஙனம் இருந்த நின்னுடன் பிறந்த மகளிரிருவரையும் அங்க நாட்டினகத் தமைந்த கச்சயம் என்னும் குறுநிலத்தை ஆளும் வீரக்கழலணிந்த துச்சயன் என்னும் வேந்தன் ஒருவனே வாழ்க்கைத் துணைவியராக மணந்து கொண்டனன்; ஆங்கு அவன் அவருடன் அகல் மலையாடிக் கங்கைப் பேரியாற்று அடைகரை இருந்துழி- அங்கு அத் துச்சய மன்னன் தன் மனைவியராகிய தாரையோடும் வீரையோடும் அகன்ற மலையிடத்தே சென்று விளையாட்டயர்ந்து கங்கை என்னும் பேரியாற்றின் நீரடை கரையின்கண் ஒரு பொழிலின்கண் இளைப்பாறி இருந்த பொழுது; மறவணம் நீத்த மாசு அறு கேள்வி அறவணன் ஆங்கு அவன் பால் சென்றோனை—தீவினையின் தன்மை முழுவதையும் துடைத்தொழிந்த குற்றமற்ற பிடகநூற் கேள்வியையுடைய அறவண வடிகள் என்பார் அக்கரையிடத்திருந்த துச்சயமன்னன்பால் வந்தவரை நோக்கி; ஈங்கு வந்தீர் யார் என்று எழுந்தவன்- இவ்விடத்திற்கு வந்துற்ற நீர் யாவிரோ என்று வினவி எழுந்து எதிர்

சென்றவன்; பாங்கு உளி மாதவன் பாதம்பணிதலும்-அவருடைய அறிவொளி திகழும் திருவுருவத்தை நோக்கி இவர் அறத்தின் திருவுருவமே ஆமவர் என்று நினைந்து அம் மாதவருடைய திருவடியிலே வீழ்ந்து வணங்கா நிற்றலும்; என்க.

(வி - ம்.) பிரமதத்த முனிவனை முற்பிறப்பிலே காதலன் பிறப்புங் காட்டாயோ என்றிரந்தாய்க்கு அச் செய்தியை மறுமையில் அரும் பெருந் தெய்வம் அறிவுறுத்தும் என்றெழிந்தான் அல்லனோ அதற் கேற்ப யான் இதுகாறும் இயம்பியது நின் கணவனுடைய செய்தியாம். அதுவே அன்றி யான் நினக்கு அறிவுறுத்தும் செய்தியும் உள அவற்றை யும் கேள் என்பதுபட இன்னும் கேளாய்! என அருள் கெழுமிய அத் தெய்வம் உள்ளி உள்ளி அறிவுறுத்த வேண்டியவெல்லாம் அறிவுறுத்து கின்றது என்க. நீ இலக்குமி என மாறுக. நீ முற்பிறப்பில் இலக்குமியாயிருந்தனை இதனை நீயே அறிகுதி என்பது இதன் குறிப்பு. தாரையும் வீரையும் என்னுமிருவரும் நின் தவ்வையராயிருந்தனர் என வழி மொழியுமாற்றால் கூறிக் கொள்க. அங்க நாட்டகவயிற் கச்சயம் எனவே கச்சயம் அங்க நாட்டிலமைந்துள்ள குறுநிலப் பகுதி என்பதா யிற்று. கச்சயம் ஒரு நகரம் எனினுமாம்.

அவருடன் - தாரையும் வீரையும் ஆகிய மனைவியரிருவருடனும் மலையில் விளையாடி என்க. வந்தவுடன் ஈங்கு வந்தீர் யார் என்று எழுந்து சென்று அவர் பாங்கு உள்ளி மாதவன் என்றுணர்ந்து அவன் பாதம் பணிதலும் என்க. பாங்கு உளி என்புழி உள்ளி - உளி என விகாரம் எய்தி நின்றது.

## இதுவுமது

### ௬௩ - ௭0 : ஆதி.........தொழுமென

(இ - ள்.) ஆதி முதல்வன் அறவாழி ஆள்வோன் - புத்தர் களுக்கெல்லாம தலைவனாகிய புத்தபெருமானும் தனது அற வாழியையுருட்டி அறிஞர் உலகத்தைத் தன் அருளாட்சியின்கட் படுத்து ஆள்கின்றவனும், ஆகிய நம்மிறைவன்; மக்களை மாதுயர் எவ்வம் நீக்கி-மாந்தரினத்திற்குப் பெருந்துயரம் விளைவிக் கின்ற காம வெகுளி மயக்கங்களாகிய பெரிய துன்பங்களைப் போக்கி; விலங்கும் தம்முள் வெரூஉம் பகைநீக்கி உடங்கு உயிர் வாழ்க என்று-விலங்கினங்களும் தம்முள் ஒன்றனை ஒன்று அஞ்சு தற்குக் காரணமான தமதுப்பகை களைந்து அன்பினாலே ஒன்றி இன்புற்று வாழ்க என்னும் தனது "கருணாபாவனை" காரணமாக; உள்ளம் கசிந்து உக-கேட்போர் உள்ளமுருகி ஒழுகுமாறு; தொன்று காலத்து நின்று அறமுரைத்த குன்றம் மருங்கில்- பழைய காலத்திலே ஏறி நின்று தன் மெய்க்காட்சிகளாகிய அருளறத்தை மாந்தர்க்கு அறிவுறுத்திய இந்த மலையின் மேலே; குற்றம் கெடுக்கும் பாத பங்கயம் கிடத்தலின்-கண்டவர்களின்

மனமாசு தீர்க்கும் அப் பெருமானுடைய திருவடித்தாமரைகளின் சுவடு பதிந்து கிடத்தலாலே; ஈங்கு இது பாத பங்கய மலை எனும் பெயர்த்து ஆயது-இவ்விடத்தே உள்ள இந்த மலை, "பாதபங்கய மலை" என்னும் பெயர் உடையதாயிற்று; ஈங்கு தொழுது வலம் கொள வந்தேன்-இம் மலையை யான் தொழுது வலம் செய்து வணங்கவே இங்கு வந்துள்ளேன்; இப் பழுது இல் காட்சியீர் நீயிரும் தொழும் என-இந்த அருளறமாகிய குற்றமற்ற மெய்க் காட்சியையே மேற்கொண்டு இல்லறத்தே நிற்கின்ற நீவிரும் எம்மோடு வலம் வந்து இம் மலையைக் கைதொழுது உய்யுங்கோள் என்று அறிவுறுத்துதலாலே என்க.

(வி - ம்.) ஆதி முதல்வன் என்றது கௌதம புத்தரை. அறம் முதலும் முடிவு மற்றது ஆகலின் அதனை முதலும் முடிவுமற்ற சக்கரமாகக் குறிப்புவமம் செய்வது நூனெறி வழக்கமாகும். தனது அறவாழியாலே அறிஞர் உலகத்தை ஆளுபவன் என்க. எவ்வம் என்றது ஆகுபெயராக அதற்குக் காரணமாகிய பிறப்பின் மேனின்றது. என்னை? "பிறந்தோருறுவது பெருகிய துன்பம்" என்பது புத்தருடைய மெய்ம்மைகளுள் முதலாவதாதலறிக. அதனை நீக்குதலாவது, விசுத்தி மார்க்கத்தே செலுத்தி விடுவது.

"விலங்குந் தம்முள் வெரூஉம் பகைநீக்கி
உடங்குயிர் வாழ்கவென் றுள்ளங் கசிந்து
..............................அறமுரைத்த"

என நிகழும் இதனோடு—

"எல்லாவுயிரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே"

எனவரும் தாயுமானார் திருவாக்கினை ஒப்பு நோக்கி யுணர்க.

"அன்பினாலே உடங்குயிர் வாழ்க என்று"

என்க. தொன்று காலம் - பழைய காலம்.

பாதபங்கயம் என்றது புத்தருடைய திருவடிச் சுவடுகளை.

துச்சயனும் மனைவிமாரும், பௌத்த சமயத்தைச் சார்ந்த இல்லறத்தாராதலின் அவரைப் "பழுதில் காட்சியீர்!" என்று அறவண அடிகள் விளித்தனர் என்க.

அப் பாத பங்கயம் தன்னைக் கண்டோர் காம வெகுளி மயக்கங்களைக் கெடுக்கும் தெய்வத்தன்மையுடைய தாகலின் நீயிருந் தொழும் என்றார் என்க.

௭௧ - ௯௦ : அன்றவன்.........உரையார்

(இ - ள்.) அன்று அவன் உரைத்த அவ்வுரை பிழையாது சென்று கைதொழுது சிறப்புச் செய்தலின் - அற்றைநாள் அவ்வறவணவடிகள் பணித்த மொழி பிழைபடாவண்ணம் தாரையும் வீரையும் ஆகிய நின் தமக்கையரிருவரும் கணவனும் அவ்வடிகளார் பின் சென்று அப் பாதபங்கயமலையை வலம் வந்து கை கூப்பித்தொழுது அதற்கு விழா வெடுத்தலாலே; மாதவியாகியும் சுதமதியாகியும் கோதை அம்சாயல் நின்னோடு கூடினர் - அவரிருவருள் தாரை யென்பவள் மாதவியாகியும் வீரை சுதமதியாகியும் வேறு வேறிடத்துப் பிறந்து வைத்தும் அந் நல்வினைப் பயனை அருளறம் பூண்டு நினக்குத் தாயாகவும் செவிலித்தாயாகவும் மணிமேகலை நல்லாய் நின்னோடு அன்புத் தொடர்புடையராயினர் காண்!; அறிபிறப்பு உற்றனை அறம்பாடு அறிந்தனை - இனி நீதானும் முற்செய் நல்வினைப் பயனை முற்பிறப்பினை அறியத்தரூஉஞ் சிறப்புடைய பிறப்பினையும் பெற்றிருக்கின்றனை அதன் மேலும் அருளறத்தின் பெருமைகளையும் நன்கறிந்துள்ளனை அல்லையோ!; பிற அறம் உரைப்போர் பெற்றியும் கேட்குவை - இனி எதிர் காலத்திலே இவ்வருளறமல்லாத பிற அறங்களைக் கூறுகின்ற பல்வேறு சமயக்கணக்கர் தந் துணிபொருள்களையும் நீயே கேட்டுத் தெரிந்து கொள்குவை; அல்லியங்கோதை - மணிமேகலையே நீ; பல்வேறு சமயப்படிற்றுரை எல்லாம் கேட்குறும் அந்நாள் உனக்கு - பல்வேறு வகைப்பட்ட சமயவாதிகளும் தத்தம் சமயப்பொருளாக நினக்குக் கூறுகின்ற பொய்ம் மொழிகளையெல்லாம் நீ அவ்வவர் பாற் சென்று வினவித் தெரிய முயலுகின்ற உனக்கு; யாவரும் இளையள் வளையள் என்று விளைபொருள் உரையார் - அச் சமயக் கணக்கர் எல்லாம் இவள் இளமையுடையோள் என்றும் வளையலணியும் பெண்பாலினள் என்றும் கருதித் தத்தம் சமயத்தின் துணிபொருளாகிய சித்தாந்தத்தைக் கூறுதற்கு உடன்படார் ஆதலாலே; என்க.

(வி - ம்.) அவன் : அறவணன். அவ்வுரை என்றது அறவணவடிகள் நீயிரும் தொழும் என்று பணித்த மொழியை. சிறப்பு - விழா. இனி அறவணவடிகளார்க்கு உண்டி முதலியன கொடுத்துச் சிறப்புச் செய்தலின் எனலுமாம். அவ்வறப் பயன் விளைதலின் மாதவியும் சுதமதியும் ஆகி, நின்னொடுங் கூடி அருளறம் பூண்டனர் என்பது கருத்து. அறிபிறப்புற்றனை அறம்பாடறிந்தனை ஆதலின் நின் முற்பிறப்பைப் பற்றி யான் கூற வேண்டியதில்லை என்றவாறு. படிற்றுரை - பொய்யுரை. வஞ்சகவுரையுமாம். வளையோள் என்றது பெண்பாலினள் என்றவாறு.

மணிமேகலா தெய்வம் மணிமேகலைக்கு மந்திரம்
செவியறி வுறுத்துதல்

௭௦ - ௮௮ : வேற்றுரு.........இழிந்து

(இ - ள்.) வேற்றுருவு எய்தவும் அந்தரம் திரியவும் ஆக்கும் இவ் அருந்திறன் மந்திரம் கொள்க என - இத்தகைய இடையூறுண்டாகாமைக்கும் யாண்டும் இனிதிற் போக்குவரவு புரிதற்கும் உதவியாக நின்னை வேற்றுருவம் எடுத்துக் கொள்ளவும் விசும்பினூடு திரியவும் செய்யும் பெறற்கரிய தெய்வத்தன்மையையுடைய இந்த மந்திரங்களை நின் செவியினுட் கொள்வாயாக என்று கூறி; வாய்மையின் ஓதி - அம் மந்திரம் அவட்கு வாய்க்குந்தன்மையோடு செவியறிவுறுத்து; மதி நாள் முற்றிய மங்கலத் திருநாள் பொது அறிவு இகழ்ந்து புலம் உறு மாதவன் திரு அறம் எய்துதல் சித்தம் என்று நீ உணர் - பின்னரும் மணிமேகலைக்குத் தேற்றுரை கூறுகின்ற அந்த மணிமேகலா தெய்வம் நல்லாய்! திங்களும் விசாகநாளும் முதிர்ந்து பொருந்தும் மங்கலமுடைய வைகாசித் திங்கள் நிறைமதி நன்னாளிலே இவ்வுலகியலறிவு தூர்ந்துபோம்படி அவற்றை நீ இகழ்ந்து கைவிட்டு மெய்யறிவு மிக்க பெரிய தவத்தையுடைய புத்த பெருமான் போதி மூலம் பொருந்தியிருந்து மாரனை வென்று வீரனாகித் திருவாய் மலர்ந்தருளிய திருவறம் தலைப்படுதல் ஒருதலையாம் என்று நீ உணர்ந்து கொள்வாயாக! என்று சொல்லி; மன் பெரும் பீடிகை வணங்கினை ஏத்தி - நீ இன்னும் ஈண்டு நிலைபெற்ற இப் பெருமை சான்ற பீடிகையைப் பன் முறை வணங்கி; நின் பதிப் புகுவாய் என்று எழுந்து ஓங்கி - நின்னுடைய பூம்புகார் நகரத்திற்குச் செல்வாயாக என்று பணித்து அவ்விடத்தினின்றும் வானத்திலே எழுந்து உயர்ந்து பின்னரும்; மறந்ததும் உண்டு என மறித்து ஆங்கு இழிந்து - நங்காய்! நினக்குக் கூறவேண்டியது ஒன்றனை யான் மறந்து விட்டதுமுண்டு என்று கூறிக் கொண்டு மீண்டும் அவ்விடத்திலேயே இழிந்து வந்து என்க.

(வி - ம்.) வேற்றுருக்கோடல் சமயக் கணக்கரிடம் மாதவன் வடிவிற் சென்று வினுதற்கு மட்டுமின்றி வேறு செவ்விகளினும் மணிமேகலைக்கு வேண்டப்பட்டமையின் மந்திரங் கொடுத்தற்கு வினை பொருள் உரையார் என்றது ஞாபகவேதுவாந்துணையே ஆயிற்று.

பொதுவறிவு - உலகியலறிவு. புலம் - மெய்க்காட்சி. மாதவன் - புத்தன். திருவறம் என்றது, அருளறத்தை - அருளிலார்க்கு அவ்வுலகம் இல்லையாகலின் அதனையே செல்வம் ஆக்கி, திருவறம் என்றாள். என்னை? அதுவே மக்களாய்ப்பிறந்தோர் எய்துதற்குரிய சிறப்புச் செல்வமாகவும், ஏனைய செல்வமெல்லாம் பொதுச்செல்வமாம் ஆதலின் என்க. இதனை—

"அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள" (உசக)

எனவும்,

"நல்லாற்ரு னடி அருளாள்க பல்லாற்ருன்
தேரினும் அஃதே துணை" (உசஉ)

எனவும் வரும் தெய்வப் புலமைத் திருவள்ளுவனுர் திருவாக்கானு முணர்ந்து கொள்க.

சித்தம் - ஒருதலை. இது மணிமேகலையை அத் தெய்வம் அந் நெறியி லாக்குவித்தற்குக் கூறியபடியாம்.

நின் பதி என்றது - புகார் நகரத்தை. விடை கொடுத்து விசும்பி லேறிய தெய்வம் மீண்டும் யான் மறந்ததும் உண்டு எனத் தன் பிழையைக் கூறிக்கொண்டு இழிந்து வந்தது என்னுமிது, அத் தெய்வம் அவள்பால் வைத்த அருட்பெருமையை நன்கு விளக்குதலறிக. இது, தண்டமிழாசான் சாத்தனுருடைய புலமை வித்தகத்தையும் விளக்குத லுணர்க.

## மணிமேகலா தெய்வம் மீண்டும் பசியறுக்கும் மந்திரங்கொடுத்தல்

### அகூ - கூரு: சிறந்த ........ தானேன்

**(இ - ள்.)** சிறந்த கொள்கைச் சேயிழை கேளாய் - மக்கட் பிறப்பிற்குரிய சிறந்த கொள்கையை மேற்கொண்டொழுகுகின்ற சேயிழாய் இது கேள்!; மக்கள் யாக்கை உணவின் பிண்டம்-மக்க ளுடைய உடம்பானது உணவினுலியன்றதொரு தொகுதியே ஆதலால் இப் பெரு மந்திரம் இரும்பசி அறுக்கும் என்று - இப் பொழுது யான் நினக்குச் செவியறிவுறுக்கும் இந்த மந்திரமானது நினக்கெய்தும் பெரிய பசியைத் தீர்க்குமொரு தெய்வத்தன்மை யுடைத்து இதுவும் நினக்கின்றியமையாததாம், ஆகவே இதனையும் ஏற்றுக் கொள்ளுதி! என்று சொல்லி; ஆங்கு அது கொடுத்து ஆங்கு - அவ்வாறே அம் மந்திரத்தையும் செவியறிவுறுத்த பொழுதே; நெடுந்தெய்வம் அந்தரம் எழுந்து ஆங்கு நீங்கியது - நெடிய புகழுடைய அம் மணிமேகலா தெய்வம் வானத்திலே எழுந்து போய் அவ் வானத்தினூடேயே மறைந்து போயிற்று; என்பதாம்.

**(வி - ம்.)** மக்கள் யாக்கை உணவின் பிண்டம் என்றது நீயும் மக்கட் பிறப்பினள் ஆதலின் உனக்குப் பசித்துன்பம் அடிக்கடி வந்துறும். ஆதலின் அதற்கும் ஒரு பாதுகாப்பு வேண்டும் என்றவாறு. "உண்டி முதற்றே உணவின் பிண்டம்" என்பது புறநானூறு. மந்திரங் களுள் தலைசிறந்த மந்திரம் இதுவே என்பது தோன்ற, பெருமந்திரம் என்று கூறிற்று.

இனி, இக் காதையினை ஆயிழை ஆயினள் பெற்றியும் ஐதென வந்து தோன்றிய தெய்வம் வணங்குவோள் முன்னர்ப் பொருந்தி உணர்ந்தேன்

யாங்குளன் என்றலும் கேளாய் புலந்தாய் இராகுலன் வணங்குழித் திரிவோன் உருட்டி வருவோன் தோன்றலும் கண்டனை உற்றனை இறைஞ்ச இராகுலன் வெகுளலும் நீ வாய் புதையா, நல்கூர்ந்தனை என்று அவனொடு பாத்தியன் பாதம் பணிந்து கொணர்கேம் உண்டி யாம் குறிப்பினம் என்றலும் கொணர்கென உண்டருளிய அறம் அறுத்திடும், உதயகுமரன் உன்இராகுலன், உன்னைத் திறம்படச் செய்தேன், கேளாய் நின் தவ்வையராவோர் தாரையும் வீரையும் சிறப்புச் செய்தலின் மாதவி யாகியும் சுதமதியாகியும் நின்னொடு கூடினர், உற்றனை அறிந்தனை கேட்குவை உரையார் எய்தவும் திரியவும் ஆக்கும் இம் மந்திரம் கொள்கென ஓதி, திருநாள் அறம் எய்துதல் சித்தம் உணர் நீ பதிப் புகு வாய் என்று எழுந்து ஓங்கி உண்டென மறித்து இழிந்து கேளாய் பிண்டம் இம் மந்திரம் பசி அறுக்கும் என்று கொடுத்து எழுந்து தெய்வம் நீங்கியது என இயைத்திடுக.

**மந்திரம் கொடுத்த காதை முற்றிற்று**

## கக. பாத்திரம் பெற்ற காதை

[பதினொன்றாவது மணிமேகலைக்குத் தீவதிலகை
கோமுகி என்னும் பொய்கையிலெழுந்த பாத்திரம் கொடுத்த பாட்டு]

அஃதாவது—மணிமேகலா தெய்வம் மந்திரம் கொடுத்து மறைந்தபின்னர்த் தீவதிலகை என்னும் தெய்வம் மணிமேகலை முன்வந்து தோன்றி நீ யார் என்று வினவி அறிந்த பின்னர்த் தானே அம் மாமணிப் பீடிகையின் காவற்றெய்வம் எனத் தன்னையும் அறிவித்து, அங்குள்ள கோமுகி என்னும் கொழுநீரிலஞ்சியின் வைகாசித் திங்கட் பூரணை நாளில் ஆபுத்திரன் கை அமுத சுரபி நீரினின்றும் மேலெழுந்து ஆண்டுக்கொருமுறை தோன்றுவதாம் அந் நன்னாள் இந்த நாளே என்று சொல்லி அப் பாத்திரம் நினக்கு இடைக்கும் என, மணிமேகலை அத் தீவதிலகையொடு அப் பொய்கையை வலம் வந்து அதனைப் பெறும் கோட்பாட்டோடு நிற்ப அம் மணிமேகலையின் கையில் அப் பொய்கையிலெழுந்த அமுத சுரபி வந்துற்றது. இவ்வாற்றால் மணிமேகலை அமுதசுரபியைப் பெற்ற செய்தியைக் கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இனி இதன்கண் தீவதிலகை மணிமேகலை முன் தோன்றி நீ யார் என்று வினவிய பொழுது அவள் விடையிறுத்தலும் தன் வரலாறும் பயனும் விளம்புதலும், மணிமேகலை அன்னாய் நீ யார் என்று தீவதிலகையை வினவியபொழுது அவள் தன் வரலாறு கூறுதலும், கோமுகி என்னும் கொழுநீரிலஞ்சியினின்று ஆபுத்திரன் கை அமுத சுரபி மேலெழுந்து தோன்றும் நாள் இதுவே, அதன் சிறப்பெல்லாம் நின்னூரின்கண் அறவணனடிகளார் நினக்கு அறிவுறுத்துவர் என்றும் அப் பாத்திரம் இப்பொழுது நினக்குக் கிடைக்கும் என்றும் இயம்பி அப் பொய்கையை இருவரும் வலம் வந்து வணங்கி நிற்றலும் அமுத சுரபி அவ்வாறே நீரினுள்ளிருந்து தோன்றி மணிமேகலையின் கையில் வந்துறுதலும் அது பெற்றபின்னர் மணிமேகலை மாத்திரையின்றி மனமகிழ் வெய்திப் புத்தபெருமானை ஏத்துபவள் "மாரனை வெல்லும் வீரநின்னடி" எனத் தொடங்கி "என்னுவிற் கடங்காது" என்று முடிக்கும் வழிபாட்டுச் செய்யுட் பகுதியும், தீவதிலகை பசிப்பிணியின் கொடுமையை மணிமேகலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டோடு அறிவுறுத்துதலும், மெய்ந்நெறி வாழ்க்கையின் இயல்பு கூறுதலும் அதுகேட்ட மணிமேகலை அமுதசுரபி கொண்டு நாவலந்தீவிடத்தே சென்று பசிப்பிணியுற்றோர்க்கெல்லாம் உண்டி கொடுத்து

அருளறம் ஓம்ப விதுப்புற்றுக் கூறும் கூற்றுக்களும் மணிமேகலை அமுத சுரபியோடு வான்வழியே இயங்கி வந்து தன் வரவு நோக்கி மயங்கும் மாதவி முன்னர் வந்து தோன்றி அவளும் சுதமதியும் வியக்குமாறு அற்புத மொழிவாயிலாம் அவர்தம் முற்பிறப்பு வரலாறு கூறுவதும் இவையெல்லாம் வியத்தகுமுறையில் கூறப்படுகின்றன.

மணிமே கலாதெய்வம் நீங்கிய பின்னர்
மணிபல் லவத்திடை மணிமே கலைதான்
வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையும்
தண்மலர்ப் பொய்கையும் தாழ்ந்தனள் நோக்கிக்
காவதந் திரியக் கடவுட் கோலத்துத்
தீவ திலகை செவ்வனந் தோன்றிக்
கலங்கவிழ் மகளிரின் வந்தீங் கெய்திய
இலங்குதொடி நல்லாய் யார்நீ என்றலும்
எப்பிறப் பகத்துள் யார்நீ யென்றது
பொற்கொடி யன்னாய் பொருந்திக் கேளாய்
போய பிறவியில் பூமியங் கிழவன்
இராகுலன் மனையான் இலக்குமி யென்பேர்
ஆய பிறவியில் ஆடலங் கணிகை
மாதவி யீன்ற மணிமே கலையான்
என்பெயர்த் தெய்வம் ஈங்கெனைக் கொணரவிம்
மன்பெரும் பீடிகை என்பிறப் புணர்ந்தேன்
ஈங்கென் வரவிதிங் கெய்திய பயனிது
பூங்கொடி யன்னாய் யார்நீ யென்றலும்
ஆயிழை தன்பிறப் பறிந்தமை யறிந்த
தீவ திலகை செவ்வனம் உரைக்கும்
ஈங்கிதன் அயலகத் திரத்தின தீவத்
தோங்குயர் சமந்தத் துச்சி மீமிசை
அறவியங் கிழவோன் அடியிணை யாகிய
பிறவி என்னும் பெருங்கடல் விடூஉம்
அறவி நாவாய் ஆங்குள தாதலின்
தொழுதுவலங் கொண்டு வந்தேன் ஈங்குப்
பழுதில் காட்சியிந் நன்மணிப் பீடிகை
தேவர்கோன் ஏவலிற் காவல் பூண்டேன்
தீவ திலகை என்பெய ரிதுகேள்
தரும தலைவன் தலைமையின் உரைத்த
பெருமைசால் நல்லறம் பிறழா நோன்பினர்
கண்டுகை தொழுவோர் கண்டதற் பின்னர்ப்
பண்டைப் பிறவியர் ஆகுவர் பைந்தொடி

அரியர் உலகத் தாங்கவர்க் கறமொழி
உரிய துலகத் தொருதலை யாக
ஆங்ஙன மாகிய அணியிழை இதுகேள்
ஈங்கிப் பெரும்பெயர்ப் பீடிகை முன்னது
மாமலர்க் குவளையும் நெய்தலும் மயங்கிய
கோமுகி என்னுங் கொழுநீ ரிலஞ்சி
இருதிள வேனிலில் எரிகதி ரிடபத்
தொருபதின் மேலும் ஒருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவையின்
போதித் தலைவனொடு பொருந்தித் தோன்றும்
ஆபுத் திரன்கை யமுத சுரபியெனும்
மாபெரும் பாத்திரம் மடக்கொடி கேளாய்
அந்நா ளிந்நாள் அப்பொழு திப்பொழுது
நின்னாங்கு வருவது போலும் நேரிழை
ஆங்கதிற் பெய்த ஆருயிர் மருந்து
வாங்குநர் கையகம் வருத்துதல் அல்லது
தான்தொலை வில்லாத் தகைமைய தாகும்
நறுமலர்க் கோதை நின்னூ ராங்கண்
அறவணன் தன்பாற் கேட்குவை யிதன்திறம்
என்றவள் உரைத்தலும் இளங்கொடி விரும்பி
மன்பெரும் பீடிகை தொழுதனள் வணங்கித்
தீவ திலகை தன்னொடுங் கூடிக்
கோமுகி வலஞ்செய்து கொள்கையின் நிற்றலும்
எழுந்துவலம் புரிந்த இளங்கொடி செங்கையில்
தொழுதகை மரபிற் பாத்திரம் புகுதலும்
பாத்திரம் பெற்ற பைந்தொடி மடவாள்
மாத்திரை யின்றி மனமகிழ் வெய்தி
மாரனை வெல்லும் வீர நின்னடி
தீநெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி
பிறர்க்கறம் முயலும் பெரியோய் நின்னடி
துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி
எண்பிறக் கொழிய இருந்தோய் நின்னடி
கண்பிறர்க் களிக்குங் கண்ணோய் நின்னடி
தீமொழிக் கடைத்த செவியோய் நின்னடி
வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி
நரகர் துயர்கெட நடப்போய் நின்னடி
உரகர் துயரம் ஒழிப்போய் நின்னடி
வணங்குதல் அல்லது வாழ்த்தலென் நாவிற்
கடங்கா தென்ற வாயிழை முன்னர்ப்
போதி நீழற் பொருந்தித் தோன்றும்

நாதன் பாதம் நவைகெட ஏத்தித்
தீவ திலகை சேயிழைக் குரைக்கும்
குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவியது தீர்த்தோர்
இசைச்சொல் அளவைக் கென்நா நிமிராது
புன்மரம் புகையப் புகையழல் பொங்கி
மன்னுயிர் மடிய மழைவளம் கரத்தலின்
அரசுதலை நீங்கிய வருமறை யந்தணன்
இருநில மருங்கின் யாங்கணுந் திரிவோன்
அரும்பசி களைய வாற்றுவது காணான்
திருந்தா நாயூன் தின்னுத லுறுவோன்
இந்திர சிறப்புச் செய்வோன் முன்னர்
வந்து தோன்றிய வானவர் பெருந்தகை
மழைவளந் தருதலின் மன்னுயி ரோங்கிப்
பிழையா விளையுளும் பெருகிய தன்றே
ஆற்றுநர்க் களிப்போர் அறவிலை பகர்வோர்
ஆற்றா மாக்க ளரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை
மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே
உயிர்க்கொடை பூண்ட உரவோ யாகிக்
கயக்கறு நல்லறங் கண்டனை யென்றலும்
விட்ட பிறப்பில்யான் விரும்பிய காதலன்
திட்டி விடமுணச் செல்லுயிர் போவுழி
உயிரொடு வேவே னுணர்வொழி காலத்து
வெயில்விளங் கமையத்து விளங்கித் தோன்றிய
சாது சக்கரன் றனையா னூட்டிய
காலம் போல்வதோர் கனமயக் குற்றேன்
ஆங்கதன் பயனே ஆருயிர் மருந்தாய்
ஈங்கிப் பாத்திரம் என்கைப் புகுந்தது
நாவலொடு பெயரிய மாபெருந் தீவத்து
வித்தி நல்லறம் விளைந்த வதன்பயன்
துய்ப்போர் தம்மனைத் துணிச்சித ருடுத்து
வயிறுகாய் பெரும்பசி யலைத்தற் கிரங்கி
வெயிலென முனியாது புயலென மடியாது
புறங்கடை நின்று புன்கண் கூர்ந்துமுன்
அறங்கடை நில்லா தயர்வோர் பலரால்

ஈன்ற குழவி முகங்கண் டிரங்கித்
தீம்பால் சுரப்போள் தன்முலை போன்றே
நெஞ்சு வழிப்படூஉம் விஞ்சைப் பாத்திரத்
தகன்சுரைப் பெய்த ஆருயிர் மருந்தவர்
முகங்கண்டு சுரத்தல் காண்டல்வேட் கையேன்என
மறந்தே னதன்திறம் நீயெடுத் துரைத்தனை
அறங்கரி யாக அருள்சுரந் தூட்டும்
சிறந்தோர்க் கல்லது செவ்வனஞ் சுரவாது
ஆங்ஙன மாயினை அதன்பயன் அறிந்தனை
ஈங்குநின் றெழுவாய் என்றவள் உரைப்பத்
தீவ திலகை தன்னடி வணங்கி
மாபெரும் பாத்திரம் மலர்க்கையில் ஏந்திக்
கோமகன் பீடிகை தொழுது வலங்கொண்டு
வானூ டெழுந்து மணிமே கலைதான்
வழுவறு தெய்வம் வாய்மையின் உரைத்த
எழுநாள் வந்த தென்மகள் வாராள்
வழுவாய் உண்டென மயங்குவோள் முன்னர்
வந்து தோன்றி யவர்மயக் கங்களைந்
தந்தில் அவர்க்கோர் அற்புதங் கூறும்
இரவி வன்மன் ஒருபெரு மகளே
துரகத் தானைத் துச்சயன் தேவி
அமுத பதிவயிற் றரிதில் தோன்றித்
தவ்வைய ராகிய தாரையும் வீரையும்
அவ்வைய ராயினீர் நும்மடி தொழுதேன்
வாய்வ தாக மானிட யாக்கையில்
தீவினை அறுக்கும் செய்தவம் நுமக்கீங்
கறவண அடிகள் தம்பாற் பெறுமின்
செறிதொடி நல்லீர் உம்பிறப் பீங்கிஃ
தாபுத் திரன்கை அமுத சுரபியெனும்
மாபெரும் பாத்திரம் நீயிரும் தொழுமெனத்
தொழுதனர் ஏத்திய தூமொழி யாரொடும்
பழுதறு மாதவன் பாதம் படர்கேம்
எழுகென வெழுந்தனள் இளங்கொடி தானென்.

## கக. பாத்திரம் பெற்ற காதை

### உரை

மணிமேகலையின் முன்னர்த் தீவதிலகை என்னும்
காவற் றெய்வம் வந்து தோன்றி நீ யார்? என வினுதல்

க - அ : மணிமே.........என்றலும்

(இ - ள்.) மணிமேகலா தெய்வம் நீங்கிய பின்னர் - மணிமேகலா தெய்வம் மீண்டும் வந்து மந்திரம் கொடுத்து வானத்திலேறி மறைந்து போன பின்பு; மணிமேகலை தான் மணிபல்லவத்திடை வெண் மணல் குன்றமும் விரிபூஞ் சோலையும் தண் மலர்ப் பொய்கையும் தாழ்ந்தனள் நோக்கி - மணிமேகலை தானும் அம் மணி பல்லவத் தீவின்கண்ணுள்ள வெள்ளிய மணற்குன்றுகளினும் மலர்ந்த பூம்பொழில்களிடத்தும் குளிர்ந்த நீர்ப் பூக்கள் மலர்ந்துள்ள இயற்கை நீர்நிலை மருங்குகளினும் சென்று சென்று கவலை சிறிதுமின்றி ஆங்காங்கு நெடும்பொழுது தங்கியிருந்து அவற்றின் அழகைக் கூர்ந்து நோக்கி மகிழ்ந்து; காவதம் திரிய - ஒரு காததூரம் சுற்றித் திரியா நிற்ப; தீவதிலகை கடவுள் கோலத்துச் செவ்வனம் தோன்றி - அம் மணிமேகலை முன்னர் அத் தீவத்துக் காவற்றெய்வமாகிய தீவதிலகை என்பாள் தனக்கியன்ற கடவுள் உருவத்தோடு நன்கு வெளிப்பட்டுத் தோன்றி; கலம் கவிழ் மகளிரின் வந்து ஈங்கு எய்திய இலங்கு தொடி நல்லாய் நீ யார் என்றலும் - மரக்கலம் கவிழாநிற்ப அதனினின்றும் உய்ந்து கரையேறினுள் ஒரு மகள் போன்று மக்கள் வழக்கற்ற இத் தீவினிடையே வந்து இவ்விடத்தை அடைந்த நங்கையே நீ யார்? கூறுதி என்று அத் தெய்வம் வினவாநிற்ப என்க.

(வி - ம்.) மணிமேகலை புத்தபீடிகையைத் தொழுது பழம் பிறப்புணர்ச்சி கைவந்தமையானும் மாபெருந்தெய்வமாகிய மணிமேகலா தெய்வம் தன்னைக் காப்பதனைக் குறிக்கோளாகக் கொண்டிருப்பது அதன் செயலாலும் சொல்லாலும் அறிந்துகொண்டமையானும் அத் தெய்வம் உணர்த்திய செய்திகளானும் இப்பொழுது சிறிதுந் துன்பமற்றவளாயினள் என்னுமிச் செய்தியை அவள் குன்றமும் பொழிலும் பிறவுமாகிய இடந்தொறும் இடந்தொறும் சென்று சென்று ஆண்டாண்டு நின்று நின்று அத் தீவின் அழகை நுகருமாற்றால் இப் புலவர் பெருமான் இனிது நம்மனோர்க்குக் குறிப்பாக அறிவுறுத்தும் நுணுக்கம் உணர்க. தீவ

திலகை தெய்வவுருவத்தோடு எதிர் தோன்றி நீ யார் என்று வினவிய தற்கும் மேல் அவள் வினவெதிர் வினாவாக விடை இறுக்கும் சொற்றிறத்தானும் அவள் இப்பொழுது எய்தியிருக்கின்ற புதிய நிலை புலப்படும்.

தாழ்ந்தனள் - தங்கி நின்று நோக்கி என்றமையால் அவற்றின் அழகையே அவள் நோக்கினாள் என்பது பெற்றாம். ஆராமையாலே அங்கங்கே நின்று நின்று நோக்கினள் என்பார் தாழ்ந்தனள் நோக்கி என்றார். இவ்வழகுக்காட்சியி லீடுபட்டு அவள் சுற்றிய தூரம் ஒரு காவதம் இருக்கும் என்பார் காவதந்திரிய என்றார்.

தீவதிலகை அம் மணிபல்லவத்துக் காவற்றெய்வம். கலம் கவிழ்ந்த காலை அதனினின்றும் உய்ந்து கரையேறிய மகள் போல என்றது அத் தகையோரையன்றி மாந்தர் வருதலில்லாத தீவிற் றமியளாய்க் காணப் படுதற்கு உவமை எடுத்தோதினள். அவள் நிலைமை அங்ஙனமில்லாமை யால் உவமையாகவே கூறினள்.

## மணிமேகலை தீவதிலகைக்கு மறுமொழி கூறுதல்

**கூ - கசு : எப்பிறப்பு.........என்றலும்**

(இ - ள்.) பொன் கொடி அன்னாய் - அது கேட்ட மணிமேகலை தீவதிலகையைச் செவ்வனம் நோக்கிக் காமவல்லி போன்ற கவினொடு தோன்றிய அன்னையே நீ; யார் நீ என்றது எப்பிறப்பு அகத்துள் - நீ என்னை யார் என்று அறிந்து கொள்ள விரும்பி வினவியது என்னுடைய பிறப்புக்களுள் வைத்து எந்தப் பிறப்பைச் சுட்டி வினவப்பட்டதோ! யானறிகிலேன் ஆதலின் யான் அறிந்துள எனது முற்பிறப்பினும் இப்பிறப்பினும் என்னை இன்னள் இன்னள் என்று தனித்தனியே விளம்புவல்; பொருந்தக் கேளாய்-நீ தானும் மனமியைந்து கேட்டருள்வாயாக!; யான் போய பிறப்பில் பூமியங்கிழவன் இராகுலன் மனைவி என்பேர் இலக்குமி - யான் எனது முற்பிறப்பிலே நிலத்தை ஆளும் உரிமையுடைய இராகுலன் என்னும் அரசிளங் குமரனுடைய மனைவியாயிருந்தேன், அப் பிறப்பில் இலக்குமி என்பதே என் பெயராகும்; ஆய பிறவியில்-மாறிப்பிறந்ததாகிய இப் பிறப்பிலோ; யான் ஆடல் அம் கணிகை மாதவி ஈன்ற மணிமேகலை - யான் நாடகக் கணிகையாகிய மாதவி என்பவள் ஈன்ற மகளாகி மணிமேகலை என்னும் பெயருடையேன் காண்!; என் பெயர்த் தெய்வம் ஈங்கு எனைக் கொணர இம் மன் பெரும் பீடிகை என் பிறப்பு உணர்ந்தேன் - என் பெயரையுடையதாகிய மணிமேகலா தெய்வம் பூம்புகார் நகரத்திலிருந்து இம் மணிபல்லவத்தீவிற்கு எடுத்து வர யான் ஈண்டு நிலைபெற்றுள்ள பெருமை மிக்க மாமணிப் பீடிகையினாலே என் முற்பிறப்பினை உணர்ந்துள்ளேன் காண்!; இது ஈங்கு என்வரவு இது ஈங்கு எய்திய பயன் - இதுவே இங்கே என்

னுடைய வரவிற்குக் காரணம் இதுவே யான் இங்கு வந்தமையால் எய்திய பயனுமாம்; பூங்கொடி அன்னாய் நீ யார் - மலர்க் கொடி போலும் அழகுடைய அன்னையே! நீ யார்? என்றறிய விரும்பு கின்றேன் அறிவித்திடுவையோ? என்று வினவாநிற்ப எனக

(வி - ம்.) யான் என் இரண்டு பிறப்புக்களை அறிந்துள்ளேன், அவற்றுள் எப் பிறப்பினை நீ வினவினை என்றவாறு. இரண்டையும் அறிவிப்பேன் கேள் என்கின்றனள். போய பிறவி - முற்பிறப்பு. ஆய பிறவி-அது போய பின் ஆய பிறப்பு. அஃதாவது—இப் பிறப்பு. ஆடலங்கணிகை - நாடகக்கணிகை. கணிகையர் பலதிறப்படுவர்; அவருள் மாதவி அகக் கூத்தாடும் கணிகை எனற்கு ஆடலங்கணிகை என்றாள். என் பெயர்த் தெய்வம் என்றது மணிமேகலா தெய்வத்தை. அத் தெய்வம் கொணருதலால் வந்தேன் பீடிகையைக் கண்டமையாலே பிறப்புணர்ந்தேன் என இரண்டற்கும் காரணம் தெரித்தோதினள்; மீண்டும் அத் தெய்வம் வினவாமைப் பொருட்டென்க. மணிமேகலையின் இம் மொழிகளில் கல்வி நிலைக்களனாகவும் செல்வம் நிலைக்களனாகவும் பிறந்த பெருமிதச் சுவை தோன்றுதலுணர்க.

## தீவதிலகை மணிமேகலைக்குத் தன்னை அறிவித்தல்

௧௭ - ௨௧ : ஆயிழை.........என் பெயர்

(இ - ள்.) ஆயிழை தன் பிறப்பு அறிந்தமை அறிந்த தீவதிலகை செவ்வனம் உரைக்கும் - மணிமேகலையையும் அவள் பீடிகை கண்டு பிறப்புணர்ந்தமையையும் அறிந்து கொண்ட தீவ திலகை அவளை நன்கு மதித்தவளாய் அவள் வினாவிற்கு விளக்க மாக விடை கூறுவாள்-; ஈங்கு இதன் அயலகத்து இரத்தின தீவத்து ஓங்கு உயர் சமந்தத்து உச்சி மீமிசை - நங்காய்! இந்த மணிபல்லவத்தின் அணித்தாக இரத்தின தீவம் என்றொரு தீவுளது காண்! அதன்கணுள்ள மிகவும் உயர்ந்த சமந்தம் என்னும் மலையுச்சியின் மேலே; அறவியங் கிழவோன் அடியிணை ஆகிய - அருளறத்தை உரிமையாகவுடைய புத்த பெருமா னுடைய திருவடியிணையின் சுவடாகிய; பிறவி என்னும் பெருங் கடல் விடூஉம் அறவி நாவாய் ஆங்கு உளது ஆதலின் - பிறவி என்கின்ற பெரிய துயர்க்கடலினின்றும் உயிர்களைக் கரை யேற்றி விடுகின்ற அறத்தன்மையுடைய மரக்கலம் ஆங்கோரிடத்தே உளதாகலின்; தொழுது வலங் கொண்டு வந்தேன் - அங்குச் சென்று அதனைக் கைதொழுது வலமுறைவந்து வணங்கி மீண்டு வந்தேன் காண்!; பழுதுஇல் காட்சி இந்நல் மணிப் பீடிகை தேவர்கோன் ஏவலின் காவல் பூண்டேன் - குற்றமற்ற மெய்க்காட்சியை நல்கும் தெய்வத் தன்மையுடைய இந்த அழகிய மணியாலியன்ற பீடிகையை இவ்விடத்தே இட்ட தேவேந்திர னுடைய பணி தலைமேற்கொண்டு காவற்றொழில் பூண்டுள்ளேன்;

என் பெயர் தீவதிலகை - என்னுடைய பெயர் தீவதிலகை என்பதாம் என்று சொல்லி என்க.

(வி - ம்.) புத்த பீடிகையைக் கண்டுழியும் அருளறம் பூண்ட அறவோர்க்கன்றிப் பழம் பிறப்புணர்ச்சி உண்டாதலில்லை என்பது "கீழ்நில மருங்கில் நாக நாடாளும் இருவர் மன்னவர் ஒரு வழித் தோன்றி" அதனைக் கண்டுழியும் அவ்விருவர்க்கும் பழம் பிறப்புணர்ச்சி உண்டாகாமையாலறியப்பட்டது.(எட்டாங்காதை) எனவே, ஈண்டுத்தீவதிலகை மணிமேகலை இறுத்த விடையினால் இவள் மனப்பாட்டறம் என்னும் அருளற நெறியிற் பிறப்புக்கடோறும் அடிப்பட்டு வந்த நன்னர் நெஞ்சமுடையாள் என்று அவளைப் பெரிதும் மதித்து அவள்பால் சொல்லாட்டம் நிகழ்த்துகின்றாள் என்று உணர்த்தற்கு ஆயிழை தன் பிறப்பறிந்தமையறிந்த தீவதிலகை என வேண்டாதன விதந்து கூறி வேண்டியது முடித்தனர்.

இரத்தினதீவம் இலங்காதீவத்தில் ஒரு பகுதி என்றும், அஃது இக்காலத்தில் இரத்தினபுரி என்று வழங்கப்படுகின்றது என்றும், அதில் சமனொளி என்னும் பெயருடைய மலையும் அதன்கண் புத்தர் திருப்பதியும் உளதென்றும் அம் மலையைச் சிலர் சமந்தகூடம் என்றும் சிலர் சமனொலையென்றும் வழங்குகின்றனர் என்றும், இந்நூலாசிரியரும் பின்னர் உஅ ஆங் காதையில் (கoஎ - கoக) இதனை,

> "இலங்கா தீவத்துச் சமனொளி யென்னும்
> சிலம்பினை யெய்தி வலங்கொண்டு மீளும்
> தரும சாரணர்"

என்றோதுதலானும் அம் மலையே ஈண்டுத் தீவதிலகையால் கூறப்படுவது என்றும் அறிஞர் கூறுகின்றனர். (இம் மலை இப்பொழுது "ஆடம்ஸ் பீக்" என்று ஆங்கிலத்திற் கூறப்படுகிற தென்றும் கூறுவர்.)

சமந்தம் - சமந்தம் என்னும் மலை. அறவி - அறத்தின் திருமூர்த்தி. கிழவன்-தலைவன்; புத்தன் என்க. பிறவியைக் கடல் என்றமையின் அடியிணையை நாவாய் என்றார். வந்தேன் என்றது ஈண்டிருந்து சென்று மீண்டு வந்தேன் என்றவாறு. தேவர்கோமானே இம் மாமணிப்பீடிகையை ஈங்கிட்டனன்; மேலும் அதற்குக் காவலாக என்னையும் ஈங்குறையப் பணித்தான் என்பது கருத்து.

## தீவதிலகை மணிமேகலையைப் பாராட்டுதல்

உகூ - கூகூ : இதுகேள்..........அணிஇழை

(இ - ள்.) இது கேள்-நங்கையே இப்பீடிகையின் மாண்பு கூறுவல் இதனையும் கேட்பாயாக!; கண்டு கைதொழுவோர் தரும தலைவன தலைமையின உரைத்த பெருமைசால் நல் அறம் பிறழா நோன்பினர்-இப் பீடிகையைக்கண்ட துணையானே இறையன்பாலே நெஞ்சம் நெகிழப்பட்டுக் கைகூப்பி வணங்கும் இயல்புடையோர்

யாவரேனும் அவர் பண்டும் பண்டும் பலப்பல பிறப்புகளினும் அறவியங்கிழவோனாகிய புத்தபெருமான் இயல்பாகவே ஓதாதுணர்ந்த தமது தலைமைத் தன்மை காரணமாக உலகிற்குத் திருவாய் மலர்ந்தருளிய பெருமை அமைந்த நல்லறமாகிய அருளற நெறியிற் சிறிதும் பிறழாது அடிப்பட் டொழுகிவந்த தாளாளர் என்பதில் ஐயமில்லை; கண்டதன் பின்னர் பண்டைப் பிறவியர் ஆகுவர் - அத்தகைய கருவிலே திருவுடையர் கண்டதன் பின்னர் அவருடைய பழம் பிறப்புணர்ச்சி முழுவதும் கைவரப் பெறுவர்காண்; பைந்தொடி உலகத்து அரியர் - நங்காய் அத்தகைய நல்லறம் பிறழா நோன்பினர் இந் நிலவுலகத்தே காண்டற்கரியராவார்காண்!; ஆங்கு அவர்க்கு அறமொழி உரியது - அவ்வாறு கண்டு கைதொழும் திருவுடையார்க்கு அவ்வறவாழி அந்தணன் அறிவுறுத்த திருவற மொழி முழுவதும் உரியதாகுங்காண்!; உலகத்து ஒருதலையாக ஆங்ஙனம ஆகிய அணியிழை - இந் நிலவுலகத்து அவ்வாறு அவ்வறம் பலப்பல பிறப்பில் அடிபபட்டுவந்து அதன் பயனையும் ஒருதலையாகப் பெற்றுயர்ந்த தவச்செல்வி நீ என்பது அறிந்தேன் என்றாள் என்க.

(வி - ம்.) தருமதலைவன் - புத்தன். தலைமை - நல்லாசிரியனுதற்கு இன்றியமையாத முற்றுணர்வுடைமை. புத்த பெருமானுக்கு அத்தகு தலைமைத் தன்மை யுண்மையை,

"பூமகனே முதலாகப் புகுந்தமரர் எண்டிசையும்
தூமலரா லடிமலரைத் தொழுதிரந்து வினவியநாள்
காமமும் கடுஞ்சினமுங் கழிப்பரிய மயக்கமுமாய்த்
தீமைசால் கட்டினுக்குத் திறற்கருவி யாய்க்கிடந்த
நாமஞ்சால் நமர்களுக்கு நயப்படுமா றினிதுரைத்துச்
சேமஞ்சார் நன்னெறிக்குச் செல்லுமா றருளினையே

எனவும்,

"எண்ணிறந்த குணத்தோய்நீ யாவர்க்கு மரியோய்நீ
உண்ணிறைந்த வருளோய்நீ யுயர்பாரம் நிறைந்தோய்நீ
மெய்ப்பொருளை யறிந்தோய்நீ மெய்யறமிங் களித்தோய்நீ
செப்பரிய தவத்தோய்நீ சேர்வார்க்குச் சார்வு நீ

எனவும்,

"நன்மைநீ தின்மைநீ நனவுநீ கனவுநீ
வன்மைநீ மென்மைநீ மதியுநீ விதியுநீ
இம்மைநீ மறுமைநீ இரவுநீ பகலுநீ
செம்மைநீ கருமைநீ சேர்வுநீ சார்வுநீ"

எனவும்,

"அருளாழி பயந்தோய்நீ அறவாழி நயந்தோய்நீ
மருளாழி துரந்தோய்நீ மறையாழி புரிந்தோய்நீ"

எனவும்,

"மாதவரின் மாதவனீ வானவருள் வானவனீ
போதனருட் போதனனீ புண்ணியருட் புண்ணியனீ"

எனவும்,

"ஆதிநீ யமலனீ அயனுநீ அரியுநீ
சோதிநீ நாதனீ துறைவனீ இறைவனீ"

எனவும்,

"அருளுநீ பொருளுநீ அறவனீ அநகனீ
தெருளுநீ திருவுநீ செறிவுநீ செம்மனீ"

எனவும், பாராட்டி வருகின்ற பழைய செந்தமிழ்த் தீம்பாடலானு முணர்க. (இவ்வருமைப் பாடல் வீரசோழியம் ௧௧ ஆம் கலித்துறையின் உரையிற் கண்டது.)

கண்டுகை தொழுவோர் பிறழா நோன்பினர் என மாறுக. நீயும் முற்றவமுடைய பொற்றொடியே என்பாள் ஆங்ஙனம் ஆகிய அணியிழை என்று பாராட்டினள். ஈண்டு—

"தவமுந் தவமுடையார்க் காகும்" (உகூஉ)

எனவரும் திருவள்ளுவர் பொன்மொழி நினைக.

## தீவதிலகை அமுத சுரபி என்னும் அரும்பெறற் பாத்திரமும் ஈண்டு நினக்குக் கிடைக்கும் எனல்

௫௬ - ௭௫ : இதுகேள்............போலும்

(இ - ள்.) இதுகேள் - மணிமேகலாய் நினக்கு ஆக்கமாகிய இன்னொரு செய்தியாகிய இதனையும் கேட்பாயாக; ஈங்கு இப் பெரும் பெயர்ப் பீடிகை முன்னது - இவ் விடத்துள்ள இம் மா பெரும் புகழை யுடைய இம் மாமணிப் பீடிகையின் முன் பக்கத் திலே யுளதாகிய; மாமலர்க் குவளையும் நெய்தலும் மயங்கிய கோமுகி என்னும் கொழுநீர் இலஞ்சி - கரிய நிறமுடைய மலரா கிய குவளையும் நெய்தலும் விரவி மலர்ந்த இந்தக் கோமுகி என்னும் பெயருடைய நிரம்பிய நீரையுடைய நீர்நிலையினின்றும்; இருது இளவேனிலில் எரி கதிர் இடபத்து ஒருபதின் மேலும் ஒரு மூன்று சென்றபின் - பெரும் பொழுதுகளில் வைத்து இந்த இளவேனிற் பொழுதின்கண் கார்த்திகை முதலிய பதின்

மூன்று நாள்களும் கழிந்த பின்னர்; மீனத்து இடைநிலை மீனத்து அகவயின்-நாள் மீன்களுள் நடுவு நிற்றலையுடைய விசாகநாளின் கண்; ஆபுத்திரன் கை அமுத சுரபி எனும் மாபெரும் பாத்திரம்- ஆபுத்திரன் என்னும் அறவோன் கையின்கண்ணிருந்த அமுத சுரபி என்னும் மிகவும் பெருமையுடைய பிச்சைப்பாத்திரம்; போதித் தலைவனொடு பொருந்தித் தோன்றும்-தோன்று நாளாலே புத்தபெருமான் போன்று மேலே எழுந்து வந்து தோன்றுங் காண்; மடக் கொடி - இளமையுடைய பூங் கொடியேபோல் வாளே !; கேளாய் - கேட்பாயாக; அந்நாள் இந்நாள் அப் பொழுது இப்பொழுது - அந்த வைகாசித் திங்கள் தூய நிறைத் திங்கள் நாளே இற்றை நாள் அம் மாபெரும் பாத் திரம் நீரினின்றும் மேலெழுந்து தோன்றும் முழுத்தமும் இம் முழுத்தமேயாம் ஆகவே; நின்னுங்கு வருவது போலும் - அம் மா பெரும் பாத்திரம் நின்பால் வந்தெய்துங்காண்! என்றாள் என்க.

(வி - ம்.) பெரும் பெயர் - பெரிய புகழ். இலஞ்சி - நீர் நிலை. இருது - பெரும்பொழுது. இளவேனில் சித்திரைத் திங்களும் வைகாசித் திங்களும் ஆகிய இரண்டு திங்களுமாம். இவற்றுள் வைகாசித் திங்களில் என்பாள், எரிகதிர் இடபத்து என்றாள். எரிகதிர் - ஞாயிறு.

இனி இக்கால வழக்கில் நாள்மீன்களுள் நடுவண் நிற்பது சித்திரை மீனாகவும், ஈண்டு விசாக மீனை மீனத்து நடுநிலை மீன் என்பதற்கு அறிஞர் காட்டும் அமைதி வருமாறு :

"ஒவ்வோராண்டினும் பகலையும் இரவையும் தம்முட் சமமாக முப்பது முப்பது நாழிகையாகவே பெற்ற விழுவநாள்களில் ஒன்றாகிய சித்திரை விழுவில் எந்த நாளில் ஞாயிற்றிற்குப் புகுதி யுண்டா கின்றதோ, அந் நாள்மீனை முதலாக வைத்துக் கூறுதல் கணிக நூல் வழக்காதலின் பண்டொரு காலத்தே ஞாயிற்றுக்குச் சித்திரை விழுவ நாள் கார்த்திகை நாளாதல் கண்டு கார்த்திகை மீனையே முதன் மீனாக வைத்து வழங்குவாராயினர்; பின்னர் வராக மிகிரர் என்னும் பெருங் கணிவர் தமது காலத்தே சித்திரை விழுவம் அச்சுவினியில் ஞாயிற்றின் புகுதியுண்டா யிருத்தலை அறிந்து அச்சுவினியை முதன் மீனாக வைத் தென்னும் வழக்கத்தை யுண்டாக்கினர்; ஆதலால் அவ் வராகமிகிரர் காலத்திற்கு முன்பிருந்த வழக்கத்தால் கார்த்திகையை முதன் மீனாகக் கொண்டு ஈண்டு விசாகம் நடுநிலை மீன் எனப்பட்டது" என்ப.

ஒரு பதின் மேலும் மூன்று-பதின் மூன்று. இஃது எண்ணால் நாள் களுக்குப் பெயராயிற்று. கார்த்திகை முதலாகப் பதின்மூன்று நாள் மீன்களும் கழிந்தபின் வரும் நாள் மீனாகிய விசாகம் எனவும், இருபத் தேழு மீன்களுள் நடுவுநிலை மீனாகிய விசாகம் எனவும் தனித்தனி இயைத்திடுக.

போதித்தலைவன் - புத்தர். அவரோடு தோற்றத்தால் பொருந்தித் தோன்றும் என்க. அஃதாவது - போதித்தலைவன் போல விசாக நாளக

வையின் தோன்றும் என்றவாறு. எனவே அப் பாத்திரம் அந்த நாளில் தோன்றுதற்குரிய காரணமும் உடன் தெரித்தோதியபடியாம். அந் நன்னாளில் பிறந்த புத்தன் உலகினர் எல்லார்க்கும் நல்லறம் வழங்கினாற் போன்று இப் பாத்திரமும் உலகினர்க் கெல்லாம் உண்டிகொடுத்து அருளறம் புரிவோர்பாற் சேறற் பொருட்டு அவ்வறவோன் பிறந்த நாளிலே ஆண்டுதோறும் தோன்றும். அதனை ஏற்றற்குத் தகுதியுடைய அறவோரைப் பெருமையாலே மீண்டும் நீரினுள் மூழ்கி விடும். இப் பொழுது எவ்வாற்றானும் அத் தகுதியுடைய நீ இந்த நாளில் இப் பொழுது இவ்விடத்திலே வந்தெய்தினை ஆதலின் அப் பாத்திரம் நின் பால் வந்தெய்தும் என்று தெய்வமாகலின் எதிரதுணர்ந்து கூறிற் றென்க. போலும் : ஒப்பில் போலி.

## தீவதிலகையோடு மணிமேகலை கோமுகியை வலம் வந்து நிற்றலும் அமுதசுரபி அவள் கையில் வந்துறுதலும்

### சஎ - ௫௮ : நேரிழை..........புகுதலும்

(இ - ள்.) நேரிழை - மணிமேகலாய்! அமுதசுரபி என்னும் அம் மா பெரும் பாத்திரத்தின் சிறப்பினை யான் சிறிது கூறுவல் கேள்; ஆங்கு அதிற் பெய்த ஆருயிர் மருந்து வாங்குநர் கையகம் வருத்துதல் அல்லது - அவ்வமுத சுரபி என்னும் பாத்திரத்திலே இட்ட ஆருயிரின் பசிப்பிணிதீர்க்கும் மருந்தாகிய உணவு பின்னர் ஏற்போருடைய கையைத் தனது பொறையாலே வருத்துவதன்றி; தான் தொலைவு இல்லாத் தகைமையது ஆகும்- இடப்பட்ட அவ்வுணவு ஒருபொழுதும் ஒழிதலின்றி மேன் மேலும் வளருகின்றதொரு தெய்வத்தன்மை யுடையதாங்காண்!; நறுமலர் கோதை-நறிய மலர் மாலை போன்று யாவராலும் விரும்பப்படுகின்ற நங்கையே!; இதன் திறம்-அதன் சிறப்பும் வரலாறும் பிறவு மெல்லாம்; நின் ஊர் ஆங்கண் அறவணன் தன் பால் கேட்குவை என்று - நீ நின ஊரிற் சென்றவிடத்தே அறவணவடிகளார்பால் கேட்டறிகுவை காண்! ஈண்டு அது கூறப் பொழுது இல்லை என்று; அவள் உரைத்தலும் - அத் தீவதிலகை அறிவித்தலும்; இளங்கொடி விரும்பி - மணிமேகலை தானும் அப் பெறற்கரும் பேற்றினைப் பெறுதற்கு விரும்பி மீண்டும்; மன் பெரும் பீடிகை தொழுதனள் வணங்கி - ஆராஅன்பினாலே என்றும் நிலைபெற்றுள்ள பெருமையுடைய அத் தருமபீடிகையைக் கைகூப்பித் தொழுது நிலத்தில் வீழ்ந்து வணங்கிப் பின்னர்; தீவதிலகை தன்னொடுங் கூடி - அத் தெய்வத்தோடு சேர்ந்து; கோமுகி வலம் செய்து கொள்கையின் நிற்றலும்-அக் கோமுகி என்னும் கொழுநீரிலஞ்சியை வலமுறை வந்து அப் பாத்திரத்தை ஏற்றுக் கொள்ள ஏந்திய கைகளோடே நின்றவளவிலே; தொழுந்தகை மரபின் பாத்திரம் எழுந்து -

நீரினின்று தொழத்தகுந்த தெய்வத் தன்மையுடைய அமுத சுரபி என்னும் அப் பாத்திரம் மேலெழுந்து மணிமேகலை மருங்கில் வந்து; வலம் புரிந்த இளங்கொடி செங்கையில் புகுதலும் - தன்னை வலம் வந்து நிற்கும் அம் மணிமேகலையின் ஏந்திய சிவந்த கைகளிலே புக்கமர்தலும்; என்க.

(வி - ம்.) நேரிழை : மணிமேகலை. அதில் - அவ்வமுத சுரபியில். ஆருயிர்மருந்து - உணவு. தன் பொறையால் ஏற்போருடைய கையை வருத்தும் என்றவாறு. தான் என்றது-ஆருயிர் மருந்தென்ற உணவினை. அது தோன்றும் பொழுதும் இப்பொழுதே என்றமையின், அதன் திறமெலாம் யான் உரைத்தற்குச் செவ்வி இஃதன்று நீ அதனியல்பெலாம் அறவணடிகள் பால் கேட்குவை என்று கூறி முடித்தவாறும்.

கொள்கையின் ஏற்றுக் கொள்ள ஏந்திய கையோடு நிற்றலும் என்க. அதனை ஏற்க வேண்டும் என்னும் கோட்பாட்டோடு நிற்றலும் எனினுமாம்.

வலம் புரிந்த இளங்கொடி செங்கை என்றது அப் பாத்திரம் தன் மருங்கு வந்துற்றவுடன் மணிமேகலை அப் பாத்திரத்தையும் வலம் வந்து கையேந்தி அதனை ஏற்க ஏந்திய செங்கை என்பதுபட நின்றது.

### பாத்திரம் பெற்ற மணிமேகலை பகவனைப் பரவுதல்

௫௧ - ௭௨ : பாத்திரம்.........முன்னர்

(இ - ள்.) பாத்திரம் பெற்ற பைந்தொடி மடவாள் - இவ்வாறு அமுதசுரபி என்னும் மாபெரும் பாத்திரத்தை ஏந்திய பசிய வளையலணிதற்கியன்ற இளமகளாகிய மணிமேகலை எல்லையில்லாத மனமகிழ்ச்சியை எய்தி அப் பேற்றினைத் தனக்கருளிய புத்தபெருமானை வணங்கி வாழ்த்துபவள்; மாரனை வெல்லும் வீர நின் அடி - காமனைக் கடிந்து வென்ற வீரனே நின் திருவடிகளை; தீ நெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி - தீய நெறியிலொழுகுதற்குக் காரணமான காம முதலிய கொடிய உட்பகையை எல்லாம் அழித்தவனாகிய நின் திருவடிகளை; பிறர்க்கு அறம் முயலும் பெரியோய் நின்னடி - நினக்கென முயலாது பிறர்க்கு அறமுண்டாக்கும் பொருட்டே முயலுகின்ற பெருமையுடையோனே நின் திருவடிகளை; துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி - மேனிலையுலகத்தையும் விரும்புகிலாத பழைமையுடையோய் நின் திருவடிகளை; எண் பிறக்கு ஒழிய இருந்தோய் நின்னடி - மக்கள் எண்ணங்கள் எட்டமாட்டாமற் பின்னே கிடக்கும்படி உயர்நிலையிற் சென்றிருந்த நின் அடிகளை; பிறர்க்குக் கண் அளிக்கும் கண்ணோய் - பிறர்க்கெல்லாம் அகக் கண்ணை அளிக்கின்ற கண்ணோட்ட முடையவனே; நின் அடி-

நின் அடிகளை; தீமொழிக்கு அடைத்த செவியோய் நின் அடி-பொய் முதலிய தீயமொழி சிறிதும் உட்புகாதபடி காவல் செய்யப்பட்ட திருச்செவிகளையுடையோனே! நின் திருவடிகளை; வாய்மொழி சிறந்த நாவோய் நின் அடி - வாய்மையே ஆகிய நன்மொழியே நவிலுதலிற் சிறந்த செந்நாவினையுடையோய் நின் திருவடிகளை; நரகர் துயர் கெட நடப்போய் நின் அடி - நரகத்திற் கிடந்துழலும் தீவினையாளர் எய்துகின்ற அந் நரகத்துயரமும் இல்லையாம்படி அவர் பொருட்டு அந் நரகருலகத்தினும் புகுகின்றவனே! நின் திருவடிகளை; துயரம் ஒழிப்போய் நின அடி - நரகர்களின் துன்பத்தையும் அகற்றும் அருளாளனே நின திருவடிகளை; வணங்குதலல்லது - வாளாது வணங்குதலேயன்றி; வாழ்த்தல் - புகழ்ந்து வாழ்த்துதல்; என் நாவிற்கு அடங்காது-எளியேனாகிய என் ஒரு நாவிற்கடங்காதன்றே!; என்ற ஆயிழை முன்னர் – என்று வாழ்த்தி வணங்கிய மணிமேகலையின் முன்பு என்க.

(வி - ம்.) மாத்திரை-அளவு. எல்லை-அருளறம் பூண்டோளாதலின் அவ்வறத்திற்கு இன்றியமையாத கருவியாகிய அமுதசுரபி பெற்றமையால் அளவற்ற உவகை பெற்றனள். இது செல்வம் நிலைக்களனாகப் பிறந்த உவகை. மாரன்-அவாக்களை நெஞ்சத்தே தோற்றுவிக்கும் ஒரு தேவன் என்பது பௌத்த சமய நூற்றுணிவு. "காமற் கடந்த வாமன்" என முன்னும் வந்தது. அங்கும் காமன் என்றதும் மாரன் என்னும் அத்தேவனையேயாம்.

தீநெறிக் கடும்பகை என்றது காம வெகுளி மயக்கங்களை. போதி மரத்தின்கீழ், புத்தருக்கு மெய்யுணர்வு பிறந்துழி மாரன் நீ இப்பொழுது நிருவாண மெய்துக என்றானாக அது கேட்ட புத்தர் மயங்கினாராக பிரமதேவர் வந்து நீ இப்பொழுது அந் நிலையை அடைதல் வேண்டா! நீ ஈண்டுக் கண்ட அறங்களை உலகிற்கறிவுறுத்து அந் நிலையை உலகத்தவர் எல்லாரும் எய்தும்படி செய்வித்து அப்பால் நிருவாணமெய்துக என்று கூற, அது கேட்ட புத்தர் கைவந்த நிருவாண நிலையையும் துறந்து உலகிற்கு அறவுரை அறிவுறுத்துவாராயினர் என்று புத்தர் வரலாறு கூறும்.

"முன்றான் பெருமைக்க ணின்றான் முடிவெய்து காறும்
நன்றே நினைந்தான் குணமே மொழிந்தான் தனக்கென்
றொன்றானு முள்ளான் பிறர்க்கே உறுதிக் குழந்தான்
அன்றே இறைவன் அவன்றாள் சரணாங்க ளன்றே"

எனவரும் குண்டலகேசிச் செய்யுள் ஈண்டு நினையற்பாலது.

"பிறர்க்கற மருளும் பெரியோன்" எனப் பின்னும் (உக-எஅ) கூறுவர்.

'துறக்கமும் அழிதன்மாலைத்தென்று அதனையும் வேண்டாத் தொல்லோய்' என்றவாறு. எண்-எண்ணம். பிறக்கு-பின்னே. கண்-அகக் கண். கண்ணோய்-கண்ணோட்டமுடையோய்.

இனி, இந்திரன் வந்து புத்தருடைய கண்களை இரந்து நிற்ப அவர் கண்களையும் வழங்கினர் என்பது பற்றிக் கண்பிறர்க் களிக்கும் கண்ணோட்டமுடையோய் என்றாள் எனினுமாம். இதனை - "விண்ணவர் நாயகன் வேண்டக், கண்ணினி தளித்த காதற், புண்ணியன் இருந்த போதி, நண்ணிட நோய்நலியாவே" எனவரும் பழம் பாடலானும் (வீர சோழியம் யாப்பு-கூ உரைமேற் கோள்.)

"கண் கொடுத்தான் தடிகொடுத்தான்" எனவும் "...இரண்டு கண்ணை......வந்திரந்தவர் மகிழ்ந்தே ஈயும் வானவர் தாம் உறைந்தபதி மாறனூரே" எனவும் வரும் நீலகேசிச் (உ0௫) செய்யுளானும் மேற் கோளானும் உணர்க.

இமொழி - பொய் குறளை கடுஞ்சொல் பயனில் சொல் என்பன. மொழி புகாமைக்கு அடைத்த செவி என்க. புத்தர் நரகர் துயர் கெட நடந்ததனை, "அருவினை சிலர் கெட வொருபெரு நரகிடை எரிசுடர் மரைமல ரெனவிடும் அடியினை" எனவரும் செய்யுளானும் உணர்க(வீர சோழியம். யாப்பு - கக உரைமேற்கோள்.)

உரகர்-நாகர். புத்தர் இவர் துயரம் ஒழித்ததனை "மீதியல் கருடனை விடவர வொடுபகை விதிமுறை கெடவறம் வெளியுற வருளினை" எனவும், "பொற்புடை நாகர் தம் துயரம் போக்கினை" எனவும், "பைந் நாகர் குலமுய்ய வாயமிழ்தம் பகர்ந்தனையே" எனவும், "ஆரமிழ்த மணிநாகர் குலமுய்ய வருளினையே" எனவும், "வார்சிறைப்புள் ளரையற்கும் வாய்மை நெறி பகர்ந்தனையே" எனவும் வரும் (ஷை வீர சோழியம் யாப்பு - கக) மேற்கோட் செய்யுள்களானும் உணர்க.

## தீவதிலகை பசிப்பிணியின் கொடுமையை மணிமேகலைக்குக் கூறுதல்

### எரு - அக : போதி.........நிமிராது

(இ - ள்.) தீவதிலகை போதி நீழல் பொருந்தித் தோன்று நாதன் பாதம் நவை கெட ஏத்தி - தீவதிலகை தானும் போதி மரத்தின் நீழலிலே எழுந்தருளிக் காட்சியளிக்கும் முதல்வனாகிய புத்தபெருமானுடைய திருவடிகளைப் பிறவிப்பிணி தீரும்பொருட்டு வாழ்த்தி வணங்கிய பின்னர்; சேயிழைக்கு உரைக்கும் - மணிமேகலைக்குக் கூறுவாள்; பசிப்பிணி எனும் பாவி - மக்கட்கு வருகின்ற பசிப்பிணி என்று கூறப்படுகின்ற பாவியானது; குடிப்பிறப்பு அழிக்கும் - உயர்ந்த குடியிற் பிறந்தார்க்கு இயல்பாகவே அமைந்துள்ள செப்ப முதலிய உயரிய பண்புகளைத்தானும் அழித்தொழித்துவிடும்; விழுப்பம் கொல்லும் - அவர் எய்திய சிறப்புக்களையும் இல்லையாக்கிவிடும்; பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம் - பிறவிப் பெருங்கடலை நீந்திக் கரையேறுதற் பொருட்டுக் கைப்பற்றிய கல்வியாகிய பெரிய தெப்பத்தையும் அகற்றிவிடும்; நாண் அணி களையும் - நாணாகிய அணிகலனைக் களைந்துவிடும்;

மாண் எழில் சிதைக்கும் - மாட்சிமையுடைய அழகையும் அழித்து விடும்; பூண் முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும் - தாம் மணந்து கொண்ட வாழ்க்கைத் துணைவியரோடு எதிலார் முன்றி லிலே நிறுத்தி வைக்கும்; அது தீர்த்தோர் - அத்தகைய கொடிய பசிப்பிணியைத் தீர்த்து விடுகின்றவருடைய; இசைச் சொல் அளவைக்கு என் நா நிமிராது - புகழ்ச் சொல்லைக் கடைபோகச் சொல்லுதற்கு எனது நா துணிந்து எழமாட்டாது காண்! என்றாள் என்க.

(வி - ம்.) குடிப்பிறப்பு - உயர்ந்த குடியிற் பிறந்த மேன் மக்களுக்கு இயல்பாகவிருக்கும் உயரிய பண்புகள்; அவையாவன: செப்பம் நாண் ஒழுக்கம் வாய்மை நகை ஈகை இன்சொற்கூறல் பிறரை இகழாமை முதலியன. விழுப்பம் என்றது தமது முயற்சியாலெய்திய சிறப்புக்களை. பிறவிப் பெருங்கடலை நீந்துதற்குக் கைப்பற்றிய கல்வி என்க. பெரும் புணை என்றமையால் பிறவிப் பெருங்கடல் என்பது பெற்றாம். "அறிவினை நிச்சநிரப்பக் கொல்லும்" என்பது பற்றி இங்ஙனம் கூறினர். விடூஉம் என்றது விடுவிக்கும் என்பதுபட நின்றது. நாண் அணி - நாணாகிய அணிகலம். "அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு" என்பது திருக்குறள் (க0கச).

இனி, ஈண்டு, "பிறந்த குலமாயும் பேராண்மை மாயும் சிறந்ததங் கல்வியு மாயும்" எனவரும் நாலடியும் (உஅரு) நோக்குக. பசி-தீவினைகட் கெல்லாம் காரணமாதலின், பாவி என்றார். அதன் கொடுமை பற்றிப் பண்பையே பண்பியாகக் கூறிய படியாம். 'அழுக்காறெனை ஒருபாவி' எனவும், 'இன்மை என ஒரு பாவி' எனவும் திருவள்ளுவரும் ஓதுதல் உணர்க. இதற்கு ஆசிரியர் பரிமேலழகர் "பண்பிற்குப் பண்பி இல்லை யேனும் தன்னை ஆக்கினானை இருமையும் கெடுத்தற் கொடுமை பற்றி அழுக்காற்றினைப் பாவி என்றார்" என்பர். யாதானும் ஒரு பண்பின் சிறுமை, பெருமை கொடுமை முதலியவற்றைக் கூறுங்கால் சிறுமை முதலியன பண்புகளாகவும் அவற்றையுடைய பண்புகளே பண்பி களாகவும் அமைதலின் பண்பிற்குப் பண்பி இல்லை என்பது போலி உரை என்க.

"கொடுத்தார் எனும் சொல் மூவுலகும் கேட்குமே" என்பது பற்றி அவர் இசையை அளத்தற்கு நாவெழாது என்றவாறு. விரிப்பின் அகலு மாகலின் கடைபோகாமையால் அஞ்சி நா எழாது என்பது கருத்து. புகழ் அளவுபடாமையை,

> "உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்
> றீவார்மேல் நிற்கும் புகழ்" (உகூஉ)

எனவரும் திருக்குறளானு முணர்க.

## பசிப்பிணியின் கொடுமைக்கோர் எடுத்துக்காட்டு

### அஉ - கூக : புன்மரம்.........அன்றே

(இ - ள்.) புல் மரம் புகையப் புகை அழல் பொங்கி மன்னுயிர் மடிய மழை வளம் கரத்தலின் - ஒரு காலத்தே நிலவுல

தத்தே பசும்புல்லும் மரங்களும் எரிந்து புகையும்படி காட்டுத்தீப் பற்றி மிகுமாறு மழைவளம் ஒழிந்து போதலாலே; அரசு தலை நீங்கிய அருமறை அந்தணன் - தனக்கியன்ற அரசுரிமையையும் தன்னிடத்தினின்றும் நீங்கப் பெற்றவனும்க் காட்டகத்தே தவஞ் செய்து கொண்டிருந்த உணர்தற்கரிய மறைகளையுணர்ந்த அறவோனுகிய விசுவாமித்திர முனிவன் காயும் கனியும் இலையும் கிழங்குமாகிய தனக்குரிய உணவுகளில் யாதொன்றும் கிடைக்கப் பெருமையின், அரும்பசி களைய இருநிலமருங்கின் யாங்கணும் திரிவோன் - தன்க்குண்டான பொறுத்தற்கரிய பசிப்பிணியை அகற்றற் பொருட்டு உணவு தேடிப் பெரிய நிலப்பரப்பிலே எங்குந் திரிபவன்; ஆற்றுவது காணன் - அப் பசியைத் தணித்தற் கியன்ற உணவு பிறிதொன்றனையும் காணப் பெருனும்; திருந்தா நாய் ஊன் தின்னுதல் உறுவோன் - ஆண்டு இறந்து கிடந்த அருவருப்புடைய நாயினது ஊனைத் தின்னத் தொடங்கி; இந்திர சிறப்புச் செய்வோன் முன்னர் - உண்பதற்கு முன்பு செய்வதற் குரிய 'இந்திர சிறப்பு' என்னும் தேவர் வழிபாட்டைச் செய்பவன் முன்னிலையிலே; வந்து தோன்றிய வானவர் பெருந்தகை - அந் நிலைகண்டிரங்கி அம் முனிவன் முன்வந்து தோன்றி அவ்வரும் பசியைப் போக்கிய அமரர் கோமானுகிய பெருந்தகைமையுடை யோன்; மழைவளம் தருதலின் மன்னுயிர் ஓங்கிப் பிழையா விளையுளும் பெருகியது அன்றே - அந் நிகழ்ச்சியைத் தலைக்கீடாகக் கொண்டு நிலவுலகிற்கு மழையினலே வளத்தை வழங்குதலாலே அற்றைநாள் தொடங்கிப் பிழைத்தலில்லாது விளைபொருளும் பெருகிய தென்னும் இவ் வரலாற்றை நீயும் கேட்டிருப்பாய் அல்லையோ; என்றுள் என்க.

(வி - ம்.) "புல் மரம் புகையப் புகை அழல் பொங்கி மன்னுயிர் மடிய மழைவளம் கரத்தலின்" எனவரும் இதனேடு,

> "விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றுங்கே
> பசும்புற் றலைகாண் பரிது" (கக)

எனவும்,

> "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
> துண்ணின் றுடற்றும் பசி" (கக)

எனவும், வரும் திருக்குறள்களையும் நினைவு கூர்க.

விசுவாமித்திரன் அரசுரிமை துறந்து கானகம் புக்குத் தவஞ்செய் தலின், அரசுதலை நீங்கிய முனிவன் என்றார். துறவோனுதலின் அருமறை அந்தணன் என்றார். எல்லா இன்பங்களையும் துறந்து அருமறைகளையுமுணர்ந்து துறவியாயிருந்தவன்றானும் பசிப்பிணி

ஆற்றான் ஆயினன் எனப் பசிப்பிணியின் கொடுமையை விளக்குவார், உவமைகளை ஏற்ற அடைமொழி தேர்ந்து புணர்த்து விதந்தார்.

இந்திர சிறப்பு என்றது, தேவர்க்குப் பலியிடுதலை, உண்ணும் உணவினை முதலில் தேவர்கட்குப் பலியாக்கிப் பின்னர் உண்ணுதல் வேண்டும் என்பது மனுநூல் விதி. அல்லதூஉம் இவ் விதி பிடகநூல் விதியாதலும் கூடும்.

இந்திரன் இம் முனிவனிலைக்கு இரங்கித் தானே போதருதலின் அவனைப் பெருந்தகை என்றார். இதனைப் பாட்டிடை வைத்த குறிப்பினாலே இந்திரன் வந்து அம் முனிவன் அரும்பசி களைந்து உலகிற்கு மழைவளம் தந்தனன் என்பதும் கூறிக்கொள்க.

விசுவாமித்திரன் இங்ஙனம் நாயூன் தின்ன முயன்றமை மனுநூலின் கO ஆம் அத்தியாயத்தில் கOஅ ஆம் சுலோகத்தினும் கூறப்பட்டுள தென்பர்.

## தீவதிலகை மணிமேகலைக்கு அறிவுரை கூறுதல்

### கூஉ - கூஅ : ஆற்றுநர்..........என்றலும்

**(இ - ள்.)** ஆற்றுநர்க்கு அளிப்போர் அறவிலை பகர்வோர்- தாமே முயன்று உண்ணும் தாளாளர்க்கு உண்டி கொடுப்போர் அறம்விற்கும் வணிகரேயாவர் ஆதலின் அவர் வாழ்க்கை அற வாழ்க்கை எனப்படாது; உலகின் ஆற்றுமாக்கள் அரும்பசி களைவோர் மேற்றே மெய்ந்நெறி வாழ்க்கை - உலகின்கண் தாமே முயன்றுண்ணவியலாத வறியவர்க்குத் தாமே நீக்குதற்கரிய பசிப்பிணியை உண்டி கொடுத்துத் தீர்த்துவிடுகின்ற மக்கள் பாலதாம் வாய்மையான அறவாழ்க்கை; மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கு எல்லாம் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோரே - எனவே அம் மெய்ந்நெறி வாழ்க்கையை மேற்கொண்டு மண் செறிந்த இந் நிலவுலகத்திலே வாழும் அத்தகைய ஆற்று மாக்கட்கு எல்லாம் உணவு கொடுத்தவர் மாத்திரம் ஆகார் உயிரையே வழங்குபவர் ஆகின்றனர் காண் !; உயிர் கொடை பூண்ட உரவோய் ஆகி கயக்கு அறு நல் அறம் கண்டனை என்றலும் - இனி மணிமேகலையே கேள் இத்தகைய பேரறம் செய்தற்குத் தலைசிறந்த கருவியாகிய இவ்வமுத சுரபியைப் பெற்ற திருவுடைய நீ இது சுரக்கும் ஆருயிர் மருந்தை ஆற்று மாக்கட்கெல்லாம் வழங்குமாற்றால் அவர்க்கெல்லாம் உயிர் வழங்கும் ஆற்றலுடைய தெய்வமேயாகி ஆருயிரின் கலக்கம் அறுதற்குக் காரணமான நன்மைமிக்க அருளறத்தைச் செய்தாய் அல்லையோ என்று அத் தெய்வம் உவகை கூறுதலும் என்க.

(வி - ம்.) ஆற்றுநர் ஈண்டு உடையோர் என்பதுபட நின்றது. உடையோர்க்கு உண்டி வழங்குவதனை அறம் என்று கருதி அவரையெல்லாம் ஒருங்கு கூட்டி உண்டி வழங்குபவர் உலகில் இக்காலத்துச் சாலப் பலராவார். இவர் செய்வன புகழ் விரும்பியோ பிற ஏதேனும் விரும்பியோ செய்பவராவார். இவர் அறம் என்னும் செல்லாக் காசை விலையாகக் கொடுத்து அதற்கு மாற்றாகப் புகழ் என்னும் பொய்யையே பொருளாகக் கருதி வாங்குகின்ற மடவோரே யாவார், ஆதலின் இவரை அறம் விலை பகர்வோர் என்றொழிந்தார், அதற்கு யாதும் பொருள் பெருமையின்.

இனி, "இம்மைச் செய்தது மறுமைக்காமெனும்" கருத்தோடு ஆற்றுநர்க்கே அளிப்பாரும் உளர். இவரை "அறவிலை வாணிகர்" என்று புறநானூறு (௧௩௪) புகலும்.

இனி வள்ளுவர், ஈகைக்கு அவ்வதிகாரத்திலேயே

"வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து" (குறள், ௨௨௦)

எனத் தெள்ளத் தெளிய இலக்கணம் இயம்பினமை ஈண்டு நினைந்து மகிழற்பாற்று. "ஏற்றகை மாற்றாமை என்னானும் தாம் வரையா தாற்றுதார்க் கீவதாம் ஆண்கடன்" என்பது நாலடி (௯௮). உயிர்க் கொடை - உயிர் வழங்குதல். கயக்கு - கலக்கம். நல்லறங் கண்டனை - நல்லறங் காண்பாய். கண்டல் ஈண்டு செய்து காண்பாய் என்பதுபட நின்றது. தெளிவுபற்றிக் காண்பாய் எனல் வேண்டிய எதிர்காலவினைச் சொல் இறந்த காலமாயிற்று;

"வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்
இயற்கையும் தெளிவுங் கிளக்குங் காலை"
(தொல் - சொல் : வினை - ௪௮)

என்னும் இலக்கணமும் உணர்க.

### மணிமேகலை ஆற்றுமாக்கட்கு உண்டி கொடுத்தற்குப் பெரிதும் விதுவிதுப்புற்றுக் கூறுதல்

௯௯ - ௧௦௬ : விட்ட.........புகுந்தது

(இ - ள்.) விட்ட பிறப்பில் யான் விரும்பிய காதலன் திட்டிவிடம் உணச் செல் உயிர் போவுழி - அது கேட்ட மணிமேகலை ஆற்றவும் மகிழ்ந்து அன்னாய்! கழிந்த பிறப்பிலே இலக்குமியாயிருந்த யான் காதலித்த என் ஆருயிர்க் காதலனைத் திட்டிவிடம் என்னும் பாம்பின் நஞ்சுண்ணு நிற்ப அவனது போகூழுடைய உயிரானது போகும்பொழுது அத் துன்பம் பொறாமல்; உயிரொடு வேவேன் உணர்வு ஒழிகாலத்து - உயிரோடு தீயினுள் மூழ்கி வேகின்ற என்னுடைய உணர்வு அழிகின்ற பொழுது; வெயில் விளங்கு அமயத்து விளங்கித் தோன்றிய

சாது சக்கரனை - வெயில் மிகவும் விளக்கமெய்தும் நண்பகலிலே என் கண்முன் வானின்றிழிந்து வந்து தோன்றிய சாதுசக்கரன் என்னும் துறவோனை; யான் ஊட்டிய காலம் போல்வது ஓர் கனாமயக்கு உற்றேன் - யான் உண்டி கொடுத்து ஓம்பிய காலத்தைப்போன்று ஒரு கனா என்னெஞ்சத்தே நிகழக்கண்டேன்; ஆங்கு அதன் பயனே - அப் பிறப்பில் எனது இறுதிப் பொழுதிற் கண்ட அந்த அறக்காட்சியின் பயனாகவே; இப் பாத்திரம் ஈங்கு என் கைப் புகுந்தது - இவ்வரும் பெறல் அமுதசுரபி அடிச்சி கையில் வந்தெய்தியது; என்றாள் என்க.

(வி - ம்.) உயிர் உடம்பினின்றும் பிரியும் பொழுது அவ்வுயிர் அதுகாறும் முதன்மையாகக் குறிக்கொண்டிருந்த எண்ணமே ஏனைய எண்ணங்களைக் கீழ்ப்படுத்து உள்ளத்தின்கண் தன் காட்சியைத் தோற்றுவிக்கும் என்றும் அக் காட்சிக் கியன்ற பிறப்பே அடுத்து வந்துறும், வந்துற்ற காலத்து அவ்வெண்ணத்திற் கியன்ற சூழ்நிலைகளை ஊழ்வினை வகுத்துக் கொடுக்கும் என்றும் துறவோர் கூறுவர். அதற்கேற்ப ஈண்டும் மணிமேகலை முற்பிறப்பிலே பூண்டிருந்த அருளறக் காட்சியே அவள் ஆவி துறக்கும்பொழுது தோன்ற, அவ்வருளறம் மீண்டும் தொடர்ந்து பூணும்படி ஆகூழ் அமுதசுரபியை அவள்கையிற் புகுவித்தது என்பது கருத்து. இதனையே பௌத்த சமயத்தவர் 'ஏது நிகழ்ச்சி எதிர்தல்' என்றோதுப. இதனை இந்நூலாசிரியர் பின்னர்,

"மணிபல் லவத்திடை மன்னுடம் பிட்டுத்
தணியா மன்னுயிர் தாங்குங் கருத்தொடு
சாவக மாளும் தலைத்தாள் வேந்தன்
ஆவயிற் றுதித்தனன்"

என்பதனானும் உணர்க. (௧௪ : ௧௦௧ - ௧௦௪)

இன்னும், "பிறப்பென்னும்" திருக்குறள் (௩௫௮) விளக்கவுரையின்கண் ஆசிரியர் பரிமேலழகர் "உயிர் உடம்பினீங்குங் காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது அஃது அதுவாய்த் தோன்றுமென்பது எல்லா ஆகமங்கட்கும் துணிபு" என ஓதுவதும் ஈண்டு நினைவு கூர்க.

### இதுவுமது

௧௦௭ - ௧௧௫ : நாவலோடு..........பலரால்

(இ - ள்.) நாவலொடு பெயரிய மாபெருந் தீவத்து - நாவல் என்னும் மரப் பெயரை அடைபுணர்த் தோதப்படுகின்ற 'நாவலந் தீவு' என்னும் பெயரையுடைய மிகவும் பெரிய தீவின்கண்ணே; நல் அறம் வித்தி விளைந்த அதன் பயன் துய்ப்போர் தம்மனை - முற்பிறப்பிலே நன்மை தருகின்ற அறமாகிய விதையை விதைத்து இம்மையிலே விளைந்த அதன் பயனாகிய பல்வேறு செல்வங்களையும்

நுகர்ந்து மகிழ்கின்ற மாந்தர் தம் நெடுநிலை மாடமனை முன்றிலின் கட்சென்று; சிதர்த்துணி உடுத்து வயிறு காய் பெரும்பசி அலைத்தற்கு இரங்கி - நைந்த கந்தைத்துணியை உடுத்துத் தம் வயிறு தம்மை இடையறாது துன்புறுத்தும் பெரும்பசிக்கு ஆற்றாது அலமந்து; வெயில் என முனியாது புயல் என மடியாது புறங்கடை நின்று - வெயில் என்று வெறுமலும் மழையென்று சோம்பிக்கிடவாமலும் அம் மனையிற் புகுதாமலும் வெளியிடத்தேயே நின்று; புன்கண் கூர்ந்து - பசிப்பிணி மிகுந்து; முன் அறங்கடை நில்லாது அயர்வோர் பலரால் - முற்பிறப்பிலே செய்த தீவினை காரணமாக அம் மனைகளிலே புகவும் மாட்டாராய் நிற்கவும் மாட்டாராய்ப் பெரிதும் வருந்தும் மாக்கள் பலராவர்; என்க.

(வி - ம்.) நாவல் என்னும் அடைபுணர்த்தப்பட்ட பெயரையுடைய தீவு நாவலந்திவு. அறம் வித்தி என மாறுக. அதன் பயன் இன்பம். சிதர்த்துணி-நைந்தபழந்துணி; கந்தை. புறங்கடைநின்று வாயிலில்நின்று உட்புகுதமாட்டாமையால் முனியாதும் மடியாதும் நிற்றல் வேண்டிற்று.

அறங்கடை - தீவினை. ஈண்டு நல்லதன் நலனும் தீயதன் தீமையும் ஒருசேர, நல்லறம் வித்தி விளைந்த பயன் துய்ப்போர் மனையும் அதன் முன்றிலில் முன் அறங்கடை நின்றோர் புன்கண் கூர்ந்து அயர்ந்து அங்கும் நிற்கவும் பெறாராய் அயர்வோர் நிலையும் உணர்த்தப்பட்டமை உணர்க. இதனோடு—

"அகத்து ஆரே! வாழ்வார்என் றண்ணாந்து நோக்கிப்
புகத்தாம் பெறுஅர் புறங்கடை பற்றி,
மிகத்தாம் வருந்தி யிருப்பரே மேலைத்
தவத்தால் தவஞ்செய்யா தார்"

எனவரும் நாலடி (௩௧) யும் நினைக.

## இதுவுமது

### கஉ௯ - ககஅ : ஈன்ற.........என

(இ - ள்.) ஈன்ற குழவி முகம் கண்டு இரங்கித் தீம்பால் சுரப்போள் தன் முலை போன்று - தான் பெற்ற குழந்தையின் முகத்தைப் பார்க்குமளவிலேயே அதன் பசித்துயருக்குப் பெரிதும் இரக்கமெய்தி இனிய பாலைச் சுரக்கின்ற தாயினது கொங்கையைப் போன்று; நெஞ்சு வழிப் படூஉம் விஞ்சைப் பாத்திரத்து அகன் சுரைப் பெய்த ஆருயிர் மருந்து - வருந்தி வந்தோர் தம் நெஞ்சில் நினைத்தவாறே உணவைத் தோற்றுவிக்குமொரு வித்தையைத் தன்பாற் கொண்டுள்ள இத்தெய்வப் பிச்சைக்கலத்தினது அகன்ற

உண்பகுதியிலே முதன் முதலாகப் பெய்யப்பட்ட உணவானது; அவர் முகம் கண்டு சுரத்தல் காண்டல் வேட்கையேன் என - அவ்வாற்ற மாக்களுடைய வருந்து முகம் கண்டதுணையானே அவர் விரும்பும் உணவைச் சுரக்கின்ற அற்புதத்தைக் கண்டு மகிழ்வதற்கு வேணவாவுடையேன் காண்! என்று கூற என்க.

(வி - ம்.) அன்னை மகவின் முகம் பார்த்த அளவிலேயே அவள் கொங்கை அப்பொழுதே அம் மகவு விரும்பும் பாலைச் சுரந்து பிலிற்றும் அன்றே! அங்ஙனமே இப் பிச்சைக்கலம் பசியால் வருந்துவோர் வந்துற்றபோதே அவர் நெஞ்சம் விரும்பும் உணவைச் சுரந்துவிடும் என்றவாறு. எனவே வருபவர் எத்தகைய உணவை விரும்புவாரோ அத்தகைய உணவை அவர் கூறுமுன்பே அக்கலம் சுரக்கும் என்றவாறாயிற்று. இங்ஙனம் சுரப்பதுவே காண்டற்கரிய அற்புதச் செயலாகலின் அதனைக் காண யான் பெரிதும் விரும்புகின்றேன் என்றாள். எனவே யான் இடையறாது அவ்வறத்தைச் செய்யுமாற்றால் அக்காட்சியைக்கண்டு மகிழ விதுப்புற்று நிற்கின்றேன் காண் எனத் தீவதிலகைக்கு அறிவித்தபடியாம்.

கயக்கறும் நல்லறம் செய்குதி என்று பணித்த தெய்வத்திற்கு அவ்வறஞ் செய்தலில் தனக்கிருக்கின்ற விதுப்புறவினை அறிவிக்கும் இம் மொழிகள் பெரிதும் இன்பம் செய்தலறிக.

### தீவதிலகை இன்றியமையாத மற்றொரு செய்தியையும் அறிவுறுத்து மணிமேகலைக்கு விடைகொடுத்தல்

### கககூ - கஉரு : மறந்தேன்.........உரைப்ப

(இ - ள்.) அதன் திறம் மறந்தேன் - அதுகேட்ட தீவதிலகை மணிமேகலாய் அவ்வமுதசுரபியின் பண்பிலே உனக்கு யான அறிவிக்கவேண்டிய தொன்றனை யான் என் மறதியாலே அறிவியாதொழிந்தேன் காண்; நீ எடுத்து உரைத்தனை - நின் ஆகூழ்காரணமாகப் போலும் யான் மறந்த செய்தியை மீண்டும் யான் நினைவு கூரும் வண்ணம் நீயே அச்செய்தியை விதந்து கூறுகின்றனை; அறம கரியாக அருள் சுரந்து ஊட்டும் சிறந்தோர்க்கு அல்லது செவ்வனம் சுரவாது - அறமே சான்றாக உள்ளத்தே அருள் சுரந்து ஆற்றாமாக்கட்கு உணவூட்டுகின்ற சிறப்புடையோர் முதன் முதலில் அதன்கண் ஆருயிர் மருந்தைப் பிச்சையாகப் பெய்தாலன்றி ஏனையோர் பெய்யின் நன்கு சுரவாதுகாண்! ஆதலின் நீ, ஆங்ஙனம் ஆயினை - அவ்வாறு முதன் முதலாகச் சிறந்தோர்பால் ஏற்கும் கடப்பாடுடையை ஆயினை பின்னர்; அதன் பயன் அறிந்தனை - அங்ஙனம் ஏற்பின் நீ விரும்பும் அதன் பயனாகிய அஃதுணவு சுரக்கும் காட்சியையும் கண்டு மகிழ்வாய்!; ஈங்கு நின்று எழுவாய் என்று அவள் உரைப்ப-இனி நீ இம் மணி

பல்லவத்தினின்றும் எழுந்து நின்னூர் புகப் போவாயாக என்று பணித்தலும் என்க.

(வி - ம்.) அறத்திற்காகவே அறஞ்செய்தல் வேண்டும் என்பாள் அறங்கரியாக என்றாள். அஃதாவது அறம் பிறர்கண்டு மதித்தற் பொருட்டுச் செய்யப்படுவது அன்று. அறம் செய்யும் பண்புடைமை மட்டுமே அச் செயற்குச் சான்றாதல் வேண்டும் என்றவாறு. இதனாலேயே நின் வலக்கையாற் செய்யும் அறம் உன் இடக்கை அறியாவண்ணம் செய்க என்று இயேசு பெருமான் இயம்புவாராயினர். அறம் சான்றாதலாவது அவன் மனச்சான்றிற் கிணங்கச் செய்தலாம். அருள் சுரக்க வேண்டும் என்று அவன் மனச்சான்று கட்டளையிட்டவழி அது சான்றாக அங்ஙனமே அருள்சுரப்பதாம் என்க. இவ்வாறு செய்யப்படும் அறம் அவன் மனத்தையன்றிப் பிறர் யாருமே அறியாவண்ணம் செய்யப்படுதலும் கூடுமாகலின் அதற்குப் பிறிதொரு சான்றின்மையறிக. இங்ஙனம் செய்வதே வாய்மையான அறமுமாம் என்க.

ஈண்டுத் தீவதிலகை தான் மறந்ததாகக் கூறியது, அமுதசுரபியில் முதன் முதலிற் பிச்சையாக உணவுபெய்வோர் "அறங்கரியாக அருள் சுரந்தூட்டும் சிறந்தோராக விருத்தல் வேண்டும். அவர் பெய்தால் செவ்வனம் சுரக்கும். இன்றேல் அங்ஙனம் சுரக்கமாட்டாது" என்னும் அப் பாத்திரத்தின் தன்மையையேயாம். இதனை நான் கூறமறந்தேன். நீ "விஞ்சைப்பாத்திரத்து அகன்சுரைப் பெய்த ஆருயிர் மருந்து அவர்முகம் கண்டு சுரத்தல்" என்று எடுத்துரைத்தமையால் யான் அஃது அங்ஙனம் சுரப்பது சிறந்தோர் பிச்சை பெய்தவழி அவர் பொருட்டே சுரப்பதாம் என்னும் அதன் திறத்தை நினைவு கூர்ந்தேன். நீ முதன் முதலில் அங்ஙனம் சிறந்தோர் பாற் சென்றே முதன் முதலாகப் பிச்சை ஏற்பாய். ஏற்றவழி அஃது அங்ஙனமே சுரந்து நீ விரும்பிய பயனை அளிக்கும். அதனால் இன்பம் எய்துக என்பாள்" ஆங்ஙனம் ஆயினை அதன்பயன் அறிந்தனை என்றாள். ஈண்டும் தெளிவுபற்றி ஆகுக, அறிவாய் என வேண்டிய எதிர்காலவினைச் சொற்கள் இறந்தகாலத்தாற் கூறப்பட்டன. இதற்கு இலக்கண விளக்கம் (௬௮) கயக்குறு நல்லறம் என்புழிக் கூறினும். ஆண்டுக் கண்டுகொள்க.

ஈண்டு நூலாசிரியரின் இக்கருத்தறியாது தீவதிலகை முன்பு கூறியதையே கூறியதாக உரை கூறுவாரும் உளர். அவர் உரையும் விளக்கமும் போலியாதல் ஆராய்ந்தறிக.

## மணிமேகலை மணிபல்லவத்திலிருந்து பூம்புகார் நகரத்தில் மாதவி முன்னர் வந்துதோன்றுதல்

### ௧௨௪ - ௧௩௨: தீவ..........கூறும்

(இ - ள்.) மணிமேகலை தீவ திலகை தன் அடிவணங்கி - அவ்வன்புப் பணிமொழிகேட்ட மணிமேகலை அத் தெய்வமகளின் திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி; மாபெரும் பாத்திரம் மலர்க் கையின் ஏந்தி கோமகன் பீடிகை தொழுது வலம் கொண்டு - மிகவும் பெருமையுடைய அமுதசுரபியைத் தன் தாமரை மலர்

போன்ற கையிலே ஏந்திப் புத்தபெருமானுடைய பீடிகையையும் வலம்வந்து மந்திரத்தின் துணைகொண்டு வானினூடு எழுந்து (பூம்புகார் நகர் நோக்கி வான்வழியாக வருபவள் அந்நகரத்தின் கண்) வழு அறு தெய்வம் வாய்மையின் உரைத்த எழுநாள் வந்தது என்மகள் வாராள் - சுதமதியின்பாற் குற்றமற்ற கந்திற் பாவையாகிய தெய்வம் வாய்மையாக அறிவுறுத்த ஏழாநாளும் வந்துற்றது என் மகள் மணிமேகலை இன்னும் வந்திலளே!; வழுவாய் உண்டு என மயங்குவோள் முன்னர் வந்து தோன்றி - அத் தெய்வ மொழி பொய்ம் மொழி ஆதலும் உண்டாமோ! என்று ஐயுற்று மயங்கி யிருக்கின்ற மாதவி முன்னிலையிலே வானின்றிழிந்து வந்து தோன்றிய மணிமேகலை; அவர் மயக்கம் களைந்து-அங்கிருந்த மாதவியும் சுதமதியும் ஆகிய இருவருடைய மனமயக்கத்தையும் போக்கி; அந்தில் அவர்க்கு ஓர் அற்புதம் கூறும் - அவ்விடத்தே தன் வரவு கண்டு வியப்புற்றிருக்குமிருவர்க்கும் அவ் வியப்பின் மேலும் ஓர் அற்புதமான மொழியைக் கூறுவாள்; என்க.

(வி - ம்.) சுதமதி தனக்குக் கூறியபடி தெய்வம் உரைத்த மொழி பொய்க்குமோ என்று மாதவி மயங்கினள் என்க. வாய்மை - மெய்ம் மொழி. வழுவாய் - பொய். தப்புதல் எனலுமாம். அவர் என்றது சுதமதியையும் உளப்படுத்தவாறு. அந்தில்-அவ்விடம். அற்புதம்-அதிசயம். அம் மொழி மேலே கூறுவன.

## மணிமேகலை அற்புதம் கூறுதல்

### ௧௩௩ - ௧௪௧: இரவி.........பிறப்பு

(இ - ள்.) இரவிவன்மன் ஒரு பெருமகளே - இரவிவன்மன் என்னும் மன்னவன் மகளே!; துரகத்தானைத் துச்சயன் தேவி - குதிரைப்படை மிக்க துச்சய மன்னவன் தேவிமாரே!; அமுதபதி வயிற்று அரிதின் தோன்றித் தவ்வையர் ஆகிய தாரையும் வீரையும் அவ்வையர் ஆயினிர் - அமுதபதி என்னும் கோப்பெருந் தேவியின் திருவயிற்றில் அரிதாகப் பிறந்து இலக்குமியாகிய எனக்குத் தவ்வையராயிருந்த தாரையும் வீரையுமாகிய நீவிர் இருவருமே ஈண்டு மாதவியும் சுதமதியும் ஆகி இருவீருமே எனக்கு இம்மையில் அன்னையராயினீர் காண்! ஆகவே; நும்மடி தொழுதேன் - இப் பிறப்பும் முற்பிறப்பும் ஆகிய இரு பிறப்பினும் என்னால் தொழப்படும் சிறப்புடைய நும்மிருவருடைய திருவடிகளையும் தொழுகின்றேன்; மானிட யாக்கையில் ஈங்கு தீவினை அறுக்கும் செய்தவம் நுமக்கு வாய்வது ஆக - இம் மக்கட் பிறப்பிலே ஈங்குப் பிறப்பிற்குக் காரணமான தீவினையை அறுத்தற்குக் காரணமாக நீயிர் செய்யும் தவம் நுமக்கு வாய்ப்புடைய

தாருக!; செறிதொடி நல்லீர் உம் பிறப்பு அறவண அடிகள் தம்பால் பெறுமின் - நும்முடைய பழம் பிறப்பின் வரலாற்றில் எஞ்சியவற்றையும் அறவண வடிகளார்பால் கேட்டறிந்து கொண் மின்!; என்றாள் என்க

(வி - ம்.) அவர் என்றது மாதவி போன்றே மயங்கியிருக்கும் சுத மதியை உளப்படுத்தியவாறு. என்னை? அவளும் மணிமேகலையின் பிரி வாற்றாமல் தனித்துயர் உழக்கும் மாதவியினும் காட்டில் பெரிதுந் துயருற்றனள் என்பது துயிலெழுப்பிய காதையில் "சுதமதி இன்னுயிர் இழந்த யாக்கையினிருந்தனள்" என்றமையாலறிக (துயிலெ...கஙகூ - கஙச) முற்பிறப்பில் அவர் தாரையும் வீரையும் ஆகியிருந்த செய்தி அற்புதமாக முன்னரே அறிந்த செய்தியே ஆயினும், அதனை இவளும் கூறுதலின் ஈண்டும் அற்புதச்செய்தியாயிற்று. அவற்றுள் எஞ்சியவற்றை அறவணர் அறிவிப்பர் என்பாள் அறவணவடிகள் தம்பாற் பிறப்புப் பெறுமின் என்றாள், என்னை? அறவணவடிகளார் அவர்தம் முற்பிறப்பை யும் இப் பிறப்பையும் நேரிற் கண்டவர் என்பது மணிமேகலா தெய்வம் கூறிய கூற்றால் மணிமேகலை அறிந்திருத்தலால் இங்ஙனம் கூறினள். அல்லதூம் வருகின்ற காதையில் (கஉ) "ஆங்கவர் தந்திறம் அறவணன் தன்பால் பூங்கொடி நல்லாய் கேள் என்றுரைத்ததும்" என மணிமேகலை மணிமேகலா தெய்வம் தனக்குக் கூறியதாகவே ஓதுதலின், மந்திரங் கொடுத்த காதையில் இது காணப்படாமையின் இப் பொருள்பட வரும் மணிமேகலா தெய்வத்தின் கூற்று ஏடெழுதுவோரால் விடப்பட்டி ருத்தல் கூடும் என்று நினைத்தற்கும் இடந்தருகின்றது. முன்பு தவ்வை யரும் இப்பொழுது அவ்வையரும் ஆயினமையால் நீயிர் உம்மையினும் இம்மையினும் என்றாற் றொழுந்தகையுடையீரே ஆகுதிர் ஆதலால் நும்மடியைப் பேரன்புடன் தொழுகின்றேன் என்பதுபட "தவ்வை யராகிய.........தொழுதேன்" என்று விதந்தெடுத்து விளம்பினாள். செய்தவம் வாய்வதாக என மாறுக.

### மணிமேகலை அமுதசுரபியை அவர்க்குக் காட்டி அறவணவடிகளாரைத் தொழுதற்கு அவரொடும் போதல்

**கசக - கசசு : ஈங்கிஃது...........தானேன்**

(இ - ள்.) ஈங்கு இஃது ஆபுத்திரன் கை அமுதசுரபி எனும் மாபெரும் பாத்திரம் - அன்னையீர்! இதோ என் கையிடத்திருக் கும் இப் பாத்திரம் அறவோனாகிய ஆபுத்திரன் என்பவன் கையகத்திருந்த மாபெருந் தெய்வத் தன்மையுடைய அமுதசுரபி என்னும் பெயருடைய அரும்பெறற் பாத்திரமாகும் ஆதலின்; நீயிரும் தொழும் என - நீயிரும் இதனைத் தொழுவீராக! என்று கூற; தொழுதனர் ஏத்திய தூமொழியாரொடும் - அது கேட்டு ஆர்வத்தோடு அமுதசுரபியைக் கைகூப்பித் தொழுது வாழ்த்திய தூய மொழியையுடைய அம் மாதவியையும் சுதமதியையும் நோக்கி, இனி யாம்; பழுது - அறு மாதவன் பாதம் படர்கேம்

எழுக என - குற்றமற்ற பெரிய தவத்தையுடைய அறவணவடிகளாருடைய திருவடிகளிடத்தே செல்லுதும் எழுமின்! என்று கூற; (தூமொழியாரொடும்) இளங்கொடி எழுந்தனள் - அது கேட்டு ஆர்வத்தோடு எழுந்த மாதவியும் சுதமதியுமாகிய அத் தூமொழி மடவாரோடு இளையளாகிய மணிமேகலை எழுந்து போயினள் என்பதாம்.

(வி - ம்.) பழுது - பிறப்பிற்கு ஆகுபெயர். பிறப்பறுதற்குக் காரணமான மாதவம் எனத் தவத்தின் மேனின்றது. தூமொழியாரை எழுகென எழுந்த அத் தூமொழியாரோடும் இளங்கொடி எழுந்தனள் என்க.

மாதவனைச் சரண்புகுவேம் என்பாள் மாதவன் பாதம் படர்கேம் என்றாள்.

இனி இக் காதையை மணிபல்லவத்திடை தெய்வம் நீங்கிய பின்னர் மணிமேகலை குன்ற முதலியவற்றை நோக்கித் திரிய அவள் முன்னர்த் தீவதிலகை தோன்றி யார் நீ என்றலும் அவள் அன்னாய் கேளாய் யான் போய பிறவியில் இராகுலன் மனை; இலக்குமி என் பெயர்; ஆய பிறவியில் மாதவியீன்ற மணிமேகலை, ஈங்குத் தெய்வம் கொணரப் பிறப் புணர்ந்தேன்; என் வரவிது பயனிது யார் நீ என்றலும் தீவதிலகை உரைக்கும் தொழுது வந்தேன் ஈங்குப் பூண்டேன் தீவதிலகை என் பெயர்; இது கேள் நோன்பினர் தொழுவோர் ஆகுவர், ஆங்ஙனம் ஆயினை இது கேள்! ஆபுத்திரன் கை அமுதசுரபி தோன்றும் அதன் திறம் நின்னாராங்கண் கேட்குவை என்று உரைத்தலும் வணங்கிக் கூடிச் செய்து நிற்றலும் செங்கையிற் பாத்திரம் புகுதலும் மடவாள் மகிழ்வெய்தி வீர நின்னடி வாழ்த்தல் என் நாவிற் கடங்காது என்று ஆயிழை முன்னர் நாதன் பாதம் ஏத்திச் சேயிழைக்குத் தீவதிலகை உரைக்கும் கொல்லும் விடூஉம் சிதைக்கும் நிறுத்தும் பாவி அது தீர்த்தோர் இசைச் சொல் அளவைக்கு நா நிமிராது உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் ஆகிக் கண்டனை என்றலும் பாத்திரம் என்கைப் புகுந்தது அயர்வோர் பலர், காண்டல் வேட்கையேன் என, ஆயினை அறிந்தனை எழுவாய் என்று உரைப்ப வணங்கி எழுந்து மணிமேகலை மயங்குவோள் முன்னர்த் தோன்றிக் களைந்து கூறும் தொழுதேன் பெறுமின் இது பாத்திரம் தொழும் என படர்கேம் என இளங்கொடி எழுந்தனள் என இயைத்திடுக.

பாத்திரம் பெற்ற காதை முற்றிற்று.

## கஉ. அறவணர்த் தொழுத காதை

[பன்னிரண்டாவது மணிமேகலை பாத்திரங் கொண்டு தன்னூர் அறவணர்த் தொழுத பாட்டு]

அஃதாவது : மணிமேகலை அமுதசுரபியின் திறம் நின்னூரில் அறவணன் தன்பால் கேட்குவை என்று தீவதிலகை அறிவுறுத்தமையாலும் அறவணருடைய பெருமையை மணிமேகலா தெய்வமும் கூறி முற்பிறப்பிலே நின் தமைக்கையராயிருந்த தாரையும் வீரையுமே மாதவியாகவும் சுதமதியாகவும் நின்னொடு கூடினர் என்று அறிவுறுத்தமையானும் அவ்வறவண அடிகளாரைக் கண்டு தொழும் ஆர்வம் மிக்குத் தாயராகிய மாதவியோடும் சுதமதியோடும் சென்று வணங்கி அரிய பல உண்மைகளை அவர்பாலறிந்த செய்தியைக் கூறும் செய்யுள் என்றவாறு.

இதன்கண் - மணிமேகலை மாதவியோடும் சுதமதியோடும் அறவணவடிகளார் உறையும் பள்ளி இருக்குமிடம் வினவிச் சென்று அவர் அடிகளில் வணங்கித் தான் முன்பு உவவனத்திற்குச் சென்றதும் ஆங்கு உதயகுமரன் வந்ததும் முதலாகத் தீவதிலகை அறவணர்பால் ஆபுத்திரன் வரலாறு கேள் என்று விடுப்ப வந்தது ஈறாகக் கூறுதலும் அறவணவடிகள் மீண்டும் பாதபங்கய மலையைப் பரவிச் சென்று மாதவிக்கும் சுதமதிக்கும் கணவனாகிய துச்சயனை ஒரு பொழிலிற் கண்டு உசாவியதும் அவன் தாரையும் வீரையும் சாவுற்றமை கூறியதும்; அறவணர் தம்மொரு பிறப்பிலே முற்பகுதியிலே தாரையும் வீரையுமாய் அரசன் மனைவியரா யிருந்தவரே மாறிப் பிறந்து மாதவியும் சுதமதியுமாகி அப்பிறப்பின் பிற்பகுதியிலே தம்முன் வந்து நிற்றலைக் கண்டு—

"ஆடுங் கூத்தியர் அணியே போல
வேற்றோர் அணியொடு வந்தீரோ!"

என வியந்து மணிமேகலைக்கு அவர் முற்பிறப்பு நிகழ்ச்சிகளைச் சொல்லியும் அமையாராய், "புத்த ஞாயிறு தோன்றுதற்குக் காரணமும் அவன் தோன்றிய பின்னர் இவ்வுலகம் எய்தும் நலங்களும் விதந்தெடுத்துக் கூறுதலும் அமுதசுரபியைப் பெற்ற

மணிமேகலைக்கு ''மக்கள் தேவர் என இருசாரார்க்கும் ஒத்த முடிவின் ஓர் அறம் உரைக்கேன் அது பசிப்பிணி தீர்த்த''லே எனத் தவப்பெரு நல்லறம் சாற்றலும் பிறவும் பெரிதும் இன்பம் தரும் வகையில் கூறப்படுகின்றன.

ஆங்கவர் தம்முடன் அறவண அடிகள்
யாங்குளர் என்றே இளங்கொடி வினாஅய்
நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவின்
உரைமூ தாளன் உறைவிடம் குறுகி
மைம்மலர்க் குழலி மாதவன் திருந்தடி
மும்முறை வணங்கி முறையுளி யேத்திப்
புதுமலர்ச் சோலை பொருந்திய வண்ணமும்
உதய குமரனுங் குற்றுரை செய்ததும்
மணிமே கலாதெய்வம் மணிபல் லவத்திடை
அணியிழை தன்னை அகற்றிய வண்ணமும்
ஆங்கத் தீவகத் தறவோன் ஆசனம்
நீங்கிய பிறப்பு நேரிழைக் களித்ததும்
அளித்த பிறப்பின் ஆகிய கணவனைக்
களிக்கயல் நெடுங்கட் கடவுளிற் பெற்றதும்
தவ்வையர் ஆகிய தாரையும் வீரையும்
வெவ்வினை உருப்ப விளிந்துகே டெய்தி
மாதவி யாகியுஞ் சுதமதி யாகியுங்
கோதையஞ் சாயல் நின்னொடுங் கூடினர்
ஆங்கவர் தந்திறம் அறவணன் தன்பால்
பூங்கொடி நல்லாய் கேளென் றுரைத்ததும்
உரைத்த பூங்கொடி ஒருமூன்று மந்திரம்
தனக்குரை செய்துதான் ஏகிய வண்ணமும்
தெய்வம் போயபின் தீவ திலகையும்
ஐயெனத் தோன்றி யருளொடும் அடைந்ததும்
அடைந்த தெய்வம் ஆபுத் திரன்கை
வணங்குறு பாத்திரம் வாய்மையின் அளித்ததும்
ஆபுத் திரன்திறம் அறவணன் தன்பால்
கேளென் றுரைத்துக் கிளரொளி மாதெய்வம்
போகென மடந்தை போந்த வண்ணமும்
மாதவன் தன்னை வணங்கினள் உரைத்தலும்
மணிமே கலையுரை மாதவன் கேட்டுத்
தணியா இன்பம் தலைத்தலை மேல்வரப்
பொற்றொடி மாதர் நற்றிறஞ் சிறக்க
உற்றுணர் வாய்நீ யிவர்திறம் உரைக்கேன்

நின்னெடுந் தெய்வம் நினக்கெடுத் துரைத்த
அந்நா ளன்றியும் அருவினை கழூஉம்
ஆதி முதல்வன் அடியிணை யாகிய
பாதபங் கயமலை பரவிச் செல்வேன்
கச்சய மாளுங் கழற்கால் வேந்தன்
துச்சயன் தன்னையோர் சூழ்பொழிற் கண்டேன்
மாபெருந் தானை மன்ன நின்னொடும்
தேவியர் தமக்கும் தீதின் றோவென
அழிதக வுள்ளமோ டரற்றின னாகி
ஒளியிழை மாதர்க் குற்றதை யுரைப்போன்
புதுக்கோள் யானைமுன் போற்றாது சென்று
மதுக்களி மயக்கத்து வீரை மாய்ந்ததூஉம்
ஆங்கது கேட்டோ ரரமிய மேறித்
தாங்காது வீழ்ந்து தாரைசா வுற்றதூஉம்
கழிபெருந் துன்பங் காவலன் உரைப்பப்
பழவினைப் பயனீ பரியலென் றெழுந்தேன்
ஆடுங் கூத்தியர் அணியே போல
வேற்றோர் அணியொடு வந்தீ ரோவென
மணிமே கலைமுன் மடக்கொடி யார்திறம்
துணிபொருள் மாதவன் சொல்லியும் அமையான்
பிறவியும் அறவியும் பெற்றியின் உணர்ந்த
நறுமலர்க் கோதாய் நல்கினை கேளாய்
தரும தலைவன் தலைமையில் உரைத்த
பெருமைசால் நல்லறம் பெருகா தாகி
இறுதியில் நற்கதி செல்லும் பெருவழி
அறுகையும் நெருஞ்சியும் அடர்ந்துகண் ணடைத்தாங் [குச்
செயிர்வழங்கு தீக்கதி திறந்து கல்லென்று
உயிர்வழங்கு பெருநெறி ஒருதிறம் பட்டது
தண்பனி விழுங்கிய செங்கதிர் மண்டிலம்
உண்டென உணர்தல் அல்லது யாவதும்
கண்டினிது விளங்காக் காட்சி போன்றது
சலாகை நுழைந்த மணித்துளை அகவையின்
உலாநீர்ப் பெருங்கடல் ஓடா தாயினும்
ஆங்கத் துளைவழி உகுநீர் போல
ஈங்கு நல்லறம் எய்தலும் உண்டெனச்
சொல்லலும் உண்டியான் சொல்லுதல் தேற்றார்
மல்லன்மா ஞாலத்து மக்களே யாதலின்
சக்கர வாளத்துத் தேவ ரெல்லாம்
தொக்கொருங் கீண்டித் துடிதலோ கத்து
மிக்கோன் பாதம் விழுந்தனர் இரப்ப

இருள்பரந்து கிடந்த மலர்தலை யுலகத்து
விரிகதிர்ச் செல்வன் தோன்றின னென்ன
ஈரெண் ணூற்றோ டீரெட் டாண்டில்
பேரறி வாளன் தோன்றுமதற் பிற்பாடு
பெருங்குள மருங்கில் சுருங்கைச் சிறுவழி
இரும்பெரு நீத்தம் புகுவது போல
அளவாச் சிறுசெவி யளப்பரு நல்லறம்
உளமலி யுவகையொ டுயிர்கொளப் புகூஉம்
கதிரோன் தோன்றுங் காலை ஆங்கவன்
அவிரொளி காட்டும் மணியே போன்று
மைத்திருள் கூர்ந்த மனமாசு தீரப்
புத்த ஞாயிறு தோன்றுங் காலைத்
திங்களும் ஞாயிறும் தீங்குறு விளங்கத்
தங்கா நாண்மீன் தகைமையின் நடக்கும்
வானம் பொய்யாது மாநிலம் வளம்படும்
ஊனுடை உயிர்கள் உறுதுயர் காணா
வளிவலங் கொட்கும் மாதிரம் வளம்படும்
நளியிரு முந்நீர் நலம்பல தரூஉம்
கறவைகன் றார்த்திக் கலநிறை பொழியும்
பறவை பயன்றுய்த் துறைபதி நீங்கா
விலங்கு மக்களும் வெரூஉப்பகை நீங்கும்
கலங்கஞர் நரகரும் பேயும் கைவிடும்
கூனுங் குறளும் ஊமுஞ் செவிடும்
மாவும் மருளும் மன்னுயிர் பெறாஅ
அந்நாள் பிறந்தவன் அருளறங் கேட்டோர்
இன்னாப் பிறவி யிகந்தோர் ஆகலின்
போதி மூலம் பொருந்திய சிறப்பின்
நாதன் பாதம் நவைகெட ஏத்துதல்
பிறவி தோறும் மறவேன் மடக்கொடி
மாதர் நின்னால் வருவன இவ்வூர்
ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள
ஆங்கவை நிகழ்ந்த பின்னர் அல்லது
பூங்கொடி மாதர் பொருளுரை பொருந்தாய்
ஆதி முதல்வன் அருந்துயர் கெடுக்கும்
பாதபங் கயமலை பரசினர் ஆதலின்
ஈங்கிவ ரிருவரும் இளங்கொடி நின்னோ
டோங்குயர் போதி உரவோன் திருந்தடி
தொழுது வலங் கொண்டு தொடர்வினை நீங்கிப்
பழுதில் நன்னெறிப் படர்குவர் காணாய்
ஆருயிர் மருந்தாம் அமுத சுரபியெனும்

மாபெரும் பாத்திரம் மடக்கொடி பெற்றனை
மக்கள் தேவர் என இரு சார்க்கும்
ஒத்த முடிவின் ஓரறம் உரைக்கேன்
பசிப்பிணி தீர்த்தல் என்றே அவருந்
தவப்பெரு நல்லறம் சாற்றினர் ஆகலின்
மடுத்ததீக் கொளிய மன்னுயிர்ப் பசிகெட
எடுத்தனள் பாத்திரம் இளங்கொடி தானென்.

---

# ௪௨. அறவணர்த் தொழுத காதை

## உரை

### மணிமேகலை மாதவியோடும் சுதமதியோடும் சென்று அறவணவடிகளாரை வணங்கித் தான் எய்திய பேறுகளை இயம்புதல்

### ௧ - ௬ : ஆங்கவர்.........ஏத்தி

(இ - ள்.) ஆங்கு அவர் தம்முடன் இளங்கொடி அறவண அடிகள் யாங்கு உளர் என்று வினாஅய் - இவ்வாறு மாதவியோடும் சுதமதியோடும் அறவணர் திருவடிகளை வணங்க எழுந்த இளைய பூங்கொடிபோல்வாளாகிய மணிமேகலை அவ்வறவணவடிகளார் எவ்விடத்தே உறைகின்றார் என்று அறிந்தோரை வினவித் தெரிந்துகொண்டு; நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவின் உரை மூதாளன் உறைவிடம் குறுகி - நரைத்து முதிர்ந்த யாக்கையுடையாரேனும் நடுக்கமில்லாத செந்நாவினை யுடையராய் அறவுரைத் தலிற் நலை சிறந்த முதுமை யுடையோராயிருந்த அவ்வறவணவடிகளார் உறைகின்ற தவப் பள்ளியை அடைந்து; மைம்மலர்க் குழலி - கரிய கூந்தலையுடைய அம் மணிமேகலை அவரைக் கண்டதும்; மாதவன் திருந்து அடி மும்முறை வணங்கி முறையுளி ஏத்தி - அந்தப் பெரிய தவத்தை யுடையவனுடைய திருந்திய நடையினையுடைய திருவடியை மூன்று முறை வலம் வந்து வணங்கி நான்முறைப்படி வாழ்த்திய பின்னர் என்க.

(வி - ம்.) அவர்-மாதவியும் சுதமதியும். வினாஅய்-வினவி. யாக்கை நரைத்து முதிர்ந்ததேனும் மொழிகுழறல் முதலியன இன்றி நன்கு உரைக்கும் ஆற்றலோடிருந்தனர் என்பது தோன்ற நடுங்கா நாவின் உரை மூதாளன் என்றார். உறைவிடம் என்றது தவப்பள்ளியை. மைம் மலர்க்குழலி, வாளாது சுட்டுப் பெயராந்துணையாய் நின்றது. ஒழுக்கத்தை அடியின் பாலதாக்கித் திருந்தடி என்றார். முறை - நான்முறை. அவருடைய வாழ்த்தினைப் பெற்றபின்னர் என்று பாட்டிடை வைத்த குறிப்பினாலே கூறிக்கொள்க.

### மணிமேகலை தன் திறத்திலே நிகழ்ந்தவற்றை அறவண அடிகளார்க்கு அறிவித்தல்

### ௭ - ௨௦ : புதுமலர்.........உரைத்ததும்

(இ - ள்) புதுமலர்ச் சோலை பொருந்திய வண்ணமும் - மாதவியின் பணி மேற்கொண்டு மலர் கொய்தற் பொருட்டுத்

தானும் சுதமதியும் உவவனத்திற் சென்று புகுந்த செய்தியும்; ஆங்கு உதயகுமரன் உரை செய்ததும் - அம் மலர்வனத்துள் உதயகுமரன் தன்பால் பெரிதும் காமமுடையவனாய் வந்து கூறிய செய்தியும்; மணிமேகலா தெய்வம் மணிபல்லவத்திடை அணியிழை தன்னை அகற்றிய வண்ணமும் - அவ் வுவவனத்தி னின்றும் மணிமேகலா தெய்வம் விஞ்சையிற் பெயர்த்துத் தன்னை மணிபல்லவத்திடை வைத்துப் போய செய்தியும்; ஆங்கு அத் தீவகத்து அறவோன் ஆசனம் நீங்கிய பிறப்பு நேரிழைக்கு அளித் ததும் - அங்கு அம் மணிபல்லவத் தீவின்கண் தான்கண்ட புத்த பெருமானுடைய இருக்கையாகிய தருமபீடிகை தனக்குப் பழம் பிறப் புணர்த்திய செய்தியும்; அளித்த பிறப்பின் ஆகிய கணவனைக் களிக்கயல் நெடுங்கண் கடவுளிற் பெற்றதும் - பழம் பிறப்புணர்த்துமாற்றால் அப் பிறப்பின்கண் தனக்குக்கணவனாகிய இராகுலன் மாறிப்பிறந்த பிறப்பினைக் களிக்கின்ற கயல்மீன் போன்ற நெடிய கண்ணையுடைய மணிமேகலா தெய்வத்தாலே அறியப் பெற்றதும்; மீண்டும் அத் தெய்வம் தன்னை நோக்கி; தவ்வையராகிய தாரையும் வீரையும் வெவ்வினை உருப்ப விளிந்து கேடு எய்தி - முற்பிறப்பிலே உனக்குத் தமக்கைமாராயிருந்த தாரை என்பவளும் வீரை என்பவளும் தாம் முற்செய்த தீய வூழ்வினை உருத்து வந்தூட்டுதலாலே இறந்து அவ்வுடம்பு ஒழிந்த பின்னர்; மாதவியாகியும் சுதமதி யாகியும் கோதையம் சாயல் நின்னொடுங் கூடினர் - நின் தாயாகிய மாதவியும் தாயன்பு சான்ற சுதமதியு மாகப் பிறப்புற்று மணிமேகலாய் நின்னோடும் தொடர்புடைய ராயினர் எனவும்; பூங்கொடி நல்லாய் ஆங்கு அவர் தந்திறம் அறவணன் தன்பால் கேள் என்று உரைத்ததும் - பூங்கொடி போலும் அழகுடையோய் நீ நின்னூரின்கண் அத் தாரையும் வீரையுமாகிய நின் தமக்கையர் செய்தியை அறவணவடிகளார்பாற் சென்று கேட்கக் கடவை என்று தனக்குக் கூறிய செய்தியையும்; என்க.

(வி - ம்.) புதுமலர்ச்சோலை என்றது - உவவனத்தை. உதய குமரன் ஆங்கு உற்று உரை செய்ததும் என்றது அவன் தன்னை இகழ்ந்த மையையும் சித்திராபதியாற் சேர்தலும் உண்டு என்று கூறியதனையும் கருதிக் கூறியபடியாம்.

அறவோன் ஆசனம் - புத்தபீடிகை. பிறப்புணர்ச்சியை அளித்தது என்றவாறு. ஆகிய கணவன் என்றது இராகுலனை. கடவுள்-மணிமேகலா தெய்வம். மீன் தன் குஞ்சுகளைப் பார்க்குமாபோலே அவள்பால் அருட் பார்வை கொண்ட தெய்வம் என்பாள், களிக்கயல் நெடுங்கட் கடவுள் என்றாள் (கஙு) "தவ்வையராகி.........(உ0) நல்லாய் கேள்" என்பன மணிமேகலா தெய்வத்தின் கூற்றைக் கொண்டு கூறிய படியாம்.

## இதுவுமது

### உக - ௩௦ : உரைத்த........உரைத்தலும்

(இ - ள்.) உரைத்த பூங்கொடி ஒரு மூன்று மந்திரந் தனக்கு உரை செய்து தான் ஏகிய வண்ணமும் - அறவண வடிகள்பால் கேள் என்று கூறிய மலர்க்கொடி போன்ற அழகுடைய மணிமேகலா தெய்வம் ஒப்பற்ற மூன்று மந்திரங் களைத் தனக்குச் செவியறிவுறுத்தி வானத்திலேறி மறைந்த செய்தியும்; தெய்வம் போயபின் தீவதிலகையும் ஐயெனத் தோன்றி அருளொடும் அடைந்ததும் - அத் தெய்வம் மறைந்து போன பின்னர்த் தீவதிலகை என்னும் மற்றொரு தெய்வம் ஐயென்று தான் வியக்கும்படி வானின்றிழிந்து தனக்கு முன் தோன்றி அருளோடும் தன்னை எய்தியதும்; அடைந்த தெய்வம் ஆபுத்திரன்கை வணங்குறு பாத்திரம் வாய்மையின் அளித்ததும்- அருள் ஒழுகும் முகத்தோடும் அடைந்த காவற்றெய்வமாகிய அத் தீவதிலகை தானும் ஆபுத்திரன் என்னும் அறவோன் கையகத்துப் பயின்ற வணங்கத் தகுந்த சிறப்போடு கூடிய அமுத சுரபி யென்னும் பிச்சைக் கலத்தை அதனியல்பெலாம் வாய்மை யாகக் கூறித் தன்கையிற் புகுதுமாறு செய்தருளியதும்; ஆபுத் திரன் திறம் அறவணன் தன்பால் கேள் என்று உரைத்து - அமுதசுரபிக்குரிய ஆபுத்திரனுடைய வரலாற்றை அறவண வடிகள்பால் கேட்டறிக என்று சொல்லி; இளர் ஒளி மாதெய்வம் போக என மடந்தை போந்த வண்ணமும்-மிக்கு விளங்கும் ஒளியையுடைய சிறந்த அத் தீவதிலகை யென்னும் தெய்வம் இனி, நீ நின்னூர்க்குச் செல்லுக என்று விடுப்பத் தான் புகார் நகர்க்கு வான்வழியாக வந்தெய்திய செய்தியும் ஆகிய இவற்றை யெல்லாம்; மாதவன் தன்னை வணங்கினள் உரைத்தலும் - அவ் வறவணவடிகளாரை வணங்கிச் சொல்லாநிற்றலும் என்க.

(வி - ம்.) பூங்கொடி : மணிமேலா தெய்வம் (உ௩). தெய்வம் - மணிமேகலா தெய்வம் (உ௯). தெய்வம்-தீவதிலகை. ஐயென-வியக்கும் படி. 'ஐவியப்பாகும்' (தொல். உரி-அ௯.) வியத்தகுமொன்றனைக் காண் போர் 'ஐ' என்று வாயாற் கூறி வியத்தல் உண்மையின் ஐ எனத் தோன்றி, என்றார். ஆபுத்திரன் திறம் ஆபுத்திரன் வரலாறு முதலியன.

## அறவணவடிகளார் மகிழ்ந்து மாதவியும் சுதமதியுமாகிய இருவருடைய முற்பிறப்பு வரலாறு கூறுதல்

### ௩௧ - ௪௦ : மணிமேகலை........கண்டேன்

(இ - ள்.) மணிமேகலையுரை மாதவன் கேட்டுத் தலைத்தலை மேல்வர தணியா இன்பம் - மணிமேகலை கூறிய மொழிகளைக்

கேட்ட அறவணவடிகளார் அவள் எய்திய ஆக்கங்கள் பல வற்றையும் கூறும்பொழுது ஒவ்வோராக்கத்திடத்தும் அவர் எய்தும் மகிழ்ச்சி மிகுத்துப் பெருகி வருதலாலே குறையாத பேரின்பத்தை யுடையவராய்; பொற்றொடி மாதர் நல்திறம் சிறக்க - என்று நன்று நங்காய் நின்னாலே உலகிலே தோன்றும் பொன்வளையலணியும் மகளிரினத்தின் நற்பண்புகள் சிறந்தோங்குக; இவர் திறம் உரைக்கேன் நீ உற்று உணர்வாய் - மாதவியும் சுதமதியும் ஆகி ஈங்கு வந்தெய்திய இவருடைய வரலாற்றில் நீ அறிந்தது இடப்ப எஞ்சியவற்றை யான் இப் பொழுது நினக்குக் கூறுவல் உள்ளம் பொருந்திக் கேட்டுணர்ந்து கொள்வாயாக; நின் நெடுந் தெய்வம் நினக்கு உரைத்த அந்நாள் அன்றியும் - உன் குலதெய்வமாகிய புகழால் நீண்ட அம் மணி மேகலா தெய்வம் நினக்குக் கூறிய அந்த நாளிலே யான் சென்ற தன்றியும்; அருவினை கழூஉம் ஆதி முதல்வன் அடியிணை ஆகிய பாத பங்கயமலை பரவிச் செல்வேன் - போக்குதற்கரிய வினைகளைத் துவரத் துடைக்கும் ஆதிசினேந்திரனாகிய புத்தருடைய திருவடித் தாமரையின் சுவடு இடப்பதாகிய அப் பாதபங்கய மலையை உள்ளத்தாலே நினைந்து வாழ்த்தி மீண்டுமொருநாள் அதனை வலம் வருதற் பொருட்டுச் செல்லும் யான்; கச்சயம் ஆளும் கழல்கால் வேந்தன் துச்சயன்றன்னை ஓர் சூழ் பொழில் கண்டேன் - கச்சய நகரத்தை ஆள்கின்ற வீரக் கழலணிந்த காலையுடைய வேந்தனாகிய துச்சயனை முன்போலவே மரங்கள் சூழ்ந்த ஒரு சோலையிலே கண்டேன்காண் என்றார்; என்க.

(வி - ம்.) மணிமேகலை கூறிய செய்தியில் அவள் பெற்ற ஆக்கம் பலவாகலின் ஒவ்வோர் ஆக்கத்தையும் கேட்கும் தோறும் அறவண அடிகளார் இன்பம் மேலும்மேலும் பெருக இறுதியில் அவளைப் பாராட்டுவார் நின்னால் நின்னினத்து மாதர் நற்றிறம் உலகில் சிறப்பதாக! என்று வாழ்த்தினர் என்க. இதற்கு இங்ஙனம் நுண்ணிதின் உரை கூறுது பொற்றொடிமாதர் என்பதனை விளி என்று கொள்வார் உரை சிறவாமை யுணர்க. பிறர் ஆக்கங்கண்டு பெரிதும் மகிழ்தலும் எல்லாரும் இன்புற்று வாழவேண்டும் என்று விரும்புவதுமே சான்றோரியல்பாகலின்.

மாதவியும் சுதமதியுமாகிய இருவருடைய முற்பிறப்பின் முடிவுகள் இவ்வுலக நிலையாமையை நன்குணர்த்தி மணிமேகலையின் மெய்யுணர் விற்கு ஆக்கமா யமையும் என்பது கருதி இவர் திறம் உரைக்கேன் உற்றுணர்வாய் என்று விதந்தோதினர்.

மணிமேகலா தெய்வம் மணிமேகலைக்குக் குலதெய்வமாதல் பற்றி நின்தெய்வம் என்றார். தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் அத் தெய்வத்தின் பெருந்தகைமைபற்றி நெடுந்தெய்வம் என்றார்.

நின் தெய்வம் நினக்கெடுத்துரைத்த அந்நாள் என்றது துச்சயன் மனைவியரோடு மலையில் ஆடிக் கங்கைக் கரையிருந்துழி "அறவணன்

ஆங்கு அவன்பாற் சென்றான்'' என மணிமேகலா தெய்வம் கூறிய அந் நாளை என்க. (௧௦ - ௫௫ - அ) அந்நாள் அன்றியும் மீண்டும் ஒருநாள் செல்வேன் என்றவாறு.

## இதுவுமது

### ௪௯ - ௫௦ : மாபெருந்.........எழுந்தேன்

(இ - ள்.) மாபெருந்தானை மன்ன - அப்பொழுது யான் அம் மன்னனை நோக்கி, மிகப் பெரிய படைகளையுடைய வேந்தனே!; நின்னொடும் தேவியர் தமக்கும் தீது இன்றோ என - உனக்கும் உன் மனைவிமார் இருவர்க்கும் தீது ஏதுமின்றி இனிது வாழ் கின்றீரோ என வினவினேனாக!; அழிதகவு உள்ளமொடு அரற்றினன் ஆகி ஒளி இழை மாதர்க்கு உற்றதை உரைப்போன்- அதுகேட்ட அம் மன்னவன் துன்பத்தாலே அழிகின்ற நெஞ்சத் தோடே வாய்விட்டு அழுகின்றவனாய் ஒளிமிக்க அணிகலன் அணிந்த தன் மனைவியர் இருவர்க்கும் ஒருசேர நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறுபவன்; விரை மதுக்களி மயக்கத்து போற்றாது புதுக்கோள் யானை முன் சென்று மாய்ந்ததூஉம் - தன் மனைவிய ரிருவருள் இளையாளாகிய வீரை என்பவள் கள்ளுண்டு களித் தமையாலுண்டான மயக்கங் காரணமாகப் புதுவதாகப் பற்றிக் கொணர்ந்த காட்டியானையின்முன் தன்னைப் போற்றிக் கொள்ளாமற் சென்று அதனால் கொல்லப்பட்டொழிந்த செய்தி யும்; தாரை ஆங்கு அதுகேட்டுத் தாங்காது ஓர் அரமியம் ஏறி வீழ்ந்து சாவுற்றதூஉம் - மூத்தாளாகிய தாரை தானும் அப்பொழுதே வீரையின் சாவுச் செய்தியைக் கேட்டுத் துயரம் தாங்கமாட்டாமல் ஒரு நெடுநிலை மாடத்துச்சியிலுள்ள நிலா முற்றத்திலேறி அங்கிருந்து நிலத்திலே குதித்து இறந்துபட்ட செய்தியுமாகிய; கழிபெருந் துன்பம் காவலன் உரைப்ப - மிகவும் பெரிய துயரச் செய்திகளை அம் மன்னவன் சொல்லிமழ; பழவினைப் பயன் நீ பரியல் என்று எழுந்தேன் - அதுகேட்ட யானும் இவையெல்லாம் பழவினையின் பயன்களேயாகும் ஆகவே, அவற்றிற்கு வருந்துதல் பயனில் செயலாம் வருந்தற்க என்று ஆறுதல் கூறி அவ்விடத்தினின்றும் சென்றேன்காண்; என்றான் என்க.

(வி - ம்.) மன்ன : விளி. மாதர் - தாரையும் வீரையும் ஆகிய மன்னன் மனைவியர். புதுக்கோள்யானை - புதிதாகப் பற்றிக் கொணர்ந்து பழக்கப்படாத காட்டியானை. போற்றாது - தன்னைப் போற்றுதல் செய் யாது. ''வெம்பு கரிக்கு ஆயிரந்தான் வேண்டுமே'' என்னும் அறிவுரை யைப் போற்றாது எனினுமாம். வீரை - இளையாள். தங்கையிறந்தமையா லுண்டான துயரம் பொறாது தாரை அரமியம் ஏறி வீழ்ந்திறந்தாள் என்றான் என்க.

இதன்கண் - கள்ளுண்டலால் வரும் கேடும் காமத்தால் வரும் துன்பமும் பற்றுடைமையால் வருந்துன்பமும் யாக்கை நிலையாமையுமாகிய அறிவுரைகளும் குறிப்பாகப் போந்தமையும் உணர்க.

## அறவண அடிகளார் மணிமேகலை முதலியோரைப் பாராட்டி அவர்க்குப் புத்தபெருமானுடைய தோற்றச் சிறப்பறிவுறுத்துதல்

### ருக - கூஉ : ஆடுங்..........பட்டது

(இ - ள்.) ஆடுங் கூத்தியர் அணியேபோல வேற்றோர் அணியொடு வந்தீர் என - அவ்வாறு முற்பிறப்பிலே தாரையும் வீரையும் இலக்குமியும் என்னும் பெயரோடு சிறந்த அரசியராய்த் திகழ்ந்த நீயிரே கூத்தாட்டரங்கில் ஏறி ஆடும் நாடக மகளிர் ஒரு கோலம் புனைந்து ஆடியவர் அவ் வேடத்தைக் களைந்து அவ் வேடத்திற்கு மாறுபட்டவராக வேடம் புனைந்து வருமாறு போலவே என் முன்னர் வந்துள்ளீர்; ஓ என - நும்வரவு பெரிதும் வியக்கத் தகுந்தது கண்டீர்! என்று வியந்து; மணிமேகலை முன் மடக்கொடியார் திறம் - மணிமேகலைக்கு முன்பு மாதவியும் சுதமதியும் ஆகிய அம் மடந்தையர் முற்பிறப்பிலே தாரையும் வீரையும என்னும் அரசியரா யிருந்து இறந்துபட்ட நிகழ்ச்சிகளை; துணிபொருள் மாதவன் சொல்லியும் அமையான் - மெய்ப்பொருளை யுணர்ந்த பெரிய தவத்தை யுடைய அவ்வறவணவடிகள் ஆர்வத்துடன் அறிவித்தும் அமையாராய்; பிறவியும் அறவியும் பெற்றியின் உணர்ந்த நறுமலர்க் கோதாய் - பழம் பிறப்பும் அறநெறியும் ஏது நிகழ்ச்சி காரணமாக நன்குணர்ந்த நறிய மலர்மாலை போன்ற மணிமேகலையே இனி யான் கூறுவதனை; நல்லினை கேளாய்- செவி கொடுத்துக் கேட்பாயாக!, தரும தலைவன் தலைமையின் உரைத்த பெருமைசால் நல்லறம் பெருகாது ஆகி - அறத்தின் முதல்வனாகிய புத்தபெருமான் தன் இறைமைத் தன்மை காரணமாக உலகினர்க்கு ஓதியருளிய பெருமை மிக்க அழகிய அருளறம் உலகின்கண் பெருகாதொழியா நிற்ப; இறுதியில் நல்கதி செல்லும் பெருவழி - முடிவில்லாத நன்னிலையை எய்தச் செல்லுதற்குரிய அவ்வற நெறிதானும்; அறுகையும் நெருஞ்சியும் அடர்ந்து கண் அடைத்து ஆங்கு - அறுகம் புல்லும் நெருஞ்சியும் அடர்ந்து சிறிதும் இயங்க இடமின்றி அடைத்தாற் போலாகி விட்டமையாலே; உயிர் வழங்கு பெருநெறி - மக்கள் பிறப்பெய்திய உயிர்கள் செல்லுதற் கமைந்த பெரிய வழியானது; செயிர் வழங்கு தீக்கதி திறந்து - குற்றங்களே பயில வழங்கும் தீய வழி

மாகத் திறக்கப்பட்டு; கல் என் ஒரு திறம்பட்டது - உயிர்கள் துன்பத்தால் ஆரவாரஞ் செய்தற் இயன்றதொரு தன்மையை யுடையதாயிற்று என்றார் என்க.

(வி - ம்.) ஆடுங்கூத்தியர் அணி - நாடகமாடும் மகளிர் புனைந்து கொள்ளும் வேடம்; கூத்தியர் மாற்றுவேடம் புனைந்து கொண்டு வந்து தோன்றுதல் போல் முன்னர் அரசியராய் வேடம் புனைந்து நடித்த நீயிர் இப்பொழுது பிக்குணி வேடம் புனைந்து கொண்டு எம்முன் வந்தீர் என்று வியந்த படியாம். அறவணவடிகளார் மணிமேகலை கூற்றால் இம் மாதவியும் சுதமதியும் தாம் தமது இளமைப் பருவத்திலே அரசியராய்க் கண்கூடாகக் காணப்பட்டவர். இவரே தமக்கு உண்டி முதலியன கொடுத்துப் போற்றியவர்; அவ்வரசியரே மாறிப் பிறந்து இம்மையிலேயே தம்முதுமைப் பருவத்தே தம்மைக் காணப் பிக்குணிமகளிராய் வந்தனர் என்றறிந்தமையால் இந் நிகழ்ச்சி அவர்க்குப் பெரிதும் வியப்பை நல்குவதாயிற்று. ஈண்டு ஆசிரியர் இளங்கோவடிகளார் மாடலன் கூற்றாக, "ஆடுங் கூத்தர்போல் ஆருயிர் ஒரு வழிக் கூடிய கோலத் தொருங்குநின் றியலாது" என்றோதிய தொடர் நினைவிற் கொள்ளற்பாலதாம் (சிலப்-உஅ : கசுரு-கசுசு).

துணிபொருள் மாதவன் - அறவண அடிகள். அறவி - அறநெறி. நல்கினை - உவந்தனை எனலும் ஆம். உவந்து நல்கினும் நல்காயாயினும் என்புழி (புறநா - அ0)யும் அஃது அப் பொருட்டாதலறிக. தரும தலைவன் - புத்தர். இறுதியில் நற்கதி - வீடு. பெருவழி-அறநெறி. செயிர்-குற்றம். உயிர் வழங்கு பெருநெறி என்றது மக்கட் பிறப் பெய்தியவர் பெரும்பாலோர் வாழும் நெறி. காம முதலிய செயிர்கட்கு அறுகையும் நெருஞ்சியும் உவமை என்க. தீக்கதி - பிறப்பினுட் புகுதுவதற்குக் காரணமான தீநெறி. ஒரு திறம்பட்டது என்றது மாந்தர் வாழும் நெறி தீக்கதியில் மட்டும் புகுதும் ஒரே வழியாகி விட்டது. எனவே மாந்தர் வாழ்க்கையில் அறம் முழுதும் அழிந்தது, மறமே யாண்டும் பெருகியது என்றவாறாயிற்று.

## புத்தர் மீண்டும் பிறக்கும் காலம்

### சுரு - எக : தண்பனி.........ஆதலின்

(இ - ள்.) ஈங்கு - இந் நிலவுலகத்திலே; நல் அறம் - புத்த பெருமான் ஆதியிலோதிய நல்லறமானது; தண்பனி விழுங்கிய செங்கதிர் மண்டிலம் உண்டு என உணர்தல் அல்லது - குளிர்ந்த பனி மூட்டத்தாலே மறைக்கப்பட்ட சிவந்த ஒளியையுடைய ஞாயிற்று மண்டிலமானது அழிவற்றது ஆதலால் உளதாதல் வேண்டும் என்று கருத்தளவையால் மட்டும் உணரப்படுவதன்றி, யாவதும் கண்டு இனிது விளங்காக் காட்சி போன்றது; சிறிதும் காட்சியளவையாற் காணப்பட்டு நன்கு விளங்காத மானதக் காட்சி மாத்திரையே ஆதல் போல்வதாயிற்று; சலாகை நுழைந்த மணித்துளை அகவையின் பெருங்கடல் உலாநீர் ஓடாதாயினும் - சிறிய சலாகை துளைத்துப் புகுந்த மணியின் கண்ணதாகிய சிறிய

துளையினூடே பெரிய கடலிலே உலாவுகின்ற நீர் முழுவதும் புகுந்து செல்லாதாயினும்; ஆங்கு அத் துளைவழி உகும் நீர்போல - அவ்வாறாய அச் சிறிய மணித்துளை வழியே குடத்தின் முகந்து கொண்ட அக் கடல் நீரே ஒழுகுதல் போன்று; ஈங்கு நல்லறம் எய்தலும் உண்டு என - இவ் வுலகில் அந் நல்லறம் புகுதலும் உண்டு என்னும் கருத்தினாலே; யான் சொல்லலும் உண்டு - யான் செவ்வி பெற்றுழி அவ்வறத்தை அறிவுறுத்தலும் உண்டு; மல்லன் மாஞாலத்து மக்களே ஆதலின் சொல்லுதல் தேற்றார் – அங்ஙனம் அறிவுறுத்தும் பொழுதும் கேட்போரெல்லாம் வளமுடைய பெரிய இவ்வுலகத்து வாழ்க்கையையே அவாவுகின்ற மக்களே யாதலால் அவ்வறத்தைக் கேட்டும் கேளாராய்ச் சிறிதும் தெளிவாரல்லர்காண் என்றார் என்க.

(வி - ம்.) நல்லறம் இக்காலத்தே பனியால் விழுங்கப்பட்டுக் கட்புலனுக்குப் புலப்படாமல் கருத்தளவைக்குப் புலப்படுகின்ற ஞாயிறு போலக் காட்சியளவைக்குப் புலப்படாமல் மானதக்காட்சிக்கே புலப்படுவதொன்றாயிருக்கிறது. அங்ஙனமாயினும் யான் ஒல்லுமளவிற்கு அவ்வறத்தை உலகினர்க்குக் கூறி வருகின்றேன். கூறியவிடத்தும் கேட்போர் தகுதியின்மையால் அவ்வறத்தைத் தெளிகின்றிலர் என்று அறவணவடிகளார் பரிந்து கூறுகின்றனர் என்க.

கதிர் மண்டிலத்தைப் பனி விழுங்கினாலும் அதன் பேரொளி ஓரோவழி அதனையும் ஊடுருவி அப் பனி மண்டலத்தின் புறம்பேயும் புலப்பட்டு அதனுள்ளே தனதுண்மையைப் புலப்படுத்தாமலிராது ஆதலின் "நல்லறம் உண்டென உணர்தல் அல்லது யாவதும் கண்டினிது விளங்காக் காட்சி போன்றது'' என்னும் இவ்வுவமை ஆழ்ந்த கருத்துடையது. இதனோடு,

''உண்டா லம்மவிவ் வுலக மிந்திரர்
அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளல ரயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே" (புறநா. கஅஉ)

எனவரும் செய்யுள் நினைவு கூரற்பாலதாம்.

யாவதும் - சிறிதும். மக்களேயாதலின் சொல்லுதல் தேற்றார் என மாறுக.

இதுவுமது

எ௨ - அ௨ : சக்கரவாள.........புகூஉம்

(இ - ள்.) சக்கரவாளத்துத் தேவர் எல்லாம் தொக்கு - இச் சக்கர வாளத்தினூடே வாழ்கின்ற தேவர்கள் எல்லாம் கூடி; ஒருங்கு துடிதலோகத்து ஈண்டி - ஒரு சேரத் துடிதலோகத்திலே சென்று ; மிக்கோன் பாதம் விழுந்தனர் இரப்ப - அங்குறைகின்ற தேவர்களுள் சிறந்த தேவனுடைய திருவடிகளிலே வீழ்ந்து வேண்டா நிற்றலாலே; இருள் பரந்து கிடந்த மலர்தலை உலகத்து விரிகதிர்ச் செல்வன் தோன்றினன் என்ன - இருள் பரவிக் கிடந்த உலகின்கண் விரிந்த ஒளியையுடைய கதிரவன் தோன்றினாற் போன்று; ஈர் எண்ணூற்றோடு ஈர் எட்டு ஆண்டில் - இற்றை நாளிலிருந்து ஆயிரத்தறுநூற்றுப் பதினாரு மாண்டில்; பேரறிவாளன் தோன்றும் அதன் பிற்பாடு - பேரறிவுடைய வணிய புத்தபெருமான் பிறந்தருளுவன் அப்பால்; பெருங்குள மருங்கில் சுருங்கைச் சிறுவழி இரும்பெரு நீத்தம் புகுவதுபோல - பெரிய நீர் நிலையின்கண் கட்டப்பட்டுள்ள மதகாகிய சிறிய வழியினாலே மிகப் பெரிய வெள்ளம் புகுவதுபோல; அளவாச் சிறு செவி அளப்பு அரு நல் அறம் - எண்ணிறந்த மாந்தர் தம் சிறிய செவியினூடு அளத்தல் அரிய நன்மையுடைய மனப்பாட்டற மானது; உயிர் உளமலி உவகையொடு கொளப் புகூஉம் - மாந்தர் உயிர் உள்ளத்தே மிகுகின்ற மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ளுமாறு இனிது புகுங்காண் என்றார் என்க.

(வி - ம்.) இருள் அறியாமைக்குவமை. பேரறிவாளன் - புத்த பெருமான். பிற்பாடு - பின்பு: ஒரு சொல்.

துடிதலோகத்துறைகின்ற பிரபாபாலன் என்னும் தேவனே தேவர் வேண்டுகோட்கிணங்கி நிலவுலகிலே பிறந்தான் என்று பௌத்தர் நூல் சில நுவலும். கதிர்ச்செல்வன் - ஞாயிறு.

யான் கூறும் இவ்வறம் சலாகை நுழைந்த மணித்துளையினூடே ஒழுகும் நீர் போன்று ஒரு சிலர் செவியினூடு மிகவும் சிறிதே புகுதும். அவர்தாமும் மாக்களாதலால் அதனையும் தெளிகின்றிலர். புத்த பெருமான் தோன்றி அறங்கூறுங்கால் மதகு வழியாகக் குளத்தினூடு புகுகின்ற நீர் போன்று மிகுதியாக மாந்தர் செவியிற் புகுவதாம். அவர் முன்னிலையிற் சென்ற மாக்களும் அவரது தெய்வத் தன்மையாலே அவ்வறங்களைக் கேட்கும் போதே அவற்றைத் தெளிந்து பெரிதும் மகிழவும் மகிழ்வர் எனப் புத்தருக்கும் தமக்குமுள்ள வேற்றுமையை அடிகளார் ஈண்டு மணிமேகலைக்கு அறிவுறுத்துகின்றனர் என்றுணர்க.

ஈண்டு அறவணவடிகளார் புத்தர் ஆயிரத்தறுநூற்றுப் பதினாரும் ஆண்டில் மீண்டும் நிலவுலகத்துப் பிறப்பார் என்று அறிவிப்பது அவர்

கூறிய அவ்வாண்டிற்குப் பின்னர் நிகழும் காலத்தைக் குறிப்பதோ அன்றி யாதேனும் ஒரு சகாப்தத்தைக் குறிப்பதுவோ உறுதியாகத் துணிதற்கில்லை. ஒரோவழி ஆதி புத்தர் பிறந்த யாண்டினை முதலாகக் கொண்டு வழங்கி வந்த புத்த சகாப்தம் ஒன்றிருந்திருக்கலாம்; அங்ஙனம் கொள்ளின் அப் புத்த சகாப்தத்தின்கண், அறவணர் காலங்காறும் கழிந்த யாண்டுகள் நிற்க அவற்றிற்கு மேல் நிகழும் யாண்டுகளாகக் கொள்ளல் வேண்டும்; உலகில் அறந்தலைதடுமாறும் பொழுதெல்லாம் நிலவுலகில் புத்தர் பிறந்து அறந்தலை நிறுத்துவர் என்பது பௌத்த சமயத்தார் கொள்கையுமாகும். இதனோடு,

"சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தநான்
ஆவாவிவ் வுலகுபடும் அழிதுயர்தீர்ப் பதற்காக
மேவாது நின்றேயென் மாயையினுன் மெய்யேபோல்
ஓவாது பிறந்திடுவன் உகந்தோறும் உகந்தோறும்"

எனப் பகவத்கீதையில் வரும் கண்ணனுடைய திருவாக்கு ஒப்புநோக்கற் பாலதாம் (ச - சம்பிரதாயவத்தியாயம் : செய் எ.)

ஈண்டு அறவண அடிகளார் கூறும் புத்தர் பிறப்பு ஆதிபுத்தருடைய பிறப்பன்று; வழிவழிப் பிறக்கும் புத்தர்களுள் ஒருவர் பிறப்பையே கூறுகின்றார் என்று கொள்க.

இதுவுமது

அரு - கூஉ: கதிரோன்......தரூஉம்

(இ - ள்.) கதிரோன் தோன்றும் காலை ஆங்கு அவன் அவிர் ஒளி காட்டு மணியே போன்று மைத்து இருள் கூர்ந்த மனமாசு தீர- ஞாயிறு தோன்றும் பொழுது அதன் விளங்குகின்ற ஒளியைத் தன்னுள்ளிருந்து வெளிப்படுத்துகின்ற சூரிய காந்தக் கல்லைப் போன்று, பண்டு கருகி இருள் மிகுந்த மாந்தருடைய மனம் அழுக்கு அகன்று தம்முள்ளிருந்து அறவொளியை வெளிப்படுத்தும்படி; புத்த ஞாயிறு தோன்றும் காலைத் திங்களும் ஞாயிறும் தீங்கு உறு விளங்க - புத்தன் என்னும் அவ்வறிவொளிப் பிழம்பு உலகிலே தோன்றிய காலத்தே வானத்தே இயங்குகின்ற திங்களும் ஞாயிறும் உள்ளிட்ட கோள்கள் எல்லாம் உலகில் தீங்கு நிகழாதபடி நன்னெறியிலே இயங்கி விளங்கா நிற்ப; தங்கா நாள் மீன் தகைமையின் நடக்கும் - சிறிதும் தங்காமல் இயங்குகின்ற அசுவினி முதலிய நாண்மீன்கள் தாமும் அங்ஙனமாய நன்னெறி யிலேயே இயங்குவனவாம்; வானம் பொய்யாது - முகில் திங்களுக்கு மூன்று முறை பெய்யும் தன் தொழிலில் பிழையாது; மாநிலம் வளம்படும் - பெரிய நிலமும் கூல முதலிய செல்வத்தாற் சிறக்கும்; ஊன் உடை உயிர்கள் உறுதுயர் காணா - உடம்

பெடுத்து வாழுகின்ற உயிர்கள் தாமும் மிக்க துன்பத்தை நுகரமாட்டா; வளி வலம் கொட்கும் - காற்றும் இனிதாக வலமாகச் சுற்றியியங்கும்; மாதிரம் வளம்படும் - மலைகளும் செல்வத்தாற் சிறக்கும், நளி இரு முந்நீர் நலம் பல தரும் - செறிந்த பெரிய கடல் தானும் உயிர்கட்கு நன்மை பலவற்றையும் வழங்கா நிற்கும் என்றார் என்க.

(வி - ம்.) "கதிரோன்......காலை" எனவரும் இதனோடு,

"சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
ஆரியனும் ஆசான்வந் தருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும்"

எனவரும் சிவஞான சித்தியார் (சுபக் - உ௮0) நினைக்கத்தகும். அல்லதூஉம் -

"மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு
இனத்துள தாகும் அறிவு" (சுஙிச)

எனவரும் அருமைத் திருக்குறளையும் நோக்குக.

மைத்து - கறுத்து. இருள் - அறியாமை. மனமாசு - அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் என்பன. மாசுதீர்ந்த நெஞ்சமே அறத்தின் பிழம்பாதலின் மாசுதீர என்றொழிந்தார். என்னை?

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற" (குறள் - ங௪.)

எனவரும் பொய்யில் புலவன் பொருள் உரையும் காண்க.

நிலவுலகின்கண் வளம் மிகுதற்கும் வற்கடம் தீர்தற்கும் காரணமான வான் சிறப்புக் கோளும் நாளும் நன்னெறியிலியங்கும் பொழுதுண்டாம் என்பது பற்றி,

"திங்களும் ஞாயிறும் தீங்குறு விளங்கத்
தங்கா நாண்மீன் தகைமையி னடக்கும்"

என்றார். வளி-காற்று. காற்று வலஞ்சுற்றின் உலகின் வளம் பெருகும் என்ப. இதனை, "வலமாதிரத்தான் வளிகொட்ப" எனவரும் மதுரைக் காஞ்சியினும் காண்க (ரு). மாதிரம் -மலை. மலைவளம் படுதலாவது - மலை தரும் பல பண்டங்களும் மிகுதல். அவையாவன: "தக்கோலம் தீம்பூத்தகைசால் இலவங்கம் கப்பூரம் சாதியோ டைந்து" என்பன. முந்நீர் நலம்பலதரும் என்றதும் கடல்தரும் பல பண்டமும் - மிகுந்து நலந்தரும் என்றவாறு. அவை ஓர்க்கோலை சங்கம் ஒளிர் பவளம் வெண் முத்தம் நீர்ப்படும் உப்பினோ டைந்து" என்ப (சிலப் - க0. க0௭, மேற்.).

இதுவுமது

௯௫ - ௧௦௫ : கறவை.........மறவேன்

(இ-ள்.) கறவை கன்று ஆர்த்திக் கலநிறை பொழியும் - பால் கறத்தலையுடைய ஆக்கள் தம் கன்றின் வயிறு நிறையச் சுரந்தூட்டிய பின்னரும் கறக்கும் கலங்கள் நிறையும்படி பாலைச் சுரந்து பொழியா நிற்கும்; பறவை பயன் துய்த்து உறைபதி நீங்கா - பறவைகள் தாம் வாழுமிடங்களிலேயே தமக்கு வேண்டிய இரைகளைப் பெற்றுத் தின்று காமவின்பமும் நுகர்ந்து தாம் தாம் இருக்குமிடங்களினின்றும் பிறவிடங்களுக்குச் செல்ல மாட்டா; விலங்கும் மக்களும் வெரூஉப் பகை நீங்கும் - விலங்குப் பிறப்புற்ற உயிரும் மக்கட் பிறப்புற்ற உயிரும் தம்முள் ஒன்றற் கொன்று அஞ்சுதற்குக் காரணமான பகைமைப் பண்புகள் இலவாம்; கலங்கு அஞர் நரகரும் பேயும் கைவிடும் - நெஞ்சு கலங்குதற்குக் காரணமான துன்பத்தை நரகர் உயிரும் பேயுயிரும் விட்டொழியும்; கூனும் குறளும் ஊமும் செவிடும் மாவும் மருளும் மன்னுயிர்பெறு - கூனும் குறளும் ஊமையும் செவிடும் ஊன்தடியும் மருளும் என்னும் குறையுடைய பிறப்புக்களை உயிர்கள் பெறுவாம்; அந் நாள் பிறந்து அவன் அருள் அறம் கேட்டோர் - புத்தபெருமான் பிறக்கின்ற அந்தக் காலத்திலே பிறந்து அப் பெருமான் அறி வுறுக்கும் அருளறத்தைக் கேட்கும் திருவுடையோர்; இன்னாப் பிறவி இகந்தோர் ஆதலின் - துன்பத்திற் கெல்லாம் காரணமா யிருக்கின்ற பிறப்பென்னும் பெருங்கடலையே கடந்தவராவ ராதலின்; போதி மூலம் பொருந்திய சிறப்பின் நாதன்பாதம் நவை கெட ஏத்துதல் பிறவிதோறு மறவேன் - போதி மரத்தின் நீழலிலமர்ந்த சிறப்பினையுடைய நம் மிறைவனுடைய திருவடிகளை வாழ்த்திப் பிறப்பறும்படி வணங்குதலை யான் பிறப்புக்டோறும் மறவேன் காண்! என்றூர் என்க.

(வி-ம்.) நிலவுலகம் மழைவளம் பெற்றிருத்தலால் ஆக்கள் வயிறுற மேய்ந்து பால் மிகுதியாகச் சுரக்கும் என்பார் கறவை கன்றூர்த்திக் கலம் நிறைபொழியும் என்றூர். கன்றும் ஆர்த்தி எனல் வேண்டிய உயர்வு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. ஆர்த்தி - ஊட்டி. கலம்- கறக்குங் கலம். நிறை-நிறையுமாறு. தானே பிலிற்றும் என்பார் பொழி யும் என்றூர். வளம் பெற்றிருத்தற்கு ஆப்பயன் மிகுதல் அறிகுறி; அங்ஙனமே வற்கடத்தின் அறிகுறியாக, ஆசிரியர் திருவள்ளுவனர்,

"ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்,
காவலன் காவான் எனின்" (௫௬௦)

என்புழி ஆபயன் குன்றும் என்பதூஉ முணர்க.

பறவைபயன்றுய்த்து என்றது உண்டும் புணர்ந்தும் இன்பந்துய்த்து என்பதுபட நின்றது. விலங்குயிரும் மக்கள் உயிரும் பகைநீங்கும் என்க. நரகரும்பேயும் பிறப்புவகையால் துன்பமுறுவன, அவையும் அச்செயலை விடும் என்க. கை - செயல், பிறவுயிர்க்கு அருள் செய்தலைக் கைவிடும் எனினுமாம்.

கூன் முதலிய பிறப்புக்கள் பயனில் பிறப்புக்கள். புத்தர் தோன்றிய பின்னர் உயிர் கூன்முதலிய உறுப்புக்குறை யுடையனவாகப் பிறவா என்றவாறு. இவற்றை,

"சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்
கூனுங் குறளும் ஊமும் செவிடும்
மாவு மருளு முளப்பட வாழ்நர்க்(கு)
என்பே ரெச்ச மென்றிவை எல்லாம்
பேதைமை யல்ல தூதிய மில்'

எனவரும் புறநானூற்றுச் செய்யுளினும் (உஅ) காண்க.

அருளறம் - பௌத்தசமயத்தின் சிறப்பறம். இனி மறவேன் மடக்கொடி என்னுந் தொடரை மறவேல் மடக்கொடி எனக் கண்ணழித்து அத்தகைய நாதன் பாதம் ஏத்துதலை மறவேல் என மணிமேகலைக்குச் செவியறிவுறுத்தனர் எனினுமாம்.

## அறவணர் மாதவி சுதமதி என்னும் இருவர் திறமும் அறிவுறுத்து மணிமேகலைக்கு நல்லறம் சாற்றுதல்

கoரு - ககரு: மடக்கொடி..........பெற்றனை

(இ - ள்.) மடக்கொடி மாதர் நின்னால் வருவன இவ்வூர் ஏது நிகழ்ச்சி பல உள - இளம் பூங்கொடி போலும் மணிமேகலையே! உன்னைத் தலைக்கீடாகக் கொண்டு இந் நகரத்தில் நிகழ்ச்சிக்கு வருவனவாகிய பழவினை நிகழ்ச்சிகள் பல உள, அவை யாவும் ஆங்கு நிகழ்ந்த பின்னர் அல்லது - அந் நிகழ்ச்சிகள் எல்லாம் அவ்வாறே நிகழ்ந்து முடிந்த பின்னர் அன்றி; பூங்கொடி மாதர் - பூங்கொடி போலும் நங்காய்!; பொருள் உரை பொருந்தா - மெய்ப் பொருள் அறிவுரை நினக்குப் பொருந்த மாட்டா, அவை நிற்க; ஈங்கு இவர் இருவரும் ஆதிமுதல்வன் அருந்துயர் கெடுக்கும் பாதபங்கய மலை பரசினர் ஆதலின் - நின்னோடிங்கு ஆடுங் கூத்தர்போல் வேற்றுரு வொடு வந்த இத் தாயையும் விரையும் ஆகிய மாதவியும் சுதமதியும் கழிந்த பிறப்பில் ஆதி புத்தருடைய பாதபங்கயம் இட்ட பாதபங்கய மலையை வலம் வந்து தொழுத நல்வினையை உடையராகலின், நின்னோடு ஓங்கு உயர் போதி உரவோன் திருந்து அடிதொழுது வலங் கொண்டு - அங்ஙனமே முற்பிறப்பில் நல்வினைப் பேறுடைய நின்னோடு மிகவும்

உயர்ந்த மெய்க் காட்சியாளனாகிய புத்த பெருமானுடைய அழகிய திருவடிகளைத் தொழுது வலஞ் செய்யுமாற்றால்; தொடர்வினை நீங்கிப் பழுது இல் நல்நெறிப் படர்குவர் காணாய் - பிறவிகடோறும் தொடர்ந்து வருகின்ற இருவகை வினையும் துவர நீங்கப்பெற்றுக் குற்றமற்ற நன்னெறியாகிய வீட்டு நெறியிலே செல்லாநிற்பர், இவர் திறம் இங்ஙனமாக மடக்கொடி; ஆருயிர் மருந்தாம் அமுதசுரபி எனும் மாபெரும் பாத்திரம் பெற்றனை - மணிமேகலாய்! நீதானும் நினது ஆகூழ் காரணமாக ஆருயிர்க்கு மருந்தாகின்ற அமுதசுரபி என்னும் மிகவும் சிறப்புடைய தெய்வத் தன்மையுடைய பாத்திரத்தைப் பெற்றிருக்கின்றாய் அல்லையோ என்றார் என்க.

(வி - ம்) மடக்கொடி மாதர்: விளி. இவ்வூர் என்றது - புகார் நகரத்தை. பொருள் உரை - மெய்ப்பொருள் அறிவுறுக்கும் செவியறிவுறாஉ. இருவரும் - மாதவியும் சுதமதியும். நின்னோடு என்றது இவர் போலவே நல்வினையாற்றிய நின்னோடு என்பதுபட நின்றது. தொடர்வினை - பிறப்புக்கடோறும் காரணகாரிய முறைப்படி தொடர்ந்து வரும் பழ வினைகள். பழுது இல் நன்னெறி என்றது வீட்டிற்குக் காரணமான துன்பம் துடைக்கும் நெறியாகிய நாலாவது வாய்மையை. மீட்சிநெறி எனினுமாம். அமுதசுரபிபெற்றனை ஆதலால் அதனாற் செய்யத்தகும் அறவினையை நீ மேற்கொள்ளுதி என்பார் மேலே செய்யத்தகும் நல்லறம் கூறுகின்றனர் என்க.

### மக்கள் தேவர் என இரு சார்க்கும் ஒத்த முடிவின் ஓர் அறம்

### கககூ - கஉக: மக்கள்.........தானேன்

(இ - ள்.) மக்கள் தேவர் என இரு சார்க்கும் ஒத்த முடிவின் ஓர் அறம் உரைக்கேன் - நிலவுலகிற் பிறந்த மக்கட்டொகுதியும் வானுலகிற் பிறந்த தேவர் தொகுதியுமாகிய இருவகைத் தொகுதிக்கும் ஒத்ததான ஒரு முடிவையுடைய ஒப்பற்ற நல்லறம் ஒன்றனைக் கூறுவல் கேட்பாயாக!; பசிப்பிணி தீர்த்தல் என்றே அவரும் தவப்பெரும் நல் அறம் சாற்றினர் - அதுதான் யாதெனின் ஆற்றுமாக்கள் அரும்பசி களைதல் ஆகும் என்றே தீவதிலகை கூறினாற் போன்றே அவ்வறவணவடிகளாரும் அதனையே மிகப்பெரிய அறமாக அறிவுறுத்தனர்; ஆதலின் - ஆதலால்; மடுத்த தீக்கொளிய மன்னுயிர் பசி கெட - மூட்டிய தீயினாற் சுடப்படுகின்ற உயிர்கள் போன்று வருந்தும் உயிர்களின் பசித்துயர் தீரும்படி; இளங்கொடி பாத்திரம் எடுத்தனள் - மணிமேகலை ஆருயிர் மருந்தாகிய அமுதசுரபி என்னும் மாபெரும் பாத்திரத்தைத் தன் அருள் கெழுமிய கையிலேந்துவாளாயினள்; என்பதாம்.

(வி - ரை.) உடம்பொடு வாழும் உயிர்கட்கெல்லாம் உணவு இன்றியமையாமையின் பசிதீர்க்கும் அறம் மக்கள் தேவர் இருசாரார்க்கும் பொதுவாயிற்று. மக்கள் தேவர்க்கு அவிசொரிந்து வேள்வியாற்றி அரும்பசி களைகின்றனர். தேவர் மழைவளந்தந்து அரும்பசி களைகின்றனர் என்க. இவ்வாற்றால் இவ்வறம் இருசார்க்கும் ஒத்தலறிக. இனிஇதனோடு,

"சிறந்தாய்க் கீதுரைக்கலாம் சிந்தனையை முடிப்பதே
துறந்தார்க்குக் கடனுகிற் சோறலாற் பிறவேண்டா
இறந்தார்க்கு மெதிரார்க்கும் இவட்காலத் துள்ளார்வான்
பிறந்தார்க்கு மிதுவன்றிப் பிறிதொன்று சொல்லாயோ"

எனவரும் நீலகேசிச் செய்யுள் (உஅக) ஒப்பு நோக்கத்தகும்.

அவரும் என்புழி உம்மை தீவதிலகையே அன்றி அவரும் என இறந்தது தழீஇ நின்ற எச்சவும்மை.

இனி, இக்காதையை இளங்கொடி வினவிக் குறுகி மாதவன் அடியை வணங்கி ஏத்தி உரைத்தலும் கேட்டு அவரும் அறஞ்சாற்றினராதலின் இளங்கொடி எடுத்தனள் என இயைத்திடுக.

அறவணர்த் தொழுத காதை முற்றிற்று

## ௧௩. ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை

[பதின்மூன்றாவது மணிமேகலைக்கு அறவணர்
ஆபுத்திரன் திறம் கூறிய பாட்டு]

அஃதாவது: மன்னுயிர்ப் பசி கெட மணிமேகலை அமுத சுரபியைக் கையிலேந்தியமை கண்ட அறவணவடிகளார், "ஆபுத்திரன் திறம் அறவணர் தன்பால் கேள்" என்று தீவ திலகை என்னும் தெய்வம் கூறிற்று என மணிமேகலை தமக்கு அறிவித்ததனை நினைவு கூர்ந்து அத் தெய்வப் பாத்திரத்தைப பெற்ற ஆபுத்திரன் வரலாற்றை மணிமேகலைக்கு அறிவித்த செய்தியைக் கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இதன்கண் - தண்டமிழ் ஆசான் சாத்தனார் ஆபுத்திரன் பிறப்பையும் வைதிக சமயத்துப் பார்ப்பனர் அருள் சிறிதுமிலராய் வேள்விக் களத்திலே கொன்று ஊன் தின்னும் பொருட்டு நெடுநில மருங்கின் மக்கட்கெல்லாம் பிறந்த நாள் தொட்டுஞ் சிறந்த தன் தீம்பால் அறந்தரும் நெஞ்சோடு அருள் சுரந்தூட்டும் ஆவைக் கட்டி வைத்திருத்தலையும், அது கண்டு அருள் கெழுமிய உள்ளம் உடைய சிறுவனாகிய ஆபுத்திரன் அவ்வாவினைக் காப்பாற்றத் துணிந்து அப் பார்ப்பனர் அறியாவண்ணம் நள்ளிருளிலே கைப்பற்றிக் கொண்டு போதலையும், அதனைத் தேடிச் சென்ற அந்தணர் ஆபுத்திரனைத் தொடர்ந்து போய்க் கண்டு அவனைக் கோலாற் புடைத்து அவன் பிறப்பினைப் புலைச் சிறுமகன் என வாய்தந்தன கூறி வைதலையும்;

ஆபுத்திரன் அவர்தம் இருடிகள் பிறப்பு முறை கூறி எள்ளி நகைத்தலையும் பார்ப்பனர் அவனை ஊரைவிட்டுத் துரத்தி விடுதலையும் அந்தணர் சேரியில் அவன் பிச்சைப் பாத்திரத்திலே கல்லிடுகின்ற கொடுமையையும், பின்னர் ஆபுத்திரன் மிக்க செல்வத்து விளங்கியோர் வாழும் தக்கண மதுரை சென்று சிந்தா தேவியின் செழுங்கலை நியமத்து முன்றிலை இருப்பிடமாகக் கொண்டு மனைதொறுஞ் சென்று பிச்சை ஏற்றுக் கொணர்ந்து "காணார் கேளார் கான்முடப்பட்டோர், பேணுந ரில்லோர் பிணி நடுக் குற்றோர் முதலிய இன்னோரன்ன ஆற்றுமாக்கள் அரும் பசி களைந்து அவர் உண்டொழி மிச்சிலுண்டு ஓடுதலைமடுத்துக் கண் படை கொள்ளுதலையும் கற்போர் உளமுருகக் கட்டுரைத்

துள்ளனர். இக் காதை புத்தர் அறிவுறுத்த அறநெறி நிற்பான் ஒருவனுடைய வரலாறாகலின் மிகவும் சிறந்ததொரு காதையாகத் திகழ்கின்றது.

மாபெரும் பாத்திரம் மடக்கொடிக் கருளிய
ஆபுத் திரன்றிறம் அணியிழை கேளாய்
வார ணாசியோர் மறையோம் பாளன்
ஆரண உவாத்தி அபஞ்சிகன் என்போன்
பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து
கொண்டோற் பிழைத்த தண்டம் அஞ்சித்
தென்றிசைக் குமரி யாடிய வருவோள்
சூன்முதிர் பருவத்துத் துஞ்சிருள் இயவிடை
ஈன்ற குழவிக் கிரங்கா ளாகித்
தோன்றாத் துடவையின் இட்டனள் நீங்கத்
தாயில் தூவாக் குழவி துயர் கேட்டோர்
ஆவந் தணைந்தாங் கதன்றுயர் தீர
நாவால் நக்கி நன்பா லூட்டிப்
போகா தெழுநாட் புறங்காத் தோம்ப
வயனங் கோட்டிலோர் மறையோம் பாளன்
இயவிடை வருவோன் இளம்பூதி யென்போன்
குழவி யேங்கிய கூக்குரல் கேட்டுக்
கழுமிய துன்பமொடு கண்ணீ ருகுத்தாங்
காமக னல்லன் என்மகன் என்றே
காதலி தன்னொடு கைதொழு தெடுத்து
நம்பி பிறந்தான் பொலிகநங் கிளையெனத்
தம்பதிப் பெயர்ந்து தமரொடுங் கூடி
மார்பிடை முந்நூல் வனையா முன்னர்
நாவிடை நன்னூல் நன்கனம் நவிற்றி
ஓத்துடை யந்தணர்க் கொப்பவை யெல்லாம்
நாத்தொலை வின்றி நன்கனம் அறிந்தபின்
அப்பதி தன்னுளோர் அந்தணன் மனைவயின்
புக்கோன் ஆங்குப் புலைசூழ் வேள்வியில்
குரூஉத்தொடை மாலை கோட்டிடைச் சுற்றி
வெரூஉப்பகை அஞ்சி வெய்துயிர்த்துப் புலம்பிக்
கொலைநவில் வேட்டுவர் கொடுமரம் அஞ்சி
வலையிடைப் பட்ட மானே போன்றாங்
கஞ்சிநின் றழைக்கும் ஆத்துயர் கண்டு
நெஞ்சுநடுக் குற்று நெடுங்கணீ ருகுத்துக்
கள்ள வினையிற் கடுந்துயர் பாழ்பட
நள்ளிருள் கொண்டு நடக்குவன் என்னும்

உள்ளம் கரந்தாங் கொருபுடை ஒதுங்கி
அல்லிடை யாக்கொண் டப்பதி அகன்றோன்
கல்லதர் அத்தம் கடவா நின்றுழி
அடர்க்குறு மாக்களொ டந்தண ரெல்லாம்
கடந்திடை ஆவொடு கையகப் படுத்தி
ஆகொண் டித்த ஆரிடைக் கழிய
நீமகன் அல்லாய் நிகழ்ந்ததை உரையாய
புலைச்சிறு மகனே போக்கப் படுதியென்
றலைக்கோ லதனால் அறைந்தனர் கேட்ப
ஆட்டிநின் றலைக்கும் அந்தண ருவாத்தியைக்
கோட்டினில் குத்திக் குடர்புய்த் துறுத்துக்
காட்டிடை நல்ஆக் கதழ்ந்து கிளர்ந்தோட
ஆபுத் திரன்தான் ஆங்கவர்க் குரைப்போன்
நோவன செய்யன்மின் நொடிவன கேண்மின்
விடுநில மருங்கின் படுபுல் லார்ந்து
நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால்
அறந்தரு நெஞ்சோ டருள்சுரந் தூட்டும்
இதனொடு வந்த செற்றம் என்னை
முதுமறை அந்தணிர் முன்னிய துரைமோ
பொன்னணி நேமி வலங்கொள்சக் கரக்கை
மன்னுயிர் முதல்வன் மகனெமக் கருளிய
அருமறை நன்னூல் அறியா திகழ்ந்தனை
தெருமரல் உள்ளத்துச் சிறியை நீயவ்
ஆமக னதற் கொத்தனை அறியாய்
நீமகன் அல்லாய் கேளென இகழ்தலும்
ஆன்மகன் அசலன் மான்மகன் சிருங்கி
புலிமகன் விரிஞ்சி புரையோர் போற்றும்
நரிமகன் அல்லனோ கேச கம்பளன்
ஈங்கிவர் நுங்குலத் திருடி கணங்களென்
றோங்குயர் பெருஞ்சிறப் புரைத்தலு முண்டால்
ஆவொடு வந்த அழிகுலம் உண்டோ
நான்மறை மாக்கள் நன்னூ லகத்தென
ஆங்கவர் தம்முளோர் அந்தணன் உரைக்கும்
ஈங்கிவன் றன்பிறப் பியானறி குவனென
நடவை வருத்தமொடு நல்கூர் மேனியள்
வடமொழி யாட்டி மறைமுறை யெய்திக்
குமரி பாதங் கொள்கையின் வணங்கித்
தமரில் தீர்ந்த சாலியென் போள்தனை
யாது நின்னூர் ஈங்கென் வரவென

மாமறை யாட்டி வருதிறம் உரைக்கும்
வார ணாசியோர் மாமறை முதல்வன்
ஆரண உவாத்தி யரும்பெறல் மனைவியான்
பார்ப்பார்க் கொவ்வாப் பண்பின் ஒழுகிக்
காப்புக் கடைகழிந்து கணவனை *யிழந்தேன்
எறிபயம் உடைமையின் இரியல் மாக்களொடு
தெற்கண் குரி யாடிய வருவேன்
பொற்றேர்ச் செழியன் கொற்கையம் பேரூர்க்
காவதங் கடந்து கோவலர் இருக்கையின்
ஈன்ற குழவிக் கிரங்கே னாகித்
தோன்றாத் துடவையின் இட்டனன் போந்தேன்
செல்கதி யுண்டோ தீவினை யேற்கென்
றல்லலுற் றழுத அவள்மகன் ஈங்கிவன்
சொல்லுதல் தேற்றேன் சொற்பயம் இன்மையின்
புல்லவோம் பன்மின் புலைமகன் இவனென
ஆபுத் திரன்பின் பமர்நகை செய்து
மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ
முதுமறை முதல்வன் முன்னர்த் தோன்றிய
கடவுட் கணிகை காதலஞ் சிறுவர்
அருமறை முதல்வர் அந்தணர் இருவரும்
புரிநூன் மார்பீர் பொய்யுரை யாமோ
சாலிக் குண்டோ தவறென வுரைத்து
நான்மறை மாக்களை நகுவனன் நிற்ப
ஓதல் அந்தணர்க் கொவ்வான் என்றே
தாதை பூதியுந் தன்மனை கடிதர
ஆகவர் கள்வனென் றந்தணர் உறைதரும்
கிராம மெங்கணுங் கடிஞையிற் கல்லிட
மிக்க செல்வத்து விளங்கியோர் வாழும்
தக்கண மதுரை தான்சென் றெய்திச்
சிந்தா விளக்கின் செழுங்கலை நியமத்
தந்தின் முன்றில் அம்பலப் பீடிகைத்
தங்கினன் வதிந்தத் தக்கணப் பேரூர்
ஐயக் கடிஞை கையின் ஏந்தி
மையறு சிறப்பின் மனைதொறு மறுகிக்
காணார் கேளார் கால்முடப் பட்டோர்
பேணுந ரில்லோர் பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருகவென் றிசைத்துட னூட்டி
உண்டொழி மிச்சிலுண் டோடுதலை மடுத்துக்
கண்படை கொள்ளுங் காவலன் றானென்.

———

* (பாடம்) இகழ்ந்தேன்.

## ௧௬. ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை

### உரை

### ஆபுத்திரன் தோற்றம்

#### ௧ - ௧௦ : மாபெரும்.........நீங்க

(இ - ள்.) அணி இழை மா பெரும் பாத்திரம் மடக்கொடிக்கு அருளிய ஆபுத்திரன் திறம் கேளாய் - மகளிர்க்கெல்லாம் அணிகலனாகத் திகழுகின்ற மணிமேகலாய்! நீ ஏந்திய மாபெருஞ் சிறப்புடைய இவ்வமுதசுரபியை நினக்கு வழங்கிய ஆபுத்திரன் என்னும் அவ்வறவோனுடைய வரலாறும் பண்பாடு மாகிய இயல்பெலாம் கூறுவேன் கேட்பாயாக!; வாரணசி ஓர் மறை ஓம்பாளன் ஆரண உவாத்தி அபஞ்சிகன் என்போன் - வாரணசி என்னும் மூதூரில் மறை நூல்களைப் பிறர்க்கு ஓதுவிக்குமாற்றால் அவை இறந்துபடாமல் காத்தற்றொழிலை மேற்கொண்ட மறை நூலாசிரியன் அபஞ்சிகன் என்னும் பெயருடையான் ஒரு பார்ப்பனன் இருந்தனன்; பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து கொண்டோன் பிழைத்த தண்டம் அஞ்சி - அவன் மனைவியாகிய சாலி என்பவள் தனது கற்பென்னும் திட்பத்தைத் தன் நிறையுடைமையாற் காக்கும் காவலின் எல்லையைக் கடந்து ஒழுகுமாற்றால், தன் கணவனுக்குப் பொருந்தாதவளாய்ப் பிழை செய்து விட்டமையாலுண்டாகும் தண்டனைக்கு அஞ்சி அதற்குக் கழுவாயாக; தென் திசைக்குமரி ஆடிய வருவோள் - தென் திசையின் கண்ணதாகிய கன்னியாகுமரித் துறையில் நீராடுதற் பொருட்டு வருபவள்; சூல் முதிர் பருவத்துத் துஞ்சு இருள் இயவு இடை - தான் எய்தியிருந்த சூலானது முதிர்ந்த பருவத்திலே ஊர் மக்கள் துயிலுதற் இயன்ற நள்ளிருள் யாமத்திலே தான் செல்லும் வழியிலே கருவுயிர்த்து; ஈன்ற குழவிக்கு இரங்காளாகி - பழியஞ்சித் தான் ஈன்ற மகவிற்கும் இரங்காதவளாய்; தோன்றாத் துடவையின் இட்டனள் நீங்க - பிறர் பார்வைக்குக் காணப்படாத மறைவிடமானதொரு தோட்டத்தினூடே அம் மகனைப் போகட்டுப் போக என்க.

(வி - ம்.) மணிமேகலை "ஆபுத்திரன் திறம் அறவணன் றன்பாற் கேள்" என்று தீவதிலகை கூறிற்றென்பதை ஞாபகவேதுவாகக்கொண்டு ஈண்டு அறவணர் "ஆபுத்திரன் திறம் கேள்" என்று கூறத் தொடங்கு

நின்றார் என்க. மடக்கொடிக்கு என்றது உனக்கு என்னும் துணையாய் நின்றது. வாரணாசி-ஓர் ஊர், (காசி). மறை எழுதாக்கிளவியாதலின் பிறர்க்கு ஓதுவித்து அஃது இறந்து படாமற் காப்பவன் (உபாத்தி) என்பார் மறை ஓம்பாளன் என்றார். ஆரணம் - மறை. பார்ப்பனி என்பது சாதியைக் குறியாமல் மனைவி என்னும் பொருட்டாய் நின்றது. பார்ப்பனரில் பார்ப்பான் கணவன் என்னும் பொருளினும் பார்ப்பனி மனைவி என்னும் பொருளினும் வழங்கும். இதனை என் கணவனும் மாற்றாளும் என்னும் பொருளில் "பார்ப்பானொடு மனையாள் என்மேற் படாதன இட்டு ஏற்பன கூறார்" எனவரும் மாலதி கூற்றானுமறிக. (சிலப் - கூ : எ - அ). இந்நூலினும், 'பார்ப்பான்றன்னொடு கண்ணிழந் திருந்த இத்தீத்தொழிலாட்டி" எனவரும் கோதமை கூற்றினும் அஃதப் பொருட்டாதலறிக. (சு - கநஉ - ந.)

காப்பு - கற்புக்காப்பு. கடைகழிதலாவது எல்லை கடந்து ஒழுகுதல். தண்டம் - நரகத்திலுண்டாகும் துன்பம். குமரி-கன்னியா குமரி. ஆடிய-ஆட. பருவத்து என்றது பருவம் வந்துற்றபொழுது என்றவாறு. ஈன்ற குழவிக்கு இரங்காளாகி என்றது, பழிக்கஞ்சி ஈன்ற குழவிக்கும் இரங்காளாகி என்பதுபட நின்றது. பிறர் பார்வைக்குத் தோன்றாத்துடவை என்க. துடவை - தோட்டம்.

## அக் குழவியை ஆகாத்தோம்பலும் இளம்பூதி என்னும் அந்தணன் எடுத்துப் போதலும்

### கக - உ0 : தாயில்.........எடுத்து

(இ - ள்.) **தாய் இல் தூவாக் குழவித் துயர் கேட்டு** - தாயில்லாமையாலே பாலுண்ணாத அக் குழவி ஒழியாது கூப்பிடு கின்ற துயரமான அழுகை யொலியைச் செவியுற்று; **ஓர் ஆ வந்து அணைந்து ஆங்கு அதன் துயர்தீர நாவான் நக்கி**-ஒரு கறவைப் பசு வந்து அவ்விடத்தே அக் குழவியின் துன்பந் தீரும்படி தனது நாவினாலே நக்கியும்; **நல் பால் ஊட்டி** - நல்ல பாலை அதன் வாயிற் பிலிற்றி ஊட்டியும்; **எழு நாள் போகாது புறங்காத்து ஓம்ப** - ஏழு நாள் காறும் அதற்குப் புறம் போகாமல் அயலிலே நின்று பாதுகாவா நிற்ப; **வயனங்கோட்டில் ஓர் மறை ஓம்பாளன்** – வயனங்கோடு என்னும் ஊரில் உறையும் ஒரு பார்ப்பனன்; **இவவு இடை வருவோன்** - அத் தோட்டத் தயலிலே கிடந்த வழி மேலே வருபவனும்; **இளம்பூதி என்போன்** - இளம்பூதி என்னும் பெயரையுடையவனும் ஆகிய அவ் வந்தணன்; **குழவி ஏங்கிய கூக்குரல் கேட்டு துன்பமொடு கழுமிய கண்ணீர் உகுத்து** - அக் குழவி ஏங்கி அழுத கூக்குரலைக் கேட்டுத் துன்பத்தோடு கலந்த கண்ணீரைச் சொரிந்து; **ஆங்கு ஆமகன் அல்லன் என் மகன் என்றே** - ஆங்குக் காணப்பட்ட ஆவின் மகனல்லன், இனி இவன் என் மகனே ஆவான் என்று

சொல்லி; காதலி தன்னொடு கைதொழுது எடுத்து - தன்னுடன் வந்த தன் மனைவியோடே அணுகிக் கடவுளை நினைந்து கை கூப்பித் தொழுது அன்புடன் அம் மகனை எடுத்துக் கொண்டு; என்க.

(வி - ம்.) தாயில்லாமையால் பாலுண்ணாத குழவி என்க. அதன் துயர் - அக் குழவியின் பசித்துயர். வயனங்கோடு - ஓர் ஊர். இயவு - வழி. துன்பமொடு கழுமிய கண்ணீர் என மாறுக. இஃது அன்பு என்னும் மெய்ப்பாடு. ஆமகன் அல்லன் என் மகன் என்றே காதலி தன்னொடு கைதொழுதெடுத்து என்னப் பாட்டிடைவைத்த குறிப்பால் இவர்கள் மகப்பேறில்லாதவர் என்பதும், இறைவனே இம் மகவினை அருளினன் என்று மகிழ்ந்து எடுத்துப் போயினர் என்பதும் பெற்றும். மேல் வருவனவும் இக் கருத்தை வலியுறுத்தல் காணலாம்.

## இளம்பூதியும் மனைவியும் அக் குழவியைப் பேணி வளர்த்தல்

### உக - உசு : நம்பி..........அறிந்தபின்

(இ - ள்.) நம்பி பிறந்தான் நம் கிளை பொலிக என - மகப்பேறில்லாத நமக்கு இறைவனருளாலே ஆண் மக்களுள் சிறந்த நம்பி பிறந்தனன் இவன் வழியாக நம் மரபு இனி வழி வழிச் சிறந்து பொலிவதாக என்று பெரிதும் மகிழ்ந்து; தம் பதிப் பெயர்ந்து தமரொடும் கூடி - தம்மூர்க்குப் போய்த் தம் சுற்றத்தாரோடு கூடி; மார்பிடை முந்நூல் வனையா முன்னர் - அம் மகவின் மார்பிலே பூணுநூல் புனைவதற்கு முன்னரே; நாவிடை நன்னூல் நன்கனம் நவிற்றி - நாவிடத்திலே நன்மை தரும் மெய்ந்நூற் பயிற்சியை நன்றாகச் செய்வித்து, ஓத்து உடை அந்தணர்க்கு ஒப்பவை எல்லாம் - மறை நூலையுடைய அந்தணர்க்குப் பொருந்திய கலைகள் அனைத்தையும்; நாத்தொலைவு இன்றி - நாவினாலே பிறர்க்குத் தோல்வியுறாத வண்ணம்; நன்கனம் அறிந்தபின் - அவன் நன்றாகக் கற்றுத் தெளிந்த பின்னர் என்க.

(வி - ம்.) கிளை - மரபு. முந்நூல் - பூணுநூல். நன்னூல் - மறைகளும் உறுப்பு நூல்களும். நாவினல் பிறர்க்குத் தோலாதவாறு கற்றறிந்தபின் என்க. இத்தகைய இவனுடைய தோலாத நாவன்மையை இக் காதையிலேயே சுரு ஆம் அடி முதலாக சுகூ அடியீருகவும், கூரு ஆம்அடி தொடங்கி கூஅ ஆம் அடியீருகவும் வருகின்ற இவ்வாபுத்திரன் கூற்ருல் நன்குணரலாம்.

இனி, அந்தணர்க்கு ஒப்பவை எல்லாம் நாத்தொலைவின்றி நன்கனம் அறிந்தபின் என்றமையால் ஓத்துக்களில் அந்தணர்க்கு ஒவ்வாதனவும் பலவுளவாக அவற்றை யெல்லாம் ஓதாமல் அந்தணர்க்கு ஒத்தவற்றையே நன்கு பயின்ருன் ஒவ்வாதனவற்றை நாத்தொலைவில்லாமைக்கே அறிந்தான் எனவும் நுண்ணிதிற் பொருள் காண்க. இனி,

"அந்தணர் என்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்" (௩0)

எனவரும் அருமைத் திருக்குறளானே அந்தணர் இயல்பும் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுவார்க்குப் பொருந்தாதன சாலப்பல வேதத்துள் இருத்தலும் அறிக.

## ஓதலந்தணர்க்கு ஒவ்வா வொழுக்கமும் ஆபுத்திரன்றன் அருள்மிகு செயலும்

உஎ - ௩எ : அப்பதி..........கரந்தாங்கு

(இ - ள்.) அப்பதி தன்னுள் ஓர் அந்தணன் மனைவயின் புக்கோன் — ஒரு நாள் ஆபுத்திரன் வயனங்கோடு என்னும் அவ்வூரின்கண் தான் வாழும் பார்ப்பனச் சேரியின்கண் தனக்கியன்ற ஏது நிகழ்ச்சி காரணமாக ஒரு பார்ப்பனன் இல்லிற் புகுந்தவன்; ஆங்குப் புலைசூழ் வேள்வியில் குரூஉத் தொடைமாலை கோட்டிடை சுற்றி வெரூஉப் பகை அஞ்சி வெய்து உயிர்த்துப் புலம்பி - அவ்விடத்தே அப் பார்ப்பனர்கள் தாம் மறு நாள் ஊன் தின்றற்கு ஏதுவாக வேள்வி செய்வதாக ஒரு சூழ்ச்சி செய்து நிகழ்த்தும் வேள்விக் களத்திலே கொன்று தின்பதற்காக நிறமிக்க மலர்மாலை தனது கொம்பின்கண் சுற்றப்பட்டுத் தன்னைக் கொல்பவரும், தான் பெரிதும் அஞ்சுதற்குக் காரணமாகியவரும் கொடிய பகைவருமாகிய அப் பார்ப்பனர்க்குப் பெரிதும் அஞ்சி உய்தி காணாமல் வெய்தாக மூச்செறிந்து வருந்தி; கொலை நவில் வேட்டுவர் கொடுமரம் அஞ்சி வலை இடைப்பட்ட மானே போன்று - கொலைத் தொழிலையே மிகுதியாகச் செய்கின்ற வேடர் வில்லிற்கு அஞ்சி ஓடிப் போய் அவர் வளைத்த வலையில் அகப்பட்டுக் கொண்ட மான் போல; அஞ்சி நின்று அழைக்கும் அத்துயர் கண்டு - அஞ்சி அவராற் கட்டப்பட்ட வேள்வித்தூண் மருங்கே நின்று அம்மா! அம்மா! என்று இடையறாது கதறி அழைக்கின்ற ஓர் ஆவினது துன்ப நிலையைக் கண்டு; நெஞ்சு நடுக்குற்று - தனது அருளுடைய நெஞ்சம் நடுங்கி; நெடுங்கண் நீர் உகுத்து - நெடிய தன் கண்ணால் துன்பக் கண்ணீர் சொரிந்து; கள்ள வினையால் கடுந்துயர் பாழ்பட நள் இருள் கொண்டு நடக்குவன் என்னும் உள்ளம் கரந்து - இவ்வாவினை இப் பார்ப்பனர் அறியா வண்ணம் களவாடிப் போகுமொரு செயலாலே இதனுடைய கொடிய துன்பம் இல்லையாம்படி இதனை இற்றை நாள் நள்ளிரவின் இருளிலே யான் கைப்பற்றிச் சென்று உய்விப்பேன் என்னும் கருத்துடையவனும் அக் கருத்தைப் பிறர் அறியா வண்ணம் மறைத்துக் கொண்டு; என்க.

(வி - ம்.) புக்கோன் என்றது ஏது நிகழ்ச்சி எதிர்ந்துள காரணத்தால், தானே சென்று புகுந்தவன் என்பதுபட நின்றது. அந்தணன் என்றது இகழ்ச்சி; என்னை? அந்தணர்க்கொவ்வாப் புலைசூழ் வேள்வி செய்யத் தலைப்பட்டவன் ஆதலின் என்க. புலை சூழ்தலாவது புலால் உண்ணும் புன்மையைக் கடவுள் வழிபாடு போலக் காட்டி மறைத்தல். அதன் புன்மை தெரித்தோதுவார் புலை சூழ் வேள்வி எனத் தகுதியான அடைமொழி புணர்த்தார். குரூஉ-நிறம். வேள்விக்களத்திற் கொல்லும் உயிரினங்கட்கு மாலை சூட்டித் தூப முதலியன காட்டுதல் மரபு. அம் மரபுப்படி மாலைசூட்டி வேள்வித்தூணிற் கட்டப்பட்டுப் பார்ப்பனரைக் காணுந்தோறும் அஞ்சி அஞ்சிக் கதறுகின்ற ஆ எனவும் வலையிடைப் பட்ட மான் போன்று அஞ்சி அழைக்கும் ஆ எனவும் தனித்தனி கூட்டுக.

பகை என்றது பார்ப்பனரை. புலம்பி-வருந்தி. நவிலுதல்-மிகுதியாகச் செய்தல்.

கள்ளவினை-களவு செய்தல். ஆபுத்திரன் சிறுவன் ஆதலானும் அந்த ஆவினைக் காப்பாற்றுதற்கு வேறு வழி காணாமையானும் இதனைக் கள்ள வினை செய்தேனும் காப்பாற்றுவல் என்று துணிந்தனன்.

இனி, பிறர் உடைமையா யிருப்பதியாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக் கொள்ளக் கருதும் கருத்தன்றோ களவென்னும் காரறிவாண்மை; இச் செயல் தீவினையே ஆகும். ஆவின் துயர்களைதல் நல்வினையே ஆயினும் அந் நல்வினையின் பொருட்டு ஒரு தீவினை செய்தல் அறவோர்க்கு ஆகாதாம் பிறவெனின்; அற்றன்று, அதற்கு விடையாகக் கீழே வருகின்ற இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் கூறும் நுண்ணுரையைக் கூர்ந்து நோக்குக. அஃதாவது,

'களவு என்னுஞ் சொற்கேட்டுக் களவு தீதென்பதூஉம், காமம் என்னுஞ் சொற் கேட்டுக் காமம் தீதென்பதூஉம் அன்று; மற்று அவை நல்ல ஆமாறும் உண்டு; என்னை? ஒரு பெண்டாட்டி தமரொடு கலாய்த்து நஞ்சுண்டு சாவல் என்னும் உள்ளத்தளாய் நஞ்சு கூட்டி வைத்து விலக்குவாரை இல்லாத போழ்து உண்பல் என்று நின்றவிடத்து, அருள் உடையான் ஒருவன் அதனைக் கண்டு, இவள் இதனை உண்டு சாகாமல் கொண்டு போய் உகுப்பல் என்று அவளைக் காணுமே கொண்டுபோய் உகுத்திட்டான். அவளும் சனநீக்கத்துக்கண் நஞ்சுண்டு சாவான் சென்றாள்; அது காணாளாய்ச் சாக்காடு நீங்கினாள். அவன் அக்களவினான் அவளை உய்யக்கொண்டமையின் நல்லூழிற் செல்லும் என்பது. மற்றும் இது போல்வன களவாகா, நன்மை பயக்கும் என்பது''

எனவரும். இவர் காட்டும் இவ்வமைதி ஈண்டும் நன்கு பொருந்துதல் உணர்ந்து கொள்க. (இறையனார் களவியல் சூத்திரம் க. உரை)

## பார்ப்பனர் ஆபுத்திரனைத் தொடர்ந்து போய் அலைத்தலும் ஆவின் செயலும்

௬எ - ௬௮: ஆங்கொரு.........கிளர்ந்தோட

(இ - ள்.) ஆங்கு ஒரு புடை ஒதுங்கி அல் இடை ஆக் கொண்டு அப்பதி அகன்றோன் கல் அதர் அத்தம் கடவா

நின்றுழி - அவ் வேள்விக் களத்தின் பக்கத்திலேயே ஓரிடத்தே பிறர் தன்னை அறியாவண்ணம் ஒதுங்கி இருந்து அற்றை நாள் இரவின் இடையாமத்தே அவ்வாவினைக் கைப்பற்றிக் கொண்டு அவ்வூரை விட்டுப் போகின்றவன், அதனோடு பருக்கைக் கற்களை யுடைய அருவழியிலே செல்லும் பொழுது; அந்தணர் எல்லாம் அடர்க்குறு மாக்களொடு கடத்திடை ஆவொடு கையகப் படுத்தி - அப் புலைசூழ் வேள்வி நிகழ்த்தும் அறவோராகிய பார்ப்பனமாக்கள் எல்லாம் தமக்கு வேண்டிய கூட்டமான சிற்றினமாக்களோடு விரைந்து சென்று அவ் வருநெறியின் கண்ணே செல்கின்ற ஆபுத்திரனை அவன் கைப்பற்றிச் செல்லும் ஆவினோடு ஒரு சேர வளைத்துக் கொண்டு; ஆ கொண்டு ஆர் இடை கழிய நீ மகன் அல்லாய் - ஏடா வேள்விப் பசுவைக் களவாடிக் கொண்டு இவ்வாறு அருநெறியிலே போதற்கு நீ கீழ் மகன் அல்லையே! இளம்பூதியின் மகனாகிய நீ இவ்வாறு செய்தற்கு; நிகழ்ந்தது உரையாய் - காரணமாய் உனக்கு வந்தது யாது? அதனைச் சொல்!; புலைச் சிறுமகனே போக்கப் படுதி - புலையன் சிறு மகனே! சொல்லாயேல் இப்பொழுதே எங்களால் உயிர் போக்கப் படுவாய்! சொல்! என்று சொல்லி; அலைக்கோல் அதனால் அறைந்தனர் கேட்ப - பிறரை அடித்து அலைக்கும் கைக் கோலாலே பலரும் புடைத்து வினவாநிற்ப; நல் ஆ - அது கண்டு நல்ல அந்தப் பசுவானது; நின்று ஆட்டி அலைக்கும் அந்தணர் உவாத்தியை - அங்ஙனம் அலைப்பவருள் தலைவனாக நின்று ஆபுத்திரனை மிகவும் வருத்துகின்ற அப் பார்ப்பனர் உவாத்தி யாயனை; கோட்டினில் குத்திக் குடர் புய்த்து - தன் கொம்பி னாலே வயிற்றிலே குத்திக் குடரை அறுத்துச் சரித்துவிட்டு; கதழ்ந்து கிளர்ந்து காட்டிடை ஓட - விரைந்து துள்ளிக் கொண்டு காட்டினூடே புகுந்து ஓடி மறைய என்க.

(வி - ம்.) ஆங்கு - அவ் வேள்விக் களத்தின். அல் - இரவு. பதி - வயனங்கோடு. கடம் - அருநெறி. 'நீசமகன்' என்றும் பாடம். நீ மேலோ னாகிய இளம்பூதி மகனாயிருந்தும் கீழ் மகன் செய்வது செய்தாய் அதற்குக் காரணம் சொல். நிகழ்ந்தது ஈண்டுக் காரணமாக நிகழ்ந்தது என்பது படநின்றது. ஐகாரம்: அசை.

புலைச்சிறுமகன் என்றது புலையன் மகனே என்று வைதபடியாம். சொல்லாயாயின் உயிர் போக்கப்படுதி என்று அச்சுறுத்தியவாறு. அலைக்கோல் - அடிக்கும் கோல். நின்று ஆட்டி அலைக்கும் உவாத்தி என்று மாறுக.

புய்த்தல் ஈண்டு அறுத்தல். அதன் செயல் நன்றி பேணியதாக முடிதலின் நல்லா என்றார். கிளர்தல் - துள்ளுதல்.

ஆபுத்திரன் அப் பார்ப்பனருக்கு அறிவுரை கூறுதல்

சசூ - ருசு : ஆபுத்திரன்..........உரைமோ

(இ - ள்.) ஆபுத்திரன்ருன் ஆங்கு அவர்க்கு உரைப்போன்- அது கண்ட ஆபுத்திரன்ருனும் அப்பொழுது அப் பார்ப்பனர்க்கு நல்லறிவு கூறுபவன்; முதுமறை அந்தணிர் - மிகவும் பழைய மறை நாலுக்குரியவர் ஆகின்ற அருளுடைய அந்தணர்களே!; நோவன செய்யன்மின் - பிறவுயிர்கள் துன்புறுதற்கின்ற தீய செயல்களைச் செய்யாதே ஒழியுங்கோள்!; நொடிவன கேண்மின் - யான் கூறுமிவற்றைக் கேளுங்கள்!; விடுநிலம் மருங்கின் படுபுல் ஆர்ந்து - மக்கள் பயிர் செய்யாது கைவிட்ட நிலத்திலே தாமே தோன்றுகின்ற புற்களை மேய்ந்து தன்னை ஓம்பிக் கொண்டு அப்பாலும்; மக்கட்கு எல்லாம் பிறந்த நாள் தொட்டும் சிறந்த தன் தீம்பால் - உலகிலே வாழும் நம் போன்ற மாந்தர் அனைவருக்கும் அவரவர் பிறந்தநாள் தொடங்கி அவர் வாழும் நாள்காறும் அவர் உணவினுள் தலைசிறந்த உணவாகிய தனது பருகற்கினிய பாலை; அறம் தரும் நெஞ்சோடு அருள் சிறந்து ஊட்டும்-அறம் என்பது இஃதே என்று நம்மனோர்க்கெல்லாம் காட்டித் தருமொரு நன்னர் நெஞ்சத்தோடு அருளோடு தானே சுரந்து நம்மைப் பருகச் செய்யும்; இதனோடு - இந்தப் பசுவினிடத்தே; வந்த செற்றம் என்னை - நுமக்குண்டான பழம் பகைதான் யாது?; முன்னியது உரைம் - இப்பசுவைக் கொன்றொழிப்பதற்கு நீங்கள் நினைத்ததற்குக் காரணம் கூறுங் கோள்! என்ருன் என்க.

(வி - ம்.) நொடிவன-கூறுவன. விடுநிலம் - மாந்தர் பயிர் செய்யாமல் விடப்பட்ட நிலம். படுபுல்-தாமே தோன்றும் புல், என்றது ஆவிற்கு யாம் உணவிட வேண்டா என்றவாறு. பிறந்த நாள் என்றது மக்கள் பிறந்த நாளை. மக்கள் பிறந்த நாள் தொட்டும் என்றவும்மை சிறப்பு. இறக்கு நாள்காறும் பால் உணவு கோடல் கூற வேண்டா என்பது தோன்ற, பிறக்கு நாள் தொட்டும் என்றொழிந்தான். பாலினும் சிறந்த வுணவின்மையால் சிறந்தபால் என்ருன். தானும் தன்னுடம்பைப் பிறர் உதவியின்றிப் பேணிக் கொண்டு தன் பாலாலே பிறரை ஊட்டும் இச் செயல் முழுதும் அறமே ஆதலின் ஆக்கள் நெஞ்சம் அறத்தை மக்கட்குக் காட்டும் நெஞ்சம் என்று பாராட்டினன். இதனொடும் என்றது இத்தகைய அறத்தின் றிருவுருவாகிய இந்த ஆவோடும் என்பது பட நின்றது. முதுமறை அந்தணிர் என்றது இகழ்ச்சி. உரையும் என்னும் ஏவற்பன்மை ஈற்றுயிரும் மெய்யும் கெட்டு ஓகாரம் பெற்று முடிந்தது. நிகழ்ந்தது உரையாய் என்ருர்க்கு, முன்னியது உரைமோ என்று மறுமொழி தந்தவாறு. முன்னியது கொலை செய்தலே ஆதலின், அக் கொலையினின்றும் உய்யக் கொள்ளும் அருளே என் செயற்குக் காரணம் என இதனால் அவர் வினவிற்கு விடையிறுத்தானுதலும் உணர்க. என்ருன் என ஒரு சொல் பெய்க.

## பார்ப்பனர் ஆபுத்திரனை இகழ்தல்

### ருஎ - கூஉ : பொன்.........இகழ்தலும்

(இ - ள்.) பொன் அணி வலங் கொள் நேமி சக்கரக்கை மன் உயிர் முதல்வன் மகன் எமக்கு அருளிய அருமறை நல் நூல் அறியாது இகழ்ந்தனை - ஏடா! திருமகளை மார்பில் அணிந்திருக்கின்றவனும், அசுரர்களை வெற்றி கொள்ளுதற்கியன்ற நேமி என்னும் சக்கரப்படையை ஏந்திய கையையுடையவனும், நிலையுதலுடைய உயிர்கள் தோன்றுதற்குக் காரணமானவனும் ஆகிய திருமாலின் மகனாகிய நான்முகன் பார்ப்பனராகிய எமக்கே சிறந்துரிமை யுடையனவாம்படி ஓதியருளிய அறிதற்கரிய எம்முடைய நல்ல மறை நூல்களின் அருமை பெருமைகளை அறியாமையாலே எம்முடைய வேள்வித் தொழிலை நீ குறிப்பாக இகழ்ந்து கூறுகின்றாய்; தெருமரல் உள்ளத்துச் சிறுமை நீ ஆமகன் ஆதற்கு ஒத்தனை கேள் - நிலையின்றிச் சுழலும் நெஞ்சத்தையுடைய சிறியோனாகிய நின் பெயராகிய 'ஆபுத்திரன்' என்பதற்கு மிகவும் பொருத்தமாகவே இருக்கின்றனை, எற்றுலெனின் கேள்; அறியா நீ - அந்தணராகிய எம்மியல்பறியாத மடவோனே; நீ மகன் அல்லாய் - நீ தானும் மக்கட் பிறப்பினை யுடையாயும் அல்லை! ஏடா நீ விலங்குப் பிறப்பினை என்பதில் ஐயமில்லை என்று அவன் பிறப்பைப் பற்றி; இகழ்தலும் - இகழாநிற்றலும் என்க.

(வி - ம்.) நேமிச்சக்கரம் எனக் கூட்டி இரு பெயரொட்டாகக் கொள்க. முதல்வன்-காரணன். திருமால் தானே உயிரும் உலகுமாய் விரிகின்றான் என்பது வைணவசித்தாந்தம் ஆதலின் அஃது அப் பொருட்டாயிற்று. இதனை,

> "......இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும்
> ஏமமார்ந்த நிற்பிரிந்தும்
> மேவல்சான்றன எல்லாம்
> சேவல் (கருடன்) ஓங்கு உயர்கொடி யோயே'

எனவரும் பரிபாடலானும் (௪ : ௬௩-௫) உணர்க. அல்லதூஉம்,

> "மம யோனிர் மஹத்ப்ரஹ்ம ததமின்கர்ப்பம் ததாம்யகம் |
> ஸம்ப்பவ: ஸர்வபூதானும் ததோபவதி பாரத ||

எனவும்,

> "ஸர்வயோனிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்ப்பவந்தியா:
> தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோனிரஹம் பீஜப்ரத: பிதா |

எனவும் வரும் பகவத்கீதையானும் உணர்க. (குணத்ரய. சுலோ ௩-௪)

மகன் - நான்முகன். அருமறை நன்னூல் - வேதநூல். தெருமரல்- சுழற்சி. சிறியை-சிறுமையுடையை. என்றது, ஆறறிவுடையையல்லை ஐயறிவே உடையை என்றவாறு. ஐந்தறிவேயுடைமையின் ஆமகன் ஆதற்கு ஒத்தனை என்றிகழ்ந்த படியாம். ''மாவும் மாக்களும் ஐயறி வுயிரே'' என்னும் தொல்காப்பியமும் நினைக. நீ மகனல்லாய் என்றது விலங்கே என்னும் அவர் கருத்தை வலியுறுத்தற் பொருட்டு. ''தக்க இன்ன தகாதன இன்னவென்று ஒக்க உன்னலராயின் உயர்ந்துள மக்களும் விலங்கே'' என நிகழும், கம்பநாடர் வாக்கும் (வாலி-௧௧௨) ஈண்டு ஒப்பு நோக்கத்தகும்.

## ஆபுத்திரன் பார்ப்பனர் பிறப்பு முறை கூறிப் பழித்தல்

### ௬௫ - ௬௬: ஆன்மகன்.........அகத்தேன

(இ - ள்.) நான் மறை மாக்கள்-அது கேட்ட (ஆபுத்திரன்,) நான்கு மறைகளையும் உடைய மாக்களே கேளுங்கோள்!; அசலன் ஆன் மகன் சிருங்கி மான் மகன் விரிஞ்சி புலிமகன்- அசல முனிவன் ஆவின் வயிற்றிற் பிறந்தவன் என்றும், சிருங்கி முனிவன் மான் வயிற்றில் பிறந்தவன் என்றும் விரிஞ்சி முனிவன் புலி வயிற்றில் பிறந்தவன் என்றும் நீவிரே கூறுவிரே இவர் நிற்க; புரையோர் போற்றும் கேச கம்பளன் நரி மகன் அல்லனோ - நுங்களில் உயர்ந்தோராற் போற்றிப் புகழப்படுகின்ற கேசகம்பள முனிவன் விலங்குகளுள் வைத்து இழிகுணமுடைய நரி வயிற்றிற் பிறந்தவன் என்பீரே அவன் அங்ஙனம் பிறந்தவன் அல்லன் என்னவும் துணிவீரோ?; ஈங்கு இவர் நும் குலத்து இருடிகணங்கள் என்று - இங்கு யான் எடுத்துக் கூறிய இவரை எல்லாம் நீவிர் நுங்குலத்தைச் சேர்ந்த அறவோர் கூட்டத்தினர் என்று சொல்லி; ஓங்குயர் பெருஞ்சிறப்பு உரைத்தலும் உண்டால்-மிக மிக உயர்ந்த பெரிய சிறப்புடையராகப் புகழ்ந்து கூறுவதும் உண்டன்றோ!; ஆவொடு வந்த - ஆவோடு தொடர்புடையதாகி வந்ததனால்; அழிகுலம் நன்னூலகத்து உண்டோ- இழிந்த குலமாம் என்று நுங்கள் நான்மறைகளினூடே எங்கேனும் ஓதிக்கிடக்க நீயிர் கண்டதுண்டேயோ!; என-என்று அவரைத் திறம்படப் பழித்துக் கூறுநிற்ப என்க.

(வி - ம்.) அசலன் ஆன்மகன் என்றும் இங்ஙனமே பிறவற்றையும் மாறுக. அசலமுனிவன் முதலிய நுங்குல முதல்வர் பலர் விலங்கின மக்கள் என்று நும் நன்னூலே கூறுகின்றன; அவரை நீயிரும் வானளாவப் புகழ்தலும் புகழ்கின்றீர். அறந்தரும் நெஞ்சத்து அருள் சுரந்தூட்டும் ஆமகன் ஆயினல் என்ன கெட்டுப் போயிற்று. இழிந்த நரிமகனும்கூட ஒருவன் உங்கள் குலத்துள்ளானல்லனே அவனை மிகவும் புகழ்வீரே! உங்கள் மறை நூலில் ஆமகன் இழிகுலத்தான் என்று கூறியிருப்பதாகவும் தெரிந்திலது என்று ஈண்டு நாத்தொலைவில்லாத அந்நல்லோன் திறம்படச் சொல்லம்பு தொடுத்தல் கண்டு மகிழ்க. நீங்கள்

கற்ற நூலும் மெய்ந்நூலன்றென்றும் நீவிரும் மக்கள் அல்லீர் என்றும் ஒருசேரப் பழிப்பான், 'நான்மறை மாக்காள்' என்றும், 'நன்னூல்' என்றும் திறம்பட எடுத்தோதினன்; இவை இகழ்ச்சி. **"தம்மையிகழ் வாரைத் தாமவரின் முன்னிகழ்க!"** எனவரும் (நாலடி) சான்றோர் வாக்கிற்கும்,

"பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளும்
திறன்றெரிந்து கூறப் படும்" (கஅசு)

என நிகழும் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் திருவாக்கிற்கும் இதனினும் காட்டில் சிறந்த எடுத்துக்காட்டு வேறெந்த இலக்கியத் தினும் காண்டலரிது.

இருடி கணம் - துறவோர் கூட்டம்.

## ஓரந்தணன் ஆபுத்திரன் வரலாறு கூறி இகழ்தல்

## ௭௦ - அக : ஆங்கவர்.........இழந்தேன்

**(இ - ள்.)** ஆங்கு அவர் தம்முள் ஓர் அந்தணன்-அவ்வாறு ஆபுத்திரன் தன் சொல்லாலே சுடப்பட்ட பார்ப்பனர்களுள் வைத்து ஒரு பார்ப்பனன்; உரைக்கும்-ஏனைய பார்ப்பனர்க்குக் கூறு வான்; ஈங்கு இவன் பிறப்பு யான் அறிகுவன் என - ஈங்குள் ளாருள் வைத்து இவ்வாபுத்திரன் பிறப்பினை யான் நன்கு அறிகு வேன்! நமரங்காள் கேண்மின் என்று தோற்றுவாய் செய்து கொண்டு சொல்லுபவன்; நடவை வருத்தமொடு நல்கூர் மேனியள் வடமொழியாட்டி - யான பண்டொருநாள், வழி நடை வருத்தத்தாலே இளைத்த மெய்யினையுடையவளும் பார்ப்பனியும்; மறைமுறை எய்தி குமரி பாதம் கொள்கையின் வணங்கி - தீ வினைக்கு வேதத்திலே கூறப்பட்ட கழுவாய் செய்யும் விதியின்படி சென்று குமரியில் நீராடி ஆண்டெழுந்தருளிய குமரித் தெய்வத் தின் திருவடிகளை வணங்க வேண்டும் என்னும் தன் கோட்பாட்டிற் கியைய அங்ஙனமே நீராடி வணங்கி மீண்டு வருபவளும்; தமரின் தீர்ந்த சாலி என்போள் தனை-தனது சுற்றத்தார் தொடர்பற்றுத் தமியள் ஆனவளும் சாலி என்னும் பெயருடையவளுமாகிய ஒருத் தியை வழியிலே கண்டு; நின் ஊர் யாது ஈங்கு வரவு என் என- நின்னுடைய ஊர் யாது தமியையாய் இங்கே வருதற்குக் காரணம் யாது? என்று யான் வினவ; மாமறையாட்டி - சிறந்த மறையோர் குலத்தவளாகிய அச் சாலிதானும்; வருதிறம் உரைக்கும் - தான் அவ்வாறு வருதற்கியன்ற காரணத்தைக் கூறுவாள்; வாரணசி- ஐய! என்னூர் வாரணசியாம்; யான் ஓர் மாமறை முதல்வன் ஆரண உவாத்தி அரும்பெறல் மனைவி - அளியேன் அவ்வூரில் வாழும் சிறந்த மறைகளை ஓதிச் சிறந்தவனும் மறை ஓதுவிக்கும் உவாத்திமைத் தொழிலையுடையவனும் ஆகிய ஒரு பார்ப்பன

லுக்கு அரும்பேருக வாய்த்த மனைவியாகி வாழ்ந்திருந்தேன்; பார்ப்பார்க்கு ஒவ்வாப் பண்பின் ஒழுகிக் காப்புக் கடைகழிந்து - பார்ப்பனர்க்குப் பொருந்தாத தன்மையினையுடைய தீயொழுக்கந் தலைப்பட்டு ஒழுகி மகளிர்க்கு இன்றியமையாத கற்புக்காவலின் எல்லையைக் கடந்தமை காரணமாக; கணவனை இழந்தேன் - கணவனோடு வாழும் வாழ்க்கையை இழந்தொழிந்தேன்; (என்றாள்) என்க.

(வி - ம்.) நடவை - நடைவழி. நல்கூர் மேனி - இளைத்த உடம்பு. வடமொழியாட்டி - பார்ப்பனி. மறைமுறை - வேதத்தில் தீவினைக்குக் கழுவாயாகக் கூறப்பட்ட விதி. குமரி - ஒரு தெய்வம். கொள்கை - குமரி நீராடித் தீவினையைத் தீர்க்கவேண்டும் என்னும் கோட்பாடு. தமர் - சுற்றத்தார். சாலி - பெயர். மறையாட்டி - பார்ப்பனி. அரும்பெறல் மனைவியாகப் பாராட்டப்பட்டிருந்தேன் எனக் கழிந்ததற்கிரங்கிக் கூறினள் என்பது கருத்து. காப்பு - கற்புக்காப்பு. எனவே கற்பொழுக்கத்தில் வழுவி என்றாளாயிற்று. கணவனாற் கைவிடப் பட்டமையால் கணவனை இழந்தேன் என்றவாறு.

## இதுவுமது

### அஉ - கூக : எறிபயம்..........இவனென

(இ - ள்.) எறிபயம் உடைமையின் - ஆறலை களவர் அலைப்பர் என்னும் அச்சமிருத்தலாலே; இரியல் மாக்களோடு - என்போல நிலைகெட்டு ஆறு செல்வதின் மாக்களோடு கூடி; தென் கண் குமரி ஆடிய வருவேன் - தமிழகத்துத் தென் கோடியிலுள்ள குமரித்துறையில் நீராடற் பொருட்டு வரும் யான்; பொன் தேர்ச் செழியன் கொற்கையம் பேரூர்க் காவதம் கடந்து-பொன்னாலியன்ற தேரையுடைய பாண்டியனுடைய கொற்கை என்னும் பெரிய பட்டினத்தைக் கடந்து ஒரு காததூரம் வந்துழிக் கருவுயிர்த்து; கோவலர் இருக்கையின் - அவ்விடத்திருந்த ஆயர்சேரியின் மருங்கே; தோன்றாத்துடவையின் — மறைவிடமா யிருந்ததொரு தோட்டத்தின்கண்; ஈன்ற குழவிக்கு இரங்கேன் ஆகி இட்டனன் போந்தேன் - ஐயனே! யானீன்ற மகவிற்கு ஒரு சிறிதும் இரக்கங் கொள்ளாமல் போகட்டு வந்தேன்; தீவினையேற்குச் செல்கதி உண்டோ - இத்தகைய மாபெருந் தீவினையைத் துணிந்து செய்த எனக்கு இனி எரி நிரையமேயன்றிப் பிறிதொரு புகலிடமும் உளதாகுமோ? இதுதான் என் வரலாறு என்று சொல்லி; அல்லல் உற்று அழுத அச் சாலி ஈங்கு இவன் - பெரிதும் துன்பமுற்று அழுத அவள் மகன் ஈன்று போகட்டுப் போன மகனே இங்கு ஆவினைக் களவு கொண்டு வந்த இவன்; சொல்லுதல் தேற்றேன் - இவ் வரலாற்றை இதுகாறும் யான் பிறர்க்குச் சொல்லுதலைத் துணிந்திலேன்; எற்றாலெனின்; சொல் பயன்

இன்மையின் - அங்ஙனம் சொல்லின் அச் சொல்லால் இவனுக்குப் பழி பிறத்தலன்றிப் பிறிதொரு பயனும் இன்மையாலே; இவன் புலை மகன் - இவன்றான் புன்றொழிலாற் பிறந்த கீழ் மகன் ஆதலில்; புல்லல் ஓம்பன்மின் - இவனை யாரும் தீண்டுதலும் பேணுதலும் செய்யாதொழிமின்; என - என்று அப்பார்ப்பனன் கூறுகிற்ப என்க.

(வி - ம்.) எறி பயம் - ஆறலைகள்வர் எறிவர் என்று தோன்றும் அச்சம். எறிதல் - துன்புறுத்துதற் கியன்ற புடைத்தல் வெட்டுதல் கொல்லுதல் முதலியவற்றிற்குப் பொதுப் பெயர். இவற்றில் ஏதேனும் செய்வர் என்பது பற்றிப் பொதுச் சொல்லாற் கூறினள். இரியன் மாக்கள் என்றது நிலைகெட்டுத் திரியும் வறியோரை. இவர், தீர்த்த மாடும் துறைகட்கும் திருவிழா நிகழும் திருப்பதிகட்கும் திரள் திரளாகச் செல்லும் வழக்கமுடையராதலின் இரியன் மாக்களொடு வருவேன் என்றாள் என்க.

ஆடிய - ஆடற்பொருட்டு. செழியன் - பாண்டியன். கொற்கை - பாண்டியர் தலைநகரமாகிய ஒரு பட்டினம். கோவலர் இருக்கை - ஆய்ச் சேரி.

அளியள் இவள், "ஆகாத்தோம்பி ஆப்பயன் அளிக்கும் கோவலர் வாழ்க்கையோர் கொடும்பாடில்லை: ஓரோவழி அவர் காணின் இம் மகவு உய்தலும் கூடும் என்று கருதி அவள் தாய்மையுள்ளம் கோவலர் இருக்கையில் இட்டுப்போகத் துணிந்தது போலும். செல்கதி-புகலிடம். தீவினையேற்கு என்றது, இத்தகைய மாபெருந் தீவினையைத் துணிந்து செய்த எனக்கு என்பதுபட நின்றது. அவள் - அச் சாலி என்பவள். சொல்லுதல் தேற்றேன்-சொற்பயம் இன்மையின் என இப் பார்ப்பனன் கூறும் மொழிகள்,

"சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்" (உ00)

எனும் அறத்தின் வழிப்பட்டதே போன்று இவ்வருமைத் திருக்குறளையும் நினைவுறுத்துகின்றதாயினும் அவ்வறத்தைக் கடைப்பிடியாகக் கொள்ளாமல் ஈண்டுக் கூறியதே அவன் அறவோன் அன்மையை எடுத்துக் காட்டுவதாகவும் அமைதலறிக.

புல்லல் - புல்லாதே கொண்மின். ஓம்பன்மின் - பாதுகாவாதொழிமின்; இங்ஙனமன்றி, புல்லலோம்பன்மின் என்பதனை ஒரு சொன்னீர்மைத்தாக்கி, தீண்டலைச் செய்யாதொழிக என்பாருமுளர்.

### ஆபுத்திரன் நகைத்து மீண்டும் அசதியாடுதல்

கூஉ - கூகூ : ஆபுத்திரன்..........நிற்ப

(இ - ள்.) ஆபுத்திரன் பின்பு அமர்நகை செய்து - அது கேட்ட ஆபுத்திரன் மீண்டும் கேட்போர் விரும்பும்படி இனிதாக

நகைத்து; மாமறை மாக்காள் வருங்குலம் கேண்மோ - பெரிய மறைநூல்களையுடைய மாக்களே நீயிர் பிறந்துவந்த நுங்கள் பார்ப்பனக் குலத்தின் வரலாறு அறியீர் போலும் ஆயிற் கூறுவல் கேளுங்கோள்!; முதுமறை முதல்வன் முன்னர்த் தோன்றிய-பழைய வேத முதல்வனாகிய பிரமன்பால் உங்கள் குலத்திற்கு முதன் முதலாகப் பிறந்த; அருமறை முதல்வர் அந்தணர் இருவரும்-அரிய மறைகட்கு முதல்வராகிய பார்ப்பன ராகிய வதிட்டனும் அகத்தியனும்; கடவுள் கணிகை காதல் அம் சிறுவர் - நாடகக் கணிகையாகிய திலோத்தமையின் வயிற்றிற் பிறந்து அவரால் அன்பு செய்யப்பட்ட தேவ கணிகையின் மக்கள் என்று நுங்கள் நூல் கூறுகின்றதே; புரிநூல் மார்பீர் பொய் உரை ஆமோ - முப்புரி நூலையுடைய பார்ப்பனரே அந் நூலுரை பொய்யுரையாகி விடுமோ!; சாலிக்குத் தவறு உண்டோ - சாலிக்கு மட்டும் அவ்வொழுக்கம் தவறாகிவிடுமோ; என உரைத்து நான்மறை மாக்களை நகுவனன் நிற்ப - என்று சொல்லி நான்கு வேதங்களையும் ஓதும் மாக்களாகிய அப் பார்ப்பனரை எள்ளி நகைத்து நிற்ப; என்க.

(வி - ம்.) அமர்நகை - கண்டோர் விரும்பத் தகுந்த இனிய நகை. முறுவலித்து நகுதலும் அளவே நகுதலும் பெருகச் சிரித்தலும் என நகை மூவகைப்படுமாதலின் இவற்றுள் அளவே நகுதலை, அமர்நகை என்றார் எனினுமாம். ஈண்டு அமர்நகைசெய்து எனவும் நகுவனன் நிற்ப எனவும் ஈரிடத்தே கூறப்பட்ட நகை இரண்டனுள் முன்னது எள்ளல் பொருளாகப் பிறந்ததாம். அதுதானும் தான் பிறரை எள்ளி நகுதலும் பிறரால் எள்ளப்பட்டவழித் தான் நகுதலும் என இரண்டு வகைப்படும் ஆகலின் இது பிறரால் எள்ளப்பட்ட வழித் தான் நக்கபடியாம்! இனி, பின்னது பிறர் பேதைமை பொருளாகப் பிறந்தநகையாம். என்னை? அப் பார்ப்பனன் கூறும் பழி தனக்கு முண்மையறியாமை பற்றிப் பிறந் தலான் என்க. இவற்றை—

> "எள்ளல் இளமை பேதைமை மடனென்
> றுள்ளப் பட்ட நகைநான் கென்ப"

எனவரும் தொல்காப்பியத்தானும் அதற்குப் பேராசிரியர் வகுத்த உரை விளக்கத்தானும் உணர்க. (மெய்ப்-௪)

மாமறை மாக்காள் என்றது, அவர் தம் அறிவின்மை கருதியதாம். கடவுட்கணிகை - தேவகணிகை. அருமறைமுதல்வ ரந்தணர் என்றது இகழ்ச்சி.

புரிநூல் மார்பீர் என்றான், மெய்ந்நூல் கற்றிலீர் என்றிடித்தற்கு. ஆமோ என்புழி வினா ஆகாது என அதன் எதிர்மறைப் பொருளை வற் புறுத்தி நின்றது.

இனி, பார்ப்பனக்குல முதல்வராகிய வதிட்டனும் அகத்தியனும் கடவுட் கணிகைக் காதலஞ் சிறுவர் ஆதலை, நீலகேசியில் வேதவாதச்

சருக்கம், கூஆம் செய்யுட்குச் சமய திவாகரர் "நுங்கள் மரபில் முதன்மையுடையவருகிய வதிட்டனே அகத்தியனே......என்றிவருள் வதிட்டனும் அகத்தியனும் பிரமன் திலோத்தமை என்னும் தேவகணிகையைக் கண்டகாலத்துக் கலயத்துப் பிறந்தனர்......இங்ஙனமே நுங்கள் வேத வழிப்பட்ட நால்களே கூறக் காண்டுமன்றே" எனவோதியுள்ளமையானும் உணர்க.

## ஆபுத்திரன் மதுரையை எய்துதல்

### கoo - கoஅ : ஓதல்...........வதிந்து

(இ - ள்.) ஓதல் அந்தணர்க்கு ஒவ்வான் என்றே தாதை பூதியும் தன் மனை கடிதர-ஆபுத்திரன் பிறப்பு முறை கேட்டமையானும் அவன் வேதத்தையும் வேள்வியையும் வேதியரையும் ஒரு சேரப் பழித்து நகுதலாலும் இவன் வேதம் ஓதுதலையுடைய பார்ப்பனருக்குப் பொருந்தியவன அல்லன் என்று கருதி வளர்ப்புத் தந்தையாகிய இளம்பூதியும் தன் இல்லத்திற்கு வாராதபடி விலக்கி விட்டமையாலே; அந்தணர் உறைதரும் கிராமம் எங்கணும் - பார்ப்பனர் வாழும் ஊர்களிலே சென்று பிச்சை ஏற்பானுக, அங்கே வாழுகின்ற அந்தணர் தாமும்; ஆகவர் கள்வன் என்று கடிஞையிற் கல் இட - இவன் வேள்விப் பசுவைக் களவாடிய கள்வன் என்று இகழ்ந்து அவன் பிச்சைக் கலத்திலே உணவிடாமே கற்களை இடாநிற்றலாலே; சென்று மிக்க செல்வத்து விளங்கியோர் வாழும் தக்கண மதுரை தான் எய்தி - அவ்வூர்களினின்றும் போய்த் தமது தாளாண்மையாலே ஈட்டிய மிக்க செல்வத்தாலே விருந்தோம்புதல் முதலிய அறங்களைச் செய்து புகழாலே விளங்கிய கொழுங்குடிச் செல்வர் மிக்கு வாழாநின்ற தென்னாட்டின தலைநகரமாகிய மதுரையை அடைந்து; சிந்தா விளக்கின செழுங்கலை நியமத்து அந்தின் முன்றில் - மாந்தருடைய மனத்தின்கண் ஞான விளக்காக நின்று திகழும் தெய்வமாகிய கலைமகள் எழுந்தருளியிருத்தலாலே 'கலை நியமம்' என்னும் அழகிய திருக்கோயிலின வாயிலாகிய அவ்விடத்தேயுள்ள; அம்பலப் பீடிகைத் தங்கினன் வதிந்து - ஊரம்பலமாகிய மேடையிலே தங்கியவன் அவ்விடத்தையே உறைவிடமாகக் கொண்டுறைந்து என்க.

(வி - ம்.) ஓதல் - ஓதற்றொழிலையுடைய. ஒரு பார்ப்பான் ஆபுத்திரன் பிறப்பு வரலாறு கூறி இவன் புலைச்சிறுமகன் இவனைப் புல்லல்; ஓம்பன்மின்! என்று கூறினமையானும், அவனே பார்ப்பனரை இகழ்ந்தமையானும் இவன் நம்மனோர்க்கு ஒவ்வான் என்று தாதையாகிய இளம்பூதி இனி எம்மில்லம் புகுதாதே கொள்! என்று விலக்கினன் என்றவாறு.

அந்தணனாலேயே வளர்க்கப்பட்டமையின் கிராமங்களிலேயும் அந்தணர் சேரியிலே பிச்சை ஏற்கலானான்மன்! மற்று இவன் ஏனையோரில்லத்தே பிச்சை ஏற்றிருப்பின் இக்கொடுமை செய்யார் என்று இரங்குவார் நூலாசிரியர், "அந்தணர் உறைதரும் கிராமம் எங்கணும் கடிஞையிற் கல்லிட" என்றார். அவர் அங்ஙனம் கொடுமை செய்தற்குரிய காரணத்தையும் தெரித்தோதுவார் "ஆகவர் கள்வன் என்று கல்லிட" என்றார். ஈண்டு ஆ என்றது வேள்விக்குப் பலியிடுதற்குரிய பசு என்பதுபட நின்றது. என்னை? பிறர் ஆவைக் கவர்ந்திருப்பின் அவர் இது செய்யாராகலின். கடிஞை - பிச்சை ஏற்கும் ஓடு. எத்தகைய வன்கண்ணருஞ் செய்யத் துணியாத கொடுஞ்செயல் இது. இதனை,

"வினைத்த திதுவென் றந் நீர்மையை நீக்கி
மனத்த தறிந்திவார் மாண்டார்—புனத்த
குடிஞை யிரட்டுங் குளிர்வரை நாட
கடிஞையிற் கல்லிடுவா ரில்"

எனவரும் பழமொழி வெண்பாவானும் அறிக. (௨௪௯)

செல்வத்து விளங்குதலாவது ஈதலாற் பெரும்புகழ் எய்துதல் வடமதுரையும் உளதாகலின் தக்கண மதுரை என்று தெரித்தோதினர். தக்கணம் - தென்றிசை. வடக்கினும் ஒரு மதுரையுண்மையை அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்தில் (௧௬ : ௪௬ - ௭.) 'ஆயர் பாடியின் அசோதை பெற்றெடுத்த பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ" என வரும் அடிகட்கு வரைந்த உரையின்கண் :— "ஐயையும் மாதரியும் இந்த மதுரையில் இவ்வாயர்பாடியில் யாம் பெற்ற இந் நல்லமுதம் உண்கின்ற இந்த நம்பி அந்த மதுரையில் ஆயர் பாடியில் அசோதை பெற்ற அந்த நல்லமுதம் உண்ணும்...கண்ணனே தான்' என வரைதலானும் உணர்க. சிந்தா விளக்கு - கலைமகள். கலை நியமம் - கலைத் தொழிலாற் சிறப்புற்ற கோவிலுமாம். அந்தில் - அவ்விடத்தே: அசைச் சொல்லுமாம். தங்கினவன் அதனையே உறைவிடமாகக் கொண்டு வதிந்து என்க.

## ஆபுத்திரன் அறச்செயலும் அமைதி நிலையும்

### ௧௦௪ - ௧௧௫ : அத் தக்கண.........தானேன்

(இ - ள்.) அத் தக்கணப் பேரூர் - அந்தத் தென்றமிழ் நாட்டுத் தலைநகரமாகிய மாமதுரையின்கண் வதிகின்ற அவ்வாபுத்திரன்றானும் மடிந்திராமல்; ஐயக் கடிஞை கையின் ஏந்தி - ஒரு பிச்சைப் பாத்திரத்தைக் கையின்கண் ஏந்தி, மை அறு சிறப்பின் மனைதொறும் மறுகி - குற்றமற்ற அறச் சிறப்பினையுடைய கொழுங்குடிச் செல்வருடைய மனைகள் தோறும் ஊக்கத்துடனே சென்று சென்று மிகுதியாக உணவினைப் பிச்சை ஏற்று வந்து; காணார் கேளார் கால்முடப்பட்டோர் பேணுநர் இல்லோர் பிணி நடுக்குற்றோர் யாவரும் வருக என்று இசைத்து - அம்பலத்துச் சென்று ஆங்கு இவன் வருகைக்காகக் காத்திருக்கின்ற குருடரும் செவிடரும் கால் முடம்பட்டோரும் தம்மைப்

பாதுகாப்பவர் இல்லாத வலியற்ற வறியோரும்; பல்வேறு பிணிகளும் பற்றி நலியப் பெரிதும் வருந்துவோரும் ஆகிய இன்னோரன்ன மக்கட் கூட்டத்தை அணுகி வருக! வருக! என்று இனிதாக அழைத்து; உடன் ஊட்டி - அனைவரையும் ஒருங்கே உணவூட்டி; உண்டு ஒழி மிச்சில் உண்டு - அவர் உண்டபின் எஞ்சிய உணவினைத் தான் உண்டு; காவலன் ஓடு தலை மடுத்துக் கண்படை கொள்ளும் - ஆருயிர் காவலனாகிய அவ்வருளறச் செல்வன் இரவு வந்துறுதலும் தன் பிச்சைக் கலமாகிய திருவோட்டினையே கவிழ்த்துத் தலையணையாகக் கொண்டு பேரமைதியோடு துயிலுவான் என்றார் என்பதாம்.

(வி - ம்.) இவ் வாபுத்திரன் பௌத்தத் துறவோர்க் கெல்லாம் தலைவரம்பாகக் காட்டப்பட்டவன். இவனைப் போன்று சாந்துணையும் வாழுபவர் வாழ்வாங்கு வாழ்பவர் என்பது கூறுமலே அமைவதாம்.

இனி இவ்வாபுத்திரன்றானே ஏற்போனுகவிருந்தும் ஓவாதே ஒல்லும் வகையால் வீழ்நாள் படாமை நன்றாற்றி வாழுந் திறமுணர்க. மற்று இவ்வாறு வாழ்ந்த இவ்வாபுத்திரன்றானும் மீண்டும் பிறப்புற்றான் என்பராலோ எனின் அதுதானும் புத்தர் அறத்திற்குப் பெரிதும் பொருந்துவதேயாம். எங்ஙனே? புத்தரே தமக்குக் கைவந்த வீட்டினையும் வேண்டாது கைவிட்டுப் பிறர்க்கறமுயலும் பொருட்டுப் பல்வேறு பிறப்புகளிலே பிறந்துழன்றார் என்பராதலால் இதனை "வீடும் வேண்டா விறல்" என்னும் பெருநிலை என்று கொள்க.

ஈண்டு அறவணவடிகளார் ஆபுத்திரன் திறம் அறிவித்தலும் குறிப்பாக நீயும் அவனேபோல வாழுதி என்று அறஞ்செவியுறுத்த படியாம் என்க. ஓடுதலைமடுத்துக் கண்படை கொள்ளுதலிலே அவன்து வீடுபேறும் உளது என்றும் உணர்தல் வேண்டும். பிச்சை ஏற்பவனைக் 'காவலன்' என்று கட்டுரைத்த ஆசிரியர் திறம் சாலவும் வியக்கற் பாற்று.

இனி, இக்காதையை—ஆயிழை கேளாய் சாலி கழிந்து அஞ்சி வருவோள் குழவியை இட்டுநீங்க ஆவந்து அணைந்து ஓம்ப பூதி எடுத்துப் பெயர்ந்து நவிற்ற புக்கோன் ஆத்துயர் கண்டு உற்றுஉருத்துக் கரந்து ஒதுங்கி கொண்டு கடவாநின்றுழி அந்தணர் அகப்படுத்திக் கேட்ப நல்லா, குத்திப் புய்த்து நுறுத்து ஓட, ஆபுத்திரன் உரைப்போன் உரைமோ என அந்தணரிகழ்தலும் ஆபுத்திரன் உண்டோ என அந்தணன் உரைக்கும் புல்லல் ஓம்பன்மின் என ஆபுத்திரன் நகுவனன் கிற்ப பூதி கடிதர கிராமம் எங்கணும் கல்லிட காவலன் மதுரை சென்று ஊட்டி உண்டு கண்படைகொள்ளும் என இயைத்திடுக.

ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை முற்றிற்று

## கச. பாத்திர மரபு கூறிய காதை

[பதினான்காவது மணிமேகலைக்கு அறவணர் அமுத சுரபியென்னும் பாத்திரஞ் சிந்தாதேவி ஆபுத்திரற்குக் கொடுத்தவண்ணம் கூறிய பாட்டு]

அஃதாவது : அறவணவடிகள் மணிமேகலை கையில் ஏந்திய அமுதசுரபி என்னும் அரும்பெறற் பாத்திரம் ஆபுத்திரனுக்குக் கிடைத்த வரலாற்றைக் கூறுமாற்றால் எஞ்சிய ஆபுத்திரன் வரலாற்றோடு அம் மாபெரும் பாத்திரத்தின் தெய்வத்தன்மையையும் அறிவித்த செய்தியைக் கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இதன்கண்—ஓடுதலை மடுத்துக் கண்படை கொண்டிருந்த அவ் வாபுத்திரனிடம் ஒரு மாரி நடுநாளிலே வழி நடந்திளைத்து வந்தோர் வந்து 'வயிறு காய் பெரும் பசி மலைக்கும்' என்று கூறக் கேட்ட பொழுது அவ் வள்ளற் பெருமகன் ஆற்றுவது காணாகி மாபெருந்துயருற்று மயங்குதலும் அப்பொழுது அவன் நிலைக்கிரங்கிய அருண்மிகு கலைத்தெய்வமாகிய சிந்தாதேவி அவனெதிர் தோன்றி ஏடா அழியல் எழுந்திது கொள்ளாய் நாடுவறங் கூரினும் இவ்வோடு வறங் கூராது என்று சொல்லி அமுதசுரபி என்னும் அரும்பெறற் பாத்திரத்தை அவன் கையிற் கொடுத்து மறைதலும், அப்பொழுது ஆபுத்திரன் அத் தெய்வத்தை ஏத்தும் அழகும்; அந்நாள் தொடங்கி அமுத சுரபியைக் கொண்டு மன்னுயிர் ஓம்பும் திறமும், இவன் செய்த அறமிகுதியாலே இந்திரன் பாண்டு கம்பளம் துளங்குதலும், இந்திரன் ஒரு முதுபார்ப்பனக் கோலத்தோடு 'உன் தானப்பயன் பெரிது; அதனைப் பெறுக!' என அது கேட்ட ஆபுத்திரன் இந்திரனை எள்ளி வெள்ளை மகன்போல் விலாவிறச் சிரித்து, தன் அறச் செயலாலே தான் பெறுகின்ற இன்பத்திற் கீடாக உன் வானுலகத்தே யாதுளது என வினாதலும், இகழப்பட்ட இந்திரன் ஆபுத்திரன் அவ்வறஞ் செய்தற்கு இடனில்லாதபடி உலகத்தை வளப்படுத்துதலும் வளம்பெற்றுழி இவ்வுலகம் எவ் வுயிரும் இடனின்றி அலமருகிய இழிதகவும் ஆபுத்திரன் அறஞ் செய்தற் கிடனின்றி அலமருதலும் சாவக நாட்டிலே வற்கடமெய்தி மன்னுயிர் மடியும் செய்தி கேட்டு அந் நாட்டிற்குச் செல்ல மரக்கல மேறி விரைதலும், மரக்கலம் மணிபல்லவத்தின் மருங்கே நிறுத்தப்பட்டுழி இறங்கிய ஆபுத்திரன் மீண்டும் ஏறுமுன் மரக்கலம் போய்விடுதலும்,

மணிபல்லவத்திலே தமியனாகிய ஆபுத்திரன் தான்மட்டும் உண்டுயிர் வாழ்தலை வெறுத்து அமுதசுரபி அறவோர் கைப் படுவதாக என வேண்டி நீர் நிலையில் விட்டுப் பின் உண்ணா நோன்போ டுயிர்துறததலும் பிறவும் இனிதாகக் கூறப்படு கின்றன.

ஆங்கவற் கொருநாள் அம்பலப் பீடிகைப்
பூங்கொடி நல்லாய் புகுந்தது கேளாய்
மாரி நடுநாள் வல்லிருள் மயக்கத்
தாரிடை உழந்தோர் அம்பல மரீஇத்
துயில்வோன் தன்னைத் தொழுதனர் ஏத்தி
வயிறுகாய் பெரும்பசி மலைக்கும் என்றலும்
ஏற்றூண் அல்லது வேற்றூண் இல்லோன்
ஆற்றுவது காணான் ஆரஞர் எய்தக்
கேளிது மாதோ கெடுகநின் தீதென
யாவரும் ஏத்தும் இருங்கலை நியமத்துத்
தேவி சிந்தா விளக்குத் தோன்றி
ஏடா அழியல் எழுந்திது கொள்ளாய்
நாடுவறங் கூரினுமிவ் வோடுவறங் கூராது
வாங்குநர் கையகம் வருந்துத லல்லது
தான்தொலை வில்லாத் தகைமைய தென்றே
தன்கைப் பாத்திரம் அவன்கைக் கொடுத்தலும்
சிந்தா தேவி செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே நாமிசைப் பாவாய்
வானோர் தலைவி மண்ணோர் முதல்வி
ஏனோர் உற்ற இடர்களை வாயெனத்
தான்தொழு தேத்தித் தலைவியை வணங்கி
ஆங்கவர் பசிதீர்த் தந்தாள் தொட்டு
வாங்குகை வருந்த மன்னுயிர் ஓம்பலின்
மக்களும் மாவும் மரஞ்சேர் பறவையும்
தொக்குடன் ஈண்டிச் சூழ்ந்தன விடாஅ
பழுமரத் தீண்டிய பறவையின் எழூஉம்
இழுமென் சும்மை இடையின் றொலிப்ப
ஈண்டுநீர் ஞாலத் திவன்செயல் இந்திரன்
பாண்டு கம்பளந் துளக்கிய தாகலின்
தளர்ந்த நடையின் தண்டுகால் ஊன்றி
வளைந்த யாக்கையோர் மறையோ னாகி
மாயிரு ஞாலத்து மன்னுயிர் ஓம்பும்
ஆருயிர் முதல்வன் தன்முன் தோன்றி
இந்திரன் வந்தேன் யாது நின்கருத்து

உன்பெருந் தானத் துறுபயன் கொள்கென
வெள்ளை மகன்போல் விலாஇற நக்கீங்
கெள்ளினன் போமென் றெடுத்துரை செய்வோன்
ஈண்டுச் செய்வினை ஆண்டுநுகர்ந் திருத்தல்
காண்தகு சிறப்பின்நுங் கடவுள ரல்லது
அறஞ்செய் மாக்கள் புறங்காத் தோம்புநர்
நற்றவஞ் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரு மில்லாத் தேவர்நன் னாட்டுக்
கிறைவன் ஆகிய பெருவிறல் வேந்தே
வருந்தி வந்தோர் அரும்பசி களைந்தவர்
திருந்துமுகங் காட்டுமென் தெய்வக் கடிஞை
உண்டி கொல்லோ உடுப்பன கொல்லோ
பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ
யாவையீங் களிப்பன தேவர்கோன் என்றலும்
புரப்போன் பாத்திரம் பொழிந்தூண் சுரந்தீங்
கிரப்போர்க் காணு தேமாந் திருப்ப
நிரப்பின் றெய்திய நீணில மடங்கலும்
பரப்பு நீரால் பல்வளம் சுரக்கென
ஆங்கவன் பொருட்டால் ஆயிரங் கண்ணோன்
ஓங்குயர் பெருஞ்சிறப் புலகோர்க் களித்தலும்
பன்னீ ராண்டு பாண்டிநன் னாடு
மன்னுயிர் மடிய மழைவள மிழந்தது
வசித்தொழில் உதவ மாநிலங் கொழுப்பப்
பசிப்புயிர் அறியாப் பான்மைத் தாகலின்
ஆருயி ரோம்புநன் அம்பலப் பீடிகை
ஊண்ஒலி அரவம் ஒடுங்கிய தாகி
விடருந் தூர்த்தரும் விட்டேற் றுளரும்
நடவை மாக்களும் நகையொடு வைகி
வட்டுஞ் சூதும் வம்பக் கோட்டியும்
முட்டா வாழ்க்கை முறைமைய தாக
ஆபுத் திரன்தான் அம்பலம் நீங்கி
ஊரூர் தோறும் உண்போர் வினாஅய்
யாரிவன் என்றே யாவரும் இகழ்ந்தாங்
கருந்தே மாந்த ஆருயிர் முதல்வனை
இருந்தாய் நீயோ என்பார் இன்மையின்
திருவின் செல்வம் பெருங்கடல் கொள்ள
ஒருதனி வருஉம் பெருமகன் போலத்
தானே தமியன் வருவோன் தன்முன்
மாநீர் வங்கம் வந்தோர் வணங்கிச்
சாவக நன்னாட்டுத் தண்பெயல் மறுத்தலின்

ஊனுயிர் மடிந்த துரவோய் என்றலும்
அமரர்கோன் ஆணையின் அருந்துவோர்ப் பெருது
குமரி மூத்தஎன் பாத்திரம் ஏந்தி
அங்கந் நாட்டுப் புகுவதென் கருத்தென
வங்க மாக்களொடு மகிழ்வுட னேறிக்
கால்விசை கடுகக் கடல்கலக் குறுதலின்
மாலிதை மணிபல் லவத்திடை வீழ்த்துத்
தங்கிய தொருநாள் தானுங் கிழிந்தனன்
இழிந்தோன் ஏறினன் என்றிதை எடுத்து
வழங்குநீர் வங்கம் வல்லிருள் போதலும்
வங்கம் போயபின் வருந்துதுயர் எய்தி
அங்கு வாழ்வோர் யாவரும் இன்மையின்
மன்னுயிர் ஓம்புமிம் மாபெரும் பாத்திரம்
என்னுயிர் ஓம்புதல் யானோ பொறேஎன்
தவந்தீர் மருங்கில் தனித்துயர் உழந்தேன்
கூமந்தென் பாத்திரம் என்றனன் தொழுது
கோமுகி என்னுங் கொழுநீர் இலஞ்சியின்
ஓரியாண் டொருநாள் தோன்றென விடுவோன்
அருளறம் பூண்டாங் காருயி ரோம்புநர்
உளரெனில் அவர்கைப் புகுவாய் என்றாங்
குண்ணு நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி
அந்நா ளாங்கவன் தன்பாற் சென்றே
என்னுற் றனையோ என்றியான் கேட்பத்
தன்னுற் றனபல தானெடுத் துரைத்தனன்
குணதிசைத் தோன்றிக் காரிருள் சீத்துக்
குடதிசைச் சென்ற ஞாயிறு போல
மணிபல் லவத்திடை மன்னுடம் பிட்டுத்
தணியா மன்னுயிர் தாங்குங் கருத்தொடு
சாவக மாளுந் தலைத்தாள் வேந்தன்
ஆவயிற் றுதித்தனன் ஆங்கவன் தானென்.

# கச. பாத்திர மரபு கூறிய காதை

## உரை

### ஆபுத்திரன் பசியால் நலிந்து நள்ளிரவிலே வந்து தன்னை இரந்தவர்க்கு ஆற்றுவது காணுமல் ஆரஞர் எய்துதல்

### க - ஙு : ஆங்கவற்கு..........எய்த

(இ - ள்.) பூங்கொடி நல்லாய் - பூங்கொடி போன்று நற்பண்புகள் மலர்ந்து திகழுகின்ற நன்மையையுடைய மணிமேகலாய்!; ஆங்கு அவற்கு ஒருநாள் அம்பலப் பீடிகை புகுந்தது கேளாய் - அவ்வாறிருந்த அந்த ஆபுத்திரனுக்கு ஒருநாள் அவனிருந்த அவ்வம்பலப்பீடிகையிடத்தே நிகழ்ந்ததொரு நிகழ்ச்சியைக் கூறுவேன் கேட்பாயாக!; மாரி நடுநாள் வல் இருள் மயக்கத்து - கார்ப்பருவத்தே மழை பெய்து கொண்டிருந்த ஒரு நாளினது இரவின் இடையாமத்தே செறிந்த இருள் பொருந்தியிருக்கும் பொழுதில்; ஆர் இடை உழந்தோர் - அருவழியிலே நடந்து வருந்தியவர் சிலர்; அம்பலம் மரீஇ - ஆபுத்திரன் ஓடு தலைமடுத் துறங்கிக்கிடந்த அம்பலத்தை அடைந்து; துயில்வோன் றன்னைத் தொழுதனர் ஏத்தி - உறங்குபவனை எழுப்பிக் கைகூப்பித் தொழுது புகழ்ந்து; வயிறு காய் பெரும் பசி மலைக்கும் என்றலும் - ஐயனே இப்பொழுது எம்மை எமது வயிறே சுடுதற்குக் காரணமான பெரிய பசி கொல்லுகின்றது ஆற்றுவே மல்லேம் என் செய்தும்! என்று கூறுதலும்; ஏற்று ஊண் அல்லது வேற்று ஊண் இல்லோன் - பகலிலே இரந்து உண்ணும் உணவையுடையனுதலன்றி இரவிலே வேறு உணவு சிறிதும் தன்பாலில்லாத அளியன் அவ்வாபுத்திரன் என் செய்வான்!; ஆற்றுவது காணுன் ஆரஞர் எய்த - அவர் தம் வயிற்றுப் பசித் தீயைத் தணித்தற்குரிய வழியொன்றும் காணமாட்டாமையால் பொறுத்தற்கரிய துன்பத்தையடையா நிற்ப என்க.

(வி - ம்.) ஆங்கு என்றது முன்னர் ஓடு தலைமடுத்துக் கண்படை கொள்ளும் என்றதனைச் சுட்டி அவ்வாறிருக்கும் அவனை என்பதுபட நின்றது. கார்ப்பருவத்து ஒருநாள் என்றது மழைபெய்து கொண்டிருந்த கார்ப்பருவத்து ஒருநாள் என்பது தோன்ற மாரி நடுநாள் என்றார். மரீஇ-மருவி. துயில்வோனை எழுப்பி என்றொரு சொல் பெய்க. மலைக்கும்-

கொல்லும்; இருள்மயக்கத்து - இருள்பொருந்தியபொழுதில், ஆற்றுவதும் அவர் பசியைத் தணிக்கும் வழி. அஞர் - துன்பம். அருளுடைய நெஞ்சத் தனாகலின் தானே அருந்துயர் எய்தினன். இங்கு,

"இன்னா திரக்கப் படுத லிரந்தவர்
இன்முகங் காணு மளவு" (குறள்-உஉச)

எனவும்,

"சாதலி னின்னாத தில்லை யினிததூஉம்
ஈத லியையாக் கடை" (குறள்-உஉ0)

எனவும், வருந் திருக்குறள்கள் நினைக்கத்தகும்.

## ஆபுத்திரன் முன் சிந்தாதேவி என்னும் தெய்வம் தோன்றுதல்

### கூ - கக: கேளிது..........கொடுத்தலும்

(இ - ள்.) ஏடாஇது கேள்! - ஏடா ஆபுத்திரனே! யான் கூறுமிதனைக் கேள்!; அழியல் - வருந்தாதே கொள்!; நின் தீது கெடுக - நின் துயரம் நினக்கினி இல்லையாகுக!; எழுந்து இது கொள்ளாய் என - எழுந்து இதனை ஏற்றுக்கொள்வாய்! என்னும் அருளுரையோடு அவன்கண் முன்னே!; யாவரும் ஏத்தும் இருங்கலை நியமத்துச் சிந்தா விளக்கு தேவி தோன்றி - அமரரும் முனிவரும் மாந்தரும் ஆகிய எல்லாரும் எப்பொழுதும் வாழ்த்தி வணங்கும் பெருமையுடைய பெரிய கலை நியமம் என்னும் திருக்கோயிலிலே உறைகின்ற கலைமகளாகிய சிந்தா விளக்கு என்னும் தெய்வம் அவ் வள்ளலின் முன்னர் அருளுருவங் கொண்டு எழுந்தருளி வந்து; நாடு வறங் கூரினும் இவ்வோடு வறங் கூராது - நாடுகளில் வற்கடமிகினும் மிகும் இவ்வோடு எஞ்ஞான்றும் வற்கடமுறாமல்; வாங்குநர் கையகம் வருத்துதல் அல்லது தான் தொலைவு இல்லாத் தகைமையது - ஏற்போர் கைகளைத் தான் வழங்கும் உணவின் பொறையாலே துன்புறுத்துதல் அல்லாமல் தன்னுள்ளே ஒரு பொழுதும் உணவு அறுதல் இல்லாததொரு தெய்வத்தன்மையையுடையது காண்; என்று - என்று சொல்லி; தன் கைப் பாத்திரம் அவன் கைக் கொடுத்தலும் - தன் திருக்கையிலிருந்த ஒரு பாத்திரத்தை அவ்வாபுத்திரன் கையிற் கொடுத்து மறைந்தருளுதலும் என்க.

(வி - ம்.) மாதோ: அசைச்சொல். கலைத்தெய்வமாகலின் அவன் துயர் தான் பொறாமல் செவ்வியறிந்து தானே எளிவந்து ஈண்டு ஆபுத்திரன் கையில் பாத்திரமீந்து போகின்றது. இச்செவ்வியும் இத்தெய்வத்தின் திருவருளும் கற்போர் உள்ளத்தைக் கனிந்துருகச் செய்தலுணர்க.

கலைத்தெய்வத்தைத் தெய்வமும் முனிவரும் சான்றோரும் ஆகிய யாவரும் தொழுவர் ஆதலின் யாவரும் ஏத்தும் என்றார். சிந்தா விளக்கு - உள்ளத்திற் சுடர்விடும் அறிவு; அத் தெய்வம் அறிவிற்குரிய தெய்வமாகலின் அழகிய இப்பெயர் பெறுவதாயிற்று. அறிவை வளர்க்கும் நகரமாதலின் அங்குக் கலைமகட்குத் திருக்கோயி லெடுக்கப்பட்டிருந்தமை நம்மனோர்க்கும் உவகையளிப்பதாகவே யுளது.

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த சால்புடைய அந்நகரத்தின் மாண்பு இதனானும் சிறப்புறுதலறிக.

## ஆபுத்திரன் கலைத்தெய்வத்தை உளங்கனிந்தேத்துதல்

### கள - உக: சிந்தா..........வணங்கி

(இ - ள்.) சிந்தா தேவி செழுங்கலை நியமத்து நந்தா விளக்கே நாமிசைப் பாவாய் - அம் மாபெரும் பாத்திரத்தைப் பெற்ற அவ்வாபுத்திரன் அளப்பரும் உவகை எய்தியவனும் அருள் மிகும் அத்தெய்வத்தை வாழ்த்துபவன், உள்ளக் கோயிலிலே எழுந்தருளி உலகம் புரக்கும் தெய்வத்திருவே! சான்றோர் கைகுவித்து வணங்கி யுய்தற்பொருட்டுக் கலை வளத்தாலே கவினுற்றுத் திகழுகின்ற இத்திருக்கோயிற் படிவத்தேயும் எழுந்தருளிய அவியாத பேரொளிப் பிழம்பே! சான்றோரின் தூய செந்நாவின்கண் எழுந்தருளி உலகிற்கு உறுதிப்பொருளை உணர்த்தும் தெய்வப் பாவையே!; வானோர் தலைவி மண்ணோர் முதல்வி ஏனோர் உற்ற இடர் களைவாய் என - அமரர் தலைவியே இவ்வுலகத்து வாழ்கின்ற மாந்தர்வாழ்விற்கும் முதல்வியே அறிவின் தெய்வமாகிய நீயே அருண் மிகுதியாலே உலகின்கண் ஆற்றா மாக்களின் அருந்துயராகிய பசிப்பிணியையும் அகற்றுவாயாயினை, வாழ்க நின் திருவடி மலர்கள் என்று; தான் தொழுது ஏத்தித் தலைவியை வணங்கி - தான தன் கைகளைத் தலைமேற் குவித்துக் கும்பிட்டு அத் தலைமைத் தெய்வத்தைத் தரைமிசை வீழ்ந்து வணங்கிய பின் என்க.

(வி - ம்.) நந்தா விளக்கு - அவியாத விளக்கு. அவள் அறிவுப் பேரொளியாகலின் அவியாத விளக்கு என்றான். தெய்வங்களுக்கும் நீ தெய்வமாவாய் என்பான் வானோர்தலைவி என்றான். மண்ணுலகத்து மாந்தரும் அறம்பொருள்இன்பங்களாகிய உறுதிப்பொருள்களையுணர்ந்து வாழ்வாங்கு வாழவைக்கும் தெய்வம் நீயே என்பான் மண்ணோர் முதல்வி என்றான். ஏனோர் என்றது, அவள் திருவருளை நாடாது உணவினையே நாடி ஏக்கற்று நிற்கும் ஆற்றாமாக்களை. இடர்-அவர்தம் வயிறுகாய் பெரும்பசி. பசிகளையும் தொழில் திருமகளுடையதாம். நின் பேரருள் காரணமாக நின்னருளை நாடாத ஏனையோர் இடர்களைதற்கு நீ எளிவந்து அதற்கு ஒப்பற்ற கருவியாகிய இம் மாபெரும் பாத்திரத்தை நல்கினை

ஆதலின் நீ ஏனோர் இடரும் களைவாயாயினை வாழ்க நின்றிருவருள் என்று வாழ்த்தியபடியாம்.

## ஆபுத்திரன் அமுதசுரபி கொண்டு ஆருயிர் ஓம்புதல்

### ௨௨ - ௨௭ : ஆங்கவர்.........ஒலிப்ப

(இ - ள்.) ஆங்கு அவர் பசி தீர்த்து-முன்னர் அவ்விடத்தே வயிறு காய் பெரும் பசி மலைக்கும் என் செய்கோம் என்று இரந்து நின்ற ஆற்றுமாக்களின் அரும் பசியை அவர் வேண்டியாங்கு அவ்வமுத சுரபி சுரந்த உணவை வழங்கித் தீர்த்து; அந்நாள் தொட்டு வாங்கு கை வருந்த மன்னுயிர் ஓம்பலின் - அந்த நாள் முதலாக இடையறாது ஏற்கும் இரவலர் ஏந்திய கைகள் வருந்துமளவிற்கு உணவு வழங்கி நிலைபெற்ற உயிரினங்களை யெல்லாம் பாதுகாத்து வருதலாலே; மக்களும் மாவும் மரம் சேர் பறவையும் உடன் தொக்கு ஈண்டி சூழ்ந்தன விடாஅ - மாந்தரும் விலங்குகளும் மரத்திலுறைகின்ற பறவையினங்களும் ஆகிய பல்வேறுயிரினங்களும் ஒருங்கே கூடி ஆபுத்திரனைச் சூழ்ந்து கொண்டு விடாதனவாய் ஆரவாரித்தலாலே, பழுமரத்தின் ஈண்டிய பறவையின் - பழுத்த மரத்தின்கட் கூடி ஆரவாரிக்கின்ற பறவையின ஆரவாரம் போல; எழூஉம் இழும் என் சும்மை இடை இன்று ஒலிப்ப - அவ்விடத்தினின்றும் எழுகின்ற இம்மென்னும் கேட்டற்கினிய பேரொலி இடையறாது ஒலியா நிற்ப என்க.

(வி - ம்.) ஆங்கு அவர் என்றது முன்பு ஆரிடையுழந்து ஆங்குவந்து பசிமலைக்கும் என்று கூறிய இரவலரை. வாங்கு கை-ஏற்கின்ற இரவலர் கைகள். அவை இடுகின்ற உணவின் பொறையால் வருந்தும்படி வழங்கினன் என்றவாறு. மக்களே அன்றி விலங்குகளும் பறவைகளும் உணவு வேண்டி வருதலின் அவற்றுக்கும் ஏற்றவுணவினை அம் மாபெரும் பாத்திரம் சுரந்தளித்தலின் மன்னுயிர் அனைத்தையும் ஓம்பினன் என்க. எழூஉம்-எழுகின்ற. சும்மை-பேராரவாரம். இடையறாது ஒலிக்குமாறு அறஞ் செய்தானுக என்று அறுத்துமுடித்திடுக.

"பழுமரத்தீண்டிய பறவையின் எழூஉம் இழுமென் சும்மை" என்னுமிதனோடு—

"பழுமர முள்ளிய பறவையின் யானுமவன்
இழுமென் சும்மை இடனுடை வரைப்பின்"

எனவும், (பொருநரா—௬௪-௬௫)

"ஆர்கெழு குறடுசூட் டாழி போன்றவன்
சீர்கெழு வளமனை திளைத்து மாசனம்

கார்கெழு கடலெனக் கலந்த வல்லதூஉம்
பார்கெழு பழுமரப் பறவை யொத்தவே''

எனவும், (சீவக-௨௨௮) வரும் பிறசான்றோர் கூற்றும் நோக்குக.

## தேவேந்திரன் பாண்டு கம்பளம் துளங்குதலும் ஆபுத்திரனைக் காண அவன் அந்தணனாகி வருதலும்

### உ௯ - ௬௫ : ஈண்டு..........கொள்கவென

(இ - ள்) ஈண்டுநீர் ஞாலத்து இவன் செயல் இந்திரன் பாண்டு கம்பளம் துளக்கியது ஆகலின் - இங்கே கடல் சூழ்ந்த நிலவுலகத்திலே இவ்வாறு இவ்வாபுத்திரன் செய்கின்ற பேரறச் செயலானது வானுலகத்தே அமரர் கோமான் வீற்றிருக்கின்ற பாண்டு கம்பளம் என்னும் இருக்கையைக் குலுக்கிவிடுதலாலே அத் தேவேந்திரன் தனக்கியன்ற கடமையை அவ்வாருயிர் முதல்வனுக்குச் செய்யும்பொருட்டு; ஓர் வளைந்த யாக்கை மறையோன் ஆகி தண்டு கால் ஊன்றித் தளர்ந்த நடையின் - ஒரு கூன் விழுந்த யாக்கையையுடைய முதிய பார்ப்பனனாக உள்வரிக் கோலங் கொண்டு கைத் தண்டையே காலாக ஊன்றி நடக்கின்ற தளர்ச்சியுற்ற நடையையுடையவனாய்; மா இரு ஞாலத்து மன்னுயிர் ஓம்பும் ஆருயிர் முதல்வன் தன் முன் தோன்றி - மிகவும் பெரிய நிலவுலகத்திலே உடம்பிலே நிலைபெற்றிருக்கின்ற உயிரினங்களை எல்லாம் உண்டி கொடுத்துப் பாதுகாக்கின்ற அரிய உயிர் முதல்வனாகிய ஆபுத்திரன் முன்னர் வந்து நின்று; உன் பெருந்தானத்து இந்திரன் வந்தேன் நின் கருத்து யாது உறுபயன் கொள்க என - நீ செய்துள்ள பேரறங் காரணமாக நின்னைக் காண்டற்குத் தேவேந்திரனாகிய யான் இவ் வுள்வரிக் கோலத்தோடு நின்பால் வந்துளேன் காண்! இத்தகைய பேரறத்தைச் செய்தற்குக் காரணமான நின் கருத்துத்தான் யாது? அவ்வறத்தினால் உனக்கு மிகவும் பயன் விளைந்துளது; அப் பயனை நீ கருதுமாற்றால் கைக் கொள்ளக் கடவை, நீ கருதியதனை இன்னே கொள்க! என்று அறிவியா நிற்ப என்க.

(வி - ம்.) நிலவுலகத்தே ஏதேனும் பேரறம் செய்வோர் உளராய விடத்தே அத்தகைய அறவோர் உளராதலை இந்திரனுடைய இருக்கை அசையுமாற்றால் அவனுக்கு அறிவுறுத்தும் என்பதும், அங்ஙனம் இருக்கை யசைதற்குக் காரணமான அறவோரைச் சென்று கண்டு அவர் விரும்பு வன அளித்து அவரை மகிழ்வித்தல் வேண்டும் என்பதும், நிலவுலகில் அறவோர்க்கு ஏதேனும் இடையூறு நிகழ்ந்துழியும் அவனிருக்கை அசைத

தறிவுறுத்தும் என்பதும் அப்பொழுதும் இந்திரன் அவ்வறவோர்க்கெய்திய இடையூறு களைதற்கு ஆவன செய்தல்வேண்டும் என்பதும் இந்நிகழ்ச்சியான் அறியப்படும். இக்கொள்கை பௌத்த சமயத்தவர்க்கும் சமண சமயத்துக்கும் பொதுவானதொரு கொள்கை என்பது இந்நூலாலும் சமண நூலாகிய சீபுராணத்தாலும் அறியப்படும் என்ப.

இந்திரன் அறவோர்க்கெல்லாம் அரசனாகலின் வானுலகத்தேயன்றியும் நிலவுலகத்தும் அறவோர் திறத்திலே அவன் அருளாட்சி செய்யும் கடப்பாடுடையன் என்பது இவ்விருசமயத்தவர்க்கும் கொள்கைபோலும்.

இனி, இந்திரன் இந்நிலவுலகத்து ஏனையமாந்தர் தன்னைக் காணாமைப் பொருட்டு முதுபார்ப்பனனாகி உள்வரிக் கோலங் கொண்டு வந்தனன் என்க. என்னை? உள்வரிக்கோலம் பூண்டு வந்துழியும் அவன் ஆபுத்திரனை அணுகியவுடன் 'இந்திரன் வந்தேன்' எனத் தன்னைத்தானே அறிவித்தலால் அவன் வேற்றுருக்கோடலின் பயன் ஏனையோர் காணாமையே என்பது பெற்றாம்.

இனி, நிலவுலகத்திலே நூறு வேள்வி செய்தவனே இந்திரப் பதவி பெறுதற்குரியவன் என்றும் அத்தகைய அறவோர் உளராயவழி அவன் தன்பதவியை இழப்பான் என்பதை அறிந்து அத்தகைய அறவோர் உருவாகாதபடி பார்த்துக்கோடலும் அவன் தன் பதவியைப் பேணிக் கொள்ளும் உபாயமாம். ஈண்டும் ஆபுத்திரன் அறம்பெருகி வருவதாலே தன்பதவி பறிபோம் என்னும் அச்சத்தாலே அவ்வறத்தைத் தவிர்க்கவே இந்திரன் வந்து பயன் கொள்ளுமா றிரக்கின்றனன் என்று கோடலே பெரிதும் பொருத்தமாம். என்னை? இது பொருளுடையோர்க்குரியதோர் இயற்கையான புன்செயல் என்பது இந்நிலவுலகத்தும் பெருநிதிக்கிழவர்பாலும் காணப்படுதலானும் இந்திரன் அறத்தை உவப்பவனாயின் ஆபுத்திரன்பாற் செற்றங்கொண்டு அவனறம் நிகழாவண்ணம் அவனைப் பகைத்துச் செயல்புரியத் தலைப்படான் ஆகலானும், அவன் கொள்கைக்காக அவனைப் பெரிதும் போற்றுதலே செய்திருத்தல் வேண்டுமன்றோ? ஆகவே செல்வத்திற் கியன்ற அழுக்காறும் பதவிபேணும் கருத்துமே மேலே அவன்செயலால் புலப்படுதல் நுண்ணிதின் உணர்க.

இனி, அவன் இருக்கையாகிய பாண்டுகம்பளம் அவனைத் துளக்குவதற்கும், இனி இப்பதவி உனக்கில்லை என்பதன் அறிகுறியாகக் கோடலே பொருத்தமாம். இந்திரன் யாரேனும் நிலவுலகில் அருந்தவஞ் செய்யத் தலைப்பட்டால் அவர் தவத்தை அழிக்க முற்படுகின்ற செயலும் இக்கருத்தையே வலியுறுத்துவதாகும். இவ்வரலாறு செல்வத்திற்கியன்றதொரு சிறுமைக்கே எடுத்துக்காட்டாகும் என்றுணர்க.

இந்திரன் வந்தேன் யாது நின்கருத்து உன்பெருந்தானத்துறுபயன் கொள்கென இந்திரன் ஆபுத்திரனை இரப்பதும் தன்பதவிக்கு வரத்தக்க செல்வர்க்குக் கைக்கூலி கொடுத்து அவரைத் திசைமாற்றி விடுகின்ற புன்செயலே அன்றிப் பிறிதில்லை என்றுணர்க. இப்புன்மை கண்டன்றோ ஆபுத்திரன் விலாவிறச் சிரிக்கின்றான். இங்ஙனம் நுண்ணிதின் உணராக்கால் அவன் நகைப்பு அவனை வெள்ளைமகனாகவே செய்துவிடும் என்க.

### ஆபுத்திரன் இந்திரன் பேதைமை கண்டு பெருகச் சிரித்தல்

௩௯ - ௪௩ : வெள்ளை..........வேந்தே

(இ - ள்.) வெள்ளைமகன் போல் விலா இற நக்கு ஈங்கு எள்ளினன் போம் என்று எடுத்து உரை செய்வோன் - உண்டி கொடுத்து உயிரோம்பும் பேரறத்தைத் தடை செய்ய நயந்து முயலுகின்ற இந்திரனுடைய பேதைமையை நினைந்து அமர் நகை செய்யும் இயல்புடைய அவ்வாபுத்திரன்றானும் பேதை மகன் ஒருவன் சிரிப்பது போன்று விலா வெலும்பு இறும்படி வாய் விட்டுப் பெருகச் சிரித்து இவ்விடத்திலே அவ்விந்திரனை இகழ்ந்து போமையா! போம்!! என்று சொல்லித் தான் பெறுகின்ற பேரின்பத்தையும் தனக்கு வழங்குதற்கு யாதுமில்லாத இந்திரனுடைய நல்குரவினையும் அவனுக்கு விளங்க விதந்தெடுத்துக் கூறுபவன்; ஈண்டுச் செய்வினை ஆண்டு நுகர்ந்திருத்தல் காணாத நும் கடவுளர் அல்லது - இந்நிலவுலகத்திலே வாழுங் காலத்தே இம்மைச் செய்தது மறுமைக்காகும் என்னும் பண்டைமாற்றறிவோடு செய்த நல்வினையின் பயனாகிய ஊதியத்தை நுகர்ந்திருத்தலைக் கண்டிருக்கும் சிறப்பினையுடைய நும் குடிகளாகிய மரப்பாவை போன்ற அவ்வமரரை அல்லது; அறஞ்செய் மாக்கள் புறங்காத்து ஓம்புநர் நல் தவம் செய்வோர் பற்று அற முயல்வோர் யாவரும் இல்லா - நெஞ்சத்தருள் சுரந்து அறத்தின் பொருட்டே அறஞ் செய்கின்றவரும் ஆற்றா மாக்கள் அரும் பசி களைந்து அவர்தம் அல்லல் களைந்து பாதுகாக்கும் வள்ளன்மையுடையோரும் தங்கருமமாகிய தவத்தைச் செய்வோரும் பவத்திறம் அறுகெனப் பற்றறுத்தற்கு முயல்பவரும் ஆகிய இத் திறத்து மெய்ந்நெறி வாழ்க்கையுடையோருள் ஒருவரேனும் இல்லாத; தேவர் நல் நாட்டுக்கு இறைவன் ஆகிய பெருவிறல் வேந்தே - தேவர் வாழுகின்ற அழகிய நாட்டை முறை செய்து காப்பாற்றும் தலைவனாகிய பெரிய வெற்றியையுடைய வேந்தரே கேட்டருள்க! என்றான்; என்க.

(வி - ம்.) வெள்ளை மகன் - அறிவிலி. சிரிப்பிலே பொழுது போக்குதல் சிறியவர்க்கியல்பு. சான்றோர் நகைப்புழியும் அளவாகவே நகைப்பர். பேதையரே வெடிச் சிரிப்புச் சிரிப்பர். முன்னைக்காதையில் "ஆபுத்திரன் பின்பு அமர் நகைசெய்து" (கூஉ) என்றது அவனுக்கு இயற்கையான நகைப்பாம். ஈண்டு இந்திரன் பேதைமை சாலப் பெரிதாகிய காரணத்தால் விலாவிறச் சிரித்தல் வேண்டிற்று.

இனி இந்திரன் அறவோனுக்குரிய பேரின்பம் வழங்க விரும்பியே தானத்துறுபயன் கொள்க என்றலின் இச் செயல் பேதைமையுடைய தாய் நகை பிறப்பித்தற் கிடனாகாதாம் பிறவெனின் அற்றன்று;

"எல்லா வுயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும்" (தொல்-சூ-கககஅ)

என்பதன்றே இன்பத்தினிலக்கணம். ஈண்டு ஆபுத்திரனுக் கின்பமாவது யாதென இந்திரன் தேவனாயிருந்தும் அறியமாட்டாமையும், ஆற்றுமாக்கள் அரும்பசி களையும் ஆபுத்திரன் கொடுப்பதற்கு அழுக்காறு கொண்டு அவ்வறத்தை இகழாமற் றடுத்தற்கு முயலுதலும் மாபெரும் பேதைமையே. இது செய்பவர் மக்களாயின் அவன் அமர் நகையே செய்திருப்பன். அவன்றானும் அமரர்கோமான் ஆயதனால் அவன் விலாவிற நகல் இயல்பே என்க. ஈண்டு,—

வாமனனாகி வந்து மண்ணிரந்த மாலுக்குக் கொடேல் என்று தடுத்த வெள்ளியை மாவலி நீ பெரும்பேதை காண்! வெள்ளி என்னும் பெயர் நினக்குச் சாலவும் பொருந்துமென்று இகழ்ந்து,

"எடுத்தொருவ ருக்கொருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினக்கழகி தோதகைவில் வெள்ளி!
கொடுப்பது விலக்குகொடி யோய்உனது சுற்றம்
உடுப்பதுவு முண்பதுவு மின்றிவிடு கின்றாய்"

எனவும்,

"வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில இன்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்"

எனவும் வரும் கம்பநாடர் திருவாக்கும், இவற்றிற்கும் முதலாக நின்ற தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்—

"கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்" (ககக)

எனவும்,

"நல்லா றெனினும் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று" (உஉஉ)

எனவும் வரும் பொன் மொழிகளும் நினைவுகூர்வார்க்கு இந்திரன் பேதைமையும் அவன் செய்யும் தீவினையும் நன்கு விளங்கும். இத்தகைய பேதைமை கண்டு அம் மேலோன் விலாவிற நகைத்தது, சாலவும் பொருத்தமே என்க.

வெள்ளை மகன்போல் என்னும் உவமை இயல்பாக அவன் வெள்ளை மகனல்லாமையை விளக்கி நின்றது.

விலாவிறநக்கு என்றது பெருகச் சிரித்து என்பதுபட நின்றது. "சிரித்துச் சிரித்து விலாவொடிந்து போயிற்று" என்னும் வழக்கு இக் காலத்தும் உளதாதலறிக.

எள்ளினன் : முற்றெச்சம். எடுத்துரை செய்வோன் என்றது அவன் பேதைமைக்குரிய காரணங்களை விதந்துகூறுபவன் என்றவாறு. நுகர்ந்திருத்தலைக் காண்டகு சிறப்பு என்றது அச் செயல் இழிதகவுடையது என்றிகழ்ந்தபடியாம்.

"இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகரே"

ஆகிய அவர். செய்ததுதானும் அறமன்று ஒரு வணிகத் தொழிலே என்பான் ஈண்டுச் செய்த அறம் என்றது செய்வினை என்றும் தேவர் என்றது கடவுளர் என்றும் ஓதினன். எமக்காயின் அவர் வணிகரே என்பது தோன்ற நுங்கடவுளர் என்றான்.

இனி, அறஞ்செய்மாக்கள் முதலிய மெய்ந்நெறி வாழ்க்கையோர் யாவரும் இல்லாத நாட்டை நன்னாடு என்றது இகழ்ச்சி. இங்ஙனம் இகழ்ந்தவன் அவனைப் பெருவிறல் வேந்தே என்றது இகழ்ச்சி மேலிகழ்ச்சியாம்.

### ஆபுத்திரன் யான் எய்தும் இன்பத்தினும் சிறந்த இன்பம் நின்னுலகத்தில் யாதுமில்லை எனலும், சினந்த இந்திரன் அவனை ஒறுத்தற்குச் செய்யும் செயலும்

௪௪ - ௫௪ : வருந்தி.........அளித்தலும்

(இ - ள்) தேவர்கோன் - அமரர் கோமானே! ஈதொன்று கேள்!; என் தெய்வக் கடிஞை வருந்தி வந்தோர் அரும்பசி களைந்து அவர் திருந்து முகம் காட்டும் - இதோ என் கையிலிருக்கின்ற தெய்வத்தன்மையுடைய பிச்சைக் கலமாகிய அமுதசுரபி என்னும் இத் திருவோடு என்பால் பசியினாலே வருந்தி வருபவருடைய பொறுத்தற்கரிய பசித்துன்பத்தைப் போக்கி இன்பத்தாலே திருத்த மெய்திய அவருடைய முகத்தை எனக்குக் காட்டுங்காண்! அக்காட்சியால் யான் எய்தும் பேரின்பம் சாலவும் பெரிது; உண்டி கொல்லோ உடுப்பன கொல்லோ பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ ஈங்கு அளிப்பன யாவை - பெரியீர்! நீவிர் நும் பொன்னாட்டில் இன்பப் பொருளாகக் கொண்டாடுகின்ற நுமது உணவாகிய அமிழ்தமோ! அல்லது நீயிர் உடுத்துகின்ற பொன்னாடைகளோ! அல்லது நீயிர் கூடி மகிழும் அரம்பையராகிய ஆடன் மகளிரோ! அல்லது நுமக்காவன செய்யும் பணியாளரோ! அல்லது இன்னோரன்னவை பிறவோ எனக்கு இத்தகு பேரின்பந் தரற்பாலனவை அவற்றுள் ஒன்று கூறுக!; என்றலும் - என்று அவ்வறவோன் வினவியவளவிலே; ஆயிரம் கண்ணோன் - ஆயிரம் கண்களையுடைய அத் தேவேந்திரன் அவன்பால்

உட்பகை கொண்டவனும்; அவன் பொருட்டால் - அவ்வறவோனை ஒறுக்கும் பொருட்டு; புரப்போன் பாத்திரம் பொருந்து ஊண் சுரந்து ஈங்கு இரப்போர்க் காணாது ஏமாந்திருப்ப - ஆருயிர் ஓம்புபு அவ்வறவோன் தன் அங்கைப் பாத்திரம் இரப்போர்க்குப் பொருந்துகின்ற உணவாகிய ஆருயிர் மருந்தைச் சுரந்து வழங்குவ தாக இருப்பவும் அவனுக்குத் தம் திருந்து முகங் காட்டிப் பேரின்பம் செய்வோராகிய இரவலரைக் காணப் பெறாமையாலே அப் பேரின்பம் பெறாமல் ஏமாந்திருக்கும்படியாக; நீள் நிலம் அடங்கலும் நிரப்பு இன்று எய்திய - அவனுறைகின்ற நெடிய இந் நாவலந்தீவு முழுவதும் வறுமை சிறிதும் இன்றி இருக்கு மொரு நிலைமை அடையும் வண்ணம்; பரப்பு நீரால் பல்வளம் சுரக்க என - தன்னுடைய முகில்கள் குறையும் மிகையுமின்றிப் பொழிந்து பரப்புகின்ற நீரினாலே பல்வேறு வளங்களையும் பெருக்குக என்று முகில்களுக்குப் பணிக்குமாற்றாலே; உலகோர்க்கு ஓங்கு உயர் பெருஞ்சிறப்பு அளித்தலும் - இந் நாவலந் தீவில் வாழுகின்ற மாந்தர்க்கெல்லாம் பண்டொரு காலத்தும் பெற்றிராத மிகவும் உயர்ந்த செல்வப் பேறாகிய பெருஞ் சிறப்பை வழங்கிவிடா நிற்றலாலே; என்க.

(வி - ம்.) புரப்போன் - ஆபுத்திரன். இரப்போரே தம் திருந்து முகத்தாலே ஆபுத்திரனுக்குப் பேரின்பம் செய்தலின் அவ்வின்பத்திற்கு அவன் ஏக்கற்றிருக்க இதுவே வழியாம் நம்மை இகழ்ந்தமைக்கு அவனை ஒறுத்தல் அவனை ஏமாந்திருப்ப வைத்தலே என்றுகருதி இந்திரன் இவ்வாறு செய்தான் என்க. அவ்வறவோன் பொருட்டால் இவ்வுலகினர்க்கு நலமே எய்துவதாயிற்று என்பது தோன்ற நூலாசிரியர் அவன் பொருட்டால் ஆயிரங் கண்ணோன் ஓங்குயர் பெருஞ்சிறப்பு உலகோர்க்கு அளித்தான் என்றார்.

இனி, ஆயிரங்கண்ணிருந்தும் யாதுபயன்? அவ்வறவோனுடைய அருள் நிரம்பிய உள்ளத்தைக் கண்டு மகிழ அக்கண் ஒன்றேனும் இலன் என்றிகழ்தற்கு ஆயிரங்கண்ணோன் என்று கண்களை விதந்தெடுத்தோதினர். சுரக்க என்று முகில்களைப் பணிக்குமாற்றால் என இசையெச்சம் வருவித்தோதப்பட்டது.

நிரப்பு - நல்குரவு. இன்றி என்னும் வினையெச்சிகரம் இன்று என உகரமாயிற்றுச் செய்யுளாதலின். எய்திய செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். நீணிலம் என்றதும் உலகோர் என்றதும் நாவலந்தீவு என்னும் துணையாம். என்னை? உலகின் பகுதியையும் உலகம் என்னும் வழக்குண்மையை "மாயோன்மேய காடுறை யுலகமும்" எனவரும் தொல்காப்பியத்தினும் (பொருளதி - ௫ - ௫) காண்க.

இனி, இக் காதையிலேயே 'சாவக நன்னாட்டுத் தண்பெயல் மறுத்தலின் ஊனுயிர் மடிந்தது (௭௦-௭௫) என வந்ததின் ஈண்டு நீணிலம் என்பதற்கும் உலகம் என்பதற்கும் நாவலந் தீவெனவே பொருள் கூறல் வேண்டிற்று. ஆயின் பாண்டிநாடெனலே சாலும் பிறவெனின்! அற்றன்று நாவலந்

நீவின் ஏனைப்பகுதியில் வற்கடம் நிகழ்ந்திருப்பின் ஆபுத்திரன்றானே அங்குச் சென்றிருப்பன், அது பொருளன்றென்க. அவன் அல்லது அப் பகுதியில் உள்ளவர் அவன்பால் வருதலும் கூடுமாகலின் மரக்கலமேறிச் செல்லுதலின் யாமுரைத்ததே நல்லுரை என்று கொள்க.

## வறுமையில் வழி வையக மெய்தும் சிறுமை

### ௫௫ - ௬௪ : பன்னீ..........முறைமையதாக

(இ - ள்.) பாண்டி நல் நாடு பன்னீராண்டு மன்னுயிர் மடிய மழை வளம் இழந்தது - இங்ஙனம் இந்திரன் சிறப்புச் செய்தற்கு முன்னர்ப் பாண்டியனுடைய நல்ல நாடானது பன்னிரண்டு ஆண்டுகள் தன்பால் வாழும் உயிரினம் இறந்து படும்படி மழை வளம் பெறாமல் வற்கடமுற்றுக் கிடந்தது இப் பொழுது; வானத் தொழில் உதவ மாநிலம் கொழுப்ப - இந்திரன் ஆணையாலே மழை காலந்தவறாமல் முறையாகப் பெய்யுந் தொழிலாலே வளம் பெருக்கி உதவி செய்தலாலே, பாண்டி நாட்டோடு பெரிய இந் நாவலந் தீவு முழுவதுமே செல்வச் செழிப்புற்றமை யாலே; உயிர் பசிப்பு அறியாப் பான்மைத்து ஆகலின் - உயிரினம் சிறிதும் பசிப்பிணியை அறியாத தொரு தன்மையைப் பெற்றமையாலே; ஆர் உயிர் ஓம்புநன் அம்பலப் பீடிகை ஊண் ஒலி அரவம் ஒடுங்கியது ஆகி - அரிய உயிர்களைப் பாதுகாக்கும் ஆபுத்திரன் உறையும் அம்பலப் பீடிகையிடத்தே இரவலரும் பிறவுயிரும் குழீஇ உண்பதனாலே யுண்டாகும் மகிழ்ச்சி ஆரவாரம் நாளுக்கு நாள் அடங்கி இல்லையாகி; விடரும் தூர்த்தரும் விட்டேற் றாளரும் நடவை மாக்களும் கைமொடு வைகி - அதற்கு மாறாகத் தீயொழுக்க முடைய கயமாக்களும் பரத்தைமை ஒழுக்க முடையோரும கல்லெறிந்தன்ன இன்னாச் சொல் கூறு வோரும் வாளாது ஊர் சுற்றித் திரியுமாக்களும் வந்து சிரிப் பொலியோடு குழீஇ; வட்டும் சூதும் வம்பக் கோட்டியும் முட்டா வாழ்க்கை முறைமையது ஆக - வட்டுருட்டலும சூதுப்போராடு தலும் வறுமொழி பேசி மகிழ்வோர் குழீஇ ஆரவாரித்தலும் ஆகிய புன்னெறியாளர் குறையின்றி வாழ்க்கை நடத்தும் முறை மையுடையதாகி விட்டமையாலே; என்க.

(வி - ரை.) பண்டு பன்னீராண்டு வற்கடமுற்றுக்கிடந்த பாண்டி நாடு இப்பொழுது மாநிலங்கொழுத்தலாலே உயிர் பசிப்பறியாப் பான்மைத் தாகலின் உயிர் ஓம்புநன் பீடிகை ஊணொலி ஒடுங்கியதாகி, விடர் முதலியோர் முட்டாவாழ்க்கை நிகழ்த்தும் முறைமையதாகி விட்டமையாலே என்க.

இதனால், மாந்தர் உடலோம்புதற்கியன்ற தொழில் ஏதும் செய்ய வேண்டாதபடி இந்நிலவுலகம் ஏதேனும் ஒரு தெய்வத்தாலே வள

முடையதாக்கி விடப்பட்டால் அப்பொழுது இவ்வுலகத்தே மாந்தர் வாழ்க்கை எத்துணைக் கீழ்மையுடையதாகி விடும் என்பதை இந்நாலாசிரியர் மிகவும் நுண்ணிதாக எண்ணிப்பார்த்து இவ்வாறிருக்கும் என்று இங்குக் கூறிக் காட்டும் புலமை வித்தகம் எண்ணி எண்ணி இறும்பூது கொள்ளற்பாலதாம். இனி—

"இரப்பாரை இல்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று" (குறள் - 1058)

என்னும் அருமையான திருக்குறளைப் பாடிய தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்தாமும் இங்ஙனம் ஒருலகத்தைத் தமது கூர்த்த அகக்கண்ணிற் கற்பனைசெய்து பார்த்து அத்தகையதோர் உலகம் மக்கள் வாழ்தற்கு ஒருசிறிதும் தகுதியுடையதாக இராது என்றுணர்ந்தே இத் திருக்குறளைப் பாடியருளினர் என்பதில் ஐயமில்லை. இதனால் உலகில் இரப்போர் என்றென்றும் இருத்தல் வேண்டும் என்று அத்தெய்வப்புலவர் கருதினர் என்று கருதிவிடுதல் அறியாமையேயாம். ஆயின் அவர் கருத்துத்தான் என்னை எனின்? உலகம் உள்ளதனையும் இரப்பவரும் இருக்கவே செய்வர், நும்கடன் இரவாமல் முயன்று வாழ்வதேயாம். இரப்பார்க்கு ஈதலும் நும் முதற் கடன் என்பதே அத் தெய்வப்புலவர் கருத்தாம் என்றுணர்க.

இற்றைநாளினும் செல்வச்செழிப்பு மிக்கதாகவும் இரவலர் இல்லையாகச் செய்யப்பட்டதும் ஆகிய நாட்டில் மாந்தர் வாழ்க்கைப்பண்பாடு வீழ்ச்சி யெய்திய காரணத்தால் தற்கொலைகளும் மனக்குழப்பமும் பித்துப் பிடித்தலும் ஏனைய நாட்டினும் மிக்குவருவனவாக யாம் செய்தித்தாள்களிற் காணுஞ் செய்திகள் ஈண்டுக்காட்டிய சான்றோர் கருத்துகளுக்கு அரணாதல் நுண்ணிதின் அறிந்து கொள்க.

வசித்தொழில் - மழையின் தொழில். பசிப்பு - பசிப்பிணி. ஆருயிர் ஓம்புநன் - ஆபுத்திரன். ஊண்ஒலி - உண்பார் செய்யும் ஆரவாரம்.

விடர் - பிறர்க்குத் தீங்கு செய்வோராகிய கயவர். இவர் செயல் விடம் போலுதலின் விடர் எனப்பட்டார். என்னை?

"ஈக்கு விடந்தலையில் எய்தும் இருந்தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர விற்குவிடம் பல்லளவே துச்சனர்க்
கங்கமெல் லாம்விடமே யாம்" (நீதிவெண்பா - 18)

எனவருஞ் செய்யுளும் நோக்குக.

தூர்த்தர் - பரத்தர். "தூர்த்தரும் தூர்ப்பாரலர்" (நீதிநெறி விளக்கம்) என்புழியும் அஃதப்பொருட்டாதலுணர்க. விட்டேற்றுளர் கல்லெறிந்தன்ன இன்னாச் சொல்பேசும் கயவர். நடவை - நடைவழி. காடு கொழுப்ப உயிர் பசி அறியாப் பான்மைத்தாகலின் பீடிகை ஒலி ஒடுங்கியதாகி வைகி இத்தகைய வாழ்க்கை முறைமையதாக என இயைக்க.

## ஆபுத்திரன் ஊர்தோறும் உண்போர் வினவிச் செல்லல்

### ௬௫ - ௭௫ : ஆபுத்திரன்........என்றலும்

(இ-ள்.) ஆபுத்திரன் தான் அம்பலம் நீங்கி ஊர் ஊர் தோறும் உண்போர் வினாஅய் - ஆபுத்திரன்றானும் இரப்போர் யாரையும் காணப் பெறாமையாலே அவ்வம்பலத்தினின்றும் புறப்பட்டு ஊர்தோறும் ஊர்தோறும் சென்று இரவலர் உளரோ என அவ்வூர்களில் வாழ்வோரை வினவிய வழி; யாவரும் மார் இவன் என்றே இகழ்ந்தாங்கு - வியத்தகு மிவனுடைய வினாவைக் கேட்ட ஊர் மாக்கள் இங்ஙனம் வினவும் இவன்றான் யாவனோ? பித்தேறியவனோ பேய் பிடிக்கப்பட்டவனோ? என்றென்று தத்தம் வாய் தந்தன கூறி இகழ்ந்துழி; அருந்து ஏமாந்த ஆருயிர் முதல்வனை - இவ்வாறு பிறர் அருந்துதல் கண்டின்புறுமின்பத்திற்குப் பெரிதும் ஏக்கற்றிருக்கின்ற ஆருயிர்க் கெல்லாம் முதல்வனாந் தகுதியுடைய அவ்வாபுத்திரனை; இருந்தாய் நீயோ என்பார் இன்மையின் - ஐய இங்கிருக்கின்ற நீ ஆபுத்திரனேயோ? என்று வினவி உவப்பார் ஒருவரேனும் இந்நிலத்தே இல்லாமையாலே; திருவின் செல்வம் பெருங்கடல் கொள்ள ஒரு தனி வரூஉம் பெருமகன் போலத் தானே தமியன் வருவோன் தன் முன் - ஆகூழாலே தான பெற்ற திருத்தகு செல்வத்தைப் பெரிய கடல் கொண்டு விட்டமையாலே தான மட்டும் உய்ந்து கரையேறி வருமொரு பெருந்தகை வணிகனைப் போலத் தான் மட்டுமே தமியனாக ஒரு வழியிலே வருகின்ற அவ்வறவோன் முன்னர்; மா நீர் வங்கம் வந்தோர் வணங்கி - வேற்று நாட்டிலிருந்து கடலிலே மரக்கலம் ஏறி வந்திறங்கி வருகின்ற வணிகருள் இவனைப் பண்டறிவுடையோர் சிலர் கண்டு கை குவித்து வணங்கி; உரவோய் - ஆருயிர் ஓம்பும் ஆற்றலமைந்த அறவோய்!; சாவக நல் நாட்டுத் தண் பெயல் மறுத்தலின் ஊண் உயிர் மடிந்தது என்றலும் - யாம் சென்றிருந்த சாவகம் என்னும் நல்ல நாட்டிலே நீண்ட காலமாகக் குளிர்ந்த மழை பெய்யா தொழிந்தமையாலே உடம்பெடுத்த உயிரினம் இறந்தொழிந்தது கண்டீர்! என்றறிவியா நிற்ப; என்க.

(வி - ரை.) உண்போர் வினவிவருவோர் உலகத்தின்மையாலே இங்ஙனம் வினவுபவன் பித்தேறியவனோ பேய் பிடிக்கப்பட்டவனோ இன்னன் என்றறிகிலேம் என வினவப்பட்டோர் இகழ்ந்தனர் என்றவாறு. இகழ்ந்தாங்கு இகழ்ந்துழி. அருந்து அருந்தல் : தொழிற்பெயர் விகுதிதொக்கது. இந்திரனாலும் வரவேற்கும் மாபெருஞ் சிறப்புடைய ஆபுத்திரனை இப்பொழுது நீயோ இங்கிருந்தனை என்று வினவுவார் யாரும் இலராயினர் என்றிரங்கியவாறு. திருவின் செல்வம் என்றது

சிறப்புடைய செல்வம் என்றவாறு. திருத்தகு செல்வத்தோடு கடலில் வந்துழிச் செல்வத்தைக் கடல் கொள்ளத் தான் மட்டுமே தமியனாய் வருகின்ற வணிகனைப்போல என்க. என்னை? அங்ஙனம் வருமியல்புடையோர் வணிகரே யாதலின். இங்ஙனம் தகுதி பற்றி உரைகூறினும், ஏக்கற்று வருதற்கு வணிகன் உவமை. செல்வம் ஈண்டு அருள் அறமாகிய செல்வத்திற்குவமை. வருவோன் : பெயர்; ஆபுத்திரன். வங்கம்-மரக்கலம். வணங்கி என்றமையால் இவனைப் பண்டறிந்தவர் என்பது பெற்றும். "ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப் பசியை மாற்றுவார் ஆற்றலிற் பின்" (குறள்-உஉரு) என்பது பற்றி ஆபுத்திரனை உரவோய்! என்று விளித்தனர். உரவு-ஆற்றல். இங்ஙனம் விளித்தார் நின் ஆற்றல் இப்பொழுது அந்நாட்டிற்குப் பெரிதும் பயன்படும் என்னும் தமது கருத்துக் குறிப்பால் தோற்றுவித்தற்கு.

## ஆபுத்திரன் மரக்கலமேறி ஆருயிர் ஓம்பச் செல்லுதல்

௭௯ - ௮௪: அமரர்.........போதலும்

(இ - ள்.) அமரர் கோன் ஆணையின் அருந்துவோர்ப் பெறாது குமரி மூத்த என் பாத்திரம் ஏந்தி - இந்திரனுடைய கட்டளையினாலே ஏற்றுண்ணும் இரவன்மாக்களைப் பெறாமையாலே காதலனைப் பெறாமல் கன்னியாகவே இருந்து வறிதே மூப்பெய்தினாளொரு மகளைப் போன்று வறிதே காலங் கழியப் பெறுகின்ற என்னுடைய தெய்வப் பாத்திரமாகிய அமுதசுரபியைக் கைக்கொண்டு; ஆங்கு அந்நாட்டுப் புகுவது என் கருத்து என-நீயிர் கருதியாங்கு அச் சாவக நாட்டிற் புகுந்து ஆருயிர் ஓம்ப வேண்டும் என்பதே என் கருத்தும் என்று அவர்கட்கு உவகை மொழிந்து பின்னர்; மகிழ்வுடன் மாக்களொடு வங்கம் ஏறி- பெரிய மகிழ்ச்சியோடே சென்று வேற்று நாட்டிற்குச் செல்லும் மக்களோடே மரக்கலத்திலேறிச் செல்லும் பொழுது; கால் விசை கடுகக் கடல் கலக்குறுதலின் நீர் வழங்கும் வங்கம் மால் இதை வீழ்த்து-காற்றினது வேகம் மிகுதலாலே கடல் நீர்கொந்தளித்துப் பெரிதும் கலக்குறுகிற்ப அக் கடலிலே இயங்குகின்ற அம் மரக்கலமானது தன் பெரிய பாய்களை இறக்கி; மணிபல்லவத்து இடை ஒரு நாள் தங்கியது - மணிபல்லவத்தீவினது துறையிலே ஒரு நாள் தங்குவதாயிற்று; தான் ஆங்கு இழிந்தனன - ஆபுத்திரன் மரக்கலத்தினின்றும் அம் மணிபல்லவத் தீவின்கண் இறங்கி இருந்தனனாக; வல் இருள் இழிந்தோன் ஏறினன் என்று இதை எடுத்து - அற்றை இரவின்கண் செறிந்த இருளையுடைய இடையாமத்தே காற்று விசை தணிந்து அமைதியுற்றமை கண்ட அம் மரக்கலத்து நீகான் தரையிலிறங்கிய ஆபுத்திரன் ஏறினன் என்று கருதியவனாய்ப் பாய் விரித்துச் செல்ல வேண்டிய திசை நோக்கிச் செலுத்துதலாலே; வங்கம் போதலும் - அம் மரக்கலம் போய் விட்டமையாலே என்க.

(வி - ரை.) குமரிமூத்தல் - மணமின்றிக் கன்னிப்பெண் தமியளாகவே மூத்துவிடுதல். பயனின்றி வறிதே காலங் கழித்தமைக்குவமையாக இங்ஙனம் கூறினர். தனக்கும் பிறர்க்கும் பயனின்றிக் கிடத்தல் பற்றித் தானுமகிழாமல் காதலனை மகிழ்வியாமலும் வறிதே காலம் போக்கும் குமரி மூத்தாளை உவமை எடுத்தார்; இவ்வாறே ஆசிரியர் திருவள்ளுவரும்,

> "அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
> பெற்றாள் தமியள்மூத் தற்று"                (குறள் - க00எ)

என ஓதுதலும் உணர்க.

கால் - காற்று. மால் இதை - பெரிய பாய். இழிந்தோன் : ஆபுத்திரன். நீகான்-மரக்கலம் இயக்குபவன். இனித் திண்ணை மெழுகிற்று என்றாற் போல வங்கத்தையே வினைமுதலாகக் கூறினுமாம். இருளில் போனமையால் ஆபுத்திரன் அது போனமை அறிந்திலன் என்பதும் அறிந்தாம்.

## ஆபுத்திரன் உண்ணா நோன்பின் உயிர்பதிப் பெயர்த்தல்

### அரு - கூரு : வங்கம்.........பெயர்ப்புழி

(இ - ள்.) வங்கம் போய பின் - இவ்வாறு மரக்கலம் சென்ற பின்னர்; வருந்து துயர் எய்தி - பெரிதும் வருந்தி; அங்கு வாழ்வோர் யாவரும் இன்மையின் - அம் மணிபல்லவத் தீவகத்தே மாந்தர் ஒருவரும் வாழ்வோர் இல்லாமையாலே; மன்னுயிர் ஓம்பும் இம் மாபெரும் பாத்திரம் என் உயிர் ஓம்புதல் யான் பொறேன் - நிலை பெற்ற எண்ணிறந்த உயிர்களைப் பாதுகாக்கும் பெருஞ்சிறப்பமைந்த இவ்வமுத சுரபியானது என்னுடைய உயிரைப் பாதுகாக்குமளவிற்றாகச் சிறுமையுறுவதனை யான் பொறுத்துக் கொள்ள வல்லேன் அல்லேன்; தவந்தீர் மருங்கின் தனித் துயர் உழந்தேன் - முற்பிறப்பிற் செய்த நல்வினை தீர்ந்துவிட்ட பக்கலிலே ஒப்பற்ற பெரிய துயரத்தை நுகர்ந்தொழிந்தேன்; ஒழிந்திடுக; பாத்திரம் சுமந்து என் என்றனன் தொழுது - இந் நிலையிலே இத் தெய்வப் பாத்திரத்தைச் சுமந்து கொண்டு வாளாதுயிர்வாழ்தலிற் பயன் என்னை? என்று கருதியவனாய் அப் பாத்திரத்தைத் தொழுது; கோமுகி என்னும் கொழு நீர் இலஞ்சியில் விடுவோன் ஓர் யாண்டு ஒரு நாள் தோன்று என - ஆண்டுக் கிடந்த கோமுகி எனனும் பெயரையுடைய பொய்கை நீரிலே முழுகவிடுபவன் தெய்வப் பாத்திரமே நீ ஓரியாண்டிற்கு ஒரு முறை ஒரு நாள் மட்டும் நீரின் மேலெழுந்து தோன்றுவாயாக! என்றும், ஆங்கு அருள் அறம் பூண்டு ஆருயிர் ஓம்புநர் உளர் எனின் அவர் கைப் புகுவாய் என்று -

அப்பொழுது ஈண்டு யாரேனும் அருளறத்தை மேற்கொண்டு அரிய உயிர்களைப் பாதுகாக்கும் நனனர் நெஞ்சம் உடையோர் இவ்விடத்தே வந்திருப்பாராயின அத் திருவுடையோர் கையிலே சென்று எய்துவாயாக வென்றும் வேண்டுதல் செய்து விட்ட பின்னர்; ஆங்கு உண்ணா நோனபோடு உயிர்பதிப் பெயர்ப்புழி - அவ்விடத்திலேயே உண்ணா நோன்புடனே வடக்கிருந்துயிர் விடுகின்ற செவ்வியிலே; என்க.

(வி - ம்.) வருந்துதற்குக் காரணமான துன்பம் எனினுமாம். அங்கு - அம் மணிபல்லவத்தீவில். இதனால் அத் தீவு மக்கள் வாழ்தவில்லாத வறுந்தீவு என்பது பெற்றாம்.

ஈத்துவத்தற் கிடமின்மையாலே அவ்வின்னாமையோடு உயிர் சுமந்து வாழ்தலை யான் பொறுக்ககிலேன் என்றவாறு. ஈண்டு,

"சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீதலியையாக் கடை" (குறள் - உகo)

எனவரும் அருமைத் திருக்குறளுக்கு இவ்வாபுத்திரன் தலைசிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்தலுணர்க.

தவம் என்றது நல்வினையை. பாத்திரம் சுமந்து என்? என மாறுக. உண்ணாநோன்பினால் உயிர் துறத்தலை வடக்கிருத்தல் என்று கூறுப.

## ஆபுத்திரன் மாறிப் பிறந்தமை கூறுதல்

கூகூ - கoசு: அந்நாள்.........தானேன்

(இ - ள்.) அந் நாள் ஆங்கு மான் அவன்பால் சென்றேன் - மணிமேகலாய் கேள் அவன உயிர்பதிப் பெயர்க்கின்ற அதே நாளிலே அத் தீவகத்திலே அறவோன் ஆசனம் தொழச் சென்ற யான் அவனிடத்தே சென்றேனாக; என் உற்றனையோ என்று கேட்ப - அவனை நோக்கி நீ இங்ஙனம் உயிர் நீத்தற்குக் காரணமாக எய்திய இடுக்கண் எனனையோ? என்று வினவ; தன் உற்றன பல தான எடுத்து உரைத்தனன் - அவன்றானும் தனக்கு வந்துற்ற துயரங்கள் பலவற்றையும் தானே எனக்கு எடுத்துக் கூறினன் காண்!; குண திசைத் தோன்றிக் கார் இருள் சீத்துக் குட திசைச் சென்ற ஞாயிறு போல-நங்காய்! அவ்வறவோன்றானும் கீழ்த்திசையிலே தோன்றித் தன் பேரொளியாலே உலகைக் கவிந்து மூடிய கரிய இருளைப் போக்கி உயிர்கட்குத் துயர் துடைத்து இன்பம் வழங்கியவாறே மேற்றிசையிலே சென்று மறைந்த ஞாயிற்று மண்டிலம் போன்று தான் தோன்றிய நாள் தொடங்கி அருளறமே பூண்டு ஆருயிர்க்

கெல்லாம் உண்டி கொடுத்து அருந்துயர் களைந்து பேரின்பம் வழங்கியவாறே; மணிபல்லவத்திடை மன் உடம்பு இட்டு மன்னுயிர் தாங்கும் தணிமாக் கருத்தொடு - மணிபல்லவத் தீவகத்தே தன்னுயிர் தங்கியிருந்த உடம்பினைப் போகட்டுப் பின்னரும் உலகிலே உடம்பொடு நிலைபெற்ற உயிரினங்களைப் பாதுகாக்கும் தணியாத ஆர்வமுடைய கருத்துடனே போய்; ஆங்கு அவன் சாவகம் ஆளும் தலைத்தாள் வேந்தன் ஆவயிற்று உதித்தனன் - அவ்வாபுத்திரன் தான் கருதிச் சென்ற அந்தச் சாவக நாட்டை ஆட்சி செய்கின்ற தலைசிறந்த முயற்சியை யுடைய மன்னவன் நாட்டில் ஓர் ஆவினது வயிற்றிலே கருவாகி மக்கள் உருவத்தோடே பிறந்தனன் காண்! என்று அறவண வடிகள் மணிமேகலைக்கு அறிவித்தனர் என்பதாம்.

(வி - ம்.) அந்நாள் - ஆபுத்திரன் உயிர் நீக்கும் நாள். யான் புத்த பீடிகையைத் தொழச் சென்றேன் என்றுராகக் கூறிக் கொள்க. தன் உற்றன - தனக்கு வந்துற்ற துன்பங்கள்.

ஞாயிறு - ஆபுத்திரன் தோற்றத்திற்கும் செயற்கும் மறைவிற்கும் உவமை. காரிருள் சீத்து என்றுவமைக்குக் கூறிய அடைமொழியைப் பொருட்கும் ஏற்றிப் பொருந்துமாறு அவனது அருளறச் செயலும் விரித்துக் கூறப்பட்டது.

அவாவின் வழித்தாக வழி முறைத் தோற்றம் வரும் ஆகலின் சாவக நாடு சென்று ஆங்கு ஆருயிர் ஓம்பும் கருத்தோடு இறந்தமையாலே அந் நாட்டிலே சென்று பிறந்தனன் என்றும் தன்னை வளர்த்த ஆனினத்தின் பாற் பேரன்புடையனாயிருந்தமையின் ஆவயிற்றிற் பிறந்தான் என்றும் அப் பிறப்பிலே செய்த நல்வினைப் பயனாக மன்னனுக்கு அணுக்கராகிய முனிவனுடைய பசு வயிற்றிற் பிறந்து மன்னனும் ஆயினன் என இதன் கண் குறிப்புப் பொருள் தோற்றுவித்தமையும் அறிக.

இனி இக் காதையை - அவற்குப் புகுந்தது கேளாய்! உழந்தோர் ஏத்தி மலைக்கும் என்றலும் இல்லோன் அனூர் எய்த கெடுக தீது என விளக்குத் தோன்றி அழியல் கொள்ளாய் என்றே கொடுத்தலும் தலைவியை வணங்கி பசிதீர்த்து ஓம்பலின் சும்மை ஒலிப்ப இந்திரன் கம்பளம் துளங்கியது ஆகலின் ஊன்றி ஆகித்தோன்றிக் கொள்கென, நக்கு உரைப்போன் வேந்தே காட்டும் கடிஞை யாவை அளிப்பன என்றலும், புரப்போன் இருப்ப உலகோர்க்கு அளித்தலும் நாடு கொழுப்ப பீடிகை முறைமையதாக நீங்கி ஏமாந்த முதல்வனை நீயோ என்பார் இன்மையின் வருவோன் முன் வந்தோர் வணங்கி மடிந்தது என்றலும் புகுவது என் கருத்தென ஏறி இழிந்தனன் வங்கம் போதலும் துயர் எய்தி இன்மையின் பொறே என் என விடுவோன் புகுவாய் என்று பெயர்ப்புழி சென்றேன் கேட்ப உரைத்தனன் உடம்பிட்டு வேந்தன் ஆவயிற்று உதித்தனன் என்றியைத்திடுக.

பாத்திர மரபு கூறிய காதை முற்றிற்று.

# கரு. பாத்திரங் கொண்டு பிச்சை புக்க காதை

[பதினைந்தாவது மணிமேகலை பாத்திரங் கொண்டு பிச்சைக்குப் பெருந்தெரு போய பாட்டு]

அஃதாவது : அறவணர்பால் ஆபுத்திரன் வரலாறும் அவன் சிந்தாதேவி அருளிய அமுதசுரபியைப் பெற்று ஆருயிர் ஓம்பியதும் அமுதசுரபியின் மாண்பும் பிறவும் கேட்டறிந்த பின்னர் அமுதசுரபியை அங்கை ஏந்தி அதனபால் ஆருயிர் மருந்து ஒழிவின்றிச் சுரத்தற் பொருட்டு முதன் முதலாக, "பத்தினிப் பெண்டிர் பண்புடன் இடூஉம் பிச்சை யேற்றல் பெருந்தகவுடைத்து" என்னும் கொள்கையுடையவளாய்ப் பிக்குணிக் கோலத்தோடு பெருந்தெருவிலே பிச்சை ஏற்றற்குச் சென்ற செய்தியைக் கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இதன்கண்—ஆபுத்திரனை நாவான் நக்கிப் பாலூட்டி ஏழு நாள்காறும் புறம் போகாமனின்று புரந்த பசு அந் நல்வினைப் பயனாலே சாவக நாட்டிலே மண்முகன் என்னும் மாமுனிவன்பால் எய்திப் பொற் கோடும் பொற் குளம்பும் உடையதாய்க் கண்டோ ரெல்லாம் கைதொழு தேத்தும்படி ஈனு முன்னமே இன்னுயிர்க் கெல்லாம் தான் முலை சுரந்தூட்டி அருளறம் பேணுகின்ற செய்தி யும்; அம் மாமுனிவன் அப் பசுவின் வயிற்றிலே பொன் முட்டை யிலே மழை வளம் சுரப்பவும் மன்னுயிர் ஓம்பவும உயிர் காவலன் ஒருவன் வந்து பிறப்பான் என்று தன் இருத்தியால் அறிந்து கூறியதும் ஆகிய இச் செய்திகளையும் அறவணர் மீண்டும் மணிமேகலைக்குக் கூறி, அப் பசுவின் வயிற்றிலே புண்ணிய மிகுதி யாலே ஆபுத்திரன் பொன் முட்டையினூடே மக்கள் உருவிலே கருவாகி வளர்ந்து பிறத்தலும், ஆபுத்திரன் மீண்டும் பிறந்த அப்பொழுது உலகினகண் புத்தபிரான பிறக்கும்போதுண் டாகும் நன்னிமித்தமெல்லாம் நிகழ்ந்த செய்தியும் உலகத் துள்ளோர் வியப்புறுதலும் துறவோர் சக்கரவாளக் கோட்டத்துக் கந்திற்பாவையின்பாற் சென்று அந் நன்னிமித்தங்கட்குக் காரணம் வினுதலும் அஃது அறவணர்பாற் கேட்டறிமின் என்றதும் அவரெல்லாம் தம்பால் வந்து கேட்ட செய்தியும் கூறி மணிமேகலையை அறஞ்செய்யப் பணித்தலும் அவள் பிச்சை ஏற்கப் பெருந்தெரு அடைந்ததும், காயசண்டிகை ஆதிரை மனையகத்திலே ஏற்க வேண்டும் எனலும் பிறவும் கூறப்படும்.

இன்னுங் கேளாய் இளங்கொடி மாதே
அந்நாள் அவனை ஓம்பிய நல்லாத்
தண்ணென் சாவகத் தவள மால்வரை
மண்முகன் என்னும் மாமுனி இடவயின்
பொன்னின் கோட்டது பொற்குளம் புடையது
தன்னலம் பிறர்தொழத் தான்சென் றெய்தி
ஈனா முன்னம் இன்னுயிர்க் கெல்லாம்
தான்முலை சுரந்து தன்பால் ஊட்டலும்
மூன்று காலமும் தோன்றநன் குணர்ந்த
ஆன்ற முனிவன் அதன்வயிற் றகத்து
மழைவளஞ் சுரப்பவும் மன்னுயிர் ஓம்பவும்
உயிர்கா வலன்வந் தொருவன் தோன்றும்
குடர்த்தொடர் மாலை பூண்பா னல்லன்
அடர்ப்பொன் முட்டை அகவையி னானெனப்
பிணிநோய் இன்றியும் பிறந்தறஞ் செய்ய
மணிபல் லவத்திடை மன்னுயிர் நீத்தோன்
தற்காத் தளித்த தகைஆ அதனை
ஒற்கா வுள்ளத் தொழியான் ஆதலின்
ஆங்கவ் வாவயிற் றமரர்கணம் உவப்பத்
தீங்கனி நாவல் ஓங்குமித் தீவினுக்
கொருதா னாகி உலகுதொழத் தோன்றினன்
பெரியோன் பிறந்த பெற்றியைக் கேள்நீ
இருதிள வேனிலில் எரிகதிர் இடபத்
தொருபதின் மேலும் ஒருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவையின்
போதித் தலைவனொடு பொருந்திய போழ்தத்து
மண்ணக மெல்லாம் மாரி இன்றியும்
புண்ணிய நன்னீர் போதொடு சொரிந்தது
போதி மாதவன் பூமியில் தோன்றும்
கால மன்றியும் கண்டன சிறப்பெனச்
சக்கர வாளக் கோட்டம் வாழும்
மிக்க மாதவர் விரும்பினர் வியந்து
கந்துடை நெடுநிலைக் கடவுள் எழுதிய
அந்திற் பாவை அருளு மாயிடின்
அறிகுவம் என்றே செறியிருள் சேறலும்
மணிபல் லவத்திடை மன்னுயிர் நீத்தோன்
தணியா உயிருயச் சாவகத் துதித்தனன்
ஆங்கவன் றன்திறம் அறவணன் அறியுமென்
றீங்கென் நாவை வருத்திய திதுகேள்
மன்னான் வேந்தன் மண்முகன் என்னும்

புண்ணிய முதல்வன் திருந்தடி வணங்கி
மக்களை யில்லேன் மாதவன் அருளால்
பெற்றேன் புதல்வனை என்றவன் வளர்ப்ப
அரைசாள் செல்வம் அவன்பால் உண்மையின்
நிரைதார் வேந்தன் ஆயினன் அவன்தான்
துறக்க வேந்தன் துய்ப்பிலன் கொல்லோ
அறக்கோல் வேந்தன் அருளிலன் கொல்லோ
சுரந்து காவிரி புரந்துநீர் பரக்கவும்
நலத்தகை இன்றி நல்லுயிர்க் கெல்லாம்
அலத்தற் காலை யாகிய தாயிழை
வெண்திரை தந்த வமுதை வானோர்
உண்டொழி மிச்சிலை யொழித்துவைத் தாங்கு
வறனோ டுலகின் வான்துயர் கெடுக்கும்
அறனோ டொழித்தல் ஆயிழை தகாதென
மாதவ னுரைத்தலும் மணிமே கலைதான்
தாயர் தம்மொடு தாழ்ந்துபல ஏத்திக்
கைக்கொண் டெடுத்த கடவுட் கடிஞையொடு
பிக்குணிக் கோலத்துப் பெருந்தெரு அடைதலும்
ஒலித்தொருங் கீண்டிய ஊர்க்குறு மாக்களும்
மெலித்துகு நெஞ்சின் விடரும் தூர்த்தரும்
கொடிக்கோ சம்பிக் கோமகன் ஆகிய
வடித்தேர்த் தானை வத்தவன் தன்னை
வஞ்சஞ் செய்துழி வான்தளை விடீஇய
உஞ்சையில் தோன்றிய யூகி அந்தணன்
உருவுக் கொவ்வா உறுநோய் கண்டு
பரிவுறு மாக்களில் தாம்பரி வெய்தி
உதய குமரன் உளங்கொண் டொளித்த
மதுமலர்க் குழலாள் வந்து தோன்றிப்
பிச்சைப் பாத்திரங் கையினேந் தியது
திப்பியம் என்றே சிந்தைநோய் கூர
மணமனை மறுகின் மாதவி யீன்ற
அணிமலர்ப் பூங்கொம் பகமலி யுவகையில்
பத்தினிப் பெண்டிர் பண்புடன் இடூஉம்
பிச்சை யேற்றல் பெருந்தக வுடைத்தெனக்
குளனணி தாமரைக் கொழுமலர் நாப்பண்
ஒருதனி யோங்கிய திருமலர் போன்று
வான்தரு கற்பின் மனையுறை மகளிரில்
தான்தனி யோங்கிய தகைமையள் அன்றே
ஆதிரை நல்லாள் அவள்மனை இம்மனை
நீபுகல் வேண்டும் நேரிழை என்றனன்

வடதிசை விஞ்சை மாநகர்த் தோன்றித்
தென்றிசைப் பொதியிலோர் சிற்றியாற் றடைகரை
மாதவன் தன்னால் வல்வினை யுருப்பச்
சாபம் பட்டுத் தனித்துயர் உழாஉம்
வினில் வெம்பசி வேட்கையொடு திரிதரும்
காயசண் டிகையெனும் காரிகை தானென்.

---

# ௧௫. பாத்திரங் கொண்டு பிச்சை புக்க காதை

## உரை

**அறவண அடிகள் மணிமேகலைக்கு ஆபுத்திரனைப் புரந்தருளிய ஆன் அந் நல்வினைப்பயனாலே சாவகத்தீவிற்றோன்றினமை கூறுதல்**

**௧ - ௮ : இன்னும்.........ஊட்டலும்**

(இ - ள்.) இளங் கொடி மாதே இன்னும் கேளாய் - இளைய பூங்கொடி போலும் மெல்லியல்புடைய மணிமேகலையே அருளறத்தின மாண்பினை யுணர்த்தும் செய்திகள் இன்னும் சிலவுள அவற்றையும் கூறுவேம் கேட்பாயாக!; அந்நாள் அவனை ஓம்பிய நல் ஆ - பண்டு சாலி என்னும் வடமொழியாட்டி ஈன்ற குழவிக் இரங்காளாகிக் கோவலர் சேரி மருங்கிலே ஒரு தோட்டத்திலே போகட்டுப் போன குழவியாகிய அவ்வா புத்திரனைப் பால் சுரந்தூட்டி ஏழு நாள் காறும் புறம் போகாது நின்று பாதுகாத்த அறந்தரு நெஞ்சத்து அந்த நல்ல ஆவானது அவ்வறங் காரணமாக மாறிப் பிறந்த பிறப்பிலே; தண் என் சாவகத்துத் தவளமால் வரை - எப்பொழுதும் தண்ணென்று குளிர்ந்திருக்கின்ற சாவக நாட்டின் கண்ணதாகிய தவள மால் வரை என்னும் மலையிடத்தே தவஞ் செய்திருந்த; மண்முகன் என்னும் மாமுனி இடவயின் தான் சென்று எய்தி - மண்முகன் என்னும் பெயரையுடைய சிறந்த முனிவருடைய தவப்பள்ளியின்; பொன்னின் கோட்டது பொன் குளம்பது தன் நலம் பிறர் தொழ ஆவயிற்றிற் புகுந்து கருவாகி - பொன்னாலியன்ற கோடுகளையும் பொன்னாலியன்ற குளம்புகளையும் உடையதாகத் தனது அழகினைக் கண்ட துணையானே இது தெய்வத்தன்மையுடைய தென்று யாவரும் கை குவித்துத் தொழத்தகுந்ததாக ஆவாகவே பிறப்பெய்தி வளர்ந்து; ஈற்று முன்னம் - தான் கன்றீனுவதற்கு முன்னரே; தான் முலை சுரந்து தன்பால் ஊட்டலும் - தன் அறந்தரு நெஞ்சம் காரணமாகத் தானே தனது முலை சுரக்கப் பெற்றுப் பிலிற்றுகின்ற தன் தீம்பாலைப் பிறவுயிர்கட்கு ஊட்டா நிற்ப என்க.

(வி - ரை.) யாதானும் ஓர் அறத்தின்கண் ஆற்றுப் படுத்துபவர் அவ்வறத்தினைப் பல்லாற்றானும் அறிவுறுத்தியவழிக் கேட்போர்க்கு

அதன்கண் ஊக்கம் மிகுத லியல்பாதல் பற்றித் தேவர்க்கும் மக்கட்கும் ஒத்த அறங்கூறிய அறவண அடிகளார் மீண்டும் அறப்பயனை அறிவுறுத்துபவர், இத்தகைய நல்லறஞ் செய்த நம்பியாகிய ஆபுத்திரன் மீண்டும் தனது அறந்தரு நெஞ்சத்திற்கேற்பவே நற்பிறப்பெய்தி மீண்டும் அவ்வற நெறியே பற்றி ஒழுகும் செய்தியைக் கூறத்தொடங்குபவர் தொடக்கத்தே முற்பிறப்பிலே அவனைப் பாலூட்டிப் பாதுகாத்த ஆவானது மீண்டும் கண்டோர் கைதொழத் தகுந்த வியத்தகு ஆவாகவே தோன்றி ஈனுமுன்னரே பால் சுரந்தூட்டிய செய்தியையும் ஆருயிர்கள் அன்புளஞ் சிறந்தவழி மாறிப் பிறக்கும் பிறப்பினும் அவ்வன்புத் தொடர்பாலே அணுக்கராகவே பிறத்தலுமாகிய இச் செய்திகளை அவள் கேட்டல் அவட்கு ஆக்கமாம் என்னும் கருத்தாலே இன்னும் கேளாய் என்று தொடங்குகின்றனர். இன்னும் கேளாய்! என்றது இவற்றைக் கேட்டல் உனக்கு இன்றியமையாதாம் என்பதுபட நின்றது.

அந்நாள் என்றது ஆபுத்திரன் சாலிவயிற்றிற் பிறந்தபோது அவள் அக்குழவியைத் தோன்றாத்துடவையிலிட்டுச் சென்ற நாளைச் சுட்டி நின்றது.

தவளமால் வரை என்றது, தவளமலை என்னும் பெயருடைய மலை என்றவாறும். இனி, பனிபடர்ந்து வெண்மையாக விளங்குமொரு பெரிய மலை என்பது பொருளாகக் கோடலுமாம். "மாமுனி இ வயின் சென்றெய்தி" என்றாரேனும் அம் முனிவனுடைய நல்லாவின் வயிற்றிற்பிறந்து என்பது கருத்தாகக் கொள்க. என்னை? பொன்னின் கோட்டது பொற் குளம்புடையதாய்ப் பிறர் தொழத்தோன்றி ஈனுமுன்ன முலை சுரந் தூட்டலும் எனப் பாட்டிடை வைத்த குறிப்பாலே பசு வயிற்றுப் பிறந்து வளர்ந்து ஈனு முன்னமே பால் சுரந்தூட்டியது என்பது பெற்றாமன்றே.

தன் நலம் - தனது அழகு.

### மண்முக முனிவன் தனது அவதிஞானத்தால் ஆபுத்திரன் அப் பசுவின் வயிற்றில் மக்கள் வடிவுடன் பிறப்பான் என்று முன்னரே அறிந்து கூறுதல்

#### ௯ - ௧௪: மூன்று.........வயினனென

(இ - ள்.) மூன்று காலமும் தோன்ற நன்குணர்ந்த ஆன்ற முனிவன் - இத்தகு பசுவிற்குரியவனும், மூன்று காலத்து நிகழ்ச்சிகளும் தன்னுள்ளே தோன்றும் வண்ணம் மெய்ப்பொருளையுணர்ந்தவனும் ஆன்றவிந்து அடங்கியவனுமாகிய அம் மண்முக முனிவன் அந்த அவதி ஞானத்தாலே உணர்ந்து; அதன் வயிற்று அகத்து - அப பசுவினுடைய திருவயிற்றிலே கருவாகி; மழைவளம் சுரப்பவும் மன்னுயிர் ஓம்பவும் உயிர் காவலன் ஒருவன் வந்து தோன்றும் - இச் சாவக நன்னாட்டிலே மழை தன்னாற் பிறக்கும் வளங்களைச் சுரந்து வழங்குமாறும்

ஈண்டு நிலைபெற்ற உயிர்களைப் பாதுகாத்தற்கும் ஆருயிர்க் காவலன் ஒருவன் வந்து பிறந்தருளுவன்; குடர்த்தொடர் மாலை பூண்பான் அல்லன் பொன் அடர் முட்டை அகவயினோன் என - அவ்வாருயிர்க் காவலன் இப் பசுவின் வயிற்றிலே மகனைப் பிறக்குங் காலத்தே கன்று பிறத்தல் போலாதல் மகன் பிறத்தல் போலாதல் குடரின் தசைத் தொடராலியன்ற மாலை பூண்டு பிறவான் பொன் தகட்டாலே இயன்றதொரு முட்டையின் அகத்திருப்பவனாகப் பிறந்தருளுவன் என்று முற்படவே பிறர்க்குக் கூறியபடியே என்க.

(வி - ம்.) சாவக நாடு முன்னரே மழை வளங் கரத்தலின் மன்னுயிர் மடிந்து வற்கடமுற்றுக் கிடத்தலாலே இந்நாட்டில் இற்றைக் கிருக்கும் இன்னலெலாம் தீர இப் பசுவின் வயிற்றிலே ஓருயிர் காவலன் வந்து தோன்றுவான் எனவும், இப் பசு ஏனைய பசுக்கள் போலாது பொற் கொம்பும் பொற் குளம்பும் உடையதாகப் பிறந்தாற் போன்று இதன் வயிற்றிற் பிறக்குங் காவலனும் குடர்மாலை பூண்டு பிறவாமல் பொன் முட்டையினூடு உருவாகி வந்து பிறப்பான் எனவும் அம் முற்றுணர் வுடைய முனிவர் முற்படவே கூறினர் என்பது கருத்து. அடர் - தகடு.

அகவயினோன் - உள்ளிடத்துள்ளான்.

## ஆபுத்திரன் சாவக நாட்டில் ஆவயிற்றுப் பிறத்தல்

### கரு - உக : பிணி..........கேணி

(இ - ள்.) பிணி நோய் இன்றியும் பிறந்து அறஞ் செய்ய மணிபல்லவத்திடை மன்னுயிர் நீத்தோன் - தன்வயமாகப் பிணித்துக் கொண்டு துன்புறுத்துகின்ற நோய் யாதொன்றும் தன்னுடம்பில் இல்லாமல் இருக்கவேயும், ஈதலியையாமை காரணமாக எய்திய மாபெருந்துயர் பொறாமல் உண்ணா நோன்பின் உயிர்பதிப்பெயர்த்து மாறிப் பிறந்தேனும் அறஞ் செய்யக் கருதி மணிபல்லவத் தீவிலிடத்தே உடம்பிலே நிலைபெற்றிருந்த தன்னுயிரைத் துறந்தவனாகிய அவ்வாபுத்திரன்; தன் காத்து அளித்த தகைஆ அதனை ஒல்கா உள்ளத்து ஒழியானாதலின் - கைவிடப்பட்ட குழவியாகிய தன்னை அறந்தரு நெஞ்சத்தோடு அருள் சுரந்தூட்டிப் பாதுகாத்த பெருந்தகைமையுடைய அந்த ஆவின்பால் நன்றியுடைமையால் நினைவு கூர்தலில் ஒரு பொழுதுந் தளர்ந்திலாத நெஞ்சமுடையனாயிருந்தமையாலே; ஆங்கு அவ் ஆவயிற்று - மண்முகமுனிவன் றவப்பள்ளியிலே மாறீ ஆவாகவே பிறந்துள்ள அவ்வாவினது திருவயிற்றிலே; தீங்கனி நாவல் ஓங்கும் இத் தீவினுக்கு ஒருதான் ஆகி அமரர்கணம்

உவப்ப உலகு தொழத் தோன்றினன் - இனிய கனிகளையுடைய நாவன் மரம் ஓங்கிய இந்தப் பெருஞ்சிறப்புடைய தீவகத்திலே வள்ளன்மைக்குத் தான் ஒருவனே தலைசிறந்தவனாகித் தேவர் கூட்டங்கள் பெரிதும் மன மகிழவும் இந்நிலவுலகத்து மாந்தர் எல்லாம் கைகூப்பித் தொழவும் சாலி வயிற்றில் மகனாகப் பிறந்தனன்; பிறந்த பெற்றியை நீ கேள் - அவ் வள்ளற் பெரியோன் சாவக நாட்டில் ஆவயிற்றிற் பிறந்த தன்மையும் கூறுவல் நீ கேட்பாயாக!; என்றார் என்க.

(வி - ம்.) ஏனைய மாந்தரெல்லாம் பிணிப்பட்டு வருந்தி இறப்பதே இயல்பு-மற்று இவன் அவ்வாறிறந்தானல்லன். ஈதற்கிடமின்மையாலே அந்நிலை சாதலினுங்காட்டில் இன்னா நிலையாக இருந்தமையாலே அது பொறாது வடக்கிருந்து தானே உயிரை நீத்தனன். அங்ஙனம் இறந்துழி மாறிப் பிறக்கும் பிறப்பிலேனும் ஈத்துவக்கும் சூழ்நிலை எய்தும் என்னும் கருத்தோடிறந்தானாதலின், அத்தகையதொரு சூழ்நிலையையுடைய நாட்டிலே மகனாகப் பிறந்தான். பண்டு தனக்கு வளர்ப்புத் தாயாகிய ஆவின்பால் பேரன்புடையனாதலின் அதன் வயிற்றிலே அதனை நற்றாயாகவே கொண்டு பிறந்தான் என்றறிவுறுத்த படியாம்.

இதனால் உயிர்கள் மாறிப் பிறக்கும்பொழுது அவ்வவை செய்த வினைகட் கேற்பவும் குறிக்கோளுக்கு ஏற்ற சூழ்நிலையிலேயும் பற்றுடையோர் தொடர்புடையனவாகவே பிறக்கும் என்பதும் பௌத்தர் மெய்க்காட்சி என்பதறியலாம். இக் கொள்கை மறுபிறப்புண்டென்னும் கொள்கையுடைய பிற சமயவாதிகட்கும் ஒத்ததொரு கொள்கையே ஆதலும் அறியற்பாற்று.

ஒற்கா - தளராத. ஒருதானாகி - தானே தலைசிறந்தவனாகி. நல்லோர் பிறப்பினை அமரரும் மாந்தரும் ஒருசேர உவப்பர் என்பது தோன்ற அமரர் கணம் உவப்ப உலகு தொழத் தோன்றினன் என்றார். பண்டு சாலி வயிற்றிற் றோன்றினன் அப் பெரியோன் இப் பிறப்பில் சாவக நாட்டில் பிறந்த பெற்றியும் கேள் நீ எனச் சுட்டுச்சொல் வருவித்தோதுக.

பெரியோன் - ஆபுத்திரன்; பெற்றி - தன்மை.

## சாவகத்திலே ஆபுத்திரன் ஆவயிற் றுதித்தபொழுது உலகில் தோன்றிய அற்புத நிகழ்ச்சிகள்

### ௨௯ - ௯௦: இருதிள.........சிறப்பென

(இ - ள்.) இருதிள வேனில் எரிகதிர் இடபத்து ஒருபதின் மேலும் ஒரு மூன்று சென்ற பின் - பருவங்களுள்

வைத்துக் காண்டற்கினிய இளவேனிற் பருவத்திலே ஞாயிற்று மண்டிலம் இடபவிராசியிலிருக்கும் வைகாசித் திங்களிலே நாண் மீன்களுள் வைத்துக் கார்த்திகை முதலாகப் பதின்மூன்று மீன்கள் கழிந்தபின்; மீனத்து இடைநிலை மீனத்து அகவையின் - நாண் மீன்களுள் வைத்து நடுவு நிற்றலையுடைய விசாக நன்னாளிலே; போதித் தலைவனொடு பொருந்திய போழ்தத்து - புத்தபிரான் பிறந்த நாள் எனனும் புகழோடு பொருந்திய சிறப்புடைய பொழுதிலே; மண்ணகம் எல்லாம் மாரியின்றியும் புண்ணிய நன்னீர் போதொடு சொரிந்தது - நிலவுலகத்திலே எவ்விடத்தும் மழையில்லாதிருக்கவேயும் ஆகாய கங்கையாகிய புண்ணியமுடைய நல்ல நீரானது கற்பக மலர்களோடு விரவி மழை போலப் பொழியா நின்றது; போதி மாதவன் பூமியில் தோன்றும் காலம் அன்றியும் சிறப்புக் கண்டனவென - அரசமரத்தின் நீழலிற் பொருந்தியிருந்து மெய்க்காட்சி எய்திச் சிறந்த தவத்தையுடைய புத்தபெருமான் பிறந்த காலத்தே இங்ஙனம் அற்புதம் தோன்றுவதல்லது இக்காலத்தும் அவ்வற்புதக் காட்சிகள் நம்மாற் காணப்பட்டன; ஆகவே இதற்குமொரு காரணமுளதாதல் வேண்டுமென்று கருதியவராய் என்க.

(வி - ம்.) "இருதிள......பொருந்தி"என்னு மளவும் இந்த மூன்றடிகளும் கக ஆங் காதையினும் ௪0 - ௪௨ ஆம் அடிகளில் முன்னும் இங்ஙனமே வந்தமை நினைக. இந்நூலாசிரியர் பிருண்டும் முன்பு கூறிய பொருள்களே மீளவுங் கூற நேர்ந்துழி அச்சொற்றொடர்களை மீண்டும் நிலை பிறழாது ஓதும் வழக்கமுடையவராதலைப் பல்வேறிடங்களில் காணலாம். இவ்வடிகட்கு விளக்கம் கக ஆம் காதை ௪0-௪௨ ஆம் அடிகட்குக் கூறியவற்றையே கொள்க.

"மாரியின்றியும் புண்ணிய நன்னீர் போதொடு மாரி போன்று சொரிந்தது" என்றவாறு. புண்ணிய நன்னீர் என்றது ஆகாய கங்கையை. போது - கற்பகமலர். ஆகாய கங்கை கற்பகப் போதொடு சொரிந்த அற்புதம் புத்தர்பிரான் பிறந்தபொழுது நிகழ்ந்ததொரு அற்புதம் என்பர். புத்த பெருமான் பிறப்பு நிகழாத இப்பொழுதும் அந்த அற்புதம் காணப்படுதலாலே இதற்குக் காரணமான நிகழ்ச்சி ஒன்று ஏதேனும் நிலவுலகில் நிகழ்ந்திருத்தல் வேண்டும் என்று ஊகித்து மாதவர் அது பற்றி ஆராயத்தலைப்பட்டனர் என்பது கருத்து.

போதி மாதவன் - புத்தன். போதி மாதவன் பூமியிற் பன்முறை பிறத்தலுண்டாகலின் அவன் பிறக்கும்பொழுதெல்லாம் இத்தகு அற்புதம் நிகழும் என்பது பௌத்தர் துணிபு.

சிறப்புக் கண்டன என - என மாறிச் சிறப்புக்கள் காணப்பட்டன என (௩௨) வியந்து என வியையும்.

அறவணர், அற்புத நிகழ்ச்சி பற்றி மாதவர் கந்திற்பாவையை வினவினர் என்றும் அத்தெய்வம் அவரை எல்லாம் என்பாலேவியது என்றும் மணிமேகலைக்கு அறிவித்தல்

௯௧ - ௯௯ : சக்கர..........வருத்தியது

(இ - ள்.) சக்கரவாளக் கோட்டம் வாழும் மிக்க மாதவர் வியந்து விரும்பி - இந்நகரத்துச் சக்கரவாளக் கோட்டத்தே யுறை கின்ற பெரிய தவமுடைய துறவோர் எல்லாம் பெரிதும் வியப் பெய்தி அதற்கியன்ற காரணத்தை அறிதற்கு விரும்பி; நெடுநிலைக் கந்து உடை பாவைக் கடவுள் எழுதிய அந்தில் பாவை அருளும் ஆயிடின் அறிகுவம் என்றே - நெடிது நிற்கும் நிலையினையுடைய தூணிலே கடவுள் படிமம் எழுதப்பட்ட அவ்விடத்திலே சென்று அப் பாவை அறிவிக்குமானால் அறிவோம் என்று துணிந்து; செறி இருள் சேறலும் - செறிந்த இருளையுடைய நள்ளிரவிலே அங்குச் சென்றிருப்ப; மணிபல்லவத்திடை மன்னுயிர் நீத்தோன் சாவகத்து தணியா உயிர் உய உதித்தனன் - அவர் கருத்தறிந்த அக் கந்திற்பாவை தானும் அறவோரே கேண்மின் மணிபல்லவத் தீவின்கண் தன்னுடம்பிலே நிலை பெற்ற தன்னுயிரை ஈதலியையாமையில் நீத்தவனாகிய ஆபுத்திரன் சாவக நாட்டிலே பசிப்பிணி தணியப்பெறாது பெரிதும் வருந்தும் உயிர்கள் உய்யும்பொருட்டுப பிறப்பெய்தினன் அவ்வறவோன் பிறப்பினாலேதான் இவ்வற்புதம் நிகழ்வதாயிற்று ; அவன் திறம் அறவணன் அறியும் என்று - மேலும் அவ்வாபுத்திரன் செய்தியெல்லாம் அறவணவடிகள் அறிகுவர் என்றும் அவர்க்குக் கூறிவிட்டவாற்றாலே அக் கந்திற் பாவை; என் நாவை வருத்தியது - என்னுடைய நாவையும் வருந்துமாறு செய்து விட்டது காண் ; என்றார் என்க.

(வி - ரை.) மாதவர், ஈண்டுப் பௌத்தத் துறவோர். கந்திற்பாவை யினது பக்கலிலே சென்றிருப்போர்க்கு அது தன் தெய்வக் கிளவியின் திப்பிய முரைக்கும் ஆகலின் சென்று வினவலும் என்னாது சேறலும் என்றொழிந்தார். சேறலும் - செல்லலும். நீத்தோன் : பெயர் ; ஆபுத்திரன். தணியா - பசித்துன்பம் தணியாத: பெயரெச்சத் தீறு கெட்டது. உய் - உய்ய. அறவணன் அறியும் என்று அக் கந்திற் பாவை கூறிவிட்டமையாலே அவரெல்லாம் என்பால் வந்து வினவ அவர்க்கெல்லாம் யான் ஆபுத்திரன் திறம் பல முறை கூறல் வேண் டிற்று என்பது தோன்றப் பாவை என்னுவையும் வருத்தியது என்றார். இறந்தது தழீஇய எச்சவும்மை தொக்கது செய்யுள் விகாரம்.

### ஆபுத்திரன் அரசனுயினமை கூறல்

**௯௯ - ௪௫ : இதுகேள்..........அவன்றான்**

(இ - ள்.) இதுகேள், மண் ஆள் வேந்தன் மண்முகன் என்னும் புண்ணிய முதல்வன் திருந்து அடி வணங்கி - மணிமேகலாய்! ஆவயிற்றுப் பிறந்த அவ்வாபுத்திரன் வரலாற்றில் எஞ்சிய இதனையும் கேட்பாயாக! சாவகம் என்னும் அந்த நாட்டை ஆளுகின்ற அரசனாகிய பூமிசந்திரன் என்பான் இவ் வற்புத நிகழ்ச்சியை அறிந்து அம்மகவினை வளர்க்கின்ற மண்முகன் என்னும் அறத்தலைவன் தவப்பள்ளியை எய்தி அவ்வறவோனுடைய திருந்திய அடிகளில் வீழ்ந்து வணங்கி; மக்களை இல்லேன் - அடிகேள்! அடியேன் மக்கட் பேறில்லேன்! என்று தன் குறை கூறிக் குறிப்பாலே இரந்து நிற்ப அவ்வறவோன் அம மகவினை அவ்வரசனுக்கு வழங்கினனாக; "மாதவன் அருளால் புதல்வனைப் பெற்றேன்" என்று அவன் வளர்ப்ப - மகவைப் பெற்ற அம் மன்னவன்றானும் இந்த மாதவருடைய பேரருளாலே பெரிதும் வருந்தாமலே அருமந்த மகனைப் பெறுவேனாயினேன் என்று மகிழ்ந்து அம் மகவினைக் கொடுபோய் வளர்த்தமை காலே; அவன்பால் அரைசு ஆள் செல்வம் உண்மையின்-அப் பூமி சந்திரன்பால் அரைசாளுதற்குரிய செல்வம் இருந்தமையாலே; அவன்றான் - அவனால் வளர்க்கப்பட்ட அவ்வாபுத்திரன்றானும் உரிய பருவத்திலே; நிரை தார் வேந்தன் ஆயினன் - நிரல்பட்ட மலர்மாலை யணிந்து செங்கோல் ஓச்சும் அரசனும் ஆயினன் காண்! என்றார் என்க.

(வி - ம்.) இதுவும் கேள் எனல் வேண்டிய எச்சஉம்மை தொக்கது. இது என்றது அவன் வரலாற்றில் எஞ்சிய விதுவும் என்பதுபட நின்றது.

மண் - ஈண்டுச் சாவகநாடு. மக்களையில்லேன் என்று பாட்டிடை வைத்த குறிப்பினாலே அம் மாதவன் அம் மகவினை வழங்கினன் என்பது பெற்றாம். என்று மகிழ்ந்து வளர்ப்ப என்க. அரைசாள் செல்வம் - படைகுடி கூழ் அமைச்சு நட்பு அரண் என்னும் ஆறுவகை உறுப்புகள். அவன்றான் வேந்தன் ஆயினன் என மாறுக. அவன்: ஆபுத்திரன்.

### அறவணவடிகள் மணிமேகலை இனிச் செய்யக்கட்வ அறம் இஃதென அறிவுறுத்துதல்

**௪௬ - ௫௫ : துறக்க........உரைத்தலும்**

(இ - ள்.) துறக்க வேந்தன் துய்ப்பு இலன் கொல்லோ அறக்கோல் வேந்தன் அருள் இலன் கொல் - வானவர் கோமான் ஈண்டுச் செய்யும் வேள்வியின் வாயிலாய்த் தான் நுகரும் அவி

உணவு நுகர்தல் இலனாயினனோ? அன்றி அறம் பிறழாத செங்கோல் வேந்தனாகிய சோழமன்னன் உயிர்களின்பாற் றான் செலுத்தும் அருளைச் செலுத்துதல் இலன் ஆயினனோ? அன்றி பிறவாற்றானோ யாம் காரணம் அறிகின்றிலேம் ஆயினும்; காவிரி நீர் சுரந்து புரந்து பரக்கவும் - காவிரியாறானது தன்னியல்பு பிறழாவண்ணம் வழக்கம் போலவே நீர் சுரந்து உயிரினங்களைப் பாதுகாத்துப பாய்ச்சும் நீர் நாடெங்கணும் பரவா நிற்கவே; நலத்தகை இன்றி நல்உயிர்க்கு எல்லாம் அலத்தற் காலை ஆகியது - நலமுறும் தகுதி இல்லாமல் இந் நாட்டிலே வாழும் நன்மையுடைய உயிர்கட்கெல்லாம் துன்புறுதற்குரிய வற்கடம் நிலவாநின்றது; ஆயிழை - மகளிர்க்கெல்லாம் அணிகலனாகத் திகழுகின்ற மணிமேகலாய்! சூழ்நிலை இவ்வாறிருத்தலாலே; வெள் திரை தந்த அமுதை வானோர் உண்டு ஒழி மிச்சிலை ஒழித்து வைத்தாங்கு - வெள்ளிய அலைகளையுடைய திருப்பாற் கடல் வழங்கிய அமிழ்தத்தில் வானோர் தாமுண்டு எஞ்சியிருந்ததனைப் பிறவுயிர் உண்ணுதல் தவிர்த்து வாளாது வைத்தாற் போன்று; வறன் ஓடு உலகின் வான் துயர் கெடுக்கும் அறன் ஓடு ஒழித்தல் தகாது என மாதவன் உரைத்தலும் - வற்கடம் பரவியிருக்கின்ற இந்நாட்டிலே வாழும் உயிர்களின மாபெருந்துன்பமாகிய பசிப்பிணியைத் தீர்த்துய்விக்கும் தெய்வத் தன்மையுடைய பேரறத்தின் திருவுருவமாகத் திகழுகின்ற அமுதசுரபியாகிய இத் திருவோட்டின் செயல் நிகழாவண்ணம் அதனை வாளாது வைத்திருத்தல் நம்மனோர்க்குத் தகாது காண் என்று சிறந்த தவவொழுக்கமுடைய அறவணவடிகள் அறிவுறுத்தா நிற்றலும் என்க.

(வி - ம்.) சோழ நாட்டிலே வழக்கம் போலவே காவிரி நீர் முட்டின்றிப் பெருகிவந்து யாண்டும் பரவிப்பாயவும் இந்நாட்டிலே இப்பொழுது வற்கடம் நிலவுகின்றது; இதற்குரிய காரணம் யாமறிகிலேம் என இம்மாதவர் இயம்புகின்றனர். ஈண்டுக் கதை நிகழ்ச்சிக்கு வற்கடம் இன்றி அமையாதாக; அவ் வற்கடத்திற்குச் செங்கோல் நிலை திரிந்ததாகக் கூறுதல் வேண்டும். இப்புலவர் பெருமான் சோழனுக்கும் பழிபிறவாவண்ணம் இம் முனிவரைப் பேசவைத்திருக்கின்ற நுணுக்கம் நினைந்தின்புறற் பாலதாம்.

இனி, மழையில்லாமல் நிலவுலகில் வற்கடம் நிகழ்தற்குரிய காரணங்களுள் இரண்டனை மட்டும் இவர் ஈண்டு எடுத்துக் கூறி இவற்றுள் யாதென்று யாம் அறிகின்றிலேம் என்னுமாற்றால் ஈண்டு அக் குறை இரண்டனையுமே யாமறிகின்றிலோம் ஆயினும் வற்கடம் மட்டும் நிகழ்தல் கண்கூடாகத் தெரியவருகின்றது என்கின்றனர்.

வற்கடம் நிகழ்தற்கு மழையின்மையே காரணம்; மழை பெய்கின்றது. யாற்றுநீர் யாண்டும் பரவவும் காண்கின்றோம். என்றதனால் மழை

காலந்தவறி மிகுதியாகவும் காலத்திலே பெய்யாமலும் போவதால் இவ்வற்கடம் நிகழ்வது போலும் இங்ஙனம் ஆதற்கு, இந்திரன் தனக்குச் செய்ய வேண்டிய வேள்வியை இம் மன்னவன் காலத்திலே செய்யாது விடுகின்றான் என்று செய்யும் குறும்பு என்னலாம், என்று ஒருதலை துணிந்து, மற்று அரசன் அறக்கோல் வேந்தன் ஆதலால் அவன் அருளிலன் ஆவனோ- ஆகான் எனக் கூறினார் போலவும் பொருள்படுதல் அறிக.

வேள்வியைப் பௌத்தர்கள் வெறுப்பவர் ஆதலின் தனக்கு அவி சொரியாமையாலே ஆயிரங் கண்ணோன் செய்த குறும்பே இவ் வற்கடத்திற்குக் காரணம் என இம்முனிவர் ஒருதலை துணிந்து கூறுகின்றனர் என்க.

இனி, இக்கருத்தை வலியுறுத்தற்குப் போலும் அத்துறக்க வேந்தன் உண்டொழி மிச்சிலைப் பிறவுயிருண்ணுதலை ஒழித்துப் பாதுகாத்து வைத்தனன் எனவும் அவ்வாறு நீ பல்லுயிரோம்பும் அமுதசுரபியை ஒழித்தல் தகாது எனவும் இதனானும் இந்திரனுக்கு ஓரிழுக் குரைத்தமை உணர்க.

வறன் ஓடு உலகு - வற்கடம் பரவுகின்ற உலகம்; அறன் ஓடு - உண்டி கொடுத்து உயிர் கொடுக்கும் அறஞ்செய்தற் கருவியாகிய அமுத சுரபி. அலத்தற் காலையில் உண்டி கொடுத்துயிர் ஓம்புதலே இப்பொழுது நின் கடமையாகும் என்பதனை அறவணவடிகள் இதனால் வற்புறுத்தபடியாம்.

## மணிமேகலைக்கு பிக்குணிக் கோலத்துப் பெருந்தெருவில் பிச்சைப் பாத்திரம் ஏந்திச் செல்லுதல்

### ௫௫ - ௬௬ : மணிமே.........பரிவெய்தி

(இ - ள்.) மணிமேகலைதான் தாயர் தம்மொடு தாழ்ந்து பல ஏத்தி - அதுகேட்ட மணிமேகலையும் பெரிதும் மகிழ்ந்து தாயாராகிய மாதவியோடும் சுதமதியோடும் அவ்வடிகளார் திருவடிகளிலே வீழ்ந்து அவரைப் பற்பல நன்றியும் புகழும் நவின்று வாழ்த்திய பின்னர்; கைக் கொண்டு எடுத்த கடவுள் கடிஞையொடு - தான் பண்டு செய்த நற்றவத்தாலே தன் கையிலே கொண்டு ஏந்திய அமுதசுரபியாகிய கடவுட்டன்மையுடைய அத் திருவோட்டினோடு; பிக்குணிக் கோலத்துப் பெருந்தெரு அடைதலும் - தவக்கோலந் தாங்கியவளாய் அப் பூம்புகார் நகரத்துப் பெரிய தெருவிலே செல்லாநிற்றலும்; ஒலித்து ஒருங்கு ஈண்டிய ஊர்க்குறுமாக்களும் மெலித்து உகுநெஞ்சின் விடரும் தூர்த்தரும் கொடிக் கோசம்பிக் கோமகனாகிய வடித்தேர்த்தானை வத்தவன் தன்னை - மணிமேகலையைப் பிக்குணிக் கோலத்திலே கண்டதும் பெரிதும்

ஆரவாரஞ் செய்து ஒருங்கே குழுமிய அவ்வூர்ச் சிறுவர்களும் நெஞ்சம் நெகிழ்ந்துருகுகின்ற நகரமாக்களும் பரத்தரும் கொடியுயர்த்திய கோசம்பி நகரத்தை ஆளும் கோமகனாகிய வடித்த தேர்ப்படையையுடைய வத்தவநாட்டு மன்னன் உதயணகுமரனை உஞ்சை நகரத்தரசன் பிரச்சோதனன்; வஞ்சஞ் செய்துழி - வஞ்சகச் செயலாலே சிறைக்கோட்டத்திலிட்டபொழுது; வான்தளை விடீஇய - பெரிய தளையினின்றும் உதயணனை விடுவித்தற் பொருட்டு; உஞ்சையில் தோன்றிய யூகி அந்தணன் உருவுக்கு ஒவ்வா உறுநோய் கண்டு - உஞ்சை மாநகரத் தெருவிலே மாறுவேடம் புனைந்து வந்து தோன்றிய அமைச்சனாகிய யூகி என்னும் பார்ப்பனன் தான் மேற்கொண்டுள்ள உருவத்திற்குப் பொருந்தாதபடி பித்தேறினன் போலவும் பேயேறினன் போலவும் வாய்தந்தன பேசி வருந்தும் வருத்தத்தைக் கண்டு; பரிவுறு மாக்களின் - அவனைச் சூழ்ந்துகொண்டு அவன் நிலைக்கு வருந்தி நின்ற மாந்தர் போன்று; தாம் பரிவெய்தி - தாமும் மணிமேகலையின் உருவிற் கொவ்வாநிலைக்குப் பெரிதும் இரக்கம் எய்தி என்க.

(வி - ம்.) தாயர் என்றது, மாதவியையும் சுதமதியையும். கடவுட் கடிஞை - தெய்வத்தன்மையுடைய பிச்சைக்கலன். அஃதாவது, அமுதசுரபி. பிக்குணி - பௌத்தர்களுள் பெண்பால் துறவி. இங்ஙனம் கூறுவது அச் சமயத்தார் மரபு.

மெலித்து - மெலிந்து என்பதன் விகாரம். மணிமேகலையின் பண்டைய செல்வ நிலைமையையும் இற்றை நாள் அவள் பிச்சை புக்க நிலையையும் கருதி அவள் பொருட்டு நெஞ்சிளகி உருகினர் என்றவாறு. குறுமாக்கள் - சிறுவர்.

கோசம்பி - வத்தவநாட்டுத் தலைநகரம். வத்தவன் - வத்தவநாட்டு மன்னனாகிய உதயணன். உதயணனைப் பிரச்சோதன மன்னன் யானைப் பொறியினாலே வஞ்சித்துச் சிறைப்பிடித்துச் சிறையிலிட்டனன்.

உதயணன் அமைச்சனாகிய யூகியந்தணன் மாறுவேடம் புனைந்து கொண்டு பிரச்சோதனனுடைய தலைநகரமாகிய உஞ்சை நகரத்தின் தெருவிலே பித்தன் போல நடித்துச் சென்றான். அப்பொழுது அந்நகர மாந்தர் அவனைச் சூழ்ந்து கொண்டு அவனுருவிற்கொவ்வாத நோய் உடையனாதற்கு இரங்கி நின்றார். அவர் போன்று ஈண்டும் நகரமாக்கள் மணிமேகலையின் உருவிற் கொவ்வாத நிலை கண்டு இரங்கினர் என உவமம் எடுத்தோதியபடியாம். யூகிக்கு உஞ்சைமாக்கள் பரிவுற்றமையை - உதயணகுமார காவியத்தில் உஞ்சைக் காண்டத்தில் ௭௨ ஆம் செய்யுள் முதலாக, ௮௩-ஆஞ் செய்யுள் ஈறாக வருகின்ற செய்யுள்களால் உணர்க.

## இதுவுமது

கூஎ - எ0 : உதய..........கூர

(இ - ள்.) உதயகுமரன் உளம் கொண்டு ஒளித்த மதுமலர்க்குழலாள் வந்து தோன்றி - சின்னாள் முன்னர் அக்கோமகனுடைய உதயகுமரனுடைய நெஞ்சத்தை முழுவதும் கவர்ந்துகொண்டு பிறர் யாரும் அறியாதபடி இந்நகரத்தினின்றும் மறைந்துபோன தேன்துளிக்கும் மலர்க் கூந்தலையுடைய இம் மணிமேகலை மீண்டும் பிறர் யாரும் காணாதபடியே இப் பெருந் தெருவினூடே வந்து நம்மனோர்க்குக் கண்கூடாகத் தோன்றி; பிச்சைப் பாத்திரம் கையின் ஏந்தியது - பிச்சை ஏற்றற்குரிய திருவோட்டைக் கையில் ஏந்தி நிற்குமிக் காட்சி; திப்பியம் என்றே சிந்தை நோய் கூர - ஒரு தெய்வத்தன்மையுடைத்து என்று அவள் நிலைக்குப் பெரிதும் நெஞ்சழிந்து துன்புறுகிற்ப என்க.

(வி - ரை.) ஊர்க்குறுமாக்களும் விடரும் தூர்த்தரும் உதயகுமரன் மணிமேகலையைத் தேரில் ஏற்றி வருவல் என்று எட்டி குமரனுக்குச் சூண் மொழிந்து போனவன் வறிதே மீண்டமையும் அற்றை நாளிலிருந்து மணிமேகலையை அந்நகரத்தே யாரும் அறியாதபடி மணிமேகலா தெய்வம் எடுத்துப் போன செய்தியும் அறியாமையாலே அவள் எங்கோ மாயமாய் மறைந்துவிட்டனள் என்று வியப்புற்றிருந்தாராக, மீண்டும் அவள் வான்வழியாக வந்திறங்கினமையால் அவள் வருகையும் காணாராயிருந்தவர், பொள்ளென அவள் பிக்குணிக் கோலத்தோடு பிச்சைப்பாத்திரம் ஏந்திப் பெருந்தெருவில் வந்துற்றமை ஆகிய அவள் செயலெல்லாம் பெரிதும் வியக்கத்தக்கனவா யிருத்தலின், உதயகுமரன் உளங் கொண்டொளித்தமையும் பின்னர் வந்து தோன்றினமையும் அவள் பிச்சைப்பாத்திரம் ஏந்தினமையும் ஆகிய அனைத்துமே திப்பியம் என்று வியந்தனர். மேலும் அவள் கோவலன் மகளாய் மாபெருஞ் செல்வத்தினூடே வளர்ந்தமை யாவரும் அறிகுவர் ஆதலினானும் அவளுடைய இளமைக்கும் அழகுக்கும் சிறிதும் பொருந்தாத வண்ணம் பிச்சைபுக்கமை கருதி அனைவருமே அவட்கிரங்கிச் சிந்தை நோய் கூர்ந்தனர் என்பது கருத்து.

திப்பியம் - ஈண்டு வியப்பு என்னும் பொருண்மேனின்றது.

### மணிமேகலை அமுதசுரபியின்கண் முதன் முதலாகப் பத்தினிப் பெண்டிர் இடும் பிச்சை ஏற்றல் வேண்டும் எனலும் காயசண்டிகை ஆதிரைபால் ஏற்றிடுக எனலும்

எக - அ0 : மணமனை..........என்றனள்

(இ - ள்.) மணமனை மறுகின் மாதவி ஈன்ற அணி மலர்ப் பூங்கொம்பு - திருமணஞ் செய்துகொண்டு இல்லறம்

பேணுவோர் இனிது வாழுகின்ற மங்கல மனைகளையுடைய அப்பெருந்தெருவிலே பிச்சைப்பாத்திரம் ஏந்திச் சென்றவளாகிய மாதவி பெற்ற அழகிய மலர்கணிரம்பிய பூங்கொடி போல்வாளாகிய மணிமேகலை தனக்கு அணுக்கமாக நிற்கின்ற மடந்தை ஒருத்தியை நோக்கி; அகமலி உவகையின் பத்தினிப் பெண்டிர் பண்புடன் இடூஉம் பிச்சை ஏற்றல் பெருந்தகவு உடைத்து என- அன்புடையோய் இத் திருவோட்டில் முதன் முதலாகப் பிச்சை ஏற்குங்கால் விருந்தினரைக் கண்டபொழுதே உள்ளம் நிறைந்த மகிழ்ச்சியோடே கொணர்ந்து கற்புடை மகளிர் அன்போடு இடுகின்ற உணவை ஏற்பதே பெருந்தன்மை யுடையதாகும் என்று கூறுநிற்ப; குளன் அணி தாமரைக் கொழுமலர் நாப்பண் ஒரு தனி ஓங்கிய திருமலர் போன்று - அங்ஙனம் வினவிய மணிமேகலையின் குறிப்பறிந்து கூறும் அம் மடந்தை அன்னாய் கேள்! குளத்தினூடே யாண்டும் மலர்ந்து அதனை அழகு செய்கின்ற தாமரையினது கொழுவிய மலர்களின் நடுவே தான் தமியே அனைத்து மலரினுங்காட்டில் உயர்ந்து திகழாநிற்குமொரு அழகிய தாமரை மலரைப் போன்று; வான் தரும் கற்பின் மனையுறை மகளிரில் - மழை பெய்விக்கும் தெய்வத்தன்மை யுடைய கற்பென்னும் திட்பத்தோடு இம் மங்கல மனைகளிலே இருந்து இல்லறம் பேணும் மகளிருள் வைத்து; ஆதிரை நல்லாள் தான் தனியோங்கிய தகைமையள் அன்றே - ஆதிரை என்னும் பெயரையுடைய நங்கைதான் தனிச் சிறப்புடையளாய் உயர்ந்திருக்கின்ற பெருந்தகைமை உடையாள் என்பதை நீ யறியாயோ? அறிந்திருப்பாய் அல்லையோ?; நேரிழை- மகளிர்க்கெல்லாம் அணிகலனாகத் திகழுகின்ற தவச்செல்வியே கேள்; இம் மனை அவள் மனை நீ புகல் வேண்டும் - இதோ அணித்தாக இருக்கின்ற இம் மங்கல மனையே அவள் வாழும் மனையாகும் ஆகவே நீ முதன் முதலாக அம் மனை முன்றிலிலே பிச்சை புகுதல் வேண்டும்; என்றனள் - என்று அறிவித்தனள்; என்க.

(வி - ம்.) மணமனை என்றது திருமணஞ் செய்துகொண்டு மணமக்கள் இல்லறம் ஓம்பும் மனை என்றவாறு. அகமலி உவகையின் என்றது விருந்தினர் வரப்பெற்றேம் என்று உளம் நிறைந்த மகிழ்ச்சியோடு என்பதுபட நின்றது. ஈண்டு—

"முகத்தா னமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம்" (௯௩)

எனவரும் திருக்குறளையும் நினைக.

பண்புடன் இடூஉம் என்புழி பண்பு என்றது அன்பு என்க. என்னை?—

''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது'' (சுரு)

எனவரும் திருக்குறட் கருத்தினை நோக்குக.

''பத்தினிப் பெண்டிர் இடும் பிச்சை ஏற்றல் பெருந்தகைமை'' என்று மணிமேகலை கூறியதன் குறிப்பு அத்தகைய பத்தினிப் பெண்டிர் உறையும் மனை யாது நீ அறிகுவையோ அறிதியாயின் கூறுதி என்பதே யாம். இக் குறிப்பறிந்து அம் மடந்தை கூறுகின்றாள் என்க.

இனி, அவள் கூறும் உவமையழகு நினைந்து நினைந்து மகிழற் பாலதாம். இங்கு இம் மனைகளுள் வாழும் மகளிர் எல்லாருமே பத்தினி மகளிரேயாவர். ஆயினும் அவருள்ளும் தலைசிறந்து திகழுபவள் ஆதிரை என்பவளே! என்றிறுத்தபடியாம்.

வான்தரு கற்பு - வேண்டும் பொழுது மழை பெய்விக்கத் தகுந்த தெய்வக்கற்பு. வான் - மழைக்கு ஆகுபெயர். ஈண்டு—

''தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை'' (ருரு)

எனவரும் திருக்குறள் நினைக்கப்படும்.

புகல் - பிச்சைபுகல். இம் மனைபுகல் வேண்டும் என்றது நின் கருத்து அதுவாயின் இந்த மனையிற் புகுதுக! என்பதுபட நின்றது. அதுவும் சேய்த்தன்றென்பாள் இம் மனை எனச் சுட்டினாள்.

## காயசண்டிகை வரலாறு

### அக - அசு : வடதிசை.........தானேன்

**(இ - ள்.) வடதிசை விஞ்சை மாநகர்த் தோன்றித் தென்திசை பொதியில் ஓர் சிற்றியாற்று அடைகரை - அவ்வாறு ஆதிரைமனையை மணிமேகலைக்கு அறிவித்தவள் யாரோ எனின், வடதிசையின் கண்ணுள்ள விச்சாதரர் நகரங்களுள் வைத்துக் காஞ்சனபுரம் என்னும் பெரிய நகரத்திலே பிறந்து வைத்தும் தென் திசையில் உள்ள பொதியமலை மருங்கில் ஒரு சிறிய யாற்றினது நீரடை கரையிடத்தே; வல்வினை உருப்ப - தான் முற்பிறப்பிலே செய்த தீவினை உருத்துவந்தூட்டுதலாலே; மாதவன் தன்னால் சாவம்பட்டுத் தனித்துயர் உறாஉம் - சிறந்த தவத்தையுடைய துறவோன் ஒருவனாலே சாவம் இடப்பட்டு மாபெருந்துன்பத்தை நுகர்ந்து கொண்டிருப்பதற்குக் காரணமான; வீவுஇல் வெம்பசி வேட்கையொடு திரிதரும் காய சண்டிகை என்னும் காரிகை - ஒரு பொழுதும் அழிதலில்லாத வெவ்விய பசித்துன்பத்தோடும் அதனைத் தணிக்கும் பேரவா**

னோடும் அங்ககரத் தெருக்களிலே இடையறாது சுற்றித் திரிகின்ற காய சண்டிகை என்னும் வித்தியாதர மகளே யாவாள்; என்பதாம்.

(வி - ம்.) காயசண்டிகை என்னும் இவ் விச்சாதரி இக் காப்பியக் கதைக்கு இன்றியமையாத ஓருறுப்பாவாள். ஆதலின் நூலாசிரியர் இவள் வரலாற்றை ஈண்டு விதந்தெடுத்து விளம்பினர். இவள் வரலாறு மேலும் விளக்கமாகக் கூறப்படும் ஆதலின் ஈண்டுச் சுருக்க மாகவே சொல்லிவைத்தனர்.

விஞ்சைமாநகர் - விச்சாதரருடைய பெரிய நகரம். தனித்துயர் - பெருந்துன்பம். காரிகை - பெண்.

இனி இக்காதையை—மாதே கேளாய்! நல்லாய் எய்தி ஊட்டலும் மண்முகமுனிவன் ஒருவன் தோன்றும் அவன் பொன் முட்டை அகவையினன் என, மன்னுயிர் நீத்தோன் ஒழியானதலின் சாவகத்துதித் தனன் நீர் சொரிந்தது, மாதவர் வியந்து அறிகுவம் என்று சேறலும் பாவை அறவணன் அறியுமென்று ஈங்கென் நாவை வருத்தியது. இதுகேள்! மண்ணாள் வேந்தன் இல்லேன் பெற்றேன் என்று வளர்ப்ப அவன்பால் செல்வம் உண்மையின் அவன் வேந்தன் ஆயினன். அலத்தற் காலை ஆகியது. அறன் ஓடு துயர் கெடுக்கும் ஒழித்தல் ஆயிழை தகாது என மணிமேகலை ஏந்திக் கடிஞையொடு தெரு அடைதலும் மாக்களும் தூர்த்தரும் ஒளித்த குழலாள் தோன்றி ஏந்தியது திப்பியம் என்று நோய் கூர; கொம்பு ஏற்றல் தகவுடைத்தென இம் மனை அவள் மனை புகல் வேண்டும் என்றனள் (அவள் யாரெனின்) வடதிசைத் தோன்றி வினை உருப்பத் துயர் உறாஉம் பசி வேட்கையொடு திரிதரும் காயசண் டிகை எனும் காரிகை, என இயைத்திடுக.

பாத்திரம் கொண்டு பிச்சைபுக்க காதை முற்றிற்று.

## ௧௬. ஆதிரை பிச்சையிட்ட காதை

[பதினாறாவது மணிமேகலைக்கு ஆதிரையென்னும் பத்தினிப் பெண்டிர் பாத்தூணீத்த பாட்டு]

அஃதாவது : அமுதசுரபியின்கண் முதன்முதலாக அகமலி உவகையின் பத்தினிப் பெண்டிர் பண்புடன் இடும் பிச்சை ஏற்றல் பெருந்தகவுடைத்து என்னுங் கோட்பாட்டோடு ஆதிரையின் மங்கலமனை முன்றிலிலே மணிமேகலை தான் புனையா வோவியம் போல நிற்ப, அதுகண்ட ஆதிரை நல்லாள் அகமலியுவகையளாய் அவளைத் தொழுது வலங்கொண்டு அமுதசுரபி என்னும் அரும் பெரும் பாத்திரம் நிறைதருமாறு ஆருயிர் மருந்தைக் கொணர்ந்து "பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுகென" வாயார வாழ்த்திப் பெய்து அருளறத்திற்குக் கால்கோள் செய்தமையைக் கட்டுரைக்கும் செய்யுள் என்றவாறு.

இதன்கண் - ஆதிரையின் கற்பின் பொற்பு விளங்கும் வரலாற்றினைக் காயசண்டிகை மணிமேகலைக்குக் கூறுபவள் ஆதிரை கணவனாகிய சாதுவன் கணிகையின் கேண்மை கொண்டு வட்டினுஞ் சூதினும் வான் பொருள் தோற்றுக் கேடெய்துதலும் கணிகையாற் கைவிடப்பட்டு மரக்கலமேறிப் பொருளீட்டப் போதலும் கடலில் மரக்கலம் உடைந்தொழிதலும் சாதுவன் ஒடிமரம் பற்றி நீந்திப் போய் நக்கசாரணர் நாகர் வாழ் மலைப்பக்கம் சார்ந்து நாகர் தலைவன்பால் எய்துதலும் உடைந்த மரக்கலத்தே உயிருய்ந்தோர் பூம்புகார்க்கு வந்து சாதுவன் சாவுற்றான் என ஆதிரைக்கறிவித்தலும் அவள் தீப்பாய்தலும் தீ அவளைச் சுடாது நீரெனக் குளிர்ந்திருத்தலும், அவள் தீயுங் கொல்லாத் தீவினையாட்டியேன் இனி யாது செய்வேன் என்று ஏங்குதலும் அசரீரி அந்தரம் தோன்றி நின் கணவன் உயிருய்ந்துளன் என்று கூறுதலும் நீராடி இல்லம் புகுவாள் போன்று ஆதிரை மனை புகுதலும் சாதுவன் நக்கர் தலைவனாலே நயக்கப்பட்டு "நம்பிக்கிளையளோர் நங்கையைக் கொடுத்து வெங்களும் ஊனும் வேண்டுவ கொடும்" எனத் தன் பணிமாக்கட்குக் கட்டளையிடுதலும் அதுகேட்ட சாதுவன் அருளறமுடையனாதலின் அவற்றை மறுத்து நக்கர் தலைவனுக்கு நல்லறம் கூறுதலும் பிறவும் பெரிதும் இனிமையாக ஓதப்படுகின்றன. இக் காதையினால் தமிழகத்தே புத்த சமயத்தைத் தழுவிய தமிழர்கள் தமது பழைய பண்பாட்டை விடாமல் அச்சமயத்தோடு சார்த்தித்

தமிழகத்துப் பண்பு கெடாமல் வாழ்ந்திருந்தவொரு தனிச் சிறப்பை இனிதாக இப்புலவர் பெருமான் அறிவித்துள்ளார். ஆதலின் இக்காதை ஒரு வரலாற்றுச் சிறப்புடையதாகவும் திகழ்கின்றது; அச்சிறப்பினை இதனுரையில் உரியவிடத்தே எடுத்துக் காட்டுதும்; அவற்றை ஆண்டுக் கண்டு கொள்க.

ஈங்கிவள் செய்தி கேளென விஞ்சையர்
பூங்கொடி மாதர்க்குப் புகுந்ததை உரைப்போன்
ஆதிரை கணவன் ஆயிழை கேளாய்
சாதுவன் என்போன் தகவிலன் ஆகி
அணியிழை தன்னை அகன்றனன் போகிக்
கணிகை யொருத்தி கைத்தூண் நல்க
வட்டினும் சூதினும் வான்பொருள் வழங்கிக்
கெட்ட பொருளின் கிளைகே டுறுதலின்
பேணிய கணிகையும் பிறர்நலங் காட்டிக்
காணம் இலியெனக் கையுதிர்க் கோடலும்
வங்கம் போகும் வாணிகர் தம்முடன்
தங்கா வேட்கையின் தானுஞ் செல்வுழி
நளியிரு முந்நீர் வளிகலன் வௌவ
ஒடிமரம் பற்றி ஊர்திரை யுதைப்ப
நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
பக்கஞ் சார்ந்தவர் பான்மையன் ஆயினன்
நாவாய் கேடுற நன்மரம் பற்றிப்
போயினன் தன்னோ டுயிருயப் போந்தோர்
இடையிருள் யாமத் தெறிதிரைப் பெருங்கடல்
உடைகலப் பட்டாங் கொழிந்தோர் தம்முடன்
சாதுவன் தானும் சாவுற் றனென
ஆதிரை நல்லாள் ஆங்கது தான்கேட்டு
ஊரீ ரேயோ ஒள்ளழல் ஈமம்
தாரீ ரோவெனச் சாற்றினள் கழறிச்
சுடலைக் கானில் தொடுகுழிப் படுத்து
முடலை விறகின் முளியெரி பொத்தி
மிக்கஎன் கணவன் வினைப்பயன் உய்ப்பப்
புக்குழிப் புகுவேன் என்றவள் புகுதலும்
படுத்துடன் வைத்த பாயற் பள்ளியும்
உடுத்த கூறையும் ஒள்ளெரி யுறாஅது
ஆடிய சாந்தமும் அசைந்த கூந்தலில்
சூடிய மாலையும் தொன்னிறம் வழாது
விரைமலர்த் தாமரை ஒருதனி யிருந்த
திருவின் செய்யோள் போன்றினி திருப்பத்

நீயும் கொல்லாத் தீவினை யாட்டியேன்
யாது செய்கேன் என்றவள் ஏங்கலும்
ஆநிரை கேளுன் அரும்பெறற் கணவனை
ஊர்திரை கொண்டாங் குய்ப்பப் போகி
நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
பக்கஞ் சேர்ந்தனன் பல்லியாண் டிராஅன்
சந்திர தத்தன் எனுமோர் வாணிகன்
வங்கந் தன்னொடும் வந்தனன் தோன்றும்
நின்பெருந் துன்பம் ஒழிவாய் நீயென
அந்தரந் தோன்றி அசரீரி அறைதலும்
ஐயரி யுண்கண் அழுதுயர் நீங்கிப்
பொய்கைபுக் காடிப் போதுவாள் போன்று
மனங்கவல் வின்றி மனையகம் புகுந்தென்
கண்மணி யனையான் கடிதீங் குறுகெனப்
புண்ணிய முட்டாள் பொழிமழை தரூஉம்
அரும்பெறல் மரபிற் பத்தினிப் பெண்டிரும்
விரும்பினர் தொழூஉம் வியப்பினள் ஆயினள்
ஆங்கவள் கணவனும் அலைநீர் அடைகரை
ஓங்குயர் பிறங்கல் ஒருமர நீழல்
மஞ்சுடை மால்கடல் உழந்தநோய் கூர்ந்து
துஞ்சுதுயில் கொள்ளஅச் சூர்மலை வாழும்
நக்க சாரணர் நயமிலர் தோன்றிப்
பக்கஞ் சேர்ந்து பரிபுலம் பினனிவன்
தானே தமியன் வந்தனன் அளியன்
ஊனுடை இவ்வுடம் புணவென் றெழுப்பலும்
மற்றவர் பாடை மயக்கறு மரபிற்
கற்றனன் ஆதலின் கடுந்தொழில் மாக்கள்
சுற்று நீங்கித் தொழுதுரை யாடி
ஆங்கவர் உரைப்போர் அருந்திறல் கேளாய்
ஈங்கெங் குருமகன் இருந்தோன் அவன்பால்
போந்தருள் நீயென அவருடன் போகிக்
கள்ளடு குழிசியுங் கழிமுடை நாற்றமும்
வெள்ளென் புணங்கலும் விரவிய இருக்கையில்
எண்குதன் பிணவோ டிருந்தது போலப்
பெண்டுடன் இருந்த பெற்றி நோக்கிப்
பாடையிற் பிணித்தவன் பான்மைய னாகிக்
கோடுயர் மரநிழற் குளிர்ந்த பின்னவன்
ஈங்குநீ வந்த காரணம் என்னென
ஆங்கவற் கலைகடல் உற்றதை உரைத்தலும்
அருந்துதல் இன்றி அலைகடல் உழந்தோன்

வருந்தினன் அளியன் வம்மின் மாக்காள்
நம்பிக் கிளையனோர் நங்கையைக் கொடுத்து
வெங்களும் ஊனும் வேண்டுவ கொடுமென
அவ்வுரை கேட்ட சாதுவன் அயர்ந்து
வெவ்வுரை கேட்டேன் வேண்டேன் என்றலும்
பெண்டிரும் உண்டியும் இன்றெனின் மாக்கட்
குண்டோ ஞாலத் துறுபயன் உண்டெனில்
காண்குவம் யாங்களும் காட்டுவா யாகெனத்
தூண்டிய சினத்தினன் சொல்லெனச் சொல்லும்
மயக்குங் கள்ளும் மன்னுயிர் கோறலும்
கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்
பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்
நல்லறஞ் செய்வோர் நல்லுல கடைதலும்
அல்லறஞ் செய்வோர் அருநர கடைதலும்
உண்டென உணர்தலின் உரவோர் களைந்தனர்
கண்டனை யாகெனக் கடுநகை எய்தி
உடம்புவிட் டோடும் உயிருருக் கொண்டோர்
இடம்புகும் என்றே எமக்கீங் குரைத்தாய்
அவ்வுயிர் எவ்வணம் போய்ப்புகும் அவ்வகை
செவ்வனம் உரையெனச் சினவா திதுகேள்
உற்றதை உணரும் உடலுயிர் வாழ்வுழி
மற்றைய உடம்பே மன்னுயிர் நீங்கிடில்
தடிந்தெரி ஊட்டினுந் தானுண ராதெனின்
உடம்பிடைப் போனதொன் றுண்டென உணர்நீ
போனார் தமக்கோர் புக்கிலுண் டென்பது
யானோ வல்லேன் யாவரும் உணர்குவர்
உடம்பீண் டொழிய உயிர்பல காவதம்
கடந்துசேண் சேறல் கனவினுங் காண்குவை
ஆங்கனம் போகி அவ்வுயிர் செய்வினை
பூண்ட யாக்கையின் புகுவது தெளிநீ
என்றவன் உரைத்தலும் எரிவிழி நாகனும்
நன்றறி செட்டி நல்லடி வீழ்ந்து
கள்ளும் ஊனும் கைவிடின் இவ்வுடம்பு
உள்ளுறை வாழுயிர் ஓம்புதல் ஆற்றேன்
தமக்கொழி மரபின் சாவுறு காறும்
எமக்காம் நல்லறம் எடுத்துரை என்றலும்
நன்று சொன்னாய் நன்னெறிப் படர்குவை
உன்றனக் கொல்லும் நெறியறம் உரைக்கேன்
உடைகல மாக்கள் உயிருய்ந் தீங்குறின்

அடுதொழில் ஒழிந்தவர் ஆருயிர் ஓம்பி
மூத்துவிளி மாவொழித் தெவ்வுயிர் மாட்டும்
தீத்திறம் ஒழிகெனச் சிறுமகன் உரைப்போன்
ஈங்கெமக் காகும் இவ்வறம் செய்கேம்
ஆங்குனக் காகும் அரும்பொருள் கொள்கெனப்
பண்டும் பண்டும் கலங்கவிழ் மாக்களை
உண்டேம் அவர்தம் உறுபொருள் ஈங்கிவை
விரைமரம் மென்றுகில் விழுநிதிக் குப்பையோ
டிவையிவை கொள்கென எடுத்தனன் கொணர்ந்து
சந்திர தத்தன் என்னும் வாணிகன்
வங்கஞ் சேர்ந்ததில் வந்துடன் ஏறி
இந்நகர் புகுந்திங் கிவளொடு வாழ்ந்து
தன்மனை நன்பல தானமும் செய்தனன்
ஆங்ஙனம் ஆகிய ஆதிரை கையால்
பூங்கொடி நல்லாய் பிச்சை பெறுகென
மனையகம் புகுந்து மணிமே கலைதான்
புனையா ஓவியம் போல நிற்றலும்
தொழுது வலங்கொண்டு துயரறு கிளவியோ
டமுத சுரபியின் அகன்சுரை நிறைதரப்
பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுகென
ஆதிரை யிட்டனள் ஆருயிர் மருந்தென்.

## கசு. ஆதிரை பிச்சையிட்ட காதை

### உரை

[இக்காதை கஉக ஆம் அடிகாறும் ஆதிரை வரலாற்றினைக் கூறுகின்ற காயசண்டிகை கூற்றாய் ஒரு தொடர்]

ஆதிரை கணவன் சாதுவன் தகவிலனாய்க் கேடெய்துதல்

க - கா : ஈங்கிவள்.........கோடலும்

(இ - ள்.) விஞ்சையர் பூங்கொடி - விச்சாதரியாகிய பூங்கொடி போன்ற காய சண்டிகை மணிமேகலையை நோக்கி; ஆயிழை ஈங்கு இவள் செய்தி கேள் என — மணிமேகலாய்! ஈங்கு யான் கூறிய இவ்வாதிரையின் வரலாற்றினைக் கூறுவல் கேட்பாயாக! என்று சொல்லி மணிமேகலையை முன்னிலைப்படுத்திக் கொண்டு மாதர்க்கு புகுந்ததை உரைப்போள் - அவ்வாதிரைக்கு நிகழ்ந்த செய்தியைக் கூறுபவள்; ஆயிழை கேளாய் ஆதிரை கணவன் சாதுவன் எனபோன் தகவு இலன் ஆகி - ஆயிழாய்! கேள் இந்த ஆதிரை நல்லாள் கணவனாகிய சாதுவன் எனனும் பெயருடையன் ஆவான் அவன் பெருந்தனமையிலனாய் இனபத் துறையில் எளியனாகி; அணியிழைதன்னை அகன்றனன் போகி - கற்புக் கடம்பூண்ட தெய்வம் போலவாளாகிய அணிகலனணிந்த தன் மனைவி ஆதிரை நல்லாளைப் பிரிந்து போய்; கணிகை யொருத்தி கைத்து ஊண் நல்க - தன்னைக் காமுற்ற கணிகை மகள் ஒருத்தி தன் பரத்தைமைத் தொழிலால் ஈட்டிய பொருளாலியன்ற உணவினை நாடொறும் வழங்குதலாலே அதனை உண்டு; வட்டினும் சூதினும் வான் பொருள் வழங்கி - வட்டாடுதலும் சூதாடுதலும் ஆகிய தீத்தொழில்களிலீடுபட்டுத் தன் முன்னோர் ஈட்டி வைத்த பெரும் பொருளையெல்லாம் தொலைத்து விட்டமையாலே; கெட்ட பொருளின் கிளை கேடு உறுதலின் - இவ்வாறு கெட்டொழிந்த பொருள் காரணமாக அப் பொருட்கு வருவாய் ஆகிய நிலமும் பிறவுமாகிய பொருட் பகுதிகள் எல்லாம் கேடுறுதலாலே; பேணிய கணிகையும் காணம் இலி என பிறர் நலம் காட்டிக் கை உதிர்க் கோடலும் - பொருளிருக்குமளவும் தன்னைப் பொய்யன்பு காட்டி உண்டியும் கொடுத்துப் பேணி வந்த அக் கணிகை தானும் இவன் பொன்னில்லாதவன் என்றறிந்த பொழுதே தன்னைக் காமுற்று வருகின்ற பிறராகிய செல்வரின்

இவனுக்குக் கூறிக்காட்டி இனி நீ என் மனைக்கு வாராதே சிறப்பை இவனுக்குக் கூறிக்காட்டி போக்கி விடாநிற்ப என்க. கொள் எனக் கையை அசைத்துப் போக்கி விடாநிற்ப என்க.

(வி - ம்.) ஈங்கிவள் என்றது ஈண்டு யான் கூறிய அவ்வாதிரை என்றவாறு. செய்தி என்றது - ஆதிரை தெய்வக் கற்புடையாள் என இவ்வுலகம் அறிதற்குக் காரணமாக அவட்கெய்திய செய்தியை. விஞ்சையர் பூங்கொடி : காயசண்டிகை; மாதர்க்கு - ஆதிரைக்கு. புகுந்ததை - நிகழ்ந்த செய்தியை. ஆயிழை : விளி. அணியிழை - ஆதிரை. கணிகை கைத்தூண் என்றது - கணிகைத் தொழிலால் செய்த பொருளாலாய உண்டி. இஃது உண்ணத்தகாமைக்கு ஏதுவை விதந்து கூறியபடியாம். "கடவதன்று நின் கைத்தூண் வாழ்க்கை" எனச் சிலப்பதிகாரத்தினும் வருதலுணர்க. (கசு : சுஎ)

வட்டினும் சூதினும் கெட்ட பொருட்கு முதலாகிய வழியைக் கிளை என்றார். பொருளின் வருவாய்க்குரிய கிளைகள் என்க. அவை நிலமும் தொழிலுமாம். பேணிய - என்றது பொருள் உள்ளதுணையும் பேணிய கணிகை என்பதுபட நின்றது. பிறர் நலம் காட்டுதலாவது - இன்னின்னார் என்னை விரும்புகின்றனர் அவர் இத்துணை நலம் உடையர் என்று நாணாது கூறுதல். இனி இன்னின்ன கணிகையர் இன்னின்னாரால் இத்துணை நலம் எய்தினர் என எடுத்துக் காட்டலுமாம். இது நின்னால் யாது பயன் எனக் கைவிட்டுப் போக்கற் பொருட்டு. காணம் - பொன். கையுதிர்க் கோடல் - கைப்பற்றுதற்கு எதிர்மறை. அகற்றுதல் என்னும் பொருட்டாய ஒரு சொல் எனினுமாம்.

## சாதுவன் மரக்கலமேறிச் செல்லுதலும் அவனுக்கு நேர்ந்த நிகழ்ச்சியும்

### கக - உக : வங்கம்..........உற்றனென

(இ - ள்.) தானும் வங்கம் போகும் வணிகர் தம்முடன் தங்கா வேட்கையின் செல்வுழி - தனது தீயொழுக்கத்தாலே தீதுற்ற அச் சாதுவன்றானும் பொருளீட்டற் பொருட்டு மரக்கல மேறி வேற்று நாட்டிற்குச் செல்லும் வணிகரோடு கூடி ஓரிடத்தினும் தங்காமல் பிறநாடெல்லாம் காண்டல் வேண்டும் எனனும் வேணவாவோடு கடலினூடே செல்லும்பொழுது; நளி இரு முந்நீர் வளிகலன் வௌவ - செறிந்த பெரிய கடலானது சூறைக் காற்று வீசிக் கவிழ்த்தலால் மரக்கலத்தை விழுங்கி விட்டமையாலே; ஒடி மரம் பற்றி ஊர் திரை உதைப்ப நக்க சாரணர் நாகர் வாழ்மலைப் பக்கம் சார்ந்து அவர் பான்மையன் ஆயினன் - காற்றினாலே மோதிக் கவிழ்க்கப்பட்ட அம் மரக்கலத்தின் முறிந்து மிதக்கின்ற மரத்தைத் தெப்பமாகப் பற்றிக் கொண்டு கரை நோக்கி இயங்குகின்ற அலைகள் அம் மரத்தினை உந்திச் செலுத்துதலாலே சென்று ஆடையின்றித் திரிகின்றவராகிய நாகர் என்போர் வாழுகின்ற தீவின் மலைப்பக்கத்தே நிலத்திலேறி அவர் வயப்பட்டனன் இவன நிலை இன்னதாக; நாவாய் கேடு

உற நல்மரம் பற்றி உயிர் உயப் போந்தோர் - இவனோடு மரக் கலத்திற் சென்றவர் அம் மரக்கலங் கெட்டபொழுது இவனைப் போலவே ஒடிந்த நல்ல மரத்துண்டுகளைப் பற்றி அவனோடு உயிர் உய்தற்கு முயன்று சென்றோருள் சிலர் பூம்புகார் நகரத்திற்கே சென்று கரை ஏறியவர்; இடை இருள் யாமத்து எறி திரைப் பெருங்கடல் உடைகலப்பட்டு ஆங்கு ஒழிந்தோர் தம்முடன் சாதுவன் தானும் சாவு உற்றான் என - இரவின் இருள் மிக்க இடையாமத்திலே மோதுகின்ற அலைகளையுடைய பெரிய கடலின் கண் உடைந்து மூழ்கிய மரக்கலத்தினூடே அகப்பட்டு அங்கு இறந்தவர்களோடு கூடச் சாதுவன்றானும் இறந்தொழிந்தான் என்று கருதி அச் செய்தியை நகரிற் கூறிவிட்டமையாலே என்க.

(வி - ம்.) தங்கா வேட்கை என்றது - ஓரிடத்தே தங்காமல் யாண்டுஞ் சென்று காண வேண்டும் என்னும் அவா. இனி ஊரகத்தே தங்காமைக்குக் காரணமான பொருள் வேட்கையால் எனினுமாம்.

தானும் - சாதுவனும். நளி - குளிர்ச்சியுமாம். முந்நீர் வளி கவிழ்ந்தலாலே வௌவ என்க. மரக்கலம் மூழ்கிவிட என்பது கருத்து. மரக்கலத்தில் ஒடிந்து தனித்து மிதக்கும் மரம் என்க. ஊர்திரை: வினைத்தொகை.

நக்க சாரணர் நாகர் - ஆடையின்றித் திரிகின்ற நாகர் என்னும் ஒரு வகை மலையில் வாழும் மாக்கள். இவர் நாகத்தைத் தெய்வமாகக் கருதி வழிபடுவோராதலின் நாகர் என்னும் பெயர் பெற்றனர் என்ப. அவர் பான்மையன் - அவர் வயப்பட்டவன்.

உயிர் உயப் போந்தவர் சிலர் வெவ்வேறு திசைகளிற் சென்றுய்ந்தா ராக அவருள் நன் மரம் பற்றிய காரணத்தாலே மீண்டும் புகார் நகரத்தில் வந்து கரையேறி யுய்ந்தாரும் சிலர் உளராயினர்; அவர் மரக்கலத்துளகப்பட்டு இறந்தவரோடே சாதுவனும் இறந்தனன் என்று எண்ணியே அவன் இறந்தான் என்றே சொல்லி விட்டனர் என்க.

### கணவன் இறந்தான் எனக் கேள்வியுற்ற ஆதிரையின் செயல்

### உஉ - உ௪: ஆதிரை.........புகுதலும்

(இ - ள்.) ஆங்கு அது கேட்டு ஆதிரை நல்லாள் - ஆங்குப் பரவிய அச் செய்தியைக் கேட்டுக் கற்புடைமையிற் சிறந்த ஆதிரை என்னும் நங்கை அப்பொழுதே; ஊரீரேயோ - இம் மூதூரில் வாழும் பல்சான்றீரே பல்சான்றீரே!; ஒள் அழல் ஈமம் தாரீரோ எனச் சாற்றினள் கழறி - கணவனை இழந்த அளியேனுக்கு யான் மூழ்குதற்கியன்ற ஒள்ளிய நெருப்பினைச் சுடுகாட்டின்கண் வளர்த்துத் தாராட்டீரோ? என்று பலர்க்கும் அறிவிக்க அவர்

தாமும் அவள் தீயின் முழுகுதல் வேண்டா என அவளைத் தடுத்த பொழுது அவரையெல்லாம் இடித்துரை கூறி அடக்கி அவர்களைக் கொண்டே; சுடலைக் கானில் தொடுகுழிப்படுத்து முடலை முளி விறகின் எரி பொத்தி - சுடுகாட்டுக் கோட்டத்துள் எமைந்த நன்காட்டின்கண் தீ வளர்த்தற்குத் தோண்டும் குழியை முறைப்படி தோண்டச் செய்து அக் குழியிலடுக்கிய முறுக்கேறி உலர்ந்த விறகின்கண் தீ மூட்டி; மிக்க என் கணவன் வினைப்பயன் உய்ப்பப் புக்குழிப் புகுவேன் என்று அவள் புகுதலும் - எனக்குத் தெய்வத்தினும் மிக்கவனாகிய என்னுடைய கணவன் தான் செய்த பழவினை செலுத்துதலாலே சென்று மாறிப் பிறந்த விடத்தே யானும் என்னுயிரும் மாறிப் பிறக்கு மாற்றால் அவன் மனைவியே ஆகுவேன் என்னும் கோட்பாட்டோடே அவ்வாதிரை அத் தீயினுட் புகாநிற்ப என்க.

(வி - ம்.) அது - சாதுவன் சாவுற்றான் என்ற செய்தி. ஊரீர் என்றது ஊரிலுள்ள தன் குலத்துச் சான்றோரை. ஈமம் - சுடுகாட்டில் பிணஞ்சுட அடுக்கும் விறகு. சுடுகாடெனினுமாம். சாற்றுதல் - வற்புறுத்துக் கூறுதல். கழறினள் என்றமையால், ஊரவர் அவளைத் தடுத்தமையும் அவரையெல்லாம் இடித்துக் கூறித் தன் கருத்தின் வழி ஒழுகினள் என்பது போதர. முளி விறகின் என மாறுக. முடலை விறகு - முதிர்ந்த ஒழுங்கற்ற முருட்டுக் கட்டைகள். முளிதல் - உலர்தல். எரிபொத்தி - தீமூட்டி.

மிக்க என் கணவன் என்றது எனக்குத் தெய்வத்தினுங் காட்டிற் சிறந்தவனாகிய என் கணவன் என்றவாறு.

செய்வினைக்கேற்பவே மறுபிறப்பு வந்துறுமாகலின் வினைப்பயன் உய்ப்பப் புக்குழிப் புகுவேன் என்றாள். என்னை? இன்பமும் துன்பமும் அவனுக்கும் தனக்கும் ஒன்றாகவே வருதலின். புக்குழிப் புகுவேன் என்றது அவன் பிறப்புற்றவிடத்தே பிறந்து மீண்டும் அவனுக்கே மனைவியாவேன் என்பதுபட நின்றது. ஈண்டு—

"காதலர் இறப்பின் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத்து அடங்காது
இன்னுயிர் ஈவர் ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்"

எனப் பண்டு மாதவி வயந்த மாலைக்குக் கூறியது நினைக்கற்பாலதாம் (ஊரலர்.. ...சஉ - சங).

தீப்பாய்ந்த ஆதிரை ஊறின்றியமைதல்

உகூ - ௩௯ : படுத்து..........ஏங்கலும்

(இ - ள்.) படுத்துடன் வைத்த பாயல் பள்ளியும் உடுத்த கூறையும் ஒள் எரி உரு அது - தீப்புகுதுவோர் கிடத்தற்கென

ஈமவிறகடுக்கின்மேல் விரித்து அதனோடு கிடத்திய பாயலாகிய படுக்கையிடத்தினும் அதன்கண் புகுந்து வைகிய ஆதிரை நல்லாள் உடுத்திருந்த கோடிப் புடைவையினுங் கூட ஒள்ளிய நெருப்புப் பற்றுமலும்; ஆடிய சாந்தும் அசைந்த கூந்தலின் சூடிய மாலையும் தொல் நிறம் வழாது - பூசிய சந்தனமும் கட்டிய கூந்தலிலே சூட்டப் பெற்ற மலர் மாலையும் புலர்ந்தும் கருகியுந் தத்தம் நிறங் கெடாமலும்; விரைமலர்த் தாமரை ஒரு தனி இருந்த திருவின் செய்யோள் போன்று இனிது இருப்ப - மணமுடைய செந்தாமரை மலராகிய தனதிருக்கையின்கண் தான் ஒருத்தியே தமித்திருந்த திருமகள் போன்று குளிர்ந்து இனிதாகச் சிறிதும் ஊறின்றியிருத்தலும் என்க.

(வி - ம்.) கணவன் இறந்தமையால் தீப் புகுதும் பத்தினிப் பெண்டிர் ஈமவிறகின் மேல் படுத்தற்குப் பாய் விரித்தல் வழக்கம் என்பதும் தீப்புகு மகளிர் மலர் சூடிச் சாந்தம் நீவிப் புதுப்புடைவை யுடுத்தும் ஒப்பனை செய்துகொண்டு புகுவர் என்பதும் இதனாலறியப் படும்.

பூசிய சந்தனம் புலர்ந்து நிறம் கெடாமலும் சூடிய மலர் கருகி நிறம் வாடாமலும் இருந்தன. ஈம விறகில் தீப்பற்றிச் சூழக் கொழுந்து விட்டெரிய அதன் நாப்பண் சிறிதும் ஊறின்றி அமர்ந்திருக்கும் ஆதிரை நல்லாளுக்குச் செந்தாமரை மலரின் மேல் எழுந்தருளியிருக்கும் திருமகள் உவமை. சூழ்ந்தெரியும் தீப்பிழம்புகள் செந்தாமரை மலரின் மலர்ந்த இதழ்களாகவும் பாயல் பொகுட்டாகவும் ஆதிரை திருமகளாகவும் கொண்டு இவ்வுவமையின் அழகுணர்ந்து மகிழற்பாற்று. திருவின் செய்யோள் - திருமகள் என்னுந்துணை.

## ஆருயிர் நீங்கரத ஆதிரையின் துயரமும் தெய்வம் தெளித்துத் தேற்றுதலும்

### ரு - சச: தீயும்.........அறைதலும்

(இ - ள்.) அவள் தீயும் கொல்லாத் தீவினையாட்டியேன் யாது செய்வேன் என்று ஏங்கலும் - தீயினாலே சிறிதும் துன்புறுத்தப்படாமல் உயிரோடிருந்த அந்த ஆதிரை நல்லாள் தீயாகிய தெய்வம் தீண்டவும் ஒருப்படாத மாபெருந்தீவினை செய்துளேன் போலும், அந்தோ இனி யான் எவ்வாற்றால் என்னுயிரைப் போக்கமாட்டுவேன் என்று பெரிதும் ஏங்கி அழா நிற்ப; அசரீரி அந்தரம் தோன்றி-அவளது பேதைமை காரணமாகத் தோன்றிய அவளுடைய துயர்கண்டு அருட்பிழம்பாக யாண்டும் நிறைந்திருக்கின்ற தெய்வம் வானிடத்தே ஒலியுருவில் தோன்றி; ஆதிரை கேள் - ஆதிரை நல்லாய் நீ நின்னைக் கொல்லாமைக்குக் காரணம் கூறுவல் கேள்; உன் அரும் பெறல் கணவனை ஊர் திரை

கொண்டு ஆங்கு உய்ப்பப் போகி - உன் அரும் பெறல் கணவன் இறந்திலன் காண்! கடலுள் மூழ்கிய மரக்கலத்திலே ஒடி மரம் பற்றிக் கிடந்த நின் கணவனை இயங்கும் அலைகள் உந்திக் கொடு போதலாலே அவன் போய்; நக்கசாரணர் நாகர் வாழ்மலைப் பக்கம் சேர்ந்தனன் - நக்கசாரணராகிய நாகர்கள் வாழுகின்ற மலைப்பக்கத்திலே சேர்ந்துயிருய்ந் திருக்கின்றனன் காண்!; பல்யாண்டு இராஅன் - அவன் அங்குப் பல யாண்டுகள் தங்கி இருப்பானல்லன்; சந்திரதத்தன் எனுமோர் வணிகன் வங்கம் தன்னொடும் வந்தனன் தோன்றும் - இன்னும் சின்னாளிலே அம் மலைப் பக்கமாகச் சந்திரதத்தன் என்னும் ஒரு வணிகனுடைய மரக்கலம் வந்தெய்தும் அந்த மரக்கலத்திலேறி நின் கணவனும் வந்து நின் கண்முன் தோன்றி நிற்பன் காண்; நீ நின் பெருந் துன்பம் ஒழிவாய் என - ஆதலின் நீ எய்துகின்ற நின் பெரிய துன்பம் ஒழிந்து இனிதிருப்பாயாக என்று; அறைதலும் - கூறி நிற்றலாலே என்க.

(வி - ம்.) தீயும் கொல்லாத் தீவினையாட்டியேன் என்றது தீத் தானும் தெய்வமாகலின் என்னைத் தீண்டுதல் தகாது என்று கைவிடத் தருந்த மாபெருந் தீவினை செய்துள்ளேன் போலும் அதனால் என்னைத் தீண்டா தொழிந்தது என ஆதிரை கற்பித்துக் கொள்ளும் காரணம் நுண்ணியதாதலறிக. யாது செய்கேன் என்றது இனி எவ்வாற்றால் உயிர் துறப்பேன் என்று ஐயுற்றபடியாம்.

உன் கணவன் உயிருடன் இருத்தலாலும் நீ கற்பின் கனலியாத லானும் தீ உன்னைக் கொல்லா தொழிந்தது என்று குறிப்பாகக் காரணம் தெரிவித்தபடியாம்.

அசரீரி - அருவமாயிருக்கின்ற தெய்வம். அந்தரந் தோன்றி என்றது வானத்தில் ஒலியாகத் தோன்றி என்றவாறு. கணவனை இழந்த துன்பமாகலின் பெருந்துன்பம் என்று அத் தெய்வம் கூறுகின்றது.

### ஆதிரை மகிழ்ந்து இல்லம் புகுதல்

சரு - ருக : மையரி.........ஆயினள்

(இ - ள்.) மை அரி உண்கண் அழுதுயர் நீங்கிப் பொய்கை புக்கு ஆடிப் போதுவாள் போன்று - அசரீரி கூறிய ஆறுதல் மொழி கேட்டலும் கறுத்துச் செவ்வரி படர்ந்த மை எழுதிய கண்ணையுடைய ஆதிரை நங்கை யாது செய்கேன் எனக் கையற்றுக் கலங்கியழுதற்குக் காரணமான துன்பம் நீங்கிக் குளிர்ந்த குளத்தில் முழுகி ஆடி வருவாள் போன்று அத் தீக்குழியி னின்றும் புறப்பட்டு; மனம் கவல்வு இன்றி - மனத்திற் சிறிதும் கவலை இன்றி; மனை அகம் புகுந்து - பெரிதும் மகிழ்ச்சியுடையளாய் இல்லம் புகுந்து; என் கண்மணி அனையான் கடிது ஈங்கு

உறுக என - என் கண்ணினுட் பாவை போல்வானாகிய என் காதலன் விரைந்து எம்மில்லம் புகுவானாக என்னும் வேண்டு கோளோடே ; புண்ணியம் முட்டாள் - அருள் அறத்தை முட்டுப் பாடின்றிச் செய்பவள் ; பொழி மழை தரூஉம் அரும் பெறல் மரபின் பத்தினிப் பெண்டிரும் விரும்பினர் தொழூஉம் வியப்பினள் ஆயினள் - பொழிகின்ற மழையைத் தாம் விரும்பிய போது பெய்யென ஏவிப் பெய்விக்கும் தெய்வத்தன்மையுடைய இன்றியமையாச் சிறப்பினையுடைய பத்தினி மகளிரும் விரும்பித் தொழத் தகுந்த வியப்புடைய தெய்வக் கற்புடையளாகத் திகழ்கின்றனள் காண் ; என்றாள் என்க.

(வி - ம்.) மை - கரிய. அரி - செவ்வரி ; உண்கண் - மையுண்டகண். இது பன்மொழித் தொடர். ஆதிரை என்னும் பெயராந்துணை. தீயுள் மூழ்கியவள் பொய்கை புக்காடிப் போதுவாள் போன்று போந்தாள் என்க. கண்மணி யனையான் என்றது சாதுவனாகிய தன் கணவனை, சாதுவன் கணிகையின் கேண்மை கொண்டு தன்னைத் துறந்து தீயொழுக்கி னின்றவனாக இருந்தும் அவனை இவள் கண்மணி யனையான் என்று பாராட்டுதல் அவள் தெய்வக் கற்பிற்குச் சிறந்ததொரு சான்றும். இக்கருத்தினை—

"சேக்கை இனியார்பாற் செல்வான் மனையாளால்
காக்கை கடிந்தொழுகல் கூடுமோ கூடா
தகவுடைய மங்கையர் சான்றாண்மை சான்றார்
இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார்"

எனவரும் பரிபாடலினும் காண்க. (உ0 - அசு-அக)

## காயசண்டிகை முன்பு கூறிய சாதுவன் வரலாற்றில் எஞ்சிய துரைத்தல்

### ருஉ - ருகூ : ஆங்க..........எழுப்பலும்

(இ - ள்.) ஆங்கு அவள் கணவனும் அலைநீர் அடைகரை ஓங்கு உயர் பிறங்கல் ஒரு மரநீழல் - மணிமேகலை நங்காய் யான் முன்பு நாகர் வாழ்மலைப் பக்கம் சார்ந்து அவர் பான்மையன் ஆயினன் என்று அறிவித்த அவ்வாதிரை கணவனாகிய சாதுவன் செய்திகேள் அவன் எய்தி அலை எறிகின்ற கடலினது நீர் அடைகரையில் மிகவும் உயர்ந்துள்ளதொரு மலையின் மேல் ஏறி அவ்விடத்தே ஒரு மரத்தின் நீழலிலே இருந்தவன்; மஞ்சு உடை மால் கடல் உழந்த நோய் கூர்ந்து துஞ்சு துயில் கொள்ள - முகில்களையுடைய பெரிய கடலிலே அகப்பட்டுத் தான் அலைப்புண்ட உடற்றுன்பம் மிகப்பெற்றுத் தன்னை மறந்து துயில்

கொள்ளா நிற்ப; அச் சூர் மலை வாழும் நக்கசாரணர் நயமிலர் தோன்றிப் பக்கம் சேர்ந்து - அந்த அச்சந்தருகின்ற மலையின்கண் வாழ்கின்ற நக்க சாரணராகிய மக்கட் பண்பில்லாதவர் உணவு தேடிவருபவர் அவ்விடத்துத் தாமே வந்தெய்தி ஆண்டுத் துயின்று கிடக்கின்ற சாதுவன் பக்கத்திலே வந்து கூர்ந்து நோக்கியவர்; இவன் பரிபுலம்பினன் தானே தமியன் வந்தனன் அளியன் - இங்குக் கிடக்குமிவன் பெரிதும் வருந்தியவன் என்று தோன்றுகின்றது தான் தமியனாகவே இங்கு வந்துளான் நம்மால் பெரிதும் இரங்கத் தகுந்தவன் என்று தமக்குள்ளேயே அசதியாடுபவராய்; ஊன் உடை இவ்வுடம்பு உணவு என்று எழுப்பலும் - ஊன் மிக்கிருக்கின்ற இவனுடைய இவ்வுடம்பு இப்பொழுது நமக்கு ஒரு வேளை உணவாகலாம் என்று சொல்லிக் கொண்டு அவனைத் துயிலுணர்த்தி எழுப்புமளவிலே என்க.

(வி - ம்.) அலைநீர் - கடல். பிறங்கல் - மலை. மஞ்சு - முகில். மால் கடல் உழந்த நோய் - பெரிய கடலினின்றும் ஓடிமரம் பற்றிக் கிடந்து குளிராலும் பசியாலும் எய்திய துன்பம். அது கூர்தலாவது - செயலறவெய்துதல். சூர்மலை - அச்சந்தரு மலை. மக்களைத் தின்பவர் வாழு மலையாதலின் சூர்மலை என்றார். நயம் - ஈண்டு மக்கட்பண்பு. கண்ணோட்டம் எனினுமாம்.

கடலிடையே உடைகலப்பட்டு ஓடிமரம் பற்றி வந்து கரையேறிய வரை அவர் பண்டும் பலரைப் பார்த்தவராதலின் இவனும் அங்ஙனம் கடலில் உழந்தவன் என்று அவன் உடல்நிலை கண்டே இவன் பரிபுலம்பினன் என்றார். பரிபுலம்பினன் - பெரிதும் துன்பப்பட்டவன். பலர் வந்திருந்தால் நமக்கு இரை பெரிதும் கிட்டியிருக்கும். ஆனால் இவனே தனியனாக வந்திருக்கின்றான் என்பார் தாமே தமியன் வந்தான் என்று பரிந்துரைக்கின்றனர். இவனைத் தின்றுவிட்டால் இவன் துயரம் துவரப்போம் ஆதலின் இவனும் நம்மால் இரங்கத் தகுந்தவனே ஆகின்றான் என்று அசதியாடியபடியாம். பரிபுலம்பினனேனும் உடம்பில் தசை மிகுதியாகவே உளது என்பார் ஊனுடை உடம்பு என்றார். உணவு என்றது நமக்கிது ஒரு பொழுதைக்குப் போதிய உணவேயாம் என்பதுபட நின்றது.

## சாதுவன் நாகர் தலைவனைக் காண்டல்

### ௬௦ - ௭௧ : மற்றவர்.........குளிர்ந்தபின்

(இ - ள்.) மற்று அவர் பாடை மயக்கு அறு மரபில் கற்றனன் ஆதலின் - மணிமேகலாய்! நாகராலே எழுப்பப்பட்ட அச் சாதுவனானும் அந்த நாகர் மொழியைச் சிறிதும் மயக்கம் இல்லாத முறையிலே நன்கு கற்றிருந்தபடியாலே, தமது மொழியாலே தன்னை உரப்பி எழுப்பிய அந்த நாகரோடு அவரும் வியப்புறும் வண்ணமும் தன்பாலன்புறும்படியும் கேள்விக்கினிதாம்படி அந் நாகர் மொழியாலே அவருடன் சொல்லாடுமாற்றால்

அவரைத் தன் வயப்படுத்திவிட்டமையாலே; சுற்றும் நீங்கித் தொழுது உரையாடியாங்கு - அவனைச் சூழ்ந்து மிகவும் அணுக்கராய் நின்ற அந் நாகர் மருட்சியுற்றுப் பெரிதும் விலகி நின்று கைகூப்பித் தொழுது வணக்கத்துடன் பேசிய பின்னர்; அவர் உரைப்போர் - அந் நக்க சாரணர் சாதுவனுக்குத் தமது வேண்டுகோளைக் கூறுபவர்; அருந்திறல் கேளாய் ஈங்கு எம் குருமகன் இருந்தோன் அவன்பால் நீ போந்தருள் என - பெறுதற்கரிய பேராற்றலுடையோய் நின்னோடு சொல்லாடும் திறம் எமக்கில்லை இம் மலையிடத்தே எங்கள குருமகன் இருக்கின்றனன், அவன்பால் நீ எழுந்தருளல் வேண்டும் என்று அழையா நிற்றலாலே; அவருடன் போகி - அவரோடு சென்று; கள் அடு குழிசியும் கழி புலை நாற்றமும் வெள் என்பு உணங்கலும் விரவிய இருக்கையில் - கள் சமைக்கும் பானையும் மிக்க ஊன் நாற்றமும் வெள்ளிய என்போடு கூடிய ஊன் வற்றலும் விரவியுள்ளதோர் இருக்கையின்கண்; எண்கு தன் பிணவோடு இருந்தது போலப் பெண்டுடன் இருந்த பெற்றி நோக்கி - ஏற்றைக்கரடியொன்று தன் காதற்றுணையாகிய பெண் கரடியோடு கூடியிருந்தாற் போன்று தன் காதற் பெண்டாட்டியோடு வீற்றிருந்த தன்மையைப் பார்த்து; பாடையின் பிணித்து அவன் பான்மையன் ஆகி - அவனையும் தன்னுடைய மொழியினிமையாலே தன் வயப்படுத்திக்கொண்டு அவன் பக்கத்து அவனாலே விரும்பப்படும் தன்மையையுடையவனாகி; கோடுயர் மரநிழல் குளிர்ந்தபின் - அவனிருந்த கிளைகளோடுயர்ந்துள்ளதொரு பெரிய மரத்தின் நிழலிலே அவனால் நன்கு மதிக்கப்பட்டுக் கொல்வர் என்னும் அச்சந் தீர்ந் துளங் குளிர்ந்திருந்த பின்னர் என்க.

(வி - ம்.) மற்றவர் பாடை - அந்த நாகர் தாய்மொழியாகிய
நாகமொழி. நாகருள் நாகரிக மிக்கவரும் உளர் என்பது "கீழ்நில
மருங்கின் நாக நாடாளும் இருவர் மன்னவர்" என முற் கூறப்பட்ட
மையால் அறியப்படும் ஈண்டுக் கூறப்படுகின்ற நாகர் அவரினத்
தவராய் அவர் பேசுகின்ற நாக மொழியே பேசுகின்ற நாகரிகமில்லாத
நாகர்கள். மேலும், ஆடையுடுத்தாது திரியுமளவிற்குத் தாழ்ந்த காட்
டகத்தே வாழும் மாக்கள். மக்களைக் கொன்று தின்பவரும் ஆவார்.
ஆகவே இவரைப் பிரித்துக் காட்டவே புலவர் பெருமான் இவரை நக்க
சாரணர் நாகர் என அடைபுணர்த்து ஓதுகின்றனர். ஈண்டுச் சாதுவன்
கற்ற மொழி நாகரிகமுடைய நாகர் பேசும் மொழியாகும். ஆகவே தாம்
பேசும் மொழியே பேசுகின்ற சாதுவனுடைய மொழியைக் கேட்டலும்
நக்கசாரணர் நாகர் இவன் தம்மினத்து மேன்மகன் என்று கருதி
அச்சத்தாலே அணுக்கராய் நின்றவர் சற்று நீங்கித் தூரத்தே நின்று
தொழுது உரையாடுகின்றனர் என்றுணர்தல் வேண்டும். இவன்பால்
இவர் பெரிதும் அச்சமெய்தியதனை இவர் அவனை அருந்திறல் என்று
விளிப்பதனாலும் அறியலாம். மேன் மகனாகலின் தமக்குள் மேன்மகனாய்

விளங்கும் தங் குருமகன்பால் அழைத்தேகக் கருதி ஈங்கு எங் குருமகன் இருந்தோன் அவன்பால் போந்தருள் என்று வேண்டுகின்றனர்.

கல்லாத மாக்கட்குக் கற்றறிந்தவர்பால் மருட்கையும் அச்சமும் தோன்றுதல் இயல்பு.

குருமகன் இருந்தோன் என்புழி ஆகாரம் ஓகாரமாயிற்றுச் செய்யுளாதலின்.

குழிசி - பானை. முடை - ஊன். என்புணங்கல் - என்போடு கூடிய ஊன்வற்றல். எண்கு - கரடி. பிணவு, ஈண்டுக் கரடியின் பெண்ணுக்கு வந்தமையை,

"பன்றி புல்வாய் நாயென மூன்றும்
ஒன்றிய என்ப பிணவென் பெயர்க்கொடை"

என்னும் தொல்காப்பியமரபியற் சூத்திரத்தின்கண் (௬0) ஒன்றிய என்ற இலேசானே அமைத்துக் கொள்க. இங்ஙனமே பரிபாடலினும் "வேழப்பிணவு" (க0 - கரு) என இப் பெயர் யானைக்கும் வருவதூஉ முணர்க.

பெண்டு - பெண்டாட்டி; மனைவி. மனையறமில்லாமை பற்றி மனைவி என்னாது பெண்டு என்ற நுண்மை நோக்குக.

குளிர்ந்த பின் என்றது, கொன்று தின்பர் என்னும் அச்சந்தீர்ந்து உள்ளம் குளிர்ந்த பின் என்றபடியாம்.

### நக்கசாரணர் நாகர் குருமகன் செயல்

#### எக - எகூ : அவன்..........என்றலும்

(இ - ள்.) அவன் நீ ஈங்கு வந்த காரணம் என் என - சாதுவனுடைய மொழியினிமையால் பிணிப்புண்ட அந் நாகர் தலைமகன் சாதுவனை நோக்கி ஐய எமது மலைக்கு நீ வருதற்கியன்ற காரணம் யாது? என்று வினவா நிற்ப; ஆங்கு அவற்கு அலைகடல் உற்றதை உரைத்தலும் - அங்ஙனம் வினவிய அந் நாகர் தலைவனுக்குச் சாதுவன் தான் அலைமிக்க கடலில் எய்திய துன்ப நிகழ்ச்சியை எடுத்துக் கூறவே அது கேட்ட அத் தலைவன்; அருந்துதல் இன்றி அலைகடல் உழந்தோன் வருந்தினன் அளியன் - உணவுமின்றிப் பெரிதும் அலைக்கின்ற கடலிலே இவன் துன்புற்று வருந்தினன் நம்மால் இரக்கப்படத் தக்கவன் என்று சாதுவன் திறத்திலே பரிவு கூர்ந்து தன் பணி மாக்களை நோக்கி; மாக்காள் வம்மின் நம்பிக்கு இளையள் ஓர் நங்கையைக் கொடுத்து வெங்களும் ஊனும் வேண்டுவ கொடும் என - ஏவலர்களே விரைந்து வாருங்கள் இப்பொழுதே ஆடவருட் சிறந்திருக்

இன்ற இந்த நம்பிக்குப் பொருத்தமாக இளமையுடையளாய் நம் மகளிரிற் சிறந்த நங்கை யொருத்தியையும் கொடுத்து அவ்விருவர்க்கும் வெவ்விய கள்ளும் ஊனுமாகிய உணவுகளையும் வேண்டும் பிற பொருள்களையும் கொடுங்கோள் என்று கட்டளையிடா நிற்ப; அவ்வுரை கேட்ட சாதுவன் அயர்ந்து - அத் தலைவன் கூற்றைக் கேட்ட சாதுவன் பெரிதும் வருந்தி; வெவ்வுரை கேட்டேன் வேண்டேன் என்றலும் - நீ அன்பு மிகுதியாலே கூறினையேனும் நான் கேட்கலாகாத தீய மொழிகளைக் கேட்கலாயினேன் நின்னால் கூறப்பட்ட பொருள்களை யான் விரும்புகிலேன் காண்! பொறுத்தருள்க! என்று மறுத்துக் கூறலும் என்க.

(வி - ம்.) அவன் - நாகர் தலைவன். ஈங்கு நீ வந்த காரணம் என்? என்றது மேன் மகனாகிய நீ கீழோர் ஆகிய யாங்கள் உறையுமிடத்திற்கு வர நேர்ந்த காரணம் என்னை? என்று வினவியபடியாம்.

அவற்கு - அந் நாகர் தலைவனுக்கு. நம்பி என்றான் இவன் ஆண் மக்களுள் தலை சிறந்தவன் என்னும் கருத்தால். இவனுக்கேற்ற இளமகள் ஒருத்தியை ஆராய்ந்து கொடுமின் என்பான் இளையளோர் நங்கையைக் கொடுத்து என்றான்.

அயர்ந்து - வருந்தி. அவன் கட்டளையை மறுத்துழி அவன் தீங்கு செய்யவும் கூடும் என்று கருதி அயர்ந்து என்பது கருத்து.

களும்-கள்ளும்: விகாரம். வேண்டுவ பிறவும் - இவன் விரும்பும் பிறவும். அவை இருப்பிடம் கலம் படுக்கை முதலியன. வெவ்வுரை - தீய மொழி. அப் பொருள்களை யான் வேண்டேன் என்றவாறு.

## நாகர் தலைவன் வியப்பும் வினுக்களும்

### அ0 - அரு: பெண்டிரும்.........சொல்லென

(இ - ள்.) தூண்டிய சினத்தினன் - சாதுவன் தன் கட்டளையை மறுத்த மாற்றத்தாலே தூண்டப்பட்டெழுந்த வெகுளியை யுடையவனாகிய அந் நாகர் குருமகன்; ஞாலத்துப் பெண்டிரும் உண்டியும் இன்று எனின் மாக்கட்கு உறுபயன் உண்டோ - விருந்தினனே! எற்றிற்கு என் நன்கொடைகளை நீ மறுக்கின்றனை இந் நிலவுலகத்திலே மகளிரும் உணவும் இல்லை எனின் இதன்கண் வாழும் மாந்தருக்கு எய்தும் இன்பம் பிறிது ஏதேனும் உண்டோ? யாமறிகின்றிலேம்; உண்டு எனின் சொல் யாங்களும் காண்குவம் காட்டுவாயாக என - நீ உண்டு என்று கூறுவாயாயின் கூறுதி யாங்களும் அறிந்து கொள்வேம் காண் அவற்றை எமக்குங் காட்டுவாயாக என்று கூறாநிற்ப; என்க.

(வி - ம்) "பெண்டிருமுண்டியு மின்றெனின் மாக்கட்கு உண்டோ ஞாலத்து உறுபயன்" என நிகழ்மிதனோடு—

"பெண்டிரும் உண்டியும் இன்பமென் றுலகில்
கொண்டோர்" (கச : கூக - சய)

எனவரும் சிலப்பதிகாரம் ஒப்பு நோக்கற்பாலதாம்.

சாதுவனுக்கு நலஞ் செய்யும் கருத்தோடு கூறியவற்றை மறுத்துரைத்தலும் அம் மறுப்பு அவன் சினத்தைத் தூண்டுத வியல்பே யாதலறிக. உண்டெனின் யாங்களும் காண்குவம் என்றது இகழ்ச்சி. இன்றெனின் - இல்லையாயின்.

## சாதுவன் அறங்கூறல்

### அரு - கூக : சொல்லும்.........ஆகென

(இ - ள்.) சொல்லும் - அது கேட்ட சாதுவன் கூறுவான்; கலக்கறு மாக்கள் - கலங்குதலில்லாத அறிவுடைய சான்றோர்; மயக்கும் கள்ளும் மன்னுயிர் கோறலும் கடிந்தனர் - அறிவினை மயக்கு மியல்புடைய கள்ளுண்ணுதலையும் உடம்பிலே நிலைபெற்ற உயிர்களைக் கொல்லுதலையும் தீவினை என்று கருதி விலக்கிவிட்டனர்; கேளாய்-அதற்குக் காரணம் கூறுவல் கேட்பாயாக!; பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும் உறங்கலும் விழித்தலும் போன்றது உண்மையின் - தலைவனே இவ்வுலகிலே பிறந்தவர் இறந்து போதலும் இறந்து போனவர் மீண்டும் பிறப்பெய்துதலும் விழித்திருப்பவர் உறங்குவதும் உறங்கியவர் மீண்டும் விழிப்புறுதலும் போன்றதாம் என்னும் மெய்க்காட்சி வாய்மையே ஆதலின்; நல் அறம் செய்வோர் நல் உலகு அடைதலும் அல் அறம் செய்வோர் அருநரகு அடைதலும் உண்டு என உணர்தலின் - மேலும் பிறந்து வாழ்வோருள் வைத்து நன்மை பயக்கும் நல்வினையைச் செய்தவர் இறந்த பின்னர் நன்மையுடைய மேனிலையுலகங்களிலே சென்று இன்புற்றிருத்தலும் அல்லாத தீவினையைச் செய்தவர் இறந்த பின்னர்ப் பொறுத்தற்கரிய துன்பமுடைய நரக லோகத்திலே சென்று துன்பத்திலழுந்துதலும் உண்டு என்று திறவோர் காட்சியினால் தெளிந்திருத்தலாலே; உரவோர் களைந்தனர் கண்டனை ஆகு என - அறிஞர் அவற்றை நீக்கினர் என்று அறிவாயாக! என்று கூறுகிற்ப என்க.

(வி - ம்.) சொல்லும் - சொல்வான். கள் தன்னையும் மறப்பிக்கும் பெரியதொரு மயக்கஞ் செய்வதாகலின் மயக்குங் கள்ளும் என அதன் தீமையையும் விதந்தோதினன். ஈண்டு,

"கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்" (குறள் - ௯௨௫)

எனவரும் திருவள்ளுவர் திருவாக்கும்,

"ஏயின விதுவலான்மற் றேழைமைப் பால தென்றே
தாயிவள் மனைவி யென்னும் தெளிவன்றேல் தரும மென்னும்
தீவினை யைந்தின் ஒன்றும் அன்றியும் திருக்கு நீங்கா
மாயையின் மயங்கு கின்றும் மயக்கின்மேல் மயக்கும்
வைத்தாம்"

எனவரும் கம்பநாடர் திருவாக்கும் நினையற்பாலன.

மன்னுயிர் - உடம்பில் நிலைபெற்ற வுயிர். கோறல் - கொல்லுதல். இனி நக்கசாரணர் நாகர்தலைவன் ஆகலின் அவனுடைய தகுதி நோக்கி ஈண்டு அறங் கூறும் சாதுவன் இல்லறத்தோர்க் கோதிய பஞ்சசீலம் என்னும் ஐவகை அறமும் கூறாமல் கள்ளுண்ணாமையும் கொல்லாமையும் ஆகிய இரண்டறங்களே கூறியொழிந்தான்; இவ்விரண்டுமே தலைசிறந்தன வாம் இவற்றையே கூறினன். ஏனைய பொய்யாமையும் காமமின்மையும் கள்ளாமையும் ஆகிய மூன்றும் அவர்க்கு ஆற்றலாகாவறங்கள் ஆதலின் என்க. என்னை? அவர் இன்னும் இல்லறமே தலைப்படாத காடுறை வாழ்வினர் ஆதலின் இவை அவர்க்கு விளங்காமையின் பயனில கூறலாய் முடியுமாதலான்.

ஈண்டு "பிறந்தவர்......விழித்தலும்" எனவரும் இவ்வடிகள் "உறங்குவது போலும் சாக்கா டுறங்கி விழிப்பது போலும் பிறப்பு" எனவரும் (௩௩௯) திருக்குறட் கருத்தை இவர் பொன்போற் போற்றி வைத்தமை யுணர்க.

கயக்கு - கலக்கம். மேலே கயக்கறு மாக்கள் இவற்றைக் கடிந்தமைக்குக் காரணம் கூறுபவனும், நல்லறம் செய்வோர் நல்லுல கடைதலும் அல்லறஞ் செய்வோர் அருநரகு அடைதலும் உண்டு என்று அச்சுறுத்தினன். என்னை? "அச்சமே கீழ்களது ஆசாரம்" என்பதுபற்றி. நீயிர் இவற்றைச் செய்வீராயின் அருநரகடைந்து அளவிலாத் துயரத்துக் காளாவீர் என்று, அச்சுறுத்தல் வேண்டிற் றென்க. உரவோர் - அறிஞர்.

கண்டனை ஆக என்றது இதனை நன்குணர்ந்து கொள்ளுதி என்று வற்புறுத்தியபடியாம்.

## நாகர் குருமகன் நகைத்து வினவுதல்

௯௬ - ௯௫: கடுநகை..........உரையேன

(இ - ள்.) கடுநகை எய்தி - அதுகேட்ட அந் நாகர் குருமகன் இவன் நமது நன்கொடையை இகழ்ந்ததூஉமன்றி அச் செயலுக்குத் தகுந்த காரணமும் கூறாமல் வாய்தந்தன கூறு

இன்றுன் என்று கருதி அவன் மடமை கருதிச் சினத்தோடு விலாவிறச் சிரித்து வினவுபவன்! புதுவோய்!; ஈங்கு உடம்பு விட்டு ஓடும் உயிர் உருக்கொண்டு ஓர் இடம் புகும் என்று எமக்கு உரைத்தாய் - இவ்வுலகத்திலே உடம்பைப் போகட்டு ஓடுகின்ற உயிரானது மீண்டும் உடம்பெடுத்துக் கொண்டு நல்லுலகமும் நரகருலகமும் ஆகிய இரண்டிடங்களுள் வைத்து ஒருலகத்திலே புகுதும் என்று கூறினையன்றோ? வறுங் காற்றேயாகிய உயிர் காற்றோடு கலந்தொழிதலன்றி; அவ்வுயிர் எவ்வணம் போய்ப்புகும் - இறந்தொழிந்த அவ்வுயிர் எவ்வாறு சென்று மற்றொருடம்பிலே புகமுடியும்?; அவ்வகை செவ்வனம் உரையென - அது புகுதும் வகையை எமக்கு விளக்கமாகக் கூறிக்காண் என்று சொல்லிப் பின்னும் வெகுளா நிற்ப என்க.

(வி - ம்.) உயிருண்மையறியாதோர் உயிர்ப்பையே (பிராண வாயுவை) உயிர் என்று கருதுதல் இயல்பாகலின் அவர் கருத்திற்கேற்ப உரைவிரித்தாம். இதனை—

"யாதுமில்லை உயிரிவை யாம் சொலும்
பூதமே யெனப் போந்திருந் தென்னொடு
வாதஞ் செய்கின்ற பூதமவ் வாதமோ
யாதைம் பூதங்க டம்முள்ளு மஃதினி"

எனவரும் நீலகேசிச் செய்யுளுள் நீலகேசி ஐம்பூதங்களுள் என்னோடு வாதம் செய்யும் பூதம் அவ்வாதமோ (பிராணவாயுவோ) எனப் பூதவாதியை வினவுமாற்றா லறிக.

மூச்சுக்காற்றே இவ்வுடம்பிற்குயிர், அஃதியங்குங்காறும் இவ்வுடம்பியங்கும். இயங்காதொழியின் உடம்பியங்காது. ஆகவே உடம்பிற் புகாது ஒழிந்த மூச்சுக்காற்றுக் காற்றுடன் கலப்பதன்றி வேறொர் உடம்பிற்புகும் என்பதும் வேறோரிடத்திலே வாழும் என்பதும் அந் நாகர் தலைவனுக்குப் பெரும் பேதைமையாகத் தோன்றினமையின் அப் பேதைமை நிலைக்களனாகப் பெருநகை தோன்றுவதாயிற்று. பண்டும் சினந்து வினவியவனுக்குச் சாதுவன் கூற்றுத் தருந்த காரணமாகப் படாமையிற் பின்னும் சினந்தே வினவினான் என்பது மேலே சாதுவன் "சினவாது இதுகேள்!" என்று விடை கூறப்புகுமாற்றால் அறியலாம்.

சாதுவன் உயிருண்மையும் மறுபிறப்பும் பிறவும்
நாகர் குருமகனுக்கு அறிவுறுத்துதல்

கூஙு - கoகூ: சினவா.........உரைத்தலும்

(இ - ள்.) சினவாது இதுகேள் - தலைமகனே! வெகுளாதே கொள்! நின் வினாக்களுக்கு விடை கூறுவல் அதனைக் கூர்ந்து

கேட்பாயாக!; உடல் உயிர் வாழ்வுழி உற்றதை உணரும் - உடலின் கண்ணிருந்து உயிர் வாழ்கின்ற காலத்தே அவ்வுடல் தன்கண் வந்துறுகின்ற புலன்களுள் வைத்து யாதானும் ஒன்றனைத் தன் ஐம்பொறிகளுள் வைத்து அப் புலனுக்கு இயைந்த ஒரு பொறியாலே உணர்கின்ற இயல்புடையதாம்; மற்றையவுடம்பே மன் உயிர் நீங்கிடின் தடிந்து எரியூட்டினும் தான உணராது - அவ்வாறு பொறிகளாலே புலன்களை உணரும் இயல்புடைய அவ்வுடம்பு தானே பொறிகளின் வாயிலாயுணரும் பொருளாய்த் தனக்குள்ளில் நிலைபெற்றிருந்த உயிர் போய்விட்ட காலத்தே வாளாலே துணித்துத் தீயாற் சுட்டாலும் தான் ஒருசிறிதும் உணரமாட்டாது இவ்வியல்பு நீயும் நனகறிந்ததேயாமன்றோ; எனின் உடம்பிடைப போனது ஒன்று உண்டு என உணர் நீ - இங்ஙனமாதலின் பண்டு உடம்பினுள்ளிருந்து பொறி வாயிலாகப் புலன்களை உணர்ந்து இன்பதுன்பங்களை நுகர்ந்திருந்த பொருளொன்று அவ்வுடம்பினின்றும் போய் விட்டது என்று தெரிகின்றதன்றே அதுவே அவ்வுயிர் என்று நீ உணர்ந்து கொள்ளக்கடவாய்; போனோர் தமக்கு ஓர் புக்கில் உண்டு என்பது யானே அல்லேன யாவரும் உணர்குவர் - தாம் வாழுகின்ற இல்லத்திலிருந்து புறப்பட்டுப் போனவர்க்கு அவர் புகுந்துறைவதற்கு மற்றோர் இல்லம் இருக்கும் என்பதனை யான் மட்டுமோ அறிவேன் யாவருமே நன்கறிதுவால்லரோ?; உடம்பு கண்டு ஒழிய உயிர் பல காவதம் கடந்து சேண் சேறல் கனவினும் காண்தகைவ - இனி இது நிற்க மற்றொன்று கூறுவல் கேள், நீ நின இவ்விருப்பிடத்திலே உறங்குமபொழுது உன் உடம்பு இவ்விடத்திலேயே உயிர்த்துக் கிடக்கவே நினனுடைய உயிர் இவ்விடத்தினின்றும் தனியே பல காவத தூரத்திற்கப்பாலும் சென்று பல்வேறு செயல்களைச் செய்து இனப துனபநுகர்ச்சிகளை எய்துமொரு விந்தையை நீ நினனுடைய கனவிடத்தே பனமுறையும் கண்டிருப்பாயல்லையோ; ஆங்கனம் போகி அவ்வுயிர் செய்வினை பூண்ட யாக்கையில் புகுவது நீ தெளி - அவ்வாறே சென்று அந்த உயிரானது தான் செய்த வினைக்கிணங்க எடுத்த உடலினகண் புகுந்து வாழ்வதாம் என்று நீ தெளிந்து கொள்ளுதி; என்று அவன் உரைத்தலும் - என்று சாதுவன் கூறியவளவிலே; என்க.

(வி - ம்.) செவ்வனம் - செவ்வையாக; விளக்கமாக. சினவாது என்றமையால் அவன் வெகுண்டமை பெற்றும். உடல், உயிர் வாழ்வுழி உற்றதை யுணரும் என்க. உற்றதை என்றது புலனைச் சாதியொருமை. சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் புலன்களை உணரும் என்றவாறு. உடல் கருவிகளால் உணரும் என்பதாம். கருவி - மெய்வாய் கண் மூக்குச் செவி மனம் என்னும் ஆறுமாம். உயிர்

நீங்கிடில் அவ்வுடம்பே உணராமையின் உணர்தற்கு வினை முதலாக அவ்வுடம்பினிடை இருந்து போனது ஒன்றுண்டு என்று தெரிகின்றதன்றோ அதுவே உயிர் என நீ உணர் என்றறிவுறுத்தபடியாம். இங்ஙனம் புலன்களை யுணருமியல்பு உயிர்ப்பிற்கு இல்லை என்பதும் இதனால் அறிவுறுத்தினானுமாதலறிக.

ஓரிடத்திலிருந்து புறப்பட்டுப் போனவர் பிறிதோரிடத்தே சென்றுறைவர் என்பது கூறாமலே அமையும் என்பான் யாவரும் உணர்குவர் என்றான்.

இனி அவ்வுயிர் உடம்பு கிடப்பத் தான் மட்டும் புறம் போமாற்றை உணர்த்துவான் உடம்பீண்டொழியக் கடந்து சேட் சேறல் கனவினுங் காண்குவை என்றான். இதனால் கனவிற் காணப்படும் அருவுடம்பினுள் உயிர் இருத்தலைக் கூறாது கனவையே அஃதாவது அருவுடம்பையே உயிர் என்று அறிவுறுத்தானும், என்னை? அவன் ஐயந்தீர்த்தற்கு அருவுடம்பினியல்பு கூறுதல் மிகையாய் அவனுக்குப் பிறிதும் ஐயந்தோற்றுவிக்குமாகலின் என்க.

அவ்வுயிர் எவ்வணம் போய்ப்புகும் என்பதே அவன் வினாவாதலின் உயிர் உறக்கத்தே பருவுடம்பை நீத்து அருவுடம்பிற் சேட் சேறலைக் கனவின்கண் வைத்து அறிவுறுத்தான். உறங்கும் போது உடல் உயிர்ப்புடன் கிடத்தலின் இதனானும் உயிர்ப்பு உயிர் அன்று என்று அறிவுறுத்தானும் ஆயினன் ஆதலறிக.

இதனாற் பயன் நல்லறம் செய்வோர் நல்லுலகடைதலும் அல்லறம் செய்வோர் அருநரகடைதலும் கூடும் என்று அக் குருமகனுக்கு அறிவித்தலாம் என்க.

இதனால் அவன் நன்கொடையைத் தான் மறுத்தமைக்குச் சிறந்த காரணம் அறிவுறுத்தினமையும் அறிக.

### நாகர் தலைவன் நன்றிநவின்று எமக்காம் நல்லறம் நவிலுக என்று சாதுவனைச் சரணடைதல்

### ௧0௬ - ௧௧௧: எரிவிழி.........என்றலும்

(இ - ள்.) எரிவிழி நாகனும் - சாதுவன் கூறிய புதுமையுடைய மொழிகளைக் கேட்டவுடன் தீப்போன்று எரிகின்ற கண்களையுடைய அந் நாகர் குருமகன் பெரிதும் வியந்து பின்னும் அவனுடைய சொன்னயத்தாலே பிணிப்புண்டவனாய்ச் சாதுவனைப் பெரிதும் மதித்து; நன்று அறிசெட்டி நல் அடி வீழ்ந்து - நல்லறத்தை நன்குணர்ந்த வணிகனாகிய அச் சாதுவனுடைய அழகிய அடிகளிலே வீழ்ந்து வணங்கி; கள்ளும் ஊனும் கைவிடின் இவ்வுடம்பின் உள் உறை வாழ் உயிர் ஓம்புதல் ஆற்றேன் - பெரியோய்! நீ கூறிய அறவுரை சிறந்ததே ஆயினும், நீ அறிவுறுத்தவாறு யானும் கள்ளையும் ஊனையும் உண்ணாது கைவிடு

வேன்மன்! அங்ஙனம் அவற்றைக் கைவிட்டாலோ இந்த உடம்பி னுள்ளே உறைந்து வாழும் உயிரைப் பாதுகாத்துக் கொள்ளுதல் இயலாதேனுவேன் காண்!; தமக்கு ஒழிமரபின் சாவு உறும் காறும் எமக்கு ஆம் நல் அறம் எடுத்துரை எனறலும் - உயிர் கட்கு வரையறுத்துள்ள முறைமையாலே இந்த உடம்பு சாக்கா டெய்து மளவும் எம்மால் ஆற்றலாகும் நல அறங்களை மட்டும் எடுத்துக் கூறுவாயாக! என்று வேண்டா நிற்றலும் எனக.

(வி - ம்.) கள்ளையும் ஊனையுமே உண்டு பழகி விட்டமையாலே அவற்றைக் கை விட்டால் வேறுணவு கோடல் எம்மாலியல்வதன்று என்பது கருத்து. தமக்கு ஒழிமரபு என்றது மன்னுயிர்கட்கு இன்னது செய்யலாகாது என்று விலக்கப்பட்ட முறைமையை. இவற்றை அன்றி வேறு அறம் உளவேல் கூறுக அவற்றைக் கடைப்பிடிப்பல் என்பது கருத்து.

## நன்றறி செட்டி நாகர்கடைப் பிடித்தற்கியன்ற நல்லறங் கூறுதல்

### கக௨ - க௨௫ : நன்று.........கோள்கென

(இ - ள்.) நன்று சொன்னாய் நல்நெறிப் படர்குவை உன் தனக்கு ஒல்லும் அற முரைக்கேன் - அது கேட்ட சாதுவன் பெரிதும் மகிழ்ந்து தலைமகனே நீ நன்றே கூறினை இனி நீ படிப் படியாக நன்னெறியிலே சென்று சென்று உய்பவும் உய்தவை காண்! நீ விரும்பியவாறே உன்னால் கடைப்பிடித் தொழுகற் பால அறங்களும் உள அவற்றைக் கூறுவலகேள!; உடைகல மாக்கள் உயிர் உய்ந்து ஈங்கு உறின் அடுதொழில் ஒழிந்து ஆர் உயிர் ஓம்பி - எனைனப் போன்று கடலின்கண் தாம ஏறிவரும் மரக்கலம் உடைந்துழி அதனினின்று ஒடி மரம் பற்றி வருகின்ற மக்கள் அரிதின் உயிர் தப்பி இங்கு வந்து உற்றக்கால் அவரைக் கொல்லும் தீத்தொழிலைக் கைவிட்டு அவருடைய அரிய உயிரைப் பாதுகாத்திடுவாயாக!; மூத்து விளி மா வொழித்து எவ்வுயிர் மாட்டும் தீத்திறம் ஒழிக என - அப்பாலும ஊனதின்றல் கை விட மாட்டாயேனும், தாமே முதுமையுற்று இறந்துபடுகின்ற விலங்குகளின் ஊனை உண்பதல்லது எல்லா உயிர்களிடத்தும் அருள் உடையையாகித் தினனுதற் பொருட்டாக அவற்றைக் கொல்லுகின்ற தீவினையைச் செய்யா தொழிவாயாக, இவ் விரண்டும் உனக்கு ஒல்லும் அறங்களே யாதலின இவற்றையே கடைப்பிடித் தொழுகுதி என்று கூற, சிறுமகன் உரைபபோன் ஈங்கு எமக்கு ஆகும் இவ்வறம செய்கேன் - இவற்றைக் கேட்டுக் கிழக்களாகிய அந் நாகர் தலைவன தன் உடம்பாட் டைக் கூறுபவன ஐய! நீ கூறிய இவ்வற மிரண்டும் எம்மால் மேற் கொண்டொழுகத் தக்க அறமே ஆகும் ஆதலின் இவற்

றைக் கடைப் பிடியாகக் கொண்டொழுகுவேன் காண்!; ஆங்கு உனக்கு ஆகும் அரும் பொருள் கொள்க - அதோ அவ்விடத்தே இடக்கின்ற உனக்கு ஆக்கமாகின்ற பெறற்கரும் பொருள்களை யெல்லாம் நீ ஏற்றுக் கொள்வாயாக என்று சொல்லிச் சாதுவனுக்குப பொருட்குவியல் சிலவற்றைக் காட்டிக் கூறுபவன்; பண்டும் பண்டும கலங்கவிழ் மாக்களை உண்டேம் - ஐயனே பழைய காலந் தொட்டு மரக்கலம் கவிழப்பெற்று உயிருய்ந்து ஈங்கு வந்துற்ற மாந்தர்களைப் பன்முறை கொன்று தினறேமாக; ஈங்கு இவை அவர் தம் உறுபொருள் - இதோ இவ்விடத்தே குவிந்து இடக்கும் இப் பொருள்கள் அம் மாந்தர் கொடுவந்தமையாலே மிக்குக் கிடக்கும் பொன முதலிய பொருள்களாம். இவையே யன்றி; விரை மரம் மெல் துகில் விழுநிதிக் குப்பையோடு - அதோ அவ்விடத்தே சந்தன மரமும் அகிலும் பிறவுமாகிய நறுமணங் கமழும் மரங்களும மெல்லிய ஆடைகளும் இன்னோரன்ன பிறவுமாகிய இவற்றையும் பொன் முதலிய உனக்குச் சிறந்த பொருட்குவியலகளோடே இக் குவியலகளையும் நீ ஏற்றுக் கொள்வாயாக! என்று வழங்கா நிற்ப; என்க.

(வி - ரை.) நன்று சொன்னாய் என்றான் முன் போன்று கடுநகை எய்தி இவற்றையும் இகழ்ந்து கை விடாமல் எமக்கு ஆம் நல் அறம் உரை என அறத்தைக் கேட்டற்கு அவாவி வேண்டுதல் பற்றி, அவ்வாறு அறநெறியை அவாவி நிற்போர் மேலும் மேலும் அந்நெறி பற்றி ஒழுகுதலியல்பாதல்பற்றி இனி நீ உய்ந்தாய் என்று உவகை கூறுவான், ''நன்னெறிப் படர்குவை'' என்று பாராட்டினன்; இக் கருத்தோடு—

''பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பின் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை இரங்குவிர் மாதோ
நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே''

எனவரும் இனிய புறநானூற்றுப் பாடற் கருத்தும் ஒப்புக்காணத்தகும். (கசு)

இனி, ''ஒல்லும் அறநெறி உரைக்கேன்''

என்னும் இது,

"ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாம் செயல்" (௩௩)

எனவரும் அருமைத் திருக்குறளையும் நினைப்பித்தலுணர்க.

அடுதொழில் - கொல்லும் தொழில்.

இனி ஊன் உண்ணமல் என் உயிர் ஓம்புதல் ஆற்றேன் என்ருகலின் அகற்குப் புறனடையாக ஒரு வழி கூறுவான், 'மூத்துவிளி மாக்களின் ஊனைத் தின்னுக' என்ருன்.

இனி, ஈண்டு இச் சாதுவன் மூத்துவிளி மாவின் ஊனைத் தின்னுக என்றது செத்ததெல்லாம் மண்ணேடொத்தலினனும் ஊன்தின்ளுேம்புதல் அந் நாகர் தலைவனுக்கு ஒல்லாது என்பதானும் புறனடையாகக் கூறப்பட்டதே யன்றிப் பிறிதொன்று மில்லை. ஆதி புத்தர் அறமுரைக்குங் காலத்தே இங்ஙனமே கீழ் மக்கட்கு அறிவுறுத்தி யிருத்தலும் கூடும். இதனைப் பிற்காலத்துப் பௌத்தர்கள் விதியறமே போலத் தஞ்சமய நூல்களினும் புகுத்தி விடுவார் ஆயினர் என்பதும், பிடக நூலிலேறிய இவ் விதி காரணமாக இக் காலத்தே பௌத்த சமயத் துறவோர் தாமும் விலைப்பாலில் ஊன் கொண்டு தின்கின்றனர். இங்ஙன மன்றித் தினற் பொருட்டாய் விலைப்பாலில் ஊன் கொண்டு தின்னலாம் என்று புத்தர் பெருமான் பிடகநூலிற் கூறி வைத்துள்ளார் என்பது அருட்பிழம்பாகிய அப் பெரியோர் இயல்பறியாதவர் படைத்துமொழிக் கிளவியே என்று உணர்ந்து கொள்ளல் வேண்டும்.

இனி ஈண்டுச் சாதுவன் ஊன் தின்றலைத் தீவினை என்பதனுல் பண்டு பௌத்த சமயத்தைத் தழுவிய தண்டமிழாசான் சாத்தனுரை யுள்ளிட்ட தமிழகத்துப் பௌத்தர் எல்லாம் ஊன் உண்ணமையை மேற் கொண்டிருந்தவரே என்பது புலனுகும். இது பற்றி யாம் நீலகேசி முன்னுரையினும் ஆராய்ச்சி செய்து வரைந்துள்ளேம். அறிய விரும்புவோர் அம் முன்னுரையைப் பயின்றறிக. ஈண்டு,

"தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்" (௨௫௬)

எனவரும் திருக்குறளும், நினைவிற் கொள்ளற்பாலதாம்.

தீத்திறம் - கொலை செய்யும் தீவினை. பொன்னும் மணியும் விரைமரமும் பிறவுமாகிய அரும்பொருள் எல்லாம் நக்க சாரணர் ஆகிய தமக்குப் பயன் படாமையின் உனக்கு ஆகும் அரும்பொருள் என்ருன்.

பண்டும் பண்டும் என்னும் அடுக்குப் பன்மை பற்றி வந்தது. விரைமரம் - நறுமணப் பொருளாகிய சந்தனம் முதலியவை. விழுநிதிக்குவை என்றது பொன்மணி முதலியவற்ருலியன்ற அணிகலன்களை. அவை உடைகலப்பட்டு உய்ந்து வந்தோர் அணிந்திருந்தவை என்க.

### காயசண்டிகை மணிமேகலையை ஆதிரை கையாற் பிச்சை பெறுக எனல்

கஉ௩ - கஉகூ : எடுத்தனன்.........பெறுகென

(இ - ள்.) சந்திர தத்தன் என்னும் வணிகன் வங்கம் சேர்ந்தது - சாதுவன் அத் தீவினருகே சந்திர தத்தன் என்னும் வணிகன் மரக்கலம் வந்து சேர்ந்ததனைக் கண்டு; எடுத்துக் கொணர்ந்தனன் வந்து அதில் உடன் ஏறி இந்நகர் புகுந்து ஈங்கு இவளொடு வாழ்ந்து - நாகர் தலைவன் கொள்கெனக் கொடுத்த சிறந்த பொருள்களில் வேண்டுமவற்றைக் கைக் கொண்டு அவற்றைப் பொதிகளாக்கி எடுத்துக் கொண்டு வந்து அம் மரக்கலத்தி லேறிக் கடல் கடந்து வந்து இப் பூம்புகார் நகரத்தை அடைந்து தன் கற்புடைய மனைவியோடு கூடி இனிது வாழ்க்கை நடத்தி; தன் மனை நன்பல தானமும் செய்தனன் - தன்னில்லத்தே நன்மை தருகின்ற பல தானங்களையும் செய்து சிறந்தனன் காண்!; பூங்கொடி நல்லாய் ஆங்கனம் ஆகிய ஆதிரை கையால் பிச்சை பெறுக என - மகளிருள் சிறந்த மணிமேகலை நங்காய்! இவ்வாறு பத்தினிப் பெண்டிருள்ளும் தலை சிறந்து விளங்கா நின்ற அவ்வாதிரை நல்லாளுடைய பெருந்தகைமை யுடைய கையாலே இடப்படுகின்ற ஆருயிர் மருந்தாகிய பிச்சை யினை நீ முதன் முதலாக ஏற்றருளுக என்று அறிவியா நிற்ப என்க.

(வி - ம்.) வங்கம் சேர்ந்ததில் என்றது சேர்ந்த வங்கத்தில் என்ற வாறு. இனி வங்கம் சேர்ந்தது அதில் என்னும் மொழிகளில் நிலைமொழி யீற்றினின்ற குற்றியலுகரமும் அஃதேறிய வல்லொற்றும் + ற்றுயிர்ம் விகார வகையாற் கெட்டனவாகக் கொண்டு சேர்ந்தது + அதில் எனக் கண்ணழித்து வினை முற்றும் சுட்டுப் பெயருமாக அறுத்துப் பொருள் கூறலுமாம்.

இந்நகர் - புகார்நகர். இவள் : ஆதிரை. ஆங்கனமாகிய என்றது அவ்வாறு பத்தினிகளுள் தலை சிறந்த பத்தினியாகத் திகழ்கின்ற என்பது பட நின்றது.

பூங்கொடி நல்லாய் என்றது மணிமேகலையை விளித்தபடியாம்.

### மணிமேகலை ஆதிரைநல்லாள்பாற் பிச்சை ஏற்றல்

க௩0 - க௩௫ : மனையகம..........மருந்தேன்

(இ - ள்.) மணிமேகலை தான் மனையகம் புகுந்து புனையா ஓவியம் போல நிற்றலும் - அது கேட்ட மணிமேகலை தானும் அவளறிவுரையை ஏற்றுக் கொண்டவளாய் அவ்வாதிரை நல்லாள

மங்கல மனையின் முன்றிலிலே சென்று அமுத சுரபியைச் செங்கையில் ஏந்தி வண்ணங்களைக் கொண்டு எழுதப் படாத ஓவியம் போன்று வாய் வாளாது நிற்ப; ஆதிரை - அவள் வருகை கண்ட ஆதிரை நல்லாள் தானும்; தொழுது வலம் கொண்டு பாரசம் அடங்கலும் பசிப்பிணி அறுக என துயர் அறு கிளவியோடு - நிலவுலகத்தே வாழுகின்ற உயிர்களின் பசி நோய் ஒழிவதாக! என்று சொல்லி வாழ்த்தும் உயிர்களின் துயர் கெடுதற்குக் காரணமான வாழ்த்துரையோடு; அமுத சுரபியின் அகன்சுரை நிறைதர ஆருயிர் மருந்து இட்டனள் - அமுத சுரபி என்னும் அரும் பெறற் பாத்திரத்தினது அகன்ற உள்ளிடம் நிறையும்படி உணவாகிய ஆருயிர் மருந்தைப் பெய்தருளினள் என்பதாம்.

(வி - ம்.) மனையகம் என்றது முன்றிலை. புனையா ஓவியம் - வடிவமட்டும் வரைந்து வண்ணம் தீட்டப்பெறாத நிலையில் உள்ள வோவியம். இவ்வுவமை மணிமேகலையின் மாண்புடைய இயற்கையழகை ஆடையணிகலன்களாலே ஒப்பனை செய்யப்படாமை பற்றிக் கூறப்பட்டதாம். இங்ஙனமே ஒப்பனை செய்யப்படாது இயற்கையழகோடு மட்டு மிருந்த கோப்பெருந்தேவியாகிய தலைவியை ஆசிரியர் நக்கீரனார் தாமும், "அம்மா சூர்ந்த அவிர் நூற் கலிங்கமொடு, புனையா வோவியம் கடுப்ப" என்றோதுவர் (நெடுநல்வாடை - ௧௪௬ - ௭). இன்னும் தண்டமிழாசான் சாத்தனார் இவ்வினிய வுவமையை, "புனையா வோவியம் புறம் போந்தென்ன மனையகம் நீங்கி வாணுதல் விசாகை உலக அறவியினூடு சென்றேறி' எனப் பிருண்டும் (௨௨ - ௮௮) ஓதி இன்புறத்துவர். கவிச்சக்கரவர்த்தி யாகிய கம்பநாடர் தாமும் இப் புனையா வோவியத்தைப் புகையூட்டிச் சிதைக்குவமை கூறுவர்.

"தேவுதெண்கடல் அமிழ்து கொண்டு அநங்கவேள் செய்த ஓவியம் புகையுண்டதே ஒக்கின்ற உருவாள்" என்பது அத் தெய்வப் புலவர் திருவாக்கு (இராமா - காட்சிப் - ௧௧).

புனையா வோவியம் போல வாய்வாளாது நிற்றலும் என்க. துறவோர் பிச்சை ஏற்புழி ஒரு பசுக்கறக்கும் அளவுடைய பொழுது முன்றிலிலே வாய்வாளாது நின்று பொறுமையோடு ஏற்றல் வேண்டும்; அவ்வளவில் பிச்சை இட்டால் ஏற்றல் வேண்டும்; இடாராயின், அயல் மனை முன்றிலிற் சென்று ஏற்றல் வேண்டும் என்பது துறவோர் திறத்தியன்றதொரு விதியாம் என்ப.

பாரக மடங்கலும் பசிப்பிணி அறுகென வாழ்த்தும் துயரறு கிளவியோடு இட்டனள் என்க. துயர்அறு கிளவி - துயர் அறுதற்குக் காரணமான வாழ்த்துச் சொல்.

இனி, இக் காதையை - விஞ்சையர் பூங்கொடி ஈங்கு இவள் செய்தி கேள்! என உரைப்போள் ஆதிரை கணவன் ஆகிப்போகி வழங்கி வங்கம் போகும் வணிகர் தம்முடன் செல்வுழி, முந்நீர் கலன் வௌவப் பற்றி மலைப்பக்கம் சார்ந்து அவர் பான்மையன் ஆகினன். போந்தோர் சாதுவன் சாவுற்றான் என, ஆதிரை அது கேட்டு எரிபொத்திப் புகுதலும்

எரி உருஅது இனிதிருப்ப, தீவினை யாட்டியேன் யாது செய்கேன் என்றவள் ஏங்கலும், அசரீரி ஆதிரை கேள் உன் கணவனைக் கொண்டுய்ப்பப் போகி சேர்ந்தனன். இராஅன் வந்தனன் தோன்றும் ஒழிவாய் என மனையகம் புகுந்து புட்டாள் வியப்பினள் ஆயினள். கணவனும் துயில்கொள்ள எழுப்பலும் எழுந்தருள் எனப்போகி நோக்கி உரைத்தலும் கொடுமென வேண்டேன் என்றலும் கொள்கென ஏறி வாழ்ந்து செய்தனன் ஆதிரை கையால் பெறுகென காயசண்டிகை கூற நிற்றலும் ஆதிரை ஆருயிர் மருந்து இட்டனள் என இயைத்திடுக.

ஆதிரை பிச்சையிட்ட காதை முற்றிற்று.

# கஎ. உலகவறவி புக்க காதை

[பதினேழாவது மணிமேகலை காயசண்டிகை என்னும் விச்சாதரி வயிற்று யானைத் தீயவித்து அம்பலம் புக்க பாட்டு].

அஃதாவது—அமுதசுரபி யென்னும் அரும்பெருந் தெய்வப் பாத்திரத்திலே முதன் முதலாக அகமலி உவகையின பத்தினிப் பெண்டிர் பண்புடன் இடூஉம் பிச்சை ஏற்றல் பெருந்தகவுடைத்து என்னும் கருத்தோடு மணிமேகலை முதன முதலாக அத்தகு மரபின பத்தினியாகிய ஆதிரை நல்லாள் முன்றிலிலே சென்று புனைமா ஓவியம் போல் நின்று அவ்வாதிரை நல்லாள் பாரகமடங்கலும் பசிப்பிணி அறுகெனத் தொழுது வலங்கொண்டு அமுதசுரபி நிறையப் பெய்த ஆருயிர் மருந்தாகிய பிச்சையை ஏற்றவள், அவ்வமுத சுரபியாலே ஆற்றுமாக்கள் அரும்பசி களைந்து நாடோறும் அருளறம் ஆற்றுதற்கு அந் நகரத்தே சக்கரவாளக் கோட்டத்தே அமைந்த உலகவறவி யெனனும் ஊரம்பலத்தே புகுந்து ஆங்கு ஆருயிர் ஓம்பும் செய்தியைக் கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இதன்கண்—காயசண்டிகை என்னும் விச்சாதரி ஆனைத்தீ நோயாலே ஆற்றவும் துயருழப்பவள், மணிமேகலையின் அறச்செயல்கண்டு உணவு வேண்டலும் அமுதசுரபியினின்றும் உணவு பெற்றுண்ட பொழுதே அவளது ஆனைத்தீ நோய் அகன்று விடுதலும் அவள் மணிமேகலைக்குத் தன வரலாறு கற்போர் உள்ளம் கசிந்துருகுமாறு கூறுதலும், உலகவறவியின்கண் உறுபசியுழந்தோரும் பாதுகாப்பவர் ஆருமின்மையின அரும்பிணியுற்றோரும் இடுவோர்த் தேர்ந்திருப்போர் பலராவார், நீ அங்குச் சென்று அறம்புரிக என்று அறிவுறுத்துதலும், மணிமேகலை உலக அறவியினபாற் சேறலும் ஆண்டுச் சம்பாபதி கோட்டத்தை மும்மையின் வணங்கிக் கந்திற் பாவையையும் கைதொழுதேத்தி ஆண்டுள்ள ஆற்றுமாக்களைக் கூவி யழைத்து உண்டி வழங்குதலும், உலகவறவியின்கண் ஊண் ஒலி எழுதலும் பிறவும் அழகுற ஓதப்பட்டுள்ளன.

பத்தினிப் பெண்டிர் பாத்தூண் ஏற்ற
பிச்சைப் பாத்திரப் பெருஞ்சோற் றமலை
அறத்தின் ஈட்டிய ஒண்பொருள் அறவோன்
திறத்து வழிப்படூஉஞ் செய்கை போல
வாங்குகை வருந்த மன்னுயிர்க் களித்துத்

தான்தொலை வில்லாத் தகைமை நோக்கி
யானைத் தீநோய் அகவயிற் றடக்கிய
காயசண் டிகையெனுங் காரிகை வணங்கி
நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
அடலரு முந்நீர் அடைத்த ஞான்று
குரங்குகொணர்ந் தெறிந்த நெடுமலை யெல்லாம்
அணங்குடை யளக்கர் வயிறுபுக் காங்கு
இட்ட தாற்றாக் கட்டழற் கடும்பசிப்
பட்டேன் என்றன் பழவினைப் பயத்தால்
அன்னை கேள்நீ ஆருயிர் மருத்துவி
துன்னிய என்னோய் துடைப்பா யென்றலும்
எடுத்த பாத்திரத் தேந்திய அமுதம்
பிடித்தவள் கையில் பேணினள் பெய்தலும்
வயிறுகாய் பெரும்பசி நீங்கி மற்றவள்
துயரம் நீங்கித் தொழுதனள் உரைக்கும்
மாசில் வாலொளி வடதிசைச் சேடிக்
காசில்காஞ் சனபுரக் கடிநக ருள்ளேன்
விஞ்சையன் றன்னொடென் வெவ்வினை உருப்பத்
தென்றிசைப் பொதியில் காணிய வந்தேன்
கடுவர லருவிக் கடும்புனல் கொழித்த
இடுமணற் கானியாற் றியைந்தொருங் கிருந்தேன்
புரிநூன் மார்பில் திரிபுரி வார்சடை
மரவுரி யுடையன் விருச்சிகன் என்போன்
பெருங்குலைப் பெண்ணைக் கருங்கனி யனையதோர்
இருங்கனி நாவற் பழமொன் றேந்தித்
தேக்கிலை வைத்துச் சேணுறு பரப்பிற்
பூக்கமழ் பொய்கை யாடச் சென்றோன்
தீவினை உருத்தலின் செருக்கொடு சென்றேன்
காலா லந்தக் கருங்கனி சிதைத்தேன்
உண்டல் வேட்கையின் வரூஉம் விருச்சிகன்
கண்டனன் என்னைக் கருங்கனிச் சிதைவுடன்
சீர்திகழ் நாவலில் திப்பிய மானது
ஈரா றாண்டில் ஒருகனி தருவது
அக்கனி யுண்டோர் ஆறீ ராண்டு
மக்கள் யாக்கையின் வரும்பசி நீங்குவர்
பன்னீ ராண்டில் ஒருநா ளல்லது
உண்ணா நோன்பினன் உண்கனி சிதைத்தாய்
அந்தரஞ் செல்லும் மந்திரம் இழந்து
தந்தித் தீயால் தனித்துயர் உழந்து
முந்நா ளாண்டின் முதிர்கனி நானீங்கு

உண்ணு நாளுன் உறுபசி களைகென
அந்நா ளாங்கவன் இட்ட சாபம்
இந்நாள் போலும் இளங்கொடி கெடுத்தனை
வாடுபசி உழந்து மாமுனி போயபின்
பாடிமிழ் அருவிப் பயமலை ஒழிந்தென்
அலவலைச் செய்திக் கஞ்சினன் அகன்ற
இலகொளி விஞ்சையன் விழுமமோ டெய்தி
ஆரணங் காகிய அருந்தவன் தன்னால்
காரணம் இன்றியுங் கடுநோ யுழந்தனை
வானூ டெழுகென மந்திரம் மறந்தேன்
ஊனுயிர் நீங்கும் உருப்பொடு தோன்றி
வயிறுகாய் பெரும்பசி வருத்தும் என்றேற்குத்
தீங்கனி கிழங்கு செழுங்காய் நல்லன
ஆங்கவன் கொணரவும் ஆற்றே னாகி
நீங்க லாற்றான் நெடுந்துய ரெய்தி
ஆங்கவன் ஆங்கெனைக் கருளொடு முரைப்போன்
சம்புத் தீவினுள் தமிழக மருங்கில்
கம்ப மில்லாக் கழிபெருஞ் செல்வர்
ஆற்றா மாக்கட் காற்றுந்துணை யாகி
நோற்றோர் உறைவதோர் நோனகர் உண்டால்
பலநா ளாயினும் நிலனொடு போகி
அப்பதிப் புகுகென் றவனருள் செய்ய
இப்பதிப் புகுந்தீங் கியானுறை கின்றேன்
இந்திர கோடணை விழவணி வருநாள்
வந்து தோன்றியிம் மாநகர் மருங்கே
என்னுறு பெரும்பசி கண்டனன் இரங்கிப்
பின்வரும் யாண்டவன் எண்ணினன் கழியும்
தணிவில் வெம்பசி தவிர்த்தனை வணங்கினேன்
மணிமே கலையென் வான்பதிப் படர்கேன்
துக்கந் துடைக்குந் துகளறு மாதவர்
சக்கர வாளக் கோட்டமுண் டாங்கதில்
பலர்புகத் திறந்த பகுவாய் வாயில்
உலக வறவி ஒன்றுண் டதனிடை
ஊரூ ராங்கண் உறுபசி உழந்தோர்
ஆரும் இன்மையின் அரும்பிணி யுற்றோர்
இடுவோர்த் தேர்ந்தாங் கிருப்போர் பலரால்
வடுவாழ் கூந்தல் அதன்பாற் போகென்
றாங்கவள் போகிய பின்னர் ஆயிழை
ஓங்கிய வீதியின் ஒருபுடை ஒதுங்கி
வலமுறை மும்முறை வந்தனை செய்தவ்

உலக வறவியின் ஒருதனி யேறிப்
பதியோர் தம்மொடு பலர்தொழு தேத்து
முதியோள் கோட்டம் மும்மையின் வணங்கிக்
கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய
தந்துணைப் பாவையைத் தான்தொழு தேத்தி
வெயில்சுட வெம்பிய வேய்கரி கானத்துக்
கருவி மாமழை தோன்றிய தென்னப்
பசிதின வருந்திய பைதல் மாக்கட்கு
அமுத சுரபியோ டாயிழை தோன்றி
ஆபுத் திரன்கை அமுத சுரபியிஃது
யாவரும் வருக ஏற்போர் தாமென
ஊணொலி அரவத் தொலியெழுந் தன்றே
யாணர்ப் பேரூர் அம்பல மருங்கென்.

———

## கஎ. உலகவறவி புக்க காதை

### உரை

மணிமேகலை அமுதசுரபி சுரக்கின்ற ஆருயிர் மருந்தாகிய
உண்டி கொடுத்து ஆற்றுமாக்கள் அரும்
பசி களைதலும் அவ்வற்புதங் கண்ட
காயசண்டிகை மணிமேகலையை
வணங்குதலும்

க - அ: பத்தினி..........வணங்கி

(இ - ள்.) பத்தினிப் பெண்டிர் பாத்து ஊண் ஏற்ற பிச்சைப் பாத்திரம் பெருஞ்சோற்று அமலை - பத்தினிப் பெண்டிருள்ளும் சிறந்த பத்தினிப் பெண்டிராகிய ஆதிரை நல்லாள் பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுகெனத் தனனை வலஞ்செய்து தொழுது பலரொடும் பகுத்துண்டற்கிமென்ற ஆருயிர் மருந்தை அமுதசுரபியிலிட அவ்வுணவு அமுதசுரபியினின்றும் இடையறுது சுரக்கின்ற பெரிய சோற்றுத் திரளையை; அறத்தின் ஈட்டிய ஒண் பொருள் அறவோன் திறத்து வழிப்படும் செய்கை போல - அறநெறியிலே நின்று தொகுக்கப் பெற்ற ஒளளிய பொருளானது அவ்வறவோன்பால் நாடொறும் பெருக்க மெய்தப் பின்னரும் அவனலே அவ்வற நெறியிலேயே செலவு செய்யப்பட்டு அவனுக்கும் பிறர்க்கும் ஆக்கமாகும் செயல்போல; வாங்கு கை வருந்த மன் உயிர்க்கு அளித்துத் தான் தொலைவு இல்லாத் தகைமை நோக்கி - மணிமேகலை தனது அறவொழுக்கங் காரணமாக எய்திய அவ்வமுத சுரபியினின்றுஞ் சுரக்கின்ற உண்டியை ஏற்போருடைய கைகள் வருந்துமாறு மன்னுயிர் பலவற்றிற்கும் வழங்கியும் தான் அவ்வுணவு சுரத்தல் ஒழியாத அதன் தெய்வத் தன்மையை அவளுடனிருந்தே நோக்கி; ஆனைத் தீ நோய் அகவயிற்று அடக்கிய காய சண்டிகை எனனும் காரிகை வணங்கி - ஆனைத் தீ யென்னும் கொடிய நோயைத் தனது வயிற்றினூடே அடக்கிப் பெரிதும் வருந்தி யிருக்கின்ற காய சண்டிகை என்னும் அவ் விச்சாதர மகள் மணிமேகலையின் திருவடிகளிலே வீழ்ந்து அன்போடு வணங்கி யென்க.

(வி - ம்.) பத்தினிப் பெண்டிர் என்றது ஆதிரை நல்லாளை. அவளிட்ட உணவு தானும் பலரோடிருந்து பகுத்துண்ணற் பொருட்டே அப்

பத்தினியால் ஆக்கப்பெற்ற சிறப்புடையது என்பார் அதனைப் பாத்தூண் என்று விதந்தார்.

அஃதாவது பலருக்கும் பகுத்தூட்டப்படும் உணவு என்றவாறு.

ஈண்டு—

"பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்"

எனவருந் திருக்குறளும் (சச) நினைக்கப்படும்.

பத்தினிப் பெண்டிர் கையில் ஏற்கப்பட்டதாதலின் அதன்கட் சுரக்கும் பெருஞ்சோற்றமலை மன்னுயிர்க் களித்தும் தொலைவில்லாத தாயிற்று எனத் தொலைவில்லாமைக்குப் பத்தினிப் பெண்டிர் பாத்தூண் என்றது குறிப்பேதுவாக நின்றது. என்னை? அமுதசுரபி அறவோர்பால் முதன் முதலாக ஏற்றால் நன்கு சுரக்கும் ஏனையோர்பால் இரப்பின் நன்கு சுரவாது, இதனை நன்கு நினைவிற் கொள்க என்பாள் தீவதிலகை-"மறந்தேன் அதன் திறம் அறங்கரியாக அருள்சுரந் தூட்டும் சிறந்தோர்க் கல்லது செவ்வனம் சுரவாது" என்றறிவுறுத்தினமையும் அவ்வறிவுரையை மறவாதிருந்த மணிமேகலை தானும் முதன் முதலாக "அகமலி உவகையிற் பத்தினிப்பெண்டிர் பண்புடன் இடூஉம் பிச்சை யேற்றல் பெருந்தகவுடைத்து" என்று காயசண்டிகைக்குக் கூறி ஆதிரைபால் ஏற்றமையும் ஈண்டு நினைக.—

பெருஞ்சோற்றமலை - மிக்க சோற்றுத்திரளை.

அறவோனால் அறத்தின் ஈட்டிய பொருள் அவ்வறவோன்பாற் பெருக்கம் எய்தி மீண்டும் அவன்பால் அறத்தின் வழிப்படும் பொழுது அழிவின்றி மேலும் மேலும் வளருமாப்போலே அமுதசுரபியின்கண் அமலை தொலைவில்லாது வளர்வதாயிற்று என்று உவமை கூறியபடியாம். அறவோன் - மணிமேகலைக்குவமை. அறத்தின் ஈட்டிய ஒண்பொருள் என்றது அவள் முன்னை நல்வினையாற் பெற்ற அமுதசுரபியும் அதன்கண் ஆதிரைபால் ஏற்ற ஆருயிர் மருந்துமாகிய இரண்டற்கும் உவமையாகும். மன்னுயிர்க் களித்தும் எனல் வேண்டிய சிறப்பும்மை தொக்கது.

ஆனைத்தீநோய்-எத்துணை யுண்டாலும் இடையறாது பசித்துத் துன்புறுத்துவதொரு கொடிய நோய். அகவயிறு - வயிற்றகம். அடக்குதலருமை தோன்ற அடக்கிய என்றார்.

## காயசண்டிகையின் அகவயிற்றடக்கிய ஆனைத்தீ நோயின் கொடுமையை அவள் கூறுதல்

கூ - ககூ: நெடியோன்..........என்றலும்

(இ - ள்.) அன்னை நீ கேள் - ஆருயிர்க் கெல்லாம் அன்னையே! நீ என் துயர் கேட்டருள்க!; நெடியோன் மயங்கி

நிலமிசைத் தோன்றி அடல் அரு முந்நீர் அடைத்த ஞான்று - நீள் நிலமளந்த நெடுமால் தானும மயங்கி இந் நிலவுலகத்திலே இராமனாகப் பிறந்துழலுங் காலத்தே வலிமையுடைய அடைத்தற்கரிய கடலிலே அணை கோலி யடைத்த பொழுது; குரங்கு கொணர்ந்து எறிந்த நெடுமலை எல்லாம் - குரங்குகள் பெயர்த்துக் கொணர்ந்து வீசிய நெடிய மலைகள் எல்லாம்; அணங்கு உடை அளக்கர் வயிறுபுக்கு ஆங்கு - தெய்வத் தன்மையையுடைய அக் கடலின் வயிற்றினுட் புகுந்து மறைந்தொழிந்தாற் போனறு; என்றன் பழவினைப் பயத்தால் இட்டது ஆற்றுக் கட்டழல் கடும்பசிப்பட்டேன் - அளியேன் என்னுடைய பழவினைப் பயனாலே இட்ட உணவு எவ்வளவேனும் ஒரு சிறிதும் தணிக்க வியலாத பெரு நெருப்பை ஒத்த பெரிய பசி நோய்வாய்ப் பட்டேன்காண்!; ஆர் உயிர் மருத்துவி - ஆற்றுதலரிய பசிப் பிணிதீகற்றும் உயிர்களின் மருத்துவச்சியே!; துனனிய என் நோய் துடைப்பாய் என்றலும் - நின் திருவடிகளில் தஞ்சமாக வந்தெய்திய என்னுடைய அக் கொடிய ஆனைத் தீ நோயைத் துவர நீக்கி என்னை உய்யக் கொள்வாயாக என்று வேண்டா நிற்றலும் என்க.

(வி - ம்.) நெடியோன் - திருமால். திருமாலும் உயிரினத்தவன் என்பதே பௌத்தர் கொள்கையாம். கடவுள் என்பது அவர்க்குடம் பாடன்று. ஆகவே அவன் பிறப்பெய்தியதற்குங் காரணம் மயக்கமே என்பதவர் கருத்தாகலின், நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி என்றாள். அணங்கு - தெய்வம். இனி வருத்துதலுடைய எனினுமாம். நெடுமலை - தான் ஏற்றுண்ணும் உணவிற்குவமை.

ஆருயிரை எல்லாம் ஊட்டி வளர்த்தலின் காயசண்டிகை மணிமேகலையை அன்னை! என்று விளிக்கின்றாள். ஆருயிரின் பசிப்பிணி தீர்த்தலின் 'மருத்துவி' என்றாள். துன்னிய என்றது அடைக்கலம் புகுந்தஎன்றவாறு. நோய் - ஆனைத்திநோய்.

## காயசண்டிகை மணிமேகலை வழங்கிய உணவுண்டு ஆனைத் தீ நோய் அகலப்பெற்றுத் தன் வரலாறு கூறுதல்

### கஎ - உகூ : எடுத்த..........இருந்தேன்

(இ - ள்.) எடுத்த பாத்திரத்து அமுதம் பிடித்து ஏந்திய அவள் கையில் பேணினள் பெய்தலும் - மணிமேகலை ஆருயிர் ஓம்புதற்குத் தன் செங்கையில் தாங்கிய அமுதசுரபியிற் சுரந்த சோற்றில ஒரு பிடி சோற்றைப் பிடித்து ஏற்றற்கு ஏந்திய காயசண்டிகையின கையிலே அவள் வேண்டுகோளை நிறைவேற்றி அவளைப் பேணுங் கருத்துடையளாய் இடுதலும்; வயிறு காய்

பெரும்பசி நீங்கி மற்றவள் துயரம் நீங்கித் தொழுதனள் உரைக்கும் - ஆனைத் தீ நோய் காரணமாக இடையறாது தன் வயிறு காய்தற்குக் காரணமான பெரிய பசி தீர்ந்தொழிந்தமையாலே அக் காய சண்டிகை தன் தீராத மனத்துன்பமும் தீரப்பெற்று மகிழ்ந்து மணிமேகலையைக் கை குவித்துத் தொழுது கூறுவாள்; மாசு இல வால் ஒளி வடதிசைச் சேடிக் காசு இல் காஞ்சனபுரக் கடிநகர் உள்ளேன் - அன்னையே! அளியேன் வரலாறு கூறுவல் கேட்டருளுக! யான் வட திசைக் கண்ணதாகிய குற்றமற்ற வெள்ளிய ஒளியையுடைய வெள்ளி மலையின் கண்ணுள்ள விச்சாதரர் உலகிலே குற்றமற்ற காஞ்சனபுரம் என்னும் காவலமைந்த நகரத்திலுள்ள விச்சாதர மகளாவேன் காண்!; என் வெவ்வினை உருப்ப - என் வெவ்விய பழவினை உருத்து வந்தமையாலே; விஞ்சையன் தன்னொடு தென்திசைப் பொதியில் காண வந்தேன் - விச்சாதரனாகிய என் கணவனோடு கூடித் தென் திசையிலுள்ள பொதிய மலையைக் கண்டு தொழுதற் பொருட்டு வந்த யான்; கடுவரல் அருவிக் கடும்புனல் கொழித்த விடுமணல் கான்யாற்று இயைந்து ஒருங்கு இருந்தேன் - விரைந்து வருதலையுடைய அருவியாகிய கடிய நீர் கொழித்துப் போகட்ட ஒன்றோடொன்று ஒட்டாமல் கிடக்கும் மணற் பரப்பினையுடைய ஒரு காட்டியாற்றினகட் சென்று ஆங்கு என் கணவனோடு ஒருசேர வீற்றிருந்தேனாக; என்றாள் என்க.

(வி - ம்.) எடுத்த என்றது ஆருயிரோம்ப எடுத்த என்பதுபடநின்றது. பாத்திரம் - அமுதசுரபி. அமுதம் பிடித்து ஏந்திய அவள் கையிற் பெய்தலும் என மாறுக. கையிற் பெய்தலும் பேணினள் பெய்தலும் எனத் தனித்தனி கூட்டுக. பேணினள் - பேணி. அஃதாவது அவள் வேண்டுகோளைப் போற்றிக் கேட்டு அவ்வாறு அவள் நோய் துடைத்தல் வேண்டும் என்று குறிக்கொண்டு என்றவாறு. அமுதம் - சோறு. சோற்றைப் பிடித்துண்டலும் பிடித்து ஈதலும் இயல்பு. ஒரு பிடி சோறு என்னும் வழக்கும் நோக்குக.

பண்டு எவ்வளவு உணவு இட்டாலும் ஆற்றப் படாத ஆனைத் தீப்பசி மணிமேகலை கையாற் பிடித்திட்ட ஒரு பிடி சோற்றாலே நீங்கிற்று என்றுணர்த்தியவாறும். துயரம் என்றது மனத்துன்பத்தை. தொழுதனள் - தொழுது. சேடி - விச்சாதரருலகு. அது வெள்ளி மலையின்கண்ணதாகலின், வாலொளிச் சேடி என்றாள்.

வெவ்வினை - தீவினையாகிய பழவினை. உருப்ப - பக்குவ மெய்திப் பயன் நுகர்விக்கும் செவ்வித்தாக. காசு - குற்றம். விஞ்சையன் என்றது கணவன் என்பதுபடநின்றது. காணிய; காண - கண்டு தொழ என்பது கருத்து. கொழித்தல் - தெள்ளுதல். மணல் ஒன்றனோடு ஒன்று ஒட்டாமல் தனித்தனியே கிடத்தல் பற்றி விடு மணல் என்றாள்.

இதுவுமது

உஎ - ருச : புரிநூன்.........சிதைத்தேன்

(இ - ள்.) புரிநூல் மார்பின் திரிபுரி வார்சடை மரவுரி உடையன் விருச்சிகன் எனபோன் - முறுக்குண்ட பூணு நூலுடைய மார்பையும் திரித்து முறுக்கிவிட்ட நீண்ட சடை யையும் மரவுரியாகிய ஆடையையும் உடையவனாகிய விருச்சிகன் என்னும் முனிவன் ஒருவன்; பெண்ணைப் பெரும்பழம் அனையது ஓர் இருங்கனி நாவல் பழம் ஒன்று ஏந்தி - பனையினது பெரிய குலையின்கண் பழுத்த கரிய பனம் பழம் போன்ற ஒரு முறை யில் ஒரோ ஒரு பெரிய பழத்தை மட்டும பழுக்குமியல்புடைய நாவல் மரத்தினது பழம் ஒன்றனைக் கையிலேந்தி வந்து; தேக்கு இலை வைத்து சேண நாறு பூ கமழ் பொய்கைப் பாப்பின் ஆடச் சென்றோன - தேக்கினது இலையிலே அதனை ஓரிடத்தே வைத்து விட்டு நெடுந்தொலை நாறப பூக்கள மணக்கின்ற பொய் கையின்கண் நீராடச் சென்றானாக; தீவினை உருத்தலின் - தீய என் பழவினை தன் பயனை யூட்டுஞ் செவ்வி பெற்று வந்துற்றமை யாலே அளியேன்; செருக்கொடு சென்றேன் - வழியைப் பார்த் துப் போகாமல் களிப்பொடு அங்கு மிங்கும் பார்த்துச் சென்றே னாதலின்; அந்தக் கருங்கனி காலால சிதைத்தேன் - அந்தக் கரிய நாவற் கனியை என் காலாலே மிதித்துச் சிதைத் தொழித் தேன்; என்றாள் என்க.

(வி - ம்.) புரிநூல் - பூணுநூல். வார்சடை - நெடியசடை. உடை யன் - ஆடையை யணிந்தவன். பெண்ணை - பனை. நாவற்கனிக்குப் பனங்கனி உவமை. இருங்கனி - பெரிய கனி. ஓர் இருங்கனி நாவல் - பன்னீராட்டைக்கொரு முறை ஒரு கனியே தருகின்ற நாவல் மரம் என்க. சேண் - தொலைவிடம். சென்றோன் - சென்றான்; ஆ ஓவா யிற்று. செருக்கு - களிப்பு.

இதுவுமது

கரு - சகூ : உண்டல்.........களைகேன

(இ - ள்.) உண்டல் வேட்கையின் வரூஉம் விருச்சிகன் - பொய்கையில நீராடியபின் தான் வைத்துச் சென்ற நாவற் பழத்தை உண்ணும் வேட்கையோடு மீண்டும் அங்கு வந்துற்ற அவ் விருச்சிக முனிவன்; கருங்கனிச் சிதைவுடன் என்னைக் கண்டனன் - கரிய அந் நாவற் பழம் சிதைந்து இடத்தலையும் அதனைச் சிதைதத அறிகுறியோடு நின்ற என்னையும் ஒருங்கே கண்டனன்; ஓர் திகழ் நாவலில் திப்பியமானது ஈர் ஆறு

ஆண்டின் ஒரு கனி தருவது – விச்சாதரியே! இன்றுச் சிதைக்கப்பட்ட இந் நாவற் கனியின் வரலாறு கேள்! சிறப்புற்று விளங்குகின்ற நாவல் மரங்களில் வைத்து இந்தக் கனி தந்த நாவல் மரமானது தெய்வத்தன்மை யுடையது, பன்னிரண்டாண்டிற்கு ஒரு முறை ஒரோவொரு கனியை மட்டுமே கனிந்து தருவது காண்!; அக் கனி உண்டோர் ஆறு ஈர் ஆண்டு மக்கள யாக்கையின வரும்பசி நீங்குவர் - அந்தக் கனியைத் தின்பவர் யாவரேனும் மீண்டும் அந் நாவல் மரம் கனி தரும் பன்னிரண்டாண்டும் மக்கள யாக்கையின்கண் ஒரு நாளிற் பல முறை வந்து வருத்தும் பசிப்பிணி நீங்கப் பெறுவர்; பன்னீராண்டில் ஒரு நாள் அல்லது உண்ணு நோன்பினேன - பன்னிரண்டாண்டினுள் ஒருநாள் உண்பதல்லது எஞ்சிய நாளகளில் உண்ணாத நோன்பை யுடைய யான; உண் கனி சிதைத்தாய் - உணணுதற்கு வைத்திருந்த இத் தெய்வக் கனியைக் காலாலே சிதைத்தொழித்த நீ; அந்தரம் செல்லும் மந்திரம் இழந்து தந்தித் தீயால் தனித்துயர் உழந்து - வான் வழியே இயங்குதற்குரிய மறை மொழியை இழந்து ஆனைத் தீ யென்னும் கொடிய நோயாற் பற்றப்பட்டு ஒப்பற்ற பெருந்துன்பத்தை நுகர்ந்து; முந்நால் ஆண்டின் முதிர்கனி நான ஈந்து உண்ணும்நாள் உன் பசி களைக என - மீண்டும் இற்றை நாளினின்றும் பன்னிரண்டாம் ஆண்டின்கண் இந் நாவன் மரத்திலே காய்த்து முதிர்ந்த இத்தகைய கனியைப் பெற்று யான் இவ்விடத்திலே உண்ணும்பொழுது நீ தானும் உன் ஆனைத் தீ நோயா லெய்தும் பசியைத் தீர்த்துக் கொள்ளக் கடவை என்று சொல்லி; அந் நாள் ஆங்கு அவன் இட்ட சாபம் இந் நாள் போலும் இளங்கொடி கெடுத்தனை - அந் நாளிலே அக் காட்டியாற்றின்கண் அவ் விருச்சிக முனிவன் இட்ட சாபம் நீங்கும் நாள் இந்த நாளே போலும்; நோனபினாலே உயர்ந்த இளைய மலர்க்கொடி போலும் நீ ஒரு பிடி சோற்றினாலே அம் மாபெரும் பசியைத் தணித் தருளினை காண்!; எனறாள் என்க.

(வி - ம்.) திப்பியம் - தெய்வத் தன்மையுடையது; நோன்பு - விரதம். உண்கனி: வினைத்தொகை. மந்திரம் - மறை மொழி. பிறர் அறியா வண்ணம் தம்முள்ளேயே கணிக்கப்படுவது ஆதலின் அப் பெயர் பெற்றது. மந்திரம் இழந்து என்றது - அதனாலாம் பயனை இழந்து என்றவாறு.

தந்தி - யானை, ஆனைத்தீ நோயைத் தந்தித்தீ என்றார். முந் நாலாண்டு - பன்னிரண்டாண்டு. அரும்பி மலர்ந்து பிஞ்சாகிக் காயாகிக் கனி யொன்று கனிதற்குப் பன்னீராண்டு ஆகும் என்பது தோன்ற முந் நாலாண்டின் முதிர்கனி என்றார். அந்நாள் இந்நாள் போலும் என்றது சாபமிட்ட நாளினின்றும் பன்னீராண்டு கழிந்தபின் நிகழும் நாள் இது போலும் என்றவாறு.

## இதுவுமது

௪௬ - ௬௧ : வாடுபசி..........உரைப்போன்

(இ - ள்.) வாடுபசி உழந்து மாமுனி போயபின் - உடம்பு வாடுதற்குக் காரணமான பெரிய பசியால் வருந்திச் சிறந்த முனிவனாகிய விருச்சிகன் அவ்விடத்தினின்றுஞ் சென்ற பின்னர்; என் அலவலைச் செய்திக்கு அஞ்சினன் பாடு இமிழ் அருவிப் பயமலை ஒழிந்து அகன்ற விலகு ஒளி விஞ்சையன் - எளியேன் விழிப்பின்மையாற் செய்த மனஞ் சுழன்று வருந்துதற்குக் காரணமான செயல் பற்றி அம் முனிவனால் யாது விளையுமோ என்று அச்ச மெய்தி ஆரவாரஞ் செய்து வீழுகின்ற அருவியையும் பயனையும் உடைய அம் மலையை விட்டு ஓடிப்போன மழுங்கிய ஒளியையுடைய என் கணவனாகிய விச்சாதரன்றானும்; விழுமமோடு எய்தி - துன்பத்தோடு மீண்டும் என்பால் வந்து யான் சாபத்தா லெய்திய ஆனைத் தீ நோயை அறிந்து பெரிதும் இரங்கி; ஆர் அணங்கு ஆகிய அருந்தவன் தன்னால் காரணம் இன்றியும் கடுநோய் உழந்தனை - பெறற் கரிய தெய்வத் தன்மையையுடைய அரிய தவத்தையுடைய முனிவனாலே காரணமில்லாமலே கடிய நோய்க்கு ஆளாகித் துன்புறுகின்றனை இதற்குக் கழுவாய் தேடுதற்கு யாம் நமது விச்சாதருலகிற்கு இன்னே செல்வோம்; வானூடு எழுக என - வானத்தே என்னோடு எழுந்து வருவாயாக என்று பணித்தலும்; மந்திரம் மறந்தேன் ஊன் உயிர் நீங்கும் உருப்பொடு தோன்றி வயிறு காய் பெரும்பசி வருத்தும் என்றேற்கு - அது கேட்ட யான், ஐய வானூடு இயங்குதற்கு வேண்டிய மந்திரத்தையும் மறந்தொழிந்தேனே! எங்ஙனம் வானத்தே இயங்க மாட்டுவேன், மேலும், உடம்பினின்றும் உயிர் நீங்குமளவிற்கு வெப்பத்தோடு தோன்றி வயிற்றினைச் சுட்டெரிக்கின்ற பெரிய பசித் தீத்தானும் வருத்துகின்றதே என் செய்கேன்? என்று சொல்லி வருந்துகின்ற எனக்கு; ஆங்கு அவன் தீங்கனி கிழங்கு செழுங்காய் நல்லன கொணரவும் - அது கேட்டவப்பொழுதே அன்புமிக்க என் கணவன்றானும் காட்டினுட் சென்று இனிய பழங்களும் கிழங்குகளும் வளவிய காய்களும் ஆகிய நல்ல உணவுகளைக் கொண்டு வந்து கொடுப்பவும் அவற்றை யெல்லாம் உண்ட பின்னரும்; ஆற்றேன் ஆக - என் பசித்துன்பம் சிறிதும் தணிந்திலாமையாலே அது பொறாது வருந்துவேனாக; நீங்கல் ஆற்றான் நெடுந்துயர் எய்தி ஆங்கு - அந் நிலையில் என்னை நீங்கிச் செல்லவியலாதவனாய் என் பொருட்டுப் பொறுத்தற்கரிய துன்பம் எய்திய பொழுது; அவன் எனக்கு அருளொடு

உரைப்போன் - என் கணவன் எனக்குத் தன் அருளுடைமை காரணமாகக் கூறுபவன்; என்க.

(வி - ம்.) வாடுபசி: வினைத்தொகை. அலவலை - அலமரல்; அஃதாவது மனச்சுழற்சி. முனிவனுல் யாது நேருமோ என்று அஞ்சி விச்சாதரன் அம் மலைக்கு அப்பால் ஓடிப்போயினன் என்றவாறு. பாடு - ஆரவாரம். இமிழ் என்றது செய்கின்ற என்பதுபட நின்றது. பயம் - பயன். அவை சந்தனம் முதலியவை. அணங்கு - தெய்வத் தன்மை. விலகு ஒளி எனக் கண்ணழித்து அச்சத்தால் மழுங்கிய ஒளி என்க. விழுமம் - துன்பம். விஞ்சையன் என்றது என் கணவன் என்பதுபட நின்றது.

உருப்பு - வெப்பம். நல்லன: பலவறிசொல்.

## இதுவுமது

கூஉ - கூஎ: சம்பு.........செய்ய

(இ - ள்.) சம்புத் தீவினுள் தமிழகம் மருங்கில் - அன்புடையோய்! இந்த ஆனைத் தீ நோயை ஒல்லுந்துணை ஆற்றிக் கோடற்கு ஓர் உபாயம் கூறுவல் கேள்! இந்த நாவலந் தீவின்கண் யாம் இப்பொழுதிருக்கின்ற இத் தமிழ் நாட்டின் கண்; கம்பம் இல்லா - பகைவருக்கஞ்சி நடுங்குதல் ஒரு பொழுதும் இல்லாதவரும்; கழிபெருஞ்செல்வர் ஆற்றுமாக்கட்கு ஆற்றும் துணையாகி நோற்றோர் உறைவது ஓர் நோன் நகர் உண்டால் - மாபெருஞ் செல்வமுடையோரும் தமக்குற்ற துன்பத்தைத் தாமே துடைத்துக் கொள்ளமாட்டாத எளிய மாக்கட்கெல்லாம் அவ்வத்துன்பத்தைத் துடைத்துக் கோடற்கு உற்ற துணைவர்களாகி மெய்ந்நெறி வாழ்க்கை வாழ்பவரும் ஆகி அதற்கியன்ற நோன்பினைப் பண்டும் பண்டும் பல பிறப்பிலே செய்து அடிப்பட்டு வருகின்ற மேன்மக்கள் வதிகின்ற படை வலிமையுடைய நகரம் ஒன்றுளது காண்!; பல நாள் ஆயினும் நிலனொடு போகி அப் பதிபுகுக என்று அவன் அருள் செய்ய - வானூடு இயங்கும் மந்திரம் மறந்தொழிந்தமையாலே பல நாள் கழியுமாயினும் நிலத்தின் வழியாகவே நடந்து அப் பூம்புகார் என்னும் அம் மாநகரத்திலே சென்று புகுவாயாக! என்று அறிவித்தருளிச் சென்றனன் என்றாள் என்க.

(வி - ம்.) சம்புத் தீவு - நாவலந் தீவு. தமிழகம் என்றது வட வேங்கடம் தென்குமரி ஆயிடைக் கிடந்த மூன்று தமிழ் நாட்டையும். கம்பம் - நடுக்கம்; இது பகைவர் வரவினால் நிகழ்வது. ஒரு பொழுதும் பகைவர் வரவு நிகழாமையின் அங்கு வாழும் செல்வர், நடுக்கமில்லாதார் என்றான் என்க. கழிபெருஞ் செல்வர் என்றது 'மாக வானிகர் வண்கை மாநாய்கனும், வருநிதி பிறர்க் கார்த்தும் மாசாத்துவானும்' போன்ற கொழுங்குடிச் செல்வர்களை. அந் நகரத்தே பிறந்து அங்ஙனம்

வாழ்தற்கு நோன்பு பல செய்திருத்தல் வேண்டும் என்பான், நோற்றோர் என்றான். ஆசிரியர் இளங்கோவடிகளாரும், "அத்தகு திருவின் அருந்தவம் முடித்தோர் உத்தர குருவின் ஒப்பத் தோன்றிய கயமலர்க் கண்ணியும் காதற் கொழுநனும்" என்றோதுதலறிக. (மணிமேகலை - ௩-௧௧). பாட்டிடை வைத்த குறிப்பால் - அப்பதி என்றது பூம்புகார் என்னும் அம் மாநகரம் என்பது பெறப்படும்.

அவன் - என் கணவன். அருள் செய்து போயினன் என்று வருவித்து முடித்திடுக.

## இதுவுமது

### ௬௮ - ௭௨: இப்பதி..........கழியும்

(இ - ள்.) இப்பதிப் புகுந்து யான் உறைகின்றேன் - நங்காய்! என் கணவன் அறிவித்தபடியே நிலத்திலே நடந்து வந்து இப் பூம்புகார் நகரத்தே புகுந்து இரந்துண்டு இவ்விடத்திலே உறைகின்றேன் காண்!; அவன் - என்பா லன்புமிக்க என் கணவன் நீங்கலாற்றாது ஒருவாறு நீங்கி எம் வித்தியாதரருலகிற்குச் சென்றவனாயினும், யாண்டுதோறும் இம் மாநகரத்திலே; இந்திர கோடணை விழா அணிவருநாள் - இந்திரவிழா அழகுற வருகின்ற நாளிலே; இம் மாநகர் மருங்கே வந்து - இப் பூம்புகார் நகரத்திலே வந்து; என் உறுபசி கண்டனன் இரங்கி என் முன் தோன்றி - எனது மிக்க பசித்துன்பத்தையறிந்து என் பொருட்டுப் பெரிதும் இரங்கி; பின் - பின்னர்; வரும் யாண்டு எண்ணினன் கழியும் - எதிர்வரும் யாண்டின் இந்திர விழா நாளில் வருதற்குக் கருதிச் செல்லாநிற்பன் காண்!; இதுவே என் வரலாறு என்று கூறி என்க.

(வி - ம்.) இப்பதி என்றது பூம்புகார் நகரத்தை. இந்திர கோடணை விழாவின் யாகிய விழா என்க. கோடணை விழா - இரு பெயரொட்டு. உறுபசி - மிக்கபசி. பின் வருகின்ற யாண்டின் வருதற்கெண்ணி என்க. அழகு வரும் நாள் என்க.

## காயசண்டிகை நன்றி கூறி விடை கொள்பவள் மணிமேகலை அறஞ்செய்தற்கேற்ற இடம் உலகவறவியே எனல்

### ௭௩ - ௮௩: தணிவில்..........பின்னர்

(இ - ள்.) மணிமேகலை - மணிமேகலை என்னும் மாதவக் கொழுந்தே!; தணிவில் வெம்பசி தவிர்த்தனை வணங்கினேன் - வெவ்விய ஒரு பொழுதுந் தணிதலில்லாத எனது ஆனைத்தீ யென்னும் அரும்பசியை ஒரு பிடி அன்னமாகிய ஆருயிர் மருந்தாலே துவரத் தீர்த்தருளினை, யான் நினக்குச் செய்யும் கைம்மாறும் உளதோ காண்! என் தலையாலே நின் திருவடியை வணங்கு

நின்றேன் காண்!; என் வான்பதிப் படர்கேன் - இனி யான் என் சிறந்த நகரமாகிய விச்சாதரருலகின்கண்ணதாகிய காஞ்சன புரத்திற்குச் செல்லுவேன் காண்! வானூடு இயங்கும் மந்திரமும் நினைவில் வந்துற்றது, யான் நினக்குக் கூறுவதும் ஒன்றுண்டு அஃதியாதெனின்; துக்கம் துடைக்கும் துகள் அறு மாதவர் சக்கரவாளக் கோட்டம் உண்டு - பிறவித் துன்பத்தைத் துவரத் துடைக்கின்ற குற்றமற்ற பெரிய துறவோர் வாழுமிடமாகிய சக்கரவாளக் கோட்டம் ஒன்று இந்நகரத்தே உண்டு அதனைச் சுடுகாட்டுக் கோட்டம் என்றலது இவ்வூரவர் கூறுர்; ஆங்கு அதில் - அச் சக்கரவாளக் கோட்டத்தின்கண்; பலர் புகத் திறந்த பகுவாய் வாயில் உலக அறவி ஒன்று உண்டு - பலரும் தடையின்றிப் புகுதற் பொருட்டு அகலிதாகப் பகுக்கப்பட்ட வாயிலையுடைய உலக அறவி என்னும் பெயரையுடைய அம்பலம் ஒன்றுளது காண்; அதனிடை ஊர் ஊர் ஆங்கண் உறுபசி உழந்தோர் - ஊர்தோறும் ஊர்தோறும் மிக்க பசித்துன்பம் உற்றவரும்; அரும்பிணி உற்றோர் - தம்மால் தீர்த்தற்கரிய பிணிப்பட்டவரும்; ஆரும் இன்மையின் - தாம் தாம் பிறந்த அவ்வூர்களிலே தம்மைப் பேணுவார் யாரும் இல்லாமையாலே வந்து குழுமி; இடுவோர் தேர்ந்து ஆங்கு இருப்போர் பலரால் - தமக்கு உணவு கொடுப்போர் உளரோ என்று ஆராய்ந்து அவ்விடத்திலேயே வதியும் ஆற்றுமாக்கள் சாலப் பலராவார் காண்;! வடுவு ஆழ் கூந்தல் அதன்பால் போகு என்று ஆங்கு அவள் போகிய பின்னர் - அறல் ஆழ்ந்து கிடக்கும் கூந்தலையுடைய ஆருயிர் மருத்துவியே நீ அவ்வுலக வறவியின்பாற் சென்று புகுவாயாக! என்று சொல்லி அவ்விடத்தினின்றும் காயசண்டிகை வானத்திலே எழுந்து போன பின்னர் என்க.

(வி - ம்.) ஆனைத்தீ நோயாலாகிய பசி என்பாள் தணிவில் வெம்பசி என்றாள். என் வான்பதிப்படர்கேன் எனப் பாட்டிடை வைத்த குறிப்பினால் மறந்த வானிலியங்கும் மந்திரமும் நினைவுறப் பெற்றேன் என்றாளுமாயிற்று. இனி, வான் என்பதிப்படர்கேன் என மாறி வான் வழியே என் பதிக்குப் போவேன் என்றாள் எனினுமாம். பௌத்தர் மெய்க் காட்சிகளுள் தலை சிறந்தது துக்கம் துடைத்தலே ஆதலின் அஃதொன்றனையே கூறியொழிந்தாள்.

அந்நகர மாந்தர் சுடுகாட்டுக் கோட்டம் என்றலது கூறுராகலின் அதற்குச் சக்கரவாளக் கோட்டம் என்பதே தலையாய பெயரென்பதை மணிமேகலைக்கு அறிவுறுப்பாள் போன்று சக்கரவாளக் கோட்டம் உண்டு; என்றாள். மணிமேகலை அச் சக்கரவாளக் கோட்டம் என்னும் அதன் பெயரும் வரலாறும் பண்டே அறிந்தவளாதலின் சக்கரவாளக் கோட்டத்தில் எனலே அமையும்; உண்டென்று அறிவுறுத்துதல் மிகையாம்பிற வெனின், அற்றன்று! அச் செய்தி காயசண்டிகை அறியா

ளாகலின் அங்ஙன மறிவுறுத்தியதாகப் புலவர் ஓதினமை அவரது நுண் புலமைக்கு இதுவே ஒரு சிறந்த எடுத்துக் காட்டும் ஆதல் நுண்ணிதின் உணர்க. இனி, காயசண்டிகைக்கும் அப் பெயர் தெரியாதாம் பிற வெனின், மாருதவேகனும் நீயுமே சக்கரவாளக் கோட்டம் என்கின்றீர் அதற்குக் காரணமென்னஎனப் பண்டு சுதமதி வினவினள்என்றமையால் தேவகணத்தா ரெல்லாம் அவ் வரலாறு அறிவர் என்பது போந்தமை யால் விச்சாதரியாகிய காயசண்டிகைக்கும் மாருத வேகனுக்குப் போல அவ் வரலாறு தெரியும் என்பது போதரப் புலவர் பெருமான் அங்ஙனம் ஓதினர் என்க.

உலக அறவி என்றது பூம்புகார் நகரத்து ஊர் அம்பலத்திற்கே சிறப்புப் பெயர்; என்னே? "முழங்கு கடல் ஞாலம் முழுவதும் வரினும் வழங்கத் தவா வளத்தது" (சிலப்: மனையற - ௩ - ௪.) என்பது பற்றி அஃதப் பெயர் பெற்றது என்க.

வடுவுஆழ் கூந்தல் - அறல் ஆழ்ந்து கிடக்கும் கூந்தல். இனி வடு - வகிர்எனினுமாம். அதன்பாற் போகு என்றது நின் அருளறம் முட் டின்றி நடத்தற் கேற்ற இடம் அதுவே என்னும் குறிப்புடையதாம்.

### மணிமேகலை உலகவறவியிற் புகுதல்

### அடி - கூ0 : ஆயிழை.........ஏத்தி

(இ - ள்.) ஆயிழை ஓங்கிய வீதியின் ஒரு புடை ஒதுங்கி - அதுகேட்ட மணிமேகலை மகிழ்ந்து இரண்டு பக்கங்களினும் மாடங்கள் உயர்ந்துள்ள அவ் வீதியிலே ஒருபக்கமாக நடந்துபோய்; (உலக அறவியை) வலமுறை மும்முறை வந்தனை செய்து - வலம் வந்து மனமும் மொழியும் மெய்யுமாகிய முக்கருவிகளானும் முறைப் படியே (அதனை) வணங்கிய பின்னர்; அவ் வுலக வறவியின் ஒரு தனியேறி - அவ் வுலக வறவியென்னும் சிறந்த அம்பலத்தின்கண் மிகவும் சிறப்புற ஏறி; பதியோர் தம்மொடு பலர் தொழுது ஏத்தும் முதியோள் கோட்டம் மும்மையின் வணங்கி - அதன் கண்ணமைந்துள்ளதும் அந் நகர் வாழ் மாந்தரும் பிறவிடங் களிலிருந்து வருவோரும் ஆகிய பலராலும் தொழப்படுகின்ற சிறப்புடைய இறைவியாகிய சம்பாபதியின் திருக்கோயிலையும் அங்ஙனமே மும்முறையானும் வணங்கிப் பின்னர்; நெடுநிலைக் கந்துடை காரணங் காட்டிய தம் துணைப்பாவையைத் தான் தொழுது ஏத்தி - நெடிதாக நிற்கும் நிலையினையுடைய தூணின் கணிருந்து ஏது நிகழ்ச்சிகளை எடுத்துப் பண்டு சுதமதிக்குக் கூறியவாற்றால் தமக்கு உற்றுழியுதவுந் துணையாகிய கந்திற் பாவையாகிய தெய்வத்தையும் கை குவித்துத் தொழுது வழிபாடு செய்து என்க

(வி - ம்.) மாடமோங்கிய வீதி என்க ஒரு புடை ஒதுங்கிப் போயது வருவோர் போவோர்க்கு இடையூறில்லாமைப் பொருட்

டென்க. மும்முறை - மூன்று முறை எனினுமாம். ஒரு தனியே றி - சிறப்புற வேறி. பலர் என்றது, யாத்திரிகரை. தேவரும் முனிவரு மாகிய பலரும் எனினுமாம். முன்னைப் பழைமைக்கும் முன்னைப் பழைமையுடையாளாதல் பற்றிச் சம்பாபதி என்னுங் கொற்றவையை முதியோள் என்றார். கோட்டம் - கோயில்.

பாவை - கந்திற்பாவை; சம்பாபதி கோயிலின்கண் கிழக்கேயுள்ள தொரு நெடுநிலைத் தூணில் மயனால் இயற்றப்பட்டதொரு பாவை. காரணம்-ஏது நிகழ்ச்சி. சுதமதிக்கு இப் பாவை மணிமேகலை நிலை கூறி மாதவியையும் சுதமதியையும் ஆற்றுவித்தமை பற்றித் தந்துணைப்பாவை என்றார். துயிலெழுப்பிய காதை கூசு-கoகூ நோக்குக. இக் கருத்தறி யாதார் இதற்குக் கூறும் உரை போலி யென்க. தந்துணை என்றது மாதவி சுதமதி தானாகிய மூவரையும் உளப்படுத்தோதிய படியாம்.

## மணிமேகலை ஆற்றுமாக்கள் அரும்பசி களைதல்

### கூக - கூ௪ : வெயில்..........மருங்கேன்

(இ - ள்.) வெயில் சுட வெம்பிய வேய்கரி கானத்து கருவி மாமழை தோன்றியது என்ன - முதுவேனிற் பருவத்து வெயிலாலே சுடப்பட்டு வெந்த மூங்கில்கள் கரிந்த காட்டிடத்தே மின்னலும் இடியுமாகிய தொகுதியையுடைய முகில்கள் தாமே வானத்தே தோன்றிப் பெரிய மழையைப் பெய்தாற் போல; பசிதின வருந்திய பைதல் மாக்கட்கு - பசியாலே தின்னப்பட்டுலந்த உடம்போடே வருந்தி ஆங்கு இடுவோர்த் தேர்ந்து வந்து குழுமிய ஆற்றுமாக்களிடையே; ஆயிழை அமுதசுரபியொடு தோன்றி - மணிமேகலை அமுதசுரபி என்னும் அவ்வரும்பெறற் பாத்திரத்தோடே எழுந்தருளி; அவர் களைப் பொது நோக்கான் நோக்கி; ஏற்போர் தாம் யாவரும் வருக - மக்களே நுங்களில் ஏற்றுண்போரெல்லாம் வாருங்கள்!; இஃது ஆபுத்திரன் கை அமுதசுரபி - இதோ யான் ஏந்தியிருக் கின்ற இத் திருவோடு பண்டு ஆபுத்திரன் என்னும் அறவோன் சிந்தாதேவியென்னும் செழுங்கலை நியமத்துத் தெய்வத்தின்பாற் பெற்று அனைத்துயிர்கட்கும் உண்டி கொடுத்து உயிர் கொடுத்த தெய்வத் திருவோடு ஆதலால் அனைவரும் வம்மின்; என - என்று அழைத்தபொழுதே; யாணர்ப் பேரூர் அம்பலம் மருங்கு ஊண் ஒலி அரவத்து ஒலி எழுந்தன்று - புதுவருவாயையுடைய பெரிய நகரமாகிய பூம்புகாரில் உலக அறவி என்னும் அவ்வம் பலத்தே ஆற்றுமாக்கள் ஏற்றுண்ணுதலாலுண்டாகும் ஒலி பேராரவாரமாகி எழுந்தது என்க.

(வி - ம்.) வேய் - மூங்கில். மூங்கில் வெப்பத்தைப் பெரிதும் பொறுத்துக் கொள்ளும் ஒரு புல். ஆகவே, வேயும் கரிகானம் எனம் வேண்டிய சிறப்பும்மை தொக்கது; செய்யுள் விகாரம்.

ஆபுத்திரன் செய்த அறத்தின் புகழ் உலகெலாம் பரவியிருக்கும் என்னும் கருத்தால் இஃது ஆபுத்திரன் கை அமுதசுரபி என்றாள். எனவே எல்லீரும் இனிதுண்ணலாம் என்றறிவித்தாளும் ஆயிற்று. பிச்சை ஏலாதாரும் அக் குழுவில் இருத்தல் கூடுமாகலின், அவர் வெகுளாமைப் பொருட்டு ஏற்போர் தாம் யாவரும் வருக என்றாள். அரவத் தொலி என்றது பேராரவாரம் என்றவாறு.

இனி, இக் காதையை—காயசண்டிகை நோக்கி வணங்கி, துடைப்பாய் என்றலும் மணிமேகலை பெய்தலும் அவள் உரைக்கும்; உரைப்பவள் அதன்பாற் போக என்று கூறிப் போகிய பின்னர் ஆயிழை ஒதுங்கிச் செய்து ஏறித்தொழுது வணங்கி ஏத்தி, தோன்றி வருக என அம்பலம் மருங்கு ஒலி யெழுந்தன்று என இயைத்திடுக.

உலக அறவி புக்க காதை முற்றிற்று

# ௧௮. உதயகுமரன் அம்பலம் புக்க காதை

[பதினெட்டாவது மணிமேகலை அம்பலமடைந்தமை சித்திராபதி உதயகுமரனுக்குச் சொல்ல அவன் அம்பலம் புக்க பாட்டு]

அஃதாவது—மாதவியும் மணிமேகலையும் பௌத்தப் பள்ளி புக்கமை கேட்டுத் தணியாத் துன்பந் தலைத்தலை மேல்வர மனம் வெந்திருந்த சித்திராபதி மணிமேகலை பிச்சைப் பாத்திரம் ஏந்தி உலகவறவியினூடு சென்றேறிய செய்தி கேட்டவுடன் பழங் கரும்புண்ணக வயின் தீத்துறு செங்கோல் சென்று சுட்டாற் போன்று பெரிதும் வருந்தி, அவள்பால் இடங்கழி காமமோ டிருந்த இளவரசனாகிய உதயகுமரன்பாற் சென்று மணிமேகலையைக் கைப்பற்றித் தேரிலேற்றி வருமாறு ஊக்குவித்தமையால் உதயகுமரன் மணிமேகலையைக் கைப்பற்றி வருங் கருத்தோடு அவளிருக்கின்ற உலகவறவி என்னும் அம்பலத்திற் சென்று புகுந்த செய்தியைக் கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இதன்கண்—சித்திராபதியானவள் மணிமேகலை பிக்குணிக் கோலத்தோடு பிச்சைப் பாத்திரம் ஏந்தி உலகவறவியினூடு சென்றேறினள் என்ற செய்தி கேட்டுக் கொதித்த உள்ளமொடு வெய்துயிர்த்துக் கலங்கித் தன்னோர் அனைய கூத்தியன் மடந்தையர்க் கெல்லாம் கூறும் பரிவுரைகளும், மணிமேகலை ஏந்திய பிச்சைக் கடிஞையைப் பிச்சைமாக்கள் பிறர் கைக்காட்டி உதயகுமரனால் அவளைப் பொற்றேர்க் கொண்டு போதேனாகின் யான் இன்னள் ஆகுவல் என்று சூளுரைத்துக் குறுவியர் பொடித்த முகத்தோடு இளங்கோவேந்தன் இருப்பிடங் குறுகும் காட்சியும், ஆங்கு அரசிளங்குமரன் திருந்தடி வணங்கி நிற்றலும், மணிமேகலையைக் கைப்பற்றமாட்டாத தனது ஏக்கறவு தோன்ற அவன் மணிமேகலையின் தாபதக் கோலம் தவறின்றோ என நலம் வினவுவான் போல வினவுதலும், சித்திராபதியும் உதயகுமரனும் தம்முட் சொல்லாட்டம் நிகழ்த்துதலும், உதயகுமரன் மணிமேகலையின்பாற் கண்ட தெய்வத் தன்மைகளைச் சித்திராபதிக்குக் கூறி அவளைக் கைப்பற்ற நன்கு ஆணியாளுதலும்; அது கண்ட சித்திராபதி அவ்விறைமகனைத் தன் வயப்படுத்தும் பொருட்டுச் சிறுநகை எய்திச் செப்புகின்ற அவளது பேச்சுத் திறங்களும், அவள் வயப்பட்ட அரசிளங்குமரன் உலகவறவி சென்று புகுதலும் ஆங்கு மணிமேகலையை அவன் வினவும் வினாக்களும், அதற்கவள் கூறும்விடைகளும் மணிமேகலை சம்பாபதி

கோயிலுட்புகுந்து காயசண்டிகை வடிவங்கொண்டு மீண்டு வருதலும் மணிமேகலை கோயிலுட் கரந்திருக்கின்றனள் என்று கருதிய உதயகுமரன் கோயிலுட்புகுந்து அவளைத் தேடுதலும்; காணாமல் இளைத்துச் சம்பாபதியாகிய தெய்வத்தை நோக்கிக் கூறுஞ் செய்தியும் சூளுறவும் பிறவும் இலக்கியவின்பம் பொதுள இயம்பப்பட்டுள்ளன.

ஆங்கது கேட்டாங் கரும்புண் அகவயின்
தீத்துறு செங்கோல் சென்றுசுட் டாங்குக்
கொதித்த உள்ளமொடு குரம்புகொண் டேறி
விதுப்புறு நெஞ்சினள் வெய்துயிர்த்துக் கலங்கித்
தீர்ப்பலிவ் வறமெனச் சித்திரா பதிதான்
கூத்தியன் மடந்தையர்க் கெல்லாங் கூறும்
கோவலன் இறந்தபின் கொடுந்துய ரெய்தி
மாதவி மாதவர் பள்ளியுள் அடைந்தது
நகுதக் கன்றே நன்னெடும் பேரூர்
இதுதக் கென்போர்க் கெள்ளுரை யாயது
காதலன் வீயக் கடுந்துய ரெய்திப்
போதல் செய்யா உயிரொடு புலந்து
நளியிரும் பொய்கை யாடுநர் போல
முளியெரிப் புகூஉம் முதுகுடிப் பிறந்த
பத்தினிப் பெண்டிர் அல்லேம் பலர்தம்
கைத்தூண் வாழ்க்கை கடவிய மன்றே
பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையில்
யாழினம் போலும் இயல்பினம் அன்றியும்
நறுந்தா துண்டு நயனில் காலை
வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்
வினையொழி காலைத் திருவின் செல்வி
அனையே மாகி ஆடவர்த் துறப்பேம்
தாபதக் கோலந் தாங்கினெ மென்பது
யாவரும் நகூம் இயல்பின தன்றே
மாதவி ஈன்ற மணிமே கலைவல்லி
போதவிழ் செவ்வி பொருந்துதல் விரும்பிய
உதய குமரனும் உலகாள் வண்டின்
சிதையா உள்ளஞ் செவ்வியின் அருந்தக்
கைக்கொண் டாங்கவள் ஏந்திய கடிஞையைப்
பிச்சை மாக்கள் பிறர்கைக் காட்டி
மற்றவன் தன்னால் மணிமே கலைதனைப்
பொற்றேர்க் கொண்டு போதே னாகில்
சுடுமண் ஏற்றி அரங்குசூழ் போகி

வடுவொடு வாழும் மடந்தையர் தம்மோர்
அனையே னாகி அரங்கக் கூத்தியர்
மனையகம் புகாஅ மரபின னென்றே
வஞ்சினஞ் சாற்றி நெஞ்சுபுகை உயிர்த்து
வஞ்சக் கிளவி மாண்பொடு தேர்ந்து
செறிவளை நல்லார் சிலர்புறஞ் சூழக்
குறுவியர் பொடித்த கோலவாண் முகத்தள்
கடுந்தேர் வீதி காலிற் போகி
இளங்கோ வேந்தன் இருப்பிடம் குறுகி
அரவ வண்டொடு தேனினம் ஆர்க்கும்
தருமணன் ஞெமிரிய திருநா றொருசிறைப்
பவழத் தூணத்துப் பசும்பொற் செஞ்சுவர்த்
திகழொளி நித்திலச் சித்திர விதானத்து
விளங்கொளி பரந்த பளிங்குசெய் மண்டபத்துத்
துளங்குமா னூர்தித் தூமலர்ப் பள்ளி
வெண்டிரை விரிந்த வெண்ணிறச் சாமரை
கொண்டிரு மருங்குங் கோதையர் வீச
இருந்தோன் திருந்தடி பொருந்திநின் றேத்தித்
திருந்தெயி றிலங்கச் செவ்வியி னக்கவன்
மாதவி மணிமே கலையுடன் எய்திய
தாபதக் கோலந் தவறின் றோவென
அரிதுபெறு சிறப்பிற் குருகுகரு உயிர்ப்ப
ஒருதனி யோங்கிய திருமணிக் காஞ்சி
பாடல்சால் சிறப்பிற் பரதத் தோங்கிய
நாடகம் விரும்ப நன்னலங் கவினிக்
காமர் செவ்விக் கடிமலர் அவிழ்ந்தது
உதய குமரனெனும் ஒருவண் டுணீஇய
விரைவொடு வந்தேன் வியன்பெரு மூதூர்
பாழ்ம் பறந்தலை அம்பலத் தாயது
வாழ்கநின் கண்ணி வாய்வாள் வேந்தென
ஓங்கிய பௌவத் துடைகலப் பட்டோன்
வான்புணை பெற்றென மற்றவட் குரைப்போன்
மேவிய பளிங்கின் விருந்திற் பாவையிஃது
ஓவியச் செய்தியென் றொழிவேன் முன்னர்க்
காந்தளஞ் செங்கை தளைபிணி விடாஅ
ஏந்திள வனமுலை இறைநெரித் ததூஉம்
ஒத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த
முத்துக்கூர்த் தன்ன முள்ளெயிற் றமுதம்
அருந்தே மாந்த ஆருயிர் தளிர்ப்ப
விருந்தின் மூரல் அரும்பிய தூஉம்

மாயிதழ்க் குவளை மலர்புறத் தோட்டிக்
காய்வேல் வென்ற கருங்கயல் நெடுங்கண்
அறிவுபிறி தாகிய தாயிழை தனக்கெனச்
செவியகம் புகூஉச் சென்ற செவ்வியும்
பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவையென்
உளங்கொண் டொளித்தாள் உயிர்க்காப் பிட்டென்று
இடையிருள் யாமத் திருந்தேன் முன்னர்ப்
பொன்றிகழ் மேனி ஒருத்தி தோன்றிச்
செங்கோல் காட்டிச் செய்தவம் புரிந்த
அங்கவள் தன்றிறம் அயர்ப்பா யென்றனள்
தெய்வங் கொல்லோ திப்பியங் கொல்லோ
எய்யா மையலேன் யானென் றவன்சொலச்
சித்திரா பதிதான் சிறுநகை எய்தி
அத்திறம் விடுவாய் அரசிளங் குரிசில்
காமக் கள்ளாட் டிடைமயக் குற்றன
தேவர்க் காயினுஞ் சிலவோ செப்பின்
மாதவன் மடந்தைக்கு வருந்துதுய ரெய்தி
ஆயிரஞ் செங்கண் அமரர்கோன் பெற்றதும்
மேருக் குன்றத் தூறுநீர்ச் சரவணத்து
அருந்திறன் முனிவர்க் காரணங் காகிய
பெரும்பெயர்ப் பெண்டிர் பின்புளம் போக்கிய
அங்கி மனையாள் அவரவர் வடிவாய்த்
தங்கா வேட்கை தனையவள் தணித்ததூஉம்
கேட்டு மறிதியோ வாட்டிறற் குரிசில்
கன்னிக் காவலுங் கடியிற் காவலும்
தன்னுறு கணவன் சாவுறிற் காவலும்
நிறையிற் காத்துப் பிறர்பிறக் காணாது
கொண்டோன் அல்லது தெய்வமும் பேணாப்
பெண்டிர்தங் குடியிற் பிறந்தாள் அல்லள்
நாடவர் காண நல்லரங் கேறி
ஆடலும் பாடலும் அழகுங் காட்டிச்
சுருப்புநாண் கருப்புவில் அருப்புக்கணை தூவச்
செருக்கயல் நெடுங்கட் சுருக்குவலைப் படுத்துக்
கண்டோர் நெஞ்சங் கொண்டகம் புக்குப்
பண்டேர் மொழியிற் பயன்பல வாங்கி
வண்டிற் றுறக்குங் கொண்டி மகளிரைப்
பான்மையிற் பிணித்துப் படிற்றுரை யடக்குதல்
கோன்முறை யன்றோ குமரற் கென்றலும்
உதய குமரன் உள்ளம் பிறழ்ந்து
விரைப்பரி நெடுந்தேர் மேற்சென் றேறி

ஆயிழை யிருந்த அம்பல மெய்திக்
காடமர் செல்வி கடிப்பசி களைய
ஓடுகைக் கொண்டுநின் றூட்டுநள் போலத்
தீப்பசி மாக்கட்குச் செழுஞ்சோ றீத்துப்
பாத்திரம் ஏந்திய பாவையைக் காண்டலும்
இடங்கழி காமமொ டடங்கா னாகி
உடம்போ டென்றன் உள்ளகம் புகுந்தென்
நெஞ்சங் கவர்ந்த வஞ்சக் கள்வி
நோற்றூண் வாழ்க்கையின் நொசிதவந் தாங்கி
ஏற்றூண் விரும்பிய காரணம் என்னெனத்
தானே தமியள் நின்றோள் முன்னர்
யானே கேட்டல் இயல்பெனச் சென்று
நல்லாய் என்கொல் நற்றவம் புரிந்தது
சொல்லாய் என்று துணிந்துடன் கேட்ப
என்னமர் காதல னிராகுலன் ஈங்கிவன்
தன்னடி தொழுதலுந் தகவென வணங்கி
அறைபோய் நெஞ்சம் அவன்பால் அணுகினும்
இறைவளை முன்கை ஈங்கிவன் பற்றினும்
தொன்று காதலன் சொல்லெதிர் மறுத்தல்
நன்றி யன்றென நடுங்கினள் மயங்கிக்
கேட்டது மொழிவேன் கேள்வி யாளரில்
தோட்ட செவியை நீ யாகுவை யாமெனில்
பிறத்தலும் மூத்தலும் பிணிப்பட் டிரங்கலும்
இறத்தலு முடைய திடும்பைக் கொள்கலம்
மக்கள் யாக்கை இதுவென உணர்ந்து
மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன்
மண்டமர் முருக்குங் களிறனை யார்க்குப்
பெண்டிர் கூறும் பேரறி வுண்டோ
கேட்டனை யாயின் வேட்டது செய்கென
வாட்டிறற் குரிசிலை மடக்கொடி நீங்கி
முந்தை முதல்வி முதியாள் இருந்த
குச்சரக் குடிகை தன்னகம் புக்காங்கு
ஆடவர் செய்தி அறிகுநர் யாரெனத்
தோடலர் கோதையைத் தொழுதனள் ஏத்தி
மாய விஞ்சை மந்திரம் ஓதிக்
காயசண் டிகையெனுங் காரிகை வடிவாய்
மணிமே கலைதான் வந்து தோன்ற
அணிமலர்த் தாரோன் அவள்பாற் புக்குக்
குச்சரக் குடிகைக் குமரியை மரீஇப்
பிச்சைப் பாத்திரம் பெரும்பசி உழந்த

காயசண் டிகைதன் கையிற் காட்டி
மாயையின் ஒளித்த மணிமே கலைதனை
ஈங்கிம் மண்ணீட் டியாரென உணர்கேன்
ஆங்கவள் இவளென் றருளா யாயிடின்
பன்னா ளாயினும் பாடு கிடப்பேன்
இன்னுங் கேளாய் இமையோர் பாவாய்
பவளச் செவ்வாய்த் தவளவாள் நகையும்
அஞ்சனஞ் சேராச் செங்கயல் நெடுங்கணும்
முரிந்துகடை நெரிய வளைந்தசிலைப் புருவமும்
குவிமுட் கருவியும் கோணமும் கூர்நுனைக்
கவைமுட் கருவியும் ஆகிக் கடிகொளக்
கல்விப் பாகரிற் காப்புவலை யோட்டி
வல்வா யாழின் மெல்லிதின் விளங்க
முதுக்குறை முதுமொழி எடுத்துக் காட்டிப்
புதுக்கோள் யானை வேட்டம் வாய்த்தென
முதியாள் உன்றன் கோட்டம் புகுந்த
மதிவாள் முகத்து மணிமே கலைதனை
ஒழியப் போகேன் உன்னடி தொட்டேன்
இதுகுறை யென்றனன் இறைமகன் றனென்

———

# கஅ. உதயகுமரன் அம்பலம் புக்க காதை

## உரை

### மணிமேகலை பிக்குணிக் கோலங் கொண்டு அம்பலம்புக்க செய்திகேட்ட சித்திராபதியின் சீற்றமும் செயலும்

க - சுஉ : ஆங்கது..........கூறும்

(இ - ள்.) சித்திராபதிதான் - முன்னரே இலகச் சாந்தி செய்தரும் நன்னாள் மணிமேகலையோடு மாதவி வாராமையாலே தணியாத் துன்பம் தலைத்தலை மேல்வர நெஞ்சம் புண்ணாகியிருந்த சித்திராபதியாகிய மாதவியின்தாய் ; ஆங்கு அது கேட்டாங்கு- மணிமேகலை பிச்சைப் பாத்திரம் ஏந்திப் பிக்குணிக் கோலத்தோடு உலகவறவியினூடு சென்றேறினள் என்னும் அப்பொழுது நிகழ்ந்த செய்தியைக் கேட்டவளவிலே; கரும்புண் அகவயின் தீதுறு செங்கோல் சென்று சுட்டாங்கு - பழம் பெரும் புண்ணினூடே தீயினுட் செருகிப் பழுக்கக் காய்ச்சிய சிவந்த சூட்டுக்கோல் புகுந்து சுட்டு வருத்தினாற் போன்று அச் செய்தி முன்னரே புண்பட்டிருந்த தன்னெஞ்சத்தை ஆற்றவும் வருத்தியதனாலே; கொதித்தவுள்ளமொடு குரம்பு கொண்டேறி விதுப்புறு நெஞ்சினள் வெய்து உயிர்த்துக் கலங்கி - வெம்பிய நெஞ்சத்தோடு எல்லையைக் கடந்துயர்ந்து துடிதுடிக்கின்ற நெஞ்சத்தையுடையவளாகி வெய்தாக நெடுமூச் செறிந்து கலக்கமுற்று ; இ அறம் தீர்ப்பல் என - மணிமேகலை மேற்கொண்ட இவ்வறத்தை ஒழித்து அவளை மீட்பல் என்று துணிந்து; கூத்தியல் மடந்தையர்க்கெல்லாம் கூறும் - அத் தெருவில் உறைகின்ற நாடகக் கணிகை மகளிர் அங்கு வந்து குழுமியவர்களை நோக்கிக் கூறுவாள் என்க.

(வி - ம்.) சித்திராபதி முன்பே நெஞ்சம் புண்ணாகி மாதவி மணிமேகலை இருவர் திறத்திலே பெரிதும் வருந்தி யிருப்பவளாதலின் இப்பொழுது மணிமேகலையும் பிக்குணியாகிய செய்தி ஆற்றெணாத்துயர் செய்தலியல்பே ஆகலின் அதற்கேற்ப உவமை தேர்ந்துரைப்பவர் கரும் புண் அகவயின் தீத்துறு செங்கோல் சென்று சுட்டாங்கு என்றினிதின் ஓதினர். சுட்டாங்கு - சுட்டாற்போல. சுட்டாங்கு அச் செய்தியாற் சுடப்பட்டுக் கொதித்த என்றவாறு. குரம்பு கொண்டேறுதல் - அணையிடப் பட்டிருந்து பின்னர் அவ்வணையையும் உடைத்துக் கொண்டு செல்லுதல். எனவே ஈண்டுச் சித்திராபதி முன்னர்த் துன்பத்தைத் தன்னுள்

அடக்கி யிருந்த ஆற்றலையும் அழித்து இத் துயரம் மிக்கெழுந்த தென்பார் இங்ஙனம் உவமை கூறினர். குரம்பு - அணைக்கட்டு. விதுப்புறு நெஞ்சு - இதற்கேதேனுஞ் செய்ய வேண்டும் என்று முனைப்புற்றுத் துடிக்கும் நெஞ்சம்.

கூத்தியன் மடந்தையர்க் கெல்லாம் கூறும் என்ற குறிப்பால் அப்பொழுது அவள் எய்திய இன்னல் நிலைக்கு இரங்கி அங்குக் கூத்தியல் மகளிர் வந்து குழுமினர் என்பது பெற்றாம்.

தீர்ப்பல் இவ்வறம் என்றது சித்திராபதியின் உட்கோள். கூத்தியல் மடந்தையர் - நாடகக் கணிகை மகளிர்.

## சித்திராபதியின் சூள் உரை

### எ - கரு : கோவலன்..........அல்லேம்

(இ - ள்.) கோவலன் இறந்தபின் மாதவி கொடுந்துயர் எய்தி மாதவர் பள்ளியுள் அடைந்தது - நமரங்காள் எல்லீரும் கேளுங்கள்! கோவலன் என்னும் வணிகன் மாமதுரை சென்று கொலையுண்டிறந்த பின்னர் மாதவியாகிய என் மகள் கொடிய துன்ப மெய்திச் சிறந்த தவத்தோர்க்கே உரிய பௌத்தருடைய தவப் பள்ளியிலே புகுந்த செயலானது, நகுதக்கன்று - நம்மனோர்க்கெல்லாம் நகத் தகுந்ததொரு செயலையாயிற்று; நல்நெடும் பேரூர் இது தக்கு என்போர்க்கு எள் உரை ஆயது - நன்மையுடைய நெடிய பெரிய இப் பூம்புகார் நகரத்தே ஆடலும் பாடலும் அழகுமாகிய கலையைப் பேணி வாழுகின்ற இந் நாடகக் கணிகையர் செயலும் நமக்கு இன்றியமையாத தகுதியுடைய தொன்றே என்று நம்மைப் பாராட்டும் கலையுணர்வுடையோர்க்கெல்லாம் நம்மை இகழும் மொழியைத் தோற்றுவிப்பதாகவும் ஆயிற்றுக் கண்டீர்!; காதலன் வீய கடு துயர் எய்தி போதல் செல்லா உயிரொடு புலந்து - யாமெல்லாம் தம் காதலன் இறந்துபட்ட பொழுதே கடிய துயரத்தை அடைந்து தானே போயொழியாத தம் உயிரினது புன்மை கருதி அதனொடு பிணங்கி; நளி இரும் பொய்கை ஆடுநர் போல முளி எரி புகூஉம் முதுக்குடிப் பிறந்த பத்தினிப் பெண்டிர் அல்லேம் - குளிர்ந்த பெரிய நீர் நிலையில் புகுந்து நீராடுவார் போன்று வேகின்ற ஈமத்தீயிலே புகுதுமியல் புடைய பழைய உயர் குடியிலே பிறந்த பத்தினிப் பெண்டிரல்லமே என்றாள் என்க.

(வி - ம்.) கோவலன் என்றது யாரோ ஒரு வணிகனாகிய கோவலன் என்பதுபட நின்றது. என்னை? நகர நம்பியர் பலர் நம்மைக் காமுற்று வருபவர் ஆவர். அவருள் ஒருவனாகக் கருதிக் கோவலன் இறந்தமை பற்ற மாதவி ஒரு சிறிதும் கவலாதிருக்க வேண்டியவள் என்பதுபட அவனது அயன்மை தோன்ற வாளாது கோவலன் என்றாள் என்க. நம்மனோரால்

நகுதக்கதொன்று. பேரூரின்கண் கலைப்பொருள் பற்றி இவர் வாழ்க்கையும் தக்கது என்று நம்மைப் பாராட்டும் கலையுணர் பெருமக்களுக்கு எள்ளுரை ஆயது என்று நுண்ணிதிற் கூறுக.

முதுக்குடிப் பிறந்தோர், காதலன் இறப்பின் அப்பொழுதே தானே போகும் உயிரே தலையாய பத்தினிப் பெண்டிர் உயிரியல்பாகும், அங்ஙனம் போகாத உயிரைப் புலந்து இடையாய பத்தினிப் பெண்டிர் முளியெரி புகுவர். கடையாய பத்தினிப் பெண்டிர் நோன்பு மேற் கொள்வர். மாதவி அம் முதுக்குடிப் பிறந்தாள் அல்லள் ஆகவும் அவர் செய்வது செய்தாள். இச் செயல் பத்தினிப் பெண்டிர்க்காயின் புகழும் மதிப்பும் தரும். நம்மனோர் செய்யின் நம்மனோரில் எஞ்சியோர்க்கு நகைப்பையும் முதுக்குடிப் பிறந்தோர்க்கு எள்ளல் உரையையுமே தோற்றுவிக்கும் என்று கூறுகின்றனள் என்க.

காதலர் இறந்தவழிப் பத்தினிப் பெண்டிர் நிலையை ஊரலர் தூற்றிய காதையில் மாதவியும் திறம்பட ஓதினமை ஈண்டு நினைவிற் கொள்க.

## சித்திராபதி கணிகையரியல்பு கூறல்

### கரு - உச : பலர்.........அன்றே

(இ - ள்.) பலர் தம் கைத்து ஊண் வாழ்க்கை கடவியம் அன்றே!-குமரங்காள்! யாமெல்லாம் நம்மைக் காமுற்று வருகின்ற நகர நம்பியர் பலருடைய கைப்பொருளைக் கவர்ந்துண்ணும் வாழ்க்கையையே கடமையாகக் கொண்டுளேமல்லமோ!; பாண்மகன் பட்டுழிப் படூஉம் யாழ் இனம் போலும் பான்மையில் இயல்பினம் - இனி யாமெல்லாம் நம்மைக் காமுற்று வருவோன் ஒருவன் இறந்தொழிந்தானாயின் என்னவோம் எனின் பாணன் இறந்தபொழுது அவன் பயின்ற யாழ் முதலிய இசைக் கருவி தம்மைப் பயிலவல்ல கலைவாணர் பிறர் கையிலே பட்டு அவராலே பயிலப்படுமாறுபோல நமக்கு வேண்டுவன செய்து நம்மொடு பயிலத் தருந்த பிற காமுகர் பாலேம் ஆகும் இயல்பினம் அல்லமோ?; அன்றியும்; நறுந்தாது உண்டு நயன் இல் காலை வறும் பூ துறக்கும் வண்டும் போல்குவம் - ஏன்? நம்மைக் காமுற்று வருபவன் செல்வனாந்துணையும் அவனை நயந்து செல்வம் இன்றி நல்குரவுடையனாய பொழுதே நாம் கைவிட்டு விடுவதனால் யாம் நறிய தேன் உள்ள துணையுமிருந்து அஃதொழிந்த பொழுது அந்த வறும்பூவைத் திரும்பிப் பாராமல் மீண்டுமொரு தேன் பொதுளிய மலரை நாடிச் செல்லும் வண்டினத்தையும் ஒப்பாகுவம் அல்லமோ? வண்டென நம்மை நாம் தாழ்த்திக் கூறிக் கொள்வானேன்? வினையொழி காலை திருவின் செல்வி அனையேம் ஆகி ஆடவர் துறப்பேம் - வினையொழிகாலைத் திருவின் செல்வி அனையேம் ஆகி - ஆகூழ்

ஒழிந்த விடத்தே தன்னுதரவிற் பட்டவரைக் கைவிட்டகன்று பிறரிடம் போகும் திருமகளாகிய தெய்வத்தைப் போலவே யாமும்; ஆடவர் துறப்பேம் - பொருளின்றி நல்குரவுற்றாரை அப்பொழுதே துறந்துவிடுவோமல்லமோ! இத்தகைய இயல்புடைய நாடகக் கணிகையராகிய யாம்; தாபதக் கோலம் தாங்கினம் என்பது - யாரோ ஒரு காமுகன் இறந்துபட்டான் என்று துறவுக் கோலம் பூண்டேம் என்னும் இச் செய்தி உலகில் வாழும்; யாவரும் நகூஉம் இயல்பினது அன்றே - எத்தகையோரும் எள்ளி நகையாடுதற் கியன்றதொரு செய்தியே யாகும் என்பது தேற்றம் என்றாள் என்க.

(வி - ம்.) பலர் - செல்வர் பலர். கைத்து - கைப்பொருள். பான்மையில் யாம் பாண்மகன் பட்டுழிப் படூஉம் யாழினம் போலும் இயல்பினம் என மாறுக. பான்மை - இயல்பு. இஃதென் சொல்லியவாறோவெனின் பயிற்சிமிக்க பாணனுடைய யாழ் அவன்இறந்துழித் தான் அழிவின்றியே பயிற்சிமிக்க பிறபாணர் கையதாய்த் தன் தொழிலைச் செய்யுமாறுபோல யாமும் நமது பிறப்பியல்பினாலே நம்மொடு பயிலும் செல்வர்பாற் பயிலுதும்; அவன் இறந்துபடின் துயரமின்றி அத்தகு பிற செல்வர்பாற் பயிலுவோம், இதுவே நமக்கியல்பான பண்பு. இத்தகைய பண்புடைய யாம் ஆயிரவருள் ஒருவனாகக் கருதப்படுகின்ற ஒரு காமுகச் செல்வன் இறந்தான் எனத் துறவுக் கோலம் பூண்பது உலகில் அனைவராலும் எள்ளி நகைத்தற் குரியதொரு செயலேயாம் என்றவாறு. இது பொதுவிற் கூறப்பட்டதேனும் முன்பு "கோவலன் இறந்தபின் கொடுந்துயர் எய்தி மாதவி மாதவர் பள்ளியுள் அடைந்தது நகுதக்கன்றே" என்றதனை ஏதுவும் எடுத்துக் காட்டுங் கூறி மாதவி செயலைப் பழித்த படியாம்.

இனிக் கோவலன் தன் மனைவி சிலம்பை விற்குமளவிற்கு நல்குரவெய்தினன் ஆகலின் அவனை மாதவியே கைவிடற்பாலளாவாள். அத்தகையோன் தானே அவளைத் துறந்தமை கருதின் அவள் மகிழவே வேண்டும். அவளஃதறியாது கடுந்துயர் எய்தி மாதவர் பள்ளியுள் அடைவது எத்துணைப் பேதைமைத் தென்றற்கு யாம் "நறுந்தாதுண்டு நயனில் காலை வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்" அல்லமோ என்றாள். இவ்வாறு செய்வது இழிதகவுடைத்தென்று எண்ணற்க. திருவின் செல்விகூட நம்மோரனைய இயல்பினளே என்று தம் குலத்திற்கும் ஒரு சிறப்புக் கூறுவாள் யாம் திருவின் செல்வி அனையேம் ஆகி ஆடவர்த் துறப்பேம் என்றனள். ஈண்டு இவள் இராமாவதாரத்திற் கம்பர் காட்டும் கொடுமனக் கூனி போலவே காணப்படுதல் இவளுடைய மொழித் திறத்தில் வைத்துணர்க.

### சித்திராபதியின் சினஞ்சிறந்து செப்பிய வஞ்சினமொழி

௨௫ - ௬௯ : மாதவி.........சாற்றி

(இ - ள்.) மாதவி ஈன்ற மணிமேகலை வல்லி போது அவிழ் செவ்வி பொருந்துதல் விரும்பிய - நந்தம் குலவொழுக்கங் கடந்த அறிவிலியாகிய அந்த மாதவி பெற்ற மணிமேகலையென்னும்

பெயரையுடைய பூங்கொடி அரும்பி இதழ்விரித்து மலருகின்ற புத்தம் புதிய செவ்வியிலே அம் மலரினகத்தே அமர்ந்து புதுத் தேன் பருகுதற்குப் பெரிதும் அவாக்கொண்ட; (அலமருகின்றது ஒரு மணிவண்டு நமரங்காள்! அவ்வண்டினை நீயிர் அறியிர் போலும் எதிர்பார்த்துத் திரிகின்ற அவ்வண்டு) உதயகுமரன் ஆம் உலகு ஆள் வண்டின் - உதயகுமரன் என்னும் பெயரையுடைய உலகத்தையே ஆளுமொரு சிறப்பான வண்டு கண்டீர்! அவ் வண்டின்; சிதையா உள்ளம் செவ்வியின் அருந்த - உறுதி குலையாத உள்ளமாகிய திருவாயினாலே நன்கு ஆரப் பருகும்படி; கைக்கொண்டு ஆங்கு அவள் ஏந்திய கடிஞையைப் பிச்சைமாக்கள் பிறர்கைக் காட்டி - யான் கைப்பற்றிக் கொண்டு அந்த மணிமேகலை தன் செங்கையிலேந்தியிருக்கின்ற பிச்சைக் கலத்தை இயல்பாகப் பிச்சை ஏற்கும் இரவலர் கையிடத்தாகும்படி பறித்து வீதியிலே வீசிப் போகட்டு; மற்று அவன்றன்னால் மணிமேகலை தனைப் பொன் தேர் கொண்டு போதேன் ஆகின் - முன் யான் கூறிய அவ்வுதய குமரனாலேயே அவளை அவனது பொன்னாலியன்ற தேரிலே ஏற்றுவித்துக் கொண்டு வருவேனாகாண்! அங்ஙனம் வாராதொழிவேனாயின்; சுடுமண் ஏற்றி அரங்கு சூழ் போகி வடுவொடு வாழும் மடந்தையர் தம் ஓர் அனையேன் ஆகி - நம்மனோரில் குடிக்குற்றப்பட்டுத் தலையிலே செங்கலை ஏற்றிச் சுமக்கச் செய்து நாடக அரங்கினை நாட்டவர் காணச் சுற்றி வந்தமையாலே தமக்குண்டான பழியோடு உயிர் சுமந்து வாழுமகளிரோடு ஒரு தன்மையுடையேனாய்; அரங்கக் கூத்தியர் மனையகம் புகா மரபினன் என்று வஞ்சினம் சாற்றி - உலகினர் மதிப்பிற்குரியராக இனிது வாழுகின்ற நாடகக் கணிகையர் வாழ்கின்ற இல்லம் புகாத முறைமையினையுடைய இழிதகைமையுடையேன் ஆகுவன் இது வாய்மை! என்று பலரும் கேட்கச் சூண்மொழி சொல்லி; என்க.

(வி - ம்.) பூம்புகார் நகரத்தே வாழ்கின்ற நாடகக் கணிகையர் மரபினுள்ளும் சித்திராபதியின் குடி பெரிதும் சிறப்புடைய குடி என்பதனை—

"தெய்வ மால்வரைத் திருமுனி அருள
எய்திய சாபத்து இந்திரன் சிறுவனொடு
தலைக்கோல் தானத்துச் சாபம் நீங்கிய
மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்
சிறப்பிற் குன்றாச் செய்கையொடு பொருந்திய
பிறப்பிற் குன்றாப் பெருந்தோள் மடந்தை
தாதவிழ் புரிகுழல் மாதவி" (அரங்கேற்று-௧-௭.)

எனவும்,

"மங்கை மாதவி வழிமுதற் ரேன்றிய
அங்கர வல்குலும்" (க-உச-டு.)

எனவும் வரும் சிலப்பதிகாரத்தானும் அறியப்பட்டது.

அத்துணைச் சிறப்பான குடிப் பெருமையை இம் மாதவி தாபதக் கோலந் தாங்குமாற்ருல் கெடுத் தொழிந்தாள் என்பது அவள் உட்கோள் ஆகும். மேலும் அவள் அக் குலக் கொழுந்தாகிய மணிமேகலை என்னும் மலர்பூங் கொம்பினை அது மலர்ந்துள்ள செவ்வியில் பிக்குணிக் கோலம் பூட்டிப் பிச்சைப் பாத்திரம் ஏந்திச் செல்ல விடுத்த செயலை எண்ணுந்தோறும் அவள் சினம் தலைத் தலைப் பெருகி வருகின்றது. அவளுக்கும் குடிப்பழி வந்துற்றதைக் காணவே, (தம்முள்ளும் சித்திராபதி குடியினுற் பெரிதும் தனக்கு மதிப்புண்டென்று செருக்குற்றிருந்த வட்கும் பழிவந்துற்றமை கண்டு உள்ளுள்ளே உவத்தற்கே ஏனைய கணிகையர்) அரங்கக் கூத்தியர் எல்லாம் ஒருங்கு குழுமி நிற்கின்றனர். ஆதலால் அளியள் அச் சித்திராபதி அம் மகளிர் முன் தன் குடிப்பழி தீர்த்தற்குத் தான் செய்யப் போவது இன்னது என்று சீற்றஞ் சிறக்கப் பேசும் இப் பேச்சுக்கள் பெரிதும் இயற்கை நவிற்சியே ஆதலறிக.

இனி, மாதவியின்பா லுண்டான வெறுப்பினுலே என் மகள் என்னுது அவளை ஏதிலாள் போன்று மாதவி என்றமையும் உணர்க. மணிமேகலை தவறிலள்; அவள் தாய் பூட்டிய கோலத்தை ஏற்றனள் என்னுங் கருத்துடையளாதலின் அவளை மணிமேகலையாகிய வல்லி என்றும், அவ் வல்லி புதிதலரும் பூவின்கட் பொருந்திக் காமத் தேனுகர ஓர் உலகாள் வண்டு காத்திருக்கின்றது என்றும் கூறிக்கூற்றுத் தன் செருக்கை மீண்டும் நிலைநாட்டுதற் பொருட்டுத் தன் குடிப்பெருமை கூறியவாறு.

பிச்சைப் பாத்திர மேந்திப் பெருந் தெருப்புக்காளொரு கணிகை மகளை உலகாள் வேந்தன் மகன் ஒருவன் விரும்புதலும் உளதாமோ? என்று ஐயுறுவார் அக் கணிகையருட் பலர் உளராகலாமன்றே, அவர் தம் ஐயந் தீர்ப்பாள் அவ் வண்டு, சிதையாவுள்ளம் உடைய வண்டு என்ருள். அவ் வேந்தன் மகன் அவளைப் பெறுதற் பொருட்டு யான் ஏவிய அனைத்தும் செய்குவன் என்பது தோன்ற "மற்றவன்றன்னுல் மணிமேகலையைப் பொற்றேர்க் கொண்டு போதுவல் கண்டீர்!" என்ருள்.

மணிமேகலை பிச்சைப் பாத்திரம் ஏந்தியதாலே வந்த இழிவொன்றுமில்லை. அவள் தானும் என் வழிக்குடன்பட்டு வருவாள் என்பது தோன்ற "பிச்சைப் பாத்திரம் பிறர் கைக் காட்டிப் பொற்றேர்க் கொண்டு போதுவல்" என்ருள். இனி, "சுடுமண் ஏற வடுநீங்கு சிறப்பின்" என்பதனுலும் (சிலப்-கச: கசகூ) "பதியிலாரிற் குடிக் குற்றப்பட்டாரை ஏழு செங்கற் சுமத்தி ஊர் சூழ்வித்தல் மரபு" எனவரும் அடியார்க்கு நல்லார் விளக்கத்தாலும் அக் காலத்தே அவ் வழக்கமுண்மை புலனுகும்.

வடுவொடு வாழும் கணிகையர் ஏனைய கணிகையர் மனையகம்புகுதல் கூடாதென்னும் விதியுண்மையும் இவள் கூற்ருற் பெற்ரும்.

### சித்திராபதி உதயகுமரன் அரண்மனை எய்துதல்

#### ௩௭ - ௪௨ : நெஞ்சு.........குறுகி

(இ - ள்.) நெஞ்சு புகை உயிர்த்து - சினத்தீப் பற்றி எரிதலாலே நெஞ்சினின்றும் புகைபோன்று வெய்தாக உயிர்ப் பெறிந்து அவ்விடத்தினின்றும் அரண்மனை நோக்கிச் செல்லு பவன் செல்லும் பொழுதே; மாண்பொடு வஞ்சக் கிளவி தேர்ந்து-மன்னவன் மகனைத் தன் வழிப்படுத்தற்கு அவனுடைய மாட்சிமை யோடு பொருந்துகின்ற வஞ்சக மொழிகளை இன்னின்னவாறு பேசுதல் வேண்டும் என்று தன்னெஞ்சத்தே ஆராய்ந்து கொண்டு; செறிவளை நல்லார் சிலர் புறஞ் சூழ - தன் குற்றேவற் சிலதியருள்ளும் திறமுடையார் ஒரு சிலரே தன்னைச் சூழ்ந்து வாரா நிற்ப; குறுவியர் பொடித்த கோலவாள் முகத்தள் - குறிய வியர்வை நீர் அரும்பியுள்ள அழகிய ஒளி படைத்த முகத்தை யுடைய அச் சித்திராபதி; கடுந்தேர் வீதி காலின் போகி-விரைந்து தேர்களியங்குகின்ற வீதி வழியே காலாலே நடந்து சென்று; இளங்கோ வேந்தன் இருப்பிடம் குறுகி-இளவரசனாகிய உதயகுமரன் உறைகின்ற இடத்தை அணுகி என்க.

(வி - ம்.) நெஞ்சத்தே சினத்தீ பற்றி எரிதலின் அங்கிருந்து வருகின்ற உயிர்ப்பைப் புகை என்றே குறிப்புவம மாக்கினர். தான் வயப் படுத்த வேண்டிய மன்னிளங் குமரன் பெருந்தகைமைக் கேற்பவே பேச வேண்டுதலின் வஞ்சக் கிளவியாயினும் மாண்புடையவே தேர்ந்து கொள்ளல் வேண்டிற்று. மன்னன் மகன்பாற் செல்ல வேண்டுதலின் திறமுடைய ஒரு சில பணிமகளிரையே தேர்ந்து அவர் தற்சூழச் சென்றாள் என்றவாறு. சித்திராபதி தானும் ஊர்வசி வழித் தோன்றி யவள் ஆதலின் அவள் முகம் அந்த முதுமைக் காலத்தும் அழகும் ஒளியும் உடைத்தாகவே இருந்தது. அம் முகத்திற் பொடித்த குறு வியரும் அவட்கு ஓரணியே தந்தது என்பார் குறுவியர் பொடித்த கோல வாள் முகத்தள் என்று விதந்தோதினர். காலிற்போகி - காற்றுப் போல விரைந்து சென்று எனினுமாம்.

### உதயகுமரன் இருக்கை வண்ணனை

#### ௪௩ - ௫௧ : அரவ.........ஏத்தி

(இ - ள்.) அரவ வண்டொடு தேன் இனம் ஆர்க்கும் தருமணல் ஞெமிரிய திரு நாறு ஒரு சிறை - நறுமணத்தினன்றி வேறிடஞ் செல்லுதலில்லாத இயல்புடைய வண்டினங்களும் தேனினங்களுமே இசை முரன்று திரிகின்ற புதுவதாகக் கொணர்ந்து பரப்பிய மணலையுடைய அழகின் பிறப்பிடமாகிய

ஒரு பக்கத்திலே; பவழத்தூணத்துப் பசும்பொன் செஞ்சுவர்த் திகழ் ஒளி நித்திலச் சித்திரவிதானத்து விளங்கு ஒளி பரந்த - பவழங்களாலியன்ற தூண்களையும் பசிய பொன்னாலியன்ற சிவந்த சுவரின்கண் விளங்குகின்ற ஒளியும் முத்தினாலியன்ற சித்திரச் சேலையமைந்த மேற்கட்டியினின்றும் விளங்குகின்ற ஒளியும் யாண்டும் பரவப்பெற்ற; பளிங்கு செய் மண்டபத்து - பளிங்கினாலே அழகுறச் செய்யப் பெற்றதொரு மண்டபத்தினூடே இடப்பட்ட; துளங்கு மான் ஊர்தித் தாமலர்ப்பள்ளி - ஒளி தவழுகின்ற பொன்னானும் மணியானுஞ் செய்த அரிமான்கள் சுமந்திருக்கின்ற தூய மலர்கள் பரப்பப்பட்ட பள்ளியின் மேல்; வெள் திரை விரிந்த வெண்ணிறச் சாமரை கொண்டு இருமருங்கும் கோதையர் வீச - வெள்ளிய பாற்கடலின் அலைகள் போல விரிந்து புரள்கின்ற வெண்ணிறமான சாமரைகளைச் செங்கையிலேந்தி அக்கட்டிலின் இரண்டு பக்கத்தேயும் அழகிய மங்கல மகளிர் நின்று வீசாநிற்ப; இருந்தோன் திருந்து அடி பொருந்தி - வீற்றிருந்த அரசிளங்குமரனாகிய உதயகுமரன் அழகிய திருவடியிலே வீழ்ந்து வணங்கிச் சித்திராபதி; நின்று ஏத்தி - எழுந்து கை கூப்பித் தொழுது நின்று பாராட்ட என்க.

(வி - ம்.) அரவம் - இசைமுரற்சி. வண்டு தேன் சுரும்பு மிஞிறு தும்பி என்பன வண்டுகளின் வகைகள். அவற்றுள் வண்டும் தேன் என்பனவும் நறுமணங்கமழும் மலர்களிலன்றிப் பிற மலர்களிற் செல்லா என்பது பற்றி அவ் விரண்டனையும் ஓதினர் என்பர். இதனைச் சீவக சிந்தாமணியில் (அகூஉ) "மிஞிற்றில் சுரும்பு சிறத்தலின் அதனை முற்கூறினர்......இவை எல்லா மணத்திலுஞ் செல்லும்; மதுவுண்டு தேக்கிடுகின்ற வண்டுகாள்! மதுவுண்டு தேக்கிடுகின்ற தேன்காள்! என்க. இவை நல்ல மணத்தே செல்லும்" என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறும் நல்லுரையாலறிக.

தருமணல் - கொணர்ந்து பரப்பிய புதுமணல். ஞெமிர்தல் - பரப்புதல். திரு அழகு. நாறுதல் - தோன்றுதல். இனி, புதுமணல் பரப்பிய இடம் திருப்பாற்கடல்போற் றிகழ்தலின் திருமகள் பிறக்கும் பாற்கடற் பரப்புப் போலுமோரிடத்தே எனினுமாம்.

பவழத்தால் தூணிறுத்திப் பசும்பொன்னாற் சுவரியற்றப் பட்டிருத் தலின் செவ்வொளி திகழா நிற்ப, வெண்ணிற முத்துப் பந்தரின் கீழ் இயற்றப்பட்ட பளிக்கு மண்டபம் என்க. இது மண்டபத்துள்ளமைந்த பள்ளியறை என்க.

துளங்கும் மானூர்தி என்றார் மான்களும் மணியினும் பொன்னினும் இயன்றவை என்பது தோன்ற. துளங்கும் - ஒளிதவழ்கின்ற. மான் - அரிமான், சிங்கம். நான்கு சிங்கங்கள் சுமந்து நிற்பது போன்று அவற் றைக் கால்களாக அமைத்துச் செய்த பள்ளிக் கட்டில் என்க. அரசன் மகன் கட்டிலாதலின் அரிமான் சுமந்த கட்டில் வேண்டிற்று. திரை போல விரிந்த சாமரை என்க. கோதையர் என்றார் அவரது இளமை

தோன்ற. இவர் பணி மகளிர். அடி பொருந்தி - அடியில் வீழ்ந்து வணங்கி. அரசரை வணங்குவோர் கொற்றங் கூறி வாழ்த்துதல் மரபு ஆகலின் ஏத்தி என்றது வாழ்த்தி என்றவாறாயிற்று.

### உதயகுமரன் சித்திராபதியின்பால் மணிமேகலை நிலை என்னுயிற் றென்று வினுதலும் அவள் விடையும்

(௫௨ - ௬௩: திருந்து.........வேந்தேன)

(இ - ள்.) திருந்து எயிறு இலங்கச் செவ்வியின் நக்கவன் - சித்திராபதியின் வருகை கண்டு தன் அழகிய பற்கள் தோன்றுமளவில் இதழ் திறந்து சிறிதே சிரித்த உதயகுமரன் அவள் முகம் நோக்கி; மாதவி மணிமேகலையுடன் எய்திய தாபதக் கோலம் தவறு இன்றோ என - முதியோய் நின் மகள் மாதவி தன் மகளோடு ஒரு சேர மேற்கொண்ட பிக்குணிக் கோலம் பிழையின்றி நன்கு நடைபெறுகின்றதோ? என்று நாகரிகமாக வினவா நிற்ப; வாழ்க நின் கண்ணி அரிது பெறு சிறப்பின் குருத்து கருவுயிர்ப்ப ஒரு தனி ஓங்கிய திருமணிக் காஞ்சி - மாதவி பெறுதலாலே ஒப்பற்ற பெருஞ் சிறப்போடு உயர்ந்து விளங்குகின்ற அழகிய மணிமேகலை தானும் இப்பொழுது; பாடல் சால் சிறப்பின் பரதத்து ஓங்கிய நாடகம் விரும்ப நல்நலம் கவினிக் காமர் செவ்விக் கடிமலர் அவிழ்ந்தது - புலவர்களால் பாடப் பெற்ற இசைப்பாடல்களோடு கூடிய நாடக நூலின்கண் உயர்ந்து திகழ்கின்ற ஆடற்கலை தானே தன்னைப் பெரிதும் விரும்பி வரவேற்கும்படி ஆடல் பாடல் அழகு என்னும் அழகிய மூன்று பண்புகளானும் நன்மைகள் நிரம்பிப் பேரழகெய்தி, காதல் பிறக்கும் செவ்வியையும் விளக்கத்தையும் உடையவளாய் நெஞ்சமாகிய நறுமலர் நன்கு தளையவிழப் பெற்றனள்; உதயகுமரன் என்னும் ஒரு வண்டு உணீஇய விரைவொடு வந்தேன் - அந்நாண் மலரிற் பொதுளிய நறுந்தேனை உதயகுமரன் என்னும் பெயரையுடைய ஒப்பற்ற வண்டு பருக வேண்டும் என்னும் குறிக்கோளுடனேயே அடிச்சி ஈண்டு விரைந்து வந்துளேன்; வாள் வாய் வேந்து - வாள் வென்றி வாய்ந்த வேந்தர் பெருமானே; வியன் பெருமூதூர் பாழ்ம்ம் பறந்தலை அம்பலத்து ஆயது - ஆயினும் அம் மலர் இப்பொழுது மாதவி ஏவலாலே அகன்ற பெரிய பழைய இப் பூம்புகார் நகரத்தே பாழ்பட்ட இடமாகிய நன்காட்டின்கண் உலக வறவியென்னும் அம்பலத்தே சென்றுளது என்றாள் என்க.

(வி - ம்.) ஒரு காரியத்தில் தோல்வியுற்றிருப்பவர் அக் காரியத்துத் துணை செய்தவரைக் கண்டபொழுது சிறிது நகைப்பது இயல்பு. அவ் வியல்பு தோன்ற உதய குமரன் எயிறிலங்கு மளவே நக்கனன் என்றார். சித்திராபதி கூற்றின் வெளிப்படைப் பொருளே ஈண்டு உரையில்

விரித்து வரையப்பட்டது. சித்திராபதி அங்குள்ள பணி மாந்தர்க்கும் பொருள் விளங்காத வகையில் உதய குமரனுக்கு மட்டுமே பொருள் தெளிவாகப் புலப்படும்படி கூறுகின்ற வித்தகம் பெரிதும் வியக்கத் தகுந்ததாம்.

சித்திராபதி தன் கூற்றின் பொருளை மறைத்தல் வேண்டி அதனையே சிலேடை வகையாலே வேறுவாய்பாட்டாற் கூறுகின்ருள். ஆகவே அவள் கூற்றிற்கு-அரிதாகவே காணப்படுகின்ற சிறப்பையுடைய குருக் கத்தி என்னும் பூங்கொடி ஒன்று அழகிய காஞ்சிப் பூவை மலர்ந்துளது. அங்ஙனம் மலர்ந்துள்ள அவ் வற்புத நிகழ்ச்சியைப் புலவர் பாடுஞ் சிறப் புடைய இப் பாரத கண்டத்திலே அமைந்த நாடுகளில் வாழ்கின்ற மாந்தர் எல்லாம் கண்டுகளிக்க விரும்புமாறு அக் காஞ்சிப்பூத்தானும் நாளரும்பா யிருந்தது; மண முதலிய நலங்களோடே அழகுடையதாய் நன்கு மலர்ந்துளது; அம் மலரிற்றேன் தெய்வத்தன்மையுடையதாக இருத்தல் வேண்டும் ஆகலின் அம் மலரின் திப்பியத் தேனை எங்கள் இறை மகனாகிய வண்டே உண்ண வேண்டும்; என்று கருதி இவ் வற்புத நிகழ்ச்சியைக் கூறவே யான் விரைந்து வந்தேன் என்பதே அவள் ஆண் டுள்ளோர் அறியும்படி கூறிய செய்தியாம்.

இதன் கண் - குருகு - குருக்கத்தி; மாதவி. கருவுயிர்ப்ப-மலரைத் தோற்றுவிக்க; ஈன. மணிக்காஞ்சி - அழகிய காஞ்சி மரம் (மாதவி மகள்) மணிமேகலை என்பவள். பாடல் - இசைப் பாடல் - இயல் பாடல்; பரதம் - பரதகண்டம்; பரத நூல். நாடகம் - கூத்து - நாட்டில் வாழ்வோர். நன்னலம் - நல்ல அழகு; அழகிய பெண்மை நலம். காமர் செவ்வி - காதல் தோன்றும் செவ்வி; அழகிய செவ்வி. கடிமலர் அவிழ் தல் - மணமுடைய மலர் மலர்தல். திருமணம் புரிதற்கியன்ற பூப்புப் பருவம் அடைதல்.

மணிமேகலையை மலராக உருவகித்தமைக்கும் அவளை மலராகவே கூறியதற்கும் உதயகுமரனை வண்டாகக் கூறியது பொருந்துதலும் உணர்க.

உதயகுமரன் அவள்பால் இடங்கழி காமமுடையான் என்பதனை அவள் முன்பே அறிவாள் ஆதலின் அவள் உலகவறவியில் இருக்கும் பொழுதே சென்று கைப்பற்றுக, இன்றேல் வேறிடங்கட்குப் போதலும் கூடும் என்று அவனை ஊக்குவாள் யான் விரைவொடு வந்தேன் என்ருள். முன்போல அவள் பகவனதாணையால் பன்மரம் பூக்கும் மலர் வனத்தில் இல்லை, இப்பொழுது அச்சஞ் சிறிதுமின்றிக் கைப்பற்றி வரலாம் என்பாள் அது பாழ்ம் பறந்தலை அம்பலத்தாயது என்ருள். நீ வேந்தன் என்பாள் வாய்வாள் வேந்தே என்ருள். இம் முறை நீ வெற்றி யொடு மீள்குவை என்பாள் நின் கண்ணி வாழ்க! என்ருள்.

## மணிமேகலையின்பால் காதல் கொண்டு கைகூடாமையால் ஏக்கற்றிருக்கும் உதயகுமரனின் உள்ளம்

### கரு - ௭௦: ஓங்கிய..............முன்னர்

(இ - ள்.) ஓங்கிய பௌவத்து உடைகலப்பட்டோன் வான் புணை பெற்றென - அலைகள் உயர்ந்த பெரிய கடலின்கண் தான்

வளர்ந்து வந்த மரக்கலம் உடையக் கடலின் மூழ்கி உயிர் துறக்கும் நிலையை யடைந்தவொருவன் அவ்விடத்திலேயே தான் உய்ந்து கரையை எய்துதற் கேற்ற சிறப்புடைய தெப்பத்தைக் கண்டு அதனைத் தவறவிடாமல் கைப்பற்றுதல் போன்று; மணிமேகலையின்பால் தனக்குண்டான காமக்கடலை நீந்த மாட்டாது உயிர் துறக்கும் நிலையிலிருந்த உதயகுமரன் அச் சித்திராபதியின் வாயிலாய் இனி மணிமேகலையைக் கைப்பற்றி உய்யலாம் போலும் என்னும் உறுதி கொண்ட உள்ளத்தவனாய்; மற்று அவட்கு உரைப்போன் - அச் சித்திராபதிக்குக் கூறுவான்!; இஃது மேவிய பளிங்கின் விருந்தின் பாவை ஓவியச் செய்தி என்று ஒழிவேன் முன்னர் - மூதாட்டியே கேள்! பளிக்கறையினுள்ளிருந்து புறத்தே தோற்றிய மணிமேகலையின் உருவத்தை யான் கண்ணுற்ற பொழுது இவ்வுருவம் அதற்குத் தகுந்த பளிங்கின் கண் ஓவியப் புலமைமிக்கோன் ஒரு வித்தகன் தன்கைத்திறம் தோன்ற இதுகாறும் யாராலும் வரையப்படாததொரு புதுமையோடு வரையப்பட்டதொரு பெண்ணோவியம் என்றே எண்ணிப் பெரிதும் அவ்வோவியன் தன்னுள்ளத்தே கருதிய அழகின் சிறப்பினை யானும் கருதிப்பார்த்து அஃது ஓர் ஓவியச் செயலே என்று அவ்விடத்தினின்றும் புறப்படுகின்ற பொழுது என் கண் முன்னரே; காந்தளம் செங்கைத் தளைபிணி விடா ஏந்து இள வனமுலை இறை நெரித்ததூஉம் - அங்ஙனம் கருதப்பட்டு நின்ற அம் மணிமேகலையின் செங்காந்தள் மலர் போன்ற சிவந்த கைகள் விரலாலே ஒன்றனோடொன்று பிணித்துக் கொண்ட பிணிப்பினை விடாவாய் அவளுடைய அணந்த இளைய அழகிய முலையிரண்டனையும் ஒரு சேரச் சிறிது நெரித்த செய்கையும்; அன்றியும், ஒளிர்பவளத்துள் ஒத்து ஒளி சிறந்த முத்து கூர்த்து அன்ன முள் எயிற்று அமுதம் அருந்து ஏமாந்த ஆர் உயிர் தளிர்ப்ப - அவளுடைய ஒளியுடைய பவளம் போன்று சிவந்த திருவாயினுள்ளே தம்முள் நிரல்பட்டு ஒத்து வெள்ளொளியினாலே சிறப்புற்ற முத்துக்கள் தமக்கியல்பான வட்ட வடிவத்தைப் பெறாமல் கூர்த்திருந்தாற்போன்று கூரிய அவளது வாலெயிற்றின் ஊறுகின்ற அமிழ்தினும் இனிய நீரைப் பருகுதற்கு ஏக்கற்று நிற்கின்ற உய்தற்கரிய என் உயிர் தழைக்கும்படி; விருந்தின் மூரல் அரும்பியதூஉம் - புதுமையுடையதொரு புன்முறுவல் பூத்த செய்கையும் ஆகிய இவற்றைக் கண்டு; ஆய் இதழ்க் குவளை மலர் புறத்து ஓட்டிக் காம் வேல் வென்ற கருங்கயல் நெடுங்கண் - அழகிய இதழையுடைய கருங்குவளைப்பூவை அழகாலே வென்று புறங் கொடுத்தோடச் செய்து பின்னரும் பகைவர் உரங்கிழித்து வருத்தி அவர்தங் குருதியாற் சிவந்த வேற்படையையும் வென்ற கரிய கயல்மீன் போன்ற நெடிய

அவளுடைய கண்கள் தாமே; ஆயிழை தனக்கு அறிவு பிறிது ஆகியது எனச் செவியகம் புகூஉச் சென்ற செவ்வியும் - நம்மையுடைய மணிமேகலைக்கு இப்பொழுது அறிவு வேறுபட்டது காண் என்று மறைவாக அறிவுறுத்தற்கு அவளுடைய செவிமருங்கே ஓடி மீண்டும் மற்றொரு செவிக்குக் கூறுதற்குச் சென்றதொரு செய்கையும் ஆகிய இச் செயல்களாலே; பளிங்கு புறத்து எறிந்த பவளப்பாவை - பண்டு அப் பளிக்கறையானது தன்னகத்திருந்து புறத்தே வீசிய பவளப்பாவை போல்வாளாகிய அம் மணிமேகலை; உயிர்க்காப்பு இட்டு என் உளம் கொண்டு ஒளித்தாள் என்று இடை இருள் யாமத்து இருந்தேன் முன்னர் - என்னுடைய ஆருயிர் உடம்பை விட்டுப் போகாமைக்கும் ஒரு பாதுகாப்பினைச் செய்து வைத்து என்னுடைய நெஞ்சத்தை மட்டும் கவர்ந்து கொண்டு கரந்தொழிந்தாள் என்று செயலறவு கொண்டு, அற்றைநாளிரவு இப் பள்ளிக் கட்டிலின் மேல் எப்படியும் இவ்விரவு கழிந்தால் அவள் என்கையகத்தாள் ஆதவள் என்னும் நம்பிக்கையோடு துயிலின்றித் தனித்துச் சிந்தனையிலாழ்ந்திருந்தேனாக! அப்பொழுது என் கண் முன்னர்; என்க.

(வி - ம்.) மணிமேகலையை மன்னவன் மகன் மலர்வனத்தே சென்று கைப்பற்றச் சென்றவன் யாண்டும் அவளைக் காணப் பெறானாய் ஆங்கொருசார் சுதமதியை வினவி நின்றபொழுது பளிக்கறையுட் புக்கிருந்த மணிமேகலையுருவம் புறத்தே தெரிந்ததனை ஓவியச் செய்தி என்றே கருதி அவ்வோவியத்தின் அழகிலீடுபட்டு அதனைக் கூர்ந்து நோக்கி அதனை இயற்றிய ஓவியனுடைய கலையுள்ளத்தைப் பாராட்டி மீளக் கருதியபொழுது உள்ளிருந்த மணிமேகலையின் பால் நிகழ்ந்த மெய்ப்பாடுகள் ஈண்டு அவனாற் சித்திராபதிக்குக் கூறப்படுகின்றன.

மணிமேகலா தெய்வம் எடுத்துப் போனமையால் அவள் நிலையறியாத உதய குமரன் அற்றை நாள் இரவு பெருந்துயரெய்தி, கங்குல் கழியிலென் கையகத்தாள் என்றிருந்தவன் மற்றை நாள் தொடங்கி அற்றை நாள்காறும் அவளைக் காணப் பெரிதும் முயன்றும் காணப் பெறாமையாலே இனித் தன் உயிர்க்கு உய்தியில்லை போலும் என்று துயர்க் கடலுள் மூழ்கி யிருந்தான் என்பது தோன்ற இப் புலவர் பெருமான் இவனை உடைகலப் பட்டோனாகவும் சித்திராபதியை வான்புணையாகவும் ஓதும் நுண்மை யுணர்க.

இனி, அம் மணிமேகலை, இளவன முலை நெரித்ததும், மூரல் அரும்பியதும் கண்ணினது மருட்சியும் அவள் தன்பால் தீராக்காதலுடையாள் என்பதை நன்கு அறிவித்து விட்டமையின், அதுபற்றி அவன் உயிர் வாழ்கின்றான் ஆதலின் அச் செயல்களால் என் உயிர் போகாமல் காப்பிட்டு வைத்தாள் என்றான். மீண்டும் தன் னெஞ்சத்தை முழுதும் கவர்ந்து கொண்டவை தாமும் அச் செயல்களே யாதலால் உயிர்க்குக் காப்பிட்டு என்னுடலில் நிறுத்தி அதற்குத் துணையாகிய உள்ளத்தைக் கவர்ந்து கொண்டு போயினள் என்கின்றான். ஈண்டு—

மணிமேகலை மூரல் அரும்பியதும் அவள் கண்களின் மிளிர்ச்சியும் பிறவும் அவள் உதயகுமரனைப் பெரிதும் காதலிக்கின்றனள் என்பதற்குக் குறிப்பறிவுறுத்துவனவாகவும், அவள் அவனைப் பற்றற்கரியளானமையால் மீண்டும் அச்செயல்களே அவனுக்குப் படர்மெலிந்திரங்கற்குக் காரணமாகவும் ஆயபடியறிக.

இனி மணிமேகலை நம்பாற்படுவாள் என்னுங் கருத்தாலே அவனுடலில் உயிர் தங்குவதாயிற்று. வழிநாள் முதற் கொண்டு அற்றைநாள் காறும் அவளைப் பற்றிய செய்தி யாதொன்றும் அறியப்படாமையால் காமம் என்னும் கரை காணாத கடலைக் கையானீந்திக் கொண்டு இனி உய்வேனோ மாட்டேனோ என்னும் ஐயுறவோடிருந்தவனுக்குச் சித்திராபதி வான்புணையாயினள். ஆயவட்கு மணிமேகலையின் மனநிலை இன்னது என இவ்விளவரசன் இயம்புதல் இன்றியமையாததாயிற்று. என்னை? மணிமேகலை உடன் படுவளோ படாளோ என்னும் ஐயம் அவட்கிருத்தல் இயல்பாகலின். அது தீர்தற்கு இது கூறினன் என்க.

இனி மணிமேகலை உலகவறவி புக்கமையால் கைப்பற்றுதற்கு எளியளாயினும் அவளைக் கைப்பற்றுதற்குத் தடையாயிருக்கின்றதோரச்சத்தை அவ்வரசிளங் குமரன் இனிச் சித்திராபதிக்குக் கூறுகின்றனன்.

## இளவரசனின் எய்யா மையலும் சித்திராபதியின் சிறுநகையும்

அக - அகூ: பொன்றிகழ்............செப்பின்

(இ - ள்.) பொன் திகழ் மேனி ஒருத்தி தோன்றிச் செங்கோல் காட்டி - பொள்ளெனப் பொன் போன்று விளங்குகின்ற திருமேனியையுடைய ஒரு நங்கை வந்து நின்று எனக்குச் செங்கோன்மையினின்றும் பிறழ்வதனாலே மன்னர்க்குண்டாகும் இழிதகைமையை எடுத்துக்காட்டி; அங்கு அருந்தவம் புரிந்த அவள் தன் திறம் அயர்ப்பாய் என்றனள் - ஆங்குப் பௌத்தருடைய தவப்பள்ளியிற் சேர்ந்து ஆற்றுதற்கரிய தவத்தை மேற்கொண்டிருக்கின்ற மணிமேகலை திறத்திலே நீ நினைக்கின்ற நினைவுகளை மறந்தொழிக என்று கூறி அப்பொழுதே மறைந்தொழிந்தனள் காண்; தெய்வம் கொல்லோ திப்பியம் கொல்லோ - அங்ஙனம் தோன்றி எனக்கு அறிவுரை கூறியது யாதேனும் ஒரு தெய்வமோ? அல்லது, அம் மணிமேகலைக் கெய்திய தெய்வத் தன்மையாலே நிகழ்ந்ததோர் அற்புத நிகழ்ச்சியேயோ!; யான் எய்யா மையலேன் என்று அவன் சொல - யான் இற்றைநாள் காறும் அந் நிகழ்ச்சிக்குரிய காரணம் யாதொன்றும் அறிய மாட்டாமல் மயங்கியே இருக்கின்றேன் காண்! என்று அவ்வரசிளங்குமரன் கூற; சித்திராபதி தான் சிறு நகை எய்தி அரசிளங்குரிசில் அத்திறம் விடுவாய் - அது கேட்ட சித்திராபதி புன்முறுவல் பூத்து மன்னவன் மகனாகிய எங்கள் இளவரசே! அந் நிகழ்ச்சி தலைக்கீடாகச் சிறிதும் கவலாதே கொள்!;

தேவர்க்கு ஆயினும் காமக் கள்ளாட்டிடை மயக்குற்றன செப்பின் சிலவோ - மக்களாகிய நம்மனோர் கிடக்கத் தேவர்களுக்குக் கூடக் காமமாகிய கள்ளுண்டு களித்தற்குக் காரணமான இவ்விளையாட்டிடையே உண்டாகும் இத்தகைய மயக்கக் காட்சிகள் ஒரு சிலவோ ஆயிரம் ஆயிரம் நிகழ்தலுண்டு காண்! என்றாள் என்க.

(வி - ரை.) பொன் திகழ் மேனி ஒருத்தி என்றான் அவள் இன்னள் என்று அறியாமையினாலே. ஈண்டு உதயகுமரன் கூறுவது:—அவன் மணிமேகலையை மலர்வனத்திலே கைப்பற்ற முயன்று செவ்வி பெறாமல் வறிதே மீண்ட அற்றை நாள் இரவு மணிமேகலா தெய்வம் "கங்குல் கழியில் என் கைகைத்தாள்'' என எண்ணமிட்டுக் கொண்டு பொங்கு மெல்லமளியிற் பொருந்தாது உறுதுயரெய்தி இருந்தோன் முன்னர்த் தோன்றி "மன்னவன் மகனே! கோல் நிலை திரிந்திடின் கோணிலை திரியும்......அவத்திறம் ஒழிக'' என்றறிவுறுத்து மறைந்த நிகழ்ச்சியை.

(துயிலெழுப்பிய காதை-ரு-கச.)

ஈண்டு அவன் "பொன்திகழ் ஒருத்தி தோன்றிச் செங்கோல் காட்டிச் செய்தவம் புரிந்த அங்கவடன் திறம் அயர்ப்பாயென்றனள் தெய்வம் கொல்லோ திப்பியம் கொல்லோ எய்யா மையலேன்'' என்று சித்திராபதிக்குக் கூறியது. இங்ஙனமாதலின் அவளைக் காமுறுது விடுவதோ அன்றிக் காமுற்று மீண்டும் கைப்பற்ற முயல்வதோ இரண்டனுள் யாது செய்பற்பாலது என்று துணியாமைக்குக் காரணமான மயக்கத்தோடிருக்கின்றேன் என்பது குறிப்பாகத் தோன்றும்படி கூறியதாம். என்னை? அவன்றானும்—

"..................நன்னுதன் மடந்தையர்
மடங்கெழு நோக்கின் மதமுகம் திறப்புண்டு
இடங்கழி நெஞ்சத் திளமை யானை
கல்விப் பாகன் கையகப் படாஅது
ஒல்கா உள்ளத் தோடு மாயினும்
ஒழுக்கொடு புணர்ந்த''  (சிலப்-உக; கூ-சO)

விழுக்குடிப் பிறப்புடையோன் ஆதலானும், "அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்'' ஆதலானும் அப் பெரியோன் தனது அச்சத்தையே இதனால் சித்திராபதிக்குப் பொதுவாகச் சொல்லிக் காட்டுகின்றான் என்று கொள்க.

ஆயினும் சித்திராபதி தனது சிறு நகையாலேயே அவ் வச்சத்திற் செம்பாதியைத் தவிர்த்து எஞ்சிய பாதியைச் சொல்லாலே தவிர்த்து விடுகின்ற அவள் சொற்றிறம் பெரிதும் வியத்தற்பாலதாம்.

இப்படி ஆயிரம் ஆயிரம் மயக்கக் காட்சிகள் காமக்கள்ளாட்டாடுவாரிடையே காணப்படும். இத்தகைய மயக்கக்காட்சிகள் தேவர்களுக்குக் கூட ஏற்படும் ஆதலின் "அத்திறம் விடுவாய் அரசிளங் குரிசில்'' என இம் மூது கணிகை அவ்வச்சத்தை மிகமிக எளிதாகவே

பேசி எடுத்தெறிந்து தவிர்க்கும் இவள் நுண்ணறிவை எண்ணி எண்ணி இறும்பூது கொள்கின்றோம்.

ஈண்டு, இராவணன் காம மயக்க முதிர்ச்சியாலே சீதையை உருவெளித் தோற்றமாக உள்ளத்திலே படைத்துக் கொண்டு சூர்ப்பனகையை அழைத்து "இங்கின்றவளாங் கொல் நீ இயம்பிய சீதை?" என்று வினவுதலும் அவள் தானும் காமக்கள்ளாட்டிடை மயக்குற்று இராமனை உருவெளித் தோற்றத்தே காண்பவள் சூழ்நிலையையும் மறந்து போய் வந்தான் இவனுகும் அவ் வல்வில் இராமன் என்று விடை கூறுதலும் அது கேட்ட இராவணன் அவளைச் சினந்து மண்பாலவரோ நம்மை மாயை விளைப்பர்! பேதாய்! நின் விடைக்குப் பொருள் என்னென்றுரப்புதலும் அதற்கவள்—

"ஊன்றும் உணர்வு அப்புறம் ஒன்றினும் ஓடலின்றி
ஆன்று மூளதாம் நெடிதுஆசை கனற்ற நின்றுய்க்கு
ஏன்றுன் எதிரே விழிநோக்கும் இடங்கள் தோறும்
தோன்றும் அனையாள்இது தொன்னெறித் தாகும்"

என்றும் இன்னோரன்ன காமக்கள்ளாட்டிடை மயக்குற்றனவாகிய மருட்காட்சிகள் என்றும் அறிவுறுத்தல் ஒப்புநோக்கற் பாலதாம்.

சித்திராபதி அவன் பேதைமைபற்றி ஈண்டுச் சிறுநகை தோற்றுவிக்கின்றாள். இந் நகைப்பு வாய்மையன்று நடிப்பு.

சிலவோ என்புழி ஓகாரம் எதிர்மறையாய் அதன் மறுதலைப் பொருளை வற்புறுத்து நின்றது. அஃதாவது சிலவல்ல எண்ணிறந்தனவுள என்றவாறு. உதயகுமரன் மணிமேகலை மூரலரும்பியமையால் என் ஆருயிர் தளிர்த்த தென்றமையால் அவனைக் காமக் கள்ளாடினைகவே கூறினள் என்க.

## காமக் கள்ளாட்டிடை மயங்கிய தேவர்க்கு ஒரு சில எடுத்துக்காட்டுகள்

### கூ0 - கூஎ : மாதவன்............குருசில்

(இ - ள்.) மாதவன் மடந்தைக்கு வருந்து துயர் எய்தி ஆயிரஞ் செங்கண் அமரர் கோன் பெற்றதும் - பெரிய தவவொழுக்கத்தே நின்ற கௌதமமுனிவருடைய பத்தினியாகிய அகலிகையின் பால் காமத்தால் மயக்குற்றுப் பற்பல நாள் மாபெருந் துன்பம் எய்தி ஆயிரம் சிவந்த கண்களை அமரர் கோமானாகிய இந்திரன் எய்திய செய்தியும்; மேருக்குன்றத்து ஊரு நீர்ச் சரவணத்து அருந்திறல் முனிவர்க்கு ஆர் அணங்கு ஆகிய பெரும் பெயர்ப் பெண்டிர் பின்பு உளம் போக்கிய அங்கி மனையாள்- மேருமலையுச்சியினின்று ஊர்ந்து வருகின்ற அருவி நீர் நிரம்பிய

சரவணப் பொய்கைக் கரையிடத்தே தவம் புரிபவராகிய அரிய ஆற்றலமைந்த முனிவர் எழுவருக்கும் பொருந்திய வாழ்க்கைத் துணைவியராகிய பெரிய புகழையுடைய பத்தினிப் பெண்டிரின்பால் காமுற்றுத் தன் நெஞ்சத்தை அவர்பால் போகவிட்டுப் பெரிதும் துன்பமுற்ற நெருப்புக் கடவுளின் மனைவியாகிய சுவாகை என்னும் தெய்வமகள்; அவண் - தன் கணவன் காம நோயால் கடுந்துயரெய்திய அவ்விடத்தே; தங்கா வேட்கை தனை - அத்தீக் கடவுளின் அறிவின் எல்லையிலே தங்காமல் மாற்றார் மனைவியர் பாற் சென்ற அவனது காமவேட்கையை; அவர் அவர் வடிவாய் தணித்ததூஉம் - அவ்வெழு முனிவர் மனைவிமாருள் ஒவ்வொருவர் வடிவத்தையும் தானே எடுத்துக்கொண்டு வந்து அவனைப் புணர்ந்து ஆற்றுவித்து அவனை உய்வித்த செய்தியும் ஆகிய தேவர்க்கும் எய்திய காமக் கள்ளாட்டு மயக்கச் செய்திகளை; வாள் திறல் குரிசில் - வாட் போரிற் பேராற்றல் வாய்ந்த இளவரசனே நீ; கேட்டும் அறிதியோ - நீ தானும் கற்றறிந்திருப்பாய் இல்லையாயிற் கேட்டும் அறிந்திருப்பாய் அல்லையோ! என்றாள் என்க.

(வி - ம்.) மாதவன் - கௌதம முனிவன். மடந்தை - அகலிகை. மடந்தையை நுகரும் பொருட்டு என்க. ஆயிரஞ் செங்கண் என்றது இடக்கரடக்கு.

ஊருநீர் - ஊர்ந்துவரும் அருவிநீர். சரவணம் - நாணற்புதர் சூழ்ந்ததொரு நீர்நிலை. சரவணத்துக் கரையிடத்தே தவஞ் செய்யும் முனிவர் என்றவாறு. அணங்கு - பெண்டு என்னும் பொருட்டாய் நின்றது. பெரும் பெயர் - புகழ். அங்கி - நெருப்புக்கடவுள். மனையாள் என்றது அவன் மனைவியாகிய சுவாகை என்பாளை. அவரவர் வடிவு - அம் முனிவர் பத்தினிமார் ஒவ்வொருவருடைய வடிவத்தையும் ... ஈண்டுக் கூறப்படும் இக்கதை, (அங்கி மனையாள் அம் முனிவர் மனைவிமார் வடிவத்தை எடுத்துக் கொண்டு வந்து ஒவ்வொரமையத்து அங்கியின் காம வேட்கையைத் தணித்த கதை) வியாச பாரதத்தில் ஆரணிய பருவத்தில் உஉச - சுஆம் அத்தியாயத்தில் காணப்படுகின்றதென்பர்.

தேவர்கள் தாமும் காமக் கள்ளாட்டிடை மயக்குற்று முறை பிறழ்ந்தொழுகினர். நீ மணிமேகலையின்பாற் கொண்ட காமம் நின் செங்கோன்மைக்குப் பொருந்தியதொரு காமமே; பொன்றிகழ் மேனி ஒருத்தி தோன்றி இவ்வொழுக்கம் செங்கோன்மைக்குப் பொருந்தாது என்பதுபட நினக்குச் செங்கோல் காட்டினளாகக் கண்டதாகக் கூறிய காட்சியும் மயக்கக் காட்சியே காண் என்று அவனுக்கு இனிச் சித்திராபதி செங்கோல் காட்டுகின்றாள்.

## சித்திராபதி மணிமேகலையை உதயகுமரன் கைப்பற்றி வருதல் செங்கோன் முறைமையே யாம் எனத் தேற்றுரை பகர்தல்

௯௯ - ௧௦௨ : கன்னி............அல்லள்

(இ - ள்.) கன்னிக் காவலும் கடியிற் காவலும் தன்உறு கணவன் சாவுறின் காவலும் நிறையின் காத்து - மன்னவன் மகனே! இடையிருள் யாமத்து நின் முன்னர்ப் பொன்திகழ் மேனி ஒருத்தி தோன்றிச் செங்கோல் காட்டி அவள் திறம் அமர்ப்பாய் என்று கூறி மறைந்தனள் என்குதி இதுவும் காம மயக்கத்தே தோன்றியதொரு மருட்காட்சியே காண், எற்றுலெனின், நின்னாற் காமுறப்படுகின்ற மணிமேகலை யார்? அவள் தான் கன்னிமைப் பருவத்தினும் அடுத்துவருகின்ற திருமணத்தின் பின்னிகழும் கற்பொழுக்கந் தலைநிற்கும் நெடிய பருவத்தினும் ஓரோவழித் தம்மைப் பொருந்திய கணவர்க்குச் சாக்காடு வந்துற்றக்கால் பின்னிகழுகின்ற கைம்மை கூர் பருவத்தினும்; நிறையின் காத்து - தமது நெஞ்சத்தைத் தங்குடிக்குரிய பண்பாகிய நிறை என்னும் ஆற்றலாலே புறம் போகாமற் காவல் செய்து; பிறர் பிறர் காணாது - தம்மழகைப் பிற ஆடவர் கண்டு காமுறுவண்ணம் கரந்தொழுகி; தெய்வமும் பேணாது - தங்கணவரைத் தொழுதலன்றித் தெய்வங்களையும் பேணித் தொழாமல் வாழ்தற்குரிய; பெண்டிர்தம் குடியில் பிறந்தாள் அல்லள் - பத்தினிப் பெண்டிருடைய உயர்ந்த குடியிலே பிறந்த குலமகள் அல்லளே; என்றாள் என்க.

(வி - ம்.) கன்னி-பெதும்பைப்பருவம் எய்தியும் திருமணம் நிகழப் பெறாத இளம் பெண். கடி - திருமணம். கடியிற் காவலாவது - கணவனோடு இல்லறம் நிகழ்த்தும் பருவம். சாவுறின் என்றது கண[illegible] மணநாள் தொடங்கி எந்த நாளினும் சாதலுண்டாகலின் [illegible] வினை காரணமாக அவ்வாறு மிக்க இளமையிலேயே கணவனுக்குச் சாவு நேர்ந்துழி என்பதுபட நின்றது. என்னை? கணவன் நூறாண்டு வாழ்ந்து சாவுறுமிடத்து மனைவிக்குக் கற்புக் காவல் கூற வேண்டாமையின் சாவுறின் என்றது கணவன் இளம்பருவத்திலேயே இறந்துபடின் என்றவாறே யாம் என்க.

நிறையாலல்லது கற்புப் பிறிதோராற்றானும் காக்கப் படுவதல்லாமையின் நிறையிற் காத்து என்று கருவியையும் விதந்தோதினள். ஈண்டு,

> "சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
> நிறைகாக்குங் காப்பே தலை" (௫௭)

எனவரும் திருக்குறளையும், "கொண்டோ னல்லது தெய்வம் பேணாப் பெண்டிர்" என்புழி,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனம் பெய்யு மழை"

எனவரும் திருக்குறளையும் நினைவு கூர்க. (௯௯)

## இதுவுமது

### ௧௦௩ - ௧௧௧: நாடவர்...............என்றலும்

(இ - ள்.) நாடு அவர் காண நல் அரங்கு ஏறி - நாட்டில் வாழும் காமுகர் எல்லாம் கண்டு களிக்கும்படி இலக்கண முறைப்படி அமைக்கப் பெற்ற அழகிய நாடக அரங்கின் கண் நூல் விதித்த முறையாலே ஏறி; ஆடலும் பாடலும் அழகும் காட்டி - தாம் பயின்றுள்ள கூத்தின் சிறப்பையும் பாடல்களின் இனிமையையும் தமக்கியற்கையாகவும் செயற்கையாகவும் எய்திய அழகின் சிறப்பினையும் நன்கு தெரிவுறக் காட்டு மாற்றாலே; சுரும்பு நாண் கருப்புவில் அருப்புக்கணை தூவ - அக் காமுகர் நெஞ்சத்திலே காமவேள் தன் வண்டுகளாலியன்ற நாணைத் தனது கரும்பாகிய வில்லிலேற்றித் தனக்கியன்ற மலரம்புகளை எய்து நெகிழ்விக்கப் பெற்றனவாகிய; கண்டோர் நெஞ்சம் - தம்மைக் கண்ட அக் காமுகருடைய நெஞ்சமாகிய மீன்களை; செருக்கயல் நெடு கண் சுருக்கு வலைபடுத்துக் கொண்டு - ஒன்றனோடொன்று எதிர்ந்து போர் புரிகின்ற இரண்டு கயற் கொண்டைகளையொத்த நெடிய தம் கண்ணாகிய சுருக்கு வலையை வீசி அகப்படுத்துச் சுருக்கி எடுத்துக்கொண்டு சென்று; அகம் புக்கு - தம்மில்லத்தே புகுந்து; பண் தேர் மொழியில் பல பயன் வாங்கி - தம்முடைய பண்போன்றினிமை செய்யும் மொழிகளாலே அவரை வயப்படுத்து அவரிடத்தே தாம் பெறக்கிடந்த பயன்கள் பலவற்றையும் கைப்பற்றிக் கொண்ட [illegible]னர்; வண்டின் துறக்கும் கொண்டி மகளிரை - வறும் பூத் துறக்கும் வண்டு போல அவரைத் துறந்துவிடுகின்ற கொள்ளைச் செயலையுடைய பரத்தை மகளிரைத் தா[illegible]ம்; பாணன்மையின் பிணித்து - அவர் தம் குடிக்கியன்ற பண்போடு ஒழுகும்படி கட்டுப்பாடு செய்து; படிற்று உரை அடக்குதல் - அவர் கூறுகின்ற மாயப் பொய்ம் மொழிகள் செல்லாதனவாகும்படி அடக்கிவைத்தல்; குமரற்குக் கோல் முறை அன்றோ - அரசிளங்குமரனாகிய நினக்கே யுரிய செங்கோல் முறைமையாகாதோ? என்றான் என்க.

(வி - ம்.) நாட்டவர் என உயிர் முதல்வரு மொழியாயின் நெடிற்றொடர் இரட்டுதலே பெரும்பான்மை. சிறுபான்மை இரட்டாது புணர்தலும் உண்மையின் நாடவர் எனப் புணர்ந்தது; காடக மிறந் தார்க்கே யோடுமென் மனனே என்புழிப் போல.

நாட்டில் வாழும் காமுக ரெல்லாம் காண என்றவாறு. பத்தினி மகளிர் பிறர் பிறர்க் காணாது வாழ்வர் என்று முற்கூறியதும் நினைக. நல்லரங்கு என்றது. நூன் முறைப்படி யமைந்த ஆடலரங்கினை. அஃதாவது:—"ஏழிகோ லகலத்தினையும் எண்கோல் நீளத்தினையும் ஒருகோல் உயரத்தினையும் வாய்தல் இரண்டனையும் உடைய அரங்கென்ப." (சிலப் - ௩ : ௧0௧ - ௫.)

ஓவியச் செந்நூல் உரை நூல் கிடக்கையில் நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த கலைகள் பிறவும் பலவுள வேனும் அவற்றுள்ளும் இவையே தலை சிறந்து திகழ்தல் பற்றி ஆடலும் பாடலும் அழகும் காட்டி என்று இம் மூன்றனையே விதந் தெடுத்தோதினள்; ஆசிரியர் இளங்கோவடிகளார் தாமும் கணிகையரை "எண்ணெண் கலையோர்," எனவும், (௧௪ : ௧௬௬.) எண்ணான் கிரட்டி இருங்கலை பயின்ற......மடந்தையர்" (௨௨ - ௧௩ - அ - ௨௬) எனவும் ஓதுவரேனும் அவற்றுள்ளும் இவை சிறந்தமைபற்றி, 'ஆடலும் பாடலும் அழகு மென்றிக் கூறிய மூன்றின் ஒன்று குறை படாமல்" என விதந்தெடுத் தோதினமையு முணர்க.

சுருப்பு நாண், கருப்புவில், அருப்புக் கணை என்பன மென்றொடர் வன்றொடராயின அல்வழிப் புணர்ச்சியாகலின், தூவ என்னும் வினைக்குத் தகுதியால் காமவேள் என்னும் வினைமுதல் வருவித்தோதுக. சுருக்கு வலை - விரித்து வீசப்பட்டு இழுக்குங்கால் தானே சுருங்கிக் கொள்ளும் ஒருவகை வலை. கண்வலை என்க. வலை என்றமையால் நெஞ்சமாகிய மீனைப் படுத்து என்க. பண்தேர் என்புழி தேர் உவமவுருபின் பொருட்டு. பல பயன் - பலவகைப்பட்ட செல்வங்கள்.

"நறுந்தாதுண்டு நயனில் காலை வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்" என இவள் இக் காதையிலே கூறினள் ஆதலின் அது நம்மனோர் நினைவின்கண் நிற்கும் என்னுங் கருத்தால் ஈண்டு வாளாது வண்டிற் றுறக்கும் கொண்டி மகளிர்-என்றார். கொண்டி மகளிர்-என்றது, பட்டி மகளிர்; வேசையர் பான்மையிற் பிணித்து என்றது அவர் குடியொழுக்கம்பற்றி நடக்கும்படி கட்டுப்படுத்தி வைத்து என்றவாறு. படிற்றுரை-வஞ்சகமொழி; பொய்யுமாம், ஈண்டு மணிமேகலை துறவுக்கோலம் பூண்டு அதற்கேற்பப் பேசும் பேச்செல்லாம் வறும் பொய்ம்[illegible] அங்ஙனம் பொய் பேசி மக்களை வஞ்சியாமற் செய்வது செங்கோன் முறையே என்பாள் கோன் முறையன்றோ குமரற்கு என்றாள். குமரற்கு என்றது முன்னிலைப் புறமொழி. கீழ்மக்கள் மேன்மக்களோடு உரையாடுங்கால் இங்ஙனம் முன்னிலைப்புறமொழியாகக் கூறுதல் ஓர் ஒழுக்கமாம். இதனை இற்றை நாளினும் உலகியலில் காணலாம்.

ஈண்டு, உதயகுமரன் அறவோனாதலின் அவன் மணிமேகலையை அணுகும்பொழுது அவள் பேசும் துறவோர் மொழிகளைக் கேட்டு அஞ்சி வாளாது மீளாமைப் பொருட்டுக் கொண்டி மகளிரைப் பான்மையிற் பிணித்துப் படிற்றுரை அடக்குதல் உனக்குரிய அறமே என்கின்றாள்.

மேலும், நீ பொன்றிகழ் மேனி யொருத்தி தோன்றி நீ அவள் திறம் அயர்ப்பாய் என்று கூறி மறைந்தது என்கின்றாய், அது தெய்வமும் அன்று அம்மொழி திப்பியமும் அன்று, அக் காட்சி வறிய உருவெளித்தோற்றம்

போல்வதொரு மருட்காட்சி என்று இதனால் அவனைத் திறம்படத் தேற்றினளுமாதலறிக.

## உதயகுமரன் உள்ளம் பிறழ்ந்து மணிமேகலையைக் கைப்பற்றி வருதற்கு உலகவறவி நோக்கி விரைதல்

### ௧௧௨ - ௧௧௯ : உதய.........காண்டலும்

(இ - ள்) உதயகுமரன் உள்ளம் பிறழ்ந்து விரைபரி நெடுந்தேர்மேல் சென்று ஏறி - சித்திராபதியின் திறமிக்க தேற்றுரைகளைக் கேட்ட உதயகுமரனுடைய உள்ளம் தன்னிலையினின்று அவள் காட்டிய நெறியின் மேலதாய்த் திரிந்து விட்டமையாலே அவள் கூறியபடியே மணிமேகலையைக் கைப்பற்றி அவள் கூறும் படிற்றுரைகளை அடக்கி அவள் குடிக்கியன்ற வொழுக்கத்தே நிறுத்தத் துணிந்து அப்பொழுதே விரைந்து செல்லும் இயல்புடைய குதிரைகளைப் பூட்டி நிறுத்தப்பட்ட தனது நெடிய தேரின் மேற் சென்று ஏறி; ஆயிழை இருந்த அம்பலம் எய்தி - விரைந்து போய் மணிமேகலை இருந்த உலக அறவி என்னும் ஊரம்பலத்தே சென்று அவ்விடத்தே; காடு அமர் செல்வி கடிப் பசி களைய - காட்டிலே வீற்றிருக்கின்ற கொற்றவையாகிய காளி தன்னருள் நீழலிலே வாழுகின்ற கூளிகளுக்குற்ற பசிப் பிணியை அகற்றுதற் பொருட்டு; ஓடு கைக் கொண்டு நின்று ஊட்டுநள் போல - ஒரு திருவோட்டினைக் கைக்கொண்டு அவற்றினிடையே நின்று தனதருளாலே அவ்வோட்டிலே கொடுக்கக் கொடுக்கக் குறையாமல் சுரக்கின்ற உணவினை அக்கூளிகட்கு வழங்குகின்ற அவ்விறைவியேபோற் றோற்றந்தந்து; தீப்பசி மாக்கட்குச் செழுஞ்சோறு ஈத்துப் பாத்திரம் ஏந்திய பாவையைக் காண்டலும் - தீய பசியாலே வருந்துகின்ற ஆற்றுமாக்கட் கெல்லாம் அமுதசுரபியிலே இடையறாது சுரவாநின்ற வளமான சோற்றுத் திரளையை அள்ளி அள்ளி வழங்குபவளாய் அமுதசுரபியென்னும் அரும் பெரும் பாத்திரத்தை அங்கையில் ஏந்தி நிற்கின்ற கொல்லிப் பாவை போன்ற மணிமேகலையைக் கண்கூடாகக் கண்டவளவிலே என்க.

(வி - ம்.) 'உதயகுமரன் உள்ளம் பிறழ்ந்து' என்றமையால் அவன் மணிமேகலா தெய்வம் கோன்முறை காட்டி, தவத்திறம் பூண்டோள் தன் மேல் வைத்த அவத்திறம் ஒழிக என்றறிவுறுத்தமை கேட்டு அஞ்சி மணிமேகலையைக் கைப்பற்றுங் கொள்கையைக் கைவிட்டு அவள் பால் உண்டான தன் இடங்கழி காமத்தைக் கைவிடமாட்டாமையின் பெரிதும் துன்புழந்தான். அங்ஙன மிருந்தவன் முன்பு கைவிட்டிருந்த செயலைச் செய்வதென உள்ளம் பிறழ்ந்தான் என்பது பெறும்.

ஈண்டுச் சித்திராபதி இவ்வாறு மருட்காட்சி காமங்கதுவப் பெற்றோர்க்குத் தோன்றுதல் இயல்பு காண்! என்று கூறியதனால் அவள் கூற்றை வாய்மை என்றே கொண்டு விட்டான் என்க. அவன் உள்ளத்தின் விதுப்புரவினை விரைபரி நெடுந்தேர் ஏறி அம்பல மெய்தினன் என்பதனால் அறிவுறுத்தார்.

மணிமேகலைக்குக் காடு அமர் செல்வியும், இரவன் மாக்கட்குக் கூளியும் உவமை. காடமர் செல்வி-காளி. கடி-கூளி; பேய். பாவை-கொல்லிப்பாவை போன்ற மணிமேகலை.

## மணிமேகலையைக் கண்ட உதயகுமரன் எண்ணித் துணிதல்

### ௧௧௯ - ௧௨௭ : இடங்கழி.........கேட்ப

(இ - ள்.) இடங்கழி காமமொடு அடங்கான் ஆகி - பண்டு மலர்வனத்திலே மணிமேகலையின் காதற் குறிப்பைக் கண்டு வைத்து அவள்பால் தணியா நோக்கம் தவிர்ந்திலனாகி அறத்தோர் வனம் என்றஞ்சி மீண்டவன் இப்பொழுது ஊரம்பலத்தே கண்டமையாலே தன் கட்டுக் கடங்காது வரம்பு கடந்து அவள்பாற் செல்கின்ற காமமுடையவனாகியும் உயர் குடிப் பிறப்புடையோன் ஆதலின் தன்னுள்ளே எண்ணித் துணிபவன்; தானே - வாயிலாவாரையின்றி யானே; தமியள் நின்றோள் முன்னர் சென்று - அவள் தனித்து நிற்கின்ற செவ்வி நோக்கி அவள் முன்னிலையிலே சென்று; உடம்போடு என் தன் உள்ளகம் புக்கு என் நெஞ்சம் கவர்ந்த வஞ்சகக் கள்வி - உன் உடம்போடு என் கண் வழியாக என் உள்ளத்தினூடு புகுந்து என் நெஞ்சம் முழுவதையும் கவர்ந்து கொண்ட கள்வியாகிய நீ; நோற்று ஊண் வாழ்க்கையின் நொசி தவம் தாங்கி ஏற்றூண் விரும்பிய காரணம் என் என கேட்டல் இயல்பு என துணிந்து - நோன்பு மேற் கொண்டு பட்டினி விட்டுண்ணும் வாழ்க்கையினாலே உடம்பும் உள்ளமும் சுருங்குவதற்குக் காரணமான தவவொழுக்கத்தைத் தாங்கிப் பிச்சை ஏற்றுண்ணும் உணவினை விரும்பி தற்குக் காரணந்தான் என்னையோ? என்று வினவித் தெரிந்து கொள்ளுதலே முறையாகும் என்று தன்னுள் ஆராய்ந்து துணிந்து அங்ஙனமே அவள் தமியளாய் நின்ற செவ்வியின் அவள் முற்சென்று; நல்லாய் என்கொல் நல் தவம் புரிந்தது - நங்கையே இத்தகைய கள்வியாகிய நீ எற்றிற்குத் தவம்புரியத் தொடங்கியது; சொல்லாய் - அதற்குரிய காரணத்தை எனக்குக் கூறுவாயாக; என்று உடன் கேட்ப - என்று அப்பொழுதே மணிமேகலையை வினவா நிற்ப என்க.

(வி - ம்.) இடங்கழி காமமொடு அடங்கானாகியும் எனல் வேண்டிய சிறப்பும்மை தொக்கது. என்னை? அடங்கானாகியும் எண்ணித் தன்னியல்பிற் கேற்ற செயலே செய்தலன்றி அவளைக் கைப்பற்றுதல்

முதலிய மிகை ஏதுஞ் செய்திலாமை அவன துயர்குடிச் சிறப்பிற்குச் சான்றாய் நிற்றலின் என்க. பிறர் பொருளைக் களவாடியவரை அரசன் வினவுதல் கோன் முறைமையே யாகலின் கள்வி அதற்கு மாறாகித் தவம் புரிந்தது என் என்று வினவுதல் தனக்கு இயல்பு என்று துணிந்த படியாம்.

உதயகுமரன் தன்னுள்ளத்தை அவள் கவர்ந்தமை முன்பு சித்திராபதிக்குக் கூறுமாற்றாலே பெற்றாம். அருந்தே மாந்த ஆருயிர் தளிர்ப்பத் தன்னைக் கண்டுழி அவள் விருந்தின் மூரலரும்பி வைத்தும் அதற்கியைய ஒழுகாமல் அவள் தவம் புரிந்தது அடாது என்பதே அவன் ஈண்டு எடுத்துக் காட்டுகின்ற குற்றம். மற்று அவள் தவம் புரிவதே குற்றம் என்பது அவன் கருத்தல்லாமை யுணர்க. ''உடம்போடு.........யானே கேட்ட லியல்பெனத் துணிந்தானாகலின் அதனை வழிமொழிந்து அவ்வாறே கேட்டனன்'' என்று கூறிக்கொள்க. அல்லது - அவ்வாறு தன்னுட்டுணிந்து சென்று அவை யெல்லாம் அவள் நெஞ்சறியுமாதலின் 'நல்லாய் என்கொல் தவம் புரிந்தது சொல்லாய்' என்னுமளவே வினவினன் எனக் கோடலுமாம். என்னை? அவள் முன்னிலையினின்று அது கூற அவன் நாத்துணிதலரிதாகலின் இங்ஙனம் வினவவும் அவன் துணிந்தமையின் அருமை தோன்ற அத்துணிவை விதந்து 'துணிந்து கேட்ப' என்றார். நல்லாய் என்று விளித்தான் அதனினும் சிறந்த விளிச்சொல் பிறிதொன்று காணமாட்டாமையின்.

## மணிமேகலையின் உள்ளத்தினியல்பும் செயலும்

### ௧௨௯ - ௧௩௩ : என்னமர்.........மயங்கி

(இ - ள்.) ஈங்கு இவன் என் அமர் காதலன் இராகுலன் - அவ்வேந்தன் மகன் வினவிய சொற்களைக் கேட்ட மணிமேகலை இங்கு வந்து இவ்வாறு என்னை வினவுவான் முற்பிறப்பிலேயும் என்னைப் பெரிதும் காதலித்து என் கணவனாயிருந்த இராகுலனே ஆதலின்; இவன்றன் அடிதொழுதலும் தகவு என வணங்கி - இவனுடைய திருவடிகளிலே வீழ்ந்து வணங்கித் தொழுவதும் [illegible]த்தத் தகுதியே யாம் என்று தன்னுட் கருதியவளாய் அவன் அடிகளில் வீழ்ந்து வணங்கி; நெஞ்சம் அறைபோய் அவன் பால் அணுகினும் ஈங்கு இவன் இறைவளை முன் கை பற்றினும் - என் பேதை நெஞ்சம் என்னைக் கீழறுத்துப் போய் அவனிடத்தே அணுகினும் அணுகுக! அல்லது இவன்றானும் அடிப்பட்டு வந்த அன்புடைமை காரணமாக ஆற்றானாய் முட்டுவாயையுடைய வளையலணியத் தகுந்த என் முன்னங்கையைப் பற்றிக் கொள்ளினும் கொள்ளுக!; தொன்று காதலன் சொல் எதிர் மறுத்தல் நன்றியன்று என்று நடுங்கினள் மயங்கி - முற்பிறவி தொட்டு அடிப்பட்டு வருகின்ற என் காதலனாகிய இவனுடைய மொழிக்கு மாறு கூறல் நல்லறமன்று என்று நினைந்து தானும் அக்காமத்தாலேயே மயக்க மெய்தி என்க.

(வி-ம்.) மணிமேகலைக்கு மணிமேகலா தெய்வம் "உவவன மருங்கில் உன்பால் தோன்றிய உதயகுமரனவன் உன் இராகுலன், ஆங்கு அவனன்றியும் அவன் பாலுள்ளம் நீங்காத் தன்மை நினக்கும் உண்டு" என்றறிவித்தமையால் தன் முற்பிறப்பிற் கணவனாக இருந்த இராகுலனே இவன் என்றும் அவ்வன்புத் தொடர்ச்சியாகிய ஏது நிகழ்ச்சியே இப்பிறப்பினும் இவனுக்கு, என்னைக் காட்டுவித்தது என்றும் அவ்வாறே அவன்பால் என்னெஞ்சமும் நீங்காத் தன்மைத்தாகின்றது, என்று கருதி அவன்பாற் பரிவுள்ளங் கொண்டவளாய்க் கணவனைக் கற்புடை மகளிர் தொழுமாறே தொழுதவள், இவ்வுண்மை இவனறியானாயினும் அப் பழவினை வலியால் இவன்பால் என்னெஞ்சம் அறைபோகின்றது; போயிற் போதுக! அங்ஙனமே அப் பழவினையா லுந்தப்பட்டு வந்த இவன் என் கையைப் பற்றுதலும் கூடும், பற்றினும் பற்றுக. "தன்னெஞ்சறிவது பொய்யற்க" என்னும் அறம்பற்றிக் கணவனாகிய இவனை வணங்குவல் அப்பாலும் அவன் வினாவிற்கும் விடை கூறுவல் என்று மணிமேகலை ஈண்டு மயங்குகின்றனள் என்றுணர்க.

இனி, தொன்று காதலன் ஆயினும் இவன் பிறப்பறுத்தற்கியன்ற நல்வினை செய்திலன், தான் செய்த நல்வினையே பிறப்பறுத்தற்கியன்றதொரு நன்னெறியில் தன்னைச் சேர்ப்பித்துளது என்றறிந்துளளாகலின் ஈண்டு இரண்டு பேரறங்கள் தம்முள் எதிர்ந்து போரிடுதலானே அவள் உள்ளம் மயங்கி இவற்றுள் பழைய அன்பு நெறியே வென்று மீண்டும் தன்னை அவன்பாற் படுத்துப் பிறவிப் பெருங்கடலுள் வீழ்த்து விடுமோ என்றையுற்று அச்சமெய்தி நடுங்கினள் என்பது கருத்தாகக் கொள்க.

என் அமர்காதலன் - என்னை விரும்பிய கணவன். தொன்று - பழைமையான. நன்றி - நல்லறம். நடுங்கினள் : முற்றெச்சம்.

## மணிமேகலை உதயகுமரன் வினாவிற்கு விடை இறுத்தல்

### கநூச - கசஉ : கேட்டது..........செய்கென

(இ - ள்.) கேட்டது மொழிவேன் நீ கேள்வியாளரின் தோட்ட செவியை ஆகுவை ஆம் எனின் - வேந்தன் மகனே! நீ என்னை வினவிய காரணத்தை யான் இப்பொழுது கூறுவல் நீதானும் கேள்வியை விரும்பிக் கேட்டுப் பயின்று பயன்பெற்ற சிறந்த கேள்வியாளர் போன்று அறக் கேள்விகளாலே நன்கு துளைக்கப்பட்ட செவிகளை உடையையாயிருப்பாய் ஆயின் (யான் கூறும் காரணம் நினக்கும் பயன் தருவதாகுமாதலால்) மக்கள் யாக்கை இது பிறத்தலும் மூத்தலும் பிணிப்பட்டு இரங்கலும் இறத்தலும் உடையது - பெருமானே! யான் எடுத்துக் கொண்டிருக்கின்ற மக்களுடைய உடம்பாகிய இவ்வுடம்பு தாயின் வயிற்றிலிருந்து பிறத்தலையும் பிறந்த பின்னர்க் கணந்தோறும் மூத்தலையும் பல்வேறு பிணிகளின்பாற் பட்டுத் துன்புறுதலையும் என்றேனுமொரு நாள் இறத்தலையும் உடையதாகும்; இடும்பைக் கொள்கலம் — துன்பத்தை நிரப்பி வைத்துள்ளதொரு மட்பாண்டம் போன்றது; என உணர்ந்து - என்று

நன்குணர்ந்து கொண்டமையாலே ; மிக்க நல் அறம் விரும்புதல் புரிந்தேன் - அப் பிறவிப் பெருங்கடலினின்று உய்ந்து கரையேறுதற்குரிய அறங்களுள் வைத்துத் தலைசிறந்த நன்மையுடைமைத்தாகிய அருளறத்தை மேற்கொள்ளுதலைப் பெரிதும் விரும்பினேன், இதுவே இந் நற்றவத்தை யான் செய்தற்குரிய காரணமாகும் ; மண்டு அமர் முருக்கும் களிறு அனையார்க்குப் பெண்டிர் கூறும் பேரறிவு உண்டோ - நாற்பெரும் படையும் மண்டி வருதற்கிடமான போரின்கண் பகைவரைக் கொன்றழிக்கும் போராற்றலுடைய பெருமானை ஒத்த களிற்றியானை போன்ற தறுகண்மையுடைய வீரர்களுக்கு என் போன்ற மெல்லியன் மகளிர் கூறுதற்குரிய பேரறிவும் உளதாகுமோ ! இல்லையாகலின் பெருமான் வினவிற்கு மட்டுமே விடை இறுத்துள்ளேன் ; கேட்டனையாயின் - யான் கூறிய விடையைச் செவியேற்றருளினையாயின் ; வேட்டது செய்க என - இனிப் பெருமான் விரும்பியதனைச் செய்தருள்வாயாக ! என்று விடை கூறிய பின்னர் என்க.

(வி - ம்.) என் கொல் நற்றவம் புரிந்தது ? என்பதே உதயகுமரன் வினவாதலின் அதற்கு விடை கொடாது மறுத்தல் நன்றியன்று என்றுட்கொண்டு விடை கூறத் தொடங்கும் மணிமேகலை கேட்டதற்கு விடை தருதல் என கடமையாகலின் அதற்கு விடை தருவேன் என்பாள் கேட்டது மொழிவேன் என்று தொடங்கி ; என் விடைக்குப் பொருளுணர்வாய் எனின் நீ நன்கு அறவுரைகளைப் பலகாலும் கேட்டுப் பயின்றடிப்பட்ட செவிகளை உடையை ஆதல் தேற்றம் என்பாள், நீ கேள்வியாளரின் தோட்ட செவியை ஆகுவை என்றாள். உணர்ச்சி உணர்வோர் வலித்தேயாகலின் அத்தகைய வலி நினக்குளதாகும் எனின் நன்று இன்றெனினும் கேட்டதற்கு விடை கூறுதல் என் கடமையாதலின் மொழிவேன் என்றாள்.

பிறத்தல் முதலியவாக எண்ணிறந்த துயரங்களுக்குக் கொள்கல[illegible] மக்கள் யாக்கையாகிய இஃதென்று யான் நன்கனம் உணர்ந்து கொண்டமையே நற்றவம் புரிதற்குக் காரணமாம், என்பதே மணிமேகலை இறுத்த விடையாகும்.

யான் மெல்லியல்புடைய எளிய பெண் மகள். நீயோ மண்டமர் முருக்கும் களிறனையை ஆதலின் நீ இப்பொழுது என் திறத்திலே ஏது வேண்டுமாயினும் செய்யக் கூடும். நீ இனி வேட்டது செய்க, நின்னைத் தடுப்பார் யாருமிலர் என்பதுபட உலகின் மேல் வைத்துக் களிறனையார்க்குப் பெண்டிர் கூறும் பேரறிவுண்டோ வேட்டது செய்க என்றாள்.

மிக்க நல்லறம் என்றது அருளுடைமையை, அதனையன்றிப் பிறவிப் பெருங் கடலைக் கடத்தற்குப் பிறிதொரு வழியில்லையாகலின் அதனை அங்ஙனம் விதந்துரைத்தாள். என்னை ?

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு" (உ௪௭)

எனவும்,

"நல்லாற்ற னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினும் அஃதே துணை" (உ௪௨)

எனவும் வரும் அருமைத் திருக்குறள்களையும் நோக்குக.

இதுவே பௌத்த சமயக் கோட்பாடாகும். பண்டைக் காலத் தமிழ்த் திறவோர் மெய்க் காட்சியும் இதுவே யாகும் என்றுணர்க. இவ்வறத்தினை ஆசிரியர் தொல்காப்பியனார் மக்கள் வாழ்க்கையின் வெற்றியாகக் கருதி வாகைத் திணையின் பாற்படுத்தி "அருளொடு புணர்ந்த அகற்சி" என்றொரு துறையாக அமைத்து வைத்தனர். (வாகை - ரு - உக)

கேட்டனையாயின் வேட்டது செய்க, என்றது நீ யாது செய்யினும் யான் மேற்கொண்ட அறத்தினின்றும் பிறழேன் காண்! என்னுங் குறிப்பெச்சப் பொருள் பயந்து நின்றது.

உதயகுமரன் முன்னிலையினின்றும் மணிமேகலை தற்காத்தற் பொருட்டு விரைந்து கொற்றவை கோயிலுட் புகுந்து வேற்றுருக் கொண்டு வெளிப்படுதல்

க௪உ - க௫௦: வாட்டிறல்.........தோன்ற

(இ - ள்.) மடக்கொடி வாள் திறல் குரிசிலை நீங்கி - இவ்வாறு விடையிறுத்த இளம்பூங்கொடி போல்வாளாகிய மணிமேகலை வாள் போராற்றல் மிக்க இடங்கழி காமத்தானாகிய இவன் முன் யான் இனி நிற்றலும் தகாதெனவுட்கொண்டு பொள்ளென அவ்விடத்தினின்றும் நீங்கி; முத்தை முதல்வி முதியாள் இருந்த குச்சரக் குடிகை தன அகம் புக்கு அம் முன்னைப் பழைமைக்கும் முன்னைப் பழைமையுடைய மூழுமுதலாகிய இறைவி எழுந்தருளியிருக்கின்ற குச்சரக்குடிகையினுட் புகுந்து ஆங்குச் சிறிது பொழுது நின்று ஆராய்பவள்; ஆடவர் செய்தி அறிகுநர் யார் என - காமங் கைமிகின் மடலேறுதலும் பிறிதும் ஆகும் இயல்புடைய இத்தகைய ஆடவர் தக்கது இனைதி தகாததின்னது என்று ஆராய்ந்து துணிந்து ஒன்றனைச் செய்யும் இயல்புடையாராகார் ஆதலின் அரசனமகன் விழுக்குடிப் பிறப்பினன் ஆயினும் இக் காமச்சூழ்நிலையில் அவன் இது செய்வான் இது செய்யான் என்று யாரே துணிந்து கூறவல்லுநர், இங்ஙன மாகலின் யாம் ஈமதறிவுடைமையால் இவனிடமிருந்து தப்புதலே நன்றென்று தன்னுட்கொண்டு; தோடு அலர் கோதையைத்

தொழுதனள் ஏத்தி - அக் குச்சரக் குடிகையில் எழுந்தருளிய இதழ் விரிந்து நறுமணங்கமழும் மலர்மாலை சூட்டப்பெற்றுள்ள காவற் றெய்வமாகிய சம்பாபதியைக் கைகூப்பித் தொழுது வாழ்த்தி; மாயவிஞ்சை மந்திரம் ஓதி - மாய வித்தையின் பாற்பட்ட வேற்றுருக் கொள்ளுதற்கியன்ற மந்திரத்தை மனத்தினுள் உருவேற்றி; காயசண்டிகையெனும் காரிகை வடிவாய் மணிமேகலை வந்து தோன்ற - ஆண்டுப் பலரானும் அறியப்பட்டிருந்த விச்சாதரியாகிய காயசண்டிகையின் உருவத்தை எடுத்துக் கொண்டு முன்பு தன் முன்னிலையிலே நின்று நீங்கிக் குடிகையுட் புக்க அம் மணிமேகலையே மீண்டும் அக் குடிகையுணின்றும் வெளிப்பட்டுத் தோன்றாநிற்ப என்க.

(வி - ம்.) முந்தை, முத்தை என வலித்தல் விகாரம் எய்தியது. முந்தை முதல்வியாகிய முதியோள் என்க. அவளாவாள் சம்பாபதி என்னும் காவற்றெய்வம். குச்சரக் குடிகை - கூர்ச்சர நாட்டினர் கட்டுகின்ற கலைத்தொழின் முறையாலே கட்டப்பெற்ற சிறிய கோயில்; மண்டபமுமாம். மணிமேகலை தற்காத்துக் கொள்ள முயலுதலின் காவற்றெய்வத்தைத் தன்னைக் காத்தருள வேண்டிக் கைதொழுத வாறும். காமம் காழ்கொளின் ஆடவர் மடலேறுதல் முதலிய வன் செயலும் செய்வர், இறந்துபடுதலும் செய்வர், அத்தகையோர் யாது செய்யார்? மனம் போனவாறே ஏதும் செய்வர். மடலேறுப் பீடு மகளிர்க்கே உரித்து. ஆகவே யானும் ஒல்லும் வகையால் அவன் வன் செயலுக்கு ஆளாகாது தப்புவதே அறிவுடைமை என்னும் இத்துணைக் கருத்துந் தோன்ற ஆடவர் செய்தி அறிகுநர் யார்? என ஆடவரை மட்டும் தனித்தெடுத்தோதினள்.

இனி ஆடவர் காமங் காழ்கொளின் அத்தகையராதலை,

"நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்
காமுற்றார் ஏறு மடல்" (குறள் - ககங்க)

எனவருந் திருக்குறளானும்,

"கடலே றியகழி காமம் பெருகின் கரும்பனையின்
மடலே றுவர் மற்றும் செய்யா தனசெய்வர் மாநிலத்தே"
(களவி - உரைமேற் - எக)

எனவரும் பாண்டிக் கோவையானும்,

"மாவென மடலும் ஊர்ப பூவெனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப
பிறிதும் ஆகுப காமங்காழ் கொளினே" (கஎ)

என்வரும் குறுந்தொகையானும் உணர்க.

இனி மகளிர் காமங்காழ் கொளின் இவ்வாறு மிகை செய்யாப் பீடுடையர் என்பது பற்றி ஆடவர் செய்தி என்று ஆடவரை மட்டும் பிரித்தோதினள். மகளிர் அங்ஙனம் மிகை செய்யார் என்பதனை—

"கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்"

எனவரும் அருமைத் திருக்குறளானு முணர்க.

தோடலர்கோதை : அன்மொழித் தொகை ; சம்பாபதி.

உண்மை வடிவத்தை மறைத்து வேறுருவந் தருதலால் வேற்றுருக் கொள்ளும் மந்திரத்தை மாயவிஞ்சை மந்திரம் என்றார்.

## மணிமேகலையைக் காணாமல் மன்னன் மகன் அலமருதல்

௧௫௩ - ௧௫௮ : அணிமலர்..........கிடப்பேன்

**(இ - ள்.)** அணிமலர்த் தாரோன் அவள்பால் புக்கு - விரைந்து தன் முன்னிலையினின்றும் கோயிலினுட் புகுந்த மணிமேகலை வரவினை எதிர்பார்த்து நின்ற அழகிய மலர்மாலை யணிந்த அவ்வரசிளங்குமரன் பாத்திரமேந்தி வெளிவருகின்றவள் பாற் சென்று அவள் மற்றொருத்தியாதல் கண்டு, பிச்சைப் பாத்திரத்தை இவள் கையிற் கொடுத்துவிட்டு மணிமேகலை கோயிலினுள் கரந்திருக்கின்றாள் என்று கருதியவனாய்; குச்சரக் குடிகைக் குமரியை மரீஇ - தானும் அக் குச்சரக் குடிகையாகிய கோயிலுட் புகுந்து மணிமேகலையைத் தேடி அவளை யாண்டும் காணானாகி ஆங்கெழுந்தருளிய சம்பாபதியைத் தொழுது கூறுபவன் ; இமையோர் பாவாய் பிச்சைப் பாத்திரம் பெருக்பசியுழந்த காயசண்டிகை தன் கையின் காட்டி - தேவர் கட்குந் தெய்வமாகிய சம்பாபதியே கேள் ! தன் கையிலிருந்த பிச்சைக் கலத்தை நாளும் ஆனைத் தீ நோயாலே ஆற்றொணாத பெரிய பசித்துன்பத்தே கிடந்துழன்ற காயசண்டிகை எனபவள் கையிலே கொடுத்துவிட்டு; மாயையின் ஒளித்த மணிமேகலைதனை - தான் கற்ற மாயவித்தையாலே ஈண்டுக் கரந்துறைகின்ற மணிமேகலையை ; ஈங்கு இம்மண்ணீட்டு யார் என உணர்கேன் - இங்கே நிறைந்துள்ள சுதையாலியன்ற மகளிர் உருவங்களுள் வைத்து மணிமேகலையின் உருவம் யாது என்று யான் எவ்வண்ணம் அறிந்து கொள்ளமாட்டுவேன்! அறிகின்றிலேன் ஆதலாலே; ஆங்கு அவள் இவள் என்று அருளாய் ஆயிடின் - அவ்விடத்திலே நிற்கின்ற உருவமே உன்னால் தேடப்படுகின்ற மணிமேகலையின் உருவமாகும் என்று நீயே எனக்குக்

காட்டியருளாயாயின்; பல் நாள் ஆயினும் பாடுகிடப்பேன் - நீ உளம் இரங்கி அங்ஙனம் காட்டுதற்குப் பல நாள் கழியினும் நான் நின் திருமுன்பே வரங்கிடப்பேன் காண்! என்றான் என்க.

(வி - ம்.) அணிமலர்த்தாரோன்: உதயகுமரன். அவள் என்றது காயசண்டிகை வடிவத்தில் வந்த மணிமேகலையை. கையிற் பாத்திரம் ஏந்தி வருதல் கண்டு மணிமேகலையே வருகின்றாள் என்று கருதி அணுகியவன் அவள் காயசண்டிகையாதல் கண்டு மணிமேகலை தன் கைப் பாத்திரத்தை இவள்பாற் கொடுத்துத் தான் கோயிலினுள்ளே மறைந்துறைகின்றனள் என்று கருதித் தானும் அவளைத் தேடிக் கோயிலினுள் புகுந்தான் என்பதே கருத்தாகலின் அதற்கியன்ற சொற்கள் இசையெச்சத்தால் வருவித்தோதப்பட்டன.

குமரி: சம்பாபதி. மரீஇ - மருவி; அணுகி என்றவாறு. மண்ணீடு - சுண்ணச்சாந்தா லியற்றிய சிற்ப உருவம். மணிமேகலையை இச் சிற்ப உருவங்களினூடே யார்? என அறிகின்றிலேன் என்றமையால் மணிமேகலையின் எழிலும் அங்குள்ள சிற்பங்களின் அழகும் ஒன்றற்கொன்றுவமையாகி இருவழியும் சிறப்பெய்துதல் உணர்க. இறைவி கோயிலாகலின் அம் மண்ணீடுகள் மகளிர் உருவங்களாதலும் இயல்பாதல் உணர்க.

இனி, யார் என்னும் வினைக்குறிப்பு மணிமேகலைதனை யார் என உணர்கேன் என உயர்திணைக்கண் வந்ததாயினும் ஐயப்புலப் பொதுச் சொல் மண்ணீடு என்பதாம். ஆகவே அஃறிணைப் பொதுச் சொல்லாகிய யார் என உணர்கேன் என்பது திணைவழுவாம் ஆதலின், இம் மண்ணீடுகளின் உருவங்களுள் வைத்து மணிமேகலை யுருவம் யாது என்றறிகேன் என்பதே கருத்தாகலின் திணை வழுவமைதியாகக் கொள்க. ஆங்கவள் இவள் என்றதும் நின்னால் தேடப்படும் மணிமேகலை யுருவம் இஃதாம் என்று காட்டியருளாயாயின் என ஐயப்புலப் பொதுச்சொல்லாகாமல் உயர்திணைச் சொல்லாற் கூறியதனையும் திணைவழுவமைதியாகவே கொள்க.

நான் யார் என் ஞானங்கள் யார் என்புழியும் இவ்வழுவுண்மையும் அதனை அமைத்துக் கொண்டமையும் உணர்க. பாடு கிடப்பேன் - வரங்கிடப்பேன். "பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்கு" என்புழியும் (சிலப் - ௯ - ௧௫) அஃதப் பொருட்டாதல் அடியார்க்கு நல்லார் உரையானும் அறிக.

## உதயகுமரன் சம்பாபதி திருமுன் தன்னிலை கூறிக் குறையிரந்தல்

### ௩௬௯ - ௩௭௨ : இன்னும்.........தானேன்

(இ - ள்.) இமையோர் பாவாய் - தேவர்கட்கும் தெய்வமாகிய சம்பாபதியே; இன்னும் கேளாய்! - அடியேன் உற்ற குறையோ பெரிது அதனைக் கூறுவல் வெறாமல் திருச்செவியேற்றருள்வாயாக!; பவளச் செவ்வாய் தவள வாள நகையும் அஞ்சனஞ் சேராச் செங்கயல் நெடுங்கணும் - அம் மணிமேகலை தானும் தன்னுடைய பவளம் போன்று சிவந்த வாயின்கண் நிரல்

வெள்ளிய ஒளி தவழும் எயிறுகளும் மை தீட்டப் பட்டிருக்கின்ற பெருத்த சிவந்த கயல்மீன் போன்ற நெடிய கண்ணும்; முரிந்து கடை நெரிய வரிந்த சிலைப் புருவமும் - வளைந்து கடைப்பகுதி நெரியும்படி வரிந்து கட்டப்பட்ட வில்லினை ஒத்த புருவமும் ஆகிய தனது இம் மூன்றுறுப்புகளே நிரலே; குவி முள் கருவியும் கோணமும் கூர்நுனைக் கவை முள் கருவியும் ஆகக் கடிகொள - இரும்பாலியன்ற நுனி குவிந்துள்ள முள்ளாகிய கருவியும் தோட்டி என்னும் கருவியும் கூர்த்த நுனியையுடைய கவர்த்துள்ள முள்ளையுடைய பரிக்கோல் என்னும் கருவியும் ஆகிய களிறடக்குங் கருவிகளாகக் கொண்டு அவை காவலைச் செய்ய; கல்விப்பாகரின் காப்புவலை ஓட்டி - தான் கற்ற கலைகளாகிய பாகராலே காத்தலையுடைய அரணத்தே என்னைப் புகுவித்து; வல்வாய் யாழின் மெல்லிதின் விளங்க - காவன்மையுடைய தனது வாயாகிய யாழினாலே என் நெஞ்சமாகிய யானையின் சினந் தவிர்ந்து நெகிழ்ச்சியுடையதாய்த் திகழும்படி; முதுக்குறை முதுமொழி எடுத்துக் காட்டி - மெய்யறிவு கெழுமிய பழைய மொழிகளை எடுத்துக் கூறிக் காட்டி; புதுக்கோள் யானை வேட்டம் வாய்த்தென - புதுவதாகப் பற்றப்பட வேண்டிய களிற்றியானை யொன்றனைத் தான் கைப்பற்றிக் கோடற்குத் தான் மேற்கொண்ட வேட்டைத் தொழில் தனக்கு வாய்ப்புடைத்தாயிற் றென்னுஞ் செருக்கினோடு; முதியாள் உன்றன் கோட்டம் புகுந்த மதிவாள் முகத்து மணிமேகலைதனை - எல்லாக் கடவுளர்க்கும் மூத்த முதல்வியாகிய உன்னுடைய திருக்கோயிலுட் புகுந்து கரந்திருக்கின்ற திங்கள் போன்ற திருமுகத்தையுடைய அம் மணிமேகலையைக் கைப்பற்றிக் கொண்டு அவளுடன் போவதல்லது: ஒழியப் போகேன் - அவளையன்றி யான் தமியேனும் மீண்டுப் போவேனல்லேன் காண்!; உன் அடி தொட்டேன் - யான் உன் திருவடிகளைத் தொட்டு உறுதி கூறுகின்றேன்; இது குறை என்ற[ன்] - இதுவே நீ நிறைவேற்றித் தருதற்குரிய என்னுடைய குறை காண் என்று கூறினன் அவன் யார் எனின்?; இறைமகன் - சோழ மன்னன் மகனாகிய உதயகுமரன்; என்பதாம்.

(வி - ம்.) பாடு கிடப்பேன் என்றவன் அங்ஙனம் பாடு கிடத்தற்குக் காரணம் கூறுவேன் கேள் என்பான், இன்னுங் கேள் என்றான்; புதுக்கோள் யானை என்று உதயகுமரன் தன் நெஞ்சத்தையே கூறிக்கொள்கின்றான். பழக்கப்படாத யானையைக் குவிமுட் கருவியும் தோட்டியும் பரிக்கோலுமாகிய கருவிகளைப் பயன்படுத்தி அடக்கிப் பின்னரும் அப் புதிய யானையின் நெஞ்சத்தை நெகிழ்த்துத் தம் வயப்படுத்துதற்கு யாழிசையை எழுவி வயப்படுத்துக் கொள்வார். அங்ஙனமே அவள் தனது வாணகையாகிய குவிமுட் கருவியாலும் கண்ணாகிய தோட்டியாலும் புருவமாகிய பரிக்கோலாலும் என்னெஞ்சத்தை அடக்கிப் பின்னும்

பாகர் அப்புது யானை தப்பி யோடிப் போகா வண்ணம் அதனைத் தம் குறிப்பின் வழி இயங்குதற்கு அதற்கு அரண் செய்யுமாறு போலே இவள் தனது கலையாகிய அரணிட்டு அவ்வரணகத்தே என்னெஞ்சத்தை இயக்கு கின்றாள் என்பான் கல்விப்பாகரில் காப்புவலை ஓட்டி என்றான்; காப்பாகிய வலையகத்தே புகுவித்து என்றவாறு. ஈண்டு வலை என்றது அரண் என்னும் பொருளதாய் நின்றது.

நகை - எயிறு. நகை கண் புருவம் என்னும் மூன்றற்கும் நிரலே குவிமுட் கருவியும் கோணமும் கவைமுட் கருவியும் உவமைகள்.

கோணம் - தோட்டி (அங்குசம்). கோணந்தின்ற வடுவாழ் முகத்த என்பழியும் (மதுரைக் - ௫௯௨) அஃதப் பொருட்டாதலறிக. கவை முட் கருவி - பரிக்கோல். "கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றி" என் புழியும் (முல்லைப் - ௩௫) அஃதப் பொருட்டாதலறிக.

கல்வி - ஈண்டுக் கலை. அவளது கலையழகு தன்னை அவள் வழிப் படுத்தலின் அந்நினை யானையைப் பழக்கி அரணுள்ளே புகுவிக்கும் பாக ராக உவமஞ் செய்தான். காப்புவலை: இருபெய ரொட்டு. வல்வாய் - தன் சொற் கேட்பாரைத் தன்வழிப் படுத்தல்வல்ல நாநலம்.

முதுக்குறை முதுமொழி என்றது மெய்யறிவு கொளுத்தும் அற வுரையை. அஃதாவது, "பிறத்தலும்.........புரிந்தேன்" என மணி மேகலை எடுத்தியம்பிய காரணக் கிளவியாகிய அறவுரை. அவ்வுரை பிடகநூலிற் புத்தபெருமானுற் கூறப்பட்ட மொழியே ஆதலின் முதுக் குறை முதுமொழி என்றான். யாழிசைக்கு யானை வசப்படும் இயல் புடைத்து என்பதனை, "யாழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல் யாழ்வரைத் தங்கி யாங்கு" எனவரும் கலியானும் (செய் - ௨) உணர்க. காமத்தையே மிகுவித்தலின் அவற்றை யாழிசையாக உவமித்தான் என்னெஞ்சத்தை அவள் முழுதும் தன்வயப்படுத்திக் கொண்டாள் என்பதுபட அவட்குப் புதுக்கோள் யானை வேட்டை பலித்தது என் கின்றான். உன்னடி தொட்டேன் என்பது ஒரு சூளுரை. அடி தொடு கடன் இவை எனவரும் (சிலப் - வேட்டுவவரி) இளங்கோ பொன் மொழியும் காண்க.

அருளாயாயிடின் பாடு கிடப்பேன் என்பது சூள்மொழி. வேட்டம் வாய்த்தென உன்றன் கோட்டம் புகுந்தாள் என்றது இனி இப் புத்தி யானை நம்மையகன்று போகாது என்னும் நம்பிக்கையால் இப்பொழுது குறும்பு செய்யத் தொடங்கி விட்டாள் என்றவாறு. அதற்கேற்பவே யானும் அவளையன்றித் தனியேனுய்ப் போகவல்லேன் ஆயினேன். ஆகவே அவளைக் காட்டித் தருதி; தாராயாயிடின் பன்னளாயினும் பாடு கிடப்பேன் என்கின்றான்.

இது குறை என்றான் - இக்குறை தீர்த்தருள யான் நின்னை வணங்கி வரங்கேட்கின்றேன் என்றற்கு.

இறை மகன் என்று விதந்தார் இறைமகன் தன்னை விரும்பி இத் தன்மை அலமரலுறவும் மணிமேகலை தான் மேற் கொண்ட தவநெறியிற் பிறழாத அவளுடைய திட்பம் விளங்கி நம்மனோர்க்குப் புலப்படுதற் கென்க.

இனி இக் காதையை, சித்திராபதி உயிர்த்துக் கலங்கித் தீர்ப்பல் என்று மடந்தையர்க் கெல்லாங் கூறும்; கூறுபவள் சாற்றித் தேர்ந்து போகிக் குறுகி ஏத்த, நக்கவன் தவறின்றோ என, அவள் குருகு உயிர்ப்ப ஓங்கிய காஞ்சி மலர் அவிழ்ந்தது வண்டு உணீஇய வந்தேன் அம்பலத் தாயது வாழ்க என, உரைப்போன் நெரித்த தூஉம் அரும்பிய தூஉம் கண் சென்ற செவ்வியும் எறிந்த பாவை காப்பிட்டு ஒளித்தாள் என்று இருந்தேன் முன்னர் ஒருத்தி தோன்றி, காட்டி அயர்ப்பாய் என்றனள் எய்யா மையலேன் என்று சொல, சித்திராபதி நகை எய்தி அடக்குதல் கோன்முறை அன்றோ குமரற்கென, உதயகுமரன் பிறழ்ந்து எறி எய்திப் பாவையைக் காண்டலும் அடங்கானாகி, கல்வி ஏற்றான் விரும்பிய காரணம் என்? எனக் கேட்டல் இயல்பெனச் சென்று கேட்ப, இவன் காதலன், அடி தொழுதலும் தகவு என வணங்கி மயங்கிக் கேட்டது மொழிவேன் உணர்ந்து புரிந்தேன் பெண்டிர் கூறும் அறிவுண்டோ என நீங்கிப் புக்குச் செய்தி அறிகுநர் யார் எனத் தொழுது ஏத்தி வந்து தோன்ற, தாரோன் அவள்பால் புக்குப் (பின்) குமரியை மரீஇ அருளாயாயிடின் இடப்பேன், பாவாய் கேளாய் மணிமேகலைதனை ஒழியப் போகேன் அடி தொட்டேன் இது குறை என்றனன் (அவன் யாரெனின்) இறைமகன் என இயைத்திடுக.

உதயகுமரன் அம்பலம் புக்க காதை முற்றிற்று.

# ௧௯. சிறைக்கோட்டம் அறக் கோட்டமாக்கிய காதை

[பத்தொன்பதாவது மணிமேகலை காயசண்டிகை வடிவாய்ச் சிறைக் கோட்டம் புக்குச் சிறைவிடு செய்து அறக் கோட்டமாக்கிய பாட்டு]

அஃதாவது : சம்பாபதி முன்பு மணிமேகலை ஒழியப் போகேன பன்னாளாயினும் பாடு கிடப்பேன், உன்னடி தொட்டு உறுதி கூறுகின்றேன என வஞ்சினஞ் சாற்றியவுடன் அங்குச் சித்திரத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டுறைகின்ற ஒரு தெய்வம் நீ ஆராய்ச்சியின்றி வஞ்சினங் கூறினை என்று கூறக் கேட்ட உதயகுமரன் அத் தெய்வம் பேசியதனையும் பண்டு தன் முன் பொன்றிகழ் மேனி ஒருத்தி தோன்றிச் செங்கோல் காட்டியதனையும் மணிமேகலை ஏந்திய அமுதசுரபியின் தெய்வத் தன்மையையும் ஒரு சேர எண்ணிப் பெரிதும் வியப்பெய்திப் பின்னும் மணிமேகலையின செயல்களைப் பார்த்தே அவளைப்பற்றி நன்கு தெரிதல் வேண்டும் என்று கருதி, அவ் விடத்தினின்றும் அகன்று போயபின் மணிமேகலை தன்னுருவோடு திரியின் மன்னன் மகன் நம்மைத் தொடர்வான் என்று அஞ்சிக் காயசண்டிகையின் வடிவத்தோடிருந்தே ஆற்றுமாக்கட்கு ஆற்றுந் துணையாகி உண்டி கொடுத்து உயிரோம்புபவள் சிறைக்கோட்டம் புகுந்து ஆங்குச் சிறைப்பட்டுக்கிடப்போரைக் கண்டிரங்கி அவர்க்கெல்லாம் உண்டி வழங்கா நிற்ப, ஒரே பாத்திரத்தால் எண்ணிறந்த உயிர்க்கு உண்டி வழங்கும் அவ்வற்புதங் கண்டு வியந்து இச் செய்தியைக் காவலர் அரசனுக்கு அறிவிப்ப அரசனும் அவளை அழைப்பித்து வினவி அவளது தெய்வத் தன்மையை வியந்து நின் திறத்திலே யான் செயற்பால துண்டாயிற் கூறுக! என்று வேண்டினனாக அது கேட்ட மணிமேகலை அங்குச் சிறைப்பட்டு வருந்துவோரையெல்லாம் விடுதலை செய்து அதனை அறக்கோட்டம் ஆக்குக என்று வேண்ட, அரசனும் அவள் வேண்டுகோட் கிணங்கிச் சிறையோர் கோட்டத்தை அறவோர் கோட்டமாகச் செய்த செய்தியைக் கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இதன்கண் — சோழமன்னன் விளையாடும் பூம்பொழில் வண்ணனை அக்காலத்து அரசர் வாழ்க்கைச் சிறப்பினைக் கண்கூடாகக் காட்டும் சொல்லோவியமாகத் திகழ்கின்றது.

மணிமேகலையின் அறச்செயல் கண்டு வியந்த அரசன் அவளை நீ யார்? இத்தெய்வத் தன்மையுடைய திருவோடு நினக்கு எவ்வாறு கிடைத்ததென்று அருள்புரி நெஞ்சோடு வினவுதலும், அதற்கு மணிமேகலை இரட்டுற மொழிதலாகத் தன்னை விஞ்சை மகள் என்றறிவித்துப் பின்னர் மன்னனை மனமார வாழ்த்துதலும் இப்பாத்திரம் அம்பலமருங்கோர் தெய்வந் தந்தது திப்பியமாயது யானைத்தீ நோய் அரும்பசி கெடுத்தது என அவன் தன்னைக் காயசண்டிகையாகவே கருதுதற் பொருட்டுக் கூறும் விடைகளும், பின்னர் அரசன் யான் செயற்பாலது என் இளங்கொடிக்கு என்று வினவுதலும், அவள் வேண்டுகோளும் கற்போர் உளமுருக்கும் பான்மையனவாகக் கூறப்பட்டுள்ளன.

முதியாள் திருந்தடி மும்மையின் வணங்கி
மதுமலர்த் தாரோன் வஞ்சினங் கூற
ஏடவிழ் தாரோய் எங்கோ மகள்முன்
நாடாது துணிந்துநா நல்கூர்ந் தனையென
வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச்
சித்திர மொன்று தெய்வங் கூறலும்
உதய குமரன் உள்ளங் கலங்கிப்
பொதியறைப் பட்டோர் போன்றுமெய் வருந்தி
அங்கவள் தன்றிறம் அயர்ப்பா யென்றே
செங்கோல் காட்டிய தெய்வமுந் திப்பியம்
பையர வல்குல் பலர்பசி களையக்
கையி லேந்திய பாத்திரம் திப்பியம்
முத்தை முதல்வி அடிபிழைத் தாயெனச்
சித்திர முரைத்த இதூஉந் திப்பியம்
இந்நிலை யெல்லாம் இளங்கொடி செய்தியின்
பின்னறி வாமெனப் பெயர்வோன் றன்னை
அகல்வாய் ஞாலம் ஆரிரு ளுண்ணப்
பகலர சோட்டிப் பணையெழுந் தார்ப்ப
மாலை நெற்றி வான்பிறைக் கோட்டு
நீல யானை மேலோர் இன்றிக்
காமர் செங்கை நீட்டி வண்டுபடு
பூநாறு கடாஅஞ் செருக்கிக் கால்கிளர்ந்து
நிறையழி தோற்றமொடு தொடர முறைமையின்
நகர நம்பியர் வளையோர் தம்முடன்
மகர வீணையின் கிளைநரம்பு வடித்த
இளிபுணர் இன்சீர் எஃகுளங் கிழிப்பப்
பொறாஅ நெஞ்சிற் புகையெரி பொத்திப்
பறாஅக் குருகின் உயிர்த்தவன் போயபின்
உறையுட் குடிகை உள்வரிக் கொண்ட

மறுவில் செய்கை மணிமே கலைதான்
மாதவி மகளாய் மன்றம் திரிதரின்
காவலன் மகனோ கைவிட லீயான்
காய்பசி யாட்டி காயசண் டிகையென
ஊர்முழு தறியும் உருவங் கொண்டே
ஆற்றா மாக்கட் காற்றுந் துணையாகி
ஏற்றலும் இடுதலும் இரப்போர் கடனவர்
மேற்சென் றளித்தல் விழுத்தகைத் தென்றே
நூற்பொருள் உணர்ந்தோர் நுனித்தன ராமென
முதியாள் கோட்டத் தகவையின் இருந்த
அமுத சுரபியை அங்கையின் வாங்கிப்
பதியகந் திரிதரும் பைந்தொடி நங்கை
அதிர்கழல் வேந்தன் அடிபிழைத் தாரை
ஒறுக்குந் தண்டத் துறுசிறைக் கோட்டம்
விருப்பொடும் புகுந்து வெய்துயிர்த்துப் புலம்பி
ஆங்குப் பசியுறும் ஆருயிர் மாக்களை
வாங்கு கையகம் வருந்தநின் றூட்டலும்
ஊட்டிய பாத்திரம் ஒன்றென வியந்து
கோட்டங் காவலர் கோமகன் றனக்கிப்
பாத்திர தானமும் பைந்தொடி செய்தியும்
யாப்புடைத் தாக இசைத்துமென் றேகி
நெடியோன் குறளுரு வாகி நிமிர்ந்துதன்
அடியிற் படியை யடக்கிய அந்நாள்
நீரிற் பெய்த மூரி வார்சிலை
மாவலி மருமான் சீர்கெழு திருமகள்
சீர்த்தி யென்னுந் திருத்தகு தேவியொடு
போதவிழ் பூம்பொழில் புகுந்தனன் புக்குக்
கொம்பர்த் தும்பி குழலிசை காட்டப்
பொங்கர் வண்டினம் நல்லியாழ் செய்ய
வரிக்குயில் பாட மாமயில் ஆடும்
விரைப்பூம் பந்தர் கண்டுளஞ் சிறந்தும்
புணர்துணை நீங்கிய பொய்கை அன்னமொடு
மடமயிற் பேடையுந் தோகையுங் கூடி
இருசிறை விரித்தாங் கெழுந்துடன் கொட்பன
ஒருசிறைக் கண்டாங் குண்மகிழ் வெய்தி
மாமணி வண்ணனுந் தம்முனும் பிஞ்ஞையும்
ஆடிய குரவையிஃ தாமென நோக்கியும்
கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப்
பாங்குற விருந்த பல்பொறி மஞ்ஞையைச்
செம்பொற் றட்டில் தீம்பா லேந்திப்

பைங்கிளி யூட்டுமோர் பாவையா மென்றும்
அணிமலர்ப் பூம்பொழில் அகவையி னிருந்த
பிணவுக்குரங் கேற்றிப் பெருமதர் மழைக்கண்
மடவோர்க் கியற்றிய மாமணி யூசல்
கடுவ னூக் குவது கண்டுநகை யெய்தியும்
பாசிலை செறிந்த பசுங்காற் கழையொடு
வால்வீச் செறிந்த மராஅங் கண்டு
நெடியோன் முன்னொடு நின்றன னாமெனத்
தொடிசேர் செங்கையிற் றொழுது நின் றேத்தியும்
ஆடற் கூத்தினோ டவிநயந் தெரிவோர்
நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்
பண்ணியாழ் நரம்பிற் பண்ணுமுறை நிறுப்போர்
தண்ணுமைக் கருவிக் கண்ணெறி தெரிவோர்
குழலொடு கண்டங் கொளச்சீர் நிறுப்போர்
பழுநிய பாடல் பலரொடு மகிழ்வோர்
ஆரம் பரிந்த முத்தங் கோப்போர்
ஈரம் புலர்ந்த சாந்தந் திமிர்வோர்
குங்கும வருணங் கொங்கையின் இழைப்போர்
அஞ்செங் கழுநீர் ஆயிதழ் பிணிப்போர்
நன்னெடுங் கூந்தல் நறுவிரை குடைவோர்
பொன்னின் ஆடியிற் பொருந்துபு நிற்போர்
ஆங்கவர் தம்மோ டகலிரு வானத்து
வேந்தனிற் சென்று விளையாட் டயர்ந்து
குருந்துந் தளவுந் திருந்துமலர்ச் செருந்தியும்
முருகுவிரி முல்லையுங் கருவிளம் பொங்கரும்
பொருந்துபு நின்று திருந்துநகை செய்து
குறுங்கால் நகுலமும் நெடுஞ்செவி முயலும்
பிறழ்ந்துபாய் மானும் இறும்பகலா வெறியும்
வம்மெனக் கூஉய் மகிழ்துணை யொடுதன்
செம்மலர்ச் செங்கை காட்டுபு நின்று
மன்னவன் றானும் மலர்க்கணை மைந்தனும்
இன்னிள வேனிலும் இளங்காற் செல்வனும்
எந்திரக் கிணறும் இடுங்கற் குன்றமும்
வந்துவீ ழருவியும் மலர்ப்பூம் பந்தரும்
பரப்புநீர்ப் பொய்கையுங் கரப்புநீர்க் கேணியும்
ஒளித்துறை யிடங்களும் பளிக்கறைப் பள்ளியும்
யாங்கணுந் திரிந்து தாழ்ந்துவிளை யாடி
மகத வினைஞரும் மராட்டக் கம்மரும்
அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும்
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடிக்

கொண்டினி தியற்றிய கண்கவர் செய்வினைப்
பவளத் திரள்காற் பன்மணிப் போதிகைத்
தவள நித்திலத் தாமந் தாழ்ந்த
கோணச் சந்தி மாண்வினை விதானத்துத்
தமனியம் வேய்ந்த வகைபெறு வனப்பிற்
பைஞ்சேறு மெழுகாப் பசும்பொன் மண்டபத்
திந்திர திருவன் சென்றினி தேறலும்
வாயிலுக் கிசைத்து மன்னவன் அருளால்
சேய்நிலத் தன்றியுஞ் செவ்வியின் வணங்கி
எஞ்சா மண்ணசை இகலுளந் துரப்ப
வஞ்சியி னிருந்து வஞ்சி சூடி
முறஞ்செவி யானையுந் தேரும் மாவும்
மறங்கெழு நெடுவாள் வயவரு மிடைந்த
தலைத்தார்ச் சேனையொடு மலைத்துத்தலை வந்தோர்
சிலைக்கயல் நெடுங்கொடி செருவேற் றடக்கை
ஆர்புனை தெரியல் இளங்கோன் றன்னால்
காரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை
வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி
ஒளியொடு வாழி ஊழிதோ றூழி
வாழி யெங்கோ மன்னவர் பெருந்தகை
கேளிது மன்னோ கெடுகநின் பகைஞர்
யானைத் தீநோய்க் கயர்ந்துமெய் வாடியிம்
மாநகர்த் திரியுமோர் வம்ப மாதர்
அருஞ்சிறைக் கோட்டத் தகவயிற் புகுந்து
பெரும்பெயர் மன்ன நின்பெயர் வாழ்த்தி
ஐயப் பாத்திரம் ஒன்றுகொண் டாங்கு
மொய்கொண் மாக்கள் மொசிக்கவூண் சுரந்தனள்
ஊழிதோ றூழி உலகங் காத்து
வாழி யெங்கோ மன்னவ என்றலும்
வருக வருக மடக்கொடி தானென்று
அருள்புரி நெஞ்சமொ டரசன் கூறலின்
வாயி லாளரின் மடக்கொடி தான்சென்
றாய்கழல் வேந்தன் அருள்வா ழியவெனத்
தாங்கருந் தன்மைத் தவத்தோய் நீயார்
யாங்கா கியதிவ் வேந்திய கடிஞையென்
றரசன் கூறலும் ஆயிழை உரைக்கும்
விரைத்தார் வேந்தே நீநீடு வாழி
விஞ்சை மகள்யான் விழவணி மூதூர்
வஞ்சந் திரிந்தேன் வாழிய பெருந்தகை
வானம் வாய்க்க மண்வளம் பெருகுக

நீநின் றுக கோமகற் கீங்கீ
தையக் கடிஞை அம்பல மருங்கோர்
தெய்வந் தந்தது திப்பிய மாய
துயானைத் தீநோய் அரும்பசி கெடுத்த
தூனுடை மாக்கட் குயிர்மருந் திதுவென
யான்செயற் பாலதென் இளங்கொடிக் கென்று
வேந்தன் கூற மெல்லியல் உரைக்கும்
சிறையோர் கோட்டஞ் சீத்தருள் நெஞ்சத்
தறவோர்க் காக்கும் அதுவா ழியரென
அருஞ்சிறை விட்டாங் காயிழை உரைத்த
பெருந்தவர் தம்மாற் பெரும்பொரு ளெய்தக்
கறையோ ரில்லாச் சிறையோர் கோட்டம்
அறவோர்க் காக்கினன் அரசாள் வேந்தென்.

# ௨௨. சிறைக்கோட்டம் அறக் கோட்டமாக்கிய காதை

## உரை

### வஞ்சினங் கூறிய மன்னவன் மகனுக்கு ஆண்டுச் சித்திரத்திலே நிற்குந் தெய்வம் கூறுதல்

### க - ௬ : முதியாள்..........கூறலும்

(இ - ள்.) மதுமலர்த் தாரோன் முதியாள் திருந்து அடி மும்மையின் வணங்கி - தேன்பிலிற்றும் மலர்மாலையணிந்த உதயகுமரன் பழையோளாகிய சம்பாபதியின் அழகிய திருவடிகளை மனம் மொழி மெய் என்னும் மூன்று கருவிகளானும் வழிபாடு செய்து சூண் மொழிந்தவளவிலே; வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச் சித்திரம் ஒன்று தெய்வம் - சிற்பபுலமை மிக்க வித்தகர்களாலே இயற்றபபட்டதும் விளக்கமான கலைத் தொழிற்றிறமமைந்ததுமாகிய ஒரு சித்திரத்திலே பொருந்தியுறை வதுமாகி ஒரு தெய்வம் தனது தெயவக்கிளவியாலே; ஏடு அவிழ் தாரோய் எம் கோமகள் முன் நாடாது துணிந்து நாநல் கூர்ந்தனை என - இதழவிரிந்த மலராற் புனைந்த மலர் மாலையணிந்த மன்னவன் மகனே! நீ தானும் எம்மிறைவி திருமுன்னின்று சிறிதும் ஆராயாமல் துணிவுற்று வாளாது வஞ்சினம் கூறி நாநலமிழந்து வறுமையுற்றனை காண்! என்று; கூறலும் - கூறக் கேட்டலும் என்க.

(வி - ரை.) முதியாள் என்றது சம்பாபதியை. திருந்தடி - இலக்கணத்தாற் செவ்விதாக வமைந்த திருவடி; தாரோன்: உதயகுமரன். மும்மை - மன மொழி மெய்கள். வஞ்சினம் - சூண்மொழி; அஃதாவது அருளாயாயிடின் பன்னுளாயினும் பாடுகிடப்பேன் என்று கூறியதாம்.

நாநல் கூர்தல் - நாநலமிழத்தல்; பயனில மொழிதல். எண்ணித் துணிக கருமம் துணிந்தபின் எண்ணுவம் என்ப திழுக்கு எனவரும் திருக்குறட் கருத்தை யுள்ளுறுத்து "நாடாது துணிந்து நாநல் கூர்ந்தனை" எனத் தெய்வம் கூறியவாறும். ஒன்று தெய்வம் - பொருந்தியுறையும் தெய்வம்.

## உதயகுமரனின் மருட்கை

### எ - கக : உதய.........தன்னை

(இ - ள்.) உதயகுமரன் உள்ளம் கலங்கி பொறியறைப் பட்டோர் போன்று மெய் வருந்தி - உதயகுமரன் தன் துயரத்தினின்றும் தப்புதற்குப் பிறிதொரு வழியும் காணமாட்டாமையாலே பொறியறை என்னும் கீழறைக்கண் அகப்பட்டவர் போன்று உடம்பு மெலிந்து வருந்தி மயங்குபவன்; அங்கு செங்கோல் காட்டி அவள் தன் திறம் அயர்ப்பாய் என்ற தெய்வமும் திப்பியம் - யாம் நமது பள்ளியறைக்கண் அவளையே எண்ணித் துயிலாதிருந்த பொழுது பொன்னிற் பொலிந்த நிறத்தோடு தோன்றி எனக்குச் செங்கோல் முறைமையை எடுத்துக் காட்டித் தவத்திறமுடைய அம் மணிமேகலையை மறந்துவிடு என்று கூறிய தெய்வக் காட்சியும் தெய்வத்தன்மையுடைத்தா யிருந்தது; பைஅரவு அல்குல் பலர் பசி களையக் கையில் ஏந்திய பாத்திரம் திப்பியம் - அன்றியும் பாம்பின் படம் போன்ற அல்குலையுடைய அம் மணிமேகலை ஆற்றுமாக்கள் அரும்பசி களைதற்குக் கருவியாகத் தன் கையிலேந்தியிருந்த பிச்சைக்கலன் தானும் தெய்வத்தன்மை யுடைத்தாயிருந்தது; மூத்தை முதல்வி அடி பிழைத்தாய் எனச் சித்திரம் உரைத்த இதூஉம் திப்பியம் - சம்பாபதி திருமுன் திருந்தடி தொட்டுச் சூளுரைத்துப் பிழை செய்தொழிந்தாய் என்று வித்தகரியற்றிய இச் சித்திரம் கூறுகின்ற இவ்விடித்துரை தானும் தெய்வத்தன்மையுடைத்தாகவே உளது; இந்நிலை எல்லாம் பின் இளங்கொடி செய்தியின் அறிவோம் எனப் பெயர்வோன் தன்னை - மருட்கை விளைக்கின்ற இத் தெய்வத்தன்மைகளுக்கெல்லாம் காரணம் இனி அந்த மணிமேகலையின் செயல்களை யாம் ஆராய்ந்தறிந்து கொள்ளக்கடவேம் என்று கருதியவனாய் அவ்விடத்தினின்றும் போகின்ற உதயகுமரனை என்க.

(வி - ம்.) திப்பியம் - தெய்வத் தன்மையால் நிகழ்வது; மக்கட் டன்மைக்கப்பாற்பட்ட நிகழ்ச்சி என்பது கருத்து. செங்கோல் காட்டிய தெய்வம் என்றது மணிமேகலா தெய்வத்தை. பையரவல்குல்: அன்மொழித்தொகை; மணிமேகலை. பலர் பசியை ஒரே பாத்திரம் உணவு சுரந்தூட்டுவது திப்பியம் என்றவாறு. சித்திரம் - சண்டுச் சிறபம். ஓவியம் எனினுமாம். இந்நிலை என்றது இவ்வாறு மருட்கை விளைத்தற்குக் காரணமான நிலைமைகள். செய்தி - செய்கை.

## உதயகுமரன் காமத்துயருழந்துயிர்த்தல்

### கஎ - உஅ: அகல்வாய்.........போயபின்

இ - ள்.) அகல்வாய் ஞாலம் ஆர் இருள் உண்ண பகல் அரசு ஓட்டிப் பணை எழுந்து ஆர்ப்ப - அகன்ற இடத்தையுடைய நிலவுலகத்தை விலக்குதற்கரிய இருள் விழுங்கிவிடும்படி ஞாயிறாகிய அரசனைப் புறங்காட்டி ஓடச் செய்து உலகின்கண் வெற்றி முரசின் முழக்கம் எழுந்து ஆரவாரியாநிற்ப; மாலை நெற்றி வான்பிறைக் கோட்டு நீல யானை - மாலைப் பொழுதாகிய நெற்றியினையும் வெள்ளிய பிறையாகிய மருப்பையுமுடைய நீலநிறம் பொருந்திய இரவாகிய யானையானது; மேலோர் இன்றி - தன்னையடக்குபவராகிய பாகர் யாருமில்லாமல்; காமர் செங்கை நீட்டி - விருப்பமாகிய தன் செவ்விய கையை உலகிலே நீட்டி; வண்டுபடு பூநாறு கடாஅஞ் செருக்கி - வண்டுகள் மொய்த்தற்குக் காரணமான ஏழிலைப்பாலை மலரினது மணம்கமழ்தலாகிய மதத்தாலே செருக்குற்று; கால் கிளர்ந்து - காற்றைப் போல விரைந்து; நிறை அழி தோற்றமொடு தொடர - தன்னைக் கண்டோருடைய மனத்திட்பம் அழிதற்குக் காரணமான தோற்றத்தோடு தொடரா நிற்பவும்; முறைமையின் - இசை நூல் முறைப்படியே; நகர நம்பியர் வளையோர் தம்முடன் மகர வீணையின் கிளை நரம்பு வடித்த இளிபுணர் இன்சீர் எஃகு உளம் கிழிப்ப - பூம்புகார் நகரத்தே வாழுகின்ற மேனமக்களுள் வைத்து இளமையுடைய ஆடவர் தங் காதலியரோடு களித்திருந்து மகரயாழின்கண் கிளை நரம்புகளை வருடி எழுப்பிய இளி முறையாலே கூட்டப்பெற்ற இனிய தாளவறுதியுடைய பண்ணாகிய வேலானது பாய்ந்து ஊடுருவிப் புண் செய்யப்பட்டு; பொறாஅ நெஞ்சில் புகை எரி பொத்தி பறாஅக்குருகின் உயிர்த்து அவன் போயபின் - உண்டாகின்ற துன்பத்திற்கு ஆற்றாது அலமருகின்ற தனது நெஞ்சத்திலே புகையுடைய காமத் தீப் பற்றித் தீய்த்தலாலே கொல்லுலைக்கண் துருத்தி யுயிர்க்கு மாறு போலே வெய்தாக நெடுமூச்செறிந்து அவ்வரசன் மகன் அவ்விடத்தினின்றும் அகன்று போயபின்பு என்க.

(வி - ம்.) பெயர்வோன்றன்னை நீல யானை தொடர இன்சீர் எஃகு உளம் கிழிப்ப உயிர்த்து அவன் போயபின் என இயையும்.

அகல்வாய் - அகன்ற இடத்தையுடைய. இனி ஞாலத்தை அகல் வாய் இருள் உண்ண என மாறி வாயை இருண்மேலேற்றலுமாம். பக லரசு - ஞாயிறு. மாலை முரசு முழங்குதல் உண்மையின் இரவு என்னும் நீல யானை தன் பகையாகிய பகலரசனை வென்று (மாலை முரசாகிய தனது) வெற்றி முரசம் முழங்கும்படி அவன் ஆட்சி செய்த ஞாலத்தை

எல்லாம் இருளாகிய தன்வாய் விழுங்கா நிற்பக் காம விருப்பம் என்கின்ற தன் கையை நீட்டிச் செருக்கி (உதயகுமரனுடைய) நிறையழி தோற்ற மொடு அவனைத் தொடரவும் இன்சீராகிய எஃகு உளம் கிழிப்பவும் அது பொறாஅத நெஞ்சிற் (காமமாகிய) புகையெரி மூள ஆற்றாது உயிர்த்து அவன் போயபின் என்க.

இரவை யானையாக உருவகித்தலின் மாலையை அதன் நெற்றியாகவும் பிறையை மருப்பாகவும் இருளை நிறமாகவும் உருவகித்தனர்.

இரவு உலகில் காமத்தை உண்டாக்குதலின் அதனை அதன் கையாக உருவகித்தார். ஏழிலைப்பாலை மலர் இரவில் மலரும் போலும். ஆகவே அம் மலர் யானையின் மதநாற்றம் போலும் நாற்றமுடையதாதல் பற்றி அந் நாற்றத்தை அந்த யானை பொழியும் மதநாற்றமாக உருவகித்தார். ஏழிலைப்பாலை மலர் யானைமதம் நாறுமியல்புடைத் தென்பதை—

"பாத்த யானையிற் பதங்களிற் படுமத நாறக்
காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப்
பூத்த வேழிலைப் பாலையைப் பொடிப்பொடி யாகக்
காத்தி ரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு"

எனவரும் இராமாவதாரச் செய்யுளானும் (வரைக் - சு) உணர்க.

முறைமையின் - நூல் முறைமையாலே. நகர நம்பியர் என்றது, நகரத்துப் பெருங்குடி மக்களாகிய இளைஞர்களை. இவர்கள் தங் காதலியரோடிருந்து யாழ்வருடிப் பாடுகின்ற இசை உதயகுமரன் காமநோயை மிகுவித்தலின் இன்சீர் எஃகு என்றார். இன்சீர் என்றது அன்மொழித் தொகையாய்ப் பண் என்னும் பெயர்ப் பொருட்டாய் நின்றது. இனிய தாளவறுதியையுடைய பண் என்றவாறு.

எரி - காமத்தீ. பொத்தி - மூண்டு. பறாஅக்குருகு - கொல்லன் உலைக்களத்துத் துருத்தி; வெளிப்படை, பாயா வேங்கை பறவாக் கொக்கு என்பன போல. அவன்: உதயகுமரன்.

### உதயகுமரன் போனபின் மணிமேகலை உட்கோளும் செயலும்

உகூ - ௩ஏ: உறையுள்.........ஆமென

(இ - ள்) உறையுள் குடிகை உள்வரிக்கோலம் கொண்டமறு இல் செய்கை மணிமேகலை தான் - சம்பாபதி எழுந்தருளியிருக்குமிடமாகிய குச்சரக் குடிகையினின்றும் காயசண்டிகையாக உள்வரிக்கோலம் பூண்ட குற்றமில்லாத நல்லொழுக்கத்தையுடைய அம் மணிமேகலை தானும் தான் இனிச் செய்யக்கடவதென்னென்று தன்னுள்ளே ஆராய்பவள்; மாதவி மகளாய் மன்றப் திரிதரின் - மாதவி மகளாகிய யான் எனக்குரிய உருவத்தோடே இவ்வுலக வறவியாகிய பாதுகாவலற்ற இவ்வம்பலத்தே இவ்வாறு திரிவேனாயின்; மன்னன்

மகன் கைவிடலீயான் - வேந்தன் மகன் நம்மைக் கைவிட்டுப் போவானல்லன், ஆகவே அவனிடத்தினின்றும் யான் தப்புதல் வேண்டின்; காயசண்டிகை காய் பசியாட்டி என ஊர் முழுதும் அறியும் உருவம் கொண்டே - காயசண்டிகை என்னும் அவ் விச்சாதரி இடையறாது வயிறு துன்புறுத்துதற்குக் காரணமான ஆனைத் தீ நோயுடையாள் என்று இப் பூம்புகார் நகரத்தில் வாழ்வோரெல்லாம் நன்கு அறிகுவர் ஆதலால் என்னுருக்கரந்து யான் இப்பொழுது மேற்கொண்டிருக்கும் இக் காயசண்டிகையுருவத்தோடேயே எப்பொழுதும் புறஞ் சென்று; ஆற்றுமாக்கட்கு ஆற்றுந்துணை ஆகி ஏற்றலும் இடுதலும் இரப்போர் கடன் அவர் மேற் சென்று அளித்தல் விழுத்தகைத்து என்றே - பசித்துயரம் பொறாமல் வருந்துகின்ற இரவன்மாக்கள் பசியை மாற்றி அவரை ஆற்றுவாராக்குதற் பொருட்டு இல்லந்தொறும் சென்று பிச்சை ஏற்றலும் அப் பிச்சையுண்டியை ஆற்றுமாக்கட்கு வழங்குதலும் பிச்சை ஏற்போர்க்குரிய கடமைகளாகும் என்றும், அவ்வாறு இரப்பவர் தாமும் காணாரும் கேளாரும் முதலியவராக அவ்வாற்றுமாக்கள் இருக்குமிடத்தே சென்று அவ்வுணவினை வழங்கிப் பேணுதல் மிகவும் சிறந்த நல்வினையாகும் என்றும்; நூல் பொருள் உணர்ந்தோர் - பிடக நூலின் பொருளை ஐயந்திரிபற உணர்ந்த சான்றோர்; நுனித்தனர் - கூர்ந்துணர்ந்துரைத்தனர் ஆதலின்; ஆம் என - அங்ஙனம் செய்தலே இப்பொழுது நமக்கியன்ற செயலாகும் என்று துணிந்து என்க.

(வி - ம்.) இப் பகுதியில் மணிமேகலை தனக்கும் தன்னாலே பிறர்க்கும் சிறிதும் இடர் வாராமைக்கும் ஆற்றுமாக்கட்கு ஆற்றுந் துணையாய் அவர்க்கெல்லாம் இன்பஞ் செய்தற்கும் சூழ்கின்ற இச் சூழ்ச்சி பெரிதும் நுணுக்கமுடையதாதலுணர்க. இங்ஙனம் சூழவல்ல அறிவை "எதிரதாக் காக்கும் அறிவு" என்று தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் போற்றிக் கூறுவர்—

"எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்" (௪௨௯)

என்பது செந்தமிழ் மறை.

ஆனைத் தீப்பசியை ஆற்றுதற் பொருட்டுக் காயசண்டிகை இடையறாது அந் நகரத்திலே பிச்சை ஏற்றுத் திரிந்தமையாலே அவளை ஊர் முழுதும் அறியும். அவள் அவ்வூரை விட்டுப் போய் விட்டமை மணிமேகலை மட்டும் அறிகுவள். அவ்வூரிற் பிறர் யாரும் அறியாமையின் அவ்வுருவங் கொண்டு திரிந்தால் தன்னை எல்லாரும் காயசண்டிகை என்றே கருதுவர்; மன்னவன் மகனும் நாளடைவில் தன்னை மறந்தொழிவான் என்றுட் கொண்ட படியாம்,

பிச்சை ஏற்பது தானும் பிறர் பொருட்டே ஏற்றல் வேண்டும், ஏற்போர் ஒல்லும் வகையால் அவ்வாற்றானும் ஓவாதே அறவினை செய்தல் வேண்டும், தம் பொருட்டு ஏற்றல் தீவினையாம் என்னுமிவ்வறங்கள் பிடகநூல் கூறும் அறங்கள் போலும். என்னை? இவ்வறம் நூற்பொருள் உணர்ந்தோர் நுனித்தனர் என்றமையால் ஈண்டு நூலெனப்படுவது பிடகநூல்களேயாதலின் என்க.

இரப்போர்க்கு ஏற்றலும் இடுதலும் கடன் ஆதலின் யாம் இடுவது கண்டும் அயிர்ப்பாரிலர் என்று துணிவாள் அவர் மேற் சென்றளித்தல் விழுத்தகைத்து என்று நூலோர் நுனித்தனர் என்று நினைந்தனள் என்க.

நுனித்தல் - நுணுக்கமாக அறிதல். ஆம் என - என்று அறுத்துக் கண்ணழித்து இங்ஙனம் செய்தலே இப்பொழுதைக்கு நமக்குத் தகுதியாம் என்று கருதி என்று பொருள் விரித்திடுக.

மணிமேகலை சிறைக்கோட்டம் புகுந்து உண்டி
கொடுத்து உயர் அறம் பேணல்

கூக - சகூ : முதியாள்..........ஊட்டலும்

(இ - ள்.) முதியாள் கோட்டத்து அகவயின் இருந்த அமுதசுரபியை அங்கையின் வாங்கி - சம்பாபதியின் கோயிலாகிய குச்சரக்குடிகையின் உள்ளே தான் கொடுபோய் வைத்திருந்த அமுதசுரபி என்னும் தெய்வத்தன்மையுடைய திருவோட்டினை எடுத்துத் தன் அழகிய கையிலே ஏந்தி; பதி அகம் திரிதரும் பைந்தொடி நங்கை - காயசண்டிகை வடிவத்தோடே அந்நகரத்தினூடே இரவலரை நாடித் தான் வேண்டியாங்கு இயங்குகின்ற அம் மணிமேகலை நல்லாள்; அதிர் கழல் வேந்தன் அடிபிழைத்தாரை ஒறுக்கும் தண்டத்து உறு சிறைக் கோட்டம் விருப்பொடும் புகுந்து - ஒலிக்கின்ற வீரக்கழல் கட்டிய சோழ வேந்தன் தன் திருவடியின் கீழிருந்தும் அறியாமையாலே பிழை செய்த மாக்களை அப் பிழைக்குத்தகத் துன்புறுத்தும் தண்டம் காரணமாகப் பிழை செய்த அம் மாக்கள் புக்குறைகின்ற சிறைக் கோட்டத்தினுள்ளே உண்டி கொடுத்து அவர் உறுபசி களைதற்குப் பெரிதும் விரும்பிப் புகுந்து; ஆங்கு வெய்து உயிர்த்துப் புலம்பி பசி உறு மாக்களை - அச் சிறைக் கோட்டத்தில் துன்பத்தாலே வெய்தாக நெடுமூச்செறிந்து பசியாலும் வருந்தியிருக்கின்ற அரிய உயிரையுடைய மாக்களை இனிதின் கூவியழைத்து; வாங்கு கையகம் வருந்த நின்று ஊட்டலும் - அம் மாக்கள் ஏந்துகின்ற கைகள் பொறையால் வருந்துமாறு மிகுதியாக அமுதசுரபியினின்றும் உணவுகளை நிரம்பப்பெய்து உண்ணச் செய்யுமளவிலே என்க.

(வி - ம்.) முதியாள்: சம்பாபதி. கோட்டத்து அகவயினிருந்த அமுத சுரபியை வாங்கி என்றமையால் - முன்னர்க் காயசண்டிகை வடிவாய்ப் பாத்திரம் ஏந்தி வந்து தோன்றியவள் மன்னவன் மகன் போயபின் மீண்டும் சோயிலுட் புகுந்து வைத்த பாத்திரத்தை இன்னது செய்வல் என எண்ணித் துணிந்த பின் எடுத்தாள் என்பது பெற்றாம்.

வாங்கி - எடுத்து. பைந்தொடி: மணிமேகலை. பசியால் வருந்துவோர் சிறைக் கோட்டத்துள் மிக்கிருப்பர் என்னும் கருத்தால் சிறைக் கோட்டத்துப் புகுந்தபடியாம்.

அதிர்கழல் - ஒலிக்கின்ற வீரக்கழல். பகைவர் உள்ளம் நடுங்குதற்குக் காரணமான வீரக்கழல் எனினுமாம். வேந்தன் அடிபிழைத்தார் என்றது - நாட்டினிற் செங்கோன் முறையினில்லாமல் குற்றம் புரிந்த மாந்தரை, ஒறுத்தல் - துன்புறுத்துதல். உறுசிறை : வினைத்தொகை.

ஆருயிர் என்றூர் துன்புழத் தொறும் காதலிக்கப் படுமருமையுடைத்தாதல் பற்றி.

## கோட்டங் காவலர் வியந்து கோவேந்தனுக் கறிவிக்கச் செல்லுதல்

சஎ - ௫௦: ஊட்டிய.........ஏகி

(இ - ள்.) கோட்டங் காவலர் - கோவேந்தனுடைய சிறைக் கோட்டத்தைக் காவல் செய்கின்ற அரசியற் பணியாளர் மணிமேகலை அச் சிறைக் கோட்டத்தே புகுந்து பசியால் வருந்து இன்ற மாந்தரையெல்லாம் அழைத்து அமுதூட்டி நிற்கும் காட்சியைக் கண்ணுற்று; ஊட்டிய பாத்திரம் ஒன்று என வியந்து - என்னே! இஃது என்னே! எண்ணிறந்த மாந்தர்க் கெல்லாம் இவள் அவரவர் வேண்டியவுணவினை ஏற்போர் கையகம் வருந்துமாறு வழங்கும் கருவி இவள் கையிலேந்திய திருவோடு ஒன்று மட்டுமே யாகவுளது, இக் காட்சி பெரிதும் வியக்கத் தக்கது என்று மருண்டு; கோமகன் தனக்கு இப் பாத்திர தானமும் பைந்தொடி செய்தியும் - யாம் நம்மரசர் பெருமானுக்கு இத் திருவோடு உணவு தருகின்றதும் அவ்வுணவினை ஆர்வத்தோடு நின்றூட்டுவதுமாகிய இவ்வற்புதம்; யாப்புடைத்தாக - திருச்செவியோடு தொடர்புடையதாகும்படி; இசைத்தும் என்று ஏகி - சென்று கூறுவேம் என்று துணிந்து போய்; என்க.

(வி - ம்.) பாத்திர தானமும் பைந்தொடி செய்தியும் ஆகிய இவ்வற்புதக் காட்சியை என்று வருவித்தோதி யாப்புடைத்து என்னும் ஒருமையோடியைக்க. அன்றி: பன்மை ஒருமை மயக்கம் எனினுமாம். இசைத்தும் - கூறுவேம்.

[ருக - ஆம் அடிமுதலாக, கககூ ஆம் அடியிறுகச் சோழ மன்னனுடைய பொழில் விளையாட்டு வண்ணனையாக ஒரு தொடர்.]

## சோழமன்னன் உரிமையோடு சென்று பூம்பொழிலிற் புகுந்து விளையாடுதல்

### ருக - கூ0 : நெடியோன்.........சிறந்தும்

**(இ - ள்.)** நெடியோன் குறள் உருவு ஆகி - திருமால் தேவர்கள் வேண்டுகோட்கிணங்கிக் காசிபன் என்னும் முனிவன் பத்தினியாகிய அதிதி என்பவள் வயிற்றில் குறிய உருவமுடையவனாகப் பிறந்து மாவலியின் வேள்விக் களத்திலே சென்று; நிமிர்ந்து தன் அடியில் படியை அடக்கிய அந்நாள் - பேருருக் கொண்டு தனது ஒரே திருவடியில் இந்நிலவுலகத்தை எல்லாம் அடக்கி அளந்து தனதாக்கிக் கொள்ளும் பொருட்டுப் பண்டொரு காலத்தே மூன்றடி மண்ணிரந்த நாளிலே; நீரின் பெய்த மூரிவார் சிலை மாவலி மருமான் - ஆசிரியனாகிய வெள்ளி தடுக்கவும் இல்லை என்னாமல் அவ் வாமனன் இரந்த மண்ணை நீர் வார்த்து வழங்கிய வள்ளன்மையையும் அமரர் முதலியோரையும் வெல்லுதற்கியன்ற பெரிய நெடிய விற்படையையும் உடைய புகழாளனாகிய மாவலியின் வழித்தோன்றலாகிய மன்னவனுடைய; சீர்கெழு திருமகள் சீர்த்தி என்னும் திருத்தகு தேவியொடு - கற்புடைமையாலே புகழ் பொருந்திய செல்வமகளாகிய சீர்த்தி என்னும் திருப்பெயரையுடைய திருமகளை ஒத்த தன் பெருந்தேவியோடு; போது அவிழ் பூம் பொழில் புகுந்தனன் (மாவண்கிள்ளியாகிய சோழமன்னவன்) - நாளரும்புகள் இதழ் விரிக்கின்ற தனது பூம்பொழிலிலே புகுந்தானாக; புக்கு கொம்பர்த் தும்பி குழல் இசை காட்ட பொங்கர் வண்டு இனம் நல் யாழ் செய்ய குயில் வரி பாட மாமயில் ஆடும் - புகுந்து அப் பொழிலினூடு ஒரு சார் மலர்ந்த கொம்புகளிலே தேன் தேர்கின்ற தும்பிகள் தமது முரற்சியாலே வேய்ங் குழலின் இன்னிசையைச் செய்யாநிற்பவும் அப் பொழிலிடத்துப் பல்வேறு வகைப்பட்ட வண்டுகள் யாழின் இசைபோன்று இனிதாக முரலா நிற்பவும் குயில்கள் இனியமிடற்றுப் பாடலைப் பாடா நிற்பவும் நீலமயில்கள் விறலியர் போன்று கூத்தாடுகின்ற; விரைப் பூம்பந்தர் கண்டு உளம் சிறந்தும் - நறுமணம் கமழ்கின்ற மலர்க்கொடிகளாலியன்ற ஆடலரங்கு போன்ற பந்தரின் எழில் கண்டு உள்ளத்தில் உவகைமிக்கும்; என்க.

(இ - ள்) ஈண்டுக் கூறப்படுகின்ற சோழமன்னனை மாவண்கிள்ளி என்பர். இக் காதையில் கஉ ஆம் அடியில் வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி என்றோதுதல் காண்க. பிறிதோர் இடத்தில் நெடுமுடிக்கிள்ளி என்றலின் கிள்ளி என்பதே இவன் பெயர் என்று தெரிகின்றது. இவனைக் கிள்ளி வளவன் என்றும் கூறுப.

இக் கிள்ளியின் மனைவியின் பெயர் 'சீர்த்தி' என்பதாம். இவளைப் புலவர் பெருமான் ஈண்டு நான்கு அடிகளாலே விதந்தெடுத்துப் பாராட்டி நம்மனோர்க்கு அறிவிக்கின்றனர். இவ்வடிகளாலே இக் கோப்பெருந் தேவி புகழப்படுகின்றாளேனும் அது வஞ்சப் புகழ்ச்சியேயாம். அவளை 'அரக்கி' என்றிகழ்வதே நூலாசிரியர் குறிப்பாகும். இவள் பின்னர் மணிமேகலைக்குச் செய்யும் கொடுமை இரக்கமென்றொரு பொருளிலாத நெஞ்சினராகிய அரக்கர் செய்தற்கியன்ற செயலாக இருத்தலின் அவளுடைய குலம் அரக்கர் குலம் என்பதை அறிவுறுத்தவே புலவர் இவ்வாறு வஞ்சப் புகழ்ச்சியாகப் பாராட்டுகின்றனர். இந் நுணுக்க முணராக்கால் ஈண்டு நீளிதாக அவளைப் புகழ்வது மிகைபடக் கூறலாய் முடியும் என்க.

மாவலி தேவர்களுக் கிடுக்கண் செய்ய அது பொறாத தேவர் திருமாலிடத்தே தஞ்சம் புக்கனர். அவர் இடுக்கண் தீரத் திருமால் குறள் உருவாகிச் சென்று மாவலியின்பால் மூவடி மண்ணிரந்தான்; திருமாலின் சூழ்ச்சியை அறிந்த வெள்ளி கொடாதே என்று தடுத்தான்; அவனை இகழ்ந்து நீர்வார்த்த நில மீந்தான். அம் மாவலியின் இவ் வள்ளன்மைச் சிறப்புக் குறிப்பாகத் தோன்றுதற்கே நீரிற் பெய்த என்றார். அவனுடைய ஆற்றற் சிறப்பை வில்லிற் கேற்றி மூரிவார் சிலை மாவலி என்றார்.

மாவலி மருமான் - மாவலி மரபிற்றோன்றிய ஓரரசன். அவள் அரக்கர் மரபிற் பிறந்தவள் என்றறிவித்தலே புலவர் கருத்தாகலின் அவள் தந்தை பெயர் கூறாது மாவலி மருமான் மகள் என்றொழிந்தார்.

திருமகள் என்றது செல்வ மகள் எனவும் திருத்தகு தேவி என்றது திருமகள் எனத் தகுந்த தேவி எனவும் வெவ்வேறு பொருள் காண்க. மாவலி மரபு மன்னர் பாணவரசர் எனவும் கூறப்படுவர். அவராவார் வாணகப்பாடி முதலிய இடத்தை ஆட்சி செய்தவர்.

போது - நாளரும்பு. அன்றலரும் அரும்பு என்றவாறு. கொம்பர் - மலர்க்கொம்பு. தும்பி வண்டு என்பன அவற்றின் வகை. யாழ்: ஆகுபெயர். வரியையுடைய குயிலுமாம். மா - சிறப்புமாம். விரை - நறுமணம்.

## இதுவுமது

### கூக - எ0 : புணர்.........என்றும்

(இ - ள்) புணர் துணை நீங்கிய பொய்கை அன்னமொடு மடமயிற் பேடையும் தோகையும் கூடி - தன்னோடு புணரும் காதற்றுணையாகிய பெடையன்னக் பிரியப் பெற்றுப்

பொய்கையின்கண் தனித்திருக்கின்ற அன்னச் சேவலொடு தோகையையுடைய ஆண் மயிலும் அதன் புணர் துணையாகிய மடப்பமுடைய பெடையும் தம்முட் கூடி; ஆங்கு இருசிறை விரித்து எழுந்து உடன் கொட்பன - அவ்விடத்தே தம்மிரு சிறகுகளையும் விரித்தெழுந்து ஒரு சேரச் சுற்றி வருபவற்றை; ஒரு சிறைக் கண்டு ஆங்கு உள் மகிழ்வு எய்தி - ஓரிடத்தே கண்டபொழுது உள்ளத்தே பெரிதும் மகிழ்ந்து; மாமணி வண்ணனும் தம்முனும் பின்னையும் ஆடிய குரவை இஃது ஆம் என நோக்கியும் - நீலமணி போன்ற நிறமுடைய மாயவனும் அவன் தமையனாகிய பலதேவனும் நப்பின்னைப் பிராட்டியும் ஒருங்கு கூடி ஆடிய குரவைக் கூத்தையே ஒக்கின்றது இப் பறவைகள் கூடி ஆடுகின்ற இக் காட்சி என்று நெடும் பொழுது அவ்வழகை நோக்கி நின்றும்; கோங்கு அலர் சேர்ந்த மாங்கனி தன்னை பாங்கு உற இருந்த பல்பொறி மஞ்ஞையை - கோங்க மரத்திலே மலர்ந்திருக்கின்ற ஒரு மலரின் மேலே பொருந்துமாறு அதனயலே நிற்கின்ற மாமரத்திலே காய்த்துத் தூங்குகின்ற முகஞ் சிவந்த கனியையும் அதன் பக்கத்திலே கோங்கங் கொம்பிலே அமர்ந்திருக்கின்ற பலவாகிய புள்ளிகளையுடைய மயிலையும் ஒருங்கே நோக்கி; செம்பொன் தட்டில் தீம்பால் ஏந்திப் பைங்கிளி ஊட்டும் ஓர் பாவை ஆம் என்றும் - சிவந்த பொன்னாலியன்றதொரு தட்டிலே இனிய பாலைப் பெய்து கையிலேந்தித் தான் வளர்க்கின்ற பசிய கிளிக்கு ஊட்டுவாளொரு நங்கையைக் காண்பது போல்கின்றது இக்காட்சி என்று அக்காட்சியை நயந்து நோக்கியும்; என்க.

(வி - ம்) புணர்துணை - புணர்ந்து மகிழ்தற்குக் காரணமான பெடையன்னம். துணை நீங்கிய அன்னம் என்றது சேவலன்னத்தை. இது பலதேவனுக்குவமை. தோகை - ஆண்மயில். இது நீலமணி வண்ணனாகிய மாயவனுக்கும் அதன் பெடை நப்பின்னைப் பிராட்டிக்கும் உவமைகள்.

குரவை - கை கோத்தாடும் ஒரு வகைக்கூத்து.

'மாமணி வண்ணனும் தம்முனும் பின்னையும் ஆடிய குரவை" என்பதனோடு—

"மாயவன்றம் முன்னினொடும் வரிவளைக்கைப் பின்னையொடும்
கோவலர்தஞ் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ்சோர
ஆய்வளைச்சீர்க் கடிபெயர்த்திட் டசோதையார் தொழுதேத்தத்
தாதெருமன் றத்தாடும் குரவையோ தகவுடைத்தே"

எனவரும் சிலப்பதிகாரமும் (கஎ) நினைவு கூரற்பாலதாம்.

மலர்ந்த கோங்கமலர்க்குப் பொன்னுலியன்ற தட்டும் அம் மலர் மேற் பொருந்தத் தூங்கும் மாங்கனிக்குப் பைங்கிளியும் அவற்றின் மருங்கே மரக்கிளையிலமர்ந்திருக்கின்ற மயிலுக்குப் பாவை (பெண்)யும் உவமைகள். பைங்கிளி என்ற குறிப்பாலும் காயென்னுது கனி என்ற தனுலும் முகஞ்சிவந்த கனி என்று கொளக. கனிந்த முகம் கிளியின் அலகிற்கும் பசிய ஏனைய பகுதி கிளியின் உடலிற்கும் உவமைகளாக நுண்ணிதிற் கண்டு கொள்க.

இனி இவ்வுவமையோடு—

> "வண்டளிர் மாஅத்துக் கிளிபோல் காயகிளைத்துணர்"

எனவும், (அகம் - கூஎ)

> "சேடியல் வள்ளத்துப் பெய்தபால் சிலகாட்டி
> ஊடுமென் சிறுகிளி யுணர்ப்பவள் முகம்போல
> ..................................................
> கடிகயத் தாமரைக் கமழ்முகை கரைமாவின்
> வடிதீண்ட வாய்விடூஉம் வயலணி நல்லூர!"

எனவும் வரும் (கலி - எஉ) பிற சான்றோர் கூற்றுக்களும் நோக்கத் தகுவனவாம்.

## இதுவுமது

### எக - எகூ : மணி.........எத்தியும்

(இ - ள்.) மணி மலர்ப் பூம்பொழில் அகவயின் - அழகிய மலர்களையுடைய பூம்பொழிலினுள்ளிடத்தே; பெருமதர் மழைக் கண் மடவோர்க்கு இயற்றிய மாமணி ஊசல் - பெரிய மதர்த்த குளிர்ந்த கண்ணையுடைய உரிமை மகளிர் ஏறி ஆடுதற் பொருட்டு இயற்றப்பட்ட சிறந்த மணிகள் பதித்த பொனனூசலின மேல்; கடுவன் இருந்த பிணவுக் குரங்கு ஏற்றி ஊக்குவது கண்டு நகை எய்தியும் - ஆண் குரங்கு தன் பக்கலிலே இருந்த தன் காதலியாகிய பெண் குரங்கை ஏற்றி வைத்து ஆட்டுவதனைப் பார்த்து நகைத்தும்; பாசிலை செறிந்த பசுங்கால் கழையொடு வால் வீ செறிந்த மராஅங் கண்டு - பசிய இலைகள் செறிந்திருக்கின்ற பச்சை நிறமான தண்டினையுடைய மூங்கிலோடு வெள்ளிய நாண் மலர் செறிய மலர்ந்து நிற்கின்ற வெண்கடப்ப மரத்தினையும் ஒருசேரக் கண்டு இக் காட்சியானது; நெடியோன் மாயவன் முன்னொடு நின்றனன் ஆம் என - நெடுமாலாகிய மாயவன் தன் தமையனாகிய பலதேவனோடு நிற்பவனுடைய தோற்றத்தை இனி ஊட்டுகின்றது என்று இறைஞ்சு கொண்டு; தொடி சேர் செங்கையின தொழுது நின்று ஏத்தியும் - வீர வளையல் இடைந்த

தனது சிவந்த கைகளைக் குவித்து நின்று வாழ்த்தியும் என்க.

(வி - ம்.) மணிமலர் - அழகிய மலர். பிணவுக் குரங்கு - பெண் குரங்கு. பிணவு என்னும் சொல் குரங்கிற் பெண்ணிற்கு வந்தமை தொல்-மரபி-௫௮ ஆம் சூத்திரத்தே ஒன்றிய என்ற இலேசாற் கொள்க.

மடவோர் என்றது உவளகத்து மகளிரை. மணி கூறியதனால் மணி பதித்த பொன்னூசல் என்க. கடுவன் - ஆண் குரங்கு. குரங்குகள் மக்கள் செய்வதனைப் பார்த்தவழி அது போலத் தாமும் செய்யும் இயல்புடையன ஆதல் ஈண்டு நினைக. நெடியோன் - மாயவன். மாயவனுக்கு இலை செறிந்த பச்சை மூங்கில் உவமை. வெள்ளிய மலர் செறிந்த வெண்கடம்பு பலதேவனுக்குவமை. இதனோடு "ஒருகுழை ஒருவன் போல் இணர் சேர்ந்த மராஅமும்" எனவரும் கலியடியையும் (௨௬) நோக்குக. பச்சைமூங்கிலும் வெண்மலர் செறிந்த மராஅமும் ஓரிடத்தே சேர்ந்து நிற்குங் காட்சி மாயவனும் பலதேவனும் ஓரிடத்தே நிற்குங் காட்சி போறலின் அக் கடவுளர்பால் அன்புடைமையின் கைகூப்பித் தொழுதனன் என்றவாறு. தொடி - வீரவலையம்.

## அரசனோடாடும் அரிவையரியல்பு

### ௭௬ - ௯௨ : ஆடல்.........அயர்ந்து

(இ - ள்.) ஆடல் கூத்தினோடு அவிநயம் தெரிப்போர் நாடகக் காபபிய நல் நூல் நுனிப்போர் - கதை தழுவாமல் இசைப்பாட்டின் தாளத்திற் கேற்பக் கால்பெயர்த்திட்டாடுமியல்பினையுடைய ஆடற் கலையினோடு பாட்டின் பொருள் புலப்படக் கை காட்டி அவிநயிக்கும் இசைக்கலையும் நாடக வழக்குப்பற்றி இயற்றப்பட்ட அகப்பொருட் பனுவல்களின் உள்ளுறையும் இறைச்சியுமாகிய நுண்பொருளை நுணுக்கமாக உணர்ந்து கூறும் இயற் கலையுமாகிய மூன்று கலைகளையும் கூர்ந்துணர்ந்தவரும்; பண் யாழ் நரம்பின் பண்ணு முறை நிறுப்போர் - ஏழிசைகளையுமுடைய யாழின் நரம்புகளை வருடிப பண்களை நூன் முறைப்படி எழுவி இசைக்க வல்லாரும்; தண்ணுமைக் கருவிக்கண் எறி தெரிவோர் - தோற் கருவிகளுள் தலையாய மத்தளத்தின் இருமுகத்திலும் இசைகூட்டி அடித்தலை நன்குணர்ந்தவரும்; குழலொடு கண்டம் கொளச் சீர் நிறுப்போர் - வேய்ங் குழலின் இசையோடு தமது மிடற்றிசை பொருந்தும்படி பாடி தாளத்தாலே அளப்பவரும்; பழுநிய பாடல் பலரொடு மகிழ்வோர் - இலக்கணம் நிரம்பி இன்பம் கெழுமிய பண்களைப் பலர் கேட்ப அரங்கிலிருந்து பாடிக் கேட்போர் பலரும் மகிழ்தல் கண்டு அவரினுங் காட்டிற் பெரிதும் மகிழுபவரும்; ஆரம் பரிந்த முத்தம் கோப்போர் - அறுந்த

மாலையினின்றும் உதிர்ந்த முத்துக்களை அழகுறக் கோப்பவரும்; ஈரம் புலர்ந்த சாந்தம் திமிர்வோர் - ஈரமின்றி உலர்ந்த சந்தனச் சுண்ணத்தை வியர்வொழிய மார்பிலே அப்புவோரும்; குங்குமம் கொங்கையின் வருணம் இழைப்போர் - குங்குமத்தைக் கொண்டு முலைகளுக்கு வண்ணந் தீற்றுவோரும்; அம் செங்கழுநீர் ஆய் இதழ் பிணைப்போர் - அழகிய செங்கழுநீரினது அழகிய மலரை மாலையாகத் தொடுப்பவரும்; நல் நெடுங் கூந்தல் நறுவிரை குடைவோர் - இயற்கையழகுமிக்க நெடிய தம் கூந்தலை நறுமணப் புகையிலே மூழ்குவிப்பவரும்; பொன்னின் ஆடியின் பொருந்துபு நிற்போர் - திருமகள் போன்று தமது நிழல் நிலைக்கண்ணாடியிலே பொருந்தும்படி அதனை இதிரே தமதழகைக் கண்டு நிற்பவரும் ஆகிய; ஆங்கவர் தம்மோடு - இனையோரன்ன கலை நலமிக்க மகளிர் பலரோடும் கூடி; அகல் இரு வானத்து வேந்தனின் சென்று விளையாட்டு அமர்ந்து - அகன்ற பெரிய வானுலகத்து வாழும் அமரர் கோமானாகிய இந்திரன் அரம்பையரோடு சென்று கற்பகப் பொழிலில் விளையாடுமாறு போலப் பூம்பொழிலிற் புகுந்து விளையாடல் செய்து என்க.

(வி - ம்.) ஆடல்-தாளத்திற்கேற்ப அடிபெயர்த்து ஆடும் நடனம். அவிநயம்-பாடலின் பொருள் தோன்றக் கை காட்டி வல்லபஞ் செய்தல். நாடகக் காப்பியம் - அகப்பொருட்பனுவல். என்னை? இது நாடக வழக்கும் உலக வழக்குந் தழுவி இயற்றப்படுஞ் செய்யுள் ஆதலின் நாடகக் காப்பியம் என்றார். நுனித்தல் - உள்ளுறையும் இறைச்சியும் குறிப்புமாகிய செய்யுட் பொருளைக் கூர்ந்துணர்ந்து கூறுதல். என்னை?

"கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே"

என்பவாகலின் (தொல் - மெய்ப் - சூ - உ௭) நன்னூல் அறிவோர் என்றது நுனிப்போர் என்றார். எனவே ஈண்டு இயல் இசை நாடகம் என்னும் முத்திறத்துத் தமிழ்க்கலையும் வல்ல மகளிரும் கூறப்பட்டமை யறிக.

தண்ணுமை - மத்தளம். கண் என்றது அதன் இரண்டு முகங்களையும். எறி-எறிதல்; முழக்குதல். கண்ணெறி என்பதனை நெறி எனக் கண்ணழித்துக் கண்களில் இசை கூட்டும் நெறி எனினுமாம். என்றது இரண்டு கண்களினும் சுதி கூட்டும் முறை என்றவாறு. என்னை?

"இடக்கண் இளியாய் வலக்கண் குரலாய்
நடப்பது தோலியற் கருவி யாகும்"

என்பதுமுணர்க. (சிந்தா - செய் - ௧௨௫ - நச்சி - உரை.)

குழல் - வேய்ங்குழல். கண்டம் - மிடறு. குழலிசையோடு மிடற்றிசை பொருந்தப் பாடித் தாளத்தால் அளந்து அறுதி செய்வோர் என்க.

பழுநிய-நிரம்பிய; முற்றிய. பாடல்-இசைப் பாடல்; உருக்கள். ஆரம் - மாலை. பரிந்த முத்து-அறுந்துதிர்ந்த முத்து. விளையாட்டாலின் ஆரம் அறுந்து உதிரும் முத்துக் கோக்கும் மகளிரும் வேண்டிற்று.

ஈரம் புலர்ந்த சாந்தம் - சந்தனச் சுண்ணம். ஆடுங்கால் வியர்வையொழியச் சுண்ணம் அப்புவோர் என்றவாறு. கூந்தலை நறுமணப் புகையில் மூழ்குவிப்போர் என்க. கூந்தலில் விரையூட்டி நீரின் மூழ்கி விளையாடுவோர் எனினுமாம்.

பொன்னின் - திருமகள் போல. இவரும் இன்னோரன்ன பிற மகளிரும் என்பார் ஆங்கவர் தம்மொடு என்றார். வேந்தன் - இந்திரன். வேந்தன் மேய தீம்புன லுலகமும் என்புழி அஃதப் பொருட்டாதலறிக. விளையாட்டயர்ந்து-விளையாடி என்னும் ஒரு சொன்னீர்மைத்து.

## பூம்பொழிலின் இயல்பு

### ௯௩ - ௯௯ : குருந்தும்.........நின்றும்

(இ - ள்.) குருந்தும் தளவும் திருந்து மலர்ச்செருந்தியும் முருகு விரி முல்லையும் கருவிளம் பொங்கரும் - அவ் விளையாட்டில் இளைப்புழிக் குருந்த மர நீழலினும் செம்முல்லைப் பூம்பந்தரின் கீழும் அழகிய மலரையுடைய செருந்தி மரத்தின் நீழலினும் மணம் பாவுகின்ற முல்லைப் பூம்பந்தரின் கீழும் கருவிள மரச் சோலையினூடும்; பொருந்துபு நின்று - சேர்ந்து நின்றும்; திருந்து நகை செய்தும் - விளையாட்டின் வெற்றி தோல்வி பற்றி ஒருவரோடொருவர் அழகிய புன்முறுவல் செய்தும்; குறுங்கால் நகுலமும் நெடுஞ்செவி முயலும் பிறழ்ந்துபாய் மானும் இறும்பு அகலா வெறியும் - குறிய கால்களையுடைய கீரியும் நெடிய செவியையுடைய முயலும் பொள்ளெனத் தம்மைக் கண்டவுடன் திசைமாறி ஓடுகின்ற மானும் குறுங்காட்டைவிட்டு அகலாமல் நிலைத்து வாழின்ற யாடும் ஆகிய உயிரினங்களைக் கண்டுழி; வம் எனக் கூஉய் - இங்கு வாருங்கள் என்று தன் விளையாட்டுத் தோழரை யழைத்து; மகிழ்துணையொடு தன் செம்மலர்ச் செங்கை காட்டுபு நின்றும் - அவ்விடத்தே தோழியரோடு விரைந்து வந்துற்ற தான் மகிழ்தற்குக் காரணமான வாழ்க்கைத் துணைவியாகிய சீர்த்தி என்னும் பெருந்தேவியோடு சேரினும் அவற்றை அவர்க்குத் தன் செந்தாமரை மலர் போன்ற சிவந்த கையாலே காட்டி மகிழ்ந்து நின்றும் என்க.

(வி - ம்.) விளையாட்டயர்ந்து இளைத்துழி என்க. தளவு - செம்முல்லை. செருந்தி - ஒரு மரம். தளவு முல்லை என்பன அவை படர்ந்த பந்தர்க்கு ஆகுபெயர். பொங்கர் - சோலை. விளையாடுவோர் அணி வகுத்துத் தம்முள் மாறுபட்டு நின்று ஆடி வென்றாலும் தோற்றாலும் அவை பற்றிப் பேசி நகுதல் இயல்பாகலின் திருந்து நகை செய்தும் என்றார். திருந்து நகை - எள்ளல் முதலிய குற்றமற்ற நகை எனினுமாம். உடலும் உள்ளமும் ஆக்கமுற்றுத் திருந்துதற்குக் காரணமான நகை எனினுமாம்.

குறுங்கால் நகுலமும் நெடுஞ்செவி முயலும் எனவும் பாய்மானும் அகலா வெறியும் எனவும் வருவனவற்றுள் முரண்அணி தோன்றிச் செய்யுளின்பம் மிகுவித்தல் உணர்க.

நகுலம் - கீரி. இறும்பு - குறுங்காடு. வெறி - யாடு. வம்மென மாதரைக் கூஉய், வரவழைத்து அவர்களில் மகிழ் துணையோடு நின்று அவையிற்றை இன்னின்ன என்று சொல்லிக் கையாற் சுட்டிக் காட்டி என்றவாறு. காட்டுபு - காட்டி.

## பிற விளையாட்டிடங்கள்

### ௪௦௦ - ௪௦௯ : மன்னவன்.........விளையாடி

(இ - ள்.) மன்னவன்றானும் - இவ்வாறு மாதரார் குழுவினோடு விளையாட்டயர்ந்து அவரோடு காட்சி பல கண்டு நின்ற அரசன் பின்னரும்; மலர்க்கணை மைந்தனும் இன் இளவேனிலும் இளங்கால் செல்வனும் - அவ்வுரிமை மகளிரேயன்றி, காமவேளும் ஆடற்கு இனிய இளமையுடைய வேனிலரசனும் இளமையுடைய தென்றலாகிய செல்வனும் உடங்கியைய மாலைப் பொழுதில் மெல்லென ஆடுபவன்; எந்திரக் கிணறும் கல் இடும் குன்றமும் வந்து வீழ் அருவியும் மலர்ப்பூம்பந்தரும் - வேண்டும்பொழுது நீரை இறைப்பவும் வேண்டாத பொழுது கழிக்கவும் ஆகிய பொறியமைக்கப் பெற்ற கிணறுகளின் மருங்கும் கல்லிட்டுக் கட்டப் பெற்ற செய்குன்றுகளின் மருங்கும் வேண்டும் பொழுது வந்து வீழ்கின்ற நீர்வீழ்ச்சியின் மருங்கும் மலர்க் கொடிகள் படர்ந்த நறுமணங்கமழும் பல்வேறு மலர்ப் பந்தரினூடும்; நீர்ப்பரப்பு பொய்கையும் கரப்பு நீர்க்கேணியும் - தண்ணீர்ப் பரப்பினையுடைய நீர் நிலையின் கரைகளிடத்தும் மறைத்து வைக்கப்பட்ட தண்ணீர் ஊற்றுக்களின் மருங்கும்; ஒளித்து உறை இடங்களும் - தேடுவார்க்கு அகப்படாமல் கரந்திருத்தற்கு இயன்ற இடங்களினூடும்; பளிக்கறைப் பள்ளியும் - பளிங்காலியன்ற மண்டபங்களாகிய தங்குமிடங்களும் ஆகிய; யாங்கணும் திரிந்து தாழ்ந்து விளையாடி - பல் வேறிடங்களினும் திரிந்து இருந்தும் மெல்லென விளையாடுதலைச் செய்து என்க.

(வி - ம்.) ௩௩ ஆம் அடி தொடங்கி, ௭௮ - தொழுது நின் றேத்தியும் என்பது முடிய மன்னவன் மகளிரொடு பூம்பொழிலிற் புகுந்து முற்பகலில் ஆங்காங்குச் சென்று அதனழகு கண்டு கண்டு மகிழ் தலும், ௭௯ ஆம் அடி தொடங்கி ௯௫ ஆம் அடிகாறும் மன்னவன் ஆடற் கூத்தியர் முதலிய கலைநலம் மிக்க மகளிரோடு மரநீழலினும் சோலையி னூடும் இளைப்பாறி இருந்து பல்வேறு கலையின்பம் துய்த்திருத்தலும், நண்பகல் நிகழ்ச்சிகள் என்றும், ௯௬ ஆம் அடி தொடங்கி ௧௦௧ ஆம் அடி முடிய அம் மன்னவன் அம் மகளிரொடு தென்றற் காற்றை இனிது நுகர்ந்தவாறே யாங்கணும் மெல்லத் திரிந்தும் தாழ்ந்தும் ஆடிய மென் மையான நிகழ்ச்சிகள் என்றும் நிரலே கூறப்பட்டிருத்தல் குறிக் கொண்டு நோக்குக. ஏன்? இவன் உதய குமரனுடைய தந்தையாகலின் அவன் முதுமைப் பருவத்திற் கேற்ப ஈண்டுக் கூறப்படுவன எல்லாம் காட்சி காண்டலும் வாளாது உலாப் போதலுமாகவே கூறல் வேண் டிற்று.

மாலைப் பொழுதிலே மகளிரொடு ஆடுதற்கியன்ற வேட்கையும் அவ்விளவேனிற் பருவமும் மெல்லிய தென்றற் பூங்காற்றும் யாண்டுந் திரிதரும் மன்னனுக்குப் பேருதவி செய்தலின் அவற்றையும் அவனுடைய விளையாட்டுத் தோழர்களாகவே குறிப்புவமஞ் செய்தார்.

இளவேனில் - சித்திரையும் வைகாசியும் ஆகிய இரண்டு திங்களு மாம். இப் பருவ அழகு மாலையிலேதான் பெரிதும் மாண்புற்றுத் திகழும். பூந்தென்றலும் பிற்பகலிலேதான் இனிதாக இயங்கும். இவற்றைப் பட்டறிவால் உணர்க.

"எந்திரக்கிணறு.........பளிக்கறைப் பள்ளியும்" எனவரும் இப் பகுதியோடு—

"அந்தக் கேணியும் எந்திரக் கிணறும்
தண்பூங் காவும் தலைத்தோன் றருவிய
வெண்சுதைக் குன்றொடு வேண்டுவ பிறவும்
இளையோர்க் கியற்றிய விளையாட் டிடத்த
சித்திரப் பூமி வித்தகம் நோக்கி"

எனவரும் பெருங்கதைப் பகுதி (௧ - ௩௩ : ௩ - ௭.) ஒப்புநோக்கற் பாலதாம்.

எந்திரக்கிணறு-வேண்டுங்கால் நீர் நிரப்பவும் வேண்டாதபொழுது கழிக்கவும் பொறி பொருத்தப்பட்ட கிணறு.

கல்இடும் குன்றம் என மாறுக - கல்லிட்டுக் கட்டப்பட்ட செய் குன்றம் என்க. இக் குன்றத்தின் இயல்பினை —

"வெள்ளித் திரண்மேல் பசும்பொன் மடற்பொதிந்து
அள்ளூறு தேங்கனிய தாம்பொற் றிரளசைந்து
புள்ளூறு பொன்வாழைக் கானம் புடையணிந்த
தெள்ளுமணி அருவிச் செய்குன்றம் சேர்ந்தார்"

எனவரும் சூளாமணி யானும் (௧௧௪௧) உணர்க.

கரப்பு நீர்க்கேணி - நீருண்மை தெரியாமல் மறைக்கப்பட்டுள்ள கேணி.

ஒளித்துறை இடம் - வழியும் எதிர்முட்டும் கிளை வழியும் பலப்பல வாக ஒளிந்து விளையாடற் பொருட்டுச் செய்யப்பெற்ற வழிகள். இவற்றில் கிளைவழி போலத் தோன்றுவன உள்ளே சென்றால் அடைபட்டிருக்கும். இவ் வழியினூடும் கிளை வழிகள் பல காணப்படும். இவ் வழிகளினூடே சென்று ஒளிந்திருப்பாரைக் கண்டுபிடித்தல் அரிது. ஆதலின் ஒளிந்து விளையாடும் இத்தகைய இடத்தையே ஈண்டு ஒளித்துறை இடம் என்றார். பள்ளி - தங்குமிடம்.

திரிந்தும் தாழ்ந்தும் என எண்ணும்மை விரித்தோதுக.

## பைஞ்சேறு மெழுகாப் பசும் பொன் மண்டபத்தில் இந்திர திருவன் சென்றினிதேறுதல்

### ௧௦௭ - ௧௧௯ : மகத.........ஏறலும்

(இ - ள்.) மகத வினைஞரும் மராட்டக் கம்மரும் அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும் - மகதநாட்டுப் பிறந்த மணித் தொழில் வித்தகரும் மராட்டநாட்டுப் பிறந்த பொற் கம்மாளரும் அவந்திநாட்டுப் பிறந்த இரும்புசெய் கொல்லுத் தொழிலாளரும் யவனநாட்டுப் பிறந்த மரங்கொல் தச்சுத் தொழிலாளரும்; தண்தமிழ் வினைஞர் தம்மொடு கூடி - குளிர்ந்த தமிழ் வழங்கும் நாட்டிலே பிறந்த தொழில் வித்தகரோடு கூடி; கொண்டு இனிது இயற்றிய கண் கவர் செய்வினை - மன்னன் கருத்தைத் தெரிந்துகொண்டு இனிதாக இயற்றப்பட்ட காண்போர் கண்ணைக் கவருகின்ற கலையழகு மிளிரும் தொழிற் சிறப்பமைந்ததாய்; பவளத் திரள்கால் பல்மணிப் போதிகை தவள நித்திலத் தாமம் தாழ்ந்த கோணச்சந்தி மாண்வினை விதானத்து - பவளத்தாலியற்றிய திரண்ட தூண்களையும் ஒன்பது வகையான மணிகளும் பதிக்கப்பட்ட போதிகைகளையும் வெள்ளிய முத்துமாலைகள் தூங்காநின்ற மூலைகளாகிய மூட்டுவாய்களையும், மாட்சிமை பெற அமைத்த மேற்கட்டியினையும் உடையதாய்; தமனியம் வேய்ந்த வகை பெறு வனப்பின் - பொன்னாலே கூரை வேயப் பெற்றதுமாய்ப் பல்வேறு வகைப்பட்ட அழகோடு கூடி; பைஞ்சேறு மெழுகா பசும்பொன் மண்டபத்து - பசிய ஆப்பியாலே மெழுகப்படாமல் பசிய பொற்றகட்டாலே தளமிடப்பட்ட மண்டபத்தின்கண்; இந்திர திருவன் சென்று இனிது ஏறலும் - தேவேந்திரன் போன்ற பெரிய செல்வச் சிறப்புடைய அச் சோழ மன்னன் இனிது சென்று ஏறுமளவிலே என்க.

(வி - ம்.) இப் பகுதியோடு—

"யவனத் தச்சரும் அவந்திக் கொல்லரும்
மகதத்துப் பிறந்த மணிவினைக் காரரும்
பாடலிப் பிறந்த பசும்பொன் வினைஞரும்
கோசலத் தியன்ற வோவியத் தொழிலரும்
வத்த நாட்டு வண்ணக் கம்மரும்"

எனவரும் பெருங்கதைப் பகுதி (க. ருஅ : ௪0-௪௪) ஒப்பு நோக்கற் பாலதாம்.

இதனால் மகதவினைஞர் என்றது அந்நாட்டு மணிவினைஞரைஎன்பது பெற்றும். கம்மர் - வண்ணவினைஞர் எனவும் ஈண்டு மராட்டியர் அத்தொழிலில் சிறப்புடையர் எனவும் கொள்க. கொல்லர் - இரும்புத் தொழிலாளர். தச்சர் - மரங்கொல் தச்சர்.

பல நாட்டுக் கலைத்திறமும் ஒருங்கே திகழ வேண்டும் என்னும் கலையுணர்வு காரணமாக மகத முதலிய பிறநாட்டு வினைஞரும் வரவழைக்கப்பட்டுத் தண்டமிழ் வினைஞர் தம்மொடுங் கூட்டி வினை செய்விக்கப்பட்டனர் என்பது கருத்து.

திரள்கால் - திரட்சியுடைய தூண். போதிகை - தூணின் மேல் பொருத்தப்பட்டு உத்தரத்தைத் தாங்குமோருறுப்பு. பன்மணிப் போதிகை என்றதனால் இவ்வுறுப்புப் பொன்னாலியற்றப்பட்டுப் பல்வேறு மணிகளும் பதிக்கப்பட்டிருந்தன என்பது பெற்றும்.

தவளத்திலத் தாமம் - வெள்ளிய முத்துமாலைகள். கோணச் சந்தி - மூலையாகிய மூட்டுவாய். விதானம் சுடு மண்ணோடு முதலியவற்றால் வேயப்படாமல் பொன்னாலியன்ற ஓட்டால் வேயப்பட்ட கூரையையுடைய மண்டபம் என்க.

பைஞ்சேறு என்றது - ஆப்பியை. ஆப்பியால் மெழுக வேண்டாத பசும்பொற் றளமிடப்பட்ட மண்டபம் என்பது கருத்து.

இந்திரதிருவன் - இந்திரன் போன்ற பெருஞ் செல்வமுடைய சோழமன்னன்.

## கோட்டங் காவலர் செயல்

### ககஎ - க௲0: வாயிலுக்கு.........பகைஞர்

(இ - ள்.) வாயிலுக்கு இசைத்து - மன்னவன் இருக்குமிடம் வினவி அப் பசும் பொன் மண்டபத்திற்கு வந்தெய்திய சிறைக் கோட்டங் காவலர் தம் வரவினை வாயில் காவலருக்கு அறிவிக்குமாற்றால்; மன்னவன் அருளால் - அரசனுடைய

கட்டளை பெற்றமையால் மண்டபத்துள்ளே புக்கு; சேய் நிலத்து அன்றியும் செவ்வியின் வணங்கி - தூரிய இடத்திலேயே அவன் திருவடி நோக்கி நிலத்தில் வீழ்ந்து வணங்கியதல்லாமலும் அவன் திருவருள் நோக்கம் தம்மிசை வீழ்ந்த செவ்வியினும் நிலத்தில் வீழ்ந்து வணங்கிக் கூறுபவர்; வாழி எங்கோ - வாழ்க எங்கள் கோமான்!; எஞ்சா மண் நசைஇ இகல் உளம் துரப்ப - ஒரு பொழுதும் குறையாத மண்ணை விரும்பிப் பிறரைப் பகைக்கும் ஊக்கமானது செலுத்துதலாலே; வஞ்சியின் இருந்து வஞ்சி சூடி - வஞ்சி மாநகரத்தினின்றும் வஞ்சிப் பூமாலையைச் சூடி; முறம் செவி யானையும் தேரும் மாவும் மறம்கெழு நெடுவாள் வயவரும் மிடைந்த - முறம் போன்ற செவிகளையுடைய யானைப் படையும் தேர்ப்படையும் குதிரைப் படையும் மறப்பண்புடைய நெடிய வாள் முதலிய படைக்கல மேந்தும் போர் மறவரும் ஆகிய நாற் பெரும் படைகளுஞ் செறிந்த; தலைத்தார்ச் சேனையொடு மலைத்துத் தலைவந்தோர் - தலைமைத் தன்மை பொருந்திய தூசிப்படையோடு வந்து போர் செய்து முற்பட்டு வந்தவராகிய சேர மன்னனும் பாண்டிய மன்னனும் ஆகிய முடிவேந்தர் இருவரையும்; செருவேல் தடக்கை ஆர் புனை தெரியல் இளங்கோன் தன்னால் - போர் வேல் ஏந்திய பெரிய கையையும் ஆத்திப்பூவாற் றொடுக்கப்பட்ட மாலையினையும் உடைய நங்கள் இளைய வேந்தனை ஏவுமாற்றாலே; காரியாற்று சிலை கயல் நெடுங் கொடி கொண்ட - காரியாற்றின்கண் பொருது வென்று அவருடைய விற் கொடி மீன் கொடி ஆகிய அடையாளக் கொடியிரண்டையும் ஒரு சேரக் கைப்பற்றிக் கொண்ட; காவல் வெள்குடை வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி - குடிமக்கட்குத் தண்ணிழல் செய்து பாதுகாக்கும் வெண் கொற்றக் குடையையும் பகைவரைக் கொன்று நூழி லாட்டுதற்கியன்ற வலிய பெரிய கையையும் பெரிய வள்ளன் மையையும் உடைய கிள்ளிவளவனாகிய நங்கள் கோமான்; ஒளி யொடு ஊழிதோறு ஊழி வாழி - புகழோடு ஊழி பலப்பல இனிது வாழ்க; மன்னவர் பெருந்தகை இது கேள் - வேந்தர் வேந்தே எளியேம் விண்ணப்பமிதனைத் திருச்செவி ஏற்றருள்க; நின் பகைவர் கெடுக - நின்னுடைய பகைவர் கெட்டொழிக! என்று வாழ்த்தி முன்னிலைப் படுத்திக் கூறுபவர், என்க.

(வி - ்.) வாயிலுக்கு - வாயில் காவலருக்கு. மன்னவன் அருள் என்றது அவனது கட்டளையை. சேய் நிலத்து அன்றியும் செவ்வியின் வணங்கி என்றது மன்னவன் கட்டளை பெற்று அவனைக் காணச் செல்வோர் அவன் தம்மை நோக்கினும் நோக்காமல் பொது நோக்குடையவனாயிருப்பினும் ஏழு கோல் தொலைவிற்கு இப்பாலே திருவடிநோக்கித் தொழுது நிலத்தில் வீழ்ந்து வணங்கி எழுந்து நிற்பர்,

பின்னர் மன்னவன் தம்மைச் சிறப்பாக நோக்குமாற்றால் செவ்வி பெற்றபொழுதும் மீண்டும் நிலத்தில் வீழ்ந்து வணங்கி யெழுந்தே தாம் கூற வேண்டிய செய்தியைக் கூறுதல் மரபு. இம் மரபு தோன்றச் சேய் நிலத்திலே வணங்கியதன்றி மீண்டும் செவ்வி பெற்ற பொழுதும் வணங்கினர் என்றவாறு. இம் மரபுண்மையை—

"இருந்த மன்னவற் கெழுகோ லெல்லையுட்
பொருந்தல் செல்லாது புக்கவ னிறைஞ்ச
வண்ணமும் வடிவு நோக்கி மற்றவன்
கண்ணி வந்தது கடுமை சேர்ந்ததென்
றெண்ணிய இறைவன் இருகோல் எல்லையுள்
துன்னக் கூஉய் மின்னிழை பக்கம்
மாற்றம் உரையென மன்னவன் கேட்ப
இருநில மடந்தை திருமொழி கேட்டவட்
கெதிர்மொழி கொடுப்போன் போல விறைஞ்ச"

எனவரும் பெருங்கதையாலு முணர்க. (க. சஎ : ௯௨ - கக)

செவ்வியின் வணங்கி என்றது அவன் தம்மைக் குறிக் கொண்டு நோக்கும் செவ்வி பெற்ற பொழுது மீண்டும் வணங்கி என்றவாறு. வணங்கி என்பதனை முன்னும் கூட்டுக.

வஞ்சி சேரமன்னர் தலைநகரம். வஞ்சி சூடி என்றதனால் பாண்டியன் சேரன்பாற் சென்று அவனொடும் அங்கிருந்தே வஞ்சி சூடி வந்தான் என்பது பெற்றாம். சிலையென்றொழியாது கயலும் கூறினமையின் மலைத்துத் தலைவந்தோர் சேரனும் பாண்டியனும் என்பது பெற்றாம். வஞ்சிப்பூச் சூடி என்க. மாற்றார் நிலத்தைக் கவரும் கருத்துடைய மன்னர் வஞ்சிப் பூச்சூடிச் செல்வது மரபு. இதனை—

"வஞ்சி தானே முல்லையது புறனே
எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே"

எனவரும் தொல்காப்பியத்தானும் (புறத்திணை - சூ. எ) அறிக.

ஈண்டும் ஆசிரியர் தொல்காப்பியனார் மொழியை எடுத்துப் பொன் போல் போற்றி "எஞ்சா மண்ணசைஇ" எனப் பொதிந்து வைத்திருத்தலு முணர்க.

வயவர் - போர் மறவர்; தார்ச் சேனை - தூசிப்படை. இளங்கோன் என்றது கிள்ளிவளவன் தம்பியாகிய நலங்கிள்ளியை. காரியாறு - சோணாட்டின்கண் ஒரு யாறு. இதற்குத் திருத்தொண்டர் மாக்கதையில் திருநாவுக்கரசர் வரலாற்றில் வருகின்ற 'திருக்காரிக் கரை' என்பதனை (செய்யுள் கூசஉ) எடுத்துக்காட்டுவாருமுளர். வடதிசைக்கண்ணதாகக் கூறப்படும் இக்காரி(க்கரை) இவ்வரலாற்றோடு பொருந்துமா? என்று ஆராய்ந்து காண்டற்குரியதாம். மற்று, ஈண்டுக் காரியா றென்றதே

இக்காலத்தே கோரையாறென்று வழங்கப்படுகின்றது என்று ஊகிக்க வும் இடனுளது. இந்த யாறு மன்னார்குடி திருத்தருப்பூண்டிக் கூற்றங் களினூடு பாய்கின்றது. மலைத்துத் தலைவந்தோர் பாண்டியனும் சேரனுமாதலின் இங்ஙனம் ஊகிக்கின்றாம்.

அளியும் தெறலும் தோன்ற வெண்குடையும் வலிகெழுதடக்கையும் கூறினர். அவனது வள்ளன்மைச் சிறப்புத் தோன்ற மாவண் கிள்ளி என்றார்.

### கோட்டங் காவலர் கோவேந்தனுக்குக் கூறல்

#### கூஉக - கூஉஞ: யானை..........என்றலும்

**(இ - ள்.)** யானைத் தீ நோய்க்கு அயர்ந்து மெய் வாடி இம்மாநகர்த் திரியும் ஓர் வம்ப மாதர் - யானைத் தீ என்னும் நோயாற் பற்றப்பட்டு அது செய்யும் துயர்க்கு ஆற்றாமல் உடம்பு வாடி இரத்தற் பொருட்டு இப் பெரிய நகரத்தில் தெருக்கள் தோறும் திரிகின்ற இந்நகரத்திற்குப் புதியவளாகிய ஓர் இரவன் மகள்; அருஞ்சிறைக் கோட்டத்து அகவயின் புகுந்து - தப்புதற் கரிய நமது சிறைக் கோட்டத்தினுள்ளே புகுந்து; பெரும் பெயர் மன்ன நின் பெயர் வாழ்த்தி - பெரிய புகழையுடைய அரசே நின் திருப்பெயரை எடுத்துக் கூறி வாழ்த்தி; ஐயப்பாத்திரம் ஒன்று கொண்டு ஆங்கு மொய் கொள் மாக்கள் மொசிக்க ஊண் சுரந்தனள் - பிச்சைப் பாத்திரம் ஒரோவொன்றனைக் கைக் கொண்டு நின்று தன்னைச் சூழ்ந்து கொள்கின்ற ஆற்றுமாக்கள் அனைவர்க்கும் வேண்டுமளவுண்ணும்படி உண்டி வழங்கு கின்றனள். இஃதோர் அற்புதமிருந்தவாறு அறிந்தருள்க என்று சொல்லி; வாழி எங்கோ மன்னவ என்றலும் - வாழ்க எங்கள் கோமானாகிய மன்னவனே என்று வாழ்த்தா நிற்ப என்க.

**(வி - ம்.)** வம்பமாதர் என்றார் அவள் இந்நாட்டினள் அல்லள் புதியவள் என்பது தோன்ற. அவளை ஊர் முழுதும் அறியுமெனினும் அரசன் அறிதற்கு ஏதுவின்மையின், இங்ஙனம் பிச்சை ஏற்றுத் திரிவாள் ஒருத்தி என அறிவித்தனர். பிச்சை ஏற்பவள் ஆகலின் அவளால் தீமையொன்றும் நிகழாதென்று யாங்கள் அவளைத் தடுத்திலம் என்பது தோன்ற, அருஞ்சிறைக் கோட்டத்தகவயிற் புகுந்து என்றார். அவள் தானும் அரசன்பால் நன்மையே நினைப்பவள் என்பது தோன்ற, நின் பெயர் வாழ்த்தி என்றார். நின்பெயர் வாழ்த்தி என்றது சோழமன்னன் மாவண்கிள்ளி நீடுழி வாழ்க என்று வாழ்த்தினள் என்றவாறு.

ஐயப்பாத்திரம் - பிச்சைக்கலம். ஒரு பாத்திரத்தைக் கொண்டே தன்னைச் சூழ்ந்து மொய்த்துக் கொள்வோர்க்கெல்லாம் உண்டி வழங்கு கின்றாள், இஃதோர் அற்புதம் இருந்தவாறு அரசர் பெருமான் அறிந்தருள்க என்று வியப்பறிவித்தபடியாம்.

## மன்னவன் வியந்து வரவேற்றல்

### ௧௩௯ - ௧௪௫ : வருக.........கூறலும்

(இ - ள்.) அரசன் அருள்புரி நெஞ்சமொடு மடக்கொடி வருக வருக என்று கூறலின் - அவ்வற்புதம் கேட்டு வியப்புற்ற அரசன்றானும் அத்தகையார்க்கு நம்மால் இயலும் வகை அருளல் வேண்டும் என்னும் ஆர்வமுடைய நன்னெஞ்சத்தோடு அந்நல்லாள் ஈண்டு வருக! வருக! என்று இருமுறை இயம்பாநிற்றலின்; வாயிலாளரின் மடக்கொடிதான் சென்று - அரசனுடைய வரவேற்பை அறிவித்த வாயிலாளரோடு மணிமேகலை தானும் அரசன் திருமுன் சென்று; ஆய்கழல் வேந்தன் அருள் வாழிய என - அழகிய வீரக்கழல் கட்டிய திருவடியையுடைய அரசர் பெருமானுடைய அருளுடைமை நெடிது வாழ்க! என்று வாழ்த்தா நிற்ப; அரசன் தாங்க அருந் தவத்தோய் நீ யார்? ஏந்திய இ கடிஞை யாங்கு ஆகியது என்று கூறலும் - அது கேட்டு மகிழ்ந்த அம் மன்னவன் தாங்குதற் கரிய தவவொழுக்கத்தையுடைய நங்காய்! நீ யார்? நின் கையிலேந்திய தெய்வத்தன்மையுடைய இத் திருவோடு நின் கையில் எவ்வண்ணம் வந்துற்றது? என்று வினவுதலும் என்க.

(வி - ம்.) வருக வருக என்று இருமுறை அடுக்கிக் கூறியது மன்னனுடைய ஆர்வமிகுதியைக் காட்டும். விரைந்துபோய் அத்தகைய வியத்தகு நங்கையை விரைந்து இங்கு அழைத்து வம்மின் என வாயிலாளர்க்குக் கட்டளையிட்டபடியாம். வாயிலாளர் - ஈண்டுக் கோட்டங் காவலர்.

எளியளாகிய என்னை அழைத்தமைக்குக் காரணமான நின் அருள் வாழிய என்று வாழ்த்தியவாறு. அருளறமே அனைவரும் பேணற்பாலதாகலின் நின்பால் அவ்வருளறம் நிலைத்து வாழ்க என்று வாழ்த்தினள் எனக் கோடலுமாம்.

மணிமேகலை காயசண்டிகை வடிவத்தினும் பிக்குணிக் கோலமே பூண்டிருத்தலின் அவள் வரலாறறியாத மன்னவன் அவளைத் தாங்கருந் தவத்தோய் என்று விளித்தான். தவத்தால் இருத்தி பெற்றார்க்கன்றி இத்தகைய அற்புதச் செயல் நிகழ்த்தலாகாமையின் இங்ஙனம் இனிதின் விளித்தான். மேலும் ஒரு பாத்திரத்தாலே பல்லுயிர் ஓம்புகின்றனள் என்று கேட்டிருந்தமையின் இங்ஙனம் அற்புதம் விளைக்கும் இப் பாத்திரம் எங்ஙனம் நின்னுடையதாகியது என்றும் வினவினன். கூறலும் என்றது வினவலும் என்பதுபட நின்றது.

மணிமேகலை மன்னன் வினாவிற்கு விடை கூறுதல்

க௫௫ - க௬௪ : ஆயிழை.........இதுவென

(இ - ள்.) ஆயிழை கூறும் - அதுகேட்டு மணிமேகலை கூறுவாள்; விரைத்தார் வேந்தே நீ நீடூழி வாழி - மணமிக்க ஆத்தி மாலையையுடைய அரசே நீ நீடூழி காலம் வாழ்வாயாக !; யான் விஞ்சை மகள் விழவு அணி மூதூர் வஞ்சம் திரிந்தேன் - யான் ஒரு வித்தியாதரமகளாவேன், திருவிழாக்களாலே நாடோறும் அழகுறுகின்ற பழைய இம் மாநகரத்தின்கண் யான் இதுகாறும் என்னை இன்னள் என யாருக்கும் அறிவியாமல் வஞ்சித்தே திரிந்தேன் காண்; பெருந்தகை வாழிய - என்னைப் பொருளாக மதித்தழைத்த நின் பெருந்தகைமை வாழ்க !; வானம் வாய்க்க - நின்னாட்டின்கண் மழைவளம் வாய்ப்புடைய தாகுக !; மண் வளம் பெருகுக - நின்னுடைய நாட்டின்கண் வளம்பலவும் பெருகுக !; கோமகற்குத் தீது இன்றாக - இங்கே பெருமானுக்குச் சிறிதும் தீமை இல்லையாகுக; ஈது ஐயக்கடிஞை - என் கையிலேந்திய இப் பாத்திரம் யான் ஏற்றுண்ணும் பிச்சைப் பாத்திரமாகும் ; அம்பலமருங்கு ஓர் தெய்வம் தந்தது - இதுதானும் உலகவறவியின் பக்கத்திலே ஒரு தெய்வத்தால் வழங்கப்பட்டது ; திப்பியம் ஆயது - அக் காரணத்தாலே தெய்வத்தன்மை யுடையதுமாயிற்று; ஆனைத்தீ நோய் அரும்பசி கெடுத்தது - ஆனைத்தீ நோய் என்னும் கொடிய நோய் காரணமாகத் தோன்றிய உய்தற்கரிய பெரும் பசியையும் இது தீர்த்திருக்கின்றது காண்; அப்பாலும் ஊண் உடை மாக்கட்கு இது உயிர் மருந்து என - பசிப்பிணியாலே உடலும் உடைந்து வருந்தி ஆற்றுமாக்கட்கு இப் பாத்திரம் அப்பிணி தீர்த்து உயிர் தந்து ஓம்புமொரு மருந்துமாகும் காண்! என்று கூறுகிறப என்க.

(வி - ம்.) விஞ்சை மகள் - வித்தியாதரமகள் ; மந்திரத்தாலே வேற்றுருக் கொண்டிருக்கும் மகள் - என இருபொருளும் தோன்றுதல் உணர்க.

வஞ்சந்திரிந்தேன் - என்னை இன்னள் என அறிவியாமல் இதுகாறும் வஞ்சகமாகவே திரிந்தேன் எனவும் வஞ்சமாக உருவந்திரிந்தேன் (உருவம் மாறுபட்டேன்) எனவும் இதற்கும் இருபொருள் காண்க.

இனி, கோமகற்கு ஈங்குத் தீது இன்றாக என்றதும் - அரசனாகிய நின்னுடைய மகனும் என் பழைய கணவனுமாகிய உதயகுமரனுக்கு இங்கே தீங்கு நிகழாமைப் பொருட்டே வஞ்சம் திரிந்தேன் எனவும் ஒரு பொருள் தோன்றுமாறும் உணர்க.

நின் மகனுக்கும் தீதின்றாக என்று வாழ்த்தியவாறும் ஆயிற்று. கோமகன் - கோவாகிய மகன் ; அரசனாகிய நின் மகன் உதயகுமரன் என இருபொருளும் காண்க.

அம்பலமருங்கில் ஆபுத்திரனுக்குத் தெய்வந்தந்தது எனவும் எனக்குத் தெய்வந்தந்தது எனவும் இரட்டுற மொழிந்தமையும் காய சண்டிகையின் ஆனைத்தீ நோய் அரும்பசி கெடுத்தது எனவும் ஆனைத்தீ நோயின் அரும்பசியையும் கெடுத்த அற்புதமுடையது எனவும் பிற அயிராவண்ணம் இருபொருள்படுமாறும் உணர்க.

## வேண்டுகோளாகிய வினவும் விடையாகிய வேண்டுகோளும்

### ௧௫௫ - ௧௬௨ : யான்.........வேந்தேன்

(இ - ள்.) வேந்தன் இளங்கொடிக்கு யான் செயற்பாலது என் என்று கூற - அது கேட்ட அரசன் மணிமேகலையை நோக்கி இளமை மிக்க நினக்கு யான் செய்யத் தகுந்த உதவி யாது? என்று வினவா நிற்ப; மெல்லியல் உரைக்கும். அது கேட்ட மணிமேகலை அரசனுக்குக் கூறுவாள் :-சிறையோர் கோட்டம் சீத்து அறவோர்க்கு ஆக்கும் அது வாழியர் என. அரசே நீ எனக்குச் செய்யும் உதவியும் உளது காண்! அஃதாவது சிறையிடப்பட்டோர் உறைகின்ற அச் சிறைக் கோட்டத்தை அவ்விடத்தினின்றும் இடித்து அகற்றிப் பின்னர் அவ்விடத்தைத் துறவறத்தோர் உறையும் தவப்பள்ளியாக அமைக்கும் அதுவே, பெருமான் நீடூழி வாழ்க! என்று சொல்லி வாழ்த்தா நிற்ப; அரசு ஆள் வேந்து - செங்கோன்மை பிறழாது அரசாட்சி செலுத்தும் அக் கிள்ளிவளவன்றானும் இளங்கொடி கூறியாங்குச் செய்குவல் என்றுடம்பட்டு; அருஞ்சிறைவிட்டு - தன் அடிபிழைத்துத் தண்டனை பெற்றிருந்தோரை எல்லாம் தப்புதற்கரிய அச் சிறைக் கோட்டத்தினின்றும் வீடு செய்து; ஆங்குக் கறையோரில்லாச் சிறையோர் கோட்டம் - அவ்விடத்திலே கறை வீடும் செய்யப்பட்டமையின் தண்டனை பெற்ற அரசிறைக் கடனாளரும் இல்லாதொழிந்த சிறையோர் உறையும் அக் கோட்டத்தை; ஆயிழை உரைத்த பெருந்தவர் தம்மால் பெரும் பொருள் எய்த - மணிமேகலையாலே கூறப்பட்ட பெரிய தவத்தையுடைய அறவோரைப் பேணுமாற்றால் எய்தும் அற முதலிய பெருமையுடைய உறுதிப் பொருளை எய்த விரும்பி; அறவோர்க்கு ஆக்கினன் - அத் துறவோர் உறையுளாக மாற்றியருளினன் என்பதாம்.

(வி - ம்.) இளங்கொடி : மணிமேகலை. யான் செயற்பாலது என் என்றது உனது அருளறம் தழைத்தற்கு அரசனாகிய யான் செய்யத் தகுந்த அறக்கடமை என்னை ? என்றவாறு.

மணிமேகலை தான் மேற்கொண்டுள்ள அருளறத்தின் பாற்பட்ட சிறைக்கோட்டஞ் சீத்தலையே தனக்குச் செய்யும் உதவியாகக் கூறிய படியாம்.

சிறைக் கோட்டஞ் சீத்தலாவது தன்னடி பிழைத்துத் தண்டனை பெற்றோரை எல்லாம் விடுதலை செய்துவிடுதல். அடிபிழைத்தாரும் அரசிறை இறுக்காதவரும் ஆகிய இருவகையாரையும் வீடு செய்தான் என்பது தோன்றக் கறையோர் இல்லாச் சிறைக் கோட்டம் என்று விதந்தார். கறை-அரசிற்கு இறுக்கக்கடவ பொருள். இதனால்சிறைவீடும் கறை வீடும் செய்து அருள் அறத்தைத் தனக்காகும் முறையில் அவ்வேந்தனும் மேற்கொண்டனன் என்பது பெற்றும். அரசற்கியன்ற அருளறம் இத்தகையனவாதலை—

"சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதும்
கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மின்
இடுபொரு ளாயினும் படுபொரு ளாயினும்
உற்றவர்க் குறுதி பெற்றவர்க் காமென
யானை யெருத்தத் தணிமுர சிரீஇக்
கோன்முறை அறைந்த கொற்ற வேந்தன்"

எனவும், (சிலப் - உஙு : கஉக - கஙூ)

"சிறையோர் கோட்டஞ் சீமின் யாங்கணும்
கறைகெழு நாடு கறைவீடு செய்ம்மென"

எனவும்; (சிலப் - உஅ: உ0கூ - உ0௪) பிற சான்றோர் ஓதுமாற்றானும் உணர்க.

பெருந்தவர் தம்மால் பெரும்பொருள் என்றது அவர்க்கு உண்டியும் உறையுளும் வழங்கும் நல்வினைப் பயனாக எய்தும் அறம் பொருள் இன்பம் வீடு முதலிய உறுதிப்பொருள்களை. அத்தகைய நல்வினையால் அத்தகைய உறுதிப்பொருள் எய்துதலை இக்காவியத்தில் மணிமேகலையும் மாதவியும் சுதமதியும் முற்பிறப்பிலே அறவோர்ப் பேணிய நல்வினை அவர்கட்கு இப்பிறப்பிலே எய்தி ஆக்கஞ் செய்யுமாற்றானும் அறிக. இக்கருத்தோடு—

"சிவஞானச் செயலுடையோர் கையில் தானம்
  திலமளவே செய்திடினும் நிலமலைபோல் திகழ்ந்து
பவமாயக் கடலின்அழுந் தாதவகை யெடுத்துப்
  பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை அறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
  சரியைகிரி யாயோகந் தன்னினுஞ் சாராமே
நவமாகும் தத்துவஞா னத்தை நல்கி
  நாதனடிக் கமலத்தை நணுகுவிக்குந் தானே"

என வரும் சிவஞான சித்தியார்ச் (சுபக் - உஎஅ) செய்யுள் ஒப்பு நோக்கற்பாலதாம்.

இனி இக் காதையை—

தாரோன் வஞ்சினம் கூறத் தெய்வம் கூறலும் கலங்கி வருந்திப் பெயர்வோன்றன்னைத் தொடரக் கிழிப்ப உயிர்த்துப் போய பின்

மணிமேகலை நுனித்தனரா மென்று வாங்கிப் புகுந்து ஊட்டலும் காவலர் வியந்து இசைத்துமென்றேகி, திருவன் சென்றேறலும் இசைத்து வணங்கி; சுரந்தனள் என்றலும், வருக வருக என்றரசன் கூறலும் மடக்கொடி சென்று வாழிய என நீ யார் யாங்காகியது இக் கடிஞை என அரசன் கூறலும் ஆயிழை உரைக்கும்; வாழி விஞ்சைமகள் யான் திரிந்தேன் வாழிய வாய்க்கப் பெருகுக தீதின்றுக இது ஐய கடிஞை தந்தது ஆயது கெடுத்தது மருந்து என வேந்து விட்டு ஆக்கினன் என இயைத்திடுக.

சிறைக்கோட்டம் அறக்கோட்டமாக்கிய காதை முற்றிற்று.

## ௨௦. உதயகுமரனைக் காஞ்சனன் வாளாலெறிந்த காதை

[இருபதாவது மணிமேகலை காய சண்டிகை வடிவெய்த, காய சண்டிகை கணவனாகிய காஞ்சனன் என்னும் விச்சாதரன் வந்து காய சண்டிகை யாமெனக் கருதி அவள் பின்னிலை விடா உதயகுமரனைப் புதையிருட்கண் உலகவறவியில் வாளாலெறிந்து போன பாட்டு.]

அஃதாவது : மணிமேகலையின் பால் இடங்கழி காம முடைய னாகிய உதயகுமரன் மீண்டும் அவளைக் கைப்பற்றித் தன் பொற் றேரி லேற்றிவரத் துணிந்து பின்னிலை விடானாகி முயலுங்கால் காமசண்டிகையின் கணவனாகிய விச்சாதரன் காய சண்டிகை வடிவினின்ற மணிமேகலை உதயகுமரனோடு நெருங்கிச் சொல்லாடு தல் கண்டும் அவள் தன்னைப் பொருட்படுத்தாமை கண்டும் உதய குமரனுக்கும் தன்மனைவியாகிய காய சண்டிகைக்கும் காமத் தொடர்பிருத்தல் வேண்டும் என்று ஐயுற்று அது தெளிதற் குக் காத்திருந்தானாக, மணிமேகலையே காய சண்டிகையாக மாற்றுருவங் கொண்டிருக்கின்றாள் என்றுணர்ந்த அம் மன்னன் மகன் அவள் செய்தி யறிகுவல் என நள்ளிரவிற் றமியனாய் வந்து உலகவறவியினூடு புகுவானை அவ் வித்தியாதரன் வாளால் வெட்டி வீழ்த்திச் சென்ற செய்தி கூறுஞ் செய்யுள் என்றவாறு.

இதன்கண்—மணிமேகலையின் விருப்பப்படி மன்னவன் கொடுஞ்சிறைக் கோட்டத்தே புத்தருக்குக் கோயிலமைத்தும் அறவோர்க்குப் பள்ளிகளமைத்தும் அட்டிற் சாலையும் அருந்துநர் சாலையும் அமைத்துக் கட்டுடைச் செல்வக்காப்புடையதாகச் செய்த செய்தியும்; உதயகுமரன் மணிமேகலையின் பால் இடங் கழி காமத்தனாய் மதியோர் எள்ளினும் மன்னவன் காயினும் அவள் அம்பலத்தினின்றும் நீங்கிய செவ்வியிற்பற்றி என் பொற்றேர் ஏற்றி அவள் கற்ற விஞ்சையும் கேட்டு அவள் கூறும் அஞ்சொலறிவுரையும் கேட்டு ஆற்றவும் மகிழ்வல் என்று துணிந்து உலகவறவியிற் சென்று ஏறுதலும், காய சண்டிகையின் கணவனாகிய விச்சாதரன் அவளைக் காண்டற்கு விழைந்து புகார் நகரத்தே புக்கு யாண்டும் தேடித்திரிந்து காய சண்டிகை வடிவந்தாங்கி நிற்கும் மணிமேகலையைக் காயசண்டிகை யென்றே எண்ணி அவள் மருங்கே சென்று ஓரே பாத்திரத்தி னின்றும் உணவினை வாரி வாரி அவள் எண்ணிறந்தோர்க்கு

வழங்கும் அற்புதச் செய்தி கண்டு இறும்பூதெய்தி அவனை அணுகி அப் பாத்திரத்தின் வரலாறு வினவுதலும் பழைமைக் கட்டுரை பல பாராட்டிய வழியும் அவள் அவனை விழையாவுள்ளத்தோடு அவ்விடத்தினின்றும் நீங்கி ஆங்கு வந்த உதயகுமரன் பாற் சென்று அவனுக்கு மக்கள் யாக்கையின் இழிதகைமை அறிவுறுத்தற் பொருட்டு அப்பொழுது அவ்வழிச் சென்ற நரை மூதாட்டியைக் காட்டி அவள் உறுப்புகளின் தன்மைகளைச் சுட்டிக்காட்டி—

‘‘தூசினும் மணியினும் தொல்லோர் வகுத்த
வஞ்சந் தெரியாய் மன்னவன் மகனென’’

செவியறிவுறுத்துதலும், அங்ஙனம் அறிவுறுத்துவாளேனும் அவள் அவன்பாற் காமக் குறிப்புடையளாகவே இருத்தலும் காய சண்டிகையின் கணவன் தன் மனைவி தன்னைச் சிறிதும் பொருட்படுத்தாது ஏதிலானோடு காதன் மொழி பேசுகின்றாள் என்று கருதிக் கடுஞ்சினமுடையனாய்ப் பின்னும் அவள் நிலை அறிதற்கு அம்பலத்தில் ஒரு சார் புற்றடங்கு அரவெனப் புகுந்து கரந்துறைதலும்—அரண்மனைக்குச் சென்ற அரசன் மகன் மணிமேகலையின் நிலைமை அறிதற்கு மீண்டும் ஆயிழை யிருந்த அம்பலமணைந்து வேகவெந்தீ நாகங்கிடந்த போகுயர் புற்றளை புகுவான் போல விச்சாதரன் கரந்துறைகின்ற உலக வறவியினூடு புகுதலும் அவனாருனும் இவன் காயசண்டிகையின் பாலே வந்தனன் என்று துணிந்து வெகுண்டு உதயகுமரன் பின் சென்று அவனுடைய மணித்தோள் துணியும்படி வாளால் எறிந்து காயசண்டிகை என்று கருதிய மணிமேகலையைக் கைப் பற்றச் செல்லுதலும் அப்பொழுது கந்திற்பாவை அவனுக்குக் கூறுகின்ற ஊழ்வினை விளைவுகளும்; உண்மையறிந்த விச்சாதரன் கனறிய நெஞ்சொடு விண்வழியே தன்னூர் நோக்கிப் போதலும் பிறவும் கற்போர்க்கு மருட்கைச் சுவை பற்பல இடங்களிலே தோன்றும்படி கூறப்படுகின்றன.

அரசன் ஆணையின் ஆயிழை அருளால்
நிரயக் கொடுஞ்சிறை நீக்கிய கோட்டம்
தீப்பிறப் புழந்தோர் செய்வினைப் பயத்தான்
யாப்புடை நற்பிறப் பெய்தினர் போலப்
பொருள்புரி நெஞ்சிற் புலவோன் கோயிலும்
அருள்புரி நெஞ்சத் தறவோர் பள்ளியும்
அட்டிற் சாலையும் அருந்துநர் சாலையும்
கட்டுடைச் செல்வக் காப்புடைத் தாக
ஆயிழை சென்றதூஉம் ஆங்கவன் தனக்கு
வீயா விழுச்சீர் வேந்தன் பணித்ததூஉம்

சிறையோர் கோட்டஞ் சீத்தருள் நெஞ்சத்
தறவோர் கோட்ட மாக்கிய வண்ணமும்
கேட்டன னாகியத் தோட்டார் குழலியை
மதியோ ரெள்ளினும் மன்னவன் காயினும்
பொதியில் நீங்கிய பொழுதிற் சென்று
பற்றினன் கொண்டென் பொற்றே ரேற்றிக்
கற்றறி விச்சையுங் கேட்டவள் உரைக்கும்
முதுக்குறை முதுமொழி கேட்குவன் என்றே
மதுக்கமழ் தாரோன் மனங்கொண் டெழுந்து
பலர்பசி களையப் பாவைதான் ஒதுங்கிய
உலக வறவியின் ஊடுசென் றேறலும்
மழைசூழ் குடுமிப் பொதியிற் குன்றத்துக்
கழைவளர் கான்யாற்றுப் பழவினைப் பயத்தான்
மாதவன் மாதர்க் கிட்ட சாபம்
ஈரா றாண்டு வந்தது வாராள்
காயசண் டிகையெனக் கையற வெய்திக்
காஞ்சன னென்னும் அவள்தன் கணவன்
ஓங்கிய மூதூர் உள்வந் திழிந்து
பூத சதுக்கமும் பூமரச் சோலையும்
மாதவ ரிடங்களும் மன்றமும் பொதியிலும்
தேர்ந்தவன் திரிவோன் ஏந்திள வனமுலை
மாந்தர் பசிநோய் மாற்றக் கண்டாங்
கின்றுநின் கையின் ஏந்திய பாத்திரம்
ஒன்றே யாயினும் உண்போர் பலரால்
ஆனைத் தீநோய் அரும்பசி களைய
வான வாழ்க்கையர் அருளினர் கொல்லெனப்
பழமைக் கட்டுரை பலபா ராட்டவும்
விழையா உள்ளமொ டவன்பால் நீங்கி
உதய குமரன் றன்பாற் சென்று
நரைமூ தாட்டி ஒருத்தியைக் காட்டித்
தண்ணறல் வண்ணந் திரிந்துவே றாகி
வெண்மண லாகிய கூந்தல் காணாய்
பிறைநுதல் வண்ணங் காணா யோநீ
நரைமையிற் றிரைதோற் றகையின் றாயது
விறல்விற் புருவம் இவையுங் காணாய்
இறவி னுணங்கல் போன்றுவே றாயின
கழுநீர்க் கண்காண் வழுநீர் சுமந்தன
குமிழ்மூக் கிவைகாண் உமிழ்சீ யொழுக்குவ
நிரைமுத் தனைய நகையுங் காணாய்
சுரைவித் தேய்ப்பப் பிறழ்ந்துவே றாயின

இலவிதழ்ச் செவ்வாய் காணு யோநீ
புலவுப் புண்போற் புலால்புறத் திடுவது
வள்ளைத் தாள்போல் வடிகா திவைகாண்
உள்ளூன் வாடிய உணங்கல் போன்றன
இறும்பூது சான்ற முலையுங் காணாய்
வெறும்பை போல வீழ்ந்துவே றாயின
தாழ்ந்தொசி தெங்கின் மடல்போற் றிரங்கி
வீழ்ந்தன விளவேய்த் தோளுங் காணாய்
நரம்பொடு விடுதோ லுகிர்த்தொடர் கழன்று
திரங்கிய விரல்க ளிவையுங் காணாய்
வாழைத் தண்டே போன்ற குறங்கிணை
தாழைத் தண்டின் உணங்கல் காணாய்
ஆவக் கணைக்கால் காணு யோநீ
மேவிய நரம்போ டென்புபுறங் காட்டுவ
தளிரடி வண்ணங் காணு யோநீ
முளிமுதிர் தெங்கின் உதிர்கா யுணங்கல்
பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத் தியாத்துத்
தூசினும் மணியினுந் தொல்லோர் வகுத்த
வஞ்சந் தெரியாய் மன்னவன் மகனென
விஞ்சை மகளாய் மெல்லிய லுரைத்தலும்
தற்பா ராட்டுமென் சொற்பயன் கொள்ளாள்
பிறன்பின் செல்லும் பிறன்போ னோக்கும்
மதுக்கம ழலங்கன் மன்னவன் மகற்கு
முதுக்குறை முதுமொழி எடுத்துக் காட்டிப்
பவளக் கடிகையிற் றவளவாள் நகையுங்
குவளைச் செங்கணுங் குறிப்பொடு வழாஅள்
ஈங்கிவன் காதலன் ஆதலின் ஏந்திழை
ஈங்கொழிந் தனளென இகலெரி பொத்தி
மற்றவள் இருந்த மன்றப் பொதியினுள்
புற்றடங் கரவிற் புக்கொளித் தடங்கினன்
காஞ்சன னென்னுங் கதிர்வாள் விஞ்சையன்
ஆங்கவ ளுரைத்த அரசிளங் குமரனும்
களையா வேட்கை கையுதிர்க் கொள்ளான்
வளைசேர் செங்கை மணிமே கலையே
காயசண் டிகையாய்க் கடிஞை யேந்தி
மாய விஞ்சையின் மனமயக் குறுத்தனள்
அம்பல மருங்கில் அயர்ந்தறி வுரைத்தவிவ்
வம்பலன் றன்னொடிவ் வைகிரு ளொழியாள்
இங்கிவள் செய்தி இடையிருள் யாமத்து
வந்தறி குவனென மனங்கொண் டெழுந்து

வான்றேர்ப் பாகனை மீன்றிகழ் கொடியனை
கருப்பு வில்லியை அருப்புக்கணை மைந்தனை
உயாவுத் துணையாக வயாவொடும் போகி
ஊர்துஞ் சியாமத் தொருதனி யெழுந்து
வேழம் வேட்டெழும் வெம்புலி போலக்
கோயில் கழிந்து வாயில் நீங்கி
ஆயிழை யிருந்த அம்பல மணைந்து
வேக வெந்தீ நாகங் கிடந்த
போகுயர் புற்றளை புகுவான் போல
ஆகந் தோய்ந்த சாந்தல ருறுத்த
ஊழடி யிட்டதன் உள்ளகம் புகுதலும்
ஆங்குமுன் னிருந்த அலர்தார் விஞ்சையன்
ஈங்கிவன் வந்தனன் இவள்பா லென்றே
வெஞ்சின அரவ நஞ்செயி றரும்பத்
தன்பெரு வெகுளியின் எழுந்துபை விரித்தென
இருந்தோன் எழுந்து பெரும்பின் சென்றவன்
சுரும்பறை மணித்தோள் துணிய வீசிக்
காயசண் டிகையைக் கைக்கொண் டந்தரம்
போகுவ லென்றே அவள்பாற் புகுதலும்
நெடுநிலைக் கந்தின் இடவயின் விளங்கக்
கடவு ளெழுதிய பாவையாங் குரைக்கும்
அணுகல் அணுகல் விஞ்சைக் காஞ்சன
மணிமே கலையவள் மறைந்துரு வெய்தினள்
காயசண் டிகைதன் கடும்பசி நீங்கி
வானம் போவழி வந்தது கேளாய்
அந்தரஞ் செல்வோர் அந்தரி இருந்த
விந்த மால்வரை மீமிசைப் போகார்
போவா ருளரெனிற் பொங்கிய சினத்தள்
சாயையின் வாங்கித் தன்வயிற் றிடூஉம்
விந்தங் காக்கும் விந்தா கடிகை
அம்மலை மிசைப்போய் அவள்வயிற் றடங்கினள்
கைம்மை கொள்ளேல் காஞ்சன இதுகேள்
ஊழ்வினை வந்திங் குதய குமரனை
ஆருயி ருண்ட தாயினும் அறியாய்
வெவ்வினை செய்தாய் விஞ்சைக் காஞ்சன
அவ்வினை நின்னையும் அகலா தாங்குறும்
என்றிவை தெய்வங் கூறலும் எழுந்து
கன்றிய நெஞ்சிற் கடுவினை யுருத்தெழ
விஞ்சையன் போயினன் விலங்குவிண் படர்ந்தென்.

---

# ௨௦. உதயகுமரனைக் காஞ்சனன் வாளாலெறிந்த காதை

## உரை

### அரசன் ஆணையாலே சிறைக்கோட்டம் அறக்கோட்டமாக்கப்படுதல்

#### ௧ - ௫: அரசன்.........ஆக

(இ - ள்.) ஆயிழை அருளால் அரசன் ஆணையின் - மணிமேகலையின் அருளுடைமை காரணமாகவும், அவள் வேண்டுகோட்கு இணங்கிய அரசன் இட்ட கட்டளை காரணமாகவும்; நிரயக் கொடுஞ்சிறை நீக்கிய கோட்டம் - தன்னுள் உறைபவர்க்கு நரகம் போன்று பெருந்துயர் செய்கின்ற கொடிய சிறையாகும் தன்மையை நீக்கப்பெற்ற பின்னர் அக் கட்டிடமே; தீப்பிறப்பு உழந்தோர் செய்வினைப் பயத்தால் யாப்பு உடை நற்பிறப்பு எய்தினர் போல - உம்மைச் செய்த தீவினையின் பயனாகத் தீப்பிறப்பிற் பிறந்து அத் தீமையின் பயனை நுகர்ந்து கிடந்தவர் இம்மையிற் செய்த நல்வினைப் பயன் காரணமாக மீண்டும் அந் நன்மையோடு தொடர்புடைய நற்பிறப்பை எய்தி நன்மையே செய்கின்ற மாந்தர் போன்று; பொருள்புரி நெஞ்சின் புலவோன் கோயிலும் - மெய்ப்பொருளையே விரும்புகின்ற பேரறிவுடைய புத்தபெருமானுடைய திருக்கோயிலும்; அருள்புரி நெஞ்சத்து அறவோர் பள்ளியும் - எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அறவோராகிய துறவுடையோர் உறைகின்ற தூய தவப்பள்ளியும்; அட்டில் சாலையும் - ஆருயிர் மருந்தாகிய உண்டி சமைக்கின்ற மடைப்பள்ளியும்; அருந்துநர் சாலையும் - உணவுண்ணுபவர்க்கு வேண்டிய அறக்கோட்டமும் என்னும் பகுதிகளாக; கட்டு உடைச் செல்வக் காப்பு உடைத்து ஆக - கட்டப்பட்டு, இவற்றிற்கின்றியமையாத செல்வமாகிய காவலையும் உடையதாகத் திகழ என்க.

(வி - ம்.) நிரயம் - நரகம். நரகம் போன்று மன்னுயிரை வருத்தும் கொடிய சிறைக்கோட்டம். ஆயிழை அருளாலும் அரசனுடைய ஆணையாலும் இப்பொழுது மன்னுயிர்க்குப் பேரின்பம் தருகின்ற துறக்கம் போலத் திருக்கோயிலும் தவப்பள்ளியும் மடைப்பள்ளியும் உண்ணும் மண்டபமும் ஆகிய பல பகுதிகளாகக் கட்டுதலுடைத்தாய் மேலும் இவற்றிற்கு வேண்டிய செல்வமாகிய காவலையும் உடைய அறக்கோட்டமாகத் திகழ்ந்தது என்றவாறு.

தீப்பிறப்பு - பிறருக்குத் தீமையே செய்யும் இயல்புடைய பிறப்பு. மூற்செய்வினையால் தீப்பிறப்பிற் பிறந்துழந்தோர் இப்பிறப்பிற் செய்த நல்வினையால் நற்பிறப்பு எய்தினவரைப் போல, முன்பு நரகத் துன்பத்தைச் செய்யும் சிறைக்கோட்டம் இப்பொழுது துறக்கவின்பத்தைத் தருமிடமாக மாறியது என்க.

ஓரோவழி மணிமேகலை ஒரு நாள் அதன்கட் புகுந்து ஆற்றுமாக்கட் கெல்லாம் உண்டி கொடுத்து உயிர் ஓம்பிய நல்லறம் நிகழ்தற்கிடமா யிருந்தமையால் அவ்வறத்தின் பயனாக அச் சிறைக் கோட்டம் அறக் கோட்டமாக மாறியது கண்டீர் என்னும் ஒரு குறிப்பும் அதற்குக் கூறிய உவமையாலே கொள்ளக் கிடந்தமையும் நுண்ணிதின் உணரலாம்.

பொருள் புரி நெஞ்சின் புலவோன் என்றது புத்தபெருமானை. பொருள் - மெய்ப்பொருள். அறவோர் என்றது அருளறம் பூண்ட பௌத்தத் துறவோரை.

அட்டிற்சாலை - மடைப்பள்ளி. அருந்துநர்சாலை என்றது உண்ணு மிடத்தை. இவை யெல்லாம் மன்னுயிர்க்கின்பந் தருமிடங்களாத லறிக.

செல்வக்காப்பு - செல்வமாகிய காவல். அஃதாவது அவ்வறக் கோட்டத்தில் இறைவனுக்குப் பூசனையும் அறவோர்க்கும் பிறர்க்கும் உண்டியும் நிகழ்தற்கு அரசன் விட்ட முற்றூட்டாகிய செல்வத்தையே கண்டுச் செல்வக்காப்பு என்றார் என்றுணர்க.

## உதயகுமரன் செயல்

### ௯ - ௧௯ : ஆயிழை.........எழுந்து

(இ - ள்.) மதுக் கமழ் தாரோன் - தேன்மணங் கமழு கின்ற ஆத்திப்பூமாலை யணிந்த அரசிளங் குமரனாகிய உதய குமரன்; ஆயிழை சென்றதூஉம் - அரசன் அழைப்பித் தணுகி மணிமேகலை அவன் திருமுன் சென்ற செய்தியையும்; வீயா விழுச்சீர் வேந்தன் ஆங்கு அவள் தனக்கு பணித்ததூஉம் - இறவாத பெரும்புகழுடைய அரசன் அவ்விடத்தே அம் மணி மேகலைக்குத் தான் செய்யக்கடவது என்? என்று வினவிய செய்தியையும்; சிறையோர் கோட்டம் சீத்து அருள் நெஞ்சத்து அறவோர் கோட்டம் ஆக்கிய வண்ணமும் - மணிமேகலை விரும்பியபடியே அரசன்றானும் சிறையோர் கோட்டம் என்னும் பெயரையே அகற்றி அவ்விடத்தை அருள் பெருகிய நன்னர் நெஞ்சமுடைய துறவோர் உறையும் அறக்கோட்டமாக அமைத்த செய்தியையும்; கேட்டனன் ஆகி - பிறர் கூறக் கேள்வியுற் றுழி; அத் தோட்டு ஆர் குழலியை - என்னை இவ்வண்ணஞ் செய்து மற்றொரு நெறியிலே செல்லுகின்ற அம் மணிமேகலையை; மன்னவன் காயினும் - சான்றோர் என்னை அறிவோர் எள்ளினும் மன்னவன்

இகழ்ந்தாலும் அரசனே என்னை ஒறுத்தாலும்; பொதியில் நீங்கிய பொழுதில் சென்று பற்றினன் கொண்டு என் பொன் தேர் ஏற்றி - அம்பலத்தினின்றும் அகலே செல்லும் செவ்வியில் சென்று கைப்பற்றிக் கொணர்ந்து என்னுடைய பொற்றேரிலே ஏற்றி; கற்று அறிவிச்சையும் கேட்டு அவள் உரைக்கும் முதுக்குறை முதுமொழி கேட்குவன் - அவள் இங்ஙனம் மாயம் பல செய்தற்கெனக் கற்றறிந்திருக்கின்ற வித்தைதான் யாது என்று கேட்டபின் அவள் கூறுகின்ற அறிவுசான்ற முதுமொழிகளையும் கேட்பேன்; என்று மனங்கொண்டு எழுந்து - என்று தன் நெஞ்சினுள்ளே துணிந்துடனே எழுந்து போய் என்க.

(வி - ம்.) ஆயிழை: மணிமேகலை. வீயா - இறவாத. பணித்ததூஉம் - அவள் பொருட்டுப் பணிமாக்கட்குக் கட்டளையிட்டதூஉம் எனலுமாம். தோடு ஆர் குழலி, தோட்டார் குழலி என விகாரம். மதியோர் - அறிவுசான்றோர். பற்றினன் கொண்டு - பற்றிக்கொண்டு. ஊரம்பலத்தே புகுந்து கைப்பற்றுதல் முறைமையன்றென்பது கருதிப் பொதியில் நீங்கிய பொழுதிற் பற்றிக் கொள்வேன் என்றுட்கொண்டபடியாம். ஈண்டுக் காமம் காழ் கொண்டவழி ஆடவர் மடலேறுவர், உயிரும் விடுவர் என்பதற்கு உதயகுமரன் அவளைக் கைப்பற்றுதல் பற்றித் தன்னை மதியோர் எள்ளினும் எள்ளுக, மன்னவன் காயினும் காய்க! என்று துணிதல் சிறந்த எடுத்துக் காட்டாகும். இது காதலின் பொருட்டு மடலேறுதற் கொத்ததொரு துணிவே என்க. என்னை? வாய்மையான காதலுக்கு இடையூறெய்தின் சாதலன்றி வேறுய்தியின்மையால்.

மணிமேகலையின் அருமைப்பாடு கருதிப் பொற்றேர் ஏற்றிக் கொடு வருவல் என்றான். ஓரே பாத்திரங்கொண்டு பலரை யுண்பித்தற்கும் வேற்றுருக் கோடற்கும் யாண்டுக் கற்றனை என்று கேட்டறிகுவ லென்பான் கற்றறிவிச்சையும் கேட்டு என்றான். மற்று அவள் இப்பொழுதும் முதுக்குறை முதுமொழி கூறுதிராள். அக்கூற்று என் கருத்திற்கு முரணுமாயினும் அவற்றை அவள் கூறக்கேட்குங்கால் என் அருந்தேமாந்த ஆருயிர் தளிர்க்குமாதலின் அவற்றையும் கேட்டிடுவேன் என்கின்றான். முதுக்குறை முதுமொழி என்றது முன்னம் அவள் தான் தவந்தாங்கியதற்குக் காரணமாக மக்கள் யாக்கையினியல்பு கூறியதை நினைந்து கூறியபடியாம் (௧௮: ௧௩௬ - ௧௩௮). ஈண்டு அவற்றை இகழும் குறிப்புடன் முதுக்குறை முதுமொழி என்கின்றான். எழுந்து சென்றென்க.

## காயசண்டிகையின் கணவன் செயல்

### ௨௦ - ௩௧: பலர்..........திரிவோன்

(இ - ள்.) பாவை பலர் பசி களைய ஒதுங்கிய உலகவறவியின் ஊடு சென்று ஏறலும் - மணிமேகலை ஆற்றுமாக்கள் பலருடைய அரும்பசியையும் ஒருசேரக் களைந்து மகிழ்வித்தற் பொருட்டுப் புகுந்த உலகவறவியாகிய அம்பலத்தினூடு சென்று

புகுதாவிற்ப; காஞ்சனன் என்னும் - காஞ்சனன் என்னும் பெயரையுடைய (காயசண்டிகையின் கணவனாகிய) விச்சாதரன்; மழை சூழ் குடுமிப் பொதியிற் குன்றத்து கழைவளர் கான்யாறு - முகில் தவழுகின்ற உச்சியினையுடைய பொதியமலை அருகில் மூங்கில்கள் தழைத்து வளருதற்கிடனான காட்டியாற்றின் படுகரிலே; பழவினைப் பயத்தால் - ஊழ்வினை காரணமாக; மாதவன் மாதர்க்கு இட்ட சாபம் ஈர் ஆறு ஆண்டு வந்தது - விருச்சிக முனிவன் என் காதலிக்கு இட்ட சாபம் கட்டி நிற்கும் பன்னீராட்டைக் காலமும் கழிந்து உய்திக் காலமும் வந்துற்றது; காயசண்டிகை வாராள் - காயசண்டிகையோ இன்னும் வந்திலள்; எனக் கையறவு எய்தி - அவட்கென்னுற்றதோ என்று வருந்தி; ஓங்கிய மூதூருள் வந்து இழிந்து - அவள் இருந்த உயர்ந்த புகழையுடைய பழைய நகரமாகிய பூம்புகாரிலே வானவழியே வந்திறங்கி; பூதசதுக்கமும் பூமலர்ச்சோலையும் மாதவர் இடங்களும் மன்றமும் பொதியிலும் தேர்ந்தனன் திரிவோன் - பூதநிற்கும் நாற்சந்தியினும் பூவையுடைய பூம்பொழிலிடத்தும் ஊர்மன்றங்களினும் ஊரம்பலத்திலும் சென்று சென்று அவளைத் தேடித் திரிகின்றவன், என்க.

(வி - ம்.) பலர் - ஆற்றுமாக்கள் பலருடைய. பாவை: காயசண்டிகை வடிவங்கொண்டுள்ள மணிமேகலை. ஊடு - உள்ளே. மழை - முகில். குடுமி - உச்சி. பொதியிற் குன்றம் - பொதியின் மலை. ஈர் ஆறு ஆண்டு என்றது, ஈர் ஆறும் ஆண்டு என்பதுபட நின்றது. அஃதாவது - பன்னிரண்டாம் ஆண்டின் இறுதியும் வந்தது என்றவாறு. அவ்விறுதி அச் சாப வீடு பெறும் நாளாதலின், அவள் சாப வீடு பெற்றிருப்பள் அங்ஙனமாயின் அவள் உடனே ஈண்டு வந்திருப்பளே வாராமைக்குக் காரணம் என்னோ என்று ஐயுற்றுக் கையறவெய்தினன் என்பதாம். அவள் என்னும் சுட்டுப் பெயரை விளக்கத்தின் பொருட்டு இயற்பெயராக்கி உரை கூறப்பட்டது.

புகழான் ஓங்கிய மூதூர் என்க. அஃதாவது - பூம்புகார் நகரம். பூதசதுக்கம் - பூதநிற்குமிடமாகிய நாற்சந்தி. இதனியல்பை—

"தவமறைந் தொழுகுந் தன்மை யிலாளர்
அவமறைந் தொழுகு மலவற் பெண்டிர்
அறைபோ கமைச்சர் பிறர்மனை நயப்போர்
பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளரென்
கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரெனக்
காத நான்குங் கடுங்குர லெடுப்பிப்
பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்"

எனவருஞ் சிலப்பதிகாரத்தால் (௫ : ௧௨௮ - ௧௩௪.) இனிதுணர்க.

மன்றம் - மரத்து நீழலில் ஊர் மக்கள் கூடுமிடம். பொதியில் என்றது உலகவறவியை. தேர்ந்தனன் : முற்றெச்சம்.

## காஞ்சனன் காயசண்டிகை வடிவந்தாங்கிய மணிமேகலையைக் காயசண்டிகை என்றே கருதி அவள் மருங்கு சென்று பழைமைக் கட்டுரை பல பாராட்டுதல்.

௬௧ - ௬௭: ஏந்திள.........பாராட்டவும்

(இ - ள்.) ஏந்திள வனமுலை - காயசண்டிகை வடிவந்தாங்கி உலகவறவியினூடு சென்று பாத்திர மேந்தி மணிமேகலையானவள்; மாந்தர் பசி நோய் மாற்றக் கண்டு — ஆண்டு மாந்தர் பலருடைய பசி நோயையும் உணவீந்து மாற்றுபவளைக் காயசண்டிகையாகவே கண்டு வியந்து; ஆங்கு - அவளிடம் அணுகி அன்புடையோய்!; இன்று நின் கையின் ஏந்திய பாத்திரம் ஒன்றே ஆயினும் உண்போர் பலரால் - இற்றைநாள் நீ நின் கையிலேந்திய பிச்சைப் பாத்திரம் ஒன்றே ஆகவும் அதனிடமிருந்து நீ வழங்கும் உணவினை உண்பவரோ எண்ணிலாரிருக்கின்றனர் இந்நிகழ்ச்சி கண்டு யான் பெரிதும் வியப்புறுகின்றேன் காண்!. ஆனைத்தீநோய் அரும்பசி களைய வான வாழ்க்கையர் அருளினர் கொல் என - இத்தகு தெய்வத்தன்மையுடைய அரும்பெறற் பாத்திரத்தை நினக்குச் சாபத்தாலே எய்திய ஆனைத்தீநோய் காரணமாக நீ எய்துகின்ற தீர்த்தற்கரிய பசி நோயின் துன்பத்தைக் கண்டிரங்கி அதனை நீக்கும் பொருட்டு வானுலகத்தே வாழும் தேவர்கள் வழங்கினரோ? இது நீ பெற்றவாறென் என்று; பழைமைக் கட்டுரை பல பாராட்டவும் - தனது பழைய காதலன்பு தோன்றுதற்குக் காரணமான பொருள் பொதிந்த மொழிகள் பலவற்றையும் கூறி நலம் பாராட்டாநிற்பவும் என்க.

(வி - ம்.) இன்று என்றது இற்றை நாள் வியத்தகு நிகழ்ச்சியொன்றனைக் காணுகின்றேன்! என்பதுபட நின்றது.

வான வாழ்க்கையர் - தேவர்கள். இப்பாத்திரம் தெய்வத்தன்மையுடைத்தாகலின் இது தெய்வத்தாலேயே வழங்கப்பட்டிருத்தல் வேண்டும் என ஊகித்து வினவுவான், "வான வாழ்க்கையர் அருளினர் கொல்" என்று வினவியவாறு. பழைமை - பழைதாகிய காதற்கேண்மை. பாராட்ட - நலம் பாராட்ட. நலம், ஈண்டு பெறலரும் பேறு பெற்றிருத்தலாம்.

### மணிமேகலை அவனை இன்னன் என அறியாளாய் உதயகுமரன்பாற் சென்று அறஞ்செவியறிவுறுத்துதல்

௩௮ - ௪௦ : விழையா.......காட்டி

(இ - ள்.) விழையா உள்ளமொடு அவன் பால் நீங்கி - தன் அறச்செயலிலே கருத்தூன்றியிருந்த மணிமேகலை தன்னை அணுகிய காஞ்சனனையாதல் அவன் கூறிய கட்டுரையையாதல் சிறிதும் விரும்பாத நெஞ்சத்தினளாய் அவனிடத்தினின்றும் விலகி; உதயகுமரன்றன்பாற் சென்று - தன் பழைய கணவனாகிய உதயகுமரனைத் தெருட்டி நன்னெறிப் படுத்தும் கருத்துடையவளாய் அவனை விழைந்த உள்ளத்தோடு அவ்வரசிளங்குமரனை அணுகி; நரை மூதாட்டி ஒருத்தியைக் காட்டி - அவ்வுலகவறவியிலே உறைவாள் ஒரு நரைத்து முதிர்ந்த கிழப்பருவத்தாளைச் சுட்டிக் காட்டிக் கூறுபவள் என்க.

(வி - ம்.) அவன்பால் - காஞ்சனனிடத்தினின்றும். ஆற்றுமாக்களுள் ஒருத்தியாக ஆங்குறைவாள் ஒரு நரை மூதாட்டியைக் காட்டி என்க. அவனுக்கு நல்லறிவு கொளுத்துவான் கூறுபவள் என்க. இவை இசையெச்சம்.

### மக்கள் யாக்கையின் இழிதகைமை

௪௧ - ௬௬ : தண்ணறல்.........உணங்கல்

(இ - ள்.) தண் அறல் வண்ணம் திரிந்து வேறு ஆகி - மன்னவன் மகனே! இம் மூதாட்டியின் கூந்தல் தானும் பண்டு குளிர்ந்த கருமணல் போன்ற நிறமுடையதாகத் தான் இருந்திருத்தல் வேண்டும், இப்பொழுதோ அக் கருநிறம் முழுவதும் மாறுபட்டு அதற்கு முரண்பட்டதாகி; வெண் மணல் ஆகிய கூந்தல் காண் - தூய வெள்ளி மணல் போன்ற நிறமுடைய கூந்தலாகி விட்டதனைக் காண்பாயாக!; பிறை நுதல் வண்ணம் - எண்ணும் பக்கத்துப் பிறைத்திங்கள் போலும் பொலிவுடையது என்று பாராட்டப்படுகின்ற மகளிரின் நுதலின் தன்மை; நரைமையின் திரைதோல் தகைமை இன்றாயது நீ காணாயோ - அவ் வெண்மை நிறத்தோடும் திரைந்த தோலோடும் சிறிதும் அழகில்லாததாகியதனை நீ இவள்பால் கண்டிலையோ?; விறல்வில் புருவம் இவையும் இறவின் உணங்கல் போன்று வேறு ஆயின காணாய் - வெற்றி தருகின்ற வில் என்று பாராட்டப்படுகின்ற புருவங்களாகிய இவை தாமும் இறாமீன் வற்றல் போன்று சுருண்டு அருவருப்புண்டாக்குவனவாய் மாறுபட்டுத் தோன்றுகின்றவற்றையும் காண்பாயாக!; கழுநீர்க்கண் காண் வழுநீர் சுமந்தன - கருங்குவளை மலர் போன்று ஒளியுடையன என்று பாராட்டப் பெற்ற கண்களைப் பார்! பீளையும் நீரும் சுமந்

திருக்கின்றன; குமிழ்மூக்கு இவைகாண் உமிழ்சீ ஒழுக்குவ - குமிழம்பூப் போன்ற மூக்கின் துளைகளாகிய இவற்றை நோக்குதி உமிழுகின்ற அருவருக்கத் தகுந்த சீயைத் துளிக்கின்றன; நிரை முத்து அனைய நகையும் காணாய் - நிரல்பட அமைத்த முத்துகள் என்று பாராட்டப்படுகின்ற பற்களின் இயல்பையும் ஈண்டுக் கண்டறிதி; சுரை வித்து ஏய்ப்பப் பிறழ்ந்து வேறு ஆயின - சுரையினது விதை போன்று நிரந்திருந்து இவையும் பிறழ்ந்து வேறுபட்டன; நீ இலவு இதழ் செவ்வாய் - நீ இலவமலர் போன்று சிவந்த வாய் என்று பாராட்டப்படுகின்ற சிவந்த வாய்; புலவுப் புறத்திடுவது காணாயோ - புலால் நாற்றத்தைப் புறமெங்கும் பரப்புவதனைக் கண்டிலையோ?; வள்ளைத் தாள்போல் வடிகாது இவை காண் உள் ஊன் வாடிய உணங்கல் போன்றன - வள்ளைக் கொடி போன்று வடிந்த அழகிய காதுகள் என்று வண்ணிக்கப் படும் காதுகளாகிய இவற்றை நோக்குதி உள்ளிருந்த ஊன் உலர்ந்துபோன வற்றலைப்போல்கின்றன அல்லவோ?; இறும்பூது சான்ற முலையும் காணாய் - காமுகர்க்கு எப்பொழுதும் வியத்தற் குரியவாகிய இம் முலைகளினியல்பையும் ஈண்டுக் கண்டுணர்தி; வெறும்பை போல வீழ்ந்து வேறு ஆயின - உள்ளீடற்ற தோற் பைகள் போன்று தொங்கி அருவருப்புத் தரும் வேறு தன்மை யுடையன வாயினவன்றோ?; இளவேய்த் தோளும் காணாய் - இளமையுடைய பச்சைமூங்கில் போன்றன என்று பாராட்டப் படும் தோள்களையும் காணுதி; தாழ்ந்து ஒசி தெங்கின் மடல் போல் இரங்கி வீழ்ந்தன - சரிந்து ஒசிந்த தென்னை மடலை போன்று சுருங்கித் தூங்குகின்றனவன்றோ; நரம்பொடு விடு தோல் உகிர்த்தொடர் கழன்று திரங்கிய விரல்கள் இவையும் காணாய் - நரம்பும் அவற்றோடு தொடர்பற்ற தோலுமாய் நகத்தின் வரிசையும் கழன்று வற்றியிருக்கின்ற விரல்களாகிய இவற்றின் இயல்பையும் காண்பாயாக; வாழைத் தண்டே போன்ற குறங்கு இணை தாழைத் தண்டின் உணங்கல் காணாய் - வாழைத் தண்டே போல்வன இவை என்று வண்ணிக்கப்படுகின்ற துடையிரண்டும் தாழைத் தண்டின் வற்றல் போல்கின்றன அவற்றின் இயல்பையும் அறிதி; நீ ஆவக்கணைக்கால் - நீ தானும் அம்புக் கூடு போன்ற அழகுடையன எனினும் கணைக்காலிரண்டும்; மேவிய நரம்போடு என்பு புறங்காட்டுவ காணாயோ - தமக்குப் பொருந்திய நரம்போடு எலும்புகளையும் புறத்தார்க்கும் காட்டுவன ஆதலைக் காண்கின்றிலையோ?; தளிர் அடி வண்ணம் வளி முதிர் தெங்கின் உதிர்காய் உணங்கல் - தளிர்போன்ற மெல்லிய அடிகளின் தன்மை உலர்ந்த முதிர்ந்த தெங்கினின்றும் உதிர்ந்த காயாகிய நெற்றின் தன்மை யுடையனவாதலை; நீ காணாயோ - நீ கண்கூடாகக் காண்கின்றிலையோ என்றான் எனக.

(வி - ம்.) அறல் - கருமணல். நரைமை - வெண்மை. திரை தோல் : வினைத்தொகை. தகை - அழகு. விறல் - வெற்றி. இறவின் உணங்கல் - இருமீன்வற்றல். கழுநீர் - மலர்க்கு ஆகுபெயர். வழுவும் நீரும் என்க. வழு - பீளை. குமிழ் - குமிழம்பூ - மூக்கின்றுளைகளைச் சுமந்தன எனப் பலவறி சொல்லாற் கூறப்பட்டது. நகை - பல். ஏய்ப்ப : உவமவுருபு. புலவு - புலால் நாறுகின்ற. இறும்பூது - வியப்பு. வெறுந் தோற்பை என்க. தாழைத் தண்டின் வற்றல் - உலர்ந்து சுருங்கிய தாழைத் தண்டென்றவாறு. ஆவம் - அம்புக்கூடு. என்பு - எலும்பு. தெங்கின் காய் உணங்கல் என்றது, தென்னை நெற்றினை.

## இதுவுமது

### ௬௯ - ௮௦ : பூவினும்.........காணாயோ

(இ - ள்.) மன்னவன் மகன் - வேந்தன் மகனே!; தொல்லோர் - முன்னையோர்; புலால் பூவினும் சாந்தினும் - மகளிரின் யாக்கையின்கண் இத்தகைய புலால் நாறுமியற்கையை நறிய மணங்கமழும் மலர்களானும் சாந்தம் முதலிய நறுமணப் பொருள்களாலும் ஒல்லுந்துணையும்; மறைத்துத் தூசினும் மணியினும் யாத்து வகுத்த வஞ்சம் தெரியாய் - மறைத்துவிட்டு மேலும் அதன் விகாரங்களை அழகிய ஆடைவகைகளையும் மணி முதலியவற்றாலியன்ற அணிகலன்களையும் அழகாக அணிந்து வைத்து அதனைக் கண்டோர் காமுறும்வண்ணம் அழகுடையதாய் யாப்புறுத்திய வஞ்சகச் செயலையும்; ஆராய்ந்து தெரிந்து கொள்வாயாக; என - என்று சொல்லி; மெல்லியல் விஞ்சை மகளாய் உரைத்தலும் - மணிமேகலை காயசண்டிகையாய் நின்று செவியறிவுறுத்தலும் என்க.

(வி - ம்.) ஈண்டு மணிமேகலை அவன்பால் முற்பிறப்பினின்றும் அடிப்பட்டு வருகின்ற அன்பு காரணமாக அவனுக்கும் மெய்யறிவு கொளுத்தித் தான் செல்லும் நன்னெறிக்கண் ஆற்றுப்படை செய்வான், யாக்கையின் இயல்பினை விதந்தெடுத்துச் செவியறிவுறுத்தியபடியாம்.

யாக்கையின் தன்மையை உள்ளவாறு உணர்ந்தாலன்றி அதன்கண் பற்று அறாது. இவ்வாறு யாக்கையின் இழிதகைமையை இடையறாது சிந்தித்துப் பற்றறுத்தல் வேண்டும் என்பது புத்தருடைய அறிவுரையாகும். இங்ஙனம் சிந்தித்தலை 'அசுபபாவனை' என்று பௌத்த நூல்கள் கூறும். இந்நூலினும்,

"அநித்தம் துக்கம் அநான்மா அசுசியெனத்
தனித்துப் பார்த்துப் பற்றறுத் திடுதல்"

என வருதலறிக. (௩௦ : ௨௫௪ - ௫).

இனி ஈண்டு, பூவினும்......தெரியாய்'' எனவருமிப் பகுதியோடு—

"கூராரும் வேல்விழியார் கோலா கலங்க ளெல்லாம்
தேராத சிந்தையரைச் சிங்கி கொள்ளு மல்லாமல்
நேராயு ணிற்த நிலையுணர்ந்து நற்கருமம்
ஆராய் பவருக்கு அருவருப்ப தாய்விடுமே''

எனவும்,

"வால வயதின் மயக்கு மடந்தையருங்
கால மகன்றதற்பின் கண்டெவரு மேயிகழ
நீலநறுங் குழலு நீடழகு நீங்கியவர்
கோலதொரு கையூன்றிக் கொக்குப்போ லாயினரே''

எனவும்,

"கிட்டா தகன்மின் கிடப்பதிற் பொல்லாங் கென்(று)
இட்டா ரலரேல் இலங்கிழையார் தம்முடம்பிற்
பட்டாடை மேல்விரித்துப் பாதாதி கேசாந்த
மட்டாய் மறைத்துவரு மார்க்கமது வென்கொண்டே''

எனவும்,

"வீசிய துர்க்கந்தம் வெளிப்படுத்தும் மெய்யிலெனக்
கூசி மறைப்பதன்றேற் கோற்றொடியார் அங்கமெங்கு
காசி மணக்க நறுங்குங் குமசுகந்தம்
பூசி முடித்தல்பசி போக்கும் பொருட்டேயோ''

எனவும்,

"மாற்றரிய தமூத்தை வாய்திறக்கு முன்னமெழு
நாற்ற மறைக்கவன்றேல் நாவழித்துப் பல்விளக்கிக்
கோற்றொடியார் நன்னீருங் கொப்புளித்துப் பாகுசுருள்
தீற்றுவது மென்குதலை தீர்க்குமருந் தென்றேயோ''

எனவும்,

"பட்டாடை சாத்திப் பணிமே கலைதிருத்தி
மட்டா யவயங்கண் மற்றவைக்கு மேற்குவண்ணம்
கட்டாணி முத்தும் கனகமணிப் பூடணங்கள்
இட்டால் அலதவருக் கென்னோ வியலழகே''

எனவும் அசுபபாவனைக்கு அற்புதமாக வந்த இச் செய்யுள்களையும் ஒப்பு நோக்கி உணர்க. (மெய்ஞ்ஞான விளக்கம். நிருப - கச - க)

விஞ்சை மகளாய் - காயசண்டிகையாய்.

## காஞ்சனன் உட்கோளும் கரந்துறைவும்

### ௭௧ - ௮௧ : தற்பாரா.........விஞ்சையன்

(இ - ள்.) தன் பாராட்டும் என் சொல் பயன் கொள்ளான் - காயசண்டிகை வடிவத்தோடு நின்று உதயகுமரனுக்கு முதுக்குறை முதுமொழி எடுத்துக்காட்டிய மணிமேகலையின் செயலைக் கண்ட காஞ்சனன் காயசண்டிகையே இங்ஙனம் ஆயினள் என்று கொண்டவனாய்! எனவே! இஃதென்னே! இவள்தான் தன்னை மான அன்புடன் பாராட்டிக் கூறுகின்ற சொற்களின் பயனைச் சிறிதும் கருத்துட் கொள்கின்றிலள்; பிறன் பின் செல்லும் பிறன் போல நோக்கும் - கணவனாகிய என் கண் காணவே பிறனொருவன் பின்னேயே செல்லாநின்றாள் என்னை நோக்குழியும் ஏதிலானை நோக்குமாறு போலவே நோக்குகின்றனள்; மதுக்கமழ் அலங்கல் மன்னவன் மகற்கு முதுக்குறை முதுமொழி எடுத்துக்காட்டி - தேன்மணங் கமழும் ஆத்திப்பூமாலை அணிந்திருக்கின்ற இவ்வரசன் மகனுக்கு இவள் அறிவுரை கூறுவாள் போன்று அறிவுசான்ற பழமொழிகள் பலவற்றை எடுத்துக் கூறுகின்றாளாயினும்; பவளக் கடிகையின் தவள வாள் நகையும் குவளைச் செங்கணும் குறிப்பொடு வழாஅள் - பவளத்துண்டு போன்ற தன் வாயிதழ்களின் மேலே தவழுகின்ற வெள்ளிய எயிற்றின் ஒளி தவழுகின்ற புன்முறுவல் பூத்தலானும் குவளை மலர் போன்ற தன் சிவந்த கண்களிலே காமப் பண்பு ததும்பக் காதற் குறிப்பிற் சிறிதும் வழுவாமல் நோக்குகின்ற நோக்கமுடைமையானும்; ஈங்கு இவன் காதலன் - இந்நகரத்தின்கண் இம்மன்னவன் மகன் இவளுக்குக் காதலன் ஆயினன் என்பது தேற்றம்; ஆதலின் ஏந்திழை ஈங்கு ஒழிந்தனள் என - இங்ஙனம் இருத்தலாலேதான் காயசண்டிகை தனக்கு எய்திய சாபம் தீர்ந்த பின்னரும் தனக்குரிய விச்சாதர நாட்டை வெறுத்து இந்நகரத்திலேயே தங்கினள் என்று கருதியவனாய்; இகல் எரி பொத்தி - மன்னன் மகன்பால் எழுந்த பகைமை காரணமாகத் தன் நெஞ்சத்தே வெகுளித் தீ மூண்டெரியாநிற்ப; காஞ்சனன் என்னும் கதிர் வாள் விஞ்சையன் - காஞ்சனன் என்னும் பெயரையுடைய ஒளிமிக்க வாளையுடைய அவ் விச்சாதரன்; மற்று அவள் இருந்த மன்றப் பொதியில் புறமடங்கு அரவின் புக்கு ஒளித்து அடங்கினன் - அக் காயசண்டிகை தங்கி வதிந்த மன்றமாகிய அம்பலத்தினூடு ஒருசார் புகுந்து புற்றினுள்ளே அடங்கியிருக்கும் பாம்பு போலே தன்னை யாரும் அறியாவண்ணம் கரந்துறைவானாயினன் என்க.

(வி - ம்.) தன் என்றது, காயசண்டிகையை. பிறன் பின் செல்லும் என்றது, கணவனாகிய என்னைக் கண்டு வைத்தும் ஏதிலான் பின் செல்கின்றாள் என்பதுபட நின்றது.

பிறன்போல் என்றதும், கணவனாகிய என்னை ஏதிலானை நோக்குவது போல் நோக்குகின்றாள் என்பதுபட நின்றது. மன்னவன் மகனும் இவள்பால் காதலுடையனாதலின் தனனை மலர் மாலை முதலியவற்றால் அழகு செய்து கொண்டு வந்துளான் போலும் என்னும் தனது ஐயந்தோன்ற உதயகுமரனை மதுக்கமழ் அலங்கல் மன்னவன் மகன் என்றான். இதன்கண் காயசண்டிகை தன்னைக் கைவிட்டு அவனைக் காதலித்தற்குக் காரணமான சிறப்பிது என்பது தோன்ற, பிறன் என்னாது மன்னவன் மகன் என்ற நுணுக்கம் உணர்க. எடுத்துக் காட்டியும் எனல் வேண்டிய இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. பேசுவது ஞானம் இடை பேணுவது காமம் என்று கனல்வான், வாணகையும் செங்கணும் குறிப்பொடு வழாஅள் என்றான். ஈண்டுக் குறிப்பாவது வெள்ளையுள்ளத்தோடு நேரிட்டு நோக்காமல் கள்ளவுள்ளத்தோடு பாராதாள் போன்று பார்த்தல். ஈண்டு மணிமேகலை அவன்பாற் காதலன்புடையள் ஆதலின் தன் காதல் அவனுக்குத் தோன்றாமைப் பொருட்டுக் கள்ளத்தோடே நோக்கினள் என்பது இக் காஞ்சனன் கூற்றால் யாமும் உணர்கின்றோமல்லமோ!

ஈண்டு இவன் அவட்குக் காதலன் என்பது தேற்றம் என அறுத்து முடித்திடுக. காதலன் என்றது இகழ்ச்சி, ஏந்திழை : காயசண்டிகை. இவள் என்னும் பொருட்டாய் நின்றது. இகல் - பகைமை; ஆகுபெயராய்ச் சினத்தைக் குறித்து நின்றதெனினுமாம்.

மன்றப் பொதியில் : இருபெயரொட்டு. அவள் : காயசண்டிகை. அரவம் தன்னைப் பிறர் அறியாவகை உறையுமிடத்தே கரந்துறையும் இயல்பிற்று ஆதலும், 'நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்' என்பதனாலு புணர்க. பின்னர் அவன் செயலுக்கியன்ற கருவியும் அவன் பாவிருந்தமை தோன்றக் கதிர்வாள் விஞ்சையன் என்று விதந்தார். என்னை? படைகொண்டார் நெஞ்சம் நன்றூக்காதாகலின் படையுண்மையையும் விதந்தோதினர்.

## உதயகுமரன் உட்கோளும் செயலும்

### அஉ - கூ௩ : ஆங்கவள்.........போகி

(இ - ள்.) ஆங்கு அவள் உரைத்த அரசிளங்குமரனும் - அவ்விடத்திலே மணிமேகலையாலே அறிவுரை கூறப்பட்ட மன்னவன் மகனாகிய இளமைமிக்க உதயகுமரனானும்; களையா வேட்கை கையுதிர்க் கொள்ளான - ஊழ்வினையின புணர்ப்பாதலாலே தன்னறிவினாலே சிறிதும் நீக்கலாகாத கழிபெருங் காம வேட்கை காரணமாக அவளைக் காயசண்டிகை என்றே கருதிக் கைவிட்டொழிய மாட்டானாகித் தன்னுள்ளே ஆராய்ந்து துணிபவன்; வளைசேர் செங்கை மணிமேகலையே - மாணிக்கத்

யானும் பொன்னானுமியன்ற வளையல்கள் அவாவிச் சேர்ந்த இளைய அழகிய சிவந்த கைகளையுடைய மணிமேகலை தானே; மாயவிஞ்சையின் காயசண்டிகை ஆய் மனம் மயக்குறுத்தனள் - தான் கற்றுள்ள வேற்றுருக் கோடற்கியன்ற மாய மந்திரத்தாலே காயசண்டிகை வடிவந்தாங்கியவளாகிப் பிச்சைப்பாத்திரத்தை ஏந்தி என் முன் வந்து தன முதுக்குறை முதுமொழிகளாலே என் மனத்தைப் பின்னும் மயக்குவித்தனள் ஆதல் வேண்டும்; அம்பல மருங்கில் அயர்ந்து அறிவு உரைத்த இவ்வம்பலன் தன்னொடு வைகிருள் ஒழியாள் - உலகவறவியின்கண் இவளைக் காயசண்டிகை என்று கருதி நெஞ்சம் வருந்த அறிவுரை கூறிய இப் புதியவனோடு இற்றை நாள இருள்மிக்க இவ்விரவினைக் கழித்தற்கொருப்படாள்; இந்த இவள் செய்தி - யான் மணிமேகலையே என்று கருதுகின்ற இவளுடைய செயலை; இடையாமத்து இருள் வந்து அறிகுவன் எனமனங் கொண்டு எழுந்து - இற்றைக்கு நள்ளிரவிலே இருளினூடே வந்து ஒற்றி இவள் யார் என நன்கு அறிந்து கொள்வேன் என்றுட்கொண்டு அவ்விடத்தினின்றும் பெயர்ந்து; வான தேர்ப்பாகனை மீனதிகழ் கொடியனைக் கருப்பு வில்லியை அருப்புக்கணை மைந்தனை - தன்னை இடையறாது வருத்துபவனும வானத்தே இயங்கும் தென்றல் தேரினையும் மீன் எழுதப்பட்டு விளங்கும் கொடியையும் கரும்பாகிய வில்லையும் மலராகிய அம்புகளையும் உடைய ஆற்றல் மிக்கவனுமாகிய காம வேளையே; உயாவுத் துணையாக - தன் ஆராய்ச்சிக் குற்ற துணைவனாகக் கொண்டு; வயாவொடும் போகி - மிக்க காம வேட்கையொடு தன் மாளிகைக்குச் சென்று; என்க.

(வி - ம்.) அவள் : மணிமேகலை; உரைத்த - உரைக்கப்பட்ட. கையுதிர்க் கொள்ளல் - கைவிட்டொழிதல். தன் மனக்கண்ணாலே மணிமேகலையின் செங்கையில் மணியாலும் பொன்னானுமியன்ற வளையல்களையும் செறித்து அதன் அழகைச் சுவைப்பவன் அது தோன்ற, வளைசேர் செங்கை மணிமேகலை என்றான். இங்ஙனம் கற்பனையாகச் சுவைப்பது காமுற்றோரியல்பு. மணிமேகலையே என்புழி ஏகாரம் தேற்றப் பொருட்டு: பிரிநிலைப் பொருளும் பயந்து நின்றது. மாய விஞ்சை - வேற்றுருக் கொள்ளுதற்கியன்ற மந்திரம்.

மணிமேகலையாயின் இரவில் இப் புதியவனோடு தங்கியிராள் என்றவாறு. இஃது ஐயந்திர்தற்குக் கருவி கூறியவாறாம். வம்பலன் - புதியவன். வைகு இருள் - தங்கிய இருளையுடைய இரவு. வைகறை எனல் ஈண்டைக்குப் பொருந்தாது. இவள் என்றது, தனக்கு ஐயப்புலமாகிய இவள் என்றவாறு. அறிகுவன் என்றது ஐயமற அறிவேன் என்றவாறு.

காம வேள் இடையறாது தன்னோடிருந்து தன்னை வருத்துதலின் அவனையே துணையாகக் கொண்டு சென்றான் என்றார்; பிறிதொரு துணை

பெறாது தனியே சென்றான் என்பது கருத்து. உயாவுத்துணை - வினவிக் காரியந் தெரிதற்கியன்ற துணைவன். வயா - ஈண்டுக் கழிபெருங் காம வேட்கை.

### உதயகுமரன் நள்ளிரவில் ஊழ்வலியாலே உலகவறவியினூடு சென்றேறுதல்

கூ௪ - ௧௦௧: ஊர்துஞ்சு..........புகுதலும்

(இ - ள்.) ஊர்துஞ்சு யாமத்து ஒரு தனி எழுந்து - மூதூரின்கண் வாழும் மக்களையுள்ளிட்ட உயிரினமெல்லாம் உறங்கிக் கிடக்கின்ற இரவின் இடையாமத்திலே அவ்வரசிளங் குமரன் தான் கருதியாங்குப் பிறிதொரு துணையும் நாடாது தான் மட்டுமே தமியனாய்த் தன் மாளிகையினின்றும் எழுந்து; வேழம் வேட்டு எழும் வெம்புலி போல - யானையைப் புடைத்துத்தின்ன அவாவிச் செல்லுகின்ற வெவ்விய புலி பதுங்கிச் செல்லுமாறு போலே தன் செலவினைப் பிறர் அறியாவண்ணம் கரந்து சென்று; கோயில் கழிந்து வாயில் நீங்கி ஆயிழை இருந்த அம்பலம் அணைந்து - அரண்மனையினின்றும் புறப்பட்டு வாயில் காவலரும் காணா வண்ணம் பெருவாயிலையுங் கடந்து போய் மணிமேகலை இருந்த அம்பலத்தை அணுகி; வேகவெந்தீ நாகம் கிடந்த போகு உயர் புற்று அளை புகுவான் போல - விரைந்து கொல்லும் வெவ்விய நச்சுப் பாம்பு கரந்து கிடக்கும் மிகவும் உயர்ந்துள்ள புற்றின்கண் அமைந்ததொரு பெரிய வளையினூடு புகுபவனைப் போன்று; ஆகம் தோய்ந்த சாந்து அலர் உறுத்த ஊழ் அடியிட்டு அதன் உள் அகம் புகுதலும் - தன் மெய்யிற் பூசப் பெற்ற சந்தனத்தின் நறுமணமே புறத்தார்க்குத் தன் வரவினை அறிவுறுத்தா நிற்பவும் தன் வருகையைப் பிறர் அறியாதிருக்கும் முறைமையாலே ஒலியவித்து அடிபெயர்த்து அவ்வம்பலத்துள்ளே புகுமளவிலே என்க.

(வி - ம்.) போகித் தன் பள்ளியிலே கிடந்தவன் தான் கருதிய வண்ணமே ஊர்துஞ்சியாமத்து ஒரு தனி எழுந்து என்க. வாள் வேல் முதலிய படைக்கலத்தின் துணையுமின்றிச் சென்றமை கருதித் தனி எழுந்தான் என்னாது ஒருதனி எழுந்து என்று தனிமையை விதந்தார். தன் வருகையைத் தான் வேட்கும் வேழமும் அறியாவண்ணம் போதலும் அஞ்சாது போதலும் வேட்கையொடு போதலும் நள்ளிரவிற் போதலும் ஆகிய பொதுத்தன்மைகள் பலவும் கருதி வேழம் வேட்டெழும் வெம்புலியை உவமம் கொண்டனர். கோயிலையும் வாயிலையும் பிறர் அறியாவண்ணம் கடந்து நீங்குதலின் அருமை தோன்ற அவற்றைத் தனித்தனி எடுத்தோதினர். ஆயிழை : மணிமேகலை.

முன்னம் காஞ்சனன் அவளிருந்த மன்றப் பொதியிலுட் புற்றடங் கரவிற் புக்கொளிந்தடங்கினன் என்றதனை மீண்டும் நினைவுறுத்தியது.

வேண்டாகூறி வேண்டியது முடித்தல் என்னும் உத்தி. என்னை? வேக வெந்தீ நாகம் கிடந்த போகுயர் புற்றளை புகுவான் போல என்புழிப் பயில்வோர் நெஞ்சத்தே அவலச் சுவை இரட்டிப்பாதல் நுண்ணிதின் உணர்க.

சாந்தலர் உறுத்தவும் அஃதுணராது அடியிடுதலை ஒளியின்றிச் செல்வோர் செல்லும் முறைப்படி மெத்தென்று இட்டுச் சென்றனன் என்றிரங்குவார், சாந்தலர் உறுத்த ஊழ் அடியிட்டு என்றார். இப்பொருட்கு உறுத்தவும் எனல் வேண்டிய எச்சவும்மை தொக்கதாகக் கொள்க.

இனி, ஊழ் தானே அவனை அவ்வாறு செலுத்த அடியிட்டுப் புகுதலும் என்னும் பொருளும் தோன்ற ஊழடியிட்டு என இரட்டுற இயம்பினர்.

சாந்தலர் உறுத்த என்றது காஞ்சனன் அவன் வரவினைச் சந்தனத்தின் நறுமணத்தாலறிந்தனன் என்றற்குக் குறிப்பேதுவாய் நின்றது. ஈண்டு உதயகுமரன் தன் வருகையைப் பிறர் அறியாவண்ணம் செல்ல வேண்டும் என்னும் கருத்தினனாய்ச் சென்றானேனும் அவன் வரவினைக் காஞ்சனனுக்கு அறிவுறுத்தும் கருவியொன்றனை அவன் பாலே அவனது ஊழ்வினை கூட்டி வைத்திருந்தமையை எண்ணுங்கால்—

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்" (குறள் - ௩௮0)

எனும் திருக்குறளும் நம் மெண்ணத்தின்கண் முகிழ்ப்பதாம்.

## காஞ்சனன் உதயகுமரனை வாளால் எறிதல்

### ௧0௨ - ௧0௯: ஆங்கு.........புகுதலும்

(இ - ள்.) ஆங்கு முன் இருந்த அலர்தார் விஞ்சையன் அம்பலத்தினூடே முன்னரே காயசண்டிகையின் செயலை ஒற்றியறிதற்குக் காத்திருந்த மலர்ந்த மாலையையுடைய வித்தியாதரனாகிய காஞ்சனன் உதயகுமரனுடைய வரவு கண்டவுடன்; ஈங்கு இவன் இவள்பால் வந்தனன் என்றே - இவ்வம்பலத்தின்கண் இம்மன்னவன் மகன் காயசண்டிகையின் பொருட்டே வந்துள்ளான் என்று ஐயமறத் துணிந்தவனாய்; இருந்தோன் வெம்சின அரவம் நஞ்சு எயிறு அரும்பத் தன் பெரு வெகுளியின் எழுந்து பை விரித்தென எழுந்து பெரும்பின் சென்று அவன் சுருங்கு அறை மணித்தோள் துணிய வீசி - காத்திருந்த அக் காஞ்சனன் வெவ்விய வெகுளியையுடைய நாகப் பாம்பு தன நச்சுப்பற்கள் கிளரும்படி தன் பெரிய வெகுளியோடே சீறி எழுந்து தனது படத்தை விரித்தாற் போன்று பெரிதும் சினந்தெழுந்து உதயகுமரனை முதுகுப்புறமாகப் பெரிதும் அணுகிச் சென்று அவனுடைய வண்டுகள் மூசும் மலர்

மாலையணிந்த அழகிய தோள் துணிபடும்படி தன் கதிர்வாளால் வெட்டி வீழ்த்திப் பின்னர்; காயசண்டிகையைக் கைக்கொண்டு அந்தரம் போகுவல் என்று அவள்பால் புகுதலும் – தன் மனைவியாகிய காயசண்டிகையைக் கைப்பற்றிக் கொண்டு வான் வழியே என்னூர்க்குப் போவேன் என்று கருதியவனாய்க் காயசண்டிகை வடிவத்தோடிருந்த மணிமேகலையிருந்த இடத்தை நோக்கிப் போகுமளவிலே என்க.

(வி - ம்.) ஊழ் - முறைமை; ஊழ்வினையுமாம். விஞ்சையன் - விச்சாதரனாகிய காஞ்சனன். இவன் - இளவரசன் மகன். இவள்பால் வந்தனன் என்றது இடக்கரடக்கு. வீசிவிட்டுப் பின்னர் என்க. அவள்பாற் புகுதலும் என்புழி, அவள் என்றது காயசண்டிகை வடிவிலிருந்த மணிமேகலையை.

## கந்திற்பாவை காஞ்சனனுக்குக் கூறுதல்

### கக0 - கஉக: நெடுநிலை.........அடங்கினள்

(இ - ள்.) நெடுநிலைக்கந்தின் இடவயின் விளங்க கடவுள் எழுதிய பாவை ஆங்கு உரைக்கும் - நெடிதாக உயர்ந்து நிற்கும் தூணில் ஓரிடத்தே விளக்கமாகக் கடவுள் தன்மையோடு பண்டு மயனாற் பண்ணிய பாவையின்கண் நீங்காது நிற்கும் தெய்வம் அக் காஞ்சனனுக்குக் கூறுகின்றது:-விஞ்சைக் காஞ்சன அணுகல் அவள் மணிமேகலை ...மறந்து உரு எய்தினள் அணுகல் - விச்சாதரனே! அவளை அணுகாதே கொள்! அங்கிருப்பவள் நின் மனைவியாகிய காயசண்டிகையல்லள், பின்னை யாரோ வெனின்; மணிமேகலை-மணிமேகலை என்னும் பிக்குணிகாண்! அவளை அணுகாதே கொள்! அவள் காயசண்டிகையின் உருவத்தைத் தான் கரந்துறையும் உருவமாக மேற்கொண்டிருக்கின்றனள் காண்!; காயசண்டிகை தன் கடும்பசி நீங்கி வானம் போவுழி - இனி நின் காதலியாகிய காயசண்டிகை தன் சாபம் நீங்குழி இவளிட்ட ஆருயிர் மருந்தையுண்டு தான் உழந்த கடிய பசியாகிய ஆனைத் தீ நோய் நீங்கி வான் வழியே நும்மூர் நோக்கிப் போகும் பொழுது; வந்தது கேளாய் - அவளுக்கு வந்த துன்பச் செய்தியைக் கூறுவேன் கேட்பாயாக!; அந்தரஞ் செல்வோர் - வான் வழியே செல்லுமியல்புடைய வானவரும் முனிவரும் பிறரும் யாவரேனும்; அந்தரி இருந்த விந்தமால் வரை மீமிசைப் போகார் – கொற்றவையாகிய இறைவி எழுந்தருளியிருக்கும் விந்த மலையின் உச்சிக்கு நேர் மேலே பறந்து செல்லார், அதனை வலங்கொண்டு விலகியே செல்வார்காண்!; போவார் உளர் எனின் -

இச் செய்தி யறியாமல் யாரேனும் அவ் விந்தத்தின் உச்சிக்கு மேலே பறந்து செல்வார் உளராய பொழுது; விந்தம் காக்கும் விந்தாகடிகை பொங்கிய சினத்தள் - அவ் விந்த மலையினைக் காத்திருக்கின்ற விந்தாகடிகை என்னும் தெய்வம் மிகுந்த சினங் கொண்டவளாய்; சாயையின் வாங்கித் தன் வயிற்று இடூஉம் - அவருடைய நிழலையே பற்றியிழுத்து அவரைத் தன் வயிற்றினூடே போகவிட்டுக் கொள்ளும்; அம் மலைமிசைப் போய் அவள் வயிற்று அடங்கினள் - காயசண்டிகையும் தன் அறியாமை காரணமாக அவ் விந்த மலையுச்சிக்கு மேலாகச் சென்று அவ் விந்தாகடிகையின் வயிற்றிலே அடங்கி யொழிந்தனள் காண்! என்று அறிவித்து என்க.

(வி - ம்.) விளங்க என்றது எதிர்கால நிகழ்ச்சிகள் விளங்க வேண்டி என்றவாறுமாம். கடவுள் - கடவுட்டன்மையோடு; கடவுட்டச்சன் எழுதிய பாவை எனலுமாம். விந்தாகடிகை என்பது அந்தரியின் மற்றொரு பெயர் என்பாருமுளர். விந்தாகடிகை வாங்கி வயிற்றிடூஉம் என்க. அவள் : விந்தாகடிகை. அடங்கினள் என்றது அவ்வாற்றாலிறந்தாள் என்றவாறு.

## காஞ்சனன் கருத்தழிந்து தன்னூர்க்குச் செல்லுதல்

௧௨௨ - ௧௨௯ : கைம்மை.........படர்ந்தேன்

(இ - ள்.) காஞ்சன கைம்மை கொள்ளேல் - காஞ்சனனே! இவள் நின் மனைவி யல்லளாகலின் நின் னெஞ்சத்தே சிறுமை கொள்ளாதொழிக; விஞ்சைக் காஞ்சன - விச்சாதரனாகிய காஞ்சனனே இன்னு மொன்று கூறுவல்; இது கேள் - இதனையும் கேட்பாயாக!; உதயகுமரனை ஊழ்வினை வந்து இங்கு ஆருயிர் உண்டது ஆயினும் - உதயகுமரனாகிய இவ்வரசிளங்குமரனை அவன் முற்பிறப்பிலே செய்த பழவினையே செவ்வியுற்று வந்து இவ்விடத்திலே அவனது அரிய உயிரைப் பருகியது, அங்ஙன மிருப்பினும்; அறியாய் வெவ்வினை செய்தாய் - நீ தானும் நன்கு ஆராய்ந்தறியாமல் தீவினை யொன்றனை ஈண்டுச் செய்தொழிந்தமையின்; அவ்வினை நின்னையும் அகலாது ஆங்கு உறும் - அத் தீவினை தானும் நின்னை விட்டகலாமல் அவ்வாறே செவ்வி பெற்றுத் தன் பயனை ஊட்டுதற்கு நின்பால் வந்துறாமற் போகாது; என்று இவை தெய்வம் கூறலும் - என்று அறிதற்கரிய இச் செய்திகளை அக் கந்திற்பாவை யிடத்துறையும் தெய்வமானது கூறா நின்றவளவிலே; கன்றிய நெஞ்சில் கடுவினை உருத்து எழ - முன்னம் உதயகுமரனைச் சினந்த தன் நெஞ்சினுள்ளே தான் அறியாமல் செய்த கொலையாகிய இக் கொடிய தீவினையானது சினந்தெழுந்து சுடா நிற்ப; விஞ்சையன் எழுந்து

விண் விலங்கு படர்ந்து போயினன் - விச்சாதரனாகிய அக்காஞ்சனன் பெரிதும் வருந்தி மேலே உயர்ந்தெழுந்து வானினூடே குறுக்காக இயங்கித் தன்னூர் நோக்கிச் சென்றனன்; என்பதாம்.

(வி - ம்.) கைம்மை என்றது சிறுமை என்னும் பொருட்டாய்த் தனக்குரியளல்லாதாளைக் கைப்பற்றக் கருதிய தீயகருத்தின் மேனின்றது. வினைக்கு அறிவிருந்தும் சினம் காரணமாக ஆராயாது தீவினை செய்தனை ஆகலின் அது தன் பயனை ஊட்டாது கழியாது என்பதுபட "அறியாய் வெவ்வினை செய்தாய் அவ்வினை நின்னையும் அகலாது ஆங்குறும்" என்று கந்திற்பாவை அறிவுறுத்துகின்றது. என்னை?

"அறிவினா லாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை" (குறள் - ௩௧௫)

எனவும்,

"இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்" (குறள் - ௩௧௬)

எனவும். வரும் அறங்களை அறிதற்கியன்ற அறிவு பெற்றிருந்தும் அறியாய் வெவ்வினை செய்தொழிந்தாய் என்றிரங்கிக் கழறியபடியாம். இத் தீவினை சிந்தையின்றிச் செய்வினை அல்லாமையை நுண்ணுணர்வாற் கண்டு கொள்க. என்னை? ஒருயிரைக் கொல்ல வேண்டும் என்பதே அவன்கருத்தாகலின்; ஆகவே சிந்தை இன்றெனிற் செய்வினை யாவதும் எய்தாது என்னும் அவர் சித்தாந்தத்தோடு இது முரணாமையு மறிக. கன்றிய - சினந்த. கடுவினை - கொலை. விலங்கு - குறுக்காக.

இனி, இக் காதையினை—கோட்டம் காப்புடைத்தாக; தாரோன் கேட்டு எழுந்து சென்று ஏறலும், கணவன் கையறவெய்தி வந்து இழிந்து தேர்ந்து திரிவோன் கண்டு பழமைக் கட்டுரை பல பாராட்டவும் நீங்கி, சென்று காட்டி காணாயோ நீ இவையும் காணாய் தகை இன்றாயது, வேறாயின சுமந்தன ஒழுக்குவ வேறாயின தொல்லோர் வகுத்த வஞ்சம் தெரியாய் என மெல்லியல் உரைத்தலும் கொள்ளாள் செல்லும் நோக்கும் காட்டி வழாஅள் ஆதலின் ஒழிந்தனளென மயக்குறுத்தனள் இருளொழியாள் வந்தறிகுவனென எழுந்து போகி யாமத்து எழுந்து கழிந்து நீங்கி அணைந்து புகுதலும் விஞ்சையன் எழுந்து சென்று வீசிப்புகுதலும் பாவை உரைக்கும் விஞ்சையன் எழுந்து படர்ந்து போயினன் என முடித்திடுக.

உதயகுமரனைக் காஞ்சனன் வாளால் எறிந்த காதை முற்றிற்று.

## உக. கந்திற்பாவை வருவதுரைத்த காதை

[இருபத்தொன்றாவது — மணிமேகலை உதயகுமரன் மடிந்தது கண்டு உறுதுயரெய்த நெடுநிலைக் கந்தின் நின்ற பாவை வருவதுரைத்து அவள் மயக்கொழித்த பாட்டு ]

அஃதாவது: விச்சாதரன் உதயகுமரன் பின் சென்று மணித்தோள் துணிய வாளால் வீசியதனானும் மணிமேகலையை அணுகச் சென்ற காஞ்சனனை மறித்து அவனுக்குக் கந்திற்பாவை அறிவுறுத்திய சொல்லானும் உண்டான அரவத்தாலே சம்பாபதி கோயிலினூடே துயின்றிருந்த மணிமேகலை விழித்துக் கந்திற்பாவை கூற்றினாலே உதயகுமரன் கொலையுண்டமை புணர்ந்து அவன்பால் பற்பல பிறப்புகளிலே அடிப்பட்டு வந்த பற்றுண்மையாலே அவ்வுதயகுமரன் இறந்துபட்டமை பொறாமல் பற்பல கூறி அரற்றி அவன் உடலைத் தழுவி அழச்செல்வாளை இடையே கந்திற்பாவை தடுத்து இறந்தகாலச் செய்திகள் பற்பல கூறி உதயகுமரன் கொலையுண்டமைக்குக் காரணமான பழவினை இன்னதென இயம்பித் தேற்றி இனி, எதிர்காலத்தேயும் அவட்கு வர விருக்கின்ற ஏது நிகழ்ச்சியனைத்தையும் இயம்பி இனிது ஆற்றுவித்த செய்தியைக் கூறும் செய்யுள் என்றவாறு.

இனி, இதன்கண்—கந்துடை நெடுநிலைக் கடவுட் பாவை கூறும் கூற்றுக்கள் முழுவதுமே பயில்வோர்க்கு மெய்யறிவு கொளுத்தும் பண்புமிக்கன; ஆற்றவும் இனிமையும் மிக்கனவாயிருத்தலுணர்ந்து மகிழற்பாற்று. இக் காதை அவலச் சுவை பொதுளியதொரு காதையுமாகும்.

மணிமேகலை பிறப்புப் பலவற்றிற் றொடர்ந்து தனக்குக் கணவனாகவே வந்த உதயகுமரன்பால் பற்று மிக்கவளாகி அவனையும் மெய்யறிவு கொளுத்தி அவனுடைய பிறவிப்பிணியையும் அகற்றிவிடப் பெரிதும் விரும்பி அவனுக்கு அறங்கூற முயன்றாளாகவும் தான் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று கருதி அவனைக் கொன்றொழித்ததாகவும் சொல்லி அழுதரற்று மொழிகள் அவலச்சுவைக்கு எடுத்துக் காட்டத் தகுவனவாக அமைந்திருக்கின்றன. இக் காதை பயில்பவர்க்கும் மெய்யுணர்வு தோற்றுவிக்கும் என்பதில் ஐயமில்லை.

கடவு ளெழுதிய நெடுநிலைக் கந்தின்
குடவயி னமைத்த நெடுநிலை வாயின்
முதியாள் கோட்டத் தகவயிற் கிடந்த
மதுமலர்க் குழலி மயங்கின ளெழுந்து
விஞ்சையன் செய்தியும் வென்வேல் வேந்தன்
மைந்தற் குற்றதும் மன்றப் பொதியிற்
கந்துடை நெடுநிலைக் கடவுட் பாவை
அங்கவற் குரைத்த அற்புதக் கிளவியும்
கேட்டன ளெழுந்து கெடுகஇவ் வுருவெனத்
தோட்டலர்க் குழலி உள்வரி நீங்கித்
திட்டி விடமுண நின்னுயிர் போம்நாள்
கட்டழ லீமத் தென்னுயிர் சுட்டேன்
உவவன மருங்கில் நின்பா லுள்ளம்
தவிர்விலே னாதலின் தலைமகள் தோன்றி
மணிபல் லவத்திடை யென்னையாங் குய்த்துப்
பிணிப்பறு மாதவன் பீடிகை காட்டி
என்பிறப் புணர்ந்த என்முன் தோன்றி
உன்பிறப் பெல்லாம் ஒழிவின் றுரைத்தலின்
பிறந்தோர் இறத்தலும் இறந்தோர் பிறத்தலும்
அறந்தரு சால்பும் மறந்தரு துன்பமும்
யான்நினக் குரைத்துநின் இடர்வினை யொழிக்கக்
காயசண் டிகைவடி வானேன் காதல!
வைவாள் விஞ்சையன் மயக்குறு வெகுளியின்
வெவ்வினை யுருப்ப விளிந்தனை யோவென
விழுமக் கிளவியின் வெய்துயிர்த்துப் புலம்பி
அழுதன ளேங்கி அயாவுயிர்த் தெழுதலும்
செல்லல் செல்லல் சேயரி நெடுங்கண்
அல்லியந் தாரோன் தன்பாற் செல்லல்
நினக்கிவன் மகனாத் தோன்றி யதூஉம்
மனக்கினி யாற்குநீ மகளா யதூஉம்
பண்டும் பண்டும் பல்பிறப் புளவால்
கண்ட பிறவியே யல்ல காரிகை
தடுமாறு பிறவித் தாழ்தரு தோற்றம்
விடுமாறு முயல்வோய் விழுமங் கொள்ளேல்
என்றிவை சொல்லி யிருந்தெய்வ முரைத்தலும்
பொன்றிகழ் மேனிப் பூங்கொடி பொருந்திப்
பொய்யா நாவொடிப் பொதியிலிற் பொருந்திய
தெய்வம் நீயோ திருவடி தொழுதேன்
விட்ட பிறப்பின் வெய்துயிர்த் தீங்கிவன்
திட்டி விடமுணச் செல்லுயிர் போயதும்

நெஞ்சு நடுங்கி நெடுந்துயர் கூரயான்
விஞ்சையன் வாளி னிவன்விளிந் ததூஉம்
அறிதலு மறிதியோ அறிந்தனை யாயின்
பெறுவேன் றில்லநின் பேரரு ளீங்கென
ஐயரி நெடுங்கண் ஆயிழை கேளெனத்
தெய்வக் கிளவியில் தெய்வங் கூறும்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரை
மாயமின் மாதவன் வருபொரு ளுரைத்து
மருளுடை மாக்கள் மனமாசு கழூஉம்
பிரம தருமனைப் பேணினி ராகி
அடிசிற் சிறப்பியா மடிகளுக் காக்குதல்
விடியல் வேலை வேண்டின மென்றலும்
மாலை நீங்க மனமகிழ் வெய்திக்
காலை தோன்ற வேலையின் வரூஉம்
நடைத்திறத் திழுக்கி நல்லடி தளர்ந்து
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனைச்
சீல நீங்காச் செய்தவத் தோர்க்கு
வேலை பிழைத்த வெகுளி தோன்றத்
தோளுந் தலையுந் துணிந்துவே றாக
வாளிற் றப்பிய வல்வினை யன்றே
விராமலர்க் கூந்தன் மெல்லியல் நின்னோ
டிராகுலன் தன்னை யிட்டக லாதது
தலைவன் காக்குந் தம்பொருட் டாகிய
அவல வெவ்வினை யென்போ ரறியார்
அறஞ்செய் காத லன்பினி னாயினும்
மறஞ்செய் துளதெனின் வல்வினை யொழியா
தாங்கவ் வினைவந் தணுகுங் காலைத்
தீங்குறு முயிரே செய்வினை மருங்கின்
மீண்டுவரு பிறப்பின் மீளினும் மீளும்
ஆங்கவ் வினைகாண் ஆயிழை கணவனை
ஈங்கு வந்திவ் விடர்செய் தொழிந்தது
இன்னுங் கேளா யிளங்கொடி நல்லாய்
மன்னவன் மகற்கு வருந்துதுய ரெய்தி
மாதவ ருணர்த்திய வாய்மொழி கேட்டுக்
காவலன் நின்னையும் காவல்செய் தாங்கிடும்
ஈடுசிறை நீக்கி யிராசமா தேவி
கூட வைக்குங் கொட்பின ளாகி
மாதவி மாதவன் மலரடி வணங்கித்
தீது கூறவவள் தன்னொடுஞ் சேர்ந்து
மாதவ னுரைத்த வாய்மொழி கேட்டுக்

காதலி நின்னையுங் காவல் நீக்குவள்
அரசாள் செல்வத் தாபுத் திரன்பால்
புரையோர்ப் பேணிப் போகலும் போகுவை
போனு லவனொடும் பொருளுரை பொருந்தி
மாநீர் வங்கத் தவனொடு மெழுந்து
மாயமில் செய்தி மணிபல் லவமெனும்
தீவகத் தின்னுஞ் சேறலு முண்டால்
தீவ திலகையின் தன்றிறங் கேட்டுச்
சாவக மன்னன் தன்னா டடைந்தபின்
ஆங்கத் தீவம்விட் டருந்தவன் வடிவாய்ப்
பூங்கொடி வஞ்சி மாநகர் புகுவை
ஆங்கந் நகரத் தறிபொருள் வினவும்
ஓங்கிய கேள்வி உயர்ந்தோர் பலரால்
இறைவன் எங்கோன் எவ்வுயி ரனைத்தும்
முறைமையிற் படைத்த முதல்வனென் போர்களும்
தன்னுரு வில்லோன் பிறவுருப் படைப்போன்
அன்னோன் இறைவ னாகுமென் போர்களும்
துன்ப நோன்பித் தொடர்ப்பா டறுத்தாங்
கின்ப வுலகுச்சி யிருத்துமென் போர்களும்
பூத விகாரப் புணர்ப்பென் போர்களும்
பல்வேறு சமயப் படிற்றுரை யெல்லாம்
அல்லியங் கோதை கேட்குறு மந்நாள்
இறைவனு மில்லை யிறந்தோர் பிறவார்
அறனோ டென்னையென் றறைந்தோன் தன்னைப்
பிறவியும் அறவியும் பெற்றியி னுணர்ந்த
நறுமலர்க் கோதை எள்ளினை நகுதி
எள்ளினை போலும் இவ்வுரை கேட்டிங்
கொள்ளிய துரையென உன்பிறப் புணர்த்துவை
ஆங்குநிற் கொணர்ந்த அருந்தெய்வம் மயக்கக்
காம்பன தோளி கனாமயக் குற்றனை
என்றவ னுரைக்கும் இளங்கொடி நல்லாய்
அன்றென் றவன்முன் அயர்ந்தொழி வாயலை
தீவினை யுறுதலுஞ் செத்தோர் பிறத்தலும்
வாயே யென்று மயக்கொழி மடவாய்
வழுவறு மரனும் மண்ணுங் கல்லும்
எழுதிய பாவையும் பேசா வென்ப
தறிதலும் அறிதியோ அறியாய் கொல்லோ
அறியா யாயின் ஆங்கது கேளாய்
முடித்துவரு சிறப்பின் மூதூர் யாங்கணும்
கொடித்தேர் வீதியும் தேவர் கோட்டமும்

முதுமர இடங்களும் முதுநீர்த் துறைகளும்
பொதியிலும் மன்றமும் பொருந்துபு நாடிக்
காப்புடை மாநகர்க் காவலுங் கண்ணி
யாப்புடைத் தாக அறிந்தோர் வலித்து
மண்ணினும் கல்லினும் மரத்தினுஞ் சுவரினும்
கண்ணிய தெய்வதங் காட்டுநர் வகுக்க
ஆங்கத் தெய்வதம் அவ்விடம் நீங்கா
ஊன்கணி னார்கட் குற்றதை யுரைக்கும்
என்திறங் கேட்டியோ இளங்கொடி நல்லாய்
மன்பெருந் தெய்வ கணங்களி னுள்ளேன்
துவதிக னென்பேன் தொன்றுமுதிர் கந்தின்
மயனெனக் கொப்பா வகுத்த பாவையின்
நீங்கேன் யான்என் நிலையது கேளாய்
மாந்த ரறிவது வானவ ரறியார்
ஓவியச் சேனனென் னுறுதுணைத் தோழன்
ஆவதை யிந்நகர்க் காருரைத் தனரோ
அவனுடன் யான்சென் றாடிட மெல்லாம்
உடனுறைந் தார்போ லொழியா தெழுதிப்
பூவும் புகையும் பொருந்துபு புணர்த்து
நாநனி வருந்தவென் நலம்பா ராட்டலின்
மணிமே கலையான் வருபொரு ளெல்லாம்
துணிவுட னுரைத்தேன் என்சொல் தேறெனத்
தேறே னல்லேன் தெய்வக் கிளவிகள்
ஈறுகடை போக எனக்கரு ளென்றலும்
துவதிக னுரைக்குஞ் சொல்லலுஞ் சொல்லுவேன்
வருவது கேளாய் மடக்கொடி நல்லாய்
மன்னுயிர் நீங்க மழைவளங் கரந்து
பொன்னெயிற் காஞ்சி நகர்கவி னழிய
ஆங்கது கேட்டே ஆருயிர் மருந்தாய்
ஈங்கிம் முதியா ளிடவயின் வைத்த
தெய்வப் பாத்திரம் செவ்வியின் வாங்கித்
தையல்நின் பயந்தோர் தம்மொடு போகி
அறவணன் தானும் ஆங்குள னாதலின்
செறிதொடி காஞ்சி மாநகர் சேர்குவை
அறவண னருளால் ஆய்தொடி அவ்வூர்ப்
பிறவண மொழிந்துநின் பெற்றியை யாகி
வறனோ டுலகின் மழைவளந் தரூஉம்
அறனோ டேந்தி ஆருயி ரோம்புவை
ஆய்தொடிக் கவ்வூர் அறனொடு தோன்றும்
ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள

பிறவற முரைத்தோர் பெற்றிமை யெல்லாம்
அறவணன் றனக்குநீ யுரைத்த அந்நாள்
தவமுந் தருமமும் சார்பிற் றோற்றமும்
பவமறு மார்க்கமும் பான்மையி னுரைத்து
மறவிரு ளிரிய மன்னுயி ரேமுற
அறவெயில் விரித்தாங் களப்பி லிருத்தியொடு
புத்த ஞாயிறு தோன்றுங் காறும்
செத்தும் பிறந்துஞ் செம்பொருள் காவா
இத்தலம் நீங்கேன் இளங்கொடி யானும்
தாயரும் நீயுந் தவறின் றாக
வாய்வ தாகநின் மனப்பாட் டறமென
ஆங்கவ னுரைத்தலும் அவன்மொழி பிழையாய்
பாங்கியல் நல்லறம் பலவுஞ் செய்தபின்
கச்சிமுற் றத்து நின்னுயிர் கடைகொள
உத்தர மகதத் துறுபிறப் பெல்லாம்
ஆண்பிறப் பாகி அருளறம் ஒழியாய்
மாண்பொடு தோன்றி மயக்கங் களைந்து
பிறர்க்கறம் அருளும் பெரியோன் றனக்குத்
தலைச்சா வகனாய்ச் சார்பறுத் துய்தி
இன்னும் கேட்டியோ நன்னுதல் மடந்தை
ஊங்க ணோங்கிய உரவோன் றன்னை
வாங்குதிரை யெடுத்த மணிமே கலாதெய்வம்
சாது சக்கரற் காரமு தீத்தோய்
ஈது நின்பிறப் பென்பது தெளிந்தே
உவவன மருங்கில் நின்பால் தோன்றி
மணிபல் லவத்திடைக் கொணர்ந்தது கேளெனத்
துவதிக னுரைத்தலும் துயர்க்கடல் நீங்கி
அவதி யறிந்த அணியிழை நல்லாள்
வலையொழி மஞ்ஞையின் மனமயக் கொழிதலும்
உலகுதுயி லெழுப்பினன் மலர்கதி ரோனென்.

---

## உக. கந்திற்பாவை வருவதுரைத்த காதை

### உரை

மணிமேகலை துயில் நீங்கிக் காயசண்டிகை வடிவத்தைக் களைந்து தன்னுருக் கோடல்.

க - கO : கடவுள்.........நீங்கி

(இ - ள்.) கடவுள் எழுதிய நெடுநிலைக்கந்தின் குடவயின் அமைத்த நெடுநிலை வாயில் முதியாள் கோட்டத்து - கடவுட் டன்மையோடு இயற்றப்பட்ட பாவையையுடைய நெடிய நிலையினை யுடைய தூணுக்கு மேற்றிசையிலே அமைக்கப்பட்டிருந்த குச்சரக் குடிகை யென்னும் நெடிய நிலையையுடைய வாயிலமைந்த சம்பா பதியின் திருக்கோயிலின்; அகவயின் இடந்த மதுமலர்க் குழலி மயங்கினள் எழுந்து - உள்ளிடத்தே துயில்கொண் டிருந்த மணிமேகலையானவள் அம்பலத்தே யெழுந்த அரவம் கேட்டுத் துயில் மயக்கத்தோடு எழுந்து; (கந்திற் பாவையின் கடவுள் மொழியினாலே;) விஞ்சையன் செய்தியும் வென்வேல் வேந்தன் மைந்தற்கு உற்றதும் - விச்சாதரன் உதயணனை வாளால் எறிந்து கொன்ற செய்தியையும்; மன்றப் பொதியில் கந்து உடை நெடு நிலை கடவுள் பாவை ஆங்கு அவற்கு உரைத்த அற்புதக் கிளவி யும் - அம்பலமாகிய அவ்வுலக வறவியின் தூணை இடமாகக் கொண்டு நெடிது நிலைபெற்றிருக்கின்ற தெய்வத் தன்மையுடைய அக் கந்திற் பாவையானது அப்பொழுது அவ் விச்சாதரனுக்குக் கூறிய வியத்தகு மொழிகளையும்; கேட்டனள் எழுந்து - கேட்டுத் துயில் மயக்கம் நீங்கி நன்கு விழிப்புற்றவளாய் அவ்விடத்தி னின்றும் எழுந்து; தோட்டு அலர்குழலி இவ்வுரு கெடுக என உள்வரி நீங்கி - அம் மணிமேகலை இக் காயசண்டிகையின் வடிவம் என்னை விட்டொழிவதாக என்று அவ் வேற்றுருவத்தி னின்று விலகித் தன் வடிவத்தோடே நின்று ஆற்றுபவள்; என்க.

(வி - ம்.) கடவுள் என்றது - துவதிகனை. குடவயின் - மேற்றிசை யின்கண். முதியாள் கோட்டம் - சம்பாபதி கோயில். கிடந்த என்றது துயில்கொண் டிருந்த என்றவாறு. மதுமலர்க்குழலி : மணிமேகலை. மயங்கினள் : முற்றெச்சம். விஞ்சையன் செய்தி - உதயகுமரனை வாளால் எறிந்தமை. வேந்தன் மைந்தன்: உதயகுமரன். உற்றது என்றது,

கொலையுண்டமையை. அற்புதக் கிளவி - வியத்தகு மொழி; அஃதாவது, காயசண்டிகையின் நிலை இன்னது எனக் கூறியதாம். இவ்வுரு என்றது, தான் மேற்கொண்டிருந்த காயசண்டிகை வடிவத்தை; அவ்வடிவமே உதயகுமரன் கொலையுண்டமைக்குக் காரணம் என்னும் கருத்தால் கெடுக! என்றாள். தோடலர் - தோட்டலர் என விகாரம் எய்தியது. குழலி: மணிமேகலை. உள்வரி - வேடம். மேல்வருவன மணிமேகலையின் அரற்றல், ஆதலின் அரற்றுபவள் என எழுவாய் பெய்துரைத்துக் கொள்க.

## மணிமேகலையின் அரற்றுரை

### கக - உஉ : திட்டி..........காதல

(இ - ள்.) (உஉ) காதல - என் ஆருயிர்க்காதலனே!; திட்டிவிடம் உண நின் உயிர்போம் நாள் கட்டழல் ஈமத்து என் உயிர் சுட்டேன் - அந்தோ! பேரிய பிறப்பில் திட்டிவிடம் என்னும் பாம்பினது நஞ்சு பருகுதலாலே உன்னுடைய உயிர் போன நாளிலே அடிச்சியாகிய யான் மிக்க நெருப்பினை உடைய சுடுகாட்டின்கண் தீப்பாய்ந்து என் உயிரை யானே சுட்டுப் போக்கினேன், இப் பழந் தொடர்பு காரணமாக; உவவன மருங்கின் நின்பால் உள்ளம் தவிர்விலேன் ஆதலின் - மன்னவன் மகனாக இப்பிறப்பில் பிறந்து வந்த நின்னை யான் உவவனம் என்னும் பூம்பொழிலின்கண் முதன் முதலாகக் கண்டபொழுதே நின்பால் வந்த என் நெஞ்சத்தைத் தடுத்து நிறுத்த இயலாதேன் ஆயினேன், என் மன நிலை இங்ஙனம் இருத்தலின்; தலைமகள் தோன்றி என்னை ஆங்கு மணிபல்லவத்திடை உய்த்து - என்பால் அருள் மிக்க எங்குல முதல்வியாகிய மணிமேகலா தெய்வம் அம் மலர்வனத்தினில் வந்து என்னைத் துயிலும்பொழுது அவ்விடத்தினின்றும் எடுத்துப்போய் மணிபல்லவத் தீவின்கண் வைத்தும்; பிணிப்பு அறு மாதவன் பீடிகை காட்டி என் பிறப்பு உணர்ந்த என் முன் தோன்றி - பற்றறுதற்குக் காரணமான பெரிய தவத்தை உடைய புத்தபெருமானுடைய பீடிகையைக் காணச் செய்து அவ்வாற்றால் என்னுடைய பழைய பிறப்பை உணர்ந்துகொண்டு நின்ற என் முன்னே எழுந்தருளி அத் தெய்வமானது; உன் பிறப்பு எல்லாம் ஒழிவு இன்று உரைத்தலின் - அப் பிறப்பிலே என் காதலனாகிய உன்னுடைய முற்பிறப்பும் இப்பிறப்பும் ஆகிய பிறப்புகளையும் இவற்றிற்கியன்ற காரணங்களையும் சிறிதும் ஒழிவின்றி அறிவித்தமையாலே; யான் - நின் காதலி ஆகிய யான் நின்பால் அன்பு மிகுந்து; பிறந்தோர் இறத்தலும் இறந்தோர் பிறத்தலும் அறந்தரு சால்பும் மறந்தரு துன்பமும் - பிறந்தவர்கள் இறந்து போதலும் இறந்தவர் மீண்டும் பிறத்தலும் இங்ஙனம் பிறந்தும்

இறந்தும் சுழன்று வருகின்ற உயிர்களுக்கு அவை செய்கின்ற நல்வினைகள் கொணர்ந்து தருகின்ற மன அமைதிக்குக் காரணமாகிய இன்பமும் அவை செய்த தீவினைகள் கொணர்ந்து தருகின்ற அமைதி அற்ற துன்பமும் ஆகிய இவற்றின் இயல்பு களையும்; நினக்கு உரைத்து நின் இடர் வினை ஒழிக்கக் காய சண்டிகை வடிவானேன் - உனக்கு அறிவித்து உனது பிறவித் துயரங்களுக்கெல்லாம் காரணமாய் இருக்கின்ற இருள்சேர் இருவினையும் ஒழித்து நின்னை உய்விக்கக் கருதியன்றோ இக் காய சண்டிகை வடிவத்தை யான் மேற்கொள்ளலாயினேன் அந்தோ! அம்முயற்சியே நினது சாவிற்குக் காரணமாய் முடிந்ததே; என்றாள் என்க.

(வி - ம்.) திட்டிவிடம் - கண்ணால் நோக்கியே கொல்லும் ஒருவகைப் பாம்பு. கட்டழல் - மிக்க நெருப்பு. என் உயிர் சுட்டேன் என்றது - தீப்பாய்ந் திறந்தேன் என்றவாறு. நின்பால் உள்ளம் தவிர்விலேன் என்றது-அடிப்பட்டு வருகின்ற அன்புத் தொடர்பு காரணமாக மறு பிறப்பெய்தி வந்த நின்பால் எய்திய என் நெஞ்சத்தைத் தவிர்க்க இயலாதேன் ஆயினேன் என்பதுபட நின்றது. தலைமகள் என்றது-மணிமேகலா தெய்வத்தை; குலதெய்வமாதலின் தலைமகள் என்றாள். மாதவன்: புத்த பெருமான். காட்டினமையால் என் பிறப்பு உணர்ந்து நின்ற என்க. உன் என்றது - உதயகுமரனை. யான் உனக்கு இடர் களைய எண்ணிக் காயசண்டிகை வடிவானேன். அதுவே உனக்குச் சாத்துன்பத்தை விளைவித்துவிட்டது என்று பரிந்துகூறியவாறு. ஈண்டு,

“ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்” (௩௮0)

எனவரும் திருக்குறள் நினைக்கத்தகும்.

### இதுவுமது

### ௨௫ - ௨௬ : வைவாள்.........எழுதலும்

(இ - ள்.) வைவாள் விஞ்சையன் மயக்குறு வெகுளியின் வெவ்வினை உருப்ப விளிந்தனையோ - கூரிய வாளையுடைய விச்சாதரனுடைய மயக்கம் காரணமாக மிக்க சினத்தைக் கருவியாகக் கொண்டு நினது பழவினை சினந்து வந்து ஊட்டுதலாலே இறந்தொழிந்தாயோ; என விழுமக் கிளவியின் வெந்துயிர்த்துப் புலம்பி - என்று சொல்லி அழுகின்ற துன்ப மொழிகளோடே வெய்தாக மூச்செறிந்து தனிமையுற்று; அழுதனள் ஏங்கி அயாவுயிர்த்து எழுதலும் - நிலத்தில் வீழ்ந்து அழுது ஏங்கி நெடுமூச்சுவிட்டு ... டுயிர்ப்புக் கொண்டு உதயகுமரன் உடல் கிடக்கும் இடத்திற்குப் போக எண்ணிச் செல்லுமளவிலே; என்க.

(வி - ம்.) வை - கூர்மை. மயக்கு - அறியாமை. வெவ்வினை - கொடிய தீவினை உருப்ப என்றது, உருத்து வந்தூட்ட என்றவாறு. விழுமக்கிளவி - துன்பத்தாற் பிறந்த மொழி. வெய்துயிர்த்தல் - வெய்தாக நெடுமூச்செறிதல். புலம்பி - தனிமையுற்று. அழுதனள் : முற்றெச்சம். அயா உயிர்த்தல் - நெட்டுயிர்ப்புக் கொள்ளல்.

## மணிமேகலையைக் கந்திற்பாவை தடுத்தல்

### உஎ - கூரு : செல்லல்.........உரைத்தலும்

(இ - ள்.) இருந்தெய்வம் செல்லல் செல்லல் சேஅரி நெடுங்கண் அல்லியம் தாரோன் தன்பால் செல்லல் - தூணகத் துறைகின்ற பெரிய தெய்வமானது போகாதே போகாதே சிவந்த வரிகள் படர்ந்த நெடிய கண்ணையுடைய மணிமேகலாய் அகவிதழ்களால் புனைந்த மலர்மாலை அணிந்த உதயகுமரன்பால் போகாதே கொள்; நினக்கு இவன் மகனாத் தோன்றியதூஉம் மனக்கு இனியாற்கு நீ மகள் ஆயதூஉம் - உனக்கு இவ்வுதயகுமரன் கணவனாகப் பிறந்ததுவும் நின்னுடைய மனதிற்கு இனியவனாகிய இவனுக்கு நீ மனைவியாகப் பிறந்ததுவும்; கண்ட பிறவியே அல்ல - நீ உணர்ந்திருக்கின்ற உங்களுடைய முற்பிறப்பு மட்டுமே அல்ல; பண்டும் பண்டும் பல்பிறப்பு உளவால் - அதற்கு முன் நிகழ்ந்த பழங்காலத்தும் பன்முறை அங்ஙனமே கணவன் மனைவியாகப் பிறந்த பிறப்புகள் பற்பல உள்ளன; காரிகை - நங்கையே கேள்; தடுமாறு பிறவித் தாழ்தரு தோற்றம் விடுமாறு முயல்வோய் - நீ இப்பொழுது மாறி மாறி வருகின்ற பிறவிக் கடலின்கண் ஆழ்வதற்குக்காரணமான அப் பிறப்பினையே ஒழித்து விடுகின்ற நல்நெறியிலே செல்லுகின்ற முயற்சியை உடையை அல்லையோ ஆதலால்; விழுமங் கொள்ளேல் என்று இவை சொல்லி உரைத்தலும் - துன்புறாதே கொள் என்று இவ்வரிய செய்திகளைச் சொல்லித் தடுத்துக் கூறுதலும்; என்க.

(வி - ம்.) செல்லல்: எதிர்மறை வியங்கோள்; சேயரி நெடுங்கண்: அன்மொழித் தொகை. அல்லி - அகவிதழ். தாரோன் என்றது உதயகுமரனை. உதயகுமரன் உடம்பின் அருகே செல்லற்க என்று தடுத்தபடியாம். மகன் - கணவன். மகள் - மனைவி. கண்ட பிறவி - புத்தபீடிகையின் தெய்வத்தன்மையாலும் மணிமேகலா தெய்வத்தின் திருவருளாலும் நீ உணர்ந்து கொண்டிருக்கின்ற உங்கள் முற்பிறப்பு என்றவாறு; தெய்வ மாதலின் இந்நிகழ்ச்சியை அறிந்து கூறிற்று என்க. காரிகை: விளி. தடுமாறுதல்-மாறி மாறி மேலும் கீழுமாய் வருதல் பிறவிக் கடலில் என்க. தோற்றம் - பிறப்பு. தோற்றம் விடுமாறு முயல்வோய் விழுமம் கொள்ளேல் என்றது, போகாதே போகாதே என்று தான் வற்புறுத்துத் தடுத்தற்குக் காரணம் இதுவென உடம்படுத்துக் கூறிய படியாம். என்னை?

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை"

(குறள் - ௩௪௫)

என்பது பற்றிப் பழவினைத் தொடர்புடைய அம் மன்னன் மகனை நீ மனத்தாலும் நினைதல் கூடாது எனவும், அவன் பொருட்டு நீ இவ்வாறு வருந்துதலும் கூடாது எனவும் அறிவுரை கூறியபடியாம். அறிதற்கரிய செய்திகளை எடுத்துக் கூறி அத் தெய்வம் உணர்த்திற்றென்பார் 'இவை சொல்லி உரைத்தலும்' என, வேண்டாது கூறி வேண்டியது முடித்தார்.

## மணிமேகலை கந்திற்பாவையைத் தன் நன்றி யறிவு தோன்றக் கைதொழுதல்

### ௩௯ - ௪௪ : பொன்.........ஈங்கென

(இ - ள்.) பொன்திகழ்மேனி பூங்கொடி பொருந்தி - பொன் போல விளங்குகின்ற திருமேனியையுடைய பூங்கொடி போல் பவளாகிய மணிமேகலை தானும் அத் தெய்வத்தின் மொழிக்குடன் பட்டு நின்று கூறுபவள்; பொய்யா நாவொடு இப் பொதியில் பொருந்திய தெய்வம் நீயோ - விருப்புற்றுப் பொய்த்தல் இல்லாத மொழி பேசுகின்ற நாவினோடு இவ் வம்பலத்தின்கண் தூணில் உறைகின்ற தெய்வம் ஒன்றுண்டு என்று அறிந்தோரால் கூறப் படுகின்ற கந்திற்பாவை என்னும் தெய்வம் நீ தானோ; திருஅடி தொழுதேன் - அங்ஙனமாயின் நன்றுகாண் அடியேன் நின னுடைய திருவடிகளை நன்றியறிவுடன் கைகூப்பித் தொழுகின் றேன்; விட்ட பிறப்பின் ஈங்கு இவன் செல்உயிர் திட்டிவிடம் உண யான் வெய்து உயிர்த்து நெஞ்சு நடுங்கி நெடுந்துயர்கூர போயது - கழிந்த பிறப்பின்கண் இங்கு வெட்டுண்டிறந்த மன்னன் மகன் உயிரைத் திட்டிவிடம் என்னும் பாம்பு கண்ணால் நோக்கிப் பருகுதலாலே உடலை விட்டுப் போகின்ற உயிரானது என் னுடைய உள்ளம் நடுங்கிப் பெரிய துயர் மிகுந்து யான் வருந்தும் படி போயதற்கும்; விஞ்சையன் வாளின் விளிந்ததுஉம் - இப் பிறப்பின்கண் விச்சாதரனுடைய வாளினாலே இவன் வெட் டுண்டு இறந்தமைக்கும் காரணங்களையும்; அறிதலும் அறிதியோ அறிந்தனையாயின் நின் பொருள் ஈங்கு பெறுவேன் இல்ல என - அறிந்திருப்பாய் அல்லையோ அவற்றை அறிந்துள்ளாயாயின் நின்னுடைய பெரிய அருளால் இப்பொழுது அறிந்து கொள்ளப் பெறுவேன்: இஃது என் விருப்பமாம் என்று சொல்லிக் கை கூப்பி வணங்கா நிற்ப; என்க.

(வி - ம்.) விட்ட பிறப்பு - முற்பிறப்பு. இவன் - இம் மன்னன் மகன். முற்பிறப்பில் இவனுயிர் திட்டி விடத்தால் போயதற்கும் இப் பிறப்பில் இவன் வாளால் இறந்ததற்கும் உரிய காரணங்களையும் நீ

அறிந்திருத்தல் கூடும், அறிந்ததுண்டாயின் அவற்றையும் எனக்குக் கூறியருளுக, இஃது என் வேண்டுகோள் என்று கூறியபடியாம். இல்லை : விழைவின்கண் வந்தது ; உரிச்சொல்.

## கந்திற்பாவை மணிமேகலைக்குக் காரணம் அறிவுறுத்தல்

சடு - ருஉ : ஐஅரி.........என்றலும்

(இ - ள்.) ஐ அரி நெடுங்கண் ஆயிழை கேள் என தெய்வக் கிளவியில் தெய்வம் கூறும் - அழகிய செவ்வரியோடிய நெடிய கண்ணையுடைய ஆயிழையே கூறுவல் கேட்பாயாக என்று சொல்லித் தனக்குரிய தெய்வ மொழியினாலே அக் கந்திற்பாவை கூறுகின்றது :—காயங்கரை எனும் பேரியாற்று அடைகரை மாயம் இல் மாதவன் - முற்பிறப்பிலே நீயும் நின் கணவனாகிய இராகுலனும் காயங்கரை என்னும் பெரிய யாற்றினது நீரடை கரையின் கண் எழுந்தருளி இருந்து பொய்ம்மை சிறிதும் இல்லாத பெரிய தவத்தை உடைய புத்தர் ; வருபொருள் உரைத்து மருள் உடை மாக்கள் மனமாசு கழூஉம் - உலகில் வந்து பிறந்தருளி அறம் கூறும் காலத்தையும் அறிவித்து அறியாமையுடைய மாந்தரின் மனத்தின்கண் உள்ள அழுக்ககற்றுபவனும் ஆகிய ; பிரம தருமனை பேணினிர் ஆகி - பிரமதருமன என்னும் பெயரையுடைய துறவியைக் கண்டு அவனை நன்கு மதித்துப் போற்றுபவராய் ; யாம் விடியல்வேலை அடிகளுக்கு அடிசில் சிறப்பு ஆக்குதல் வேண்டினம் என்றலும் - யாங்கள் நாளை விடியற் காலத்தே அடிகளாருக்கு அடிசிலால் விருந்து செய்தற்கு விரும்பினேம் என்று நீவிர் இருவிரும் நுங்கள் மடைத்தொழிலாளனுக்குக் கூறுகிற்க ; என்க.

(வி - ம்.) மாதவன் வருபொருள் என்றது - புத்தபெருமான் வந்து அவதரிக்கும் செய்தியை என்றவாறு ; உலகத்தில் தீவினை மிகும் காலம் தோறும் புத்தபெருமான் ஈண்டு வந்து பிறந்தருளித் தமது அருள் அறத்தை நிலை நிறுத்துவர் என்பது பௌத்த நூற்றுணிபு. இதனை "ஈரெண்ணூற்றொ டீரெட்டாண்டிற் பேரறிவாளன் றோன்றும்" எனவும் (கஉ : எஎ - அ), "புலவன் முழுதும் பொய்யின் றுணர்ந்தோ, னுலகுயக் கோடற் கொருவன் றோன்று, மந்நா ளவனறங் கேட்டோ ரல்ல, தின்னாப் பிறவி யிழுக்குந ரில்லை" எனவும் (உகு : சகு - அ), "கரவரும் பெருமைக் கபிலையும் பதியி னளப்பரும் பாரமிதை யளவின்று நிறைத்துத், துளக்கமில் புத்த ஞாயிறு தோன்றி" (உசு : சச - சு) எனவும் இந்நூலுள்ளே பலவிடத்தும் வருதலாலும் காண்க. பிரமதருமன் ஒரு பௌத்தத் துறவி. இவர் வரலாற்றினை கூ ஆம் காதையில் விளக்கமாகக் காணலாம். ஆக்குதல் வேண்டினம் என்று மடைத்தொழிலாளனுக்கு அறிவிக்க என்க.

## உதயகுமரன் வாளால் எறியுண்டமைக்குக் காரணமான தீவினை

### ருரு - சுஉ : மாலை.........அகலாதது

(இ - ள்.) மாலை நீங்க மனமகிழ்வு எய்தி காலை தோன்று வேலையின் வருஉம் - அற்றை நாள் இரவு கழியா நிற்ப அவ்வறம் செய்தல் காரணமாக மனத்தின்கண் பெரிதும் மகிழ்ந்து நீங்கள் குறிப்பிட்ட அவ் விடியற்காலம் தோன்றுகின்ற பொழுதே வந்து; நடைத்திறத்து இழுக்கி நல் அடி தளர்ந்து மடைக்கலம் சிதைய வீழ்ந்த மடையனை - மகிழ்ச்சியின்கண் உண்டான சோர்வு காரணமாக நடந்து செல்லும் பொழுது வழுக்கித் தனது நல்ல கால் தளர்ந்து அடுக்களையின்கண் உள்ள அடிசிற் கலங்கள் உடைந்தொழியும்படி அவற்றின்மேல வீழ்ந்த அம் மடைத் தொழிலாளனைக் கண்டு; சீலம் நீங்கா செய்தவத்தோர்க்கு வேலை பிழைத்த வெகுளி தோன்ற - நின் கணவனுக்குப் பத்துவகை ஒழுக்கத்தினின்றும் நீங்காது செய்கின்ற தவத்தை உடையவராகிய பிரம தருமருக்கு உண்டி வழங்கும் பொழுது தவறியமையால் பெரிதும் சினம் தோன்றா நிற்ப அம் மடைத் தொழிலாளனுடைய; தோளும் தலையும் துணிந்து வேறாக வாளின் தப்பிய வல்வினை அன்றே - தோளும் தலையும் வெட்டுண்டு வேறுபட்டு வீழும்படி தனது வாளால வெட்டிய வலிய கொலையாகிய தீவினை யல்லவோ; விராமலர் கூந்தல் மெல்லியல் நின்னோடு இராகுலன் தன்னை இட்டு அகலாதது - மணம் விரவிய மலர்களை அணிந்த கூந்தலையுடைய மெல்லியலாயிருந்த இலக்குமியாகிய நின்னோடு நின் கணவனாகிய இராகுலனையும் விட்டு நீங்காமல் தொடர்வது; என்க.

(வி - ம்.) மனமகிழ்ச்சியோடு வந்தமையால் சோர்வுற்று அடி வழுக்கி அம் மடையன் மடைக்கலம் சிதைய வீழ்ந்தான் என்பது தோன்ற மனமகிழ்வெய்தி வந்தான் என்றார். இதன் பயன் கொலையுண்டவனும் அறவோன் என்றுணர்த்தல். வேலை - ஈண்டு உண்ணுதற்குரிய பொழுது. தப்பிய - வெட்டிய. வல்வினை யாதலால் அஃது எங்ஙனம் தன் பயனை ஊட்டாது போம்? என்றவாறு. மணிமேகலையின் முற்பிறப்பாகிய இலக்குமியின் மேற்றாக மணிமேகலையை விராமலர் கூந்தல் மெல்லியல் என இத் தெய்வம் கூறுகின்றது என்க. இராகுலன் - உதயகுமரனுடைய முற்பிறப்பின் பெயர்.

## வல்வினையின் இயல்பு

### சுரு - எக : தலைவன்.........ஒழிந்தது

(இ - ள்.) தம் பொருட்டு அல்லல் ஆகிய அவல வெவ்வினை தலைவன் காக்கும் என்போர் அறியார் - தன்னிடத்தே

அன்பு செய்கின்ற அடியார்கள் என்பது கருதி அவ்வடியாராகிய தம்மால் செய்யப்பெற்ற துன்பத்திற்குக் காரணமான தீவினை வந்து துன்புறுத்தாதபடி தம் இறைவன் காப்பாற்றுவான் என்று கூறுபவர் அறிவிலாதார் ஆவர்; அறம் செய் காதல் அன்பினின் ஆயினும் மறம் செய்து உளது எனின் வல்வினை ஒழியாது - ஒருவன் அறம் செய்ய வேண்டும் என்னும் காதல் உடையவனும் அவ்வன்பு காரணமாகவேனும் அவனால் தீவினை செய்யப்பட்டிருக்குமாயின் அத் தீவினை உருத்து வந்து தன் பயனை ஊட்டாது ஒழியாது காண்; ஆங்கு அவ்வினை வந்து அணுகும் காலை - அவ்வாறு அத் தீவினை வந்து தன் பயனை ஊட்டுவதற்கு அணுகும் காலத்தே; தீங்கு உறும் உயிரே செய் வினை மருங்கின் மீண்டு வரும் பிறப்பின் மீளினும் மீளும் - அப் பயனாகிய தீமையை எய்துதற்குரிய அவ்வுயிர்க்குச் செய்த அப் பிறப்பினூடேயே ஊட்டினும் ஊட்டும், அல்லது அவ்வுயிர் தான செய்த வினை வழியாக இறந்துபோய் மாறிப்பிறக்கின்ற பிறப்பின் கண் வந்து தன் பயனை ஊட்டினும் ஊட்டும்; ஆங்கு அவ்வினை காண் ஆயிழை கணவனை ஈங்கு வந்து இ இடர் செய்து ஒழிந்தது- முற்பிறப்பில் அம் மடையனைக் கொன்ற அத் தீவினையே நின் கணவனாகிய இராகுலனை இங்கு இப் பிறப்பில் வந்து தன் பயனாகிய இக் கொலைத் துன்பத்தை ஊட்டிக் கழிந்தது; என்க.

(வி - ம்.) தம் பொருட்டு அல்லல் ஆகிய வெவ்வினை தலைவன் காக்கும் என்போர் என மாறிக் கூட்டுக; இவ்வாறு கூறுபவர் சைவ சமய முதலிய பிற சமயத்தவர்கள். இதனை—

"சிவனும் இவன் செய்தியெலாம் என்செய்தி என்றும்
செய்ததெனக் கிவனுக்குச் செய்ததென் றும்
பவமகல உடனாகி நின்றுகொள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே"

(சுபக்கம் - ௨௦௯)

எனவரும் சிவஞானசித்தியாரானும் அறிக.

இறைவன்பால் அல்லது துறவோர்பால் உண்டான அன்பு காரணமாகச் செய்யப்பட்டாலும் மறவினை ஊட்டா தொழியாது என்றவாறு.

மீண்டு வருபிறப்பின் மீளினும் மீளும் என்றது அப் பிறப்பிலேயே எய்தும், எய்தாதாயின் என இறந்தது தழீஇய எச்சவும்மை. உறும் உயிர் - உறுதற்குரிய வுயிர். ஆங்கு - அவ்வண்ணமே. அவ்வினை - மடையனைக் கொன்ற தீவினை. ஆயிழை : முன்னிலைப்புறமொழி. இவ்விடர் - இக் கொலைத் துன்பத்தை.

கந்திற்பாவை மணிமேகலைக்கு எதிர்காலத்து
வரும் ஏது நிகழ்ச்சிகளை அறிவுறுத்துதல்

௭௨ - ௮௧ : இன்னும்.........நீக்குவ

(இ - ள்.) இளங்கொடி நல்லாய் - இளமையுடைய பூங்கொடி போலும் அழகுடைய மணிமேகலை நல்லாய்!; இன்னும் கேளாய் - இன்னும் நினக்கு அறிவுறுத்த வேண்டிய செய்திகள் உள்ளன அவற்றையும் கூறுவேன் கேட்பாயாக; மன்னவன் - சோழமன்னன்; மகற்கு வருந்து துயர் எய்தி - தன் மகனாகிய இவ்வுதயகுமரன் கொலை யுண்டமை அறிந்து பெரிதும் வருந்துதற்குக் காரணமான மகவன்பினாலே மாபெருந்துயர மெய்திப் பின்னர்; மாதவர் உரைத்த வாய்மொழி கேட்டு - பெரிய தவத்தையுடைய சான்றோர் எடுத்துக் கூறுகின்ற வாய்மையான அறிவுரைகளைக் கேட்டு அமைதியுற்ற பின்னர்; காவலன் நின்னையும் காவல் செய்து ஆங்கு இடும் - செங்கோன் முறைப்படி ஆருயிர் காவலன் ஆதலின் நின்னையும் தன் காவலிற் படுத்து அதற்கியன்ற சிறைக்கோட்டத்திலே இடுவன்; இராசமாதேவி ஈடு சிறை நீக்கி கூட வைக்கும் கொட்பினள் ஆகி - பின்னர் உதயகுமரன் அன்னையாகிய கோப்பெருந்தேவி தன் மகன் கொலையுண்டமைக்கு இவளே காரணம் என்று கருதி நினக்கு இடுக்கண் செய்ய வேண்டும் என்னும் தன் படிற்றுளம் கரந்து நின்னை மன்னவன் இட்ட ஈடுசிறைக்கோட்டத்தினின்றும் நீக்கித் தன்னோடு உவளகத்திலே வைத்துக் கொள்ளும் ஒரு கொள்கையுடையவளாகி; (தான் கருதிய வஞ்சச் செயல் சில செய்யவும் செய்வள்;) மாதவி மாதவன் மலரடி வணங்கித் தீது கூற - பின்னர் மாதவி நின் நிலையறிந்து போய் அறவண வடிகளாரின் மலர் போன்ற திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி நீ சிறைப்பட்டிருக்கின்ற துன்பச் செய்தியைக் கூறுகிற்றலாலே; அவள் தன்னொடும் சேர்ந்து மாதவன் உரைத்த வாய்மொழி கேட்டு - அம்மாதவியையும் தம்மோடு அழைத்துக் கொண்டு அறவணவடிகளார் கோப்பெருந் தேவியின்பாற் சென்று கூறிய அறிவுரையாகிய மெய்ம்மொழிகளைக் கேட்டுப் பின்னர்; காதலி நின்னையும் அக் காவல் நீக்குவள் - தன் மகன் காதலியாகிய நின்னையும் அக் கோப் பெருந்தேவி சிறை வீடு செய்குவள் காண்; என்க.

(வி - ம்.) மன்னவன் என்றது உதயகுமரன் தந்தையை. மகற்கு வருந்துயர் - மகன் பொருட்டுத் தனக்கு வருந்துயருமாம். வருந்து துயர் - இடையருது வருந்துதற்குக் காரணமான பெருந்துயர்; மகன் இறந்துபட்டமையால் வந்த துயரம்; அது மாபெருந் துன்பமாதலின் அங்ஙனம் விதந்தபடியாம்.

மாதவர் : உதயகுமரனுக்குற்ற துரைக்க இனிச் செல்ல விருக்கும் சக்கரவாளத்துத் துறவோர்களை. நினக்குப் பிறரால் தீங்கு நேராமைப் பொருட்டும் நின் அழகான் மயங்கி நகரத்து இளைஞர் தீமைக்கு ஆளாகாமைப் பொருட்டும் நின்னைத் தன் காவலிலே வைத்துக்கோடலே அம்மன்னவன் செங்கோன் முறைமை ஆதலின் அவன் காவல் செய்திடும் என்னாது காவலன் என்று எடுத்தோதினர். காவல் செய்தற்கியன்ற பிழை செய்திலாத நின்னையும் என்பது தோன்ற உயர்வு சிறப்பும்மை கொடுத்தோதினர்.

ஈடுசிறை-சிறையில் ஒருவகைச் சிறை எனக் கோடலுமாம். அஃதாவது - குற்றமில்லாதவரையும் பிறர் வருத்தாமைப் பொருட்டு வைக்கும் பாதுகாவற் சிறை என்க. இக் கருத்தாற்போலும் காவலன் நின்னைச் சிறை செய்யும் என்னாது, நின்னையும் காவல் செய்து அதற்குரிய இடத்திலே இடும் என்பதுபட ஓதியதும். மேலும் அவ்விடத்திற்கு 'ஈடுசிறை' என்னும் பெயர் என்பது தோன்ற ஈடுசிறை நீக்கி என்று ஓதியதூஉம் என்று கருத இடனுண்மையுணர்க இக்காலத்தும் அத்தகு சிறைக் கோட்டமுண்மையும் நினைக.

கொட்பு - கோட்பாடு. (எஅ) மாதவன் : அறவணர். தீது - மணிமேகலை சிறைப்பட்ட துன்பச்செய்தி. தன் மகற்குப் பல பிறப்புகளிலே காதலியானவள் என்னும் பரிவு காரணமாகவும் நின்னைச் சிறைவீடு செய்வாள் என்பது தோன்ற, காதலி நின்னையும் என்று வேண்டா கூறி வேண்டியது முடித்தார்.

## இதுவுமது

### அ௨ - ௯௧ : அரசாள்.........புகுவை

(இ - ள்.) அரசு ஆள் செல்வத்து ஆபுத்திரன்பால் புரையோர்ப் பேணிப் போகலும் போகுவை - சிறைவீடு பெற்ற பின்னர் அரசாட்சியாகிய செல்வத்தையுடைய ஆபுத்திரனைக் காண்டற்கு விரும்பி அவன் இருக்கும் நகரத்திற்கு நின்னுடைய சான்றோராகிய அறவணர் மாதவி சுதமதி முதலிய மேலோரை வணங்கி அவர்பால் விடைபெற்றுச் செல்லவும் செல்வாய்; போனால் அவனொடும் பொருள் உரை பொருந்தி - அந்நகரத்திற்குச் சென்றால் அவ்வாபுத்திரனோடு அறவுரைகள் கூறி அவனோடு கேண்மை கொண்டிருந்து; மாநீர் வங்கத்து அவனொடும் எழுந்து மாயம் இல் செய்தி மணிபல்லவம் எனும் தீவகத்து இன்னும் சேறலும் உண்டால் - கடலின்கண் மரக்கலம் ஊர்ந்து வருகின்ற ஆபுத்திரனாகிய புண்ணியராசன் என்பவனோடு புறப்பட்டு நீ வானத்தின் வழியே பொய்ம்மையில்லாத செயலையுடைய மணிபல்லவம் என்னும் தீவின்கண் மீண்டும் போதலும் உண்டாகும்; தீவதிலகையின் சாவகமன்னன் தன் திறம் கேட்டு தன் நாடு அடைந்த பின் - மணிபல்லவத்தின்கண்

நெடுநிலைக் கந்திலுள்ள துவதிலகை என்னும் தெய்வத்தின் வாயிலாக அச் சாவக நாட்டு மன்னனாகிய புண்ணியராசன் தன் பழம்பிறப்பு வரலாறுகளைக் கேட்டறிந்து கொண்டு அத் தீவினின்றும் தன்னுடைய நாட்டிற்குச் சென்ற பின்னர்; ஆங்கு அத் தீவம் விட்டு அருந்தவன் வடிவாய் பூங்கொடி வஞ்சி மாநகர் புகுவை - பின்னர் நீயும் அவ்வாறே அத் தீவினின்றும் அரிய மாதவனாக வேற்றுருவங் கொண்டு வஞ்சி மாநகரத்திற்குச் செல்லுவாய்; என்க.

(வி - ம்.) ஆபுத்திரன் என்றது சாவக நாட்டில் புண்ணியராசனாகப் பிறந்திருக்கின்ற ஆபுத்திரன் என்றவாறு. புரையோர்-மேலோர்; அவராவார், அறவணர் மாதவி சுதமதி சித்திராபதி முதலியோர். போகலும் போகுவை என்றது ஒரு சொல் நீர்மைத்து. பொருளுரை என்றது பௌத்தர் அறவுரையை. பொருந்தி என்றது அவற்றைக் கேட்டு என்றவாறு. மாநீர் - கடல். வங்கம் - மரக்கலம். அவன்: புண்ணியராசன். வங்கத்தில் வருகின்ற அவனோடு நீ வானத்தில் எழுந்து சேறலும் உண்டு என்க. சாவக மன்னன் - புண்ணியராசன். பூங்கொடி என்றது நீ என்னுந் துணை. புகுவை: முன்னிலை ஒருமை.

### இதுவுமது

#### ௬௨ - ௯௦௨ : ஆங்கு..........அந்நாள்

(இ - ள்.) ஆங்கு அந்நகரத்து அறிபொருள் வினவும் ஓங்கிய கேள்வி உயர்ந்தோர் பலரால் - அவ்விடத்தே அந்த வஞ்சி மாநகரத்தின்கண் உன்னால் மெய்ப்பொருளை வினவி அறிந்து கொள்ளுதற்குரிய உயர்ந்த நூற்கேள்வியையுடைய சான்றோர் பலராவர் அவரைக் கண்டு வினவுமிடத்தே அவர்களுள் வைத்து; இறைவன் எம் கோன் எவ்வுயிர் அனைத்தும் முறைமையின் படைத்த முதல்வன் என்போர்களும் - இறைவனை எங்களுக்குக் கடவுள், காணப்படுகின்ற எந்த உயிரினங்கள் உளவோ அவை அனைத்தையும் முறைமையினாலே படைத்தருளிய அவனே தலைவன் என்று கூறுவோர்களும்; தன் உரு இல்லோன் பிறவுரு படைப்போன் அன்னோன் இறைவன் ஆகும் என்போர் களும் - தனக்கென்று யாதோருருவமும் இல்லாதவனும் உயிரினங்களுக்கெல்லாம் உருவங்களைப் படைக்கின்றவனும் ஆகிய அத்தகையவனே எங்களுக்குக் கடவுளாகும் என்று கூறுவோர் களும்; துன்ப நோன்பு இத் தொடர்ப்பாடு அறுத்து ஆங்கு இன்ப உலகு உச்சி இருத்தும் என்போர்களும் - யாங்கள் மேற் கொண்டிருக்கின்ற துன்பத்தைப் பொறுக்கின்ற இந் நோன்பு தானே இப்பிறவித் தொடர்புக்குக் காரணமான பற்றினை அறுத்து அவ்விடத்தே அந்தமில் இன்பமுடைய உலகினது

உச்சியில் வைக்கும் என்று கூறுவோர்களும்; பூதவிகாரப் புணர்ப்பு என்போர்களும் - ஐம்பெரும் பூதங்களும் தம்முள் விகாரமெய்திக் கூடிய கூட்டமே உலகம், இதற்கொரு கடவுள் இல்லை என்று கூறுகின்றவர்களும் இங்ஙனமாக; பல்வேறு சமய படிற்று உரை எல்லாம் அல்லியங் கோதை கேட்குறும் அந்நாள் - பல்வேறு வகைப்பட்ட சமயக்கணக்கர்கள் கூறுகின்ற பொய்ம் மொழியையெல்லாம் மணிமேகலாய் நீ கேட்கலாகின்ற அந்த நாளிலே; என்க.

(வி - ம்.) அறிபொருள் - அறிதற்குரிய மெய்ப்பொருள். இறைவன் என்றது அங்கிங்கெனாதபடி எங்குமிருக்கின்ற பரப்பிரமத்தை. முறைமை என்றது ஒன்றிலிருந்து ஒன்றைத் தோற்றுவிக்கின்ற முறைமை. தன் உருவில்லோன் - தனக்கென்று உருவமில்லாதவன்; பிறவற்றிற்கு உருப் படைப்போன் என்க. அன்னோன் - அத்தகையவன்; துன்ப நோன்பே அறுத்து உச்சியில் இருத்தும் என்க. பூத விகாரப்புணர்ப்பு என்பவர் - பூதவாதிகள்; படிற்றுரை - பொய் மொழி; அல்லியங் கோதை: முன்னிலைப் புறமொழி.

## இதுவுமது

௧௦௯ - ௧௧௨ : இறைவனும்.........ஒழிவாயலை

(இ - ள்.) இறைவனும் இல்லை இறந்தோர் பிறவார் - இவ்வுலகத்திற்குக் கடவுளாவான் யாருமில்லை செத்தவர் மீண்டும் பிறப்பதில்லை ஆதலால்; அறனொடு என்னை என்று அறைந்தோன் தன்னை - அறம் என்னும் அவற்றினோடு மாந்தர்க்குற்ற தொடர்பு என்கொலோ என்று கூறிய பூதவாதியை நோக்கி; பிறவியும் அறவியும் பெற்றியின் உணர்ந்த நறுமலர்க்கோதை எள்ளினை நகுதி - முற்பிறப்பும் அறநெறியும் பண்பினோடு அறிந்துகொண்டிருக்கின்ற மணிமேகலாய்! நீ இகழ்ந்து நகைப்பாய்; இவ்வுரை கேட்டு எள்ளினை போலும் - நீ நகைத்தமை கண்ட அப் பூதவாதி யான் கூறிய மொழியைக் கேட்டு நீ என்னை இகழ்ந்து நகைத்தாய் போலும்; இங்கு எள்ளியது உரை என - நீ இவ்விடத்திலே என்னை இகழ்ந்ததற்குக் காரணம் கூறுதி என்று அவன் நின்னை வினவா நிற்ப அவனுக்கு; உன் பிறப்பு உணர்த்துவை - நீ உன்னுடைய முற்பிறப்பினை உணர்ந்திருக்கின்ற வரலாற்றினைக் கூறுவாய்; ஆங்கு நின் கொணர்ந்த அருந்தெய்வம் மயக்க காம்பு அன தோளி கனா மயக்கு உற்றனை என்று அவன் உரைக்கும் - அது கேட்ட அந்தப் பூதவாதி நின்னை நோக்கிக் கூறுபவன் அம் மணிபல்லவத்தின்கண் உன்னைக் கொண்டுவந்த காண்டற்கரிய தெய்வமே நின்னை மயக்கிவிட்டமையாலே மூங்கில் போன்ற தோளையுடைய நீ கனவின்கண்

மயங்கி அங்ஙனம் கண்டிருக்கின்றாய் என்று அவன் உனக்குக் கூறுவான்; இளங்கொடி நல்லாய் அன்று என்று அவன் முன் அயர்ந்து ஒழிவாய் அலை - மணிமேகலாய் நீ அங்ஙனம் அன்று என்று கூறுமளவிலே இல்லாமல் அவன் முன்னர் அறங் கூறுதலை மறந்து போகமாட்டாய் என்க.

(வி - ம்.) இறைவனும் இல்லை.........அறைந்தோன் என்றது பூதவாதியை. இறந்தோர் பிறத்தல் இல்லையாதலால் மாந்தர் அறம் செய்தல் பயனில் செயலாம் என்பான் இறந்தோர் பிறவார் அறனோடு என்னை என்றான். என்னை? என்னும் வினா அது பயனில் செயலாம் என்பது படநின்றது. அறவி-அறநெறி. நறுமலர்க் கோதை: முன்னிலைப் புறமொழி; காம்பன தோளி என்றது அத் தெய்வம் பூதவாதியின் கூற்றைக் கொண்டு கூறியபடியாம்; நிற்கொணர்ந்த அருந்தெய்வம் மயக்க மயக்குற்றனை என்று பூதவாதி கூறினான் என்றமையால் மணிமேகலை அவனுக்குத் தன் பிறப்புணர்த்தும் வழி மணிமேகலாதெய்வம் தன்னை எடுத்துப் போயதும் அதனால் புத்த பீடிகை கண்டு பிறப்புணர்ந்த வரலாறு முழுவதும் கூறுவாள் என்பதும் பெற்றாம். அயர்ந் தொழிவாயலை - மறந் தொழியாய்.

## இதுவுமது

### ௧௧௩ - ௧௧௮: தீவினை.........கேளாய்

(இ - ள்.) மடவாய் தீவினை உறுதலும் செத்தோர் பிறத்தலும் - மணிமேகலாய்! ஒருவன் செய்த தீவினையின் பயன் அவனுக்கு வந்தெய்துதலும் இறந்தவர் மீண்டும் பிறத்தலும்; வாயே என்று மயக்கொழி - உண்மையே என்று நீ அவன் உரையால் மயங்காதொழிக; வழு அறு மரனும் மண்ணும் கல்லும் எழுதிய பாவையும் பேசா என்பது-குற்றமற்ற மரமும் மண்ணும் கல்லும் இவற்றால் பண்ணிய பாவைகளும் பேசமாட்டா என்னும் இயற்கையை; அறிதலும் அறிதியோ அறியாய் கொல்லோ அறியாய் ஆயின் ஆங்கு அது கேளாய் - நீ அறிந்திருப்பாயோ அறியமாட்டாயோ அறிந்திலாயாயின் அது பற்றி யான் கூறும் இதனையுங் கேட்பாயாக; என்க.

(வி - ம்.) வாயே என்று அவனுடைய மயக்கத்தை ஒழித்திடுக எனக் கந்திற்பாவையின் வேண்டுகோளாகக் கோடலுமாம். வழு-குற்றம். பேசா என்பது என்றது பேசமாட்டா என்னும் இயற்கையை. கந்திற் பாவை தான் தூணின் நின்ற பாவை வாயிலாகப் பேசுதலால் தன் பேச்சினை அவள் ஐயுறாமைப் பொருட்டு அத் தெய்வம் இது கூறிய படியாம். ஆங்கு அது என்றது-அவ்வியற்கைக்கு மாறாய் இக் கற்பாவை பேசுமிது என்றவாறு.

### கந்திற் பாவை தன் வரலாறு கூறுதல்

#### கககூ - கஉகூ : முடித்த.........கேட்டியோ

(இ - ள்.) முடித்துவரு சிறப்பின் மூதூர் - யாண்டு தோறும் செய்து முடித்து வருகின்ற இந்திர விழாவினையுடைய பழைய இப் பூம்புகார் நகரத்தின்கண்; கொடித்தேர் வீதியும் தேவர் கோட்டமும் முதுமர இடங்களும் முதுநீர்த் துறைகளும் பொதியிலும் மன்றமும் யாங்கணும் - கொடியுயர்த்திய தேர் ஓடுகின்ற வீதிகளிலும் கோயில்களிடத்தும் முதிய மரங்கள் நிற்கும் இடங்களிலும் பழமையான நீராடும் துறைகளிடத்திலும் ஊரம்பலத்திலும் மன்றங்களிடத்தும் இன்னோரன்ன எவ்விடங் களிலும்; பொருந்துபு நாடி காப்பு உடை மாநகர் காவலும் கண்ணி - பொருந்தும் இடங்களை ஆராய்ந்தறிந்து மதில் அரண் முதலிய காவலையுடைய பெரிய இந்நகரத்திற்குத் தெய்வக் காவலும் வேண்டும் என்று கருதி, யாப்புடைத்தாக அறிந்தோர் வலித்து மண்ணினும் கல்லினும் மரத்தினும் சுவரினும் - அவ்வத் தெய்வங்களுக்குப் பொருத்தமுடையதாக அவற்றின் இயல்பறிந் தோரால் துணியப்பெற்று மண்ணாலும் கல்லினாலும் மரத்தினாலும் சுவர்களிடத்தும்; கண்ணிய தெய்வம் காட்டுநர் வகுக்க ஆங்கு அத்தெய்வதம் அவ்விடம் நீங்கா - அச் சான்றோரால் கருதப்பட்ட அத் தெய்வங்களின் உருவத்தைச் செய்து காட்டுபவராகிய மண்ணீட்டாளரும் கண்ணுள் வினைஞரும் இயற்று நிற்ப அவ்வுருவங்களில் உறைகின்ற அத் தெய்வங்கள் அவ்விடங்களி னின்றும் ஒரு பொழுதும் நீங்க மாட்டா ஆதலின்; ஊன் கணினார்கட்கு உற்றதை உரைக்கும் என் திறம் கேட்டியோ - ஞானக்கண் இல்லாத மாந்தர்களுக்கு நிகழ்வதனை எடுத்துரைக் கின்ற என்னுடைய வரலாறு கேட்பாயாக; என்க.

(வி - ம்.) தேவர் கோட்டம் - தெய்வத்திருக்கோயில்கள்; பொதி யில் - கட்டிடத்தோடு கூடிய ஊரம்பலம். மன்றம் - மரநிழலையுடைய பொதுவிடம். காப்பு - மதில் முதலியன. காவலும் கண்ணி என்றது அரண்காவலேயன்றித் தெய்வக்காவலும் வேண்டுமென்று கருதி என்றவாறு. யாப்பு - பொருத்தம், வலித்து - துணியப்பட்டு. அறிந்தோ ரால் வலிக்கப்பட்டு மண் முதலியவற்றால் தெய்வதம் காட்டுநர் வகுக்க என இயைத்திடுக. தெய்வதம் காட்டுநர் - மண்ணீட்டாளரும் கண்ணுள் வினைஞருமாம். அத் தெய்வம் அவ்விடம் நீங்கா எனவே யானும் எனக்கு வகுத்த இப் பாவையினின்று உற்றதுரைப்பேன் என்று அறிவித்தவாறும் ஆயிற்று. இது குறிப்பெச்சம். கேட்டியோ என்புழி ஒகாரம் அசைச்சொல்.

இதுவுமது

கஉக - கசஉ : இளங்கோடி.........என

(இ - ள்.) இளங்கொடி நல்லாய் - இளமையுடைய மணிமேகலை நல்லாய்!; மன்பெரும் தெய்வகணங்களின் உள்ளேன் - யான் நிலைபெற்ற பெருந்தெய்வக் கூட்டங்களுள் ஒரு தெய்வமாக இருக்கின்றேன்; துவதிகன் என்பேன் - துவதிகன் என்று பெயர் கூறப்படுவேன்; தொன்று முதிர் கந்தின் மயன் எனக்கு ஒப்பா வகுத்த பாவையின் யான் நீங்கேன் - பழைமையினால் முதிர்வுற்ற இத் தூணின்கண் மயன் என்னும் தெய்வத்தச்சன் எனக்கு நிகராகப் பண்ணிய இந்தப் படிமத்தினின்றும் ஒரு பொழுதும் யான் நீங்குகிலேன்; என் நிலையது கேளாய் - என்னுடைய தன்மையைக் கூறுவேன் கேள்; மாந்தர் அறிவது வானவர் அறியார் - மக்கள் அறிதற்கியன்ற மறைச்செய்தியைத் தேவர்களும் அறிந்துகொள்ள வல்லுநர் அல்லர் போலும்; ஓவியச்சேனன் என் உறுதுணைத்தோழன் ஆவதை ஆர் இந் நகர்க்கு உரைத்தனரோ - தெய்வங்களுள் வைத்துச் சித்திரசேனன் என்பான் என்னுடைய நெருங்கிய உசாஅத்துணைத் தோழனாய் இருக்கின்ற செய்தியை யார்தாம் இந்நகர மக்களுக்கு அறிவித்தனரோ யானும் அறிகிலேன்; அவனுடன் யான் சென்று ஆடு இடம் எல்லாம் உடன் உறைந்தார் போல் ஒழியாது எழுதி - அச்சித்திரசேனனோடு யான் போய் விளையாடுகின்ற இடங்களிலெல்லாம் எம்முடன் கூடி இருந்தார் போன்று அவனையும் என்னையும் இணைத்து அவ்விடங்களில் ஒன்றேனும் ஒழியா வண்ணம் உருவெழுதி வைத்துக்கொண்டு; பூவும் புகையும் பொருந்துபு புணர்த்து - மலரும் மணப்புகையும் ஆகிய வழிபாட்டுப் பொருள்களைக் கூட்டி என்பால் வந்து; நாநனி வருந்த என் நலம் பாராட்டலின் - தம்முடைய நா மிகவும் வருந்துமளவிற்கு என்னுடைய அழகினை வண்ணித்துப் புகழ்தலின்; மணிமேகலை யான் வருபொருள் எல்லாம் துணிவுடன் உரைத்தேன் - மணிமேகலாய்! யான் அம் மக்களுக்கு எதிர்காலத்திலே நிகழ்கின்ற பொருளெல்லாம் தெளிவுடன் கூறுவேன் ஆயினேன்; என் சொல் தேறு என - ஆதலின் அங்ஙனமே யான் உனக்குக் கூறிய எதிர்கால நிகழ்ச்சிகளையும் உண்மை என்று தெளிந்துகொள்ளக் கடவாய் ஐயுறாதே கொள்; என்க.

(வி - ம்.) தெய்வங்களுள் யான் சிறந்த தெய்வ கணத்தைச் சேர்ந்துளேன் என்பது தோன்ற மன்பெருந் தெய்வகணம் எனல் வேண்டிற்று. என்பேன் - எனப்படுவேன். ஒப்பாக என்பதன் ஈறு தொக்கது. பாவை - கந்தினிடத்துப் படிமம். எனக்கு ஒரு தோழன்

சித்திரசேனன் என்பவன் உளன். யானும் சித்திரசேனனும் எங்குச் சென்றாலும் சேர்ந்து செல்வேம். அவனும் யானும் விரும்பி விளையாடுகின்ற இடங்களும் பல உள. அவ்விடங்களிலெல்லாம் என்னையும் அவனையும் இணைத்தே எழுதியிருக்கின்றனர். வாழ்த்தும்போது என்னுடைய நலத்தை மட்டும் தனித்தெடுத்துப் பாராட்டுகின்றனர். அவன் எனக்குத் தோழனாய் இருப்பதனையும் அறிந்து, யாங்கள் கூடி விளையாடும் இடங்களிலும் ஒன்றும் ஒளியாமல் எங்களை இணைத்தே எழுதியிருக்கின்றனர். இம் மறைச் செய்திகளை எல்லாம் மக்களாகிய இவர்கள் எப்படித்தான் அறிந்து கொள்ள முடிந்ததோ! அவர்கள் அறிந்து கொண்ட வழி யாது என அறிந்துகொள்ளத் தெய்வமாகிய எனக்கும் இயலவில்லை என மக்களைப் பாராட்டுகின்ற இக் கந்திற் பாவை மாந்தர் அறிவது வானவர் அறியார் போலும் என்று வியந்து கூறுகின்றது; என்க. துணிவுடன் உரைத்தேன் என்றது உரைத்து வந்தேன் அவ்வாறே நினக்கும் உரைத்த என் சொல் தேறு என்பதுபட நின்றது. தேறு - தெளி.

### மணிமேகலை கந்திற்பாவையை எனக்கு எதிர்காலத்தே வரும் ஏது நிகழ்ச்சிகளைக் கடைபோகக் கூறுக என்று வேண்டுதல்

கசரு - கசசு: தேறேன்.........நல்லாய்

(இ - ள்.) தெய்வக் கிளவிகள் தேறேன் அல்லேன் - அதுகேட்ட மணிமேகலை அருளுடைய தெய்வமே கேள்! அடிச்சி தெய்வங்கள் கூறுகின்ற மொழிகளை வாய்மை என்று தெளிந்து கொள்ளும் அளவிற்குப் பட்டறிவுடையேன் ஆதலால் ஐயுறாது உன் மொழிகளைத் தெளிந்து கொள்வேன் காண், ஒரு வேண்டுகோள்! நீ கூறுகின்ற ஏது நிகழ்ச்சிகளை; எனக்கு ஈறு கடை போக அருள் என்றலும் - அடிச்சிக்கு அவற்றை எனது இறுதிகாறும் கூறி அருளுக என்று வேண்டிக் கொள்ளா நிற்ப; துவதிகன் உரைக்கும் மடக்கொடி நல்லாய் சொல்லலும் சொல்லுவேன் வருவது கேளாய்-அவ் வேண்டுகோட்கு இணங்கிய துவதிகன் என்னும் அத் தெய்வம் கூறும் மடப்பம் உடைய பூங்கொடி போலும் அழகுடையோய் அங்ஙனமே நின்னுடைய இறுதிக்காலம் வருந்துணையும் நிகழும் ஏது நிகழ்ச்சியைக் கூறுகின்றேன் கேட்பாயாக; என்க.

(வி - ம்.) தேறேன் அல்லேன் என்னும் இரண்டு எதிர்மறையும் ஒருடன்பாட்டுப் பொருளை வற்புறுத்து நின்றன. ஈறு - சாக்காடு. அங்ஙனம் தெளிவதற்குரிய பட்டறிவு எனக்கு மிகுதியும் உண்டென்பது இதன் குறிப்புப் பொருள். சொல்லலும் சொல்லுவேன் என்னும் அடுக்கு தேற்றமாகச் சொல்லுவேன் எனும் உறுதிப்பொருள் பயந்து நின்றது; இவ்வாறு அடுக்கிக் கூறும் வழக்கம் இந்நூலின்கண் பல விடங்களில் காணப்படுகின்றது. அவ்விடமெல்லாம் இவ்விளக்கத்தைக் கொள்ளுக.

## துவதிகன் கூற்று

௧௪௭ - ௧௫௪: மன்னுயிர்..........சேர்குவை

(இ - ள்.) மன் உயிர் நீங்க மழைவளம் கரந்து பொன் எயில் காஞ்சி நகர் கவின் அழிய - உலகத்தில் உடம்பொடு நிலைபெற்று வாழுகின்ற உயிர்கள் மடிந்து போகும்படி மழையால் உண்டாகின்ற வளம் ஒழிந்து போனமையால் அழகிய மதிலை உடைய காஞ்சிமாநகரம் அழகொழிந்து போகாநிற்க; ஆங்கு அது கேட்டு ஆர் உயிர் மருந்தாய் ஈங்கு இம் முதியாள் இடவயின் வைத்த தெய்வப் பாத்திரம் செவ்வியின் வாங்கி - ஆங்கு நிகழ்ந்த மன்னுயிர் மடியும் செய்தியைக் கேட்டு அரிய உயிர்களுக்குச் சாக்காடு தவிர்க்கும் மருந்தாக இங்கு இச்சம்பாபதி திருக்கோயிலின்கண் வைத்துள்ள தெய்வத்தன்மையுடைய அமுதசுரபி என்னும் பிச்சைப் பாத்திரத்தைச் செவ்விதாகக் கையில் எடுத்துக் கொண்டு; தையல் நின் பயந்தோர் தம்மொடு போகி அறவணன் தானும் ஆங்கு உளன் ஆதலின் - மணிமேகலாய்! உன்னுடைய தாய்மார்களாகிய மாதவியோடும் சுதமதியோடும் சென்று அறவணவடிகளாரும் அக் காஞ்சி நகரத்திலேயே இருப்பது தெரிந்து; செறிதொடி காஞ்சி மாநகர் சேர்குவை - நீயும் வஞ்சி நகரத்தினின்றும் போய் அக் காஞ்சிமா நகரத்தை அடைவாய்; என்க.

(வி - ம்.) நீங்க என்றது இறந்துபட என்றவாறு. பொன் - அழகு. நீ அது கேட்டுத் தெய்வப்பாத்திரம் செவ்வியின் வாங்கி அறவணன் ஆங்குளன் ஆதலும் தெரிந்து நீயும் அவ்வுயிரைப் பாதுகாத்தற்கு அந் நகரத்தை அடைவாய் என்றவாறு.

## இதுவுமது

௧௫௫ - ௧௬௦: அறவணன்.........பலவுள

(இ - ள்.) ஆய்தொடி அறவணன் அருளால் அவ்வூர் பிறவணம் ஒழிந்து நின்பெற்றியை ஆகி - அக் காஞ்சி நகரின்கண் நீ அறவணவடிகளாருடைய அறிவுரை கேட்டு அந் நகரத்தின்கண் நின் உருவிற்கு வேறுபட்ட அம் மாதவன் வடிவத்தைக் களைந்து நினக்கியல்பான பெண்ணுருவத்தை உடையையாகி; வறன் ஓடு உலகின் மழைவளம் தரூஉம் அறன் ஓடு ஏந்தி ஆர் உயிர் ஓம்புவை - வற்கடம் பரவிய இவ்வுலகத்தின்கண் மழை போல உணவாகிய செல்வத்தை யளிக்கும் அறப் பண்புடைய அமுதசுரபியைக் கையில் ஏந்தி உண்டி கொடுத்து அரிய உயிரினங்களைப் பாதுகாத்தலைச் செய்வாய்; ஆய் தொடிக்கு அவ்வூர்

அறனொடு தோன்றும் ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள - மேலைக்கு அக் காஞ்சிநகரத்தின்கண் அவ்வறச் செயலோடு பழவினைப் பயன்கள் பலவும் நிகழவிருக்கின்றன ; என்க.

(வி - ம்.) அறவணன் அருளால் என்றது அறவணருடைய அறிவுரையின்படி என்றவாறு. ஆய்தொடி : முன்னிலைப் புறமொழி. பிறவணம் - வேற்றுருவம் ; என்றது அவள் மேற்கொள்ளும் மாதவன் வடிவத்தை. வறன் ஓடு உலகு - வற்கடம் (பஞ்சம்) பரவிய உலகம். மழைபோல உணவாகிய செல்வத்தை அளிக்கும் என்க. வறன், அறன் ; மகரத்திற்கு நகரம் போலி.

இதுவுமது

கசுக - களஉ : பிறவறம்.........உரைத்தலும்

(இ - ள்.) பிறவறம் உரைத்தோர் பெற்றிமை எல்லாம் அறவணன் தனக்கு நீ உரைத்த அந்நாள் - பௌத்தருடைய அறத்திற்கு வேறுபட்ட அறங்களையுடைய பிற சமயக்கணக்கர் உனக்கு வஞ்சி நகரத்திலே உரைத்த அறங்களை எல்லாம் அறவணவடிகளாருக்கு நீ எடுத்துக் கூறிய அந்த நாளிலே; தவமும் தருமமும் சார்பில் தோற்றமும் பவம் அறு மார்க்கமும் பான்மையின் உரைத்து மறஇருள் இரிய மன்உயிர் ஏமுற - அது கேட்ட அறவணவடிகளார் உனக்குக் கூறுபவர் தவமும் தருமமும் ஒன்றை ஒன்று சார்ந்து தோன்றும் நிதானம் பன்னிரண்டும் பிறப்பறுதற்குக் காரணமான நன்னெறியும் என்னும் இவற்றைத் தமக்கே சிறந்துரிமையுடைய பண்போடு எடுத்துக் கூறித் தீவினையாகிய இருள் கெடவும் நிலைபெற்ற உயிரினம் இன்பமுறவும் ; அறவெயில் விரித்து ஆங்கு அளப்பு இல் இருத்தியொடு புத்த ஞாயிறு தோன்றுங் காறும் - தமது அறமாகிய ஒளியை உலகிலே பரப்பி அவ்வாறே அளக்கலாகாத இருத்திகளோடே புத்த பெருமான் என்னும் ஞாயிற்று மண்டிலம் இவ்வுலகில் வந்து தோன்றுமளவும் ; சேந்தும் பிறந்தும் செம்பொருள் காவா - யான் இறந்தும் பிறந்தும் பௌத்தர் கூறுகின்ற மெய்ப்பொருளைப் பாதுகாத்து ; இத் தலம் நீங்கேன் யானும் - இக் காஞ்சி நகரத்தைக் கைவிட்டுப் போகேன் யானும் இந் நகரத்திலேயே உறைவேன் காண் ; இளங்கொடி நீயும் தாயரும் தவறு இன்றாக - இளமையுடைய நீயும் நின் தாயராகிய மாதவியும் சுதமதியும் அறத்தில் பிறழாது வாழ்வீராக ; நின் மனப்பாட்டு அறம் வாய்வது ஆக என ஆங்கு அவன் உரைத்தலும் - நின்னுடைய உள்ளத்தினுள் தோன்றிய இத் துறவறம் நினக்கு வாய்ப்புடையதாகுக என்று அவ்வறவண வடிகள் உனக்குக் கூறுகிற்பவும் ; என்க.

(வி - ரை.) பிறவறம் - பிற சமயக் கணக்கர் அறநெறி. சார்பு - பன்னிரண்டு நிதானங்கள். அவை "பேதைமை செய்கை யுணர்வே யருவுரு, வாயில் ஊறே நுகர்வே வேட்கை, பற்றே பவமே தோற்றம் வினைப்பய, னிற்றென வகுத்த வியல்பீ ராறும் என்பன. இவை ஒன்றை ஒன்று சார்ந்து மண்டில வகையால் வருதலால் சார்பில் தோற்றம் எனப்பட்டன. இருத்தி - சித்தி; அவை அணிமா முதலிய எண் வகைப்படும். புத்த ஞாயிறு தோன்றுங்காறும் யானும் இத் தலம் நீங்கேன் நீயும் தாயரும் தவறின்றாக நினக்கு அறம் வாய்வதாக என்று அறவணர் நின்னை வாழ்த்துவார் என்றவாறு.

## இதுவுமது

### களஉ - களகூ: அவன்.........உய்தி

(இ - ள்.) அவன் மொழி பிழைமாப் பாங்கு இயல் நல் அறம் பலவும் செய்த பின் - அவ்வறவணர் அறிவுறுத்த அறிவுரைகளினின்றும் பிறழாது அவற்றின் பகுதியில் இயன்ற நன்மையுடைய அறங்கள் பலவற்றையும் செய்தபின்; கச்சி முற்றத்து நின் உயிர் கடைகொள - அக் காஞ்சி மாநகரத்தின் கண்ணே நின்னுயிர் இப் பிறப்பின் முடிவினை எய்தா நிற்பப் பின்னர்; உத்தர மகதத்து உறு பிறப்பு எல்லாம் ஆண் பிறப்பு ஆகி அருள் அறம் ஒழியாய் - நினக்கு வட மகத நாட்டில் பல பிறப்புகள் உண்டாகும், அப் பிறப்பெல்லாம் ஆணாகவே நீ பிறந்து புத்த பெருமான் திருவாய் மலர்ந்தருளிய அருளறத்தினின்றும் ஒழியாமாய்; மாண்பொடு தோன்றி மயக்கம் களைந்து பிறர்க்கு அறம் அருளும் பெரியோன் தனக்கு தலைச் சாவகனாய்ச் சார்பு அறுத்து உய்தி - அவ்வறத்திற்குரிய சிறப்போடு பிறப்பெய்தி மாந்தர்களின் மன மயக்கங்களை அறிவுரை கூறி அகற்றித் தனக்கென வாழாது பிறர் பொருட்டு நல்லறம் கூறுகின்ற புத்த பெருமானுக்குத் தலைமாணாக்கனாகிப் பற்றறுத்து வீடு பெறுவாய்காண்; என்க.

(வி - ரை.) அவன்: அறவணன்; பாங்கு - பகுதி. கச்சி முற்றம் என்புழி முற்றம் ஏழாவதன் பொருட்டு. ஆண் பிறப்பாகிச் சார் பறுத்து உய்தி என்றமையால் ஆண் பிறப்பே வீடுபேற்றிற்குரியது என்பது பௌத்தர் கொள்கை என்பது பெற்றாம். தலைச்சாவகன் - முதல் மாணாக்கன்.

## இதுவுமது

### கஅ0 - ககூ0: இன்னும்.........கதிரோனேன்

(இ - ள்.) இன்னும் கேட்டியோ நன்னுதல் மடந்தை - இன்னும் சில கேட்பதற்கு விரும்புவாய் அல்லையோ? கூறுவன் கேள் அழகிய நுதலையுடைய பெண்ணே; மைக்கண் ஒளிய

உரவோன் தன்னை வாங்கு திரை எடுத்த மணிமேகலா தெய்வம்- முன்னொரு காலத்திலே புகழால் உயர்ந்த அறிவுடையோனாகிய உன்குல முதல்வன் ஒருவனை உலகத்தைச் வளைந்துள்ள கடலின் கண்ணிருந்து எடுத்து உய்வித்த நின் குலதெய்வமாகிய மணிமேகலா தெய்வம்; சாது சக்கரற்கு ஆர் அமுது ஈத்தோய் ஈது நின் பிறப்பு என்பது தெளிந்தே உவவனம் மருங்கில் உன்பால் தோன்றி - நீ முற்பிறப்பில் சாது சக்கரனுக்கு உண்டி கொடுத்தமையால் இங்ஙனம் நீ பிறந்துள்ளாய் என்னும் உண்மையைத் தெரிந்து கொண்டே நீ உவவனத்தின் உள்ளே புக்கபொழுது உன்னிடத்தே வந்து தோன்றி உன் வாழ்க்கை நெறி பிறழ்தல் கூடாது என்பது கருதியே நின்னை; மணிபல்லவத்திடைக் கொணர்ந்தது கேள்-உவனத்தினின்றும் எடுத்துப் போய் மணிபல்லவத்திலே சேர்த்தது இச் செய்தியைக் கூர்ந்து கேட்பாயாக; என துவதிகன் உரைத்தலும் - என்று அக் கந்திற் பாவையிடத்து நிற்கும் தெய்வம் கூறு நிற்றலும்; அவதி அறிந்த அணி இழை நல்லாள் துயர்க்கடல் நீங்கி - இவ்வாற்றால் தன் பிறப்பின் எல்லையை அறிந்து கொண்ட மணிமேகலை துன்பமாகிய கடலினின்றும் கரை ஏறி; வலை ஒழி மஞ்ஞையின் மனமயக்கு ஒழிதலும் மலர் கதிரோன் உலகு துயில் எழுப்பினன் - வேடர் வீசிய வலையினின்றும் தப்பிய மயில் போல ஊழ் வினையினாலே எய்திய தன் மன மயக்கத்தினின்றும் ஒழியுமளவிலே கடலினின்றும் தோன்றுகின்ற கதிரவன் உலகிலுள்ள உயிர்களை உறக்கத்தினின்றும் எழுப்பினன்; என்பதாம்.

(வி - ம்.) ஊங்கண் - முன்பு; "தூங்கெயிலெறிந்த நின்னூங் கணோர் நினைப்பின்" (புறநா. ௬௬) "போந்தைக் கண்ணி நின்னூங் கணோர் மருங்கிற், கடற் கடம்பெறிந்த காவலன்" (சிலப். ௨௮: ௧௬௪ - ௧௬௫) திரை எடுத்த - அழுந்தி. இறவாவண்ணம் கடலினின்றும் எடுத்த இக் கதையை, (சிலப்பதிகாரம், ௧௫ : ௨௮ஆம் அடி முதலியவற்றிற் காண்க.) சாத சக்கரற்கு - சாது சக்கரனென்னும் முனிவனுக்கு. ஈது - இத்தன்மையை யுடையது. அவதி - எல்லை. ௧௧0. மலர் கதிரோன்: வினைத்தொகை.

இனி இக் காதையை—குழலி எழுந்து கேட்டு எழுந்து நீங்கி வெய்துயிர்த்துப் புலம்பி அழுதேங்கி அயாவுயிர்த்தெழுதலும் இருந்தெய்வம் உரைத்தலும், பூங்கொடி பொருந்தி, 'நின்பொருள் பேறுவேன்'' என, தெய்வங்கூறும்; அங்ஙனங் கூறுந்தெய்வம் 'என்சொற்றேறு' என மணிமேகலை, 'எனக்கு அருள்' என்றலும்; துவதிகனுரைக்கும் அங்ஙனமுரைக்குந் துவதிகன் உரைத்தலும், நல்லாள் நீங்கி மயக்கொழிதலும், கதிரோன் துயிலெழுப்பினனென இயைத்துக் கொள்க.

**கந்திற்பாவை வருவதுரைத்த காதை முற்றிற்று.**

# உஉ. சிறைசெய் காதை

[இருபத்திரண்டாவது மணிமேகலை பொருட்டால் மடிந்தான் உதயகுமரனென்பது மாதவர் வாய்க் கேட்ட மன்னவன் மணிமேகலையை மந்திரியாகிய சோழிகவேனதியாற் காவல் கொண்ட பாட்டு]

அஃதாவது—உதயகுமரன் கொலையுண்ட செய்தியை அவன் தந்தையாகிய சோழ மன்னனுக்கு அறிவித்த முனிவர்கள் அவன் வருந்தாமைப் பொருட்டு அவன் கொலையுண்ட காரணத்தையுங் கூற, அது கேட்ட மன்னவன் வருத்தமும் சினமும் தவிர்ந்து மணிமேகலையைச் சிறையிட்ட செய்தியைக் கூறும் செய்யுள் என்றவாறு.

இதன்கண்—சம்பாபதி கோயிலை விடியற் காலத்தே வழிபாடு செய்ய வந்த மக்கள் உதயகுமரன் கொலையுண்ட செய்தியைச் சக்கரவாளத்தில் இருந்த மாதவருக்கெல்லாம் அறிவித்தனராக; அது கேட்ட அத் துறவோர் மணிமேகலையின்பால் சென்று நிகழ்ந்தவற்றை எல்லாம் தெரிந்துகொண்டு அரசன்பால் சென்று "மனக்கினிதாக வாழிய வேந்தே!" என விளித்து "இன்றே யல்ல", எனத் தொடங்கி அந்நகரத்தின்கண், "கன்றிய காமக் கள்ளாட் டயர்ந்து பத்தினிப் பெண்டிர்பாற் சென்றணுகியும், நற்றவப் பெண்டிர் பின்னுளம் போக்கியும், தீவினையுருப்ப உயிரீறு செய்தோர் பாராள் வேந்தே பண்டும் பலரால்" எனத் தோற்றுவாய் செய்து பண்டைக் காலத்தில் அந்நகரத்தின்கண் காவிரியில் நீராடி வருகின்ற பார்ப்பனி மருதி என்பவளை அரசன்மகன் ஒருவன் கண்டு காமுற்று அவளை அழைக்க மருதி மனங்கலங்கி "மண்திணி ஞாலத்து மழை வளந் தரூஉம் பெண்டிராயின் பிறர் நெஞ்சு புகாஅர்" என அக் குற்றத்தைத் தன் மேலதாக்கிக்கொண்டு, சதுக்கப்பூதத்தின் முன்னிலையில் சென்று யான் செய் குற்றம் யான் அறிகிலேன். யான் பிறனுளம் புக்கேன் அதற்குக் காரணம் என்னை? என அழுது அத் தெய்வத்தை வினவுதலும் அதற்கு அத் தெய்வம் அவளுக்குக் கூறுகின்ற மறுமொழியும், விசாகை என்னும் பத்தினியின் வரலாறும், விசாகை தருமதத்தனுக்குக் கூறுகின்ற அறிவுரைகளும், ககந்தன் மகன் மற்றொருவன் விசாகைக்குப் பூமாலை சூட்டுதற்கு முயலுதலும், பூமாலையோடு உயர்த்திய அவன் கை மீண்டும் தாழ்த்த இயலாது போக, அதனால் அவன்

செயலை அறிந்த அரசன், மகன் என்றும் நோக்காமல் அவனை வாளால் எறிந்து கொன்ற செய்தியும் ஆக, அம் மாதவர் தம்முள் ஒரு மாதவன் கூற்றாக வருவனவும், மீண்டும் அம் மாதவன் உதயகுமரனுடைய இடங்கழி காமம் காரணமாக மணிமேகலையை நிழல் போலத் தொடர்ந்ததும் காயசண்டிகையின் கணவன் உதயகுமரனைக் கொன்றமையும் அரசனுக்கு எடுத்துக் கூறி இவை எல்லாம் ஊழ்வினையின் செயல் என, அம் மன்னவன் மனம் வருந்தாவண்ணம் கூறும் திறமும், அது கேட்ட மன்னவன் உதயகுமரன்பால் வெறுப்புற்றவனாய் உதயகுமரன் உடலை ஈமத்து ஏற்றி மணிமேகலையையும் காவல் செய்க என்று சோழிக வேனாதி என்னும் கோத்தொழிலாளனுக்குக் கட்டளையிடுதலும், பிறவுமாகிய செய்திகள் பலவும் பயில்வோர் உளமுருகக் கூறப்படுகின்றன.

கடவுள் மண்டிலங் காரிருள் சீப்ப
நெடுநிலைக் கந்தில் நின்ற பாவையொடு
முதியோள் கோட்டம் வழிபடல் புரிந்தோர்
உதய குமரற் குற்றதை யுரைப்பச்
சாதுயர் கேட்டுச் சக்கர வாளத்து
மாதவ ரெல்லாம் மணிமே கலைதனை
இளங்கொடி யறிவது முண்டோ விதுவெனத்
துளங்கா தாங்கவ ளுற்றதை யுரைத்தலும்
ஆங்கவள் தன்னை யாருயிர் நீங்கிய
வேந்தன் சிறுவனொடு வேறிடத் தொளித்து
மாபெருங் கோயில் வாயிலுக் கிசைத்துக்
கோயில் மன்னனைக் குறுகினர் சென்றீங்
குயர்ந்தோங் குச்சி உவாமதி போல
நிவந்தோங்கு வெண்குடை மண்ணகம் நிழற்செய
வேலுங் கோலும் அருட்கண் விழிக்க
தீதின் றுருள்கநீ யேந்திய திகிரி
நினக்கென வரைந்த ஆண்டுக ளெல்லாம்
மனக்கினி தாக வாழிய வேந்தே!
இன்றே யல்ல இப்பதி மருங்கில்
கன்றிய காமக் கள்ளாட் டயர்ந்து
பத்தினிப் பெண்டிர் பாற்சென் றணுகியும்
நற்றவப் பெண்டிர் பின்னுளம் போக்கியும்
தீவினை யுருப்ப உயிரீறு செய்தோர்
பாராள் வேந்தே பண்டும் பலரால்
மன்மருங் கறுத்த மழுவாள் நெடியோன்
தன்முன் தோன்றல் தகாதொழி நீயெனக்

கன்னி யேவலின் காந்த மன்னவன்
இந்நகர் காப்போர் யாரென நினைஇ
நாவலந் தண்பொழில் நண்ணார் நடுக்குறக்
காவற் கணிகை தனக்காங் காதலன்
இகழ்ந்தோர் காயினும் எஞ்சுத லில்லோன்
ககந்த னாமெனக் காதலிற் கூஉய்
அரசா ளுரிமை நின்பா லின்மையின்
பரசு ராமனின் பால்வந் தணுகான்
அமர முனிவ னகத்தியன் றனாது
துயர்நீங்கு கிளவியின் யான்தோன் றளவும்
ககந்தன் காத்தல் காகந்தி யென்றே
இயைந்த நாமம் இப்பதிக் கிட்டீங்
குள்வரிக் கொண்டவ் வுரவோன் பெயர்நாள்
தெள்ளுநீர்க் காவிரி யாடினள் வரூஉம்
பார்ப்பனி மருதியைப் பாங்கோ ரின்மையின்
யாப்பறை யென்றே யெண்ணின னாகிக்
காவிரி வாயிலில் ககந்தன் சிறுவன்
நீவா என்ன நேரிழை கலங்கி
மண்திணி ஞாலத்து மழைவளந் தரூஉம்
பெண்டி ராயின் பிறர்நெஞ்சு புகாஅர்
புக்கேன் பிறனுளம் புரிநூன் மார்பன்
முத்தீப் பேணும் முறையெனக் கில்லென
மாதுய ரெவ்வமொடு மனையகம் புகாஅள்
பூத சதுக்கம் புக்கனள் மயங்கிக்
கொண்டோற் பிழைத்த குற்றந் தானிலேன்
கண்டோன் நெஞ்சிற் கரப்பெளி தாயினேன்
வான்தரு கற்பின் மனையறம் பட்டேன்
யான்செய் குற்றம் யானறி கில்லேன்
பொய்யினை கொல்லோ பூத சதுக்கத்துத்
தெய்வம் நீயெனச் சேயிழை யரற்றலும்
மாபெரும் பூதந் தோன்றி மடக்கொடி
நீகே ளென்றே நேரிழைக் குரைக்கும்
தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றஅப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்
பிசியும் நொடியும் பிறர்வாய்க் கேட்டு
விசிபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
கடவுள் பேணல் கடவியை யாகலின்
மடவரல் ஏவ மழையும் பெய்யாது
நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப்

பிறர்நெஞ்சு சுடூஉம் பெற்றியு மில்லை
ஆங்கவை யொழிகுவை யாயி னாயிழை
ஓங்கிரு வானத்து மழையுநின் மொழியது
பெட்டாங் கொழுகும் பெண்டிரைப் போலக்
கட்டா துன்னையென் கடுந்தொழிற் பாசம்
மன்முறை யெழுநாள் வைத்தவன் வழூஉம்
பின்முறை யல்ல தென்முறை யில்லை
ஈங்கெழு நாளில் இளங்கொடி நின்பால்
வாங்கா நெஞ்சின் மயரியை வாளால்
ககந்தன் கேட்டுக் கடிதலு முண்டென
இகந்த பூதம் எடுத்துரை செய்ததப்
பூத முரைத்த நாளா லாங்கவன்
தாதை வாளால் தடியவும் பட்டனன்
இன்னுங் கேளாய் இருங்கட லுடுத்த
மண்ணாள் செல்வத்து மன்னவ ரேறே
தரும தத்தனுந் தன்மா மன்மகள்
பெருமதர் மழைக்கண் விசாகையும் பேணித்
தெய்வங் காட்டுந் திப்பிய ஓவியக்
கைவினை கடந்த கண்கவர் வனப்பினர்
மைத்துனன் முறைமையால் யாழோர் மணவினைக்
கொத்தன ளென்றே யூர்முழு தலரெழப்
புனையா வோவியம் புறம்போந் தென்ன
மனையகம் நீங்கி வாணுதல் விசாகை
உவக அறிவியி னூடுசென் றேறி
இலகொளிக் கந்தின் எழுதிய பாவாய்
உலகர் பெரும்பழி யொழிப்பாய் நீயென
மாநக ருள்ளீர் மழைதரு மிவளென
நாவுடைப் பாவை நங்கையை யெடுத்தலும்
தெய்வங் காட்டித் தெளித்திலே னாயின்
மைய லூரோ மனமா சொழியாது
மைத்துனன் மனையாள் மறுபிறப் பாகுவேன்
இப்பிறப் பிவனொடுங் கூடே னென்றே
நற்றாய் தனக்கு நற்றிறஞ் சாற்றி
மற்றவள் கன்னி மாடத் தடைந்தபின்
தரும தத்தனுந் தந்தையுந் தாயரும்
பெருநகர் தன்னைப் பிறகிட் டேகித்
தாழ்தரு துன்பந் தலையெடுத் தாயென
நாவுடைப் பாவையை நலம்பல ஏத்தி
மிக்கோ ருறையும் விழுப்பெருஞ் செல்வத்துத்
தக்கண மதுரை தான்சென் றடைந்தபின்

தரும தத்தனுந் தன்மா மன்மகள்
விரிதரு பூங்குழல் விசாகையை யல்லது
பெண்டிரைப் பேணேன் இப்பிறப் பொழிகெனக்
கொண்ட விரதந் தன்னுட் கூறி
வாணிக மரபின் வருபொரு ளீட்டி
நீள்நிதிச் செல்வனாய் நீள்நில வேந்தனின்
எட்டிப் பூப்பெற் றிருமுப் பதிற்றியாண்
டொட்டிய செல்வத் துயர்ந்தோ னாயினன்
அந்த ணாள னொருவன் சென்றீங்
கென்செய் தனையோ விருநிதிச் செல்வ
பத்தினி யில்லோர் பலவறஞ் செய்யினும்
புத்தே ளுலகம் புகாஅ ரென்பது
கேட்டு மறிதியோ கேட்டனை யாயின்
நீட்டித் திராது நின்னக ரடைகெனத்
தக்கண மதுரை தான்வறி தாக
இப்பதிப் புகுந்தனன் இருநில வேந்தே
மற்றவ னிவ்வூர் வந்தமை கேட்டுப்
பொற்றொடி விசாகையும் மனைப்புறம் போந்து
நல்லாள் நாணாள் பல்லோர் நாப்பண்
அல்லவை கடிந்த அவன்பாற் சென்று
நம்முறு மறிந்திலம் நம்மை முன்னாள்
மம்மர் செய்த வனப்பியாங் கொளித்தன
ஆறைந் திரட்டி யாண்டுனக் காயதென்
நாறைங் கூந்தலும் நரைவிரா வுற்றன
இளமையுங் காமமும் யாங்கொளித் தனவோ
உளனில் லாள எனக்கிங் குரையாய்
இப்பிறப் பாயின்யான் நின்னடி யடையேன்
அப்பிறப் பியான்நின் னடித்தொழில் கேட்குவன்
இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா
புத்தே ளுலகம் புதல்வருந் தாரார்
மிக்க அறமே விழுத்துணை யாவது
தானஞ் செய்யெனத் தரும தத்தனும்
மாமன் மகள்பால் வான்பொருள் காட்டி
ஆங்கவ னவளுடன் செய்த நல்லறம்
ஓங்கிரு வானத்து மீனினும் பலவால்
குமரி மூத்த அக் கொடுங்குழை நல்லாள்
அமர னருளால் அகனக ரிடூஉம்
படுபழி நீங்கிப் பல்லோர் நாப்பண்
கொடிமிடை வீதியில் வருவோள் குழல்மேல்

மருதி பொருட்டான் மடிந்தோன் தம்முன்
கருகிய நெஞ்சினன் காமங் காழ்கொளச்
சூரியிரும் பித்தை சூழ்ந்துபுறந் தாழ்ந்த
விரிபூ மாலை விரும்பினன் வாங்கித்
தொல்லோர் கூறிய மணமீ தாமென
எல்லவிழ் தாரோன் இடுவான் வேண்டி
மாலை வாங்க ஏறிய செங்கை
நீலக் குஞ்சி நீங்கா தாகலின்
ஏறிய செங்கை யிழிந்தில திந்தக்
காரிகை பொருட்டெனக் ககந்தன் கேட்டு
கடுஞ்சினந் திருகி மகன்றுயர் நோக்கான்
மைந்தன் றன்னை வாளா லெறிந்தனன்
ஊழிதோ றூழி யுலகங் காத்து
வாழி எங்கோ மன்னவ என்று
மாதவர் தம்முளோர் மாதவன் கூறலும்
வீயா விழுச்சீர் வேந்தன் கேட்டனன்
இன்றே யல்ல என்றெடுத் துரைத்து
நன்றறி மாதவிர் நலம்பல காட்டினிர்
இன்று முளதோ இவ்வினை யுரைமென
வென்றி நெடுவேல் வேந்தன் கேட்பத்
தீதின் றாக செங்கோல் வேந்தென
மாதவர் தம்முளோர் மாதவ னுரைக்கும்
முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீ ருலகில்
கடியப் பட்டன வைந்துள அவற்றில்
கள்ளும் பொய்யுங் களவுங் கொலையுந்
தள்ளா தாகுங் காமம் தம்பால்
ஆங்கது கடிந்தோ ரல்லவை கடிந்தோரென
நீங்கின ரன்றே நிறைதவ மாக்கள்
நீங்கா ரன்றே நீணில வேந்தே
தாங்கா நரகந் தன்னிடை யுழப்போர்
சேயரி நெடுங்கண் சித்திரா பதிமகள்
காதல னுற்ற கடுந்துயர் பொறாஅள்
மாதவி மாதவர் பள்ளியு ளடைந்தனள்
மற்றவள் பெற்ற மணிமே கலைதான்
முற்றா முலையினள் முதிராக் கிளவியள்
செய்குவன் தவமெனச் சிற்றிலும் பேரிலும்
ஐயங் கொண்டுண் டம்பல மடைந்தனள்
ஆங்கவ ளவ்வியல் பினளே யாயினும்
நீங்கா னவளை நிழல்போல் யாங்கணும்
காரிகை பொருட்டால் காமங் காழ்கொள

ஆரிரு ளஞ்சான் அம்பல மடைந்தனன்
காயசண் டிகைவடி வாயினள் காரிகை
காயசண் டிகையும் ஆங்குள ளாதலின்
காயசண் டிகைதன் கணவ னாகிய
வாய்வாள் விஞ்சைய னொருவன் தோன்றி
ஈங்கிவள் பொருட்டால் வந்தன னிவனென
ஆங்கவன் தீவினை யுருத்த தாகலின்
மதிமருள் வெண்குடை மன்ன நின்மகன்
உதய குமரன் ஒழியா னாக
ஆங்கவள் தன்னை யம்பலத் தேற்றி
ஓங்கிருள் யாமத் திவனையாங் குய்த்துக்
காயசண் டிகைதன் கணவ னாகிய
வாய்வாள் விஞ்சையன் தன்னையுங் கூஉய்
விஞ்சை மகள்பால் இவன்வந் தனனென
வஞ்ச விஞ்சையன் மனத்தையுங் கலக்கி
ஆங்கவன் தன்கை வாளா லம்பலத்
தீங்கிவன் றன்னை யெறிந்ததென் றேத்தி
மாதவர் தம்முளோர் மாதவ னுரைத்தலும்
சோழிக ஏனாதி தன்முகம் நோக்கி
யான்செயற் பால திளங்கோன் தன்னைத்
தான்செய் ததனால் தகவிலன் விஞ்சையன்
மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனின் இன்றால்
மகனை முறைசெய்த மன்னவன் வழியோர்
துயர்வினை யாளன் தோன்றினன் என்பது
வேந்தர் தஞ்செவி யுறுவதன் முன்னம்
ஈங்கிவன் தன்னையும் ஈமத் தேற்றிக்
கணிகை மகளையுங் காவல்செய் கென்றனன்
அணிகிளர் நெடுமுடி யரசாள் வேந்தென்.

## உஉ. சிறைசெய் காதை

### உரை

### சக்கரவாளத்து முனிவர் செயல்

க - கo : கடவுள்.........ஒளித்து

(இ - ள்.) கடவுள் மண்டிலம் கார் இருள் சீப்ப - கடவுள் தன்மையுடைய ஞாயிற்று மண்டிலம் குணகடலில் தோன்றி உலகத்தைக் கவ்வியிருக்கின்ற கரிய இருளை அகற்றுகின்ற நாட் காலத்தே யெழுந்து; நெடுநிலைக் கந்தின் நின்ற பாவையொடு முதியோள் கோட்டம் வழிபடல் புரிந்தோர் - நெடிய நிலைத் தூணின்கண் உறைகின்ற துவதிகன் என்னும் தெய்வத்தோடு சம்பாபதியின் திருக்கோயிலையும் வழிபாடு செய்கின்றவர்; உதயகுமரற்கு உற்றதை உரைப்ப - உதயகுமரன் கொலையுண்டு கிடந்தமையைக் கண்டு வந்து தமக்குக் கூறுதலாலே; சக்கர வாளத்து மாதவர் எல்லாம் - சக்கரவாளக் கோட்டத்தில் உலகவறவியின்கண் உறைகின்ற துறவோர் எல்லாம்; சாதுயர் கேட்டு - அரசிளங்குமரன் இறந்தமையால் உண்டான பெருந்துயரம் தரும் செய்தியைக் கேட்டு; மணிமேகலைதனை இளங்கொடி இது அறிவதும் உண்டோ என - மணிமேகலையை அணுகி இளைய பூங்கொடி போல்வாய் இந்நிகழ்ச்சியை நீ அறிந்ததும் உண்டோ என்று வினவ; ஆங்கு அவள் துளங்காது உற்றதை உரைத்தலும் - அப்பொழுது அம் மணிமேகலைதானும் சிறிதும் நடுக்கமின்றி நிகழ்ந்த செய்தியைக் கூறுதலும் அது கேட்ட அத்துறவோர்; ஆங்கு அவள் தன்னை ஆர் உயிர் நீங்கிய வேந்தன் சிறுவனொடு வேறு இடத்து ஒளித்து - அம் மணிமேகலையையும் அரிய உயிர் நீங்கிய உதயகுமரன் உடம்பையும் வெவ்வேறிடத்து மறைத்து வைத்த பின்னர்; என்க.

(வி - ம்.) கடவுள் மண்டிலம் என்றது கடவுள் தன்மையுடைய ஞாயிற்று மண்டிலத்தை; என்னை? அம் மண்டிலம் படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய இறைமைத் தொழில் மூன்றையும் செய்தலான் என்க. கந்தின் நின்ற பாவை - கந்திற் பாவை மேனின்ற தெய்வம். முதியோள்: சம்பாபதி. சாதுயர் - சாவினால் துயர்தரும் செய்தி. மணிமேகலைதனை அணுகி என்க. இது - இந்நிகழ்ச்சி. மெய்யுணர்வு பெற்று மேனிகழ்வனவற்றை அறிந்தவள் ஆதலின் அஞ்சாமல்

பட்டாங்குக் கூறினள் என்பார் துளங்காது உற்றதை உரைத்தலும் என்றார். வேறிடத்து என்றது வெவ்வேறிடத்து என்பதுபட நின்றது. அவளுக்குப் பிறரால் துன்பம் நிகழாமைப் பொருட்டும் அச் செய்தி பரவாமைப் பொருட்டும் சிறுவன் உடம்பையும் அவளையும் ஒளித்து வைத்தனர் என்பது குறிப்பு.

துறவோர் மன்னன்பால் செல்லுதல்

கக - கஅ: மாபெரும்.........வேந்தே!

(இ - ள்.) மாபெருங் கோயில் வாயிலுக்கு இசைத்து கோயில் மன்னனை குறுகினர் சென்று - மிகப் பெரிய அரண்மனையைக் காக்கும் வாயில் காவலருக்குத் தம் வரவினைக் கூறி அவர் வாயிலாய் மன்னவனுடைய உடம்பாடு பெற்று அரண்மனையினுள்ளே புகுந்து அரசனை அணுகிச் சென்று வாழ்த்துபவர்; வேந்தே ஈங்கு உயர்ந்து ஓங்கு உச்சி உவாமதி போல நிவந்து ஓங்கு வெள் குடை மண்ணகம் நிழல் செய - அரசே நின் திருவோலக்கத்தின் மிக உயர்ந்து உச்சியில் அமைந்த முழுத் திங்கள் போன்று விளங்குகின்ற நினது வெண்கொற்றக்குடை இந் நிலவுலகம் முழுவதும் தண்ணிழல் செய்வதாக; வேலும் கோலும் அருள் கண் விழிக்க - நின்னுடைய வெற்றி வேலும் செங்கோலும் உயிர்களின் பால் அருளோடு நோக்குவனவாக; நீ ஏந்திய திகிரி தீது இன்றி உருள்க - நீ ஏந்தியிருக்கின்ற ஆணைச்சக்கரம் தடையின்றி உருள்வதாக; நினக்கு என வரைந்த ஆண்டுகள் எல்லாம் மனக்கு இனிதாக வாழிய - பெருமானே நினக்கென்று பால்வரை தெய்வம் வரையறைப்படுத்திய நின் அகவையாகிய ஆண்டுகள் எல்லாம் நீ நின் மனத்திற்கு இனிதாக நன்கு வாழ்ந்திருப்பாயாக என்று வாழ்த்தி; என்க.

(வி - ம்.) (கூ) மாதவர் ஒளித்து இசைத்து சென்று வாழ்த்துபவர் வேந்தே குடை நிழல் செய, வேலும் கோலும் விழிக்க, திகிரி உருள்க, நீ வாழிய என்று இயைத்திடுக. நினக்கெனப் பால்வரை தெய்வம் வரைந்த ஆண்டுகள் என்க. மனக்கு - மனத்திற்கு.

துறவோர் அச் செய்தி கேட்டு அரசன் அதிர்ச்சி எய்தாமலும் சினவாமலும் அமைதி செய்தற்பொருட்டு நயம்பட உரைசெயத் தொடங்குதல்

கக - உச: இன்றே.........பலரால்

(இ - ள்.) இன்றே அல்ல - இன்று மட்டுமல்ல; பார் ஆள் வேந்தே - நிலவுலகத்தைச் செங்கோன் முறை பிறழாது

ஆளுகின்ற அரசனே!; இப்பதி மருங்கில் - இப் பூம்புகார் நகரத்திலேயே; கன்றிய காமக் கள்ளாட்டு அயர்ந்து - முதிர்ந்த காமமாகிய கள்ளையுண்டு களித்து ஆடி; பத்தினிப் பெண்டிர் பால் சென்று அணுகியும் நல் தவப் பெண்டிர் பின் உளம் போக்கியும் - கற்புடைய மகளிரிடத்தே காம நோக்கத்துடனே சென்றும் நல்ல தவ ஒழுக்கத்தை மேற்கொண்டுள்ள மகளிரின் பின் தம் நெஞ்சத்தைச் செலுத்தியும்; தீவினை உருப்ப உயிர் ஈறு செய்தோர் பண்டும் பலர் - தமது ஊழ்வினை உருத்து வந்து தம் பழவினை ஊட்டுதலாலே தம்முயிர்க்குத் தாமே இறுதியைத் தேடிக் கொண்டோர் பண்டைக் காலத்திலும் பலர் ஆவர்; என்க.

(வி - ம்.) கன்றிய காமம் - முதிர்ந்த காமம். போலித் தவமும் உண்மையால் அதனினீக்குதற்கு நற்றவம் என்றார். இன்றே யல்ல என்றது இன்றும் அத்தகையார் உளர் எனக் குறிப்பால் உணர்தற் பொருட்டு. ஆல் : அசை.

## இதுவுமது

### ௨௫ - ௩௨ : மன்மருங்கு.........கூஉய்

(இ - ள்.) மன் மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன் தம்முன் தோன்றல் தகாது ஒழி நீ என - வேந்தருடைய குலத்தை ஒழித்த பரசு என்னும் படைக்கலத்தையுடைய திருமாலாகிய பரசுராமன் முன்னிலையிலே காணப்படுதல் கூடாது ஆதலின் அவன் முன் தோன்றாது ஒழி நீ என்று; கன்னி ஏவலின் காந்த மன்னவன் - காவல் தெய்வமாகிய சம்பாபதி கட்டளையிட்டமையால் காந்தன் என்னும் பெயரையுடைய வேந்தன்; இந் நகர் காப்போர் யார் என நினைஇ - அவ்வாறு யான் இந் நகரத்தை விட்டு நீங்கினேனானால் இந்த நகரத்தைப் பாதுகாப்பவர் யார் என்று தனக்குள் சூழ்ந்து; நாவலம் தண் பொழில் நண்ணார் நடுக்குற - இந் நாவலந் தீவில் பகைவர் அஞ்சி நடுங்குதற்குக் காரணமான வீரத்தோடு; காவல் கணிகை தனக்கு ஆம் காதலன் இகழ்ந்தோர் காயினும் எஞ்சுதல் இல்லோன் - கற்புக் காவலையுடைய கணிகை ஒருத்தியின்பால் தனக்குப் பிறந்த மகனும் பகைவர் சினந்து போர் செய்யினும் மறங்குறையாதவனும் ஆகிய; ககந்தன் ஆகென காதலின் கூஉய் - ககந்தன் செங்கோலோச்சுதற்குத் தகுந்தவனாவான் என்று துணிந்து மகவன்பினோடு அவனை அழைத்து; என்க.

(வி - ம்.) மன்மருங்கு - அரசர் குலம். மழுவாள் - பரசு என்னும் படை; நெடியோன் - திருமால்; எனவே பரசுராமன் என்றாயிற்று

கன்னி என்றது கொற்றவையை : காந்த மன்னவன் - சோழர் குலத்து ஒரு மன்னன். நினைஇ - நினைத்து ; நண்ணார்-பகைவர்; காவற் கணிகை - ஒருவன்றனக்கே உரிமை பூண்டு ஒழுகும் காமக்கிழத்தி, களத்தாடும் கூத்தி என்பாரும் இராக்கிடை வேசை என்பாரும் உளர். ஈண்டு அவ்வுரை போலி. எஞ்சுதல் - மறங்குறைதல்; அஃதாவது புறங் கொடுத்தல். ககந்தன் காந்தனுக்கும் காமக் கிழத்திக்கும் பிறந்த மகன் ஆதலின் மகவன்போடு அழைத்தான் என்பது கருத்து.

## ககந்தன் மகன் மருதியைக் காமுறுதல்

### ௩௩ - ௪௪ : அரசாள்..........கலங்கி

(இ - ள்.) அரசாள் உரிமை நின்பால் இன்மையின் பரசுராமன் நின்பால் வந்து அணுகான் - மைந்தனே! நாட்டை ஆளுகின்ற உரிமை நினக்கில்லாமையாலே பரசுராமன் உன்னோடு போர் செய்தற்கு வருவானல்லன் ; யான் அமரமுனிவன் தனது துயர்நீங்கு கிளவியின் தோன்று அளவும் ககந்தன் காத்தல் - யான் சென்று கடவுள் தன்மையுடைய அகத்தியருடைய வரமாகிய என் துன்பம் நீங்குதற்குக் காரணமான அருளுரை பெற்று மீண்டு வருமளவும் ககந்தனே இந் நாட்டினைப் பாதுகாப் பாயாக என்று சொல்லி; காகந்தி என்று இயைந்த நாமம் இப் பதிக்கு இட்டு - இந் நகரத்திற்கும் காகந்தி நகரம் என்று ஒரு பெயருஞ் சூட்டி ; ஈங்கு உள்ளுறிக் கொண்டு அவ்வுரவோன் பெயர் நாள் - இந் நகரத்தினின்றும் மாறுவேடம் புனைந்து கொண்டு அறிவு சான்ற அக் காந்த மன்னன் இந் நகரத்தை விட்டுச் சென்ற பின்னர் ஒரு நாள் ; காவிரி வாயிலில் ககந்தன் சிறுவன் - காவிரிக் கரையின்கண் அக் ககந்த மன்னனுடைய இளைய மகன் ; தெள்ளுநீர் காவிரி ஆடினள் வரூஉம் பார்ப்பனி மருதியை - தெளிந்த நீரையுடைய காவிரியாற்றின்கண் நீராடி வருகின்ற பார்ப்பனியாகிய மருதி என்பவளைக் கண்ணுற்று ; பாங்கோர் இன்மையின் யாப்பறை என்று எண்ணினன் ஆகி நீ வா என்ன - அவள் பக்கத்திலே யாரும் இல்லாமையால் அவன் அழகில் மயங்கி இவள் கற்பு என்னும் திடபம் இல்லாதவள் என்று கருதியவனாய் நங்காய்! இங்கு வருவாயாக என்று தன் காமம் தோன்றும் இன்மொழியாலே அழையாநிற்ப ; சேயிழை கலங்கி - அழகிய அணிகலன் அணிந்த அப் பார்ப்பனி அது கேட்டு நெஞ்சு கலங்கி ; என்க.

(வி - ம்.) காமக்கிழத்தி வயிற்றிற் பிறந்த மகனாதலின் அரசாள் உரிமை இலன் என்றவாறு. ஆகவே நீ அரசன் அல்லனாதலின் பரசுராமன் நின்பால் அணுகான். என்னை? 'அரசர் குலத்தை வேரறுப்பேன்' என்பதே அவன் கொண்ட சூள் ஆதலின் நின்னை

அணுகான் என்பது குறிப்பு. கடவுள் முனி என்றது கடல் குடித்தமையாலும் இமையத் திறைவனோடு துலையொக்க வீற்றிருத்தலாலும் இன்னோரன்ன அவன் சிறப்பினைக் குறித்தபடியாம். ஆடினள்: முற்றெச்சம். பாங்கோர் - பக்கத்திலிருப்பவர். பாங்கோர் இன்மையின் என்றது அவனை யாப்பறை என்று நினைத்தற்கும் வாவென்றழைத்தற்கும் ஏதுவாக நின்றது. நீவா என்று தன் காமம் தோன்ற அழைக்க என்க. நேரிழை: மருதி.

## மருதியின் மாண்புறு செயல்

சரு - ருசா: மண் திணி..........அரற்றலும்

(இ - ள்.) மண் திணி ஞாலத்து மழை வளம் தரூஉம் பெண்டிராயின் பிறர் நெஞ்சு புகாஅர் - மண்ணாகிய அணுச் செறிந்த இந்நிலவுலகத்தில் பெய்யென்று சொல்லி மழை பெய்விக்கும் தெய்வத்தன்மையுடைய கற்பென்னும் திட்பமுடைய மகளிராயின் கணவர் நெஞ்சில் புகுவதன்றி மற்றையோர் நெஞ்சில் காமப் பொருளாகப் புலப்படார்; பிறன் உளம் புக்கேன் - அளியேன் பிறன் நெஞ்சத்தில் காமப் பொருளாகப் புகுந்தேன்! ஆயின் என் கற்பென்னாயிற்று?; புரிநூல் மார்பன் முத்தீ பேணும் முறை எனக்கு இல் என மா துயர் எவ்வமொடு மனை அகம் புகாஅள் - இனி முப்புரி நூல் அணிந்த மார்பினையுடைய பார்ப்பனன் வளர்க்கின்ற வேள்வித் தீயைக் காவல் செய்யும் தகுதி எனக்கு இல்லையாயிற்று என்று மிகவும் பெரிய துன்பத்தோடு தன் இல்லத்தின்கண் புகாமல்; பூத சதுக்கம் புக்கனள் மயங்கி - பூதம் நிற்கும் சதுக்கத்தையடைந்து காரணம் தெரியாமல் மயங்கி அச் சதுக்கத்தில் எழுந்தருளி இருக்கின்ற தெய்வமாகிய பூதத்தை நோக்கிக் கூறுபவள்; கொண்டோன் பிழைத்த குற்றம் தான் இலேன் கண்டோன் நெஞ்சில் கரப்பு எளிது ஆயினேன் - தெய்வமே! யான் என் கணவன் திறத்திலே செய்த குற்றம் ஒன்றேனும் இலேன் அங்ஙனமிருப்பவும் என்னைக் கண்ட ஏதிலான் ஒருவன் நெஞ்சினும் புகுந்து கரந்திருத்தற்குரிய எளியள் ஆயினேன்; வான் தரும் கற்பின் மனை அறம் பட்டேன் - யானோ மழை தருதற்கியன்ற கற்பொழுக்கத்தோடு இல்லறத்தின்கண் ஒருவனுக்கு வாழ்க்கைத் துணையாய்ப் புகுந்தேன்; யான் செய் குற்றம் யான் அறிகில்லேன் - யான் அங்ஙனம் பிறன் உளம் புகுதற்குரியதாகச் செய்த குற்றம் ஒன்றனையும் யான் அறிகின்றிலேன்; பூத சதுக்கத்து தெய்வம் நீ பொய்யினை கொல்லோ எனச் சேயிழை அரற்றலும் - அல்லவை செய்தோரை அறைந்துண்ணும் தன்மையுடையையாய் இப்பூத சதுக்கத்துக் கண்கண்ட தெய்வமாக எழுந்தருளியிருந்த நீ இப்பொழுது

இல்லை ஆயினையோ என்று சொல்லி அப் பார்ப்பனி அழா நிற்ப; என்க.

(வி - ம்.) மண் என்றது மண்ணின் துகளை. மழை வளம் தருதல் பெய்யென்று ஏவுமளவிலே மழை பெய்விக்கும் தெய்வத்தன்மை. மண்திணி ஞாலத்து மழைவளம் தரூஉம் பெண்டிராயின் பிறர் நெஞ்சு புகாஅர் என்னும் இவ்வடிகள் வேறெங்கும் காணப்படாத அரியதொரு கற்பிலக்கணமாகத் திகழ்தல் உணர்க. இத்தகைய இலக்கணம் பிற மொழிக்கண்ணும் காண்டல் அரிது போலும், பிறனுளம் புக்கமையால் யான் கற்புடையேன் அல்லேன் போலும். கற்பிலேன் ஆதற்குரிய குற்றம் யான் என் நெஞ்சறியச் செய்திலேனே என்று இப் பார்ப்பனி அரற்றுதல் அவள் சிறப்பினை நன்கு விளக்குகின்றது.

சதுக்கப் பூதம் அல்லவை செய்வோரை அறைந்துண்ணும் இயல்புடையது. அது வாய்மையாயின் கற்பில் பிழைத்த என்னை அஃது அறைந்து உண்டிருத்தல் வேண்டும்; அல்லது யான் கற்புடையேன் ஆயின் என்னை நீ வா என்று அழைத்த அரசன் மகனை அறைந்து கொன்றிருத்தல் வேண்டும். இரண்டும் நிகழாமையின் அத் தெய்வம் இப்பொழுது ஈண்டில்லை போலும் என்னும் கருத்தினால் பொய்யினை கொல்லோ பூத சதுக்கத்துத் தெய்வம் நீ என்றாள்; பொய்யினை-இல்லையாயினை.

## மருதி முன்னிலையில் சதுக்கப் பூதம் தோன்றி அவள் வினவிற்கு விடையிறுத்தல்

ருஎ - கூஎ : மாபெரும்.........இல்லை

(இ - ள்.) மாபெரும் பூதம் தோன்றி நீ கேள் என்று நேரிழைக்கு உரைக்கும் - அவ்வாறு அழுத மருதியின் முன்னர் மிகப் பெரிய உருவத்தோடு சதுக்கப் பூதம் தோன்றி மடப்பமுடைய நங்காய்! நீ யான் கூறுவதனைக் கேட்பாயாக என்று அம் மருதிக்குக் கூறும் :—தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள் பெய் எனப் பெருமழை பெய்யும் என்ற - தனக்கெனப் பிறிதொரு தெய்வம் கொண்டு தொழாதவளாய்த் தன் கணவனையே தெய்வமாகக் கொண்டு நாள்தோறும் துயிலெழும் பொழுதே அவன் திருவடிகளைத் தொட்டுக் கை கூப்பித் தொழுது எழுகின்ற கற்புடையவள் பெய் என்று பணிக்குமளவிலே பெரிய முகில் மழை பெய்யும் என்று திருவாய் மலர்ந்தருளிய; அப் பொய்யில் புலவன் பொருள் உரை தேறாய் - அந்தத் தெய்வப் புலமைத் திருவள்ளுவருடைய பொருள் பொதிந்த அறிவுரையைப் பயின்றிருந்தும் அதன் பொருளைத் தெளியாயாய் நீ; பிறர்வாய் பிசியும் நொடியும் கேட்டு விசி பிணி முழவின் விழாக்கோள் விரும்பி கடவுள் பேணல் கடவியை ஆகலின் - ஏதிலார் கூறுகின்ற பிசியையும் நொடியையும் கேட்டு

வாய்மை என்று கருதி அவரோடு கூடி வலித்துக் கட்டிய வார்க்கட்டினையுடைய முழவு முழங்குகின்ற திருவிழாக் கொள்ளும் காட்சியைப் பெரிதும் விரும்பிப் பிற தெய்வங்களையும் வழிபடுகின்ற செயலை ஒரு கடப்பாடாகக் கைக்கொண்டுள்ளனையாதலின்; மடவரல் ஏவ மழையும் பெய்யாது - மடப்பம் வருதலையுடைய நீ இப்பொழுது ஏவினால் மழையும் நின் ஏவல் கேட்டுப் பெய்யாது; நிறை உடைப் பெண்டிர் தம்மே போல பிறர் நெஞ்சு சுடூஉம் பெற்றியும் இல்லை - மேற்கூறிய கற்பு நிறையினையுடைய மகளிர் போல நின்னை நினைக்கும் பிறருடைய நெஞ்சத்தைச் சுடுகின்ற அத் தெய்வத் தன்மையும் நின்பால் இல்லை காண்; என்க.

(வி - ம்.) சதுக்கப் பூதம் - இதன் வரலாற்றைச் சிலப்பதிகாரம் ௫ : ௧௨௮ ஆம் அடி முதலியவற்றால் உணர்க. இது தவம் மறைந்து ஒழுகும் தன்மையிலாளர் முதலிய அறுவகையினரைத் தன் பாசத்தால் கட்டிப் புடைத்துண்ணும் ஆதலால் அப் பூதம் கற்பிறந்தவளாகிய தன்னையும் தன்பால் தவறு செய்த ககந்தன் மகனையும் புடைத்துண்ணாமையின் நீ பொய்த்தனையோ என்று பழித்தமையின், அது பொறுத அத் தெய்வம் அவள்முன் உருவத்தோடு காணப்பட்டு அவளுக்கு இவ்வாறு உரைத்தது என்று மாதவர் மன்னனுக்குக் கூறுகின்றனர் என்றுணர்க. இதன்கண் பொய்யில் புலவன் என்றது திருவள்ளுவரை; இப் புலவர்,

> "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யு மழை" (குறள்-௫௫)

எனவரும் திருக்குறளைப் பொன்னே போல் போற்றியெடுத்து இக் காப்பியத்துள் முழுமையாக அமைத்திருத்தலும், வள்ளுவரைப் பொய்யில் புலவன் எனவும் அவர் உரையைப் பொருளுரை எனவும் பாராட்டியிருத்தலும் பண்டைக் காலத்தே திருக்குறள் பெற்றிருந்த நன்மதிப்பை நன்கு வெளிப்படுத்திக் காட்டும். பிசி - பிதிர். இக் காலத்தே புதிர் என்பதுமது. நொடி-விடுகதை. விழாக்கோள் - திருவிழாக் காணல். கடவியை - கடப்பாடாக உடையை. மடவரல்: முன்னிலைப் புறமொழி. நிறை-கற்பு. கற்புடையாரைக் காமுகக்கயவர் நினைக்கும் பொழுதே அவர் நெஞ்சே அவரைச் சுடும். நீ கணவனை யன்றியும் வேறு தெய்வங்களையும் தொழுதல் உண்டாதலின் உனது கற்புடைமை அந்தத் தெய்வத் தன்மையை இழந்து விட்டது. இக் காரணத்தால் கற்புக் குறைபடினும் நீ அலவலைப் பெண்டிர் அல்லை ஆகலின் நின்னை என் பாசம் கட்டா தொழிந்தது என்று அத் தெய்வம் மருதிக்கு அமைதி கூறியபடியாம். மேலே ககந்தன் மகனைக் கட்டாமைக்கு அமைதி கூறுகின்றது.

## இதுவுமது

௯௪ - ௭௭: ஆங்கவை.........செய்தது

(இ - ள்.) ஆங்கு அவை ஒழிகுவை ஆயின் - இவ்விரு வகை ஒழுக்கங்களையும் கை விடுவாயாயின்; ஆயிழை ஒங்கு இரு

வானத்து மழையும் நின் மொழியது - பார்ப்பனியே உயர்ந்த பெரிய வானத்தின் கண்ணதாகிய மழையும் நின் ஏவலின்படி ஒழுகுவதாம்; பெட்டாங்கு ஒழுகும் பெண்டிரைப் போல என் கடுந்தொழிற் பாசம் உன்னைக் கட்டாது - தாம் விரும்பியபடி தீய வழிகளிலே ஒழுகுகின்ற அலவலைப் பெண்டிரைக் கட்டுவது போலக் கடிய தொழிலையுடைய என்னுடைய கயிறு உன்னைக் கட்டாது; மன்முறை எழுநாள் வைத்து அவன் வரூஉம் பின் முறை அல்லது என்முறை இல்லை - அரசன் தீவினையாளரை எழு நாள்களுள் ஒறுத்தல் வேண்டும் ஆதலின் அரசனுக்குரிய எழு நாளையும் இடையில் வைத்துப் பார்த்து அரசன் தன் முறையில் வழுவின் பின் யான் முறை செய்வதல்லது யான் எழு நாளகத்துள் அவனை ஒறுப்பது என் முறையில்லை; ஈங்கு எழு நாளில் இளங்கொடி நின்பால் வாங்கா நெஞ்சின் மயரியைக் கேட்டு வாளால் ககந்தன் கடிதலும் உண்டு என - இற்றை நாளிலிருந்து எழுநாள் அகவையின் இளைய பூங்கொடி போல்வாய் நின்னிடத்தே நின்றும் நீங்க மாட்டாத நெஞ்சத்தின்கண் மயக்கத்தையுடைய தன் மகன் செய்த பிழையை வினவித் தெரிந்து தான் தன் வாளாலேயே அவனைக் ககந்த மன்னன் எறிந்து தொலைத்தலும் உண்டாகும் என்று சொல்லி; இகந்த பூதம் எடுத்துரை செய்தது - தீவினையைக் கடிந்த அப் பூதம் இங்ஙனம் காரணம் எடுத்துக் கூறி மருதிக்கு அறிவுறுத்தியது; என்க.

(வி - ம்.) ஆங்கு அவை என்றது பிசியும் நொடியும் கேட்டலும் பிற கடவுளைப் பேணலும் ஆகிய அவற்றை என்றவாறு. அவற்றைக் கைவிட்டால் நீதானும் தெய்வங்களாலும் தொழத் தகுந்த கற்புடைத் தெய்வமாகத் திகழ்வாய். தம் மனம் விரும்பியபடி நடக்கும் பெண்டிரைக் கட்டுமாறு போல என் கயிறு உன்னைக் கட்டாது என்றவாறு. கட்டிக் கொள்ளுதலால் கடுந்தொழில் பாசம் எனப்பட்டது. மன்முறை - அரசன் செய்யும் முறைமை. எழு நாள் வைத்துப் பார்த்து அவன் வழுவுமாயின் அதன் பின் எனக்கு முறையாவதல்லது அதற்குள் எனக்கு முறை செய்யும் கடமை இல்லை என்பது கருத்து. ககந்த மன்னன் ஏழு நாள்களினூடேயே தன் மகன் செய்த பிழையின் பொருட்டுத் தன் வாளால் வெட்டிக் கொல்லுவான் என்று மருதியின் பொருட்டு அத் தெய்வம் அமைதி கூறுதல் உணர்க.

## மாதவர் பின்னும் ஒரு பத்தினிப் பெண்ணின் வரலாறு கூறுதல்

௭௭ - ௮௭ : அப்பூதம்.........அலரேழ

(இ - ள்.) அப் பூதம் உரைத்த நாளால் ஆங்கு அவன் தாதை வாளால் தடியவும் பட்டனன் - அந்தச் சதுக்கப் பூதம் சொன்னவாறே எழு நாள் அகவையுள் அவ்வாறே அவ்வரசிளங் குமரன் தன் தந்தையாகிய ககந்தனது வாளால் வெட்டுண்

மொழிந்தான்; இருங்கடல் உடுத்த மண் ஆள் செல்வத்து மன்னவர் ஏறே இன்னும் கேளாய் - பெரிய கடலை ஆடையாக உடுத்துள்ள இந் நிலவுலகத்தை ஆளுகின்ற செல்வத்தையுடைய அரசர்களுக்கெல்லாம் ஏறுபோல்வாய் இன்னுமொன்று கேட்பாயாக; தருமதத்தனும் தன் மாமன் மகள் பெருமதர் மழைக்கண் விசாகையும் - தருமதத்தன் என்பவனும் அவன் மாமன் மகளாகிய பெரிய மதர்த்த குளிர்ந்த கண்களையுடைய விசாகை என்பவளும்; திப்பிய ஓவிய கைவினை கடந்த கண்கவர் வனப்பினர் - தெய்வத் தன்மையுடைய ஓவியப் புலவர்களின் கைத்தொழில்களையும் கடந்த கண்டோர் கண்ணைக் கவருகின்ற அழகுடையராய் ஒருவரோடு ஒருவர் நெருங்கிப் பழகுதலால் அவ்வூரின்கண்; தெய்வம் காட்டும் யாழோர் மணவினைக்கு ஒத்தனர் என்றே - பால்வரை தெய்வத்தால் காட்டப்படுகின்ற கந்தருவ மணமாகிய களவொழுக்கத்தின்கண் மனமொத்தவராய் ஒழுகுகின்றனர் என்று; மைத்துனன் முறைமையால் - தருமதத்தன விசாகைக்கு மைத்துனன் முறைமையுடையன் ஆதலால்; ஊர் முழுது அலர் எழ - கொடிதறி பெண்டிர் தூற்றுதலாலே நகர் முழுவதும் பழிச்சொல் எழா நிற்ப; என்க.

(வி - ம்.) நாளால் - நாளின்கண். தடியவும் - என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை; மதர்க்கண், மழைக்கண் எனத் தனித்தனி கூட்டுக. தருமதத்தனும் விசாகையும் வனப்பினர் எனக் கூட்டுக. தெய்வம் காட்டும் யாழோர் மணவினை எனக் கூட்டுக; அஃதாவது களவுப் புணர்ச்சி. அப் பழிச் சொல்லைக் கேட்போர் நம்புவதற்கு மைத்துனன் முறைமை என்றது ஏதுவாயிற்று. ஊர்: ஆகு பெயர். அலர் - பழிச் சொல்.

## விசாகையின் செயல்

### ௮௮ - ௧௦௦: புனையா.........அடைந்தபின்

(இ - ள்.) வாள் நுதல் விசாகை புனையா ஓவியம் புறம் போந்தென்ன மனையகம் நீங்கி உலக அறவியின் ஊடு சென்று ஏறி - ஒளி படைத்த நெற்றியையுடைய அவ் விசாகை என்பவள் அப் பழிச் சொல் பொருளாம் வண்ணம் தீட்டப் பெறாத பெண் ஓவியம் ஒன்று இடம் பெயர்ந்து சென்றாற்போல இல்லத்தை விட்டுப் புறப்பட்டுப் போய் ஊரம்பலத்தினுள் புகுந்து சென்று; இலகு ஒளி கந்தின் எழுதிய பாவாய் நீ உலகர் பெரும்பழி ஒழிப்பாய் என - விளங்குகின்ற ஒளியையுடைய தூணின்கண் பண்ணப்பட்ட தெய்வப் பாவையே நீ இவ்வுலகத்தவர் நம்புதற்குக் காரணமான பெரிய இப் பழியைத் தீர்த்தருளுவாய் என்று வேண்டா நிற்ப; நாவுடைப்பாவை மாநகர் உள்ளீர் இவள்

மழைதரும் என நங்கையை எடுத்தலும் - அவ் வேண்டுகோட் கிணங்கிய செந்நாவுடைய அக் கந்திற்பாவைதானும் அந் நகரத்தி லுள்ளோர் அனைவர்க்குஞ் செவியிற்படும்படி பெருங்குரலெடுத்துப் பெரிய நகரத்தில் வாழும் மக்களே கேண்மின், இவ் விசாகை பெய்யெனப் பெய்யும் பெரு மழை; பழித்தற்குரியள் அல்லள் என்று மகளிருள் சிறந்த மாபெரும் பத்தினியாகிய விசாகையின் புகழை உயர்த்திக் கூறுதலும்; தெய்வம் காட்டி தெளித்தி லேன் ஆயின் மையல் ஊர் மனமாசு ஒழியாது - அது கேட்ட பின்னும் அவ் விசாகை யான் இவ்வாறு தெய்வத்தின் வாயிலாக யான் பழியற்றவள் என்பதைக் காட்டித் தெளிவித்திலேன் என்றால் மயக்கமுடைய இவ்வூரிலுள்ள மாந்தர்களின் மனத்திற் படர்ந்த என் பழிச் சொல் தீராதன்றோ இன்னும் என் நிறையின் சிறப்பினை இவ்வூர் மாக்கள் நன்கு உணர்தற் பொருட்டு; இப் பிறப்பு இவனொடும் கூடேன் மைத்துனன் மனையாள் மறு பிறப்பு ஆகு வேன் என்று - இந்தப் பிறப்பின்கண் தருமதத்தனோடு யான் சேர்கிலேன், மைத்துனனாகிய அவனுக்கு மனையாளாக என் னுடைய மறுபிறப்பின்கண் ஆகுவேன் என்று; நற்றாய் தனக்கு நல்திறம் சாற்றி - தன்னை ஈன்ற தாய்க்குத் தனது நல்ல உறுதி மொழியை எடுத்துக் கூறி; மற்று அவள் கன்னி மாடத்து அடைந்தபின் - அவ் விசாகையானவள் கன்னி மாடத்திற்குச் சென்ற பின்னர்; என்க.

(வி - ம்.) புனையா ஓவியம் - வண்ணம் தீட்டப் பெறாது வடிவம் மட்டும் எழுதி விடப்பட்ட ஓவியம். செய்யாக் கோலத்தோடிருத்தலில் இங்ஙனம் கூறினர். ஊடு சென்றேறி - உள்ளே புகுந்து சென்று. ஒளிப் பாவாய், கந்தின் எழுதிய பாவாய் எனத் தனித்தனி கூட்டுக. இவள் மழைதரும் என்றது இவள் பெய்யென மழை பெய்யும் அத் துணைக் கற்பென்னும் திட்பம் உடையவள் என்று பாராட்டிய படியாம். நாஉடைப்பாவாய் என்றது கந்திற் பாவையை. எடுத்தல் - உயர்த்திக் கூறுதல். ஊர்: ஆகு பெயர். மாசு - பழிச் சொல். இவன் : தருமதத் தன். நற்றாய் - ஈன்ற தாய் ; திறம் - உறுதிச் சொல். அவள் : விசாகை ; கன்னிமாடம் - கன்னியாகவே யிருந்து காலம் போக்குதற்குரிய மாடம்.

## தருமதத்தன் செயல்

### ௧0௧ - ௧௧0: தரும..........கூறி

(இ - ள்.) தருமதத்தனும் தந்தையும் தாயரும் தாழ்தரு துன்பம் தலைஎடுத்தாய் என நாவுடைப் பாவையை நலம்பல ஏத்தி - அப் பழிக்கு அஞ்சிப் பெரிதும் வருந்தி இருந்த தரும தத்தனும் அவன் தந்தையும் தாயரும் ஆகிய அக் குடும்பத்தினர் கீழ்மையைத் தருகின்ற துன்பக் கடலினின்றும் எம்மைக் கரை

என்று நன்றி கூறிச் சென்றாவுடைய சுந்தரி
பேற்றினாய் என்று நன்றி கூறி வணங்கி அதன் புகழ் பலவற்றையும் கூறி வணங்கிய பாவையை வணங்கி; பெருநகர் தன்னை பிறகு இட்டு ஏகி மிக்கோர் உறையும் பின்னர்; பெருநகர் தன்னை பிறகு இட்டு ஏகி மிக்கோர் உறையும் விழுப்பெரும் செல்வத்து தக்கண மதுரை தான் சென்று அடைந்தபின் - தாம் வாழுகின்ற பெரிய நகரமாகிய காவிரிப்பூம் பட்டினத்தைத் துறந்து சென்று சான்றோர் உறைகின்ற மாபெரும் செல்வத்தை உடைய தென் மதுரைக்குப் போய்ச் சேர்ந்தபின்; தருமதத்தனும் தன் மாமன் மகள் விரிதரு பூங்குழல் விசாகையை அல்லது பெண்டிரைப் பேணேன் - தரும தத்தன் தானும் தன்னுடைய மாமன் மகளாகிய இதழ்விரிகின்ற மலரையுடைய கூந்தலையுடைய விசாகையை மாறிப் பிறந்து வாழ்க்கைத் துணையாகக் கொள்வதல்லது பிற மகளிரை விருப்பு இலேன் ஆதலின்; இப் பிறப்பு ஒழிக என கொண்ட விரதம் தன்னுள் கூறி - இப் பிறப்பு இங்ஙனமே ஒழிவதாக என்று தன் கருத்துள் கொண்ட உறுதி மொழியைத் தன் நெஞ்சத்துள் கூறித் திண்ணிதாக்கிக் கொண்டு; என்க.

(வி - ம்.) தாயர் - நற்றாயும் செவிலித் தாயரும் எனப் பலராகலின் பன்மை கூறினர். பெருநகர் என்றது காவிரிப்பூம்பட்டினத்தை. பிற கிட்டு ஏகி என்றது பின்னே கிடக்க விட்டுப், போகி என்றவாறு. தாழ்தரு துன்பம் - தாழ்வைக் கொடுக்கின்ற துன்பம். பாவையைத் தொழுது நன்றி கூறி ஏத்தி என்க. மிக்கோர் உறைவதாகிய விழுப் பெரும் செல்வம் எனினுமாம். உத்தர மதுரையும் உண்டாகலின் தக்கண மதுரை என்றார். தான் : அசை. தருமதத்தனும் என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. விசாகை மறு பிறப்பில் தனக்கு மனையாள் ஆவேன் என உறுதி கூறியதற்குடம்பட்டுத் தரும தத்தனும் அங்ஙனமே தன்னுள் உறுதி செய்துகொண்டான் என்றவாறு.

## இதுவுமது

### கககூ - கஉஉ : வாணிக..........புகுந்தனன்

(இ - ள்.) வாணிக மரபின் வருபொருள் ஈட்டி நீள்நிதி செல்வனாய் - தான் பிறந்த குலத் தொழிலாகிய வாணிகத் தொழில் முறையின்படி அத் தொழிலைச் செய்து அதன் ஊதிய மாக வருகின்ற பொருள்களைத் தொகுத்து மேன்மேலும் வளர் கின்ற பொருளையுடைய கொழுங்குடிச் செல்வனாகி; நீள் நில வேந்தனின் எட்டிப்பூப் பெற்று இருமுப்பதிற்று யாண்டு ஒட்டிய செல்வத்து உயர்ந்தோன் ஆயினன் - நெடிய நிலவுலகத்தை ஆளுகின்ற பாண்டிய மன்னனால் எட்டிப்பட்டம் வழங்கப் பெற்று அதற்குரிய பொற்பூவினையும் விருதாகப்பெற்று இவ்வாறு அறுபது ஆண்டு அகவை காறும் பொருந்திய செல்வத்தினாலே

நிலைவும் உயர்ந்தவனாய் விளங்கினன் அப்பொழுது; அந்த ணாளன் ஒருவன் சென்று இருநிதிச் செல்வ ஈங்கு என் செய்தனை - பார்ப்பனன் ஒருவன் அத் தருமதத்தன்பால் சென்று பெரிய நிதியை உடைய வணிகர் பெருமானே இத்துணைப் பெருஞ் செல்வத்தோடு இந் நகரத்திருந்து உன் வாழ்நாளை வீழ்நாளாகக் கெடுத்தொழிந்ததல்லது வேறு என் செய்தாய்; பத்தினி இல்லோர் பல அறம் செய்யினும் புத்தேள் உலகம் புகாஅர் என்பது கேட்டும் அறிதியோ கேட்டனை ஆயின் - கற்புடை மனைவியை இல்லாத ஆடவர் தமியராய் இருந்து நூல்களில் கூறப்படுகின்ற பல்வேறு அறங்களையும் செய்தாலும் அமரர் வாழும் மேனிலையுலகில் புகமாட்டார் என்னும் இவ்வறிவுரையை நீ கேள்வி மாத்திரையானும் கேட்டறிந்ததில்லையோ இல்லையெனின் இப்பொழுதேனும் யான் கூறுவதனைக் கேட்டாய் அல்லையோ கேட்டாயெனின்; நீட்டித்து இராது நின்நகர் அடைக என - நீ இந்நகரத்தின்கண் இன்னகவை முதிரும்படி காலந்தாழ்த்திராமல் நின்னுடைய நகரத்திற்குச் சென்று கற்புடையாள் ஒருத்தியைக் கடிமணம் செய்து கொள்க என்று கூறா நிற்ப; தக்கண மதுரை தான் வறிது ஆக இப் பதிப் புகுந்தனன் - அது கேட்ட தருமதத்தன் நெஞ்சு கலங்கி அத் தென் மதுரை நல்கூரும்படி அதனை விட்டு இப் பூம்புகார் நகரத்தையடைந்தான், என்க.

(வி - ம்.) வாணிக மரபாவது கொள்வது மிகையும் கொடுப்பது குறையுமாகாமல் பிறர் பொருளையும் தம் பொருள் போலப் பேணி வாணிகம் செய்தல். இதனை,

> "வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
> பிறவுந் தமபோற் செயின்" (குறள் - கஉ0)

என்பதனாலும் உணர்க. எட்டிப்பூ - எட்டிப்பட்டம் பெற்ற வணிகர்க்கு அதற்கறிகுறியாகக் கொடுக்கும் பொற்பூ. "எட்டி காவிதிப்பட்டம் தாங்கி" (பெருங், உ. ௩ : கசச); "எட்டி காவிதி என்பன தேயவழக்காகிய சிறப்புப் பெயர்" (தொல். தொகை. சூ. கஉ) என்பது நச்சி - ஈங்கு விளக்கம். இருமுப்பதிற்றியாண்டு-அறுபதாட்டைப் பருவம். என் செய்தனையோ இருநிதிச் செல்வ என்றது இருநிதி பெற்றிருந்தும் திருமணம் கொள்ளாமலும் மகப்பேற்றை யிழந்தும் நின் வாழ்நாளைக் கெடுத் தொழிந்தனை என்று இரங்கியதனைக் குறிப்பாக உணர்த்தி - நின்றது. புத்தேள் உலகம் - தேவருலகம். காலம் நீட்டித்திராது - காலம் தாழ்த்திராது. அவனால் மதுரை நகரமே சிறப்புற்றிருந்தமையின் - அவன் நீங்கினமையால் மதுரை வறிதாயிற்று என்றவாறு. இப்பதி - இந் நகரம்.

## இதுவுமது

### கஉஉ - கநுஉ : இருநில.........உரையாய்

(இ - ள்.) இரு நில வேந்தே - பெரிய நிலவுலகத்தை ஆளும் அரசனே; மற்று அவன் இவ்வூர் வந்தமை கேட்டு பொற்றொடி விசாகை நல்லாள் மனைப்புறம் போந்து நாணாள் பல்லோர் காப்பண் - பொன்னால் இயன்ற வளையலையுடைய அவ் விசாகை நல்லாளும் தன் இல்லத்தினின்றும் புறத்தே வந்து நாணம் இலாளாய்ப் பலர் கூடிய கூட்டத்தினுள்; அல்லவை கடிந்த அவன் பால் சென்று - அறம் அல்லாதவற்றைச் செய்யா தொழிந்த தருமதத்தன்பால் சென்று மைத்துன!; நம்முள் நாம் அறிந்திலம் நம்மை முன் நாள் மம்மர் செய்த வனப்பு யாங்கு ஒளித்தன - நெருங்கிய உறவினேம் ஆகிய நாம் ஒருவரை யொருவர் இப்பொழுது இன்னார் என அறிந்து கொள்கிலேம் நம்மிருவரையும் முற்காலத்தே ஒருவரைக் கண்டு ஒருவர் மயங்கு மாறு செய்த ஆண்மையழகும் பெண்மையழகும் எவ்விடத்துச் சென்று மறைந்தனவோ அறிகின்றிலேம்; ஆறைந்து இரட்டி யாண்டு உனக்கு ஆயது என் நாறு ஐங்கூந்தலும் நரை விரா வுற்றன - அறுபதாட்டைப் பருவம் உனக்கும் வந்துற்றது என்னுடைய நறுமணங்கமழும் ஐம்பாலாகிய கூந்தலின் கண்ணும் நரைமயிர் கலந்து தோன்றுகின்றன; இளமையும் காமமும் யாங்கு ஒளித்தனவோ உளன் இல்லாள் எனக்கு ஈங்கு உரையாய் - நம்முடைய இளமையும் காம வேட்கையும் இப் பொழுது எங்குச் சென்று மறைந்தனவோ நீ அறிவாயெனின் உள்ளத்தின்கண் திட்பம் இல்லாதோய் எனக்கும் இங்கு அறிவிப்பாய்; என்க.

(வி - ம்.) பொற்றொடியாகிய விசாகை நல்லாளும் என இயைத்துக் கொள்க. இனி, விசாகைதானும் நல்லாளாயிருந்தும் நாணாளாய் என இயைப்பினுமாம். நம்முள் நாம் அறிந்திலம் என்றது நம்முடைய யாக்கைகள் அத்துணை மாறுபட்டிருக்கின்றன என்ற வாறும். மம்மர் - மயக்கம். வனப்பு ஆண்மை வனப்பும் பெண்மை வனப்பும் ஆதலின் ஒளித்தன எனப் பன்மை முடிபேற்றது. யாண்டகவை உனக்கு ஆயது என்க. யானும் அத்துணை முதிர்ந்துளேன் என்பாள் நாறைங் கூந்தலும் நரை விரவுற்றன என்றாள். இருவருடைய இளமையும் காமமும், என்க. உளன் ஆகுபெயராய் அதன் உறுதி மேல் நின்றது.

## விசாகை தருமதத்தனுக்கு அறிவுரை கூறுதல்

### கநுந - கசஉ : இப்பிறப்பு.........பலவால்

(இ - ள்.) இப் பிறப்பாயின் யான் நின் அடி அடையேன் அப் பிறப்பு யான் நின் அடித் தொழில் கேட்குவன் - குளுறவு

செய்து கொண்ட இப் பிறப்புடையேனாகவே இனி யான் நின்னுடைய அடிச்சியாக நின்பால் எய்துகிலேன் இம்மை மாறி மறுமையாகிய அப் பிறப்பின்கண் யான் நீ ஏவிய குற்றேவலைச் செய்யும் நின் வாழ்க்கைத் துணைவி ஆகுவன் ஐய இவ்வுலகின்கண்; இளமையும் நில்லா - யாக்கையும் நில்லா வளவிய வான் பெருஞ் செல்வமும் நில்லா மாந்தரிடத்துத் தோன்றுகின்ற இளமைப் பருவங்களும் அழியாமல் நில்லா அங்ஙனமே யாக்கைகளும் நிற்கமாட்டா வளமிக்க மிகப்பெரிய செல்வங்களும் நிற்கமாட்டா; புத்தேள் உலகம் புதல்வருந் தாரார் - ஒருவனுக்கு அவனுடைய மக்களும் மேனிலையுலகத்தைத் தருவாரல்லர்; மிக்க அறமே விழுத்துணை ஆவது - யாவரேனும் அவரவர் செய்த மிகுந்த நல்வினையே அவரவர்க்குப் பொன்றுங்காலத்தே பொன்றாது துணையாவதாம் ஆதலால் இனி நீ; தானம் செய் என தருமதத்தனும் மாமன் மகள் பால் வான் பொருள்காட்டி - அறம் செய்வாயாக என்று அறிவுறுத்த அது கேட்ட தருமதத்தனும் மாமன் மகளாகிய விசாகைக்குத் தான் ஈட்டிக் கொணர்ந்த பெரும் பொருள் குவையைக் காட்டி; ஆங்கு அவன் அவளுடன செய்த நல்லறம் ஓங்கு இருவானத்து மீனினும் பலவால் - அப்பொழுதிலிருந்து அத் தருமதத்தன் அவ் விசாகை நல்லாளுடன் இருந்து அப் பொருளால் செய்த நன்மை தருகின்ற அறங்கள் உயர்ந்த பெரிய வானத்திலே தோன்றுகின்ற மீன்களினும் காட்டில் சாலப் பலவாம்; என்க.

(வி-ம்.) இப் பிறப்பாய்-இப்பிறப்பாகவே. இனி இப் பிறப்பாயின் யான் எனக் கண்ணழிப்பாரும் உளர்; அப்பிறப்பு - மறுபிறப்பு. அடித்தொழில் கேட்குவன் என்றது, நினக்கு மனைவியாகுவேன் என்றவாறு. இளமையும் காமமும் நில்லா என்பதற்கு நாமே சான்றாயினேம். அங்ஙனமே யாக்கையும் செல்வமும் நிலையா என்பது கருத்து. மணந்து கொண்டு மகப்பே றெய்தக் கருதி வந்துள்ள அவன் கருத்தறிந்து நம் இளமையும் காமமும் ஒழிந்தன. அதுவேயுமன்றிப் புத்தேளுலகம் புதல்வர் தருவார் என்னும் நின்கருத்துப் பிழையாம் என்பது தோன்றப் புத்தேளுலகம் புதல்வரும் தாரார் என்றாள். உம்மை இழிவு சிறப்பு. மிக்க அறமே விழுத்துணையாவது என்னும் இதனோடு—

"அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை" (குறள், ௩௬)

எனவரும் திருக்குறளையும் நினைக.

விசாகை நல்லாளும் அவன்பாற் சென்று தானம் செய்யெனக் கூற என இயையும். வானத்து மீன் - விண்மீன்.

## ககந்தன் மூத்த மகனின் அடாச் செயல்

### ௧௪௯ - ௧௫௪ : குமரி.........ஆகலின்

(இ - ள்.) குமரி மூத்த அக் கொடுங்குழை நல்லாள் அமரன் அருளால் அகன் நகர் இடும் படுபழி நீங்கி - கன்னியாகவே இருந்து மூத்தவளாகிய அந்த வளைந்த குழை அணிந்த அவ் விசாகைதானே பண்டு கந்திற் பாவையாகிய தெய்வத்தின் திருவருளால் புகாரின் அகநகரத்தில் வாழ்கின்ற மாக்கள் தன்மேலேற்றிய பெரும்பழி நீங்கிய பின்பு ஒரு நாள்; பல்லோர் காப்பண கொடியிடை வீதியில் வருவோள் குழல் மேல் - பல மகளிர் நடுவே கொடி செறிந்த பெரிய வீதியினகண் வருகின்றவளுடைய கூந்தலின் மேலே; மருதி பொருட்டான் மடிந்தோன் தம்முன் காமம் காழ்கொள கருகிய நெஞ்சினன் - முன்பு பார்ப்பனியாகிய மருதி காரணமாகக் கொலையுண்டவனுடைய தமையனாகிய ககந்த மன்னன் மகன் காமமாகிய தீ முதிர்ந்து சுடுதலாலே கருகிய நெஞ்சை உடையவனாய்; தொல்லோர் கூறிய மணம் ஈது ஆம் என - நம் பண்டைத் தமிழ்ச் சான்றோர் உயர்த்துக் கூறிய களவு மணம் இதுவேயாம் எனச் சொல்லிக் கொண்டு தன் தலையில்; கரி இரும் பித்தை சூழ்ந்து புறம் தாழ்ந்த விரிபூமாலை வாங்கி - சுருண்ட கரிய தலை மயிரினைச் சுற்றி முதுகிலே தூங்கவிட்டிருந்த மலர்ந்த மலர் மாலையைக் கையால் எடுத்து; இடுவான் வேண்டி - சூட்டுதற்கு நினைத்து; எல்லவிழ் தாரோன் விரும்பினன் மாலை வாங்க - ஒளி விரிக்கின்ற பொன்மாலையணிந்த அம் மன்னன் மகன் பெரிதும் விரும்பித் தன் தலையில மாலையைக் கையில் ஏந்துதற்கு; ஏறிய செங்கை நீலக்குஞ்சி நீங்காதாகலின் - தலையில் ஏறிய அவனது சிவந்த கையானது கரிய அவனது மயிர் முடியினின்றும் நீங்காமல் நிலைபெற்று விடுதலின்; என்க.

(வி - ம்.) குமரி மூத்தல்-கன்னியாகவே இருந்து முதிர்ந்துவிடுதல்; அமரன் : கந்திற்பாவை. அகநகர் : ஆகுபெயர். படுபழி - மிக்கபழி. தம்முன் - தமையன். காமத்தீ முதிர்ந்து சுடுதலால் கருகிய நெஞ்சினன் என்க. பித்தை - ஆண்மகன் தலைமயிர். விரும்பினன் : முற்றெச்சம். தொல்லோர் என்றது பழங்காலத்துத் தொல்காப்பியர் முதலியோரை. மணம் - களவு மணம். இடுவான் - இட. குஞ்சி- ஆடவன் தலைமயிர். வருவோள் குழல் மேல் இடுவான் வேண்டி மாலை வாங்க ஏறிய கை நீங்காதாகலால் என இயைக்க.

## இதுவுமது

### ௧௮௫ - ௧௯௧: ஏறிய.........கூறலும்

(இ - ள்.) ஏறிய செங்கை இழிந்திலது இந்தக் காரிகை பொருட்டு என கேட்டு - தன் மகனுடைய தலையில் ஏறிய சிவந்த கை இறங்காததற்கு இந்த விசாகையின் கற்புடைமையே காரணம் எனக் கேட்ட மன்னன் கேள்வியுற்று; கடுஞ் சினம் திருகி மகன் துயர் நோக்கான் மைந்தன் தனனை வாளால் எறிந்தனன் - கடிய வெகுளி முறுகுதலாலே மகன் இறந்துபடுதலால் வருகின்ற துன்பத்தையும் ஒரு பொருளாகக் கொள்ளாதவனாய் அம் மைந்தனையும் தனது வாளாலேயே வெட்டிக் கொன்றனன், இவையெல்லாம் இந் நகரத்திலே நிகழ்ந்த பழையவரலாறும்; ஊழிதோறு ஊழி உலகம் காத்து வாழிய எம் கோ மன்னவ என்று - பல்லூழி காலம் இவ்வுலகத்து மன்னுயிரைப் பாதுகாத்து வாழ்வாயாக எங்கள் கோமானாகிய அரசனே என்று சொல்லி; மாதவர் தம்முள் ஓர் மாதவன் கூறலும் - அத் துறவோரில் வைத்து ஒரு துறவி இவற்றைக் கூறி நிற்றலும்; என்க.

(வி - ம்.) செங்கை இழிந்திலது என்னும் இதனையும் இங்ஙனம் இழியாமைக்கு இந்தக் காரிகையின் கற்பே காரணம் என்பதனையும் அறிந்தோர் கூறக்கேட்டு என்க. சினந்திருகி - சினம்முறுகி. மகன் துயர் - மகன் உறுதுயர் எனவும் மகனால் தனக்குவரும் துயர் எனவும் இருபொருளில் மயங்கிற்று. மைந்தன்தன்னை என்றது இம் மைந்தனையும் என்பதுபட நின்றது.

## சோழ மன்னன் அத் துறவியை வினவுதல்

### ௧௯௨ - ௧௯௮: வீயா.........உரைக்கும்

(இ - ள்.) வீயா விழுச்சீர் வேந்தன் கேட்டனன் - இவற்றை எல்லாம் கெடாத பெரும் புகழையுடைய அச் சோழ மன்னன் கூர்ந்து கேட்டனன் அங்ஙனம் கேட்டவன் அத் துறவோரை நோக்கி; நன்றறி மாதவிர் - நன்மையை நன்கு அறிந்த பெரிய தவத்தையுடையீர்; இன்றே யல்ல என்று எடுத்து உரைத்து நலம் பல காட்டினிர் இன்றும் உளதோ இவ்வினை உரைம் என - நீவிர் உரை தொடங்குங்கால் இன்று மட்டுமல்ல என்று தொடங்கிக் கூறுமாற்றால் அரசியல் நன்மையும் கற்புடை மகளிர் கன்மையும் ஆகிய நலங்கள் பலவற்றை எடுத்துக் காட்டலானீர் அங்ஙனமாயின இன்றும் நிகழ்ந்துளதோ இத்தகைய நிகழ்ச்சி, உளதாயின் கூறிக் காட்டுமின என்று; வென்றி நெடுவேல் வேந்தன் கேட்ப - வெற்றியையுடைய

வேலேந்திய அவ்வரசன் வினவுதலாலே; மாதவர் தம்முன் ஓர் மாதவன் - அத் துறவோரில் வைத்து ஒரு துறவோன்; தீது இன்றாக வேந்து செங்கோல் என - தீங்கின்றி அரசர் பெருமானுடைய செங்கோன்மை திகழ்வதாக என்று வாழ்த்தி; உரைக்கும் - சொல்வான்; என்க.

(வி - ம்.) வீயாத என்பதன்கண் ஈற்றுயிர் மெய் கெட்டது. விழுச்சீர் - பெரும்புகழ். அங்ஙனம் கேட்டவன் என்க. இன்றே அல்ல என்றமையால் இன்றுமுளது என்பது போதருதலின் இன்றும் உளதோ இவ்வினை என்று அரசன் வினவினான். உரையும் என்பதன் ஈற்றுயிர் மெய் கெட்டு உரைம் என நின்றது. உரைக்கும் - சொல்லுவான்.

(இது முதலாக (௧௬௯) (௨௦௪) மாதவன் உரைத்தலும் என்பதிறுதியாக ஒரு மாதவன் உதயகுமரன் கொலையுண்டமையை அரசனுக்கு அறிவிப்பதாக ஒரு தொடர்.)

துறவி கூற்று

௧௬௯ - ௧௭௯: முடிபொருள்..........அடைந்தனள்

(இ - ள்.) நீள் நில வேந்தே - நெடிய உலகத்தை ஆளுகின்ற அரசனே! இன்றும் அத்தகைய நிகழ்ச்சி ஒன்று நிகழ்ந்துளது கூறுவல் கேட்டருளுக; முடி பொருள் உணர்ந்தோர் - மெய்ப்பொருளை யுணர்ந்த சான்றோர்கள்; முதுநீர் உலகின் கடியப்பட்டன ஐந்து உள - கடல் சூழ்ந்த இந் நிலவுலகத்தின்கண் விலக்கப்பட்டனவாகிய தீவினைகள் ஐந்துள்ளன அவையாவன:—கள்ளுண்டல் பொய் மொழிதல் களவு செய்தல் கொலை செய்தல் காமமாடுதல் என்பனவாம்; அவற்றில் - அவ் வைந்தனுள்ளே; கள்ளும் பொய்யும் களவும் கொலையும் தன்னாதாகும் காமம் - கள் பொய் களவு கொலை ஆகிய நான்கு தீவினைகளையும் தன்பால் உடையதாம் காமம் என்னும் அத் தீவினை; தம்பால் ஆங்கு அது கடிந்தோர் அல்லவை கடிந்தோர் என - ஆதலால் தம்மிடத்தே அத்தகைய பெருந் தீவினையாகிய காமத்தை நீக்கியவர் ஏனைய கள் முதலியவற்றால் நிகழுந் தீவினைகளையும் ஒரு சேர நீக்கினவர்களே ஆவர் என்று அறிந்து; நீங்கினர் அன்றே நிறைதவ மாக்கள் - அக் காமத்தைக் கைவிட்டு நீக்கினோரே நிறைந்த தவ ஒழுக்கமுடைய சான்றோராவர்; நீக்காரன்றே தாங்கா நரகம் தன்னிடை உழப்போர் - அக் காமத்தை நீக்காதவர்தாம் ஆயரம் பொறுக்கொணாத நரகத்தில் வீழ்ந்து உழல்வோர் ஆவர்; சித்திராபதி மகள் சே அரி நெடுங்கண் மாதவி - சித்திராபதியின் மகளாகிய செவ்வரியோடிய நெடிய கண்ணையுடைய மாதவி

என்னும் நாடகக் கணிகை; காதலன் உற்ற கடுந்துயர் பொருஅள் - தன் காதலனாகிய கோவலன் எய்திய கடிய கொலைத் துன்பத்தைக் கேட்டு நெஞ்சு பொருதவளாய்; மாதவர் பள்ளியுள் அடைந்தனள் - பெரிய தவத்தையுடைய அறவண வடிகள் தவப்பள்ளியின்கண் தஞ்சம் புகுந்தனள்; என்க.

(வி - ம்.) முடிபொருள் - மெய்ப் பொருள். முதுநீர் - கடல். காமத்தீவினை உடையார்பால் கள்ளுண்டலும் பொய் கூறுதலும் களவு கோடலும் கொலை செய்தலும் ஆகிய நான்கு தீவினைகளும் ஒருதலையாக வுளவாம் என்றவாறு. எனவே காமமே ஏனையவற்றிற்கும் காரணமாம். ஆகவே தம்பால் காமத் தீவினை நிகழாதவாறு விலக்கியவர் எல்லாத் தீவினைகளையும் ஒரு சேர விலக்கியவர் ஆவார். இவ்வுண்மையை யுணர்ந்து காமத்தைத் துவர விலக்கியவரே நிறைந்த தவமுடையோர் ஆவர்; விலக்காதவர் நரகத்தில் வீழ்வர் என்றவாறு. நீங்கார் நரகிடை உழப்போர் எனவே நீங்கினவர் துறக்கத்தும் வீட்டுலகத்தினும் புகுந்தின்பம் எய்துவர் என்பது அருத்தாபத்தியால் பெற்றாம். காதலன் : கோவலன். கடுந்துயர் - கொலைப்பட்ட துன்பம். கேட்டுப் பொருளாய் என்க. அடைந்தனள் என்றது தஞ்சம் அடைந்தனள் என்பதுபட நின்றது.

இதுவுமது

௧௯௦ - ௧௯௯ : மற்றவள்.........காரிகை

(இ - ள்.) மற்று அவள் பெற்ற மணிமேகலை தான் முற்று முலையினள் முதிரா இளவியள் - அம் மாதவி பெற்ற மணிமேகலை தானும் முதிராத முலையினையும் மழலை மாறாத மொழியினையும் உடைய இளமையுடையவளாய் இருந்தும்; தவம் செய்குவன் என ஏற்றிலும் பேரிலும் ஐயம் கொண்டு உண்டு அம்பலம் அடைந்தனள் - யானும் தவம் செய்வேன் எனத் துணிந்து சிறிய குடில்களிலும் பெரிய மாட மாளிகைகளிலும் சென்று பிச்சை ஏற்று உண்டு ஊரம்பலத்தை அடைந்தனள்; ஆங்கு அவள் அ இயல்பினளே ஆயினும் - அவ்வம்பலத்தின்கண் அம் மணிமேகலை அவள் மேற்கொண்ட அத் தவ ஒழுக்கத்தின்கண் பிறழாதவளாகவே யிருந்துழியும்; அவளை நீங்கான் நிழல்போல் யாங்கணும் காரிகை பொருட்டால் காமம் காழ்கொள - அத் தவ மகளை நீங்காதவனாய் அவளுடைய நிழலைப் போல எவ்விடத்தும் தொடர்பவன் அவளுடைய பேரழகு காரணமாகத் தன் நெஞ்சத்தே காமம் முதிர்ச்சியடைதலால்; ஆர் இருள் அஞ்சான் அம்பலம் அடைந்தனன் - நிறைந்த இருளையுடைய நள்ளிரவினும் பழியஞ்சானாய் அவன் துயிலுகின்ற அம்பலத்தினூடும் புகுந்தனன்; காரிகை காயசண்டிகை வடிவாயினள் - அம் மணிமேகலை தானும் அவனுக்ககப்படாமல் தன் வடிவத்தைக்

சார்ந்து காயசண்டிகை என்னும் மற்றொருத்தியின் வடிவத்தை மேற்கொண்டிருந்தாள் ; என்க.

(வி - ம்.) இம் மாதவன் நின் மகன் என்னும் உண்மையை முற்படக் கூறிவிட்டால் பின்னர் அவன் செய்த பிழை கூறும் செவ்வி பெறுதல் அரிதென்பது கருதி யாரோ ஒருவனுடைய ஒழுக்கத்தைக் கூறுபவன் போல முற்பட அவன் செய்த பிழையை மன்னன் உளம் கொள்ளும் வண்ணம் ஓதி வருகின்ற நுணுக்கம் நினைந்து நினைந்து இன்புறற் பாலதாய் இருத்தலுணர்க. முற்றாமுலையினள் என்றது அவன் காமம் காழ் கொள ஏதுக்கூறியபடியாம். மணிமேகலை காமுறுதற்குரியள் அல்லள் என்பது தோன்றுதற்கு ஆங்கு அவள் அவ்வியல்பினளே யாயினும் என்றான். காரிகை - அழகு. ஆரிருளும் எனல் வேண்டிய இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. (கஅஅ) காரிகை : மணிமேகலை. காயசண்டிகை வடிவாயினள் என்றது அவன் கையில் அகப்படாமைப் பொருட்டு அவ்வடிவாயினள் என்றவாறு.

## இதுவுமது

### கஅகூ - ககூங : காயசண்டிகை............ஆகலின்

(இ - ள்.) காயசண்டிகையும் ஆங்கு உளள் ஆதலின் - காயசண்டிகை என்னும் விச்சாதரி ஒருத்தியும் அவ்வம்பலத்தி லிருக்கின்றாளாதலின ; காயசண்டிகை தன் கணவனாகிய வாய்வாள் விஞ்சையன் ஒருவன் தோன்றி - அக் காய சண்டிகையின் கணவனாகிய ஏறு தப்பாத வாளையுடைய விச்சா தரன் ஒருவன் அவளைக் காண்டற் பொருட்டு அச் செவ்வியில் அம்பலத்தில் வந்து ; இவன் ஈங்கு இவள் பொருட்டால் வந்தனன் என - மணிமேகலையின் பொருட்டு வந்தவனைக் கண்டு இவன் இவ்வம்பலத்திற்கு என் மனைவியாகிய காயசண்டிகையின் பொருட்டே வந்தான் போலும் என்று பிழைபடக் கருதி ; ஆங்கு அவன் தீவினை உருத்தது ஆகலின் - அப்பொழுது அவனுடைய பழவினையும் தன் பயனை ஊட்டுதற்கு உருத்து வந்ததாதலால் ; என்க.

(வி - ம்.) காயசண்டிகையும் ஆங்கு உளள் என்றது காயசண்டிகை சென்றுவிட்ட செய்தி இத் துறவிக்குத் தெரியாதாகலின் புலவர் பெருமான் அவன் கூற்றாக அங்ஙனம் கூறியது புலமை நுணுக்கங்களுள் ஒன்றாகும். மேலும் அவள் அந் நகரத்திருந்த செய்தியை அரசன் அறியானாதலே இயல்பாதலின் அவள் இருந்தமையும் உணர்த்துதல் வேண்டிற்று ; இதுவும் ஒரு நுணுக்கமாம். வாய்வாள் - ஏறு தப்பாத வாள். விஞ்சையன் என்றது காஞ்சனனை. தோன்றி என்றது மனைவியைக் காணும் பொருட்டு வந்து என்பதுபட நின்றது. இவள் பொருட்டால் - இடக்கரடக்கு. ஈண்டும் இவன் எனச் சுட்டுப் பெயரால் கூறினர். அவன் என்பதும் அது.

## இதுவுமது

### ககூச - உ0ச: மதிமருள்.........உரைத்தலும்

(இ - ள்.) மதிமருள் வெண்குடை மன்னவ நின்மகன் - முழு வெண் திங்கள் போன்ற கொற்றவெண் குடையை யுடைய மன்னனே நின்னுடைய மகனாகிய; உதயகுமரன் ஒழியானாக ஆங்கு அவள் தன்னை அம்பலத்து ஏற்றி - உதயகுமரன் தானும் நீங்கானாக அம் மணிமேகலையை ஊரம்பலத்தின்கண் ஏற்றி; ஓங்கு இருள் யாமத்து இவனை ஆங்கு உய்த்து - உயர்ந்த இருளையுடைய நள்ளிரவிலே இவனையும் ஆங்குச் செலுத்தி; காயசண்டிகை தன் கணவனாகிய வாய்வாள் விஞ்சையன் தன்னையும் கூய் - காயசண்டிகையின் கணவனாகிய வாய்க்கும் வாளையுடைய விச்சாதரனையும் அவ்விடத்திற்கு அழைத்து; விஞ்சை மகள்பால் இவன் வந்தனன் என வஞ்ச விஞ்சையன் மனத்தையும் கலக்கி - நின் மனைவியாகிய காயசண்டிகையின் பொருட்டே இவன் இப்பொழுது இங்கு வந்தான் என்னும் ஒரு பிழையான எண்ணத்தைத் தோற்றுவித்து, முன்னமே இவன் செயலை ஆராய்தல் பொருட்டு வஞ்சமாகக் கரந்திருந்த அவ் விச்சாதர னுடைய நெஞ்சத்தையும் கலக்கிவிட்டு; ஆங்கு அவன் தன் கைவாளால் அம்பலத்து ஈங்கு இவன் தன்னை எறிந்தது என்று ஏத்தி - அவ்விடத்தே அவ் விச்சாதரனுடைய கையிலிருந்த வாளினாலேயே அவ்வம்பலத்தினூடேயே ஈங்குக் கூறப்பட்ட நின் மகனை வெட்டுவித்தொழிந்தது என்று சொல்லி வாழ்க நின் செங்கோல் என்று வாழ்த்தி; மாதவர் தம்முள் ஓர் மாதவன் உரைத்தலும் - அத் துறவியருள் வைத்துச் சொல்வன்மையுடைய ஒரு துறவி உதயகுமரன் கொலையுண்ட செய்தியை அரசனுக்கு அறிவுறுத்தலும்; என்க.

(வி - ம்.) (ககூக) முடிபொருள் என்று தொடங்கி (ககூ) ஆங்கவன் தீவினை உருத்ததாகலின் என்பது வரையில் இம் மாதவன் கூறிய செய்தியின் சுருக்கம் வருமாறு — வேந்தே காமம் ஏனைய தீவினை களுக்கும் காரணமாம் அதனை விலக்கியவரே துறவோராவர். காமம் காழ் கொண்டவர் நரகத் துன்பத்தை நுகர்வது இயற்கை. இன்று இந் நகரத்தில் நிகழ்ந்ததொரு நிகழ்ச்சியைக் கேள்! மணிமேகலை தவம் செய்யத் துணிந்து பிச்சையேற்றுண்டு ஊரம்பலத்தில் உறைந்தாள். அவள் அழகு மிக்கவள். அதனால் காமம் காழ் கொண்டு அவள் நிழல் போல எவ்விடத்தும் நீங்காதவனாய் நள்ளிரவிலே அம்பலத்திற்கும் வந்துவிட்டான்; அவள் அவனுக்கஞ்சிக் காயசண்டிகை வடிவம் கொண் டிருந்தாள். காயசண்டிகையின் கணவனும் மனைவியைக் காண, அந் நள்ளிரவில் வந்தான். அவன் இவனைக் கண்டு தன் மனைவியின் பொருட்டே இவன் வந்தனன் என்று கருதும்படி அவனுடைய

தீவினையும் அப்பொழுது செவ்வி பெற்றிருந்ததாகலின் என்று சொல்லு மளவும், நின்மகன் என்றுதல் உதயகுமரன் என்றுதல் குறிப்பிடாமல் 'அவன்' 'இவன்' என்னும் சுட்டுப் பெயராலேயே கூறி வந்தமையின் அவ்வரசன் தெரிந்து கொண்ட செய்தி இங்ஙனம் துணிந்து தவமகளை இடங்கழி காமத்தோடு விடாது தொடர்ந்து இரவினும் அப்பலத்தினும் துணிந்து புகும் தீயவன் ஒருவன் இந் நகரத்தில் இருக்கின்றான் என்பதேயாம்.

இச் செய்தி கேட்ட மன்னவன் நெஞ்சத்தில் அத்தகைய தீவினை செய்தவன் யாவன் என அறியும் அவாவும் அங்ஙனம் செய்த வனைக் கண்டுபிடித்து ஒறுக்கவேண்டும் என்னுமளவிற்குச் சினமும் உண்டாயிருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால் அம் மாதவனே அவன் யார் என்று இன்னும் கூறவில்லை. இவ்வாற்றால் மன்னவனுடைய அறிவு தடுமாறி இருக்குமன்றே? இத் தடுமாற்றத்தைப் புலவர் பெருமான் அவன் குடையைப் பாராட்டுவார்போல மதிமருள் வெண்குடை மன்ன என இரட்டுறக் கூறியுள்ள நயமுணர்க. மதிமருள் என்றது திங்கள் போன்ற என வெண்குடைக்கு உவமமாயிற்று. அறிவுமருளுகின்ற அரசனே என விளித்தவாறுமாயிற்று. இது கேட்ட அரசன் மதி மருண்டிருப்பதும் இயற்கையே. இன்னும் தீவினையுருத்ததாகலின் என ஏதுக் கூறி நின்மகன் உதயகுமரன் ஒழியானாக அவனை அம்பலத்தேற்றி இவனை ஆங்கு உய்த்து விஞ்சையனையும் அழைத்து இவன் நின்மனைவி பால் வந்தனன் எனக் காட்டி அவன் மனத்தையும் கலக்கி என்னு மளவும் உதயகுமரனை எழுவாய் போன்று கூறி வருதலால் ஈண்டும் அவன் தன் மகனே என்று அரசன் துணிதற்கு இடமில்லாமை உணர்க. இவ்வாறு இம் மாதவன் உதயகுமரனை ஐயப்புலத்தில் வைத்து அவன் செய்த பெருந்தீவினையைத் தெளிவுபடக் கூறிய பின்னர் மேலே கூறிய தீவினையுருத்ததாகலின் அத் தீவினை இவன் தன்னை எறிந்தது என்று முடிக்கும் பொழுதுதான் அரசன் கொலையுண்டவன் தன்மகன் என்றுணரும்படி கூறி முடித்த நயம் உணர்ந்து மகிழ்க.

## அரசன் செயல்

### உ0ரு - உகரு: சோழிக.........வேந்தேன்

**(இ-ள்.)** (உ0ரு) அணிகிளர் நெடுமுடி அரசு ஆள் வேந்து - அழகு மிகுகின்ற நெடிய முடியினையுடைய அரசாட்சி யைச் செய்கின்ற வேந்தனாகிய அச் சோழ மன்னன் தானும் இற்றை நாள் இத் தீவினை செய்தவன் தன் மகனாகிய உதயகுமரனே யென்பதும் அவன்றானும் விஞ்சையனால் கொலையுண்டான் என்பதும் நன்குணர்ந்த பின்னர்த் தன் தானைத் தலைவனாகிய; சோழிக ஏனாதி தன் முகம் நோக்கி - சோழிக ஏனாதியினுடைய முகத்தை நோக்கிக் கூறுபவன்; இளங்கோன் தன்னை யான் செயற்பாலது தான் செய்ததனால் விஞ்சையன் தகவு இலன் - தானைத் தலைவனே இத்தகு தீவினை செய்த இளவரசனாகிய உதயகுமரனை யானே செய்ய வேண்டிய செங்கோன் முறைமை ஒன்றனை யான் செய்தற்கிடனிலாது தானே செய்து விட்டதனால் அவ் விச்சாதரன் பெருந்தகைமை இலன் ஆயினான அது இடக்க;

மாதவர் நோன்பும் இன்று மடவார் கற்பும் இன்று காவலன் காவல் இன்று எனின் - சிறந்த தவத்தை மேற்கொண்ட துறவோருடைய நோன்பும் இல்லையாம் மடப்பமுடைய மகளிருடைய கற்பறமும் இல்லையாம் அரசனுடைய காவல் இல்லையாயின்; மகனை முறைசெய்த மன்னவன் வழி ஓர் துயர்வினையாளன் தோன்றினன் என்பது - கன்றையிழந்த ஒரு பசுவின் துயர்தீர்தற் பொருட்டுத் தன் அரும்பெறற் புதல்வனைத் தோாழியின் கீழ்க்கிடத்திக் கொன்று செங்கோன் முறை செய்த மனுவேந்தனுடைய மரபின்கண் இத்தகைய துன்பம் தருகின்ற தீவினையாளன் ஒருவன் பிறந்தான் என்னும் இப் பழிச்சொல்; வேந்தர் தம் செவி உறுவதன் முன்னம் - எம்மோரனைய பிற மன்னருடைய செவியில் சென்று புகுவதற்கு முன்பு; ஈங்கு இவன் தன்னையும் ஈமத்து ஏற்றி - சாகுக் கொலையுண்ட உதயகுமரன் உடம்பையும் ஈமத்தீயில் இட்டொழித்து; கணிகை மகளையும் காவல் செய்க என்றனன் - அந் நாடகக் கணிகை மகளாகிய மணிமேகலையையும் காவலின்கண் வைத்திடுக என்று கட்டளையிட்டனன் என்பதாம்.

(வி - ம்.) ஏனாதி என்பது படை மறவருள் சிறந்தோர்க்கு அரசனால் வழங்கப்பெறும் ஒரு பட்டப்பெயராம். இதனை, மாராயம் பெற்ற நெடுமொழியானும் (தொல். புறத் சூ. 8) என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர்,

'போர்க் கடலாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக்
கார்க்கடல் பெற்ற கரையன்றோ—போர்க்கெல்லாம்
தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சே
ரேனாதிப் பட்டத் திவன்''

என்று காட்டிய மேற்கோளானும் உணர்க. சோழிக ஏனாதி என்றமையால் சோழ மன்னனால் ஏனாதிப்பட்டம் வழங்கப்பட்டவன் என்பது பெற்றும். யான் செய்ய வேண்டிய கொலைத் தண்டனையை ஏதிலனாகிய தான் செய்தமையால் அவ் விஞ்சையனும் ஒரு தவறு செய்தான் என்பதுபடத் தகவிலன் என்றான். இன்று என்பதனை நோன்பும் இன்று கற்புமின்று என இரண்டிடத்தும் கூட்டுக. மகனை முறை செய்த மன்னவன் என்றது மனுநீதிச்சோழனை; இதனை,

''வாயிற் கடைமணி நடுநா நடுங்க
வாவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்றன்
அரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்
பெரும்பெயர்ப் புகாரென் பதியே'' (சிலப்.உ0 : ௫௩ - ௫)

எனவரும் கண்ணகி கூற்றானும் உணர்க. அம் மாதவனால் கூறப்பட்ட சகந்தன் மக்கள் இருவரையும் கொள்ளாது விடுத்தான். என்னை? அவ் விருவரும் குலப்பிறப்பினர் அல்லராகலின், அக் கருத்துத் தோன்ற ஓர்

துயர்வினையாளன் என்றான். வேந்தர் என்றது எம்மோரன்ன பிறவேந்தர் என்றவாறு. இதனை,

"எம்மோ ரன்ன வேந்தற் குற்ற
செம்மையி னிகந்தசொற் செவிப்புலம் படாமுன்
உயிர்பதிப் பெயர்த்தமை யுறுக வீங்கென"

என வரும் சிலப்பதிகாரத்திேனாடு உகி: கூகி-கஎ ஒப்பு நோக்குக. கணிகை மகள் என்றான் கண்டோரெல்லாம் காமுறுதற்குரியவள் என்பது தோன்ற. அவ்வாறு பிறர் காமுற்றுக்கெடாமலும் வேந்தன் மகன் கொலையுண்டமைக்குக் காரணம் இவளென்று கருதி மணிமேகலைக்கு நகர மக்கள் கேடுசூழாமலும் பாதுகாத்தல் தன் கடமையாதலின் மணிமேகலையையும் காவல் செய்தல் வேண்டிற்று. இனி, மணிமேகலையையும் வெறுத்து அவளைக் கணிகை மகள் என்று கூறிக் காவல் செய்வித்தான் எனக் கருதுவாருமுளர். அங்ஙனம் கருதின் மணிமேகலையை அரசன் வெறுத்தற்குத் தன் மகன் கொலையுண்டமையன்றிப் பிறிதொரு காரணம் இன்மையின் அவ்வரசனுக்கே இழுக்காதலை அவர் நோக்கிற்றிலர்.

இக்காதையை—மண்டிலம் ஏப்பப் புரிந்தோர் உரைப்பக் கேட்டு, மாதவரெல்லாம் மணிமேகலையை நோக்கி, 'இதனை நீ அறிவதுமுண்டோ' என, அவள் உரைத்தலும், அவளைச் சிறுவனொடு வேறிடத் தொளித்து இசைத்துச் சென்று குறுகி ஒரு மாதவனுரைத்தலும், கேட்டு வேந்தன், 'உரையும்' என ஒரு மாதவன் உரைக்கும்; அங்ஙனம் உரைக்கும் மாதவன் ஏத்தி உரைத்தலும் வேந்து காவல் செய்கென்றனன் என, இயைத்திடுக.

சிறைசெய் காதை முற்றிற்று

# உகூ. சிறைவிடு காதை

[உகூ. மணிமேகலை சிறைவீடு செய்த இராசமாதேவி குறைகொண்டிரப்பச் சீலங்கொடுத்த பாட்டு.]

அஃதாவது: அரசன் கட்டளைப்படி சோழிக வேளுதிரால் சிறையிடப்பட்ட மணிமேகலை தன் மகனைக் கொன்றவள் என்னும் செற்றத்தால் இராசமாதேவி அரசன்பால் சென்று வஞ்சகமாய் மணிமேகலையைப் பெரிதும் மதிப்பவள் போலப் பேசி மணிமேகலையைத் தன்பால் இருக்கும்படி அரசன்பால் வேண்டி அவளை அச் சிறையினின்றும் மீட்டுக் கொணர்ந்து தன் பாதுகாவலில் வைத்து அவளுக்குப் பித்தேற்றுதற்குரிய மருந்தூட்டியும் கல்லாத இளைஞன் ஒருவனை விடுத்து மணிமேகலை கற்பினை யழிக்கச் சொல்லியும் நோய் கொண்டாள் என்று பொய் சொல்லிப் பல்வேறு வகையில் மணிமேகலையைத் துன்புறுத்த முயன்று பார்த்தும் அவற்றிற்கெல்லாம் மணிமேகலை தான் பெற்றுள்ள மந்திரங்களின் உதவியால் சிறிதும் தீங்கின்றி இருப்பாளாக; அது கண்ட இராசமாதேவி மணிமேகலை தெய்வத் தன்மையுடையவள், அஃதறியாது அவளுக்குக் கேடு சூழ்ந்தமையின் தனக்கு இன்னும் என்னென்ன துன்பங்கள் வருமோவென்றஞ்சியவளாய் அவள்பால் சென்று யான் என்மகனை இழந்த துன்பம் காரணமாக இவ்வாறு பல தீங்குகளைச் செய்து விட்டேன் அவற்றைப் பொறுத்தருள வேண்டும் என்று சொல்லி மணிமேகலையை அவள் விருப்பம்போல ஒழுக விட்டுவிட்ட செய்தியைக் கூறும் செய்யுள் என்றவாறு.

அரசனுடைய சிறைக் கோட்டத்தினின்றும் இராசமாதேவி விடுவித்துக் கொண்டமையின இது சிறைவிடுகாதை எனும் பெயர் பெற்றது.

இனி இதன்கண் மணிமேகலையின்பால் செற்றம் கொண்ட இராசமாதேவி மணிமேகலையைச் சிறை மீட்டுக் கொணர்ந்து மணிமேகலைக்குச் செய்யும் வஞ்சகச் செயல்களும், அச் செயல்களுக்கு மணிமேகலை மந்திரவலிமையால் சிறிதும் துன்புறுதிருத்தலும், அது கண்ட இராசமாதேவி அஞ்சி நடுங்குதலும், மணிமேகலை இராசமா தேவிக்குத் தன் முற்பிறப்பினையும் உதயகுமரன் முற்பிறப்பினையும் அறிவுறுத்துதலும், உதயகுமரன் கொலையுண்டமைக்குரிய பழவினை இன்னது என அறிவுறுத்துதலும், மணி

மேகலை இராசமாதேவி செய்த வஞ்சகச் செயல்களினின்றுந் தப்பிய வகை கூறுதலும், காமம் முதலியவற்றால் ஏற்படுகின்ற துன்பங்களை எடுத்துக் கூறி உயிர்களின்பால் அன்பு செலுத்துக என்று இராசமாதேவிக்கு நல்லறிவு கொளுத்துதலும் மகன் துயர் நெருப்பாக மனம் விறகாக இராசமாதேவியின் அகம் சுடுகின்ற வெந்தீயை அவித்துக் குளிரச் செய்தலும் அரசன்தேவி நன்றியுடையளாய்த் தொழுது அடிவீழ முயல்பவளை மணிமேகலை தடுத்து நீ தொழுதல் கூடாது என் காதலன் தாய் அல்லையோ நீ; மாபெருந் தேவி என்று எதிர் வணங்குதலும் பிறவும் இனிதாகக் கூறப்படுகின்றன.

மன்னவ னருளால் வாசந் தவையெனும்
நன்னெடுங் கூந்தல் நரைமூ தாட்டி
அரசற் காயினுங் குமரற் காயினும்
திருநிலக் கிழமைத் தேவியர்க் காயினும்
கட்டுரை விரித்துங் கற்றவை பகர்ந்தும்
பட்டவை துடைக்கும் பயங்கெழு மொழியினள்
இலங்கரி நெடுங்கண் இராசமா தேவி
கலங்களு ரொழியக் கடிதுசென் றெய்தி
அழுதடி வீழா தாயிழை தன்னைத்
தொழுதுமுன் னின்று தோன்ற வாழ்த்திக்
கொற்றங் கொண்டு குடிபுறங் காத்தும்
செற்றத் தெவ்வர் தேஎந்தம தாக்கியும்
தருப்பையிற் கிடத்தி வாளிற் போழ்ந்து
செருப்புகன் மன்னர் செல்வுழிச் செல்கென
மூத்து விளிதலிக் குடிப்பிறந் தோர்க்கு
நாப்புடை பெயராது நாணுத்தக வுடைத்தே
தன்மண் காத்தன்று பிறர்மண் கொண்டன்
றென்னெனப் படுமோ நின்மகன் மடிந்தது
மன்பதை காக்கு மன்னவன் றன்முன்
துன்பங் கொள்ளே லென்றவள் போயபின்
கையாற் றுள்ளங் கரந்தகத் தடக்கிப்
பொய்யாற் றொழுக்கங் கொண்டுபுற மறைத்து
வஞ்சஞ் செய்குவன் மணிமே கலையையென்
றஞ்சி லோதி யரசனுக் கொருநாள்
பிறர்பின் செல்லாப் பிக்குணிக் கோலத்
தறிவு திரிந்தோ னரசியல் தானிலன்
கரும்புடைத் தடக்கைக் காமன் கையற
அரும்பெற லிளமை பெரும்பிறி தாக்கும்
அறிவு தலைப்பட்ட ஆயிழை தனக்குச்

சிறைதக் கன்று செங்கோல் வேந்தெனச்
சிறப்பின் பாலார் மக்க ளல்லார்
மறப்பின் பாலார் மன்னர்க் கென்ப
தறிந்தனை யாயினிவ் வாயிழை தன்னைச்
செறிந்த சிறைநோய் தீர்க்கென் றிறைசொல
என்னோ டிருப்பினு மிருக்கவிவ் விளங்கொடி
தன்னோ டெடுப்பினுந் தகைக்குந ரில்லென்
றங்கவள் தனைக்கூஉய் அவள்தன் னோடு
கொங்கவிழ் குழலாள் கோயிலுட் புக்காங்
கறிவு திரித்திவ் வகனக ரெல்லாம்
எறிதரு கோலம்யான் செய்குவ லென்றே
மயற்பகை யூட்ட மறுபிறப் புணர்ந்தாள்
அயர்ப்பது செய்யா அறிவின ளாகக்
கல்லா விளைஞ னொருவனைக் கூஉய்
வல்லாங்குச் செய்து மணிமே கலைதன்
இணைவள ரிளமுலை யேந்தெழி லாகத்துப்
புணர்குறி செய்து பொருந்தின னென்னும்
பான்மைக் கட்டுரை பலர்க்குரை யென்றே
காணம் பலவுங் கைநிறை கொடுப்ப
ஆங்கவன் சென்றவ் வாயிழை யிருந்த
பாங்கி லொருசிறைப் பாடுசென் றணைதலும்
தேவி வஞ்ச மிதுவெனத் தெளிந்து
நாவியன் மந்திரம் நடுங்கா தோதி
ஆண்மைக் கோலத் தாயிழை யிருப்பக்
காணம் பெற்றோன் கடுந்துய ரெய்தி
அரச ருரிமையி லாடவ ரணுகார்
நிரயக் கொடுமகள் நினைப்பறி யேனென்
றகநகர் கைவிட் டாங்கவன் போயபின்
மகனைநோய் செய்தாளை வைப்ப தென்னென்
றுய்யா நோயி னூணொழிந் தனளெனப்
பொய்ந்நோய் காட்டிப் புழுக்கறை யடைப்ப
ஊணொழி மந்திர முடைமையின் அந்த
வாணுதல் மேனி வருந்தா திருப்ப
ஐயென விம்மி யாயிழை நடுங்கிச்
செய்தவத் தாட்டியைச் சிறுமை செய்தேன்
என்மகற் குற்ற இடுக்கண் பொறாது
பொன்னே ரனையாய் பொறுக்கென் றவள்தொழ
நீல பதிதன் வயிற்றிற் றோன்றிய
ஏலங் கமழ்தா ரிராகுலன் றன்னை
அழற்கண் நாகம் ஆருயி ருண்ண

விழித்த லாற்றே னென்னுயிர் கூடுநாள்
யாங்கிருந் தழுதனை யிளங்கோன் றனக்குப்
பூங்கொடி நல்லாய் பொருந்தாது செய்தனை
உடற்கழு தனையோ உயிர்க்கழு தனையோ
உடற்கழு தனையே லுன்மகன் றன்னை
எடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே
உயிர்க்கழு தனையே லுயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையாற் றெரிந்துணர் வரிய
தவ்வுயிர்க் கன்பினை யாயி னாய்தொடி
எவ்வுயிர்க் காயினு மிரங்கல் வேண்டும்
மற்றுன் மகனை மாபெருந் தேவி
செற்ற கள்வன் செய்தது கேளாய்
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனை
உடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை
நஞ்சுவிழி யரவின் நல்லுயிர் வாங்கி
விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே
யாங்கறிந் தனையோ ஈங்கிது நீயெனிற்
பூங்கொடி நல்லாய் புகுந்த திதுவென
மொய்ம்மலர்ப் பூம்பொழில் புக்கது முதலாத்
தெய்வக் கட்டுரை தெளிந்ததை யீறா
உற்றதை யெல்லா மொழிவின் றுரைத்து
மற்று முரைசெயும் மணிமே கலைதான்
மயற்பகை யூட்டினை மறுபிறப் புணர்ந்தேன்
அயர்ப்பது செய்யா அறிவினே னாயினேன்
கல்லாக் கயவன் காரிருட் டான்வர
நல்லாய் ஆணுரு நான்கொண் டிருந்தேன்
ஊனொழி மந்திர முடைமையி னன்றோ
மாணிழை செய்த வஞ்சம்பிழைத்தது
அந்தரஞ் சேறலும் அயலுருக் கோடலும்
சிந்தையிற் கொண்டிலேன் சென்ற பிறவியில்
காதலற் பயந்தோய் கடுந்துயர் களைந்து
தீதுறு வெவ்வினை தீர்ப்பது பொருட்டால்
தையா லுன்றன் றடுமாற் றவலத்து
எய்யா மையல்தீர்ந் தின்னுரை கேளாய்
ஆள்பவர் கலக்குற மயங்கிய நன்னாட்டுக்
காருக மடந்தை கணவனுங் கைவிட
ஈன்ற குழவியொடு தான்வே றாகி
மான்றோர் திசைபோய் வரையாள் வாழ்வுழிப்
புதல்வன் றன்னையோர் புரிநூல் மார்பன்
பதியோ ரறியாப் பான்மையின் வளர்க்க

ஆங்கப் புதல்வன் அவள்திற மறியான்
தான்புணர்ந் தறிந்துபின் றன்னுயிர் நீத்ததும்
நீர்நசை வேட்கையி னெடுங்கட முழலும்
சூன்முதிர் மடமான் வயிறுகிழித் தோடக்
கான வேட்டுவன் கடுங்கணை துரப்ப
மான்மறி விழுந்தது கண்டு மனமயங்கிப்
பயிர்க்குரல் கேட்டதன் பான்மைய னாகி
உயிர்ப்பொடு செங்க ணுகுத்த நீர்கண்டு
ஓட்டி யெய்தோ னோருயிர் துறந்ததுங்
கேட்டு மறிதியோ வாட்டடங் கண்ணி
கடாஅ யானைமுன் கட்கா முற்றோர்
விடாஅது சென்றதன் வெண்கோட்டு வீழ்வ
துண்ட கள்ளி னுறுசெருக் காவது
கண்டு மறிதியோ காரிகை நல்லாய்
பொய்யாற் றொழுக்கம் பொருளெனக் கொண்டோர்
கையாற் றவலங் கடந்தது முண்டோ
களவேர் வாழ்க்கைய ருறூஉங் கடுந்துயர்
இளவேய்த் தோளாய்க் கிதுவென வேண்டா
மன்பே ருலகத்து வாழ்வோர்க் கிங்கிவை
துன்பந் தருவன துறத்தல் வேண்டும்
கற்ற கல்வி யன்றாற் காரிகை
செற்றஞ் செறுத்தோர் முற்ற வுணர்ந்தோர்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோ ரென்போர்
அல்லன் மாக்கட் கில்லது நிரப்புநர்
திருந்தே ரெல்வளை செல்லுல கறிந்தோர்
வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தோர்
துன்ப மறுக்குந் துணிபொரு ளுணர்ந்தோர்
மன்பதைக் கெல்லா மன்பொழி யாரென
ஞான நன்னீர் நன்கனந் தெளித்துத்
தேனா ரோதி செவிமுதல் வார்த்து
மகன்றுயர் நெருப்பா மனம்விற காக
அகஞ்சுடு வெந்தீ யாயிழை யவிப்பத்
தேறுபடு சின்னீர் போலத் தெளிந்து
மாறுகொண் டோரா மனத்தின ளாகி
ஆங்கவள் தொழுதலு மாயிழை பொறாஅள்
தான்றொழு தேத்தித் தகுதி செய்திலை
காதலற் பயந்தோ யன்றியுங் காவலன்
மாபெருந் தேவியென் றெதிர்வணங் கினளென்.

———

# உரு. சிறைவிடு காதை

## உரை

### மன்னவன் ஏவலின்படி வாசந்தவை என்னும் முதியவள் இராசமாதேவியின் பால் சென்று ஆற்றுவித்தல்

#### க - கO : மன்னவன்.........வாழ்த்தி

(இ - ள்.) மன்னவன் அருளால் - சோழ மன்னனுடைய அருளை முன்னிட்டுக் கொண்டு அரண்மனையின்கண்; அரசற்காயினும் குமரர்க்காயினும் இருநில கிழமை தேவியர்க்கு ஆயினும் - அரசர்களுக்கேனும் மக்களுக்கேனும் பெரிய நிலத்தை ஆளும் உரிமை பூண்ட பட்டத்துத் தேவியருக்கேனும் ஏதேனும் துன்பம் வந்த காலத்தில் சென்று அத் துன்பத்தைத் தீர்த்தற்கு; கட்டுரை விரித்தும் கற்றனை பகர்ந்தும் - பொருள் பொதிந்த சொற்களை விரித்துக் கூறியும் தான் கற்ற அறிவுரைகளை எடுத்து விளக்கியும்; பட்டவை துடைக்கும் பயங்கெழு மொழியினள் - அவர்கள் உற்ற துன்பத்தைத் துடைக்கவல்ல பயன் பொருந்திய மொழியையுடையவளாகிய; வாசந்தவை எனும் நல்நெடும் கூந்தல் நரை மூதாட்டி - வாசந்தவை என்னும் பெயரையுடைய அழகிய நெடிய கூந்தல் நரைத்துள்ள முதியவள்; இலங்கு அரி நெடும் கண் இராசமாதேவி கலங்கு அஞர் ஒழிய கடிது சென்று எய்தி - விளங்குகின்ற செவ்வரியோடிய நெடிய கண்ணையுடைய இராசமாதேவிக்குத் தன் மகன் இறந்தமையால் உண்டான நெஞ்சு கலங்குதற்குக் காரணமான துன்பம் தீர்தற்பொருட்டு விரைந்து உவளகத்தே சென்று; அழுது அடி வீழாது - ஏனைய மகளிரைப் போல அழுதுகொண்டு அடியில் வீழாமல்; ஆயிழை தன்னை தொழுது முன்னின்று - இராசமாதேவியைக் கை குவித்துத் தொழுது அவள் முன்னிலையின் நின்றவாறே; தோன்ற வாழ்த்தி - தன் வருகை தோன்றுமாறு சிறப்பாகத் தேவியை வாழ்த்திக் கூறுபவள்; என்க.

(வி - ம்.) மன்னவன் அருளால் என்றது இராசமாதேவிக்கு ஆறுதல் கூறுதல் வேண்டும் என்னும் கருத்து அரசனுக்குண்மையைக் குறிப்பால் உணர்ந்துகொண்டு என்றவாறு. எனவே இவள் முற்பட அரசனுக்கு ஆறுதல் கூறவேண்டாமையும் பெற்றும். நரையையுடைய மூதாட்டி என்க. அரசர்க்கு, தேவியர்க்கு என்பதற்கேற்பக் குமரர்க்கு

எனப் பாடம் இருந்திருத்தல் வேண்டும் கிழமை அரசுரிமை. கட்டுரை- பொருள் பொதிந்த சொல். பட்டவை - தோன்றிய துன்பங்கள். பயம்- பயன். அஞர் - துன்பம். அழுது அடி வீழாது என்றது மகனையிழந்த கோப்பெருந்தேவியைக் காணச்செல்லும் ஏனைய மகளிர் அவள் அடியில் வீழ்ந்து அழுவதே யியற்கையாகலின் அங்ஙனம் விழ்ந்து அழாது என விதந்தார். என்னை? ஆறுதல் கூறச்செல்வோர் அழுதால் ஆற்றுவித்தல் அரிதாகலின் என்க. தோன்ற என்றது தன் வருகை தோன்ற என்பது படநின்றது. ஏனைய மகளிர் இச் செவ்வியில் வாழ்த்தலாகாமையும் உணர்க.

## வாசந்தவையின் அறிவுரை

### கக - உ௦: கோற்றம்.........போயபின்

(இ - ள்.) கொற்றம் கொண்டு குடிபுறம் காத்தும் செற்ற தெவ்வர் தேஎம் தமதாக்கியும் - பகைவர்களைப் போர்க்களத்திலே நூழிலாட்டி வாகைகொண்டும் தம் குடிகளைப் பிறர் துன்புறுத் தாமல் பாதுகாத்தும் தம்மைப் பகைத்த பகைவர்களுடைய நாட்டைப் படைகொடு சென்று வென்று தம்முடையதாக்கியும் போர்க்களத்தில் சாதல் அன்றி; தருப்பையில் கிடத்தி வாளில் போழ்ந்து செருபுகல் மன்னர் செல்உழிச் செல்க என - தருப் பைப் புல்லின் மேலே தம்முடலைக் கிடத்தி வாளினாலே பிளந்து போர்க்களத்தில் புகுகின்ற வீரமன்னர் புகும் இடமாகிய வீரசுவர்க்கவு புலகத்தில் இவ்வுயிர் புகுவதாக என்று பார்ப்பனர் மந்திரம் கூறுமாறு; மூத்து விளிதல் இக் குடிப் பிறந்தோர்க்கு நாணுத்தக உடைத்து நாப்புடை பெயராது - கிழம்பட்டுச் சாவது சோழர் குடி யில் பிறந்த மன்னர்க்கு நாணுகின்றதோ தரு தன்மையையுடைய தாகலின் அவ்வாறு இறந்தாரெனக் கூறுதற்கும் நாவெழாது எம்பெருமாட்டியே; நின்மகன் மடிந்தது - உன்னுடைய மகனாகிய உதயகுமரன் மடிந்தது; தன் மண் காத்தன்று பிறர் மண் கொண்டன்று - தனக்குரிய நாட்டைக் காக்கும் முயற்சியால் அன்று அல்லது பகைவர் நாட்டைக் கைக்கொள்ளும் முயற்சி யாலும் அன்று; என் எனப்படுமோ - அவன் இறப்பினை என் னென்று புகழப்படுமோ நினைத்துப் பார்; மன்பதை காக்கும் மன்னவன் தன் முன் துன்பம் கொள்ளேல் என்று அவள் போய பின் - காமம் காழ்கொண்டு அடாது செய்திறந்த நின்மகன் பொருட்டு நீ துன்புறுதலை மக்களைப் பாதுகாக்கும் நம் பெருமான் காணின் பெரிதும் நாணுவன் ஆதலால் அவன் கண்காண நீ இவ்வாறு துன்புறுதேகொள்; ஆறுதல் கொள்க! என்று அறிவுரை பகர்ந்து அம் மூதாட்டி சென்ற பின்னர்; என்க.

(வி - ம்.) கொற்றம் - வெற்றி: அரசுரிமையுமாம். தேஎம்-நாடு போர்க்களத்தில் சாதல் அன்றி என அவாய்நிலையால் வருவித்தோதினும்.

தருப்பையில் கிடத்தி...விளிதல் என்பதனோடு "ஓடன் மரீஇய பீடின் மன்னர், நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக் காதன் மறந்தவர் தீது மருங்கறுமார், அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர், திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி, மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்கென, வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர்' என வரும் புறப்பாட்டு (௯௩) ஒப்பு நோக்கப்படும். 'மூப்பினும் பிணியினும் இறவாது அமர்க்களத்து வீழ்ந்தாரே துறக்கம் பெறுவர்' என்பது நச்சினார்க்கினியர் (தொல். அகத். ௪௪) உரை. என்னெனப் படுமோ என்றது இகழ்ச்சி. நின்மகன் பொருட்டு நீ துன்பங்கொள்ளுதலை அரசன் காணின் நாணுவன் ஆதலால் நீ துன்பங்கொள்ளேல் என்பது குறிப்பு. இக் குறிப்பு பெரிதும் நுணுக்கமுடைத்தாய் இராசமாதேவி துன்பம் மறத்தற்கு ஏதுவாதலும் உணர்க.

### அரசியின் வஞ்சகச் செயல்

### ௨௧ - ௩௦ : கையாற்று.........வேந்தேன

(இ - ள்.) கையாற்று உள்ளம் கரந்து அகத்து அடக்கி பொய்யாற்று ஒழுக்கம் கொண்டு புறம் மறைத்து - மகன் இறந்தமையால் பெரிதும் துன்பமுற்றுக் கையாற்றுக் கிடக்கும் என் நெஞ்சத்தைப் பிறர் அறியாவண்ணம் என்னுள்ளேயே மறைத்து அடக்கிக்கொண்டு பொய்யாகத் துன்புறுதவள் போன்று நடிக்கும் ஒழுக்கத்தைக் கைக்கொண்டு அதனால் என் வஞ்சம் புறத்தே தோன்றா வண்ணம்; மணிமேகலையை வஞ்சம் செய்குவன் என்று அஞ்சில் ஓதி - என் மகன் கொலையுண்டமைக்குக் காரணமான மணிமேகலையை வஞ்சித்து ஒறுக்குவன் என்று துணிந்து அழகிய சில பகுதியையுடைய கூந்தலையுடைய இராசமாதேவி தனனுள் துணிந்து; அரசனுக்கு - தன் கணவனாகிய மன்னனுக்குச் செவ்வி பெற்ற ஒரு நாளில் கூறுபவள்; பிறர்பின் செல்லாப் பிக்குணிக் கோலத்து - பிறர் தன்னை விரும்பிப் பின் வாராமைக்குரிய மணிமேகலையின் தவவேடத்தைக் கண்டு; அறிவு திரிந்தோன் அரசியல் தானிலன் - தனதறிவு பிறழ்ந்துபோன நம் மகன் நம் அரசியலுக்கு ஏற்புடையான் அலன் ஆதலின் அவனைப் பற்றி யான் கவல்கிலேன்; கரும்புடை தடக்கை காமன் கையற அரும்பெறல் இளமை பெரும் பிறிதாக்கும் - கருப்பு வில்லையுடைய பெரிய கையையுடைய காமவேளும் செயலற்றுத் திகைக்கும்படி அரிய பேறாகிய தனது இளமைப் பருவத்தைக் கொண்டொழிதற்குக் காரணமான; அறிவு தலைப்பட்ட ஆயிழை தனக்கு சிறைதக்கன்று செங்கோல் வேந்து என - மெய்யறிவு கைவரப்பெற்ற மணிமேகலை நல்லாளுக்குச் சிறைக் கோட்டம் தகுதியான இடம் அன்று செங்கோன்மையுடைய வேந்தர் பெருமானே இஃது என் கருத்தாம் என்று நயம்பட நவிலா நிற்ப; என்க.

(வி - ம்.) கையாற்றுள்ளம் - மகன் இறந்துபட்டமையால் துன்பம் மிகுந்து செயலற்றுக் கிடக்கும் நெஞ்சம். பொய்யாற்றொழுக்கம்-வஞ்சக ஒழுக்கம். அஞ்சிலோதி - இராசமாதேவி, அரசியல் தானிலன் ஆதலின் அவன் இறந்தமை பற்றி யானும் வருந்துகிலேன் என்பது குறிப்பு. பெரும்பிறிதாக்குதல் - சாகச் செய்தல்; பெரும் பிறிது சாவு. இளமையின் குறும்பு நிகழாவண்ணம் நன்கு அடக்கி விட்டாள் எனத் தான் மணிமேகலையைப் பெரிதும் மதிப்பாள் போல அதற்கேற்ற சொல் தேர்ந்து கூறுகின்றாள். அறிவு - மெய்யறிவு. ஆயிழை - மணிமேகலை. தக்கன்று-தகுதியுடையது அன்று. நீ இத்தகைய தவறு செய்தல் தகாது என்று இடித்துக் கூறுவாள் செங்கோல் வேந்து என்றாள்.

## அரசன் செயல்

### ௩௧ - ௩௪: சிறப்பின்..........இறைசோல

**(இ - ள்.) மன்னர்க்குச் சிறப்பின் பாலார் மக்கள் அல்லார் மறப்பின் பாலார் என்பது - அரசர்க்கு அரசியல் இலக்கணமாகிய சிறப்பின் பாற்பட்ட மக்களே மக்கள் எனக் கொள்ளத் தகுந்தவர் அச் சிறப்பில்லாதவர் தம் மக்களாயினும் மக்களாகக் கருதாமல் மறக்கும் பகுதியின் பாற்படுவர் என்று சான்றோர் சொல்லுவர் இவ்வுண்மையை ; அறிந்தனை ஆயின் இவ்வாயிழை தன்னை செறிந்த சிறை நோய் தீர்க்க என்று இறைசொல - மான் அறியுந்துணை நீயும் அறிந்திருப்பாயாயின் சிறைக் கோட்டத்தி விடப்பட்ட மணிமேகலையை நீயே செறிந்துள்ள சிறையினால் உண்டாகும் துன்பத்தைத் தீர்த்திடுக என்று அம் மன்னவன் அவள் கருத்துக்கிசைந்து கூறுகிற்ப; என்க.**

(வி - ம்.) சிறப்பு - அரசாட்சிக்கு வேண்டிய சிறப்பிலக்கணம். ஏனையோர் தம் மக்களாயிருந்தாலும் மக்களாகக் கொள்ளப்படார். அறிந்தனை ஆயின் என்றது என்னைப் போல அறிந்திருப்பதுண்டாயின் நன்று என்றவாறு. இதனானும் அரசன் மணிமேகலையைச் சிறை செய்தது அவளைப் பாதுகாத்தற் பொருட்டே என்பதறியலாம். தாய்மையுள்ள மாகலின் இவ்வாறு இராசமாதேவி கருதுதல் அரிது என்பது தோன்ற இங்ஙனம் கூறினான். இவ்வாறு பிறர் கருதாமல் அவளுக்குத் தீங்கியற்ற முற்படுவர் என்பது கருதியே யானும் அவளைச் சிறையிலிட்டுப் பாதுகாத்து வருகின்றேன் என்பது இதன்கண் குறிப்பெச்சப் பொருளாய் நின்றது. தன் விருப்பம் போலத் திரிய ஒண்ணாதபடி செறிய அடைபட்டுக் கிடப்பதனால் உண்டாகும் சிறைத்துன்பம் என்றவாறு. தீர்க்க என்றதன் ஈற்று உயிர்கெட்டது; விகாரம் அவனது இறைமைத் தன்மை விளங்குதலின் அக் கருத்துத் தோன்ற அரசன் என்னாது இறை என்றார்.

## இராசமாதேவியின் வஞ்சகச் செயல்கள்

### ௩௫ - ௪௧: என்னோடு..........ஊட்ட

**(இ - ள்.) என்னோடு இருப்பினும் இருக்க இவ்விளங்கொடி - பெருமானே நன்று, அங்ஙனமே செய்வல் சிறைவீடு**

செய்த பின்னர் மணிமேகலை என்னோடு உவளகத்தில் இருப்பினும் இருந்திடுக. அதனை விரும்பாது இவ்விளமையுடைய பிக்குணி; தன் ஓடு எடுப்பினும் தகைக்குநர் இல் என்று - தன் தவவேடத்திற்கு இயையத் தனது பிச்சைப் பாத்திரத்தை ஏந்தித் தன் விருப்பப்படி போயினும் போகுக அவளைத் தடுப்பவர் யாரும் இல்லை என்று மன்னவன் மதிக்கும்படி கூறி; கொங்கு அவிழ் குழலாள் அங்கு அவள் தனை கூஉய் அவள் தன்னோடு கோயிலுள் புக்கு - நறுமணம் கமழும் கூந்தலையுடைய இராசமாதேவி அவ்விடத்தேயே மணிமேகலையைச் சிறைவீடு செய்வித்துத் தன்பால் அழைத்து அவளோடு தனது மாளிகையிலே புகுந்த பின்னர்; அறிவு திரித்து இ அகநகர் எல்லாம் எறிதரு கோலம் யான் செய்குவல் என்று - இம் மணிமேகலைக்குப் பித்தேற்றி இவள் அறிவைப் பிறழ்வித்து இந்த அகநகரத்தில் வாழுகின்ற மாந்தரெல்லாம் இவளை அடிக்கத் தகுந்ததொரு வண்ணத்தை யான் இவளுக்குச் செய்து விடுவல் என்று துணிந்து; மயல் பகை ஊட்ட - பித்துண்டாக்குகின்ற இயற்கைக்கு மாறான மருந்தை வஞ்சகமாக ஊட்டிவிடா நிற்ப; என்க.

(வி - ம்.) என்னோடு உவளகத்தில் இருப்பினும் இருக்க என்றவாறு. இளங்கொடி: மணிமேகலை. ஓடு - பிச்சைப் பாத்திரம். கூஉய் - கூவி; அழைத்து. கொங்கவிழ் குழலாள்: இராசமாதேவி. அகநகர்: ஆகு பெயர். எறிதரும் என்புழி தரும் பகுதிப் பொருட்டு. கோலம் - தன்மை. பகை - பகையான மருந்து.

## இதுவுமது

சக - ஞ்o: மறு பிறப்பு.........அணைதலும்

**(இ - ள்.)** மறு பிறப்பு உணர்ந்தாள் அயர்ப்பது செய்யா அறிவினள் ஆக - மறு பிறப்பினையும் அறிந்துள்ள அறிவுடைமையுடைய மணிமேகலை அம் மருந்து காரணமாக யாதொன்றனையும் மறத்தல் இல்லாத இயற்கை அறிவோடு பண்டு போல விளங்கா நிற்ப அதுகண்ட இராசமாதேவி; கல்லா இளைஞன் ஒருவனை கூஉய் வல்லாங்கு செய்து - கல்லாக் கயவன் ஒருவனை அழைத்து ஏடா! உன்னால் இயலுமளவும் ஏதெனினும் செய்து; மணிமேகலை தன் இணைவளர் இளமுலை ஆகத்து புணர்குறி செய்து - மணிமேகலையினுடைய ஒன்றற்கு ஒன்று இணையாக வளருகின்ற இளைய முலைகளையுடைய உயர்ந்த அழகிய உடம்பின்கண் நீ புணர்ந்த தற்குரிய அடையாளங்களைச் செய்துவிட்டு; பொருந்தினள் என்னும் பான்மைக் கட்டுரை பலர்க்கு உரை என்று - மணிமேகலை உன்னைக் காமுற்றுப் புணர்ந்தாள் என்னும் தன்மையையுடைய திட்பமான மொழிகளை நகரமாந்தர் பலருக்கும் கூறிப் பழி

தூற்றுவாயாக என்று கற்பித்து; காணம் பலவும் கைசிறை கொடுப்ப-இத் தீச் செயலுக்கு அவன் உடன்படும் பொருட்டுக்கைக் கூலியாகப் பொற்காசுகள் பலவற்றையும் அவன் கை நிறையும்படி கொடுத்து ஏவ; ஆங்கு அவன் சென்று அ ஆயிழை இருந்த பாங்கில் ஒருசிறைப்பாடு சென்று அணைதலும் - அக் கய மகனும் அம் மணிமேகலை இருந்த பக்கத்தில் ஒரு புறமாகச் சென்று சேர்தலும்; என்க.

(வி-ம்.) மறு பிறப்புணர்ந்தாள் என்றது மணிமேகலையின் அறிவுப் பெருமையைக் குறிப்பாக உணர்த்தி அவ்வறிவாற்றலால் மருந்தின் ஆற்றலை அடக்கிப் பண்டு போலவே யிருந்தாள் என்பதற்குக் குறிப்பேது வாய் நின்றது. ஈண்டு இவ்வரசியின் இவ்விழிதகவு குறித்தே சாத்தனார் இவளைப் பண்டே அரக்கர் குலப்பாவை என்று அறிவுறுத்தினர் என்றுணர்க. மயல் பகை-பித்தேற்றும் பகைமருந்து; மருந்து - நோய் தீர்ப்பதாக, இம் மருந்து நோய் உண்டாக்குதலின் பகைமருந்து எனப் பட்டது. பகை : ஆகு பெயர். அயர்ப்பது - மறப்பது. பித்தேறியவர் ஒன்றை நினைத்து அதைச் சொல்லி முடிப்பதற்குள் அதனை மறந்து மற்றொன்றனைப் பேசுவர் ஆதலின் பித்தேறுமையை அதன் பண்புக் கேற்றி அயர்ப்பது செய்யா அறிவு என்றார். தீவினை செய்தற்கு உடம் படல் வேண்டிக் கல்லாக் கயமகனை அழைத்தாள் என்க. வல்லாங்குச் செய்து என்றது வலிந்துபுணர்க என்றவாறு. வலிமையினால் அவளை வலிந்து பற்றிப் புணர்க எனல் வேண்டியவள் தான் பெண்ணாகலின் இடக்கரடக்கி, வல்லாங்குச் செய்து என்றாள். ஆகத்துப் புணர்குறி செய்தலாவது பற்குறியும் நகக்குறியும் செய்து வடுப்படுத்தி விடுதல். பான்மை-முறைமை. கட்டுரை - கட்டிச் சொல்லும் பொய்ம்மொழி. காணம் - பொற்காசு. கைசிறை கொடுப்ப : விகாரம். இருந்த பாங்கு - இருந்த பக்கம். ஒரு சிறைப்பாடு - ஒரு புறத்தில்.

## மணிமேகலையின் செயல்

### ௫௧ - ௬௦: தேவி.........அடைப்ப

(இ - ள்.) ஆயிழை - மணிமேகலை; இது தேவி வஞ்சம் எனத் தெளிந்து - ஆடவர் வரலாகா இடத்தில் இங்ஙனம் ஒரு முடலையாக்கையன் வருதற்குக் காரணம் இராசமாதேவியின் வஞ்சமே என்று நன்கு தெரிந்துகொண்டு; நா இயல் மந்திரம் நடுங்காது ஓதி ஆண்மைக் கோலத்து இருப்ப - நாவினால் ஓதுகின்ற மந்திரத்தை அஞ்சாமல் ஓதி அக் கயவனும் அஞ்சத் தகுந்த முடலையாக்கை ஆடவன் உருக்கொண்டு மணிமேகலையும் இருத்தலாலே; காணம் பெற்றோன் கடுந்துயர் எய்தி - கைக்கூலி பெற்ற அக் கயமகன் அங்கிருந்த ஆடவன் உருவத்தைக் கண்ணுற்று இவனால் நமக்குத் தீங்கு உண்டாகுமோ என்னும் அச்சத்தால் பெருந்துன்பமடைந்து; அரசர் உரிமையில் ஆடவர் அணுகார் - மன்னருடைய உரிமை மகளிர் இருக்கும்

உவளகத்தில் இத்தகைய ஆடவர் அணுகுதல் இலர் ஆகவும் இங்கு ஒருவன் இருக்கின்றான்; நிரயக் கொடுமகள் நினைப்பு அறியேன் என்று அகநகர் கைவிட்டு ஆங்கு அவன் போயபின் - நரகத்தில் வீழ்தற்குரிய அரசியாகிய இக் கொடும் பாவியின் கருத்து யாதென்று நான் அறிகின்றிலேன் யாதாயினும் ஆகுக யான் இங்கு இரேன் என்று துணிந்து அகநகரத்தைக் கைவிட்டு அக் கயமகன் ஓடிப்போன பின்னரும்; மகனை நோய் செய்தாளை வைப்பது என் என்று - நம் மகனைக் கொலையுண்ணும் அளவிற்குக் காமநோய் செய்து விட்டவளை இவ்வாறு இன்புற்றிருப்ப விட்டு வைத்திருப்பது என்ன பேதைமை என்று செற்றங்கொண்டவளாய்; உய்யா நோயின் ஊண் ஒழிந்தனள் என பொய் நோய் காட்டி புழுக்கு அறை அடைப்ப - பிற மகளிர்க்குத் தன் தீவினையை மறைத்தற்பொருட்டு மணிமேகலை பிழைக்க முடியாத நோயுடையளாய் உண்ணுதலையே கைவிட்டாள் என்று சொல்லி ஏனைய மகளிர்க்குத் தான் படைத்த பொய் நோயை மெய்போலக் கூறிக் காட்டிப் புழுக்கமிக்க நிலவறையிலிட்டு அடைத்து வைப்ப; என்க.

(வி - ம்.) அரசர் உரிமையில் ஆடவர் அணுகார் என்பது பற்றி உவளகத்தில் தான் இருக்குமிடம் நோக்கி ஆடவன் ஒருவன் வருதல் கண்டு இதுவும் தேவியின் வஞ்சம் என்று அவன் தன்னைக் காணு முன் அவன் கண்டு அஞ்சத்தகுந்ததோர் ஆணுருவம் கொண்டு மணிமேகலை யிருந்தாள் என்பது பாட்டிடைவைத்த குறிப்பினால் பெற்ற பொருள். என்னை? காணம் பெற்றோன் அவ்வாடவனைக் கண்டு கடுந்துயர் எய்தி என்றமையால். கடுந்துயர் எய்துதற்குக் காரணம் அவ்வாடவன் உருவத்தைக் கண்டு இவன் அஞ்சினான் என்பதன்றிப் பிறிதில்லையாகலின் என்க. நிரயக்கொடுமகள் நினைப்பு அறியேன் எனப் பாட்டிடை வைத்தமையால் இராசமாதேவீ இவ்வாறு முருட்டுயாக்கை ஆடவரை யழைத்து அவரொடு காமக்களியாட்டம் செய்யும் வழக்கமுடையாள் போலும்! என்னையும் அது குறித்தே அழைத்திருப்பாள் என்றஞ்சி ஓடிப்போனான் என்க. அங்ஙனம் ஓடியவன் கயவனாகலின் ஊர்முழுதும் தூற்றியும் இருப்பன். ஈண்டு,

"மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு" (குறள். ௨௦௪)

எனவும்,

"அறைபறை யன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்" (குறள். ௧௦௭௬)

எனவும் வரும் திருக்குறள்கள் நினைக்கப்படும்.

## இராசமாதேவியின் கழிவிரக்கம்

**௬௪ - ௬௯ : ஊண்.........தொழ**

(இ - ள்.) அந்த வாள் நுதல் - புழுக்கறையில் இடப்பட்ட ஒளியுடைய நுதலை உடைய மணிமேகலை; ஊண் ஒழி மந்திரம் உடைமையின் மேனி வருந்தாது இருப்ப - உணவின்றியும் நீண்ட நாள் இருத்தற்குரிய மந்திரம் தன்பால் இருத்தலால் அதனை யோதிச் சிறிதும் திருமேனி வாடாமலும் மனம் வருந்தாமலும் மகிழ்ந்திருப்ப; ஆயிழை ஐயென விம்மி நடுங்கி - இராசமாதேவி ஐயென்று பெரிதும் வியந்து அத்தகை மாளுக்கு அறியாது செய்துவிட்ட தன் தீவினையால் மாது கெழுமோவென்னும் அச்சத்தால் உளம் விம்மி அழுது நடுங்கி மணிமேகலையை நோக்கி அந்தோ; என் மகற்கு உற்ற இடுக்கண் பொறாது செய்தவத்தாட்டியை சிறுமை செய்தேன் - யான் பெற்ற மகனுக்கு எய்திய துன்பத்தைப் பொறுக்க ஒண்ணாமல் செய்கின்ற தவவொழுக்கத்தை முழுவதும் ஆளுகின்ற தெய்வத் தன்மையுடைய உனக்குத் தீமை செய்தொழிந்தேனே என்று கழிவிரக்கம் கொண்டவளாய்; பொன் ஏர் அனையாய் - பொன் போலும் அழகுடையாய்; அறியாமையால் செய்த என் பிழையைப் பொறுத்தருளுக என்று அவ்விராசமாதேவி கைகூப்பித் தொழாநிற்ப; என்க.

(வி - ம்.) ஊண் - உணவு: வாணுதல்: மணிமேகலை. ஐ - வியப்பு. ஒன்றனைக் கண்டு வியப்போர் ஐயென்று வாயாற் சொல்லி வியத்தலும் உண்டு. "ஐ வியப்பாகும்" என்பது தொல்காப்பியம். ஆயிழை: இராசமாதேவி. செய்தவத்தாட்டியை: முன்னிலைப் புறமொழி. சிறுமை - துன்பம். ஏர் - அழகு. பொன் போன்ற அழகுடையாய் என்க. பொறுக்க என்பதன் ஈற்றுயிர் கெட்டது. அவள் : இராசமாதேவி.

## மணிமேகலை இராசமாதேவிக்குக் கூறும் அறிவுரை

**௭௦ - ௭௫ : நீலபதி.........யாரே**

(இ - ள்.) நீலபதி தன் வயிற்றில் தோன்றிய ஏலம் கமழ்தார் இராகுலன் தன்னை அழல்கண் நாகம் ஆர் உயிர் சுடு நாள் - உண்ண விழித்தல் ஆற்றேன் என் உயிர் சுடு நாள் - ஏல முற்பிறப்பிலே நீலபதி என்னும் அரசியின் வயிற்றில் பிறந்த ஏல மணம் கமழும் மலர்மாலையையுடைய இராகுலனை (இப் பிறப்பில் உதயகுமரனாகப் பிறந்தானை) தீப்போன்ற கண்ணையுடைய நாகப் பாம்பு அரிய உயிர் உண்டற்குக் கண் விழித்தமையைப் பொறேனும் (அவன் மனைவி இலக்குமியாயிருந்த யான்) என் உயிரைத்

தீக்குளித்துச் சுட்ட அந்த நாளிலே; இளங்கோன் தனக்கு யாங்கு இருந்து அழுதனை-இப் பிறப்பில் உன் வயிற்றிற் பிறந்து அரசிளங் குமரனாகிய இவனுக்கு எவ்விடத்தில் இருந்து நீ அழுதாய் கூறுதி; பூங்கொடி நல்லாய் - பூங்கொடி போலும் அழகுடைய அரசியே! இப்பொழுது; பொருந்தாது செய்தனை - அழுகின்ற நீ தானும் பொருத்தமின்றி அழுகின்றாய், எற்றால் எனின்; உடற்கு அழுதனையோ உயிர்க்கு அழுதனையோ - இப்பொழுது கொலையுண்ட நின் மகனுடைய உடல் அழிந்தமை கண்டு அழுதாயோ அல்லது அவன் உயிர் போயிற்று என்று அழுதாயோ இவற்றுள் எது பற்றி அழுதாலும் அறியாமையே யாம், என்னை?; உடற்கு அழுதனையேல் உன் மகன் தன்னை எடுத்துப் புறங்காட்டில் இட்டனர் யாரே - கண் கண்ட உடல் பற்றியே நீ அழுதிருத்தல் வேண்டும் அதற்கு அழுதால் நீ பெற்ற உன் மகன் உடம்பை எடுத்துப் போய்ச் சுடுகாட்டில் ஈமத்தீயிலேற்றி அழித்தது உங்களையன்றி வேறு யார்? ஆகவே நீங்களே அழித்துவிட்டு அழுதல் எற்றிற்கு என்றாள்; என்க.

(வி - ம்.) முற்பிறப்பில் உன்மகன் நீலபதி என்னும் அரசி மகனாய் இராகுலன் என்னும் பெயரோடு இருந்தான்; அவனுக்கு இலக்குமி என்னும் பெயரோடு யான் மனைவியாய் இருந்தேன்; இராகுலன் திட்டி விடம் என்னும் பாம்பின் பார்வையால் இறந்தான்; அப்பொழுது யான் தீயிற்பாய்ந் திறந்தேன். முற்பிறப்பில் இறந்த மகனுக்கு அழாத நீ அங்ஙனமே இப் பிறப்பில் இறந்தவனுக்கு மட்டும் அழுவதேன்? அன்றியும் நீ பெற்றது அவன் உடலை மட்டுமே; அவ்வுடலைத் தீயிலிட்டுச் சாம்பர் ஆக்குவானேன்? ஆக்கியபின் அழுவானேன்? இவ்வாற்றால் நீ பொருந்தாது செய்தனை என்று அறிவுறுத்தபடியாம்.

அழற்கண் - தீப்போலும் நஞ்சையுடைய கண். விழித்தல்-அவன் மேல் விழித்துக் கொல்லுதல். யாங்கிருந்தழுதனை என்னும் வினா அதன் எதிர்மறைப் பொருளை வற்புறுத்து நின்றது.

## இதுவுமது

எசுஎ - எகூ: உயிர்க்கு..........வேண்டும்

(இ - ள்.) உயிர்க்கு அழுதனையேல் - உயிர் போனதற்கு அழுதேன் என்பாயாயின் அதுவும் பொருத்தமின்று, என்னை? உயிரை நீ ஈன்றாயுமல்லை கண்டாயுமல்லை ஆதலின்; செயப்பாட்டு வினையால் உயிர் புகும் புக்கில் - தன்னால் செய்யப்பட்ட பழவினைக்கேற்பப் போனவுயிர் சென்று புகும் உடம்பாகிய இடம்; தெரிந்து உணர்வு அரியது - எவ்விடத்தது என்று அறிந்து கொள்ளுதல் நம்மனோர்க்கு அரியதாம்; ஆய்தொடி அவ்வுயிர்க்கு அன்பினை ஆயின் - கோப்பெருந்தேவியே நின்னால் பெறப்படாத

தேனும் உயிரிடத்தே யான் பெரிதும் அன்புடையேன் ஆதலால் அழுகின்றேன் என்பாயாயின், அதுவும் பொருத்தமின்று, என்னை?; எவ்வுயிர்க்கு ஆயினும் இரங்கல் வேண்டும் - உயிர்களில் வேற்றுமையின்மையால் உடம்பைவிட்டுப் போகின்ற உயிர் எல்லாவற்றிற்கும் நீ இவ்வாறு அழுதல் வேண்டும், அங்ஙனம் செய்கின்றிலை ஆதலான் என்றாள்; என்க.

(வி - ம்.) உயிரை அன்றும் காணாய் இன்றும் காணாய் என வரும் (கபிலரகவல், பிற்றை நாள் செய்யுள் இதனைப் பின்பற்றி வந்தது. உயிர் அவ்வவற்றின் வினைக்கேற்பத் தாமே பிறந்தும்இறந்தும் சுழல்வன; அது பற்றி நீ அழுதல் பேதைமை.

### இதுவுமது

அ௦ - கூ௦: மற்றுன்.........உரைத்து

(இ - ள்.) மா பெரும் தேவி மற்று உன் மகனை செற்ற கள்வன் செய்தது கேளாய் - கோப்பெருந்தேவியே! உன் மகனாகிய உதயகுமரனைச் சினந்து கொன்றவன் காஞ்சனன் என்னும் விச்சாதரன் ஆவான். அவன் அங்ஙனம் செய்ததற்குரிய காரணமாகிய தீவினையை யான் கூறுவல் கேட்டருளுக; மடைக்கலம் சிதைய விழ்ந்த மடையனை உடல் துணி செய்தாங்கு உருத்து எழும் வல்வினை - உன் மகன் இராகுலனாய் இருந்த முற்பிறப்பிலே அடிசிற்கலங்கள் சிதைந்துபோம்படி வழுக்கி அவற்றின் மேல் விழுந்த தன் மடைத் தொழிலாளனை வாளால் உடல் துணியும்படி எறிந்து கொன்றமையால் உருத்து வந்த அக் கொடிய தீவினையானது; நஞ்சு விழி அரவின் நல் உயிர் வாங்கி - நஞ்சு விழி படைத்த நாகப்பாம்பினால் அப் பிறப்பிலேயே அவனது நல்ல உயிரைக் கவர்ந்ததோடு அமையாமல்; விஞ்சையன் வாளால் வீட்டியது - நின் மகனாகப் பிறந்த இப் பிறப்பினும் தொடர்ந்து வந்து விச்சாதரன் ஒருவன் வாளினாலே கொன்றொழித்தது காண்; இது நீ யாங்கு அறிந்தனையோ எனில் - அறிதற்கரிய இச் செய்தியை நீ எங்ஙனம் அறிந்துகொண்டாயோ என்று என்னை வினவுதல் கூடும், அங்ஙனம் வினவுவாயாயின்; பூங்கொடி நல்லாய் புகுந்தது இது என - மலர்க்கொடி போலும் அழகுடைய மாபெருந்தேவியே! யான் அறிந்து கொள்ள நிகழ்ந்த நிகழ்ச்சி இது, அதனைக் கூறுவேன் கேள் என்று தொடங்கி; மெய்ம் மலர்ப் பூம்பொழில் புக்கது முதலா தெய்வக் கட்டுரை தெளிந்ததை ஈறு உற்றதை எல்லாம் ஒழிவு இன்று உரைத்து - செறிந்த மலரையுடைய பூம்பொழிலாகிய உவவனத்திற்கு மலர் கொய்யும் பொருட்டுத் தான் சுதமதியோடு கூடிப் புகுந்தது முதற்

லாக உலகவறவியின்கண் கந்திற்பாவைமேனிற்கின்ற துவதிகன் என்னும் தெய்வம் உதயகுமரன் கொலையுண்ட பின்னர் எடுத்துக் கூறிய பொருள் பொதிந்த மொழிகளால் தான் தெளிந்தது ஈருக நிகழ்ந்தவற்றை எல்லாம் ஒன்றும் ஒழியாமல் எடுத்துக் கூறி; என்க.

(வி - ம்.) செற்றகள்வன் என்றது சினந்த காஞ்சனனை. உதயகுமரன் அறியாவண்ணம் பின்புறத்தே நின்று உயிர் கவர்ந்தான் ஆகலின் அவனைக் கள்வன் என்று உருவகித்தாள். செய்தது என்றது செய்ததற்குரிய காரணத்தை என்பதுபடநின்றது. மடைக்கலம் - அட்டிற்கலம். மடையன் - மடைத்தொழில் செய்பவன்; உண்டி சமைப்பவன். நஞ்சுவிழி அரவு - திட்டிவிடம். வீட்டியது - கொன்றது. யாங்கு - எவ்வாறு. புகுந்தது - நிகழ்ந்தது. பூம்பொழில் என்றது உவவனத்தை. தெய்வக் கட்டுரை-கந்திற்பாவை கூறிய பொருள் பொதிந்தசொல், தெளிந்ததை என்புழி ஐகாரம் சாரியை. ஈருக என்பதன்கண் ஈற்றுயிர்மெய் தொக்கது. எல்லாம் என்பது எஞ்சாமைப்பொருட்டு. ஒழிவின்று என்பதில் குற்றியலிகரம் குற்றியலுகரமாயிற்று; செய்யுளாகலின்.

இதுவுமது

௯௧ - ௯௯ : மற்று......கொண்டிலேன்

(இ - ள்.) மணிமேகலைதான் மற்றும் உரை செய்யும் - பின்னர் அம் மணிமேகலை மேலும் சொல்லுகின்றாள்; மயல் பகை ஊட்டினை மறுபிறப்பு உணர்ந்தேன் அயர்ப்பது செய்யா அறிவினேன் ஆயினேன் - தேவியே! நீதானும் அறிவினை மயக்கிப் பித்தேற்றும் பகை மருந்தினை எனக்கு ஊட்டினை யானோ மறுபிறப்பு உணருமளவிற்கு அறிவாற்றல் உடையேன் ஆகலின் பித்துடையார் போன்று தன்னைத்தான் மறந்திடாத நல்லறிவு உடையேனாயிருந்தேன்; நல்லாய் - நன்மை மிக்க அரசியே நின் ஏவலால்; கல்லாக் கயவன் கார் இருள் தான் வர நான் ஆண் உரு கொண்டிருந்தேன் - கல்லாத கயவன் ஒருவன் கரிய இருளின்கண் என்பால் வரும் பொழுது யான் ஆணுருக்கொண்டு தப்பினேன்; மாண் இறை செய்த வஞ்சம் - மாட்சிமையுடைய அணிகலன் அணிந்த இராசமாதேவியே! நீ பொய் நோய் காட்டி என்னைப் புழுக்கறையில் இட்ட வஞ்சச் செயலினின்றும்; பிழைத்தது - யான் உயிர் தப்பியது; ஊண் ஒழி மந்திரம் உடைமையின் அன்றோ - யான் உணவில்லாமலும் உயிரோடிருத்தற்குரிய மந்திரம் உடையேனாய் இருந்ததனாலன்றோ? அஃதின்றேல் இறந்து படுதல் தப்பாது; அந்தரம் சேறலும் அயல் உருக்கோடலும் சிந்தையில் கொண்டிலேன் - இவ்வாறன்றி, நின் பாதுகாப்பினின்றும் வான் வழியே சென்று தப்பவும்

வேற்றுருக் கொண்டு தப்பவும் யான் எண்ணுமிலேன், என் எனின்; என்க.

(வி - ம்.) நல்லாய் : விளி. மந்திரமுடைமையினன்றே பிழைத்தது என்றது அஃதில்லையாறல் இறந்தொழிவேன் என்பதுபட நின்றது. அந்தரம் - வானம். அயல் உருக்கோடல் - வேற்றுருக் கொள்ளுதல். இவற்றால் நின்னை விட்டு யான் போதல் கூடும்; ஆயினும் அவ்வாறு போவதற்கு யான் நினைந்திலேன் என்று சொல்லி மேலே அதற்கும் காரணம் கூறுகின்றாள் என்க.

இதுவுமது

கூகூ - க௦௫ : சென்ற.........கேளாய்

(இ - ள்.) தையால் - நங்கையே நின்னிடத்தினின்றும் ஓடிப்போதற்கு யான் நினையாமைக்குக் காரணம் கூறுவேன் கேள்; சென்ற பிறவியின் காதலன் பயந்தோய் கடுந்துயர் களைந்து தீது உறு வெவ்வினை தீர்ப்பது பொருட்டு - முற்பிறப்பிலே எனக்குக் காதலனாய் இருந்தவனை அனனது மறு பிறப்பின்கண் ஈன்ற தாய் அல்லையோ நீ? இவ்வாற்றால் எனக்கு மாமியாகிய உனக்கு வந்த கடுந்துன்பத்தைப் போக்கி மேலும் தீமை வருவதற்குக் காரணமான தீவினைகளை நின்னிடத்திருந்து ஒழிக்க வேண்டும் என்னும் என் விருப்பமே அதற்குக் காரணமாம், இதுகாறும் கூறியவற்றால்; உன் தன் தடுமாற்று அவலத்து எய்யா மையல் தீர்ந்து இன் உரை கேளாய் - உன்னுடைய மனம் தடுமாறுதற்குக் காரணமான துன்பத்தை யுடைய அறியாமையாகிய மயக்கத்தைக் கைவிட்டு இனி யான் கூறுகின்ற இனிய அறிவுரைகளைக் கேட்டருளுக; என்க.

(வி - ம்.) காதலன் என்றது, இராகுலனை. பயந்தோய்-ஈன்றோய். இனி, மகன் இறந்தமையால் வந்த துன்பமாகலின் கடுந்துயர் என்றாள். இனி, தீவினை செய்யாமல் தீர்க்கவேண்டுமென்னும் விருப்பம் காரணமாக என்க. தையால் : விளி. எய்யா மையல்—அறியாமைக்குக் காரணமான மயக்கம்.

மணிமேகலை காமம் முதலியவற்றால் வரும் தீவினைகளை விளக்குதல்

க௦௪ - ௧௧௧ : ஆள்பவர்.........நீத்தும்

(இ - ள்.) ஆள்பவர் கலக்கு உற மயங்கிய நல் நாட்டு காருக மடந்தை - நாட்டை யாளும் அரசர் கொடுங்கோன்மையால் கலக்குறப்பட்டு அறம் தலைதடுமாறிய நல்ல நாட்டின்கண் பண்டு இல்லறம் நடத்திய நங்கை ஒருத்தி தன்; கணவனும் கைவிட -

கணவனாலும் கைவிடப்பட்டு; ஈன்ற குழவியோடு தான் வேறு ஆகி மான்று ஓர் இசை போய் வரையாள் வாழ்வுழி - தான் ஈன்ற குழவியையும் கைவிட்டுத் தான் தமியளாகப் பிரிந்துபோய் மயங்கி மனம் போனதொரு திசையிலே போய் ஆங்கோர் ஊரின்கண் வரைவின் மகளாய் வாழ்கின்ற காலத்திலே; புதல்வன் தன்னை ஓர் புரிநூல் மார்பன் பதியோர் அறியா பான்மையின் வளர்க்க - அவள் கைவிட்ட குழந்தையை ஒரு பூணுநூல் அணிந்த மார்பையுடைய ஒரு பார்ப்பனன் அவ்வூர்வாழ் மாந்தர் அறியாததொரு முறைமையாலே தன் பிள்ளை போல வளர்த்துவிட; ஆங்கு அப் புதல்வன் - அவ்வாறு வளர்க்கப்பட்ட அம்மகன்; அவள் திறம் அறியான் - தன் தாயிருந்த ஊருக்கு ஒரு காரியத்தை முன்னிட்டுச் சென்றவன் அங்குப் பொது மகளாய் வாழ்க்கை நடத்திய தன் தாயைப் பொதுமகள் என்றே நினைத்து; தான் புணர்ந்து - அவளைப் புணர்ந்து; அறிந்து பின் தன் உயிர் நீத்ததும் - பின்பு தாயென்றறிந்து அத் தீவினை பொறுமல் அவன் தன் உயிரை விட்டதும் என்க.

(வி - ம்.) ஆள்பவரால் கலக்குற மயங்கிய நாடு என்க. இது மடந்தையைக் கணவன் கைவிடவும் குழவியை அவள் பிரிந்து போதற்கும் ஏதுவாய் நின்றது. குழவியொடு : உருபுமயக்கம். வரையாளாய் - கற்பொழுக்கத்தை வரைந்துகொள்ளாது விலை மகளாய் என்க. பதியோர் - ஊரிலுள்ளோர். அவள்திறம் - அவள் தன் தாயென்னும் செய்தி. புணர்ந்தபின் அறிந்து என்க. இது காமத்தின் தீமைக்கு ஒன்று காட்டியவாறு.

இதுவுமது

கக௨ - ககக : நீர்நசை.........கண்ணி

(இ - ள்.) வாள் தடம் கண்ணி - வாள்போலும் நீண்ட பெரிய கண்ணையுடைய அரசியே; நீர்நசை வேட்கையின் நெடுங்கடம் உழலும் சூல்முதிர் மடமான் - நீரை விரும்பும் வேட்கையினாலே ஓடிய காட்டின்கண் நீர்நிலை தேடித் திரிகின்ற சூல் முதிர்ந்த இளைய மானினது; வயிறு இழித்து ஓட கான வேட்டுவன் கடுங்கணை துரப்ப மான்மறி விழுந்தது கண்டு - வயிற்றைக் கிழித்து அப்பாலும் ஓடும்படி அக் காட்டில் வாழுகின்ற வேடன் ஒருவன் கடிய அம்பினைச் செலுத்துதலாலே அப் பெண்மான் விழுந்ததனைக் கண்டு; மனம் மயங்கி - நெஞ்சு கலங்கி; பயிர்க்குரல் கேட்டு அதன் பான்மையனாகி - அம் மான் தன் இனத்தை யழைக்குங் குரலைக் கேட்டு அதன் அருகிலே சென்று பார்த்து; உயிர்ப்பொடு செங்கண் உகுத்த நீர் கண்டு - சாகின்ற அந்த மான் நெட்டுயிர்ப்பெறிதலோடு துன்ப மிகுதியால்

தனது சிவந்த கண்ணினின்றுஞ் சொரிந்த நீரைப் பார்த்து; ஓட்டி எய்தோன் ஓர் உயிர் துறந்ததும் - அதன் மேல் அம்பு செலுத்திய வேடன் தான் செய்த அத் தீவினைக் காற்றாமல் ஒப்பற்ற தன்னுயிரையே துறந்த செய்தியை; கேட்டும் அறிதியோ - நீ கேள்வி வாயிலாகவேனும் அறிவாயோ என்றாள்; என்க.

(வி - ம்.) நசை - வேட்கை - நச்சுதலாலே உண்டாகும் விருப்பம். மான் மறி - அம்மானின் சூலிலிருந்த குட்டிமான் எனினுமாம். ஓட்டி எய்தோன் என்றது சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது. இது கொலையின் தீமைக்கு ஒன்று காட்டியவாறு.

## இதுவுமது

### கஉ0 - கரு0 : கடாஅ..........காரிகை

(இ - ள்.) கள் களாமுற்றோர் - கள்ளை விரும்பிப் பருகியவர்; கடாஅ யானைமுன் வீடாஅது சென்று அதன் வெள் கோட்டு வீழ்வது - மதம் பொருந்திய யானை முன் அணுகுதலை அக் களிப்புக் காரணமாக விலக்காமல் சென்று அந்த யானையின் வெள்ளிய கொம்பினால் குத்துண்டு சாவது; உண்ட கள்ளின் உறுசெருக்கு ஆவது - அவர் உண்ட கள்ளினால் உண்டான செருக்கே யாவதனை; காரிகை கண்டிருக்கல்லாய் கண்டும் அறிதியோ - அழகுடைய அரசியே! நீ கண்டிருக்கல்லாய் கண்டும் அறிதியோ - அழகுடைய அரசியே! நீ கண்டிருக் கின்றாயோ; பொய் ஆற்று ஒழுக்கம் பொருள் என கொண்டோர் - வஞ்சகமாக ஒழுகும் ஒழுக்கத்தைப் பொருள் என்று கருதியவர்; கையாற்று அவலம் கடந்ததும் உண்டோ - கையாறுதலுக்குக் காரணமான துன்பமாகிய கடலில் அழுந்துதலன்றி உய்ந்ததும் இவ்வுலகில் உளதாகுமோ? ஆகாது காண்; இளவேய் தோளாய்க்கு - பசிய மூங்கில் போன்ற தோளையுடைய இராசமாதேவியாகிய உனக்கு; களவு ஏர் வாழ்க்கையர் உறூஉம் கடுந்துயர் இது என வேண்டா - வயலில் ஏர் உழுது வாழ்வதை வெறுத்துக் களவுத் தொழிலையே ஏர்த் தொழிலாகக் கொண்டு வாழுகின்ற மாக்கள் எய்துகின்ற கடிய துன்பத்தின் தன்மையை இத்தகையது என்று யான் கூறியும் காட்ட வேண்டுமோ; மன்பேர் உலகத்து வாழ்வோர்க்கு இங்கு இவை - நிலைபெற்ற பெரிய இவ்வுலகத்தின்கண் வாழுகின்ற மாந்தர்களுக்கு இங்குக் கூறப்பட்ட காமம், கொலை, கள், பொய், களவு ஆகிய ஐந்தும்; துன்பம் தருவன - பெரிய துன்பங்களை உண்டாக்கும் ஆதலால்; துறத்தல் வேண்டும் - இவற்றைத் துறத்தல் வேண்டும்; அங்ஙனம் ஒழியாவிடின்; அவை விட்டொழித்தல் வேண்டும்;

கற்ற கல்வி காரிகை அன்று - அவர் கற்ற கல்வியானது அவர்க்கு அழகாகாது என்றாள்; என்க.

(வி - ம்.) கடாஅயானை - மதங்கொண்ட யானை. கள் காமுற்றோர் - கள்ளை விரும்பி உண்டு களித்தோர். கள்ளுண்டு களித்தவர் அறிவு கெடுதற்கு ஒன்று காட்டுவாள் மதயானையின் முன்சென்று அதன் கொம்பால் குத்துண்டு சாதலைக் கூறினாள், பொய்யாற்று ஒழுக்கம் - பொய் கூறி அந் நெறியில் ஒழுகுதல்; களவேர் வாழ்க்கை - களவுத் தொழிலை உழவுத் தொழில் போல மேற்கொண்டு ஒழுகும் வாழ்க்கை. "கைப்பொருள் வவ்வம் களவேர் வாழ்க்கைக் கொடியோர்" என்பது பெரும்பாணாற்றுப்படை (௪௦ - ௪௧). இங்கு இவை - இங்கு எடுத்துக் காட்டப்பட்ட காமம் முதலிய ஐந்தும் துன்பம் தருவன ஆதலால் துறத்தல் வேண்டும் என்க. காரிகை அன்று என மாறுக.

## ஞான நன்னீர்

௧௩௧ - ௧௩௯: செற்றம்..........வார்த்து

(இ - ள்.) மல்லன் மா ஞாலத்து வாழ்வோர் என்போர் செற்றம் செறுத்தோர் முற்ற உணர்ந்தோர் - வளம் பொருந்திய பெரிய இந் நிலவுலகத்தில் வாழ்வாங்கு வாழ்பவர் என்று சொல்லத் தகுந்தவர் யாரெனின் தமதுள்ளத்தின்கண் வெகுளி தோன்றாமல் முழுதும் அடக்கியவரும் நன்மை தீமைகளை முழுவதும் ஆராய்ந்தறிந்தவரும்; அல்லன் மக்கட்கு இல்லது நிரப்புநர் - வறுமையால் அல்லல் உறும் மாக்கட்கு அவர்பால் இல்லாத பொருள்களை வழங்கி அக் குறையைத் தீர்த்து விடுபவரும் ஆவார்; திருந்து ஏர் எல்வளை - திருத்தமான அழகையும் ஒளியையும் உடைய வளையலையணிந்த கோப்பெருந்தேவியே; செல் உலகு அறிந்தோர் வருந்தி வந்தோர் அரும்பசி களைந்தோர் - இனித் தாம் செல்லுதற்குரிய மேனிலையுலகிற்கு நெறியறிந்தோர் யாரெனின் பசியினால் துன்புற்றுத் தம்பால் வந்தடைந்த வறியோருடைய ஆற்றுதற்கரிய அப் பசியைத் தீர்த்தவரே யாவர்; துன்பம் அறுக்கும் துணி பொருள் உணர்ந்தோர் - பிறவித் துன்பத்தை அறுத்து உய்தற்குரிய தெளிந்த பொருளையறிந்தவர் யாரெனின்; மன்பதைக்கு எல்லாம் அன்பு ஒழியார் - உயிர்களிடத்தெல்லாம் அன்பு செலுத்துதலில் ஒழியாத சான்றோர்களே யாவர்; என ஞான நன்னீர் நன்கனம் தெளித்து தேன் ஆர் ஓதி செவி முதல் வார்த்து - என்று சொல்லி மெய்யறிவாகிய நல்ல தண்ணீரை நன்றாக அவள் துன்ப நெருப்பின் மேல் தெளித்தும் வண்டுகள் பொருந்திய கூந்தலையுடைய அவ்விராசமாதேவியின் செவியினுள்ளே வார்த்தும்; என்க.

(வி - ம்.) செற்றம் - வெகுளி. அல்லல் மாக்கள் - துன்புறும் வறியவர். செல்லுலகு-இனிச்செல்ல வேண்டிய மேனிலையுலகு. துன்பம் அறுத்தல்-பிறவித் துன்பத்தைப் போக்குதல். துணிபொருள் - தெளிந்த மெய்ப்பொருள், ஞானமாகிய நீர் என்க. தேன் - வண்டு. செவிமுதல்-செவியில்.

## மணிமேகலையை இராசமாதேவி தொழுதலும் அதனை மறுத்து மணிமேகலை தானே தொழுதலும்

கசO - கசள : மகன்.........வணங்கினளேன்

(இ - ள்.) மகன் துயர் நெருப்பா மனம் விறகாக அகம் சுடு வெந்தீ ஆயிழை அவிப்ப - தன் மகனாகிய உதயகுமரன் கொலையுண்டமையா லுண்டான துன்பமே நெருப்பாகவும் தன் மனமே அந்நெருப்புப் பற்றி எரியும் விறகாகவும் இராசமா தேவியின் உள்ளுள்ளே சுட்டெரிக்கின்ற வெவ்விய அத் துன்ப நெருப்பினை மணிமேகலை அவித்துவிடுதலாலே இராசமாதேவி; தேறுபடு சில் நீர் போல தெளிந்து மாறுகொண்டு ஓரா மனத்தினள் ஆகி - தேற்றாங் கொட்டை தேற்றப்பட்ட கலத்தின்கண் உள்ள சிறிய நீர் தெளிவது போலத் தெளிவடைந்து மணிமேகலையைப் பகைமைக்குணம் கொண்டு ஆராயாத அன்புடைய மனத்தையுடையவளாய்; ஆங்கு அவள் தொழுதலும் ஆயிழை பொறாஅள் தான தொழுது ஏத்தி தகுதி செய்திலை - அப்பொழுது அவ்விராசமாதேவி மணிமேகலையைக் கைகூப்பித் தொழா நிற்றலும் அது கண்ட மணிமேகலை மனம் பொறாளாய்த் தானே கை கூப்பித் தொழுது நின்று பாராட்டிக் கோப்பெருந்தேவியே நீ என்னைத் தொழுது தகாத தொன்றனைச் செய்தாய், என்னைத் தொழுவது தகுதியன்று ஏனெனில்; காதலன் பயந்தோய் அன்றியும் நீ என் காவலன் மாபெருந் தேவி என்று எதிர் வணங்கினள் - நீ என் காதலனை ஈன்ற தாய் அல்லையோ அல்லாமலும் எல்லா மக்களாலும் தொழத்தகுந்த கோப்பெருந்தேவியும் ஆவாய் ஆதலின் என்று சொல்லித் தொழுகின்ற அரசியின் முன்னர்த் தலை வணங்கி நின்றாள் என்பதாம்;

(வி - ம்.) மகன் இறந்தமையால் உண்டான துன்பம் என்க. அகம்-உள்ளிடம். ஆயிழை: மணிமேகலை. தேறு - தேற்றாங்கொட்டை. கலத்தின் நீர் என்பதுபடச் சின்னீர் என்றார். மாறு-பகைமை. காதலன் என்றது உதயகுமரனை.

இனி, இதனை மூதாட்டி அருளால் சென்றெய்தி தொழுது முன்னின்று வாழ்த்தி, மன்னவன்றன் முன் துன்பங்கொள்ளேல், கொண்டு என்று போயபின் அஞ்சிலோதி கரந்து அடக்கிக்

மறைத்து, மணிமேகலையை 'வஞ்சஞ் செய்குவல்' என்று ஒருநாள் அரசனுக்கு, 'சிறைதக்கதன்று' என, 'தீர்க்க' என்று இறைசொல, குழலாள் அவளைக் கூஉய்ப் புக்கு, செய்குவல், என்று ஊட்ட அறிவினளாக; கொடுப்ப அணைதலும், இருப்ப, போயபின், அடைப்ப, இருப்ப, அவள் தொழ, மணிமேகலை ஒழிவின்றுரைத்து மற்றும் உரை செய்யும்: அங்ஙனமுரை செய்பவள் அவிப்ப, அவள் தொழுதலும், ஆயிழை பொருஅளாய், 'மாபெருந்தேவி' என்று எதிர் வணங்கினளென இயைத்துக் கொள்க.

சிறைவிடுகாதை முற்றிற்று

## உச. ஆபுத்திரனாடு அடைந்த காதை

[மணிமேகலை மாநகரொழிந்து ஆபுத்திரனுடடைந்த பாட்டு]

அஃதாவது மணிமேகலை சிறைவீடு பெற்றபின் அறவண வடிகளை வணங்கி இராசமாதேவியும் சித்திராபதியும் ஆகிய இருவரையும் நோக்கி அறவணவடிகளார் அறமொழியை மறவாது கடைப்பிடித்து ஒழுகி உய்யுமின என்று கூறி இப் பூம்புகார் நகரத்தில் யான் இருப்பேனாயின் எனனைக் கண்டோர் இவளே மன்னவன் மகனுக்குக் கூற்றுவனாயினள் என்று பழிப்பர்; யான் அமுத சுரபியைப் பெற்றவனாகிய ஆபுத்திரன் மாறிப் பிறந்திருக்கின்ற சாவகநாட்டிற்குச் செல்லவேண்டும். பின்னர் மாக இல் மணிபல்லவமும் தொழுது ஏத்தல் வேண்டும். பின்னர் வஞ்சி நகரத்தில் புகுந்து ஆங்குக் கோயில் கொண்டிருக்கின்ற கற்புடைத் தெய்வமாகிய என் அன்னை கண்ணகித் தெய்வத்தையும் கண்டடி தொழுதல் வேண்டும் என்று அவர்க்கெல்லாம் அறிவித்துவிட்டு யான யாங்குச் சென்றாலும் எனக்கு இடர் வருமென்று நீவிர் வருந்துதல் வேண்டா; யான யாங்கணும் சென்று நல்லறம் செய்குவல் என்று எல்லாரையும் வணங்கி விட்டு உலக அறவியில் சென்று சம்பாபதியையும் கந்திற் பாவையையும் கைதொழுது வலங்கொண்டு இரவின்கண் வான் வழியே பறந்து சென்று ஆபுத்திரன் நாட்டினை அடைந்த செய்தியைக் கூறும் செய்யுள் என்றவாறு

இனி இதன்கண் - சித்திராபதி மணிமேகலையைச் சிறைவீடு செய்து தன மாளிகைக்கு அழைத்துக் கொடுபோக முயலுதலும் இராசமாதேவி,

"கள்ளும் பொய்யும் காமமும் கொலையும்
உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை"

இத்தகைய தீவினைகளை எல்லாம் மேற்கொண்டிருக்கின்ற உன்னோடு அவற்றையெல்லாம் துறந்து தாப வாழ்க்கை மேற்கொண்டிருக்கின்ற மணிமேகலை உனமனைக்கு இனி வருவாளல்லள்; என்னோடு அரண்மனையிலேயே எஞ்ஞான்றும் இருப்பாளாக என்று கூறிச் சித்திராபதியின் வேண்டுகோளை மறுத்தலும்; அச் செவ்வியில் மாதவி மணிமேகலையைச் சிறை மீட்டற்பொருட்டு அரசி அரண்மனைக்கு அறவணரை யழைத்துக்கொண்டு வருதலும் அரசி அறவண அடிகளாரைக் கண்டவுடன் எழுந்து வணங்குதலும்

வடிகளார் அரசிக்கு அறம் கூறுதலும் பிறவும் கூறப் பட்டிருக்கின்றன.

மன்ன குமரனை வஞ்சம் புணர்ந்த
தொன்முது கணிகைதன் சூழ்ச்சியிற் போயவன்
விஞ்சையன் வாளின் விளிந்தோ னென்பது
நெஞ்சு நடுக்குறக் கேட்டுமெய் வருந்தி
மாதவி மகள்தனை வான்சிறை நீக்கக்
காவலன் றேவி காற்கீழ் வீழ்ந்தாங்
கரவே ரல்கு லருந்தவ மடவார்
உரவோற் களித்த வொருபத் தொருவரும்
ஆயிரங் கண்ணோ னவிநயம் வழூஉக்கொள
மாயிரு ஞாலத்துத் தோன்றிய வைவரும்
ஆங்கவன் புதல்வனோ டருந்தவன் முனிந்த
ஓங்கிய சிறப்பி னொருநூற்று நால்வரும்
திருக்கிளர் மணிமுடித் தேவர்கோன் றன்முன்
உருப்பசி முனிந்த வென்குலத் தொருத்தியும்
ஒன்று கடைநின்ற வாறிரு பதின்மரித்
தொன்றுபடு மாநகர்த் தோன்றிய நாண்முதல்
யானுறு துன்ப மியாவரும் பட்டிலர்
மாபெருந் தேவி மாதர் யாரினும்
பூவிலை யீத்தவன் பொன்றின னென்று
மாதவி மாதவர் பள்ளியு ளடைந்ததும்
பரந்துபடு மனைதொறும் பாத்திர மேந்தி
அரங்கக் கூத்திசென் றையங் கொண்டதும்
தகுத லல்லது நாடகக் கணிகையர்
தகுதி யென்னார் தன்மை யன்மையின்
மன்னவன் மகனே யன்றியு மாதரால்
இந்நக ருறாஉ மிடுக்கணு முண்டால்
உம்பளந் தழீஇய வுயர்மண னெடுங்கோட்டுப்
பொங்குதிரை யுலாவும் புன்னையங் கானல்
கிளர்மணி நெடுமுடிக் கிள்ளி முன்னா
இளவேனி லிறுப்ப விறும்பூது சான்ற
பூநாறு சோலை யாருமி லொருசிறைத்
தானே தமிய ளொருத்தி தோன்ற
இன்ன ளார்கொ லீங்கிவ ளென்று
மன்னவ னறியான் மயக்க மெய்தாக்
கண்ட கண்ணினுங் கேட்ட செவியினும்
உண்ட வாயினு முயிர்த்த மூக்கினும்
உற்றுண ருடம்பினும் வெற்றிச்சிலைக் காமன்

மயிலையுஞ் செயலையு மாவுங் குவளையும்
பயிலிதழ்க் கமலமும் பருவத் தலர்ந்த
மலர்வா யம்பின் வாசங் கமழப்
பலர்புறங் கண்டோன் பணிந்துதொழில் கேட்ப
ஒருமதி யெல்லை கழிப்பினு ளொருநாள்
பொருவரு பூங்கொடி போயின வந்நாள்
யாங்கொளித் தனளவ் விளங்கொடி யென்றே
வேந்தரை யட்டோன் மெல்லியற் றேர்வுழி
நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச்
சலத்திற் றிரியுமோர் சாரணன் றோன்ற
மன்னவ னவனை வணங்கி முன்னின்
றென்னுயி ரனையா ளிங்கொளித் தாளுளள்
அன்னா ளொருத்தியைக் கண்டிரோ வடிகள்
சொல்லுமி னென்று தொழவவ னுரைப்பான்
கண்டிலே னாயினுங் காரிகை தன்னைப்
பண்டறி வுடையேன் பார்த்திப கேளாய்
நாக நாடு நடுக்கின் றாள்பவன்
வாகை வேலோன் வளைவணன் றேவி
வாச மயிலை வயிற்றுட் டோன்றிய
பீலிவளை யென்போள் பிறந்த வந்நாள்
இரவிகுலத் தொருவ னிணைமுலை தோயக்
கருவொடு வருமெனக் கணியெடுத் துரைத்தனன்
ஆங்கப் புதல்வன் வரூஉ மல்லது
பூங்கொடி வாராள் புலம்ப லிதுகேள்
தீவகச் சாந்தி செய்யா நாளுன்
காவன் மாநகர் கடல்வயிறு புகூஉம்
மணிமே கலைதன் வாய்மொழி யாலது
தணியா திந்திர சாபமுண் டாகலின்
ஆங்குப்பதி யழிதலு மீங்குப்பதி கெடுதலும்
வேந்தரை யட்டோய் மெய்யெனக் கொண்டிக்
காசின் மாநகர் கடல்வயிறு புகாமல்
வாசவன் விழாக்கோள் மறவே லென்று
மாதவன் போயின வந்நாட் டொட்டுமிக்
காவன் மாநகர் கலக்கொழி யாதால்
தன்பெயர் மடந்தை துயருறு மாயின்
மன்பெருந் தெய்வம் வருதலு முண்டென
அஞ்சினே னரசன் றேவியென் றேத்தி
நன்மனம் பிறந்த நாடகக் கணிகையை
என்மனைத் தருகென விராசமா தேவி
கள்ளும் பொய்யும் காமமும் கொலையும

உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை
தலைமையாக் கொண்டநின் தலைமையில் வாழ்க்கை
புலைமையென் றஞ்சிப் போந்த பூங்கொடி
நின்னொடு போந்து நின்மனைப் புகுதாள்
என்னோ டிருக்குமென் றீங்கிவை சொல்வுழி
மணிமே கலைதிற மாதவி கேட்டுத்
துணிகயந் துகள்படத் துளங்கிய வதுபோல்
தெளியாச் சிந்தையள் சுதமதிக் குரைத்து
வளியெறி கொம்பின் வருந்திமெய்ந் நடுங்கி
அறவண ரடிவீழ்ந் தாங்கவர் தம்முடன்
மறவேன் மன்னவன் றேவிதன் பால்வரத்
தேவியு மாயமுஞ் சித்திரா பதியும்
மாதவி மகளு மாதவர்க் காண்டலும்
எழுந்தெதிர் சென்றாங் கிணைவளைக் கையால்
தொழுந்தகை மாதவன் துணையடி வணங்க
அறிவுண் டாகவென் றாங்கவன் கூறலும்
இணைவளை நல்லாள் இராசமா தேவி
அருந்தவர்க் கமைந்த வாசனங் காட்டித்
திருந்தடி விளக்கிச் சிறப்புச் செய்தபின்
யாண்டுபல புக்குநும் மிணையடி வருந்தவென்
காண்டகு நல்வினை நும்மையீங் கழைத்தது
நாத்தொலை வில்லா யாயினுந் தளர்ந்து
மூத்தவிவ் யாக்கை வாழ்கபல் லாண்டெனத்
தேவி கேளாய் செய்தவ யாக்கையின்
மேவினை யாயினும் வீழ்கதிர் போன்றேன்
பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்றோர்
இறந்தா ரென்கை யியல்பே யிதுகேள்
பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பயன்
இற்றென வகுத்த இயல்பீ ராறும்
பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவர்
அறியா ராயினாழ் நர கறிகுவர்
பேதைமை யென்ப தியாதென வினவின்
ஓதிய விவற்றை யுணராது மயங்கி
இயற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோ டுண்டெனக் கேட்டது தெளிதல்
உலக மூன்றினு முயிரா முலகம்
அலகில பல்லுயி ரறுவகைத் தாகும்
மக்களுந் தேவரும் பிரமரும் நரகருந்

தொக்க விலங்கும் பேயு மென்றே
நல்வினை தீவினை யென்றிரு வகையால்
சொல்லப் பட்ட கருவி னுட் டோன்றி
வினைப்பயன் விளையுங் காலை யுயிர்கட்கு
மனப்பே ரின்பமுங் கவலையுங் காட்டும்
தீவினை யென்ப தியாதென வினவின்
ஆய்தொடி நல்லா யாங்கது கேளாய்
கொலையே களவே காமத் தீவிழைவு
உலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவர்
இத்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
நல்வினை யென்ப தியாதென வினவில்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமரு மாகி
மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்குவர்
அரசன் றேவியோ டாயிழை நல்லீர்
புரைதீர் நல்லறம் போற்றிக் கேண்மின்
மறுபிறப் புணர்ந்த மணிமே கலைநீ
பிறவறங் கேட்ட பின்னாள் வந்துனக்
கித்திறம் பலவு மிவற்றின் பகுதியும்
முத்தேர் நகையாய் முன்னுறக் கூறுவல்
என்றவ னெழுதலு மிளங்கொடி யெழுந்து
நன்றறி மாதவ னல்லடி வணங்கித்
தேவி மாயமுஞ் சித்திரா பதியும்
மாதவர் நன்மொழி மறவா துய்ம்மின்
இந்நகர் மருங்கின்யா னுறைவே னாயின்
மன்னவன் மகற்கிவள் வருங்கூற் றென்குவர்
ஆபுத் திரனா டடைந்ததற் பின்னாள்
மாசின் மணிபல் லவந் தொழு தேத்தி
வஞ்சியுட் புக்கு மாபத் தினிதனக்
கெஞ்சா நல்லறம் யாங்கணுஞ் செய்குவல்
எனக்கிட ருண்டென் றிரங்கல் வேண்டா

மனக்கினி யீரென் றவரையும் வணங்கி
வெந்தாறு பொன்போல் வீழ்கதிர் மறைந்த
அந்தி மாலை யாயிழை போகி
உலக வறவியு முதியாள் குடிகையும்
இலகொளிக் கந்தமு மேத்தி வலங்கொண்
டந்தர மாருப் பறந்துசென் றாயிழை
இந்திரன் மருமா னிரும்பதிப் புறத்தோர்
பூம்பொழி லகவயி னிழிந்து பொறையுயிர்த்
தாங்குவாழ் மாதவ னடியிணை வணங்கி
இந்நகர்ப் பேர்யா திந்நக ராளும்
மன்னவன் யாரென மாதவன் கூறும்
நாக புரமிது நன்னக ராள்வோன்
பூமிசந் திரன்மகன் புண்ணிய ராசன்
ஈங்கிவன் பிறந்த வந்நாட் டொட்டும்
ஓங்குயர் வானத்துப் பெயல்பிழைப் பறியாது
மண்ணு மரனும் வளம்பல தரூஉம்
உண்ணின் றுருக்கு நோயுயிர்க் கில்லெனத்
தகைமலர்த் தாரோன் றன்றிறங் கூறினன்
நகைமலர்ப் பூம்பொழி லருந்தவன் றானென்.

———

## உரை

[சித்திராபதி மணிமேகலையைச் சிறைமீட்டுத் தன் இல்லத்திற்கு அழைத்துப்போக முயலுதல்]

க - கo : மன்னன்.........ஐவரும்

(இ - ள்.) மன்ன குமரனை வஞ்சம் புணர்த்த தொல்முது கணிகைதன் சூழ்ச்சியில் போயவன்—அரசிளங் குமரனைய உதயகுமரனை வஞ்சித்து மணிமேகலையோடு கூட்டுதற்குப் பெரிதும் முதுமை எய்திய நாடகக் கணிகையாகிய சித்திராபதி செய்த சூழ்ச்சியினலே மணிமேகலையைக் கைபபற்றி வருவல் என்று துணிந்துபோன உதயகுமரன் அம்பலத்தின் கண்; விஞ்சையன் வாளின் விளிந்தோன் என்பது நெஞ்சு நடுக்குறக் கேட்டு மெய் வருந்தி-விச்சாதரன் வாளினல் ஏறுண்டு இறந்தான் என்னும் செய்தியைச் சித்திராபதி தன் உள்ளம் நடுக்கம் எய்தும்படி கேள்வியுற்று உடல் மெலிந்து வருந்தி; மாதவி மகள் தனை வான்சிறை நீக்க - மாதவி மகளாகிய மணிமேகலையைப் பெரிய சிறையினின்றும் நீக்கித் தன் இல்லத்திற்கு அழைத்துப்போகக் கருதி அரண்மனையில் உவளகத்திற்குச் சென்று; காவலன் தேவி கால்கீழ் வீழ்ந்து ஆங்கு-இராசமாதேவியின் திருவடியிலே வீழ்ந்தபடியே கிடந்து அரசிக்குக் கூறுபவள் தேவியே கேள் பண்டொரு காலத்தே; அரவு ஏர் அல்குல் அருந்தவ மடவார் - பாம்பின் படம் போன்ற அல்குலையும் அரிய தவத்தையுமுடைய தேவகணிகைபராகிய மகளிர்; உரவோற்களித்த ஒருபதின்மருவரும் - இந்திரனுக்கு வழங்கிய பதினெருவரும்; ஆயிரம் கண்ணோன் அவிநயம் வழூஉக்கொள - தேவேந்திரன் முன்னிலையிலே கூத்தாடுங்கால் அபிநயம் பிழைக்க ஆடினமையால்; மாயிருஞாலத்துத் தோன்றிய ஐவரும் - சாபமேற்று நிலவுலகத்திலே வந்து தோன்றிய ஐந்து மகளிரும்; என்க.

(வி - ம்.) மன்ன குமரன்: உதயகுமரன். புணர்த்த - கூட்ட. தொன்முது கணிகை என்றது சித்திராபதியை; தான் செய்த சூழ்ச்சியினல் என்க. போயவன் என்றது மணிமேகலையைக் கைப்பற்றிவருவேன் என்று போன உதயகுமரனை. சித்திராபதி செய்த சூழ்ச்சியையும்

அச் சூழ்ச்சியால் உதயகுமரன் உள்ளம் பிறழ்ந்து விரைபரித் தேர்மேல் சென்று ஏறி அம்பலம் புகுந்த செய்தியையும் (கஅ) உதயகுமரன் அம்பலம் புக்ககாதையில் காண்க. அரவேர் அல்குல் அருந்தவ மடவார் என்றது தேவகணிகையரை. ஒருபத்தொருவர் - பதினொருவர். ஆயிரம் கண்ணோன்: இந்திரன்.

## இதுவுமது

### கக - கஅ: ஆங்கவன்.........யாரினும்

(இ - ள்.) ஆங்கு அவன் புதல்வன் ஒரு அருந்தவன் முனிந்த ஓங்கிய சிறப்பின் ஒரு நூற்று நால்வரும் - அவ்விந்திரனுடைய மகனாகிய சயந்தனோடு அரிய தவத்தையுடைய அகத்தியனால் வெகுண்டு சபிக்கப்பட்ட உயர்ந்த கலைச்சிறப்பினையுடைய நூற்று நான்கு மகளிரும்; திருக்கிளர் மணிமுடி தேவர் கோன் தன முன் - அழகு திகழுகின்ற மணிமுடியையுடைய இந்திரன் முன்னிலையிலே; முனிந்த உருப்பசி என் குலத்து ஒருத்தியும் - சாபம் பெற்ற ஊர்வசியாகிய என் குலத்தில் தோன்றிய ஒருத்தியும் ஆக; ஒன்று குறைந்த ஆறு இருபதின்மர் - நூற்றிருபத்தொருவர் ஆகிய தேவ கணிகைமகளிர்; தொன்றுபடு இம்மாநகர் தோன்றிய நாள்முதல் - படைப்புக்காலத்திலேயே தோன்றிய பழைமையையுடைய இப் பூம்புகார் நகரத்தில் வந்து பிறந்த நாள் முதல்; மாபெருந் தேவி மாதர் யாரினும் யான் உறு துன்பம் யாவரும் பட்டிலர் - அத் தேவ கணிகையர் மரபிலே வழிவழியாகத் தோன்றி வருகின்ற நாடகக்கணிகை மகளிருள் வைத்து யான் எய்திய துன்பம் வேறு எந்த மகளிரும் எய்தினர் இல்லை என்றாள்; என்க.

(வி - ம்.) வீழ்ந்தாங்கு-வீழ்ந்தபடியேகிடந்து. இங்குக் கூறப்பட்ட கணிகை மகளிர் வானுலகத்தினின்றும் காவிரிப்பூம் பட்டினத்திலே வந்து பிறந்து சிறப்புற்ற நாடகக்கணிகையராவர், ஈண்டுச் சித்திராபதி இந்நிலவுலகத்துக் கணிகையர் குலத்திலும் சிறந்தது தன்குலம் என்று சொல்லிக்கொள்கின்றனள். ஊர்வசி சாபமேற்று நிலவுலகில் பிறந்து மாதவி யென்னும் பெயரோடிருந்தாள் எனவும் அவள் பெயரையே அவள் மரபில் பிறந்த சித்திராபதி தன்மகளுக்குஞ் சூட்டினள் எனவும் வரும் வரலாறு சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதையினும் கடலாடு காதையினும் காணப்படுகின்றன.

## சித்திராபதி இராச மாதேவியை அச்சுறுத்துதல்.

### ககூ - உசு: பூவிலை.........உண்டால்

(இ - ள்.) பூவிலை ஈத்தவன் பொன்றினன் என்று மாதவி மாதவர் பள்ளியுள் அடைந்ததும் - அற்றைப் பரிசம் அளித்த

கோவலன் இறந்தனன் என்று கேள்வியுற்ற என்மகள் மாதவி அத் துன்பம் பொறாமல் பெரிய தவத்தோருறைகின்ற பௌத்தப் பள்ளியுள் எய்தியதும்; பரந்துபடு மனைதொறும் பாத்திரம் ஏந்தி அரங்கக் கூத்தி சென்று ஐயங் கொண்டதும் - பரந்து கிடக்கின்ற இல்லந்தோறும் பிச்சைப் பாத்திரத்தை ஏந்திக் கொண்டு ஆடரங்கத்தின்கண் ஏறிக் கூத்தாடுகின்ற குலத்தில் பிறந்தும், மணிமேகலை சென்று பிச்சையேற்பதும் ஆகிய இவற்றைக்கண்ட; நாடகக் கணிகையர் நகுதல் அல்லது தன்மை அன்மையின் தகுதி என்னார் - எம்மோரனைய நாடகக் கணிகையர் இகழ்ந்து சிரிப்பதன்றி இச் செயல்கள் எங்குலத்திற்கு இயல்பல்லாமையால் தகுதி என்று கூறுவாரல்லர் அன்றியும்; மாதரால் மன்னவன் மகனை அன்றியும் இந்நகர் உறாதும் இடுக்கணும் உண்டால் - கோப்பெருந்தேவியே! இம் மணிமேகலை காரணமாக நங்கோமகன் கொலையுண்ட துன்பம் அல்லாமலும், இப்பெரிய நகரில் வாழ்வார் அனைவர்க்கும் வரவிருக்கின்ற துன்பமும் ஒன்று உளது என்றாள்; என்க.

(வி - ம்.) பூவிலை-அற்றைப் பரிசம். பூ: இடக்கரடக்கு. பூவிலையீத்தவன் - கோவலன் என்க. பொன்றினன் - இறந்தான்: மாதவர் - அறவணவடிகளாருமாம். அரங்கக்கூத்தி: மணிமேகலை. ஐயம் - பிச்சை தன்மை - இயல்பு. இவ்விரண்டும் சித்திராபதி யாவரும் படாத துன்பப்பட்டேன் என்பதற்கு ஏதுக்கூறியபடியாம். மேலே அரசி அஞ்சி மணிமேகலையைத் தன் பால் விடுத்தற்கு அரசியைச் சித்திராபதி அச்சுறுத்துகின்றாள். மணிமேகலையால் இந் நகரத்திற்கே பெருந்துன்பம் நிகழ்தல் கூடும் என்று தொடங்கி அதற்கு எடுத்துக்காட்டாக நெடுமுடிக்கிள்ளி வரலாறு ஒன்று கூறுகின்றாள்.

## நெடுமுடிக்கிள்ளி வரலாறு

### ௨௭ - ௩௪: உம்பளம்.........எய்தா

(இ - ள்.) உம்பளம் தழீஇய உயர் மணல் நெடுங்கோட்டு பொங்கு திரை உலாவும் புன்னை அம் கானல் - உப்பளத்தைத் தழுவிக்கிடந்த உயர்ந்த மணலால் இயன்ற கரையிடத்தே கடலினின்றும் வருகின்ற பெரிய அலைகள் உலாவுகின்ற புன்னை மரங்கள் அடர்ந்த கடற்கரைச்சோலையின்கண்; கிளர்மணி நெடுமுடிக்கிள்ளி - ஒளி வீசுகின்ற மணிபதித்த நெடிய முடியை விரும்பி அணிவதனால் நெடுமுடிக்கிள்ளி என்று அழைக்கப்படுகின்ற சோழமன்னன் நிற்கின்ற பொழுது காலமும்; முன்னா- இளவேனில் இறுப்ப - இளவேனில் பருவமாக இருக்க; முன்னாள் அச் சோழமன்னன் முன்னிலையிலே; இறும்பூது சான்ற பூநாறு சோலை - வியக்கத்தகுந்த மணம் கமழ்கின்ற அச் சோலையிலே;

மாரும் இல் ஒருசிறை தானே தமியள் ஒருத்தி தோன்ற - பிறர் யாருமில்லாத ஓரிடத்திலே துணையின்றித் தனியாக ஒரு மங்கை வந்து தோன்றுகிற்ப; ஈங்கு இவள் இன்னள் என்று யார் என்று மன்னவன் அறியான் மயக்கம் எய்தா - ஈங்குத் தோன்றிய இவள் இன்னாள் என்றுதல் யார் என்றுதல் அவ்வரசன் அறியாதவனாய் அவள் அழகினால் மயக்கம் எய்தி; என்க.

(வி - ம்.) உம்பளம் - உப்பளம்: விகாரம். கோடு - கரை. நெடுமுடிக்கிள்ளி-ஒரு சோழ மன்னன். இறும்பூது-வியப்பு. ஒருசிறை-ஓரிடம். தமியள்-தனியள்: இன்னள் என்று யார் கொல் என்று அறியான் என்க. அறியானாகவும் அவள் அழகில் மயக்கமெய்தி என்க.

## இதுவுமது

### ௩௫ - ௪௫: கண்ட.........தேர்வழி

(இ - ள்.) கண்ட கண்ணினும் கேட்ட செவியினும் உண்ட வாயினும் உயிர்த்த மூக்கினும் உற்று உணர் உடம்பினும் - அங்ஙனம் மயங்கிய மன்னன அவளைக் கண்ட கண்ணினும் அவள் இன்சொலலைக் கேட்ட செவியினும் எயிற்றின் ஊறிய நீரைப் பருகிய வாயிடத்தும் மோந்த மூக்கினும் தீண்டி உணர்ந்த உடம்பிடத்தும்; வெற்றிச்சிலைக் காமன் - வெற்றியையுடைய கருப்பு விலலையுடைய காமவேள் எய்த; மயிலையும் செயலையும் மாவும் குவளையும் பயில் இதழ் கமலமும் பருவத்து அலர்ந்த மலர்வாய் அம்பின் வாசம் கமழ-மல்லிகையும் அசோகும் மாவும் குவளையும் செறிந்த இதழையுடைய தாமரையும் ஆகிய இவற்றின் பருவத்திலே விரிந்த மலராகிய தனக்கு வாய்த்த அம்புகளின் நறுமணம் கமழாநிற்க அவளொடு புணர்ந்து; பலர் புறம் கண்டோன - பகைவர் பலரையும் போர்க்களத்திலே வென்று புறங்கண்டவனாகிய அம் மன்னவன்; பணிந்து தொழில் கேட்ப - அம் மடந்தையைப் பணிந்து நாள்தோறும் அவள் ஏவிய தொழில்களை எல்லாம் செய்ய; ஒரு மதி எல்லை கழிப்பினும் உரையாள் - இவ்வாறே ஒரு திங்கள் முடியுந்துணையும் அவளோடிருந்து தான் இன்பமாகக் காலங் கழித்திருந்தாலும் தான் இன்னள் என்று அரசனுக்குக் கூறாதவளாய்; பொருவரு பூங்கொடி போயின அந்நாள் - ஒப்பற்ற மலர்க்கொடி போலும் அம் மடந்தை அரசனைக் கைவிட்டு அவன் அறியாவண்ணம் போய்விட்ட அந்த நாளிலே; வேந்தரை அட்டோன் - பகை மன்னர்களை எல்லாம் கொன்று நாழிலாட்டிய அவ்வரசன் பெரிதும் ஆற்றுமையுடையவனாய்; அவ்விளங்கொடி யாங்கு ஒளித்தனள் என்றே - இளமையுடைய காமவல்லி போன்ற

அவ்வழுகி எங்குப்போய் ஒளித்தாளோ என்று மனம் மறுகி; மெல்லியல் தேர்வுழி - மெல்லியலாகிய அந் நங்கையைத் தேடியலை கின்ற காலத்தே; என்க.

(வி - ரெ.) அந் நங்கையுடைய திருமேனியைக் கண்ணால் கண்டு சுவைத்தும் இன்மொழியைக் கேட்டுச் சுவைத்தும் வாலெயிறூறிய நீரைப் பருகிச் சுவைத்தும் திருமேனியைத் தீண்டியும் கூந்தலை மோந்து சுவைத்தும் உணர்ந்தவரசன் ஆராமையோடு சுவைத்தான் என்பார் அதற்கு ஏதுவாகக் காமவேள் கண் முதலிய அவன் ஐம்பொறிகளிடத்தும் மயிலை முதலிய ஐந்து மலர் அம்புகளையும் இடையறுது எய்தான் என்பது தோன்ற அவற்றின் வாசம் அவன் பொறிகளில் கமழ என்றார். ஒருமதி - ஒரு திங்கள்; (அஃதாவது முப்பது நாள்) அந் நாள்களிலே தன்னை யாரென்று அரசனுக்கு அறிவியாமலே இருந்து, போகும் பொழுதும் அவன் அறியாவண்ணம் போயினள் என்றவாறு. ஈண்டு,

> "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
> மொண்டொடி கண்ணே உள" (குறள் - கக0க)

என வரும் திருக்குறளை நினைக. பலர் புறங்கண்டோன் ஈண்டு ஒரு மகளுக்குப் பணிந்து தொழில் கேட்ப என்ற நயமுணர்க. இக்கருத்தோடு,

> "ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள்
> நண்ணாரு முட்குமென் பீடு" (குறள். க0அஅ)

என வரும் திருக்குறளையும் நோக்குக.

## கிள்ளியின் முன்னர் ஒரு சாரணன் தோன்றுதல்

சக - ருஎ : நிலத்தில்.........அங்காள்

(இ - ள்.) நிலத்தில் குளித்து நெடுவிசும்பு ஏறி சலத்தில் திரியும் ஓர் சாரணன் தோன்ற - அவ்வரசன் முன்னர் நீரில் முழுகுமாறு போல நிலத்தின்கண் முழுகியும் நெடிய வானத்திலே ஏறியும் நிலத்தின் மேல் நடப்பது போல நீரின் மேல் நடந்தும் திரிகின்ற இருத்திகள் பலவும் கைவந்த ஒரு சாரணன் தோன்று நிற்ப; மன்னவன் அவனை வணங்கி முன் நின்று - அரசன் அவனை வணங்கி அவன் முன்னிலையிலே நின்று; அடிகள் என் உயிர் அனையாள் ஈங்கு ஒளித்தாள் உளள் அனாள் ஒருத்தியை கண்டிரோ சொல்லுமின் என்று தொழ - அடிகளே என்னுடைய ஆருயிர்க்காதலி இங்கு யான் அறியாவண்ணம் ஒளித்திருக்கின்றாள் அத்தகையாள் ஒரு நங்கையை இருத்தி பலவும் வல்ல தாங்கள் கண்டிருப்பீரோ கண்டிருப்பீராயின் எனக்குச் சொல்லி அருள வேண்டும் என்று கைகுவித்துத் தொழா நிற்ப; அவன் உரைப்பான் - அச் சாரணன் சொல்லுவான்; பார்த்திப கேளாய்

கண்டிலேனாயினும் காரிகை தன்னை பண்டு அறிவுடையேன் - அரசனே கேள் அவளை இப்பொழுது யான் கண்டிலேன் ஆனாலும் அவ்வழகியை யான் பண்டைக் காலத்தே அறிந்ததுண்டு அவள் யாரெனின்; நாகநாடு நடுக்கு இன்று ஆள்பவன் வாகை வேலோன் வளைவணன் தேவி - நாக நாட்டைக் குடிகள் துன்புறாதபடி செங்கோல் செலுத்துபவனும் பகைவரை வென்று வாகை சூடுதற்கியன்ற வேலை ஏந்தியவனும் ஆகிய வளைவணன் என்னும் அரசனுடைய பட்டத்துத் தேவியாகிய; வாசமயிலை வயிற்றுள் தோன்றிய பீலிவளை என்போள் பிறந்த அந்நாள் - வாசமயிலை என்னும் பெயரையுடைய அரசியினது வயிற்றில் பிறந்த பீலிவளை என்னும் நங்கையையே நீ இப்பொழுது தேடுகின்றனை அவள் பிறந்த அந்த நாளிலே; என்க.

(வி - ம்.) நீரில் குளிப்பது போல நிலத்தில் குளிப்பதும் விசும்பில் ஏறுவதும் நீரின் மேல் நடப்பதும் சித்தி பெற்ற முனிவர் செயலாகும்; சித்தியைப் பௌத்தர்கள் இருத்தி என்பர். மன்னவன் : நெடுமுடிக்கிள்ளி. ஒளித்தாள்: முற்றெச்சம். அவன் உரைப்பான் - அச் சாரணன் சொல்லுவான்; இப்பொழுது கண்டிலேன் ஆயினும் என்க. காரிகை: சுட்டுப் பொருட்டு. நடுக்கின்று: குற்றியலிகரம் உகரமாயிற்று. வளைவணன்: பெயர். வாசமயிலை : பெயர் பீலிவளை : பெயர்; இதனை யான் என் இருத்தியால் உணர்ந்துரைக்கின்றேன் என்பது குறிப்பு.

### சாரணன் கூற்று

### ருஅ - சுஉ : இரவி.........புகூஉம்

(இ - ள்.) கணி இரவி குலத்து ஒருவன் இணை முலை தோய கருவொடு வரும் என எடுத்து உரைத்தனன் - அரசனே அந் நாகநாட்டரசனுடைய கணிவன் அவனுக்கு வேந்தே நின் மகள் தன்னுடைய பெதும்பைப் பருவத்திலே கதிரவன் குலத்தில் தோன்றிய ஒரு மன்னவன் தன் இணையாகிய முலையில் தோய்தலால் அம் மன்னவனுக்கு வயிற்றில் கருவுண்டாகி மீண்டும் நின்பால் வருவாள் என்று அவனுடைய எதிர்கால நிகழ்ச்சியை எடுத்துக் கூறினன், அவன் கூறியாங்கே அவள் வயிறு வாய்க்கப் பெற்று இப்பொழுது நாக நாடு சென்று விட்டாள்; ஆங்கு அப் புதல்வன் வரூஉம் அல்லது பூங்கொடி வாராள் புலம்பல் இது கேள் - அவ்வாறு நினக்குக் கருவாகிய அம் மகன் நின்பால் வந்து சேர்வானல்லது நின்னால் தேடப்படுகின்ற மலர்க்கொடி போலும் மெல்லியளாகிய அப் பீலிவளை மீண்டும் இங்கு வருவாள் அல்லள் ஆதலின் நீ வருந்தாதே கொள் அரசே இன்னும் ஒன்று கேள்; தீவகச் சாந்தி செய்யா நாள் உன் காவல் மாநகர் கடல் வயிறு புகூஉம் - இத் தீவகத்

திற்குச் சாந்தியாகிய இந்திர விழா செய்யாதொழிந்த நாளிலே உன்னுடைய தலைநகரமாகிய காவலையுடைய பெரிய இப் பூம்புகார் நகரம் கடல் கோட்படும்; என்றான் என்க.

(வி - ம்.) இரவி குலத்தொருவன் என்றது கதிரவன் குலத்து மன்னவராகிய சோழ மன்னருள் ஒருவன் என்றவாறு. கருவொடு வரும்- வயிற்றில் கருவுண்டாகி வருவாள். கணி - காலக்கணிவன்; நிமித்திகன். ஆங்கு - அவ்வாறு. அப்புதல்வன் - நினக்குப் பிறந்த மகன். பூங்கொடி: பீலிவளை. புலம்பல்: எதிர்மறை வியங்கோள். வருந்தாதே கொள் என்றவாறு. தீவகச்சாந்தி - இந்திர விழா. உன் காவலையுடைய மாநகருமாம். கடல் வயிறு புகுதல் - கடல் கோட்பட்டு மறைதல்.

## சித்திராபதி தன் அச்சம் இஃதெனல்

### ௬௪ - ௭௬: மணிமே.........ஏத்தி

(இ - ள்.) அது மணிமேகலை தன் வாய்மொழி - அவ்வாறு இந்திர விழாச் செய்யாத நாளில் இந் நகரம் கடல் வயிறு புகுதல் வேண்டுமென்பது மணிமேகலா தெய்வத்தின் தப்பாத சாப மொழியாகும்; இந்திர சாபம் உண்டாகலின் தணியாது - அங்ஙனமேயாகுக என்று இந்திரனிட்ட சாபமும் உண்டாதலால் அது நிகழாதொழியாது; ஆங்கு பதி அழிதலும் - அவ்வாறு இந் நகரம் கடல் கோட்பட்டழிதலும் அழிந்த வழி; ஈங்குப் பதி கெடுதலும் - இங்கே அரசு கேடெய்துதலும்; வேந்தரை அட்டோய் - பகை வேந்தனைக் கொன்றழித்தவனே; மெய்யெனக் கொண்டு - வாய்மையாக நிகழ்ந்துவிடும் என்று உள்ளத்தில் திட்பமாகக் கொண்டு; இக் காசு இல் மாநகர் கடல் வயிறு புகாமல் வாசவன் விழாக்கோள் மறவேல் என்று - இக் குற்றமற்ற பெரிய நகரம் கடலில் வீழ்ந்து அழிந்து போகாமைப் பொருட்டு நீ இந்திர விழாச் செய்தலை மறந்தொழியாதே கொள் என்று சொல்லி அறிவுறுத்தி; மாதவன போயின அந் நாள் தொட்டும் இக் காவல் மாநகர் கலக்கு ஒழிபாதால் - அச் சாரணன் போன அந்த நாளிலிருந்து இந்தக் காவலமைந்த பெரிய நகரததில் வாழுகின்ற மாந்தரெல்லாம் எப்பொழுதேனும் அந் நிகழ்ச்சி நிகழ்ந்துவிடுமோ என்றஞ்சி நெஞ்சு கலங்குதல் ஒழிந்திலர்; மன் பெரும் தெய்வம் தன பெயர் மடந்தை துயர் உறுமாயின் வருதலும் உண்டு என - என்றென்றும் நிலையுதலுடைய பேராற்றலுடைய அம் மணிமேகலா தெய்வம் தன்னால் நிலை நிறுத்தப் பெற்ற குடியிற் பிறந்து அக் காரணத்தால் தன் பெயரையே கொண்டுள்ள இம் மணிமேகலை சிறையிடைக் கிடந்து துன்புறுவாளானால் சினம் கொண்டு அவளைப் பாதுகாத்தற் பொருட்டு இந் நகரத்திற்கு வருதலும் கூடும் என்று நினைத்து;

அரசன் தேவி அஞ்சினேன் என்று ஏத்தி - அங்ஙனம் அத் தெய்வம் வந்தக்கால் கோப்பெருந்தேவியே இந் நகரத்திற்கு இன்னும் எத்தகைய கேடு சூழுமோ என்று அடிச்சி பெரிதும் அஞ்சிக் கிடக்கின்றேன் என்று சொல்லிப் பின்னும் அரசியைத் தொழுது வாழ்த்தி; என்க.

(வி - ம்.) அது - கடல் வயிறு புகுவது. இந்திர சாபமும் உண்டாகலின் எனல் வேண்டிய எச்சவும்மை தொக்கது; செய்யுள் விகாரம். ஆங்குப் பதி - அவ்வாறு இந் நகரம் என்க. ஈங்குப்பதி - ஈங்கு நிலை பெற்றிருக்கின்ற அரசு; காசு - குற்றம். வாசவன் - இந்திரன். மாதவன் - சாரணன். மாநகர் - நகர்வாழ் மாந்தர்: ஆகு பெயர் கலக்கு - கலங்குதல் தன் பெயர் மடந்தை - மணிமேகலை. தெய்வம் - மணிமேகலா தெய்வம், முன்னர்க் கடிய சாபமிட்ட அத் தெய்வம் சினந்து வருமாயின் இன்னும் பெரிய கேடு சூழ்ந்து விடக்கூடும் என்று யான் அஞ்சுகின்றேன், என்று மணிமேகலையைச் சிறைவீடு செய்யக்கருதிச் சித்திராபதி அரசியை அச்சுறுத்துதலும் அத் தெய்வம் எங்கும் போய் விடவில்லை அது பேராற்றலுடையது என்பாள் மன்பெரும் தெய்வம் என்பதும், அத் தெய்வம் வருதலுக்கு ஏதுக்காட்டுவாள் தன் பெயர் மடந்தை துயருறுமாயின் வருதலும் உண்டு என்பதும் பெரிதும் நுணுக்கமுடையன ஆதல் உணர்க. இங்ஙனம் அச்சுறுத்தற்கே மணிமேகலை சாபமிட்டிருக்கின்ற செய்தியை வலிந்து ஈங்கு அரசிக்குக் கூறுதலும் நினையுமிடத்தே கம்பருடைய கொடு மனக் கூனியும் நம்மகத்தே வந்து தோன்றுகின்றனள்.

## சித்திராபதி மணிமேகலையைத் தன்பால் தருக எனலும் அரசி மறுத்துரைத்தலும்

### எ௫ - அ௨ : நன்மனம்.........சொல்வுழி

(இ - ள்.) நன்மனம் பிறந்த நாடகக் கணிகைதனை என் மனைத் தருக என - இப்பொழுது தனது பட்டறிவு காரணமாக அறியாமை நீங்கி நல்லுளம் தோன்றியிருக்கின்ற நாடகக் கணிகையாகிய மணிமேகலையை யான் என்னில்லத்திற்கு அழைத்துப் போகும்படி தந்தருளுக என்று சொல்லி நயம்பட வேண்டிய சித்திராபதியை நோக்கி; இராசமாதேவி - அக் கோப்பெருந்தேவி கூறுபவள் :—ஏடி சித்திராபதி; கள்ளும் பொய்யும் காமமும் கொலையும் உள்ளக் களவும் என்று உரவோர் துறந்தவை-கள்ளுண்ணலும் பொய் கூறுதலும் காமமாடுதலும் கொலை செய்தலும் உள்ளத்தின்கண் பிறர் பொருளைக் களவு செய்யக் கருதுதலும் என்னும் இத் தீவினைகள் ஐந்தும அறிஞர்களால் விலக்கப்பட்டவையாம்; தலைமையாக் கொண்ட நின் தலைமை இல் வாழ்க்கை - இவற்றையே முதன்மையாகக் கொண்டு ஒழுகுகின்ற நின்னுடைய கடைப்பட்ட வாழ்க்கை

மானது; புலைமை என்று அஞ்சி போந்த பூங்கொடி - புலைத் தன்மையுடையது என்று அதனை அஞ்சி நன்னெறியிலே ஒழுகு கின்ற பூங்கொடி போல்பவளாகிய மணிமேகலை; நின்னொடு போந்து நின்மனைப் புகுதாள் - இனி நின்னோடு வந்து நின் இல்லத்திலே புகுதற்கு உடன்படாள் அவள்; என்னோடு இருக்கும் என்று ஈங்கு இவை சொல் உழி - என்னோடு இவ்வுவளகத்திலேயே இருப்பாள் என்று இங்குக் கூறியவற்றை அச்சித்திராபதிக்குச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே; எனக.

(வி - ம்.) நன்மனம் பிறந்த என்றது பட்டறிவினால் இப்பொழுது மணிமேகலைக்கு நல்லுளம் பிறந்திருக்கும் என்று கூறியபடியாம். இராசமாதேவி கள் முதலியன. உரவோர் துறந்தவை என்றது மணிமேகலை தனக்குக் கூறியவற்றைத் தன்னுளம் கொண்டு கூறிய படியாம். தலைமையில் வாழ்க்கை - கடைப்பட்ட வாழ்க்கை. புலைமை - கீழ்மை. பூங்கொடி : மணிமேகலை.

"கணிகையர் வாழ்க்கை கடையே" (சிலப். ௧௧-௧௮௫)

என்பதும் காண்க.

## மணிமேகலை நிலைமையைக் கேட்ட மாதவியின் செயல்

### ௮௫ - ௯௨ : மணிமே.........வணங்க

(இ - ள்.) மணிமேகலை திறம் மாதவி கேட்டு துணி கயம் துகள் பட துளங்கியது போல் தெளியாச் சிந்தையள் - தெளிந்த மணிமேகலையின நிலைமையை மாதவி கேள்வியுற்றுத் துகள்கள் குளத்தினகண் காற்றுக் கொணர்ந்து வீசிய படுதலாலே கலங்கியது போலக் கலங்கித் தெளிவில்லாத நெஞ்சத்தையுடையளாய்; சுதமதிக்கு உரைத்து வளி எறி கொம்பின வருந்தி மெய்ந் நடுங்கி - அச்செய்தியைத் தனனுடன் இருந்த சுதமதிக்கும் சொல்லி அவளையும் அழைத்துக் கொண்டு துனபத்தால் சூறைக் காற்றால் தாக்குண்ட பூங்கொம்பு போலச் சுழன்று வருந்தி மெய் நடுங்கச் சென்று; அறவணர் அடி வீழ்ந்து ஆங்கு அவர் தம்முடன் மறவேல் மன்னவன தேவி தனபால் வர - அறவணவடிகளாருடைய அடிகளிலே வீழ்ந்து வணங்கி அவ்விடத்தே தபமோடு எழுந்த அவ்வடிகளாரோடு மூவருமாக வீர வேலையுடைய அரசனுடைய தேவியின் மாளிகைக்குச் செல்லா நிற்ப; தேவியும் ஆயமும் சித்திராபதியும் மாதவி மகளும் மாதவர்க் காண்டலும் - இராசமாதேவியும் ஆய மகளிரும் அங்கிருந்த சித்திராபதியும் மணிமேகலையும்

அறவணவடிகளாருடைய வரவு கண்டவுடன்; எழுந்து எதிர்சென்று இணைவளைக் கையால் தொழுந்தகை மாதவன் துணையடி வணங்க - தத்தம் இருக்கையினின்றும் எழுந்து அவர் எதிரே சென்று இரு கைகளையும் குவித்து எல்லாராலும் தொழத்தகுந்த சிறப்புடைய பெரிய தவத்தையுடையவராகிய அவ்வறவணருடைய திருவடிகளிலே விழுந்து வணங்கா நிற்ப; என்க.

(வி - ம்.) மணிமேகலை திறம் என்றது அவள் சிறையிடப் பட்டிருத்தலை. துணிகயம் - தெளிந்த நீர் நிலை. துகள் - தூசி. துளங்கியது - துளங்கியவது என விகாரம் எய்திற்று. சுதமதியோடும் சென்று அறவணர் அடிவீழ்ந்து அவரோடு மூவருமாக என்க. ஆயம் - தோழியரும் சிலதியருமாகிய மகளிர் கூட்டம். இணைக்கை வளைக்கை எனத் தனித்தனி கூட்டுக கையால் தொழுது தொழுந்தகை மாதவன் அடி வணங்க என்க. தொழுந்தகை - எல்லாராலும் தொழத் தகுந்த சிறப்பு.

## இராசமாதேவி அடிகளாரை முகமன் கூறி வாழ்த்துதல்

### கூஙு - கoo : அறிவு........ஆண்டேன

(இ - ள்.) அறிவு உண்டாக என்று ஆங்கு அவன் கூறலும் அங்ஙனம் வணங்கியவர்களை நோக்கி நுங்களுக்கெல்லாம் மெய்யறிவு உண்டாவதாக என்று அறவணடிகளார் வாழ்த்துக் கூறா நிற்ப; இணைவளை நல்லாள் இராசமாதேவி அருந்தவர்க்கு அமைந்த ஆசனம் காட்டி இருந்து அடி விளக்கிச் சிறப்புச் செய்தபின் - பொருந்திய வளையலையுடைய நல்லாளாகிய இராசமாதேவி அரிய தவத்தையுடைய அம்முனிவருக்குப் பொருந்திய இருக்கையைக் காட்டி அதன்கண் எழுந்தருளச் செய்து அவருடைய அடிகளில் நன்னீர் பெய்து விளக்கி ஆண்டுச் செய்யக்கடவ சிறப்பெல்லாம் செய்த பின்னர் அடிகளாரை நோக்கி முகமன் கூறுபவள்; யாண்டு பல புக்க நும் இணை அடி வருந்த என காண் தகு நல்வினை நும்மை ஈங்கு அழைத்தது - அகவை யாண்டுகள் பல சென்ற இத்தகைய முதுமைக் காலத்திலே நுங்களுடைய இணைந்த திருவடி மலர்கள் நடையால் மெலிந்து வருந்தும்படி அடியேன செய்த நினைத்துக் காணத் தகுந்த நல்வினையே நும்மை இவ்விடத்திற்கு அழைத்துக் கொணர்ந்திருத்தல் வேண்டும்; நாத் தொலைவு இல்லை ஆயினும் யாக்கை தளர்ந்து மூத்தது - அடிகளுடைய அறம் கூறும் செந்நாவினது வன்மை குறைந்ததில்லை யாயினும் யாக்கை மட்டும் பெரிதும் மூத்துளது இது; பலவாண்டு வாழ்கென - பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்தா நிற்ப; என்க.

(வி - ரை.) ஒன்றற்கொன்று இணையாகிய வளையலையுடைய எனினு மாம். அருந்தவர்க்கு அமைந்த ஆசனம் - துறவோர் இருத்தற்கு எனச் சிறப்பாக அமைந்த இருக்கை. அவை மணை தருப்பை முதலியவை. என்னை?

"நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய"

(தொல். மரபி. எக)

என வரும் தொல்காப்பியத்தானும் உணர்க. இங்ஙனமே,

"அணிசெய் கோமுரை யரைகிழ லமுகனைப் பொருந்தி
மணிக டாம்பல கதிர்விடு மலருடை மணைமேற்
றுணிவு தோற்றினை யெனச்சிலர் துதியொடு தொழுது
பணிய யாதுமோர் பரிவிலன் படம்புதைத் திருந்தான்"

(நீலகேசி : சஎக)

என நீலகேசியினும் வருதலுணர்க. யாண்டு - அகவை. காண்டகு நல்வினை - நினைத்துப் பார்க்கத்தகுந்த நல்வினை; நா : ஆகுபெயர்; சொல்வன்மை. கண்டு இராசமா தேவியின் முகமன் பேரின்பம் பயத்தல் உணர்க.

## அறவணர் கூற்று

### கoக - கடுo : தேவி.........அறிகுவர்

(இ - ள்.) தேவி கேளாய் செய் தவ யாக்கையின் மேவினேன் ஆயினும் வீழ் கதிர் போன்றேன் - இராசமாதேவியே முற்பிறப்பிலே செய்த நல்வினை காரணமாக இம்மையினும் செய்தற்கியன்ற அத் தவத்திற்குப் பொருந்திய நல்லதொரு யாக்கையோடு பிறந்தேன், அங்ஙனமாயினும் யாக்கையின் முதிர்ச்சியால் மேற்றிசையில் மறைதற்கு வீழ்ச்சியுறுகின்ற ஞாயிற்று மண்டிலம் போலகின்றேன்; பிறந்தார் மூத்தார் பிணிநோய் உற்றார் இறந்தார் என்கை இயல்பே - உலகின்கண் பிறந்தனர் நாளுக்கு நாள் மூத்தனர் பின்னர்ப் பிணிக்கும் நோயினை எய்தினர் அது காரணமாக இறந்து பட்டார் என்பது நிலையாமையுடைய இவ்வுலகின் இயல்பேகாண், அது நிற்க; இதுகேள் - உயிர்க்கு உறுதி தருகின்ற இவ்வறிவுரையைக் கேட்பாயாக; பேதைமை செய்கை உணர்வு அருவுரு வாயில் ஊறு நுகர்வு வேட்கை பற்று பவம் தோற்றம் வினைப்பயன் இற்று என வகுத்த இயல்பு ஈராறும் - பேதைமையும் செய்கையும உணர்வும அருவுருவும் வாயிலும் ஊறும் நுகர்வும் வேட்கையும் பற்றும் பவமும் தோற்றமும் வினைப்பயனும் ஆகிய ஒவ்வொன்றும் இத் தன்மைத்து என்று வகுத்துக் கூறப்பட்ட இயற்கைப்

பொருளாகிய இப் பன்னிரண்டு நிதானங்களையும்; பிறந்தோர் அறியின் பெரும்பேறு அறிகுவர் அறியார் ஆயின் ஆழ் நரகு அறிகுவர் - பிறந்த மக்கள் அறிந்து கொள்வாராயின் பிறப்பினால் எய்தும் பெரிய பேறு இன்னதென்று அறிந்து கொள்வர், இவற்றை அறிந்திலாராயின் அவர் ஆழும் நரகத்தையே அறிவார் என்பது தேற்றம் என்றார்; என்க.

(வி - ம்.) செய்தவத்திற்குப் பொருந்திய நல்யாக்கையின் என்க. வீழ்கதிர் - மேற்றிசையில் வீழ்ச்சியுறுகின்ற ஞாயிறு. பிறத்தலும் மூத்தலும் பிணிநோய் உறுதலும் இறத்தலும் இவ்வுலகியல்பாகலின் அது பற்றிக் கவலுதல் வேண்டா என்பது குறிப்பு. பேதைமை முதலாக வினைப்பயன் ஈறாகக் கூறப்பட்ட பன்னிரண்டும் நிதானங்கள் எனப்படும். இவற்றின் இயல்புணர்ந்தோர் நன்னெறியில் ஒழுகி வீடு பெறுவர்; உணராதவர் தீவினைகள் செய்து நரகமே புகுவர் என்றறிவுறுத்த படியாம்.

## நிதானங்களின் இயல்பு (க) பேதைமை

### கக௨ - க௨௨: பேதைமை.........காட்டும்

(இ - ள்.) பேதைமை என்பது யாது என வினவின் - இவற்றுள் முன்னின்ற பேதைமை என்பது யாதென்று வினவினால் கூறுவன் கேள்; ஓதிய இவற்றை உணராது மயங்கி இயல் படு பொருளால் கண்டது மறந்து முயல்கோடு உண்டு என கேட்டது தெளிதல் - இங்குக் கூறப்பட்ட இந் நிதானங்கள் பன்னிரண்டையும் ஆராய்ந்து உணராமல் மயங்கி இயற்கையிலே தோன்றுகின்ற பொருள்களால் தாம் கண்கூடாகக் கண்டதனை மறந்து முயலுக்குக் கொம்புண்டென அறிவிலார் கூறியதனைக் கேட்டு அதனை உண்மையென்று துணிந்துகோடலாம்; உலகம் மூன்றினும் உயிர் ஆம் உலகம் அலகில - மேலுங் கீழும் நடுவும் ஆகிய மூவிடத்திலுமுள்ள மூன்று வகைப்பட்ட உயிரில் உலகங்களில் உயிருடைய உலகம் எண்ணிறந்தனவாம் அவையாவன; மக்களும் தேவரும் பிரமரும் நரகரும் தொக்க விலங்கும் பேயும் என்னு பல் உயிர் அறு வகைத்து ஆகும் - மக்களும் தேவரும் பிரமரும் நரகரும் ஒருங்கு தொக்க விலங்குகளும் பேயும் என விரிவகையால் எண்ணிறந்த பலவாகிய உயிர்களெல்லாம் தொகை வகையால் இந்த ஆறு வகையுள் அடங்கும்; நல்வினை தீவினை என்று இரு வகையால் சொல்லப்பட்ட கருவின் உள் தோன்றி - அவ்வுயிர்கள் நல்வினை என்றும் தீவினை என்றும் தாம் தாம் செய்கின்ற இருவகை வினை காரணமாக முன் கூறப்பட்ட மக்கள் முதலிய அறுவகைப் பிறப்பில் கருவாகிப் பிறந்து; வினைப்பயன் விளையும் காலை உயிர்கட்கு மனப்பேர் இன்பமும் கவலையும்

காட்டும் - முன் செய்த இருவகை வினைகளின் பயனும் வந்து எய்தும் காலத்தில் அவ்வுயிர்களுக்கு மனத்தின்கண் பெரிய இன்பத்தையும் பெரிய துன்பத்தையும் தோற்றுவிக்கும்; என்க.

(வி - ம்.) உலகம் மூன்று என்றது மேலும் கீழும் நடுவும் என இடவகையால் மூவகைப்படுத்தோதியபடியாம். இவற்றின் விரியைச் சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதையின்கண் உணர்க. இவை உயிரில் உலகம் ஆம். இவற்றின்கண் உயிருடையவுலகம் அளவிறந்தன என்க. அவை பிறப்பு வகையால் மக்கள் முதலிய அறுவகைப்படும் என்றவாறு. இந்த உயிருலகம் தாம்தாம் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப அறுவகைப்பட்ட பிறப்பில் தோன்றும் என்க. நல்வினை இன்பம் காட்டும் தீவினை கவலை காட்டும் என்றவாறு. இனி, உயிர்களுக்குத் துன்ப நீக்கமே குறிக்கோள் ஆதலின் துன்பத்திற்குக் காரணமான தீவினையை முதற்கண் எடுத்து, இனி விதந்து கூறுவர்.

## தீவினையின் இயல்பும் பயனும் (உ) செய்கை

### கஉ௯ - கூ௬௪ : தீவினை.........தோன்றுவர்

(இ - ள்.) தீவினை என்பது யாது என வினவின் - வினைகள் இரண்டனுள் தீவினையென்று சொல்லப்படுவது யாதென்று வினவுவாயாயின்; ஆய்தொடி நல்லாய் ஆங்கு அது கேளாய் - அழகிய வளையலணிந்த நன்மையுடைய அரசியே அங்ஙனம் கூறிய அத தீவினையை விளக்கிக் கூறுவேன் கேட்பாயாக; கொலை களவு காமத்தீவிழைவு உலையா உடம்பில் தோன்றுவ மூன்றும் - கொலை செய்தலும் களவு கொள்ளுதலும் காமமாகிய விருப்பத்தை எய்துதலும் ஆகிய கெடாத உடம்பினால் தோன்றும் தீவினைகள் மூன்றும்; பொய் குறளை கடுஞ்சொல் பயன் இல் சொல் என சொல்லின் தோன்றுவ நான்கும் - பொய் கூறுதலும் கோள் சொல்லுதலும் கேட்போர் உள்ளத்தைப் புண்படுத்தும்படி கடுஞ்சொல் கூறுதலும் பயனில்லாத சொல்லைச் சொல்லுதலும் எனச் சொல்லிலே பிறக்கின்ற தீவினைகள் நான்கும்; வெஃகல் வெகுளல் பொல்லாக்காட்சி என்று உள்ளம் தன்னில் உருப்பன மூன்றும் என - வெஃகலும் வெகுளலும் பொல்லாக் காட்சியும் என்று உள்ளத்தில் தோன்றும் தீவினைகள் மூன்றும் என்று கூறப்படுகின்ற இத் தீவினைகள்; பத்து வகையால் - பத்து வகைப்படும்; பயன் தெரி புலவர் இத் திறம் படரார் - இவற்றால் எய்தும் பயனை அறிந்துள்ள அறிவுடையோர் இத் தீய நெறியிலே ஒழுகார்; படர்குவர் ஆயின் விலங்கும் பேயும் நரகரும் ஆகி கலங்கிய உள்ளக் கவலையில் தோன்றுவர் - அங்ஙனமின்றி இத் தீவினைகளை அஞ்சாது அவற்றின் அவற்றிற்கியன்ற வழியில் செல்வாராயின்

பயனுக விலங்காகவாதல் பேயாகவாதல் நரகராகவாதல் கலங்கிய உள்ளத்தின்கண் துன்பத்தோடு தோன்றுகிற்பர் என்றார்; என்க.

(வி - ம்.) தீவினை கொலை களவு காமம் பொய் குறளை கடுஞ்சொல் பயனில்சொல் வெகுளல் பொல்லாக்காட்சி எனப் பத்துவகைப்படும். இவற்றுள் கொலை களவு காமம் ஆகிய மூன்றும் உடம்பினால் தோன்றும் தீவினை. பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என்னும் நான்கும் மொழியால் தோன்றும் தீவினை. வெஃகல் வெகுளல் பொல்லாக்காட்சி என்னும் மூன்றும் மனத்தால் தோன்றும் தீவினை என்க. காமமாகிய தீவிழைவு என்க. பிணி முதலியவற்றையுடைய உடம்பில் இவை தோன்று என்பது உணர்த்தற்கு உலையா உடம்பு என்றார். குறளை-கோள் பயனில் சொல் - அறம் பொருள் இன்பங்களுள் ஒன்றும் பயவாத சொல். வெஃகல் - விரும்புதல் வெகுளல் - சினத்தல். பொல்லாக் காட்சி - மயக்கக் காட்சி. இவை மூன்றுமே காம வெகுளி மயக்கம் எனப்படுவன.

## நல்வினையின் இயல்பும் பயனும்

### கஙரு - கசO : நல்வினை.........உண்குவர்

(இ - ள்.) நல்வினை என்பது யாது என வினவின் - நல்வினையென்று சொல்லப்படுவது யாதென்று வினவுவாயாயின்; சொல்லிய பத்தின் தொகுதி நீங்கி - முன்னே சொல்லப்பட்ட கொலை முதலிய பத்து வகைப்பட்ட தீவினைகளினின்றும் விலகி; சீலம் தாங்கி தானம் தலைநின்று - ஐந்து வகையும் பத்து வகையும் என்று கூறப்படுகின்ற நல்லொழுக்கங்களை மேற்கொண்டு தானம் முதலிய அறச் செயல்களை இடையறாது செய்து; மேல் என வகுத்த ஒரு மூன்று திறத்து தேவரும் மக்களும் பிரமரும் ஆகி மேவிய மகிழ்ச்சி வினைப்பயன உண்குவர்- உயர்ந்த பிறப்பென்று சான்றோரால் வகுத்துக் கூறப்பட்ட மூன்று வகைப் பிறப்பாகிய தேவரும் மக்களும் பிரமரும் ஆகிய பிறப்புகளை எய்தி அங்கு வந்து மகிழ்ச்சியைத் தருகின்ற அந் நல்வினைப் பயன்களைத் துய்த்து இனிதிருப்ப என்றார்; என்க.

(வி - ம்.) சொல்லிய பத்து - முன் கூறப்பட்ட தீவினைகள் பத்தும். சீலம் - ஒழுக்கம். இவை இல்லறம் துறவறம் முதலிய நிலை வேறுபாட்டால் ஐந்து வகையும் எட்டு வகையும் பத்துவகையுமாம். மேல் - உயர்ந்த பிறப்பு. வினைப்பயன் - நல்வினைப்பயன். உண்குவர் - நுகர்வர்.

## அறவணர் எழுந்து போதலும் மணிமேகலை செயலும்

### கசக - கருO : அரசன்.........உய்ம்மின்

(இ - ள்.) அரசன் தேவியொடு ஆயிழை நல்லீர் புரைதீர் நல்லறம் போற்றிக் கேண்மின் - இராசமாதேவியொடு சங்கிருத்

றின்ற மகளிர் எல்லாம் குற்றமில்லாத நல்ல அருளறத்தைப் பேணிக் கேட்டு உய்யுங்கோள் என்று சொல்லி மணிமேகலையை நோக்கி; மறுபிறப்பு உணர்ந்த மணிமேகலை - முற்பிறப்பிலே செய்த நல்வினை காரணமாக மறு பிறப்பு உணரும் திருவுடைய மணிமேகலாய்; நீ பிற அறம் கேட்ட பின் நாள் வந்து உனக்கு இத்திறம் பலவும் இவற்றின் பகுதியும் - பிற சமயக் கணக்கர் அறங்களைக் கேட்டு உணர்ந்த பின்னர் நின்பால் வந்து உனக்கு இங்குக் கூறிய தத்துவங்கள் பலவற்றையும் இவற்றின் கூறுபாடு களையும்; முத்தேர் நகையாய் முன் உறக் கூறுவல் - முத்துப் போன்ற பற்களையுடைய உன் முன்னிலையிலேயே உள்ளத்தில் பொருந்தும்படி அறிவுறுத்துவேன் காண்; என்று அவன் எழுதலும் - என்று சொல்லி அறவணர் இருக்கையினின்றும் எழா நிற்ப; இளங்கொடி எழுந்து - அது கேட்ட மணிமேகலை எழுந்து; நன்று அறி மாதவன் நல்அடி வணங்கி - நன்மையை முழுதும் உணர்ந்த பெரிய தவத்தையுடைய அவ்வறவண வடிகளாருடைய திருவடிகளில் விழுந்து வணங்கிய பின்னர் மகளிரை நோக்கிக் கூறுபவள்; தேவியும் ஆயமும் சித்திராபதியும் மாதவர் நன்மொழி மறவாது உம்மின் - இராசமாதேவியும் ஆய மகளிரும் சித்திராபதியும் ஆகிய எல்லீரும் அறவணவடிகளார் கூறுகின்ற நல்லற மொழிகளைக் கேட்டு அவற்றை மறவாமல் கடைப்பிடியாகக் கொண்டு ஒழுகி உய்யுங்கோள் என்று அறிவுறுத்த பின்னர்; என்க.

(வி - ம்.) புரை - குற்றம். நல்லறம் என்றது பௌத்தர் அறங்களை. முனிவர் எஞ்சியவறங்களை யாம் பின்னர்க் கூறுவாம் அவற்றைப் போற்றிக் கேண்மின் என்றார் எனக் கோடலுமாம். மணிமேகலைக்கு நிகழவிருக்கின்ற ஏது நிகழ்ச்சிகளைக் கருதி அவை நிகழ்ந்த பின்னர்க் காஞ்சியினிடத்தே நின்பால் வந்து அறம் கூறுவேம் என்பது கருத்தாகக் கொள்க. பிறவறம் - பிற சமயக் கணக்கர் அறங்கள். நகையாய் முன் - நகையையுடைய உன் முன்னிலையிலே. அவன் : அறவணவடிகள். நன்றறி - நல்லறத்தை அறிந்த.

## மணிமேகலை அம் மகளிர்பால் விடை பெறுதல்

### ௧௫௧ - ௧௬௦ : இந்நகர்.........போகி

(இ - ள்.) இந் நகர் மருங்கின் யான் உறைவேன் ஆயின் மன்னவன் மகற்கு இவள் வரும் கூற்று என்குவர் - அன்புடையீரே! இன்னொன்று கேண்மின்! இப் பூம்புகார் நகரத்தில் யான் தங்கியிருப்பேனாயின் வேந்தன் மகனுக்கு இவள் கொல்ல வருகின்ற கூற்றுவன் ஆயினள் என்று என்னை மாந்தர் பலரும் இகழ்வர் ஆதலால் யான் இங்கிருக்க நினைகிலேன்;

ஆபுத்திரன் நாடு அடைந்த பின் நாள் - அறவோனாகிய ஆபுத்திரன் மாறிப் பிறந்திருக்கின்ற சாவக நாட்டிலே சென்று அவனோடளவளாவிய பின்னர்; மாசு இல் மணிபல்லவம் தொழுது ஏத்தி - குற்றமில்லாத மணிபல்லவத்திற்குச் சென்று அங்குப் புத்த பீடிகையைக் கைதொழுது வணங்கிய பின்னர்; மாபத்தினி தனக்கு வஞ்சியுள் புக்கு - என் அன்னையாகிய வீர மாபத்தினித் தெய்வத்தைக் கண்டு அடி வணங்குதல் பொருட்டு வஞ்சி மாநகரத்திலே புகுந்து வணங்கிய பின்னர்; யாங்கணும் எஞ்சா நல் அறம் செய்குவல் - எவ்விடத்தும் சென்று வீழ்நாள் படாமல் உயர்ந்த அறத்தைச் செய்வேன், இஃது என் உட்கோள்; மனக்கினியீர் எனக்கு இடர் உண்டு என்று இரங்கல் வேண்டா என்று அவரையும் வணங்கி - என் உளத்திற்கு இனிய அன்பர்களே யான் எங்குச் செல்லினும் எனக்கு யாதொரு துன்பமும் கெழுமாட்டாது ஆதலால் எனக்குத் துன்பம் உண்டாகுமோவென்று நீவிர் கவலுதல் வேண்டா என்று தேற்றுரை கூறி இராசமாதேவியும் மாதவியும் சுதமதியும் முதலிய வணங்குதற்குரியவரையும் வணங்கி; வெந்து ஆறு பொன்போல் வீழ்கதிர் மறைந்த அந்தி மாலை ஆயிழை போகி - உலையின்கண் தீயில் வெந்து ஆறிய பொன்னைப்போல மிளிர்ந்து மேற்றிசையிலே வீழுகின்ற ஞாயிறு மறைந்துபோன அந்திமாலைப் பொழுதின்கண் மணிமேகலை அவர்கள்பால் விடை பெற்றுச் சென்று என்க.

(வி - ம்.) கண்டோரெல்லாம் பழி தூற்றப்பட்டு இவ்வூரில் வாழ்வதைவிட இவ்வூரை விட்டுப் போதலே நன்று என்றவாறு.

"தோன்றில் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலில் தோன்றாமை நன்று' (குறள் - ௨௩௬)

எனவரும் திருக்குறளும் ஈண்டு நினையற்பாலது. ஆபுத்திரனொடென்றது, சாவகநாட்டினை. மாபத்தினி தனக்கு வஞ்சியுள் புக்கு என மாறுக. பத்தினியை வணங்குதல் பொருட்டு என்பது கருத்தாகக் கொள்க. எஞ்சாநல்லறம் - வீழ்நாள்படாது செய்யும் நல்லறம். செய்தவமும் தெய்வக்காவலும் எனக்குண்மையின் இடருண்டு என்று இரங்கல் வேண்டா என்றாள் என்க. மனக்கு - மனத்திற்கு. அவரை என்றது இராசமாதேவியையும், தாயரையும். வெந்து ஆறு பொன் வீழும் ஞாயிற்றுக்குவமை "வெந்தாறு பொன்னின் அந்தி பூப்ப" (அகம் : ௭௧) என்பதும் காண்க. வெந்துறு பொன் என்றும் பாடம்.

## மணிமேகலை வான்வழியே பறந்து ஆபுத்திரனுடைதல்

௧௬௧ - ௧௬௮ : உலக..........கூறும்

(இ - ள்.) உலக அறவியும் முதியாள் குடிகையும் இலகு ஒளிக் கந்தமும் ஏத்தி வலம் கொண்டு அந்தரம் ஆறாப் பறந்து

சென்று ஆயிழை - ஊரம்பலத்தையும் சம்பாபதியின் திருக் கோயிலையும் விளங்குகின்ற ஒளியையுடைய கந்திற் பாவையையும் கைதொழுதேத்தி வான் வழியாகப் பறந்து போய் அம் மணிமேகலை; இந்திரன் மருமான் இரும்பதிப் புறத்து ஓர் பூம்பொழில் அகவயின் இழிந்து பொறை உயிர்த்து - இந்திரனுடைய வழித் தோன்றலாகிய புண்ணியராசனுடைய பெரிய நகரத்தின் பக்கத்தே யமைந்த பூம்பொழிலினுள்ளே இறங்கி இளைப்பாறி; ஆங்கு வாழ் மாதவன் அடி இணை வணங்கி - அப் பூம்பொழிலின்கண் வாழுகின்ற துறவோன் ஒருவனைக் கண்டு அவன அடிகளிலே வீழ்ந்து வணங்கி; இந் நகர் பேர் யாது இந் நகர் ஆளும் மன்னவன் யார் என மாதவன் கூறும் - அடிகளே இந் நகரின் பெயர் யாது? இந்த நகரத்தை ஆளும் அரசன் யார்? என்று வினவ அத் துறவோன் சொல்லுவான்; என்க.

(வி - ம்.) உலக அறவி - ஊரம்பலம். ஆண்டுத் துறவோர் சங்கமிருத்தலின் தொழுதாள் என்க. முதியாள் குடிகை - சம்பாபதி கோயில். கந்தம் - தூண். கந்திற்பாவை என்க. ஆருக என்பதன் ஈறு தொக்கது. ஆயிழை : மணிமேகலை. இந்திரன் மருமான் என்றது புண்ணியராசனை; மருமான்-வழித்தோன்றல். பொறை உயிர்த்து - இளைப்பாறி.

### அத்துறவோன் கூற்று

### ௧௬௯ - ௧௭௬ : நாக.........தானேன்

(இ - ள்.) நகைமலர் பூம்பொழில் அருந்தவன் - விளங்குகின்ற அம் மலர்ப் பூம்பொழிலில் உறைகின்ற அரிய தவத்தையுடைய அத் துறவோன்; இது நாகபுரம் நல்நகர் ஆள்வோன் பூமி சந்திரன் மகன் புண்ணியராசன் – இந் நகரத்தின் பெயர் நாகபுரமென்பது இந்த அழகிய நகரத்தை யாள்பவன் பூமி சந்திரன் என்னும் மன்னன் மகனாகிய புண்ணியராசன் என்பவன் ஆவான்; ஈங்கு இவன் பிறந்த அ நாள் தொட்டு ஓங்கு உயர் வானத்துப் பெயல் பிழைப்பு அறியாது - இந் நாட்டின்கண் இப் புண்ணியராசன் பிறந்த அந்த நாளிலிருந்து மிகவும் உயர்ந்த வானத்தினின்றும் மழை பெய்தல் தவறுதல் அறியாது; மண்ணும் மரனும் வளம்பல தரூஉம் - நிலமும் மரங்களும் தாம் வழங்குகின்ற வளங்கள் பலவற்றையும் குறைவின்றித் தருகின்றன ஆதலால்; உயிர்க்கு உள் நின்று உருக்கும் நோய் இல் என - உயிரினங்களுக்கு உடம்பினுள்ளிருந்து மெலிவிக்கின்ற பசி முதலிய நோய் சிறிதுமில்லை என்று; தகை மலர்த் தாரோன் தன் திறம் கூறினன் - அழகிய மலர் மாலையணிந்த

புண்ணியராசனுடைய பெருமையை விதந்தெடுத்து விளக்கினன்; என்பதாம்.

(வி - ம்.) இது நாகபுரம் என மாறுக. இந்நன்னகர் எனச் சுட்டுச் சொல் பெய்துரைக்க. பெயல் - மழை. மரன், மகரத்திற்கு னகரம் போலி. தாரோன் : புண்ணியராசன். திறம் - பெருமை. அகைமலர் எனக் கண்ணழித்துக் கோடலுமாம்.

இனி, இக் காதையை, கணிகைகேட்டு வருந்தி, வீழ்ந்து, ஏத்தி, தருக என இராசமாதேவி இவை சொல்வுழி மாதவி அடிகளுடன் வரக் காண்டலும் வணங்க அவன் அறிவுண்டாக என்று கூறலும் இராசமா தேவி ஆசனங்காட்டி விளக்கி வாழ்க என, தேவி கேளாய் நல்லீர் கேண்மின் மணிமேகலை முன்னுறக் கூறுவல் என்று எழுதலும் இளங் கொடி எழுந்து வணங்கி என்று வணங்கிப்போகி ஏத்திச் சென்று இழிந்து உயிர்த்து வணங்கி யாது யார் என அருந்தவன் தாரோன் தன் திறம் கூறினன் என இயைத்துக் கொள்க.

ஆபுத்திரனுடைந்த காதை முற்றிற்று.

# உரு. ஆபுத்திரனோடு மணிபல்லவ மடைந்த காதை

[மணிமேகலை ஆபுத்திரனை மணிபல்லவத்திடை யழைத்துப் புத்த பீடிகை காட்டிப் பிறப்புணர்த்தி வஞ்சிமாநகர் புக்க பாட்டு.]

அஃதாவது—மணிமேகலை ஆபுத்திரன் மாறிப் பிறந்து புண்ணியராசன் என்னும் பெயரோடிருந்தவனைக் கண்டு உன் கையிலிருந்த பாத்திரமே என் கையை யடைந்தது. நீ முற்பிறப்பில் செய்த நல்வினையின் பயனாகவே இப்பிறப்பில் அரசனாயினை. அச் செல்வத்தால் அறிவு மயங்கினை, நீ இப் பிறப்பில் பசு வயிற்றில் பிறந்தாய்; அதனையும் அறிந்திலை. நீ மணிபல்லவத்திற்குச் சென்று புத்த பீடிகையைத் தொழுதாலன்றி உனது பழம் பிறப்பை அறியாய் என்று சொல்லி விட்டு மீண்டும் வான் வழியே பறந்து மணிபல்லவத்தில் இறங்கிப் புத்த பீடிகையைத் தொழுத செய்தியையும் மணிமேகலையின் சொற்கேட்டுப் புண்ணியராசனாகிய ஆபுத்திரனும் அரசாட்சியை அமைச்சன்பால் ஒப்புவித்து விட்டு மரக்கலம் ஏறி மணிபல்லவத்தை யடைந்த செய்தியும் அங்கு நிகழ்ந்த பிற நிகழ்ச்சிகளும் கூறும் செய்யுள் என்றவாறு.

இனி, இதன்கண் சாவக நாட்டின்கண் தருமசாவகன் என்பான் மணிமேகலையின் சிறப்பெல்லாம் புண்ணியராசனுக்குக் கூறுதலும் மணிமேகலை அவ்வரசனுக்குச் செல்வமுடைமையால் நீ அறிவு மயங்கினை. நீ மணிபல்லவம் வலங்கொண்டாலல்லது பிணிப்புறு பிறவியின் பெற்றியை யறியாய் ஆதலின் அரசனே நீ ஆங்கு வருதி என்று சொல்லிவிட்டு வானிலே பறந்து மணிபல்லவத்தில் வந்திறங்கி அங்குத் தன் முற்பிறப்பினை யுணர்ந்து கூறுவனவும் சாவக நாட்டில் புண்ணியராசன் தன் அமைச்சனுக்குக் கூறும் செய்திகளும் அமைச்சன் அவனுக்குக் கூறும் மாற்றங்களும் புண்ணியராசன் மரக்கலம் ஏறி மணிபல்லவத்திற்கு வருதலும் மணிமேகலை அவனை யழைத்துச் சென்று தீவகம் வலம் செய்து தரும பீடிகையைக் காட்டுதலும் அவன் தரும பீடிகையை வலங்கொண்டு வணங்கியவுடனே அப்பீடிகை கையகத் தெடுத்துக் காண்போர் முகத்தைக் கண்ணாடி மண்டிலம் காட்டுவதுபோல அவனுடைய முற்பிறப்பினைக் காட்டுதலும் முற்பிறப்புணர்ந்த அவ்வரசன் தனக்கு அமுத சுரபி ஈந்த சிந்தா

தேவியை வாழ்த்திப் புகழ்தலும் பின்னர் முற்பிறப்பிலே இறந்து போன தன் எலும்புக் கூட்டைக் கண்டு மயங்குதலும் அவன் இறந்தமையால் அவன்பால் அன்புடைய ஒன்பது செட்டிகள் அங்கு வந்து உயிர் நீத்தவர்களுடைய எலும்புக் கூடுகளையும் கண்டு மயங்குதலும் பின்னர் மணிமேகலை அவ்வரசனுக்கு அறங் கூறுதலும் நீ மரக்கலம் ஏறி உன்னாட்டிற்குச் செல்லுதி என்று போக்கிய பின்னர் வஞ்சிமாநகர் நோக்கி வானத்து எழுந்து பறந்து போதலும் பிறவும் பெரிதும் சுவை கெழுமச் சொல்லப் பட்டிருக்கின்றன.

அரச னுரிமையோ டப்பொழில் புகுந்து
தரும சாவகன் றன்னடி வணங்கி
அறனு மறனும் அநித்தமு நித்தத்
திறனுந் துக்கமுஞ் செல்லுயிர்ப் புக்கிலும்
சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியும்
ஆரிய னமைதியு மமைவுறக் கேட்டுப்
பெண்ணிணை யில்லாப் பெருவனப் புற்றாள்
கண்ணிணை யியக்கமுங் காமனோ டியங்கா
அங்கையிற் பாத்திரங் கொண்டறங் கேட்கும்
இங்கிணை யில்லாள் இவள்யா ரென்னக்
காவலற் றொழுது கஞ்சுக னுரைப்போன்
நாவலந் தீவிநி நங்கையை யொப்பார்
யாவரு மில்லை யிவள்திற மெல்லாம்
கிள்ளி வளவனொடு கெழுதகை வேண்டிக்
கள்ளவிழ் தாரோய் கலத்தொடும் போகிக்
காவிரிப் படப்பை நன்னகர் புக்கேன்
மாதவ னறவணன் இவள்பிறப் புணர்ந்தாங்
கோதின னென்றியா னன்றே யுரைத்தேன்
ஆங்கவ ளிவளவ் வகனகர் நீங்கி
ஈங்கு வந்தன ளென்றலு மிளங்கொடி
நின்கைப் பாத்திர மென்கைப் புகுந்தது
மன்பெருஞ் செல்வத்து மயங்கினை யறியாய்
அப்பிறப் பறிந்திலை யாயினு மாவயிற்
றிப்பிறப் பறிந்திலை யென்செய் தனையோ
மணிப்பல் லவம்வலங் கொண்டா லல்லது
பிணிப்புறு பிறவியின் பெற்றியை யறியாய்
ஆங்கு வருவாய் அரசநீ யென்றப்
பூங்கமழ் தாரோன் முன்னர்ப் புகன்று
மையறு விசும்பின் மடக்கொடி யெழுந்து
வெய்யவன் குடபால் வீழா முன்னர்

வானின் றிழிந்து மறிதிரை யுலாவும்
பூநா றடைகரை யெங்கணும் போகி
மணிப்பல் லவம்வலங் கொண்டு மடக்கொடி
பிணிப்பறு மாதவன் பீடிகை காண்டலும்
தொழுதுவலங் கொள்ளவத் தூமணிப் பீடிகைப்
பழுதில் காட்சி நன்பிறப் புணர்த்தக்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரை
மாயமின் மாதவன் றன்னடி பணிந்து
தருமங் கேட்டுத் தாள்தொழு தேத்திப்
பெருமகன் றன்னொடும் பெயர்வோர்க் கெல்லாம்
விலங்கு நரகரும் பேய்களு மாக்கும்
கலங்கஞர்த் தீவினை கடிமின் கடிந்தால்
தேவரும் மக்களும் பிரமரு மாகுதிர்
ஆகலி னல்வினை யயரா தோம்புமின்
புலவன் முழுதும் பொய்யின் றுணர்ந்தோன்
உலகுயக் கோடற் கொருவன் றோன்றும்
அந்நா ளவனறங் கேட்டோ ரல்லது
இன்னாப் பிறவி யிழுக்குந ரில்லை
மாற்றருங் கூற்றம் வருவதன் முன்னம்
போற்றுமி னறமெனச் சாற்றிக் காட்டி
நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்தீர்
அவ்வுரை கேட்டு நும் மடிதொழு தேத்த
வெவ்வுரை யெங்கட்கு விளம்பினி ராதலின்
பெரியவன் றோன்று முன்னரிப் பீடிகை
கரியவ னிட்ட காரணந் தானும்
மன்பெரும் பீடிகை மாய்ந்துயிர் நீங்கிய
என்பிறப் புணர்த்தலு மென்னென் றியான்தொழ
முற்ற வுணர்ந்த முதல்வனை யல்லது
மற்றப் பீடிகை தன்மிசைப் பொறாஅது
பீடிகை பொறுத்த பின்ன ரல்லது
வானவன் வணங்கான் மற்றவ் வானவன்
பெருமகற் கமைத்துப் பிறந்தார் பிறவியைத்
தரும பீடிகை சாற்றுக வென்றே
அருளின னாதலி னாயிழை பிறவியும்
இருளறக் காட்டு மென்றெடுத் துரைத்த
தன்றே போன்ற தருந்தவர் வாய்மொழி
இன்றெனக் கென்றே யேத்தி வலங்கொண்டு
ஈங்கிவ ளின்னண மாக விறைவனும்
ஆங்கப் பொழில்விட் டகநகர் புக்குத்
தந்தை முனியாத் தாய்பசு வாக

வந்த பிறவியு மாமுனி யருளால்
சுடர்த்தொடர் மாலை சூழா தாங்கோர்
அடர்ப்பொன் முட்டையு ளடங்கிய வண்ணமும்
மாமுனி யருளான் மக்களை யில்லோன்
பூமிசந் திரன்கொடு போந்த வண்ணமும்
ஆய்தொடி யரிவை யமரசுந் தரியெனும்
தாய்வாய்க் கேட்டுத் தாழ்துய ரெய்தி
இறந்த பிறவியின் யாய்செய் ததூஉம்
பிறந்த பிறவியின் பெற்றியு நினைந்து
செருவேன் மன்னர் செவ்வி பார்த் துணங்க
அரைசுவீற் றிருந்து புரையோர்ப் பேணி
நாடகங் கண்டு பாடற் பான்மையில்
கேள்வி யின்னிசை கேட்டுத் தேவியர்
ஊடற் செவ்வி பார்த்துநீ டாது
பாடகத் தாமரைச் சீறடி பணிந்து
தேமரு கொங்கையிற் குங்கும மெழுதி
அங்கையிற் றுறுமலர் சுரிகுழற் சூட்டி
நறுமுகை யமிழ்துறூஉந் திருநகை யருந்தி
மதிமுகக் கருங்கட் செங்கடை கலக்கக்
கருப்பு வில்லி யருப்புக்கணை தூவத்
தருக்கிய காமக் கள்ளாட் டிகழ்ந்து
தூவறத் துறத்தல் நன்றெனச் சாற்றித்
தெளிந்த நாதனென் செவிமுத லிட்டவித்
தேத மின்றா யின்று விளைந்தது
மணிமே கலைதான் காரண மாகவென்
றணிமணி நீண்முடி யரசன் கூற
மனம்வே றாயினன் மன்னென மந்திரி
சனமித் திரனவன் தாள்தொழு தேத்தி
எங்கோ வாழி யென்சொற் கேண்மதி
நுங்கோ னுன்னைப் பெறுவதன் முன்னாள்
பன்னீ ராண்டிப் பதிகெழு நன்னாடு
மன்னுயிர் மடிய மழைவளங் கரந்தீங்
கீன்றாள் குழவிக் கிரங்கா ளாகித்
தான்றனி தின்னுந் தகைமைய தாயது
காய்வெங் கோடையிற் கார்தோன் றியதென
நீதோன் றினையே நிரைத்தா ரண்ணல்
தோன்றிய பின்னர்த் தோன்றிய வுயிர்கட்கு
வானம் பொய்யாது மண்வளம் பிழையாது
ஊனுடை யுயிர்க ளுறுபசி யறியா
நீயொழி காலை நின்னா டெல்லாம்

தாயொழி குழவி போலக் கூஉம்
துயர்நிலை யுலகங் காத்த லின்றிநீ
உயர்நிலை யுலகம் வேட்டனை யாயின்
இறுதி யுயிர்க ளெய்தவு மிறைவ
பெறுதி விரும்பினை யாகுவை யன்றே
தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு
மன்னுயிர் முதல்வ னறமுமீ தன்றால்
மதிமா றோர்ந்தனை மன்னவ வென்றே
முதுமொழி கூற முதல்வன் கேட்டு
மணிபல் லவமலங் கொள்வதற் கெழுந்த
தணியா வேட்கை தணித்தற் கரிதால்
அரசு முரிமையு மகநகர்ச் சுற்றமும்
ஒருமதி யெல்லை காத்தனின் கடனெனக்
கலஞ்செய் கம்மியர் வருகெனக் கூஉய்
இலங்குநீர் புணரி யெறிகரை யெய்தி
வங்க மேறினன் மணிபல் லவத்திடைத்
தங்கா தக்கலஞ் சென்றுசார்ந் திறுத்தலும்
புரைதீர் காட்சிப் பூங்கொடி பொருந்தி
அரைசன் கலமென் றகமகிழ் வெய்திக்
காவலன் றன்னொடுங் கடற்றிரை யுலாவும்
தேமலர்ச் சோலைத் தீவகம் வலஞ்செய்து
பெருமகன் காணாய் பிறப்புணர் விக்குந்
தரும பீடிகை யிதுவெனக் காட்ட
வலங்கொண் டேத்தினன் மன்னவன் மன்னவற்
குலந்த பிறவியை யுயர்மணிப் பீடிகை
கையகத் தெடுத்துக் காண்போர் முகத்தை
மையறு மண்டிலம் போலக் காட்ட
என்பிறப் பறிந்தே னென்னிடர் தீர்ந்தேன்
தென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்
மாரி நடுநாள் வயிறுகாய் பசியால்
ஆரிரு ளஞ்சா தம்பல மணைந்தாங்
கிரந்தூண் வாழ்க்கை யென்பால் வந்தோர்க்
கருந்தூண் காணா தழுங்குவேன் கையின்
நாடுவறங் கூரினு மிவ்வோடுவறங் கூரா
தேடா வழிய லெழுந்திது கொள்கென
அமுத சுரபி யங்கையிற் றந்தென்
பவமறு வித்த வானோர் பாவாய்
உணர்விற் றோன்றி யுரைப்பொரு ளுணர்த்தும்
அணிதிக ழவிரொளி மடந்தை நின்னடி
தேவ ராயினும் பிரம ராயினும்

நாமாசு கழூஉ நலங்கிளர் திருந்தடி
பிறந்த பிறவிகள் பேணா தல்லது
மறந்து வாழேன் மடந்தையென் றேத்தி
மன்னவன் மணிமே கலையுட னெழுந்து
தென்மேற் காகச் சென்று திரையுலாங்
கோமுகி யென்னும் பொய்கையின் கரையோர்
தூமலர்ப் புன்னைத் துறைநிழ லிருப்ப
ஆபுத் திரனோ டாயிழை யிருந்தது
காவற் றெய்வதங் கண்டுவந் தெய்தி
அருந்துயிர் மருந்துமுன் னங்கையிற் கொண்டு
பெருந்துயர் தீர்த்தவப் பெரியோய் வந்தனை
அந்நாள் நின்னை யயர்த்துப் போயினர்
பின்னாள் வந்துநின் பெற்றிமை நோக்கி
நின்குறி யிருந்து தம்முயிர் நீத்தோர்
ஒன்பது செட்டிக ளுடலென் பிவைகாண்
ஆங்கவ ரிடவுண் டவருடன் வந்தோர்
ஏங்கிமெய் வைத்தோ ரென்பு மிவைகாண்
ஊர்திரை தொகுத்த வுயர்மணல் புதைப்ப
ஆய்மலர்ப் புன்னை யணிநிழற் கீழால்
அன்புடை யாருயி ராசற் கருளிய
என்புடை யாக்கை யிருந்தது காணாய்
நின்னுயிர் கொன்றாய் நின்னுயிர்க் கிரங்கிப்
பின்னாள் வந்த பிறருயிர் கொன்றாய்
கொலைவ னல்லையோ கொற்றவ னாயினை
பலர்தொழு பாத்திரங் கையி னேந்திய
மடவரல் நல்லாய் நின்றன் மாநகர்
கடல்வயிறு புக்கது காரணங் கேளாய்
நாக நன்னா டாள்வோன் றன்மகள்
பீலிவளை யென்பாள் பெண்டிரின் மிக்கோள்
பனிப்பகை வானவன் வழியிற் றோன்றிய
புனிற்றிளங் குழவியொடு பூங்கொடி பொருந்தித்
தீவகம் வலஞ்செய்து தேவர்கோ னிட்ட
மாபெரும் பீடிகை வலங்கொண் டேத்துழிக்
கம்பளச் செட்டி கலம்வந் திறுப்ப
அங்கவன் பாற்சென் றவன்றிற மறிந்து
கொற்றவன் மகனிவன் கொள்கெனக் கொடுத்தலும்
பெற்ற வுவகையன் பெருமகிழ் வெய்திப்
பழுதில் காட்சிப் பைந்தொடி புதல்வனைத்
தொழுதனன் வாங்கித் துறைபிறக் கொழியக்
கலங்கொண்டு பெயர்ந்த வன்றே காரிருள்

இலங்குநீ ரடைகரை யக்கலங் கெட்டது
கெடுகல மாக்கள் புதல்வனைக் கெடுத்தது
வடிவேற் கிள்ளி மன்னனுக் குரைப்ப
மன்னவன் மகனுக் குற்றது பொறாஅன்
நன்மணி யிழந்த நாகம் போன்று
கானலுங் கடலுங் கரையுந் தேர்வுழி
வானவன் விழாக்கோள் மாநக ரொழிந்தது
மணிமே கலாதெய்வம் மற்றது பொறாஅள்
அணிநகர் தன்னை யலைகடல் கொள்கென
விட்டனள் சாபம் பட்ட திதுவால்
கடவுண் மாநகர் கடல்கொளப் பெயர்ந்த
வடிவேற் றடக்கை வானவன் போல
விரிதிரை வந்து வியனகர் விழுங்க
ஒருதனி போயின னுலக மன்னவன்
அருந்தவன் றன்னுட னாயிழை தாயரும்
வருந்தா தேகி வஞ்சியுட் புக்கனர்
பரப்புநீர்ப் பௌவம் பலர்தொழக் காப்போள்
உரைத்தன கேட்க வுருகுவை யாயினின்
மன்னுயிர் முதல்வனை மணிமே கலாதெய்வம்
முன்னா ளெடுத்தது மந்நா ளாங்கவன்
அறவர சாண்டது மறவணன் தன்பால்
மறுபிறப் பாட்டி வஞ்சியுட் கேட்பை யென்
றந்தரத் தீவகத் தருந்தெய்வம் போயபின்
மன்னவ னிரங்கி மணிமே கலையுடன்
துன்னிய தூமண லகழத் தோன்றி
ஊன்பிணி யவிழவு முடலென் பொடுங்கித்
தான்பிணி யவிழாத் தகைமைய தாகி
வெண்சுதை வேய்ந்தவ ணிருக்கையி னிருந்த
பண்புகொள் யாக்கையின் படிவ நோக்கி
மன்னவன் மயங்க மணிமே கலையெழுந்து
என்னுற் றனையோ விலங்கிதழ்த் தாரோய்
நின்னு டைந்தியான் நின்னையீங் கழைத்தது
மன்னு நின்றன் மறுபிறப் புணர்த்தி
அந்தரத் தீவினு மகன்பெருந் தீவினும்
நின்பெயர் நிறுத்த நீணில மாளும்
அரசர் தாமே யருளறம் பூண்டால்
பொருளு முண்டோ பிறபுரை தீர்த்தற்கு
அறமெனப் படுவ தியாதெனக் கேட்பின்
மறவா திதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியு முடையு முறையுளு மல்லது

கண்ட தில்லெனக் காவல னுரைக்கும்
என்னுட் டாயினும் பிறர்நாட் டாயினும்
தன்னுத லுரைத்த நல்லறஞ் செய்கேன்
என்பிறப் புணர்த்தி யென்னை நீ படைத்தனை
நின்றிறம் நீங்க லாற்றேன் யானெனப்
புன்கண் கொள்ளனீ போந்ததற் கிரங்கிநின்
மன்பெரு நாடு வாயெடுத் தழைக்கும்
வங்கத் தேகுதி வஞ்சியுட் செல்வனென்
றந்தரத் தெழுந்தன ளணியிழை தானென்

---

## ௨௫. ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்த காதை

### உரை

**சாவக நாட்டு மன்னன் தேவியோடு அம் முனிவனை வணங்க வந்தவன் மணிமேகலையைக் கண்டு இவள் யாரென்று வினவுதல்**

௧ - ௧௦ : அரசன்.........என்ன

(இ - ள்.) அரசன் உரிமையோடு அப் பொழில் புகுந்து தருமசாவகனை தன் அடி வணங்கி - நாகபுரத்து மன்னனாகிய புண்ணியராசனை தன் கோப்பெருந் தேவியோடு மணிமேகலை இறங்கியிருந்த அந்தப் பூம்பொழிலிலே சென்று அங்கு மணிமேகலைக்கு அறங்கூறிக் கொண்டிருந்த தருமசாவகன் என்னும் அத் துறவோனுடைய திருவடிகளிலே விழுந்து வணங்கி அம் முனிவன் மணிமேகலைக்கு அறிவுறுத்துபவனை; அறனும் மறனும் அநித்தமும் நித்தத் திறனும் துக்கமும் செல் உயிர் புக்கிலும் - நல்வினையின் வகையும் தீவினையின் வகையும் நிலையில்லாத பொருள்களி னியல்பும் நிலையுதலுடைய பொருளியல்பும் துன்பம் முதலிய வாய்மையினியல்பும் இறந்துபோம் உயிர்கள் புகுமிடமும்; சார்பின் தோற்றமும் சார்பு அறுத்து உய்தியும் ஆரிய அமைதியும் அமைவுறக் கேட்டு - பன்னிரு நிதானங்களாலே உண்டாகும் பிறப்பும் அப் பிறப்பறுத்து வீடுபெறும் உய்யும் வகையும் இவற்றை ஓதாதுணர்ந்து உலகிற்குக் கூறிய புத்த பெருமானுடைய இயல்பும் உள்ளத்தில் பதியுமாறு கேட்டு; பெண் இணை இல்லா பெருவனப்பு உற்றாள் காமனோடு இயங்கா கண் இணை இயக்கமும் - இவ்வுலகில் உள்ள பெண்களுள் வைத்து யாரும் தனக்குவமையில்லாத பேரழகு படைத்தவளும் ஆசையின் வழியியங்காத அவளுடைய கண்களின் அருள் நோக்கமும் நேரிலே கண்ட அப் புண்ணியராசனானவன்; அம் கையில பாத்திரம் கொண்டு அறம் கேட்கும் இங்கு இணை இல்லாள் இவள் யார் என்ன - பெரிதும் வியந்து அழகிய தன் கையில் பிச்சைப் பாத்திரத்தை ஏந்திக்கொண்டு அறங்கேட்கின்ற இங்கு நிற்கும் ஒப்பற்ற இந் நங்கை யாவளோ என்று வினவ; என்க.

(வி - ம்.) அரசன் : புண்ணியராசன். உரிமை - மனைவி. தரும சாவகன் - அப் பொழிலின்கண் உறைவானாகிய முற்கூறப்பட்ட முனிவன் பெயர்; இப் பெயர் அறங்கேட்போன் என்னும் பொருட்டு. அறன் - உண்டி கொடுத்தல் முதலியன. மறன் - கள்ளுண்ணல் முதலியன. துக்கம் - துன்பம் முதலிய வாய்மைகள். புக்கில் - புகுமிடம். சார்பு - ஒன்றனை ஒன்று சார்ந்து பிறக்கும் நிதானங்கள். உய்தி - வீடு. ஆரியன் - மேலோன்; புத்தபெருமான். காமனோடியங்கா கண்ணிணை இயக்கம் என மாறுக. இங்கிருக்கின்ற இவள் என்க. யாரென்ன என்று வியந்து அரசன் வினவ என்க.

### கஞ்சுகன் கூற்று

### கக - உ0: காவலன்.........என்றலும்

(இ - ள்.) காவலன் தொழுது - அவ்வாறு வினவிய அரசனைக் கைகூப்பித் தொழுது; கஞ்சுகன் உரைப்போன் - கஞ்சுகன் என்னும் கோத்தொழிலாளன் அவனுக்குக் கூறுபவன்; நாவலம் தீவில் இந் நங்கையை ஒப்பார் யாவரும இல்லை - தென் குமரி வடவிமயம் ஆயிடைப் பரந்து கிடக்கும் பெரிய நாவலந் தீவின்கண் மகளிரில் சிறந்த இவளுக்கு ஒப்பாவார் பிறர் யாரொருவரும் இல்லை; இவள் திறம் எல்லாம் - இவளுடைய வரலாறு முழுவதும் (யான் அறிகுவன்), கிள்ளி வளவனொடு கெழுதகை வேண்டி கள் அவிழ் தாரோய் கலத்தொடும் போகி காவிரிப் படப்பை நல்நகர் புக்கேன் - சோழனை நெடுமுடிக் கிள்ளியினது கேண்மை பெறுவதை விரும்பித் தேன் துளிக்கும் மலர் மாலையணிந்த நீ என்னைத் தூது போக்கிய பொழுது யான் மரக்கலத்தோடு அவனுக்கு வேண்டுவன வெல்லாம் ஏற்றிக் கொண்டு மரக்கலத்தோடே சென்று காவிரியையும் அதன் இரு மருங்கினும் தோட்டங்களையும் உடைய அழகிய பூம்புகார் நகரத்திலே புகுந்தேன் அல்லிலனோ; மாதவன் அறவணன் இவள் பிறப்பு உணர்ந்து ஆங்கு ஓதினன் என்று - அந் நகரத்திலுள்ள பெரிய தவத்தையுடைய அறவணவடிகள் இவளுடைய பிறப்பு முதலியவற்றை நன்குணர்ந்து அந் நகரத்தில் எனக்குக் கூறினர் என்று; யான் அன்றே உரைத்தேன் - யான் மீண்டு வந்த அற்றை நாளிலே அரசே உனக்குக் கூறியிருக்கின்றேன்; ஆங்கு அவள் இவள் - அங்ஙனம் கூறப்பட்ட அம் மணிமேகலையே இங்கு நிற்கின்ற இவ்வணங்காவாள்; அவ் அகநகர் நீங்கி ஈங்கு வந்தனள் என்றலும் - அப் பூம்புகாரின் அகநகரத்தைக் கைவிட்டு என்ன காரணமோ இங்கு வந்திருக்கின்றனள் என்று அக் கஞ்சுகன் அரசனுக்கு அறிவுறுத்திய பொழுது; என்க.

(வி - ம்.) காவலன் : புண்ணியராசன். கஞ்சுகன் - மெய்ப்பை (சட்டை) புக்க கோத்தொழிலாளன்; தூதன். பிரதானியுமாம். இந்

நங்கை - இங்கிருக்கின்ற இணையில்லா இவள். இவள் திறம் - இவள் வரலாறு. கிள்ளி வளவன் - மாவண்கிள்ளி; உதயகுமரன் தந்தை. கெழுதகை - நட்புரிமை; நட்புரிமை கொள்ளும் பொருட்டு நீ என்னை விடுப்ப யான் கலத்தொடும் போகிப் புகார் நகரத்துப் புகுந்த பொழுது என்றவாறு. தாரோய் என்றது முன்னிலைப் பெயர் மாத்திரை. கலத் தொடும் என்றமையால் வரிசைப்பொருள் ஏற்றப்பெற்ற கலத்தொடும் என்பது குறிப்பாயிற்று. படப்பை - தோட்டக் கூறு. இவள் பிறப்பு என்றது இவளுடைய முற்பிறப்பும் இப் பிறப்பும் என்பதுபட நின்றது. உணர்ந்தாங்கு - உணர்ந்தபடி எனினுமாம். அன்றே உரைத்தேன் என்றது யான் மீண்டு வந்த அற்றை நாளிலேயே கூறியிருக்கின்றேன் என்றவாறு. அவ்வக நகர் - பூம்புகார் நகரம். ஈங்கு வந்தனள் என்றது இங்கே ஏதோ காரியமாக வந்திருக்கின்றனள் என்று அறிவுறுத்தபடி யாம். இதனைத் தோற்றுவாயாக் கொண்டு மணிமேகலை மேலே தான் வந்த காரியம் கூறுகின்றாள் என்க.

## மணிமேகலை புண்ணியராசனுக்குத் தான் வந்த காரியம் கூறி மணிபல்லவத்திற்குப் போதல்

உ0 - ௬க : இளங்கோடி.........இழிந்து.

(இ - ள்.) இளங்கொடி நின் கைப்பாத்திரம் என் கை புகுந்தது - அது கேட்ட மணிமேகலை அக் கருசுகன் கூற்றை ஏதுவாகக் கொண்டு புண்ணியராசன் முகம் நோக்கி அரசனே நீ முற்பிறப்பிலே ஆபுத்திரனாயிருந்து தெய்வத்தின்பாற் பெற்ற நின்னுடைய கையிலிருந்த தெய்வத்தன்மையுடைய அமுதசுரபி என்னும் அப் பாத்திரமே இது, யான் செய்த தவத்தால் அஃது என் கையில் தானே வந்து சேர்ந்தது; மன பெரும் செல்வத்து மயங்கினை அறியாய் - நீயோ முற்பிறப்பிலே செய்த நல்வினைப் பயனாக அரசனுக்கியன்ற பெரிய செல்வத்தைப் பெற்று அச் செல்வத்தினாலே மயக்கமும் எய்தினையாதலால் மெய்யறி வுடையை அல்லையாயினை, இச் சிறப்பிற்குக் காரணமான; அப் பிறப்பு அறிந்திலை ஆயினும் - ஆவால் வளர்க்கப் பெற்று ஆபுத் திரன் எனப்பெயர் பெற்று அருளறம் பேணிய உனது அப் பிறப்பினை நீ இப்பொழுது அறிந்தாயில்லை எனினும்; ஆவயிற்று இப் பிறப்பு அறிந்திலை என் செய்தனையோ - அறவோனாகிய ஆபுத்திரனே நீ என்பதற்கு அறிகுறியாகவே நீ இப் பிறப்பில் ஓர் ஆ வயிற்றினின்றும் பிறந்தனை அதுவும் நீ அறிந்தாயில்லை, ஆகவே அவ் வறத்திற்கேற்ப நீ பிறப்பற முயலும் முயற்சி செய்திலை, அதனை மறந்து நீ அவம் செய்வதன்றிப் பிறிது என்ன தான் செய்கின்றனை? இதனை உனக்கு அறிவிக்கவே யான் இங்கு வந்தது காண்; மணிபல்லவம் வலம் கொண்டால் அல்லது - இனி நீ மணிபல்லவத் தீவிற்கு வந்து ஆங்குள்ள புத்த பீடிகையை வலம் வந்து வணங்கினால் அல்லது; பிணிப்பு

உறு பிறவியின் பெற்றிமை அறியாய் - மேலும் மேலும் பற்றுண்டாதற்குக் காரணமான இப் பிறப்பின் தன்மையை அறிந்து நீ உய்தி பெறுவாயல்லை ஆதலால் இதன்கண் நின்று உய்தி பெறுதற்கு; அரச நீ ஆங்கு வருவாய் என்று அப் பூங்கமழ் தாரோன் முன்னர் புகன்று - அரசனே நீ அம் மணிபல்லவத்திற்கு வருவாயாக என்று அந்த அழகிய நறுமணங் கமழுகின்ற மலர்மாலையணிந்த புண்ணியராசன் முன்னர்ச் சொல்லிவிட்டு; வெய்யவன் குடபால் வீழா முன்னர் மடக்கொடி ஆங்கு அறு விசும்பின் எழுந்து வான் நின்று இழிந்து - ஞாயிறு மேற்றிசையில் வீழ்ந்து மறைவதற்கு முன்னர் இளங்கொடியாகிய அம் மணிமேகலை அந் நகரத்தினின்றும் குற்றமற்ற வானத்திலே பறந்துபோய் வானத்தினின்றும் அம் மணிபல்லவத் தீவின்கண் இறங்கி; என்க.

(வி - ம்.) இளங்கொடி: மணிமேகலை. நின் கைப்பாத்திரம் என்றது நீ முற்பிறப்பிலே தெய்வத்தால் பெற்ற அமுதசுரபி என்னும் அரும் பெறல் பாத்திரம் என்பதுபட நின்றது. என்கைப் புகுந்தது என்றது யான் செய்த தவத்தால் என்கைப் புகுந்தது என்பதுபட நின்றது. மன் பெருஞ் செல்வம் - அரசனுக்கியன்ற பெரிய செல்வம் என்க. செல்வத்து மயங்கினை என்புழி மயங்குதற்குச் செல்வம் ஏதுவாயிற்று. ஈண்டு,

> "அறனி ரம்பிய வருளுடை யருந்தவர்க் கேனும்
> பெறல ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்"
>
> (மந்தரை - எ0.)

எனவரும் கம்பராமாயணச் செய்யுளையும் நினைக. அறியாய் என்றது உய்யும் நெறி அறியாய் என்றவாறு. அப் பிறப்பு-ஆபுத்திரனும் பிறப்பு. அதற்கறிகுறியாக ஆவயிற்றுப் பிறந்த பிறப்பு என்க. என் செய்தனை யோ என்ற வினா தவம் செய்யாது அவம் செய்கின்றாய் என்றவாறும். மடக்கொடி : மணிமேகலை. வெய்யவன் - ஞாயிறு. மணிபல்லவத்தில் இறங்கி என்க.

## மணிமேகலை மணிபல்லவத்தில் மாதவன் பீடிகையை வணங்குதல்

### ௩௧ - ௪0: மறிதிரை..........எல்லாம்

(இ - ள்.) மறிதிரை உலாவும் பூ நாறு அடை கரை எங்கணும் போகி மணிபல்லவம் வலம் கொண்டு - கரையில் மோதி மீளுகின்ற அலைகள் உலாவுகின்ற அம் மணிபல்லவத் தீவினது மலர் மணம் கமழும் நீரடை கரையில் எவ்விடத்தும் சென்று அத் தீவை வலம் வந்து; மடக்கொடி பிணிப்பு அறு மாதவன் பீடிகை காண்டலும் - அம் மணிமேகலை பற்றற்ற பெரிய தவத்தையுடைய புத்த பெருமானுக்கியன்ற பீடிகையைக் கண்டவுடன்; தொழுது வலம் கொள்ள - கை குவித்துத் தொழுது வலம் வந்து

வணங்குமளவிலே; அத் தூமணிப் பீடிகை பழுது இல் காட்சி தன் பிறப்பு உணர்த்த - அந்தத் தூயமணிகளால் இயன்ற புத்த பீடிகையைக் கண்ட குற்றமற்ற அக் காட்சியானது தன்னுடைய முற்பிறப்பின் நிகழ்ச்சிகளைக் கண்கூடாகக் காட்டுதலாலே அம் மணிமேகலை; காயம் கரையெனும் பேர் யாற்று அடைகரை மாயம் இல் மாதவன் தன் அடி பணிந்து - அக்காட்சியினூடே காயங் கரை என்னும் பெரிய யாற்றினது நீரடை கரையின்கண் பொய்ம்மையில்லாத பெரிய தவத்தையுடைய பிரமதருமன் என்னும் முனிவர் பெருமானைக் கண்கூடாகக் கண்டு அம் முனிவனுடைய அடிகளிலே வீழ்ந்து வணங்கிக் கூறுபவள் முனிவர் பெருமானே!; தருமம் கேட்டு தாள் தொழுது ஏத்தி பெருமகன் தன்னொடும் பெயர்வோர்க் கெல்லாம் - ஆர்வத்துடன் வந்து நீ கூறுகின்ற அறங்களைக் கேட்டு மகிழ்ந்து நின்னுடைய திருவடியைத் தொழுது வாழ்த்தித் தங்கள் அரசனாகிய அத்திபதி என்பவனோடும் அவந்தி நகரத்திற்குச் செல்லும் மக்களுக் கெல்லாம்; என்க.

(வி - ம்.) பிணிப்பறு மாதவன் - புத்தர். பீடிகை - புத்த பீடிகை. காட்சி பிறப் புணர்த்த என்க. காயங்கரை - ஒரு யாற்றின் பெயர். மாயம் - பொய். மாதவன் - பிரமதருமன் என்னும் முனிவன். பழம் பிறப்புணர்ந்த மணிமேகலையின் முற்பிறப்புத் தோன்று நிற்ப. அக் காட்சியினூடு அப்பிறப்பில் தனக்கறங் கூறிய பிரமதருமன் என்னும் முனிவர் தோன்றுதலால் என்க. இனி வருவன மணிமேகலை கூற்று. அவை அம் முனிவனை முன்னிலைப்படுத்துக் கூறுவனவாம். பெருமகன் என்றது அத்திபதி என்னும் வேந்தனை. அவனொடும் பெயர்வோர் என்றது அத்திபதியின் குடிமக்களை. அவர்க்கெல்லாம் அம் முனிவன் கூறிய அறவுரைகளை ஈண்டு மணிமேகலை கொண்டு கூறுகின்றாள் என்க.

### மணிமேகலை கூற்று

### ௪௧ - ௫௧ : விலங்கு.........அறைந்தீர்

(இ - ள்.) விலங்கும் நரகரும் பேய்களும் ஆக்கும் கலங்கு அஞர் தீவினை கடிமின் - விலங்குப் பிறப்பினையும் நரகர்ப் பிறப்பினையும் பேய்ப்பிறப்பினையும் உண்டாக்குகின்ற உள்ளங் கலங்குதற்குக் காரணமான துன்பத்தைத் தருகின்ற தீவினைகளைச் செய்யாதொழியுங்கோள்; கடிந்தால் - அத் தீவினையைச் செய்யா தொழியின்; நல்வினை அயராது ஓம்புமின் - நல்வினைகளை மறவாது செய்யுங்கள், எற்றுக்கெனின்; தேவரும் மக்களும் பிரமரும் ஆகுதிர் ஆகலின் - செய்தால் தேவரும்

மக்களும் பிரமரும் ஆகிய உயர்ந்த பிறப்புக்களை எய்துவீர் ஆதலால்; புலவன் முழுதும் பொய் இன்று உணர்ந்தோன் உலகு உயக்கோடற்கு ஒருவன் தோன்றும் - மெய்யறிவுடையவனும் முழுவதும் மயக்கமின்றி உணர்ந்தவனும் ஆகிய இவ்வுலகத்தை உய்யக் கொள்ளும் பொருட்டுப் பிறக்கின்ற ஒருவனும் ஆகிய புத்த பெருமான் இன்றியமையாத பொழுதிலே வந்து பிறப்பான்; அந்நாள் அவன் அறம் கேட்டோர் அல்லது இன்னாப் பிறவி இழுக்குநர் இல்லை - அக்காலத்திலே அப் புத்த பெருமான் திருவாய்மலர்ந்தருளுகின்ற அறங்களைக் கேட்கும் திருவுடையார் தப்புவதல்லது துன்பம் தருகின்ற இப் பிறவிக் கடலினின்றும் தப்பிக் கரையேறுவார் பிறர் யாரும் இல்லை ஆதலின்; மாற்று அரும் கூற்றம் வருவதன் முன்னம் அறம் போற்றுமின் என சாற்றிக் காட்டி - யாராலும் தடுத்தற்கரிய கூற்றுவன் வந்து நும் முயிரை உண்ணுதற்கு முன்பே நாளும் ஒல்லும் வகையால் ஓவாதே நல்லறத்தைச் செய்யுமின் என்று சொல்லிக் காட்டி; நா கடிப்பாக வாய் பறை அறைந்தீர் - நும்முடைய நாவையே குறுந்தடியாகக் கொண்டு நும் வாயாகிய பறையை முழக்கினீர் என்றாள்; என்க.

(வி - ம்.) தீவினை கடிமின், கடிந்தால் தேவரும் மக்களும் பிரமரும் ஆகுதிர் எனவும், மாற்றருங் கூற்றம் வருவதன் முன்னம் அறம் போற்றுமின் எனவும் வரும் இவற்றோடு,

"பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்தலோம்புமி னதுதான்
எல்லாரு முவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே"

என வரும் (கனக) புறப்பாட்டினை ஒப்பு நோக்குக.

பிறவி இழுக்குதல்-பிறவிக் கடலினின்றும் உய்ந்து கரையேறுதல்; இதனை நிருவாணம் என்பர். மாற்றருங் கூற்றம் - தடுத்தற்கரிய கூற்றுவன்; சாதல் வருமுன்னர் என்றவாறு. சாற்றிக் காட்டுதல் - வற்புறுத்திச் சொல்லுதல். கடிப்பு - பறையடிக்கும் குறுந்தடி.

## இதுவுமது

௫௨ - ௫௭ : அவ்வுரை.........தொழ

(இ - ள்.) அவ்வுரை கேட்டு நும் அடி தொழுது ஏத்த - அவ்வறவுரையைக் கேட்ட பின்னர் யான் தமியேனாய் நும்முடைய திருவடிகளை வணங்கி வாழ்த்திய பொழுது; எங்கட்கு வெவ்வுரை விளம்பினிர் ஆதலின் - யானும் என் கணவனுமாகிய இருவர் திறத்தும் வெவ்விய துன்பம் தருகின்ற மொழிகளைக் கூறி அருளினீர் ஆதலால்; பெரியவன் தோன்றா முன்னர் இப் பீடிகை கரியவன் இட்ட காரணம் தானும் - புத்த பெருமான் இவ்வுலகிலே வந்து பிறப்பதற்கு முன்பே கரிய திருமேனியையுடைய தேவேந்திரன் இந்தப் பீடிகையை இங்கு இட்ட காரணமும்; மன் பெரும் பீடிகை மாய்ந்து உயிர் நீங்கிய என் பிறப்பு உணர்த்தலும் என் என்று யான் தொழ - பெருமையுடைய இப் பீடிகை உடம்பினின்றும் உயிர் இறந்துபட்ட எனது முற்பிறப்பினை உணர்த்தற்குக் காரணமும் என்னையோ என்று யான் வணங்கா நிற்ப.

(வி - ம்.) வெவ்வுரை என்றது நின் கணவன் இற்றைக்குப் பதினாறும் நாள் திட்டிவிடம் என்னும் பாம்பால் உயிர் நீப்பன், அதனால் நீயும் தீயில் மூழ்குவை என்று சொன்ன சொற்களை. அந்நிகழ்ச்சியை கூ ஆம் காதை ௪௮ ஆம் அடி முதலியவற்றால் உணர்க. பெரியவன்: புத்த பெருமான். கரியவன் : தேவேந்திரன்.

## இதுவுமது

௫௮ - ௬௮: முற்ற.........ஆக

(இ - ள்.) முற்ற உணர்ந்த முதல்வனை அல்லது - பேரருளியல்புகளை எல்லாம் ஓதாதுணர்ந்த புத்தபெருமானை யன்றி; மற்று அப் பீடிகை தன்மிசைப் பொறாஅது - மற்றையோர் யாரையும் அந்தப் பீடிகை தன் மேல் தாங்கமாட்டாது; பீடிகை பொறுத்த பின்னர் அல்லது வானவன் வணங்கான் - அப் பீடிகையானது தன் மேல் தாங்குமாற்றால் இவரே புத்த பெருமான் என்று அறிவித்த பின்னர் வணங்குவதல்லது அவ்விந்திரன் வணங்குதல் இலன், இவ்வாற்றால்; மற்று அவ் வானவன் பெருமகற்கு அமைத்து - அத் தேவேந்திரன் புத்த பெருமானை இவன் என அறிந்துகொள்ளற்பொருட்டு இப் பீடிகையை அமைத்து வைத்து அப்பாலும்; தரும பீடிகை பிறந்தார் பிறவியை சாற்றுக என்று அருளினன் - இத் தரும பீடிகை இவ்வுலகத்துப் பிறந்த மாந்தருள் வைத்துத் தன்னை வலஞ்

வந்து வணங்கியவருடைய முற்பிறப்பினையும் அறிவித்திடுவதாக என்று ஆணையிட்டருளினன்; ஆதலின் ஆயிழை பிறவியும் இருள் அறக்காட்டும் என்று எடுத்துரைத்தது - அக்காரணங்களால் இப் பீடிகை தன்மேல் பொறுக்குமாற்றால் புத்தபெருமானை இந்திரனுக்குக் காட்டித் தருவதோடன்றி ஆயிழாய் நின முற்பிறப்பையும் விளக்கமாகக் காட்டாநிற்கும் என்று எடுத்துக் கூறியதாகிய; அருந்தவர் வாய்மொழி எனக்கு அன்றே போன்றது இன்று என்று ஏத்தி வலங்கொண்டு - அரிய தவத்தையுடைய பிரமதத்தருடைய மெய்ம்மொழி அவர் கூறிய அற்றை நாளில் இருந்தது போல இற்றை நாளும் எனக்குப் புதுமையுடையதாகவே இருக்கின்றது என்று சொல்லி ஏத்தி வலங்கொண்டு அப் புத்த பீடிகையை வாழ்த்தி வலம் வந்து; ஈங்கு இவள் இன்னணம் ஆக - இம் மணிபல்லவத் தீவின்கண் இம் மணிமேகலை இவ்வாறிருப்ப; என்க.

(வி - ம்.) முதல்வன் - புத்தர். வானவன் - இந்திரன். இந்திரன் புத்தரை அறிந்து கொள்ளுதற்கு இப்பீடிகையை இட்டனன். மேலும் அதுவே தன்னை வணங்கிய மாந்தர் பிறவியைச் சாற்றுக என்றும் அருளினன்; ஆதலால் அது உன் பிறவியையும் காட்டும் என்று கூறினன் என்றவாறு. வாய்மொழி, அவன் கூறிய அன்று போலவே இன்றும் என் உள்ளத்தில் புதுமையாகவேயுளது என்று மணிமேகலை புத்தபீடிகையை வலங்கொண்டு ஏத்தினள் என்க.

## புண்ணியராசன் தான் ஆ வயிற்றில் பிறந்தமையை அன்னையின்பால் கேட்டுணர்தல்

கூ௪ - எகூ: இறைவனும்.........நினைந்து

(இ - ள்.) இறைவனும் ஆங்கு அப்பொழில்விட்டு அகநகர் புக்கு - நாகபுரத்தில் மணிமேகலையால் அறிவுறுத்தப்பட்ட அரசனாகிய புண்ணியராசன் அப்பொழுதே அப் பூம்பொழிலை விட்டுத் தன் நகரத்தினுட் புகுந்து; தந்தை முனியா தாய் பசு ஆ வந்த பிறவியும் - தனனை வளர்த்த மணமுக முனிவனே தந்தையாகவும் தனனை ஈன்ற தாய் ஒரு பசுவாகவும் தனக்கு வந்துள்ள அப் பிறப்பின் வரலாற்றையும்; மாமுனி அருளால் குடர்த்தொடர் மாலை சூழாது ஆங்கு ஓர் அடர்ப்பொன் முட்டையுள் அடங்கிய வண்ணமும் - மணமுக முனிவனுடைய அருள் காரணமாக அப் பசுவின் வயிற்றினும் ஏனைப மக்கள் சூல் கொள்ளுமாறுபோலக் குடரால் தொடர்ந்த தசை மாலையாலே சுற்றப்படாமல் அச் சூலிடத்தே ஒரு தகடாகிய பொன்னாலியன்ற முட்டையினுள்ளே கருவாகி வளர்ந்திருந்த தன்மையையும்; மக்களை இல்லோன் பூமிசந்திரன மாமுனி அருளால கொடு

போந்த வண்ணமும் - மக்கட் பேறில்லாதவனாகிய பூமிசந்திரன் என்னும் அரசன் சிறந்த அம் முனிவனுடைய திருவருளாலே தன்னை மகவாக ஏற்றுக் கொண்டு தன் அரண்மனைக்குக் கொண்டு வந்த தன்மையும் அப் பூமிசந்திரன் மனைவியாகிய; ஆய் தொடி அரிவை அமரசுந்தரி எனும் தாய் வாய் கேட்டு தாழ் துயர் எய்தி - அழகிய வளையலையணிந்த அரிவைப் பருவத்தினளாகிய அமரசுந்தரி எனும் பெயரையுடைய தன் தாயின் வாய்ச் சொல்லாலேயே கேள்வியுற்று மனம் தாழ்தற்குக் காரணமான துன்பத்தை எய்தி; இறந்த பிறவியின் யாய் செய்ததூஉம் பிறந்த பிறவியின் பெற்றியும் நினைந்து - ஆபுத்திரனாயிருந்து இறந்துபோன பிறவியின்கண் தன்னையீன்ற தாயாகிய பார்ப்பனி சாலி செய்த இழிதகைச் செயலையும் சாவகனாகிப் பிறந்துள்ள இப் பிறப்பினும் ஆ வயிற்றில் பிறந்த இழிதகைமையையும் நினைந்து என்க.

(வி - ம்.) இறைவன்-புண்ணியராசன். முனி-மண்முக முனிவன். அடர்ப்பொன் - தகடாகிய பொன். பூமிசந்திரன் - நாகபுரத்தரசன். அமரசுந்தரி - பூமிசந்திரன் மனைவி; புண்ணியராசன் வளர்ப்புத்தாய். இறந்த பிறவியின் யாய் என்றது ஆபுத்திரனை ஈன்ற தாயாகிய பார்ப்பனியை; அவள் செய்ததாவது ஈன்ற குழவிக் கிரங்காளாய்த் தோன்றாத் தடவையின் இட்டுச் சென்றமை. பிறந்த பிறவியின் பெற்றி என்றது விலங்கின் வயிற்றில் பிறந்த இழிதகைமையை.

### புண்ணியராசன் அமைச்சனுக்குக் கூறுதல்

### ௮௦ - ௯௨: செருவேல்..........சாற்றி

(இ - ள்.) செருவேல் மன்னர் செவ்வி பார்த்து உணங்க - போர்க் கருவியாகிய வேல் ஏந்திய அரசர்கள் தங்குறை கூறுதற்குச் செவ்வி பெறாமல் அதனை எதிர்பார்த்து அது பெறுமளவும் அரண்மனை வாயிலின்கண் வாடிக்கிடப்ப; அரைசு வீற்றிருந்து புரையோர்ப் பேணி - அரைசு கட்டிலில் ஏறிச் செம்மாந்திருந்து சான்றோரைப் போற்றுதல் செய்தும்; நாடகம் கண்டு - நாடகத்தைக் கண்ணால் கண்டு களித்தும்; பாடல் பாண்மையின் கேள்வி இன் இசை கேட்டு-பண்ணினது பண்பினால் உண்டாகின்ற கேட்டற்கினிய இனிய இசைகளைக் கேட்டு உவளகத்தில் இன்புற்றும்; தேவியர் ஊடல் செவ்வி பார்த்து - தேவிமார் ஊடியிருக்கின்ற செவ்வியைத் தெரிந்துகொண்டு; அவர் ஊடல் நீடிக்காது பாடகத் தாமரை சீறடி பணிந்து - காமவின்பம் பதன் அழிந்து கெடாமைப் பொருட்டு அவ்வூடலைத் தீர்த்தற்குப் பாடகம் அணிந்த தாமரைப் பூப்போன்ற மென்மையுடைய அவருடைய சிறிய அடிகளிலே விழுந்து வணங்கி

அவ்வூடலைத் தீர்த்த பின்னர்; தேம் மரு கொங்கையில் குங்குமம் எழுதி - வாசனைமிக்க அவர்தம் கொங்கையின் மேல் குங்குமச் சாந்து கொண்டு தொய்யில் எழுதி; அம் கையில் துறுமலர் சுரி குழல் சூட்டி - அழகிய தனது கையாலே செறிந்த மலர் மாலையை எடுத்துச் சுருண்ட அவர் தம் கூந்தலிலே சூட்டி விட்டு; நறு முல்லை அமிழ்து ஊறு நகை அருந்தி - நறிய முல்லையரும்பு போன்ற அழகிய எயிற்றில் ஊறும் ஊறலாகிய அமிழ்தத்தையொத்த நீரைப் பருகி; மதிமுக கருங்கண் செங்கடை கலக்க - முழுமதி போன்ற அவர்தம் முகத்தின்கண் அமைந்த கரிய கண்ணினது சிவந்த கடைக்கண்ணோக்கம் நெஞ்சத்தைக் கலக்க அச் செவ்வி பார்த்து; கருப்பு வில்லி அருப்புக்கணை தூவ - காமவேள் தனது மலர்க்கணைகளை ஏவுதலாலே; தருக்கிய காமக் கள்ளாட்டு இகழ்ந்து - முனைத்தெழுந்த காம நுகர்ச்சியாகிய இன்ற இன்பமாகிய கள்ளையுண்டு களித்திருக்கும் இவ்வில்லற வாழ்க்கையை அதன் புன்மை நோக்கி இகழ்ந்து தள்ளி; தூ அறத் துறத்தல் நன்று எனச் சாற்றி - சிறிதும் பற்றின்றித் துறந்து போதலே நன்றும் என்று சொல்லிக் காட்டி; என்க.

(வி - ம்.) செவ்வி பார்த்து உணங்குவதாவது தம்குறை கூறுதற் கேற்ற மனமொழி மெய்கள் இனியனும் காலம் வருந்துணையும் அதனை எதிர்பார்த்து முற்றத்தில் வாடிக்கிடத்தல். அரசு கட்டிலில் ஏறி வீற்றிருந்து என்க; வீற்றிருத்தல் - இறுமாந்திருத்தல். புரையோர் - பெரியோர்; அவராவார் சான்றோரும் அமைச்சரும் ஆசிரியரும் முதலியோர். நாடகம் - கண்டின்புறும் கலை. பாடல் - கேட்டின்புறும் கலை என்பது பற்றி நாடகங் கண்டு இசை கேட்டு என்றான். செவ்வி - ஊடல் முறுகிப் பதன் அழியாமல் இருக்குங்காலம்; ஊடற் செவ்வி பார்த்து நீடாது அடிபணிந்து அதனைத் தீர்த்து என்க. இதனோடு—

"உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்" (குறள் : கங0உ)

எனவும்,

"மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்" (குறள் : கஉஅகூ)

எனவும் வரும் திருக்குறள்களும் நினைக்கத்தகும். துறுமலர் - செறிந்த மலர். அமிழ்து ஊறு நகை - என்பது ஆகுபெயர். நகையின்கண் ஊறிய அமிழ்தம் போன்ற நீரை அருந்தி என்க. செங்கடை கலக்க - சிவந்த கடைக்கண்ணில் காமக்குறிப்புத் தோன்றித் தம் நெஞ்சத்தில் கலக்க எனினுமாம். கருப்பு வில்லி - காமவேள். தருக்கிய காமம் - முனைத்த காமம். தூ அற - பற்றுக் கோடற்றுப்போம்படி.

## அரசன் மொழிகேட்ட அமைச்சன் செயல்

### ௯௩ - ௧௦௪ : தெளிந்த.........ஆயது

(இ - ள்.) தெளிந்த நாதன் என் செவி முதல் இட்ட வித்து ஏதம் இன்றாய் - மெய்ப்பொருளைத் தெளிந்த தலைவனாகிய தருமசாவகன் என்னும் துறவோன் என்னுடைய செவியாகிய நிலத்தின்கண் விதைத்த விதையானது அழிவிலதாய் முளைத்துப் பயிராகி; மணிமேகலைதான் காரணமாக இன்று விளைந்தது - மணிமேகலையாகிய முகில் அருள் மழை பெய்தல் காரணமாக இற்றை நாள் நன்கு விளைந்தது; என்று அணி மணி நீள் முடி அரசன் கூற - என்று அழகிய மணியாலியன்ற நெடிய முடியையுடைய புண்ணியராசன் கூறுநிற்ப; மந்திரி சனமித்திரன் மன் மனம் வேறாயினன் என - அமைச்சனாகிய அச் சனமித்திரன் என்பவன் அரசன் மொழி கேட்டு இவ்வரசன் தன்மனம் வேறுபட்டிருக்கின்றான் என்று கருதி; அவன் தாள் தொழுது ஏத்தி எங்கோ வாழி என் சொல் கேள்மதி - அப் புண்ணியராசனுடைய அடிகளில் வீழ்ந்து வணங்கிப் புகழ்ந்து எங்கள் அரசே நீடூழி வாழ்வாயாக அடியேன் சொல்லையும் சிறிது கேட்டருள்வாயாக; நும் கோன் உன்னைப் பெறுவதன் முன் நாள் - உன் தந்தையாகிய அரசன் உன்னை மகவாக ஏற்றுக்கொள்வதன் முன் சென்ற காலத்தே; இப் பதிகெழு நல்நாடு பன்னீராண்டு மன் உயிர் மடிய மழை வளம் கரந்து - இவ்வரசாட்சிக்குப் பொருந்திய நல்ல இச் சாவக நாடு தன்னிடத்தே நிலைபெற்ற உயிரினங்கள் இறந்தொழியுமளவு மழை பெய்யாது தன் வளத்தைக் கரந்து கொள்ளப்பட்டு; இங்கு ஈன்றாள் குழவிக்கு இரங்காள் ஆகி தான் தனி தின்னும் தகைமையது ஆயது - இங்குத் தாயானவள் தானீன்ற குழந்தை பசித்து அழுதல் கண்டும் அதற்கு இரங்காதவளாய் அரிதாகத் தான் பெற்ற உணவைத் தானே தனித்திருந்து தின்னுகின்ற இழிதகைமையை உடையதாயிருந்தது என்றான்; என்க.

(வி - ம்.) நாதன்: தருமசாவகன். செவி முதல்: முதல்-ஏழாவதன் சொல்லுருபு. ஏதம் - குற்றம்; செவியாகிய கழனியில் எனவும் மணிமேகலையாகிய முகில் எனவும் கூறிக் கொள்க. நீள்முடி - வழிவழியாக நீண்டு வருகின்ற முடியென்க. மன் - மன்னன்; மந்திரியாகிய சனமித்திரன் என்க. அவன் : புண்ணியராசன். கேள்மதி, ஈண்டு மதி: முன்னிலையசை. நுங்கோன் என்றது பூமிசந்திரனை. நன்னாடு - நல்ல சாவக நாடு. வளங்கரந்து தகைமையது ஆயது என்க.

## இதுவுமது

### ௧0௫ - ௧௧௫ : காய்.........அன்றே

(இ - ள்.) காய் வெம் கோடையில் கார் தோன்றியது என நீ தோன்றினையே - கதிரவனால் சுடப்பெற்ற வெவ்விய முது வேனிற் பருவத்தில் கார்ப்பருவம் தோன்றினாற் போல அத்தகைய வற்கடப்பொழுதிலே நீ இந் நாட்டின்கண் வந்து பிறந்தாய்; ஊரத்தார் அண்ணல் தோன்றிய பின்னர் தோன்றிய உயிர்கட்கு வானம் பொய்யாது - கிரல்படத் தொடுத்த மலர் மாலை யணிந்த தோன்றலாகிய நீ பிறந்த பின்பு இந் நாட்டிலே பிறந்த உயிர்கட்கு மழை பெய்யாமல் பொய்ப்பதில்லை; மண் வளம் பிழையாது ஊன் உடை உயிர்கள் உறுபசி அறியா - நிலம் தனது வளமாகிய உணவுப் பொருள்களை வழங்குவதில் தப்புவதில்லை ஆதலின் உடம்பொடு பிறந்த உயிர்கள் மிக்க பசியை ஒரு பொழுதும் அறியாவாயின, இங்ஙனமாகலின்; நீ ஒழி காலை நின்நாடு எல்லாம் தாய் ஒழி குழவி போல கூஉம் - நீ துறந்து போன காலத்தில் நின் ஆட்சியின்கண்பட்ட இந்த நாட்டில் வாழும் உயிர்களெல்லாம் தாய் இறந்துபோன குழந்தை போலத் துன்புற்று நின்னைக் கூப்பிட்டழும் அல்லவோ; துயர் நிலை உலகம் காத்தல் இன்றி நீ உயர்நிலை உலகம் வேட்டனை ஆயின் - இவ்வாறு துயருறுகின்ற நிலைமையை யுடைய இவ்வுலகத்துயிர்களைப் பாதுகாக்கும் கடமையைக் கைவிட்டு நீ மட்டும் மேனிலை உலகம் புகுந்து இன்புறுதலை விரும்பு வாயாதல்; இறைவ உயிர்கள் இறுதி எய்தவும்பெறுதி விரும்பினை ஆகுவை அன்றே - அரசனே இவ்வுலகத்து உயிர்களெல்லாம் துன்பத்தால் துடித்து இறக்கும்படி கைவிட்டு நீ மட்டும் இன்பப் பேற்றினை விரும்பிச் சென்றாய் ஆகுவை அல்லையோ; என்க.

(வி - ம்.) காய் வெங்கோடை-முதுவேனிற் பருவம்; கார் - கார்ப் பருவம்; முகில் எனினுமாம். அண்ணல் - தலைமைத் தன்மையுடையோன். வானம்: ஆகுபெயர். உறுபசி - மிக்கபசி. கூஉம் - கூப்பிடும். "தாயில் தூவாக் குழவி போல ஓவாது கூஉம்" என்பது புறநானூறு. (௪). உயர்நிலை உலகம் - வீட்டுலகம். இறுதி - சாவு. பெறுதி - பேறு (ஊதியம்.)

## புண்ணியராசன் செயல்

### ௧௧௬ - ௧௨௬ : தன்னுயிர்.........ஏறினன்

(இ - ள்.) தன் உயிர்க்கு இரங்கான் பிற உயிர் ஓம்பும் மன் உயிர் முதல்வன் அறமும் ஈது அன்றால் - தன் உயிர் துன்

புறுதல் கருதி ஒரு சிறிதும் இரங்காதவனும் பிற உயிர்களின் துன்பம் தவிர்த்துப் பாதுகாக்கின்ற மன்னுயிர் முதல்வனுமிய புத்தபெருமான் திருவாய்மலர்ந்தருளிய அறத்தினும் சேர்ந்தன்று நீ கூறும் இத்துறவு; மன்னவ மதிமாறு ஓர்ந்தனை என்று முதுமொழி கூற - அரசே நீ அறிவுக்கும் பொருந்தாது மாறுபடுகின்ற ஒன்றனை நினைந்தனை என்று அவ்வமைச்சன் அறிவுரை கூறுநிற்ப; முதல்வன் கேட்டு - அரசனுமிய அப் புண்ணியராசன் அது கேட்டு அமைச்சனை நோக்கிக் கூறுபவன்; மணிபல்லவம் வலம் கொள்வதற்கு எழுந்த தணியா வேட்கை தணித்தற்கு அரிதால் - அமைச்சனே நின்னறிவுரை சாலவும் நன்றே காண்! நீ விரும்பியவாறே யான் துறவி யாவே னல்லேன் ஆயினும் மணிபல்லவத் தீவிற்குச் சென்று ஆண்டுள்ள புத்தபீடிகையை வலம் வந்து வணங்குதற்கு என நெஞ்சத்தி லுண்டான தணியாத விருப்பமானது யான் அது செய்யாமல் தணித்தற்கியலாததா யிருக்கின்றது ஆதலால்; ஒரு மதி எல்லை அரசும் உரிமையும் அகநகர்ச் சுற்றமும் காத்தல் நின் கடன் என - யான் அங்குச் சென்று மீளும் பொருட்டு ஒரு திங்கள் முடியுந் துணையும் இவ்வரசாட்சியையும் உரிமை மகளிரையும் இவ் வக நகரில் வாழும் அரசியல் சுற்றத்தாரையும் காவல் செய்தல் உன் கடமையாகும், என்று சொல்லி அவற்றை யெல்லாம் அவ் வமைச்சன்பால் ஓம்படை செய்தபின்னர் அப் புண்ணியராசன்; கலம் செய் கம்மியர் வருக எனக் கூஉய் - தன் மரக்கலத்திலே தொழில் செய்யும் நீகான் முதலிய தொழிலாளர் வருவாராக என்றழைத்து அவரோடு; இலங்கு நீர் புணரி எறிகரை எய்தி வங்கம் ஏறினன் - விளங்குகின்ற நீரையுடைய கடல் அலை யெறிகின்ற கரையை யடைந்து மரக்கலத்தில் ஏறினன்; என்க.

(வி - ம்.) மன்னுயிர் முதல்வன் - புத்த பெருமான். அறமும் சேர்ந்தன்று என்புழி, உம்மை இழிவு சிறப்பு. மதி - அறிவு. முதுமொழி - அறிவுரை. முதல்வன் : புண்ணியராசன். உரிமை - அரசன் மனைவி முதலிய மகளிர். சுற்றம் - ஐம்பெருங் குழுவும் எண்பேராயமும் ஆம்; ஒருமதி - ஒரு திங்கள் (முப்பது நாள்.) கம்மியர் - தொழிலாளர், வங்கம் - மரக்கலம்; முதல்வன் கேட்டு நின் கடன் என ஓம்படைசெய்து கூஉய் எய்தி ஏறினன் என்க.

### புண்ணியராசனை மணிபல்லவத்தில் மணிமேகலை வரவேற்றல்

**௧௨௯ - ௧௩௪ : மணி.........மன்னவன்**

(இ - ள்.) மணிபல்லவத்து இடை அக்கலம் தங்காது சென்று சார்ந்து இறுத்தலும் - மணிபல்லவத் தீவிற்கு இடை யிலே சிறிதும் தங்காமல் அம் மரக்கலம் சென்று அத் தீவினை

அணுகித் துறையின்கண் தங்குதலும்; புரைதீர் காட்சி பூங்கொடி பொருந்தி - குற்றமில்லாத மெய்க்காட்சியையுடைய பூங்கொடி போல்வாளாகிய மணிமேகலை அக் கடல் துறையின் பக்கத்தே வந்து நோக்கியவள்; அரைசன் கலம் என்று மகிழ்வு எய்தி - அக் கலத்தின் வரவு கண்டு இது புண்ணியராசனுடைய மரக்கலமென்று துணிந்து உளம் பெரிதும் மகிழ்ந்து; காவலன் தன்னொடும் கடல்திரை உலாவும் தேமலர் சோலை தீவகம் வலம் செய்து - கலத்தினின்றும் வந்து கரையேறிய அப் புண்ணியராசனையும் வரவேற்று அவனோடும் கடலினது அலை வந்து உலாவுகின்ற தேன் துளிக்கும் மலர்களையுடைய சோலைகளோடு கூடிய அம் மணிபல்லவத்தீவை வலமாக வந்து அவ்வரசனுக்கு மணிமேகலை; பெருமகன் காணாய் பிறப்பு உணர்விக்கும் தருமபீடிகை இது எனக் காட்ட - அரசே உதோ பார் பழம் பிறப்பினை உணரச் செய்யும் தெய்வத் தன்மையுடைய தரும பீடிகை இது தான் என்று காட்டாநிற்ப; மன்னவன் வலங்கொண்டு ஏத்தினன் - அப் புண்ணியராசனும் பெரிதும் மகிழ்ந்து அப் புத்த பீடிகையை வலம் வந்து வீழ்ந்து வணங்கி வாழ்த்து வானாயினன்; என்க.

(வி - ம்.) இறுத்தலும் - தங்குதலும். புரைதீர் காட்சி - மெய்க் காட்சி. அரைசன்: போலி. காவலன் : புண்ணியராசன். தேம் - தேன். தீவகம் - தீவு. பெருமகன் : அண்மைவிளி. மன்னவன் : புண்ணிய ராசன்.

## புண்ணியராசன் பழம் பிறப்புணர்ந்து சிந்தாவிளக்கு என்னும் தெய்வத்தைப் புகழ்ந்தேத்துதல்

### கூ௬ச - கசஎ : மன்னவற்கு.........பாவாய்

(இ - ள்.) மன்னவற்கு உயர் மணிப்பீடிகை - அங்ஙனம் வாழ்த்திய அப் புண்ணியராசனுக்கு உயர்ந்த மணிகளால் இயன்ற அப் புத்த பீடிகை; மையறு மண்டிலம் கை அகத்து எடுத்து காண்போர் முகத்தைப் போல - குற்றமில்லாத கண்ணாடி வட்டம் தன்னைக் கையிலெடுத்துப் பார்ப்பவரின் முகத்தைக் காட்டுதல் போல; உலந்த பிறவியைக் காட்ட - கழிந்த பிறப்பினைச் காட்டா நிற்ப அது கண்ட அவ்வரசன் அக் காட்சியினூடே சிந்தாவிளக்கு என்னும் தெய்வத்தையும் கண்டு கூறுபவன்; என் பிறப்பு அறிந்தேன் என் இடர் தீர்ந்தேன் - என்னுடைய முற்பிறப்பாகிய ஆபுத்திரன் பிறப்பையும் அறிந்து கொண்டேன் என் நெஞ்சத்தில் நின்ற துன்பம் முழுவதும் தீரவும் பெற்றேன்; தென் தமிழ் மதுரை செழுங்கலை பாவாய் - நாவலந்தீவின் தென்றிசையின்கண்

செந்தமிழ் வழங்கும் மதுரைமா நகரத்தின்கண் செழுங்கலை நியமமென்னும் திருக்கோயிலின்கண் எழுந்தருளி இருக்கின்ற சிந்தாவிளக்கென்னும் தெய்வப் பாவையே! இப் பேற்றிற்குக் காரணம் நீயேயாவாய்; மாரி நடுநாள் வயிறு காய் பசியால் ஆர் இருள் அஞ்சாது அம்பலம் அணைந்து - பண்டொரு காலத்தே கார்ப்பருவத்தில் மழை பொழிந்து கொண்டிருந்த ஒருநாளின் நள்ளிரவிலே தம் வயிறு தம்மைச் சுடுகின்ற பசித்தீயினுக் காற்றாமையால் நிறைந்த இருளையும் அஞ்சாமல் அம்பலத்திற்கு வந்து; ஆங்கு இரந்து ஊண் வாழ்க்கை என்பால் வந்தோர்க்கு - அவ்வம்பல மருங்கில் பிச்சையேற்றுண்ணும் வாழ்க்கையையுடையேனாய்த் துயின்றிருந்த என்னிடத்தே வந்து உணவு இரந்தவர்களுக்கு; அருந்து ஊண் காணாது அழுங்குவேன் கையில் - பசிதீர அருந்துதற்குரிய உணவு கொடுத்தற்கு வழிகாணாமல் வருந்துவேனாகிய என கையில்; ஏடா அழியல் எழுந்து இது கொள்க - ஏடா ஆபுத்திரனே! வருந்தாதே கொள், எழுந்து வந்து இத் திருவோட்டினை ஏற்றுக் கொள்வாயாக; நாடு வறம் கூரினும் இவ் ஓடு வறம் கூராது என - இந்நாடு முழுவதும் வறுமையுற்று வருந்தினும் இத்திருவோடு தன்கண் உணவின்றி வறுமையுறாது காண் என்று சொல்லி; அமுதசுரபி அங்கையில் தந்து என பவம் அறுவித்த வானோர் பாவாய் - அமுதசுரபி என்னும் அத் தெய்வத் தன்மையுடைய பிச்சைப் பாத்திரத்தை என்னுடைய அகங்கையில் வழங்குமாற்றால் என்னுடைய பழவினைத் தொகுதியை அறச்செய்து எனனை உய்வித்த தெய்வங்களுக்கும் தெய்வமாகிய கலைத்தெய்வமே என்று வாழ்த்தி; என்க.

(வி - ம்.) மன்னவற்கு : புண்ணியராசனுக்கு. உலந்த பிறவி - கழிந்த பிறப்பு: அஃதாவது ஆபுத்திரனாகிய முற்பிறப்பு. மையறு மண்டிலம் - குற்றமற்ற கண்ணாடி. "வயக்குறு மண்டிலம்" (கலி-௨௫) என வருதலும் காண்க. மன்னவற்கு, காண்போர் முகத்தைக் கண்ணாடி காட்டுதல் போல பீடிகை உலந்த பிறவியைக் காட்ட என்க. என்பிறப்பறிந்தேன் என்பது தொடங்கிப் புண்ணியராசன் தன்முற்பிறப்பாகிய ஆபுத்திரனுக்கு நிகழ்ந்தவற்றை அகக்கண்ணின் முன் கண்டு கூறுவன. மதுரையில் ஆபுத்திரன் அமுதசுரபி பெற்ற வரலாற்றினை இந் நூலில். ௧௪-ஆம் காதையில் காண்க. பவம் - பழவினைத் தொகுதி; பிறப்புக்குக் காரணமான சார்பு.

இதுவுமது

௧௫௮ - ௧௬௭ : உணர்வில்.........யிருப்ப

(இ - ள்.) உணர்வில் தோன்றி உரைப்பொருள் உணர்த்தும் மணி திகழ் அவிர் ஒளி மடந்தை நின் அடி - உயர் திணை உயிர்களின் உள்ளுணர்வினுள் எழுந்தருளி அவர்க்கு

இன்றியமையாத சொல்லின் பொருள்களை உணர்த்துகின்ற பளிக்கு மணியில் இகழ்ந்து விரிகின்ற ஒளி போன்று வெண்மையான ஒளியையுடைய திருமேனி படைத்த கலைமகளே நின்னுடைய திருவடிகள்; தேவர் ஆயினும் பிரமர் ஆயினும் நா மாசு கழூஉம் நலங்கிளர் திருந்து அடி - தேவர்களாயிருந்தாலும் பிரமர்களாயிருந்தாலும் அவர்களுடைய நாவினது குற்றத்தைப் போக்கி நலந்தோற்றுவிக்கும் அழகிய தெய்வத் தன்மையுடைய அடிகளாதலால் எளியேன்; பிறந்த பிறவிகள் பேணுதல் அல்லது- எத்தனை பிறப்புப் பிறந்தாலும் அவற்றை வழிபாடு செய்து வாழ்வதல்லது; மடந்தை மறந்து வாழேன் என்று ஏத்தி - நா மடந்தையே மறந்து கணப்பொழுதும் வாழ்கிலேன் கண்டாய் என்று சொல்லி வாழ்த்தி; மன்னவன் மணிமேகலையுடன் எழுந்து தென் மேற்கு ஆகச் சென்று - அப் புண்ணியராசன் மணிமேகலையோடு அவ்விடத்தினின்றும் எழுந்து தென்மேற்றிசையிலே சென்று; இரை உலாம் கோமுகி என்னும் பொய்கையின் கரை ஓர் தூ மலர் புன்னை துறை நிழல் இருப்ப - அத் திசையில் எதிர்ப்பட்ட அலை உலாவுகின்ற கோமுகி என்னும் பெயரையுடைய பொய்கையினது கரையிடத்தே ஒரு தூய மலரையுடைய புன்னை மரம் நிற்கின்ற துறையிடத்தே அப் புன்னை நிழலில் இளைப்பாறி இராநிற்ப; என்க.

(வி - ம்.) கலைமகள் உணர்விற்கு உணர்வாய் நின்று சொற்பொருள் உணர்த்தும் தெய்வம் என்கின்றான். கலைமகள் வெண்ணிறம் உடையள் ஆதலின் பளிக்கு மணியின் ஒளியை உவமை கூறினான்; மணி-முத்து எனினுமாம். தெய்வங்களுக்கும் நலமுண்டாக்கும் திருந்தடி நின்னுடைய அடி ஆதலால் யானும் அவற்றைப் பேணுதல் அல்லது மறந்து வாழேன் என்றான்; பிறந்த பிறவிகள் - பிறக்கும் பிறவிகள் தோறும் என்றவாறு.

## தீவதிலகை என்னும் தெய்வம் தோன்றிப் புண்ணியராசனைப் புகழ்தல்

கடுஅ - கசுஎ : ஆபுத்திரன்.........இவைகாண்

(இ - ள்.) ஆபுத்திரனோடு ஆயிழை இருந்தது காவல் தெய்வதம் கண்டு உவந்து எய்தி - அவ்வாறு ஆபுத்திரனாகிய புண்ணியராசனோடு மணிமேகலை புன்னை நீழலின்கண் வீற்றிருந்ததனை அத் தீவகத்தின் காவற்றெய்வமாகிய தீவதிலகை கண்டு பெரிதும் மகிழ்ந்து திருவுருவங்கொண்டு அவர்கள் முன்னிலையில் சென்று புண்ணியராசனை நோக்கி; அருந்து உயிர் மருந்து முன் அம் கையில் கொண்டு பெரும் துயர் தீர்த்த அப் பெரியோன் வந்தனை - உயிர்கள் உண்ணும் உணவாகிய உயிர் மருந்தினைச்

சார்ந்து வழங்கும் அமுதசுரபியை அன்பு அகங்கையில் ஏந்திக் கொண்டு ஆருயிர்களின் பெரிய பசித்துன்பத்தைத் தீர்த்தருளிய அந்த ஆபுத்திரனாகிய பெரியோய் நீ மாறிப் பிறந்தும் ஈண்டு வந்துற்றனை; அந்நாள் நின்னை அயர்த்துப் போயினர் பின் நான் வந்து நின் பெற்றிமை நோக்கி - அந்தக்காலத்திலே உன்னை மறந்து மரக்கலம் ஏறிப்போனவர்களில் சிலர் பிற்றை நாளில் நினைவு கூர்ந்து மீண்டும் இங்கு வந்து நீ உண்ணா நோன்பின் உயிர் நீத்த தன்மையை அறிந்து வருந்தி; நின் குறி இருந்து தம் உயிர் நீத்தோர் ஒன்பது செட்டிகள் உடல் என்பு இவை காண் - நீ உண்ணா நோன்பிருந்த இடத்திலேயே தாமும் உண்ணா நோன்பிருந்து தம்முயிரையும் விட்ட ஒன்பது செட்டி மக்களுடைய உடம்பினது எலும்புக் கூடுகள் இதோ கிடக்கின்றன இவற்றையும் காண்பாயாக. அப்பாலும்; ஆங்கு அவர் இட உண்டு அவர் உடன் வந்தோர் ஏங்கி மெய் வைத்தோர் என்பும் இவை காண் - அவ்வாறிறந்த செட்டி மக்கள் உணவு கொடுப்ப உண்டு அவரோடு வந்தவர்கள் அவர் இறந்ததை கண்டு துன்பத்தால் ஏங்கி இவ்விடத்தே இறந்தோரும் சிலர் உளர் அவர்கள் எலும்புக் கூடுகளும் இதோ கிடக்கின்றன இவற்றையும் காண்பாயாக என்றாள்; என்க.

(வி - ம்.) உயிர் மருந்து - அமுதசுரபி: ஆகுபெயர். அங்கை - அகங்கை; உள்ளங்கை. அப்பெரியோய் என்றது அவ்வாபுத்திரன் ஆகிய பெரியோய் என்றவாறு. அந்நாள் என்றது முற்பிறப்பிலே மதுரையிலிருந்து மரக்கலமேறி இத்தீவத்தை அடைந்த அந்த நாளிலே என்றவாறு. பெற்றிமை என்றது உண்ணாநோன்போடு உயிர்பதிப் பெயர்த்தமையை; இவ் வரலாற்றை இந்நூலின் ௧௪ ஆம் காதையில் காண்க. நின்குறி - நீயிருந்த இடம். அவ்விடத்துத் தாமும் உண்ணா நோன்புடன் இருந்து அவரும் உயிர் நீத்தனர் என்னும் பொருளும் தோன்ற நின்குறி இருந்து தம்முயிர் நீத்தோர் என்றாள். இட உண்டவர் - உணவு கொடுக்க வாங்கி உண்டவர். மெய் வைத்தோர் என்றது இறந்தோர் என்றவாறு. என்பு - எலும்பு.

## தீவதிலகை புண்ணியராசனுக்கு அவனது முற்பிறப்பின் உடல் என்பினைக் காட்டல்

### ௧௬௮ - ௧௭௪: ஊர்திரை.........ஆயினை

(இ - ள்.) ஊர்திரை தொகுத்த உயர் மணல் புதைப்ப ஆர்கலி மலர்ப்புன்னை அணி நிழல் கீழால் - ஊர்ந்து வருகின்ற அலைகள் கொணர்ந்து சேர்த்த இவ்வுயர்ந்த மணல் புதைத்து விட்டமையால் அழகிய மலரையுடைய இப்புன்னை மரத்தின் நிழலில் இம் மணற்குவியலின் கீழ்; அன்புடை ஆர் உயிர்

அரசற்கு அருளிய என்புடை யாக்கை இருந்தது காணாய் - அன்புடைய தனது உயிரைப் புண்ணியராசனுகிய உனக்கு வழங்கி விட்ட எலும்புகளையுடைய உடம்பு உங்கே கிடந்தது அதனையும் நீ கண்டு கொள்வாயாக, இவ்வாற்றால் நீ தானும்; நின் உயிர் கொன்ருய் நின் உயிர்க்கு இரங்கி பின் நாள் வந்த பிறர் உயிர் கொன்ருய் - நின்னுடைய உயிரையும் கொன்ருெழித்தனை நின்னுடைய உயிர் வருந்துமென்பதற்கிரங்கிப் பிற்காலத்தே நின்னைக் காண வந்த அன்புமிக்க பிறருடைய உயிர்களையும் கொன்ருெழித்தாய்; கொலைவன் அல்லையோ கொற்றவன் ஆயினை - இவ்வாறு பல கொலைகள் செய்த தீவினையாளன் அல்லையோ நீ அங்ஙனமிருந்தும் நீ அரசனுகப் பிறந்துள்ளனையே இஃதொரு வியப்பிருந்தவாறு! என்று அத் தெய்வம் புண்ணியராசனுக்குச் சொல்லி வியந்து என்க.

(வி - ம்.) ஊர்திரை: வினைத்தொகை. ஆய் மலர் - அழகிய மலர். அன்புடை ஆருயிர் அரசற்கு அருளிய என்புடை யாக்கை என்றது அந்த யாக்கையிலிருந்த உயிரே இப்பொழுது புண்ணியராசனுடைய உயிராயிருப்பதுபற்றி ஆபுத்திரன் யாக்கை உயிருடன் இருக்கும் பொழுது ஆற்றுமாக்களுக்கு உண்டி கொடுத்ததூஉமன்றி இறக்கும்பொழுதும் தன்னுயிரை அரசன் ஒருவனுக்கு வழங்கியது என்னும் நயம்பட உரைத்தமை உணர்க. பல உயிர்களைக் கொன்றும் கொற்றவன் ஆயினை என்றது மருட்கை அணி. கொலைவன் - கொலைத் தொழிலாளன். இதனை வஞ்சப்புகழ்ச்சி எனலுமாம்.

## தீவதிலகை மணிமேகலைக்குக் கூறுதல்

## புகார் நகரம் கடல் கோட்படுதல்

### க௭௫ – க௮௯ : பலர்.........கொடுத்தலும்

(இ - ள்.) பலர்தொழு பாத்திரம் கையின் ஏந்திய மடவரல் நல்லாய் நின் தன் மாநகர் கடல் வயிறு புக்கது- பின்னர் அத் தீவதிலகை மணிமேகலையை நோக்கிப் பலராலும் தொழத்தகுந்த மாபெரும் பாத்திரமாகிய அமுதசுரபியைக் கையில் ஏந்துதற்குரிய செய்தவமுடைய மணிமேகலை நல்லாய் ஒன்று கேள்! அஃதாவது உன்னுடைய பெரிய நகரமாகிய பூம்புகார் நகரம் கடலில் அழுந்தி மறைந்தது காண்; காரணம் கேளாய் - அங்ஙனம் மறைந்ததற்குரிய காரணத்தையும் கூறுவல் கேட்பாயாக; நாக நல் நாடு ஆள்வோன் தன் மகள் பீலிவளை என்பாள் பெண்டிரின் மிக்கோள் - நாக நாடென்னும் நல்ல நாட்டை ஆள்பவனுகிய வளைவணன் என்னும் அரசனுடைய மகள் பீலிவளை என்னும் பெயரை உடையவள் மகளிருள் மாண்பு மிக்கவள் ஆவாள்; பனிப்பகை வானவன் வழியில் தோன்

றிய புனிற்று இளம் குழவியோடு பூங்கொடி பொருந்தி - கதிரவனாகிய தெய்வத்தின் மரபிலே பிறந்ததும் ஈன்றணிமைக் காலத்ததுமாகிய தன பச்சிளங் குழவியோடே பூங்கொடி போல்வாளாகிய அப் பீலிவளை இம் மணிபல்லவத் தீவகத்தில் வந்து; இத்தீவகம் வலஞ் செய்து தேவர்கோன் இட்ட மாபெரும் பீடிகை வலம் கொண்டு ஏத்துழி இம் மணிபல்லவத் தீவை வலம் வந்து பின்னர் அதனுள்ளே தேவேந்திரனால் இடப்பட்ட மிகவும் பெருமையுடைய புத்த பீடிகையையும் கண்டு அதனையும் வலஞ் வந்து வணங்கி ஏத்தும்பொழுது; கம்பளச் செட்டி கலம் வந்து இறுப்ப - கம்பளச் செட்டி என்னும் ஒரு வணிகனுடைய மரக்கலமானது இத் தீவின் துறையில் வந்து தங்கா நிற்ப; அங்கு அவன் பால் சென்று அவன் திறம் அறிந்து - அப் பீலிவளை தன் குழவியோடு அவ் வணிகன்பால் சென்று அவ் வணிகன் காவிரிப்பூம்பட்டினத்து வணிகன் என்பதனையும் அவன் மரக்கலம் அப்பொழுது அந் நகரத்திற்கே போக விருக்கிறது என்னும் அவனுடைய வரலாறு முழுவதும் தெரிந்துகொண்ட பின்னர்; இவன் கொற்றவன் மகன கொள்க எனக் கொடுத்தலும் - வணிகனே இம் மைந்தன் உன்னுடைய அரசனாகிய நெடுமுடிக் கிள்ளியினுடைய மகனாவான் ஆகவே இவனை அவன்பால் சேர்ப்பித்தற் பொருட்டு இக் குழந்தையை நீ ஏற்றுக்கொள், நீ அந் நகரத்திற்குச் சென்றவுடன் அவ்வரசன் பால் ஒப்பித்திடுக என்று அறிவுறுத்துக் கொடா நிற்ப; என்க.

(வி - ம்.) பாத்திரம் - அமுதசுரபி. மாநகர் - காவிரிப்பூம் பட்டினம். கடல் வயிறு புகுதலாவது கடல் கோட்படுதல். மேலே காவிரிப்பூம்பட்டினம் கடல் வயிறு புகுந்தமைக்குக் காரணம் கூறப்படுகின்றது. நாக நன்னாடாள்வோன் - வளைவணன். பனிப்பகை வானவன்: கதிரவன். பீலிவளை - கதிரவன் குலத்தோன்றலாகிய நெடுமுடிக் கிள்ளிக்குக் கருக்கொண்டு ஈன்ற மகவாதலின் கதிரவன் வழியில் தோன்றிய குழவி என்றாள். புனிறு - ஈன்றணிமைக் காலம். தீவகம்- மணிபல்லவம். பீடிகை - புத்த பீடிகை. இறுப்ப - தூங்க. அவன் திறம்- அச்செட்டி பூம்புகார் நகரத்திற்குப் போகின்றவன் என்பது முதலிய வரலாறு. கொற்றவன்: நெடுமுடிக்கிள்ளி. கொற்றவன் மகன் இவன் கொள்க என்றது நின் கொற்றவன் மகனாதலின் இவனைக் கொடுபோய் அக் கொற்றவன்பால் கொடுத்திடுக என்னும் குறிப்புப் பொருள் கொண்டு நின்றது.

## இதுவுமது

கஅஎ - ககூஎ : பெற்ற........ஒழிந்தது

(இ - ள்.) பெற்ற உவகையன் பெருமகிழ்வு எய்தி - இத் தகைமைத்தொரு பேறு பெற்றமையால் மகிழ்ந்தவன் அம் மகவினைப்

பார்த்து மேலும் பெரிதும் மகிழ்ந்து; பழுது இல் காட்சி பைந்தொடி புதல்வனை தொழுதனன் வாங்கி - குற்றமற்ற தோற்றத்தையுடைய அப் பீலிவளை ஈந்த மகவினைக் கைதொழுது ஏற்றுக்கொண்டு தன் மரக்கலத்திற்கு வந்து; துறை பிறக்கு ஒழிய கலம் கொண்டு பெயர்ந்த அன்றே - அத் துறை பின்னே கிடக்கும்படி தன் மரக்கலத்தைச் செலுத்திக் கொண்டு போன அற்றை நாளிலே; கார் இருள் இலங்குநீர் அடை கரை அக்கலம் கெட்டது - கரிய இருளையுடைய இரவிலே விளங்குகின்ற அலைநீர் சென்றடைகின்ற கரை மருங்கில் அம் மரக்கலம் உடைந்தொழிந்தது; கெடுகல மாக்கள் புதல்வனைக் கெடுத்தது வடிவேல் கிள்ளி மன்னனுக்கு உரைப்ப - மூழ்கிய அம் மரக்கலத்தினின்றும் உய்ந்து கரையேறிய மாந்தர் சென்று பீலிவளை கொடுத்த குழவியை இழந்துவிட்ட செய்தியை வடித்த வேலேந்திய நெடுமுடிக்கிள்ளி மன்னவனுக்கு அறிவியாநிற்ப; மன்னவன் மகனுக்கு உற்றது பொறாஅன் நல்மணி இழந்த நாகம் போன்று - அச் செய்தி கேட்ட அச் சோழ மன்னவன் தன் மகவிற்கு நேர்ந்த அக் கேட்டினைப் பொறாதவனாய் நல்ல மணியை இழந்துவிட்ட நாகப்பாம்பு போலே; கானலும் கடலும் கரையும் தேர்வுழி வானவன் விழாக்கோள் மாநகர் ஒழிந்தது - அக் குழந்தையைக் காணும் பொருட்டுக் கடற்கரைச் சோலையிலும் கடலினூடும் கரை மருங்கினும் தேடித் திரிகின்றபொழுது இந்திரவிழா வெடுத்தலை அப் பூம்புகார் நகரம் ஒழிவதாயிற்று என்றாள்; என்க.

(வி - ம்.) பழுதில் காட்சிப் புதல்வனை, பைந்தொடி புதல்வனை எனத் தனித்தனி கூட்டுக. தொழுதனன்: முற்றெச்சம். பிறக்கு ஒழிய- பின்னே கிடப்ப. கரை மருங்கில் கலம் கெட்டது என்க. கெடுகல மாக்கள் - கெட்ட கலத்தினின்றும் உய்ந்து கரையேறிய மாக்கள் என்க. கெடுத்தது - இழந்த செய்தியை. வடிவேலையுடைய நெடுமுடிக் கிள்ளி என்க. தேர்வுழி - தேடித்திரிகின்ற பொழுது. வானவன் விழாக் கோள் - இந்திர விழாச் செய்தலை.

## இதுவுமது

### ௧௯௮ - ௨௦௯ : மணிமேகலா.........புக்கனர்

(இ - ள்.) மணிமேகலா தெய்வம் மற்று அது பொறாஅள் அணி நகர் தன்னை அலைகடல் கொள்க என சாபம் இட்டனள் இது பட்டது - மணிமேகலா தெய்வமானவள் இந்திரவிழாச் செய்யாமையாகிய அக் குற்றத்தைப் பொறாமல் சினந்து அழகிய அந் நகரத்தை அலையையுடைய கடல் கவர்ந்து கொள்வதாக என்று சாபமிட்டனள் இதுவே அதற்குரிய காரணமாம்; கடவுள் மாநகர் கடல் கொள பெயர்ந்த வடிவேல் தடக்கை

வானவன் போல - தேவர்கள் வாழும் அமராபதி நகரத்தைக் கடல் கவர்ந்து கொள்ளா நிற்ப அந் நகரத்தினின்றும் தனியே புறம் போந்த வடித்த வேலையுடைய பெரிய கையையுடைய இந்திரனைப் போல; விரி திரை வந்து வியல் நகர் விழுங்க உலக மன்னவன் ஒரு தனி போயினன் - விரிகின்ற அலைகளையுடைய கடல் பெருகி வந்து அகன்ற தன் தலைநகரத்தைக் கவர்ந்து கொண்டமையாலே இவ்வுலகத்தை ஆளும் அச் சோழ மன்னன் பெரிதும் தமியனாய் உய்ந்து போயினன்; அருந்தவன் தன் உடன் ஆயிழை தாயரும் வருந்தாது ஏகி வஞ்சியுள் புக்கனர் - அரிய தவத்தினையுடைய அறவணவடிகளாருடன் மணிமேகலாய் நின்னுடைய தாயராகிய மாதவியும் சுதமதியும் மனம் வருத்தம் இல்லாமல் அந் நிகழ்ச்சியை முன்னரே யறிந்து அந் நகரத்தினின்றும் புறப்பட்டுச் சென்று வஞ்சிமாநகரினுள் புகுந்தனர்.

(வி - ம்.) அது பொருஅள் - விழாக்கோள் ஒழிந்த அக் குற்றத்தைப் பொருளாய் என்க. நகர் - பூம்புகார். இது பட்டது என மாறுக. பட்டது - நிகழ்ந்தது. கடவுள் மாநகர் - அமராபதி. வானவன் - இந்திரன். கடவுள் மாநகர் கடல் கொளப் பெயர்ந்த வானவன் என்றது இல்பொருள் உவமை. வியல்நகர் - அகன்ற நகரம். உலக மன்னவன்: நெடுமுடிக்கிள்ளி. அருந்தவன் என்றது அறவணவடிகளாரை. அடிகளாருடன் நின் தாயரும் வருந்தாது ஏகினர் என்றது அறவணர் இந் நகரம் கடல்கோட்படும் என்று முற்படவே அறிந்து போக அவருடன் வருந்தாது ஏகினர் என்பதுபட நின்றது.

## தீவதிலகை மறைந்து போதல்

௨௦௭ - ௨௧௯ : பரப்பு.........போயபின்

(இ - ள்.) பரப்பு நீர் பௌவம் பலர் தொழக் காப்போன் உரைத்தன - பெரும் பரப்பாகிய நீரையுடைய கடலைப் பலரும் கை தொழும்படி காவல் செய்கின்ற மணிமேகலா தெய்வத்தால் இவ் வரலாறு எனக்குக் கூறப்பட்ட செய்திகளாம்; கேட்க உருகுவை ஆயின் - இன்னும் அத் தெய்வத்தின் செய்தி கேட்க ஆர்வம் கொண்டு மனம் உருகி நிற்பாயானால்; நின் மன் உயிர் முதல்வனை - நின்னுடைய உயிர் இப் பிறப்பெடுத்தற்கு உரிய முதல்வன் ஒருவனை; மணிமேகலா தெய்வம் முன் நாள் எடுத்ததும் அந் நாள் ஆங்கு அவன் அற அரசு ஆண்டதும் - அந்த மணிமேகலா தெய்வம் பண்டொரு காலத்தே கடல் நடுவே உடைந்த மரக்கலத்தினின்றும் எடுத்துக் கரையேற்றி விடுத்ததும் அந்த நாளிலே அவ் வணிகன் அறங்களுக்கு அரசாகிய புண்ணிய தானமென்னும் பேரறத்தைச் செய்ததும் பிறவும் ஆகிய செய்திகளை எல்லாம்; மறு பிறப்பாட்டி - மறுபிறப்புணரும் மணிமேகலாய்

கீ; அறவணன் தன்பால் வஞ்சி உள் கேட்பை என்று - அறவணவடிகளிடத்தே வஞ்சி நகரத்தின்கண் கேட்டறிகுவை என்று சொல்லிவிட்டு; அந்தரத் தீவகத்து அருந்தெய்வம் போயபின் - அச் சிறு தீவகத்தின் அரிய காவற்றெய்வமாகிய அத் தீவதிலகை மறைந்து போனபின்னர்; என்க.

(வி - ரை.) பௌவம் - கடல். காப்போள் - காக்கும் மணிமேகலா தெய்வம்; இவை காப்போளால் எனக்குக் கூறப்பட்டன. உருகுவை - கேட்க விரும்பி உளம் உருகுவையாயின் என்க. கேட்கவுறுகுவை என்றும் பாடம்; இதற்கு, கேட்டற்கு அமைவாயானால் எனப் பொருள் கூறுக. மன்னுயிர் முதல்வன் என்றது கோவலன் குலத்தில் முன்னோனாகிய ஒரு வணிகனை. முன்னெடுத்தது என்றது பண்டொரு காலத்தில் மரக்கல முடைந்து கடலில் நீந்தி வருந்திய காலத்தில் எடுத்துப் பாதுகாத்த செயலை. அறவரசாண்டது - புண்ணியதானம் செய்தது. இதனை—

'நாத னுவோ னளிநீர்ப் பரப்பின்
எவ்வமுற் றான்றன தெய்வந் தீரெனப்
பவ்வத் தெடுத்துப் பாரமிதை முற்றவும்
அறவர சாளவு மறவாழி யுருட்டவும்
பிறவிதோ றுதவும் பெற்றிய ளென்றே
சாரண ரறிந்தோர் காரணங் கூற''

என இந் நூலில் (உக : உச - உகூ) வருதலாலும் சிலப்பதிகாரத்தில் கதி: கூக ஆம் அடியினும் காண்க. மறுபிறப்பாட்டி - பழம் பிறப்பை உணர்ந்த சிறப்புடைய மணிமேகலாய் என்று விளித்தவாறு. அந்தரத் தீவகம் - சிறு தீவாகிய மணிபல்லவம். அருந்தெய்வம்: தீவதிலகை.

## புண்ணியராசன் மணலையகழ்ந்து தனதுடலின் என்புக் கூட்டைக் கண்டு மயங்குதல்

உகச - உஉ௦: மன்னவ.........மயங்க

(இ - ள்.) மன்னவன் இரங்கி - புண்ணியராசன் தனது முற்பிறப்பின் உடம்பு இம் மணலின் கீழ் உளது என்றது கேட்டுத் துன்புற்று அதனைப் பார்த்தற் பொருட்டு; மணிமேகலை உடன் துன்னிய தூமணல் அகழ்த் தோன்றி - அம் மணிமேகலையுடன் தானும் அங்குச் செறிந்த தூயமணலை அகழ்தலாலே காணப்பட்டு; ஊன் பிணி அவிழவும் உடல் என்பு ஒடுங்கி தான் பிணி அவிழாத் தகைமையது ஆகி - அவ்வுடம்பானது தனது தசையின் பிணிப்பு அவிழ்ந்து மறைந்தொழிதலால் அவ்வுடலின் என்புக்கூடு ஒடுங்கித் தான் தனது கோப்புக் குலையாத தன்மையுடையதாய்; வெள் சுதை வேய்ந்து அவண் இருக்கையின்

இருந்த பண்பு கொள் யாக்கையின் படிவம் நோக்கி - வெண்மையான சுண்ணச் சாந்து பூசப்பெற்று அவ்விடத்திலே இருத்தல் போல இருந்த தன்மையைக் கொண்டிருக்கின்ற தன் முற்பிறப்பாகிய ஆபுத்திரனின் உருவத்தைப் பார்த்து அதன்கண் உண்டான பற்றுக் காரணமாக; மன்னவன் மயங்க - அவ் வரசன் மயங்கா நிற்ப.

(வி - ம்.) மன்னவன்: புண்ணியராசன். மணிமேகலையுடன் என்றதனால் மணிமேகலையும் அவ்வறவோன் உடம்பைக் காண விரும்பிப் புண்ணியராசனோடு அத் தூமணலை அகழ்ந்தனள் என்பது பெற்றாம். ஊன் பிணி - தசைப்பற்று. தான் - உடம்பின் எலும்பு. சுதை - சுண்ணச்சாந்து. இருக்கையின் - இருத்தல் போல. படிவம் - உருவம். மன்னவன் அவ்வுடம்பு தன்னுடையதென்னும் பற்றுக் காரணமாக மயங்கினன் என்பது கருத்து.

### மணிமேகலை புண்ணியராசனை மயக்கந்தீர்த்துச் செவியறிவுறுத்தல்

௨௨௦ - ௨௩௧ : மணிமேகலை.........இல்என

(இ - ள்.) மணிமேகலை எழுந்து இலங்கு இதழ் தாரோய் என் உற்றனையோ - அது கண்ட மணிமேகலை எழுந்து விளங்குகின்ற மலர்மாலையை அணிந்த மன்னவனே! இங்ஙனம் மயங்குதற்கு இங்கு யாது தீங்கு வந்து எய்தப் பெற்றனை; நின் நாடு அடைந்து யான் நின்னை ஈங்கு அழைத்தது - நின்னுடைய நாட்டிற்கு வலிய வந்து யான் உன்னை இம் மணிபல்லவத்திற்கு அழைத்து வந்தது நின்னை இவ்வாறு மயக்குவித்தற்கன்று காண்; மன்னு நின் தன் மறு பிறப்பு உணர்த்தி அந்தரத் தீவினும் அகன் பெருந் தீவினும் நின் பெயர் நிறுத்த - வேந்தே! உன்னுடைய பழம்பிறப்பை உணர்வித்து இரண்டாயிரம் சிறு தீவுகளிடத்தும் அகன்ற நான்கு பெருந்தீவுகளிடத்தும் நின்னுடைய புகழை நிலைநிறுத்தற் பொருட்டே காண்; நீள் நிலம் ஆளும் அரசர் தாமே அருள் அறம் பூண்டால் புரை தீர்த்தற்கு பிறபொருளும் உண்டோ - நெடிய நிலவுலகத்தை ஆளுகின்ற அரசர்கள் தாமே புத்த பெருமான் திருவாய்மலர்ந்தருளிய அருளறத்தை மேற்கொண்டு ஒழுகுவாராயின் பின்னர் இவ்வுலகத்தில் குற்றம் தீர்த்தற்குரிய பொருள் பிற உண்டாகுமோ? யாண்டும் அருளறமே தழைத்தோங்குவதாம்; அறம் எனப்படுவது யாது என கேட்பின் மறவாது இதுகேள் - அவ் வருளறந்தான் எத்தகையதென்று வினவுவாயாயின் கூறுவன் மறவாமல் இதனைக் கேட்பாயாக, அஃதாவது; மன் உயிர்க்கு எல்லாம் உண்டியும் உடையும் உறையுளும் அல்லது கண்டது இல் என - உடம்பொடு நிலைபெற்று வாழும் உயிர்களுக்கெல்லாம்

இன்றியமையாது வேண்டப்படுவன உணவும் உடையும் உறை விடமும் ஆகிய இம் மூன்றுமே யன்றி இன்றியமையாதனவாகக் கண்ட பொருள் பிறிதொன்றுமில்லை ஆதலால் இவற்றை அவ்வுயிர்களுக்கு வழங்குவதே அருளறம் எனப்படுவது காண் என்று மணிமேகலை அறிவுறுத்தாநிற்ப; என்க.

(வி - ம்.) அருள் என்னும் அன்பீன் குழவி பொருளென்னும் செல்வச் செவிலியால் உண்டு (குறள் - எஅஎ) என்பது பொய்யா மொழியாகலின் பொருட் செல்வம் மிக்க அரசரே அருளறத்தைப் பேணுமிடத்து அவ்வறம் முட்டுப்பாடின்றி நடைபெறுவதாம்; மேலும் அரசன் எவ்வழி அவ்வழி குடிகள் என்பது முதுமொழியாகலின் குடி மக்களும் அருளறத்தை அவாவி மேற்கொள்வர். இங்ஙனம் நிகழின் உலகின்கண் துன்பமே இல்லையாய் இம் மண்ணுலகமே பொன்னுலகாய்த் திகழ்வதாம் என ஈண்டு மணிமேகலை புண்ணியராசனுக்கு அறம் அறிவுறுத்தனள் என்க.

## புண்ணியராசன் கூற்று

### உகக - உகூ: காவலன்.........தானேன்

**(இ - ள்.)** காவலன் உரைக்கும் - அது கேட்ட புண்ணிய ராசன் மணிமேகலைக்குக் கூறுவான்; என் நாட்டு ஆயினும் பிறர் நாட்டு ஆயினும் நல்நுதல் உரைத்த நல்அறம் செய்கேன் - என்னுடைய நாட்டிலும் பிறருடைய நாட்டிலும் நல்ல நெற்றியை யுடையோய் நீ கூறிய இவ்வருளறத்தை யான் நன்கு செய்வேன், மேலும்; என் பிறப்பு உணர்த்தி என்னை நீ படைத்தனை நின் திறம் நீங்கல் ஆற்றேன் யான் என-என்னுடைய பழம் பிறப்பினை அறிவுறுத்தி என்னை நீ இப்பொழுது வேறொரு அறிவாளனைப் படைத்துவிட்டாய், இவ்வாற்றால் எனக்குத் தாயும் தெய்வமும் ஆகின்ற உன்னைப் பிரிந்து யான் என்னூருக்குச் செல்ல ஆற்று இலேன் யான் என் செய்கோ என்று வருந்த; அணி இழை - அது கண்ட மணிமேகலை அவ்வரசனை நோக்கி; புன்கண் கொளல் - வேந்தே! நீ இவ்வாறு துன்புறுதேகொள்; நின் மன் பெரும் நல் நாடு - அரசே! நின்னை அரசனாகவுடைய நினது பெரிய நல்ல நாட்டிலுள்ள உயிர்களெல்லாம்; நீ போந்ததற்கு இரங்கி வாய் எடுத்து அழைக்கும்- நீ இங்கு வந்ததற்கே பெரிதும் வருந்தி உன்னை வாயால் கூப்பிட்டு அழைக்குங்காண் ஆதலால்; வங்கத்து ஏகுதி - நீ இங்குக் காலந்தாழ்த்தாது நின் மரக்கலத்திலேறி நின் நாட்டிற்குச் செல்வாயாக; வஞ்சியுள் செல்வன் என்று அந்தரத்து எழுந்தனள் - யானும் வஞ்சிமா நகரத்தினுள் செல்லுவேன் காண் என்று சொல்லி வானத்திலே எழுந்து பறந்தனள் என்பதாம்.

(வி - ம்.) ஆயினும்: எண்ணிடைச் சொல். நன்னுதல்: முன்னிலைப் புறமொழி. சிற்றறிவுடைய என் பழம் பிறப்பையு முணர்த்தி அருளறத்தையும் அறிவுறுத்து என்னைப் பேரறிஞனாய் அறவோனாய் நீ புதுவோனாகவே படைத்துவிட்டனை ஆதலால் எனக்குத் தெய்வமும் தாயும் போல்வாயாகிய உன்னைப் பிரிந்து செல்லலாற்றேன் என்று இப் புண்ணியராசன் வருந்துவது அவனது பேரன்பை நன்கு புலப்படுத்துகின்றது. ஈண்டுக் கம்பர் காவியத்தில் இராமனைப் பிரியலாற்றாது வருந்திய குகன் என்னும் வேடன் கூறுகின்ற—

“கார்குலாம் நிறத்தான் கூறக் காதல னுணர்த்து வானிப்
பார்குலாஞ் செல்வ நின்னை யிங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வ னேன்யா னின்னலி னிருக்கை நோக்கித்
தீர்கிலே னான தைய செய்குவ னடிமை யென்றான்”

(கம்ப-அயோ. கங்கை - ௪௪)

அன்புரையைப் பெரிதும் ஒத்துளது.

புன்கண் - துன்பம். நின் நன்னாடு நின்னை வாயால் கூவியழைக்குமாதலால் நீ ஏகுதி என்றவாறு. புகார் கடல் வயிறு புக்கமையின் வஞ்சியுள் செல்வன் என்றாள் என்க.

இனி, இக் காதையை அரசன், புகுந்து வணங்கிக் கேட்டு, ‘இவள் யார்’ என்னக் கஞ்சுகன், ‘ஈங்கு வந்தனள்’ என்றலும், ‘இளங்கொடி, வருவாய்’ என்று புகன்று எழுந்து இருந்து போகி வலங்கொண்டு பீடிகையைக் காண்டலும்’ அதனைத் தொழுது அவள் வலங்கொள்ள, அப் பீடிகை உணர்த்த, பணிந்து, ‘போன்றது’ என்று ஏத்தி வலங்கொண்டு இன்னணமாக, இறைவனும் விட்டுப் புக்குக் கேட்டு எய்தி நினைந்து கள்ளாட்டிகழ்ந்து சாற்றி, ‘விளைந்தது’ என்று கூற, மந்திரி சனமித்திரன் தொழுதேத்தி ‘மன்னவ மதிமாறோர்ந்தனை’ என்ற முதுமொழி கூற, முதல்வன் கேட்டு, ‘காத்தல் நின்கடன்’ என்று கூறிக் கூஉய்க் கரையெய்தி ஏறினன். அக்கலம் சென்று சார்ந்திறுத்தலும், பூங்கொடி பொருந்தி மகிழ்வெய்தி வலஞ்செய்து, ‘பீடிகை இது’ எனக் காட்ட, மன்னவன் வலங்கொண்டு ஏத்தினன்; அவனுக்குப் பீடிகை பிறவியைக் காட்ட, மன்னவன், ‘மறந்து வாழேன்’ என்று ஏத்தி மணிமேகலையுடன் எழுந்து சென்று இருப்ப, தெய்வதம் கண்டு உவந்தெய்தி, ‘பெரியோய், வந்தனை; உடலென்பு இவைகாண், என்புமிவைகாண்; காணாய்; கொன்றாய்; கொண்டு அரசன் ஆயினை, மடவரனல்லாய், நகர் கடல் வயிறு புக்கது; காரணங்கேளாய்; மணிமேகலா தெய்வம் சாபமிட்டனள்; இது பட்டது; உலக மன்னவன் போயினன்; தாயரும் புக்கனர்; கேட்க உருகுவையாயின், வஞ்சியுட்கேட்டை’ என்று தெய்வம் போயபின், மன்னவன் இரங்கிப் படிவம் நோக்கி மயங்க, மணிமேகலை எழுந்து, ‘கண்டதுஇல்’ என, காவலன் உரைக்கும்; அங்ஙனம் உரைப்பவன், ‘நீங்கலாற்றேன் யான்’ என, அணியிழை, ‘ஏகுதி; செல்வன்’ என்று எழுந்தனளென இயைத்திடுக.

ஆபுத்திரனோடு மணிபல்லவ மடைந்த காதை முற்றிற்று.

## உகூ. வஞ்சிமாநகர் புக்க காதை

[மணிமேகலை கண்ணகி கோட்ட மடைந்து வஞ்சிமாநகர் புக்க பாட்டு]

அஃதாவது : மணிமேகலை மணிபல்லவத்தினின்றும் வான் வழியாகச் சேர நாட்டுத் தலைநகரமாகிய வஞ்சிமா நகரத்திலே புகுந்த செய்தியும் அங்குக் கண்ணகித் தெய்வத்தையும் கோவலன் திருவுருவத்தையும் வணங்கிய செய்தியும் கூறும் செய்யுள் என்றவாறு.

இதன்கண் வஞ்சி நகரத்தில் புகுந்த மணிமேகலை தணியாக் காதல் தாய் கண்ணகியையும் கொடைகெழு தாதை கோவலன் றன்னையும் குறித்துச் சேரன் செங்குட்டுவன் திருக் கோயிலெடுத்து அவர்களுக்கு சிறுவியுள்ள திருவுருவங்களைக் காண்டற்குப் பெரிதும் விரும்பி அத் திருக்கோயிலில் புகுந்து அவர்களை வணங்கி நின்று தாயாகிய கண்ணகியை நோக்கி,

> "அற்புக்கட னில்லாது நற்றவம் படராது
> கற்புக்கடன் பூண்டு நுங்கடன் முடித்த
> தருளல் வேண்டுமென் றழுது முன்னிற்ப."

அது கேட்ட அப் பத்தினித் தெய்வம் தன் மகளாகிய மணிமேகலைக்கு அவள் வினவிய வினாக்களுக்குப் பொருத்தமான விடை கூறுதலும், தாய் அன்பு கெழும இக் காதையில் கூறப் பட்டிருக்கின்றன.

இக் காதையின்கண் கண்ணகி கோவலர்களின் பழம்பிறப்பு வரலாறும் சேரன் செங்குட்டுவன் வடதிசையிற் சென்று அங்குள்ள கனகவிசயர் முதல் பல வடவாரிய மன்னரை வென்ற செய்தியும் கனகவிசயர் முடிமிசைப் பத்தினித் தெய்வத்திற்குக் கடவுள் உருச்சமைக்கக் கல்லேற்றி வாகை சூடிவருதலும் பிறவும் சுவைபடக் கூறப்படுகின்றன.

அணியிழை யந்தர மாறா வெழுந்து
தணியாக் காதற் றாய்கண் ணகியையுங்
கொடைகெழு தாதை கோவலன் றன்னையுங்
கடவு ளெழுதிய படிமங் காணிய
௫ வேட்கை துரப்பக் கோட்டம் புகுந்து

வணங்கி நின்று குணம்பல வேத்தி
அற்புக்கட னில்லாது நற்றவம் படராது
கற்புக்கடன் பூண்டு நுங்கடன் முடித்தது
அருளல் வேண்டுமென் றழுதுமுன் னிற்ப
ஒருபெரும் பத்தினிக் கடவுளாங் குரைப்போள்
எம்மிறைக் குற்ற விடுக்கண் பொருது
வெம்மையின் மதுரை வெவ்வழற் படுநாள்
மதுரா பதியெனு மாபெருந் தெய்வம்
இதுநீர் முன்செய் வினையின் பயனால்
காசில் பூம்பொழிற் கலிங்கநன் னாட்டுத்
தாய மன்னவர் வசுவுங் குமரனும்
சிங்க புரமுஞ் செழுநீர்க் கபிலையும்
அங்கா ளின்றோ ரடற்செரு வுறுநாள்
மூவிரு காவத முன்னுந ரின்றி
யாவரும் வழங்கா விடத்திற் பொருள்வேட்டும்
பல்கலன் கொண்டு பலரறி யாமல்
எல்வளை யாளோ டரிபுர மெய்திப்
பண்டக் கலம்பகர் சங்கமன் றன்னைக்
கண்டனர் கூறத் தையலின் கணவன்
பார்த்திபன் றொழில்செயும் பரத னென்னும்
தீத்தொழி லாளன் றெற்றெனப் பற்றி
ஒற்ற னிவனென வுரைத்து மன்னற்குக்
குற்றமி லோனைக் கொலைபுரிந் திட்டனன்
ஆங்கவன் மனைவி யழுதன ளரற்றி
ஏங்கிமெய் பெயர்ப்போ ளிறுவரை யேறி
இட்ட சாபங் கட்டிய தாகும்
உம்மை வினைவந் துருத்தலொழி யாதெனும்
மெய்ம்மைக் கிளவி விளம்பிய பின்னுஞ்
சீற்றங் கொண்டு செழுநகர் சிதைத்தேன்
மேற்செய் நல்வினையின் விண்ணவர்ச் சென்றேம்
அவ்வினை யிறுதியி னடுசினப் பாவம்
எவ்வகை யானு மெய்துத லொழியா
தும்ப ரில்வழி யிம்பரிற் பல்பிறப்பு
யாங்கணு மிருவினை யுய்த்துமைப் போல
நீங்கரும் பிறவிக் கடலிடை நீந்திப்
பிறந்து மிறந்து முழல்வோம் பின்னர்
மறந்து மழைமறா மகதநன் னாட்டுக்
கொருபெருந் திலகமென் றுரவோ ருரைக்குங்
கரவரும் பெருமைக் கபிலையம் பதியின்
அளப்பரும் பாரமிதை யளவின்று நிறைத்துத்

துளக்கமில் புத்த ஞாயிறு தோன்றிப்
போதி மூலம் பொருந்திவந் தருளித்
தீதறு நால்வகை வாய்மையுந் தெரிந்து
பன்னிரு சார்பின் பகுதித் தோற்றமும்
அந்நிலை யெல்லா மழிவுறு வகையும்
இற்றென வியம்பிக் குற்றவீ டெய்தி
எண்ணருஞ் சக்கர வாள மெங்கணும்
அண்ண லறக்கதிர் விரிக்குங் காலைப்
பைந்தொடி தந்தை யுடனே பகவன்
இந்திர விகார மேழுமேத் துதலின்
துன்பக் கதியிற் றோற்றர வின்றி
அன்புறு மனத்தோ டவனறங் கேட்டுத்
துறவி யுள்ளந் தோன்றித் தொடரும்
பிறவி நீத்த பெற்றிய மாகுவம்
அத்திற மாயினு மநேக காலம்
எத்திறத் தார்க்கு மிருத்தியுஞ் செய்குவம்
நறைகமழ் கூந்த னங்கை நீயும்
முறைமையி னிந்த மூதூ ரகத்தே
அவ்வவர் சமயத் தறிபொருள் கேட்டு
மெய்வகை யின்னும் நினக்கே விளங்கிய
பின்னர்ப் பெரியோன் பிடகநெறி கடவாய்
இன்னதிவ் வியல்பெனத் தாயெடுத் துரைத்தலும்
இளையள் வளையோ ளென்றுனக் கியாவரும்
விளைபொரு ளுரையார் வேற்றுருக் கொள்கென
மையறு சிறப்பிற் றெய்வதந் தந்த
மந்திர மோதியோர் மாதவன் வடிவாய்த்
தேவ குலமுந் தெற்றியும் பள்ளியும்
பூமலர்ப் பொழிலும் பொய்கையு மிடைந்து
நற்றவ முனிவருங் கற்றடங் கினரும்
நன்னெறி காணிய தொன்னூற் புலவரும்
எங்கணும் விளங்கிய வெயிற்புற விருக்கையில்
செங்குட் டுவனெனுஞ் செங்கோல் வேந்தன்
பூத்த வஞ்சி பூவா வஞ்சியில்
போர்த்தொழிற் றானை குஞ்சியிற் புனைய
நிலநா டெல்லைதன் மலைநா டென்னக்
கைம்மலைக் களிற்றினந் தம்முண் மயங்கத்
தேரு மாவுஞ் செறிகழன் மறவரும்
கார்மயங்கு கடலிற் கலிகொளக் கடைஇக்
கங்கையம் பேரியாற் றடைகரைத் தங்கி
வங்க நாவியி னதன்வடக் கிழிந்து

கனக விசயர் முதற்பல வேந்தர்
அனைவரை வென்றவ ரம்பொன் முடிமிசைச்
சிமைய மோங்கிய விமைய மால்வரைத்
தெய்வக் கல்லுந் தன்றிரு முடிமிசைச்
செய்பொன் வாகையுஞ் சேர்த்திய சேரன்
விற்றிறல் வெய்யோன் றன்புகழ் விளங்கப்
பொற்கொடிப் பெயர்ப்படூஉம் பொன்னகர்ப் பொலிந்
திருந்துநல் லேது முதிர்ந்துள தாதலிற் [தனன்-
பொருந்துநால் வாய்மையும் புலப்படுத் தற்கென்.

---

## உ௬. வஞ்சிமாநகர் புக்க காதை

### உரை

#### வஞ்சி நகரத்தில் மணிமேகலை கண்ணகி கோட்டம் புகுந்து கைதொழுதல்

க - ௬ : அணியிழை.........நிற்ப

(இ - ள்.) அணியிழை அந்தரம் ஆறு எழுந்து - மணிமேகலை வான் வழியாக எழுந்து பறந்து வஞ்சி மாநகர் நோக்கி விரைபவள்; தணியாக் காதல் தாய் கண்ணகியையும் கொடைகெழு தாதை கோவலன் தன்னையும் - ஒரு பொழுதுங் குறைதலில்லாத காதலையுடைய தன் தாயாகிய கண்ணகித் தெய்வத்தையும் வள்ளன்மை பொருந்திய தன் தந்தையாகிய கோவலனையும்; கடவுள் எழுதிய படிமம் காணிய வேட்கை துரப்பக் கோட்டம் புகுந்து - தெய்வமாகச் சமைத்த திருவுருவங்களைக் காணுதற்கெழுந்த விருப்பம் செலுத்துதலாலே அவ் வஞ்சி நகரத்தில் அத் தெய்வங்கள் எழுந்தருளி இருக்கின்ற திருக் கோயிலின் முன்னர் இழிந்து கோயிலுள் புகுந்து; வணங்கி நின்று குணம் பல ஏத்தி - பேரன்போடு திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று அவர்களுடைய பெருந்தகைக் குணங்கள் பலவற்றையும் புகழ்ந்து பாராட்டி அவருள் கண்ணகித் தெய்வத்தை முன்னிலைப்படுத்துக் கூறுபவள்; அற்புக் கடன் நில்லாது நல் தவம் படராது கற்புக் கடன் பூண்டு நும் கடன் முடித்தது அருளல் வேண்டும் என்று அழுது முன நிற்ப - அன்னையே! நீவிர் கற்புடை மகளிர்க்குரிய அன்பின் வழி நின்று செய்யும் கடமையின் வழியினில்லாமலும் அங்ஙனம் நிற்கலாற்றாதார் செல்லும் தவநெறியிற் செல்லாமலும் கற்புடைமையைக் கடமையாகப் பூண்டு அதன் ஆற்றலை வெளிப்படுத்துதலே அப்பொழுது செய்யத் தகுவதென்று அதனையே செய்து முடித்தற்குக் காரணம் காணகிலேன், அதனைக் கூறியருளுதல் வேண்டும் என்று சொல்லி அன்பினால் அழுது கைதொழுது அத் தெய்வத் திருமுன்னர் நிற்ப; என்க.

(வி - ம்.) அணியிழை : மணிமேகலை. அந்தரம் - வானம். ஆறாக எனவும் தணியாத எனவும் வருதல் வேண்டிய பெயரெச்சங்களின் ஈற்றுயிர்மெய் தொக்கன; செய்யுள் விகாரம்: தாயாகிய கண்ணகி என்க. தாயாகிய கண்ணகி கற்புடைமையின் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதுயர்ந்து விளங்கினாற்போலத் தாதையாகிய கோவலன்

வள்ளன்மையால் விளங்கி இருந்தான் ஆதலின் அச் சிறப்புத் தோன்றக் கொடைகெழு தாதை கோவலன் என்றார். கோவலனுடைய கொடைச் சிறப்பினைச் சிலப்பதிகாரத்தில் அடைக்கலக் காதையின் (௬0) "மங்கல மடந்தை" என்பது தொடங்கி (௯௧) "இம்மைச் செய்தன யான் அறி நல்வினை" என்னுமளவும் நிகழ்கின்ற மாடல மறையோன் கூற்றானும் உணர்க. எனவே இருவரும் தெய்வத்திருவுருவம் கோடற்கியன்ற இரு பெருஞ் சிறப்புகளையும் இப் புலவர் பெருமான் விதந்தோதினமை நுண்ணிதின் உணர்க. படிமம் - உருவம். கோட்டம் - கண்ணகியின் கோயில். சிலப்பதிகாரத்தில் தலைமை பற்றிச் சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குத் திருவுருச் சமைத்தமை மட்டுமே கூறப்பட்டது, ஈண்டு இக் காதையினால் கண்ணகி திருவுருவத்தோடு கோவலனுக்கும் திருவுருச் சமைத்திருந்ததும் பெற்றாம். அற்புக்கடனில்லாது என்றது உலகின்கண் கற்புடை மகளிர் கணவனை இழந்த காலத்தே அத் துன்பம் பொறாது உயிர் நீப்பர். இன்றேல் தீயிற் புகுந்து உயிர் நீப்பர். இது தலையாய அன்புடையார் செயல் ஆதலின் நீவிர் தந்தை இறந்துழி இவ்வாறு உயிர் நீத்திலீர் என்பாள் அற்புக்கடனில்லாது என்றாள்.

இனி, இடையாய அன்புடையோர் மறுமையினும் தங் கணவரோடு உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம்படுவர். நீயிர் அதுவும் செய்திலீர் என்பாள் நற்றவம் படராது என்றாள். கற்புக்கடன் பூண்டு நீவிர் கற்புடைய மகளிர்க்குரிய கடமையாகிய தகைசான்ற சொற்காத்தல் என்பதுபற்றி நுங்கணவனுக்குப் பழியின்மை காட்டுதற்கு அரசவையேறி வழக்குரைத்தீர் அதூஉம் சாலும் அப்பாலும் தீவினை சில செய்தற்குக் காரணம் அறிந்திலேன். அக் காரணத்தை அறிவித்தருளுக என்பாள் கற்புக்கடன் பூண்டு நுங்கடன் முடித்தது அருளல் வேண்டும் என்று அழுது முன்னின்றனள் என்க.

இதன்கண் நுங்கடன் முடித்தது அருளல் வேண்டும் என்புழி நுங்கடன் முடித்ததன்கண் மிகை செய்தற்குக் காரணம் கூறுதிர் என்பது குறிப்பெச்சப் பொருளாம். இது பற்றியே மணிமேகலை அழுது வினவினள் என்க. மேலும் கண்ணகியும் இவ் வினாவிற்கே சிறப்பாக விடையிறுத்தலானும் இக் குறிப்புப் பொருள் வலியுறுதல் உணர்க.

இனி, கற்புடை மகளிர் கணவனை இழந்துழிச் செய்யுங் கடமைகளைக் கூறிக் கண்ணகி நல்லாள் மிகை செய்தமையையும் இந் நூலின் கண் உ ஆம் காதையில்,

"காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா
தின்னுயி ரீவ ரீயா ராயின்
நன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர்
நளியெரி புகாஅ ராயி னன்பரோ
டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்
தத்திறத் தாளு மல்லளெம் மாயிழை
கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅள்
மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக்

கண்ணகி ராடிய கதிரிள வனமுலை
திண்ணிதிற் றிருகித் தீயழற் பொத்திக்
காவலன் பேரூர் கனையெரி மூட்டிய
மாபெரும் பத்தினி மகள்மணி மேகலை''

எனவரும் மாதவி கூற்றாலும் உணர்க. ஈண்டு மாதவி கண்ணகி மதுரையை எரியூட்டியதனைக் கண்ணகியின் பெருமையாகக் கருதினள். மணிமேகலையோ இக்காதையில் அதனை ஒரு குற்றமாகக் கருதி வினவு கின்றாள். இவ்வாற்றால் மாதவியினும் கண்ணகியினுங் காட்டில் மணிமேகலை சான்றாண்மையில் சிறந்தவள் ஆதல் கருதி இன்புறற் பாலதாம்.

## கண்ணகி மணிமேகலைக்குக் கூறும் மறுமொழி

கo - கவு: ஒருபெரும்.........உறுநாள்

(இ - ள்.) ஒரு பெரும் பத்தினிக் கடவுள் ஆங்கு உரைப்போள் - இந் நிலவுலகத்தே தனக்குவமையில்லாத ஒரு பெரும் பத்தினிக் கடவுளாகிய அக் கண்ணகி நல்லாள் அன்புடை அம் மகளுக்கு விடை கூறுபவள் அருமை மகளே கேள்; எம் இறைக்கு உற்ற இடுக்கண் பொறாது வெம்மையின் மதுரை வெவ் அழல் படும் நாள் - எமக்குக் கடவுளாகிய உன் தந்தைக்கு நேர்ந்த கொலைத் துன்பங் கேட்டுப் பொறுக்க ஒண்ணாமையால் எழுந்த சினம் காரணமாக மதுரை மாநகரத்தை யாம் வெவ்விய தீக்கிரை யாக்கிய பொழுது; மதுராபதி எனும் மாபெரும் தெய்வம் இது நீர் முன் செய்வினையின் பயன் - அம் மதுரை மாநகரத்திற்குக் காவலாகவமைந்த மதுராபதி என்னும் மாபெரும் தெய்வமானது எம்முன் தோன்றி நங்காய் நுமக்குற்ற இவ் விடுக்கண் நீங்கள் முற்பிறப்பிலே செய்த தீவினையின் பயன் காண், அத் தீவினைதான் யாதெனின்; காசு இல் பூம்பொழில் கலிங்க நல் நாட்டுத் தாய மன்னவர் வசுவும் குமரனும் சிங்கபுரமும் செழுநீர் கபிலையும் அங்கு ஆள் இன்றோர் - குற்றமில்லாத பூம்பொழில்களையுடைய கலிங்கமென்னும் நல்ல நாட்டின்கண் தம்முள் தாயத்தாராகிய அரசர் வசுவென்றும் குமரன் என்றும் உளராயினர் அவர் முறையே சிங்கபுரமென்னும் நகரத்திலும் செழிப்புடைய நீர்வளமுடைய கபிலபுரமென்னும் நகரத்திலும் அங்கிருந்து அரசாட்சி செய்கின்றவர்கள் தம்முள் பகைத்து; அடல்செரு உறுநாள் - ஒருவரையொருவர் கொல்லுதற்கியன்ற போர்த் தொழில் நிகழ்த்துகின்ற காலத்திலே; என்க.

(வி - ம்.) நிலவுலகிலேயே கண்ணகிக்கு நிகரான கற்புடை மகளிர் இலர் ஆதலின் தனக்குவமை இல்லாத பத்தினி என்பது தோன்ற ஒரு பெரும் பத்தினிக் கடவுள் என்றார். எம்மிறை என்றது எமக்கு

இறைவனாகிய உன் தந்தை என்பதுபட நின்றது. இடுக்கண் என்றது கோவலன் கொலையுண்டமையை. வெம்மையின் - சினத்தினால். அழல் படுநாள் - அழல்படுத்திய நாள். நீர் என்றது கோவலனை உளப்படுத்தித் தெய்வம் கூறியபடியாம். இது நீர் முன் செய்வினை என்பது தொடங்கி (கூஉ)ஒழியாது என்னுமளவும் மதுராபதி என்னும் தெய்வம் கூறியதனை கண்டுக் கண்ணகித் தெய்வம் கொண்டு கூறுகின்றபடியாம். மதுராபதி - மதுரை நகரத்துக் காவல் தெய்வம். காசு - குற்றம். தாயமன்னவர் - ஒரு குடியிற் பிறந்த அரசர்கள். வசுவென்பான் சிங்கபுரத்தினும் குமரன் கபிலபுரத்தினும் இருந்து ஆள்கின்றோர் என்றவாறு.

### இதுவுமது

ககூ - உவு: மூவிரு.........இட்டனன்

(இ - ள்.) மூ இரு காவதம் முன்னுநர் இன்றி யாவரும் வழங்கா இடத்தில் - ஆறு காவதத்தொலைவு இடையிலதந்தே முற்பட்டுச் செல்வோர் இல்லாமையால் மாந்தர் எவரும் வழங்குதலின்றிக் கிடந்த பாழ்வெளியிலே; பொருள் வேட்டு பல்கலன் கொண்டு பலர் அறியாமல் எல் வளையாளோடு அரிபுரம் எய்தி - பொருளீட்டுதற்குப் பெரிதும் அவாவிப் பல்வேறு அணிகலன் களைக் கபிலபுரத்தில் வாங்கிக் கொண்டு தன் போல் வணிகர் பலரும் அறியாவண்ணம் ஒளி பொருந்திய வளையலணிந்த தன் மனைவியோடே இரவின்கண் பகை நகரமாகிய சிங்கபுரத்திற் சென்று; பண்டக்கலம் பகர் சங்கமன் தன்னை - தான் விற்கக் கொண்டுவந்த பண்டமாகிய அணிகலன்களை விலை கூறி விற்கின்ற சங்கமன் என்னும் வணிகனை; கண்டனர் கூற - இவன் கபிலபுரத்து வணிகன் என்று அறிந்தவர் தன்பால் வந்து கூறுதலாலே; தையல் நின் கணவன் பார்த்திபன் தொழில் செயும் பரதன் என்னும் தீத்தொழிலாளன் - நங்கையே! உன் கணவனாகிய அரசனபால் தொழில் செய்யும் பரதன் என்னும் பெயரையுடைய தீவினையாளன்; தெற்றென பற்றி மன்னற்கு இவன் ஒற்றன் என உரைத்து - விரைவாகச் சென்று அவ் வணிகனைப் பற்றிக்கொண்டு போய் அரசனுக்குக் காட்டி இவன் வணிகனல்லன் கபிலபுரத்தினின்றும் வந்த ஒற்றனாவான் என்று பொய் சொல்லி; குற்றம் இலோனை கொலை புரிந் திட்டனன் - சிறிதும் குற்றமில்லாத அவ் வணிகனைக் கொலை செய்வித்திட்டான்; என்க.

(வி - ம்.) காவதம் - ஒரு நீட்டலளவை. போர் நிகழும் இடமாதலின் அவ் வழியே யாரும் முற்பட்டுச் செல்வதில்லை ஆதலின் அவ்விடம் மக்கள் வழக்கற்றுக் கிடந்தது என்க. சங்கமன் பொருள் வேட்கை காரணமாக மனைவியோடு அணிகலன்களைக் கபிலபுரத்திற் கொண்டு இருளிலே சிங்கபுரத்திற்குச் சென்று விற்றனன் என்க. அரிபுரம் - சிங்க

புரம். பண்டமாகிய கலம் என்க. பண்டம் - பொன் என்பாரு முளர். பகர்தல் - விற்றல். சங்கமன் : பெயர். தையல் : விளி. பார்த்திபன் தொழில் - அரசியலில் வகிக்கும் உத்தியம். பரதன் - கோவலனுடைய முற் பிறப்பின் பெயர். மன்னற்கு - வசு என்னும் அரசனுக்கு. குற்ற மிலோன் என்றது சங்கமனை.

இதுவுமது

உகூ - கூஎ : ஆங்கவன்.........ஒழியாது

(இ - ள்.) ஆங்கு அவன் மனைவி அழுதனள் அரற்றி ஏங்கி மெய் பெயர்ப்போள் - அப்பொழுது அச் சங்கமனுடைய மனைவியாகிய நீலி என்பவள் அழுது பூசலிட்டுத் துன்பத்தால் ஏங்கி உயிர் விடுபவள் ; இறு வரை ஏறி இட்டசாபம் கட்டியது ஆகும் உம்மை வினை வந்து உருத்தல் ஒழியாது எனும் - பெரியதொரு மலையுச்சியில் ஏறி நின்று நுமக்கு இட்ட சாபமானது நும்மைக் கட்டியுளதாம் முற்பிறப்பிற் செய்த அத் தீவினையானது இப்பொழுது நும்பால் வந்து சினந்து தன் பயனை ஊட்டாது ஒழியாது காண் என்கின்ற; மெய்ம்மை இளவி விளம்பிய பின்னும் சீற்றம் கொண்டு செழுநகர் சிதைத்தேன் - உண்மையான மொழியை அம் மதுராபதித் தெய்வம் எனக்குக் கூறிய பின்னரும் பெருஞ்சினங் கொண்டு வளமான மதுரைமா நகரத்தைத் தீயினால் சிதைத் தொழித்தேன் ; மேல் செய் நல் வினையின் விண்ணவர்ச் சென்றேம் - அன்புடைய மகளே யானும் உன்னையும் முற்பிறப்பிலே செய்த நல்வினையின் பயனாக வானவர்களாய் விண்ணுலகத்திலே சென்றேம்; அவ்வினை இறுதியின் அடுசினப்பாவம் எவ் வகையானும் எய்துதல் ஒழியாது - அந் நல்வினையின் முடிவில் மதுரையை அழித்தற்குக் காரணமான சினத்தாலுண்டான தீவினை எந்த வகையிலேனும் தன் பயனை ஊட்டுதற் பொருட்டு எம்மை வந்தடையாமல் போகாது ; என்க.

(வி - ம்.) ஆங்கவன்-அச் சிங்கபுரத்தில் வாணிகம் செய்த சங்கமன். அழுதனள் : முற்றெச்சம். அரற்றுதல் - பூசலிடுதல். மெய் பெயர்த்தல் - உடம்பினின்றும் உயிரைச் செயற்கை முறையால் போக்குதல். இறுவரை - பெரிய மலை. உம்மை - முற்பிறப்பு. விண்ணவராகிச் சென்றேம் என்றவாறு. அவ்வினை - அந் நல்வினை. அடுசினம்: வினைத்தொகை.

இதுவுமது

கூஅ - சஎ : உம்பர்...........அருளி

(இ - ள்.) உம்பர் இல் வழி - அந் நல்வினை இறுதியின் வானுலகத்தின்கண் ஏது நிகழ்ச்சி எமக்கில்லையாய பொழுது;

இம்பரில் பல்பிறப்பு யாங்களும் இருவினை உய்த்து உமைப் போல நீங்கரும் பிறவிக் கடல் இடை நீந்தி பிறந்தும் இறந்தும் உழல்வோம் பின்னர் - இவ்வுலகத்தின்கண் பல்வேறு பிறப்பு களினும் நல்வினையும் தீவினையுமாகிய இருவினைகளாலும் செலுத் தப்பட்டு மக்கட் பிறப்பிலுள்ள உங்களைப் போலவே யாங்களும் உய்ந்து கரையேறுதற்கரிய பிறவியாகிய கடலின்கண் நீந்திப் பிறந்தும் இறந்தும் உழலா நிற்பேம் பின்னர்; மறந்தும் மழை மறு மகத நல் நாட்டுக்கு ஒரு பெரும் திலகம் என்று உரவோர் உரைக்கும் கரவு அரும் பெருமை கபிலையம்பதியில் - மறந்தேனும் மழை பெய்யாதொழியாத மகதமென்னும் அழகிய நாட்டிற்கே ஒரு பெரிய திலகம் போல்வது என்று சான்றோர்களால் கூறப் படுகின்ற யாராலும் மறைத்தற்கரிய சிறப்பினையுடைய கபிலை என்கின்ற அழகிய நகரத்தின்கண்; அளப்பரும் பாரமிதை அளவு இன்று நிறைத்து துளக்கம் இல் புத்த ஞாயிறு தோன்றி போதி மூலம் பொருந்தி வந்து அருளி - அளத்தற்கியலாத பாரமிதை களை அளவில்லாமல் நிறைத்து நடுக்கமில்லாத புத்தபெரு மானாகிய கதிரவன் தோன்றி அரச மரத்தின் நிழலின்கண் வீற்றிருந்தருளி; என்க.

(வி - ம்.) உம்பர் - வானுலகம். இல்வழி - ஏது நிகழ்ச்சி இல்லாத பொழுது என்க. இருவினை - நல்வினையும் தீவினையும். உமைப்போல என்றது உங்களைப்போல மக்களாக என்றவாறு. தாம் இப்பொழுது தெய்வப் பிறப்புடைமை தோன்ற இங்ஙனம் பிரித்தோதினள். உழல் வோம் என்றது கோவலனை உளப்படுத்தியவாறும். கபிலபுரம் மகத நாட்டின் தலைநகராதலின் அதனை உரவோர் ஒரு பெரும் திலகம் என்று உரைப்பார் என்பது கருத்து. கபிலபுரம் கபிலர் என்னும் முனிவர் தவஞ்செய்தமையால் அப் பெயர் பெற்றது என்பர். இதனைக் கபில வஸ்து எனவும் வழங்குவர். பாரமிதை என்பதன் பொருள் கரை யேறுதற் குரியது என்பதாம். அஃதாவது பிறவிக் கடலினின்றும் கரையேறுதற் குரியது என்றவாறு. இது பத்துவகைப்படும். அவையாவன: தானம், சீலம், பொறை, வீரியம், தியானம், உணர்ச்சி, உபாயம், அருள், வலி, ஞானம் என்னும் இப் பத்துமாம். இவற்றை,

"தானஞ்சீல மும்பொறை தக்கதாய வீரியம்
மூனமில் தியானமே யுணர்ச்சியோடு பாயமும்
மானமில் லருளினைவ் வைத்தலேவ லிம்மையுஞ்
ஞானமீரைம் பாரமிதை நாடுங்கா லிவைகளும்"

(நீலகேசி - ௩௪௭)

எனவரும் நீலகேசியானு முணர்க. புத்த ஞாயிறு - புத்தனாகிய கதிரவன். போதி மூலம் - அரச மரத்தின் அடி.

இதுவுமது

சஅ - ருகூ: தீதறு.........ஆகுவம்

(இ - ள்.) தீது அறு நால்வகை வாய்மையும் தெரிந்து - பிறப்பறுதற்குக் காரணமான நான்கு வகைப்பட்ட வாய்மைகளை யும் நன்கு தெரிந்து; பன்னிரு சார்பின் பகுதித் தோற்றமும் - பேதைமை முதலிய பன்னிரண்டு வகைப்பட்ட நிதானங்கள் பிறக் கும் முறைமையையும்; அந் நிலை எல்லாம் அழிவுறும் வகையும் இற்று என இயம்பி - அப் பன்னிரண்டு சார்புகளும் அழிவெய்து கின்ற தன்மையையும் தனித் தனியே இத் தன்மைத்து எனக் கூறி; குற்ற வீடு எய்தி - காம வெகுளி மயக்கங்களாகிய குற்றங் களினின்றும் விடுதலை பெற்று நின்று; எண்ணருஞ் சக்கரவாளம் எங்கணும் அண்ணல் அறக்கதிர் விரிக்கும் காலை - எண்ணற்கிய லாத உலகமெங்கும் தலைமைத் தன்மையுடைய அப் புத்த பெரு மான் அறமாகிய ஒளியைப் பரப்புகின்ற காலத்தே; பைந்தொடி தந்தை உடனே பகவன் இந்திர விகாரம் ஏழும் ஏத்துதலின் - மணிமேகலாய்! யான் உன் தந்தையோடு சென்று பூம்புகார் நகரத்தே அப் புத்த பகவானுடைய இந்திரனால் இயமிக்கப்பட்ட அரங்குகள் ஏழனையும் தொழுது வணங்கிய நல்வினை காரணமாக; துன்பக்கதியில் தோற்றரவு இன்றி அன்பு உறும் மனத்தோடு அவன் அறம் கேட்டு - துன்பமுறுதற்குக் காரணமான நரக விலங்குப் பிறப்புகளில் பிறவாமல் அப் புத்த பெருமானிடத்து அன்புறுகின்ற நெஞ்சத்தோடே அப் புத்த பெருமான் திருவாய் மலர்ந்தருளுகின்ற நல்லறங்களைக் கேட்டு அது காரணமாக; துறவி உள்ளம் தோன்றி தொடரும் பிறவி நீத்த பெற்றியம் ஆகுவம் - துறத்தற்கியன்ற நன்னர் நெஞ்சம் தோன்றப் பெற்று அது பற்றுக் கோடாகக் கொண்டு அநாதியாகத் தொடர்ந்து வருகின்ற பிறவியாகிய அலைகளையுடைய பெரிய கடலை நீந்தி உய்ந்து வீடுபேறு பெறும் தன்மையை உடையேம் ஆகுவேம் என்றான்; என்க.

(வி - ம்.) தீது - பிறப்பு. நால்வகை வாய்மை - துன்பம் முதலியன. பன்னிருசார்பு - பேதைமை முதலிய பன்னிரண்டு நிதானங்கள். அழி வுறுவகை - அந் நிதானங்கள் அழிவுறும் முறைமை. இற்றென என்னும் ஒருமையை வாய்மை முதலியவற்றோடு தனித்தனி ஒட்டுக. குற்றத்தி னின்றும் விடுதலை பெறுதலைக் குற்றவீடெய்தி என்றார். குற்றம் - காம, வெகுளி மயக்கங்கள். சக்கரவாளம் - உலகம். அண்ணல் - தலைமைத் தன்மை. இதனை அறத்திற்கேற்றினும் அமையும். புத்தஞாயிறு என்ற மையால் அறத்தைக் கதிர் என்றார். பைந்தொடி: முன்னிலைப் புற மொழி. தந்தை - நின் தந்தை; கோவலன். பகவன் - புத்த பெருமான். இந்திரனால் இயற்றப்பட்ட விகாரம் என்க. விகாரம் - அரங்கு. இவை பூம்புகார் நகரத்திலுள்ளவை. இதனை,

"பணையைந் தோங்கிய பாசிலைப் போதி
அணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி
அந்தர சாரிக ளறைந்தனர் சாற்றும்
இந்திர விகார மேழுடன் போகி"

எனவரும் சிலப்பதிகாரத்தானும் (௧௦ : ௧௧ - ௪) உணர்க.

இதுவுமது

௯௦ - ௯௭ : அத்திறம்..........உரைத்தலும்

(இ - ள்.) அத்திறம் ஆயினும் - அப்படி இருந்தாலும்; அநேக காலம் - நீண்ட காலம் இங்குத் தெய்வமாக விருந்து; எத்திறத்தார்க்கும் இருத்தியும் செய்குவம் - எவ்வகைப்பட்ட மக்களுக்கும் சித்தி செய்து கொண்டிருப்பேம்; நறை கமழ் கூந்தல் நங்கை - மணங்கமழும் கூந்தலையுடைய மகளிருள் சிறந்த; நீயும் முறைமையின் இந்த மூதூர் அகத்தே அவ்வவர் சமயத்து அறிபொருள் கேட்டு - நீதானும் முறைமையாக இந்தப் பழைய வஞ்சி மாநகரத்தின்கண் உள்ள சமயக்கணக்கர் பலரையும் தனித்தனியே கண்டு ஒவ்வொரு சமயக்கணக்கரும் அவரவர் சமய நெறியின் வாயிலாய் மெய்ப்பொருளாக அறிந்த பொருள்களைக் கேட்டறிந்து; மெய்வகை இன்மை நினக்கே விளங்கிய பின்னர் - அவர் கூறும் பொருளெல்லாம் உண்மையில்லாமை உனக்கே விளக்கமான பின்னர்; பெரியோன் பிடக நெறி கடவாய் - புத்த பெருமான் திருவாய் மலர்ந்தருளிய பிடக நூல் நெறியைக் கடவா தொழுகுவாய் காண்; இவ் இயல்பு இன்னது என தாய் எடுத்து உரைத்தலும் - உனக்கு எதிர்காலத்தே நிகழவிருக்கும் ஏதுநிகழ்ச்சியின் தன்மை இத் தன்மையதாம் என்று தாயாகிய கண்ணகித் தெய்வம் எடுத்துக் கூறுகிற்பவும்; என்க.

(வி - ம்.) இருத்தி - சித்தி. அஃதாவது தம்மை வந்து வரம் வேண்டுவார்க்கு வேண்டுவன வழங்குதல் முதலியன. நறைகமழ் கூந்தல் என்றது நங்கை என்னும் பெயர்ச் சொல்லுக்கு வாளாது இயற்கை அடைமொழியாய் நின்றது. மூதூர் என்றது வஞ்சி நகரத்தை. அறிபொருள் - ஆராய்ந்தறிந்து துணிந்த பொருள். மெய்வகை இன்மை - உண்மையில்லாமை. பெரியோன் : புத்த பெருமான். பிடகநெறி - பிடகம்; புத்தாகமங்களுக்குப் பெயர். அவை வினயபிடகம் சூத்திரபிடகம் அபிதர்மபிடகம் என மூன்று வகைப்படும். பிடகம் - கூடை என்னும் பொருட்டு. எனவே மூன்று கூடை வகைப்பட்ட அறமாகிய பொருளை நிரப்பி வைத்துள்ள பிடகநெறி போன்றவை என்பது கருத்து. இவ் வியல்பு இன்னது என்றது பிடகநெறி கடவாது நீ ஒழுகும் இவ்வியல்பு எதிர்காலத்தே இன்னதாம் என்றவாறு.

தாய் : கண்ணகி. எடுத்துரைத்தலும் என்றது அவன் வினவாத பொருளையும் விதந்தெடுத்துக் கூறுகிற்ப என்றவாறு.

## மணிமேகலை வேற்றுருக்கொண்டு வஞ்சி நகரத்துள்ளே புகுதல்

௯௮ - ௭௯ : இளையள்..........புனைய

(இ - ள்.) மையறு சிறப்பின் தெய்வதம் - குற்றமற்ற சிறப்பினையுடைய மணிமேகலா தெய்வம் தன்பால் அருள்கூர்ந்து; இளையள் வளையோள் என்று உனக்கு யாவரும் விளைபொருள் உரையார் வேற்றுரு கொள்க எனத் தந்த - தன்னை நோக்கி நீ வஞ்சிமாநகரத்திற் சென்று சமயக்கணக்கரிடம் அறிபொருள் வினவும்பொழுது அவர் நின்னை இளமையுடையள் பெண்பாலாள் என்று கருதி உனக்கு அவர்கள் தம் சமய நெறியால் விளைந்த துணிபொருளைக் கூறுதற்கு ஒருப்படார் ஆதலின் அவரை வினவும்பொழுது அவர் நன்கு மதிக்கும்படி வேற்றுருக் கொள்வாயாக என்று சொல்லித் தானே வலியக் கொடுத்த; மந்திரம் ஓதி ஓர் மாதவன் வடிவாய் - மந்திரத்தை ஓதி ஒரு மாதவன் வடிவம் மேற்கொண்டவளாய் மணிமேகலை; தேவகுலமும் தெற்றியும் பள்ளியும் பூமலர்ப் பொழிலும் பொய்கையும் மிடைந்து - அவ் வஞ்சி நகரத்தே தெய்வத் திருக்கோயில்களிலும், மேடைகளிலும், தவப்பள்ளிகளிலும், பூவாகிய மலர்களையுடைய சோலைகளிடத்தும், குளக்கரைகளிடத்தும் நெருங்கி; நல்தவ முனிவரும் கற்று அடங்கினரும் நல்நெறி காணிய தொல்நூல் புலவரும் எங்கணும் விளங்கிய எயிலபுற இருக்கையில் - நல்ல தவத்தையுடைய துறவோரும் மெய்ந் நூல்களைக் கற்று மனம் பொறி வழிச் செல்லாமல் அடங்கப்பெற்ற சான்றோரும் நல்ல அறநெறியைக் கண்ட பழைய நூல்களைப் பயின்று முதிர்ந்த புலவர்களும் எவ்விடத்தும் இருந்து விளங்குகின்ற மதிலின் புறத்தேயுள்ள இருப்பினையுடைய; செங்குட்டுவன் எனும் செங்கோல் வேந்தன் பூவா வஞ்சியில் - செங்குட்டுவன் என்னும் செங்கோலரசன் தலைநகரமாகிய அவ் வஞ்சி மாநகரத்தில்; போர்த் தொழில் தானை குஞ்சியில் பூத்த வஞ்சி புனைய - போர்த்தொழிலில் வன்மையுடைய படை மறவர்கள் தமது முடியின்கண் மலர்ந்த வஞ்சிப் பூவாகிய போர்ப் பூவினைச் சூடாநிற்ப; என்க.

(வி - ம்.) இளையள்.........கொள்கென என்று மணிமேகலா தெய்வம் கூறியதனை இந் நூலில் ௧௦ஆம் காதையில் (௭௧ - ௮௦) காண்க. தெய்வதம் : மணிமேகலா தெய்வம். மந்திரம் - வேற்றுருக் கொள்வதற்குரிய மந்திரம். தேவகுலம் - கோயில். தெற்றி - மேடை. பள்ளி - தவப்பள்ளி. காணிய - கண்ட. எயிற்புற இருக்கை - மதிலின் புறத்தே

யுள்ள இருப்பிடம். பூத்த வஞ்சி - பகைவர் நிலத்தைக் கைக்கொள்ள நினைந்து போர் மேல் செல்லும் மறவர்கள் அணிந்து கொள்ளும் அடையாளப்பூ. பூவா வஞ்சி என்பதற்கு முரணாகப் பூத்த வஞ்சி என்றார். பூவா வஞ்சி என்றது வஞ்சி நகரத்தை; வெளிப்படை. குஞ்சி - குடுமி.

இதுவுமது

அ௦ - அரு: நிலநாடு.........இழிந்து

(இ - ள்.) நிலநாடு எல்லை தன் மலை நாடு என்ன - படை செல்லும் முல்லை நிலத்தையுடைய நாடு முழுதும் தனக்குரிய மலைகள் செறிந்த சேரநாடு போலத் தோன்றும்படி; கை மலை களிற்று இனம் தம் உள் மயங்க - கையையுடைய மலைகளைப் போன்ற களிற்றி யானைப்படைகள் தம்முள் செறிந்து செல்லா நிற்ப; தேரும் மாவும் கழல்செறி மறவரும் கார் மயங்கு கடலின் கலிகொள கடைஇ - தேர்ப்படையும் குதிரைப் படையும் வீரக்கழல் கட்டிய காலாட்படையும் ஆகிய நால்வகைப் படையையும் முகில் முழக்கத்தோடு கூடிய கடல்போல முழங்கும்படி செலுத்திச் சென்று; கங்கை அம் பேர் யாற்று அடைகரை தங்கி வங்க நாவியின் அதன் வடக்கு இழிந்து - கங்கை என்னும் அழகிய பெரிய யாற்றினது நீரடை கரையின்மேல் தங்கியிருந்து வங்கமாகிய ஓடங்களில் ஏறி அதன் வடகரையில் இறங்கி; என்க.

(வி - ம்.) மலை நாடு என்றமையால் நிலநாடு என்றது முல்லை நிலம் என்பதாயிற்று. யானைகள் மலைகளைப் போலச் செறிந்து போதலால் முல்லை நிலமும் குறிஞ்சி நிலம் போலத் தோன்றிற்று என்றவாறு. கைம்மலை என்றது கையையுடைய மலை போன்ற களிற்றினம் என்றவாறு. மா - குதிரை. கழல் - வீரக்கழல். கார் - முகில். கலி - முழக்கம். கடைஇ - கடவி; செலுத்தி. வங்க நாவி: இருபெயரொட்டுப் பண்புத்தொகை; வங்கமாகிய நாவி என்க. அஃதாவது ஓடம். ஓடத்திலேறி வடகரையில் இழிந்து என்க.

மணிமேகலை வஞ்சி நகரத்துள் புகுந்து தங்குதல்

அகூ - கூச: கனக.........படுத்தற்கேன்

(இ - ள்.) கனக விசயர் முதல் பல வேந்தர் அனைவரை வென்று - கனகனும் விசயனும் முதலிய பல வேந்தர் வந்தெதிர்ந்தோர் எல்லாரையும் போர்க்களத்திலே வென்று; அவர் அம்பொன் முடிமிசை சிமையம் ஓங்கிய இமைய மால்வரை தெய்வக் கல்லும் - கனக விசயராகிய அவ்வாரிய மன்னருடைய அழகிய பொன்முடி சூடுதற்குரிய தலையின்மேல் குவடுகள்

உயர்ந்துள்ள இமயமென்னும் பெரிய மலையின்கண் அடித்தெடுத்த பத்தினித் தெய்வவுருவம் செய்தற்கென்ற கல்லையும்; தன் திரு முடிமிசை பொன்செய் வாகையும் சேர்த்திய சேரன் - தன்னுடைய அழகிய முடியின்மேல் பொன்னால் செய்த வாகைப்பூ மாலையையும் ஏற்றிய சேரன் செங்குட்டுவனுமிய; வில் திறல் வெய்யோன் தன புகழ் விளங்க - வில்லினால் பெருவலிமையை விரும்பும் அம் மன்னவனுடைய புகழ் பெரிதும் விளங்கும்படி; திருந்து நல் ஏது முதிர்ந்து உளது ஆதலின் - தான் மேன்மேலும் திருந்துதற்குக் காரணமான நல்ல பழவினை முதிர்ந்துளது ஆதலின்; பொருந்து நால் வாய்மையும் புலப்படுத்தற்கு - பிறப்பின்கண் பொருந்திய துன்பம் முதலிய நான்கு வாய்மைகளையும் உலகத்திற்கு அறிவுறுத்தும் பொருட்டு; பொற்கொடி பெயர்ப்படூஉம் பொன் நகர் பொலிந்தனள் - அழகிய கொடியினது பெயராகிய வஞ்சி என்னும் பெயரையுடைய அழகிய நகரத்தின்கண் பொலிவுற்றிருந்தனள் என்பதாம்.

(வி - ம்.) கனகவிசயர் என்பவர் செந்தமிழ் மறவரின் ஆற்றல் அறியாமல் தமக்குரிய ஆரிய நாட்டின்கண் ஒரு திருமணப்பந்தரில் இகழ்ந்தனர். இதனை ஒற்றர் வாயிலாய்ச் சேரன் செங்குட்டுவன் அறிந்திருந்தனன். பின்னர்ச் சில நாளிலேயே பத்தினித் தெய்வமாகிய கண்ணகிக்குத் திருவுருச் சமைத்தற்கு இமயத்திலாதல் பொதியிலாதல் கல் கொள்ளுதல் நன்றெென அறிஞர் கூறக்கேட்டு இமயத்திலேயே கல்லெடுத்துக் காவா நாவின் கனகவிசயர் முடித்தலையில் ஏற்றிக் கொணருவல் என்று வஞ்சினங் கூறிச் சேரன் செங்குட்டுவன் வடநாட்டின்மேல் படையெடுத்துப் போய்த் தான் கூறிய வஞ்சினம் தப்பாமல் கனகவிசயர் முடிமேல் இமயக்கல்லை ஏற்றிக் கொணர்ந்தான். இவ்வரலாறு ஈண்டுச் சுருக்கமாகக்கூறப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் இவ் வரலாறு வஞ்சிக் காண்டத்தில் விரிவாகக் கூறப்பட்டிருத்தல் காணலாம். திறல் வெய்யோன் - வலிமையை விரும்புவோன். அவன் புகழ் தாயாகிய கண்ணகியாலே முன்னம் விளக்க மெய்தியது. அப்புகழே மேலும் விளக்கமெய்தும்படி அத் தெய்வத்தின் திருமகளாகிய மணிமேகலையும் அந் நகரத்திலே புகுந்து பொலிவுற்றிருந்தாள் என்க. பொற்கொடி பெயர்ப்படூஉம் பொன் நகர் என்றது வஞ்சி நகரத்தை.

இனி, இக் காதையை அணியிழை, எழுந்து புகுந்து நின்று ஏத்தி, 'அருளல் வேண்டும்' என்று அழுது நிற்ப, பத்தினிக்கடவுள் உரைப்பாள்; அங்ஙன முரைப்பவளாகிய தாய், இவ்வியல்பு இன்னது என எடுத்துரைத்தலும், மணிமேகலை ஒரு வடிவாய்ப் பொன்னகர்ப் பொலிந்தனளென இயைத்திடுக.

வஞ்சிமாநகர் புக்க காதை முற்றிற்று.

## உஎ. சமயக்கணக்கர் தந்திறங் கேட்ட காதை

அஃதாவது—இதன்கண் வஞ்சிமா நகரத்தின்கண் புகுந்து பொலிவுற்றிருந்த மணிமேகலை சமயக்கணக்கர் பலரையும் கண்டு அவரவர் சமயத்திற்கியன்ற காட்சிகளைக் கேட்டுணர் தற்குப் பெரிதும் விரும்பி அவர்களைத் தனித்தனியே கண்டு அவற்றை வினவித் தெரிந்துகொண்ட செய்தியைக் கூறுகின்ற செய்யுள் என்றவாறு.

நவையறு நன்பொரு ளுரைமி னோவெனச்
சமயக் கணக்கர் தந்திறஞ் சார்ந்து
வைதிக மார்க்கத் தளவை வாதியை
எய்தின ளெய்திநின் கடைப்பிடி யியம்பென
வேத வியாதனுங் கிருத கோடியும்
ஏதமில் சைமினி யெனுமிவ் வாசிரியர்
பத்து மெட்டு மாறும் பண்புறத்
தத்தம் வகையாற் றுப்பகர்ந் திட்டனர்
காண்டல் கருத லுவம மாகமம்
ஆண்டைய வருத்தா பத்தி யோடியல்
பைதிக மபாவ மீட்சி யொழிவறிவு
எய்தியுண் டாநெறி யென்றிவை தம்மாற்
பொருளி னுண்மை புலங்கொளல் வேண்டும்
மருளில் காட்சி யைவகை யாகும்
கண்ணால் வண்ணமும் செவியா லோசையும்
நண்ணிய மூக்கால் நாற்றமும் நாவாற்
சுவையு மெய்யா லூறுமெனச் சொன்ன
இவையிவை கண்டுகேட் டுயிர்த்துண் டுற்றுத்
துக்கமுஞ் சுகமுமெனத் துயக்கற வறிந்
துயிரும் வாயிலு மனமுமூ றின்றிப்
பயிலொளி யொடுபொரு ளிடம்பழு தின்றிச்
சுட்டறி தல்கவர் கோட் டேன்றுது
கிட்டிய தேச நாம சாதி
குணக்கிரி யையி னறிவ தாகும்
கருத்தள வாவது
குறிக்கொ ளனுமா னத்தனு மேயத்
தகைமை யுணருந் தன்மைய தாகும்

மூவகை யுற்றது பொதுவெச்ச முதலாம்
பொதுவெனப் படுவது சாதன சாத்தியம்
இவையந் நுவய மின்றா யிருந்துங்
கடந்திகழ் யானைக் கானவொலி கேட்டோன்
உடங்கெழில் யானையங் குண்டென வுணர்தல்
எச்ச மென்பது வெள்ளவே துவினால்
நிச்சயித் தத்தலை மழைநிகழ் வுரைத்தல்
முதலென மொழிவது கருக்கொண் முகில்கண்
டிதுமழை பெய்யு மெனவியம் பிடுதல்
என்னு மேதுவி னொன்றுமுக் காலந்
தன்னி லொன்றிற் சார்ந்துள தாகி
மாண்ட வுயிர்முதன் மாசின் றாகிக்
காண்டற் பொருளாற் கண்டில துணர்த்தல்
உவம மாவ தொப்புமை யளவை
கவய மாவாப் போலுமெனக் கருதல்
ஆகம வளவை யறிவ னூலாற்
போக புவன முண்டெனப் புலங்கொளல்
அருத்தா பத்தி யாய்க்குடி கங்கை
இருக்கு மென்றாற் கரையிலென் றெண்ணல்
இயல்பி யானைமே லிருந்தோன் தோட்டிக்
கயலொன் றீயா ததுவே கொடுத்தல்
ஐதிக மென்ப துலகுரை யிம்மரத்
தெய்திய தோர்பே யுண்டெனத் தெளிதல்
அபாவ மென்ப தின்மையோர் பொருளைத்
தவாதவ் விடத்துத் தானிலை யென்றல்
மீட்சி யென்ப திராமன்வென் றானென
மாட்சியி லிராவணன் றோற்றமை மதித்தல்
உள்ளநெறி யென்பது நாராசத் திரிவிற்
கொள்ளத் தகுவது காந்தமெனக் கூறல்
எட்டுள பிரமா ணாபா சங்கள்
சுட்டுணர் வொடுதிரி யக்கோட லையந்
தேராது தெளிதல் கண்டுண ராமை
எய்து மில்வழக் குணர்ந்ததை யுணர்தல்
நினைப்பென நிகழ்வசுட் டுணர்வெனப் படுவ
தேனைப்பொரு ளுண்மை மாத்திரை காண்டல்
திரியக் கோட லொன்றையொன் றென்றல்
விரிகதி ரிப்பியை வெள்ளியென் றுணர்தல்
ஐய மென்ப தொன்றை நிச்சயியா
மையற் றறியோ மகனோ வென்றல்
தேராது தெளிதல் செண்டு வெளியில்

ஓராது தறியை மகனென வுணர்தல்
கண்டுண ராமை கடுமாப் புலியொன்
றண்டலை முதலிய கண்டுமறி யாமை
இல்வழக் கென்பது முயற்கோ டொப்பன
சொல்லின்மாத் திரத்தாற் கருத்திற் றோன்றல்
உணர்ந்ததை யுணர்த லுறுபனிக் குத்திப்
புணர்ந்திடல் மருந்தெனப் புலங்கொள நினைத்தல்
நினைப்பெனப் படுவது காரண நிகழாது
தினக்கிவர் தாயுந் தந்தையு மென்று
பிறர்சொலக் கருதலிப் பெற்றிய வளவைகள்
பாங்குறு முலோகா யதமே பௌத்தஞ்
சாங்கியம் நையா யிகம்வை சேடிகம்
மீமாஞ் சகமாஞ் சமயவா சிரியர்
தாம்பிரு கற்பதி சினனே கபிலன்
அக்க பாதன் கணாதன் சைமினி
மெய்ப்பிரத் தியமனு மானஞ் சாத்தம்
உவமான மருத்தா பத்தி யபாவம்
இவையே யிப்போ தியன்றுள வளவைகள்
என்றவன் றன்னைவிட் டிறைவ னீசனென
நின்ற சைவ வாதிநேர் படுதலும்
பரசுநின் றெய்வ மெப்படித் தென்ன
இருசுட ரோடிய மானனைம் பூதமென்
றெட்டு வகையு முயிருமாக் கையுமாய்க்
கட்டிநிற் போனுங் கலையுருவி னோனும்
படைத்துவிளை யாடும் பண்பி னோனுந்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனுந்
தன்னில் வேறு தானொன் றிலோனும்
அன்னோ னிறைவ னாகுமென் றுரைத்தனன்
பேருல கெல்லாம் பிரம வாதியோர்
தேவ னிட்ட முட்டை யென்றனன்
காதல் கொண்டு கடல்வணன் புராணம்
ஓதின னாரணன் காப்பென் றுரைத்தனன்
கற்பங் கைசந் தங்கா லெண்கண்
தெற்றே னிருத்தஞ் செவிசிக் கைமூக்
குற்ற வியாகர ணமுகம் பெற்றுச்
சார்பிற் றோன்று மாரண வேதக்
காதி யந்த மில்லையது நெறியெனும்
வேதிய னுரையின் விதியுங் கேட்டு
மெய்த்திறம் வழக்கென விளம்பு கின்ற
எத்திறத் தினுமிசை யாதிவ ருரையென

ஆசீ வகநூ லறிந்த புராணனைப்
பேசு நின் னிறையார் நூற்பொருள் யாதென
எல்லையில் பொருள்களி லெங்குமெப் பொழுதும்
புல்லிக் கிடந்து புலப்படு கின்ற
வரம்பி லறிவ னிறைநூற் பொருள்களைந்
துரந்தரு முயிரோ டொருநால் வகையணு
அவ்வணு வுற்றுங் கண்டு முணர்ந்திடப்
பெய்வகை கூடிப் பிரிவதுஞ் செய்யும்
நிலநீர் தீக்காற் றெனநால் வகையின
மலைமர முடம்பெனத் திரள்வதுஞ் செய்யும்
வெவ்வே றாகி விரிவதுஞ் செய்யும்
அவ்வகை யறிவ துயிரெனப் படுமே
வற்ப மாகி யுறுநிலந் தாழ்ந்து
சொற்படு சீதத் தொடுசுவை யுடைத்தாய்
இழினென நிலஞ்சேர்ந் தாழ்வது நீர்தீத்
தெறுதலு மேற்சே றியல்பு முடைத்தாம்
காற்று விலங்கி யசைத்தல் கடனிவை
வேற்றியல் பெய்தும் விபரீ தத்தால்
ஆதி யில்லாப் பரமா ணுக்கள்
தீதுற் றியாவதுஞ் சிதைவது செய்யா
புதிதாய்ப் பிறந்தொன் றொன்றிற் புகுதா
முதுநீ ரணுநில வணுவாய்த் திரியா
ஒன்றிரண் டாகிப் பிளப்பதுஞ் செய்யா
அன்றியு மவல்போற் பரப்பதுஞ் செய்யா
உலாவுந் தாழு முயர்வதுஞ் செய்யும்
குலாமலை பிறவாக் கூடும் பலவும்
பின்னையும் பிரிந்துதந் தன்மைய வாகும்
மன்னிய வயிரமாய்ச் செறிந்துவற் பழுமாம்
வேயாய்த் துளைபடும் பொருளா முளைக்கும்
தேயா மதிபோற் செழுநில வரைப்பாம்
நிறைந்தவிவ் வணுக்கள் பூதமாய் நிகழிற்
குறைந்து மொத்துங் கூடா வரிசையின்
ஒன்று முக்கா லரைகா லாயுறும்
துன்றுமிக் கதனாற் பெயர்சொலப் படுமே
இக்குணத் தடைந்தா லல்லது நிலனாய்ச்
சிக்கென் பதுவும் நீரா யிழிவதும்
தீயாய்ச் சுடுவதுங் காற்றாய் வீசலும்
ஆய தொழிலை யடைந்திட மாட்டா
ஓரணுத் தெய்வக் கண்ணோ ருணர்குவர்
தேரார் பூதத் திரட்சியு ளேனோர்

மாலைப் போதி லொருமயி ரறியார்
சாலத் திரண்மயிர் தோற்றுதல் சாலும்
கரும்ம் பிறப்புங் கருநீலப் பிறப்பும்
பசும்ம் பிறப்புஞ் செம்ம் பிறப்பும்
பொன்ன் பிறப்பும் வெண்ண் பிறப்பும்
என்றிவ் வாறு பிறப்பினு மேவிப்
பண்புறு வரிசையிற் பாற்பட்டுப் பிறந்தோர்
கழிவெண் பிறப்பிற் கலந்துவீ டணுகுவர்
அழியல் வேண்டா ரதுவுறற் பாலார்
இதுசெம் போக்கி னியல்பிது தப்பும்
அதுமண் டலமென் றறியல் வேண்டும்
பெறுதலு மிழத்தலு மிடையூ றுறுதலும்
உறுமிடத் தெய்தலுந் துக்கசுக முறுதலும்
பெரிதவை நீங்கலும் பிறத்தலுஞ் சாதலும்
கருவிற் பட்ட பொழுதே கலக்கும்
இன்பமும் துன்பமும் இவையுமனு வெனத்தகும்
முன்னுள ஊழே பின்னுமுறு விப்பது
மற்கலி நூலின் வகையிது வென்னச்
சொற்றடு மாற்றத் தொடர்ச்சியை விட்டு
நிகண்ட வாதியை நீயுரை நின்னாற்
புகழுந் தலைவன்யார் நூற்பொருள் யாவை
அப்பொரு ணிகழ்வுங் கட்டும் வீடும்
மெய்ப்பட விளம்பென விளம்ப லுறுவோன்
இந்திரர் தொழப்படு மிறைவனெம் மிறைவன்
தந்த நூற்பொரு டன்மாத்தி காயமும்
அதன்மாத்தி காயமுங் காலா காயமும்
தீதில் சீவனும் பரமா ணுக்களும்
நல்வினை யுந்தீ வினையுமவ் வினையாற்
செய்வுறு பந்தமும் வீடுமித் திறத்த
ஆன்ற பொருடன் றன்மைய தாயும்
தோன்றுசார் வொன்றின் றன்மைய தாயும்
அநித்தமு நித்தமு மாகி நின்று
நுணித்த குணத்தோர் கணத்தின் கண்ணே
தோற்றமு நிலையுங் கேடு மென்னும்
மாற்றரு மூன்று மாக்கலு முரித்தாம்
நிம்ப முளைத்து நிகழ்த னித்தியம்
நிம்பத் தப்பொரு ளன்மை யநித்தியம்
பயற்றுத் தன்மை கெடாதுகும் மாயம்
இயற்றி யப்பய றழிதலு மேதுத்
தருமாத்தி காயந் தானெங்கு முளதாய்ப்

பொருள்களை நடத்தும் பொருந்த நித்தியமா
அப்படித் தாகிய தன்மாத்தி காயமும்
எப்பொருள் களையு நிறுத்த வியற்றும்
காலங் கணிக மெனுங்குறு நிகழ்ச்சியும்
ஏனுங் கற்பத் தின்னொடு நிகழ்ச்சியும்
ஆக்குமா காய மெல்லாப் பொருட்கும்
பூக்குமிடங் கொடுக்கும் புரிவிற் றாகும்
சீவ னுடம்போ டொத்துக் கூடித்
தாவில்சுவை முதலிய புலன்களை நுகரும்
ஓரணு புற்கலம் புறவுரு வாகும்
சேர்சா னல்வினை தீவினை யவைசெயும்
வருவழி யிரண்டையு மாற்றி முன்செய்
அருவினைப் பயனனு பவித்தறுத் திடுதல்
அதுவீ டாகு மென்றன னவன்பின்
இதுசாங் கியமத மென்றெடுத் துரைப்போன்
தனையறி வரிதாய்த் தான்முக் குணமாய்
மனநிகழ் வின்றி மாண்பமை பொதுவாய்
எல்லாப் பொருளுந் தோன்றுதற் கிடமெனச்
சொல்லுதன் மூலப் பகுதிசித் தத்து
மானென் றுரைத்த புத்தி வெளிப்பட்
டதன்கண் ஆகாயம் வெளிப்பட் டதன்கண்
வாயு வெளிப்பட் டதன்க ணங்கி
யானது வெளிப்பட் டதின்க ணப்பின்
தன்மை வெளிப்பட் டதன்மண் வெளிப்பட்
டவற்றின் கூட்டத் தின்மனம் வெளிப்பட்
டார்ப்புறு மனத்தாங் கார விகாரமும்
ஆகா யத்திற் செவியொலி விகாரமும்
வாயுவிற் றொக்கு மூறெனும் விகாரமும்
அங்கியிற் கண்ணு மொளியுமாம் விகாரமும்
தங்கிய வப்பில்வாய் சுவையெனும் விகாரமும்
நிலக்கண் மூக்கு நாற்ற விகாரமும்
சொலப்பட் டிவற்றிற் றொக்கு விகாரமாய்
வாக்குப் பாணிபாத பாயுரு பத்தமென
ஆக்கிய விவைவெளிப் பட்டிங் கறைந்த
பூத விகாரத் தான்மலை மரமுதல்
ஓதிய வெளிப்பட் டுலகாய் நிகழ்ந்து
வந்த வழியே யிவைசென் றடங்கி
அந்தமில் பிரளய மாயிறு மளவும்
ஒன்றா யெங்கும் பரந்துநித் தியமாம்
அறிதற் கெளிதாய் முக்குண மன்றிப்

பொறியுணர் விக்கும் பொதுவு மன்றி
எப்பொரு ளுந்தோன் றுதற்கிட மன்றி
அப்பொரு ளெல்லா மறிந்திடற் குணர்வாய்
ஒன்றா யெங்கும் பரந்துநித் தியமாய்
நின்றுள வுணர்வாய் நிகழ்தரும் புருடன்
புலமார் பொருள்க ளிருபத் தைந்துள
நிலநீர் தீவளி யாகா யம்மே
மெய்வாய் கண்மூக் குச்செவி தாமே
உறுசுவை யொளியூ றோசைநாற் றம்மே
வாக்குப் பாணி பாதபாயு ருபத்தம்
ஆக்கு மனோபுத்தி யாங்கார சித்தம்
உயிரெனு மான்மா வொன்றொடு மாமெனச்
செயிரறச் செப்பிய திறமுங் கேட்டு
வைசே டிகநின் வழக்குரை யென்னப்
பொய்தீர் பொருளும் குணமும் கருமமும்
சாமா னியமும் விசேடமும் கூட்டமும்
ஆமாறு கூறு மதிற்பொரு ளென்பது
குணமுந் தொழிலு முடைத்தா யெத்தொகைப்
பொருளுக்கு மேதுவா மப்பொரு ளொன்பான்
ஞாலநீர் தீவளி யாகா யந்திசை
கால மான்மா மனமிவற் றுண்ணிலம்
ஒலியூறு நிறஞ்சுவை நாற்றமொ டைந்தும்
பயில்குண முடைத்து நின்ற நான்கும்
சுவைமுத லோரோகுண மவைகுறை வுடைய
ஓசை யூறு நிறநாற் றஞ்சுவை
மாசில் பெருமை சிறுமை வன்மை
மென்மை சீர்மை நொய்ம்மை வடிவம்
என்னு நீர்மை பக்கமுத லனேகம்
கண்ணிய பொருளின் குணங்க ளாகும்
பொருளுங் குணமுங் கரும மியற்றற்
குரிய வுண்மை தருமுதற் பொதுத்தான்
போதலு நிற்றலும் பொதுக்குண மாதலிற்
சாதலு நிகழ்தலு மப்பொருட் டன்மை
ஒன்றணி கூட்டங் குணமுங் குணியுமென்
றொன்றிய வாதியு முரைத்தன னுடனே
பூத வாதியைப் புகனீ யென்னத்
தாதகிப் பூவுங் கட்டியு மிட்டு
மற்றுங் கூட்ட மதுக்களி பிறந்தாங்
குற்றிடு பூதத் துணர்வு தோன்றிடும்
அவ்வுணர் வவ்வப் பூதத் தழிவுகளின்

வெவ்வேறு பிரியும் பறையோ சையிற்கெடும்
உயிரொடுங் கூட்டிய வுணர்வுடைப் பூதமும்
உயிரில் லாத வுணர்வில் பூதமும்
அவ்வப் பூத வழியவை பிறக்கும்
மெய்வகை யிதுவே வேறுரை விகற்பமும்
உண்மைப் பொருளு முலோகாயத னுணர்வே
கண்கூ டல்லது கருத்தள வழியும்
இம்மையு மிம்மைப் பயனுமிப் பிறப்பே
பொய்ம்மை மறுமையுண் டாய்வினை துய்த்தல்
என்றலு மெல்லா மார்க்கமுங் கேட்டு
நன்றல வாயினு நான்மா றுரைக்கிலேன்
பிறந்தமுற் பிறப்பை யெய்தப் பெறுதலின்
அறிந்தோ ருண்டோ வென்றுநக் கிடுதலும்
தெய்வ மயக்கினுங் கனவுறு திறத்தினும்
மைய லுறுவோர் மனம்வே ரும்வகை
ஐய மன்றி யில்லையென் றலுநின்
தந்தைதா யரையனு மானத் தாலல
திந்த ஞாலத் தெவ்வகை யறிவாய்
மெய்யுணர் வின்றிமெய்ப் பொருளுணர் வரிய
ஐய மல்லது சொல்லப் பெறாயென
உள்வரிக் கோலமோ டுன்னிய பொருளுரைத்
தைவகைச் சமயமு மறிந்தன ளாங்கென்.

# உஎ. சமயக்கணக்கர் தந்திறங் கேட்ட காதை

## உரை

### க – ச : நவை.........இயம்பென

(இ - ள்.) சமயக் கணக்கர் தம் திறம் சார்ந்து - இவ்வாறு வஞ்சிமா நகரத்தின்கண் புகுந்து மாதவன் வடிவில் பொலிவுற்றிருந்த மணிமேகலை அந் நகரத்தின்கண் சமய நூலுணர்ந்த ஆசிரியன்மார்கள் தம் பக்கலிலே சென்று; நவையறு நன்பொருள் உரைமினோ என எய்தினள் - அச் சமயக்கணக்கர்களைத் தனித்தனியே கண்டு நும்முடைய சமயத்தில் உயிரின் பிறவிப் பிணி அறுதற்குக் காரணமான மெய்ப் பொருளைக் கூறுமின் என வினவப் புகுந்தவள்; வைதிக மார்க்கத்து அளவைவாதியை எய்தி - முதன் முதலாக வேத நெறியினை மேற்கொண்டொழுகும் அளவைவாதியின்பாற் சென்று அவனை நோக்கி; நின் கடைப்பிடி இயம்பு என - ஐயனே! நீ நின் சமயத்தில் கடைப்பிடித்தொழுகும் நின் நூற்பொருளை எனக்குக் கூறுவாயாக என வேண்டாநிற்ப என்க.

(வி - ம்.) நவை - துன்பம்; அஃதீண்டுப் பிறப்பின்மேனின்றது. நன்பொருள் - ஈண்டுத் தத்துவம். சமயக் கணக்கர் - சமய நூலுணர்ந்து அதனைப் பரப்புபவர். உரைமினோ என எய்தினவளாகிய மணிமேகலை என்க. வைதிக மார்க்கம் - வேதத்தின்கண் கூறப்பட்டுள்ள சமயநெறி. அளவை வாதி - காட்சி முதலிய அளவைகளால் ஆராய்ந்தே மெய்ப் பொருளை அறிதல் கூடும் என்னும் கொள்கை உடையவன். கடைப்பிடி - துணிபொருள்.

## அளவை வாதியின் கூற்று

## அளவைகளும் அவற்றின் ஆசிரியர்களும்

### ரு - கஉ : வேதவியாதனும்.........வேண்டும்

(இ - ள்.) வேதவியாதனும் இருதகோடியும் ஏதம் இல் சைமினி எனும் இவ்வாசிரியர் - அதுகேட்ட அளவைவாதி (மணிமேகலையாகிய) மாதவனை நோக்கித் துறவியே அவ்வாறே கூறுவேன் என்று கூறுபவன் வேதவியாதனும் இருதகோடியும் குற்றமில்லாத சைமினியும் என்று கூறப்படுகின்ற எம்மாசிரியன்மார் கிரலே; பத்தும் எட்டும் ஆறும் தத்தம் வகையால்

தாம் பண்புற பகர்ந்திட்டனர் - பத்தளவையும் எட்டு அளவையும் ஆறளவையும் ஆகத் தாம் தாம் ஆராய்ந்து கண்ட முறைமையினாலே அவரவரே விளக்கிக் கூறினர், எங்ஙனம் கூறினர் எனின்; காண்டல் கருதல் உவமம் ஆகமம் ஆண்டைய அருத்தாபத்தியோடு இயல்பு ஐதிகம் அபாவம் மீட்சி ஒழிவறிவு எய்தி உண்டாம் நெறி என்று - காட்சியும் கருதலும் ஆகமமும் ஆகிய இவற்றின் அப்பாலாகிய அருத்தாபத்தியும் ஐதிகமும் மீட்சி ஒழிவறிவும் எய்தி உண்டாம் நெறியும் அளவைகள் என்று அறிவித்து; இவை தம்மால் பொருளின் உண்மை புலங்கொளல் வேண்டும் - இப் பத்தளவைகளாலும் அளந்து மெய்ப்பொருளின் இயல்பினை மாந்தர் அறிந்து கொள்ளவேண்டும் என்று செவியறிவுறுத்தனர் என்றவாறு என்க.

(வி - ம்.) வியாதன் என்னும் பெயருடைய முனிவர் பலர் உளராதலின் இவ் வியாதன் அவருள் வேதத்தை வகுத்து முறை செய்த வியாதனே என்பது தோன்ற வேதவியாதன் என்று விதந்தோதினர் என்னை? மாயாவாதமும் பாற்கரியவாதமும் கிரீடாப்பிரமவாதமும் சத்தப்பிரமவாதமும் என்னும் நால்வேறு வகைப்பட்ட ஏகான்மவாத நூல் செய்த வியாசனும் உத்தர மீமாஞ்சை மதநூல் செய்த வியாதனும் மகாபாரதம் என்னும் இதிகாசமியற்றிய வியாதனும் என இப் பெயருடைய வியாத முனிவர் பலர் உளராதலும் இவர்க்கெல்லாம் பத்தளவைகள் உடம்பாடன்மையின் ஈண்டுக் கூறப்பட்ட, வேதவியாதர் அவர்களுள் ஒருவர் அல்லாமை அறிக. கிருதகோடி என்பவரைப் போதாயனர் எனவும் கிருதகோடி கவி எனவும் கூறுவார் உளர் என்பாரும் உளர். சைமினி என்பவர் வேதத்தில் கருமகாண்ட ஆராய்ச்சி செய்தற்கெழுந்த நூலாசிரியர் என்பர். வேதவியாதன் பத்தளவையும், கிருதகோடி எட்டளவையும், சைமினி ஆறளவையும், பகர்ந்திட்டனர் என்க. காண்டல் எனினும் காட்சி எனினும் ஒக்கும் கருதல் எனினும் கருத்து எனினும் ஒக்கும். அனுமானம் என்பது மது நியாய நூலாசிரியர் ஆகிய கௌதம முனிவர் முதலியோர் உவமம் காண்டல் முதல் ஆகமம் ஈருக உள்ள நான்களவைகளுள் ஏனைய அளவைகள் அடங்கும் ஆகலின் இவையே சிறப்புடையன. பிற சிறப்பில்லன என்பாரும் உளர் என்பது பற்றி ஆண்டைய அருத்தாபத்தியோடு எனப் பிரித்துக் கூறினர். ஐதிகம் - உலகுரை. அபாவம் - இன்மை. மீட்சியொழிவறிவு - மீட்சியினால் ஒழிந்த பொருளை அறியும் அளவை; பாரிசேடம் என்பதும் அது அபாவம்: இன்மையால் ஒரு பொருளை இல்லை என்று துணிவது. உண்டாம் நெறி எனினும் சம்பவம் எனினும் ஒக்கும் என்று செவியறிவுறுத்தனர் என்க.

## க - காட்சியளவையின் வகை முதலியன

### கச - உச: மருளில்.........அறிவதாகும்

(இ - ள்.) மருள் இல் காட்சி ஐவகைப்படும் - மயக்குதற்கு இடனில்லாத காட்சி அளவைதானும் ஐந்து வகைப்படுவதாம்

அவை வருமாறு:— கண்ணால் வண்ணமும் செவியால் ஓசையும் மூக்கால் நாற்றமும் நாவால் சுவையும் மெய்யால் ஊறும் நண்ணிய இவை எனச் சொன்ன இவை - கண் செவி மூக்கு நா மெய் என்னும் ஐம்பொறிகளுள் வைத்துக் கண்ணால் நிறமும் செவியால் ஓசையும் மூக்கினால் நாற்றமும் நாவினால் சுவையும் மெய்யினால் ஊறும் ஆகிய இப் புலன்கள்; நண்ணிய எனச் சொன்ன - வந்துற்ற பொழுது அவ்வப் பொறிகளாலே இப் புலன்கள் உணரப்படும் என்று சான்றோரால் சொல்லப்பட்டபடி இப் பொறிகளால் நேரே; கண்டு கேட்டு உயிர்த்து உண்டு உற்று - பார்த்தும் கேட்டும் மோந்தும் உண்டும் தீண்டியும்; துக்கமும் சுகமும் என துயக்கு அற அறிந்து - உணர்ந்து பார்த்து இப் புலன்கள் தரும் நுகர்ச்சியைத் துன்ப மென்றுதல் இன்ப மென்றுதல் தடை சிறிதுமின்றி உணர்ந்து; உயிரும் வாயிலும் மனமும் ஊறு இன்றி - உயிரும் கருவிகளும் நெஞ்சும் ஆகிய இவை பழுதில்லாமலும்; பயில் ஒளியோடு பொருள் இடம் பழுது இன்றியும் - பொருளில் பயின்றுணரும் உணர்ச்சியினோடே பயிலப்படுகின்ற பொருளும் இடமும் ஆகிய இவற்றானும் பழுதில்லாமலும்; சுட்டல் திரிதல் கவர்கோடல் தோன்றாது - சுட்டலும் பிறழ்தலும் இரட்டுறவினைதலும் ஆகிய குற்றம் பிறவாமலும்; இட்டிய தேசம் நாமம் சாதி குணம் கிரியையின் அறிவதாகும் - காணப்படும் பொருளைச் சார்ந்த இடம் பெயர் சாதி குணம் தொழில் என்னும் இவற்றால் ண்கறியும் அறிவே காட்சியளவை எனப்படுவதாம் என்க.

(வி - ரை.) மயக்கக் காட்சி அளவை ஆகாதென்பதற்கு மருளில் காட்சி என விதந்தார்; மருள் காட்சியாவது

"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு" (குறள் - ௩௫௧)

என்பதனானும் உணர்க. காட்சி ஐந்தே இவற்றின்மேல் இல்லை என்பார் ஐந்து வகை ஆகும் என்று தொகுத்துக் கூறி மேலே அவற்றை வகுத்தோதுகின்றார்.

இனி, காண்டல் என்பது கண்ணினது தொழிலாகவும் ஏனையவற்றிற்கும் பொருந்துவதெங்ஙனமெனின்; கண்டுக் காண்டல் என்பது விளங்கவறிதல் எனனும் பொருள்மேனின்றது. என்னை? "வேதங்களை கண்டான்" என்புழியும் "காலமூன்று மவை கண்டு கூறியவன்" என்புழியும், "கண்டுரைப்பின்" என்புழியும், சூத்திரப் பொருள் கண்டான் என்புழியும்,

"செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப் பிரிந்த வூன்" (குறள் - ௨௫௮)

என்புழியும் அஃதப் பொருட்டாதலுணர்க.

கண் முதலிய பொறிகள் ஐந்தும் காட்சி முதலிய புலன்கள் ஐந்தும் அளவைவாதிகள் தோன்றுதற்கு முன்பே உலக வழக்கில் வழங்கப்பட்டு வருதல் தோன்ற கண்ணால் வண்ணமும்......ஊறும் எனச் சொன்ன இவை என்று முன்னையோர் மேலிட்டுக் கூறினர். நண்ணிய என்பதனை வண்ணம் முதலிய புலன்கள் ஐந்தனோடும் பொருந்த இடைநிலை விளக்கமாக்கிக் கூறிக் கொள்க. என்னை? நிறம் முதலிய புலன்கள் பொறிகளை வந்துற்றபொழுது அறிவதல்லது அவை வாராதபொழுது அறியமாட்டாமையின் என்க. இனி செவி முதலிய பொறிகட்கும் இஃதொக்கும். கட்பொறி செய்மையிற் சென்றும் தனக்குரிய புலனைப் பற்றும் என்பாரும் உளராலோ எனின் அற்றன்று. அவர் கொள்கை போலி என்றொழிக. கண் முதலியவற்றோடு காணல் முதலியவற்றை நிரல்நிறையாகக் கொள்க. தயக்கு - தடை; சோர்வு எனினுமாம். வாயில் ஆகிய கருவிகள் பழுதுபட்டிருந்தால் காட்சியளவை பயனின்றாதலின் ஊறின்றி என்றார். ஒளி என்றது உயிரினது உணர்வை. இஃதுணரா தார் ஒளி ஞாயிறு திங்கள் தீ ஆகிய ஒளிகள் என்றார். இவ்வுரை போலி. என்னை? கண்ணொழிந்த செவி மூக்கு நா மெய் என்னும் நான்கு பொறிகளும் தத்தம் புலன்களைக் கோடற்கண் ஞாயிறு முதலியவற்றின் ஒளி வேண்டாமை நுண்ணிதின் உணர்க. இதனை,

"இருளாக மூடுஞ்சு ழுத்தியி ராத்திரியி
விரவிசுட ரற்ற பொழுது
மருளாம விருளையும் பொருளையுந் தெரிகின்ற
வகைகொண்டு சித்தாகுமே" (கைவல்யம் - [illegible])

எனவரும் செய்யுளால் உணர்க. பொருள்-காட்சிப் பொருள். சுட்டல்-பொருள் உண்மை மாத்திரை காண்டல். திரிதல் - ஒன்றை மற்றொன்றாகக் கருதல். கவர் கோடல் - கண்ட பொருளை இரட்டுறவே கருதல் (ஐயுறுதல்). சாதி - ஒருநிகரனவாகிய பல பொருட்குப் பொதுவாவதொருதன்மை.

### உ - கருத்தளவு

### உரு - உஅ: கருத்தள்வு.........முதல் ஆம்

(இ - ள்.) கருத்துஅளவாவது - இனி அனுமான அளவை எனப்படுவது; குறிக்கொள் அனுமானத்து அனுமேயந் தன்மை உணரும் தன்மையதாகும் - ஏதுவுக்குப் பிறப்பிடமான குறியாகக் கொண்டு ஆராய்ச்சியினாலே சாதிக்கப்படும் பொருளின் உண்மையை உணர்த்தும் தன்மையுடையதாகும்; அது - இங்ஙனமாகிய அக் கருத்தளவை; மூவகை உற்றுப் பொது எச்சம் முதல் ஆம் - பொது வென்றும் எச்சமென்றும முதலென்றும் மூன்று பெயர் பெறுவனவாம்.

(வி - ம்.) கருத்தளவு-அனுமானப்பிரமாணம். 'அனுமானமாவது சாத்தியத்தை ஒழியச் சம்பவியாததாகிய சாதனத்தால் சாத்தியத்தைப்

பற்றிப் பிறக்கும் ஞானமாகும்' என்பர் நீலகேசி உரையாசிரியர் (நீல - தரும - செய் கஉ). அனுமேயம் ஆராய்ந்துணரப்படுவது. அது மூவகை உற்று என மாறுக.

## இதுவுமது

உகூ - சo : போத..........உணர்தல்

(இ - ள்.) பொது வெனப்படுவது - இவற்றுள் பொதுக் கருத்தளவை என்று கூறப்படுவது; சாதன சாத்தியம் இவை அந்நுவயம் இன்றாய் இருந்தும் - ஏதுவும் துணி பொருளும் ஆகிய இவை இரண்டும் தம்முள் தொடர்பின்றி இருந்த விடத்தும்; கானம் கடம் திகழ்யானை ஒலி கேட்டோன் - காட்டில் நின்றும் வருகின்ற மதத்தால் விளங்கும் யானையினது பிளிற்றொலியைக் கேட்டவன் ஒருவன்; உடங்கு எழில் யானை அங்கு உண்டென உணர்தல் - அவ்வொலியோடு ஒருங்கே எழுச்சியுடைய யானையானது அக்காட்டின்கண் உண்டு என்று உணர்ந்து கொள்ளுதலாம்; எச்சம் என்பது வெள்ள ஏதுவினால் அத்தலை மழை நிகழ்வு நிச்சயித்து உரைத்தல் - இனி எச்சம் என்னும் கருத்தளவை யாற்றில் பெருகிவரும் வெள்ளமாகிய ஏதுவினால் அவ்வியாறு தோன்றுதற்கிடனான தேயமாகிய அவ்விடத்தே மழை பெய்திருக்க வேண்டும் என்று துணிந்து கூறுதல்; முதல் என மொழிவது - இனி முதல் என்று கூறப்படும் கருத்தளவையாவது; கருக்கொள் முகில் கண்டு இது மழை பெய்யும் என இயம்பிடுதல - சூல்கொண்டு வருகின்ற மேகத்தைப் பார்த்து இம்மேகம் ஒருதலையாக மழை பொழியும் என்று துணிந்து கூறுதலாம்; எனனும் ஏதுவின் ஒன்று முக்காலம் தன்னில் ஒன்றின் சார்ந்து உளது ஆகி - என்று இங்ஙனம் கூறப்படுகின்ற மூன்று ஏதுக்களுள் வைத்து யாதேனும் ஒன்று இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலங்களுள் வைத்து ஒரு காலத்தைப் பொருந்தி உளதாகா நிற்பவும்; மாண்ட உயிர் முதல் - அறிவினால் மாட்சிமைப்பட்ட உயிராகிய வினை முதலும் முன் காண்டல் அளவைக்குக் கூறப் பட்டபடி உணர்வும் கருவிகளும் ஆகிய இவற்றால் குற்றம் இல தாய் இருந்து; காண்டல் பொருளால் கண்டிலது உணர்தல் - தான் காட்சியால் கண்ட பொருளை ஏதுவாகக்கொண்டு ஆராய்ந்து, கண்டிலாத பொருளுண்மையை உணர்ந்து கொள்ளு தலாம் என்றான் என்க.

(வி - ம்.) பொது - இதனைக் காரணானுமானம் எனவும் பூர்வா னுமானம் எனவும் கூறுப. பொது முதலிய இம் மூன்றன் இயல்பையும்,

"இடித்து மின்னி இருண்டு மேக
மெழுந்த போதிது பெய்யுமென்
றடுத்த தும்அகில் சந்த முந்தி
அலைத்து வார்புனல் ஆறுகொண்
டெடுத்து வந்திட மால்வரைக்க
ணிருந்து கொண்டல் சொரிந்ததென்று
முடித்ததும் இவை காட்சி யன்றனு
மான மென்று மொழிந்திடே''

எனவரும் (சிவ. சித்தி. பரபக்கம் உலோகாயதன் மதமறுதலை, உ) செய்யுளானும் உணர்க. அந்நுவயம் - சேர்க்கை. அஃதாவது காரண காரியங்களுக் கிடையே இயற்கையாக அமைந்த தொடர்பு. கடம் - மதம். கானம்-காடு. உடங்கு-ஒருங்கு. எச்சம்-இதனைச் சேடானுமானம் எனவும் காரியானுமானம் எனவும் கூறுப. வெள்ளம் ஆகிய ஏது என்க. மழைநிகழ்வு - மழைபெய்தமை. கருக்கொள் முகில் - சூல் கொண்ட மேகம். இது - இம் மேகம். காண்டற் பொருள் - கண்ணால் கண்ட பொருள். கண்டிலது - காணப்படாத பொருள்.

௩. உவமம். ௪. ஆகமம். ௫. அருத்தாபத்தி.
௬. இயல்பு. ௭. ஐதிகம்.

௪௩ - ௫௦ : உவம.........தெளிதல்

(இ - ள்.) உவமமாவது - உவமஅளவை என்று சொல்லப்படுவது; ஒப்புமை அளவை - கண்டதும் காணாததுமாகிய இரண்டு பொருள்களின்கண் கிடந்த பொதுத் தன்மைகொண்டு கேள்வி அறிவினால் பண்டு காணாத பொருளை உணர்ந்து கொள்ளுதலாம், அஃதாவது; கவயமா ஆபோலும் என - கவயமா என்னும் காட்டு விலங்கினை அறியாதான் ஒருவன் அது பசுவைப் போன்றிருக்கும் என்று கேள்வியுற்றிருந்தவன் பின்னர்க் காட்டின்கண் ஆப்போன்றதொரு விலங்கைக் கண்டு இதுவே கவயமா என; கருதல் - துணிதலாம்; ஆகம அளவை - இனி நூல் அளவையாவது; அறிவன் நூலால் போக புவனம் உண்டு என புலங்கொளல் - வினையின் நீங்கி விளங்கிய அறிவினையுடைய நூலாசிரியன் நூலின்கண் ஓதியிருத்தல் கண்டு இவ்வுலகிற்கப்பால் துறக்கமும் நரகமுமாகிய வேறு உலகங்களும் உண்டு என்று துணிதல்; அருத்தாபத்தி - அருத்தாபத்தி என்னும் அளவையாவது; ஆய்க்குடி கங்கையிருக்கும் என்றால் - ஒருவன் இடையர் வாழும் சேரி கங்கையின்கண் உளது என்று கூறியவழி; கரையில் என்று எண்ணல்- அது கேட்டவன் கங்கை என்னும் சொல் கரை என்னும் பொருட்டு ஆகும் ஆதலின் கங்கையாற்றின் கரையில் இடைச்சேரி உளது என்று துணிதல்; இயல்பு - இனி இயல்பு என்னும் அளவையாவது;

யானைமேல் இருந்தோன் - யானைமேல் ஏறி அதனைச் செலுத்து தற்கு அமைந்திருந்தோன் ஒருவன் கொடு என்று கையை நீட்டிய பொழுது அது கேட்டோன் அவன் கேட்கும் பொருள் தோட்டியே என்றறிந்து; தோட்டிக்கு அயல் ஒன்று ஈயாது அதுவே கொடுத்தல் - தான் துணிந்த தோட்டிக்கு வேறாக மற்றொன்றனையுங் கொடாமல் அத் தோட்டியையே கொடுத்தல் ஆகும்; ஐதிகம் என்பது உலகுரை - இனி ஐதிக அளவை எனபது செவி வழியாக வருகின்ற உலகுரையே ஆம் அஃதாவது; இம்மரத்து எய்தியது ஓர் பேய் உண்டு என - உலகத்தோர் ஒரு மரத்தைக் குறித்து இம் மரத்தின்கண் உறைவதொரு பேய் உளது என்று நெடுநாளாகக் கூறிவருதலால் அது கேட்டோர் அங்ஙனமே அம் மரத்தில் ஒரு பேய் உளது என்று துணிதலாம் என்றான எனக.

(வி - ம்.) உவமை-இருபொருளின்கண் கிடந்த ஒப்புமைத்தன்மை. இதனை ஒக்கும் இது எனக் கேட்டிருந்த ஒருவன் இதற்கும் அதற்கும் உள்ள ஒப்புமையைக் கண்டு பண்டு கண்டறியாத அதனை அவ்வொப்புமை காரணமாக அறிந்து கொள்ளுதல். கவயமா - ஆமா - காட்டுப்பசு. இது நாவால் நக்கியே பிறஉயிரைக் கொன்றுவிடும் ஒரு கொடிய விலங்கு. இக்காரணத்தால் இது பற்றி உணர்த்தலும் உணர்தலும் வேண்டிற்று "கண்ணன் கருமுகில் போல் வண்ணன்" எனக் கேட்டவன் அவ்வுவமை யால் அக் கண்ணனை அவ் வண்ணமுடையோனாகக் கருதி உணரும் உணர்ச்சியும் இவ்வளவையின் பாற்படும். ஆகமம்-முதனூல். அறிவன் என்றது வினையின் நீங்கி விளங்கிய அறிவனை. என்னை? அவனே நூல் செய்யும் தகுதி உடையன் ஆகலின் என்க. இதனை,

> "வினையி னீங்கி விளங்கிய வறிவின்
> முனைவன் கண்டது முதனூ லாகும்" (தொல். மரபி. ௯௫)

என்பதனா னுணர்க. போகபுவனம்-உயிர்கள் இவ்வுலகத்தே செய்யும் நல்வினை தீவினைகட்குரிய பயனாகிய இன்பதுன்பங்களை நுகர்தற்குரிய உலகங்கள். இப் போகபுவனங்கள் சமயங்கள்தோறும் மாறுபடும் எனினும் எல்லாச் சமயத்தார்க்கும் பொருந்தப் பொதுமறை செய்த அறிவன் நூலாகிய திருக்குறளினும்,

> "அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
> யாரிரு ளுய்த்து விடும்" (குறள் - ௧௨௧)

எனவரும் குறளின்கண் போகபுவனம் கூறப்பட்டிருத்தலும் உணர்க. இனி அருத்தாபத்தியின் இயல்பை வரும் செய்யுளால் உணர்க.

> "அடுத்துல கோதும் பொருளருத் தாபத்தி யாமதுதா
> னெடுத்த மொழியினஞ் செப்புவ தாகுமிவ் வூரிலுளார்

படைத்தவ ரென்னிற் படையா தவருமுண் டென்றுமிவன்
கொடுப்பவ னென்னிற் கொடாதாரு முண்டென்றுங்
கொள்வதுவே'' (சிவ. சித்தி. அளவை - உரை)

எனவரும்.

பகலுண்ணான் பருத்திருப்பான் என்புழி இவன் இரவில் நன்கு உண்ணுவான் என்றுணர்வதும் அஃது. இயல்பளவைக்கு இங்ஙனமே,

''மாமே லிருந் தொருகோரு வெனிற்சுள்ளிக் கோறாலும்
சோமே லிருந்தொரு கோருவெனிற் றரலே துணிந்து
பூமேவு கண்ணமுத் தங்கோல் கொடுத்தலும் பூதலத்தே
நாமேவி யல்பென்று கூறுவர் நல்லசொன் னுவலரே''

(என்றும் வரும் மேற்படி சிவசித்தி அளவை உரைமேற்கோள்) எனவரும் செய்யுளினும் கூறப்பட்டிருத்தல் உணர்க. இனி ஐதிக அளவைக்கு,

''கொன்பயில் வேலைக் கடல்புடை சூழுங் குவலயத்தோ
ரன்புட னுவி லல்கையுண் டென்பர்க ளென்பதுவு
மின்பயில் புற்றில் விடநாக முண்டென்ப ரென்பதுவும்
என்பர்க ணுவல ரென்பது மைதிக மென்பர்களே''

எனவரும் செய்யுளின்கண் வேறுமோர் எடுத்துக்காட்டு வருதலும் உணர்க.

## அ. அபாவம், கூ. மீட்சிஒழிவறிவு, கo. உண்டாம் நெறி, என்னும் அளவைகள்

### ருக - ருகூ : அபாவம்.........கூறல்

(இ - ள்.) அபாவம் என்பது - அபாவவளவை என்று சொல்லப்படுவது; இன்மை ஓர் பொருளை அவ்விடத்துத் தனாது தான இலை என்றல் - அஃதாவது ஒரு பொருள் ஓரிடத்தில் உளதாகத் துணிந்து அங்கு நனகு தேடியபின் அப பொருள் அங்கு இல்லாமை கண்டு அப் பொருள் தான் தேடிய அவ்விடத்தே இல்லை என்று துணிந்து அப் பொருளைத் தான் தேடிய அவ்விடத்தே தனது தெளிவு கெடாதபடி தானே இல்லையென்று துணிதல்; மீட்சி என்பது - மீட்சி அளவை என்று சொல்லப்படுவது வருமாறு; இராமன் வென்றான் என - இராமன் வெற்றி பெற்றனன் என்ற சொல் கேட்டவளவிலே; மாட்சி இல் இராவணன் தோற்றமை மதித்தல் - அறமாண்பில்லாத இராவணன் தோற்றொழிந்தான் எனபதனையும் துணிதல்; உள்ள நெறி என்பது - உண்டாம் நெறி என்று கூறப்பட்ட அளவையாவது; நாராசத் திரிவில் கொள்ளத்தகுவது காந்த இமனக் கூறல் - இருப்புக் கோலின் சுழற்சியினாலே அறிந்து

கொள்ளத்தக்கது அவ்விருப்பின்கண் சாந்தம் உண்மை என்று துணிதல்;

(வி - ம்.) ஓரிடத்தே ஒருபொருள் இருக்கக்கூடும் என்று ஆராய்பவன் அப்பொருள் அங்கு இல்லை என்று துணிதலுக்கு அப்பொருளின் இன்மையே காரணமாதலின் அதுவும் ஓர் அளவையாயிற்று. தவாது என்றது தனது துணிவு பிழைபடாமல் என்றவாறு. துணிவாவது அப்பொருள் அவ்விடத்து இல்லை என்பது. இவ்வளவையை என்றுமபாவம் முன் அபாவம் ஒன்றினொன்றபாவம் எனப் பல்வேறு வகையானும் வகுத்து ஆராய்தலும் உண்டு. மீட்சி யொழிவு அறிவு என்பதனை ஈண்டு மீட்சி என்றே ஓதியது மீட்சி அளவை என்றும் அது வழங்கப்படும் என்பது அறிவித்தற்கு. இதனை ஒழிபளவை எனவும் பாரிசேடவளவை எனவும் கூறுப. இவ்வளவைக்குச் சித்தியாரில் மறைஞான தேசிகர் எடுத்துக் காட்டும் செய்யுள் வருமாறு—

“சீரா ரொழிபென்று செப்பப் படுவது திண்புவிமேற்
போராடி நின்று பொருதா ரிருவர்தம் போர்க்களத்துப்
பாரா ரிராகவன் வென்று னெனிற்றன் பரிசழிந்து
நேரா மிராவணன் றோற்றசொல் லாகி நிகழ்வதுவே”

எனவரும்.

இனி, உண்டாநெறி எனினும் உள்ளநெறி எனினும் சம்பவ அளவை எனினும் ஒரு பொருளன. இதன் இயல்பினைச் சிவ. சித்தி-சுப. அளவை மேற்கோளாக வரும்.

“துயக்கற வுண்மை யெனநா வலர்க டுணிந்துரைப்ப
தியற்கைப் பொருளினை யிற்றென லாமிது தானுரைக்கின்
வியக்குற்ற கால்சலிக் குந்தீச் சுடும்விய னீர்குளிரும்
வயக்குற்ற மண்வலி தென்றுபட் டாங்கு வழங்குவதே”

எனும் பாட்டானுணர்க.

### பிரமாண பாசங்கள்

நூ - சுக: எட்டுள.........நிகழ்வ

(இ - ள்.) பிரமாண பாசங்கள் - அளவைப் போலிகளும்; எட்டு உள - எட்டு இருக்கின்றன, அவையாவன; சுட்டு உணர்வொடு திரியக்கோடல் ஐயம் தேராதுதெளிதல் கண்டுணராமை - சுட்டுணர்வும் திரிபக்கொள்ளுதலும் ஐயமும் தேராதுதெளிதலும் கண்டும் உணராமையும் ஆகிய இவற்றோடு; தேராதுதெளிதலும் கண்டும் உணராமையும் ஆகிய இவற்றோடு; எய்தும் இல்வழக்கு உணர்ந்ததை உணர்தல் நினைப்பு என நிகழ்வ - சேரும் இல்வழக்கும் உணர்ந்ததை உணர்தலும் நினைப்பும் என்று நிகழ்கின்ற இவ்வெட்டுமாம் என்றுணர்க.

(வி - ரை.) பிரமாணபாசங்கள் எட்டுள என மாறுக. இது தொகுத்துக் கூறல் என்னும் உத்தி. பிரமாணபாசங்கள் - அளவைப் போலிகள். மேலே சுட்டுணர்வு.........நினைப்பன நிகழ்வ என்னுந் துணையும் வகுத்து மெய்ந்நிறுத்தல் என்னும் உத்தி.

## அளவைப் போலியின் இலக்கணம்

கூக - எஎ : சுட்டுணர்வு.........அளவைகள்

(இ - ள்.) சுட்டுணர்வு எனப்படுவது - இனி இவ்வளவைப் போலிகள் எட்டனுள் வைத்துச் சுட்டுணர்வென்னும் அளவைப் போலியாவது; எனைப்பொருளுண்மை மாத்திரை காண்டல் - அறியப் புகுந்த எல்லாப் பொருள்களையும் அவற்றின் உண்மை மாத்திரம் கண்டொழிதலாம்; திரியக்கோடல் ஒன்றை ஒன்றாக என்றல் - திரியக்கோடல் என்பது ஒன்றை மற்றொன்றாகக் கருதல்; விரிகதிர் இப்பியை வெள்ளியென்று உணர்தல் - அஃதாவது விரிகின்ற ஒளியையுடைய சிப்பியைச் சிப்பி என்றுணராமல் வெள்ளி என்னும் உலோகமாக உணர்வது போல்வனவாம்; ஐயம் என்பது - ஐயம் என்னும் அளவைப் போலியாவது; ஒன்றை நிச்சயியா - கண்டதொரு பொருளைத் தேற்றமாகக் காணாது; மையல் தறியோ மகனோ என்றல் - மயக்கத்தால் தான் கண்ட பொருள் கட்டையோ மகனோ என்று ஐயுற்றுமொழிதல் போல்வது; தேராது தெளிதல் - தேராது தெளிதல் என்னும் அளவைப் போலியாவது; செண்டு வெளியில் தறியை ஓராது மகன் என உணர்தல் - செண்டு வெளியின்கண் நடப்பட்டுள்ள கட்டையை ஆராய்ந்து பாராமல் மகன் என்று உணர்ந்தொழிதல் போல்வதாம்; கண்டு உணராமை - கண்டுணராமையாவது ஒரு பொருளைக் கண்ணாற் கண்டு வைத்தும் அப் பொருளின் இயல்பு உணராதொழிதலாம், அது வருமாறு; கடுமாப் புலி ஒன்று அணுகல் கண்டும் அறியாமை - ஒருவன் தன்னைக் கொன்றொழிக்கும் கொடிய விலங்காகிய புலி ஒன்று அணுகி வருதல் கண்டும் அதனால் வரும் தீமையை உணராமை முதலிய போலிக் காட்சியாம்; இல்வழக்கு என்பது - இல்வழக்கென்னும் அளவைப் போலியாவது; முயல் கோடு ஒப்பன சொல்லின் மாத்திரத்தால் கருத்தில் தோன்றல் - முயற்கொம்பு என்பது போலும் பொருள்கள் வாய்மையில் இல்பொருளாகவும் சொற் கேட்ட துணையால் ஓர் உள் பொருள் போலக் கருத்திற்குப் புலப்படுதலாம்; உணர்ந்ததை உணர்தல் - உணர்ந்ததை உணர்தல் என்னும் அளவைப் போலியாவது ஒருவன் முன்னுணர்ந்ததனையே வாளாது மீண்டும் அளவை கூறி உணர்த்துதல், அஃதாவது; உறுபனிக்கு தீப்புணர்ந்திடல்

மருந்து என புலங்கொள நினைத்தல் - பிறன் ஒருவனுக்கு மிக்க பனிதரும் துன்பத்திற்குத் தீக்காய்தல் மருந்தென்று கூற முற்படுதல் போல்வன; நினைப்பு எனபபடுவது - நினைத்தல் என்னும் அளவைப் போலியாவது; பிறர் காரணம் நிகழாது நினக்கு இவர் தாயுந் தந்தையும் என்று சொல கருதல் - ஒருவன் காரணமின்றியே உனக்கு இவர் தாயுந் தந்தையுமென்று அறிவித்தல் கேட்டு அக் கூற்றினைத் துணிதலாம்; இப்பெற்றிய அளவைகள் - யான் கூறிய அளவைகள இத்தன்மையன என்றான்; என்க.

(வி - ம்.) 'எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு' என்பது பற்றி ஒரு பொருளின் உண்மை மட்டும் கண்டொழிதலால் பயனில்லை ஆகலின் சுட்டு அளவைப் போலியாயிற்ற. திரியக் கோடல் - இதனை விபரீதக் காட்சி எனவும் கூறுப. ஐயம்: ஒரு பொருளைச் சுட்டுணர்வால் கண்டவன் அதனை அதுவோ இதுவோ என்று ஐபுறுதல். இவையெல்லாம் காட்சிப் போலிகள். என்னை? மெய்க்காட்சி மாசறு காட்சி ஐபம் திரிவு இன்றி விகற்பம் மூன்று ஆசு அற அறிவதாகும், என்பவாகலின் இவையெல்லாம் போலி ஆயின என்க. தேராது தெளிதல் என்பது - ஆராயாது தெளிதலும் பிழைபடுதல் உண்டாதலின் போலியாயிற்று. அளவைகள் நன்மை எய்தும் பொருட்டாகலின் புலியைக் கண்டவன் அதனால் தனக்குவரும் கேட்டை உணராமையால் அதுவும் போலியாயிற்று. அண்டலை என்புழி ஐகாரம் சாரியை. அதனால் எய்தும் தீமையை நன்குணர்த்தும் பொருட்டுப் புலியை எடுத்துக்காட்டினார். பரத்தை முதலியோரைக் கண்டு காமுறுவோர் காட்சியும் அவரால் வரும் தீமை உணராமையின் அக்காட்சியும் அளவைப் போலி என்றற்கு முதலிய கண்டும் அறியாமை என்றார். முயற்கோடு ஒப்பன என்றது ஆகாயப்பூ கழுதைக் கொம்பு காக்கைப் பல் முதலிய இல்பொருள் வழக்குகளையும் அகப்படுத்து நின்றது. இவை சொற்றொடர் மாத்திரையே அன்றிப் பொருள் இல்லாதன ஆகவும் பொருள் போல உள்ளத்தில் தோன்றுதலின் போலியாயிற்று. இக் காட்சி பானதக் காட்சி ஆகலின் கருத்தில் தோன்றல் என்றார். அளவையின்றியும் உலகத்தார் உணர்தற்கு எளிய பொருளை அளவையால் உணர்த்துதலும் போலி என்பார் உணர்ந்ததை உணர்த்தல் என்றார். இஃதுணராது உணர்ந்ததை உணர்தல் எனப் பாடந்திருத்தி உணர்ந்திருந்ததனையே மறித்தும் உணர்தல் என்று உரை கூறி அதனைக் குற்றம் என்று கூறுவார் உரை போலியாம் என்க. என்னை? உணர்ந்ததனை மறித்தும் உணராதார் இவ்வுலகத்தே வாழ்தல் அரிதாகலின் அஃது போலியாதல் எங்ஙனம்? இனி, தான் உணர்ந்ததனை ஆராய்ந்து தெளிய முற்படுவார் யாரே உளர்? இங்ஙனம் இதற்குக் கூறும் விளக்கமும் போலி என்க. நினைப்பு - பிறர் சொன்னதனை நினைத்தல். பிறர் கூற்று பொய்யாதலும் கூடுமாதலின் அதனால் உண்டான நினைப்பும் போலியாயிற்று.

### சமயக்கணக்கர்களும் அளவைகளும்

எஅ - அகூ : பாங்குறும்.........தன்னை விட்டு

(இ - ள்.) பாங்கு உறும் - இவ்வளவைப் பகுதியை மேற்கொள்ளுகின்ற சமயங்கள்; உலோகாயதம் பௌத்தம்

சாங்கியம் வைசேடிகம் மீமாஞ்சகமாம் - உலோகாயதமும் பௌத்தமும் சாங்கியமும் வைசேடிகமும் மீமாஞ்சையும் ஆகும்; சமய ஆசிரியர் தாம் - முறையே இச் சமயங்களுக்கு ஆசிரியர் ஆவார்; பிருகற்பதி சினன் கபிலன் அக்கபாதன் கணாதன் சைமினி - பிருகற்பதியும் புத்தனும் கபிலனும் அக்கபாதனும் கணாதனும் சைமினியும் என்னும் இம் முனிவர்களாவார்; மெய்ப் பிரத்தியம் அனுமானம் சாத்தம் உவமானம் அருத்தாபத்தி அபாவம் - இச் சமயங்களால் மேற்கொள்ளப்பட்டிருக்கின்ற அளவைகள் தாமும் மெய்ம் முதலிய பொறிகளால் உணரப்படும் காட்சியளவையும் கருதலளவையும் நூலளவையும் உவம அளவையும் அருத்தாபத்தி அளவையும் அபாவ அளவையும் ஆகிய; இப்போது இயன்றன அளவைகள் - இந்த ஆறு அளவைகளே இப்பொழுது நிரலே அச் சமயக்கணக்கர்களால் வழங்கப்பட்டு வருகின்ற அளவைகளாகும்; என்றவன் தன்னைவிட்டு - என்று அறிவித்தவனாகிய அளவைவாதியை விட்டு மாதவன் வடிவில் அப்பால் செல்லும் மணிமேகலை என்க.

(வி-ம்.) பாங்கு-பகுதி. இவ்வளவைகளின் பகுதி என்க. இவற்றை நிரலே உலோகாயத சமயத்திற்கு ஆசிரியன் பிருகற்பதி, அச்சமயத்திற்கு அளவை காட்சி அளவை மட்டுமே எனவும், பௌத்தத்திற்குப் புத்தன் ஆசிரியன் எனவும் காட்சியும் கருதலும் பௌத்த சமயத்திற்கு அளவை எனவும், சாங்கியத்திற்கு ஆசிரியன் கபிலன் எனவும், அளவைகள் காட்சி கருதல் நூல் ஆகிய மூன்றும் எனவும், நையாயிகத்திற்கு ஆசிரியன் அக்கபாதன், அளவைகள் காட்சி கருதல் நூல் உவமை ஆகிய நான்கும் எனவும், வைசேடிகத்திற்கு ஆசிரியன் கணாதன் எனவும், அளவைகள் காட்சி கருதல் நூல் உவமை அருத்தாபத்தி ஆகிய ஐந்தும் எனவும், மீமாஞ்சகத்திற்கு ஆசிரியன் சைமினி எனவும், அளவைகள், காட்சி முதல் அபாவம் ஈறாகக் கூறப்பட்ட ஆறுமாம் எனவும் கொள்க. இவையே இப் போது வழங்குவன. எனவே ஏனைய நான்கு அளவைகள் கைவிடப் பட்டன என்றவாறும் ஆயிற்று. மீமாஞ்சையின் ஆசிரியரான சைமினி என்பவர் தாம் கண்ட ஆறளவைகளையும் கைக்கொண்டனர் என்பதனை மீமாஞ்சைச் சருக்கம் (மெய்ஞ்ஞான விளக்கம் - ௧௧) மூன்றும் செய்யுளில்,

"காணுதல் கருத லொப்புக் கட்டுரை பொருளபாவ
மேனுறு பிரமாணங்க ளிவை யாறே"

என்பதனானும் உணர்க. என்றவன் - அளவை வாதி.

## சைவவாதி

### ௮௬ - ௯௰ : இறைவன்.........உரைத்தனன்

(இ - ள்.) இறைவன் ஈசன் என நின்ற சைவவாதி நேர்படுதலும் - எவ்வுலகத்திற்கும் முழு முதற்கடவுள் பரசிவமே என உட்கொண்டு அந்நெறி நின்றொழுகும் சைவவாதி தன் எதிரே வருதலும் அவனை நோக்கி; பரசும் நின தெய்வம் எப்படித்து என்ன - ஐயனே! நீ வழிபடுகின்ற கடவுள் எத்தகையது கூறுக என்று வினவ; இருசுடரோடு இயமானன் ஐம்பூதம் என்று எட்டு வகையும் உயிரும் யாக்கையுமாய் கட்டி நிற்போனும் - உயிரும் ஞாயிறும் திங்களும் ஆகிய இரண்டு ஒளி மண்டிலங்களோடு நிலம் நீர் தீ வளி வெளி ஆகிய இவ்வெட்டு வகைப் பொருள்களும் தனக்கு உயிரும் உடம்புமாகப் படைத்துக் கொண்டு அவற்றின் உள்ளும் புறமும் தன் ஆணையால் கட்டி அவையே தானும் நிற்பவனும்; கலை உருவினோனும் - மறைமொழியே தனக்கு உருவமாக உடையவனும்; படைத்து விளையாடும் பண்பினோனும் - உலகங்களைப் படைத்தல் முதலிய ஐந்து தொழில்களையும் இடையறாது செய்து விளையாடுகின்ற அருட்பண்பை உடையவனும்; துடைத்து துயர்தீர் தோற்றத்தோனும் - உயிர்களின் மலத்தைத் துடைத்துத் துன்பத்தைத் தீர்க்கின்ற பெருந்தகைமையை உடையோனும்; தன்னில் வேறு தான் ஒன்று இல்லோனும் - தன்னில் பிறிதாக வேறு ஒரு பொருளும் இல்லாதவனும் ஆகிய; அன்னோன் இறைவன் ஆகும் என்று உரைத்தனன் - அத்தகைய சிவபெருமானே எமக்குக் கடவுளாவான் என்று கூறினன் என்க.

(வி - ம்.) பரசுதல் - வழிபடுதல். எப்படித்து - எத்தன்மைத்து. இருசுடர் - ஞாயிறும் திங்களும். இயமானன் - உயிர். இருசுடரோடு...... கட்டிநிற்போனும் எனவரும் இதனோடு,

"இரு நிலனாய்த் தீயாகி நீரும் ஆகி
　　இயமானனாய் எறியுங் காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
　　ஆகாச மாய்அட்ட மூர்த்தி ஆகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
　　பிறர் உருவும் தம்உருவும் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகி நாளை ஆகி
　　நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே"

எனவரும் திருநாவுக்கரசருடைய திருத்தாண்டகம் ஒப்புநோக்கற்பாலது. உயிரும் இருசுடரோடு என முன்னர்க் கூட்டுக. உயிர்களே தனக்கு உயிராகவும் ஏனைய பூதங்கள் தனக்குடம்பாகவும் என்பான்

இயமானனும் ஐம்பூதமும் இருசுடரும் உயிரும் யாக்கையுமாய்க் கட்டி நிற்போனும் என்றான். இக் கருத்தினை 'அவையே தானாய்' எனவரும் சிவஞான போதத்தானும் உணர்க. கலை என்றது - மறைமொழியை. அஃதாவது திருவைந்தெழுத்து மந்திரத்தை என்க. இதனை,

" மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்
தந்திரம் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக் கேள்நீ
முந்திய தோற்றத் தாலும் மந்திர மூலத் தாலும்
அந்தமில் சத்தி யாதிக் கிசைத்தலு மாகு மன்றே"

எனவரும் (சிவ - சித்தி - சுப - செய் - எகூ) செய்யுளானும் உணர்க.

இனி, கலை கூஅ-என்றும் இவை சிவபெருமானுடைய உறுப்புகளாக உள்ளவை என்பவாதலின் கலையுருவினோன் என்றானெனினுமாம். என்னை? ஐயாறதன்மிசை எட்டுத்தலையிட்ட மையில்வான் கலை மெய்யுடன் பொருந்தி என வருதலுங் காண்க (திருச்சிற்றம்பல-க.பேர்). படைத்து விளையாடும் பண்பினோன் என்பதனோடு 'காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி'' எனவரும் திருவெம்பாவையை ஒப்பு நோக்குக துடைத்தல்-மூலமலத்தை நீக்குதல். துயர் - பிறவித்துன்பம். தோற்றம் - பெருந்தகைமை. தான் ஒன்றிலோன் என்புழி, தான் : அசை.

## பிரமவாதி

### கூகூ - கூஎ : பிரமவாதி..........என்றனன்

(இ - ள்.) பிரமவாதி பேர் உலகு எல்லாம் - பெரிய அண்டங்களாகிய உலகங்கள் எல்லாம்; ஓர் தேவன் இட்ட முட்டை என்றனன் - ஒப்பற்ற பிரமதேவனால் இடப்பெற்ற முட்டைகள் என்று கூறினன் என்க.

(வி - ம்.) மணிமேகலை சைவவாதியைவிட்டு அப்பால் எதிர்ப்பட்ட பிரமவாதியை வினவ அவன் இங்ஙனம் கூறினன் என்பது கருத்து. பின் வருவனவற்றிற்கும் இஃதொக்கும்.

## வைணவவாதி

### கூஅ - கூகூ : காதல்.........உரைத்தனன்

(இ - ள்.) கடல்வணன் புராணம் காதல் கொண்டு ஓதினன் - கடல் போலும் நீலநிறமுடைய விட்டுணுவின புராணத்தை அன்புற்று ஓதியுணர்ந்த வைணவவாதி இவ்வுலகமெல்லாம்; நாரணன் காப்பு என்று உரைத்தனன் - திருமாலால் காக்கப் படுதலின் அவனே முழுமுதற் கடவுள் என்று கூறினன் என்க.

(வி - ம்.) காதல் - இறையன்பு. அவனே முழுமுதற் கடவுள் என்பது குறிப்புப் பொருள். ஓதினன் : பெயர்.

## வேதவாதி

### ௧௦௦ - ௧௦௫ : கற்பம்.........கேட்டு

(இ - ள்.) கற்பங் கை சந்தம் கால் எண்கண் தெற்றென் நிருத்தம் செவி சிக்கை மூக்கு உற்ற வியாகரணம் முகம் பெற்று - கற்பம் கையாகவும் சந்தோவிசிதி காலாகவும் சோதிடம் கண்ணாகவும் தெளிவாக உள்ள நிருத்தம் காதாகவும் சிக்கை மூக்காகவும் அதனையுடைய வியாகரணம் முகமாகவும் இவ்வாறு உறுப்புகளையும் பெற்று; சார்பின் - தோன்றா ஆரணவேதக்கு ஆதி அந்தம் இல்லை - தான் ஒன்றினின்றும் பிறவாத சிறப்பினையுடைய ஆரணமாகிய வேதத்திற்குத் தோற்றமும் இறுதியும் இல்லை ஆதலின்; அது நெறி எனும் வேதியன் உரையின் விதியும் கேட்டு - அது கூறும் நெறியே வீடெய்துவிக்கும் நன்னெறி என்று கூறுகின்ற வேதவாதியின் விதியையும் கேட்டறிந்த பின்னர் என்க.

(வி - ம்.) கற்பம் முதலிய ஆறும் வேதாங்கம் என்பவாதலின் இங்ஙனம் உருவகிக்கப் பட்டன. சந்தம் - சந்தோவிசிதி. எண் என்றது சோதிடத்தை. இனி, இது பற்றி ஆசிரியர் நச்சினார்க்கினியர் இம்முறைமையினைச் சிறிது வேறுபடுத்தி ஆறங்கமாவன உலகியற் சொல்லையொழித்து வைதிகச் சொல்லையாராயும் நிருத்தமும் அவ்விரண்டையுமுடனாராய்ந்த ஐந்திரத் தொடக்கத்து வியாகரணமும், போதாயனீயம், பாரத்துவாசம், ஆபத்தம்பம், ஆத்திரேயம் முதலிய கற்பங்களும், நாராயணீயம் வராகம் முதலிய கணிதங்களும் எழுத்தாராய்ச்சியாகிய பிரமமும் செய்யுளிலக்கணமாகிய சந்தமுமாம்'' (தொல்-புறத்-௨௦-உரை) என்பர். சார்பில் தோன்றாமையாவது அனாதிநித்தியம் என்றவாறு. இதனை நீலகேசியின்கண்,

> ''நாத்திக மல்லது சொல்லலை
>         யாயின்மு னன்பயந்த
> சாத்திர மாவது வேதமன்
>         றேவது தான்சயம்பு
> சூத்திரி நீயது வல்லைய
>         லாமையிற் சொல்லுகிலாய்
> போத்தந்தி யோவதன் றீமையென்
>         றுன்பொங்கிப் பூதிகனே'' (வேத. ௮௨௧)

எனவரும் பூதிகன் கூற்றானும்,

''முன்னுள மறைகள்'' எனவரும் சங்கற்ப மாயாவாதி மதத்தானும் ''வேதம் அநாதி நித்தியம்' எனவரும் பரிமேலழகர் (குறள் - ௫௪௩) உரையானும் உணர்க. வேதக்கு: சாரியையின்றி உருபு புணர்ந்தது. வேதியன், வேதவாதி.

## மணிமேகலை உட்கோளும் செயலும்

### ௧௦௯ - ௧௦௯ : மெய்த்திறம்.........யாதேன

(இ - ள்.) மெய்த்திறம் வழக்கு என விளம்புகின்ற எத்திறத்தினும் இவர் உரை இசையாது என - அது கேட்ட மணிமேகலை நூல் வழக்கும் உலக வழக்கும் எனக் கூறப்படுகின்றவற்றுள் எந்த வழக்கிற்கும் அளவைவாதி முதலிய இச் சமயக் கணக்கர் மொழிகள் பொருந்தா என்றுணர்ந்தவளாய் அப்பால்; ஆசீவகநூல் அறிந்த புராணனை - ஆசீவக சமய நூலை நன்கு கற்றுணர்ந்த புராணன் எனனும் தலைவனை அணுகி; பேசும் நின் இறை யார் நூற்பொருள் யாது என - ஐய நின்னாற் கூறப்படும் உன்னுடைய இறைவன் யார் நின் நூல் கூறும் நன்பொருள் யாது என்று வினவா நிற்ப என்க.

(வி - ம்.) மெய்த்திறம் - நூல்வழக்கு. வழக்கென்றது உலக வழக்கினை. "மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடெனும் இத்திறம் தத்தம் இயல்பினின் காட்டும் சமயக்கணக்கரும்" என விழாவறை காதையினும் (௧௧. ௧௨) வருதல் உணர்க. ஆசீவக நூல் நன்குணர்ந்த சமயக்கணக்கர் தலைவனைப் புராணன் என்று வழங்குவது வழக்கம் என்பது நீலகேசியில் துறவோர் தலைவனைப் பூரணன் என்பதனாலும் ஈண்டும் பூரணன் என்பதே புராணன் எனக் கோடற்கும் இடன் இருத்தலானும் உணரலாம்.

> "காரணம் வேண்டாக் கடவுட் குமாரந்தன்னிற்
> பேருணர் வெய்திப் பெரிதும் பெரியவன்
> பூரண னென்பான் பொருவறக் கற்றவ
> ரரணங் கன்னுட் கறிய வுரைக்கும்" (நீலகேசி, ஆசீவக-௬௬௮)

எனவே பூரணன் என்பதே விகாரத்தாலாதல் பிழைபட்டாதல் ஈண்டுப் புராணன் என்றாயிற்று என்று கோடல் மிகையன்று என்க.

## ஆசீவகவாதி

### ௧௧௦ - ௧௧௯ : எல்லையில்.........படுமே

(இ - ள்.) எல்லை இல் பொருள்களில் எங்கும் எப்பொழுதும் புல்லிக் கிடந்து புலப்படுகின்ற வாம்பில் அறிவன் இறை - அது கேட்ட ஆசீவக சமயத் தலைவனாகிய புராணன் அவ் வினாக்களுக்கு விடை இறுப்பவன் :—எல்லையில்லாமல் கிடக்கின்ற பொருள்களில் எல்லாம் அங்கிங்கெனாதபடி எங்கும் எக்காலத்தும் பொருந்திக் கிடந்து பொறிகளுக்குப் புலப்படுகின்ற அனந்தஞானம் உடையவனாகிய மற்கலிதேவன் என்பவனே எம்மால் வழிபடுகின்ற கடவுளாவான்; நூல் பொருள்கள் ஐந்து-எமது நூலாகிய

நவகதிர் என்பதன்கண் கூறப்பட்ட பொருள்கள் ஐந்தேயாம், அவைதாம்; உரம் தரும் உயிரோடு ஒரு நால்வகை அணு - அறிவைத் தருகின்ற உயிரணுவோடு நான்கு வகை அணுக்களுமாம்; அவ்வணு உற்றும் கண்டும் உணர்ந்திட - அவ்வுயிரணுவானது தீண்டியும் பார்த்தும் உணர்த்திடும்படி; பெய் வகை கூடி பிரிவதும் செய்யும் நிலம் நீர் தீ காற்று என நால்வகையின - ஊழ் கூட்டியவாறு தம்முள் கூடிப் பின் பிரிதலையும் செய்யும் நில அணுவும் நீரணுவும் தீயணுவும் காற்று அணுவும் என்று கூறப்படும் நாலுவகை அணுக்களும்; மலை மரம் உடம்பு என திரள்வதும் செய்யும் வெவ்வேறாகி விரிவதும் செய்யும் - அவ்வணுக்கள் மலை எனவும் மரம் எனவும் உடம்புகள் எனவும் கூடுங்கால் கூடி ஒன்றாகத் திரள்வதனையும் செய்யும், பிரியுங்கால் வேறு வேறாகி விரிவதனையும் செய்யும்; அவ் வகை அறிவது உயிரெனப்படும் - இங்ஙனம் ஆவதனை அறிவதுதான் உயிர் என்று சொல்லப்படும் என்றான் என்க.

(வி - ம்.) பொருள்கள் - காட்சிப் பொருள்கள். வரம்பில் அறிவு - அனந்தஞானம். இறைவன் என்றது மற்கலி தேவனை. நூல் என்றது அச்சமய நூலாகிய நவகதிர் என்பதனை. அந்நூல் ஒன்பது அதிகாரங்களை உடைத்தாகலின் அப் பெயர் பெற்றது. பொருள்கள் என்றது தத்துவங்களை. இவர் உயிரையும் அணுவென்றே கொள்வர். ஏனை அணுக்களோடு கூடுங்கால் ஏனைய அணுக்களுக்கும் அறிவூட்டும் அணு உயிரணுவே என்பான் உரந்தரும் உயிரோடு என அதனைப் பிரித்தோதினான். அவ்வணு என்றது உயிரணுவை. உயிரணு கூடுவதும் பிரிவதும் ஊழின் செயல் என்பான் பெய்வகைக் கூடிப்பிரிவதும் செய்யும் என்றான். உயிரணு மலை முதலியனவாக ஏனைய அணுக்களோடு கூடித் திரள்வதும் விரிவதும் செய்யும் என்றான். அறிவது உயிர் எனப்படுமே என்றதனால் ஏனை அணுக்கள் அறிவில்லா அணுக்கள் என்றானும் ஆயிற்று. இதுகாறும் உயிரோடு கூடிய ஏனைய அணுக்களையும் அவற்றுள் உயிரணுவின் இயல்பினையும் உணர்த்தியபடியாம். மேலே ஏனை நால்வகை அணுக்களின் இயல்பு கூறுகின்றான்.

## நில அணுக்கள் முதலியவற்றின் இயல்பு

### கஉ0 - கஉச : வற்பம்.........கடன்

(இ - ள்.) நிலம் வற்பமாகி உறும் - நில அணு வன்மை உடையதாய்ச் செறியும்; நீர் தாழ்ந்து சொல்படு சீதத்தொடு சுவை உடைத்தாய் இழின் என நிலம் சேர்ந்து ஆழ்வது - நீரணு வீழ்ச்சியுற்றுச் சொல்லப்படுகின்ற தன்மையோடு சுவையும் உடையதாய் இழின் என்னும் ஒலியோடு நிலத்தைச் சேர்ந்து அதன்கண் அழுந்திப் போவதாம்; தீ தெறுதலும் மேல்சேர் இயல்பும் உடைத்து - இனித் தீ அணு சுடுதலும் மேனோக்கிச்

செல்லுதலும் ஆகிய இயல்புகளை உடையதாம்; காற்று விலங்கி அசைத்தல் கடன் - காற்றிற்குக் குறுக்காக இயங்கிப் பிற பொருள்களை அசைப்பது இயல்பாம் என்றான் என்க.

(வி - ம்.) இவ்வணுக்களின் இயல்பை,

"நிலநீ ரெரிகாற் றுயிரி னியல்பும்
பலநீ ரவற்றின் படுபா லவைதாம்
புலமா கொலியொன் றெழிய முதற்காஞ்
சலமா யதுதண் மையையே முதலாம்"

(நீல. ஆசிவ - கஎ௬)

எனவும்,

"எறித்தன் முதலா யினதீ யினவாம்
செறித்த விரையோ டிவைகாற் றினவா
மறித்தல் லறிதல் லவைதா முயிராம்
குறித்த பொருளின் குணமா விவையே"

(நீல. ஆசிவ - கஎக)

எனவும் வரும் செய்யுளானும் இவற்றிற்கு யாம் எழுதிய உரைகளானும் விளக்கங் காண்க. வற்பம் - வன்மை. உறும் - செறியும். இழின்என என்பது ஒலிக்குறிப்பு. மேற்சேரியல்பு - மேலெழும் இயல்பு. அசைத்தல் என்றமையால் பிறபொருளை அசைத்தல் என்க. கடன் - ஈண்டு இயல்பு என்னும் பொருட்டு.

## இதுவுமது

### கஉச - கஙச: இவை.........ஆகும்

(இ - ள்.) ஆதிஇல்லா பரம அணுக்கள் இவை - அநாதியாக உள்ள மிகவும் நுணுகிய இவ்வணுக்கள் கூடிப்பிரியும் செயல்களால் மரம் மலை உடம்பு முதலியனவாய்; வேறு இயல்பு எய்தும் விபரீதத்தால் - வேறு வேறாகும் தன்மையால் உண்டாகும் மாற்றங் காரணமாக; யாவதும் தீது உற்று செ[illegible]வது செய்யா புதிதாய்ப் பிறந்து ஒன்று ஒன்றில் புகுதா - தம் மியல்பில் சிறிதும் கெடுதலும் சிதைதலும் இல்லை அன்றியும், இக் கூட்டரவினால் புதிதாகத் தோன்றுதலும் ஓரணு மற்றோர் அணுவினுள் புகுவதும் இல்லை; முதுநீர் அணுநில அணுவாய் திரியா ஒன்று இரண்டாகி பிளப்பதும் செய்யா அன்றியும் அவல் போல் பரப்பதும் செய்யா - அநாதியாகிய இவ்வணுக்களுள் நீரணு நிலவணுவாகத் திரியவும் மாட்டா ஓரணு இரண்டாகப் பிளந்து போதலும் இல்லை, அல்லாமலும் இவை தமக்கியல்பான வட்ட வடிவத்தினின்று (நெருக்குண்ணுதல் காரணமாக) அவல்

போன்ற தகட்டு வடிவமாய் விரியவும் மாட்டா; பலவும் உலாவும் தாழும் உயர்வதும் செய்யும் குலாம்மலை பிறவா கூடும் - இவ் வணுக்கள் பலவும் இயங்குதலும் தாழ்தலும் உயர்தலும் ஆகிய இச் செயல்களைச் செய்யும், மேலும் தம்முள் கூடும் மலையும் பிறவு மாகிய பொருள்களாகவும் கூடும்; பின்னையும் பிரிந்து தம் தன்மையவாகும் - மறுபடியும் பிரிந்துழித் தமக்கியல்பான நுண்ணணுக்களாகி விடும் என்றான் என்க.

(வி - ம்.) காற்றணுக்கள் உலாவும் நீரணு தாழும் ஆழும் தீயணு உயரும் நிலஅணு குலாம் என்று கொள்க. மலை முதலிய உலகப் பொருள்களாகக் கூடும் என்பது கருத்து. தந்தன்மை - தமக்கியல்பான நுண்ணணுவாம் தன்மை என்க. இனி இதனை,

"அணுமே யினவைந் தவைதா மனைத்துங்
குணமே யிலவாங் குழுவும் பிரியு
முணன்மே யினுமுள் புகுதல் லுரையேங்
கணமே யெனினும் மொருகா லமிலை"

(நீல. ஆசீவ - கஎஎ

எனவரும் செய்யுளானும் உணர்க.

## இதுவுமது

### கஅடு - கசடு : மன்னிய.........மாட்டா

(இ - ள்.) மன்னிய வயிரமாய்ச் செறிந்து வற்பமும் ஆம் - இவ்வணுக்கள் நிலைபெற்றகாழ்ப்பாய்த் தம்முள் செறிந்து பெரிதும் வன்மை உடைய மரமுமாம்; வேயாய்த் துளைபடும் பொருளா முளைக்கும் - மூங்கில் போன்ற உட்டுளையுடைய புற்களாகவும் முளைக்கும்; தேயாமதிபோல் செழுநில வரைப்பாம் - நிறைத் திங்கள் போன்று வளமான நில உலகமாகவும் திரளும்; நிறைந்த இவ்வணுக்கள் பூதமாய் நிகழின் குறைந்தும் ஒத்தும் கூடா வரி... - இவ்வாறு செறிந்த இவ்வணுக் கூட்டம் தமக்கு வேண்டிய அளவில் குறைந்தாதல் ஒத்தாதல் கூடமாட்டா, அவை கூடுங்கால் தமக்குரிய முறைமையாலே; ஒன்று முக்கால் அரை காலாய் உறும் - ஒன்றும் முக்காலும் அரையும் காலும் ஆகக் கூடும்; துன்றும் மிக்கதனால் பெயர் சொல்லப்படும் - இங்ஙனம் கூடுமிடத்தே அக்கூட்டத்துள் மிகுந்துள்ள அணுக் களாலே பெயர் கூறப்படும்; இக்குணத்து அடைந்தால் அல்லது - ஈண்டுக் கூறப்பட்ட பண்பினால் தம்முள் கூடினா லல்லது இவை; நிலனாய் நிற்கென்பதுவும் நீராய் இழிவதும் தீயாய் சுடுவதும் காற்றாய் வீசலும் ஆய தொழிலை அடைந்திட

**மாட்டா - நிலமாகிச் செறிவதும் நீராகி ஒழுகுவதும் நெருப்பாகிச் சுடுவதும் காற்றாகி வீசுவதும் ஆகிய இத்தொழில் செய்யும் ஆற்றலை அடைந்திட மாட்டா என்றான் என்க.**

(வி - ம்.) வைரம் என்றது மரத்தின் காழ்ப்பினை. துளை-உள்துளை. வேய் முதலிய பொருளாய் முளைக்கும் என்க. நிலமாகுங்கால் வட்ட வடிவிற்றாய்த் திரளும் என்பான் தேயாமதிபோல் என்று உவமை எடுத்தோதினான். இதனால் நிலம் வட்டவடிவிற்று என்னும் அறிவு பண்டைக் காலத்தும் இருந்தமை புலனாம். இனி, பூதமாய் நிகழ்வதாவது - நிலனாய் நீராய்த் தீயாய்க் காற்றாய் ஒலியாய் நிகழ்வது. இவ்வணுக்கள் பூதங்களாய் ஆகும்போது அவ்வவ்வணுத்திரள் அவ்வப்பூதமாதற்கு வேண்டிய அளவில் கூடும், குறைந்து கூட மாட்டா; பிற அணுக்களின் கூட்டத்தோடு ஒப்பவும் கூடா என்பான் குறைந்தும் ஒத்தும் கூடும் கூடா வரிசையில் கூடும் என்றான். வரிசை - முறைமை. கூடுங்கால், உயிரை ஒழிந்த ஏனைய அணுக்கள் கூடும் இடத்து நிலம் முதலிய நான்கு அணுக்களும் கூடும் ஓரணுவை விட்டு மூன்றணு தம்மில் கூடி நில்லாது, இரண்டணுக்களோடு இரண்டணுவாகக் கூடும். இரண்டும் மூன்றுமாகக் கூடா என்பது கருத்து. இனி ஒன்று முக்கால் அரை காலாய் உறும் என்னும் இதனையே பிறிதோர் ஆற்றால் கூறுவதும் உண்டு. அம்முறைமையாவது நிலத்தில் நாற்றம் உருவம் பரிசம் என்னும் நான்கும் நீரில் சுவை உருவம் ஊறு என்னும் மூன்றும் தீயில் உருவம் ஊறு என்னும் இரண்டும் காற்றில் ஊறு மட்டும் பொருந்தும் என வேறு வாய்பாட்டானும் கூறுப. அஃதாவது நான்கும் மூன்றும் இரண்டும் ஒன்றும் என்றது ஈண்டு ஒன்று முக்கால் அரை காலாய் உறும் என்று கூறப்பட்டுள்ளது. இதனை—

> "ஒன்றினை ஒருவி மூன்றங் குற்றிடா திரண்டு விட்டு
> நின்றிடா திரண்டு கூடும் நெறிநிலம் நான்கு நீர்மூன்று
> இன்றிரண் டழல்கா லொன்றாய் இசைந்திடும் பூமி யிவ்வா
> றென்றுநீர் தீகா லாகி ஈண்டுவ தென்றி யம்பும்"
>
> (சிவ, சித்தி. பரபக்கம். ஆசீவகன் மதம். ௭)

எனவரும் செய்யுளான் உணர்க. மிக்கதனால் பெயர் சொல்லுவதாவது நில அணு மிக்கிருந்தால் நிலம் என்றும் நீரணு மிக்கிருந்தால் நீர் என்றும் இவ்வாறு மிக்கதனால் பெயர் பெறும் என்றவாறு. மேலே சொன்ன முறைப்படி இவ்வணுக்கள் கூடாவிடின் நிலம் முதலியன[illegible] யுற்றுத் தாங்குதல் ஒழுகுதல் முதலிய தத்தம் தொழிலைச் செய்யும் திறம் பெறா என்று கொள்க.

## இதுவுமது

௧௪௯ - கருள : ஓரணு.........இயல்பு

(இ - ள்.) ஓர் அணு தெய்வக் கண்ணோர் உணர்குவர் - இவ்வணுக்களில் தனித்ததோர் அணுவைக் கேவலஞானம் என்னும் தெய்வக்கண் உடையோர் மட்டுமே காண்பர்; ஏனோர் -

அத் தெய்வக்கண் பெருத மாந்தர் அவ்வணுக்கள்; பூதத்திரட்சி யுள் தோரார் - பூதமாகத் திரண்ட வழியும் ஓரணுவைக் கண்டுணரார், இஃது எங்ஙனமெனின்; மாலைப்போதில் ஒரு மயிர் அறிவார்-ஒளி மழுங்கிய மாலைப்பொழுதின்கண் தனித்து ஒரு மயிரை அறியமாட்டாதார்க்கு; சாலத் திரள் மயிர் தோற்றுதல் சாலும் - மிகத் திரண்ட மயிர்க்கற்றை காணப்படுதல் போலாம்; கரும்ம் பிறப்பும் கருநீலப் பிறப்பும் பசும்ம் பிறப்பும் செம்ம் பிறப்பும் பொன்ன் பிறப்பும் வெண்ண் பிறப்பும் என்று இ ஆறு பிறப்பினும் மேவி - கரியபிறப்பும் கருநீலப் பிறப்பும் பசிய பிறப்பும் செம் பிறப்பும் பொன் பிறப்பும் வெண் பிறப்பும் என்று கூறப் படும் இந்த ஆறுவகைப் பிறப்புகளினும் பொருந்தி; பண்பு உறு வரிசையின்பால் பட்டுப் பிறந்தோர் - தன்மையால் ஒன்றற் கொன்று மிகுகின்ற ஈண்டுக் கூறிய முறைமையின்படி பிறவியுட் பட்டுப் பிறந்தவர்கள், இறுதியாக; கழிவெண் பிறப்பில் கலந்து வீடு அணைகுவர் - வெண் பிறப்பினுள்ளும் மிக்க வெண் பிறப்பில் பிறந்து இறுதியாக வீட்டுலகத்தில் புகுவர்; அழியல் வேண்டார் அது உறற்பாலார் - துன்பம் உற்று நெஞ்சழிதலை விரும்பாத மக்களே அவ் வீட்டுலகத்தை எய்துதற்குரியராவார்; இது செம்போக்கின் இயல்பு - இங்ஙனம் கூறும் இது பிறப்புற்றுப் படிப்படியாக உயர்ந்து போகும் நேரிய போக்கின் தன்மையாம் என்றான் என்க.

(வி - ம்.) இதனோடு,

"வெண்மைநன் பொன்மை செம்மை நீல்கழி வெண்மை பச்சை
உண்மையிவ் வாறின் உள்ளும் கழிவெண்மை ஓங்கு வீட்டின்
வண்மைய தாகச் சேரும் மற்றவை உருவம் பற்றி
உண்மையவ் வொட்டுத் திட்டுக் கலப்பினில்,உணரும்
என்றான்"

(சிவ. சித்தி. பரபக்கம், ஆசீவகன்மதம், அ)

எனவ[ரும்] செய்யுளையும்,

"மணிபுயிர் பொன்னுயிர் மாண்ட வெள்ளியின்
அணியுயிர் செம்புயி ரிரும்பு போலவாம்
பிணியுயி ரிறுதியாப் பேசி னேனினித்
துணிமின மெனத்தொழு திறைஞ்சி வாழ்த்தினர்"

(சீவக - ௩௧௧௧)

எனவரும் செய்யுளையும் நினைக. கரும்ம் பிறப்பு முதலிய ஆறு பிறப்பு களும் ஒன்றற்கொன்று உயர்ந்த பிறப்பாம். இங்ஙனமே ஆருகத சமயத்திலும் ஒன்றறிவுயிர் முதலாக உயிர்கள் பிறந்து உயர்வன

என்னும் கொள்கையும் உண்டு. கழிவெண் பிறப்பு என்றது மக்கட் பிறப்பினும் மெய்யுணர்வு உடைய மேலாய பிறப்பினை என்க.

## இதுவுமது

### கடுஎ - கசுசு : இதுதப்பும்.........விட்டு

(இ - ள்.) இதுதப்பும் அது மண்டலம் என்று அறியல் வேண்டும் - இவ்வாறு உயிர்கள் பிறப்புற்றுச் செம்போக்காக உயரும். இம்முறை தவறினால் பின்னரும் கீழ்க் கீழ்ப் பிறப்புகளில் புகுந்து சுழல்வதாம், அங்ஙனம் சுழல்வதனை மண்டலித்தல் என்று அறிந்து கொள்ளுதல் வேண்டும்; பெறுதலும் இழத்தலும் இடையூறு உறுதலும் உறுமிடத்து எய்தலும் துக்க சுகம் உறுதலும் பெரிது அவை நீக்கலும் - உயிர்கள் இவ்வாறு பிறந்துழலுங்கால் அவை செல்வம் முதலியவற்றைப் பெறுதலும் அவற்றை இழத்தலால் வறுமை உறுதலும் இவை வந்துறும் காலத்தே தப்பாமல் வந்துறுதலும் இவற்றால் இன்பதுன்பங்களை நுகர்தலும் மிகவும் அவ்வின்ப துன்பங்கள் நீங்கிப் போதலும்; பிறத்தலுஞ் சாதலும் கருவிற்பட்ட பொழுதே கலக்கும் - பிறத்தலும் இறத்தலும் ஆகிய இவையெல்லாம் நிகழ்தற்குக் காரணமான பழவினைகளும் அவ்வுயிர்கள் தாய் வயிற்றில் கருவாகும் பொழுதே அவ்வுயிரோடு கலந்துவிடும்; இன்பமுந் துன்பமும் இவையும் அணு எனத் தரும் - பிறந்தபின் நுகரும் இன்பங்களும் துன்பங்களும் ஆகிய இவை தாமும் அணுக்கள் என்றே கொள்ளத் தகும்; முன் உள வினையே பின்னும் உறுவிப்பது - உயிர்கள் முற்பிறப்பிலே செய்தமையால் உளதாகிய பழவினையே பின்னர்ப் பிறக்கும் பிறப்பின்கண் ஊட்டுவதாம்; மற்கலி நூலின் வகை என்ன - எங்கள் இறைவனாகிய மற்கலி தேவனுடைய நூலாகிய நவகதிரில் கூறப்பட்ட பொருளின் வகை இதுவேயாம் என்று அறிவுறுத்த; தடுமாற்றச் சொல் தொடர்ச்சியைவிட்டு - முன்னுக்குப்பின் முரணு[illegible] அந்த ஆசீவக வாதியோடு சொல்லாடுகின்ற தொ[illegible] கைவிட்டு அப்பால் என்க.

(வி - ம்.) பெறுதல் - உணவு உடை உறையுள் முதலிய பேறுகள். இடையூறு - நல்குரவு பிணி முதலியன. உறும் இடம் - அவை வந்தெய்தும் செவ்வி. அவை என்றது பேறுமுதலாகச் சுகம் ஈறாக உள்ளவற்றை. உயிர் கருவில்பட்டபொழுது கலக்கும் என்க. இன்பதுன்பம் பொறி புலன் முதலியவற்றால் ஆதலின் அவையும் அணுவாகும் என்றவாறு. தடுமாற்றச் சொல் தொடர்ச்சி என மாறுக. இதனை,

> "பேறிழ விடையூ றின்பம் பிரிவிலா திருக்கை மற்றும்
> வேறொரு நாட்டிற் சேறல் விளைந்திடு மூப்புச் சாதல்

கூறிய எட்டும் முன்னே கருவினுட் கொண்ட தாகும்
தேறிய வூழிற் பட்டுச் செல்வதிவ் வுலகம் என்றான்''

எனவும்,

''புண்ணிய பாவம் என்னும் இரண்டனைப் பொருந்த வைத்தே
எண்ணிய இவற்றி னோடும் ஏழென எங்க ளோடு
நண்ணிய ஒருவன் கூறும் ஞானமிவ் வாற தென்று
கண்ணிய கருத்தி னோர்கள் கதியினைக் காண்பா யென்றான்''

எனவும் வரும் செய்யுளோடு ஒப்பு நோக்குக. (சிவ-சித்தி - பர-ஆசீவ- ௧ - ௧௦).

## நிகண்டவாதி

### ௧௯௭ - ௧௭௯: நிகண்ட.........திறத்த

(இ - ள்.) நிகண்டவாதியை நின்னால் புகழும் தலைவன் யார் நூல் பொருள் யாவை நீ உரை - அப்பால் மாதவன் வடிவில் நின்ற அம் மணிமேகலை நிகண்டவாதியை எய்தி ஐய! நின்னால் வணங்கி வாழ்த்தப்படுகின்ற கடவுள் யார்? உனது நூலும் அவை கூறும் பொருள்களும் யாவை? அவற்றை எனக்குக் கூறுதி, மேலும்; அப்பொருள் நிகழ்வும் கட்டும் வீடும் மெய்ப்பட விளம்பு என - அப்பொருள் நிகழ்ச்சிகளையும் கட்டு வீடு என்னும் இவற்றின் இயல்புகளையும் வாய்மையாக விளக்கிக் கூறுவாயாக என்று வேண்டா நிற்ப; விளம்பல் உறுவோன் - அது கேட்ட அந் நிகண்டவாதி அவ் வேண்டுகோட்கிணங்கி அவற்றை விளக்கிக் கூறத் தொடங்குபவன்; இந்திரர் தொழப்படும் இறைவன் எம் இறைவன் - தேவேந்திரனாலும் தொழப்பெறுகின்ற சிறப்பை யுடைய அருகனே எங்கள் கடவுளாவான்; தந்த நூல் - அவன் அருளிய நூல் அங்காகமம் முதலிய மூன்றுமாம், அவற்றில் [illegible]றப்பட்ட; பொருள் - பொருள்களாவன; தன்ம அத்திகாயம் [illegible] ஆகாயமும் தீது இல் சீவனும் பரம அணுக்களும் - தன்ம[illegible]த்தி காயமும் அதன்மாத்தி காயமும் காலமும் ஆகாயமும் அழிவற்ற உயிரும் நுண்ணணுக்களும்; நல்வினையும் தீவினையும் - நல்வினைகளும் தீவினைகளும்; அவ்வினையால் செய்உறு பந்தமும் வீடும் இத்திறத்த - அந்த இருவகை வினைகளாலும் செய்து கொள்ளுகின்ற கட்டும் வினையை ஒழித்தலால் உண்டாகின்ற வீடும் என்னும் இப் பத்து வகையினவாம் என்றான் என்க.

(வி - ம்.) நிகண்டவாதி-சமண சமயத்துள் இரண்டு வகை உண்டு. முற்கூறப்பட்ட ஆசீவகர் ஒருவகை. நிகண்டவாதிகள் ஒருவகை.

திகம்பரத்துவத்தால் இருவரும் ஒத்து, அனேகாந்தவாதத்தில் மாறுபடுதலால் இவர் இருவகையினர் ஆயினர் என்க. இந்திரர் பவணேந்திரர் முதலியோர். இவர் பவணேந்திரர் நாற்பத்திருவர் வியந்தரேந்திரர் முப்பத்திருவரும் கற்பேந்திரர் இருபத்திருவரும் திங்களும் ஞாயிறும் நரேந்திரனும் மிருகேந்திரனும் ஆகிய நாற்றுவரும் ஆவர். நூல் அங்காகமம் பூர்வாகமம் பகுசுருதி ஆகமம் என்னும் மூன்றுமாம். காலா காயம்-காலமும் ஆகாயமும் என்க. உயிர் நித்தியம் என்பான் தீதில் சிவனும் என்றான். தீதில் பரம அணுக்களும் என இரண்டற்கும் இயைப்பினும் ஆம். பந்தம் - கட்டு. நல்வினையும் தீவினையும் ஆகிய இருவினையும் பந்தத்திற்குக் காரணமாகலின் நல்வினையும் தீவினையும் ஆகிய அவ் வினைகளால் செய்யுறு பந்தமும் என்றான். பந்தம் அறுதலே வீடாகலின் வீடு என்று வாளா கூறினன், இவற்றை,

"ஆண்டவ னேது நூல்களிற் பதார்த்த மையிரண் டுளவவை யுறுதி
காண்டகு காலஞ் சீவன்றன் மாத்தி காயமோ டதன்மாத்தி காயம்
வேண்டுவ தான புண்ணியம் பாவம் விசும்புபுற் கலம்பந்தம் வீடென்
றீண்டுத லுறுமா லின்னவை படைப்ப தின்றியே யியலுமற் றன்றே"

எனவரும் (மெய்ஞ்ஞான விளக்கம் எ) செய்யுளானும் உணர்க.

## இதுவுமது

### கஎஎ - கஅ௨: ஆன்ற.........உரித்தாம்

(இ - ள்.) ஆன்ற பொருள் தன் தன்மையதாயும் தோன்று சார்வு ஒன்றின் தன்மையதாயும் - இங்ஙனம் அமைந்த பொருள் தனக்கியல்பாகிய பண்புடையதாயும், தனக்குச் சார்பாகத் தோன்றிய பொருள் ஒன்றனது பண்பை உடையதாயும்; அநித்தமும் நித்தமும் ஆகி நின்று நுனித்த குணத்து - நிலையாமையும் நிலையுதலும் உடையதாகி நின்று இத்தகையதாக ஆராய்ந்தறியப்பட்ட பண்பு காரணமாக; ஓர் கணத்தின் கண்ணே தோற்றமும் நிலையும் கேடு என்னும் - ஒரு கண பொழுதிலே காணப்படுதலும் நிலைபெறுதலும் அழிதலும் என்று கூறப்படுகின்ற; மாற்று அரும் மூன்றும் ஆக்கலும் உரித்தாம் - தவிர்க்கவியலாத இந்த மூன்று பண்புகளையும் உண்டாக்குதற்கும் உரிமை உடையதாம் என்க.

(வி - ம்.) இதனை, பொருளோடு நிலையுதலுடைய குணமும், நிலையாமையுடைய குணமும் பொருளும், காட்டல் வேண்டுமெனின்; கடல் என்னும் பொருளில் நீரின் குணமாகிய குளிர் முதலியன அதன் நிலைக் குணங்களாம். கடலின் முழக்க முதலியன நிலையாக் குணங்கள், இவ்விரு வேறு குணங்களையுடைய கடல் பொருளாம். அன்றியும், பொன் என்னும் பொருளில் நிறமும் திண்மையும் கவர்ச்சியும் முதலாயின நிலைக்குணமாம். வள்ளம் முடி வளை முதலியன நிலையாக்

குணங்களாம்; இங்ஙனம் இருவேறு குணங்களையும் உடைய பொன், பொருளாம். இவற்றுள் நிலைக் குணங்களின் நிலையுதற்றன்மையையும் நிலையாக் குணங்களின் நிலையாமையையும் உணர்க. இங்ஙனமாதலின் பொருள் நிலைத்தலும் நிலையாமையும் உடைத்தாம் என்றவாறு.

(நீலகேசி : ககச)

இனி ஓர் கணத்தில் ஒரு பொருள் தோற்றமும் நிலையும் கேடும் ஆகிய மூன்றனையும் எய்தும் என்பதனை —

"உருவப் பிழம்பப் பொருளென்
றுரைப்பனிப் பாறயிர்மோர்
பருவத்தி னும்பரி யாயப்
பெயரென்பன் பாலழிந்து
தருவித் துரைத்த தயிருரு
வாய்மும்மைத் தன்மையதாந்
திருவத்த தென்பொரு ளாதலைத்
தேர தெளியிதென் றாள்"

(நீல-கூஅஎ)

எனவரும் செய்யுளானும் அதற்கு 'உருவப் பிழம்பாகிய புற்கலத்தைப் பொருள் என்பேன், பால் தயிர் முதலாயின அதனது பரியாயம் என்பேன், பாற்பரியாயத்து நின்ற புற்கலப் பொருள் தயிர்ப் பரியாய மடைந்து பரிணமித்தலின் தோற்றம் நிலையிறுதி என்னும் மூன்றையும் உடையதாய் நின்றுற் குற்றங் கூறப்படாத பெருமைத்தாம் என் பொருள் இதனைத் தெளி,' என்றாள் என்க. எனவரும் எமதுரையானும் உணர்க.

### இதுவுமது

#### கவுக - ககூச: நிம்பம்.........புரிவிற்றாகும்

(இ - ள்.) நிம்பம் முளைத்து நிகழ்தல் நித்தியம் - வேம்பின் வித்து வேம்பாகவே முளைத்து வளர்வது அதன் நிலையுதல் பண்பாம்; நிம்பத்து அப்பொருள் அன்மை அநித்தியம் - வேம்பின்கண் விதை காணு தழிதல் நிலையாமையாம்; பயற்றுத் த[illegible] கெடாது கும்மாயம் இயற்றி அப்பயறு அழிதலும் காண்க - இனி, பயறு தன்மை கெடாமலே கும்மாயத்தை உண்டாக்கித் தனது உருவம் கெட்டொழிதலும் காண்க; ஏதுத் தருமாத்தி தருமாத்திகாயம் - இந்நிகழ்ச்சிக்குக் காரணமான தருமாத்திகாயம் என்பது; தான எங்கும் உளதாய் பொருள்களை நடத்தும் பொருந்த நித்தியம் ஆம் - அவ்வாறு நடத்துதற்கு ஏற்ப அதுவும் நித்தியப்பொருளாம்; அதன்மாத்திகாயமும் அப்படித் தாகி - அதன்மாத்திகாயம் என்னும் பொருளும் அப்படியே நித்தியப் பொருளாய்; எப்பொருள்களையும் நிறுத்தல் இயற்றும் - எல்லாப் பொருள்களையும் நிலைநிறுத்துதலைச்

செய்யும்; காலம் கணிகம் எனும் குறு நிகழ்ச்சியும் கற்பத்தின் நெடு நிகழ்ச்சியும் ஆக்கும் - இனி, காலம் என்பது கணம் என்னும் குறிய நிகழ்ச்சியையும் அக் கணத்தைக் கொண்டு கற்பம் என்று சொல்லுகின்ற நீண்டதொரு நிகழ்ச்சியையும் உண்டாக்குவதாம்; ஆகாயம் எல்லாப் பொருட்கும் பூக்கும் இடங்கொடுக்கும் - ஆகாயம் என்பது எல்லாப் பொருள்களும் மலர்தற்கு இடங்கொடுக்கின்ற பண்புடையதாகும் என்றான் என்க.

(வி - ம்.) இனி, நிம்பம் - வேம்பு. நிம்பம்......அழிதலும் என்னும் இப் பகுதியை,

"உருவப் பிழம்பப் பொருளென்
றுரைப்பனிப் பாறயிர்மோர்
பருவத்தி னும்பரியாயப்
பெயரென்பன் பாலழிந்து
தருவித் துரைத்த தயிருரு
வாய்மும்மைத் தன்மையதாந்
திருவத்த தென்பொருளாதலைத்
தேர தெளியிதென்றாள்" (நீல-௧௮௭)

எனவரும் செய்யுளானும்,

"பெற்றது தானுங்கும் மாயத்
திரிபு பயற்றியல்பே
பிற்ற திதுவென திட்டமென்
பாயிவ் விருமையினுந்
தெற்றெனத் தீர்ந்தோர் பொருளென்னை
தேற்றினித் தேற்றலையேன்
மற்றது வாமை மயிரெனச்
சொல்லுவன் மன்னுமென்றான்" (நீல - ௧௮...

எனவும் வரும் செய்யுளானும் உணர்க. இனி, பொருள் நிகழ்[...]வ ஏதுவெனக் கூறிய தருமாத்திகாயம் அதன்மாத்திகா[...]ங்களின் இயல்புகளை,

"அத்தியாய மூர்த்தியா யளவி றேசியாய்
ஒத்தள வுலகினோ டுலக லோகமாம்
தத்துவந் தனைச்செய்து தம்மத் தம்மமா
மத்திகள் செலவொடு நிலையிற் கேதுவாம்"

எனவும்,

"அச்சுநீர் தேரொடு மீனை யீர்த்திடா
அச்சுநீ ரன்றியத் தேரு மீன்செலா

அச்சுநீர் போலத்தம் மத்தி சேறலே
இச்சையு முயற்சியு மின்றி யாக்குமே''

எனவும்,

''அந்தரத் தறுபத்து மூன்ற தாகிய
இந்திர படலமு நிரைய மேழ்களு
மந்திர மலைமண் ணு மற்று நின்றிடா
அந்தமி னிலையதம் மத்தி யில்லையேல்''

எனவும்,

''பறவையின் சிறகொடு பாத நின்றுமி
நெறியினுற் செலவொடு நிலையை யாக்குமால்
உறவிபுற் கலமிவை யோட நிற்றலைச்
செறிவுறத் தம்மத்தம் மத்தி செய்யுமே''

எனவும் வரும் (மேரு மந்தர. வைசய அஅ. க0, கக, கஉ) செய்யுள்களானும் உணர்க. சணம் எனினும் கணிகம் எனினும் ஒக்கும். கற்பம் - ஊழி. ஈண்டுக் கூறிய காலத்தின் சிற்றளவினையும், பேரளவினையும் காலநீ வேண்டாயாய் கணிகமும் கற்பமும் சாலமும் புனைந்துரைத்தி என வரும் (நீல - உகஎ) செய்யுட்கு வரும் விளக்க உரையின்கண்—

''இனி, கணம் என்பது ஏழு செங்கழு நீரிதழை யொரு குறட்டிலடுக்கி வலியுடையோனொருவன் மிகவுங் கூரியதோர் உளி வைத்துக் கூடமிட்டுப் புடைத்தால் ஆறும் புரையற்று ஏழாம் புரையிற் செல்லும் கால வளவாம்; கற்பமாவது ஒரு யோசனை யகன்றுயர்ந்ததொரு வைரமலை. கருவுடையாள் பட்டாடை தேய்க்கப்பட்டுக் கையறத் தேயும் கால வளவாம் என்பது பௌத்தர் கொள்கை'' என்பதனானும் உணர்க. பூக்கும் இடம் - விரியும் இடம். புரிவு - தன்மை, செயல் எனினுமாம். உளவென்ற பொருட்கெலாம் இடங்கொடுத்துடன் தவின்றி நிற்பது ஆகாயம் என்பது மேருமந்தர புராணம். (செய். கக)

இதுவுமது

ககூ௫ - உ0௧ : சீவன்.........அவன்

(இ - ள்.) சீவன் உடம்போடு ஒத்துக்கூடி தா இல் சுவை முதலிய புலன்களை நுகரும் - உயிரானது பழவினையால் தனக்கெய்திய உடம்போடு இரண்டறக் கலந்து கெடாத சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் புலன்களை நுகரும்; ஓர் அணு புற்கலம் புறஉரு ஆகும் - உயிரல்லாத ஓர் அணு புற்கலம் ஆம் இவ்வணுவே உயிர்க்கு உடம்பாகவும் புறப்பொருள் ஐம்பெரும் பூதங்களாகவும் திரண்டுள்ள வருவழி களாகு[illegible]ம் நல்வினை தீவினை அவை செய்யும் பொருந்துகின்ற இரண்டையும் மாற்றி - உயிர்க்குச் சிறப்புப்

நல்வினையையும் துன்பம் தருகின்ற அவை செய்வதற்கும் வருவதற்கும் வாயில்களாகிய ஊற்று செறிப்பு இரண்டனையும் அடைத்து மாற்றி; முன் செய் அருவினைப் பயன் அனுபவித்து அறுத்திடுதல் - முன்னே செய்யப்பட்ட விலக்குதற்கரிய பழ வினைகளை நுகர்ந்து அவற்றாலாய கட்டை அவிழ்த்து விடுதல்; அது வீடு ஆகும் என்றனன் அவன் - அங்ஙனம் கட்டற்ற அந் நிலையே உயிர்க்கு வீடாகும் என்று கூறினன் நிகண்டவாதி என்க.

(வி - ம்.) ஊர் அணுவே புற்கலமாம் அவ்வணுவின் திரட்சியே உயிருக்கு உடம்பும் நுகரும் பொருள்களும் ஆகிய புற உருவங்களாம் என்றவாறு. எனவே அணுக்களின் திரட்சியே சுவை முதலிய புலன் களும் அவற்றின் நிலைக்களனாகிய ஐம்பெரும் பூதங்களும் ஆகிய உயிரில் பொருள்கள் என்றானும். சீர்சால் நல்வினை எனவே பழிசால் தீவினை எனக் கொள்ளவைத்தான். செய்யும் வழி வரும்வழி என இரண்டையும் என்க. செய்யும் வழி அவா வரும் வழி - அஃது ஊற்று எனப்படும். மாற்றுதல்-அது செறிப்பு எனப்படும். பழவினையை நுகர்ந்து அறுத்திடு தல் உதிர்ப்பு எனப்படும். வீடு காதி அகாதி என்னும் வினைகளினின்றும் நீங்கி விடுதலை பெறுதல். அது-அங்ஙனம் அறுத்திட்டநிலை. அவன்-அந் நிகண்டவாதி. இதனை,

> "பெரும்பாவ மறத்துய்த்துப் பெறுதும்யாம் வீடென்னு
> மரும்பாவ காரிநீ யாவர்வா யதுகேட்டாய்
> வரும்பாவ மெதிர்காத்து மன்னுந்தம் பழவினையு
> மொருங்காக வுதிர்த்தக்கா லுயிர்த்தூய்மை வீடென்றான்"
>
> (நீல - ௩௧௧)

எனவரும் செய்யுளோடு ஒப்புக்காண்க.

## சாங்கியவாதி

### ௨0௧ - ௨௧௧ : பின்..........வெளிப்பட்டு

(இ - ள்.) பின் - அப்பால் மணிமேகலை அந்நிகண்ட வாதியை விட்டுச் சாங்கிய சமயத் தலைவனை எதிர்ப்பட்டு வினவிய வழி அவன்; இது சாங்கிய மதம் என்று எடுத்து உரைப்பான் - யான் கூறப்போவது எம்முடைய சாங்கிய மதத்திற்கியன்ற நன் பொருள் என்று சொல்லி அவற்றை எடுத்துச் சொல்லுபவன்; தனை அறிவரிதாய் தான் முக்குணமாய் மனநிகழ்வு இன்றி - தான் அருவமாதலின் மனத்தால் பற்றப்படாததாய்; மாண்பு அமை பொதுவாய் எல்லாப் பொருளும் தோன்றுதற்கு இட மெனச் சொல்லுதல் மூலப்பகுதி சித்தத்து - எப்பொருளுக்கும் தானே காரணம் என்னும் சிறப்பமைந்த பொது ... பொருளாய்க் கருத்துப் பொருளும் காட்சிப்பொருளும் ஆகிய எல்லாப் பொருள்

களும் பிறத்தற்கிடன் என்று எம்முடைய நூலாற் சொல்லப் பட்டது மூலபபகுதி என்னும் சித்தமாம்; (சித்தத்து) மான் என்று உரைத்த புத்தி வெளிப்பட்டு - மான் எனறு கூறப்பட்ட புத்தி தத்துவம் வெளிப்பட; அதன்கண் ஆகாயம் வெளிப்பட்டு- அப் புத்தி தத்துவத்தினின்றும் ஆகாயம் என்னும் வானம் வெளிபபடா நிற்ப; அதனகண் வாயு வெளிப்பட்டு அதனகண் அங்கி ஆனது வெளிபபட்டு - அவ் வான வெளியினூடே காற்றுத் தோன்று நிற்ப அக் காற்றினின்றும் தீயானது வெளிப்பட; அதன்கண் அப்பின் தன்மை வெளிப்பட்டு - அத் தீயினின்றும் நீரின் தன்மை வெளிப்பட; அதின மண் வெளிபபட்டு - அந் நீரி னின்றும் மண்ணின் தன்மை வெளிப்பட இவ்வாறு ஐம்பெரும் பூதங்களும் வெளிப்பட்டனவாக என்க.

(வி - ம்.) தனை என்றது மூலப்பகுதியை. முக்குணம்-சாத்துவிகம், இராசதம், தாமதம் என்பன. இவை மனத்திற்கும் முதலாதலின் அதனாற் பற்றப்படா தென்பான் மன நிகழ்வின்றி என்றான். மாண்பு - தான் ஒன்றின் காரியம் ஆகாமல் தானே எல்லாப் பொருளுக்கும் முதலாம் சிறப்பு. முக்குணங்களின் பிழம்பே மூலப்பகுதியாதலின் பொதுவாய் என்றான். மூலப்பகுதி ஆகிய சித்தத்து என்க. எனவே சித்தம் என்பதும் அதற்குப் பெயர் என்பது பெற்றாம். சொல்லுதல் - சொல்லப்படுவது. மான் - மகத்தத்துவம். அதனை மகான் எனவும் கூறுப. புத்தி என்பதும் அதற்கொரு பெயர் என்பான் மானென் றுரைத்த புத்தி என்றான். வெளிப்பட்டு எனவரும் செய்தெ னெச்சங் களைச் செயவென் னெச்சங்களாகத் திரித்துக் கொள்க. அங்கி - தீ. அப் பின் தன்மை என்றது அப்பு என்னும் பெயரான் துணையாக நின்றது. அப்பு - நீர்.

### இதுவுமது

### உகஉ - உஉக: அவற்றின்.........வெளிப்பட்டு

(இ - ள்.) அவற்றின் கூட்டத்தின் மனம் வெளிப்பட்டு ஆர்ப்புறு மனத்து ஆங்கார விகாரமும் - அவ்வைம்பூதக் கூட்டா ...கண் மனம் என்னும் தத்துவம் தோன்று நிற்பப் புலன் க... கட்டுண்ணும் மனத்தினின்றும் அகங்கார வேற்றுமை களும்; ஆகாயத்தின் செவி ஒலி விகாரமும் - ஆகாயத்தின் டண் பாகிய செவிக்குப் புலபபடும் ஒலி வேற்றுமைகளும்; வாயுவின் தொக்கும் ஊறு எனும் விகாரமும் - காற்றினின்றும் மெய் யென்னும் பொறியும் அதற்குப் புலனாகும் ஊற்றுப் புலவேற் றுமைகளும்; அங்கியில் கண்ணும் ஒளியுமாம விகாரமும் - நெருப்பினின்றும் கட்பொறியும் அதற்குப் புலனும் ஒளி வேற்றுமையும்; தங்கிய அப்பில் வாய்சுவை எனும் விகாரமும் - நிலத்தின்கண் தங்கியுள்ள நீரினின்றும் வாய் என்னும் பொறி யும் அதற்குப் புலனும் சுவை என்னும் புலவேற்றுமையும்; நிலக்

கண் மூக்கு நாற்ற விகாரமும் - மண்ணினின்றும் மூக்கு என்னும் பொறியும் அதற்குப் புலனும் நாற்றப்புல வேற்றுமையும் பிறக்கும் என; சொலப்பட்டு அவற்றில் தொக்கு விகாரமாய் - எமது நூலின்கண் சொலலப்பட்டுப பின்னரும் ஈண்டுச் சொல்லப்பட்ட பொறிகளுள் வைத்து மெய்யின் வேறுபாடாய்; வாக்கு பாணி பாத பாயுரு உபத்தம் என ஆக்கிய இவை வெளிப்பட்டு - சொல் கைகால் எருவாய் கருவாய் என்ற தொழிற் கருவிகள் ஆக வியற்றப் பெற்ற இவ்வைந்தும் தோன்றும் என்றான் என்க.

(வி - ம்.) அவற்றின் கூட்டம் என்றது ஐம்பெரும் பூதக் கூட்டம் என்றவாறு ஆங்கார விகாரம் நான் என்னும் செருக்கின் வேற்றுமை. அவையாவன: நான் அந்தணன் அரசன் எனவும் செல்வன் வறியவன் என்பனவும்போன்ற வேற்றுமைகள் உண்மையால் ஆங்காரம் என்றொழியாது விகாரமும் என்றான். பின்னர் ஒலி முதலியவற்றோடு வருகின்ற விகாரங்களுக்கும் அவ்வவற்றிற்குப் பொருந்திய விகாரம் உண்மையை நுண்ணிதின் ஆராய்ந்து கொள்க. ஆகாய முதலியவற்றில் செவி முதலிய பொறிகளும் அவற்றிற்குப் புலனும் ஒலி முதலிய புலன்களும் தோன்றும் எனப் பூதங்கள் தோறும் தோன்றும் பொறி புலன்களின் விகாரமும் நுண்ணிதின் ஆராய்ந்து கண்டுகொள்க. இப் புலன்களால் கட்டுப்படுதல் மனத்திற்கியல்பாகலின் ஆர்ப்புறு மனம் என்றான். இஃதுணராது ஆரவாரம் பொருந்திய மனம் எனவும் ஆகாயத்தில் செவியும் ஒலியும் என்று கூறாமல் செவிக்குப் புலனாகும் ஒலியாகிய விகாரமும் என இங்ஙனமே ஏனைப் பூதங்களுக்கும் உரை கூறுவாரும் உளர். இனி ஈங்குக் கூறப்படுகின்ற தத்துவத் தோற்றங்களுக்கும் இதற்குக் காலத்தால் பிற்பட்ட நீலகேசியின்கண் இம்முறை சிறிது மாறுபட்டிருத்தலை,

"மன்னுயிர் தெற்றென வில்லது மான்செருக்
கென்னவு மிந்திய மைந்தைந் தொருமன
மன்னதன் மாத்திரை யைந்தைந்து பூதமும்
பன்னிய வையைம் பதப்பொரு ளென்றான்"

(நீல - ௭௨௫)

நங்காய்! எம்தத்துவங்கள் - உயிரும், பிரகிருதியும், மானும் செருக்கும், அறிகருவி ஐந்தும், செயற்கருவி ஐந்தும், மனமும், [illegible] மாத்திரைகள் ஐந்தும், பூதங்கள் ஐந்தும் ஆகிய இந்த இருபத்[illegible]ந்து மாம் என்றான் என்றவாறு எனவும் வருதல் காண்க. இனி இவற்றையே பகுதியும், பகுதிவிகுதியும் விகுதியும் என வகுத்தோதுவாரும் உளர். இதனைப் பரிமேலழகர் உஎ. சுவை ஒளி எனவரும் திருக்குறள் உரை விளக்கத்தின்கண்—

"தத்துவ மிருபத்தைந்தனையுந் தெரிதலாவது, மூலப்பகுதி ஒன்றிற் றோன்றிய தன்மையிற் பகுதியே யாவதல்லது விகுதியாகா தெனவும்; அதன்கட் டோன்றிய தன்மாத்திரைகளுமாகிய ஏழும் தத்தமக்கு முதலாயதனை நோக்க விகுதியாதலும் தங்கட் டோன்றுவனவற்றை நோக்கப் பகுதியாதலுமுடைய வெனவும், அவற்றின்கட் டோன்றிய

மனமும் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும் பூதங்களுமாகிய பதினாறும் தங்கட்டோன்றுவன வின்மையின் விகுதியே யாவதல்லது பகுதியாகா வெனவும்'' வரைந்திருத்தலானும் உணர்க. வாக்குப் பாணி முதலியன ஐந்தும் தொழிற்கருவி.

## இதுவுமது

### உஉக - உகூஉ: இங்கறைந்த..........புருடன்

(இ - ள்.) இங்கு அறைந்த பூதவிகாரத்தான் மலைமரம் முதல் ஓதிய வெளிபபட்டு உலகாய் நிகழ்ந்து - இங்குக் கூறப் பட்ட பூதங்களின் விகாரத்தால் மலை முதலிய உயிரில் பொருள் களும் ஓனறறி உயிராகிய மரம் முதலிய உயிர்ப் பொருள்களும் என்று முன்னோரால் கூறப்பட்டனவாகிய பொருள்கள் வெளிப் பட்டு உலகமாக நடைபெற்றுத் தத்தம் கால எல்லையிலே: இவை - இப்பொருள்கள்; வந்த வழியே சென்று அடங்கி - தாம் பிறந்த வழியாகவே ஒனறனுள் ஒன்று புகுந்து ஒடுங்கி; அந்தம்இல் பிரளயமாய் இறும் அளவும் - முடிவில்லாத ஊழிக் காலமாய் ஒழிந்துபோம் அளவும்; ஒன்றாய் — தான ஒன்றே யாய்; எங்கும் பரந்து நித்தியமாம் - எவ்விடத்தும் பரவி நித்தி யப் பொருளாய் இருக்கும்; புருடன் இனி புருட தத்துவ மானது; அறிதற்கு எளிதாய் - அறிந்து கொள்ளுதற்கு எளி தாக; முக்குணம் அன்றி - மூக்குணத்திறகு வேறாய்; பொறி உணர்விக்கும் பொதுவும் அன்றி - பொறியினால் உணரும் உணர்ச்சிக்கு மூலப்பகுதியோடு சிறிதும் பொதுத் தன்மை இல்லாததாய்; எப்பொருளும் தோனறுதற்கு இட மின்றி - தன்னிடத்தினின்றும் யாதொரு பொருளும் பிறத் தற்குத் தான் நிலைக்களம் ஆகாததாய்; அப்பொருள எல்லாம் அறிதிடற்கு உணர்வாய் - மூலப்பகுதியினின்றும் தோன்றும் என்று கூறப்பட்ட அந்தப் பொருள்களை எல்லாம் அறிந்து [illegible]ள்ளுதற்கு வேண்டிய அறிவாய்; ஒன்றாய் எங்கும் பரந்து [illegible]ய் - அம்மூலப் பகுதியோடு ஒன்றாய் எவ்விடத்தும் பரவி [illegible] நிலையுதலுடையதாய்; நின்றுள உணர்வாய் - நின்று ளத்தின்கண் உணர்ச்சியாய்; நெகிழ்தரும்-நெகிழ்தலைச் செய்யும் என்றான் என்க-

(வி - ம்.) மலை உயிரில் பொருள்களுக்கும் மரம் உயிர்ப் பொருளுக் கும் ஆக மலைமரம் முதல் ஓதிய என்றான். ஓதிய: பலவறிசொல். வந்த வழி மூலப்பகுதியினின்றும் ஒன்றின் ஒன்றாக வந்தவாறே அடங்கும் போதும் மண் அப்பினும் அப்பு அங்கியினும் இவ்வாறே சென்று அடங்கும் என்றவாறு. பிரளயம்-ஊழி. அவற்றிற்கும் எல்லையின்மையின் அந்தம்இல் பிரளயம் என்றான் (உஉஎ) அறிதற் கெளிதாய்......(உகூஉ)

புருடன் என்னுமளவும் சிவன் இலக்கணம் கூறுகின்றது. சிவன் இலக்கணத்தை,

"எத்திறத் தின்னுஞ் செய்யான்குண மொன்றிலன்
றத்துவ னின்பன பேதன லேபக
வித்திய னெங்கு முளனெடுங் காட்சியன்
றத்த லுடையனென் றேன்றலு மென்றான்"

(நீல - ௪௩௩)

எனவரும் செய்யுளானும் உணர்க.

## இதுவுமது

௨௩௩ - ௨௩௭ : புலமார்.........கேட்டு

(இ - ள்.) புலம் ஆர் பொருள்கள் இருபத்தைந்து உள - இவ்வாறு எமது நூலில் பொருந்திய பொருள்கள் இருபத்தைந்து உள்ளன, அவைதாம்; நிலம் நீர் தீ வளி ஆகாயம் மெய்வாய் கண் மூக்குச் செவிதாம் - நிலமும் நீரும் தீயும் வளியும் வெளியும் என்னும் பூதங்கள் ஐந்தும் மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் பொறி ஐந்தும்; உறுசுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் - இவற்றோடு பொருந்திய சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் நாற்றமும் ஆகிய புலன் ஐந்தும்; வாக்கு பாணி பாதம் பாயுரு உபத்தம் - வாக்கும் கையும் காலும் எருவாயும் கருவாயும் ஆகிய தொழிற்கருவியைந்தும்; ஆக்கும் மனபுத்தி ஆங்கார சித்தம் - உண்ணின்று செயற்படுத்தும் மனமும் புத்தியும் அகங்காரமும் சித்தமும் ஆகிய அகக் கருவிகள் நான்கும்; உயிர் எனும் ஆன்மா வொன்றொடும் ஆம் என - உயிர் என்று சொல்லப்படுகின்ற ஆன்மாவாகிய ஒன்றனோடும் அவ்விருபத்தைந்து பொருள்களும ஆகும் என்று; செயிர் அறச்செப்பிய திறமுங் கேட்டு - குற்றமற அச் சாங்கியவாதி விளம்பிய அவனது நூற் பொருளையும் நன்கு கேட்ட பின்னர் என்க.

(வி - ம்.) சாங்கிய தத்துவம் இருபத்தைந்தினையும் பிற்காலத்தே வைதிக சமயத்தார் பலரும் தத்தம் சமயத்திற்கு ஆக்கமாகத் தழுவிக் கொண்டனர். மாயாவாதத்திற்கு இச் சாங்கிய வாதமே அடிப்படை என்று தோன்றுகிறது. சைவ வைணவ சமயங்களும் இச் சாங்கிய தத்துவங்களைத் தமக்கு வேண்டுமளவும் மேற்கொண்டுள்ளன. பின்னும் இத் தத்துவங்களின் விளக்கம் காண விரும்புவோர் மெய்ஞ்ஞான விளக்கம் சாங்கிய மதச்சருக்கம் - ௬௪, சாங்கிய காரிகை முதலிய வடநூல்களுள்ளும் கண்டு கொள்க. ஈண்டுரைப்பின் பெருகும்.

## வைசேடிகவாதி

### உசக - உசஎ: வைசேடிக..........மனம்

(இ - ள்.) வைசேடிகனின் வழக்கு உரை என்ன - அப்பால் செல்லும் மாதவன் வடிவங் கொண்டுள்ள மணிமேகலை வைசேடிக வாதியை எய்தி ஐய நின் சமய நூல் வழக்கினைக் கூறுக என்று வினவ அதற்குடன்பட்ட அவ் வைசேடிகனும் கூறுவேன் எனக் கூறுபவன் எமது சமயத்தின் பொருள்; பொய்தீர் பொருளும் குணமும் கருமமும் சாமானியமும் விசேடமும் கூட்டமும் ஆம் ஆறு கூறும் - எம்முடைய நூற்பொருள் அழியாத பொருளும் குணமும் செயலும் பொதுவும் சிறப்பும் கூட்டமும் என்று வகுத்துக் கூறப்படுகின்ற ஆறு வகையின்கண் அடங்கும்; அதில் பொருள் என்பது குணமும் தொழிலும் உடைத்தாய் - அவற்றுள் பொருள் என்று சொல்லப்படுவது பண்பும் செயலும் உடையதாய்; எத்தொகைப் பொருளுக்கும் ஏதுவாம் - எந்தத் தொகுதிப் பொருள்களுக்கும் காரணமாகும்; அப்பொருள் ஞாலம் நீர் தீ வளி ஆகாயம் திசை காலம் ஆன்மா மனம் ஒன்பான் - அத் தொகைப் பொருள் நிலமும் நீரும் தீயும் வளியும் வெளியும் திசையும் காலமும் உயிரும் மனமும் என்னும் இவ்வொன்பதுமாம் என்றான் என்க.

(வி - ம்.) வைசேடிகம் - தருக்க மதத்தில் ஒருவகை. பொருள் முதலியவற்றைத் திரவியம், குணம், தொழில், சாதி, விசேடம், சமவாயம் என்பர். பின்னர் இன்மை என்பதனையுங் கூட்டிப் பொருள் ஏழு என்பாரும் உளர். அதில் பொருள் என்பது பிற்கூறப்பட்ட குணத்திற்கும் செயலுக்கும் வேறாய் அவற்றை அவாவிய ஒன்பது வகைப்படும் தொகைப் பொருளுக்கும் ஏதுவாம் என்க. அவ்வொன்பது பொருளாவன நிலம், நீர், தீ, வளி, வெளி, காலம், திசை, உயிர், மனம் என்னும் இவ்வொன்பதுமாம். இதனை, மெய்ஞ்ஞான விளக்கம்—

"சார்ந்த திரவியங் குணங்கன் மஞ்
சாமானி யத்தோடு தருவிசேட
மார்ந்த சமவாய மென்னுமாறு
பதார்த்தங்களோ டபாவ மென்று
சேர்ந்தது வைசேடிக மாமவ்வேழிற்
றிரவியத்தின் றிறமைம் பூத
மோர்ந்திடுங் காலந்தி சையான்மா
மனமென்றித் தகைய வொன்பதாமே"

(சஉ - தார்க்கிக - க)

என்னுஞ் செய்யுளானு முணர்க.

இதுவுமது

உசஅ - உருசு: இவற்றுள்.........ஆகும்

(இ - ள்.) இவற்றுள் நிலம் ஒலி ஊறு நிறம் சுவை நாற்றமொடு ஐந்தும் பயில் குணம் உடைத்து - இவ்வொன்பதனுள் முன்னின்ற நிலமும் ஒலியும் ஊறும் நிறமும் சுவையும் நாற்றமும் ஆகிய ஐந்தும் எஞ்சாது தன்பால் பயிலுகின்ற குணங்களை உடையது; நின்ற நான்கும் - எஞ்சி நின்ற நீரும் தீயும் வளியும் வெளியும் ஆகிய நான்கும்; அவை - அவ்வைந்து குணங்களுள் நிரலே; சுவை முதல் ஒரோ குணம் குறை உடைய - சுவை முதலிய குணங்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு குணம் குறைவாக உடையன; இனி, கண்ணிய பொருளின் குணங்கள் - ஈண்டுக் கூறப்பட்ட பொருள்களின் குணங்கள் தாமும்; ஓசை ஊறு நிறம் நாற்றம் சுவை மாசு இல் பெருமை சிறுமை வன்மை - ஓசையும் ஊறும் நிறமும் நாற்றமும் சுவையும் குற்றமில்லாத பெருமையும் சிறுமையும் வன்மையும்; மென்மை சீர்மை நொய்ம்மை வடிவம் என்னும் நீர்மை பக்கம் முதல் அனேகம் - மென்மையும் சீர்மையும் நொய்ம்மையும் வடிவம் என்னும் தன்மையும் பக்கமும் முதலிய பலவகைப்படுவனவாம் என்றான் என்க.

(வி - ம்.) இவற்றுள் என்றது ஞாலம் முதலிய இவற்றுள் என்றவாறு. ஞாலம் - நிலம். நிலம் ஒலி ஊறு முதலிய ஐந்து குணங்களையும் உடைத்து. நீர் ஒலி முதலிய நான்கு குணங்களையும் தீ ஒலி முதலிய மூன்று குணங்களையும் வளி ஒலி முதலிய இரண்டினையும் வெளி ஒலி ஒன்றனையும் உடையன என்பது கருத்து. இனி ஒலி முதலிய இவையேயன்றிப் பெருமை சிறுமை முதலிய வேறுபல குணங்களும் பொருள்களுக்கு உண்டு என்பது கருத்து.

இக் குணங்களை இருபத்து நான்காக நிரலே எண்ணித் தொகை கூறுவாரும் உளர்.

"மன்னுகுண முருச்சுவை கந்தம் பரிசங்கணனை பரிமாணம் பேதம்
பன்னுசை யோகம் விபாகம் பரத்வம பரத்வமா பாரம் பின்னுஞ்
சொன்ன திரவத்வம்ஸ் னேகஞ் சத்தம் புத்தி சுகந்துக்க மித்தவா
முன்னது வேடம் முயற்சியற மதன்மம் வாசனையிம்மூ
வெட்டாமல்'

(மெய்ஞ்ஞான விளக்கம். தார்க்கி க - உ)

என்பது காண்க.

இதுவுமது

உருஎ - உகூஉ: பொருளும்.........உரைத்தனன்

(இ - ள்.) பொருளும் குணமும் கருமம் இயற்றற்குரிய னி ஈண்டு விரிவகையால் ஓதப்பட்ட பொருளும் குணமுமா கிரு

இரண்டும் தொழில் செய்தற்கு உரியன; முதல் பொது உண்மை தரும் - பொது இரண்டனுள் முதன்மையுடைய பொது என்பது பொருள்களின் உண்மைத்தன்மையை உணர்த்தும்; போதலும் நிற்றலும் பொதுக்குணம் ஆதலின் சாதலும் நிகழ்தலும் அப்பொருள் தன்மை - போதலும் வருதலும் எல்லாப் பொருள் களுக்கும் பொதுக்குணம் ஆதலால் சாதலும் நிகழ்தலும் அப் பொருளுக்கெல்லாம் பொதுத்தன்மையேயாம், ஆகவே இப் பொதுத்தன்மை முதன்மையில்லாத பொதுத்தன்மை எனப் படும்; ஒன்று அணு - இனிச் சிறப்பாவது ஒன்றாகிய அணுவேயாம்; கூட்டம் குணியும் குணமும் என்று - இனிக் கூட்டமாவது பொருளுங் குணமும் ஆகத் தம்முள் கூடுவதே என்று; ஒன்றிய வாதியும் உரைத்தனன் - அவ் விசேட வாதியும் கூறினன் என்க.

(வி - ம்.) இனி, கரும நிகழ்ச்சிக்குக் காரணமாவது பொருளும் குணமுமேயாம் என்பான் அவை கருமம் இயற்றற்குரிய என்றான். முதற் பொது-முதன்மையுடைய பொது. அது பொருள் குணம் என்னும் இவற்றின் உண்மைத் தன்மையைத் தரும் என்க. போதலும் நிற்றலும் பொதுக் குணம் என்புழி பொதுக்குணம் என்றது முதன்மையில்லாப் பொதுக் குணம் என்றவாறு. பொருள்கள் போவதும் வருவதும் இந்தப் பொதுக் குணத்தால் ஆதலின் சாதலும் நிகழ்தலும் போதலும் நிற்றலும் போல்வன ஆதலின் இவை யெல்லாம் முதன்மையல்லாத அப் பொதுத் தன்மையாம். ஒன்று - சிறப்பு. சிறப்பாவது அணுவாம் தன்மையே என்றவாறு. கூட்டம் என்றது பொருளும் குணமும், குணமும் குணியு மாக இயைதல் என்றவாறு. பொதுவை மகாசாமானியமும் அவாந்தர சாமானியமும் என்றும், பரசாமானியமும் அபரசாமானியமும் என்றும் வாளாது முதல் பொது என்றும் பொது வென்றும் ஓதுப. இவற்றினியல்பையெல்லாம் நீலகேசியில்,

> "பூதமைந் தொடுதிசை மனம் பொழுதுயி
> ரோதினப் பொருள்கடா மொன்ப தாமவை
> நீதியிற் குணமவற் றியல்பு செய்கையும்
> போதரும் பொருட்புடை பெயர்ச்சி யாகுமே"
>
> (நீல - ௭௮௯)

என

> "பெரியதும் பின்னது மாய தப்பொது
> உரிதினிற் பொருள்களைச் செலுத்து மொற்றுமை
> தெரிவுற வருவது சிறப்ப தாங்குணக்
> கிரியைக ளிதற்கெனக் கிளத்தல் கூட்டமே"
>
> (நீல - ௭௮௭)

எனவும் வரும் செய்யுளானும்,

"முதன்மையுடையதும் அஃதில்லதும் என இருவகைப்பட்ட அந்தப் பொது என்னுந் தத்துவங்களுள் வைத்து முதற்பொது என்பது பொருள் களின் உண்மைத் தன்மை முதலியவற்றை உணர்தற்குக் காரணமாவ

தாம். முதன்மையில்லாப் பொது வென்பது பொருட்டன்மை குணத் தன்மை முதலியவற்றை உணர்தற்குக் காரணமாவதாம். இவ்விரு வகைப்பட்ட பொது வென்னுந் தத்துவம் நிலைப்பும் பரப்பும் உடைய தாய்ப் பொருள்களுக்கு ஓர் ஒற்றுமையைச் செய்வதாம். இனி, சிறப் பென்பது பொருள்களுள் வைத்து ஒன்றற்கொன்று வேறுபாட்டைச் செய்வ தொன்றும். இனி, கூட்டம் என்பது பொருள்களுக்கும் குணஞ் செயல்களுக்கும் உள்ள இயைபினை உணர்த்துமொரு தத்துவமாகும். இதுவும் நிலைப்பும் பரப்பு முடையது'' என அவற்றிற்கு யாம் எழுதிய உரையினின்றும் உணர்க.

## பூதவாதி

உகூஉ - உஎரு: உடனே.........உணர்வே

(இ - ள்.) உடனே பூதவாதியை புகல் நீ என்ன - வைசேடிகன் திறம் கேட்ட மணிமேகலை அப்பொழுதே அவனை விட்டுப் போய்ப் பூதவாதியைத் தலைப்பட்டு ஐயனே உன்னுடைய சமய கன் பொருளை எனக்குக் கூறுவாயாக நீ என்று கேட்ப அவ் வேண்டுகோட் கிணங்கிக் கூறுபவன்:—தாதகிப் பூவும் கட்டியும் இட்டு மற்றும் கூட்ட மதுக்களி பிறந்தாங்கு - ஆத்திப் பூவும் கருப்புக் கட்டியும் இட்டுப் பிறவும் கூட்ட வேண்டிய பொருள்களைக் கூட்டிச் சமைத்த கள்ளின்கண் களிப்பு என்னும் ஓர் ஆற்றல் பிறந்தாற் போல; உற்றிடும் பூதத்து உணர்வு தோன்றிடும் - நிலம் முதலிய ஐந்து பூதங்களின் கூட்டரவின் கண் அறிவு தோன்றும்; அவ் உணர்வு அவ்வப் பூதத்தின் அழிவுகளின் - அந்த அறிவு அவ்வப் பூதங்கள் அழியும் பொழுது; வெவ்வேறு பிரியும் பறை ஓசையில் கெடும் - வேறு வேறாகப் பிரிகின்ற பறையினது ஒலி போலக் கெடுவதாம்; உயிரொடும் கூடிய உணர் உடைப் பூதமும் - உயிரோடும் கூட்டப்பட்டமை யால் அறிவுடையதாகிய பூதமும்; உயிர் இல்லாத உணர்வில் பூதமும் - உயிரற்றமையால் உணர்வு பிறவாத பூதங்களும்; அவ் வப்பூதவழி அவை பிறக்கும் - அவ்வப் பூதங்களின் வழியாக அவ்விருவகைப் பூதங்களும் பிறக்கும்; மெய்வகை இ[illegible] எங்கள் பூதவாத நூலிற் கூறப்படும் பொருள்வகை யான் [illegible]றிய இதுவேயாம் இங்ஙனமன்றி; வேறு உரை விகற்பமும் - வேறு விதமாகக் கூறப்படுகின்ற உரை வேறுபாடுகளும்; உண்மைப் பொருளும் - உண்மையான பொருள்களும் எம்மில் வேறாகிய; உலோகாயதன் உணர்வே - உலோகாயதனுடைய அறிவின்பால் பட்டனவே, எமது பூதவாத நூலின்கண் படுவன அல்ல என்றான் என்க.

(வி - ம்.) பூதவாதி, ஐம்பெரும் பூதங்களே பொருள்; இவற்றின் கூட்டரவில் உணர்ச்சி தோன்றும்; மாமுதலிய ஐந்து பொருள்களையும்

கூட்டிச் சமைத்த கள்ளின்கட் களிப்புத் தோன்றுமாறு போலே, நில முதலிய ஐம்பெரும் பூதங்களின் கூட்டத்தின்கண் அறிவு இன்ப முதலியன தோன்றி அவை வளரத் தாமும் வளர்ந்து, அந்தப் பூதங்கள் பிரிந்தால் முன்பு சொன்ன அப் பொறி புலன்கள் தம்மினமாகிய பூதங் களிற் சேரும்; சேரவே, அறிவு இன்ப முதலியன குடமும் விளக்கும் இன்னவழிப் புக்கன வென்றறியாமல் அழிந்தவாறு போல அழியும் என்பது பூதவாதியின் கொள்கை. உயிரொடும் கூட்டிய உணர்வுடைப் பூதம் என்புழி, கூட்டிய என்னும் சொல் பிழைபட்ட சொல். கூடிய என்னும் சொல்லே அங்ஙனம் பிழைபட எழுதப்பட்டது என்று கருது தற்கு இடன் உளது; இங்ஙனம் கொள்ளின் உயிர் தோன்றுதற்கு வேண்டுமளவு தம்முள் கூடிய உணர்வுடைப் பூதமும் என்று பொருள் கொள்ள வேண்டும். அவ்வழி உணர்வுடைப் பூதம் என்றது உயிரினங் களின் உடம்புகளைக் குறிப்பதாம்; உயிரில்லாத உணர்வில் பூதம் என்றது நிலம் முதலிய பூதங்களை என்று கொள்ளல் வேண்டும். அவ்வப் பூதவழி பிறக்கும் என்பதற்கு, தீ முதலியவற்றினின்று ஒளி முதலிய புலன்களும் கண்ணறிவும் முதலியன பிறக்கும் என்று கொள்ளல் வேண்டும். மெய் என்றது பிருகற்பதியார் செய்த பூதவாத நூலை. இந்த நூலின் பொருளே இம் மணிமேகலையினும் கூறப்படுவனவாம் என்ற அறிதல் வேண்டும். இவற்றை,

"திண்ணென் றீநில நீர்வளி காயத்தாற்
கண்ணு மூக்கொடு நாமெய் செவிகளாய்
வண்ண நாற்றஞ் சுவையொ டுரொலி
யெண்ணுங் காலை யியைந்துழி யெய்துமே"

(நீல - அ௩௭)

எனவும்,

"ஐந்துங் கூடி யறிவின்ப மாதியாய்
வந்து தோன்றி மதுமயக் காற்றலி
னந்தி நாளுங் குடஞ்சுடர் நாட்டம்போற்
சிந்தி லுலவை சென்றினஞ் சேருமே"

(நீல - அ௩௮)

[...]னவும் வரும் செய்யுள்களானும் உணர்க.

[...]ி இப் பூதவாதத்தின் தத்துவங்களினும் சிறிது சிறிது வேறுபடு வாருட் உளர். இவ் வேறுபாடு காரணமாக அவர் உலோகாயதர் எனவும சாருவாகர் எனவும் வேறு வேறு பெயர் பெறுவாராயினர். இவருள் தேகான்ம வாதிகளும் இந்திரியான்ம வாதிகளும் பிராணான்ம வாதிகளும் அந்தக் கரணான்ம வாதிகளும் எனப் பலதரப்படுவர் ஆகலின் அவர் கொள்கையும் எமக்குடன்பாடன்று என்பான் வேறுரை விகற்ப [...]மும் உண்மைப் பொருளும் உலோகாயதன் உணர்வே என்றான். [...]னவே அவர்க்கு முதல்நூல் இல்லை என்றானும். அவ் உலோகாயத [...]ணர்வில் எழுந்த உரை விகற்பங்களை மாதவச் சிவஞான [...]யாகியார் :—

"உலகாயதமாவது—காண்டலளவை ஒன்றே அளவையாம், நிலம் நீர் தீ வளி என நான்கே தத்துவங்கள்; இவை நித்தப் பொருள்கள்.

இவற்றின் கூட்டமே யுடம்பு. பாகடையும் சுண்ணும்பும் கூடிய வழிச் செவ்வண்ணம் பிறக்குமாறு போல இவற்றின் கூட்டரவின் ஒருணர் வுண்டாம். அவ்வுணர்வு உடம்பு வளர வளரும் தேயத்தேயு மாகலின், உடம்பிற்கு வேறே உயிர் என்பதும் பொய். உடம்பிற்கு இன்ப துன்பங்கள் இயல்பாயுள்ளன. இவற்றிற்குக் காரணம் வினை யென்பதும் பொய்; மயிலைச் சித்திரித்தாரையும், குயிலைக் கூவுவித்தாரை யுங் காணுமையின் கடவுள் உண்டென்பதும் பொய்.''

"இம்மையின் மங்கைப் பருவத்து மகளிரொடு மணந்து உண்டு டுத்து வாழ்வதே துறக்க வின்பம். அது பெருது பகைவரால் நோயால் வறுமையால் நூல்களால் வருந்துவதே நிரயத்துன்பம். வேறே துறக்க நிரயம் உள என்பதும் பொய். நாலு பூதக் கூட்டரவிற் பிராணவாயு ஒன்று நீங்கில் உணர்விழந்து உடம்பு நாசமாம். அதுவே வீடுபேறு, வேறே வீடுபேறுண்டென்பதும் பொய்.''

"இவ்வுண்மை யுணராத மடவோர் மறுமையுண்டெனக் கொண்டு தவங்கள் பட்டினி முதலியவற்ருன் வருந்துவர். கற்பு முதலிய சங்கேத நூல்கள் மதுகையின்றி மதியுடையோராற் செய்யப்பட்டன. பொன் நிலம் உணவு முதலிய தானங்களை உயர்த்துக் கூறும் நூல்கள் பசியால் வருந்தி நல்கூர்ந்தோராற் செய்யப்பட்டன. தேவகுலம் தண்ணீர்ப் பந்தர் கூவல் பொய்கை சோலை முதலியன செய்தலை உயர்த்துக் கூறும் நூல்கள் வழிச் செல்வோராற் கூறப்பட்டன. ஆகலான் இவற்றைக் கைவிட்டு, உழவு, பசுக்காவல், வாணிகம், செங்கோன் முறைமை முதலியனவாக ஆன்ருேர் காட்டிய நெறியினின்றும் இம்மையின்பங்களை நுகர்ந்து வாழ்தல் உறுதிப் பயன் என்பதாம்'' என்பர்.

இதுவுமது

உஎச - உஎரு: கண்.........என்றலும்

(இ - ள்.) கண்கூடு அல்லது கருத்து அளவு அழியும் - கண்ணாலும் பிற பொறிகளாலும் நேரே அறிவதாகிய காட்சி அளவை மட்டுமே வாய்மை ஆவதல்லது கருத்து அளவு முதலியன பொய்யாய் ஒழிதலும் உண்டாதலின் எமக்குக் காட்... அளவை ஒன்றுமே அளவையாம் ஆகவே காட்சி அளவையி... காணப்படுகின்ற; இம்மையும் இம்மைப் பயனும் இப்... இம்மையும் இம்மையில் நுகருகின்ற மாதர் இன்பம் முதலி... பயன்களுமே பிறவிப் பயனும் பிறந்த இப்பிறப்பே வாய்மையு மாம் இஃதன்றி; மறுமை உண்டாய் வினை துய்த்தல் பொய்ம்மை - மாய்ந்தபின் மற்றும் பிறப்பு உண்டாகி இம்மையி செய்த வினையின் பயனை அம் மறு பிறப்பில் நுகர்தல் என்ப பொய்ம்மையே என்பது எமது துணி பொருளாம்; என்றலும் என்று அப் பூதவாதி தனது நூற்பொருளை உரைத்தலு, எல்லா மார்க்கமுங் கேட்டு நன்றல வாயினும் - மணி மேகலை இவ்வாறு அளவை வாதி முதலாகப் பூதவாதி ஈருக

உள்ள எல்லாச் சமயக்கணக்கர் நெறிகளையும் கேட்டறிந்த பின்னர் அப் பூதவாதியை ஐயனே யான் கேட்ட சமய நெறிக ளெல்லாம் நன்னெறிகளல்ல ஆயினும்; நான் மாறு உரைக் கிலேன் என்று கூறியவள் இப் பிறப்பே வாய்மை மறு பிறப்பு முதலியன பொய்யே யாம் எனக் கேட்டு; பிறந்த முன் பிறப்பை எய்தப் பெறுதலின் - தான் பிறந்திருந்த முற்பிறப்பை அறிந் திருத்தலால் அஃதறியாத அப் பூதவாதியின் பேதைமைக் கிரங்கி ஐயனே; அறிந்தோர் உண்டோ என்று நக்கிடுதலும்-அம் மறுமை முதலியன இல்லை என்பதை நன்கறிந்தவர்கள் உளரேயோ? என்று சொல்லி நகைத்தலும் அது கேட்ட பூதவாதி மணி மேகலையை நோக்கித் துறவியே நீ எற்றிற்கு நகைத்தனை மறுமை முதலியன உண்டென்பார் கூற்றினை உண்மை என்று கொண்டு என் மொழியை எள்ளி நகைக்கின்றாய் போலும் என அது கேட்ட மணிமேகலை யானே என் முற்பிறப்பை அறிந்துளேன் காண் என அது கேட்ட அப் பூதவாதி துறவியே நீ அறிந்தாயேனும், அவ் வறிவுதானும்; தெய்வ மயக்கினும் கனாஉறு திறத்தினும் மையல் உறுவார் மனம் வேறும் வகை - தெய்வ மயக்கத்தாலாதல் கனாக் காணுதலாலாதல் மயக்கம் உறுவோர் மனம் வேறுபட்டுக் கூறு மாறு போல; ஐயம் அன்றி - ஐயுறுதற்கு இடமாதலன்றி; இல்லை என்றலும் - அக் கூற்று வாய்மையாமாறில்லை என்று மறுத்தலும் என்க.

(வி - ம்.) கண்கூடு-காட்சியளவை கருத்தளவை முதலியன என்க. இப் பிறப்பே வாய்மை என்று ஒரு சொல் பெய்து கொள்க. துய்த்தல் பொய்மை என மாறுக. பிறந்த என்பது தொடங்கி இப்பகுதியில் விரித் துரைக்கப்பட்டவையெல்லாம் பாட்டிடை வைத்த குறிப்புப் பொரு ளாகப் பெய்துரைக்கப்பட்டன. இக் குறிப்புப் பொருள் :—

"இறைவனு மில்லை யிறந்தோர் பிறவார்
அறனோ டென்னையென் றறைந்தோன் தன்னை
பிறவியும் அறவியும் பெற்றியி னுணர்ந்த
நறுமலர்க் கோதை எள்ளினை நகுதி
எள்ளினை போலும் இவ்வுரை கேட்டிங்
கொள்ளிய துரையென உன்பிறப் புணர்த்துவை
ஆங்குயிற் கொணர்ந்த அருந்தெய்வம் மயக்கக்
காம்பன தோளி கனாமயக் குற்றனை
என்றவ னுரைக்கும் இளங்கொடி நல்லாய்
அன்றென் றவன்முன் அயர்ந்தொழி வாயலை
தீவினை யுறுதலுஞ் செத்தோர் பிறத்தலும்
வாயே யென்று மயக்கொழி மடவாய்"

என நூலாசிரியர் விரித்துக் கூறிப்போந்த பொருளையே ஈண்டுக் குறிப்பாகக் கொள்ள வைத்தலின் அஃதறிந்து ஈண்டு இவ்வாறு விரித்தாம் என்க. அறிந்தோர் உண்டோ என்புழி ஓகாரம் எதிர்மறை ஓகாரமாய், யானே அறிந்துள்ளேனே என்னும் பொருளையும், தெய்வ மயக்கினும் என்னும் பதவாதியின் கூற்றால் மணிமேகலை யான் ஒரு தெய்வத்தின் திருவருளால் அறிந்துளேன் என, அது கேட்ட அப் பதவாதி அத்தகைய தெய்வ மயக்கத்தால் நீ கூறுவனவும் ஐயமின்றி உண்மையாதலில்லை என்றான் என்னும் குறிப்புப் பொருள் தோன்றுதலும் உணர்க. இக் குறிப்புப் பொருள் பாட்டிடைத் தோன்றுதலின் இத்தகையவற்றை ஆசிரியர் தொல்காப்பியனார் 'பாட்டிடை வைத்த குறிப்பு' (தொல். செய்யு - கஎக) என்று ஓதுதலும் உணர்க.

### மணிமேகலை கூற்று

### ௨௪௫ - ௨௪௯: நின்.........ஆங்கென்

(இ - ள்.) நின்தந்தை தாயரை அனுமானத்தால் அலது இந்த ஞாலத்து எவ்வகை அறிவாய் - ஐயனே காட்சி அளவை அல்லது ஏனைய அளவை கொள்ளேன் என்னும் நீ நின்னுடைய தந்தை தாய் என்னும் இவரைக் கருத்தளவையால் அறிந்து கொண்டதல்லது இவ்வுலகத்தில் வேறு எவ்வாற்றால் அறிந்து கொள்வாய் கூறவல்லையோ இது நிற்க; மெய் உணர்வு இன்றி மெய்ப்பொருள் உணர்வு அரிய - மெய்யுணர்வில்லாத வழி அவ்வுணர்ச்சிக்கே புலப்படுகின்ற மெய்ப்பொருள்களையும் உணர்ந்து கோடல் அரிய செயல்களேயாம் ஆகவே இம்மை மறுமை உம்மை முதலியவை உண்டு என்று: இது ஐயம் அலலது - யான் கூறும் இக் கூற்று ஐயத்திற்கிடமல்லாத வாய்மையே ஆதலின்; சொலப்பெறாய் - நீ அவ்வாறு கூறுதற்கு இடம் பெறாய்; என - என்று அப் பூதவாதிக்குக் கூறி; உள்வரிக் கோலமோடு - தான் தன் உருவத்தை மறைத்து மாதவன் உருவத்தோடு சென்று; உன்னிய பொருள் - தான கேட்க விரும்பிய பிற சமயக்கணக்கர் நன்பொருள்களைக் கேட்க விரு[illegible] தன் விருப்பத்தை; உரைத்து அச் சமயக் கணக்[illegible] சொல்லி வினவுமாற்றால்; ஐவகை சமயமும் அறிந்தனள் ஆங்கு என் - அறுவகைச் சமயங்களுள் வைத்துத் தான் மேற்கொண்டுள்ள பௌத்தம் ஒழிந்த ஏனைய ஐந்து வகைப்பட்ட சமயக்கணக்கர் தம் திறமெல்லாம் அறிந்து கொண்டனள் அவ் வஞ்சிமாநகர்ப் புறத்தே என்க.

(வி - ம்.) தந்தை தாயரை அனுமானத்தால் அல்லது அறிய வியலாமை நினைந்துணர்க. மெய்யுணர்வு-யாதொரு பொருள் யாதோர் இயல்பிற்றாய்த் தோன்றினும் அத் தோற்றத்தைக் கண்ட மாத்திரையே ஒழியாது அப் பொருளின்கண் நின்று அதன் இயல்பை ஆராய்ந்து உள்

வாறு உணர்தல். இவ்வாறுணர்வார்க்கன்றிப் பொருளியல்புகள் உணர் தற்கரியன என்றவாறு. சொல்ல இடம் பெருய் என்க. உள்வரிக் கோலம் - வேற்றுருக் கோடல். உன்னிய பொருள் - கேட்க விரும்பிய பொருள். அவையாவன பிற சமயக்கணக்கர் தத்துவங்கள். அளவை வாதம் ஐந்தும் ஒருவகைச் சமயமாகவும், ஆசீவகவாதம் நிகண்ட வாதம் என்னும் இரண்டும் ஒருவகைச் சமயமாகவும் கோடலின், இக் காதையில் கூறப்பட்ட பத்துச் சமயங்களையும் ஐவகைச் சமயங்களுள் அடக்கி ஐவகைச் சமயமும் அறிந்தனள் என்ருர்.

இனி இக் காதையை 'மணிமேகலை நன்பொருள் உரைமீனே எனச் சமயக் கணக்கர் தம் திறம் சார்ந்து அவருள் அளவை வாதியை எய்தி நின் கடைப்பிடி இயம்பென அவனும் இவையே இப்போது இயன்றுள அளவைகள் என, அவனை விட்டுச் சைவ வாதியை நின் தெய்வம் எப்படித் தென்ன அவனும் அன்னேன் இறைவன் ஆகும் என்றுரைத்தனன். பிரம வாதி முட்டை என்றனன். கடல்வணன் புராணம் ஓதினன். நாரணன் காப்பென்றுரைத்தனன். வேதியன் உரையின் விதியுங் கேட்டு, இசை யாது இவர் உரையென புராணனைப் பொருள் யாது என, அவன் இது என்ன, நிகண்ட வாதியை நீ உரை என, அவன் அது வீடாகும் என் றனன். பின் சாங்கிய மதம் என்று எடுத்துரைப்பவன், செப்பிய திறமும் கேட்டு வைசேடிக நின வழக்குரை என்ன, அவன் உரைத் தனன். உடனே பதவாதியை நீ புகல் என்ன, அவன் மறுமை உண் டாய் வினை துய்த்தல் பொய்ம்மை என்றலும் கேட்டு நக்கிடுதலும், அவன் ஐயம் அன்றியில்லை என்றலும், மணிமேகலை நீ எவ்வகை அறிவாய் சொல்லப் பெருய் என, கோலமோடு உரைத்து ஐவகைச் சமயமும் அறிந்தனன்' ஆங்கு என முடிவு செய்க.

சமயக்கணக்கர் தந்திறங் கேட்ட காதை முற்றிற்று.

# உஅ. கச்சிமாநகர் புக்க காதை

[இருபத்தெட்டாவது தாயரோடு அறவணடிகளையுந் தேர்ந்து கச்சிமாநகர்க்கட் சென்ற பாட்டு.]

இதன்கண்: மணிமேகலை வஞ்சிநகரத்தே இருந்து அந்நகரத்தின்கண் சமயக்கணக்கர் உறையும் இடத்தே சென்று, அளவைவாதிமுதல் பூதவாதி ஈறுக உள்ள சமயக்கணக்கர்களைத் தனித்தனியே கண்டு அவ்வவர் சமயக் கருத்துகளையெல்லாம் வினவி நன்கு தெரிந்துகொண்ட பின்னர், மாதவியையுஞ் சுதமதியையும் அறவணவடிகளையும் காண விரும்பி அந்நகரத்தின் உள்ளே புகுந்து பலவேறு காட்சிகளையும் கண்டு செல்பவள், அங்கொரு தவப்பள்ளியின்கண் தவம் செய்து கொண்டிருந்த தன் மூதாதையாகிய மாசாத்துவானைக் கண்டு தன் வரலாறுகளையும் கூறிப் பௌத்த தருமத்தைக் கேட்டற்கு விரும்பி அறவணவடிகளைத் தேடிக்கொண்டு வந்ததனையும், அம் மாசாத்துவானுக்கு அறிவித்த செய்தியும், மாசாத்துவான் தான் வஞ்சி நகரத்திலே தங்குதற்கு உரிய காரணத்தை மணிமேகலைக்கு அறிவித்துக் காஞ்சி நகரத்தில் மழையின்மையால் மன்னுயிர்கள் பசிப்பிணியால் வருந்தி மாய்கின்றன; நீ அந்நகரத்தை எய்தி அவ்வுயிர்களை ஓம்புதல் வேண்டும் என்று வேண்டிக்கொண்ட செய்தியும், அவன் வேண்டுகோட் கிணங்கிய மணிமேகலை வஞ்சி நகரத்திலிரு[ந்து] வான் வழியாகக் காஞ்சி நகரம் புகுந்த செய்தியும், அந் ந[கரத்துப்] புத்த பீடிகையின் மருங்கிருந்து அந்நகரத்தின்கண் பசிப்பிணியால் வருந்தும் மன்னுயிர்களை வரவழைத்து அவற்றிற்கு உணவளித்துக் காப்பாற்றிய செய்தியும், அந் நிகழ்ச்சியைக் கேட்டுத் தன்னைக் காண வந்த மாதவியையும் சுதமதியையும் அறவண வடிகளையும் கண்டு அன்பு பொங்க அவர் அடிகள[ில்] வீழ்ந்து வணங்கி அவர்களுக்கு அமுதசுரபியில் சுரந்த அ[று]சுவை உண்டி நல்கி அளவிலாது மகிழ்ந்த செய்தி[யும்] கூறப்படும்.

ஆங்குத் தாயரோ டறவணர்த் தேர்ந்து
வாங்குவிற் றானை வானவன் வஞ்சியின்
வேற்று மன்னரு முழிஞைவெம் படையும்
போற்புறஞ் சுற்றிய புறக்குடி கடந்து
சுருங்கைத் தூம்பின் மனைவளர் தோகையர்
கருங்குழல் கழீஇய கலவை நீரும்
எந்திர வாவியி லிளைஞரு மகளிரும்
தந்தமி லாடிய சாந்துகழி நீரும்
புவிகா வலன்றன் புண்ணிய நன்னாட்
சிவிறியுங் கொம்புஞ் சிதறுவிரை நீரும்
மேலை மாதவர் பாதம் விளக்கும்
சீலவுபாசகர் செங்கைநறு நீரும்
அறஞ்செய் மாக்க ளகின்முதல் புகைத்து
நிறைந்த பந்தற் றகம்புவார் நீரும்
உறுப்புமுர ணுருமற் கந்தவுத் தியினால்
செறித்தரைப் போர்தஞ் செழுமனை நீரும்
என்றிந் நீரே யெங்கும் பாய்தலின்
கன்றிய கராமு மிடங்கரு மீன்களும்
ஒன்றிய புலவொழி யுடம்பின வாகித்
தாமரை குவளை கழுநீ ராம்பல்
பூமிசைப் பரந்து பொறிவண் டார்ப்ப
இந்திர தனுவென விலங்கக முடுத்து
வந்தெறி பொறிகள் வகைமாண் புடைய
கடிமதி லோங்கிய விடைநிலை வரைப்பில்
பசுமிளை பரந்து பஃறுழி னிறைந்த
வெள்ளிக் குன்ற முள்கிழிந் தன்ன
நெடுநிலை தோறு நிலாச்சுதை மலரும்
கொடிநிலை வாயில் குறுகினள் புக்குக்
கடைகாப் பமைந்த காவ லாளர்
மிடைகொண் டியங்கும் வியன்மலி மறுகும்
பன்மீன் விலைஞர் வெள்ளுப்புப் பகருநர்
கண்ணொடை யாட்டியர் காழியர் கூவியர்
மைந்நிண விலைஞர் பாசவர் வாசவர்
என்னுநர் மறுகு மிருங்கோ வேட்களும்
செம்பு செய்ஞ்ஞரும் கஞ்ச காரரும்
பைம்பொன் செய்ஞ்ஞரும் பொன்செய் கொல்லரும்
மரங்கொ றச்சரும் மண்ணீட் டாளரும்
வரந்தர வெழுதிய வோவிய மாக்களும்
தோலின் றுன்னருந் துன்ன வினைஞரும்
மாலைக் காரருங் காலக் கணிதரும்

நலந்தரு பண்ணுந் திறனும் வாய்ப்ப
நிலங்கலங் கண்ட நிகழக் காட்டும்
பாண ரென்றிவர் பல்வகை மறுகும்
விலங்கரம் பொரூஉம் வெள்வளை போழ்நரோ
டிலங்குமணி வினைஞ ரிரீஇய மறுகும்
வேத்தியல் பொதுவிய லென்றிவ் விரண்டின்
கூத்தியல் பறிந்த கூத்தியர் மறுகும்
பால்வே றாக வெண்வகைப் பட்ட
கூலங் குவைஇய கூல மறுகும்
மாகதர் சூதர்வே தாளிகர் மறுகும்
போகம் புரக்கும் பொதுவர் பொலி மறுகும்
கண்ணுமை கல்லா நுண்ணூற் கைவினை
வண்ண வறுவையர் வளந்திகழ் மறுகும்
பொன்னுரை காண்போர் நன்மனை மறுகும்
பன்மணி பகர்வோர் மன்னிய மறுகும்
மறையோ ரருந்தொழில் குறையா மறுகும்
அரசியன் மறுகு மமைச்சியன் மறுகும்
எனைப்பெருந் தொழில்செ யேனோர் மறுகும்
மன்றமும் பொதியிலுஞ் சந்தியுஞ் சதுக்கமும்
புதுக்கோள் யானையும் பொற்றேர்ப் புரவியும்
கதிக்குற வடிப்போர் கவின்பெறு வீதியும்
சேணோங் கருவி தாழ்ந்தசெய் குன்றமும்
வேணவா மிகுக்கும் விரைமரக் காவும்
விண்ணவர் தங்கள் விசும்பிட மறந்து
நண்ணுதற் கொத்த நன்னீ ரிடங்களும்
சாலையுங் கூடமுந் தமனியப் பொதியிலும்
கோலங் குயின்ற கொள்கை யிடங்களும்
கண்டுமகிழ் வுற்றுக் கொண்ட வேடமொ
டந்தர சாரிக ளமர்ந்தினி துறையும்
இந்திர விகார மெனவெழில் பெற்று
நவையறு நாத னல்லறம் பகர்வோர்
உறையும் பள்ளிபுக் கிறைவனை நல்லாள்
கோவலன் றாதை மாதவம் புரிந்தோன்
பாதம் பணிந்துதன் பாத்திர தானமும்
தானப் பயத்தாற் சாவக மன்னவன்
ஊனமொன் றின்றி யுலகாள் செல்வமும்
செல்வற் கொணர்ந்தத் தீவகப் பீடிகை
இல்காது காட்டப் பிறப்பினை யுணர்ந்ததும்
உணர்ந்தோன் முன்ன ருயர்தெய்வந் தோன்றி
மணங்கவல் கெடுத்தது மாநகர் கடல்கொள

அறவண வடிகளுந் தாயரு மாங்குவிட்
டிறவா திப்பதிப் புகுந்தது கேட்டதும்
சாவக மன்னன் றன்னா டெய்தத்
தீவகம் விட்டித் திருநகர் புகுந்ததும்
புக்கபி னந்தப் பொய்யுரு வுடனே
தக்க சமயிகள் தந்திறங் கேட்டதும்
அவ்வவர் சமயத் தறிபொரு ளெல்லாம்
செவ்வி தன்மையிற் சிந்தைவை யாததும்
நாத னல்லறங் கேட்டலை விரும்பி
மாதவற் றேர்ந்து வந்த வண்ணமும்
சொல்லின ளாதலிற் றாயோய் நின்னையென்
நல்வினைப் பயன்கொல் நான்கண் டதுவெனத்
தையல் கேணின் றுதையுந் தாயும்
செய்ததீ வினையிற் செழுநகர் கேடுறத்
துன்புற விளிந்தமை கேட்டுச் சுகதன்
அன்புகொ ளறத்திற் கருகனே னாதலின்
மனைத்திற வாழ்க்கையை மாயமென் றுணர்ந்து
தினைத்தனை யாயினுஞ் செல்வமும் யாக்கையும்
நிலையா வென்றே நிலைபெற வுணர்ந்தே
மலையா வறத்தின் மாதவம் புரிந்தேன்
புரிந்த யானிப் பூங்கொடிப் பெயர்ப்படூஉம்
திருந்திய நன்னகர்ச் சேர்ந்தது கேளாய்
குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை
விடர்ச்சிலை பொறித்த வேந்தன் முன்னாள்
துப்படு செவ்வாய்த் துடியிடை யாரொடும்
இப்பொழில் புகுந்தாங் கிருந்த வெல்லையுள்
இலங்கா தீவத்துச் சமனொளி யென்னும்
சிலம்பினை யெய்தி வலங்கொண்டு மீளும்
தரும சாரணர் தங்கிய குணத்தோர்
கருமுகிற் படலத்துக் ககனத் தியங்குவோர்
அரைசற் கேது வவ்வழி நிகழ்தலின்
புரையோர் தாமுமிப் பூம்பொழி லிழிந்து
கற்றலத் திருந்துழிக் காவலன் விரும்பி
முற்றவ முடைமையின் முனிகளை யேத்திப்
பங்கயச் சேவடி விளக்கிப் பான்மையின்
அங்கவர்க் கறுசுவை நால்வகை யமிழ்தம்
பாத்திரத் தளித்துப் பலபல சிறப்பொடு
வேத்தவை யாரொடு மேத்தின னிறைஞ்சலின்
பிறப்பிற் றுன்பமும் பிறவா வின்பமும்
அறத்தகை முதல்வ னருளிய வாய்மை

இன்ப வாரமு திறைவன் செவிமுதல்
துன்ப நீங்கச் சொரியு மந்நாள்
நின்பெருந் தாதைக் கொன்பது வழிமுறை
முன்னோன் கோவலன் மன்னவன் றனக்கு
நீங்காக் காதற் பாங்க னாதலின்
தாங்கா நல்லறந் தானுங் கேட்டு
முன்னோர் முறைமையிற் படைத்ததை யன்றித்
தன்னா னியன்ற தனம்பல கோடி
எழுநா ளெல்லையு ளிரவலர்க் கீத்துத்
தொழுதவம் புரிந்தோன் சுகதற் கியற்றிய
வானோங்கு சிமையத்து வாலொளிச் சயித்தம்
ஈனோர்க் கெல்லா மிடர்கெட் வியன்றது
கண்டுதொழு தேத்துங் காதலின் வந்தித்
தண்டாக் காட்சி தவத்தோ ரருளிக்
காவிரிப் பட்டினங் கடல்கொளு மென்றவத்
தூவுரை கேட்டுத் துணிந்திவ ணிருந்த
தின்னுங் கேளாய் நன்னெறி மாதே
தீவினை யுருப்பச் சென்றநின் றாதையும்
தேவரிற் றோற்றிமுற் செய்தவப் பயத்தால்
ஆங்குத் தீவினை யின்னுந் துய்த்துப்
பூங்கொடி முன்னவன் போதியி னல்லறந்
தாங்கிய தவத்தாற் றான்றவந் தாங்கிக்
காதலி தன்னொடு கபிலையம் பதியில்
நாத னல்லறங் கேட்டுவீ டெய்துமென்
றற்புதக் கிளவி யறிந்தோர் கூறச்
சொற்பய னுணர்ந்தேன் றோகை யானும்
அந்நா ளாங்கவ னறனெறி கேட்குவன்
நின்னது, தன்மையந் நெடுநிலைக் கந்திற் றுன்னிய
துவதிக னுரையிற் றுணிந்தனை யன்றோ
தவநெறி யறவணன் சாற்றக் கேட்டனன்
ஆங்கவன் தானுநின் னறத்திற் கேதுப்
பூங்கொடி கச்சி மாநக ராதலின்
மற்றம் மாநகர் மாதவன் பெயர்நாள்
பொற்றொடி தாயரு மப்பதிப் படர்ந்தனர்
அன்னதை யன்றியு மணியிழை கேளாய்
பொன்னெயிற் காஞ்சி நாடுகவி னழிந்து
மன்னுயிர் மடிய மழைவளங் கரத்தலின்
அந்நகர் மாதவர்க் கைய மிடுவோர்
இன்மையி னிந்நக ரெய்தினர் காணாய்
ஆருயிர் மருந்தே யந்நாட் டகவயின்

காரெனத் தோன்றிக் காத்தனின் கடனென
அருந்தவ னருள வாயிழை வணங்கித்
திருந்திய பாத்திரஞ் செங்கையி னேந்திக்
கொடிமதின் மூதூர்க் குடக்கணின் றோங்கி
வடதிசை மருங்கின் வானத் தியங்கித்
தேவர் கோமான் காவன் மாநகர்
மண்மிசைக் கிடந்தென வளந்தலை மயங்கிய
பொன்னகர் வறிதாப் புல்லென் றுயது
கண்டுளங் கசிந்த வொண்டொடி நங்கை
பொற்கொடி மூதூர்ப் புரிசை வலங்கொண்டு
நடுநக ரெல்லை நண்ணின ளிழிந்து
தொடுகழற் கிள்ளி துணையிளங் கிள்ளி
செம்பொன் மாச்சினைத் திருமணிப் பாசடைப்
பைம்பூம் போதிப் பகவற் கியற்றிய
சேதியந் தொழுது தென்மேற் காகத்
தாதணி பூம்பொழி லுன்சென் றெய்தலும்
வையங் காவலன் றன்பாற் சென்று
கைதொழு திறைஞ்சிக் கஞ்சுக னுரைப்போன்
கோவலன் மடந்தை குணவதம் புரிந்தோள்
நாவலந் தீவிற் றனனி மிக்கோள்
அங்கையி னேந்திய வமுத சுரபியொடு
தங்கா திப்பதித் தருமத வனத்தே
வந்து தோன்றினள் மாமழை போலென
மந்திரச் சுற்றமொடு மன்னனும் விரும்பிக்
கந்திற் பாவை கட்டுரை யெல்லாம்
வாயா கின்றன வந்தித் தேந்தி
ஆய்வளை நல்லா டன்னுழைச் சென்று
செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ
கொங்கவிழ் குழலார் கற்புக் குறைபட்டோ
நலத்தகை நல்லாய் நன்னா டெல்லாம்
அலத்தற் காலை யாகிய தறியேன்
மயங்குவேன் முன்னரோர் மாதெய்வந் தோன்றி
உயங்கா தொழிநின் னுயர்தவத் தாலோர்
காரிகை தோன்று மவள் பெருங் குடிஞையின்
ஆருயிர் மருந்தா லகனில முய்யும்
ஆங்கவ ளருளா லமரர்கோ னேவலின்
தாங்கா மாரியுந் தானனி பொழியும்
அன்னா ளிந்த வகநகர் புகுந்த
பின்னா ணிகழும் பேரறம் பலவால்
கார்வறங் கூரினும் நீர்வறங் கூராது

பாரக விதியிற் பண்டையோ ரிழைத்த
கோமுகி யென்னுங் கொழுநீ ரிலஞ்சியொடு
மாமணி பல்லவம் வந்த தீங்கெனப்
பொய்கையும் பொழிலும் புனைமினென் றறைந்தத்
தெய்வதம் போயபிற் செய்தியா மமைத்த
திவ்விட மென்றே யவ்விடங் காட்டவத்
தீவகம் போன்ற காவகம் பொருந்திக்
கண்டுளஞ் சிறந்த காரிகை நல்லாள்
பண்டையெம் பிறப்பினைப் பான்மையிற் காட்டிய
அங்கப் பீடிகை யிதுவென வறவோன்
பங்கயப் பீடிகை பான்மையின் வகுத்துத்
தீவ திலகையுந் திருமணி மேகலா
மாபெருந் தெய்வமும் வந்தித் தேத்துதற்
கொத்த கோமி லுளத்தகப் புனைந்து
விழவுஞ் சிறப்பும் வேந்த னியற்றத்
தொழுதகை மாதர் தொழுதன ளேத்திப்
பங்கயப் பீடிகை பசிப்பிணி மருந்தெனும்
அங்கையி னேந்திய வமுத சுரபியை
வைத்துநின் றெல்லா வுயிரும் வருகெனப்
பைத்தர வல்குற் பாவைதன் கிளவியின்
மொய்த்த மூவறு பாடை மாக்களில்
காணார் கேளார் கான்முட மானோர்
பேணா மாக்கள் பேசார் பிணித்தோர்
படிவ நோன்பியர் பசிநோ யுற்றோர்
மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்
பன்னூ ருயிரம் விலங்கின் றொகுதியும்
மன்னுயி ரடங்கலும் வந்தொருங் கீண்டி
அருந்தியோர்க் கெல்லா மாருயிர் மருந்தாய்ப்
பெருந்தவர் கைபெய் பிச்சையின் பயனும்
நீரு நிலமுங் காலமுங் கருவியும்
சீர்பெற வித்திய வித்தின் விளைவும்
பேருகிய தென்னப் பெருவளஞ் சுரப்ப
வசித்தொழி லுதவி வளந்தந் ததுவெனப்
பசிப்பிணி தீர்த்த பாவையை யேத்திச்
செல்லுங் காலைத் தாயர் தம்முடன்
அல்லவை கடிந்த வறவண வடிகளும்
மல்லன் மூதூர் மன்னுயிர் முதல்வி
நல்லறச் சாலை நண்ணினர் சேறலும்
சென்றவர் தம்மைத் திருவடி வணங்கி
நன்றென விரும்பி நல்லடி கழுவி

ஆசனத் தேற்றி யறுசுவை நால்வகைப்
போனக மேந்திப் பொழுதினிற் கொண்டபின்
பாசிலைத் திரையலும் பளிதமும் படைத்து
வாய்வ தாகவென் மனப்பாட் டறமென
மாயைவிட் டிறைஞ்சினள் மணிமே கலையென்.

---

## உரை

[இதன்கண் க. முதல் சுஅ ஆம் அடிவரையில் மணிமேகலை நகரத்தில் புகுந்து செல்பவள் கண்டு செல்லும் காட்சிகளின் வண்ணனையாய் ஒரு தொடர்.]

### மணிமேகலை வஞ்சியில் அகநகரத்துள்ளே புகுந்து செல்லுதல்

#### க - ச: ஆங்கு.........கடந்து

(இ - ள்.) ஆங்கு தாயரோடு அறவணர் தேர்ந்து - அவ் வஞ்சி மாநகரத்தின்கண் மணிமேகலை ஐவகைச் சமயமும் அறிந்த பின்னர் அப்பொழுதே தன்னையீன்ற தாயும் செவிலித்தாய் போல்பவளும் ஆகிய மாதவியும் சுதமதியும் ஆகிய தாயர் இருவரையும் அறவண அடிகளாரையும் காண்டற் கெழுந்த தன் அவாக்காரணமாக, அவரைத் தேடிப் புறப்படுபவள்; வாங்குவில் தானை வானவன் வஞ்சியின் வேற்று மன்னரும் உழிஞை வெம் படையும் போல - வளைந்த வில்லேந்திய படைகளையுடைய சேரமன்னனுடைய வஞ்சி நகரத்தின்மேல் வந்த பகை மன்னர்களும் உழிஞைப்பூச் சூடிய வெவ்விய படைகளும் போல; புறம் சுற்றிய புறக்குடி கடந்து - புறத்தே சூழ்ந்துள்ள புறக்குடி இருப்புகளைக் கடந்து போய் என்க.

(வி - ம்.) சுதமதியும் மாதவி போன்று மணிமேகலையின்பால் தாயன்பு மிக்கவள் ஆதலின் அவளையும் உளப்படுத்தித் தாயர் என்று பன்மையில் ஓதினர். உழிஞைப்படை - மதில் வளைக்கும் பகை மன்னர் படை. அவர் உழிஞைப்பூ சூடிவருதல் மரபு. புறக்குடி - புறநகர். இது நால்வகைப்படை வீரரும் செறிந்திருக்கும் இடமாதலின் இங்ஙனம் உவமை எடுத்தோதினர்.

### அகழியின் மாண்பு

#### ரு - உஉ: சுருங்கை.........உடுத்து

(இ - ள்.) மனைவளர் தோகையர் - தமது அகநகரத்தின் கண் தமது மாடமனையுள்ளிருந்து மயில்தோகை போலும் கூந்தலையுடைய மகளிர் தமது; கருங்குழல் கழீஇய - கரிய கூந்தலைக் கழுவி விட்டமையால்; சுருங்கைத்தூம்பின சுருங்கை

னாகிய துளை வழியே வந்து கலந்த நறுமணமுடைய; கலவை நீரும் - பல்வேறு மணங்கலந்த நன்னீரும்; தந்தம் இல் எந்திர வாவியில் இளைஞரும் மகளிரும் ஆடிய சாந்துகழி நீரும் - தங்கள் தங்கள் இல்லத்தின் உள்ளே அமைத்த எந்திர வாவியின்கண் இளைய ஆடவரும் மகளிரும் ஒருங்கே நீராடியமையால் அவர் அணிந்த நறுமணச் சாந்துகள் கழிக்கப்பெற்ற மணநீரும்; புவி காவலன் தன் புண்ணிய நல்நாள் சிவிறியும் கொம்பும் சிதறும் விரை நீரும் - உலகங் காவலனாகிய தம்மரசன் பிறத்தற்கியன்ற புண்ணியத்தையுடைய நல்ல நாளிலே அந்நகரமாந்தர் மகிழ்ச்சி மால் ஒருவர்மேல் ஒருவர் சிவிறியும் கொம்பும் ஆகிய நீர் வீசும் கருவிகளால் சிதறிய நறுமணக் கலவை நீரும்; மேலை மாதவர் பாதம் விளக்கும் சில உபாசகர் செங்கை நறுநீரும் - மக்கட் பிறப்பின் மேலெல்லையாகத் திகழும் பெரிய தவவொழுக்க முடைய துறவோரின் திருவடிகளை விளக்குகின்ற தமக்குரிய நல்லொழுக்கத்தை மேற்கொண்ட இல்லறத்தோர் சிவந்த கைகளால் பெய்யும் நறிய நீரும்; அறம்செய் மாக்கள் அகில் முதல் புகைத்து நிறைந்த பந்தர் தசும்பு வார்நீரும் - அறம் செய்கின்ற மாந்தர் அகில் முதலிய மணப்புகை எடுத்து நீர்ச்சாலைகளில் நிறைத்துள்ள தண்ணீர்ப் பந்தல்களில் அச் சால்களினின்றும் ஒழுகும் நன்னீரும்; உறுப்பு முரண் உறாமல் கந்த உத்தியினால் செறித்து அரைப்போர் தம் செழுமனை நீரும் - உறுப்புகள் மாறுபடாமல் சேர்த்தற்கியன்ற நறுமணப் பொருளைச் சேர்த்துச் சாத்தம்மியில் இட்டுச் சாந்தரைக்கின்ற தொழிலாளருடைய செழிப்புடைய இல்லத்தினின்றும் வரும் நீரும்; என்று இந்நீரே எங்கும் பாய்தலின் - என்று இங்குக் கூறப்பட்ட இத்தகைய நறுமணம் கமழும் நீரே அந்நகரத்தினின்றும் எத்திசையினும் தன்னுள் வந்து பாய்தலாலே; சீறிய கராமும் இடங்கரும் மீன்களும் - தன்னுள் வாழும் சினந்த முதலைகளும் இடங்கரும் மீன்களும்; ஒன்றிய புலவொழி உடம்பினவாகி - தம் பிறப்போடு பொருந்திய தமக்கியல்பான புலால் நாற்றம் ஒழிந்து நறுமணமே கமழும் உடம்பை உடையனவாகா நிற்பவும்; தாமரை குவளை கழுநீர் ஆம்பல் பூமிசைப் பரந்து - தாமரையும் நீலமலரும் செங்கழுநீர் மலரும் ஆம்பல் மலரும் ஆகிய பன்னிற மலர்களும் தன் மேற்பரப்பெல்லாம் பரந்து விளங்கா நிற்பவும்; பொறி வண்டு ஆர்ப்ப - பொன்னிறம் முதலிய பல்வேறு நிறத்தால் அமைந்த புள்ளிகளையுடைய வண்டுகள் எங்கும் முரன்று திரியா நிற்பவும் இவ்வாற்றால்; இந்திர தனு என இலங்கு அகழ உடுத்து - இந்திர வில் போன்று பல்வேறு நிறத்தோடு விளங்குகின்ற அகழியாகிய அழகிய ஆடையை உடுத்துக் கொண்டு என்க.

(வி - ம்.) சுருங்கைத் தூம்பு - அக நகரத்திலே பெய்யும் மழை நீரும் இல்லங்களில் மாந்தர் பயன்படுத்தும் நீரும் வெளியேறுதற் பொருட்டு நிலத்தின் கீழ்க் கல்லாலும் சுண்ணத்தாலும் இயற்றப்பெற்ற நீரோடும் குழாய் வழிகள். இதனால் அக் காலத்தே நிலத்தின்கீழே நீர்க் குழாய்கள் அமைத்திருந்த நனி நாகரிகச் சிறப்புணர்க.

"நீணிலம் வகுத்து நீர் நிரந்துவந் திழிதரச்
சேணிலத் தியற்றிய சித்திரச் சுருங்கைசேர்
கோணிலத்து வெய்யவாங் கொடுஞ்சுறத் தடங்கிடங்கு"
(சீவக - கசஉ)

எனச் சிந்தாமணியினும் வருதல் காண்க.

மனைவளர் தோகையர் என்றதனால் இல்லத்தின் உள்ளேயே நீராடிக் குழல் கழுவிய நீர் என்பது கொள்க. குழல்-கூந்தல். அது மயிர்ச்சந்தன மணமும் மலர் மணங்களும் விரவி யிருத்தலின் கலவை நீர் என்றார். இனி மகளிர் கருங்குழல் கழுவிய மணக்கலவை நீருமாம். என்னை ?—

"பத்துத் துவரினு மைந்து விரையினும்
முப்பத் திருவகை யோமா லிகையினும்
ஊறின நன்னீ ருரைத்தநெய் வாசம்
நாறிருங் கூந்த னலம்பெற வாட்டி" (சிலப் சு : எசு-எகூ)

என்பதனானும் அறிக. எந்திரவாவி வேண்டும்பொழுது நீர் பெருக்கவும் கழிக்கவும் பொறிகள் அமைக்கப்பட்ட செய் நீர் நிலை. இஃது இல்லத்தின் ஊடேயே அமைக்கப்படுவதாம். இவ் வாவியில் செழுங்குடிச் செல்வராகிய இளைஞரும் மகளிரும் தம் தம் இல்லத்தினூடேயே சேர்ந்து நீராடி மகிழ்வர் ஆதலின் தம் தம் இல் ஆடிய என்றார். இல் - மனை. இஃதுணராதார் தந்தமில் என்பதற்குப் பொருள் காணு தொழிந்தார். புவி காவலன் புண்ணிய நன்னாள் என்றது மன்னன் பிறந்த நாளை. சிவிறி கொம்பு என்பன நீர் சிதறும் கருவிகளுள் சில. மாந்தருள் மாதவரே மேல் எல்லையின் வரம்பு ஆதலின் மேலை மாதவர் என்றார்; ஐகாரம் சாரியை. சீல உபாசகர் - பௌத்தருள் இல்லறத்தார். இவர் ஐந்து சீலங்களை மேற்கொண்டு ஒழுகுபவர். அவையாவன : கொல்லாமை பொய் சொல்லாமை களவின்மை காமமின்மை இரவாமை என்னும் இவ் வைந்து ஒழுக்கங்களுமாம். இவை இல்லறத்தார் மேற்கொள்ளற்பாலன ஆதலின் அவரை, சீல உபாசகர் என்றார். தசும்புதல் - கசிதலுமாம். உறுப்பு - புகையுறுப்பு. அவையாவன 'கோட்டம் செந்தேன் கிரியாசம் பச்சிலை ஆரம் அகில் உறுப்போடு ஆறு என்பன' (சிலப்-கு : கச உரை மேற்;) "கந்த உத்தி" என்பது, கலவை செய்தற்கியன்ற முறைகளைக் கூறுகின்ற நூற்பெயர் எனக் கோடலுமாம். எனவே, நூல் முறைப்படி செறித்து அரைப்போர் எனினுமாம். கராம், இடங்கர் என்பன முதலை வகை. கலவை நீரானும் மலரானும் பல்வேறு நிறத்தோடு கிடக்கும் அகழிக்கு வானவில் உவமையாயிற்று.

மதில் அரணும் மாடவாயிலும்

உ௫ - உ௯: வந்தேறி..........புக்கு

(இ - ள்.) வந்து எறி பொறிகள் வகை மாண்புடைய - பகைவர் வந்துற்றபோது தாமே இயங்கி வந்து அவரைக் கொல்லுகின்ற பொறிகளின் வகையினால் சிறப்புடைய; கடிமதில் ஓங்கிய இடைநிலை வரைப்பின் - காவலையுடைய மதில் ஓங்கி நிற்கின்ற இடை நிலத்திலே; பசுமிளை பரந்து - பசுமையுடைய காவற்காடு பரந்து செறியப்பட்டு; பல்தொழில் நிறைந்த - பல வாகிய சிற்பத்தொழில் நிறைந்துள்ள; வெள்ளிக்குன்றம் உள் கிழிந்தன்ன - வெள்ளிமலையானது நடுவிடம் கிழிந்தாற் போலத் தோன்றுகின்ற; நெடுநிலை தோறும் நிலாச்சுதை மலரும் - நெடுநிலைகள் அமைத்த இடந்தோறும் நிலாப்போன்று சுண்ண ஒளி விரிதற்கிடனான; கொடிமிடை வாயில் குறுகினள் புக்கு - வானத்தே உயர்த்திய கொடிகள் செறிந்த மாடவாயிலை எய்தி உள்ளே புகுந்து என்க.

(வி - ம்.) வந்து எறிதல் பகைவர் வந்தவுடன் தாமே இயங்கிவந்து அப் பகைவரைக் கொல்லும் பொறிகள் என்க. இப் பொறி வகைகளை—

......................''வளைவிற் பொறியும்
கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்
பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்
காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையும்
தூண்டி லுந் தொடக்கு மாண்டலை யடுப்பும்
கவையுங் கழுவும் புதையும் புழையும்
ஐயவித் துலாமுங் கைபெய ரூசியும்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்
எழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமும்
கோலுங் குந்தமும் வேலும் பிறவும்''

(சிலப் கடு: உ0எ - உகசு)

எனப் பிறர் ஓதுமாற்றானு முணர்க.

இடை நிலை வரைப்பு-அகழிக்கும் மதிலுக்கும் இடைக் கிடந்த நிலப் பரப்பு. மிளை - காவற்காடு. தொழில் நிறைந்த நெடுநிலை எனவும், குன்றம் உள் கிழிந்தன்ன நெடுநிலை எனவும் தனித்தனி கூட்டுக.

மறுகுகள்

உகூ - ச௩: கடை.........மறுகும்

(இ - ள்.) கடை காப்பு அமைந்த காவலாளர் மிடை கொண்டு இயங்கும் வியன்மலி மறுகும் - வாயில் காத்தற்கமைந்த காவல் மறவர் செறிந்து இயங்குகின்ற அகலம் மிக்க தெருவும்;

பல்மீன் விலைஞர் வெள் உப்பு பகருநர் கள் நொடையாட்டியர் காழியர் கூவியர் - பல்வேறு மீன்களையும் விற்கின்ற பரதவரும் உப்புவிற்கும் உமணரும் உமட்டியரும் கள்விற்கும் வலைச்சியரும் பிட்டுவாணிகரும் அடபவாணிகரும்; மைந்நிண விலைஞர் பாசவர் வாசவர் என்னுநர் மறுகும் - ஆட்டிறைச்சி விற்போரும் இலை அமுதிடுவோரும் பஞ்சவாசம் விற்போரும் என்று கூறப்படுபவராகிய சிறு வாணிகர் தெருவும்; இருங்கோ வேட்களும் செம்பு செய்ஞ்ஞரும் கஞ்சகாரரும் பைம்பொன் செய்ஞ்ஞரும் பொன் செய் கொல்லரும் - பெரிய மட்கலவாணிகராகிய குயவரும் செம்பு கொட்டிகளும் வெண்கலக் கன்னாரும் பசிய பொன்னால் அணிகலன் செய்வோரும் பொன் செய்கின்ற உருக்குத் தட்டாரும்; மரங்கொல் தச்சரும் மண்ணீட்டாளரும் வரந்தர எழுதிய ஓவிய மாக்களும் - மரம் வெட்டித் தொழில் செய்யும் தச்சரும் சிற்பாசாரியரும் வழி டுவார்க்கு வரந்தருகின்ற தெய்வத்தன்மை தோன்ற எழுதிய ஓவியங்களையுடைய சித்திரகாரிகளும்; தோலின் துன்னரும் துன்னவினைஞரும் மாலைக்காரரும் காலக் கணிதரும் - தோல் தைக்கும் செம்மாரும் ஆடை தைக்கும் தையற்காரரும் காலங் கணிக்கின்ற கணிவரும்; நலந்தரு பண்ணும் திறனும் வாய்ப்ப நிலம் கலம் கண்டம் நிகழக் காட்டும் பாணர் என்று இவர் பல்வகை மறுகும் - அழகு தருகின்ற பெரும் பண்ணும் சிறு பண்ணும் பொருந்த அவற்றை மூவகை இடமும் யாழும் மிடறும் ஆகிய இவற்றில் நிகழும்படி இசைத்துக் காட்டும் பாணரும் என்று இவரெல்லாம் வாழுகின்ற பல வகைப்பட்ட தெருக்களும் என்க.

(வி - ரை.) மிடை சொள்ளுதல் - செறிவு கொள்ளுதல். வியன்மலி அகலமிக்க. பாசவர்-கயிறு திரித்து விற்பார், பச்சிறைச்சி சூட்டிறைச்சி விற்பாருமாம். இலையமுது-வெற்றிலை. வாசம்-மணப்பொருள். வாசவர்-மணப் பொருள் விற்போர் அவை - 'தக்கோலம் தீம்பூத் தகைசால் இலவங்கம், கப்பூரஞ் சாதியோடைந்து' மாம். கோவேட்கள் - குயவர். இவர் வாணிகம் பெரிது என்பது தோன்ற இருங்கோ வேட்கள் என்றார். தட்டார் இருவகைப்படுவர். அவருள் பைம்பொன் செய்ஞ்ஞரும் என்றது பணித் தட்டாரை. பொன்செய் கொல்லர் என்றது, பொன்னை உருக்கி மாசகற்றும் உருக்குத் தட்டார் இரும்பு செய்கொல்லர் முதலியோரை. கொல் தச்சர் - கொஃறச்சர் என நிலைமொழி ஈற்று லகரம் ஆய்தமாகத் திரிந்தது. மண்ணீடு - சிற்பம். ஓவியத்தில் தெய்வப் பண்பு திகழ எழுதும் கலைத்திறம் தோன்ற வரந்தர எழுதிய ஓவிய மாக்கள் என்றார். தோலின் துன்னர் என்றது - செம்மாரை. இக் காலத்துச் சக்கிலியர் என்பர். இவரின் வேறு படுத்துதற்குத் துன்ன வினைஞர் என்றார். இவர் ஆடை முதலியன தைக்கும் தையல்காரர். நலம்-அழகு, இன்பமுமாம். பண் - பாலை குறிஞ்சி மருதம் செவ்வழி என்னும் பெரும்பண். திறம் - அவற்றின் கிளைகள். நிலம்-பண் பிறக்கும் நிலைக்களம். அவை எழுத்தும் அசையும் சீரும் ஆம். இனி மந்தம் உச்சம் சமம் என்னும் மூன்று

இடமுமாம். கலம் - யாழ். கண்டம் - மிடறு. ஈண்டுக் கூறப்பட்ட தொழிலாளர் தனித்தனித் தெருவில் வாழ்ந்தனர் என்பது தோன்ற, என்று இவர் பல்வகை மறுகும் என்றார்.

## இதுவுமது

### ௪௪ - ௫௯ : விலங்கரம்.........மறுகும்

(இ - ள்.) விலங்கரம் பொரூஉம் வெள்வளை போழ்நரோடு இலங்குமணி வினைஞர் இரீஇய மறுகும் - வளைந்த வாளரம் கொண்டு அறுக்கும் வெள்ளிய சங்குகளைப் பிளப்பவரோடு விளங்குகின்ற முத்துக் கோக்கும் தொழிலாளர் தங்கிய தெருவும்; வேத்தியல் பொதுவியல் என்று இவ்விரண்டின் கூத்து இயல்பு அறிந்த கூத்தியர் மறுகும் - வேத்தியலும் பொதுவியலும் என்று வகுத்துக் கூறப்படுகின்ற இவ்விரண்டு வகையினும் அமைந்த ஆடல்களின் இலக்கணமெல்லாம் அறிந்துள்ள ஆடல் மகளிர் வாழுகின்ற தெருவும்; பால் வேறு ஆக எண் வகைப் பட்ட கூலம் குவைஇய கூலமறுகும் - பகுதி இரண்டாக எட்டு வகைப்பட்ட கூலங்களைக் குவித்துள்ள கூலக்கடைத் தெருவும்; மாகதர் சூதர் வேதாளிகர் மறுகும் - மாகதரும் சூதரும் வேதாளிகரும் குடியிருக்கின்ற தெருவும்; போகம் புரக்கும் பொதுவர் பொலி மறுகும் - காமவின்பத்தைப் பேணிப் பெருக்கும் பொது மகளிர் வாழுகின்ற அழகிய தெருவும்; கண் நுழைகல்லா நுண் நூல் கைவினை வண்ண அறுவையர் வளம் திகழ் மறுகும் - காண்போர் கண்ணொளி புகுதாத நுண்ணிய நூலால் நெய்யும் கைத்தொழிலையுடைய பல்வேறு வண்ணங்களை உடைய ஆடை நெய்யும் தொழிலாளர் வாழுகின்ற செல்வத்தால் திகழுகின்ற தெருவும் என்க.

(வி - ம்.) விலங்கு-வளைவு. அரம்-வாளரம். போழ்நர்-அறுத்துப் பிளப்போர். சங்கறுப்பாரோடு இயைத்துக் கூறுதலின் ஈண்டு இலங்கு மணி என்றது முத்து என்பது பெற்றாம். கூத்து வேத்தியலும் பொது வியலும் என இருவகைப்படும். வேத்தியலை அகக் கூத்தென்றும் பொது வியலைப் புறக் கூத்தென்பாரும் பிற கூறுவாரும் உளர். கூத்தியர்-நாட கக் கணிகையர். கூலங்கள் இரண்டு பகுதியாக ஒவ்வொரு பகுதியினும் எட்டு எட்டு வகை உள்ளன. ஆதலின் பால் வேறு ஆக எண் வகைப்பட்ட கூலம் என்றார். அவை வருமாறு: "நெல்லு புல்லு வரகு தினை சாமை இறுங்கு தோரையொடு கழைவினை நெல்லே" இவ்வெட்டும் ஒருபாற் படும் கூலங்கள். இனி "எள்ளுக் கொள்ளுப் பயறுழுந்து அவரைகடலை துவரை மொச்சை என்றாங்கு உடன் இவை முதிரைக் கூலத்துணவே" என்னும் இவ்வெட்டும் ஒருவகைக் கூலம் என்க. குவைஇய - குவித்த. மாகதர் - இருந்தேத்துவார். சூதர் - நின்றேத்துவார். வேதாளிகர் - பலவகைத் தாளத்திலாடுவார்; சூதர் வாழ்த்த மாகதர் நுவல வேதாளிக ரொடு நாழிகை இசைப்ப எனவும் (மதுரைக் - ௬௭0 - ௬௭௧) "மாகதப் புலவரும் வைதாளிகரும் சூதரும்" எனவும் (சிலப். ௨௬ : ௭௪ - ௫) பிற

சான்றோரும் ஓதுதலுணர்க. போகம் புரத்தலாவது காமவின்பத்தைப் போற்றிப் பெருக்கிக் காட்டுதல். **பொதுவர்** - பொதுமகளிர். **நுழைகல்லா** - நுழையாத. **அறுவையர்**-புடைவை விற்போர்; நெய்வோருமாம்.

**இதுவுமது**

ருச - கூரு : பொன்னுரை.........இடங்களும்

**(இ - ள்.)** பொன் உரை காண்போர் நன்மனை மறுகும்- பொன்னை உரைத்து அதன் மாற்றினை அறிந்து கூறுவோர் வாழுகின்ற அழகிய இல்லங்கள் அமைந்த தெருவும்; பல்மணி பகர்வோர் மன்னிய மறுகும் - பல்வேறு வகைப்பட்ட மாணிக்கம் முதலிய மணிகளை விற்கும் மணிவாணிகர் நிலைத்திருந்து வாழும் தெருவும்; மறையோர் அருந்தொழில் குறைவா மறுகும் - வேதியர் தமக்குரிய ஓதலும் ஓதுவித்தலும் முதலிய அரிய தொழில் குறைபடாத தெருவும்; அரைசியல் மறுகும் அமைச்சியல் மறுகும்-அரசு ஆள்பவர் வாழுகின்ற தெருவும் அமைச்சியலோர் வாழுகின்ற தெருவும்; எனைப் பெருந் தொழில் செய் ஏனோர் மறுகும்-ஏனைய தானை நடத்துதல் முதலிய பெரிய தொழில்களைச் செய்கின்ற தானைத் தலைவர் முதலியோர் வாழுகின்ற தெருவும்; மன்றமும் பொதியிலும் சந்தியும் சதுக்கமும் - ஊர் மன்றங்களும் ஊரம்பலங்களும் முச்சந்தியும் நாற்சந்தியும்; புதுக்கோள் யானையும் பொற்றார் புரவியும் கதிக்கு உறவடிப்போர் கவின் பெறு வீதியும்-காட்டினின்றும் புதிதாகப் பிடித்துக் கொணர்ந்த யானைகளையும் பொன்னால் ஆகிய சதங்கை மாலை பூட்டிய குதிரைகளையும் அவ்வவற்றின் செலவிற்குப் பொருந்தப் பயிற்றும் யானைப்பாகரும் குதிரைப்பாகரும் வாழுகின்ற அழகுடைய வீதியும்; சேண் ஓங்கு அருவி தாழ்ந்த செய்குன்றமும் - மிக உயர்ந்து அருவி வீழ்கின்ற செய்குன்றங்களும்; வேனல் வாழ்க்கும் விரைமரக்காவும் - தன்பால் புகுந்தவருடைய வெட்கை யாகிய அவாவினை மிகுவிக்கும் இயல்புடைய நறுமண மலர்களை உடைய இளமரச் சோலைகளும்; விண்ணவர் தங்கள் விசும்பிடம் மறந்து நண்ணுதற்கு ஒத்த நல்நீர் இடங்களும் - தம்பால் வந்துற்ற தேவர்களும் தங்களுக்குரிய வானுலகத்தை மறந்து மீண்டும் வருவதற்குத் தகுந்த இன்பங்களை நல்கும் அழகிய நீர் நிலைகள் அமைந்த இடங்களும் என்க.

**(வி - ம்.)** பொன் உரை காண்டல் - பொன்னைக் கட்டளைக் கல்லின்கண் உரைத்து மாற்றறிதல். **மணி** - மாணிக்கம் முதலியன. **மறையோர் தொழில்** - ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்னும் இவ் வறுவகைத் தொழிலுமாம். **அரைசு** - பெருநில

மன்னரும் குறுநில மன்னரும்; ஏனை-ஏனை என முதல் குறுகியது; பெருந் தொழில் படைத்தொழில் முதலியன. மன்றம் பொதியில் என்பன ஊர்ப் பொது விடங்கள். இவ்விடங்களிலே ஊர் மக்கள் ஒருங்கு கூடியிருந்து வழக்காடுதல் அறங் கூறுதல் ஊர்ப்பொதுப் பணிகளை ஆராய்தல் முதலியன செய்வர். இவற்றுள் மன்றம் என்பது மரநிழலையுடைய வெளியென்றும் பொதியில் என்பது புதியவர் வந்து தங்கும் ஊர்ப் பொதுக் கட்டிடத்தை உடையது என்றும் கொள்க. பொதியிலில் அருட் குறியாகக் கல்தறிநட்டு அதனை வணங்குவதும் அக்கால வழக்கம்: இவற்றுள் தாதெரு மன்றம் என்னும் வழக்கானும், பாசிலை பொதுளிய போதி மன்றம் (சிலப் - உகூ: எகூ) என்பதனானும் மன்றம் என்பதன் இயல்பையும்,

''கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி
அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ
வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்''

(பட்டினப் - உசகூ - உசகூ)

என்பதனான் பொதியிலின் இயல்பையும் உணர்க. இக்காரணத்தால் இவற்றைச் சான்றோர் மன்றமும் பொதியிலும் என இணைத்தே கூறுதல் காணலாம். (முருகு - உஉசு; மணிமே - உO: நO.) சந்தி - முச்சந்தி; ஐஞ்சந்தியுமாம். சதுக்கம். இந்நகர வண்ணனை பெரும்பாலும் சொல் லாலும் பொருளாலும் சிலப்பதிகாரத்தில் இந்திர விழா வெடுத்த காதையில் பூம்புகார் நகர வண்ணனையையே ஒத்திருத்தல் காண்க. கதிக்குற வடித்தல் - போர் முதலியவற்றில் யானையும் புரவியும் செல்லு தற்குப் பொருந்துமாறு இவற்றின் நடையைத் திருத்திப் பயிற்றுதல். செய்குன்றம் - செயற்கை மலை. வேணவா - வேட்கையால் உண்டாகிய அவா. விரை மரம் - மணமலர் தரும் மரம்.

## இதுவுமது

கூகூ - கூஅ: சாலை.........வேடமொடு

(இ - ள்.) சாலையும் கூடமும் தமனிய பொதியிலும் - அறங்கூறும் அவையமும்; அறக்கோட்டமும் பொன்னாலியன்ற அறங்கூறும் அவையமும்; இன்னோரன்ன சிற்பம் கோலம் குயின்ற கொள்கை இடங்களும் - இன்னோரன்ன சிற்பம் முதலியவற்றால் அழகு செய்யப்பெற்ற கோட்பாடமைந்த இடங் களும் ஆகிய இவற்றையெல்லாம்; கொண்ட வேடமொடு கண்டு மகிழ்வுற்று - அம் மணிமேகலை தான் முன்னர் மேற்கொண்ட மாதவன் வடிவத்தோடே சென்று கண்டு பெரிதும் மகிழ்ந்து என்க.

(வி - ம்.) சாலை - அறக்கோட்டம். கூடம் என்றது கனகம் வெள்ளி முதலியவற்றாலியன்ற கூடங்களை.

''கண்ணெலாங் கவர்வன கனக கூடமும்
வெண்ணிலாச் சொரிவன வெள்ளி வேயுளும்

தண்ணிலாத் தவழ்மணித் தலமுஞ் சார்ந்தரோ
மண்ணிறு வியன்றில மதலை மாடமே''
(சூளாமணி : நகர - எ)

எனவருதலுமறிக. தமனியப் பொதியில் என்றதனால் மேலோர் இருந்து அறங் கூறும் மன்றம் என்பது பெற்றும். பொன்னம்பலம் என்னும் வழக்குமுர் உணர்க. கொண்டவேடம் - மாதவன் உருவம். மணிமேகலை தான் மேற்கொண்ட வேடமொடு கண்டு மகிழ்வுற்று என எழுவாய் பெய்தும் மாறிக் கூட்டியும் கொள்க.

## மணிமேகலை மாசாத்துவான் மாதவம் புரிவோனைக் காண்டலும் தன் வரலாறு உணர்த்தலும்

### கூகூ - எச : அந்தர.........பணிந்து

(இ - ள்.) அந்தரசாரிகள் அமர்ந்து இனிது உறையும் இந்திர விகாரம் என எழில் பெற்று - புகாரிடத்தே வானத்து இயங்கும் ஆற்றல் பெற்ற பௌத்தத் துறவிகள் தங்கி இனிதாக வாழுகின்ற இந்திரன் மனத்தால் இயற்றப்பெற்ற இந்திரவிகாரம் என்னும் பெயருடைய அரங்குகள் போன்று அழகெய்தி அவ் வஞ்சிமா நகரத்தே அமைந்ததும்; கவைஅறு நாதன் நல் அறம் பகர்வோர் உறையும் பள்ளி-குற்றமற்ற தலைவனாகிய புத்தர் திருவாய் மலர்ந்தருளிய நன்மை தரும் அறவுரைகளைச் செவியறி வுறுத்தும் துறவோர் வதிவதுமாகிய ஒரு தவப்பள்ளியைக் கண்டு; இறைவளை நல்லாள் புக்கு - முன்கையில் வளையணிதற் கியன்ற இளமையை உடைய அம் மணிமேகலை நல்லாள் அதனுட் புகுந்து அப் பள்ளியின்கண்; கோவலன் தாதை மாதவம் புரிந்தோன் பாதம் பணிந்து - தன் தந்தையாகிய கோவலனை ஈன்ற தந்தையாகிய மாசாத்துவான் கோவலன் மறைவின் பின் துறவியாய் அங்கு வந்து பெரிய தவ ஒழுக்கம் பூண்டிருப்பவனைக் கண்குளிரக் கண்டு அவனுடைய திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி எழுந்து பின்னர் எனக

(வி - ம்.) அந்தரசாரிகள்-தவவாற்றல் மிக்கு வானத்திலே இயங் கும் வன்மை பெற்ற துறவோர். இந்திர விகாரம் காவிரிப்பூம் பட்டி னத்தில் புத்த சைத்தியத்தின்கண் அமைந்த ஏழு அரங்குகள். அவை வஞ்சியின்கண் பௌத்தத் துறவிகள் உறையும் பள்ளிக்கு உவமையாக எடுக்கப்பட்டன. இறைவளை நல்லாள் என்றது மணிமேகலையை. இங்ஙனம் கூறியது குறிப்பாக அவளது இளமையை விதத்தற் பொருட் டாம். கோவலன் தாதையாகிய மாசாத்துவான் துறவியாய் அங்கு வந்து தவம் புரிந்தோனைக் கண்டு வணங்கி என்பது கருத்து.

இதுவுமது

௭௪ - ௮௪: தன்பாத்திர..........புகுந்ததும்

(இ - ள்.) தன் பாத்திர தானமும் - பின்னர்த் தன் மூதாதையாகிய அத் துறவிக்குத் தனது வரலாற்றைக் கூறுகின்ற மணிமேகலை தன் கையில் ஏந்தியுள்ள அமுதசுரபி என்னும் பிச்சைப் பாத்திரத்தினால் செய்யப்படும் அன்னதானத்தின் சிறப்பும்; தானப் பயத்தால் சாவக மன்னவன் ஊனம் ஒன்று இன்றி - அந்தத் தானத்தைச் செய்த பயன் காரணமாக ஆபுத்திரன் சாவக நாட்டு மன்னவன் புண்ணியராசனாய்ப் பிழை ஒன்றும் நிகழா வண்ணம்; உலகு ஆள் செல்வமும் - உலகத்தை ஆளுகின்ற அரசச் செல்வம் பெற்ற சிறப்பும்; செல்வன் கொணர்ந்து அத்தீவகப் பீடிகை ஒல்காது காட்ட பிறப்பினை உணர்ந்ததும் - செல்வனாகிய அச் சாவக மன்னனை அழைத்து வந்து மணிபல்லவம் என்னும் தீவின்கண் அமைந்த புத்த பீடிகையைச் சோர்வின்றிக் காட்டுதலாலே அம் மன்னவன் தன் பழம் பிறப்பினை உணர்ந்த செய்தியும்; உணர்ந்தோன் முன்னர் உயர் தெய்வம் தோன்றி - பிறப்புணர்ந்த அப் புண்ணியராசன் முன் உயர்ந்த பண்பமைந்த தீவதிலகை என்னும் தெய்வம் எழுந்தருளி; மனக்கவல் கெடுத்ததும் மாநகர் கடல் கொள - அத் தெய்வம் மனக்கவலையைத் தீர்த்து ஆறுதல் அளித்ததும் பெரிய நகரமாகிய காவிரிப்பூம் பட்டினத்தைக் கடல் கொள்ளாநிற்ப அக்கடல்கோளால்; இறவாது அறவணவடிகளும் தாயரும் ஆங்குவிட்டு இப் பதிப்புகுந்தது கேட்டதும் - இறந்துபடாமல் அறவண அடிகளும் மாதவியும் சுதமதியும் ஆகிய தாயர் இருவரும் அப் பட்டினத்தைவிட்டு இவ் வஞ்சி மாநகரத்தின்கண் வந்து புகுந்த செய்தியை அத் தீவ திலகை என்னும் தெய்வம் கூறத் தான் கேட்டறிந்து கொண்ட செய்தியும்; சாவக மன்னன் தன் நாடு எய்த தீவகம்விட்டு இத் திரு நகர்ப்புகுந்ததும் - சாவக மன்னனாகிய புண்ணியராசன் தனது நாட்டை அடையாநிற்பத் தான் அம் மணிபல்லவத் தீவைக் கைவிட்டு வேற்றுருக் கொண்டு இவ் வஞ்சியாகிய செல்வத்திலை நகரத்திலே புகுந்த செய்தியும் என்க.

(வி - ம்.) பாத்திரம்-அமுதசுரபி. தானப்பயம் - முற்பிறப்பிலே ஆபுத்திரனாக இருந்து இவ்வமுதசுரபியால் அன்னதானம் செய்த நல்வினைப்பயன் என்க. ஆபுத்திரன் சாவக மன்னவனாய்ப் பிறந்து என்க. கவல் - கவலை. செல்வன் : சாவக மன்னன். உணர்ந்தோன் : பெயர். இப் பதி - மாநகர் - பூம்புகார். தாயார் - மாதவியும், சுதமதியும். இப் பதி - வஞ்சி நகரம். தீவகம் - மணிபல்லவம்.

இதுவுமது

௮௫ - ௯௨: புக்கபின்.........என

(இ - ள்.) புக்கபின் - இவ் வஞ்சி நகரத்தில் புகுந்த பின்னர்; அந்த பொய் உரு உடனே - யான் முன்னர்க் கந்திற் பாவை கூறியவாறு எடுத்துக்கொண்டிருந்த பொய்யாகிய அந்த மாதவன் வடிவத்தோடே; தக்க சமயிகள் தம் திறம் கேட்டதும் - சமயவாதிகள் உறைவிடம் சென்று வினவத்தகுந்த அளவைவாதி முதலிய சமயக்கணக்கர்களுடைய தத்துவங்களை வினவிக் கேட்டறிந்து கொண்ட செய்தியும்; அவ்வவர் சமயத்து அறி பொருள் எல்லாம் - அவ்வச்சமயக் கணக்கர் அவரவர் சமயம் சார்பாக அறிந்து கூறிய தத்துவம் எல்லாம்; செவ்விது அன்மையின் சிந்தை வையாததும் - தெளிவுடையன அல்லாமையால் அவற்றையெல்லாம் தான் தன்னெஞ்சத்தே கொள்ளாமல் கைவிட்டொழிந்த செய்தியும் பின்னர்; நாதன் நல்லறம் கேட்டலை விரும்பி - சிறந்த சமயத் தலைவனாகிய புத்த பெருமான் திருவாய் மலர்ந்தருளிய நன்மையுடைய அறங்களைக் கேட்டறிந்து கொள்ளுதலைப் பெரிதும் விரும்பி; மாதவன் தேர்ந்து வந்த வண்ணமும் - அவ்வறங் கூறுதலின்கண் சிறப்புமிக்க பெருந் துறவியாகிய அறவணவடிகளாரைத் தேடித் தான் அவ்விடத் திற்கு வந்த முறைமையினையும்: சொல்லினள் ஆதலின் - எடுத்து அம் மாசாத்துவானுக்கு அறிவித்தாள் ஆதலால் அது கேட்ட அம் மாதவனாகிய மாசாத்துவானும், வியத்தகும் இச் செய்திகளைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்தவனாய்; தூயோய் நின்னை நான் கண்டது என் நல்வினைப்பயன்கொல் என - அம் மணிமேகலையை நோக்கி நங்காய் இவ்வாறெல்லாம் சிறத்தற்குக் காரணமான மனத்தூய்மை உடையோயே! நின்னை யான் இங்ஙனம் எளிதில் கண்டதற்குக் காரணம் யான் செய்த நல்வினைப் பயனேயாம் என்று அவளைப் பாராட்டி என்க.

(வி - ம்.) முன்னரே கந்திற்பாவை தனக்கறிவித்திருந்த வேற்றுரு என்பது தோன்ற அந்தப் பொய்யுரு எனச் சேய்மைச் சுட்டால் சுட்டினள். செவ்விது: பன்மை ஒருமை மயக்கம். நாதன் என்றது சமயத் தலைவர்களுள் தலைசிறந்தவன் என்பதுபட நின்றது. அவன்: புத்த பெருமான். மாதவன் என்றது அறவணவடிகளை. அவர் அறங் கூறுதலில் வல்லவர் என்பதனை "மறவணம் நீத்த மாசறு கேள்வி அறவணவடிகள் அடிமிசை வீழ்ந்து.........உரவோன் அருளினன்" எனத் தன் தாயாகிய மாதவி கூற்றுகவும் கேட்டிருந்தனள் ஆதலின் அம் மாதவனைத் தேடி வந்த வண்ணமும் என்றாளாயிற்று. மணிமேகலை இத்தகைய பேறு பெறுதற்குக் காரணம் அவளது மனத்தூய்மையே ஆதலின் அக் கருத்துத் தோன்ற, தூயோய் என்று விளித்தான். நல்லோரைக் காண்பதுவும் நன்றே என்பது பற்றி அங்ஙனம் காண்டற்கும் முன்னை நல்வினையே

காரணம் என்பான், நின்னைக் கண்டது என் நல்வினைப்பயன் என்றான். கொல்: அசைச் சொல்.

### மாசாத்துவான் மணிமேகலைக்குத் தன் வரலாறு கூறுதல்

### ௯௫ - ௧௦௨: தையல்.........கேளாய்

(இ - ள்.) தையல் கேள் நின் தாதையும் தாயும் செய்த தீவினையின் செழுநகர் கேடு உற துன்பு உற விளிந்தமை கேட்டு - தவம் செய்த தவமாகிய தையலே! யான் ஈங்கு வரும் காரணமுங் கேட்பாயாக! நின்னுடைய அன்புத் தந்தையும் தாயும் ஆகிய கோவலனும் கண்ணகியும் முற்பிறப்பில் செய்த தீவினை காரணமாக வளமிக்க மதுரை மாநகரம் தீக்கிரையாகி அரசிழந்து கெட்டொழிந்தும்படியும் யாமும் தாமும் பெரிதும் துன்புறும்படியும் இறந்த செய்தியைக் கேட்டு ஆற்றேனாய் அவலமுற்று; சுகதன் அன்பு கொள் அறத்திற்கு அருகனேன் ஆதலின் - இவ் உலக நிலையாமை முதலிய மெய்யறிவு பெற்று அவ்வறிவு காரணமாகப் புத்த பெருமானுடைய அன்பினை முதலாகக் கொண்ட அருளறத்திற்குத் தகுதி உடையேன் ஆயினமையின்; மனைத்திற வாழ்க்கையை மாயம் என்று உணர்ந்து - இல்லின்கண் இருந்து செய்யும் வாழ்க்கையின் இன்பம் வறும் பொய் என்பதனை என் பட்டறிவினாலேயே அறிந்துகொண்டு; செல்வமும் யாக்கையும் இனைத்தனையாயினும் நிலையா என்றே நிலைபெற உணர்ந்தே - இம்மை வாழ்க்கைக்கு இன்றியமையாதன என்று கருதப்படுகின்ற செல்வமும் உடம்பும் உயிர் முகந்து கொண்டுவந்த வினை அளவில் நிற்பன அன்றி அவ் வினை ஒழிந்தால் ஒரு நொடி அளவு பொழுதேனும் இவ்வுலகின்கண் நிலைத்திரா என்று நன்கு நெஞ்சத்தின்கண் உறுதியாக உணர்ந்து; மலையா அறத்தின் மாதவம் புரிந்தேன் - மாறுபாடில்லாத பௌத்த சமயங் கூறும் அறத்தை மேற்கொண்டு அந்நெறியில் பெரிய இத் தவத்தை மேற்கொண்டொழுகலானேன்; புரிந்த யான் இப் பூங்கொடி பெயர்ப் படூஉம் திருந்திய நல்நகர் சேர்ந்தது கேளாய் - அவ்வாறு ஒழுகிய யான் வஞ்சி என்னும் பூங்கொடியின் பெயரையுடைய அறத்தால் நன்கு திருந்திய அழகிய இந்த நகரத்தை எய்தற்குரிய காரணமும் இனிக் கூறுவேன் கேட்பாயாக என்றான் என்க.

(வி - ம்.) தையல்-அன்புடையோர் மகளிரை விளித்தற்கியன்றதோரின்சொல். தன்னினும் கோவலன் கண்ணகி இருவரும் மணிமேகலைக்கு அன்புரிமை மிக்கார் என்பது தோன்ற மகனும் மருகியும் என்னாது நின் தாதையும் தாயும் என்றான். மாசாத்துவான் பேரருளாளன் ஆதலின் தனது துன்பத்திற்குக் காரணம் தன் மகனும் மருகியும் இறந்தமையினும்

அவர் காரணமாகச் செழுநகர் கேடுற்றமை கேட்டதே முதன்மை உடைத்து என்பது தோன்றச் செழுநகர் கேடுற விளிந்தமை என்றான். இங்ஙனமே சிலப்பதிகாரத்தினும் மாசாத்துவானுடைய துறவறத்தைச் செங்குட்டுவனுக்கு அறிவிக்கின்ற மாடல மறையோன் கூற்றாக—

"மைந்தற் குற்றது மடந்தைக் குற்றதும்
செங்கோல் வேந்தற் குற்றதுங் கேட்டுக்
கோவலன் றாதை கொடுந்துய ரெய்தி
மாபெருந் தானமா வான்பொரு ளீத்தாங்
கிந்திர விகார மேழுடன் புக்காங்
கந்தர சாரிக ளாறைம் பதின்மர்
பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று
துறந்தோர் தம்முன் துறவி யெய்தவும்"

(உ௭ : அ௮ - க௯)

எனவரும் பகுதி ஒப்புநோக்கி உவத்தற்பாலதாம். சுகதன் - புத்தன். யான் இயல்பாகவே அன்புகொள் அறத்திற்கு எனினுமாம். அருகன்- அணுக்க மானவன். தகுதி உடையோன் எனினுமாம். மலையா அறம்- மாறுபடாத அறம் என்றது அருளறத்தை. என்னே?

"நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை"

(குறள் - உசஉ)

எனவரும் பொய்யா மொழியும் காண்க.

இனி, முன்பின் மலையா மங்கல மொழி என அவ்வறம் போற்றப் படுதலும் உணர்க, (மணி - ௩0 : உ௬௬). கொடி - வஞ்சி. தான் வருதற்கு இதுவும் ஒரு காரணம் என்பது தோன்ற, திருந்திய நன்னகர் என்றான்.

## இதுவுமது

### ௩0௫ - ௧௧௫ : குடக்கோ.........இருந்துழி

(இ - ள்.) குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை விடர்ச்சிலை பொறித்த வேந்தன் - முத்தமிழ் நாட்டினுள் வைத்து மேலை நாட்டு மன்னனும் சேரர்குடித் தோன்றலும் குட்ட நாட்டார் கோவாகிய பெருந்தகையும் வடவரை வென்று வானறேய் இமயத்தின்கண் தனது இலச்சினையாகிய வில்லினைப் பொறித்த வேந்தனும் ஆகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்; முன்னாள் துப்பு அடு செவ்வாய் துடி இடையாரொடும் இப்பொழில் புகுந்து ஆங்கு இருந்த எல்லையுள் - முற்காலத்தே ஒருநாள் பவளம் போன்ற சிவந்த வாயையும் உடுக்கை போன்ற இடையினையும் உடைய இளமகளிரோடும் விளையாடுதற் பொருட்டு இந்தப் பூம்பொழிலிலே புகுந்து ஆடி ஆங்கோரிடத்தே

இருந்த பொழுது; இலங்காதீவத்து சமனொளி என்னும் சிலம்பினை எய்தி வலங்கொண்டு மீளும் தரும சாரணர் தங்கிய குணந்தோர் - இலங்கை என்னும் தீவின்கண் புத்த பெருமான் திருவுரு அமைந்த 'சமனொளி' என்னும் பெயரையுடைய மலையினை அடைந்து அதனை வலஞ்செய்து வணங்கி மீள்பவரும் தரும சாரணரும் நிலைபெற்ற அருட்பண்புடையோரும்; ககனத்து கருமுகில் படலத்து இயங்குவோர் புரையோர் தாமும் - வானத்தில் கரிய முகில் குழாத்தினூடே வடதிசை நோக்கிச் செல்பவருமாகிய மேன்மையுடைய அத் துறவோர் தாமும்; அரைசற்கு அவ்வழி ஏது நிகழ்தலின் - அச் சேரமன்னனுக்கு அப்பொழுது ஆகூழ் நிகழ்தலாலே, இப் பூம்பொழில் இழிந்து கல் தலத்து இருந்துழி - அம் மன்னவன் தங்கியிருந்த இந்தப் பூம்பொழிலின்கண் வானத்தினின்றும் இறங்கிவந்து ஒரு கற்பாறையின் மேல் அமர்ந்திருந்த பொழுது என்க.

(வி - ம்.) குடக்கோவும் சேரலனும் பெருந்தகையும் ஆகிய வேந்தன் என்க. இவனை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என வரலாற்று நூலோர் கூறுவர். இவன் வரலாறு பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தில் காணப்படும். இவனைச் சோழன் (குளமுற்றத்துத் துஞ்சிய) கிள்ளிவளவன் வென்றான் எனக் கூறுங்கால் மாறோக்கத்து நப்பசலையார் இச் சேரனை—

"பொன்படு நெடுங்கோட் டிமையம் சூட்டியவேம விற்பொறி
மாண்வினை நெடுந்தேர் வானவன்" (புறநா. ௩௯)

என, பெருமிதம் படப் பேசுவர்; இளங்கோ 'விடர்ச்சிலை பொறித்த விறலோன்' என்று ஓதுவர். துப்பு - பவளம். துடி - உடுக்கை. சமனொளி என்பது மலையின் பெயர். தரும சாரணர் என்பவர் யாண்டும் சென்று மக்களுக்குப் புத்தர் அறத்தை அறிவுறுத்தும் தொண்டு பூண்ட துறவோர் ஆவர். குணம் என்றது அருள் மேனின்றது. வலங்கொண்டு மீளும் சாரணர் வடதிசை நோக்கிக் ககனத் தியங்குவோர் என்க. புரையோர் - துறவோருள்ளும் உயர்ந்தோர் என்பதுபட நின்றது. அத் துறவோர் இப் பூம்பொழிலில் இறங்க வேண்டும் என விரும்பி இறங்கினரிலர். அரசன் ஆகூழே அவரை இறங்கும்படி செய்தது என்பது கருத்து. கற்றலம் - கற்பாறையாகிய இடம்.

இதுவுமது

௧௧௩ - ௧௨௨: காவலன்.........அந்நாள்

(இ - ள்.) காவலன் முன் தவம் உடைமையின் முனிவரை விரும்பி ஏத்தி பங்கயச் சேவடி விளக்கி - அத்துறவோர்

வாவுணர்ந்த அச் சேரமன்னன்றானும் முற்பிறப்பிலே செய்த தவப்பயன் காரணமாக அம் முனிவர்களைப் பெரிதும் விரும்பிப் புகழ்ந்து வழிபாடு செய்து அம் முனிவருடைய தாமரை மலர் போன்ற சிவந்த அடிகளை நீரால் கழுவி; பான்மையின் அங்கு அவர்க்கு அறுசுவை நால்வகை அமிழ்தம் பாத்திரத்து அளித்து - சிறந்த பண்பினோடு அவ்விடத்தேயே அம் முனிவர்களுக்கு ஆறுவகைச் சுவையோடு கூடிய நால்வேறு வகைப்பட்ட உணவுகளையும் துறவோர்க்கு அளிக்கத்தகுந்த உண்கலத்திலே பெய்து கொடுத்து உண்பித்து; பல பல சிறப்பொடு வேந்து அவையாரொடும் ஏத்தினன் இறைஞ்சலில் - பின்னரும் அம் முனிவர்களுக்குப் பலப்பல சிறப்புகளையுஞ் செய்து அம் மன்னன் தன் அரசியல் சுற்றத்தாரோடும் கூடி வாழ்த்தி வணங்குதலாலே அம்முனிவர்களும்; இறைவன் செவி முதல் - அவ் வேந்தனுடைய செவியின்கண்; அறத்தகை முதல்வன் அருளிய - அறத்தின் திருவுருவமாகிய தமது சமய முதல்வன் புத்த பெருமான் திருவாய் மலர்ந்தருளிய; பிறப்பின் துன்பமும் பிறவா இன்பமும் வாய்மை இன்ப ஆர் அமுது - உயிர்களுக்குப் பிறப்பின்கண் எய்தும் துன்பத்தின இயல்பும் அவை பிறவாமை யுற்றபொழுது எய்தும் இன்பத்தின் இயல்பும் இவற்றிற்குரிய காரண காரியங்களின் இயல்பும் ஆகிய மெய்க்காட்சிகள் என்னும் இன்பமேயான பெறுதற்கரிய அறவமுதத்தை; துன்பம் நீங்கச் சொரியும் அந்நாள் - அறுதி காலமாகத் தொடர்ந்து வருகின்ற அம் மன்னவனுடைய துன்பமெல்லாம் நீங்கிப்போம்படி அம் முனிவர்கள் சொற்பொழிவு செய்யும் அந்த நாளிலே என்க.

(வி - ம்.) காவலன்: இமயவரம்பன். முனிகள்: தரும சாரணர். பான்மை பண்புடைமை. அறுசுவை நால்வகை அமிழ்தம் - கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு என்னும் ஆறுசுவையும் பொருந்தச் சமைத்த, உண்பனவும், தின்பனவும், நக்குனவனவும், பருகுவனவுமாகிய நால்வகை உணவு. பிறவா இன்பம் - பிறவாமையினால் எய்தும் வீட்டின்பம். அறத்தகை முதல்வன் என்றது புத்தனை. வாய்மை - நால்வகை உண்மைகள். அவையாவன:

"துன்பம் தோற்றம் பற்றே காரணம்
இன்பம் வீடே பற்றிலி காரணம்
ஒன்றிய வுரையே வாய்மை நான் காவது"

(மணிமே, ௩0 - ௧௮௬ - ௧௮௮)

என்பன.

இறைவன் - அரசன்.

## இதுவுமது

### ௧௨௩ - ௧௩௬: நின்பெரு.........இருந்தது

(இ - ள்.) நின்பெருந் தாதைக்கு ஒன்பது வழிமுறை முன்னோன் கோவலன் - உன்னுடைய பேரன்புசால் தந்தையாகிய கோவலனுக்கு ஒன்பது தலைமுறைக்கு முன்னம் நங்குலத்திலே கோவலன் என்பான் ஒருவன் வாழ்ந்திருந்தான், அவன்; மன்னவன் தனக்கு நீங்காக் காதல் பாங்கனாதலின் - அவ்வரசனுக்கு ஒருபொழுதும் ஒழியாத அன்புடைய தோழனுமாய் இருந்தமையால்; தாங்கா நல்அறம் தானும் கேட்டு - ஏற்றுக் கோடற்கரிய நன்மை மிக்க அவ்வறவுரைகளைத் தானும் ஆர்வத்துடன் கேட்டமையால் மெய்யுணர்வு பெற்று; முன்னோர் முறைமையில் படைத்ததை அன்றி தன்னான் இயன்ற பல கோடி தனம் - தன் முன்னோர்கள் அறநெறி நின்று ஈட்டி வைத்த பொருளை அல்லாமலும் தன்னால் ஈட்டப்பெற்ற பற்பல கோடியாகிய நிதியங்களையும்; எழுநாள் எல்லையுள் இரவலர்க்கு ஈத்து - ஒரு கிழமை முடிவதற்குள் வறியவர்க்கு வாரி வழங்கி விட்டு; தொழுதவம் புரிந்தோன் - உலகம் தொழுவதற்குக் காரணமான தவத்தை மேற்கொண்டவன்; சுகதற்கு வான் ஓங்கு சிமையத்து இயற்றிய வால் ஒளி சயித்தம் - புத்தனுக்கு வானுற உயர்ந்த மலை உச்சியில் எடுத்த வெள்ளிய ஒளியையுடைய திருக்கோயில்; ஈனோர்க்கு எல்லாம் இடர்கெட இயன்றது - இவ்வுலகத்தில் வாழும் மக்களுக்கெல்லாம் துன்பம் தீரும்படி தெய்வத்தன்மை உடையதாகத் திகழ்கின்றதாதலின்; கண்டு தொழுது ஏத்துங் காதலின் வந்து - அதனைக் கண்ணாரக் கண்டு தொழுது வாழ்த்த வேண்டும் என்றெழுந்த அன்பினாலே இந்நகரத்திற்கு வந்து மீண்டும் நம் மூதூருக்குச் செல்லக் கருதினேனாக அக்கருத்தினை அறிந்த; இத் தண்டாக் காட்சித் தவத்தோர் அருளி - இங்குறைகின்ற தடையில்லாத மெய்க் காட்சியையுடைய துறவோர்கள் என்பால் அருள் கூர்ந்து; காவிரிப்பட்டினம் கடல் கொளும் என்ற - நீ செல்லுதற்குக் கருதுகின்ற காவிரிப்பூம்பட்டினமானது கடலால் கொள்ளப்படும் என்றறிவுறுத்த; அத் தூ உரை கேட்டு துணிந்து இவண் இருந்தது - அம் முனிவருடைய வாய்மையேயாகிய அவ்வறிவுரையைக் கேட்டுத் தெளிந்தமையாலேயே யான் இந்நகரத்திலே இருப்பது என்றான் என்க.

(வி - ம்.) நமது மரபில் ஒன்பது தலைமுறைக்கு முன்னர் உன் தந்தை பெயருடன் ஒருவனிருந்தான்; அவன் அரசனுக்கு நண்பன். அரசன் அறம் கேட்குங்கால் தானுங் கேட்டு மெய்யுணர்வு பெற்று

இரவலர்க்கு ஈத்துத் தவம் புரிந்தான். அவன் மலை உச்சியில் புத்தனுக்கு ஒரு கோயில் எடுத்திருந்தான். அக் கோயில் இவ்வுலகத்தார் இடர் தீர்ப்ப தொன்றாய் இருந்தது. அதனைத் தொழ ஈண்டு வந்தேன், மீளுங்கால் தவத்தோர் காவிரிப்பூம் பட்டினம் கடல் கோட்படும் என்றனர். அதனைத் தெளிந்தமையே யான் இங்கிருத்தற்குக் காரணம் என்றான் என்க.

பெருந்தாதை - அன்பினால் பெரிய தாதை என்க. தாங்காத என்னும் பெயரெச்சத்திறு கெட்டது. முறைமை - அறநெறி. எழுநாள் எல்லை - என்பது ஓர் உலக வழக்கு. விரைந்து செய்தான் என்பது கருத்து. எழுநாள் எல்லையுள் என்னும் வழக்கு இப்பொழுதும் (ஒரு வாரத்திற்குள்) ஒரு கிழமைக்குள் என வழங்குதல் உணர்க. வால் ஒளிச் சயித்தம் என்றமையால் வெள்ளியாலியன்ற சயித்தம் எனக் கோடலுமாம். தண்டாக் காட்சி என்றது முக்காலமும் உணரும் மெய்க் காட்சியை. தூஉரை - மெய்யுரை.

### இதுவுமது

### கஅஎ - கசஎ: இன்னும்.........கேட்குவன்

(இ - ள்.) **நல்நெறி மாதே பூங்கொடி இன்னுங் கேளாய் - நல்லற நெறியிலே செல்லும் ஆற்றல் வாய்ந்த நங்கையே பூங்கொடி போலும் மெல்லியலோயே இன்னும் யான் கூறுவன் கேட்பாயாக; தீவினை உருப்ப சென்ற நின் தாதையும் முன்செய் தவப்பயத்தால் தேவரில் தோற்றி - முன்செய் தீவினை உருத்து வந்து தன்பயனை ஊட்டுதலாலே கொலை உண்டுபோன நின் தந்தையாகிய கோவலனும் முன் செய்த தவப்பயனால் போக பூமியில் தேவரில் ஒருவனாகத் தோன்றினானேனும் அப் பயன் முடிவுற்றபின்; ஆங்கு அத்தீவினை இன்னும் துய்த்து - அம் மதுரையிடத்தே ஊட்டிக் கழிந்த அத் தீவினையின் எச்சத்தை மீண்டும் இந்நிலவுலகத்தே பிறந்து துய்த்துக் கழித்த பின்னர்; முன் அவன் போதியின் நல்லறம் தாங்கிய தவத்தால் - முன்பு அக் கோவலன் மெய்யறிவினால் நல்ல அறங்களை மேற்கொண்டொழுகிய தவங்காரணமாக; தான் தவம் தாங்கி கபிலையம்பதியில் காதலி தன்னொடு காதன் நல்லறம் கேட்டு வீடு எய்தும் என்று - தானே அத் தவத்தை மேற்கொண்டு கபிலை நகரத்தில் தன்னை ஒருபொழுதும் பிரியாத காதலியாகிய கண்ணகியோடு கூடிப் புத்தனுடைய நல்லறங்களைக் கேட்டு வீட்டுலகம் புகுவான் என்னும்; அற்புதக் கிளவி அறிந்தோர் கூற - அற்புதமான மொழியை அறியும் திறம் படைத்த துறவோர் கூறுதலாலே; தோகை சொல் பயன் உணர்ந்தேன் - மயில் போல்வாய் அவர் கூறிய சொல்லின் பயன் வாய்மையேயாம் என்று உணர்ந்துள்ளேன்; யானும் அந்நாள் ஆங்கு அவன்**

அறநெறி கேட்குவன் - யானும் முனிவர் கூறிய அந்தக் காலத் திலே அக் கபில நகரத்தில் அப் புத்தர் கூறும் அறங் கேட்டு வீடெய்துவேன் காண் என்ருன் என்க.

(வி - ம்.) நன்னெறி மாதே என்றது அவளுடைய ஆற்றலைப் பாராட்டியபடியாம். தீவினை யுருப்பச் சென்ற நின்ருதை என்றது இறந்துபோன நின் தாதை என்றவாறு. முற்செய் தவப்பயத்தால் தேவரிற்ருேற்றி என மாறுக. ஆங்கு அத் தீவினை என்றது மதுரையில் உருத்துவந்து ஊட்டிய தீவினை யொழிய எஞ்சிய அத்திவினையைஇன்னும் நிலத்தில் பிறந்து துய்த்து என்க. பூங்கொடி: விளி, முன் அவன் என்று கண்ணழித்துக் கொள்க. இதனுற் கூறியது கோவலன் முன்னெரு பிறப்பில் புத்தன் போதியின் கீழ் இருந்து சொன்ன நல்லறம் கேட்டு அதனை மேற்கொண்டு ஒழுகிய தவப்பயன் காரணமாகத் தானே தவந் தாங்கி மீண்டும் இனியொரு பிறப்பில் காதலியோடு அக் கபில நகரத் தில் நாதன் நல்லறம் கேட்பன் என்றும் வீடெய்துவன் என்றும் அறி வுறுத்தபடியாம். புத்தர் காலந்தோறும் பிறந்து அறம் உரைத்த லுண்மையின் முன்னும் ஒரு புத்தன்பால் அறங்கேட்டவன் அதன் பயனுகப் பின்னும் இனித் தோன்றும் புத்தன்பால் அறங்கேட்டு வீடெய்துவன் என்பது கருத்தாகக் கொள்க. இவ்வுண்மையை—

"இறந்த காலத் தெண்ணில் புத்தர்களுஞ்
சிறந்தருள் கூர்ந்து திருவாய் மொழிந்தது
ஈரறு பொருளி னீந்தநெறி" (௩0 : ௧௪ - ௧௬)

என்பதனுனு மறிக.

இனி இப் பகுதிக்கு இக் கருத்துணராது கூறும் உரை முன்பின் முரணிய போலியுரையாதல் உணர்க.

"தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது" (குறள் - ௨௬௨)

என்பதுபற்றி முன் தாங்கிய தவத்தால் தான் தவம் தாங்கி என்ருர். இனி, கபிலையம்பதியில் பிறந்த நாதனுகிய புத்தனுடைய அறத்தைக் கேட்டு வீடெய்தும் எனக் கோடலுமாம். அற்புதக் கிளவி பின் நிகழ்வன வற்றை அறிந்து கூறும் கிளவி என்க. தோகை: விளி.

## இதுவுமது

### ௧௮௫ - ௧௯௪: நின்னது.........படர்ந்தனர்

(இ - ள்.) நின்னது தன்மை அ நெடுநிலை கந்தில் துன்னிய துவதிகன் உரையின் துணிந்தனை அன்றோ - இனி நினக்கு நிகழவிருக்கும் எதிர்கால நிகழ்ச்சியின் தன்மையை நீதானும் சம்பாபதியின் கோட்டத்தில் நின்ற அந்த நெடிய நிலையினையுடைய தூணில் உறைகின்ற துவதிகன்

என்னும் கடவுட் பாவை உனக்குரைத்தமையால் அறிந்துள்ளனை அல்லையோ? அங்ஙனம் அறிந்த செய்தியை எனக்கு; தவநெறி அறவணன் சாற்றக் கேட்டனன் - தவநெறி நின்றொழுகும் அறவணவடிகள் கூறக் கேட்டறிந்துளேன்; ஆங்கு அவன் தானும் நின் அறத்திற்கு ஏது பூங்கொடி கச்சிமா நகர் ஆதலின் - அவ்வறவண அடிகளார் நினது அறத்திற்கு ஏது நிகழ்ச்சிக்குரிய இடம் பூங்கொடி போல்வாய் அக் கச்சி மாநகரமே ஆதலின் அதனை முன்னரே உணர்ந்து; மற்று அம் மாநகர் மாதவன் பெயர்நாள் பொற்றொடி தாயரும் அப்பதிப் படர்ந்தனர் - அந்தக் கச்சிமா நகரத்திற்கு நின்பொருட்டுப் பெரிய தவத்தையுடைய அவ்வறவணவடிகளார் இந்நகரத்தினின்றும் அக் கச்சி மாநகரத்திற்குச் சென்ற காலத்தில் நின்னுடைய தாயராகிய மாதவியும் சுதமதியும் அவரோடு அக் கச்சி மாநகரத்திற்குச் சென்றனர் என்றான் என்க.

(வி - ம்.) துவதிகன் - சம்பாபதியின் கோட்டத்துக் கந்திற்பாவை. கந்திற்பாவை நினக்கு வருவதுரைத்ததனை அறவணன் சாற்ற யான் கேட்டேன் என்றவாறு. ஏது - ஏது நிகழ்ச்சி. அஃதாவது ஊழ்வினை உருத்து வந்து தன் பயனை ஊட்டும் நிகழ்ச்சி. நின் ஏது நிகழ்ச்சிக்கு இடமாகிய கச்சி நகரத்திற்கு அறவணன் நின் பொருட்டே சென்றனன் என்பது கருத்து. பொற்றொடி: விளி.

## மாசாத்துவான் மணிமேகலையை வேண்டுதல்

### கரு - கசுஉ : அன்னதை.........வணங்கி

(இ - ள்.) அன்னதை அன்றியும் அணி இழை கேளாய் - யான் உனக்குக் கூறிய அச் செய்தியை அல்லாமலும் யான் உனக்கு அறிவுறுத்த வேண்டிய செய்தியும் ஒன்றுளது, மகளிர்க்கெல்லாம் அணிகலன் போல்பவளே அதனையும் கூறுவேன் கேட்பாயாக, அஃதென்னையெனின்; - பொன் எயில் காஞ்சி நாடு கவின் அழிந்து - பொன் மதில் சூழ்ந்த காஞ்சி மாநகரமும் அதனைச் சூழ்ந்த நாடும் அழகு கெட்டு; மன் உயிர் மடிய மழை வளம் கரத்தலின் - அங்கு நிலைபெற்ற உயிர்கள் உணவின்றி இறந்தொழியும்படி மழையானது தான் செய்யும் வளத்தைச் செய்யாதொழிதலின்; அந்நகர் மாதவர்க்கு ஐயம் இடுவோர் இன்மையின் இந்நகர் எய்தினர் காணாய் - அம் மாநகரத்திலே துறவோர்க்கு உண்டி கொடுப்போர் இல்லாதொழிந்தமையின் அத் துறவோரெல்லாம் இடபொழுது இவ் வஞ்சி நகரத்தில் வந்து குழுமி இருக்கின்றனர்காண்; ஆருயிர் மருந்தே அ நாட்டு அகவயின் கார் எனத் தோன்றி காத்தல் நின்கடன் என - இவ்வாறு பசிப்பிணியுழந்து சாதலுறும் அரிய உயிரினங்

களுக்கு அமிழ்தத்தைப் போன்ற நீ இப்பொழுது அந்தக் காஞ்சி நாட்டகத்தில் முகில் போலத் தோன்றி அவற்றின் பசிப்பிணி அகற்றிக் காப்பது நினக்குக் கடமைகாண் என்று; அருந்தவன் அருள ஆயிழை வணங்கி - செய்தற்கரிய தவத்தை மேற்கொண்டவனாகிய அம் மாசாத்துவான் திருவாய்மலர்ந்தருள அது கேட்ட மணிமேகலை அவ் வேண்டுகோட் கிணங்கி அவனுடைய திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி விடை கொண்டவளாய் என்க.

(வி - ம்.) அணி இழை - அணி இழை போல்வோய் என்க. மாதர் குலத்திற் கெல்லாம் அணிகலன் போல விளங்குதலின் இவ்வாறு விளித்தான். காஞ்சி நாடு - காஞ்சி நகரத்தைத் தலை நகராகக் கொண்டமைந்த நாடு - அஃதாவது தொண்டை நாடு. இவ் வேண்டுகோளால் அவனது அருட்பண்பு விளக்கமாம். இவன் இல்லறத்தினும் வருசிறிர்க்கு ஆர்த்தும் இயல்புடையவனாய் இருந்தமை சிலப்பதிகாரத்தில் காணப்படும். துறவியான பின் இவன் அருள் எவ்வுயிர்மாட்டும் பரந்து பட்டுச் செல்லுதலை ஈண்டுணர்க. இவ்வாறு ஆக்க முறுவது உயிர்க்கியல்பு. இதனை, "அருளொடு புணர்ந்த அகற்சி" என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார். மாதவர்க்கும் ஐயம் இடுவோர் எனல் வேண்டிய சிறப்பும்மை தொக்கதெனக் கொண்டு அந்நகரின் வறுமை மிகுதி உணர்த்தினர் எனக் கோடலுமாம். ஆருயிர் மருந்தே என்று விளித்தான் இச் செயற்கரிய செயல் செய்தற்குரிய ஆற்றலும் கருவியும் நின்பால் உள என்றுணர்த்துதற்கு. பௌத்தத்துறவிகளுக்கு இதுவே தலையாய கடன் என்பான் நின் கடன் என்றான். கைமாறு வேண்டா கடப்பாடு என்பவாகலின் அவ்வாறாகிய கார் எனத் தோன்றி என்றான். மழை கரந்தமையான் உண்டான இத் துன்பத்தைத் துடைத்தற்கு நின்னாலேயே இயலும் என்பான், கார் எனத் தோன்றி என்றான் எனினுமாம். இதனால் போந்தது, உலகு புரப்பதற்கு மாரி மட்டும் உளதன்று; நீயும் உளை எனப் புகழ்தல் என்க. ஆயிழை - அதற் குடன்பட்டு வணங்கி என்க.

## மணிமேகலை வஞ்சி நகரத்தினின்றும் வானத்தியங்கிக் காஞ்சி மாநகரத்தை எய்துதல்

கசுரு - களசு : திருந்திய..........எய்தலும்

(இ - ள்.) திருந்திய பாத்திரம் செங்கையின் ஏந்தி - அழகிய அமுதசுரபி என்னும் பாத்திரத்தை அன்னம் வழங்கிச் சிவந்துள்ள தன் கையில் ஏந்திக் கொண்டு; கொடி மதில் மூதூர் குடக்கண் நின்று ஓங்கி வடதிசை மருங்கின் வானத்து இயங்கி - வெற்றிக் கொடி உயர்த்தப்பட்ட மதிலையுடைய பழைய நகரமாகிய வஞ்சி நகரத்தின் மேற்றிசையில் நின்றும் வானின்கண் எழுந்து அந்நகரின் வடதிசைப் பக்கலிலே அவ் வானத்தின் வழியாக வலமாகச் சென்று; தேவர் கோமான் காவல் மாநகர்

மண்மிசைக் கிடந்தென வளந்தலை மயங்கிய - தேவேந்திரனுடைய காவலமைந்த பெரிய நகரமாகிய அமராவதி நிலத்தின்கண் இழிந்து எல்லா வளங்களும் தன்பாலே பொருந்தும்படி பண்டு கிடந்த; பொன் நகர் வறிதா புல் என்று ஆயது கண்டு உளங் கசிந்த ஒள் தொடி நங்கை - அழகிய அக் காஞ்சி மாநகரம் மழை வளம் கரத்தலின் பாழ்பட்டதாய்க் காட்சிக் கின்னாததாய்ப் புற்கென்று மாறியதனைப் பார்த்து இரக்கத்தால் உள்ளம் உருகிய ஒளி உடைய பொன் வளையல் அணிதற்கியன்ற பெண்ணினத்தில் தலைசிறந்த அம் மணிமேகலை; பொன் கொடி மூதூர் புரிசை வலங்கொண்டு - அழகிய கொடியாடுகின்ற பழைய நகரமாகிய அத் தலைநகரத்தின் மதிலையும் வலஞ் செய்து; நடுநகர் எல்லை கண்ணினள் இழிந்து - அந் நகரத்தின் நடுவிடத்தின் நேராக எய்தி நிலத்தில் இறங்கி அவ்விடத்தினின்றும்; கழல்தொடு கிள்ளி துணை இளங் கிள்ளி - வீரக்கழல் கட்டிய சோழ மன்னனாகிய கிள்ளி என்பானுடைய தம்பி இளங்கிள்ளி என்பவன்; செம்பொன் மாசினை திருமணி பாசடை பைம்பூம் போதி பகவற்கு இயற்றிய - சிவந்த பொன் மயமான பெரிய கிளைகளையும் அழகிய மரகதமணி போன்ற நிறமுடைய பசிய இலைகளையும் புதிய மலர்களையும் உடைய அரசமரத்தின் கீழிருந்து அறங்கூறிய புத்தபெருமானுக்கு எடுத்த; சேதியம் தொழுது தென் மேற்காக தாது அணி பூம்பொழில் தான் சென்று எய்தலும் - திருக்கோவிலையும் வலம் வந்து கைகூப்பித் தொழுது வணங்கி அக் கோயிலினின்றும் தென் மேற்றிசையில் சென்று ஆங்குள்ள பூந்துகள் உதிர்த்து நிலத்தை அழகு செய்யும் பூம்பொழிலின்கண் புகுந்து உறையா நிற்பவும்; என்க.

(வி - ம்.) பாத்திரம் - அமுதசுரபி. காஞ்சி நகரத்தில் பசியால் மடியும் மன்னுயிரை ஓம்புதற்கு அதுவே கருவியாகலின் அதனைத் திருந்திய பாத்திரம் என விதந்தார். அன்னம் வழங்கிச் சிவந்த கை என்க. மூதூர் - வஞ்சி நகரம். குடக்கண் - மேற்குப் பக்கம். நகரத்தின் மேற்குப் பக்கத்திலிருந்து வானத்தில் உயர்ந்து அக நகர்க்கு நேரே வான்வழி இயங்காமல் வடக்கே சென்று அந்நகரத்தை வலம் செய்து வான் வழியே இயங்கினள் என்றவாறு. என்னை? அவ் வஞ்சி, கற்புத் தெய்வத்தின் திருக்கோயிலையும் புத்த சைத்தியத்தையும் அறம் பகர்வோர் உறையும் பள்ளியையும் இன்னோரன்ன சிறந்த இடங்களைத் தன் பால் கொண்டிருத்தலான் அங்ஙனம் வலம் செய்து போதல் வேண்டிற்று என்க. 'தேவர்கோமான்.........பொன்னகர்' என்னுந்துணையும் மணிமேகலை கூற்றாக அந்நகரம் மழைவளம் கரத்தற்கு முன்பிருந்த நிலைமையை நூலாசிரியர் நம்மனோர்க்கு அறிவுறுத்த படியாம். இதனோடு,

"ஆயிரங் கண்ணோ னருங்கலச் செப்பு
வாய்திறந் தன்ன மதிலக வரைப்பின்"

(சிலப் - கச : கஅ - சுக)

எனவும்,

"அளந்து கடையறியா வளங்கெழு தாரமொடு
புத்தே ளுலகம் கவினிக் காண்வர
மிக்குப்புகழ் எய்திய பெரும்பெயர் மதுரை"

(மதுரை - கா : சுகஎ - கக)

எனவும் வரும் பிறசான்றோர் கூற்றுகள் ஒப்புநோக்கற் பாலன. மாசாத்துவான் கூறியபடியே அப் பொன்னகர் வறிதாப் புல்லென்றுயது கண்டு மணிமேகலை உளங் கசிந்தனள் என்க. அவளது அருளறத்தின் பெருமை அக்கசிவினால் அறியப்படும். அந் நகரமும் புத்த சைத்தியமும் பிறவும் தன்பாற் கொண்டுள்ளமையின் அதனையும் வலங்கொண்டு அக நகரம் புகுந்தனள் என்பது கருத்து. துணை - தம்பி. கிள்ளி - சோழ மன்னன் ஒருவன். இளங்கிள்ளி அவன் தம்பி. "செம்பொன்...போதி" எனவரும் இதனோடு—"சுடர் மரகதப் பாசடைப், பசும்பொன் மாச் சினை விசும்பகம் புதைக்கும், போதி" (வீர. யாப்பு - கக, மேற்கோள்) எனவரும் செய்யுட்பகுதியை ஒப்புநோக்குக. போதிப் பகவன் என்றது புத்தனை. சேதியம் - சைத்தியம்; கோயில்.

### மணிமேகலை வருகையைக் கஞ்சுகன் கூறக்கேட்ட இளங்கிள்ளி மகிழ்ந்து அவளைக் காண விழைதலும் கருதுதலும்

### கஎஎ - கஅஎ : வையம்.........சென்று

(இ - ள்.) கஞ்சுகன் வையங் காவலன் தன்பால் சென்று கைதொழுது இறைஞ்சி உரைப்போன் - மணிமேகலையின் வருகையை யுணர்ந்த கஞ்சுகமகன் ஒருவன் உலகங்காக்கும் மன்னவனாகிய இளங்கிள்ளியின்பால் விரைந்து சென்று கை குவித்துத் தொழுது தான் வந்த காரியம் கூறுபவன் வேந்தர் பெருமானே; கோவலன் மடந்தை குணவதம் புரிந்தோள் - கோவலனுடைய மகளும் பௌத்தத் துறவோர் மேற்கோடற்குரிய அருளறமாகிய குண விரதத்தை மேற்கொண்டொழுகுபவளும் நாவலந் தீவில் தான் நனிமிக்கோள் - இந்த நாவலந் தீவின்கண் இதுகாறும் தோன்றிய மகளிருள் வைத்துத் தனக்குவமையாவார் யாருமில்லாத சிறப்புடையவளும் ஆகிய மணிமேகலை இப்பொழுது; மாமழை போல் அங்கையின் ஏந்திய அமுதசுரபியொடு தங்காது இப் பதி தரும தவ வனத்தே வந்து தோன்றினள் என - இவ் வற்கடக்காலத்தில் கரிய மழை முகில் வந்தாற் போலத் தனது அகங்கையில் ஏந்திய அமுதசுரபி யென்னும் அத் தெய்வத்தன்மை பொருந்திய பாத்திரத்தோடு

வேறிறவ்விடத்தும் தங்கியிராமல் இக் காஞ்சிமாநகரத்தின்கண் அறங்கேட்கும் தவவனமாகிய பூம்பொழிலின்கண் தானே வந்து புகுவாளாயினள் என்று பெரிதும் மகிழ்ந்து அறிவிப்ப; மன்னனும் விரும்பி கந்திற்பாவை கட்டுரை எல்லாம் வாய்த்தின்று என வந்தித்து ஏத்தி - அது கேட்ட வேந்தனும் அவள் வரவினை மிகவும் விரும்பி என் திறத்திலே கந்திற்பாவை கூறிய பொருள் பொதிந்த மொழியெல்லாம் வாய்மையாக நிகழ்கின்றன என்று அக் கந்திற்பாவையை வாழ்த்திப் புகழ்ந்து பாராட்டி; மந்திரச் சுற்றமொடு ஆய்வளை நல்லாள் தன் உழைச்சென்று - தன் அமைச்சராகிய அரசியல் சுற்றஞ்சூழ அம் மணிமேகலையைக் காணத் தானே அவள் இருக்கும் இடத்தே சென்று வாழ்த்திய பின்னர் என்க.

(வி - ம்.) வையங்காவலன் என்றது சோழன் இளங்கிள்ளியை. கஞ்சுகன்-மெய்ப்பை (சட்டை) இட்ட ஒருவகை அரசியல் பணியாளன்; தூதனுமாம். மடந்தை ஈண்டுப் பருவம் குறியாது மகள் என்னும் முறைப் பெயராய் நின்றது. குணவதம் - அருளுடைமை காரணமாக மேற்கொள்ளும் விரதங்கள். அவை கொல்லாமை, இன்னா செய்யாமை, ஊனுண்ணாமை முதலியன. வதம் - விரதம். நாவலந் தீவு - கன்னியா குமரிக்கும் இமய மலைக்கும் இடையே கிடக்கும் நிலப்பரப்பு. நனிமிக் கோள்: ஒரு பொருள் பன்மொழி. அங்கை - அகங்கை (உள்ளங்கை). பலருக்கு உண்டி வழங்கும் அமுத சுரபியைத் தனக்கு மட்டும் பயன் படுத்திக் கொண்டு தனித்துத் தங்காமல் எனக் கோடலுமாம். பதி - நகரம். தருமதவ வனம்-அறங் கேட்டற்கும் தவம் புரிதற்கும் தகுந்த பொழில். வந்து தோன்றினள் என்றது, இப்பதி செய்த தவத்தால் தானே வந்து தோன்றினள் என்பதுபட நின்றது. மாமழை போல் என்றான் நம் பசிப் பிணிக்கு மருந்தாக வந்தாள் என்பதும் கைம்மாறு கருதாது வந்தாள் என்பதும் தோன்ற. மன்னனும் விரும்பி என்புழி கஞ்சுகனே அன்றித் தானும் விரும்பினன் என இறந்தது தழீஇ நிற்றலின் உம்மை - எச்ச உம்மை. கந்திற்பாவையை வந்தித் தேத்தி என்க. மணிமேகலையின் வரவினை யாம் பெரிதும் விரும்புகின்றேம் என்பதறிவித்தற்கு மந்திரச் சுற்றமொடு சென்றான் என்றவாறு. வாழ்த்திப் பின் என அறுத்துக் கூறிக்கொள்க.

## மன்னவன் மணிமேகலைக்குப் புத்த பீடிகையின் வரலாறு கூறி அதனைக் காட்டுதல்

கஅ௧ - கக௯: செங்கோல்.........பலவால்

(இ - ள்.) நலத்தகை நல்லாய் - நன்மையான பெருந் தகைமையுடைய மாதர் திலகமே!; செங்கோல் கோடியோ

செய்தவம் பிழைத்தோ கொங்கு அவிழ் குழலார் கற்புக் குறைபட்டோ - எனது செங்கோல் யான் அறியாமலே வளைந் தொழிந்ததோ? அன்றி மாதவர் தாம் செய்யுந் தவ ஒழுக்கம் பிழைபட்டொழிந்ததோ அன்றி நறுமணம் பரப்புகின்ற கூந்தலையுடைய குலமகளிரின் கற்பொழுக்கம் குறை பட்டொழிந் ததோ; அறியேன் நன்னாடு எல்லாம் அலத்தற்காலை ஆகியது அறியேன் - காரணம் அறிகின்றிலேன் பண்டு நன்னாடாய் இருந்த இத் தொண்டை நாடு முழுவதும் இப்பொழுது வறுமையால் மன்னுயிர் வருந்தும் வற்கடக் காலமுடையதாக மாறிவிட்டது, இவ்வல்லலை அகற்றுதற்கு வழியும் அறியேனும்; மயங்குவேன் முன்னர் ஓர் மாதெய்வம் தோன்றி உறங்காது ஒழி நின் உயர்தவத்தால் ஓர் காரிகை தோன்றும் - நெஞ்சம் மயங்குகின்ற என் கண் முன்னே ஒரு சிறந்த தெய்வம் எளிவந்து தோன்றி அரசே இங்ஙனம் வருந்தாதொழி, முன்பு நீ செய்த உயர்ந்த தவப்பயனாக ஒரு தவமகள் இங்குத் தானே வந்தெய்துவாள்; அவள் பெரும் கடிஞையின் ஆருயிர் மருந்தால் அகல் நிலம் உய்யும் - அவள் அங்கையில் ஏந்திவரும் பெரிய பிச்சைப் பாத்திரத்தில் சுரக்கின்ற உணவினால் அகன்ற உனது நாட்டிலுள்ள உயிரினம் எல்லாம் உய்யுங்காண்! மேலும்; ஆங்கு அவள் அருளால் அமரர்கோன் ஏவலின் தாங்கா மாரியும் தான் நனிபொழியும் - அப்பொழுது அவள் ஆற்றுகின்ற அருளறத்தின் பயனாக அமரர் கோமானாகிய இந்திரன் ஏவுதலாலே நினது நாடு தாங்குதற்கியலாதபடி மழை தானும் மிகுதியாகப் பெய்வதாம்; அன்னாள் இந்த அகநகர் புகுந்த பின்னாள் நிகழும் பேர் அறம் பலவால் - அத் தவமகள் இக் காஞ்சி மாநகரத்தின் உள்ளே புகுந்த பின்னர் வருகின்ற நாள்களிலே நிகழவிருக்கின்ற பெரிய அறச்செயல்களும் மிகப் பலவாம் எனவும் என்க.

(வீ - ந.) "கோல்நிலை திரிந்திடிற் கோள்நிலை திரியும்
கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயி ரென்னும் தகுதியின் றாகும்"
(எ : அ - ௧௨)

என முன்னும் வந்தமை உணர்க. அறியேன் என்பதனை முன்னும் கூட்டுக. மயங்குதல் - திகைத்தல். அருளுடைமை பற்றி மாதெய்வம் என்றான்; உண்டி சுரத்தல் பற்றிப் பெருங்கடிஞை என்றவாறு. ஆருயிர் மருந்து - உணவு. அகனிலம்: அன்மொழித்தொகை; உயிர்கள் என்க. அமரர்கோன் - இந்திரன். அன்னாள் - அத் தவ மகள்.

இதுவுமது

உ௦௦ - உக௦ : கார்வறம்.........இதுவேன

(இ - ள்.) கார்வறங் கூரினும் நீர்வறங் கூராது - அக்காலத்தே மழை பெய்யாதொழியினும் யாறு முதலியவற்றில் நீர்ப்பெருக்கு வற்ருது; பாரக விதியின் பண்டையோர் இழைத்த கோமுகி என்னும் கொழுநீர் இலஞ்சியொடு மாமணிபல்லவத் தீங்கு வந்தது என - மேலும் அத் தெய்வம் எம்மை நோக்கி நீவிர் இந் நிலவுலகத்தில் அமைந்த சிற்பவிதியின்படி முன்னோர் இயற்றிய கோமுகி என்னும் மிக்க நீரினையுடைய பொய்கையோடே சிறந்த மணிபல்லவத்தீவே இந்நகரத்திற்கு வந்துள்ளது என்று வியக்கும்படி; பொய்கையும் பொழிலும் புனைமின் என்று அறைந்து அத் தெய்வதம் போயபின் யாம் செய்து அமைத்தது இ இடம் என்று அ இடம் காட்ட - பொய்கையும் பொழிலும் உண்டாக்குங்கள் என்று கூறிய அத் தெய்வம் மறைந்துபோன பின்னர் யாங்களும் அத் தெய்வம் கூறியவாறே உண்டாக்கி வைத்தது இவ்விடத்தே என்று கூறி அரசன் மணிமேகலையை அழைத்துப்போய் அவ்விடத்தைக் காட்டுதலாலே; அத் தீவகம் போன்ற கானகம் பொருந்தி கண்டு உளம் சிறந்த காரிகை நல்லாள் - அம் மணிபல்லவத்தீவின்கண் அமைந்த பொழிலையே ஒத்த அப் பூம்பொழிலின் ஊடே புகுந்து அங்கமைந்த பொய்கையையும் கண்டமையாலே உளம் மகிழ்ந்த அம் மணிமேகலை அரசனை நோக்கி அங்கு; பண்டை எம் பிறப்பினை பான்மையின் காட்டிய அப் பீடிகை இது என - அம் மணிபல்லவத்தின்கண் எம்முடைய பழம்பிறப்பினைப் பண்போடு காட்டிய அந்தப் புத்த பீடிகையின் தன்மை இத்தகையது என்று கூறுதலாலே என்க.

(வி - ம்.) கார் - முகில். பாரக விதி என்றது மணிபல்லவத்தில் கோமுகி முதலியன வானவர் விதியில் அமைக்கப்பட்டன ஆகலின் நீயிர் அங்ஙனம் செய்யமாட்டாமையின் பாரக விதியினாலே செய்திடுக என்றறிவித்தற்பொருட்டு. புனைமின் என்றது அரசனுக்குரிய அமைச்சர் முதலியோரையும் உளப்படுத்திக் கூறியபடியாம். அத் தீவகம்-அம் மணிபல்லவம். அங்கப் பீடிகை இது - அம் மணிபல்லவத்தில் யான் கண்ட புத்த பீடிகையின் இலக்கணம் உடையது இது என்றவாறு. எனவே அவ்வாறு இங்கும் ஒரு பீடிகை செய்மின் எனக் குறிப்பினால் அறிவித்தவாறாயிற்று. அப் பீடிகையின் இலக்கணம் வருமாறு—

"விரிந்திலங் கவிரொளி சிறந்துகதிர் பரப்பி
உரைபெறு மும்முழம் நிலமிசை ஓங்கித்
திசைதொறும் ஒன்பான் முழநில மகன்று

விதிமா ணுடியின் வட்டங் குயின்று
பதும சதுர மீமிசை விளங்கி
அறவோற் கமைந்த ஆசனம்''— (அ: சஅ - சக)

என்பதாம்.

### கிள்ளிவளவன் பீடிகையும் கோயிலும் சமைத்து விழவும் சிறப்பும் எடுத்தல்

உ௬௦ - உ௬௬: அறவோன்.........ஏத்தி

(இ - ள்.) அறவோன் பங்கயப் பீடிகை பான்மையின் வகுத்து - அதுகேட்டு அறவாழி அந்தணனாகிய புத்த பெருமானுடைய செந்தாமரை மலர் போன்ற திருவடிச் சுவடுகளை உடைய பீடிகையை அவ்விலக்கண முறைமையின் இயற்றி; தீவதிலகையும் திருமணிமேகலா மாபெருந் தெய்வமும் வந்தித்து ஏத்துதற்கு ஒத்த கோயில் - மணிபல்லவத்தில் உறைகின்ற தீவ திலகை என்னும் தெய்வமும் திருமகளை ஒத்த மணிமேகலை என்னும் மிகவும் பெரிய தெய்வந்தானும் வணங்கித் தொழுது வாழ்த்துதற்குப் பொருந்திய திருக்கோயிலும்; உளத்தகப் புனைந்து விழவும் சிறப்பும் வேந்தன் இயற்ற - மணிமேகலை கருத்திற்கேற்ப இயற்றி ஆங்குப் புத்த பெருமானுக்கு நாள் விழாவும் சிறப்பு விழாவும் அவ் வேந்தன் நிகழ்த்துதலானே; தொழுதகை மாதர் தொழுதனள் ஏத்தி - மக்களும் தேவரும் முனிவரும் பிறரும் தொழத்தகுந்த பெருந்தகைப் பெண்ணாகிய மணிமேகலைதானும் வலம்வந்து அப் பீடிகையினிடத்தே கிடந்த புத்தருடைய திருவடித் தாமரைகளைக் கைகூப்பித் தொழுது வணங்கி வாழ்த்திய பின்னர் என்க.

(வி - ம்.) அறவோன் - புத்தன். பங்கயப் பீடிகை - பங்கயம் போன்ற திருவடிச் சுவடுகள் பதித்த பீடம். பான்மை - மணிமேகலை கூறிய இல்க்கணம். இம் மணிமேகலையின் வேறுபடுத்துதற்கு முன்னும் பின்னும் அடை புணர்த்துத் திருமணிமேகலா மாபெரும் தெய்வம் எனல் வேண்டிற்று. மணிமேகலையின் உளந்தகப் புனைந்து என்க. விழவும் சிறப்பும் - நித்தல் விழவும் சிறப்பு விழவும். மாதர் : மணிமேகலை.

### மணிமேகலை உண்டி வழங்குதல்

உ௬௭ - உஉ௭: பங்கய.........ஈண்டி

(இ - ள்.) பங்கயப்பீடிகை அங்கையின் ஏந்திய பசிப்பிணி மருந்தெனும் அமுதசுரபியை வைத்து நின்று - தொடக்கத்தே

புத்தருடைய திருவடித்தாமரைச் சுவடுகிடந்த அப்பீடிகையின் மேல் தன் அகங்கையின்கண் ஏந்தியிருந்த உயிர்களை வருத்தும் பசிப்பிணிக்கு மருந்தென்று போற்றப்படுகின்ற அமுதசுரபியை வைத்துப் பின்னர் அதன் பக்கலிலே நின்று; எல்லா உயிரும் வருக என - நாற்றிசையினும் வாழும் எல்லா உயிர்களும் உண்க வருக என்று அன்புடன் அழைக்கும்; பைத்து அரவு அல்குல் பாவை தன் கிளவியின் - அரவின் படம் போன்ற அல்குலை உடைய ஓவியப்பாவைபோல்வாளாகிய அம் மணிமேகலையினுடைய அன்பு மொழியைக் கேட்டு; மொய்த்த மூஅறு பாடை மாக்களின் காணார் கேளார் கால்முடம் ஆனோர் பேணுமாக்கள் பேசார் பிணித்தோர் படிவ நோன்பியர் - அவ்விடத்தே வந்து குழுமிய பதினெட்டு மொழிகள் வழங்கும் நாடுகளிலே பிறந்தமையால் வேறு வேறு மொழி பேசுகின்ற அம் மக்களும் அம் மக்கள் குழுவினுள் வைத்துக் குருடரும் செவிடரும் கால் முடமாயினோரும் பேணுவார் யாரும் இல்லாதவரும் வாய் பேசாத ஊமரும் நோயால் பிணிக்கப்பட்டோரும் தவவேடமும் நோன்பும் உடையோரும்; பசி நோய் உற்றோர் மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும் பன்னூறு ஆயிரம் விலங்கின் தொகுதியும் மன் உயிர் அடங்கலும் வந்து ஒருங்கு ஈண்டி - ஆனைத்தீ என்னும் பசி நோயால் பற்றப்பட்டவரும் சோம்பலால் வறுமையுற்ற மாக்களும் ஆகிய எல்லா மக்களும் பல நூறாயிரம் வகைப்பட்ட விலங்குக் கூட்டமும் பிறவுமாகிய உடலொடு நிலைபெற்ற இயங்கியல் உயிர்கள் முழுவதும் அவ்விடத்தே வந்து ஒருங்கே கூடா நிற்ப என்க.

(வி - ம்.) பாவை: மணிமேகலை. மூஅறு பாடை - பதினெட்டு வகை மொழி. அவை நாவலந் தீவில் ஆரியம் முதலாக அருந்தமிழ் ஈறுக அமைந்த பதினெட்டு வகை மொழிகள். பாடை - (பாஷை) மொழி. பேணுமாக்கள் - பேணத்தகுந்தவர் இல்லாத எளியோர். பிணித்தோர் மடிநல் கூர்ந்த என்பதற்கு மடியை உடை என்று கொண்டு மடிநல் கூர்ந்த மாக்கள் - உடையின்றித் துன்பம் எய்திய மக்கள் என்று உரை கூறி விளக்கத்தில் மடிமையால் வறுமையுறுவோரை அருளுவது மடிமையாகிய தீவினையை வளர்க்கும் செய்கையால் அறமாகா தொழிதலின் சோம்புதலால் வறுமையுற்ற மாக்கள் என்றல் பொருந்தாமை அறிக; என்று விளக்குவாரும் உளர். இவருடைய இவ்வுரையை நல்லுரை என்று கொள்வார் தம்பால் வரும் வறுமையாளரை எல்லாம் நன்கு ஆராய்ந்துணர்ந்து அவர் வறுமை மடியால் வந்தது அன்று என்று நன்கு தெரிந்து கொண்ட பின்னரே ஏதேனும் ஒரு பிடி சோறிடுவதாயினும் இடுவாராக. இவ்வுரை போலி என்பது எமது கருத்து. மேலும் மணிமேகலை அமுதசுரபியில் உணவு சுரப்பதல்லது உடைகளும் தோன்றும் என்று கூறப்படாமையின் உடையின்றித் துன்பம் எய்திய மக்கள் வந்தமை என்பது பொருந்தாமை உணர்க. ஈண்டி - ஈண்ட.

இதுவுமது

உஉடு - உகூ௪: அருந்தி.........காலை

(இ - ள்.) அருந்தியோர்க்கு எல்லாம் ஆருயிர் மருந்தாய்-ஏற்று உண்டோர் எல்லாருக்கும் பெறுதற்கரிய உயிரைப் பிணி தீர்த்து வளர்க்கின்ற மருந்தாய்; பெருந்தவர் கைபெய் பிச்சையின் பயனும் நீரும் நிலமும் காலமும் கருவியும் சீர்பெற வித்திய வித்தின் விளைவும் பெருகியது என்ன - பெரிய தவ ஒழுக்கமுடையோர் கையின்கண் பெய்யப்பட்ட பிச்சையின் பயனும் நீர் நிலம் காலம் கருவி என்னும் இவை குறைவின்றிச் சேர்த்தவிடத்தே விதைக்கப்பட்ட வித்தினது விளைவும் பன்மடங்கு பெருகினாற் போல; வசி பெருவளம் சுரப்ப தொழில் உதவி வளம் தந்தது என - மழையானது உலகத்தில் மிக வளம் பெருகும்படி தனது பெய்தல் தொழிலைச் செய்து தனது வளமாகிய நீரை வழங்கினாற் போலவும் நாளுக்குநாள் மிகுதியாக உணவினை வழங்கி உயிர்களின்; பசிப்பிணி தீர்த்த பாவையை ஏத்திச் செல்லுங்காலை - பசியாகிய துன்பத்தைத் தீர்த்தவளாகிய அம் மணிமேகலையை அவ் உயிர்கள் கைதொழுது ஏத்தாநிற்ப இங்ஙனம் நிகழும் காலத்தே என்க.

(வி - ம்.) அமுத சுரபியில் சுரக்கின்ற உணவு உயிரின் சாவினைத் தடுக்கும் மருந்தாதலோடன்றிப் பெரியோர்க்கு ஈந்த தானத்தின் பயன் போலவும் நீர் முதலியவற்றால் சேர்த்த விடத்தே விதைத்த விளைவு போலவும் அவ்வுயிர்களுக்குப் பெரிதும் ஆக்கமும் தந்தது. அவை அறம் பொருள் இன்பம் வீடு என்பன என்க. பாவையை அவ்வுயிர்கள் ஏத்தி என்க. ஏத்தி என்னும் எச்சத்தை ஏத்த எனத் திருத்திக் கொள்க.

## மணிமேகலை இருக்குமிடத்திற்கு அறவண அடிகளும் மாதவியும் சுதமதியும் வருதல்

உகூடு - உகூகூ: தாயர்..........வணங்கி

(இ - ள்.) தாயர் தம்முடன் அல்லவை கடிந்த அறவண அடிகளும்-மணிமேகலை காணுதற்கு அனையாகிய மாதவியும் சுதமதியும் ஆகிய தாயர் இருவரோடும் நல்லறம் அல்லாதவற்றையெல்லாம் துவரத் துடைத்த அறவண அடிகளாரும்; மல்லல் மூதூர் மன்னுயிர் முதல்வி நல்அறச்சாலை நண்ணினர் சேறலும் - வளம்மிக்க பழையதாகிய காஞ்சி மாநகரத்தின்கண் மணிமேகலை வரவினையும் செயலையும் கேள்வியுற்று உடம்போடு நிலை பெற்றுள்ள உயிர்களுக்கெல்லாம் அந் நிலைபேற்றிற்குக் காரணமாய் இருக்கின்ற அம் மணிமேகலையின் அருள் அறம்

நிகழுகின்ற அக் கோட்டத்தை அணுகிச் செல்லா நிற்ப அவர் வரவு கண்ட அம் மணிமேகலை தானும்; சென்று அவர் தம்மைத் திருவடி வணங்கி - எதிரே சென்று வரவேற்று அவர்களுடைய அழகிய அடிகளிலே . விழுந்து வணங்கி அழைத்து வந்து என்க.

(வி - ம்.) அல்லவை - அறமல்லாதவை. மணிமேகலை வருகையின் பின் அந் நாட்டில் மழை வளமும் உண்டாயது என்பது தோன்ற மல்லன் மூதூர் என்றார். நல்லறம் என்றது உண்டி வழங்குதலை. முதல்வி - காரணமானவள். நண்ணினர் : முற்றெச்சம். சேறல் - செல்லுதல். சென்று என்றது எதிர்சென்று என்றவாறு. அவர் - மூவரையும்.

### மணிமேகலை அம் மூவருக்கும் உணவு முதலியன கொடுத்து மனமகிழ்ந்து வணங்கி உண்மை உருவம் கொள்ளல்

௨௪௦ - ௨௪௩ : நன்றேன.........கலையேன்

**(இ - ள்.) நன்று என விரும்பி - தான் செய்த தவமும் நன்றேயாயிற்று என்று கருதி ஆர்வத்தோடு அவர்களுடைய; நல்லடி கழுவி ஆசனத்து ஏற்றி - நலந்தரும் திருவடிகளை நீரால் கழுவித் தவத்தோர்க்கியன்ற இருக்கைகளை ஈந்து அவற்றின் மேல் இருப்பித்து; பொழுதினில் அறுசுவை நால்வகை போனகம் ஏந்தி-உண்ணுதற்கேற்ற காலம் அறிந்து அம் மூவர்க்கும் தனது அமுதசுரபியிற் சுரந்த ஆறு வகைப்பட்ட சுவையமை உடைய நான்கு வகையாக உண்ணுதற்கியன்ற உணவுகளையும் எடுத்து ஊட்டி; கொண்டபின் பாசிலைத் திரையலும் பளிதமும் படைத்து - அவர்கள் உட்கொண்ட பின்னர் அவர்களுக்கு வெற்றிலைச்சுருளும் பச்சைக் கருப்பூரமும் வழங்கி; மாயைவிட்டு மணிமேகலை என் மனப்பாட்டு அறம் வாய்வதாக என இறைஞ்சினள் - தான் மேற்கொண்டிருந்த மாதவன் உருவத்தைக் கைவிட்டுத் தன்னுருக்கொண்டு அம் மணிமேகலை யான் மேற்கொண்டுள்ள என் மனத்தின்கட்பட்ட அருளறம் வாய்த்திடுவதாக என்று கருதி அறவண அடிகளாரின் திருவடிகளிலே வீழ்ந்து வணங்கினள் என்பதாம்.**

(வி - ம்.) யாம் செய்த தவம் நன்று என விரும்பி என்க. புத்த சமயத் துறவோர் அறுசுவை நால்வகைப் போனகமும் உண்டலும் பின்னர் வெற்றிலைத் திரையலும் பளிதமும் இல்லறத்தார் போன்றே நுகர்தலும் உடையர் என்பதனை இப் பகுதியால் உணரலாம். இவ்வாறு நுகர்வதனை ஆருகதர் இச் சமயத்தார் செய்யும் இழுக்குகளில் தலை சிறந்தன என்று கருதுவர். போனகம்-உணவு. பொழுது-உண்ணுதற்குரிய பொழுது. பாசிலைத் திரையல் - வெற்றிலைச் சுருள். பளிதம் - பச்சைக் கருப்பூரம். மனப்பாட்டறம் - நெஞ்சினுள்ளேயே தோன்றும் அருளறம். மாயை

என்றது மணிமேகலை மேற்கொண்டிருந்த மாதவன் உருவத்தை. இக் காதையினால் இவ் வேற்றுருவத்தை மணிமேகலை சில பொழுது மேற் கொண்டும் சில பொழுது தன்னுருவத்தோடும் இருந்தமை உணரப் படும்.

இனி, இக் காதையினை மணிமேகலை, தேர்ந்து கடந்தவாயில் குறு கினள் புக்குக் கண்டு மகிழ்வுற்றுப் பள்ளிபுக்குப் பணிந்து சொல்லின ளாதலின், அருந்தவன், 'நின்னைக் கண்டது என் நல்வினைப் பயன் கொல்' என்று கூறி, 'காத்தல் நின் கடன்' என அருள், ஆயிழை வணங்கி ஏந்தி ஓங்கி இயங்கி வலம் கொண்டு இழிந்து தொழுது சென் றெய்தலும், கஞ்சுகனுரைப்போன், 'வந்து தோன்றினள்' என, மன்ன னும் விரும்பி ஏத்திச் சென்று காட்ட நல்லாள் பொருந்தி வகுத்துப் புனைந்து ஏத்தி வைத்து, 'வருக' என காணார் முதலியோரும் விலங்கின் தொகுதியும் மன்னுயிரடங்கலும் வந்து ஈண்டி ஏத்திச்செல்லுங்காலையில் தாயர் தம்முடன் அறவணவடிகளும் நண்ணினர் சேறலும் மணிமேகலை வணங்கி விரும்பிக் கழுவி ஏற்றி ஏந்திப் படைத்துவிட்டு இறைஞ்சின ளென வினை முடிவு செய்க.

கச்சிமாநகர் புக்க காதை முற்றிற்று.

# உக. தவத்திறம் பூண்டு தருமங்கேட்ட காதை

[இருபத்தோன்பதாவது மணிமேகலை, காஞ்சி மாநகர்க்கட் சென்ற பின்னர் அறவண வடிகளும் தாயருஞ் செல்ல அவரைக் கண்டு இறைஞ்சித் தருமங் கேட்ட பாட்டு.]

அஃதாவது மணிமேகலை பௌத்த சமயத்தின்கண் பிக்குணிக்குக் (பெண்துறவிக்கு) கூறி உள்ள எட்டுக் கட்டளைகளையும் மேற்கொள்வதாகிய தவக்கோலம் தாங்கி அறவண அடிகளாரிடத்தே அச் சமயத்தார்க்கு உரிய அறங்களைக் கேட்டறிந்த செய்கையைக் கூறும் செய்யுள் என்றவாறு.

இதன்கண் அறவண வடிகளார் தம்மை வணங்கிய மணிமேகலையை வாழ்த்தி அவளுக்குத் தாம் கச்சிநகரத்திற்கு வந்தவரலாறு கூறுபவர்: பீலிவளை பெற்ற மகவினைக் கடலில் கெடுத்ததும், அது கேட்ட சோழமன்னன் வருத்தமுற்று அம் மகவினைத் தேடி அலைந்த காரணத்தால் தன் நகரத்தில் தான் செய்யக்கடவ இந்திர விழாவை மறந்தமையும் அதனால் மணிமேகலா தெய்வம் அந் நகரத்தைக் கடல் கொள்க என்று சபித்ததும் தனக்கு விழாச் செய்யாமையால் இந்திரனும் சாப மிட்டானாக இவ்வாற்றால் புகார் நகரம் கடல்கோள் பட்டதும், இங்ஙனம் ஆகும் என்று யாம் முன்பே தெரிந்து இக் காஞ்சி நகரத்திற்கு மாதவி சுதமதி என்னும் மகளிரோடு இந் நகரத்திற்கு வந்தேம் என்று அறிவித்ததும் அது கேட்ட மணிமேகலை தான் மாதவன் உருவங்கொண்டு வஞ்சிமாநகரம் அடைந்த செய்தியும், அந் நகரத்தில் பல்வேறு சமயக் கணக்கர்களைக் கண்டு அவர் தம் சமய நன்பொருள்களைக் கேட்டறிந்த செய்தியையுங் கூறி அவர் கூறிய பொருள்கள் தன் மனத்திற்குப் பொருந்தாமையால் தாயரையும் அறவண அடிகளாரையும் காண்டற்கு விரும்பிக் கச்சிமாநகர் புக்க செய்தியையும் அவ்வடிகளார்க்கு உரைத்தலும், அது கேட்ட அடிகளார் மணிமேகலை வேண்டுகோட் கிணங்கிப் புத்தர் அறங்களை மணிமேகலைக்குச் செவியறிவுறுத்துதலும் பிறவும் கூறப்படுகின்றன.

இறைஞ்சிய விளங்கொடி தன்னை வாழ்த்தி
அறந்திகழ் நாவி னறவண னுரைப்போன்
வென்வேற் கிள்ளிக்கு நாகநா டாள்வோன்
தன்மகள் பீலி வளைதான் பயந்த
புனிற்றிளங் குழவியைத் தீவகம் பொருந்தித்
தனிக்கலக் கம்பலச் செட்டிகைத் தரலும்
வணங்கிக் கொண்டவன் வங்க மேற்றிக்
கொணர்ந்திடு மந்நாட் கூரிரு ளியாமத்
தடைகரைக் கணித்தா வம்பி கெடுதலும்
மரக்கலங் கெடுத்தோன் மைந்தனைக் காணு
தரைசற் குணர்த்தலு மவனயர் வுற்று
விரைவனன் தேடி விழாக்கோள் மறப்பத்
தன்விழாத் தவிர்தலின் வானவர் தலைவன்
நின்னுயிர்த் தந்தை நெடுங்குலத் துதித்த
மன்னுயிர் முதல்வன் மகர வேலையுள்
முன்னிய வங்க முங்கிக் கேடுறப்
பொன்னி னூசி பசுங்கம் பளத்துத்
துன்னிய தென்னகத் தொடுகட லுழந்துழி
எழுநா ளெல்லை யிடுக்கண் வந்தெய்தா
வழுவாச் சீலம் வாய்மையிற் கொண்ட
பான்மையிற் றனாது பாண்டு கம்பளந்
தானடுக் குற்ற தன்மை நோக்கி
ஆதி முதல்வன் போதி மூலத்து
நாத னுவோ னளிநீர்ப் பரப்பின்
எவ்வமுற் றன்றன தெவ்வந் தீரெனப்
பவ்வத் தெடுத்துப் பாரமிதை முற்றவும்
அறவர சாளவு மறவாழி யுருட்டவும்
பிறவிதோ றுதவும் பெற்றிய னென்றே
சாரண ரறிந்தோர் காரணங் கூற
அந்த வுதவிக் காங்கவன் பெயரைத்
தந்தையிட் டனனினைத் தையனின் துறவியும்
அன்றே கனவி னனவென வறைந்த
மென்பூ மேனிமணி மேகலா தெய்வம்
என்பவட் கொப்ப வவனிடு சாபத்து
நகர்கடல் கொள்ள நின்றுயரும் யானும்
பகருநின் பொருட்டா லிப்பதிப் படர்ந்தனம்
என்றலு மறவணன் றாளிணை யிறைஞ்சிப்
பொன்றிகழ் புத்த பீடிகை போற்றுந்
தீவ திலகையு மித்திறஞ் செப்பினள்
ஆதலி னன்ன வணிநகர் மருங்கே

வேற்றுருக் கொண்டு வெவ்வே றுரைக்கும்
நூற்றுறைச் சமய நுண்பொருள் கேட்டே
அவ்வுரு வென்ன வைவகைச் சமயமுஞ்
செவ்வி தன்மையிற் சிந்தையின் வைத்திலேன்
அடிகள் மெய்ப்பொரு ளருளுக வென்ன
நொடிகுவெ னங்காய் நுண்ணிதிற் கேணீ
ஆதி சினேந்திர னளவை யிரண்டே
ஏதமில் பிரத்தியங் கருத்தள வென்னச்
சுட்டுணர் வைப்பிரத் தியக்க மெனச்சொலி
விட்டனர் நாம சாதிக்குணக் கிரியைகள்
மற்றவை யனுமா னத்துமடை யும்மெனக்
காரிய காரண சாமா னியக்கருத்
தோரிற் பிழைக்கையு முண்டுபிழை யாதது
கனலிற் புகைபோற் காரியக் கருத்தே
ஏனை யளவைக ளெல்லாங் கருத்தினில்
ஆன முறைமையி னனுமான மாம்பிற
பக்க மேதுத் திட்டாந்த முபநயம்
நிகமன மென்ன வைந்துள வவற்றிற்
பக்க மிம்மலை நெருப்புடைத் தென்றல்
புகையுடைத் தாதலா லெனல் பொருந்தேது
வகையமை யடுக்களை போற்றிட் டாந்தம்
உபநய மலையும் புகையுடைத் தென்றல்
நிகமனம் புகையுடைத் தேநெருப் புடைத்தெனல்
நெருப்புடைத் தல்லா தியாதொன் றதுபுகைப்
பொருத்த மின்று புனல்போ லென்றல்
மேய விபக்கத்து மீட்சி மொழியாய்
வைதன் மியதிட் டாந்த மாகுந்
தூய காரிய வேதுச் சுபாவம்
ஆயிற் சத்த மநித்த மென்றல்
பக்கம் பண்ணப் படுத லாலெனல்
பக்க தன்ம வசன மாகும்
யாதொன்று யாதொன்று பண்ணப் படுவ
தநித்தங் கடம்போ லென்றல் சபக்கத்
தொடர்ச்சி யாதொன் றநித்தமல் லாதது
பண்ணப் படாத தாகாசம் போலெனல்
விபக்கத் தொடர்ச்சி மீட்சிமொழி யென்க
அதன்னு வயத்திற் பிரமாண மாவது
இவ்வெள் ளிடைக்கட் குடமிலை யென்றல்
செவ்விய பக்கந் தோன்றுமை யில்லெனல்
பக்க தன்ம வசன மாகும்

இன்மையிற் கண்டில முயற்கோ டென்றல்
அந்நெறிச் சபக்கம் யாதொன் றுண்டது
தோற்றர வடுக்குங் கைந்நெல்லி போலெனல்
ஏற்ற விபக்கத் துரையென லாகும்
இவ்வகை யேதுப் பொருள்சா திப்பன
என்னைகா ரியம்புகை சாதித்த தென்னிற்
புகையுள விடத்து நெருப்புண் டென்னும்
அன்னுவயத் தாலு நெருப்பிலா விடத்துப்
புகையில்லை யென்னும் வெதிரேகத் தாலும்
புகைஇ நெருப்பைச் சாதித்த தென்னின்
நேரிய புகையி னிகழ்ந்துண் டான
ஊர்த்தச் சாமங் கௌடிலச் சாமம்
வாய்த்த நெருப்பின்வரு காரிய மாதலின்
மேனோக் கிக்கறுத் திருப்பபகைத் திருப்ப
தாமே நெருப்பைச் சாதிக்க வேண்டும்
அன்னு வயஞ்சா திக்கின் முன்னும்
கழுதை யையுங் கணிகை யையுந்
தம்மி லொருகா லத்தோ ரிடத்தே
அன்னு வயங்கண் டான்பிற் காலத்துக்
கழுதையைக் கண்ட விடத்தே கணிகையை
அனுமிக்க வேண்டு மதுகூ டாநெருப்
பிலாவிடத் துப்புகை யிலையென னேரத்
திருத்தகு வெதிரேகஞ் சாதிக்கு மென்னின்
நாய்வா லில்லாக் கழுதையின் பிடரின்
நரிவாலு மிலையாக் காணப் பட்ட
அதனையே கொண்டு பிறிதோ ரிடத்து
நரிவாலி னானாய் வாலையனு மித்தல்
அரிதா மதனா லதுவு மாகாது
ஒட்டிய வுபநய நிகமன மிரண்டுந்
திட்டாந் தத்தி லேசென் றடங்கும்
பக்க மேதுத் திட்டாந் தங்கள்
ஒக்க நல்லவுந் தீயவு முளவதில்
வெளிப்பட் டுள்ள தன்மி யினையும்
வெளிப்பட் டுளசாத் தியதன் மத்திறம்
பிறிதின் வேறும் வேறுபாட் டினையுந்
தன்கட் சார்த்திய நயந்தருத லுடையது
நன்கென் பக்கமென நாட்டுக வதுதான்
சத்த மநித்த நித்தமென் றொன்றைப்
பற்றி நாட்டப் படுவதில் தன்மி
சத்தஞ் சாத்திய தன்ம மாவது

நித்தா நித்த நிகழு நல் லேது
மூன்றாய்த் தோன்று மொழிந்த பக்கத்
தூன்றி நிற்றலுஞ் சபக்கத்துண் டாதலும்
விபக்கத் தின்றியே விடுதலுஞ் சபக்கஞ்
சாதிக் கிற்பொரு டன்னூற் பக்கத்
தோதிய பொதுவகை யொன்றி யிருத்தல்
சத்த வநித்தஞ் சாத்திய மாயின்
ஒத்த வநித்தங் கடாதி போலெனல்
விபக்கம் விளம்பில் யாதொன் றியாதொன்
றநித்தமல் லாதது பண்ணப் படாத
தாஅ காசம் போலென் றாகும்
பண்ணப் படுதலுஞ் செயலிடைத் தோன்றலும்
நண்ணிய பக்கஞ் சபக்கத் திலுமாய்
விபக்கத் தின்றி யநித்தத் தினுக்கு
மிகத்தரு மேதுவாய் விளங்கிற் றென்க
ஏதமி றிட்டாந் தம்மிரு வகைய
சாதன் மியம்வை தன்மி யம்மெனச்
சாதன் மியமெனப் படுவது தானே
அநித்தங் கடாதி யன்னுவயத் தென்கை
வைதன் மியதிட் டாந்தஞ் சாத்தியம்
எய்தா விடத்தி லேதுவு மின்மை
இத்திற நல்ல சாதனத் தொத்தன
தீய பக்கமுந் தீய வேதுவுந்
தீய வெடுத்துக் காட்டு மாவன
பக்கப் போலியு மேதுப் போலியுந்
திட்டாந்தப் போலியு மாஅ மிவற்றுட்
பக்கப் போலி யொன்பது வகைப்படும்
பிரத்தி யக்க விருத்த மனுமான
விருத்தஞ் சுவசன விருத்த முலோக
விருத்த மாகம விருத்த மப்பிர
சித்த விசேடண மப்பிர சித்த
விசேடிய மப்பிர சித்த வுபயம்
அப்பிர சித்த சம்பந் தம்மென
எண்ணிய விவற்றுட் பிரத்தியக்க விருத்தங்
கண்ணிய காட்சி மாறுகொள லாகுஞ்
சத்தஞ் செவிக்குப் புலனன் றென்னல்
மற்றனு மான விருத்த மாவது
கருத்தள வையைமா றாகக் கூறல்
அநித்தியக் கடத்தை நித்திய மென்றல்
சுவசன விருத்தந்தன் சொன்மாறி யியம்பல்

என்தாய் மலடி யென்றே யியம்பல்
உலக விருத்த முலகின்மா றாமுறை
இலகுமதி சந்திர னல்ல வென்றல்
ஆகம விருத்தந்தன் நூன்மா றறைதல்
அநித்த வாதியா யுள்ளவை சேடிகன்
அநித்தி யத்தைநித் தியமென நுவறல்
அப்பிர சித்த விசேடண மாவது
தத்த மெதிரிக்குச் சாத்தியந் தெரியாமை
பௌத்தன் மாறாய் நின்றசாங் கியனைக்
குறித்துச் சத்தம் விநாசி யென்றால்
அவனவி நாச வாதி யாதலிற்
சாத்திய விநாசமப் பிரசித்த மாகும்
அப்பிர சித்த விசேடிய மாவ
தெதிரிக்குத் தன்மி பிரசித்த மின்றி
யிருத்தல் சாங்கியன் மாறாய் நின்ற
பௌத்தனைக் குறித்தான் மாச்சை தனியவான்
என்றா லவன நான்ம வாதி
ஆதலிற் றன்மி யப்பிர சித்தம்
அப்பிர சித்த வுபய மாவது
மாறா னேற்குத் தன்மி சாத்தியம்
ஏறா தப்பிர சித்தமா யிருத்தல்
பகர்வை சேடிகன் பௌத்தனைக் குறித்துச்
சுகமுத லிய தொகைப் பொருட்குக் காரணம்
ஆன்மா வென்றாற் சுகமுமான் மாவுந்
தாமிசை யாமையி லப்பிரசித் தோபயம்
அப்பிர சித்த சம்பந்த மாவ
தெதிரிக் கிசைந்த பொருள்சா தித்தல்
மாறாம் பௌத்தற்குச் சத்த வநித்தங்
கூறி லவன்ன் கொள்கையஃ தாகலில்
வேறு சாதிக்க வேண்டா தாகும்
ஏதுப் போலி யோதின்மூன் றாகும்
அசித்த மநைகாந் திகம்விருத் தம்மென
உபயா சித்த மன்னியதா சித்தஞ்
சித்தா சித்த மாசிரயா சித்தம்
எனநான் கசித்த முபயா சித்தஞ்
சாதன வேது விருவர்க்கு மின்றிச்
சத்த மநித்தங் கட்புலத் தென்றல்
அன்னியதரா சித்த மாறாய் நின்றாற்
குன்னிய வேது வன்றா யொழிதல்
சத்தஞ் செயலுற லநித்த மென்னிற்

சித்த வெளிப்பா டல்லது செயலுறல்
உய்த்த சாங்கியனுக் கசித்த மாகுஞ்
சித்தா சித்த மாவது
ஏதுச் சங்கய மாய்ச்சா தித்தல்
ஆவி பனியென வையுரு நின்றே
தூய புகைநெருப் புண்டெனத் துணிதல்
ஆசிரயா சித்த மாரு னவனுக்
கேற்ற தன்மி யின்மை காட்டுதல்
ஆகாசம், சத்த குணத்தாற் பொருளா மென்னின்
ஆகா சம்பொரு ளல்லவென் பாற்குத்
தன்மி யசித்த மநைகாந் திகமுஞ்
சாதா ரணமசா தாரணஞ் சபக்கைக
தேச விருத்தி விபக்க வியாபி
விபக்கைக தேச விருத்தி சபக்க
வியாபி யுபயைக தேச விருத்தி
விருத்த வியபி சாரியென் றாறு
சாதாரணஞ் சபக்க விபக்கத் துக்கும்
ஏதுப் பொதுவா யிருத்தல் சத்தம்
அநித்த மறியப் படுதலி லென்றல்
அறியப் படுதனித் தாநித்த மிரண்டுக்குஞ்
செறியுங் கடம்போல் அநித்தத் தறிவோ
ஆகா சம்போ லநித்தத் தறிவோ
என்ன லசாதா ரணமா வதுதான்
உன்னிய பக்கத் துண்டா மேதுச்
சபக்க விபக்கந் தம்மிலின் றுதல்
சத்த நித்தங் கேட்கப் படுதலின்
என்னிற் கேட்கப் படலெனு மேதுப்
பக்கத் துள்ள தாயி னல்லது
சபக்க விபக்கத்து மீட்சித் தாதலிற்
சங்கய மெய்தி யநேகாந் திகமாஞ்
சபக்கைக தேச விருத்தி விபக்க
வியாபி யாவ தேதுச் சபக்கத்
தோரிடத் தெய்தி விபக்கத் தெங்கும்
உண்டாத லாகுஞ் சத்தஞ் செயலிடைத்
தோன்றா தாகு மநித்த மாகலின்
என்றா லநித்த மென்ற வேதுச்
செயலிடைத் தோன்றா மைக்குச் சபக்க
மின்னினு மாகா சத்தினு மின்னின்
நிகழ்ந்தா காசத்திற் காணா தாகலின்
அநித்தங் கடாதியி னெத்தலிற் கடம்போல்

அழிந்து செயலிற் றோன்றுமோ மின்போல்
அழிந்து செயலிற் றோன்றுதோவெனல்
விபக்கைக தேச விருத்தி சபக்க
வியாபி யாவ தேது விபக்கத்
தோரிடத் துற்றுச் சபக்கத்தொத் தியறல்
சத்தஞ் செயலிடைத் தோன்றுமநித்தமா தலினெனின்
அநித்த வேதுச் செயலிடைத் தோன்றற்கு
விபக்க வாகா யத்தினு மின்னினு
மின்னி னிகழ்ந்தா காசத்துக் காணுது
சபக்கக் கடாதிக டம்மில்
எங்குமா யேகாந்த மல்ல மின்போல்
அநித்தமாய்ச் செயலிடைத் தோன்றுதோ கடம்போல்
அநித்தமாய்ச் செயலிடைத் தோன்றுமோவெனல்
உபயைக தேச விருத்தி யேதுச்
சபக்கத் தினும்விபக் கத்தினு மாகி
ஓர்தே சத்து வர்த்தித்தல் சத்த
நித்த மமூர்த்த மாதலி னென்னின்
அமூர்த்த வேது நித்தத் தினுக்குச்
சபக்கவா காச பரமா ணுக்களின்
ஆகா சத்து நிகழ்ந்து மூர்த்தமாம்
பரமா ணுவினிக ழாமை யானும்
விபக்க மான கடசுகா திகளிற்
சுகத்து நிகழ்ந்து கடத்தொழிந் தமையினும்
ஏகதே சத்து நிகழ்வதே காந்தமன்
றமூர்த்த மாகாசம் போல நித்தமோ
அமூர்த்த சுகம்போ லநித்தமோ வெனல்
விருத்த வியபிசாரி திருந்தா வேதுவாய்
விருத்த வேதுவிற் கும்மிடங் கொடுத்தல்
சத்த மநித்தஞ் செயலிடைத் தோன்றலின்
சபக்கமா யுள்ள கடாதி நிற்கச்
சத்த நித்தங் கேட்கப் படுதலிற்
சத்தத் துவம்போ லெனச்சாற் றிடுதல்
இரண்டினுஞ் சங்கயமா யேகாந்த மல்ல
விருத்தந் தன்னைத் திருத்தக விளம்பில்
தன்மச் சொரூப விபரீத சாதனந்
தன்ம விசேட விபரீத சாதனந்
தன்மிச் சொரூப விபரீத சாதனந்
தன்மி விசேட விபரீத சாதனம்
என்ன நான்கு வகையதாகும்அத்

தன்மச் சொரூப விபரீத சாதனஞ்
சொன்ன வேதுவிற் சாத்திய தன்மத்
துருவங் கெடுதல் சத்த நித்தம்
பண்ணப் படுதலி னென்றாற் பண்ணப்
படுவ தநித்தமா தலிற்பண்ணப் பட்ட
வேதுச் சாத்திய தன்மநித் தத்தைவிட்
டநித்தஞ் சாதித்த லான்விப ரீதந்
தன்ம விசேட விபரீத சாதனஞ்
சொன்ன வேதுச் சாத்திய தன்மந்
தன்னிடை விசேடங் கெடச் சாதித்தல்
கண்முத லோர்க்கு மிந்திரி யங்கள்
எண்ணிற் பரார்த்தந் தொக்குநிற் றலினாற்
சயனா சனங்கள் போல வென்றால்
தொக்கு நிற்றலி னென்கின்ற வேதுச்
சயனா சனத்தின் பரார்த்தம்போற் கண்முதல்
இந்தியங் களையும் பரார்த்தத்திற் சாதித்துச்
சயனா சனவா னைப்போ லாகிக்
கண்முத லிந்தியத் துக்கும் பரனாய்ச்
சாதிக் கிறநிர் அவயவமா யுள்ள
ஆன்மா வைச்சா வயவ மாகச்
சாதித் துச்சாத் தியதன் மத்தின்
விசேடங் கெடுத்த லின்விப ரீதந்
தன்மிச் சொரூப விபரீத சாதனந்
தன்மி யுடைய சொரூபமாத் திரத்தினை
ஏதுத் தானே விபரீதப் படுத்தல்
பாவந் திரவியங் கன்ம மன்று
குணமு மன்றெத் திரவிய மாமெக்
குணகன் மத்துண் மையின்வே றாதலாற்
சாமா னியவிசே டம்போ லென்றாற்
பொருளுங் குணமுங் கருமமு மொன்றாய்
நின்றவற் றின்னிடை யுண்மைவே றாதலா
லென்றுகாட் டப்பட்ட வேறுமூன் றினுடை
உண்மை வேறு படுத்தும் பொதுவாம்
உண்மை சாத்தியத் தில்லா மையினுந்
திட்டாந் தத்திற் சாமானியம் விசேடம்
போக்கிப் பிறிதொன் றில்லாமை யானும்
பாவ மென்று பகர்ந்ததன் மியினை
அபாவ மாக்குத லான்விப ரீதந்
தன்மி விசேட விபரீத சாதனந்
தன்மி விசேட வபாவஞ் சாதித்தல்

௩௨௦ முன்னங் காட்டப் பட்ட வேதுவே
பாவமா கின்றது கருத்தா வுடைய
கிரியையுங் குண முமா மதனை விபரீத
மாக்கிய தாதலாற் றன்மி விசேடங்
கெடுத்தது நீய வெடுத்துக்காட் டாவண
௩௨௫ தாமே திட்டாந்த வாபா சங்கள்
திட்டாந் தம்மிரு வகைப்படு மென்றுமுற்
கூறப் பட்டன விங்க ணவற்றுட்
சாதன் மியதிட் டாந்தவா பாசம்
ஓதி லைந்து வகையுள தாகுஞ்
௩௩௦ சாதன தன்ம விகலமுஞ் சாத்திய
தன்ம விகலமு முபய தன்ம
விகலமு மநன் னு வயம்விப ரீதான்
னுவய மென்ன வைதன் மியதிட்
டாந்த வாபா சமுமைம் வகைய
௩௩௫ சாத்தி யாவி யாவி ருத்தி
சாத னுவி யாவி ருத்தி
யுபயாவி யாவி ருத்தியவ் வெதிரேகம்
விபரீத வெதிரேக மென்ன விவற்றுட்
சாதன தன்ம விகல மாவது
௩௪௦ திட்டாந் தத்திற் சாதனங் குறைவது
சத்த நித்த மமூர்த்த மாதலான்
யாதொன் றியாதொன் றமூர்த்தமது நித்தம்
ஆதலாற் காண்புற்றது பரமாணு விளெனில்
திட்டாந் தப்பர மாணு
௩௪௫ நித்தத் தோடு மூர்த்த மாதலாற்
சாத்திய தன்ம நித்தத்துவ நிரம்பிச்
சாதன தன்மவமூர்த் தத்துவங் குறையுஞ்
சாத்திய தன்ம விகல மாவது
காட்டப் பட்ட திட்டாந் தத்திற்
௩௫௦ சாத்திய தன்மங் குறைவு படுதல்
சத்த நித்த மமூர்த்த மாதலால்
யாதொன்றி யாதொன் றமூர்த்தமது நித்தம்
புத்தி போலு லென்றால்
திட்டாந்த மாகக் காட்டப் பட்ட
௩௫௫ புத்தி யமூர்த்த மாகி நின்றே
யநித்த மாதலாற் சாதன வமூர்த்தத்துவ
நிரம்பிச் சாத்திய நித்தத்துவங் குறையும்
உபய தன்ம விகல மாவது
காட்டப் பட்ட திட்டாந் தத்திலே

சாத்திய சாதன மிரண்டுங் குறைதல்
அன்றியு மதுதான் சன்னு மசன்னும்
என்றிரு வகையா மிவற்றுட்சன் னுவுள
உபய தன்ம விகல மாவது
உள்ள பொருட்கட் சாத்திய சாதனங்
கொள்ளு மிரண்டுங் குறையக் காட்டுதல்
சத்த நித்த மமூர்த்த மாதலான்
யாதொன்றி யாதொன் றமூர்த்தமது நித்தம்
கடம்போ லெனிற்றிட் டாந்த மாகக்
காட்டப் பட்டகடந் தானுண் டாகிச்
சாத்திய மாயுள நித்தத் துவமும்
சாதன மாயுள வமூர்த்தத்து வமுங்குறையும்
அசன்னு வுள்ள வுபயதன்ம விகலம்
இல்லாப் பொருட்கட் சாத்திய சாதனம்
என்னு மிரண்டுங் குறையக் காட்டுதல்
சத்த மநித்த மூர்த்த மாதலான்
யாதொன் றியாதொன்று மூர்த்தமத நித்தம்
ஆகாசம் போலெனுந் திட்டாந் தத்துச்
சாத்திய தன்மமா யுள்ள வநித்தமுஞ்
சாதன தன்மமா யுள்ள மூர்த்தமும்
இரண்டு மாகாச மசத்தென் பானுக்
கதன்க ணின்மை யானே குறையும்
உண்டென் பானுக் காகாச நித்தம்
அமூர்த்த மாதலா லவனுக்குங் குறையும்
அநன்னுவய மாவது சாதன சாத்தியந்
தம்மிற் கூட்ட மாத்திரஞ்சொல் லாதே
இரண்ட னுடைய வுண்மையைக் காட்டுதல்
சத்த மநித்தங் கிருத்த மாதலின்
யாதொன்று யாதொன்று கிருத்தம தநித்தமெனும்
அன்னுவயஞ் சொல்லாது குடத்தின் கண்ணே
கிருத்த வநித்தங் காணப் பட்ட
என்றூ லன்னுவயந் தெரியா தாகும்
விபரீதான் னுவயம் வியாபகத் துடைய
அன்னுவயத் தாலே வியாப்பியம் விதித்தல்
சத்த மநித்தங் கிருத்தத் தாலெனின்
யாதொன்று யாதொன்று கிருத்த மநித்தமென
வியாப்பியத் தால்வியா பகத்தைக் கருதா
தியாதொன் றியாதொன் றநித்தமது கிருத்தமெண
வியாபகத் தால்வியாப் பியத்தைக் கருதுதல்
அப்படிக் கருதின் வியாபகம் வியாப்பியத்தை

இன்றியு நிகழ்த லின்விப ரீதமாம்
வைதன்மிய திட்டாந் தத்துச்
சாத்தி யாவியா விருத்தி யாவது
சாதன தன்ம மீண்டு
சாத்திய தன்ம மீளா தொழிதல்
சத்த நித்த மமூர்த்தத் தென்றால்
யாதொன் றியாதொன்று நித்தமு மன்ற
தமூர்த்தமு மன்று பரமாணுப் போலெனின்
அப்படித் திட்டாந்த மாகக்காட் டப்பட்ட
பரமாணு நித்தமாய் மூர்த்த மாதலிற்
சாதன வமூர்த்த மீண்டு
சாத்திய நித்த மீளா தொழிதல்
சாத னாவியா விருத்தி யாவது
சாத்திய தன்ம மீண்டு
சாதன தன்ம மீளா தொழிதல்
சத்த நித்த மமூர்த்தத் தென்றால்
யாதொன் றியாதொன்று நித்த மன்றம்
தமூர்த்தமு மன்று கன்மம்போ லென்றால்
வைதன் மியதிட் டாந்த மாகக்
காட்டப் பட்ட கன்மம்
அமூர்த்தமாய் நின்றே யநித்த மாதலிற்
சாத்திய மான நித்திய மீண்டு
சாதன மான வமூர்த்த மீளா
துபயாவி யாவிருத்தி காட்டப் பட்ட
வைதன் மியதிட் டாந்தத்தி னின்று
சாதன சாத்தியங்கள் மீளாமை யன்றியும்
உண்மையி னுபயா வியாவி ருத்தி
இன்மையி னுபயா வியாவி ருத்தி
எனவிரு வகை யுண்மையின்
உபயாவி யாவிருத்தி யுள்ள பொருட்கட்
சாத்திய சாதன மீளா தபடி
வைதன் மியதிட் டாந்தங் காட்டல்
சத்த நித்த மமூர்த்த மாதலின்
என்றாற் கியாதொன் றியாதொன்று நித்தமன்
றமூர்த்தமு மன்று காசம்போ லென்றால்
வைதன்மியா திட்டாந்த மாகக் காட்டப்பட்ட
ஆகா சம்பொரு ளென்பாற்கு
ஆகாச நித்தமு மமூர்த்தமு மாதலாற்
சாத்திய நித்தமுஞ் சாதனமா வுள்ள
அமூர்த்தமு மிரண்டு மீண்டில வின்மையின்

உபயாவி யாவிருத்தி யாவது
சத்த மநித்த மூர்த்த மாதலான்
என்றவிடத் தியாதொன் றியாதொன் றநித்த
மூர்த்தமு மன்று காசம் போலென
வைதன் மியதிட் டாந்தங் காட்டில்
ஆகா சம்பொரு ளல்லவென் பானுக்கு
ஆகாசந் தானே யுண்மையின் மையினாற்
சாத்திய வநித்தமுஞ் சாதன மூர்த்தமும்
மீட்சியு மீளா மையுமிலை யாகும்
அவ்வெதி ரேக மாவது சாத்தியம்
இல்லா விடத்துச் சாதன மின்மை
சொல்லாதே விடுத லாகுஞ் சத்தம்
நித்தம் பண்ணப் படாமையா லென்றால்
யாதொன் றியாதொன்று நித்த மன்று
பண்ணப் படுவ தல்லா ததுவும்
அன்றெனு மிவ்வெதி ரேகந் தெரியச்
சொல்லாது குடத்தின் கண்ணே பண்ணப்
படுதலு மநித்தமுங் கண்டே மாதலான்
என்னின் வெதிரே கந்தெரி யாது
விபரீத வெதிரேக மாவது
பிரிவைத் தலைதடு மாறுச் சொல்லுதல்
சத்த நித்த மூர்த்த மாதலின்
என்று லென்று நின்ற விடத்து
யாதோ ரிடத்து நித்தமு மில்லையவ்
விடத்து மூர்த்தமு மில்லை யெனாதே
யாதோ ரிடத்து மூர்த்தமு மில்லையவ்
விடத்து நித்தமு மில்லை யென்றால்
வெதிரேக மாறு கொள்ளு மெனக்கொள்க
நாட்டிய விப்படித் தியசா தனத்தாற்
காட்டு மனுமான வாபா சத்தின்
மெய்யும் பொய்யு மித்திற விதியால்
ஐய மின்றி யறிந்துகொ ளாய்ந்தென்.

# உகூ. தவத்திறம்பூண்டு தருமங்கேட்ட காதை

## உரை

[இதன்கண்—க முதல் கூசு ஆம் அடிகாறும் அறவணர் தம்மை வணங்கிய மணிமேகலையை வாழ்த்துதலும் தாமும் மாதவியும் சுதமதியும் ஆகிய மூவரும் காஞ்சி மாநகரத்திற்கு வருதற்குரிய காரணமும் கூறுவதாய ஒரு தொடர்.]

### அறவண அடிகளார் மணிமேகலைக்குக் கூறுதல்

### க - உ: இறைஞ்சிய..........உரைப்போன்

(இ - ள்.) அறந்திகழ் நாவின் அறவணன் இறைஞ்சிய இளங்கொடி தன்னை வாழ்த்தி - நல்லறமே நாளும் விளங்குகின்ற செந்நாவினையுடைய அறவண அடிகளார் தம் திருவடிகளிலே வீழ்ந்து என் மனப்பாங்கறம் வாய்வதாக என்றுங் கொண்டு வணங்கிய இளங்கொடிபோல்வாளாகிய மணிமேகலையை நீடூழி வாழ்க என்று வாழ்த்திப் பின்னர்; உரைப்போன் - தாம் காஞ்சி நகரத்திற்கு வரநேர்ந்த காரணத்தைக் கூறத்தொடங்குவோர் என்க.

(வி - ம்.) இறைஞ்சுதல் - வணங்குதல். தம்பால் அணுகுவோர்க் கெல்லாம் நாளும் நல்லறமே நவின்று தழும்பேறிய நல்ல நாவினன் அவ் வறவணன். இவனே மணிமேகலைக்கு ஞானாசிரியனாய் அவள் ஊழ் கூட்டு வித்தது என அவ்வாசிரியன் மாண்புணர்த்துவார் அறந்திகழ் நாவின் அறவணன் என்று விதந்தார். அறவணன் என்னும் அவன் பெயர் இயற் பெயரன்று, சிறப்புப் பெயர். அச் சிறப்பு அறந்திகழ் நா உடைமையே என்பதும் இதனால் அறிவுறுத்தவாரும் என்க.

### இதுவுமது

### ௩ - கஉ: வெண்வேற்..........மறப்ப

(இ - ள்.) நாக நாடு ஆள்வோன் தன் மகள் பீலிவளை-நாக நாட்டை ஆளும் அரசனுடைய மகளாகிய பீலிவளை என்பவள்; வெண்வேல் கிள்ளிக்குத் தான் பயந்த புனிற்று இளங்குழவியை - வெற்றிவேலை உடைய நெடுமுடிக்கிள்ளி என்னும் சோழ மன்ன னுடன் காதற்கேண்மை கொண்டு வயிறு வாய்த்து அவனைப்

பிரிந்து போய்த் தான் ஈன்று அணிமைத்தாகிய பச்சிளங் குழந்தையை; தீவகம் பொருந்தி - மணிபல்லவத்தீவை எய்தி; தனிக்கலக் கம்பலச் செட்டி கைத்தரலும் - கடலின்கண் ஒற்றை மரக் கலத்தோடு அத் தீவின் மருங்கின் வந்த கம்பளச் செட்டி என்னும் காவிரிப்பூம்பட்டினத்துச் செட்டியின்பால் கையடை செய்து கொடுத்து அக் குழவியை அதன் தந்தையிடத்து ஒப்புவிக்குமாறு கூற; அவன் வணங்கிக் கொண்டு வங்கம் ஏற்றி கொணர்ந்திடும் அந்நாள் கூர் இருள் யாமத்து - பீலிவளையை அச் செட்டி வணங்கி ஏற்றுக் கொண்டு அக் குழவியைத் தன் மரக்கலத்தில் ஏற்றிக் கொண்டு வருகின்ற அந்த நாளின் மிக்க இருளையுடைய நள்ளிரவிலே; அம்பி அடைகரைக்கு அணித்தா கெடுதலும் - அம்மரக்கலம் காவிரிப்பூம்பட்டினத்துக் கடல் கரைக்கு அணித்தாக வரும்பொழுது கெட்டொழிந்ததாக; மரக்கலம் கெடுத்தோன் - தன் மரக்கலத்தை இழந்த அச் செட்டி அக் குழவியையும் காணப்பெறானாய் உடை மரம் பற்றி உய்ந்து கரை ஏறி அச் செய்தியை; அரைசற்குணர்த்தலும் அவன் அயர்வு உற்று விரைவனன் தேடி விழாக்கோள் மறப்ப - சோழ மன்னனுக்கு அறிவித்தலும் அதுகேட்ட அம் மன்னவன் மகவன்பினால் பெரிதும் வருந்தி விரைந்து அக் குழந்தையைத் தேடும் முயற்சியில் ஈடுபடுதலாலே தான் தன் முன்னோர் முறைப்படி தன் நகரத்தின்கண் இந்திரவிழா எடுத்தலை மறந்தொழிய என்க.

(வி - ம்.) வென்வேல் - வெற்றிவேல். கிள்ளி - நெடுமுடிக்கிள்ளி. பீலிவளையின் வரலாறு இருபத்தைந்தாம் காதையில் (கஎஅ - கஅ௯) காண்க. புனிறு - ஈன்றணித்தாங் காலம். தீவகம் - மணிபல்லவம். தனிக்கலம் - ஒற்றை மரக்கலம்: கம்பலச் செட்டி, காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்பவனாதலின் அவன்பால் கையடை செய்தனள் என்க. பீலிவளை தன்னாட்டரசியாதலின் கம்பலச் செட்டி வணங்குதல் வேண்டிற்று. வங்கம் - மரக்கலம். அணித்தாக என்க. அம்பி - மரக்கலம். மைந்தன் - குழவி என்னும் பொருட்டு. அரைசன்: நெடுமுடிக்கிள்ளி. தேடி - தேட. விழாக்கோள் - விழாச் செய்தலை மேற்கொள்ளுதல்.

### இதுவுமது

### கரு - உஉ: தன்விழா..........நோக்கி

(இ - ள்.) வானவர் தலைவன் தன் விழாத் தவிர்தலின் - அமரர் அரசனாகிய இந்திரன் தனக்குரிய திருவிழா கைவிடப்பட்டமையின்; நின் உயிர்த்தந்தை நெடுங்குலத்து உதித்த மன்உயிர் முதல்வன் மகா வேலையுள் முன்னிய வங்கம் மூழ்கிக் கேடுற - மணிமேகலாய்! நினக்கு உயிர் போன்ற

தந்தையாகிய கோவலனுடைய நெடிய குலத்தில் முன்பு தோன்றியவனும் மன்னுயிர்கட்கெல்லாம் பேரருள் செய்யும் தலைவனும் ஆகிய வணிகன் ஒருவன் சுறுமீன்கள் திரிகின்ற கடலினுள் முற்பட்டியங்கிய தன் மரக்கலம் முழுகிக் கெட்டமை யால்; பொன்னின் ஊசி பசுங் கம்பளத்து துன்னியது என்ன தொடு கடல் உழந்துழி - பொன்னாலியன்ற சிறிய ஊசி ஒன்று பச்சை நிறமான மாபெரும் கம்பளத்தினகண் பொருந்தினாற் போன்று தோண்டப்பட்ட மாபெரும் கடலின்கட் கிடந்து நீந்தி வருந்திய பொழுதும்; எழுநாள் எல்லை இடுக்கண்வந்து எய்தா வழுவாச்சீலம் வாய்மையின் கொண்ட பான்மையின் - ஏழு நாள் முடியும் அளவும் தன் உயிர்க்கு இறுதியாகிய சாத்துன்பம் வந்து உறாமைக்குக் காரணமான பிறழாத சீலத்தையும் நால்வகை வாய்மையோடு மேற்கொண்டு அவ் வணிகன் ஒழுகினமையால்; தனது பாண்டு கம்பளம் தான் நடுக்குற்ற தன்மை நோக்கி - [இந்திரன்] தன்னுடைய வெண்ணிறக் கம்பளமாகிய இருக்கை தானே நடுங்குதலுற்ற தன்மையை அறிந்து என்க.

(வி - ம்.) வானவர் தலைவன் மன்னுயிர் முதல்வன் மேற்கொண்ட பான்மையினால் தனது கம்பளம் நடுக்குற்ற தன்மை நோக்கி என இயைக்க. தந்தை : கோவலன். முதல்வன் என்றது, கோவலன் முன்னோனாகிய ஒரு வணிகன். முங்கி - முழுகி. பொன்னூசி - வணி கனுக்கும், பசுங்கம்பளம் - கடலுக்கும் உவமை. பொன்னின் ஊசி மரக்கலத்திற்கு உவமை என்பாரும் உளர். அவர் மன்னுயிர் முதல்வன் பொன்னின் ஊசி பசுங்கம்பளத்துத் துன்னியதென்ன தொடுகடல் உழந்துழி என்னும் உவமையில் பொன்னிறமான மேனி படைத்த வணிகன் கடல் நீரின் மேல் நீந்துதற்கு உவமையாகுங்கால் தோன்றும் அழகினை உணர்ந்திலர். வங்கத்திற்குப் பொன்னூசியை உவமை என்று சொல்லி அப் பொன்னையும் இரும்பாக்குதலின் அழகொன்றும் இன்மை உணர்க. தொடு கடல்: வினைத்தொகை. கடல் - சகரரால் தோண்டப் பட்டது என்னும் வழக்குப்பற்றித் தொடுகடல் என்றார். உழத்தல் - வருந்தி நீந்துதல். உழந்துழியும் எனல் வேண்டிய சிறப்பும்மை தொக்கது. இடுக்கண் என்றது - சாதலை. எய்தாமைக்குக் காரணமான சீலத்தையும் வாய்மையினையும் அவ் வணிகன் மேற்கொண்ட பான்மை யினால் இந்திரனுடைய பாண்டு கம்பளம் நடுக்குற்றது என்றவாறு. எனவே இப் பாண்டு கம்பளம் அறத்தால் மிக்கோருக்கு இருக்கை ஆகும் தெய்வத்தன்மை உடைத்தாகலின் நிலவுலகின்கண் அறத்தால் மிக்கோருக்கு இடுக்கண் வந்துற்ற காலத்தே அது பொறாமல் நடுங்கும இயல்புடையது என்பது பெற்றாம். இனி இங்ஙனமே இப் பாண்டு கம்பளம் தன்மேல் அமரும் அறவோனாகிய இந்திரனுங் காட்டில் அறத்தின் மிக்கோர் உருவாகும் பொழுதும் தன்மேல் இருக்கும் இந்திரனைத் தாங்குதல் பொறாமல் [புதிதாக உருவாகின்ற அவ்வற வோனைத் தாங்குதற் பொருட்டு] நடுங்கும் என்பதனைப் பாத்திர மரபு கூறிய காதையில் ௨௮ - ௨௯ : இந்திரன் பாண்டு கம்பளம் துளக்கிய தாகலின் என்பதனாலும் அறிதல் கூடும். வாய்மை-நால்வகை வாய்மை. பாண்டு கம்பளம் - வெள்ளைக் கம்பளம். நோக்கி என்றது மனத்தால்

ஆராய்ந்து என்றவாறு. கோவலனுடைய முன்னோன் "இடையிருள் யாமத்து எறிதிரைப் பெருங்கடல் உடைகலப்பட்டு" கடலின்கண் சிலநாள் நீந்திய செய்தியை இளங்கோவும் ஓதுதல் [சிலப் - கரு : உச ஆம் அடி முதலாக] உணர்க.

## இதுவுமது

உ௯ - உ௧௯: ஆதி.........கூற

(இ - ள்.) ஆதி முதல்வன் போதி மூலத்து நாதன் ஆவோன் - ஆதி முதல்வனாகிய புத்த தேவன் போதியின் கீழ் இருந்து அருளிச் செய்த அறங்களை உலகத்திற்கு எடுத்தோதும் வழி நிலைத் தலைவன் என்னும் போதிசத்துவன் ஆகும் தகுதியை இனிப் பெறப்போகின்ற ஒரு வணிகன; கணிநீர்ப் பரப்பின் எவ்வமுற்றோன் தனது - செறிந்த நீர்பபரப்பாகிய கடலின்கண் தனது கலம் முழுகிவிட்டமையால் துன்பம் உற்றவானுடைய; எவ்வம் தீர் என - துன்பத்தை நீ சென்று தீர்த்து உய்விப்பாயாக என்று தன் பக்கலில் இருந்த தெய்வத்திற்குப பணித்தமையாலே அத் தெய்வம் சென்று அவ் வணிகனை; பவ்வத்து எடுத்து - அக் கடலினின்றும் கரையேற்றிய பின்னர் அவன்; பாரமிதை முற்றவும்-பாரமிதை பத்தானும் நிரம்பவும்; அறஅரசு ஆளவும் அற ஆழி உருட்டவும் அறம் நிலவும் அரசாட்சி செய்யவும் அற மாகிய சக்கரத்தை உருட்டவும்; பிறவிதோறு உதவும் பெற்றியள் என்றே சாரணர் அறிந்தோர் காரணங் கூற - அந்த வணிகனுக்குப் பின்னர் நிகழும் பிறப்புகள்தோறும் உதவி செய்யும் தன்மையள் ஆயினள் அப்பெண் தெய்வம் என்று அந்தரசாரிகள் ஆகிய சாரணருள் இந்நிகழ்ச்சியை அறிந்தவர் பின்பெயருக்குக் காரணமாகக் கூறுதலாலே எனக.

(வி - ம்.) புத்தர்கள் கௌதம புத்தருடைய காலத்துக்கு முன்னரே உலகின்கண் அறம் குறைந்த காலந்தோறும் பிறந்து அவ்வப்போது மீண்டும் அறத்தை நிலை நாட்டிச் சென்றனர்; அவ்வாறு தோன்றினோர் எல்லாம் ஆதி புத்தர் அருளிய அறத்தையே மீண்டும் பரப்பினர் ஆதலின் அவரெல்லாம் புத்தர் அவதாரம் என்றே மதிக்கப்பட்டனர். இவரைப் போதி சத்துவர் என்றும் கூறுவர். போதி சத்துவர் என்பதன் பொருள் - ஞானத்தின் ஆற்றலை முழுதும் பெற்றவர் என்பதாம். எனவே ஈண்டு மரக்கலம் முழுகிக் கடலில் மிதந்த வணிகன் இப்பிறப்பில் வழுவாச் சீலம் வாய்மையிற் கொண்ட பான்மையினன் ஆதலின் எதிர் காலத்தே புத்தனாகும் தகுதியுடையோன் ஆவான்; அவன் செய்த அறமே ஏழு நாள் காறும் அலை கடலில் உயிர்போகா வண்ணம் காத்து வருகின்றது ஆயினும் அலை கடலில் அவன் இன்னும் நீந்தி வருந்தா வண்ணம் காத்தல் நம் கடன் என்பான் தன் அருகிருந்த தெய்வத்தை நோக்கி நீ சென்று எவ்வம் தீர் என்று பணித்தான். இவ் வரலாறு இந்நூலின்கண் கூறப்பட்டமையின் அவற்றையே ஈண்டும் பாட்டிடை வைத்தலின் ஓதி

வோர் குறிப்பாக உணர்ந்து கொள்ளக்கூடும் என்று கருதிச் சொல் பல்கா வண்ணம் சுருக்கமாகவே நூலாசிரியர் கூறுதல் உணர்க. பாரமிதை உடம்பு நேரவும் உறுப்பு நேரவும் பொருள் நேரவும் தானம் முதல் ஞானமீறாக உள்ள பத்தும் நிரம்புதல். பெற்றியள்-தன்மையள். சாரணர் அறிந்தோர் கூற என்க.

## இதுவுமது

### ௨௦ - ௨௬ : அந்த.........படர்ந்தனம்

(இ - ள்.) அந்த உதவிக்கு ஆங்கு அவள் பெயரை - அவ்வாறு தன் குல முதல்வனுக்கு அத் தெய்வம் செய்த உதவியின் நினைவுக்குறியாக அம் மணிமேகலை என்னும் தெய்வத்தின் பெயரை, நின் தந்தை இட்டனன் - உனக்கு உன் தந்தை சூட்டினன்; தையல் நின் துறவியும் அன்றே கனவில் கனவு என அறைந்த மெல்பூ மேனி மணிமேகலா தெய்வம் எனப்படுவதற்கு ஒப்ப அவன் இடு சாபத்து தையால்! நின்னுடைய துறவறச் செய்தியையும் அற்றை நாளிலேயே நின் தாயாகிய மாதவியின் கனவிலே நனவுபோலத் தோன்றி அறிவித்தருளிய மெல்லிய மலர் போன்ற அம் மணிமேகலா தெய்வம் சாபம் இட்டாற் போன்றே அவ் விழாவிற்குரிய இந்திரன் இட்ட சாபத்தாலே; நகர் கடல் கொள்ள - அக் காவிரிப் பூம்பட்டினமாகிய நகரத்தைக் கடல் விழுங்கிக் கொள்ளுதலால்; நின் தாயரும் பகரும் யானும் நின் பொருட்டால் இ பதி படர்ந்தனம் - உன்னுடைய தாயராகிய மாதவியும் சுதமதியும் நினக்கு அறங் கூறுதற்குரிய யானும் உனக்கு அறங் கூறவும் உன்னைக் காணவும் இக் காஞ்சி மாநகரத்திற்கு வந்தேம் என்றார் என்க.

(வி - ம்.) உதவி - தன் முன்னோனுக்கு உயிர் தந்த உதவி. அவள் - அம் மணிமேகலா தெய்வம். நின் தந்தை இட்டனன் என மாறி நினக்கு என இரண்டனுருபை நான்காவதாகத் திரித்துக் கொள்க. தையல் : அண்மை விளி. துறவி - துறவு நிகழ்ச்சி. அன்றே என்றது நினக்கு நின் தந்தை பெயர் சூட்டிய அற்றை நாள் இரவே என்றவாறு. கனவில் நனவு என என்றது நனவில் வந்து சொல்வது போல விளக்கமாக என்றவாறு. தெய்வத்திற்கு ஒப்ப அவன் இடு சாபம் என்றதனால் தெய்வமும் சாபமிட்டமை பெற்றாம். இது பாட்டிடை வைத்த குறிப்புப் பொருள். மணிமேகலா தெய்வம் மாதவியின் கனவில் தோன்றி நீ ஈன்றனை "காமன் கையறக் கடுநவை அறுக்கும் மாபெரும் தவக்கொடி என்றே நனவே போலக் கனவகத் துரைத்தேன் ஈங்கு இவ் வண்ணம் ஆங்கு அவட்கு உரை என்று அந்தரத்து எழுந்து ஆங்கு அந்தெய்வம் போயபின்" என [எ : ௩௬ - ௪௦] முன்னம் வந்தமையானும் உணர்க. அவன் : இந்திரன். நகர் - காவிரிப்பூம் பட்டினம். பகரும் யானும் என மாறுக. இதனை மணிமேகலைக்கு அறங் கூறும் செயல் தம்முடைய தாம் என அடிகளார் முன்னரே இருந்தி ஞானத்தால் உணர்ந்திருந்

தனர் என்பது பெற்றும். நின் பொருட்டால் என்றது நினக்கு அறங் கூறும் பொருட்டும் நின்னைக் காணும்பொருட்டும் என இரு பொருளும் பயந்து நின்றது. பதி : காஞ்சிமா நகரம். படர்ந்தனம் : தன்மைப் பன்மை வினைமுற்று.

## மணிமேகலை வேண்டுகோள்

### ௯௭ - ௯௫ : என்றலு......... என்ன

(இ - ள்.) என்றலும் - என்று கூற அது கேட்ட மணிமேகலை; அறவணன தாள் இணை இறைஞ்சி பொன்திகழ் புத்த பீடிகை போற்றும் தீவதிலகையும் இத திறம் செப்பினள் ஆதலின் - அறவண அடிகளாரின் திருவடிகளை வணங்கி அடிகேள்! பொன்னொளி விளங்குகின்ற புத்த பீடிகையை நாளும் வழிபட்டுப் போற்றுகின்ற தீவதிலகை எனனும் தெய்வமும் அம் மணிபல்லவத தீவின்கண் இச் செய்திகளை இவ்வாறே அறிவித்தனள், ஆதலால் அவள் கூறியவாறே; அவன அணிநகர் மருங்கே வேறு உருக்கொண்டு வெவ்வேறு உரைக்கும் நூல் துறை சமய நுண் பொருள கேட்டே - அந்த அழகிய வஞ்சி மாநகரத்தின் பக்கலிலே எனது பெண்ணுருவம் கரந்து மாதவனாகிய மாற்றுருவம் கொண்டு சென்று அவ்விடத்தே தம்முள் மாறுபட்டு வேறு வேறாகக் கூறுகின்ற சமய நூல் வழிப்பட்ட பல்வேறு சமயக்கணக்கரிடத்தும் அவ்வவர் சித்தாந்தமாகிய நுண்பொருள்களை வினவிக் கேட்ட பின்னர்; ஐவகைச் சமயமும் அ உருவெனன செவவிது அனமையில் சிந்தையின் வைத்திலேன் - அவற்றை யான் ஆராய்ந்து பார்த்தவிடத்தே அளவைவாதம் முதலிய ஐந்து வகையினுள் அடங்கும் அச் சமயக்கணக்கர் சித்தாந்தம் அனைத்தும் யான் மேற்கொண்டுள்ள அம் மாதவன் வடிவம்போன்றே பொய்யாய்ச் செம்மை உடையன அல்லாமை காணப்பட்டமையின் அவை மறக்கற்பாலன என்று துணிந்து என் சிந்தையினகண் வையாதுவிடுத்தேன் ஆதலின்; அடிகள் மெய்பபொருள் அருளுக என்ன - இபபொழுது அடிகள் எனக்கு மெய்மையாகிய செம்பொருளை அறிவித்தருளுக என்று வேண்டா நிற்ப என்க.

(வி - ம்.) புத்த பீடிகை - மணிபல்லவத்தில் அமைந்த புத்த பீடிகை. தீவ திலகை என்னும் தெய்வமும் இச் செய்திகளை இவ்வாறே கூறினள் என்றாள், இவற்றை யான் முன்னரே அறிந்துளேன என்றறிவித்தற்கு. அணிநகர் என்றது - வஞ்சி நகரத்தை. ஐவகைச் சமய நுண் பொருளும் வெறும் பொய் என்பதற்குத் தான் கொண்டிருந்த அப் பொய்யுருவமாகிய அம் மாதவன் உருவத்தையே உவமை எடுத்துக் கூறிய அழகு உணர்க. சமயம் என்னும் சாதி யொருமை பற்றி

செவ்விது என்று ஒருமை முடிபேற்றது. பன்மை ஒருமை மயக்கம் என்பாரும் உளர்.

[௪௬-ஆம் அடியாகிய இது முதல் இக்காதை முடியுங் காறும் அறவண அடிகளார் மணிமேகலைக்கு அறம் செவியறிவுறுத்துதலாம் ஒரு தொடர்]

### அறவணர் அறங்கூறத் தொடங்குதல்

௪௬ - ௫௯ : நொடிகுவே.........பிற

(இ - ள்.) நங்காய் நொடிகுவென் நீ நுண்ணிதின் கேள் - நங்கையே! நீ விரும்பியவாறே நான் உனக்கு அம் மெய்ப் பொருளைச் சொல்லுவேன் நீயும் விழிப்புடன் கூர்ந்து கேட்பாயாக; ஆதி சினேந்திரன் ஏதம் இல் பிரத்தியம் கருத்து அளவு என்ன அளவை இரண்டே - ஆதி பகவனாகிய புத்தர் தலைவன் குற்றம் இல்லாத காட்சி அளவையும் குற்றமில்லாத கருத்தளவையும் என்று அளவைகள் இரண்டே என்று வரையறை செய்துள்ளான்; சுட்டு உணர்வை பிரத்தியக்கம் எனச் சொலி நாம சாதி குணகிரியைகள் விட்டனர் - அவ்விரண்டனுள் ஐம்பொறிகளால் தனித்தனியே அவ்வவற்றிற்குரிய புலன்களைச் சுட்டி உணர்ந்து கொள்ளுதல் மட்டுமே காட்சி அளவையாம் என்று அறுதியிட்டுக் கூறி அளவைவாதி முதலியோர் கூறுகின்ற பெயர் வகை பண்பு செயல் முதலியவற்றைக் காட்சி அளவையோடு கூட்டாது ஒழித்து விட்டனர், எற்றுக்கெனின்; மற்று அவை அனுமானத்தும் அடையும் என - அப் பெயர் முதலியன காட்சி அளவைக்கு மட்டுமே உரியன ஆகாமல் கருத்தளவையினும் எய்தும் எனக் கருதியதனாலாம், இனி; காரண காரிய சாமானிய கருத்து ஓரின் பிழைக்கையும் உண்டு - அவர் கருத்தளவையினும் காரணக் கருத்தளவை காரியக் கருத்தளவை சாமானியக் கருத்தளவை என்று வகைப்படுத்திக் கூறும் கருத்தளவைகளைக் கூர்ந்து ஆராயுமிடத்து அவையும் பிழைபடுதலும் உண்டு; பிழையாததும் உண்டு - அவற்றில் பிழைபடாத அளவையும் ஒன்றுண்டு, அஃது யாதெனின்; கனலில் புகைபோல் காரியக் கருத்து - நெருப்பின் காரியமாகிய புகைபோன்ற காரியத்தை ஏதுவாகக் கொள்ளுகின்ற கருத்தளவை ஒன்றேயாம்; ஏனை அளவைகள் எல்லாம் கருத்தினில் ஆன முறைமையின் - பிறர் கூறுகின்ற ஏனைய அளவைகள் எல்லாம் ஆராய்ச்சியால் தோன்றுகின்ற முறைமை காரணமாக; அனுமானமாம் பிற - கருத்தளவையின்கண் அடங்குதலின் கருத்தளவை என்றலே அமையும் என்றார் என்க.

(வி - ம்.) நொடிகுவென் - சொல்லுவேன்; ஆதி சினேந்திரன் என்றது முதன் முதலாகப் பௌத்த சமயத்தை உலகில் பரப்பியவன். அந்த ஆதிப் புத்தன் காட்சி அளவையும் கருத்தளவையும் என இரண்டு அளவைகளே கொண்டனன். இவற்றுள் குற்றம் உடையனவும் உள. அவை கொள்ளப்படா என்பார் ஏதம் இல் பிரத்தியம் கருத்தளவு என்றார். ஏதம் இல் கருத்தளவு என்றும் பிரத்திய அளவு என்றும் இச்சொற்களை இரண்டிடத்தும் கூட்டிக் கொள்க. பிரத்தியம் - பிரத்தியக்கம் என்பதன் சிதைவு. பிரத்தியக்கம் எனினும் காட்சி எனினும் ஒக்கும். கருத்த எனினும் அனுமானம் எனினும் ஒக்கும். இனி, "காட்சி காண்டல் என்பன சவிகற்பக் காட்சிக்கும் பொதுவாதலால் பிரத்தியம் சுட்டுணர்வாய் வேறுபடுவது பற்றி மொழி பெயர்க்காதொழிந்தார் என உணர்க" என்பாரும் உளர். அங்ஙனமாயின் அவரே பிரத்தியம் என்னும் சொல்லுக்குக் காட்சி என்று பொருளுரைத்தல் போலியாம்; மேலும் காட்சி அளவைக்குச் சுட்டல் திரிதல் கவர்கோடல் சுட்டுணர்வொடு திரியக்கோடல் என்றும் ஐயம் தேராது தெளிதல் கண்டுணராமை என்றும் கூறியவாற்றால் அற்க என்று அவர் கூறிய விளக்கமும் போலியாம். என்னை? காட்சி அளவைக்குப் பௌத்தர்கள் இக் குற்றங்களைக் கூறார் ஆதலின் காட்சிக்கு இங்ஙனம் குற்றம் கூறுவார் அளவை வாதி முதலியோராவார். பௌத்தர்கள் குற்றமும் ஒன்று உளது என அதனை விலக்குதற்கு ஈண்டு ஏதம் இல் பிரத்தியம் என்றார். காட்சிக்கு உரிய குற்றம் பிரத்தியக்க விருத்தம் என்பதாம். அதன் இயல்பினைச் சிறிது போக்கிக் கூறுதும். ஆதி சினேந்திரனால் கொள்ளப்பட்ட காட்சி அளவை வேறு பிறர் கூறும் காட்சி அளவை வேறு என்பது தோன்ற, சுட்டுணர்வைப் பிரத்தியக்கம் எனச் சொல்லி அதற்கு ஏனையோர் கூறும் குணமும் குற்றமும் கொள்ளாது விட்டனர் என்றார். எனவே ஈண்டுச் சுட்டுணர்வு என்று அறவணர் கூறுகின்ற காட்சி அளவையின் இயல்பு வேறு, அளவை வாதிகள் கூறுகின்ற காட்சி அளவையின் இயல்பு வேறு என்றுணர்தல் வேண்டும். அளவை வாதிகள் சுட்டு என்பது காட்சி அளவையின் ஒரு குற்றமாகக் கொண்டனர். ஈண்டுச் சுட்டுணர்வே ஏதம் இல் காட்சி என்று அறவணவடிகள் கூறுதலைக் கூர்ந்து நோக்காது இதற்கும் அளவை வாதிகள் கூறுகின்ற சுட்டிற்கும் வேறுபாடு உணரமாட்டாமல் இரண்டிற்கும் ஒரு படித்தாக உரை கூறும் கூற்றுப் போலியாம் என்க. மேலும் இப்பிரத்திய அளவைக்கு அவர்கள் கூறும் விளக்கம் எல்லாம் பொருந்தாதனவேயாம். அவற்றை அவர் உரை நோக்கி உணர்க.

இனி, பௌத்தர்கள் கூறுகின்ற வாயில் ஊறு நுகர்வு என்னும் மூன்றன் கூட்டரவினால் உண்டாகும் உணர்வே காட்சி அளவை என்று கொள்வர். எனவே அவருடைய அறிவுக் கந்தமும் நுகர்ச்சிக் கந்தமும் ஒன்றுபடுங்கால் உயிரின் உணர்வு தெரிவது காட்சி அளவை என்று கொண்டனர் என்பது ௩௦ ஆம் காதையினும் விளக்குவாம். ஈண்டுச் சுட்டுணர்வு என்பதும் நுகர்ச்சிக் கந்தத்தையேயாம் என்றுணர்க. நுகர்ச்சிக் கந்தம் எனினும் வேதனை எனினும் ஒக்கும். எனவே சிவஞான சித்தியாரில் தன்வேதனைக் காட்சி என்பது மட்டுமே அவர் கூறுகின்ற சுட்டுணர்வு அல்லது பிரத்தியக்கம் என்றறிக. இனி, காண்டல் வாயில் மனம் தன்வேதனையோடு யோகக் காட்சியெனச் சைவ வாதிகள் கூறுகின்ற நால்வகைக் காட்சிகளுள் தன்வேதனைக் காட்சி ஒன்றுமே பௌத்தர்களுக்குக் காட்சி அளவையாம் என்பது பெற்றும். இனி அளவை

வாதிகள் காட்சி அளவைக்குக் கூறுகின்ற நாமசாதி குணக்கிரியைகள் கருத்தளவைக்கும் செல்லுதலின் அவற்றைக் கைவிட்டனர். இனி அனுமானத்திற்குக் கூறுகின்ற காரணகாரிய சாமானியங்களும் பிழைபடும் என அவற்றையும் பௌத்தர்கள் கைவிட்டனர். ஆயினும் அவற்றுள் கனலில் புகைபோல் என வருகின்ற காரியானுமானம் மட்டும் பௌத்தர்களுக்கும் உடன்பாடேயாம். இவற்றையன்றி அளவை வாதிகள் கூறுகின்ற ஏனைய உவமம் ஆகமம் அருத்தாபத்தி ஐதிகம் அபாவம் மீட்சிமொழிவறிவு எய்தியுண்டாம் நெறி என்னும் எட்டளவைகளும் கருத்தளவின்கண் அடங்குவனவாதலின் அவற்றை வேறளவையாகக் கொள்ளுதல் இலேம் என்பார் ஏனை அளவைகள் எல்லாம் கருத்தினில் ஆன முறைமையின் அனுமானமாம் என்றார். பிற: அசைச்சொல்.

## கருத்தளவையின் உறுப்புகளும் அவற்றின் இயல்புகளும்

### ௫௭ - ௯௭ : பக்கம்.........ஆகும்

(இ - ள்.) பக்கம் ஏது திட்டாந்தம் உபநயம் நிகமனம் என்ன ஐந்து உள - இனி இரண்டாவதாகிய கருத்தளவைக்கு மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டும் உபநயமும் நிகமனமும் என்று கூறப்படுகின்ற ஐந்து உறுப்புகள் உள்ளன; அவற்றில் பக்கம் இம்மலை நெருப்பு உடைத்து என்றல் - அவ்வைந்தனுள் முன்னிறுத்தப்பட்ட மேற்கோள் ஆவது இந்த மலை நெருப்பினை உடையதாம் என்று கூறுதல்; ஏது - அங்ஙனம் கூறுதற்கு ஏதுவாவது; புகை உடைத்து ஆதலால் எனல் - இம்மலை தன்னிடத்தே புகை உடையதாய் இருத்தலால் எனல் அம்மேற்கோளுக்குப் பொருந்திய ஏதுக் கூறியவாறும்; திட்டாந்தம் வகை அமை அடுக்களை போல் - இனித் திட்டாந்தம் எனப்படுவது பலவகையமாக அமைந்த அடுக்களை போன்று என ஒன்றினை எடுத்துக் காட்டுதல்; உபநயம் மலையும் புகை உடைத்து என்றல் - இனி உபநயம் ஆவது இம்மலையும் புகையுடையது என்று கூறுதல்; நிகமனம் புகை உடைத்தே நெருப்புடைத்து எனல் - இனி நிகமனம் ஆவது புகை உடையது எதுவோ அது நெருப்பும் உடையது ஆம் என்று கூறுதல்; நெருப்புடைத்து அல்லாது யாதொன்று அது புகைப்பொருத்தம் இன்று புனல்போல் என்றல் - யாதொரு பொருள் நெருப்புடையது அல்லாத பொருளோ அது புகைப் பொருத்தமும் இல்லாததாம் நீர் போல என்று கூறுதல்; மேவிய பக்கத்து மீட்சி மொழியாய்- பொருந்திய மேற்கோளின் இன்றும் எதிர்மறைச் சொல்லாய்; வைதன்மிய திட்டாந்தம் ஆகும் - எதிர்மறை எடுத்துக் காட்டாகும் என்றார் என்க.

(வி - ம்.) பக்கம் - மேற்கோள். ஏது - கருவி, திட்டாந்தம் - எடுத்துக் காட்டு, உபநயம் - துணிந்தது துணிதல். நிகமனம் - நிலை

நாட்டுதல் என நிரலே தமிழில் கூறிக்கொள்க. இனி எதிர்மறை எடுத்துக் காட்டாவது: நிலை நாட்டிய தொன்றனை மேற்கோளின் மறுதலைப் பொருள் ஒன்றனை எடுத்துக் காட்டுமாற்றானும் உறுதி யூட்டுதல். இங்ஙனம் கூறும் எடுத்துக்காட்டை வைதன்மிய திட்டாந்தம் என்பர். ஈண்டு மேற்கோளாகிய நெருப்பிற்கு மறுதலைப் பொருளாகிய புனலின்கண் புகையின்மையில் அதனை எடுத்துக் காட்டுதல் காண்க. மீட்சி மொழி - மறுதலைச் சொல், என்றது புனலை. புனல் - நீர். வைதன்மிய திட்டாந்தம் - எதிர்மறை எடுத்துக்காட்டு எனவே முன் கூறிய எடுத்துக் காட்டாகிய அடுக்களை உடன்பாட்டு எடுத்துக்காட்டு என்பார், வகை அமை அடுக்களை என்றார். வகை. பண்பு வகை எனவே அதனைச் சாதன்மிய திட்டாந்தம் என்ப.

இதுவுமது

கூ௪ - எகூ: தூய.........என்க

(இ - ள்.) தூய காரிய ஏது சுபாவம் ஆயின் - இனி மேற்கோளைச் சாதிப்பதில் சிறந்ததாகிய காரிய ஏது மேற்கோளுக்கு இயல்பாய பண்பாயின்; சத்தம் அநித்தம் என்றல் பக்கம் - ஒலி அழியும் பொருள் என்பது மேற்கோள்; பண்ணப்படுதலால் எனல் பக்கதன்ம வசனமாகும் - செய்யப்படுவதால் என்றல் மேற்கோளின் இயல்பு கூறும் மொழியாகும்; யாதொன்று யாதொன்று பண்ணப்படுவது அநித்தம் கடம் போல் என்றல் - யாதொரு பொருள் யாதொரு பொருள் பண்ணப்படுவதோ அப் பொருள் அழியும் பொருளாகும் குடம்போல் என்று கூறுதல் மேற்கோளோடு தொடர்ச்சியுடைய உடன்பாட்டு மொழியாம்; யாதொன்று அநித்தம் அல்லாதது பண்ணப் படாதது ஆகாசம் போல் எனல் - யாதொரு பொருள் அழியாத பொருளாய் இருக்குமோ அப் பொருள் ஒருவரால் செய்யப்படாத இயற்கைப் பொருளாகவும் இருக்கும் வானம் போல் என்று கூறுதல்; விபக்க தொடர்ச்சி மீட்சி மொழி என்க - மேற்கோளின் மறுதலைப் பொருளொடு தொடர்புடைய மறுதலை மொழி என்றார் என்க.

(வி - ம்.) முன்னர் அளவை வாதிகள் கூறும் காரணம் காரியம் சாமானியம் என்னும் மூவ்வகை அனுமானங்களும் ஆராயுமிடத்துப் பிழைபடுதலும் உண்டு, அவற்றுள் காரியானுமானத்தில் அவ்வளவை வாதிகள் கனலில் புகைபோல் என்று கூறும் காரியானுமானம் மட்டும் ஓரோ வழி, பிழைபடாதது ஆதலும் கூடும் என்றார் ஈண்டு அவர் கூறும் அவ்வனுமானம் போல எவ்வாற்றானும் பிழைபடாத காரியானுமானம் இது என்பார் தூய காரிய ஏது சுபாவம் ஆயின் சத்தம் அநித்தம் என்றல் என்றார். இங்ஙனம் கூறுமிடத்து சத்தம் அநித்தம் என்பது மேற்கோள். பண்ணப்படுதலால் என்பது ஏது. இவ்வேது மேற் கோளின் தன்மையை அறிவுறுத்துதலின் அதுவே மேற்கோளின்

தன்மையைக் கூறும் மொழியாகவும் அமைதலின் அகனைப் பக்கதன்ம வசனம் ஆகும் என்றார். யாதொன்று யாதொன்று கடம் போல் என்றல் தன் மேற்கோளோடு தொடர்புடைய மொழியாகிய எடுத்துக் காட்டாகும். இதற்கு எதிர்மறை எடுத்துக்காட்டு ஆகாசம் ஆம். சபக்கம் உத்தேசமாக எடுத்துக் கொண்ட மேற்கோள்; இதன் மறுதலை விபக்கம் என்றறிக. மீட்சி மொழி : எதிர்மறைச் சொல்.

## இதுவுமது

எஎ - அசு : அநன்னு.........ஆகும்

(இ - ள்.) அநன்னு வயத்தில் பிரமாணமாவது - பொருளும் ஏதுவும் சேர்ந்திராத இடத்தில் அவற்றின் இன்மையைக் காண்டற்கு அளவையாவது; இவ் வெளி இடைக்கண் - இந்த வெற்றிடத்தில்; குடம் இலை என்றல் செவ்விய பக்கம் - இந்த வெற்றிடத்தில் குடம் இல்லை என்று துணிதல் செம்மையான மேற்கோளாகும்; தோன்றாமை இல் எனல் - காணப்படாமையால் இல்லை என்று கூறும் ஏது; பக்க தன்ம வசனமாகும் - மேற்கோளின் தன்மை உணர்த்தும் மொழியாகும்; இன்மையின் கண்டிலம் முயற்கோடு (போல்) என்றல் அந்நெறிச் சபக்கம் - இல்லாமையால் யாம் கண்டிலம் முயற்கொம்பைக் காணமாட்டாமை போல என்பது அவ்வழியில் உடன்பாட்டு மேற்கோள் தொடர்ச்சி எடுத்துக் காட்டாகும்; யாதொன்று உண்டு அது தோற்றரவு அடுக்கும் - யாதொரு பொருள் ஓரிடத்தில் உளதாம் அது காட்சிக்குப் புலப்படும்; கை நெல்லி போல் எனல் ஏற்ற விபக்கத்து உரை எனல் ஆகும் - அகங்கையில் இருக்கின்ற நெல்லிக்கனி போல என்று மொழிதல் இதற்கேற்ற மறுதலை மீட்சி மொழி என்று கூறலாம் என்றார் என்க.

(வி - ம்.) அநன்னுவயம் - பொருளும் ஏதுவும் இல்லாமை. அவ் வில்லாமையைத் துணிதலே ஈண்டு மேற்கோளாம் என்க. அதற்குப் பொருள் தோன்றாமையே ஏதுவாயிற்று. இல் பொருளுக்குத் தோன்றா மையே இயல்பும் ஆயிற்று என்பார் இல்லை என்றல் பக்கம் எனவும் தோன்றாமையால் இல்லை என்றல் அவ் வில்லாமையின் இயல்புணர்த்தும் மொழியும் ஆதல் உணர்க. இன்மையால் கண்டிலம் முயற்கொம்பினைக் காணமாட்டாமைபோல என்றது மேற்கோளைத் தொடர்ந்து வந்த எடுத்துக் காட்டு என்பார் அந்நெறிச் சபக்கம் என்றார். இன்மைக்கு உண்மை மறுதலையாகலின் தோன்றுதலும் கைநெல்லிபோல் என்னும் எடுத்துக் காட்டும் அநன்னுவயத்தில் மேற்கோளின் மறுதலையைத் தொடர்ந்து வந்த மொழிகள் ஆயின என்க.

## அறவண அடிகள் பிறர்தம் மதங் கூறி மறுத்தல்

### அடு - கூரு : இவ்வகை..........வேண்டும்

(இ - ள்.) இவ் வகை ஏது பொருள் சாதிப்பன - மணிமேகலாய் ஈண்டு யாம் கூறியவாறே ஏதுவினால் துணிபொருள் சாதிக்கப்படுவனவாம்; காரியம் புகை சாதித்தது எனவே என்னின - அளவைவாதி முதலியோரைக் காரியானுமானத்தில் காரியமாகிய புகை துணிபொருளை எவ்வண்ணம் சாதித்தது என்று வினவின் அவர் யாம் மேலே கூறியவாறு கூறாமல் பின் வருமாறு கூறுவர்; புகை உளவிடத்து நெருப்பு உண்டு எனனும் அனுவயத்தாலும் - புகை இருக்குமிடத்தே சாதன சாத்தியம் ஒருங்கிருத்தல் என்னும் அனுவயத்தாலும்; நெருப்பிலா இடத்து புகை இல்லை என்னும் வெதிரேகத்தாலும் - நெருப்பு இல்லாத இடத்தில் புகையும் இல்லை என்னும் எதிர்மறையானும்; புகை இ - புகையானது; நெருப்பைச் சாதித்தது எனனின் - நெருப்புண்மையை அறிவித்தது என்பர், இங்ஙனம் கூறின்; நேரிய புகையின் நிகழ்ந்து உண்டான வளர்த்தச் சாமம் கொடிச் சாமம் - நுணுகிய புகையின் வாயிலாக நிகழ்ந்து உண்டான மேல் நோக்கிய செலவும் வளைந்து செல்லும் செலவும் என்னும் இருவகைக் காரியங்களை; வாய்த்த நெருப்பின வருகாரியம் ஆதலின - தமக்குக் காரணமாக வாய்த்த நெருப்பினின்றும் தோன்றி வருகின்ற காரியங்கள் ஆதலின்; மேல் நோக்கிக் கறுத்து இருட்ப - மேல் நோக்கிச் சென்று கறுத்திருப்பனவும்; பகைத்திருப்ப தாமே - இவ்வாறு மேல் நோக்கிச் செல்லுதலினின்றும் மாறுபட்டு வளைந்து சென்று வெளுத்திருப்பனவும் ஆகிய காரியங்களால் உண்டான பொருள்கள் தாமும்; நெருப்பைச் சாதிக்க வேண்டும் - தாம் தோன்றிய நிலைக்களத்தே நெருப்புண்மையை அறிவித்தல் வேண்டும் அன்றோ? அக் காரியங்கள் தோன்றும் நிலைக்களத்தில் நெருப்பில்லாமையின் அக் காரியானுமானம் பொருந்தாது என்றார் என்க.

(வி - ம்.) அறவண அடிகள் முன்னர் ஏனையோர் கூறும் காரண காரியச் சாமானியக் கருத்து ஓரின் பிழைக்கையும் உண்டு எனவும் அவற்றுள் பிழையாதது கனலில் புகைபோல் காரியானுமானம் என்று உடன்பட்டார்; அங்ஙனம் உடன்பட்டவர் கனலில் புகைபோல் காரியானுமானங்களும் பக்கம் முதலிய ஐந்து உறுப்புகளால் ஆராய்ந்து காண்போர்க்கே பிழைபடாததாம் என இக் கூ ஆம் அடி முதலாக எ ஆம் அடி இறுதியாகத் தாமே ஆராய்ந்து காட்டினர். ஈண்டு அவ்வாறன்றி அன்னுவயத்தாலும் வெதிரேகத்தாலும் காரியானுமானம் துணிபொருளைச் சாதிக்கும் என்பார் கூற்றைத் தாமே எடுத்துக் கூறி அவர் கூற்றுப் பிழைபடுமாற்றைக் காட்டி மறுத்தவாறு. காரியம் புகை காரியமாகிய புகை. அன்னுவயம் - சாதன சாத்தியம் ஒருங்கிருத்த

நேரிய புகை - நுண்மையான புகை. புகைவாயிலாய் நிகழ்ந்துண்டான ஊர்த்தசாமமும் கௌடிலச்சாமமும் என்னும் இருவகைக் காரியங்கள் என்றவாறு. ஊர்த்தசாமம் கௌடிலச்சாமம் என்பன நிரலே மேல் நோக்கிச் செல்லும் காரியம் வளைந்து படர்ந்து செல்லும் காரியம் என்னும் பொருளுடையன. இக் காரியங்களால் உண்டாக்கப்பட்ட பொருள் வானத்தே கறுத்த பிழம்புகளாகவும், வெள்ளிய பிழம்புகளாகவும் கரிய பிழம்புகளாகவும் மேல் நோக்கிச் செல்லுவனவாகவும் படர்ந்து செல்லுவனவாகவும் இருப்பன புகையே அன்றிப் பிறவும் உள; அவை நெருப்பினின்றும் தோன்றுவன அல்ல; ஆகவே அக்காரியங்கள் இருந்தும் அவை நெருப்பைச் சாதிக்க மாட்டாமையின் அவர் கூறும் முறை பிழைபடுதல் அறிக; என்று அறிவுறுத்த படியாம். இது காரியத்தை மறுத்தவாறு. கறுத்திருப்ப கைத்திருப்ப என்பன பலவறி சொல். அவை புழுதிப்படலமும் முகிற்படலமும் பனிப்படலமும் பிறவுமாம் என்க. இவற்றில் அக்காரியங்கள் உளவாதலும் உணர்க.

## அன்னுவயத்திற்கு மறுப்பு

### ௯௯ - ௧0௧: அன்னு.........கூடா

(இ - ள்.) அன்னுவயம் சாதிக்கின் - இனிச் சாதன சாத்தியம் ஒருங்கிருத்தலாகிய அன்னுவயங் கண்டான் பின்னர் அவற்றுள் சாதனத்தை மட்டும் கண்டுழி அதனோடு சாத்தியமும் இருத்தல் வேண்டும் என்று துணியின்; முன்னும் கழுதையையும் கணிகையையும் தம்மில் ஒரு காலத்து ஓர் இடத்தே அன்னுவயம் கண்டான் - முன்னொரு காலத்தே ஒரு கழுதையையும் ஒரு கணிகை மகளையும் ஓர் இடத்தே அணுகி நிற்கக்கண்டவன் ஒருவன்; பின் காலத்துக் கழுதையைக் கண்டு அவ்விடத்தே கணிகையை அனுமிக்க வேண்டும் - பின்னொரு காலத்தே பிறிதோரிடத்தே கழுதையை மட்டும் கண்டு அவ்விடத்தே கணிகையும் இருப்பாளாகத் துணிதல் வேண்டும்; அது கூடா - அங்ஙனம் துணிதல் கூடாமையின் அதுவும் பிழைபடுதல் அறிக என்றார் என்க.

(வி - ம்.) அன்னுவயத்தால் பொருளுண்மை சாதிக்கக் கூடுமாயின் கழுதையையும் கணிகையையும் அன்னுவயம் கண்டான் பின்னொரு காலத்தே கழுதையைத் தனித்துக் கண்டவன் அங்குக் கணிகையும் இருத்தல் வேண்டும் என்று, துணிதல் வேண்டும் என்று நகைச்சுவை பட மறுத்தவாறும். அனுமித்தல் - துணிதல்.

## வெதிரேகத்தை மறுத்தல்

### ௧0௧ - ௧0௪: நெருப்பு..........ஆகாது

(இ - ள்.) நெருப்பு இலா இடத்து புகை இலை எனல் வேண் அத்திருத்தகு வெதிரேகம் சாதிக்கும் என்னின் - இனி

நெருப்பு இல்லாத இடத்தில் புகையும் இல்லையாம் எனல் போன்ற அந்தச் சிறப்பு மிக்க எதிர்மறை துணிபொருளைச் சாதிக்கும் என்றுலோ; நாய் வால் இல்லா கழுதையின் பிடரின் நரி வாலும் இல்லையாக் காணப்பட்ட அதனையே கொண்டு - ஒருவன் ஓரிடத்தே ஒரு காலத்தே கழுதையின் பிடரி மயிரைக் கண்டு இது நாய் வாலோ அல்லது நரியின் வாலோ என்று ஐயுற்று அனுகிப்பார்க்குமிடத்தே ஆண்டு நாய் வாலும் நரி வாலும் இல்லையாகக் காணப்பட்ட அக் காட்சியையே ஏதுவாகக் கொண்டு; பிறிதோர் இடத்து நரி வாலின் நாய் வாலை அனுமித்தல் அரிதாம் அதனுல் அதுவும் ஆகாது - அவன் மற்றொரு காலத்தே வேறோரிடத்தே ஒரு வாலைக் கண்டவன் அது நரி வால் இல்லையாதல் கண்டு இது நாய் வாலும் இல்லை எனத் துணிதல் வேண்டும், அதுவும் இயலாதாம் ஆதலினுல் இவ்வெதிர்மறைக் கருத்தளவையும் அளவையாகமாட்டாது என்றுர் என்க.

(வி - ம்.) நெருப்பிலா இடத்துப் புகை இல்லையாம்; ஆகவே எம் மலையிடத்துப் புகை யுளதோ அங்கு நெருப்பும் இருத்தல் வேண்டும் என்று துணிதற்கு இவ்வெதிர்மறை ஏதுவாதலின் இதனையும் அளவை யாகக் கொள்வர் அளவை வாதிகள். அவ்வெதிர்மறை ஏதுவினை ஈண்டு அறவண அடிகளார் எடுத்துக் காட்டி நகைச்சுவை தோன்ற மறுத்தல் உணர்க. காணப்பட்ட வால் நாய் வால் ஆதலும் கூடுமாதலின் அதுவும் ஆகாது என்றவாறு. இவ்வாற்றுல் கருத்தளவைக்குப் பிறர் கூறும் காரியமும் அன்னுவயமும் வெதிரேகமும் ஆகிய உறுப்புகள் போலி என்றறிவித்த படியாம். திருத்தகு வெதிரேகம் என்றது இகழ்ச்சிக் குறிப்பு.

## பக்கம் முதலிய ஐந்துறுப்புகளுள் மூன்றுறுப்புகளே பௌத்தர் மேற்கொள்வர் என்றல்

கூ0கூ - ககஉ : ஒட்டிய..........உள

(இ - ள்.) உபநயம் நிகமனம் இரண்டும் ஒட்டிய - கடங்காய் முன்பு யாம் பக்கம் முதலாகக் கூறப்பட்ட கருத்தளவையின் உறுப்புகள் ஐந்தனுள் இறுதியில் நின்ற உபநயமும் நிகமனமும் ஆகிய இரண்டுறுப்புகளும் தருக்கவாதி முதலிய பிற சமயக் கணக்கர்களால் சேர்க்கப்பட்டவையாம்; திட்டாந்தத்திலே சென்று அடங்கும் - எடுத்துக்காட்டு என்னும் உறுப்பிலே அவ்விரண்டும் புக்கு அடங்குவனவாம் ஆகவே; பக்கம் ஏது திட்டாந்தங்கள் - நம்மனோர் இப்பொழுது மேற்கொள்வன மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டும் ஆகிய மூன்றுறுப்புகள் மட்டுமேயாம்; ஒக்க நல்லவும் தீயவும் உள - அம் மூன்றனுள் தம்முள் ஒப்ப நல்லனவும் தீயனவும் ஆகிய உறுப்புகளும் உளவாம் என்றுர் என்க.

(வி - ம்.) உபநயம் நிகமனம் இரண்டும் ஒட்டிய என மாறுக. ஒட்டிய - பிறரால் ஒட்டப்பட்ட. அவ்வாறு ஒட்டி ஐந்துறுப்பினையும் பயில வழங்குபவர் நையாயிகரும் வைசேடிகரும் பிறரும் என்க. தருக்க நூலோர் ஆகிய அவர்—

"உரைசெய்பிர திக்ஞையு மேதுவுமு தாகரண முபநயம்பின்
பரவிநிக மனமுமெனும் படித்தாகு மேத்துவா பாச மப்பாற்
கருதிலவை யைவகையாஞ் சித்தவிசித் தத்தொடனே
காந்தி கஞ்சேர்ப்
பிரகரணச் சமமொடுகா லாத்தியா பதிட்டமெனப் பேசலாமே"

என்பர். (மெய்ஞ்ஞான : சஉஆம் சருக்.)

## அறவணர் கருத்தளவையின் தாம் மேற்கொண்டுள்ள பக்கம் முதலிய மூன்றுறுப்புகளின் இயல்புகளை இனிக் கூறத் தொடங்குகின்றார்

ககஉ - ககஎ அதில்..........நாட்டுக

(இ - ள்.) அதில் - அவற்றுள்; வெளிப்பட்டுள்ள தன்மி யினையும் வெளிப்பட்டுள சாத்திய தன்மத்திறம் - தன் மாற்று ருடன் சொற்போர் செய்தலையால் அனைவரும் காணும்படி வெளிப்பட்டிருக்கின்ற துணிபொருளையும் அவ்வாறே வெளிப் பட்டிருக்கின்ற அத் துணிபொருளின் பண்புத்தன்மையையும்; பிறிதில் வேரும் வேறுபாட்டினையும் - பிற பொருள் களில் நின்றும் வேறாகும் வேற்றுமையையும்; தன்கண் சார்த்திய நயந்தருதல் உடையது நன்கு என் பக்கம் என நாட்டுக - தன்னிடத்தே ஏறட்டுக் கொண்டிருக்கின்றதொரு நன்மையைத் தருவது எதுவோ அது நன்று என்று கூறப்படுகின்ற மேற்கோள் என்று உள்ளத்தில் பதித்துக் கொள்வாயாக என்றார் என்க.

(வி - ம்.) அதில் : ஒருமைப் பன்மை மயக்கம். சொற்போரின் பொருட்டுப் பலரும் அறிய எடுத்துச் சொல்லிய தன்மி என்பார் வெளிப் பட்டுள்ள தன்மி என்றார். தன்மி தன்மத்தை உடையது. தன்மம்-பண்பு. தன்மி அதனை உடையது. ஈண்டுத் தன்மி என்றது சாத்தியத்தை. அஃதாவது, துணி பொருளை என்க. தன்மத்திறம் அதற்கியல்பாம் தன்மை. பிறிது என்றது மேற்கோளின் மறுதலைப் பொருளை. தன்கண் சார்த்துதலாவது - தன்பால் உடையதாய் இருத்தல். அவ் வேறு பாடுடைமையே மேற்கோளுக்கு ஆக்கந் தருதலின் அவ்வாக்கத்தை நயம் என்றார். வெளிப்பட்டுள்ள தன்மையினைத் தன்கண் சார்த்திய நயம் எனவும் பிறிதில் வேரும் வேற்றுமையைத் தன்கண் சார்த்திய நயம் எனவும் தனித்தனி கூறிக் கொள்க. நன்கென் பக்கம் என்றது முன்னர் நல்லவும் தியவுமாகிய பக்கங்களுள் நல்லனவாகியவற்றுள்

ஒன்றாகிய பக்கம் என்றவாறு. ஈண்டு விரித்துக் கூறிய நயம் இரண்டனுள் முன்னது ஒற்றுமை நயம். பின்னது வேற்றுமை நயம் என்க.

## இதுவுமது

### ககஎ - கஉச: அதுதான்.........விடுதலும்

(இ - ள்.) அதுதான் - அங்ஙனம் காட்டுதலாவது; சத்தம் அநித்தம் நித்தம் என்று ஒன்றைப்பற்றி நாட்டப்படுவது - சத்தமானது அநித்தம் என்றுதல் நித்தம் என்றுதல் தான மேற்கொண்டுள்ள இவ்விரண்டனுள் ஒன்றை ஏதுவானும் எடுத்துக்காட்டானும் சாதித்து நிறுத்துவதாம்; தன்மி சத்தம் - இதன்கண் தன்மியாவது சத்தமாம்; சாத்திய தன்மமாவது - ஈண்டு துணிந்த பொருளின் தன்மையாவது; நித்தா நித்தம் - நித்தமாதல் அநித்தமாதல் இவ்விரண்டனுள் தான மேற்கொண்டதே துணிபொருளின் தன்மமாம்; நிகழும் நல் ஏது மூன்றாய்த் தோன்றும் - இங்ஙனம் கூறப்பட்ட மேற்கோளுக்கு நிகழா நின்ற நல்ல ஏதுவும் மூன்று வகையாகக் காணப்படும், அவையாவன; மொழிந்த பக்கத்து ஒன்றி நிற்றலும் சபக்கத்து உண்டாதலும் விபக்கத்து இன்றியே விடுதலும் - எடுத்துக்கொண்ட மேற்கோளில் சிறப்பாகப் பொருந்தி நிற்றலும் அதனைச் சார்ந்து வந்த மேற்கோளிலும் பொருந்தி நிற்றலும் மறுதலை மேற்கோளின்கண் இல்லா தொழிதலும் என்னும் இம் மூவகையும் ஆம் என்றார் என்க.

(வி - ம்.) சத்தம்: எழுவாய். அநித்தம் நித்தம் - சத்தமானது அநித்தம் என்றுதல் நித்தம் என்றுதல் தான் மேற்கொண்டதொன்றைப் பற்றி வாதிட்டு நிலை நாட்டுவது என்க. அங்ஙனம் நிலை நாட்டுங்கால் தான் நாட்டிய பண்பினை ஏற்றுக்கொள்வது சத்தமே யாதலின் தன்மி சத்தம் என்றார். சத்தத்திற்கு உரித்தாக நாம் மேற்கொள்ளும் இருவகைப் பண்புகளுள் ஒன்றே சாத்திய தன்மமாம் என்பது கருத்து. மேற்கோளைச் சாதித்தற்கு நம்மால் கூறப்படும் ஏதுக்கள் மூன்றுவகைப் படும் என்று அறிவித்தவாறு. மொழிந்த பக்கத்து வாதத்திற்கு எடுத்து மொழிந்த மேற்கோளின்கண் என்க. சபக்கம் தன் மேற்கோளின் சார்பாக வரும் மேற்கோள். அவ்வேது அங்ஙனம் வரும் துணைமேற்கோளிலும் இருக்கும், விபக்கம் மறுதலை மேற்கோள். அதன் கண் ஏதுவின் இன்மை உளதாம். இவ்வாற்றால் ஏது மூன்று வகைப்படும் என்றாராயிற்று. பக்கத்தினும் சபக்கத்தினும் உண்மை வகையான் இரண்டு ஏதுக்களும், விபக்கத்தில் இன்மை வகையால் ஓர் ஏதுவும் ஆக மூன்றும் என்க. விபக்கத்தில் ஏதுவின் இன்மையே ஓர் ஏதுவாக மேற்கோளைச் சாதிப்பது உணர்க.

## ஏதுக்களின் விளக்கம்

### ௧௨௪ - ௧௩௫ : சபக்கம்.........என்க

(இ - ள்.) சபக்கம் சாதிக்கில் - துணைமேற்கோளால் தான் எடுத்துக்கொண்ட மேற்கோளைச் சாதக்குமிடத்தே; பொருள் தன்னால் - தான் எடுத்துக்காட்டும் பொருளால்; பக்கத்து ஒத்த பொதுவகை - தான் மேற்கொண்ட பொருளுக்கு ஒத்த பொதுத் தன்மை அத்துணை மேற்கோளோடும்; ஒன்றி இருத்தல் - பொருந்தியிருத்தல், அஃதாவது; சத்த அநித்தம் சாத்தியம் ஆயின - மேற்கொண்ட சத்தத்திற்கு அநித்தம் சாத்திய தன்மம் ஆகுமிடத்தே அச்சத்தத்தோடு; ஒத்த அநித்தம் கடாதி போல் எனல் - ஒத்த தன்மத்தையுடைய தன்மியாகிய குடம் போல என்று கூறுதல் இதற்கு; விபக்கம் விளம்பில் - மறுதலை மேற்கோள் கூறின்; யாதொன்று யாதொன்று அநித்தம் அல்லாதது பண்ணப்படாதது ஆகாசம் போல் என்றுகும் - யாதொரு பொருள் யாதொரு பொருள் அழிவில்லாததோ அப்பொருள் ஒருவரால் செய்யப்படாத பொருளும் ஆம் வானத்தைப் போல் என்று எடுத்துக்காட்டுக் கூறப்படுவதாம், இங்ஙனம் கூறுங்கால்; பண்ணப்படுதலும் செயலிடைத் தோன்றலும் நண்ணிய பக்கம் சபக்கத்திலுமாய் - பண்ணப்படுவதும் தொழிலிடத்தே தோன்றுவதும் ஆகிய இரண்டு ஏதுக்களும் பொருந்திய மேற்கோளிடத்தும் துணை மேற்கோளிடத்துமாம் உளவாகி; விபக்கத்து இன்றி - மறுதலை மேற்கோளிடத்தே இல்லாமல்; அநித்தத்தினுக்கு - சாதிக்கப்பட்ட சாத்திய தன்மமாகிய அநித்தத்திற்கு; மிகத் தரும் ஏதுவாய் விளங்கிற்று என்க - மிகவும் ஆக்கம் தருகின்ற ஏதுவாக விளங்கிற்று என்று கூறுக என்றார் என்க.

(வி - ம்.) சபக்கம் துணிபொருளை வற்புறுத்துதற்கு எடுத்துக் காட்டுகின்ற துணைமேற்கோள். பொருள் - துணிபொருள். பொதுவகை - பொதுத்தன்மை. சத்த அநித்தம் ஒலியின் நிலையாமை. சாத்தியம் என்பது நிலையாமை உடையது என்று துணிவது. ஒலி தோன்றிய பொழுதே அழிதலின் ஏது ஊன்றி நிற்றல் காண்க. துணை மேற்கோளாகிய குடத்தின்கண் அந்நிலையாமை உண்டாதலும் காண்க. விபக்கம் ஆகாசம் என்றது ஈண்டுப் பிறர் தம் தம் மேற்கொண்டு கூறிய படியாம். என்னை? பௌத்தருக்கு ஆகாசம் ஒரு பூதம் என்றல் உடன்பாடின்மையின் என்க. விபக்கம் - மறுதலை மேற்கோள். அதன்கண் துணி பொருளின் இன்மையே ஏதுவாய் அதற்கு ஆக்கம் தருதல் காண்க.

## நல்ல எடுத்துக் காட்டுகள்

### கஙகூ - கசஉ: ஏதமில்..........ஒத்தன

(இ - ள்.) ஏதம் இல் திட்டாந்தம் இருவகை - குற்றமில்லாத எடுத்துக்காட்டுகள் இரண்டு வகைப்படுவனவாம், அவையாவன; சாதன்மியம் வைதன்மியம் என - சாத்திய தன்மத்தை உடையதும் அஃதில்லாததும் என்று கூறப்படுவன இவற்றுள்; சாதன்மியம் எனப்படுவது அனுவயத்து அநித்தம் கடாதி என்கை - சாதன்மிய திட்டாந்தம் என்பது சாத்திய தன்மத்தோடு தானும் ஒத்திருக்கும் வகையில் நிலையாமை உடையன என்று குடம் முதலியவற்றை எடுத்துக்காட்டுதல்; வைதன்மிய திட்டாந்தம் சாத்தியம் எய்தா இடத்தில ஏதுவும் இன்மை-வைதன்மிய திட்டாந்தமாவது, சாத்திய தன்மைததிறம் இல்லாத இடத்தில் மேற்கோள் தன்மமாகிய ஏதுவும் இலலா தொழிதல்; இத்திறம் நல்ல சாதனத்து ஒத்தன-இத் தன்மைகள் மேற்கூறிய நல்லேதுக்களோடு பெரிதும் ஒத்தன என்றார் என்க.

(வி - ம்.) சாதன்மியம்-துணி பொருளோடு ஒத்த பண்புடைமை. வைதன்மியம் - துணிபொருள் பண்பிற்கு மறுதலையாதல் [அஃதாவது அநித்தம் அல்லாதது - பண்ணப்படாதது. ஆகாசம் போல் என்று முன்னும் வந்தமை உணர்க] நல்ல சாதனம் என்றது முன் கூறிய நல்லேதுக்களை.

## மேற்கோட் போலியும் ஏதுப் போலியும் எடுத்துக்காட்டுப் போலியும்

### கசங - கஞங: தீய..........என

(இ - ள்.) தீய பக்கமும் தீய ஏதுவும் தீய எடுத்துக் காட்டும் ஆவன - குற்றமுடைய மேற்கோளும் குற்றமுடைய ஏதுவும் குற்றமுடைய எடுத்துக்காட்டும் ஆகிய இவை; பக்கப் போலியும் ஏதுப் போலியும் திட்டாந்தப் போலியும் ஆம் - மேற்கோட் போலியும் ஏதுப்போலியும் போலி எடுத்துக் காட்டும் என்பனவாம்; இவற்றுள் பக்கப் போலி ஒன்பது வகைப்படும் - இவற்றுள் மேற்கோட் போலி ஒன்பது வகைப்படும், அவை; பிரத்தியக்க விருத்தம் அனுமான விருத்தம் சுவசன விருத்தம் உலோக விருத்தம் ஆகம விருத்தம் - காட்சி முரணும் கருத்து முரணும் தன் மொழி மாறுபாடும் உலக மலைவும் நூல் முரணும்; அப்பிரசித்த விசேடணம் அப்பிரசித்த விசேடியம் அப்பிரசித்த உபயம் அப்பிரசித்த சம்பந்தம் என- பண்பு விளங்காமை சிறப்பு விளங்காமை பண்பும் சிறப்பும் ஒருங்கே விளங்காமை விளக்கமில்லாத் தொடர்பு எனப்படும் இவ்வொன்பதுமாம் என்றார் எனக.

(வி - ரை.) பிரத்தியக்கம் விருத்தம் - காட்சி முரண். அனுமானம் - கருத்து. சுவசனம் - தன்சொல். உலோகம் - உலகம். இது சான்றோர் என்னும் பொருட்டு. ஆகமம் - நூல். அப்பிரசித்தம் - விளங்காமை. விசேடணம் - பண்பு: விசேடியம் - சிறப்பு. உபயம் என்றது பண்பும் சிறப்பும் ஆகிய இரண்டும் என்றவாறு.

## பக்கப் போலியின் விளக்கம்

௧௯௪ - ௧௯௯ : எண்ணிய.........நுவறல்

(இ - ள்.) எண்ணிய இவற்றுள் - ஈண்டு எண்ணித் தொகுக்கப்பட்ட மேற்கோள் போலிகளுள் வைத்து; பிரத்தியக்க விருத்தம் கண்ணிய காட்சி மாறுகொளல் ஆகும் - கருதிய காட்சி அளவையோடு முரண்படக் கூறுதலாம், அஃதாவது; சத்தம் செவிக்குப் புலன் அன்று எனறல் - ஒலி செவிக்குப் புலப்படாது என்பது போல்வன; மற்று அனுமான விருத்தம் ஆவது கருத்து அளவையை மாறுகக் கூறல் அநித்தியக் கடத்தை நித்தியம் எனறல் - இனிக் கருத்தளவை முரணுவது கருத்தளவிற்கு மாறுபடக் கூறுதல், அது அழியும் தன்மையுடைய குடத்தை அழியாதது என்று கூறுதல்; சுவசன விருத்தம் தன் சொல் மாறி இயம்பல் என் தாய் மலடி என்றே இயம்பல் - தன் சொல் முரணுவது ஒருவன் தான் எடுத்துச் சொல்லும் சொல்லே பொருள் முரண்படச் சொல்லுதல், அது என்னை ஈன்றாள் மலடி என்று கூறுதலாம்; உலக விருத்தம் உலகின் மாறு ஆம் உரை இலகும் மதி சந்திரன் அல்ல எனறல் - இனி உலக மலைவு ஆவது சான்றோருடைய சொல் மரபிற்கு முரணுகின்ற மொழி அது விளங்கும் மதி எனனும் சொல் சந்திரன் என்ற பொருளை உடையதன்று என்று கூறுதல்; ஆகம விருத்தம் தன் நூல் மாறு அறைதல் அநித்தவாதியாய் உள்ள வைசேடிகன் அநித்தியத்தை நித்தியம் என நுவறல் - நூல் முரணுவது ஒருவன் தன் சமய நூல் கருத்திற்கு முரணுகக் கூறுதல், அஃதாவது பொருளுக்கு நிலையாமை கூறும் கொள்கை உடையவனாகிய வைசேடிகவாதி தன் நூற் கருத்திற்கு முரணுக நிலையாமையுடைய தோன்றலை நிலையுதலுடைத்து என்று கூறுதல் என்க.

(வி - ரை.) கண்ணிய - கருதிய. காட்சி - காட்சி அளவை. அநித்தியக் கடம் - அழியும் இயல்புடைய குடம். மதி அறிவின் மேல் செல்லாமைக்கு இலகுமதி என்றார். அல்ல - அன்று. நுவறல் - கூறுதல்.

இதுவுமது

கசள - களவு: அப்பிர..........சித்தம்

(இ - ள்.) அப்பிரசித்த விசேடணம் ஆவது - விளக்கமில் பண்பாவது; தம் தம் எதிரிக்குச் சாத்தியம் தெரியாமை - சொற்போர் புரிவோர் தங்கள் தங்களுடைய எதிரிக்குத் தாம் எற்புறுத்தும் துணிபொருள் விளங்காது மொழிதல், அது வருமாறு; பௌத்தன் மாறும் நின்ற சாங்கியனைக் குறித்து சத்தம் விநாசி என்றால் - வாதடுகின்ற பௌத்தன் ஒருவன் தனக்கு மாறுபட்டிருக்கின்ற சாங்கியன் ஒருவனைச் சுட்டிச் சொற்போரிடும் பொழுது ஒலி அழிதன் மாலைத்து என்று கூறினைல்; அவன் அவிநாசவாதி ஆதலின சாத்திய விநாசம் அப்பிரசித்தமாகும் - அச் சாங்கியன் பொருள் நிலையுதலுடைத்து என்னும் கொள்கை உடையவன் ஆதலின் பௌத்தன் கூறிய துணிபொருளின் பண்பாமை அறிவு அச் சாங்கியனுக்கு விளக்கமின்றாம்; அப்பிரசித்த விசேடியம் ஆவது - மேற்கோளினகண் விளக்கமில்லாத சிறப்பாவது; எதிரிக்குத் தனமி பிரசித்தம் இன்றி இருத்தல் - தன் மாற்றானுக்குத் தான கூறும் மேற்கோளின் சிறப்பு விளக்கமின்றி இருத்தல், அஃதாவது; சாங்கியன் மாறுய்நின்ற பௌத்தனைக் குறித்து ஆன்மா சைதனியவான் என்றால் அவன் அநான்மவாதி ஆதலின் தனமி அப்பிரசித்தம் - சாங்கியவாதி ஒருவன் தனக்கு எதிராய் நின்ற பௌத்தனோடு வாதிடுபவன அவனை நோக்கி உயிர் அறிவுடைத்து என்று கூறின் அப் பௌத்தன் உயிர் எனபதொன்றில்லை என்னும் கொள்கை உடையவன் ஆதலால் அவனுக்குச் சாங்கியன் எடுத்து மொழிந்த தனமியாகிய உயிர் விளக்கமற்றதாம் என்க.

(வி - ரை.) அப்பிரசித்தம்-விளக்கமில்லாமை. விசேடணம்என்றது கண்டுச் சாத்திய வசனத்தை. சாங்கியன் காணப்படும் பொருள் எல்லாம் உள் பொருளே என்னும் கொள்கை உடையவன். மேலும் எப்பொருளும் காரண உருவத்தினின்றும் காரிய உருவத்திற்கும், காரிய உருவத்தினின்றும் மாறுவதேயன்றி அழிவதில்லை என்னும் கோட்பாடுடையன் ஆதலின் அவன் அவிநாசி ஆதலால் என்றார். விசேடியம்-தன்மி. மாறுய் நின்ற பௌத்தன் - எதிரியாய் நின்று சொற்போர் புரியும் பௌத்தன். ஆன்மா - உயிர். சைதன்யம் - அறிவுடையது. அநான்மவாதி - உயிர் என்று ஒரு பொருள் இல்லை என்னும் கொள்கை உடையவன். ஆன்மா சைதன்யவான் - என்புழி, ஆன்மா - தன்மி. சைதன்யம் - தன்மம். எனவே ஆன்மா என்பது எதிரிக்கு அப்பிரசித்தம் ஆயிற்று என்க.

இதுவுமது

௧எகூ - ௧௯௫: அப்பிர..........உபயம்

(இ - ள்.) அப்பிரசித்தம் உபயமாவது - அப்பிரசித்த உபயம் என்னும் குற்றமாவது; மாறு ஆனோர்க்கு தன்மி சாத்தியம் எருது அப்பிரசித்தமாய் இருத்தல் - எதிரிக்கு மேற்கோளும் துணி பொருளும் ஆகிய இரண்டும் நெஞ்சத்தில் புகாமல் விளக்கமில்லாதிருத்தல், அது வருமாறு; பகர் வைசேடிகன் பௌத்தனைக் குறித்து - வாதிடுகின்ற வைசேடிகன் எதிரியாகிய பௌத்தனை நோக்கி; சுகம் முதலிய தொகைப் பொருட்குக் காரணம் ஆன்மா என்றால் - இன்பம் முதலியனவாகத் தொகுத்துக் கூறப்படுகின்ற பொருள்களுக்கெல்லாம் காரணமாவது உயிரே என்று கூறினால்; தாம் சுகமும் ஆன்மாவும் இசையாமையில் அப்பிரசித்த உபயம் - பௌத்த சமயத்தினர் இன்பம் முதலிய தொகைப் பொருளையும் அவற்றிற்குக் காரணமாகிய உயிரையும் உள்பொருள் என்று ஒப்புக் கொள்ளாமையினால் மேற்கோளும் ஏதுவுமாகிய இரண்டும் விளங்காமை என்னும் குற்றமாம் என்க.

(வி - ம்.) உபயம் என்றது மேற்கொளும் துணிபொருளும். பகர் வைசேடிகன் - வாதிடுகின்ற வைசேடிகன்; வினைத்தொகை. பௌத்தன் என்றது எதிரியாகிய பௌத்தன் என்பதுபட நின்றது. சுகம் முதலிய தொகைப் பொருளாவன—

"அறிவரு ளாசை யச்ச மானம்
நிறைபொறை யோர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் பெளிமை யெய்த்தல்
துன்பமின்ப மிளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்க மறமதம்
மறவி யினைய வுடல்கொ ளுயிர்க்குணம்"

என்னும் இவை. தன்மியாகிய உயிர் பௌத்தனுக்கு உடன்பாடன்மையின் அதன் தன்மமாகிய சுகம் முதலியனவும் உடன்பாடாகாமல் இரண்டும் விளங்காவாயின.

இதுவுமது

௧௯௬ - ௧௯௦: அப்பிர.........ஆகும்

(இ - ள்.) அப்பிரசித்த சம்பந்தம் ஆவது - அப்பிரசித்த சம்பந்தம் என்று சொல்லப்படுகின்ற குற்றமாவது விளக்க

யில்லாமையால்; எதிரிக்கு இசைந்த பொருள் சாதித்தல் - தனக்கு மாறாய் நின்று வாதிக்கின்ற பகைவனுக்குப் பொருந்திய துணிபொருளைத் தானே சாதித்துக் கொடுத்தல், அது வருமாறு; மாறும் பௌத்தற்குச் சத்த அநித்தம் கூறின் அவன் கொள்கை அஃதாகலின் - பொருளை நித்தம் என்னும் கொள்கை உடையான் ஒருவன் தனக்கு மாறுபட்டு நிற்கும் பௌத்தனொடு வாதிக்குங்கால் ஒலி அழியும் இயல்புடைத்து என்று கூறுவானாயின்; அப் பௌத்தனுடைய கொள்கையே அதுவாயிருத்தலால் வேறு சாதிக்க வேண்டாதாகும் - அவ்வெதிரி தன் கொள்கையை வாதியே துணிந்து கூறிவிட்டமையின் தான் ஒன்று கூறிச் சாதிக்க வேண்டாததாகி முடிதலால் இஃது அப்பிரசித்த சம்பந்தம் என்னும் குற்றமாம் என்க.

(வி - ரை.) வாதி எதிரியின் கொள்கை தனக்கு விளக்க மின்மையின் அவன் கொள்கையோ டியைதலின் இக்குற்றம் அப்பிரசித்த சம்பந்தம் எனப் பெயர் பெற்றது என்க. இனி இவ்வாறு பிரதிவாதியின் கொள்கையை வாதி சாதித்துக் கொடுத்தல் அரிதில் காணப்படுவ தொன்றாகலின் அப் பெயர் பெற்றது எனக் கருதுவாரும் உளர். இதனால் வாதி தனக்கே தோல்வி உண்டாக்கிக் கொள்ளுதலின் இது குற்றமாயிற்று என்க.

## ஏதுப்போலி

### ககூக - உ0உ: ஏதுப்போலி.........ஆகும்

(இ - ள்.) ஏதுப்போலி ஓதின் - இனி ஏதுப்போலி என்னும் குற்றமுடைய ஏதுக்களை வகுத்துக் கூறுமிடத்து; அசித்தம் அநைகாந்திகம் விருத்தம் என மூன்று ஆகும் - அசித்தம் என்றும் அநைகாந்திகம் என்றும் விருத்தம் என்றும் மூன்று வகைப்படும்; அசித்தம் உபயாசித்தம் அன்னியதா சித்தம் சித்தா சித்தம் ஆசிரயா சித்தம் என நான்கு - இனி அவற்றுள் அசித்தம் என்னும் ஏதுப்போலி உபயா சித்தம் என்றும் அன்னியதா சித்தம் என்றும் சித்தா சித்தம் என்றும் ஆசிரயா சித்தம் என்றும் நான்கு வகைப்படும், அந் நான்கனுள்; உபயா சித்தம் சாதன ஏது இருவர்க்கும் இன்றி சத்தம் அநித்தம் கட்புலத்து என்றல் - உபயா சித்தம் எனப்படுவது மேற்கோளைச் சாதித்தற்குரிய கருவியாகக் கூறப்பட்ட ஏதுவானது வாதியும் பிரதிவாதியுமாகிய இருவர் திறத்தினும் ஏதுவாதலின்றிப் பயனில் சொல்லாயொழிதல், அது வருமாறு; ஒலி நிலையாமை உடைத்து

ஏற்றுமெனின் அது கண்ணுக்குப் புலப்படுதலால் என்று கூறுதல்; அன்னியதாசித்தம் - அன்னியதாசித்தம் எனனும் குற்றமாவது; மாறாய் நின்றாற்கு உன்னிய ஏது ஆனாம் ஒழிதல்- வாதி தனனோடு மாறுபட்டு நின்ற பிரதிவாதிக்கு ஏதுவாகும் என்று நினைத்துக் கூறியவண்ணம் ஏதுவாகாமல் ஒழிதலாம், அது வருமாறு; சாங்கியனுக்கு சத்தம் அநித்தம் செயல் உறல் எனனில் - பௌத்தன் ஒருவன தனனோடு மாறாய் நிற்கின்ற சாங்கியனை நோக்கி ஒலி நிலையாமை உடைத்து ஏற்றாலெனில் அது செயற்கையினால் தோன்றுதலால் என்று ஏதுக் கூறுவானாயின் அவ்வேதுவானது; சித்த வெளிப்பாடு அல்லது செயலுறல் உய்த்த சாங்கியனுக்கு அசித்தம் ஆகும் - எப்பொருளும் மூலப்பகுதியினின்றும் ஒன்றினொன்றாகத் தாமே வெளிப்படுவதல்லது செயலில் தோன்றும் என்னும் கொள்கையைக் கைவிட்டுவிட்ட சாங்கியனுக்கு அவ்வேது சித்தம் அல்லாமையின அன்னியதாசித்தம் எனனும் ஏதுப்போலியாம் என்றார் என்க.

(வி - ம்.) ஏதுப்போலி - குற்றமுடைய ஏதுக்கள். அவை வகையால் மூன்றாய், விரியால் பலவாம் என்க. அசித்தம் ஏதுவாகா தொழிதல். அஃது உபயாசித்தம் முதலிய நான்காய் விரியும் என்க. அவற்றுள் வாதி கூறுகின்ற ஏது தனக்கும் பிரதி வாதிக்கும் ஏதுவாகா தொழிதல். உபயாசித்தம் - சத்தம் கண்ணுக்குப் புலப்படுதலால் அநித்தம் என்றாற் போல்வது என்பார் சத்தம் அநித்தம் சட்புலத் தென்றல் என்றார். கண்ணுக்குப் புலப்படுதலால் என்று கூறிய ஏது தவறுதலின் இருவர்க்கும் ஏதுவாகா தொழிந்தது காண்க. அந்நியத அசித்தம் எனக் கண்ணழித்துக் கொள்க. அந்நியதம் - ஒருதலை ஆகாமை. மாறாய் நின்றாற்கு - பிரதிவாதிக்கு. இதற்கு எடுத்துக்காட்டு, சாங்கியனுக்கு சத்தம அநித்தம் என்பதற்கு அது செயலிடைத் தோன்றுதலை ஏதுவாகக் காட்டுதல். சாங்கியன் சத்தம் சித்தம் என்னும் மூலப்பகுதியினின்றே எல்லாப் பொருளும் நிரலே தோன்றி ஒடுங்கும் என்னும் கொள்கை உடையயன் ஆதலன் அது செயலின்கண் தோன்றும் என்பது ஒருதலையன்று. தானேயும் வெளிப்படும் என்னும் கொள்கை உடையயன் ஆதலின் அவனுக்கு இவ்வேது அன்னியதமாய் அசித்தமாயிற்று என்க. இதற்கு அன்னியதரா சித்தம் எனப் பாடந்திருத்தி அன்னியதரன் -வாதி பிரதிவாதி இருவரில் ஒருவன் என்று பொருள் கூறுவாரும் உளர். இஃது ஏனைய குற்றங்களுக்கும் பொதுவாகலின் அவர் உரை போலியாதல் உணர்க. சத்தம் வியஞ்சனம் உள் வழித்தோன்றி இல்வழிக் கெடும் என்பது சற்காரிய வாதியாகிய சாங்கியன் கொள்கை யாதலின் மேகங்களினின்றும் இடி முதலிய ஒலி செய்வோர் இல்லாமலும் தோன்றுதலால் நியதியுட்படாமையையுமுணர்க. 'இருட்கண்ணதாகிய குடத்தினுருவம் விளக்கு வந்த வழி விளங்கி அல்லுழி விளங்காமை போல, ஓசையும் இதழ் நா அண்ண முதலிய அவ்வக் கருவிகளின் தொழிற்பாடு நிகழ்ந்தவழி விளங்கியும் அல்லுழி விளங்காமையும் யாத்திரையே யன்றித் தோன்றி யழிதலின்மையான், அது போலியேது வென்றொழிக" எனவரும் சிவஞான பாடியம் சூ-உ சிவஞான-உரை விளக்கம் நோக்குக.

சாங்கியனுக்கு இஃது அன்னியதா சித்தம் என்னும் குற்றமாகும் என்றவாறு.

## இதுவுமது

௨0௩ - ௨0௬ : சித்தா.........துணிதல்

(இ - ள்.) சித்தா சித்தம் ஆவது - சித்தா சித்தம் என்று கூறப்படுகின்ற ஏதுப்போலியாவது; ஏது சங்கயமாகு சாதித்தல்-வாதியானவன் தான் சாதிக்கத் துணிந்த மேற்கோளைச் சாதித்தற் பொருட்டு எடுத்துக் கூறுகின்ற ஏதுவினைத் தானே ஐயுற்றவன் தெளியாமுன்பே ஐயத்திற்கிடமான அவ்வேது வினைக்கொண்டே மேற்கோளைச் சாதித்தலாம், அஃதாமாறு; ஆவி பனியென ஐயுறுகின்றே தூய புகை நெருப்பு உண்டு எனத் துணிதல்- தான் கண்ட பொருள் புகையோ பனிப்படலமோ என்று தனனுள ஐயுற்று அது தெளிதற்கு முன்பே; தூய புகை என்று துணிந்தானபோல - அதனை ஏதுவாகக் காட்டி அது தோன்று மிடத்தே நெருப்பு உண்டு என்று கூறி நிலை நாட்டுதல்போல்வன என்றார் என்க.

(வி - ம்.) சித்தாசித்தம் துணிவும் துணியாமையும். சங்கயம் - சம்சயம்; ஐயம். ஏது துணியப்படாமையின் துணிந்த பொருளும் ஐயுறப்படுமாதலின் இவ்வேது சித்தா சித்தம் என்னும் குற்றத்தின் பாற்படும் என்றவாறு.

## இதுவுமது

௨0௭ - ௨௧௧ : ஆசிரயா.........அசித்தம்

(இ - ள்.) ஆசிரயா சித்தம் - ஆசிரயா சித்தம் என்னும் ஏதுப்போலியாவது; மாறுனவனுக்கு ஏற்ற தன்மி இன்மை காட்டுதல் - தன்னோடு மாறுபட்டுச் சொற்போர் நிகழ்த்துகின்ற எதிரிக்குப் பொருந்திய மேற்கோள் இல்லாமையை அறிவிக்கின்ற ஏதுவைக் கூறிக் காட்டுதல், அது வருமாறு; வாதி ஆகாசம் சத்த குணத்தால் பொருளாம் என்னின் - சாங்கியன் ஒருவன் தனக்குமாறாய் நின்ற பௌத்தனை நோக்கி வெளி என்னும் பூதம் ஒலி என்னும் குணத்தை உடைத்தாதலால் உள் பொருளாம் என்னுமிடத்து; ஆகாசம் பொருள் அல்ல என்பாற்கு தன்மி அசித்தம் - வெளி ஒரு பொருள் அல்ல என்னுங் கொள்கை யுடைய அப் பௌத்தனுக்கு வாதியினல் சாதிக்கப்பட்ட மேற்கோளே இல்பொருள ஆதலின் அதனைச் சாதித்த சத்த குணம் என்னும் ஏது ஆசிரயா சித்தம் எனனும் குற்றமுடைய ஏதுப்போலியாம் என்றார் என்க.

(வி - ரை.) ஆசிரயா சித்தம் - சார்பு பெறப்படாமை. ஆகாசம் பொருள் அல்ல என்பான் ஈண்டுப் பௌத்தன். இதற்கு வாதி வைசேடிகன் முதலியவர். சத்தகுணத்தால் என்னும் ஏதுவாகிய குணம் தனக்குச் சார்பாகிய குணி பெறப்படாமையில் ஆசிரயா சித்தம் என இக்குற்றம் பெயர் பெற்றது. அப்பிரசித்த விசேடியம் என்பது பக்கப் போலி ஆதலின் ஈண்டு இஃது அதனினும் வேறும். என்னை? ஈண்டுக் கூறப் பட்ட ஏதுவிற்கு நிலைக்களன் இன்மையின் இஃது ஏதுப்போலியே ஆதல் உணர்க.

## இதுவுமது

### உகக - உகக: அநைகாந்தி.........ஆறு

(இ - ள்.) அநைகாந்திகமும் - அநைகாந்திகம் என்னும் ஏதுப்போலியும்; சாதாரணம் அசாதாரணம் - சாதாரண ஏதுப் போலியும் அசாதாரணம் என்னும் ஏதுப்போலியும்; சபக்க ஏகதேச விருத்தி விபக்க வியாபி - சபக்க ஏகதேச விருத்தி விபக்கவியாபி ஏதுப்போலியும்; விபக்க ஏகதேச விருத்தி சபக்க வியாபி - விபக்க ஏகதேச விருத்தி சபக்க வியாபி என்னும் ஏதுப்போலியும்; உபய ஏகதேச விருத்தி - உபய ஏகதேச விருத்தி எனனும் ஏதுப்போலியும்; விருத்த வியபிசாரி என்று ஆறு - விருதத வியபிசாரி என்னும் ஏதுப்போலியும் என்று ஆறு வகைப்படும் என்றார் என்க.

(வி - ரை.) சாதாரணம் - பொது. அஃதாவது மேற்கோளைச் சாதித்தற்கு எடுத்துக் கூறும் ஏது மறுதலை மேற்கோளுக்கும் பொதுவாதல். அசாதாரணம் மேற்கோளுக்கு மட்டுமே சிறப்பாதல்; ஏனையவற்றிற்கு விளக்கம் பின் கூறப்படும்.

## இதுவுமது

### உகஎ - உஉக: சாதாரணம்.........என்னல்

(இ - ள்.) சாதாரணம் - சாதாரணம் என்னும் அநைகாந்திக ஏதுப் போலியாவது; ஏது சபக்க விபக்கத்துக்கும் பொதுவாய் இருத்தல் - மேற்கோளைச் சாதித்தற்கு, எடுத்துக் கூறும் ஏதுவானது தன் மேற்கோளுக்கும் மறுதலை மேற்கோளுக்கும் பொதுவாக இருத்தலாம், அது வருமாறு; சத்தம் அநித்தம் அறியப்படுதலின என்றல் - ஒலி அநித்தமாம் என்னும் தன் மேற்கோள் கூறி அதனை வலியுறுத்தற்கு ஏதுவாக எற்றாலெனின் அறியடபடுதலின் என்று கூறினால்; அறியப்படுதல் — அறியப்படுதல் என்னும் ஏதுவானது; அநித்தம் நித்தம் இரண்டுக்கும் செறியும் - தான் சாதித்தற்குரிய

அசித்தத்திற்கேயன்றி மறுதலை மேற்கோளாகிய நித்தத்திற்கும் பொருந்துமாதலின்; குடம் போல் அநித்தத்து அறிவோ ஆகாசம் போல நித்தத்து அறிவோ என்னல் - குடத்திற்கண் போல அழிதலை அறியும் அறிவோ வானத்தின்கட்போல அழியாமையை அறியும் அறிவோ என்று வினவுமாறு சபக்க விபக்கங்களுக்குப் பொதுவாய் நிற்றல் அறிக என்றார் என்க.

(வி - ு.) சபக்க விபக்கம் - தன் பக்கமும் மறுதலைப் பக்கமும் ஈண்டு ஏது அறியப்படுதலின் என்றது இவ்வேது தான் சாதித்தற்குரிய அசித்தத்திற் போல அதன் மறுதலையாகிய நித்தத்தின் கண்ணும் செல்லுதல் உணர்க. இவ்வாற்றால் இது சாதாரண அநைகாந்திகம் என்னும் ஏதுப்போலியாயிற்று. சாதாரணம் எனினும் பொது எனினும் ஒக்கும்.

இதுவுமது

உஉகூ - உகூ0 : அசாதாரண..........அநேகாந்திகமாம்

(இ - ள்.) அசாதாரணம் ஆவது தான் - அசாதாரண அனைகாந்திகம் என்னும் ஏதுப்போலி ஆவது; உன்னிய பக்கத்து உண்டாம் ஏது - தன் மேற்கோளுக்கமைந்த ஏதுவானது; சபக்கம் விபக்கம் தம்மில் இன்று ஆதல் - தன் துணை மேற்கோளினும் மறுதலை மேற்கோளினும் செல்லாதாதல், அது வருமாறு; சத்தம் நித்தம் கேட்கப்படுதலின் என்னின - ஒருவன் சத்தம் நித்தப் பொருள் கேட்கப்படுதலால் என்று கூறுமிடத்து; கேட்கப்படல் எனும் ஏது-மேற்கோளைச் சாதிக்கக் கூறிய கேட்கப் படுதல் என்னும் ஏதுவானது; பக்கத்து உள்ளதாயின் அல்லது - தான் எடுத்துக்கொண்ட சத்தம் என்னும் மேற்கோளின்கண் இருப்பதல்லது; சபக்க விபக்கத்து மீட்சித்து ஆதலின் - தற்சார்பான உடன்பாட்டு மேற்கோளினுதல் மறுதலை மேற்கோளினுதல் இல்லாதொழிதலின; சங்கயம் எய்தி அநேகாந்திகமாம் - பிரதிவாதிக்கும் ஐயத்தை உண்டாக்கி அனைகாந்திகம் என்னும் ஏதுப்போலியாம் என்றார் என்க.

(வி - ு.) அசாதாரணம் எனினும் சிறப்பு எனினும் ஒக்கும். சத்தத்திற்குக் கேட்கப்படுதல் சிறப்பாதல் உணர்க. சபக்க விபக்கத்துக்கு மீட்சித்து எனவே இதற்குச் சாதன்மிய திட்டாந்தமும் வைதன்மிய திட்டாந்தமும் கிடைக்கப்பெறா என்றாராயிற்று. மீட்சித்து - இல்லது. சபக்கமும் விபக்கமும் மேற்கோளை ஐயமின்றித் துணிதற்கு எடுத்துக் காட்டப்படுவன ஆதலின் அவை இல்லாதொழியின் துணியப்படாமல் ஐயம் எய்திப் பலதலைப்படும் என்பார் சங்கய மெய்தி அனைகாந்திகமாம் என்றார்.

### இதுவுமது

#### ௨௩௧ - ௨௪௨: சபக்க.........எனல்

(இ - ள்.) சபக்க ஏகதேச விருத்தி விபக்க வியாபி ஆவது - இனி மேற்கோளைச் சாதித்தற்கு எடுத்துக் கூறிய ஏதுவானது சபக்கத்தின்கண் ஓரிடத்தின்கண் உளதாய் விபக்கத்தின்கண் எவ்விடத்தும் உளதாகின்ற அநைகாந்திக ஏதுப்போலி ஆவது; சபக்கத்து ஓரிடத்தெய்தி விபக்கத்து எங்கும் உண்டாதல் ஆகும் - எடுத்துக்காட்டினகண் ஓரிடத்தே காணப்பட்டு மறுதலை எடுத்துக்காட்டினகண் எவ்விடத்தும் உளதாதல் ஆகும், அது வருமாறு; சத்தம் செயலிடைத் தோன்றுது ஆகும் அநித்தம் ஆகலின் என்றால் - ஒருவன் ஒலியானது செயற்கையின்கண் தோன்றுதலொன்றும் என்று கூறி அம் மேற்கோளைச் சாதித்தற்கு சத்தம் அநித்தமாதலால் என ஏதுக் கூறினால்; அநித்தம் என்ற ஏது - அநித்தம் என்று கூறிய ஏதுவானது; செயலிடைத் தோன்றுமைக்கு சபக்கம் - சத்தம் செயலின்கண் பிறவாமைக்குச் சபக்கமாகிய; ஆகாசத்தினும் மின்னினும் - வானத்திலும் மின்னலிடத்தினும் ஆகிய இரண்டினும்; மின்னின நிகழ்ந்து ஆகாசத்தில் காணுதாகலின் - மின்னலிடத்தே காணப்பட்டு வானின்கண் காணப்படாதாகலின் சபக்க ஏகதேச விருத்தியாய்; அநித்தம் - அவ் வநித்தம் எனும் ஏதுவானது; கடாதியின் ஒத்தலில் - குடம் முதலிய விபக்கத்தில் யாண்டும் காணப்படுதலால்; கடம் போல் அழிந்து செயலில் தோன்றுமோ மின்போல் அழிந்து செயலில் தோன்றுதோ எனல் - மறுதலை மேற்கோளாகிய குடம் முதலியவற்றைப் போல அழிதலால் செயலின்கண் பிறக்குமோ அல்லது மின்போல அழிதலால் செயற்கையில் பிறவாதோ என்று ஐயுறுதல் என்றூர் என்க.

(வி - ம்.) இதற்குத் தோன்றுது என்னும் துணி பொருளுக்கு அநித்தம் ஏதுவாகலின், அதற்குக் காட்டிய மின்னும் ஆகாசமும் சபக்கமாயிற்று. மின்னலில் சத்தம் செயலிடைத் தோன்றுமல் தானே தோன்றுதலின் அநித்த ஏது. மின்னலில் ஏகதேசத்தில் ஓரிடத்தில் எய்திற்று. ஆகாசத்திற்கு ஏதுவாகா தொழிந்தது காண்க. இனி விபக்கமாகிய குடம் முதலியவற்றில் அநித்த ஏது யாண்டும் பொருந்துதலும் காண்க.

### இதுவுமது

#### ௨௪௩ - ௨௫௩: விபக்க.........எனல்

(இ - ள்.) விபக்க ஏகதேச விருத்தி சபக்க வியாபி - விபக்கத்தின்கண் ஓரிடத்து மட்டும் விருத்தியாகி சபக்கத்தின்கண்

எங்கும் இருக்கின்ற அனைகாந்திக ஏதுப்போலி என்னும் குற்றமாவது; ஏது விபக்கத்து ஓர் இடத்து உற்று சபக்கத்து ஒத்து இயறல் - மேற்கோளைச் சாதிக்க எடுத்துக் கூறும் ஏதுவானது மறுதலை மேற்கோளினகண் ஓரிடத்தே காணப் பட்டு சபக்கத்தின்கண் எங்கும் உளதாதல், அது வருமாறு; சத்தம் செயலிடைத் தோன்றும் - ஒலியானது தொழிலின்கண் தோன்றுவதாம் என்று கூறி; அநித்தம் ஆதலின் எனின் - அஃது அநித்தப் பொருள் ஆதலின் என்று ஏதுக் கூறுமிடத்து; அநித்த வேது - அங்ஙனம் கூறப்பட்ட அநித்தமாகிய ஏதுவானது; செயலிடைத் தோன்றற்கு - சத்தமானது செயலிடைத் தோன்றும் என்னும் மேற்கோளுக்கு; விபக்க ஆகாயத்தினும் மின்னினும் - மறுதலை மேற்கோளாகிய வானம் மின்னல் என்பவற்றில்; மின்னின் நிகழ்ந்து ஆகாசத்துக் காணாது - மின்னலாகிய ஓரிடத்தில் மட்டும் பொருந்தி வானத்தில் இல்லாது; சபக்க கடாதிகள் தம்மில் எங்குமாய் ஏகாந்தம் அல்ல - தன பக்கமாகிய குடமுதலியவற்றில் எங்கும் ஆகி ஒருதலைத் துணிவல்லவாதலின்; மினபோல் அநித்தமாய் செயலிடைத் தோன்றுதோ - மின்னல் போல நிலையாமை உடைத்தாய்ச் செயலின்கண் பிறவாதொழிவதோ அல்லது; கடம் போல் அநித்தமாய்ச் செயலிடைத் தோன்றுமோ எனல் - குடம் போல நிலையாப் பொருளாய்ச் செயலின்கண் பிறப்பதோ எனப் பலதலைப்படுதலின் அப்பெயர் பெற்றது என்றார் என்க.

(வி - ம்.) ஏகதேச விருத்தி - ஓரிடத்தே பொருந்துதல். விபக்கம் ஆகிய ஆகாயத்தினும் மின்னினும் ஆகிய இரண்டில் அநித்தம் மின்னலில் மட்டும் காணப்பட்டு ஆகாயத்துக் காணப்படாதாயிற்று. இவை இரண்டும் செயலிடைத் தோன்றாப் பொருளாதலின் செயலிடைத் தோன்றும் சத்தத்திற்கு விபக்கங்கள் ஆயின. அங்ஙனமாகவும் அநித்த ஏது மின்னலில் காணப்பட்டு ஆகாயத்தில் காணப்படாமை உணர்க. அநித்தப் பொருள்களுள் மின்னல் செயலிடைத் தோன்றுதலும் குடம் செயலிடைத் தோன்றுதலும் உடைத்தாகலின் அநித்தவேது பலதலைப்படுதல் காண்க.

## இதுவுமது

உருச - உகக: உபயை.........எனல்

(இ - ள்.) உபயை ஏகதேச விருத்தி - இனி உபயைக தேச விருத்தி என்னும் ஏதுபபோலியாவது; ஏது சபக்கத்தினும் விபக்கத்தினும் ஆகி - எடுத்துக் கூறப்படுகின்ற ஏதுவானது தன பக்கத்திலும் மறுதலைப் பக்கத்தினும் காணப்பட்டு; ஓர்

தேசத்து வர்த்தித்தல் - இரண்டினும் ஒவ்வோரிடத்தே மட்டும் பொருந்துதல், அது வருமாறு; சத்தம் நித்தம் அமூர்த்தம் ஆதலின என்னின் - ஒலியானது நிலையுதல் உடைத்தாம், என்னை ? உருவமற்ற பொருள் ஆதலால் என்று ஏதுக் கூறுமிடத்து; அமூர்த்த ஏது - உருவமில்லாமை என்னும் ஏதுவானது; நித்தத்தினுக்கு சபக்க ஆகாச பரமாணுக்களின் - நிலைத்தலுக்குத் தன் பக்கமாகிய ஆகாயம் பரமாணு என்னும் இவற்றில்; ஆகாசத்து நிகழ்ந்து அமூர்த்தமாம் - ஆகாயத்தினிடத்தே நிகழ்ந்து (அமூர்த்தமாம்); மூர்த்தமாம் பரமாணுவின் நிகழாமையானும் - உருவமாகிய பரமாணுவினிடத்தில் பொருந்தாமையானும்; விபக்கமான கடசுகாதிகளில - இனி மறுதலை மேற்கோளான குடம் இன்பம் முதலியவற்றுள் உருவமற்ற; சுகத்து நிகழ்ந்து கடத்து ஒழிந்தமையினும் - இன்பத்திற்குப் பொருந்தி உருவுடைய குடம் முதலியவற்றில் பொருந்தாமையானும், ஏகதேசத்து நிகழ்வது ஏகாந்தம் அன்று - இவ்வாறு சபக்க விபக்கங்களில ஒவ்வோர் இடத்தேமட்டும் பொருந்தும் ஏது ஒருதலைத் துணிவுடைத்தன்று, என்னை ?; அமூர்த்த ஆகாசம் போல நித்தமோ அமூர்த்த சுகம் போல் அநித்தமோ எனல் - அமூர்த்த ஏது உருவமற்ற வானம்போல நித்தத்தைக் காட்டுவதோ அல்லது உருவமற்ற இன்பம் போல அநித்தத்தைக் காட்டுவதோ என்று பலதலைப்படுதலின் இஃது உபயைக தேச விருத்தி என்னும் ஏதுப்போலியாயிற்று என்றுரைத்தார் என்க.

(வி - ம்.) உபயம் - சபக்கம் விபக்கமாகிய இரண்டிடத்தும். ஏக தேசம் - ஓரிடம். வர்த்தித்தல் - பொருந்துதல். சத்தம் நித்தம் என்பது மேற்கோள். அமூர்த்தம்-ஏது. அமூர்த்தம் - உருவ மற்றது; அருவம் எனினுமாம். மூர்த்தம் - உருவம். சுகாதிகள் - இன்பம் முதலிய பண்புகள். ஏகாந்தம் அன்று என்றது - அநைகாந்தம் என்றவாறு.

இதுவுமது

உகூஎ - உஎச: விருத்த..........அல்ல

(இ - ள்.) விருத்த வியபிசாரி - இனி விருத்த வியபிசாரி என்னும் அநைகாந்திக ஏதுப்போலியாவது; இருந்தா ஏதுவாம் விருத்த ஏதுவிற்கும் இடம் கொடுத்தல்-வாதி திருத்தமில்லாத ஏதுவாக எடுத்துக் கூறுமிடத்து அது தானே பகைவனுக்கேற்ற ஏதுவாக எடுத்துக் கூறுதற்கும் இடங்கொடுப்பது, மாறுபட்ட ஏதுவினை எடுத்துக் கூறுதற்கும் இடங்கொடுப்பது, மாறுபட்ட ஏதுவினைத் தோன்றலின அது வருமாறு; சத்தம் அநித்தம் செயலிடைத் தோன்றலின ஒத்தது எனின் - வாதியானவன் ஒலியானது நிலையாமை உடையது செயலின்கண் பிறத்தலால் எமது மேற்கோளுக்குப்

பொருந்திற்று என்று கூறுமிடத்து அச் செயலிடைத் தோன்றற்கு; சபக்கமாய் உள்ள கடாதி நிற்க - அங்ஙனம் செயலின்கண் பிறத்தற்குத் தன் மேற்கோளுக்கியைந்த குடம் முதலியன இருக்க அவற்றைக் கூறாமல்; சத்தம் அநித்தம் கேட்கப்படுதலின் - ஒலியானது நிலையாமை உடைத்து செவியினால் கேட்கப்படுதலால் என ஏதுக்கூறி; சத்தத்துவம் போல் என சாற்றிடுதல் - ஒலித்தன்மை போல் என எடுத்துக் காட்டுதல், இவற்றில் கேட்கப்படுதல் என்னும் ஏதுவானது மேற்கோளை வலியுறுத்தும் சபக்க விபக்கங்களைப் பெறமாட்டாமையால் திருந்தா ஏதுவாய்; இரண்டினும் சங்கயமாய் - சாத்தியத்தினும் ஏதுவினும் ஐயமுண்டாக்கி அனைகாந்திகம் என்னும் ஏதுப்போலியாம் என்றார் என்க.

(வி - ம்.) சத்தம் அநித்தம் என்று சாதித்தற்கு செயலிடைத் தோன்றல் என்னும் ஏதுவும் சபக்கமாய் உள்ள குடம் முதலியன இருக்கவேயும் அவற்றைக் கூறாமல் அப் பொருளைச் சாதித்தற்குக் கேட்கப்படுதல் என்று ஏதுக்கூறி அவ்வேதுவை வலியுறுத்தும் எடுத்துக் காட்டு இன்மையில் சத்தம் அநித்தம் என்னும் தான் சாதித்தற்குரிய சத்தத்துவத்தையே எடுத்துக் காட்டாகக் கூறுதல். அங்ஙனம் கூறிய வழி ஏதுவும் எடுத்துக் காட்டும் ஆகிய இரண்டினும் ஐயமேற்பட்டு ஒரு தலையாகத் துணியப்படாமல் அனைகாந்திகமாம் என்றவாறு; இதற்கு இங்ஙனம் கூறாது பொருந்தா உரை கூறுவாரும் உளர்.

## இதுவுமது

௨௭௫ - ௨௮௦: விருத்தம்........வகையதாகும்

(இ - ள்.) விருத்தம் தன்னைத் திருத்தக விளம்பில் - விருத்தம் எனனும் ஏதுப்போலியை அழகாகச் சொல்லுமிடத்து; தன்ம சொரூப விபரீத சாதனம் தன்ம விசேட விபரீத சாதனம்.......என்ன நான்கு வகையதாகும் - தன்ம சொரூப விபரீத சாதனம் முதலாக தன்மி விசேட விபரீத சாதனம் என்று சொல்லப்பட்ட நான்கு வகைப்படும் என்றார் என்க.

(வி - ம்.) விருத்தம்-முரண். தன்மச் சொரூபம் பண்பின் இயல்பு. விபரீதம் - முரண். விசேடம் - சிறப்பு. தன்மி - குணி; சாதனம்-ஏது.

## தன்மச் சொரூப விபரீத சாதனம்

௨௮௦ - ௨௮௧: அத்தன்ம.........விபரீதம்

(இ - ள்.) அத்தன்ம சொரூப விபரீத சாதனம் - அங்ஙனம் கூறப்பட்ட தன்ம சொரூப விபரீத சாதனம் என்னும் விருத்த

ஏதுப்போலி ஆவது; சொன்ன ஏதுவில் சாத்திய தன்மத்து உருவங்கெடுதல் - வாதி மேற்கோளைச் சாதித்தற்கு எடுத்துச் சொன்ன ஏதுவின்கண் துணி பொருளின் இயல்பாகிய உருவம் அழிதல், அது வருமாறு; சத்தம் நித்தம் - ஒலியானது நிலையுதலுடையது என மேற்கோள் கூறி அதனை வலியுறுத்துதற்கு ஏதுவாக; பண்ணப்படுதலின் என்றால் - பண்ணப் படுவதனால் என்று கூறினால்; பண்ணப்படுவது அநித்தம் ஆதலின் - பண்ணப்படுகின்ற பொருள் நிலையாமை உடைத்தாதலின்; பண்ணப்பட்ட ஏது - தான் எடுத்துக் கூறிய பண்ணப்படுதலால் எனனும் ஏதுவானது; சாத்திய தன்ம நித்தத்தைவிட்டு - தான் எடுத்துக்கூறிய துணி பொருளின் தன்மையாகிய நிலையுதலை ஒழித்து அதற்கு முரணாகிய; அநித்தம் சாதித்தலால் விபரீதம் - நிலையாமையை வற்புறுத்துதலால் இது விருத்த ஏதுப்போலியாயிற்று என்றார் என்க.

(வி - ம்.) தன்மச் சொரூபம் - பண்பியல்பு. சாத்திய தன்மம் - துணி பொருளின் தன்மை. சாத்திய தன்மம் நித்தம் - தான் சாதிக்கக் கருதிய பொருள் தன்மையாகிய நித்தம் என்க. விபரீதம் எனினும் விருத்தம் எனினும் ஒக்கும்.

## தன்ம விசேட விபரீத சாதனம்

### உ௮௮ - ௬௦௨ : தன்ம......விபரீதம்

(இ - ள்.) தன்ம விசேட விபரீத சாதனம் - இனி, தன்ம விசேட விபரீத சாதனம் என்னும் விருத்த ஏதுப்போலி யாவது; சொன்ன ஏது-மேற்கோளைச் சாதித்தற்கு எடுத்தோதிய ஏதுவானது; சாத்திய தன்மம் தன்னிடை விசேடங்கெட சாதித்தல் - துணியப்படும் பொருளினது பண்பின் சிறப்புக் கெடும்படி சாதித்தற்கு உரியதாதல், அது வருமாறு; கண் முதல் ஓர்க்கும் இந்திரியங்கள் எண்ணின் - கண் முதலிய உயிரின் அறிவுக் கருவிகளை ஆராயுமிடத்து அவை; பரார்த்தம் - உயிர்க்கு வேறாகிய (உயிரில்) பொருள்களாம் என்று தன மேற்கோள் கூறி; தொக்கு நிற்றலினால் - அவை உயிரோடு சேர்ந்து நிற்றலால் என ஏதுக்கூறி; சயன ஆசனங்கள் போல என்றால் - படுக்கையும் இருக்கையும் போல என்று எடுத்துக் காட்டும் கூறியவிடத்து; சயனாசனத்தின் பரார்த்தம் போல் - கண் முதல் இந்தியங்களையும் பரார்த்தத்தில் சாதித்து - படுக்கையும் இருக்கையும் உயிர்க்கு வேறுதல் போன்று கண் முதலிய கருவிகளையும் வேறு பொருள்களாகச் சாதித்து; சயனாசன வாளைப் போல ஆகி - படுக்கையையும் இருக்கையையும்

தனக்கு வேருகிய உடைமைகளாகப் பெற்றிருப்பான் ஒருவனைப் போன்று ஆகும்படி; கண் முதல் இந்திரியத்துக்கும் பாரும் சாதிக் கிற கிர் அவயவமாய் உள்ள ஆன்மாவை - கண் முதலிய கருவிகளுக்கும் வேருன பொருளாய்ச் சாதித்தற்குரிய அவயவப் பகுப்பற்ற உயிரை; சா அவயவமாக சாதித்து - உறுப்புகளோடு கூடியதாகச் சாதிக்குமாற்ருல்; சாத்திப தன்மத்தின் விசேடங் கெடுத்தலின் விபரீதம் - துணி பொருளின் சிறப்புப் பண்பை அழித்து விடுதலால் இது விருத்தம் என்னும் ஏதுப் போலியாம் என்க.

(வி - ம்.) தன்ம விசேடம் - துணி பொருளின் சிறப்பு. சொன்ன ஏது - சாதித்தற்கு எடுத்துச் சொன்ன ஏது. கண் முதலிய கருவிகளையும் சயனுசனங்கள் போன்ற கருவிகளோடு ஒன்ருகத் தொகுத்துக் கூறி இவை ஆன்மாவிற்கு வேருகும் என்னுமல் தொக்கு நிற்றலின் எனக் கூறிய ஏது இவற்றை ஆன்மாவின் உறுப்புகளாகச் சாதித்துவிட்டது. சயனுசனவான்-சயனுசனமாகிய உடைமைகளை உடையவன். ஆகி. ஆக- இவ்வேதுவினுல் சாத்திய தன்மமாகிய அவயவ மின்மையாகிய சிறப்புக் கெட்டது; அதனுல் இது விருத்த ஏதுப்போலியாயிற்று என்க.

தன்மிச் சொரூப விபரீத சாதனம்

௫௦௫ - ௫௧௨: தன்மி ........விடரீதம்

(இ - ள்.) தன்மிச் சொரூப விபரீத சாதனம்-துணி பொருளின் இயல்பினை வேறுபடுத்துவதாகிய ஏதுப்போலியாவது; தன்மி உடைய சொரூப மாத்திரத்தினை ஏதுத்தானே விபரீதப படுத்தல் - சாதித்தற்குரிய பொருள் இயல்பை மட்டும் அதனைச் சாதித்தற்கு எடுத்துக் கூறிய ஏதுவே மாறுபடுத்திவிடுதலாம, அது வருமாறு; பாவம் திரவியம் கன்மம் அன்று குணமும் அன்று - உண்மையானது பொருளும் அன்று தொழிலும் அன்று பண்பும் அன்று, என்னை; எத்திரவியம் ஆம் எக்குணம் கன்மம் உண்மையின் வேருதலால் - எப்பொருளாயினும் எப்பண்பாயினும் எத்தொழிலாயினும் உணமைத் தனமையின் வேருதலால்; அவற்றிற்குப் பொதுவாகிய உண்மைத் தன்மையில் வேருகத் தனித்திருத்தலால்; சாமாணிய விசேடம் போல் எனருல் - மேற்கோளும ஏதுவும் கூறிப் பொதுவும் சிறப்பும் போல என்று திட்டாந்தமும் கூறுமிடத்து; பொருளும் குணமும் கருமமும் ஒன்ருய் நின்று அவற்றின் இடை உண்மை வேறு ஆதலால் - பொருளும் குணமும் தொழிலும் என ஒருங்கு எண்ணப்பட்டு நின்ற

பொருள்களின்கண் உள்ள உண்மைத் தன்மையினும் வேறாகப் பொது உண்மைத் தன்மை உடைமையால்; என்று காட்டப்பட்ட ஏது - என்று கூறப்பட்ட ஏதுவின்கண்; மூன்றின் உடை உண்மை ஏது படுத்தும் - பொருள் முதலிய மூன்று பொருள் களினிடத்தும் உள்ள ஏதுவாகக் காட்டப்பட்ட; பொதுவாம் உண்மை - மூன்றிற்கும் பொதுவாய் உள்ள உண்மைத்தனமை; சாத்தியத்து இல்லாமையினும் - சாதிக்கபபடுகின்ற பாவத்தின் கண் இல்லாமையானும்; திட்டாந்தத்தில் சாமானியம் விசேடம் போக்கி பிறிது ஒன்று இல்லாமையானும் - எடுத்துக்காட்டின்கண் கூறப்பட்ட பொதுவும் சிரப்புமாகிய உண்மைத்தனமையை விட்டுச் சாத்தியமாகிய உண்மை வேறொன்று அல்லாமையானும் ஏதுவாக எடுத்துக் கூறப்பட்ட உணமைத்தனமையினினும் சாதிக்கப்படும் உண்மைத் நன்மை வேறோர் உண்மைத்தன்மை அல்லாமையானும்; பாவம் என்று பகர்ந்த தன்மியினை - உண்மை என்று சாதித்த துணி பொருளைச் சாதிக்கும் ஏதுவினமையால்; அபாவம் ஆக்குதலால் விபரீதம் - இல் பொருளாக்குதலால் இது தன்மியின் இயல்பையே கெடுத்தொழிந்தமையின் விருதத ஏதுபபோலியாயிற்று என்றார் என்க.

(வி - ம்.) வைசேடிகர் திரவியம் குணம் கன்மம் சாமானியம் விசேடம் சமவாயம் எனப் பொருள் ஆறு என்பர். இவற்றுள் சாமானியம் மகா சாமானியம் அவாந்தர சாமானியம் பரசாமானியம் என்றும் வாளாது முதல் பொதுவென்றும் கூறுவர். இவற்றுள் சாமானியம் பொருள்களின் உண்மைத் தன்மை முதலியவற்றை உணர்தற்குக் காரணம் என்பர். சாமானியம் எனினும் உண்மைத் தன்மை எனினும் ஒக்கும். இந்த பாவம் என்பது, திரவியம் கன்மம் குணம் என்னும் இவற்றின் உண்மையையேயாம். அவ் உண்மையைப் பொருள் என்று சாதித்தற்கு எடுத்த ஏதுவானது சாதிக்க வேண்டிய அவ் வுண்மையே ஆதலின், இது விருத்த ஏதுப்போலி ஆயிற்று. ஏதவாகிய உண்மை துணி பொருளின் வேருகாமையின் அதனது சிறப்பை இவ்வேது கெடுத்தல் அறிக. பொதுவாகிய இப் பாவத் தன்மைக்குப் பிறிதோர் ஏதுவின்மையின் அது சாதிக்கப்படாது இல்பொருளாய் ஒழிந்தது என்க.

## தன்மி விசேட விபரீத சாதனம்

### ௬௧௯ - ௬௨௫: தன்மி.........கெடுத்தது

(இ - ள்.) தன்மி விசேட விபரீத சாதனம் - துணி பொருளின் சிறப்புத் தன்மையை வேறுபடுத்தும் விருத்த ஏதுப் போலியாவது; தனமி விசேட அபாவச் சாதித்தல் - துணி பொருளின உண்மையைச் சாதித்தற்கு மாறாக அதன் இன்மையைச் சாதித்தலாம், அது வருமாறு; முன்னர்க் காட்டப்

பட்ட ஏதுவே - பாவம் திரவியம் குணம் கன்மம் ஆகிய மூன்றும் உண்மையின் வேறுதலால் என முன்னம் காட்டிய ஏதுவே; பாவமாகின்றது - உண்மையாகின்றது; கருத்தா உடைய கிரியையும் குணமுமாம் அதனை - வாதியினுடைய தொழிலினது உண்மைத் தன்மையும் குணத்தின் உண்மைத் தன்மையும் ஆகிய அவ் வுண்மைமையே; விபரீதம் ஆக்கியது ஆதலால் - வேறுபடுத்தி அவற்றையும் இல் பொருளாக்கியது ஆதலால்; தன்மி விசேடம் கெடுத்தது - அவ் வாகி சாதிக்கத் துணிந்த உண்மைத் தன்மையின் சிறப்பைக் கெடுத்தது ஆதலால் அதுவே தன்மி விசேட விபரீத சாதனம் எனனும் விருத்த ஏதுப்போலியாம் என்றார் என்க.

(வி - ம்.) முதலில் தன்மியின் இயல்பினை விருத்தமாக்கிய அவ் வேதுவே தன்மியாகிய பாவத்தை அபாவமாக்கி அதன் உள் பொருளாம் சிறப்பைக் கெடுத்து இல்பொருள் ஆக்குதலின் இஃது அப் பெயர் பெற்றது.

## திட்டாந்தப் போலி

௩௨௫ - ௩௩௦: தீய.........ஆகும்

(இ - ள்.) தீய எடுத்துக் காட்டாவன தாம் - நன்மையல்லாத எடுத்துக்காட்டுகள் எனச் சொல்லப்படுவனவே; திட்டாந்த ஆபாசங்கள - திட்டாந்த ஆபாசங்கள என்றும் சொல்லப்படும்; திட்டாந்தம் இருவகைப்படும் என்று முன கூறப்பட்டன - எடுத்துக்காட்டுகள் இரண்டு வகைப்படும் என்று முன்பே கூறப்பட்டன; அவற்றுள் இங்கண் - அவ்விரண்டனுள் இவ் விடத்தே; சாதன்மிய திட்டாந்த ஆபாசம் ஓதிய ஐந்து வகை உளதாகும் - சாதன்மிய திட்டாந்தப் போலியை விரத்தோதினால் ஐந்து வகைப்படும் என்றார் என்க.

(வி - ம்.) எடுத்துக் காட்டு திட்டாந்தம் என்பன ஒரு பொருள் பல சொல். தீய எடுத்துக் காட்டு எனினும் திட்டாந்த ஆபாசம் எனினும் திட்டாந்தப் போலி எனினும் ஒக்கும். முன்னர் (௧௩௯ - ௧௩௭) ஏதமில் திட்டாந்தம் இருவகைய சாதன்மியம் வைதன்மியம் என என்று ஓதினமை கருதி "திட்டாந்தம் இருவகைப்படும் என்று முன் கூறப்பட்டன" என்றார். இங்கண் என்றது அவற்றின் போலிகளைக் கூறத் தொடங்குகின்ற இவ் விடத்தே என்றவாறு. அவற்றுள் என்றது சாதன்மிய வைதன்மிய திட்டாந்தங்கள் என்னும் அவ் விரண்டனுள் வைத்து என்றவாறு.

இனி, அவற்றின் போலிவகை கூறுகின்றனர். சாதன்மிய திட்டாந்தப் போலி விரிவகையால் ஐந்து வகைப்படும் என்க.

## சாதன்மிய திட்டாந்தப் போலி வகை

௬௬௧ - ௬௬௪ : சாதன..........என்ன

(இ - ள்.) சாதன தன்ம விகலமும் சாத்திய தன்ம விகலமும் உபயதன்ம விகலமும் - சாதன தன்மம் குறைவதும் சாத்திய தன்மம் குறைவதும் சாதன சாத்தியமாகிய இரண்டின் தன்மம் குறைவதும்; அநநுவயம் விபரீதாநுவயம் என்ன - அநநுவயமும் விபரீதாநுவயமும் என்று ஐந்து வகைப்படும்.

(வி - ம்.) விகலம் - குறை. தன்மம் - பண்பு. விபரீதம் - மாறுபாடு.

## வைதன்மிய திட்டாந்தப் போலி வகை

௬௬௪ - ௬௬௮ : வைதன்மிய.........என்ன

(இ - ள்.) வைதன்மிய திட்டாந்தம் ஆபாசமும் ஐவகைய - மறுதலை எடுத்துக்காட்டுப போலியும் ஐந்து வகைப்படும், அவை; சாத்திய அவியாவிருத்தி சாதன அவியாவிருத்தி - சாத்திய அவியாவிருத்தி என்றும் சாதன அவியாவிருத்தி என்றும்; உபயா அவியாவிருத்தி அவ்வெதிரேகம் விபரீத வெதிரேகம் என்ன - உபயா அவியாவிருத்தி என்றும் அவ்வெதிரேகம் விபரீதவெதிரேகம் என்றும் ஐந்து வகைப்படும் என்றார் என்க.

(வி - ம்.) எனவே திட்டாந்தப் போலிகள் பத்துவகைப்படும் என்றாராயிற்று. வைதன்மிய திட்டாந்தம் எதிர்மறை எடுத்துக் காட்டு. ஆபாசமும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது; என்னை? சாதன்மிய திட்டாந்தமே அல்லாது என்பது கருத்தாகலின் சாத்திய அவியாவிருத்தி சாத்தியத்தின்கண் வியாப்பியமும் விருத்தியும் இல்லது என்றவாறு. சாதனத்தின்கண் வியாப்பியமும் விருத்தியும் இல்லாதது சாதன வியாவிருத்தி என்க. உபயம்-சாத்தியசாதனம் இவ்விரண்டிலும் வியாத்தியும் விருத்தியும் இல்லது என்க. அவ்வெதிரேகம் - எதிர்மறை இல்லது. விபரீத வெதிரேகம் - மாறுபாடான எதிர்மறை.

## திட்டாந்தப் போலி விளக்கங்கள்

### (௧) சாதன்மிய திட்டாந்தப் போலி

௬௬௮ - ௬௭௪ : இவற்றுள்.........குறையும்

(இ - ள்.) இவற்றுள் சாதன தன்ம விகலமாவது - இத் திட்டாந்தப் போலிகளுள் வைத்துச் சாதன்மிய திட்டாந்தத்தில் சாதனதன்ம விகலம் எனனும் போலியாவது; திட்டாந்தத்தில்

சாதனங் குறைவது - எடுத்துக்காட்டின்கண் ஏதுவின் தன்மை குறைவதாம், அது வருமாறு; சத்தம் நித்தம் அமூர்த்தம், ஆதலால் - ஒலி நிலையுதலுடையது அருவமாகலின் என்று மேற்கோளும் ஏதுவும் கூறி எடுத்துக்காட்டாக; யாதொன்று யாதொன்று அமூர்த்தம் அது நித்தம் ஆதலால் - யாதொரு பொருள் யாதொரு பொருள் அருவமோ அது நிலையுதலுடையதாம், இங்ஙனமாதலின்; காண்புற்றது பரமாணுவில் எனில் - இவ்வுண்மை காணப்பட்டது பரமாணுவிடத்தில் எனத் திட்டாந்தம் காட்டினால்; திட்டாந்தம பரமாணு நித்தத்தோடு மூர்த்தம் ஆதலால் - திட்டாந்தமாகக் காட்டப்பட்ட பரமாணுவானது நிலைத்தல் தன்மையோடு உருவமும் உடையது ஆதலால்; சாத்திய தன்ம நித்தத்துவம் நிரம்பி - துணிபொருளின் பண்பாகிய நிலைத்தல் தன்மை நிரம்பி; சாதன தன்ம அமூர்த்தத்துவம் குறையும் - ஏதுவின் பண்பாகிய உருவமில்லாத்தன்மை குறைவதாம், ஆகவே இத்திட்டாந்தம் சாதன தன்மவிகலம் என்னும் போலியாயிற்று என்றார் என்க.

(வி - ம்.) சாதன தன்ம விகலம் ஏதுவின் பண்பு குறைதல். அமூர்த்தம் என்னும் ஏது பரமாணு என்னும் திட்டாந்தம் உருவமுடைத்தாகலின் குறைதல் காண்க. நித்தத்துவம் - நிலைத்தல் தன்மை. அமூர்த்தத்துவம் - உருவ மில்லாத் தன்மை.

## இதுவுமது

௩௪௯ - ௩௫௮: சாத்திய.........குறையும்

(இ - ள்.) சாத்திய தன்ம விகலமாவது - சாத்திய தன்ம விகலம் என்னும் சாதன்மிய திட்டாந்தப் போலியாவது; காட்டப்பட்ட திட்டாந்தத்தில் - மேற்கோளை வற்புறுத்துதற்கு எடுத்துக்காட்டப்பட்ட சாதன்மிய திட்டாந்தத்தின்கண்; சாத்திய தன்மம் குறைவுபடுதல் - துணிபொருளுக்குரிய பண்பு குறைவுபடுதலாம், அது வருமாறு; சத்தம் நித்தம் அமூர்த்தம் ஆதலால - ஒலி நிலைத்தல் தன்மைத்து அருவப்பொருள் ஆதலால் என மேற்கோளும் ஏதுவும் கூறி அதற்கு எடுத்துக்காட்டாக; யாதொன்று யாதொன்று அமூர்த்தம் அது நித்தம் புத்தி போல் என்றால் - யாதொரு பொருள் யாதொரு பொருள் உருவம் அற்றதோ அப் பொருள் நிலைத்தல் உடையது புத்தியைப் போல் என்று கூறினால்; திட்டாந்தமாகக் காட்டப்பட்ட புத்தி - ஈண்டு எடுத்துக்காட்டாகக் கூறப்பட்ட புத்தியானது; அமூர்த்தமாகி நின்றே அநித்தம் ஆதலால் - உருவமற்றதாக

இருந்தே நிலையாமையும் உடைத்தாதலின்; சாதன அமூர்த் தத்துவம் நிரம்பி சாத்திய நித்தத்துவம் குறையும் - ஏதுப் பண்பாகிய உருவமில்லாத் தன்மை முற்றுப்பெற்றுத் துணி பொருளின் பண்பாகிய நிலைத்தல் தன்மை குறையும், ஆதலால் இது சாத்தியதன்ம விகலம் என்னும் குற்றமுடைய சாதன்மிய திட்டாந்தபோலிமாயிற்று என்றார் என்க.

(வி - ம்.) திட்டாந்தம் - சாதன்மிய திட்டாந்தம். சாத்திய தன்மம் - ஈண்டு நித்தத்துவம். புத்தி - திட்டாந்தம். புத்தி - அருவம் ஆதலின் ஏதுத் தன்மம் ஆகிய அமூர்த்தத்துவம் முற்றியது. சாத்திய தன்மமாகிய நித்தத்துவம் புத்தி அழிபொருள் ஆதலின் குறைந்தது என்றவாறு.

## இதுவுமது

### ௫௫௪ - ௫௬௬ : உபய.........காட்டுதல்

(இ - ள்.) உபய தன்மவிகலமாவது - உபய தன்மவிகலம் என்னும் சாதன்ம திட்டாந்தப் போலியாவது; காட்டப்பட்ட திட்டாந்தத்திலே - வாதியால் எடுத்துக் காட்டப்பட்ட திட்டாந் தத்தின் கண்; சாத்தியம் சாதனம் இரண்டும் குறைதல் - துணிபொருளின் பண்பும் ஏதுவின் பண்பும் ஆகிய இரண்டும் குறைதலாம்; அன்றியும் அதுதான் - அதுவல்லாமல் அத் திட்டாந்தம் தானும்; சன்னும் அசன்னும் என இருவகையாம் - உள்ளதும் இல்லதும் என இருவகைப்படும்; இவற்றுள் சன்னு உள உபயதன்ம விகலமாவது - இவ்விரண்டனுள் உள்ளதாகிய உபயதன்ம விகலம் என்னும் சாதன்மிய திட்டாந்தப் போலி யாவது; உள்ள பொருட்கண் சாத்திய சாதனம் கொள்ளும் இரண்டும் குறையக் காட்டுதல் - உள் பொருளின்கண் துணி பொருளும் ஏதுவும் ஆகிய இரண்டும் கொண்டுள்ள பண்புகள் குறையும்படி எடுத்துக்காட்டுக் கூறுதல் என்க.

(வி - ம்.) இதன்கண் உபயதன்ம விகலம் என்னும் திட்டாந்தப் போலி சாதன சாத்தியங்கள் இரண்டினுடைய பண்பும் குறையும்படி திட்டாந்தம் காட்டுதல் இதுவேயுமன்றி இத்திட்டாந்தப் போலி உள் பொருளும் இல்பொருளும் பற்றி இரண்டுவகைப்படும் என்றுராயிற்று சன்னு - உளபொருள். அசன்னு - இல்பொருள். இனி, உள்பொருள் பற்றி வருகின்ற உபயதன்ம விகல திட்டாந்தப் போலிக்கு விளக்கங் கூறுவார் உள்பொருளின்கண் சாத்திய தன்மம் குறையக் காட்டுவது என்றவாறு.

### இதுவுமது

### ௩௬௭ - ௩௭௨ : சத்த.........குறையும்

(இ - ள்.) சத்த நித்தம் அமூர்த்தம் ஆதலான் - ஒலி நிலையுதல் உடைமைத்து என மேற்கோள் கூறி, அதனை வலியுறுத்தற்கு அது அருவப்பொருள் ஆதலால் என ஏதுவும் கூறி அதற்குத் திட்டாந்தமாக; யாதொன்று யாதொன்று அமூர்த்தம் அது நித்தம் கடம்போல் எனின் - யாதொரு பொருள் யாதொரு பொருள் அருவப்பொருளோ அப்பொருள் நிலைத்தலுடைய பொருளாம் குடம்போல என்று கூறினால்; திட்டாந்தமாகக் காட்டப்பட்ட குடந்தான் உண்டாகி - ஈண்டுத் திட்டாந்தமாக எடுத்துக் காட்டப்பட்ட குடம் தானும் உள்பொருளாய் அதன்கண்; சாத்தியமாய் உள நித்தத்துவமும் சாதனமாய் உள அமூர்த்தத்துவமும் குறையும் - துணிபொருளாய் உள்ள நிலைத்தல் தன்மையும் ஏதுவாய் உள்ள அருவத்தன்மையும் குறைவனவாம் ஆதலால் இது உள்பொருளின்கண் உபயதன்மவிகலம் என்னும் சாதன்மிய திட்டாந்தப்போலி ஆயிற்று என்றார் என்க.

(வி - ம்.) கடம் - குடம். குடம் ஈண்டு சாதன்மிய திட்டாந்தத்தின்கண் உள்பொருளாய் உள்ள திட்டாந்தம் என்க.

### இதுவுமது

### ௩௭௩ - ௩௮௪ : அசன்று.........குறையும்

(இ - ள்.) அசன்று உள்ள உபயதன்ம விகலம் - இல்பொருளின்கண் வருகின்ற உபயதன்ம விகலம் என்னும் சாதன்மியதிட்டாந்தப் போலியாவது; இல்லாப்பொருட்கண் சாத்திய சாதனம் என்னும் இரண்டும் குறையக்காட்டுதல் - இல்பொருளைச் சாத்திய சாதனம் என்னும் இரண்டனுடைய பண்புகளும் குறையும்படி திட்டாந்தமாக எடுத்துக்காட்டுதலாம், அதுவருமாறு; சத்தம் அநித்தம் மூர்த்தம் ஆதலால் - ஒலி நிலையாமை உடைத்து உருவப்பொருள் ஆதலால என மேற்கோளும் ஏதுவும் கூறி அதற்கு எடுத்துக்காட்டாக; யாதொன்று யாதொன்று மூர்த்தம் அது அநித்தம் ஆகாசம் போல் எனும் திட்டாந்தத்து யாதொரு பொருள் யாதொரு பொருள் உருவமுடையதோ அப பொருள் நிலையாத்தனமை உடையதாம் வானம் போல என்று கூறடபட்ட திட்டாந்தத்தின் கண்; சாத்தியதனமமாய் உள்ள அநித்தமும் சாதன தன்மமாய் உள்ள மூர்த்தமும் இரண்டும் - துணிபொருளின் பண்பாயிருக்

இன்ற நிலையாத்தன்மையும் ஏதுவின் பண்பாய் இருக்கின்ற உருவமும் ஆகிய இரண்டும்; ஆகாசம் அசத்து என்பானுக்கு அதன்கண் இன்மையானே குறையும் - ஆகாயம் இல்பொருள் என்பவனுக்கு அவ்விரண்டும் இல்லாமையாலே குறைவனவாம், இனி; உண்டென்பானுக்கு ஆகாசம் நித்தம் அமூர்த்தமாதலால் அவனுக்கும் குறையும் - ஆகாயம் உள்பொருள் என்பவனுக்கோ அவ்வாகாயம் நிலைத்தல்தன்மை உடையதாய் அருவப்பொருளும் ஆதலால் அத்தகையவனுக்கும் சாதன சாத்திய தன்மங்கள் இரண்டும் குறையும் ஆதலால் இஃது இல்பொருளின்கண் வந்த உபயதன்ம விகலம் என்னும் திட்டாந்தப் போலி ஆம் என்றார் என்க.

(வி - ம்.) அசன்னு - இல்பொருள். சாத்திய சாதனம் என்னும் இரண்டின் தன்மங்களும் குறையக் காட்டுதல். மூர்த்தம் - உருவமுடைய பொருள். ஆகாசம் - பௌத்தர்களுக்கு இல்பொருள் எனவே ஈண்டுப் பிரதிவாதியாய் நின்றவன் பௌத்தன் என்பது தோன்ற ஆகாசம் அசத்தென்பானுக்கு என்றார். ஆகாசம் உண்டென்பவன் சாங்கியன் என்க. சாங்கியனுக்கு ஆகாயம் நித்தமும் அருவமும் ஆதலால் அவனுக்கும் ஆகாயம் என்னும் திட்டாந்தத்தின்கண் சாத்திய தன்மமும் சாதன தன்மமும் குறைதல் உணர்க.

## அநன்னுவயம்

### ௫௮௫ - ௫௯௨ : அநன்னு.........ஆகும்

(இ - ள்.) அநன்னுவயமாவது - அநன்னுவயம் என்னும் சாதன்மிய திட்டாந்தப்போலியாவது; சாதன சாத்தியம் தம்மில் கூட்டம் மாத்திரம் சொல்லாதே - ஏதுவும் துணிபொருளும் தம்முள் இயைந்திருக்கும் கூட்டத்தை மட்டும் சொல்லாமல்; இரண்டனுடைய உண்மையைக் காட்டுதல் - அவ்விரண்டனுடைய உண்மைத்தன்மையை மட்டும் திட்டாந்தம் காட்டுதல், அது வருமாறு; சத்தம், அநித்தம் இருதகம் ஆதலின் - ஒலி அழியும் இயல்பிற்று எழுப்பப்படுதலால் எனச் சாத்தியமும் ஏதுவும் கூறி: யாதென்று யாதொன்று இருதகம் அது அநித்தம் எனும் அன்னுவயம் சொல்லாது - யாதொரு பொருள் யாதொரு பொருள் பண்ணப்படுமோ அப்பொருள் அழியும் தன்மைத்தாம் என்று கூறவேண்டிய நியமமான உடனிகழ்ச்சியைச் சொல்லாமல்; குடத்தின்கண்ணே இருதக அநித்தம் காணப்பட்ட என்றால் அன்னுவயம தெரியாது ஆகும் - திட்டாந்தமாகக் குடத்தின் கண்ணே செயலும் அழிவும் காணப்பட்டன என்றால் அன்னுவயம் தெரியாதாகும் சாத்திய சாதனங்களின் தன்மங்களுக்கு நியதமான உடனிகழ்ச்சி

விளக்கமாகா தொழியும் ஆதலால் இஃது அப்பெயர் பெற்றது என்றார் என்க.

(வி - ம்.) திட்டாந்தத்தினும் அன்னுவயமே துணி பொருளைச் சாதித்தற்குச் சிறப்புடைத்தாகலின் அதனைக் கூறாமல் திட்டாந்தங் கூறுதல் பொருளை நன்கு விளக்காமையின் இத் திட்டாந்தம் போலி என்றவாறு. கிருத்தமும் அநித்தமும் காணப்பட்ட என்புழி, காணப் பட்ட என்பது அகர ஈற்றுப் பலவறிசொல்.

## விபரீதான்னுவயம்

**௩௧௩ - ௪௦௧ : விபரீதம்..........ஆம்**

(இ - ள்.) விபரீத அன்னுவயம் - விபரீதான்னுவயம் என்னும் சாதன்மியதிட்டாந்தப போலியாவது ; வியாபகத் துடைய அன்னுவைத்தாலே - சாத்திய தன்மத்தின் அன்னு வயத்தைக் கொண்டே ; வியாப்பியம் விதித்தல் - சாதன தன்மமாகிய வியாப்பியத்தை நிலைநாட்டுதல், அது வருமாறு ; சத்தம் அநித்தம் கிருத்தத்தால் எனின் - ஒலியானது அழியும் இயல்பிற்று பண்ணப்படுதலால் என்றக்கால் ; யாதொன்று யாதொன்று கிருதத்ம் அநித்தம் என - யாதொரு பொருள் யாதொரு பொருள் பண்ணப்படுவதோ அப்பொருள் அழியும் இயல்பிற்றும் ஆம் என்று வியாத்தி யைக் காட்டி; வியாப்பியத்தால் வியாபகத்தைக் கருதாது - சாதன தன்மமாகிய நியதமான உடனிகழ்ச்சியைக் கொண்டு காரணமாகிய சாத்தியதன்மத்தைத் துணியாமல் ; யாதொன்று யாதொன்று அநித்தம் அது கிருத்தம் என - யாதொரு பொருள் யாதொரு பொருள் அழியும் இயல்பிற்றோ அப்பொருள் பண்ணப்படும் பொருளாம் என்று; வியாபகத்தால் வியாப்பியத் தைக் கருதுதல் - வியாபகமாகிய சாத்திய தன்மத்தைக் கொண்டு வியாப்பியமாகிய சாதனதன்மத்தைக் குறித்தல் ; அப்படிக் கருதின் வியாபகம் வியாப்பியத்தை இன்றியும் நிகழ்தலின் விபரீதமாம் - அங்ஙனம் குறிக்குமிடத்து சாத்திய தன்மம் ஆகிய வியாபகம் சாதனதன்மமாகிய வியாப்பியம் இல்லாமலே நிகழும் என்றாதலின் முரணும், ஆதலின் இது விபரீதான்னுவய திட்டாந்தப்போலி ஆயிற்று என்றார் என்க.

(வி - ம்.) கிருத்தப்பொருள் அநித்தம் என்று கருதுதலே முறை. ஈண்டு கிருத்தம் சாதன தன்மம். அநித்தம் சாத்திய தன்மம். ஆதலால் சாத்திய தன்மத்தைக் கொண்டு சாதன தன்மத்தை நிலை நாட்டிய படியாம். இனி, இதற்குத் திட்டாந்தமாக வருவது கிருத்தப் பொருள் ஆம். இங்ஙனம் கூறுவதே முறையாகவும் இதற்கு மாறாகத் திட்டாந்த

மாக அநித்தப் பொருளைக் கூறின் அத்திட்டாந்தம் அநித்தத்தை நிலை நாட்டாது நிருத்தத் தன்மையை நிலை நாட்டுதற்கு ஏதுவாகின்றது. ஆகவே சாதனத்தைக்கொண்டு சாத்தியத்தை நிலை நாட்டுதலின்றி இது சாத்தியத்தைக்கொண்டு சாதனத்தை வற்புறுத்துதல் போலத் தோன்றுதலின் விபரீதமாயிற்று. பிறரெல்லாம் இது திட்டாந்தப் போலிக்குக் கூறும் விளக்கம் என்பதை மறந்தார் போன்று உரை கூறுவர். அவ்வுரை போலி என்க. வியாபகம் ஒரு பொருளின்கண் எங்கும் இருப்பது. வியாப்பியம் அப் பொருளின்கண் அடங்கியிருப்பது. நெருப்பு வியாபகப் பொருள், அதன்கண் அடங்கி எழும் புகை வியாப்பியம் என்று உணர்க.

## வைதன்மிய திட்டாந்தப் போலி வகை

### (௧) சாத்தியாவியா விருத்தி

௪௦௨ - ௪௧௨ : வைதன்மிய.........ஒழிதல்

(இ - ள்.) வைதன்மிய திட்டாந்தத்து சாத்திய அவியா விருத்தி ஆவது - இனி இரண்டாவதாகிய எதிர்மறை எடுத்துக் காட்டென்னும் வைதன்மிய திட்டாந்தப் போலிகளுள் சாத்தியா விருத்தி என்னும் வைதன்மிய திட்டாந்தப் போலியாவது; சாதன தன்மம் மீண்டு சாத்திய தன்மம் மீளாது ஒழிதல் - ஏதுவின் பண்பு மீட்சியுற்று, துணிபொருட் பண்பிற்கு எதிர்மறை ஆகாமையால் மீளாது நிற்றல், அது வருமாறு : சத்தம் நித்தம் அமூர்த்தத்து என்றால் - ஒலியானது நிலைத்தல் தன்மைத்து; அஃது அருவப்பொருள் ஆதலின் என்று மேற்கோளும் ஏதுவும் கூறியக்கால் அதற்கு எடுத்துக்காட்டாக; யாதொன்று யாதொன்று நித்தமும் அன்று அது அமூர்த்தமும் அன்று பரமாணுப்போல் எனில் - யாதொரு பொருள் யாதொரு பொருள் நிலையாப் பொருளாகுமோ அப்பொருள் அருவமும் அன்று பரமாணுவைப் போல என்று வைதன்மிய திட்டாந்தம் கூறின் அப்படித் திட்டாந்தமாகக் கூறப்பட்ட பரமாணு; நித்தமாய் - மூர்த்தம் ஆதலில் - அவ்வாறு திட்டாந்தமாகக் கூறப்பட்ட பரமாணுவானது நிலைத்தல் தன்மைத்தாய் உருவப் பொருளும் ஆதலின, இதன்கண்; சாதன அமூர்த்தம் மீண்டு - ஏதுவின தன்மமாகிய உருவம் தனக்கு இன்மையால் இல்லாது மீண்டு; சாத்திய நித்தம் மீளாது ஒழிதல் - துணிபொருளாகிய நிலைத்தல் தன்மை தனக்கும் உண்மையின் அது மீளாது தன்கண் இருத்தலாம்: என்றார் என்க.

(வி - ம்.) வைதன்மிய திட்டாந்தம் - சாத்தியதன்மமும் சாதன தன்மமுமாகிய இரண்டற்கும் எதிர்மறையாக இருத்தல் வேண்டும்; ஈண்டு சத்தம் நித்தம் என்புழி நித்தம் எடுத்துக் காட்டாகிய பரமாணுவும் நித்தம் ஆதலின் அதற்கு எதிர்மறையன்றாயிற்று. இனிச் சாதனம்

அமூர்த்தம் எனவே பரமாணு அதன் எதிர்மறையாகிய மூர்த்தம் ஆதலின் அது மீண்டது என்றார். ஈண்டு மீளல் மீளாமை இரண்டும் இன்மை என்னும் பொருட்டு. பிறண்டும்: இதனைக் கடைப்பிடித்திடுக.

## சாதனுவியா விருத்தி

சகரு - சஉச : சாதனு.........மீளாது

(இ - ள்.) சாதன அவியா விருத்தியாவது - சாதனு வியாவிருத்தி என்னும் வைதன்மிய திட்டாந்தப் போலியாவது; சாத்திய தன்மம் மீண்டு சாதன தன்மம் மீளாது ஒழிதல் - துணிபொருளின் பண்பு திட்டாந்தத்தின்கண் இல்லையாம் மீட்சி பெற்று ஏதுவின் பண்புச்சு எதிர்மறையாகாது திட்டாந்தத்தின்கண் உளதாதல், அது வருமாறு; சத்தம் நித்தம் அமூர்த்தத்து என்றால் - ஒலியானது நிலைத்தற்றன்மை யுடைத்து என்று தன் மேற்கோள் கூறி அருவப்பொருளாகலின் என்று கூறியவிடத்து அதற்கு வைதன்மிய திட்டாந்தமாக; யாதொன்று யாதொன்று நித்தம் அன்று அஃது அமூர்த்தமும் அன்று கன்மம் போல் என்றால் - யாதொரு பொருள் யாதொரு பொருள் நிலையாப் பொருள் ஆகுமோ அப்பொருள் அருவமு மன்றாம் என்று - கூறி வினை போல் என்று எடுத்துக் காட்டினால்; வைதன்மிய திட்டாந்தமாகக் காட்டப்பட்ட கன்மம் அமூர்த்தமாய் நின்றே அநித்தம் ஆதலின் - ஈண்டு எதிர்மறை எடுத்துக்காட்டாகக் காட்டப்பட்ட வினையானது அருவமாயிருந்தே அழிதன்மாலைத்துமாதலாலே; சாத்தியம் ஆன நித்தியம் மீண்டு சாதனமான அமூர்த்தம் மீளாது - துணிபொருட் பண்பாகிய நிலையுதற்றன்மை திட்டாந்தத்தின்கண் இல்லையாம் மீட்சியுற்று ஏதுவின் பண்பாகிய அருவம் அதற்குமுளதாம் மீட்சி பெறாதாயிற்று என்றார் என்க.

(வி - ம்.) சாதனுவியா விருத்தி - சாதனத் தன்மை மீட்சியுறாமை. இதனால் இஃது இப்பெயர்த்தாயிற்று. மீட்சியுறாமை எனினும் எதிர் மறையாகாமை எனினும் ஒக்கும்.

## உபயாவியாவிருத்தி

சஉச - சகூஉ : உபயா.........காட்டல்

(இ - ள்.) உபயாவியாவிருத்தி - உபயாவியாவிருத்தி என்னும் வைதன்மிய திட்டாந்தப் போலியாவது காட்டப்பட்ட வைதன்மிய திட்டாந்தத்தினின்று - எடுத்துக்காட்டப்பட்ட எதிர் மறை எடுத்துக் காட்டினின்றும்; சாதன சாத்தியங்கள் மீளாமை

ஊன்றியும் - ஏதுவின் பண்பும் துணிபொருட் பண்பும் நீக்கியுருமையோடு; உண்மையின் உபயாவியாவிருத்தி இன்மையின் உபயாவியாவிருத்தி என இருவகை - உள் பொருட்கண் உபயாவியாவிருத்தி எனவும் இல் பொருட்கண் உபயாவியாவிருத்தி எனவும் அது இருவகைபபடும் அவ்விரண்டனுள் வைத்து; உண்மையின் உபயாவியா விருத்தி - உள் பொருட்கண் உபயா வியாவிருத்தியாவது; உள்ள பொருட்கண் சாத்திய சாதனம் மீளாதபடி வைதன்மிய திட்டாந்தம் காட்டல் - உள் பொருளின்கண் சாத்திய தன்மமும் சாதன தன்மமுமாகிய இரண்டும் மீட்சியுறுதபடி எதிர்மறை எடுத்துக் காட்டினை எடுத்துக் காட்டுதலாம், அது வருமாறு: - சத்தம் நித்தம் அமூர்த்தம் ஆதலின் என்றற்கு-ஒலி நிலையுதலுடைத்து என்னை? அஃது அருவப் பொருளாகலின் என்று மேற்கோள் கூறி அதனை வலியுறுத்தற்கு ஏதுவும் கூறிய வாதியானவன்; யாதொன்று யாதொன்று நித்தம் அன்று அமூர்த்தமும் அன்று ஆகாசம் போல் என்றால்-யாதொரு பொருள் யாதொரு பொருள் நிலையாமையுடைத்தோ அப்பொருள் அருவப் பொருளும் அன்றும் ஆகாசம் போல என வைதன்மிய திட்டாந்தம் கூறிய வழி; வைதன்மிய திட்டாந்தமாகக் காட்டப்பட்ட ஆகாசம் பொருள் என்பாற்கு - இங்ஙனம் மறுதலை எடுத்துக்காட்டாகக் காட்டப்பட்ட ஆகாயம் உள் பொருள் என்னும் கொள்கையுடைய பிரதிவாதிக்கு; ஆகாசம் நித்தமும் அமூர்த்தமும் ஆதலால் - ஆகாயமானது நிலைத்தற்றன்மையுடையதும் அருவப் பொருளும் ஆதலாலே; இத் திட்டாந்தத்தினின்றும் துணிபொருளாகிய நிலைத்தலும் ஏதுத்தன்மையாகிய அருவமும் ஆகிய இரண்டும் ஆகாயத்திலுளதாய் மீட்சியுருவாயின; என்றார் என்க.

(வி - ம்.) உண்மையின் - உள் பொருளின்கண். உள்வ பொருள் - உள் பொருள். ஆகாசம் உள் பொருள் என்பாற்கு என்றவாறு.

## ௪௪௦ - ௪௪௧: இன்மை.........இலையாகும்

(இ - ள்.) இன்மையின் உபயவியாவிருத்தியாவது - இனி இல்பொருளின்கண் உபயாவியாவிருத்தி என்னும் வைதன்மிய திட்டாந்தப் போலியானது; சத்தம் அநித்தம் மூர்த்தம் ஆதலால் என்றவிடத்து - ஒலி அழிதன் மாலைத்து, என்னை? உருவப்பொருளாகலின் என்று மேற்கோளும் ஏதுவும் கூறிய விடத்தே; யாதொன்று யாதொன்று அநித்தம் மூர்த்தம் அன்று ஆகாசம் போல் என - யாதொரு பொருள் யாதொரு பொருள் நிலையாமையுடைத்தோ அப் பொருள் உருவப் பொருளும்

ஆகாது ஆகாயம் போல் என்று; வைதன்மிய திட்டாந்தங் காட்டில் - எதிர்மறைத்திட்டாந்தம் காட்டினல்; ஆகாசம் பொருள் அல்ல என்பானுக்கு - ஆகாயம் உள் பொருள் அன்று என்னும் கொள்கையுடைய பிரதிவாதிக்கு; ஆகாசந்தானே உண்மை இன்மையினல் - திட்டாந்தமாகக் காட்டிய ஆகாயம் என்பதே இல் பொருளாதலாலே; சாத்திய அநித்தமும் சாதன மூர்த்தமும் மீட்சியும் மீளாமையும் இலையாகும்-சத்தம் அநித்தம் என்னும் சாத்தியப் பண்பும் மூர்த்தம் என்னும் ஏதுத் தன்மையு மாகிய இரண்டுமே மீட்சியுறுதலும் மீளாமையுமாகிய இரண்டு தன்மையுமே இல்லையாகும் என்றார் என்க.

(வி - ரை.) அன்ன்று என்புழி னகரமெய் அளபெடுத்தது. ஆகாசம் பொருள் அல்ல என்பான் பௌத்தன். உண்மையின்மை-உள்பொருளாந் தன்மையில்லாமை.

### அவ் வெதிரேகம்

சடு௦ - சடுகூ: அவ்வெதிரேகம்.........தெரியாது

(இ - ள்.) அவ்வெதிரேகமாவது - இனி அவ்வெதிரேகம் என்னும் வைதன்மிய திட்டாந்தப் போலியாவது; சாத்தியம் இல்லாவிடத்துச் சாதனம் இன்மை சொல்லாதே விடுதல் ஆகும - சாத்திய தன்மம் இல்லாதவிடத்தே சாதன தன்மமும் இல்லாமையை எடுத்துக் கூறுமலே விட்டொழிதலாகும், அது வருமாறு; சத்தம் நித்தம் பண்ணப்படாமையால் என்றால் - ஒலி நிலைத்தற்றன்மையுடைத்து செய்யப்படாமையால் என்று கூறியவிடத்தே; வைதன்மிய திட்டாந்தம் காட்டுபவன் யாதொன்று யாதொன்று நித்தமன்று பண்ணப்படுவதல்லா ததுவும் அன்று எனும் இவ்வெதிரேகம் தெரியச் சொல்லாது - யாதொரு பொருள் யாதொரு பொருள் நிலையுதலுடைத்தன்றோ அப் பொருள் பண்ணப்படுவதல்லாத பொருளுமாம் என இவ் வெதிர்மறைப் பண்பு கேட்போர்க்கு நன்கு விளங்கும்படி கூறுமல்; குடத்தின்கண்ணே பண்ணப்படுதலும் அநித்தமும் கண்டேம் ஆதலால என்னின் - குடத்தின்கண் பண்ணப்படுதலும் நிலையா மையும் கண்டேம் ஆதலின் என்று கூறின்; நித்தம் அன்று பண்ணப்படுவது அல்லாததுவும் அன்று எனனும் எதிர்மறைகள் கேட்போர்க்கு நன்கு விளங்கித் தோன்றமாட்டா ஆதலின் இஃது அவ்வெதிரேக வைதன்மிய திட்டாந்தப் போலியாயிற்று என்றார் என்க.

(வி - ரை.) வெதிரேகம் - எதிர்மறை. வைதன்மிய திட்டாந்தம் காட்டுதலின் நோக்கமே துணிபொருட் பண்பை உடன்பாட்டுத்திட்டா

த்தால் வலியுறுத்திய பின்னரும் எதிர்மறைத் திட்டாந்தத்தானும் வலியுறுத்துதலே ஆதலின் அத் திட்டாந்தத்தின்கண் எதிர்மறைப் பண்பு விளங்குமாறு கூறுவதே முறையாகும். அவ்வாறு கூறாதவிடத்தே அவ் வெதிர்மறைப்பண்பு விளங்காமையாலே அவ்வெதிரேக வைதன்மிய திட்டாந்தப் போலி என்னப்பட்டது.

ஈண்டு, சாத்திய தன்மம் நித்தம் என்பது வைதன்மிய திட்டாந்தத்தில் அநித்தத் தன்மை இருத்தல் கூடாதாகலின் அதனைச் சாத்தியம் இல்லாவிடம் என்றார். அங்ஙனமே சாதன தன்மம் பண்ணப்படாமையாம். ஆகவே நித்தியத் தன்மை இல்லாவிடத்தே அதனைச் சாதித்தற் குரிய சாதனத் தன்மையும் இல்லாமை வேண்டும். இவ்வாறு அவ் விரண்டின் உண்மையைக் கூறும் சொற்களுக்கு எதிர்மறைச் சொல்லால் அவற்றைக் கூறிக் காட்ட வேண்டும். அங்ஙனமன்றிக் குடமாகிய வைதன்மிய திட்டாந்தத்தே அவற்றின் எதிர்மறைச் சொல்லைக் கொண்டு விளக்குதல் வேண்டும். நித்தத்தின் எதிர்மறை நித்தமன்று என்பதாம். பண்ணப் படுவதன்று என்பதன் எதிர்மறை பண்ணப் படாததன்று என்பதாம். இவற்றால் கூறாது, நித்தியத்தின் எதிர்மறையாம் என்றுட் கொண்டு அநித்தியம் என்றும் பண்ணப்படாமையின் எதிர்மறை பண்ணப் படுதல் என்றுட் கொண்டு பண்ணப் படுதல் என்றும் கூறியவழி இவை சாத்திய தன்மத்தின் எதிர்மறையையும் சாதன தன்மத்தின் எதிர் மறையையும் கேட்போர் உளத்திற் பதிப்பனவாகாமல் குடத்தின் இயல்பு கூறுவதுபோலத் தோன்றிக் குடம் திட்டாந்தமாகாமலே ஒழிதலின் இதற்கு எதிர்மறை தோன்றச் சொல்லாமையே காரணம் ஆதல் நுண்ணிதின் உணர்க.

### விபரீத வெதிரேகம்

௪௯௦ - ௪௯௩: விபரீத.........கொள்க

(இ - ள்.) விபரீத வெதிரேகமாவது - விபரீத வெதிரேகம் என்னும் வைதன்மிய திட்டாந்தப் போலியாவது; மாறுதலைப் பக்கத்து சாத்திய தன்மத்தையும் சாதன தன்மத்தையும் முறைப்படக் கூறாமல் தலை தடுமாறக் கூறுதலாம், அது வருமாறு; சத்தம் நித்தம் மூர்த்தமாதலின் என்றால் என நின்ற விடத்து-சத்தம் நிலையுதலுடைத்து, என்னை அஃது உருவப் பொருளாதலான் என மேற்கோளும் ஏதுவும் முறைப்படியே கூறி வைத்து அவ்விடத்தே வைதன்மிய திட்டாந்தம் கூறப்புகுந்து; யாதோர் இடத்து நித்தமும் இல்லை அவ்விடத்து மூர்த்தமும் இல்லை எனாதே - எப்பொருளில் நிலையுதற்றன்மை யில்லையோ அப் பொருளிடத்தே உருவமும் இல்லையாம் என அம் முறைப்படியே கூறாமல்

யாதோர் இடத்து மூர்த்தமும் இல்லை அவ்விடத்து நித்தமும் இல்லை என்றால் - யாதொரு பொருளில் உருவம் இல்லையோ அப் பொருளிடத்தே நிலையுதற்றன்மையுமில்லை என்றக்கால் இதன்கண் சாத்திய தன்மத்தின் எதிர்மறை சாதன தன்மத்தின் எதிர்மறை போல மாறுபட்டுத் தோன்றுதலால் ஈரிடத்தும்; வெதிரேகம் மாறுகொள்ளும் எனக் கொள்க - வைதன்மிய திட்டாந்தத்திலமைந்த எதிர்மறைப் பண்பு சாதன சாத்தியமிரண்டினும் மாறுபட்டுத் தோன்றும் ஆதலால் இத்தகைய திட்டாந்தம் விபரீத வைதன்மிய திட்டாந்தப் போலி எனக் கொள்வாயாக! என்றார் என்க.

(வி - ம்.) சாத்திய தன்மத்தின் எதிர்மறையும் சாதன தன்மத்தின் எதிர்மறையும் இடம் மாறுதலாலே கேட்போர்க்கு மனத்தடு மாற்றத்தை உண்டாக்குதலால் இஃது அப்பெயர்த் தாயிற்று.

## முடிவுரை

௪௬௯ - ௪௭௨ : நாட்டிய.........ஆய்ந்தேன்

(இ - ள்.) நாட்டிய இப்படித் தீய சாதனத்தால் - மணிமேகலாய்! யாம் ஈண்டு உனக்கு விளக்கி நிலைநாட்டிய ஏதும் போலிகளாலும்; காட்டும் அனுமான ஆபாசத்தின் ஈண்டு விளக்கிக் காட்டிய கருத்துப் போலி வகைகளானும் மயங்காமல்; இத்திறவிதியால் காட்சி கருத்து என்னும் - நம்மனோர்க்குரிய காட்சியளவையும் கருத்தளவையும் ஆகிய இரண்டு குற்றமற்ற அளவைகளானும்; மெய்யும் பொய்யும் ஐயம் இன்றி ஆய்ந்து அறிந்து கொள் - மெய்ப்பொருள் இயல்பினையும் பொய்ப்பொருளியல்பினையும் சிறிதும் ஐயந்திரிபற ஆராய்ந்து அறிந்து கொள்வாயாக! என்று அறவணவடிகளார் செவியறிவுறுத்தியருளினர் என்பதாம்.

(வி - ம்.) இப்படி - இத்தகைய. தீயசாதனம்-ஏதுப்போலி. அனுமான ஆபாசம் என்றது பக்கப் போலியை, மெய் - மெய்ப்பொருள்; பொய் - பொய்ப்பொருள். ஐயமின்றி என்றதனால் திரிபின்றி எனவும் கூறிக் கொள்க.

இனி, இக் காதையினை, இறைஞ்சிய இளங்கொடி தன்னை உரைப்போன், நகர் கடல் கொள நின் தாயரும் யானும் நின் பொருட்டால் இப் பதிப் படர்ந்தனம் என்றலும் இறைஞ்சித் தீவ திலகையும் செப்பினள். ஐவகைச் சமயமும் செவ்விதன்மையின் சிந்தையில் வைத்திலேன் அடிகள் மெய்ப்பொருள் அருளுக என்ன நங்காய் கேள் நீ, அளவை இரண்டே பிரத்தியங் கருத்தளவு என்ன,

சுட்டுணர்வைப் பிரத்தியக்கம் எனச் சொல்லி விட்டனர் மற்றவை ஏனை அளவைகளெல்லாம் அனுமானமாம், பக்கம் ஏதுத் திட்டாந்தம் உபநயம் நிகமனம் என ஐந்துள, தியபக்கமும் தீய வேதுவும் தீய எடுத்துக் காட்டும் ஆவன பக்கப் போலியும் ஏதுப் போலியும் திட்டாந்தப் போலியுமாம் நாட்டிய இப்படிச் சாதனத்தால் ஆபாசத்தின் ஐயமின்றி விதியால் மெய்யும் பொய்யும் ஆய்ந்து அறிந்துகொள்'' என்ருர் என வினைமுடிவு செய்க.

தவத்திறம்பூண்டு தருமம் கேட்ட காதை முற்றிற்று.

## ௩௦. பவத்திற மறுகெனப் பாவை நோற்ற காதை

[முப்பதாவது பவத்திற மறுகெனப் பாவை நோற்ற பாட்டு]

அஃதாவது—பிறப்பறுக என்று குறிக்கொண்டு மணிமேகலை நோன்பு செய்த வரலாறு கூறும் செய்யுள் என்றவாறு.

இதன்கண்:—முன் காதையில் அறவணவடிகளார் மெய்யுணர்தற்கு ஒருதலையாக முற்பட அறிந்துகொள்ள வேண்டிய அளவைகளையும் அவற்றின் போலிகளையும் மணிமேகலைக்கு அறிவுறுத்தினராக; இந்தக் காதையில் அவ்வடிகளார் புத்தர் திருவாய் மலர்ந்தருளிய தத்துவங்களையும் அவற்றை மேற்கொண்டொழுகுமாற்றையும் செவியறிவுறுத்த அவற்றையெல்லாம் நன்குணர்ந்து கொண்ட மணிமேகலை அவ்வறநெறி நின்று பிறப்பற நோன்பு நோற்ற செய்திகளும் பிறவும் கூறப்படும்.

தானந் தாங்கிச் சீலந் தலைநின்று
போன பிறப்பிற் புகுந்ததை யுணர்ந்தோள்
புத்த தன்ம சங்க மென்னும்
முத்திற மணியை மும்மையின் வணங்கிச்
சரண கதியாய்ச் சரண்சென் றடைந்தபின்
முரணாத் திருவற மூர்த்தியை மொழிவோன்
அறிவு வறிதா யுயிர்நிறை காலத்து
முடிதயங் கமரர் முறைமுறை யிரப்பத்
துடித லோக மொழியத் தோன்றிப்
போதி மூலம் பொருந்தி யிருந்து
மாரனை வென்று வீர னாகிக்
குற்ற மூன்று முற்ற வறுக்கும்
வாமன் வாய்மை யேமக் கட்டுரை
இறந்த காலத் தெண்ணில்புத் தர்களுஞ்
சிறந்தருள் கூர்ந்து திருவாய் மொழிந்தது
ஈரறு பொருளி னீந்தநெறி யுடைத்தாய்ச்
சார்பிற் றோன்றித் தத்தமின் மீட்டும்
இலக்கணத் தொடர்தலின்
மண்டில வகையா யறியக் காட்டி
எதிர்முறை யோப்ப மீட்சியு மாகி

ஈங்கி தில்லா வழியில் லாகி
ஈங்கி துள்ள வழியுண் டாகலின்
தக்க தக்க சார்பிற் றோற்றமெனச்
சொற்றகப் பட்டு மிலக்கணத் தொடர்பாற்
கருதப் பட்டுங் கண்டநான் குடைத்தாய்
மருவிய சந்தி வகைமூன் றுடைத்தாய்த்
தோற்றம் பார்க்கின் மூன்று வகையாய்த்
தோற்றற் கேற்ற காலமூன் றுடைத்தாய்க்
குற்றமும் வினையும் பயனும் விளைந்து
நிலையில வறிய துன்பமென நோக்க
உலையா வீட்டிற் குறுதி யாகி
நால்வகை வாய்மைக்குச் சார்பிட னாகி
ஐந்துவகைக் கந்தத் தமைதி யாகி
மெய்வகை யாறு வழக்குமுக மெய்தி
நயங்க ணான்காற் பயன்க ளெய்தி
இயன்றநால் வகையால் வினாவிடை யுடைத்தாய்
நின்மிதி யின்றி யூழ்பா டின்றிப்
பின்போக் கல்லது பொன்றக் கெடாதாய்ப்
பண்ணுந ரின்றிப் பண்ணப் படாதாய்
யானு மின்றி யென்னது மின்றிப்
போனது மின்றி வந்தது மின்றி
முடித்தலு மின்றி முடிவு மின்றி
வினையும் பயனும் பிறப்பும் வீடும்
இனையன வெல்லாந் தானே யாகிய
பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பயன்
இற்றென வகுத்த வியல்பீ ராறும்
பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவர்
அறியா ராயி னாழ்நர கறிகுவர்
பேதைமை யென்ப தியாதென வினவின்
ஓதிய விவற்றை யுணரா து மயங்கி
இயற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோ டுண்டெனக் கேட்டது தெளிதல்
உலக மூன்றினு முயிரா முலகம்
அலகில பல்லுயி ராறுவகைத் தாகும்
மக்களுந் தேவரும் பிரமரு நரகருந்
தொக்க விலங்கும் பேயு மென்றே
நல்வினை தீவினை யென்றிரு வகையாற்
சொல்லப் பட்ட கருவிற் சார்தலுங்

கருவிற் பட்ட பொழுதினுட் டோற்றி
வினைப்பயன் விளையுங் காலை யுயிர்கட்கு
மனப்பே ரின்பமுங் கவலையுங் காட்டுந்
தீவினை யென்ப தியாதென வினவின்
ஆய்தொடி நல்லா யாங்கது கேளாய்
கொலையே களவே காமத் தீவிழை
வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவர்
இத்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
நல்வினை யென்ப தியாதென வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரும் மக்களும் பிரமரு மாகி
மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்குவர்
உணர்வெனப் படுவ துறங்குவோ ருணர்விற்
புரிவின் றாகிப் புலன்கொளா ததுவே
அருவுரு வென்பதவ் வுணர்வு சார்ந்த
உயிரு முடம்பு மாகு மென்ப
வாயி லாறு மாயுங் காலை
உள்ள முறுவிக்க வுறுமிட னாகும்
ஊறென வுரைப்ப துள்ளமும் வாயிலும்
வேறு புலன்களை மேவுத லென்ப
நுகர்வே யுணர்வு புலன்களை நுகர்தல்
வேட்கை விரும்பி நுகர்ச்சியா ராமை
பற்றெனப் படுவது பசைஇய வறிவே
பவமெனப் படுவது கரும வீட்டந்
தருமுறை யிதுவெனத் தாந்தாஞ் சார்தல்
பிறப்பெனப் படுவதக் கருமப் பெற்றியின்
உறப்புண ருள்ளஞ் சார்பொடு கதிகளிற்
காரண காரிய வுருக்களிற் றோன்றல்
பிணியெனப் படுவது சார்பிற் பிறிதாய்
இயற்கையிற் றிரிந்துடம் பிடும்பை புரிதல்
மூப்பென மொழிவ தந்தத் தளவுந்

தாக்குநிலை யாமையிற் றுந்தளர்ந் திடுதல்
சாக்கா டென்ப தருவுருத் தன்மை
யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்
பேதைமை சார்வாச் செய்கை யாகுஞ்
செய்கை சார்வா வுணர்ச்சி யாகும்
உணர்ச்சி சார்வா அருவுரு வாகும்
அருவுருச் சார்வா வாயி லாகும்
வாயில் சார்வா ஊறா கும்மே
ஊறு சார்ந்து நுகர்ச்சி யாகும்
நுகர்ச்சி சார்ந்து வேட்கை யாகும்
வேட்கை சார்ந்து பற்றா கும்மே
பற்றிற் றோன்றுங் கருமத் தொகுதி
கருமத் தொகுதி காரண மாக
வருமே யேனை வழிமுறைத் தோற்றந்
தோற்றஞ் சார்பின் மூப்புப்பிணி சாக்கா
டவல மாற்றுக் கவலைகை யாறெனத்
தவில் துன்பந் தலைவரு மென்ப
ஊழின்மண் டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி
பேதைமை மீளச் செய்கை மீளுஞ்
செய்கை மீள வுணர்ச்சி மீளும்
உணர்ச்சி மீள வருவுரு மீளும்
அருவுரு மீள வாயின் மீளும்
வாயின் மீள ஊறு மீளும்
ஊறு மீள நுகர்ச்சி மீளும்
நுகர்ச்சி மீள வேட்கை மீளும்
வேட்கை மீளப் பற்று மீளும்
பற்று மீளக் கருமத் தொகுதி
மீளுங் கருமத் தொகுதி மீளத்
தோற்ற மீளுந் தோற்ற மீளப்
பிறப்பு மீளும் பிறப்புப் பிணிமூப்புச்
சாக்கா டவல மாற்றுக் கவலை
கையா றென்றிக் கடையில் துன்பம்
எல்லா மீளுமிவ் வகையான் மீட்சி
ஆதிக் கண்ட மாகு மென்ப
பேதைமை செய்கை யென்றிவை யிரண்டுங்
காரண வகைய வாத லானே
இரண்டாங் கண்ட மாகு மென்ப
உணர்ச்சி யருவுரு வாயி லூறே
நுகர்ச்சி யென்று நோக்கப் படுவன
முன்னவற் றியல்பாற் றுன்னிய வாதலின்

மூன்றாங் கண்டம் வேட்கை பற்றுக்
கரும வீட்ட மெனக்கட் டுரைப்பவை
மற்றப் பெற்றி நுகர்ச்சி யொழுக்கினுட்
குற்றமும் வினையு மாக லானே
நான்காங் கண்டம் பிறப்பே பிணியே
மூப்பே சாவென மொழிந்திடுந் துன்பம்
எனவிவை பிறப்பி னுழக்குபய னாதலிற்
பிறப்பின் முதலுணர் வாதிச் சந்தி
நுகர்ச்சி யொழுக்கொடு விழைவின் கூட்டம்
புகர்ச்சியின் றறிவ திரண்டாஞ் சந்தி
கன்மக் கூட்டத் தொடுவரு பிறப்பிடை
முன்னிச் செல்வது மூன்றாஞ் சந்தி
மூன்றுவகைப் பிறப்பு மொழியுங் காலை
ஆன்றபிற மார்க்கத் தாய வுணர்வே
தோன்றல் வீடெனத் துணிந்து தோன்றியும்
உணர்வுள் ளடங்க வுருவாய்த் தோன்றியும்
உணர்வு முருவு முடங்கத் தோன்றிப்
புணர்தரு மக்க டெய்வம்விலங் காகையுங்
கால மூன்றுங் கருதுங் காலை
இறந்த கால மென்னல் வேண்டும்
மறந்த பேதைமை செய்கையா னவற்றை
நிகழ்ந்த காலமென நேரப் படுமே
உணர்வே யருவுரு வாயி லூறே
நுகர்வே வேட்கை பற்றே பவமே
தோற்ற மென்றிவை சொல்லுங் காலை
எதிர்கா லம்மென விசைக்கப் படுமே
பிறப்பே பிணியே மூப்பே சாவே
அவல மரற்றுக் கவலைகை யாறுகள்
குலவிய குற்ற மெனக் கூறப் படுமே
அவாவே பற்றே பேதைமை யென்றிவை
புனையுமடை பவமும் வினை செய லாகும்
உணர்ச்சி யருவுரு வாயி லூறே
நுகர்ச்சி பிறப்பு மூப்புப்பிணி சாவிவை
நிகழ்ச்சிப்பய னுவகே நேருங் காலைக்
குற்றமும் வினையும் பயனுந் துன்பம்
பெற்ற தோற்றப் பெற்றிக ணிலையா
எப்பொரு ளுக்கு மான்மா விலையென
இப்படி யுணரு மிவைவிட் டியல்பாம்
உணர்வே யருவுரு வாயி லூறே
நுகர்வே பிறப்பே பிணிமூப்புச் சாவே

அவல மாற்றுக் கவலைகை யாறென
துவலைப் படுவன நோயா கும்மே
அந்நோய் தனக்குப்
பேதைமை செய்கை யவாவே பற்றுக்
கரும விட்டமிவை காரண மாகும்
துன்பந் தோற்றம் பற்றே காரணம்
இன்பம் வீடே பற்றிலி காரணம்
ஒன்றிய வுரையே வாய்மை நான்காவ
துருவு நுகர்ச்சி குறிப்பே பாவனை
உள்ள வறிவிவை யைங்கந்த மாவன
அறுவகை வழக்கு மறுவின்று கிளப்பிற்
றொகையே தொடர்ச்சி தன்மை மிகுத்துரை
இயைந்துரை யென்ற நான்கினு மியைந்த
உண்மை வழக்கு மின்மை வழக்கும்
உள்ளது சார்ந்த வுண்மை வழக்கும்
இல்லது சார்ந்த வின்மை வழக்கும்
உள்ளது சார்ந்த வின்மை வழக்கும்
இல்லது சார்ந்த வுண்மை வழக்குமெனச்
செல்லிய தொகைத்திற முடப்புநீர் நாடு
தொடர்ச்சி வித்து முளைதா ளென்றிந்
நிகழ்ச்சியி லவற்றை நெல்லென வழங்குதல்
இயல்பு மிகுத்துரை யீறுடைத் தென்றுந்
தோன்றிற் றென்று மூத்த தென்றும்
மூன்றி னொன்றி னியல்புமிகுத் துரைத்தல்
இயைந்துரை யென்ப தெழுத்துப்பல கூடற்
சொல்லெனத் தோற்றும் பலநாட் கூடிய
எல்லையைத் திங்க ளென்று வழங்குதல்
உள்வழக் குணர்வில் வழக்கு முயற்கோ
டுள்ளது சார்ந்த வுள்வழக் காகுஞ்
சித்தத் துடனே மெய்த்த நுகர்ச்சி
உள்ளது சார்ந்த வில்வழக் காகுஞ்
சுத்தமுற் பவித்தது மின்போ லென்கை
இல்லது சார்ந்த வுண்மைவழக் காகுங்
காரண மின்றிக் காரிய நேர்தல்
இல்லது சார்ந்த வில்வழக் காகும்
முயற்கோ டின்மையிற் றோற்ற மில்லெனல்
நான்கு நயமெனத் தோன்றப் படுவன
ஒற்றுமை வேற்றுமை புரிவின்மை யியல்பெனக்
காரண காரிய மாகிய பொருள்களை
ஒன்று வுணர்த லொற்றுமை நயமாம்

வேற்றுவேற் றாக வேதனை கொள்வது
வேற்றுமை நயமென வேண்டல் வேண்டும்
பொன்றக் கெடாஅப் பொருள்வழிப் பொருள்களுக்
கொன்றிய காரண முதவுகா ரியத்தைத்
தருதற் குள்ளந் தானிலை யென்றல்
புரிவின்மை நயமெனப் புகறல் வேண்டும்
நெல்வித் தகத்து னெல்முளை தோற்றுமெனல்
நல்ல வியல்பு நய மிவற்றினுங் கொள்பயன்
தொக்க பொருளல தொன்றில்லை யென்றும்
அப்பொரு ளிடைப்பற் றாகா தென்றுஞ்
செய்வா னொடுகோட் பாடிலை யென்றும்
எய்துகா ரணத்தால் காரிய மென்றும்
அதுவு மன்றத லாததுமன் றென்றும்
விதிமுறைத் தொகையினால் விரிந்த நான்கும்
வினாவிடை நான்குள
துணிந்து சொல்லல் கூறிட்டு மொழிதல்
வினாவின் விடுத்தல் வாய்வா ளாமையெனத்
தோன்றியது கெடுமோ கெடாதோ வென்றாற்
கேடுண் டென்றல் துணிந்துசொல லாகுஞ்
செத்தான் பிறப்பா னோபிற வானோ
என்று செப்பிற்
பற்றிறந் தானோ வன்மக னோவெனல்
மிகக்கூ றிட்டு மொழிதலென விளம்புவர்
வினாவின் விடுத்தல் முட்டை முந்திற்றோ
பனைமுந் திற்றோ வெனக்கட் டுரைசெய்
என்றா லெம்முட்டைக் கெப்பனை யென்றல்
வாய்வா ளாமை யாகா யப்பூப்
பழைதோ புதிதோ வென்று புகல்வான்
உரைக்கு மாற்ற முரையா திருத்தல்
கட்டும் வீடு மதன்கா ரணத்த
தொட்டித் தருதற் குரியோ ரில்லை
யாமே யுரைத்த பொருள்கட் கெல்லாங்
காமம் வெகுளி மயக்கங் காரணம்
அநித்தந் துக்க மநான்மா வசுசியெனத்
தனித்துப்பார்த்துப் பற்றறுத் திடுதல்
மைத்திரி கருணை முதிதையென் றறிந்து
திருந்துநல் லுணர்வாற் செற்றமற் றிடுக
சுருதி சிந்தனை பாவனை தரிசனை
சுருதி யுய்த்து மயக்கங் கடிக
இந்நால் வகையான் மனத்திரு ளீங்கென்று

முன்பின் மலையா மங்கல மொழியின்
ஞான தீப நன்கனங் காட்டத்
தவத்திறம் பூண்டு தருமங் கேட்டுப்
பவத்திற மறுகெனப் பாவைநோற் றனளென்.

## ௩௦. பவத்திற மறுகெனப் பாவை நோற்ற காதை

### உரை

**மணிமேகலை புத்த தன்ம சங்கம் என்னும் முத்திறமணியையும் மும்முறை வணங்கிச் சரணகதியடைதல்**

**௧ - ரு: தானம்.........அடைந்தபின்**

(இ - ள்.) தானந் தாங்கிச் சீலந் தலைநின்று போன பிறப்பின் புகுந்ததை உணர்ந்தோள் - மணிமேகலை நல்லாள் பண்டும் பண்டும் பலப்பல பிறப்பிலே தான முதலிய நல்லறங்களை மேற்கொண்டு அவ்வவ் விலக்கேற்ற நல்லொழுக்கத்திலே பிறழாது ஒழுகி அடிப்பட்டு வருதலாலே அவற்றின் பயனாக இப் பிறப்பிலே முற்பிறப்பையும் அதன்கண் நிகழ்ந்த நிகழ்ச்சியையும் அறியும் பேறு பெற்றவள் அப் பயன் பின்னும் பெருகுதலாலே; புத்த தன்ம சங்கம் என்னும் முத்திற மணியை மும்மையின் வணங்கி - புத்த பெருமானும் அவன் திருவாய் மலர்ந்தருளிய அறங்களும் அவ்வறநெறி நின்றொழுகும் சங்கத்தாரும் ஆகிய மூவகைப்பட்ட மாணிக்கங்களையும் மூன்று முறை மன மொழி மெய் என்னும் மூன்று கருவிகளாலும் வணங்கி; சரணாகதியாய்ச் சரண்சென்று அடைந்தபின் - அச் சங்கத்தார்பால தஞ்சம் புகுந்து அவர் திருவடிகளை எய்திய பின்னர் என்க.

(வி - ம்.)

"தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
அஃதிலார் மேற்கொள் வது" (குறள் - ௨௬௨)

என்பது பற்றி "தானந் தாங்கிச் சீலந் தலைநின்று" என இவற்றை ஏதுவாக்கினர். போன பிறப்பிற் புகுந்ததை உணர்தற்கும் முத்திற மணியை வணங்குதற்கும் சரணாகதி புகுதற்கும் எல்லாம் பொதுவாதலின் ஏதுவை முற்பட விதந்தோதினர். தானம் - தானபாரமிதை. சீலம் - சீலபாரமிதை. இவை பாரமிதை பத்தனுள் முன்னிற்பவை. இவற்றை

"தானம் சீலமும் பொறை தக்கதாய வீரியம்
ஞானமில் தியானமே யுணர்ச்சியோடு பாயமும்

மானமில் லருளினேவ் வைத்தலேவ வீம்மையும்
ஞானமீரைம் பாரமீதை'' (நீலகேசி-௩௫௪)

என்பதனானும் உணர்க. இவற்றுள், தானபாரமிதை யாவது - தானம் நிறைப்பது. அது "குன்றியின் றுணையாகக் கொடுத்திட்டான் அல்லனோ'' என்பதனாற் பெறப்படும்.

சீலபாரமிதையாவது ஒழுக்கம் நிறைத்தல். அது விநயபிடகத்துச் சொன்னவா றொழுகுதல். சீலம் எனினும் ஒழுக்கம் எனினும் ஒக்கும். இவை-பஞ்சசீலம் அட்டாங்க சீலம் தசசீலம் என மூவகைப் படும். ஈண்டு—

"தோடா ரிலங்கு மலர்கோதி வண்டு வரிபாட நீடு துணர்சேர்
வாடாத போதி நெறிநீழன் மேயவரதன் பயந்த வறநூல்
கோடாத சீல விதமேவி வாய்மை குணனாக நாளு முயல்வார்
வீடாத வின்ப நெறிசேர்வர் துன்ப வினைசேர்த னாளு மிலரே"

எனவரும் பழம்பாடலு முணர்க. (வீர - யாப்பு - ௩. மேற்.)

புத்த தன்ம சங்கம் என்பது பௌத்தருடைய சமயத்தின் தலை சிறந்த மூன்றுறுப்புகள்.

புத்தனும் தன்மமும் சங்கமும் என எண்ணும்மை விரித்தோதுக. பௌத்தர்கள் வழிபாடு தொடங்கும்போது "புத்தம் சரணங் கச்சாமி, தன்மம் சரணங் கச்சாமி, சங்கம் சரணங் கச்சாமி'' என மூன்றுமுறை யோதுதல் மரபு. மூன்றனையும் மூன்றுமுறை மும்முறை வலம் வந்து மனத்தானினைந்து மொழியாலோதி மெய்யால் வணங்கி வழிபாடு செய்தாள் என்றற்கு மும்முறை வணங்கி என்னாது மும்மையின் வணங்கி யென்றார். சரணாகதி - தஞ்சம் புகுதல். சங்கத்தில் முதன் முதலாகச் சேர்பவர் இவ்வாறு மும்மணியையும் மும்மையின் வணங்கிச் சரணாகதி யடைதல் வேண்டும் என்பது அச் சமய விதியாகும்.

[அறவணவடிகள் மணிமேகலைக்கு ௬௮ஆம் அடி முதலாக ௪௪ஆம் அடியீறாக, புத்த தன்மங்களைத் தொகுத்துக் கூறுவதாம் ஒரு தொடர்.]

### அறவணவடிகளார் கூற்று; புத்த சமய வரலாறு

௬ - ௯: முரணா.........தோன்றி

(இ - ள்.) முரணா மூர்த்திமை மொழிவோன் - மணிமேகலைக்கு அறங்கூறுதற் பொருட்டே அந்நகரத்திற்கு எழுந்தருளிய அறவணவடிகளார், அவட்கு அறங்கூறுதற்குத் தொடங்குபவர் மூத்திரமணிகளுள் தலைசிறந்த மணியாகத் திகழ்பவனும் அச் சமய முதல்வனும் முன்பின் முரண்படாத உயரிய அறங்களைத்

திருவாய் மலர்ந்தருளிய அறவாழி அந்தணனுமாகிய புத்த பெருமானுடைய சிறப்பினைக் கூறத் தொடங்குபவர்; அறிவு வறிதா உயிர் நிறை காலத்து முடிதயங்கு அமரர் முறை முறை இரப்ப - மணிமேகலாய்! கூர்ந்து கேட்பாயாக! பண்டொரு காலத்தே அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள்களை நெறியறிந்துய்தற்குரிய மக்கட் பிறப்பினை எய்திய உயிர்கள் தாமும் அந் நன்னெறி காட்டி நல்லறங் கூறுதற்கியன்ற நல்லாசானைப் பெறமாட்டாமையாலே தமக்குரிய அறிவு சிறுமை எய்தி அஃறிணை யுயிர்போலப் பேதைமை நிறைந்திருந்த பொழுது முடிக்கலன்களாலே திகழ்கின்ற அமரர்கள் பிரபாபாலர் என்னும் தேவன்பாற் பன்முறையும் சென்று உயிர்கட்குற்ற அக் குறையைத் தீர்த்தருளவேண்டும் என்று இரந்தமையாலே இயல்பாகவே அருள் கெழுமிய அத் தேவனும் அக் குறை நேர்ந்து; துடித லோகம் ஒழியத் தோன்றி - துடிதலோகம் என்னும் தெய்வ உலகத்தினின்று இழிந்து இந் நிலவுலகத்திலே பிறந்தருளி என்க.

(வி - ம்.) மூரணுத் திரு அறம் - முன்பின் மாறுபடாத உயரிய ஒழுக்கம். மூர்த்தி - புத்தர். மூர்த்தியின் வரலாறு மொழிவோன் என்க. மொழிவோன் : பெயர்: அறவணவடிகள் என்க. உயிர், ஈண்டு மக்கள் உயிர் என்பதுபட நின்றது. என்னை? மெய்யுணர்தலும் வீடு பெறுதலும் அதற்கே யுரியவாதலின். வறிதாக என்பதன் ஈறுகெட்டது. வறிது - சிறிதின் மேற்று. நிறைதலின் என்றது, தொகை மேனின்றது. முறைமுறை என்னும் அடுக்குப் பன்மை மேற்று.

துடிதலோகம் - பௌத்த சமயக் கணக்கர் கூறும் முப்பத்தோருலகத்துள் ஒன்று. இஃது ஒன்பதாவதுலகமாம். அவர் கூறும் ஆறு வானவருலகங்களுள் வைத்து இது நான்காவதுலகம் என்பர். 'பிரபாபாலன்' என்னும் துடிதலோகத்துத்தேவனே புத்தனாக நிலவுலகத்திலே வந்து பிறந்தனன் என்பது வரலாறாகும்.

புத்தன் கோசல நாட்டின்கண் 'கபிலவாத்து' என்னும் நகரத்திருந்து செங்கோலோச்சிய முடிமன்னன் மனைவியருள் மாயாதேவி என்பவள் வயிற்றிற் கருவாகி வளர்ந்து பிறக்குங் காலத்தே அவள் வலமருங்குல் வழியே பிறந்தருளினன் என்ப.

இனி, துடிதபுரம் என்பது இந் நிலவுலகத்தே புத்தருக்கியன்ற திருப்பதியாகிய ஒரு நகரம் என்பாருமுளர். எனவே துடிதலோகத்தின் நினைவுச் சின்னமாக அந்நகரம் மக்களால் உண்டாக்கப்பட்டது என்று கொள்ளலாம். இதனை,

"தொழுமடிய ரிதயமல ரொருபொழுதும்
பிரிவரிய துணைவ னெனலாம்
எழுமிரவி கிரணநிக ரிலகுதுகில்
புனைசெய்தரு ளிறைவ னிடமாம்

குழுவு மறை யவருமுனி வரரும்
அரபிரம ருரகவனு மெவரும்
தொழு தகைய இமையவரு மறமருவு
துதிசெய்தெழு துடித புரமே''

எனவரும் பழம் பாடலாலு முணர்க. (வீரசோ - யாப்பு - ௩௩. மேற்)

இனி, புத்தன் தாயின் வல மருங்கு வழியாகப் பிறந்தான் என்பதனை,

''உலும்பினி வனத்து ளொண்குழைத் தேவி
வலம்படு மருங்குல் வடுநோ யாருமல்
ஆன்றோன் அவ்வழித் தோன்றின னதலின்
ஈன்றோள் ஏழாநாள் இன்னுயிர் நீத்தாள்''

எனவரும் பிம்பிசாரக் கதைச் செய்யுளானும்,

''புத்தன்தாய் ஞெண்டிப்பி வாழை புனமூங்கில்
கத்தும் விரியன் கடுஞ்சிலந்தி—இத்தனையும்
வேலாலும் வாளாலு மன்றியே தாங்கொண்ட
சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு''

எனவரும் உலகுரையானும் உணர்க. இவை நீலகேசியில் குண்டல - ௬௪ செய்யுளின் உரையிற் கண்டவை.

போதி மூலம் - அரைய மரத்தடி. புத்தர் பலகாலம் பல்வேறு நோன்புகளையும் ஆற்றியும் மெய்யுணர்வு பெறுராய் ஒருநாள் புத்தகயை என்னுமிடத்தே பல்குனி யாற்றின் கரைமேனின்ற ஓர் அரையமர நீழலில் அமர்ந்திருந்த பொழுது அவருக்கு மெய்யுணர்வு பிறந்த தென்பது அவர் வரலாறு. இக் காரணத்தால் புத்தகயை என்னும் இடமும் அரைய மரமும் பௌத்தரால் திசைநோக்கித் தொழப்படும் சிறப்புடையனவாயின என்க.

## இதுவுமது

### ௩௦ - ௩௩ : மாரனை.........கட்டுரை

(இ - ள்.) மாரனை வென்ற வீரன் ஆகி - காமவேள் தோற்றுவிக்கும் காமத்தைத் துவர நீத்தலாலே அவனை வென்று மாபெரும் வீரனாய்த் திகழ்ந்து; குற்றம் மூன்றும் முற்ற அறுக்கும் - காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்று குற்றங்களையும் அவற்றின் நாமமும் கெடும்படி துவரத்துடைத்தற்குக் காரணமான; வாமன் வாய்மை ஏமக் கட்டுரை - பேரழகனாகிய அப் புத்த பெருமான் திருவாய் மலர்ந்தருளிய நால் வகை

மெய்க்காட்சிகளாகிய மக்கள் உயிர்க்குப் பாதுகாவலும் இன்பமும் பயக்கும் மெய்ப்பொருள் பொதிந்த அறவுரைகளை என்க.

(வி - ம்.) மாரன் - ஈண்டு அவன் செயலாகிய காமுறுதன் மேனின்றது. மாரனை வென்றான் எனவே அவனை, மீண்டும் உலகியலில் ஈடுபடுத்தும் எல்லாத் தீக்குணங்களும் வென்றமை கூறுமலே அமைதலின் வீரன் ஆகி என்றார்.

குற்றம் மூன்று - காம வெகுளி மயக்கங்கள். இவற்றைத் துவரத் துடைத்தார்க்குப் பின்னர்ப் பிறவிப் பிணி இல்லாமையின் முற்ற அறுக்கும் என்றார்.

"காம வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்" (௩௬0)

என வரும் திருக்குறளும் ஈண்டு நினைக்கற்பாற்று.

வாமன் - அழகன். அழகான் மிக்கவன் என்பது பற்றி அது புத்தரின் பெயருள் ஒன்றாகவே வழங்கப்படுகின்றது. குற்றம் அறுக்கும் கட்டுரை, வாமன் திருவாய் மலர்ந்தருளிய கட்டுரை, வாய்மையை யுடைய கட்டுரை, ஏமமுடைய கட்டுரை என அனைத்தும் கட்டுரைக்கே தனித் தனி இயையும். திருவாய் மலர்ந்த கட்டுரை என ஒரு சொல் பெய்து கொள்க.

வாய்மை என்றது புத்தனது நால்வகை மெய்க் காட்சிகளை; அவை பின்னர் விளக்கப்படும். ஏமம்-பாதுகாவலும் இன்பமும் ஆம்; ஆக இரு பொருளும் கொள்க. கட்டுரை - பொருள் பொதிந்த மொழி.

## இதுவுமது

### ௧௪ - ௧௯ : இறந்த..........காட்டி

(இ - ள்.) இறந்த காலத்து எண் இல் புத்தர்களும் - மற்று அக் கட்டுரை தானும் அவ்வாதிப புத்தருக்குப் பினனர் அவ்வறவோறிமைப் பின்பற்றி வழி வழியாகக் கடந்த காலத்திலே எண்ணிறந்த புத்தர்களும் பிறந்து; அருள் உளம் சிறந்து - அருள் கூர்ந்து மக்கட்குத் தம் அருளுடைமை காரணமாகத் திருவாய் மலர்ந்தருளி உலகெலாம் பரப்பப்பட்ட சிறப்பினையும் உடையதாம்; ஈர் அறு பொருளின் ஈந்த நெறி உடைத்தாய் - அவ்வறவுரை தானும் தன்பால் பன்னிரண்டு நிதானங்கள் என்னும் உள் ளுறுப்புகளாய்ப் பகுத்தோதும் முறைமையினை யுடைத்தாம்; சார்பின் தோன்றி தம் தமை மீட்டும் இலக்கு அணத் தொடர்தலின் - அப் பன்னிரண்டு நிதானங்களும் தம்முள் ஒன்றிலிருந்து ஒன்று காரணகாரிய முறையாலே தாம்தாம் தோன்றுதற்குச் சார்பாகிய பண்புகளினின்றும் தோன்றித் தத்தமக்குரிய அச் சார்பு, மீண்டும் தாந்தாம் பிறத்தற்கேதுவாக அணுகி வரும் பொழுது அவ்வவற்றினின்றும் பிறந்து இவ்வாறே தொடர்ந்து

தோன்றி வருதலாலே அவற்றின் தோற்ற முறையினை; மண்டில வகையா அறியக் காட்டி - வட்டமாகச் சுழன்று வருகின்ற முறைமையாக அறிவுறுத்து எனக.

(வி - ம்.) அமரர் இரந்து வேண்டுதலாலே துடிதலோகத்தினின்று நிலவுலகத்தே பிறந்தருளிய கௌதம புத்தரே ஆதிபுத்தர் எனவும், அவர் போதி மூலத்திருந்து கண்ட மெய்க்காட்சிகளே பௌத்த சமய தத்துவங்கள் ஆம் எனவும் கொள்க.

இனி, இறந்த காலத்து எண்ணில் புத்தர்களும் - என்பதற்கு. "கௌதம புத்தர் தோன்றுமுன்பே எண்ணிறந்த புத்தர் காலந்தோறுந் தோன்றி உலகில் அறத்தை நிறுவினர் எனவும் அவ்வறநெறியையே கௌதம புத்தர் உறுதி பெறச் செய்தனர் என்றும் கூறுவாரும் உளர். கௌதம புத்தருக்குப்பின் இறந்த காலத்தே எண்ணிறந்த புத்தர் பிறந்தனர் என்பாருமுளர்.

இனிக் கௌதம புத்தர் புத்த தத்துவம் நிரம்புதற்கு முன்னே எண்ணிறந்த புத்தப் பிறப்பினை எய்தி அந்நெறிப் பயின்றடிப்பட்டு வந்து கௌதம புத்தராய்ப் பிறந்தபொழுது புத்த தத்துவம் நிரப்பினர் என்பாரும் உளர்.

ஈர் அறு பொருள் என்றது பேதைமை முதலிய பன்னிரண்டு நிதானங்களை. அவை - ௨௪ ஆங் காதையில் இவ்வறவண வடிகளாரே இராசமா தேவியார்க்கு,

"பேதைமை செய்கை உணர்வே அருவுரு
வாயில் ஊறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பயன்"

எனத் தொகுத்தோதி யுள்ளமையின் ஈண்டு "ஈரறு பொருளின் ஈந்த நெறி" என்று தொகைமட்டுப் ஓதியொழிந்தார்.

இனி இக் காதையில் இவற்றினியல்பெலாம் விரிவகையால் விரித்தோதப்படும். இப் பன்னிரண்டு நிதானங்களும் காரண காரிய முறையாலே தொடர்ந்து தோன்றி ஒரு வட்டமாகி மீட்டும் அவ்வாறே தத்தம் இலக்கு அண்ணியவழித் தோன்றி இவ்வாறே முடிவின்றி, மண்டலமாகச் சுழன்ற வண்ணமே இருக்கும் என்பார், மண்டில வகையாற் காட்டி என்றார். இக் காரணத்தால் பிறப்பிற்கு எல்லையில்லையாயிற்ற என்பது குறிப்பு. பேதைமையை முதலாகக் காட்டினரேனும் இறுதியினின்ற வினைப்பயன் சார்பாகப் பேதைமை பிறத்தலின் இவ் வட்டத்திற்குத் தொடக்கமும் முடிவும் இல்லை என்றாராயிற்று. சார்பு - இடம் என்னும் பொருட்டு; வழி என்னும் பொருட்டாகக் கோடலுமாம். இனி, பிறப்பிற்குப் பேதைமை முதற் காரணமும் துணைக் காரணமும் ஆகி எல்லா நிதானத்தினும் கலந்துள்ளமையின் அதனையே முதலாக எடுத்தோதிற்று எனினுமாம்.

இவற்றை, வடநூலோர் துவாதச நிதானம் என்றும் நிரலே அவற்றை அவித்யை கர்மம் (ஸம்ஸ்காரம்) விஞ்ஞானம் ரூபாரூபம் சடாயதனம் பரிசம் வேதனை திருட்டினை உபாதானம் பவம் சன்மம் கர்மபலம் என்றும் விரிப்பர்.

இதுவுமது

௨௦ - ௩௧: எதிர்.........உறுதியாகி

(இ - ள்.) எதிர் முறை ஒப்ப மீட்சியும் ஆகி - தோன்றுதற்குரிய காரணத்தை எதிர்த்து நின்று விலக்குதலாலே காரியம் கெழாமையுமாய்; ஈங்கு இது இல்லாவழி இல் ஆகி - இவ்வாறு காரணம் இல்லாத விடத்தே அதன் காரியமும் நிகழ்தலும் இல்லையாகி; ஈங்கு இது உள்வழி உண்டு ஆகி - இவ்வாறுரிய காரணம் உளதாய விடத்தே காரிய நிகழ்ச்சியும் ஒரு தலையாக நிகழ்வ தாகலாலே; தக்க தக்க சார்பின் தோற்றம் என - அவ்வப் பிறப்பிற்குத் தகுந்த தகுந்த காரணங்கள் அமைந்தவழி அவ்வவற்றிற் கேற்பப் பிறப்பும் தோன்றும் என்று சொல்லப்பட்டு; இலக்கு அண் அத் தொடர் பால் - காரணமாகிய இலக்கு அணுதவதாகிய தொடர்பினாலே; கருதப்பட்டு - ஆராய்ந்து கூறப்பட்டும்; கண்டம் நான்கு உடைத்தாய் - பகுதிகள் நான்குடைத்தாய்; மருவிய சந்திவகை மூன்று உடைத்தாய் - அப் பகுதிகள் கூடுகின்ற கூட்டவகை மூன்றுடைத்தாய்; பார்க்கின் தோற்றம் மூன்று வகையாம் - ஆராய்ந்து பார்க்குமிடத்துப் பிறப்பு மூன்று வகையாய்; தோற்றற்கு ஏற்ற காலம் மூன்று உடைத்தாய் - பிறத்தற்குப் பொருந்திய காலங்கள் ஒரு மூன்றுடையதாய்; குற்றமும் வினையும் பயனும் விளைந்து - குற்றங்களும் வினைகளும் அவற்றின் பயன்களும விளைந்து; நிலை இல வறிய துன்பம் என நோக்க - பிறப்புகள் நிலைத்தல் இல்லாதனவும் இன்பமில்லாதனவும் பெரிய துன்பமே உடையனவும் ஆம் என்று மெய்யுணர்ந்த பொழுது; உலையா வீட்டிற்கு உறுதிமாகி - அது தானே என்ஞான்றும் அழியாத வீட்டின்பத்திற்கு உறுதி தருவதாகவும் ஆகி; என்க.

(வி - ம்.) எதிர்முறை ஒப்புதலாவது - இவ்வாறு ஒன்றிலிருந்து ஒன்று தோன்று முறைமையினை எதிர்த்து நின்று மாற்றிவிடுதல். அஃதாவது காரணத்தை இல்லையாம்படி செய்தல் என்றவாறு. இங்ஙனம் காரணத்தை மாற்றிய வழி இல்லையாய், மாற்றாது விட்டவழி என்றென்றும் மண்டில வகையாய் உண்டாகும் என்று வற்புறுத்துவார், ஈங்கு இது இல்லாவழி இல்லாகி ஈங்கிதுள்ளவழி உண்டாகலின் என விதந்து ஏதுவை வலியுறுத்தினர். ஈங்கு என்றது இவ்வாறு என்றவாறு.

இனி (௩அ) தொடர்தலின் என்பதனைச் சுட்டி ற்றுகக் கருதி இத் தொடர்ச்சிக்குக் காரணமாகிய இலக்கு இல்வழி இல்லாகி உள்ளவழி உண்டாதலின் எனக் கோடலுமாம். நல்வினையும் தீவினையும் ஆகிய வினைவகைக்குத்தக உயர் பிறப்பும் இழிபிறப்பும் உண்டாம் என்பார் தக்க தக்க சார்பிற் றோற்றம் என்றார். என்னை?

"அலகில பல்லுயிர் அறுவகைத் தாகும்
மக்களும் தேவரும் பிரமரும் நரகரும்

தொக்க விலங்கும் பேயும் என்றே
நல்வினை தீவினை என்றிரு வகையால்
சொல்லப் பட்ட கருவினுள் தோன்றி''

என்றோதினமையும் நினைக. எனவே அவ்வவற்றின் வினைவகைக்குத் தக்க தக்க சார்பில் தோற்றம், என்றார் என்க.

தோற்றம் - பிறப்பு; அவை மூன்றுவகைப்படும். அவை பின்னர் விளக்கப்படும். தோற்றம் நிலையில வறிய துன்பம் என நோக்க. என இயைக்க. அங்ஙனம் நோக்கிய வழி பிறப்பே வீட்டிற்குக் கருவியாம் என்பார் வீட்டிற்கு உறுதியாகி என்றார்.

## இதுவுமது

### ௯௨ - ௯௪: நால்வகை.........கேடாதாய்

**(இ - ள்.)** நால்வகை வாய்மைக்குச் சார்பு இடன் ஆகி - நான்கு வகைப்பட்ட மெய்க்காட்சிகளுந் தோன்றுதற்கியன்ற நிலைக்களன் ஆகி; ஐந்துவகைக் கந்தத்து அமைதியாகி - ஐந்து வகைப்பட்ட கந்தங்களுங் கூடிய கூட்டத்தாலே அமைவதாய்; மெய்வகை ஆறு வழக்கு முகம் ஆகி - உண்மை வழக்கை உள்ளிட்ட ஆறுவகை வழக்கும் உளவாதற்கு நிலைக்களன் ஆகி; நயங்கள் நானகால் பயன்கள் எய்தி - ஒற்றுமை நயம் முதலிய நயங்கள் நான்கினாலும் நால்வகைப் பயன்களையும் எய்தி; நால்வகையால் இயன்ற வினா விடை உடைத்தாய் - துணிந்து சொல்லல் முதலிய நான்கு வகையாலே நிகழ்கின்ற வினாக்களையும் விடைகளையும் உடையதாய்; கின்மிதி இன்றி - ஒருவரானும் உண்டாக்கப்படாது தானே தோன்றியதாய்; ஊழ்பாடு இன்றி - முடிவற்றதுமாய்; பின்போக்கு அல்லது பொன்றக் கெடாததாய் - தொடர்ந்து நிகழ்வதல்லது ஒருபொழுதும் முற்றும் அழியாத தாய் என்க.

**(வி - ம்.)** நால்வகை வாய்மையாவன :

''பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோர் உறுவது'' (மணி - ௨ - ௬௪ - ௭)

என்பன. இவற்றை, நிரலே துக்கம், துக்கோற்பத்தி, துக்கநிவாரணம், துக்கநிவாரண மார்க்கம் என்று வடநூலோர் கூறுப. இவை நான்கிற்கும் சார்பிடன் உடம்பாதலுணர்க. வாய்மை - சத்தியம். இவை புத்தர் போதி மூலம் பொருந்தியிருந்த பொழுது அவர் உள்ளத்தே பிறந்த மெய்க் காட்சிகளாம் என்க.

ஐந்துவகைக் கந்தமாவன: "உருவக்கந்தம், நுகர்ச்சிக் கந்தம், குறிப்புக் கந்தம், பாவனைக் கந்தம், அறிவுக் கந்தம்" என்னும் ஐந்துமாம். இவற்றிற்கு இக் காதையின் ௧௮௯ - ௧௯௦ ஆம் அடிகளின் விளக்கம் தரப் படும்; ஆண்டுக் கண்டு கொள்க.

மெய்வகை-உண்மை முதலிய வழக்குவகை. முகம் - தோற்றுவாய். நயங்கள் ஒற்றுமை நயம், வேற்றுமை நயம், புரிவின்மை நயம், இயல்பு நயம் என்னும் நான்குமாம்.

நால்வகை வினுவிடையாவன: துணிந்து சொல்லல், கூறிட்டு மொழிதல், வினுவின் விடுத்தல், வாய்வாளாமை என்பன.

நின்மிதி - உண்டாக்குதல். ஊழ்பாடு - முடிதல். பின் போக்கு எனினும் தொடர்ச்சி எனினும் ஒக்கும். இத் தொடர்ச்சி நால்வகைப் படும் என்பர். அவையாவன—காற்றுப்போல் தொடர்வது, விளக்கின் சுடர்போல் தொடர்வது, நீர் வீழ்ச்சிபோலத் தொடர்வது, எறும்புகள் போலத் தொடர்வது என்பன. வடநூலார் வாயுசந்தானம், தீபசந் தானம், தாராசந்தானம், பிபீலிகா சந்தானம் என்பனவும் இவையே யாம். பொன்றக் கெடுதல் - முழுவதும் அழிதல்.

## இதுவுமது

### ௩௯ - ௪௮: பண்ணுநர்.........ஈராறும்

**(இ - ள்.)** பண்ணுநர் இன்றிப் பண்ணப் படாதாய் - செய்வோரையில்லாமையால் செய்யப்படாததாய்; யானும் இன்றி எனது மின்றி - யான் என்னும் செருக்கும் எனது என்னும் செருக்குமாகிய இருவகைச் செருக்குமில்லாததாய்; போனதும் இன்றி வந்தது மின்றி - கழிந்தது என்று கருதப்படாததும் வருவது என்று கருதப் படாததும்; முடித்தலும் இன்றி முடிவு மின்றி - தான் ஒன்றனைச் செய்து முடித்தலில்லாததும், தானே முடிந்தொழிதலில்லாததும் ஆகி; வினையும் பயனும் பிறப்பும் வீடும் இனையன எல்லாம் தானே ஆகிய - வினைகளும் அவற்றின் பயன்களும், பிறப்புகளும், வீடுபேறும் ஆகிய இன்னோரன்ன பிறவற்றிற் கெல்லாம் காரணம் தானேயாகி யமைந்த; பேதைமை செய்கை உணர்வு அரு உரு வாயில் ஊறு நுகர்வு வேட்கை பற்று பவம் தோற்றம் வினைப்பயன் இற்றென வகுத்த இயல்பு ஈர் ஆறும் - பேதைமை முதலாக வினைப்பயன் ஈறாக வகுத்துக் கூறப்பட்ட நிதானங்கள் பன்னிரண்டின் தன்மைகளையும் என்க.

(வி - ம்.) ௩௯ ஆம் அடி முதலாக ௪௮ ஆம் அடியீறாக வாமன் வாய்மைக் கட்டுரையை ஒருவாறு தொகுத்தோதியபடியாம். பன் னிரண்டுவகை நிதானங்களில் பேதைமையே முதற் காரணமாம். அப் பேதைமையினின்று செய்கையும், அதனினின்று உணர்வும், அதனினின்று

அருவுருவும், அதனினின்றும் வாயிலும், அதனினின்று ஊறும், அதனினின்றும் நுகர்வும், அதனினின்றுப் வேட்கையும், அதனினின்றுப் பற்றும், அதனினின்றும் பவமும், அதனினின்றும் தோற்றமும், அதனினின்றும் வினைப்பயனும் ஆகப் பன்னிரண்டு நிதானங்களும் தோன்றும் என்க.

இனிப் பேதைமையினின்றும் ஒன்றினொன்றாகப் பிறந்து வரும் இவற்றுள் இறுதியினின்ற வினைப்பயனினின்றும் மீண்டும் பேதைமை தோன்ற அதனினின்றுப் செய்கை முதலியன தோன்ற இவ்வாறே இவை ஈறு முதலுமின்றிச் சுழன்ற வண்ணமே இருக்கும் ஆதலின் இவற்றை இவ்வாறு (கக) "மண்டில வகையாய் அறியக் காட்டி" என்றார். பேதைமை அநாதியாயுளது ஆதலின் அதனைப் பண்ணுநர் இல்லாமையால் பண்ணப் படாததாய் என்றார். இன்றி - இல்லாமையால். மற்று இதற்கிவ்வாறுரை காணுமல், செய்யும் முதலையின்றித் தானே செயற்படுவதில்லையாய் என்று உரை கூறுவாருமுளர். இவருரை பௌத்த தத்துவத்தோடு பெரிதும் மாறுபடுதலை அவர் நோக்கிற்றிலர்.

அநாதியாக இவை இங்ஙனமே மண்டில வகையாற் சுழல்வன. ஆயினும் இவற்றால் விளையும் பயன் துன்பமென மெய்யுணர்ந்து நோக்கினோர்க்கு, இவற்றிற் பற்றறுதலின் இவ்வாற்றால் இவையே வீடு பேற்றிற்கும் காரணமாதலின் வினையும் பயனும் பிறப்பும் வீடும் தானே ஆகிய பேதைமை என்றார்.

உணர்வு என்னும் மூன்றாவது நிதானம் முதலாவதாகிய பேதைமைக் கண்ணில்லையாகலின் யானும் இன்றி எனது மின்றிப் போனதுமின்றி வந்ததுமின்றி என்றார், எனவே இருளே உலகத்தியற்கை என்றவாறு பிற்று.

## பிறந்தோர் அறிதற்குரியன

சக — ௹௦ : பிறந்தோர்..........அறிகுவர்

**(இ - ள்.)** *பிறந்தோர் அறியின்* - மணிமேகலாய் கேள்! இங்ஙனம் ஆகிய வாமன் கட்டுரைகளாகிய இவற்றை உயரிய மக்களாகப் பிறந்தோர் ஆராய்ந்து அறிந்து இவற்றால் குற்றமும் வினையும் வினையின் பயனும் விளைந்து நிலையில வறிய துன்பமெனக் கண்டு இவை மீளும் நெறியில் ஒழுகுவாராயின இவையே உலைமா வீட்டிற்கு உறுதிமாக; *பெரும் பேறு அறிகுவர்* - பெரிய வீட்டினபமாகிய பேற்றினை எய்தாநிற்பர்; *அறியாராயின் ஆழ் நரகு அறிகுவர்* - அறியாராஞல் தாங்கள் அழுந்தித் துன்புறுதற்கிடமான நரகத்தையே எய்தாநிற்பர் காண்! எனறார் என்க.

**(வி - ம்.)** அறியின் என்றது, அறிதல் இன்றியமையாது என்பதுபட நின்றது. பிறந்தோர் என்பது மக்களாகப் பிறந்தோர் என்பதுபட நின்றது; என்னை? அவர்களே அறிதற்கும் வீடு பெறுதற்கும் உரியர் ஆகலின்.

## பேதைமையினியல்பு

### ௫௧ - ௫௪: பேதைமை.........தெளிதல்

(இ - ள்.) பேதைமை என்பது யாது என வினவின் - நங்காய்! வினையும் பயனும் பிறப்பும் வீடும் இனையன எல்லாம் தானே ஆகிய அப் பேதைமையின் இயல்புதான எத்தகையது என்று நீ வினவுவாயாயின் கூறுதும் கேட்பாயாக!; ஓதிய இவற்றை உணராது - போதிமூலத்தே பொருந்தியிருந்துழி புணர்ந்தோதிய....வாமன் வாய்மை ஏமக் கட்டுரையின் பொருள் இவை யென யாம் உனக்கு ஓதிய இவற்றையெல்லாம் ஆராய்ந்துணர்ந்து கொள்ளாமல்; மயங்கி - அவாவினாலே மயங்கி; இயல்படு பொருளால் கண்டது மறந்து - இயல்பாகவே பொறிக்குத் தோன்றுகின்ற பொருள்களையே மெய்ப்பொருள் என்று விரும்பி ஆராய்ந்து கண்ட வாய்மைகளை மறந்தொழிந்து; முயல் கோடு உண்டு எனக் கேட்டது தெளிதல் - மயக்கமுடையான் ஒருவன் முயலுக்குக் கொம்புண்டு என்று கூறியவழிச் சிறிதும் ஆராயாது அவன் கூறியபடி முயலுக்குக் கொம்புண்டென்றே தெளிந்து கோடற்குக் காரணமான மருட்கையே பேதைமையாம் என்றார் என்க.

(வி - ம்.) எனவே,

"பேதைமை என்பதொன் றியாதெனின் ஏதங்கொண்டு
ஊதியம் போக விடல்" (குறள் - ௮௩௧)

என்பதே இதன் கருத்துமாதலறிக. இதன்கண் "முயற் கோடுண் டெனத் தெளிதல்" ஏதங் கொண்டபடியாம். "இயற்படு பொருளால் கண்டது மறத்தல்" ஊதியம் போகவிட்டபடியாம் என்றுணர்க.

இனி இயற்படு பொருளால் காண்டலாவது,

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" (குறள் - ௩௫௫)

என்பது பற்றி, "பொருள் தோறும் உலகத்தார் கற்பித்துக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்துநின்ற வுண்மைகளைக்" காண்டலாம். அங்ஙனம் கண்டது மறந்து முயற்கோடுண்டெனத் தெளிவது மருட்கையாம். இதனை,

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணாப் பிறப்பு" (குறள் - ௩௫௧)

என்னும் திருக்குறளோடும் ஒருபுடை ஒப்பு நோக்குக. இனி,

"பேய்மை யாக்குமிப் பேதைமைக் கள்வனோ டடனுய்க்
காமுற் றுமதன் பயத்தினிற் காமனைக் கடந்து
காமரூஉம் புகழ் கெடுப்பதோர் நன்னெறி நண்ணும்
வாமன் வாய்மொழி மறந்திட்டு மறந்தொழி கின்றும்"

எனவரும் பழம் பாடலையும் (வீர-யாப்பு. ௧௧. மேற்.) விளைக.

பிறப்புவகை

௫௫ - ௫௮: வினைப்பயன்.........என்றே

(இ - ள்.) உலகம் மூன்றினும் உயிராம் - மேலும் கீழும் நடுவுமாகிய இடம்பற்றி உலகங்கள் மூன்று வகைப்படும், அவற்றில் எல்லாம் உயிர்கள் நிரம்பியுள்ளனவாம்; உலகம் அலகு இல - இடம்பற்றி மூன்றாக வகுக்கப்பட்ட உலகங்களோ எண்ணிறந்தனவாகும்; பல் உயிர் அறுவகைத்தாகும் - அங்ஙனமே எண்ணால் அளவிடப்படாத உயிர்கள் தாம் பிறப்பி னாலே ஆறுவகைப்படுவனவாம்; மக்களும் தேவரும் பிரமரும் நரகரும் தொக்க விலங்கும் பேயும் எனறு - அவைதாம் மக்கட் பிறப்பும் தேவப பிறப்பும் பிரமப்பிறப்பும் நரகப்பிறபபும் பலவாய்த் தொகுக்கப்பட்ட விலங்குப் பிறபபும் பேய்ப்பிறப்பும் என்று கூறபபடும் இவ் வாறுவகையுமாம்; என்றார் என்க.

(வி - ம்.) உலகம் 'மேல் கீழ் நடு' என இடம்பற்றி மூவகைப்படும் ஆயினும் மேலுலகங்கட்கும் கீழுலகங்கட்குப் அளவில்லை என்பார், உலக மூன்றினும் எனவும், உலகம் அலகில எனவும் இருவகையானும் ஓதிக் காட்டினர். அனைத்துலகங்களினும் உயிர்கள் நிரம்பியுள்ளன என்பார் உலகம் மூன்றினும் உயிராகும் என்றார்.

இனி, உயிர்கள் தாமும் யோனி வகையானும் எண்வகையானும் பலவென்பார் பல்உயிர் என்றும், அவை பிறப்பு வகையால் அறுவகைப் படும் என்றுங் கூறினார். இனி, அஃறிணை யுயிர்கள் பறவையும் விலங்கும் நீர் வாழ்வனவும் எனப் பலவகைப்படுவன வாயினும அவற்றில் சிறப் பின்மையின் அனைத்தும் விலங்குப் பிறப்பென்றே தொகுத்துக் கூறப் படும் என்பார் 'தொக்க விலங்கும்' என்றார்.

(வினைவகை) (௧) தீவினை

௫௯ - ௭௧: நல்வினை.........மூன்றுமெனு

(இ - ள்.) நல்வினை தீவினை என்று இருவகையால் - மேலே கூறப்பட்ட உயிர்கள் தாம் செய்கின்ற அறச்செயலும் மறச்செயலும் என்று கூறப்படுகின்ற இருவேறுவகை வினை களையும் செய்தல் காரணமாக; சொல்லப்பட்ட கருவில் சேர்

தலும் - மேலே கூறப்பட்ட அறுவகைப் பிறப்புகளுள் வைத்துத் தத்தம் வினைக்கேற்ற பிறப்பினுள் கருவாகிப் பிறத்தலும்; கருவினுள் பட்ட பொழுதினுள் தோற்றி - அவை இவ்வாறு கருவாகிப் பிறந்த பொழுதிலிருந்தே; வினைப்பயன் விளையுங்காலை - அவ்வவ்வுயிர்கள் முன்புசெய்த இருவினைப்பயன்களும் நுகர்ச்சிக்கு வந்துறும் பொழுது; மனப் பேரின்பமும் கவலையும் காட்டும் - அவற்றின் உள்ளத்தே பெரிய இன்பத்தையும் பெரிய துன்பத்தையும் தோற்றுவிக்கும்; தீவினை என்பது யாதென வினவின் - யாம் முன்பு நல்வினை தீவினை எனத் தொகுத்துக் கூறிய இருவகைவினைகளுள் வைத்து அஞ்சத்தக்கது தீவினையே ஆதலின அத் தீவினைதான் எத்தகையது என்று வினவிற் கூறுதும்; ஆய்தொடி நல்லாய் ஆங்கு அது கேளாய்!— அழகிய தொடியணிதற் கியன்ற பெண்பாவாய் அதனியல்பைக் கேட்பாயாக!; கொலையே களவே காமத் தீவிழைவு உலையா உடம்பின் தோன்றுவ மூன்றும் - கொலையும் களவும் காமமுமாகிய தீய அவாவும் என உடம்பினால் தோன்றுவனவாகிய மூன்றும்; பொய்யே குறளை கடுஞ்சொல் பயன் இல்சொல் என - பொய்யும் குறளைச் சொல்லும் இன்னாச் சொல்லும் பயனில்லாத வறும் சொல்லும் என்று கூறப்படுகின்ற; சொல்லில் தோன்றுவ நான்கும் - சொல்லாலே தோன்றுகின்ற நான்கும்; வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சி என்று - வெஃகுதலும் வெகுளுதலும் பிறவுயிர்கட்குத் துன்பம் தருவனவற்றை நினைத்தலும் என்றோதப்படுகின்ற; உள்ளந் தன்னில் உருப்பன மூன்றும் என பத்து வகை - நெஞ்சத்தே தோன்றுவனவாகிய மூன்றும் ஆகிய இப் பத்துமாம்; என்றார் என்க.

(வி - ம்.) உடம்பிற்றோன்றும் தீவினைகளுள்: கொலை - உடம்பொடு கூடிவாழும் உயிர்களை அவ்வுடம்புகளினின்றும் அகற்றுதல். தீவினைகள் அனைத்தினும் கொடிய தீவினை கொலையே ஆதலின் அதனை முற்பட வோதினார் என்னை? 'ஒன்றாக நல்லது கொல்லாமை'' எனவும், ''நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலையஞ்சிக் கொல்லாமை சூழ்வான் தலை'' எனவும் எழுந்த திருக்குறள்களையும் நோக்குக. களவு - பிறருடைமையை வஞ்சித்துக் கவர்ந்து கோடல். காமமாகிய தீ விழைவு என்க. காமுறுவதில் நல்விழைவும் உண்டாகலின் அதனின் நீக்குதற்குக் காமம் என்றொழியாது காமத் தீ விழைவு என்றார். அஃதாவது பிறர் மனைவியைப் புணர்தலும் விலைமகளிரைப் புணர்தலும் பிறவுமாம்.

ஈண்டு விழைவு அதன் காரியமாகிய புணர்தலின் மேனின்றது. இங்ஙனம் கொள்ளாக்கால் இஃதுடம்பிற் றோன்றும் தீவினையாகாமை யுணர்க.

சொல்லிற்றோன்றும் தீவினைகளுள்: பொய் - என்றது பிறவுயிர்கட்குத் தீமை தருகின்றவற்றைக் கூறுதலை

குறளை - புறங்கூறுதல். கடுஞ்சொல் - கேள்வியானும் பயனானும் இன்னாமை பயக்கும் சொல். பயன் இல் சொல் - வறுஞ்சொல்; அஃதாவது தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பமாகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லுதல். "பயனில பல்லார்முற் சொல்லல் நயனில, நட்டார்கட் செய்தலிற் றீது" என்பதனால் இதுவும் தீவினையே யாதலறிக.

உள்ளத்தில் தோன்றும் தீவினைகள் : வெஃகல் - பிறர் பொருளை வௌவ நினைத்தல். வெகுளல் - சினத்தல். சினத்தற்குரிய காரணம் ஒருவன் மாட்டுளதாய விடத்தும் சினவாமையே அறமாம். ஆதலின் சினம் தீவினையாயிற்று. என்னை? "மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய பிறத்தல் அதனால் வரும்" என்னும் திருக்குறள் ஏனைய கொலை முதலிய தீவினைகட்கும் இது காரணம் என்றறிவுறுத்துதலு முணர்க. பொல்லாக் காட்சி - பிறர்க்குக் கேடு சூழ்தல். காட்சி ஈண்டு மானதக் காட்சி.

## தீவினையின் பயன்

எஉ - எரு : பத்து......தோன்றுவர்

(இ - ள்.) பத்துவகையால் பயன் தெரிபுலவர் - இங்ஙனம் மனம் மொழி மெய்களாற்றோன்றுகின்ற தீவினைகளால் உண்டாகும் பயன்களை ஆராய்ந்தறிந்த அறிவுடையோர்; இத்திறம் படரார் - இத் தீவினைகள் தோன்றுமாறு ஒழுகுதலிலர்; படர்குவராயின் - அறிவின்றி இத்தீவினைகள் நிகழும் நெறியிலே ஒழுகுவாராயின்; விலங்கும் பேயும் நரகரும் ஆகி - அறுவகைப் பிறப்புகளுள் வைத்து இழிந்த பிறப்பாகிய விலங்குப் பிறப்பினுதல் பேய்ப் பிறப்பினுதல் நரகப் பிறப்பினுதல் பிறப்புற்று; கலங்கிய உள்ளக் கவலையில் தோன்றுவர் - துன்பத்தாலே கலக்கமெய்திய நெஞ்சத்தோடே அதனினின்று உய்ந்து கரையேற வழிகாண மாட்டாத கவலையோடே காணப்படுவர்காண்; என்றார் என்க.

(வி - ம்.) பயன் - தீவினையினுலுண்டாகும்பயன், மக்கட் பிறப்பின் பயனைத் தெரிந்த புலவர் எனினுமாம். இத்திறம் - இத் தீவினைகள் நிகழுதற்குரிய நெறி. தோன்றுவர் - காணப்படுவர். நரகருமாகிப் பிறப்பர் என இயைப்பினுமாம்.

## நல்வினைகளும் அவற்றின் பயன்களும்

எசு - அக : நல்வினை......உண்குவ

(இ - ள்.) நல்வினை என்பது யாது என வினவின் - நங்காய்! இனி நல்வினை என்பதன் இயல்பு யாது என நீ வினவு வாயாயின் கூறுதும் கேட்பாயாக; சொல்லிய பத்தின் தொகுதியி னீங்கிச் சீலந்தாங்கித் தானம் தலைநின்று - மேலே மனமொழி மெய்களாலே தோன்றும் எனக் கூறப்பட்ட கொலை முதலிய

பத்துவகைத் தீவினைகளும் அவை தம்மிடத்தே நிகழாவண்ணம் அந்நெறியினின்றும் நீங்கி அவற்றிற்கு மறுதலையாகிய கொல்லாமை முதலிய நல்லொழுக்கங்களை மேற்கொண்டு தான முதலிய நல்வினைகளை ஒல்லும் வகையால் ஓவாதே செய்து பின்னர் அந் நல்வினைகளின் பயனாக வந்துறுகின்ற; மேல் என வகுத்த - உயர்ந்த பிறப்புகள் என்று வகுத்துக் கூறுகின்ற; தேவரும் மக்களும் பிரமரும் ஆகி - தேவராகவும் மக்களாகவும் பிரமராகவும் அவ்வவ்வுலகங்களிலே சென்று பிறந்து; வினைப் பயன் மேவிய மகிழ்ச்சி உண்குவ - அந் நல்வினையின் பயனாக வந்தெய்துகின்ற இன்பங்களை நுகராநிற்பர்காண்! என்றார் என்க.

(வி - ம்.) சொல்லிய பத்தின் தொகுதி - முற்கூறப்பட்ட கொலை முதலிய பத்துவகைத் தீவினைத் தொகுதி என்க. அவற்றின் நீங்கிச் சீலந்தாங்கி - எனவே அத் தீவினைகட்கு மறுதலையாகிய நல்வினைகளாகிய நல்லொழுக்கத் தொகுதிகளை எஞ்சாமல் மேற்கொண் டொழுகி என்றாராயிற்று.

இனி அவற்றின் மறுதலையாய நல்வினைகள் வருமாறு. க:—கொல்லாமையும், கள்ளாமையும், தியநெறியிற் காமுறாமையும் ஆகிய இவை மூன்றும், உடம்பால் மேற்கொள்ளப்படும் நல்வினைகள் என்க. வாய்மையும், பிறர் புகழை பாராட்டலும், இன்சொற் சொல்லலும் பயனுடையவற்றை மொழிதலும் ஆகிய இந் நான்கும் சொல்லாற் செய்யும் நல்வினைகள் என்க.

இனி, பிறர்க்கு ஈதற் கெண்ணுதல், அன்புடையரா யிருத்தல், யாவரும் இன்புற்றிருக்க வேண்டும் என்றெண்ணுதல் மூன்றும் உள்ளத்தில் உருப்பனவாகிய நல்வினைகள் என்க.

இனி, பள்ளி வலம்புரிதல், தவஞ் செய்தல், தானஞ்செய்தல் என்னும் மூன்றும் உடம்பிற் றோன்றும் நல்வினை, மெய்யுரை, நன்மொழி நவிலல், இன்சொல், பயன்மொழி பகர்தல் என்னும் நான்கும் சொல்லிற் றோன்றும் நல்வினைகள் என்றும் அருள் கினைவு, அவாவறுத்தல், தவப்பற்று என்னும் மூன்றும் உள்ளத்தில் உருப்பவாகிய நல்வினைகள் ஆக இப் பத்துமே நல்வினைத் தொகுதி என்பாருமுளர். மேல் - உயர்ந்தது, வினைப் பயனாக மேவிய மகிழ்ச்சியை உண்குவர் என மாறுக.

## உணர்வு, அருவுரு, வாயில், ஊறு ஆகிய இவற்றின் இயல்புகள்

அ௨ - அ௬: உணர்வு.......என்ப

(இ - ள்.) உணர்வு எனப்படுவது உறங்குவோர் உணர்வின் - உணர்வு என்று கூறப்படுகின்ற நிதானமாவது துயில்வோருடைய உணர்ச்சியைப் போன்று; புரிவின்றாகி - உள்ளதோ இல்லதோ என்னும்படி விளக்கமில்லாத உணர்ச்சி

யாய்; புலன் கொளாதது - பொறிகளின் வழியே சென்று ஐவகைப் புலன்களை ஏற்றுக் கொள்ளாததொரு நிலைமைத்து; அருவுரு என்பது - அருவுரு என்னும் நிதானமாவது; உணர்வு சார்ந்த உயிரும் உடம்பும் ஆகும் என்ப - அவ்வுணர்வாவது விழிப்பு நிலையில் இருப்போருடைய உணர்வு போன்று பொறி களாலே புலன்களைக் கவருகின்ற அறிவும் அதற்குக் கருவியாகிய உடம்புமாகும் என்று கூறுவர்; வாயில் ஆறும் ஆயுங்காலை - இனி வாயில் என்கின்ற நிதானத்தை ஆராய்ந்து பார்க்குமிடத்து; உள்ளம் உறுவிக்க உறும் இடன் ஆகும் - நெஞ்சமானது சுவை முதலிய புலன்களை அறிவொடு புணர்த்துதற்கியன்ற வழிகள் என்று கூறுவர்; ஊறு என உரைப்பது - ஊறு என்று கூறப்படுகின்ற நிதானமாவது; உள்ளமும் வாயிலும் வேறு புலன்களை மேவுதல் என்ப - மனமும் அதற்குக் கருவியாகிய மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் பொறிகளும் ஊறு முதலிய தம்மின் வேருகிய புலன்களில் பொருந்துதல் என்பர்; என்றுர் என்க.

(வி - ம்.) உறங்குவோர்பால் உணர்விருந்தும் காரியப் படாமல் தன்னிற்றுனே அடங்கியிருப்பது போன்றதொரு நிலையில் இருக்கும் உணர்வையே சண்டு உணர்வு என்னும் நிதானமாகக் கூறப்படுகின்றது என :அதனியல்பைத் தெரித்தோதியபடியாம். இங்ஙனம் இருக்கும் உணர்வு அறிவினும் உடம்பினும் பரவிக் காரியப்படுகின்ற நிலைமையில் அதனை அருவுரு என்னும் நிதானம் என்று குறியீடு செய்வர் என்றவாறு. இவ்வுணர்வு தன்னுண்மையின் மாத்திரையாகி அடங்கியநிலையில் உணர்வு என்றும் அஃது உயிரினும் உடம்பினும் பரவிக் காரியப்படு மளவில் அருவுரு என்றும் பெயர் பெறுகின்றதுஎன்றவாறு. எனவே உயிர்என்பது அறிவுஎன்பதே புத்தர் கோட்பாடாதல் அறிக. உணர்வுபுலன் கொள்ளா நிலையில் இல்பொருள் போறலின் உயிரும் அறிதலைச் செய்யாவழி இல் பொருள் எனலாம் என்பதும் அவற்றைக் காரியப்படாதபடி செய்து விடுவதே வீடு என்பதும் அவர்தம் கொள்கை யாதலுணர்க. அறிவு அருவமும் உடம்பு உருவமும் ஆதலின் இவை இரண்டும் கூடும் கூட்டமே அருவுரு என்னும் நிதானம் ஆயிற்று என்க. இனி உடம்பும் உள்ளமும் புலன்களைப் பொருந்தும் நிலைமையே ஊறு என்னும் நிதானம் ஆகும். புலன்கள் உள்ளத்திற்கும் வாயிலுக்கும் வேருகிய பொருள் என்பது தோன்ற வேறு புலன்கள் என்றுர். உறுதல் - ஊறு என முதனீண்டு விகுதி கெட்டு நின்றதொரு பண்புச் சொல் என்க. பொருந்துதல் என்பதே இதன் பொருள்.

## நுகர்வும் வேட்கையும் பற்றும் பவம் பிறப்புகளும்

### கூ0 - கூஎ : நுகர்வு... ...தோன்றல்

(இ - ள்.) நுகர்வு உணர்வு புலன்களை நுகர்தல் - நுகர்வு என்னும் நிதானமாவது, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும்

காட்சிப் புலன்களையும் நகை முதலிய கருத்துப் புலன்களையும் நுகர்தலாம்; வேட்கை - வேட்கையாவது; விரும்பி நுகர்ச்சி ஆராமை - யாதானும் ஒரு பொருளை நுகர விரும்பி அந்நுகர்ச்சி நிரம்பாமையாலே அமைதி கொள்ள மாட்டாமையாம்; பற்று எனப்படுவது - பற்று என்னும் நிதானமாவது, பசைஇய அறிவு - நுகர் பொருளை விடாமல் நெஞ்சத்தாற் பற்றிக் கோடலாம்; பவம் எனப்படுவது - பவம் என்னும் நிதானமாவது, பழவினைகளின் கூட்டங்களுள் வைத்துப் பக்குவமடைந்த வினை தம் பயனையூட்டத் தகுந்த செவ்வி தேர்ந்து உருத்து வந்து அப் பயனை நுகருமாறு தொழிற் படுத்துதலாம்; பிறப்பெனப் படுவது அக் கருமப்பெற்றியின உறப்புணர் உள்ளம் சார்பொடு - இனிப் பிறப்பென்னும் நிதானமாவது அப் பழவினையின்பாற் பட்ட நெஞ்சத்தோடு அவற்றின் பயனை நுகர்தற்கேற்ற உயிரானது அறுவகைப் பிறப்புகளிலே அதற்கியன்ற சூழ்நிலைகளோடு; காரண காரிய உருக்களின் தோன்றல் - முன் கூறப் பட்ட இலக்கு அண் அத் தொடர்பினாலே உண்டாகும் உடம்பு களிலே பிறப்பெய்துதல் என்க.

(வி - ம்.) விரும்பியதனை நுகர்ந்து நுகர்ந்து அமையாமையால் வேட்கை விரும்பி ஆராமை என்றார். பசைஇய - ஒட்டிக் கொண்ட. பவம் - பழவினைத் தொகுதியில் பயன்றரும் பக்குவ மெய்திய வினைகள் உருத்து வந்துறுதல். பிறப்புத் தானும் அப் பழவினைக் கேற்பவும் அவ் வினைகளை முகந்து கொண்டுள்ள உள்ளத்தோடும் உயிர் உருக்களிற் றோன்றல் என்பது கருத்தாயினும் மனமே நுகர்ச்சிக்குத் தலைசிறந்த கருவி யாகலின் உள்ளம் தோன்றல் என அதன் வினையாகக் கூறினர். பிறந்த பிறப்பில் தான் நுகர்தற் கேற்ற பயனை விளைவிக்கும் பழவினையை முகந்து கொண்டு வருகின்ற மனம் என்பார் கருமப் பெற்றியின் உறப் புணர் உள்ளம் என்றார். சார்பு என்றது அதற்கேற்ற இடம் தாய் தந்தை முதலிய சுற்றுச் சூழ்நிலைகளை என்க. இக் கருத்துச் சைவ சித்தாந்தத்தோடு ஒப்பு நோக்கி மகிழற் பாலதாம். கதி - பிறப்பு. காரண காரிய உரு - பழவினை யாகிய காரணத்தின் காரியமாகிய உடம்பு எனக் கோடலுமாம். என்னை? "கருமத் தொகுதி காரணமாக வருமே ஏனை வழிமுறைத் தோற்றம்" எனப் பிறுண்டும் ஓதுதலும் (௧௦-௧௧-௧௪) காண்க.

## வினைப்பயன்

## (பிணி, மூப்பு, சாக்காடுகள்)

௯௭ - ௧௦௯: பிணி......மறைந்திடுதல்

(இ-ள்.) பிணி எனப்படுவது - இனி இறுதியினின்ற வினைப் பயனாகிய நிதானத்தின் விளைவாகிய பிணி என்பதன் இயல்பாவது; சார்பில் பிறிது ஆய் உடம்பு இயற்கையில் திரிந்து இடும்பை

புரிதல் - உள்ளத்தைச் சார்ந்து நிற்கின்ற பழவினை காரணமாக ஒழுக்கத்தின் மாறுபட்டதாகி உடம்பானது தனக்கியன்ற இயற்கை மாறுபட்டு விளைக்கின்ற துன்பமேயாம்; மூப்பு என மொழிவது - மூப்பு என்பதாவது; அந்தத் தளவும் தாக்கு நிலையாமையின் தாம் தளர்ந்திடுதல் - ஊழ்வினை வகுத்த இறுதிக் காலம் முடியும் துணையும் உருத்துவந் தூட்டுகின்ற துன்பத்தைத் தாங்கும் ஆற்றல் நிலைத்திராமையால் மேலும் மேலும் வந்துறும் துன்பத்திற்கு ஆற்றாமல் உடம்பினது ஆற்றல் சோர்வுறுதலாம்; சாக்காடு-இனிச் சாதல் என்று கூறப் படுவது யாதெனின்; அருவுருத்தன்மை யாக்கை வீழ்கதிரென வீழ்ந்து மறைந்திடுதல் - அருவுருத்தன்மையையுடைய பரு உடலானது கடலுள் வீழ்ந்து மறைந்தொழிகின்ற ஞாயிற்று மண்டிலம் போன்று வீழ்ந்து மறைந்தொழிதலேயாம் என்றார் என்க.

(வி - ம்.) பிணி - நோய். அஃதாவது உடலிலமைந்த வளியும் பித்தமும் ஐயும் தம்முள் ஒத்திராமல் ஒன்றற் கொன்று மிக்காதல் குறைந்தாதல் மாறுபடுதலாலே உடம்பின்கண் நோய் செய்தல். இதனை,

"மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று" (குறள்-௯௪௧)

என வருந் திருக்குறளானும் உணர்க. வளி முதலிய மூன்றும் தம்முள் ஒத்தியங்குதலே உடம்பிற் கியற்கை யாகலின் இவற்றின் மிகையையும் குறைவையும் திரிதல் என்றார். இடும்பை - துன்பம். எடுத்துக்கொண்ட யாக்கைக்கு இறுதி நாள் இஃதென ஊழ் கருவினுட் பட்டபொழுதே வகுத்துளது என்பது தோன்ற அந்தத் தளவும் என்றார். அந்தம் - இறுதி; சாநாளளவும் என்றவாறு. வினைகள் தம் பயனை ஊட்டுவனவாக வந்து மோதுதலைத் தாங்கும் ஆற்றல் நிலையாமையின் என்க. தாக்கு - தாங்கும் ஆற்றல். 'தாக்குப் பிடிக்க முடியவில்லை' என இக்காலத்தும் வழங்குதல் அறிக. சாக்காடு - சாவு. அருவுருத் தன்மையையுடைய யாக்கை என்க. யாக்கை என்றது பருவுடம்பை. எனவே பௌத்த சமயத்தார்க்கும் நுண்ணுடற்புண்மை உடம்பாடாதல் பெற்றாம்.

இந்தப் பருவுடம்பையே பிறப்பு என்றும் தோற்றம் என்றும் உருக்கள் என்றும் முன்பு கூறினர்.

"பிறப்பெனப் படுவது அக்கருமப் பெற்றியின்
உறப்புணர் உள்ளம் சார்பொடு கதிகளில்
காரண காரிய உருக்களில் தோன்றல்"

என்றிலக்கணம் கூறலின் பழவினைத் தொகுதியோடு கூடிய உள்ளத்தை அருவென்றும் அது கருவாகி எடுத்த உடம்பைப் பருவுடலென்றும்

இவை இரண்டுங் கூடியே இவ்வுலகில் நிலவுதலின் உடம்பினை அருவுரு என்று வழங்குவாராயினர் என்பது பெற்றாம். இவற்றுள் பருவுடம்பின் வீழ்ச்சி மட்டுமே சாக்காடு என்பது அவர் கொள்கை என்பதும் பெற்றாம். பெறவே, சாவு என்பது அருவவுடம்பு நிற்பப் பருவுடல் மட்டும் வீழ்வதேயாம் என்றுதலின் எஞ்சிய அவ்வருவுடம்பே தன்னோ டெஞ்சிய கருமத் தொகுதியோடு மீண்டும் வழிமுறைத் தோற்றம் என்னும் மறுபிறப்பை எய்தும் என்பதும் அவர் கருத்தாத லறியலாம். கதிர் வீழ்வது போலத் தோன்றுந் துணையே அன்றி அது மீளவும் பிறத்த லுண்மை கருதியே அதனையே உவமையாக எடுத்தனர்.

## பன்னிரு நிதானங்களின் தோற்றமுறை

கoசு - ககச: பேதைமை......வரும்

(இ - ள்.) பேதைமை சார்வாச் செய்கையாகும் - பேதைமை நிலைக்களனாக வினைகள் தோன்றும்; செய்கை சார்வா உணர்ச்சி ஆகும் - செய்கை நிலைக்களனாக உணர்ச்சி தோன்றும்; உணர்ச்சி சார்வா அருவுருவாகும் - உணர்ச்சி நிலைக்களனாக அருவுரு நுண் ணுடம்போடு கூடிய பருவுடம்பு தோன்றும்; அருவுருச் சார்வா வாயில் தோன்றும் - உடம்பு நிலைக்களனாக மனமுதலிய வாயில்கள் பிறக்கும்; வாயில் சார்வா ஊறு ஆகும் - அவ் வாயில் வழியாக புலன்கள் வந்து பொருந்தும்; ஊறு சார்ந்து நுகர்ச்சி ஆகும் - புலன்கள் பொருந்துமாற்றால் இன்பதுன்ப நுகர்ச்சி தோன்றும்; நுகர்ச்சி சார்ந்து வேட்கை ஆகும் - அந் நுகர்ச்சி நிலைக்களனாக அவாப் பிறக்கும்; வேட்கை சார்ந்து பற்றாகும் - அவ்வவா நிலைக்களனாகப் புலன்களின்பாற் பற்றுத் தோன்றும்; பற்றில் தோன்றும் கருமத் தொகுதி - அப்பற்றுக் காரணமாக வினைத் தொகுதியுண்டாகும்; கருமத் தொகுதி காரணமாக - அவ் வினைத் தொகுதி காரணமாக; ஏனை வழிமுறைத் தோற்றம் வரும் - சாக்காட்டின்பின் மீண்டும் அதனைத் தொடர்ந்து மறு பிறப்புண்டாகும் என்றார் என்க.

(வி - ம்.) இதனால் பன்னிரு நிதானங்களின் தோற்றமுறை நிரல் படுத்துக் கூறப்பட்டது.

## தோற்றத்தாலாம் பயன்

ககரு - ககஅ: தோற்றம்......நுகர்ச்சி

(இ - ள்.) தோற்றம் சார்பின் மூப்புப் பிணி சாக்காடு அவலம் அரற்று கவலை கையாறு எனத் தவல் இல்துன்பம் தலைவரும் என்க - பிறப்பினைச் சார்பாகக் கொண்டு முற்கூறப் பட்ட மூப்பும் நோயும் சாக்காடும் அழுகையும் கவலையும் செயலறவும் என்று சொல்லப்பட்ட ஒழிதல் இல்லாத துன்பம்

மிக்கு வரும் என்று அறிஞர் கூறுப; இந்நுகர்ச்சி ஊழ் இல் மண்டிலமாச் சூழும - இங்ஙனங் கூறப்பட்ட நுகர்ச்சி முடிவில்லாத வட்டம் வட்டமாக வந்த வண்ணமே சுழலாநிற்கும் என்ளுர் என்க.

(வி - ம்.) ௧௦௪ - பேதைமை சார்பா வென்பது முதலாக ௧௧௮ - நுகர்ச்சி என்பதிருக "பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்" எனத் துன்பமும். அதன் தோற்றமும் ஆகிய இரண்டு வாய்மைகளும் விளக்கிக் கூறியபடியாம். இனித் துன்பநீக்கம் கூறுகின்ருர்.

## துன்பத்தினின்றும் மீளும் முறைமை

### ௧௧௯ - ௧௨௩ : பேதைமை......மீட்சி

(இ - ள்.) பேதைமை மீளச் செய்கை மீளும் - அனைத்தும் தானேயாகிய பேதைமை நீங்குமாயின் அதுசார்பாகத் தோன்றும் வினைகளும் நீங்குவனவாம்; செய்கை மீள - வினைகள் நீங்கிய பொழுது; உணர்ச்சி மீளும் - அவற்றின் சார்பாய்த் தோன்றிய உணர்ச்சி நீங்கா நிற்கும்: உணர்ச்சி மீள அருவுரு மீளும் - அவ் வுணர்ச்சி நீங்கியவழி அதன் சார்பாய்த் தோன்றிய அருவுரு வாகிய உடம்பு நீங்குவதாம்; அருவுரு மீள வாயில் மீளும்-அவ்வருவுருவம் நீங்கியவிடத்து அதன் சார்பாய்த் தோன் றிய மன முதலிய கருவிகளாறும் நீங்குவனவாம; வாயில் மீள ஊறு மீளும் - கருவி நீக்கத்தினுல் அவற்றில் வந்து பொருந்தும் புலன்களின சேர்க்கை இல்லையாம்: ஊறு மீள நுகர்ச்சி மீளும் - புலன்களின் கூட்டரவு இல்லையாயவிடத்தே அவற்றை நுகரு கின்ற நுகர்ச்சியும் இல்லையாய் ஒழியும்; நுகர்ச்சி மீள வேட்கை மீளும் - புலன்களை நுகரும் நுகர்ச்சி இல்லையாயவிடத்தே அவற் றின்பால் எழுகின்ற அவா நீங்கிப்போம்; வேட்கை மீளப் பற்றும் மீளும் - அவாவற்ற காலத்தே புலன்களின் உண்டாகும் பற்றுத் தொலைந்துபோம்; பற்று மீளக் கருமத் தொகுதி மீளும் - பற்றற்ற விடத்துப் (போக்கின்மையாலே) பழவினைத் தொகுதியும் கழிந் தொழிவதாம்; கருமத் தொகுதி மீளத் தோற்றம் மீளும் - காரியமாகிய பழவினைகள் இல்லையாயபொழுது அவற்றின் தோற்றம் இல்லையாய் ஒழிவதாம்; தோற்றம் மீளப் பிறப்பு மீளும் இத்தோற்றம் இல்லையாகிவிடின், வழிமுறைப்பிறப்புகளும் இல்லை யாம்; பிறப்புப் பணி மூப்புச் சாக்காடு அவலம் அரற்றுக் கவலை கையாறு என்று இக் கடை இல் துன்பம் எல்லாம் மீளும் இவ் வகையான் மீட்சி - பிறப்பும் நோயும மூப்பும் சாவும் அழுகையும் புலம்பலும் கவலையும் செயலறவுமாகிய இந்த முடிவில்லாத துன்பம் எல்லாம் துவர நீங்கிப்போம் காண் என்ருர் என்க.

(வி - ம்.) மீளுதல் துன்பத்தினின்றும் நீங்குதல் எனவே கககூ ஆம் அடிமுதலாக கக௩ ஆம் அடியீறாகத் துன்பநீக்கமாகிய மூன்றும் வாய்மை கூறப்பட்டமை உணர்க. மீட்சி இவ்வகை என மாறுக.

## நான்குவகைக் கண்டங்கள்

### க௩௪ - க௩௭ : ஆதி......கண்டம்

(இ - ள்.) பேதைமை செய்கை என்று இவை இரண்டும் காரணவகை ஆதலானே ஆதிக்கண்டம் என்ப - நிதானங்கள் பன்னிரண்டனுள் வைத்துப் பேதைமையும் செய்கையும் என்னும் இந்நிதானங்கள் இரண்டும் எஞ்சிய நிதானங்களுக்கெல்லாம் காரணங்கள் ஆகும் முறைமைபற்றி முதற்பகுதி என்று கூறப்படும்; உணர்ச்சி அருவுரு வாயில் ஊறு நுகர்ச்சி என்று நோக்கப் படுவன - உணர்ச்சியும் அருவுருவாகிய வுடம்பும் அதன் கண்ணவாகிய மனம் மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஆறு கருவிகளும அவையிற்றை வந்தெய்தும் புலன்களும் அவற்றாலாம் இன்ப துன்பமாகிய நுகர்ச்சிகளும் என்று ஆராயப்படும் நிதானங்கள் ஐந்தும்; முன்னவற்றின் இயல்பால் துன்னிய ஆதலின - முற்கூறப்பட்ட காரணங்களின் காரியமாக வந்தவை ஆதலாலே; இரண்டாம் கண்டம் ஆகும் என்ப - இரண்டாம் பகுதி என்று அறிஞர்கள் கூறுவார்கள்; வேட்கை பற்று கரும ஈட்டம் எனக் கட்டுரைப்பவை - அவாவும் பற்றும் வினைத்தொகுதியும் எனக் கட்டுரைக்கப்படுகின்ற நிதானம் மூன்றும்; மற்று அப்பெற்றி நுகர்ச்சி ஒழுக்கினுள் குற்றமும் வினையும் ஆகலான் மூன்றும் கண்டம் - மேலே கூறிய அவ் அவா முதலிய தீய குணங்களும் அவற்றாலுண்டாகும் தீய வொழுக்கங்களுமாக அமைதலானே மூன்றும் பகுதி என்று கூறப்படும்; பிறப்பு பிணி மூப்பு சாவு என மொழிந்திடும் இவை துன்பம் எனப் பிறப்பில் உழக்கும் பயனுதலின நான்காம் கண்டம் - இனி எஞ்சிய பிறப்பும் நோயும் மூப்பும் சாக்காடும் என்று கூறப்படுகின்ற இந் நான்கும் முன்னின்ற பிறப்பு என்னும் நிதானத்தினூடே நுகரப்படுகின்ற துன்பங்கள் எனப்பட்டு அவை பன்னிரண்டாம் நிதானமாகிய வினைப்பயனாகி அமைதலின் இவையிற்றை நான்காம் பகுதி என்று நவில்வர் என்றார் என்க.

(வி - ம்.) ஆதிக்கண்டம் - முதற்பகுதி. பேதைமையும் செய்கையும் அனைத்திற்கும் காரணமாக அமையும் இயைபுபற்றி ஒரு பகுதியிற் பட்டன. இவையே முதற்பகுதி என்றவாறு. உணர்ச்சி......நோக்கப் படுவன பேதைமையும் செய்கையுமாகியவற்றின் காரியமாகலின் இரண்டாம் பகுதியாயின என்க. வேட்கையும் பற்றும் - குற்றக் குணமும், நுகர்ச்சி குற்றத்தின் காரியமும் ஆகலின் ஒருமையுற்று மூன்றும்பகுதி ஆயின என்றவாறு. ஆகலானே மூன்றும் கண்டம் என

௯௫௧. பிறப்பினுழக்கும் வினைப்பயனுகளின் பிணி மூப்புச் சாக்காடு என்பன துன்பம் என ஒருமைப்பட்டு, பிறப்பும் வினைப்பயனுமாய் நான் காம்பகுதியிற் பட்டன.

## சந்திகள்

### (நான்கு பகுதிகளும் தம்முள் கூடுமிடங்கள்)

### கசஅ - கஙுஉ : பிறப்பின்.......சந்தி

(இ - ள்.) பிறப்பின் முதல் உணர்வு ஆதிச்சந்தி - பிறப்புக்குக் காரணமாகிய செய்கையும், உணர்ச்சியும் ஒன்று சேர்வது முதற்சந்தியாம்; நுகர்ச்சி ஒழுக்கொடு விழைவின் கூட்டம் புகர்ச்சி இன்று அறிவது இரண்டாஞ்சந்தி - நுகர்ச்சியாகிய ஒழுக்கமும் வேட்கையும் கூடுஞ்சந்தி குற்றமில்லாமல் அறியப்படுவதாகிய இரண்டாஞ் சந்தியாம்; கன்மக் கூட்டத்தொடு வருபிறப்பிடை முன்னிச் செல்வது மூன்றாஞ் சந்தி - கன்மத் தொகுதியும் மேல்வரும் பிறப்பும் பொருந்திச் செல்வதாகிய சந்தி மூன்றாஞ் சந்தியாகும் என்க.

(வி - ம்.) செய்கையும் உணர்வுஞ் சேர்தல் முதற் சந்தி; நுகர்வும் வேட்கையுஞ் சேர்தல் இரண்டாஞ் சந்தி; பிறப்புந் தோற்றமுஞ் சேர்தல் மூன்றாஞ் சந்தி. நான்கு பகுதிகளும் தம்முள் அந்தாதியாய் மூன்று புணர்ச்சி எய்தி மண்டிலமாய்ச் சுழலும் என்றாராயிற்று. முன்னரும் (கக அ) "ஊழின் மண்டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி" என்றறிவுறுத்தமை நினைக.

## மூன்றுவகைப் பிறப்பு

### கஙுரு - கஙுஅ : மூன்று......ஆகையும்

(இ - ள்.) மூன்றுவகைப் பிறப்பும் மொழியுங் காலை - மூன்று வகைப்பட்ட பிறப்புகளின் இயல்பை ஆராய்ந்து கூறுமிடத்தே அவைதாம்; ஆன்ற பிற மார்க்கத்து ஆய உணர்வே தோன்றல் வீடு எனத் துணிந்து தோன்றியும் - அமைதியுற்ற துன்ப நீக்கமார்க்கம் ஆகிய நெறியிலே இயங்கும் உணர்வே

தலைசிறந்து தோன்றுவதே வீடுபேறுறும் என்று துணிந்து பிறந்தும்; உணர்வு உள் அடங்க உருவாய்த் தோன்றியும் - அவ்வுணர்வு உள்ளே அடங்குமாறு உருவமே தலைசிறந்து பிறந்தும்; உணர்வும் உருவும் உடங்கத் தோன்றியும்-உணர்வானும் உருவந்தானும் சிறப்பின்றி அவையிரண்டும் ஒருபடித்தாகப் பிறந்தும் புணர்தரு உடம்பொடு புணர்ந்து வருகின்ற; மக்கள் தெய்வம் விலங்கு ஆகையும் - மக்களும் தெய்வமும் விலங்கும் ஆகின்ற இம் மூன்றுவகையும் ஆதலால் என்றார் என்க;

(வி - ம்.) ஞானநெறி நின்றியங்கி வீடு பெறுதற்கியன்ற நன்னர் நெஞ்சத்தோடு பிறக்கும் மக்கட் பிறப்பின்கண் உணர்வே தலைசிறத்தலின் அதுவே தலையாய பிறப்பென்னும் குறிப்புத் தோன்ற மக்கட் பிறப்பை இவ்வாறு விதந்தார். தெய்வப் பிறப்பில் வீட்டுணர்வு சிறவாமல் நுகர்ச்சியே சிறந்து நிற்றலின் அதனை உணர்வு அடங்கி உருவம் சிறந்த பிறப்பென்றார். விலங்குப் பிறப்பில் உணர்வும் உருவமுமாகிய இரண்டும் சிறவாமை தோன்ற உணர்வும் உருவும் உடங்கத் தோன்றி என்றார். உடங்கு உடங்க என எச்சமாயிற்று. உடம்பொடு புணர்தரு மக்கள் முதலிய ஆகையும் என்க.

### காலம்

கருசு - கசுஅ : காலம்......படுமே

(இ - ள்.) காலம் மூன்றும் கருதும் காலை - இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் காலம் மூன்றனையும் ஆராய்ந்து காணுமிடத்தே; மறந்த பேதைமை செய்கை ஆணவற்றை இறந்த காலம் என்னல் வேண்டும் - உறுதிப் பொருளை மறத்தற்குக் காரணமான பேதைமையும் செய்கையுமாகிய இரண்டனையும் இறந்த காலத்தன என்று கொள்ளல் வேண்டும்; உணர்வு அருவுரு வாயில் ஊறு நுகர்வு வேட்கை பற்று பவம் தோற்றம் என்று இவை சொல்லுங் காலை - உணர்வு முதலாகத் தோற்றம் ஈறாக நின்ற இவ்வொன்பது நிதானங்களையும் காலத்தொடு படுத்துக் கூறுமிடத்தே; நிகழ்ந்தகாலம் என நேரப்படும் - நிகழ்ந்த காலத்தன என்று கூறப்படுவனவாம்; பிறப்பு பிணி மூப்பு சாவு அவலம் அரற்று கவலை கையாறுகள் எதிர்காலம் என இசைக்கப்படும் - பிறப்பும் பிணியும் மூப்பும் சாவும் அவலமும் அரற்றும் கவலையும் கையாறுகளும் ஆகிய இவை எல்லாம் எதிர்காலத்தன என்று கூறப்படும்; என்றார் என்க.

(வி - ம்.) பிறந்துழலும் உயிர் பற்றியது இக்கால வாராய்ச்சி. முற்பிறப்பிலே உண்டான பேதைமையும் செய்கையுமே இப்பிறப்பை உண்டாக்கின. ஆதலின் அவை இறந்த காலத்தன எனப்பட்டன. உணர்வு முதலாகத் தோற்றம் ஈறாக அமைந்த இந்நிதானங்கள் ஒன்பதும் பிறந்தவனுக்கு யாண்டும் நிகழ் காலத்தனவேயாக இருத்தலுணர்க. இனிப் பிறப்பு என்றது வழிமுறைப் பிறப்பினை. அப் பிறப்பும் பிணியும் அதற்குரிய மூப்பும் சாவும் அவலமும் அரற்றும் கவலையும் கையாறுகளும் எதிர்காலத்தனவே ஆதலும் அறிக. இத்தகைய துன்பங்களை மறந்தமையாலே நிகழ்காலத்தனவாகிய இவை வருகின்றன, எதிர் காலத்தும் வரவிருக்கின்றன என்னும் வாய்மையை மறந்த பேதைமையும் செய்கையும் என்று பேதைமையின் இழிவு தோன்ற விதந்தோதினர் எனக் கோடலுமாம்.

## குற்றமும் வினையும் பயனும்

### ௧௬௯ - ௧௭௪: அவலம்......கடலை

(இ - ள்.) அவாவே பற்றே பேதைமை என்று இவை - வேட்கையும் பற்றும் அறியாமையும் என்று கூறப்படுகின்ற இம்மூன்று நிதானங்களும்; குலவிய குற்றம் எனக் கூறப்படும் - தம்முட் கூடிய குற்றம் என்று அறிஞர்களால் கூறப்படும்; புனையும் அடைபவமும் செயல் வினையாகும் - இவற்றோடு சேர்த்துக் கூறப்படுகின்ற தம்முள் தொகுதியாய்ச் சேர்கின்ற கன்மக் கூட்டமும் அவற்றிற்குக் காரணமான செயல்களும் வினையாகும்; நிகழ்ச்சி உணர்ச்சி அருவுரு வாயில் ஊறு நுகர்ச்சி பிறப்பு மூப்பு பிணி சாவு இவை நிகழ்ச்சி நேரும் காலை ஆங்கே பயன் - உணர்ச்சியும் உடம்பும் மனமுதலிய கருவிகளும் ஊறும் நுகர்ச்சியும் வழிமுறைப் பிறப்பும் மூப்பும் பிணியும் சாவும் ஆகிய இவை நிகழ்ச்சிகளாம் இவ்வேது நிகழ்ச்சிகள் எதிருமவ்விடத்தே வினையின் பயன் எய்துமாதலால் இவை ஏழுமே பயன் என்று கூறுவர் என்றார் என்க.

(வி - ம்.) அவாவும் பற்றும் பேதைமையுமாகிய இம் மூன்றுமே துன்பங்களுக்கெல்லாம் காரணமாகின்ற குற்றமான குணங்களாம் என்றவாறு.

கன்ம வீட்டமும் மேலும் செய்யும் செய்கைகளுமே வினை என்று கூறப்படுவன என்றவாறு.

வினைப்பயன் உண்ணுங்காலை உணர்ச்சி முதலிய ஆறும் ஏதுவும் நிகழ்ச்சியுமாக எதிர்வனவாம். அவ்வழி வரும் நுகர்ச்சி பயன் ஆகவே இவை ஏழுமே வினைப்பயன் என்று கூறப்படும் என்றவாறு.

## வீட்டியல்பு

களஞ - களஅ : குற்றமும்......இயல்பாம்

(இ - ள்.) குற்றமும் வினையும் பயனும் துன்பம் - குற்ற பண்புகளும் வினையும் பயனும் ஆகிய இவை அனைத்துமே துன்பம் என்னும் வாய்மையின்பாற் படுவனவாம்; பெற்ற தோற்றம் பெற்றிகள் நிலையா - பெற்றுள்ள பிறப்பும் அதன் குணங்களும் ஆகிய இவை யெல்லாம் நிலையுதலுடையன அல்ல எனவும்; எப்பொருளுக்கும் ஆன்மா இலை யென - காட்சிப் பொருளும் கருத்துப் பொருளுமாகிய இவையிற்றுள் யாதொரு பொருளுக்கும் உயிர் இல்லை எனவும்; இப்படி உணரும் இவை வீட்டு இயல்பு ஆம் - இவ்வாறு திட்பமாக உணர்ந்து கொள்ளும் இவ்வுணர்ச்சிகளே வீடுபேற்றிற்கு உறுதியாகிய பண்புகளாம்;

(வி - ம்) (௩0 : உக : மணி) "குற்றமும் வினையும்பயனும்விளைந்து நிலையில வறிய துன்பம் என நோக்க, உலையா வீட்டிற் குறுதியாகி" என முன்பு தொகுத்துக் கூறியவர் ஈண்டு (கசுஎ) பிறப்பே என்பது முதலாக (களஅ) வீட்டியல்பாம் என அவற்றை விரிவகையால் விளக்குகின்றார் ஆதலின் "நிலையில வறிய துன்பம் என நோக்க வுலையா வீட்டிற்கு உறுதியாம்" என்றது, வானாது இப்படி உணரும் இவை வீட்டி யல்பாம் என்றார். இப்படி யுணரும் உணர்ச்சிகளே வீடுபேற்றை நல்குதலின் அவற்றையே வீட்டியல்பு எனக் காரணத்தைக் காரியமாக வோதினர் என்க.

## நால்வகை வாய்மைகள்

களக - கஅஅ : உணர்வு.......நான்காவது

(இ - ள்.) உணர்வே அருவுரு வாயில் ஊறே நுகர்வே பிறப்பே பிணி மூப்புச் சாவே அவலம் அரற்றுக் கவலை கையாறு என நுவலப்படுவன நோய் ஆகும் - உணர்ச்சி முதலாகக் கையாறு ஈறாகக் கூறப்பட்டனவாகிய பதின்மூன்றனையும் தன்னகத்தே கொண்ட பிறப்பே துன்பம் ஆகும் என்பது ஒரு மெய்க்காட்சி யாம்; அ நோய் தனக்கு - அப் பிறப்பாகிய துன்பத்திற்கு; பேதைமை செய்கை அவாவே பற்றுக் கருமவீட்டம் காரணம் ஆகும் - அறியாமையும் செய்கையும் வேட்கையும் புலனகளின் பாற் செல்லும் பற்றுள்ளமும் பழவினைத் தொகுதியும் காரண மாகும்; தோற்றம் துன்பம் காரணம் பற்று - இவ்வாற்றால் பிறப்பே துன்பம் என்பதும் அதற்குக் காரணம் பற்றுள்ளமே

என்பதும் ஆகிய இரண்டுண்மைகள் தெளியப்பட்டன இனி; வீடே இன்பம் - இனி இத் துன்பநீக்கமாகிய இன்பம் இவற்றிற் பசைஇய அறிவாகிய பற்றினின்றும் விடுதலை பெறுதலேயாம், என்னை?; காரணம் பற்று - இலி - அவ் வீட்டின்பத்திற்குக் காரணம் பற்றில்லாவுள்ளமே ஆகலின், ஒன்றிய உரையே நான்கு வாய்மையாவது - ஈண்டு மாறுபாடின்றிப் பொருந்திய இந் நான்கு மொழிகளும் நான்கு வாய்மைகள் ஆதலறிக என்றார் என்க.

(வி - ம்.) இப்பகுதியால் (௩௨) "நால்வகை வாய்மைக்குச் சார்பிடனாகி" என்றுமுன்னர்த் தொகுத்தோதப்பட்ட நான்குவாய்மைகளும் விரிவகையால் விளக்கினமை அறிக. இதன்கண் - உணர்வும் அருவுருவும் வாயிலும் ஊறும் நுகர்வும் அதன் வழித்தாகிய வழிமுறைத் தோற்றமும் பிணிமூப்புச் சாவு அவலம் கையாறு என்னும் அனைத்தும் பிறந்தோர் பால் உள்ளன. ஆகலின் பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம் என்பது ஒரு மெய்க் காட்சியாம்; அப் பிறப்பிற்குக் காரணம் பேதைமை முதலியன ஆம் என்பது ஒரு மெய்க்காட்சி என்பார். தோற்றம் துன்பம் (௧) பற்றுக் காரணம் (௨)எனச் சுருங்கக் கூறியும் விளங்கவைத்தனர். (௩) துன்ப வீக்கமே வீடு என்பார் வீடு இன்பம் என்றார். அதற்குக் காரணம் பற்றறுதியே என்பார், காரணம் (௪) பற்றிலி என்றார். இங்ஙனம் கூறப்படும் இந்நான்கு உரைகளுமே நான்கு மெய்க்காட்சிகளுமாம் என்பார் ஒன்றிய உரையே நான்கு வாய்மை ஆவதென்று ஓதினர். இந்நான்கு வாய்மைகளும்,

"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோர் உறுவது" (ஊரலர் - ௬௪ - ௬௭)

எனவரும் மாதவி கூற்றிலமைந்துள்ளமை நுண்ணிதின் உணர்க.

இனி - இவற்றோடு—

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்" (குறள் - ௩௪௯)

எனவரும் இவ்வருமைத் திருக்குறளையும் நினைக.

இனி, துன்பம், துன்பவருவாய், துன்பநீக்கம், துன்ப நீக்கநெறி என இந்நான்கு வாய்மைகளையும் தமிழில் மொழி பெயர்த்துக் கொள்க.

இனி, துன்பநீக்கநெறி எட்டு வகைப்படும் என்பர். அவை வருமாறு: நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர் தலைப்பாடு என்பன.

### கந்தங்கள்

கஅகூ-ககூ0 : உருவு...... ஆவன

(இ - ள்.) உருவு நுகர்ச்சி குறிப்பு பாவனை உள்ள அறிவு இவை - உருவக்கந்தமும் நுகர்ச்சிக்கந்தமும் குறிக்கந்தமும் செயற்கந்தமும் அறிவுக்கந்தமும் - என்று கூறப்படும் இவையே; ஐங்கந்தம் ஆவன - ஐவகைக் கந்தங்கள் எனப்படும் என்றார் என்க.

(வி - ம்.) (கூஉ) இனி ஐந்து வகைக் கந்தத் தமைதியாகி என்று முன் தொகுத்து நிறுத்த முறையானே ஈண்டு அவற்றை விரித்து விளம்புகின்றார் என்க.

உருவக்கந்தமும் நுகர்ச்சிக்கந்தமும் குறிக்கந்தமும் செயற் கந்தமும் அறிவுக்கந்தமும் என்னும் இவற்றைரூபஸ்கந்தம் விஞ்ஞானஸ் கந்தம் ஞானஸ்கந்தம் பாவனாஸ்கந்தம் சம்ஸ்காரஸ்கந்தம் என்றும் கூறுவர். இதனை—

"உருவம்வே தனைகுறிப்புப் பாவனைவிஞ்
ஞானம்என உரைத்த ஐந்தும்
மருவியே சந்தானத் தால்கெடுதல்
பந்ததுக்கம் மற்றிவ் வைந்தும்
பொருவிலா வகைமுற்றக் கெடுதல்முத்தி
யின்பம்முன்பு புகன்ற வைந்தின்
விரிவெலாம் தொகுத்துரைத்த மெய்ந்நூலின்
றெரித்திர்இவை மெய்ம்மை என்றான்"
(மெய்ஞ்ஞான விளக்கம் : சருக்கம் கஉ)

எனவரும் செய்யுளானும் உணர்க.

இனி, இந்த ஐந்து கந்தங்களின் கூட்டமே உயிர் என்பது பௌத்தர் கொள்கை, அதனை—

"கவையொப் பனகை விரலைந் துகளும்,
இவையிப் படிகைப் பிடியென் றதுபோல்
அவையப் படிகந் தங்களைந் துகளும்
நவையைப் படுகல் லுயிரா மெனவும்"

எனவரும் நீலகேசிச்(சகூஉ) செய்யுளானும் அதற்கு யாமெழுதிய "ஐந்து விரல்களையும் கூட்டிப் பிடித்தவழி கைப்பிடி என்றொரு வழக்குண்டானாற் போல ஐங்கந்தமும் கூடிய கூட்டத்திற்கே உயிர் என்று பெயர் கூறப் படுகின்றது என்றவாறு; எனவே உயிர் என்பது வாய்மை வகையான்

இல் பொருளாம். வழக்கு வகையான் உள் பொருளாம் என்றவாறு பிற்று'' எனவரும் விளக்கவுரையானும் இனி நின் உணர்க.

இனி ஐங்கந்தங்களுள் உருவக்கந்தம், பூதவுரு உபாதான உரு என இரண்டாம் என்பர். அதனை "உருவினியல் பூதமுடன் உபாதான மெனவிரண்டாம்'' எனவரும் மெய்ஞ்ஞான விளக்கத்தால் (சருக்கம் ௧௨ : ௭) உணர்க.

## அறுவகை வழக்கு

௧௯௩ - ௧௯௪ : அறுவகை.....வழக்குமென

(இ - ள்.) அறுவகை வழக்கும் மறு இன்று கிளப்பின் - இனி ஆறுவகையான வழக்குகளையும் குற்றமின்றி விரித்து விளம்புமிடத்தே அவைதாம்; தொகையே தொடர்ச்சி தன்மை மிகுத்துரை இயைந்துரை என்ற நான்கினும் இயைந்த - தொகையும் தொடர்ச்சியும் தன்மை மிகுத்துரையும் இயைந் துரையும் என்னும் நான்கு வகை வழக்கோடு கூடிய; உண்மை வழக்கும் இன்மை வழக்கும் உள்ளது சார்ந்த உண்மை வழக்கும் இல்லது சார்ந்த இன்மை வழக்கும் உள்ளது சார்ந்த இன்மை வழக்கும் இல்லது சார்ந்த உண்மை வழக்கும் என - உண்மை வழக்கு முதலியன என இந்த ஆறுவகை வழக்குமாம் என்றார் என்க.

(வி - ம்.) அறுவகை வழக்கும் தொகை முதலிய நான்கோடும் கூடி ஒவ்வொன்றும் நான்கு வகைத்தாய் ஆறும் என்றவாறு. இவற்றுள் பிற் காலத்தே தொகை முதலிய நான்கனுள் இயைந்துரை என்பதனைத் தொகையிலடக்கித் தொகையும் தொடர்ச்சி தன்மை மிகுத்துரை என்ற மூன்றே கொள்வர். இம் மூன்றும் உள்வழக்கும் இல்வழக்கும் ஆகிய இரண்டனோடும் கூடி ஒவ்வொன்றும் மூன்றுவகைத்தாய் வழக்கு அறு வகைப்படும் என்று கூறுவாருமுளர். இதனை,

"வழக்கு இரண்டாய்ப் பொருவும்இயல் உள்ளதுடன்
இல்லதும் என்றிரண்டாப் புகல்வர்''

எனவும்,

"மருவு தொகை தொடர்ச்சி மிகுத்துரை என
ஒன்று ஒரு மூவகைத்தாய் ஆறும்
தெரிவுறு மாறவ்வாறும் இவ்வாறும் என
வகுத்துச் செப்பக் கேண்மோ''

எனவும் வரும் மெய்ஞ்ஞான விளக்கத்தானும் (புத்த—௧௦)அறிக.

## தொகை தொடர்ச்சி முதலியவற்றினியல்பு

௧௯௯ - ௨௦௭ : சொல்லிய......வழங்குதல்

(இ - ள்.) சொல்லிய தொகைத் திறம் உடம்பு நீர் நாடு - முன கூறப்பட்ட தொகை வழக்கின் இயல்பாவது, உடம்பு என்றும் வெள்ளம் என்றும் நாடு என்றும் பல பொருளின் கூட்டத்தைத் தொகுத்து ஒரு பொருள்போல ஒரு பெயரால் வழங்குவதாம்; தொடர்ச்சி - இனித் தொடர்ச்சியாவது; வித்து முளை தாள் என்று இந் நிகழ்ச்சியில் அவற்றை நெல் என வழங்குதல் - வித்தினின்றும முளையும் முளையினின்று தாளும் என இங்ஙனம் காரணகாரிய முறையால் நிகழும் நிகழ்ச்சியில் வித்து நெல்லாதல் பற்றி அவற்றை நெல் என்று வழங்குதல் போன்ற வழக்காம்; இயல்பு மிகுத்துரை - இனி, தன்மை மிகுத்துரை என்னும் வழக்காவது; ஈறுடைத்து என்றும் தோன்றிற்று என்றும் மூத்தது என்றும் மூன்றின் ஒன்றின் இயல்பு மிகுத்து வைத்தல் - ஒரு பொருளின் இறுதி யுறுதல் தோற்றமுறுதல் மூத்தல் என்னும் இயல்புகளுள் வைத்து இஃதழிபொருள் என்றோதல் இது தோன்றிய பொருள் என்றோதல் முதிர்ந்தது என்றோதல் அம் மூன்றனுள் ஒன்றனை மட்டும் கிளர்ந் தெடுத்து வழங்குதல் போல்வதாம்; இயைந்துரை என்பது - இனி இயைந்துரை என்னும் வழக்காவது; எழுத்துப் பலகூடச் சொல்லெனத் தோற்றும் பலநாள் கூடிய எல்லையைத் திங்க ளென்று வழங்குதல் - பல எழுத்தாலியைந்த தொடரைச் சொல்லென வழங்குமாறு போலப் பலநாள் கூடிய ஒரு கால எல்லையைத் திங்கள் என்று வழங்குதல் போல்வது ஆம் என்றார் என்க.

(வி - ம்.) தொகைவழக்காவது பல பொருட்குவையாகிய ஒன்றிற்கு ஒரு பெயரிட்டு வழங்குதலாம் எனவும் தொடர்ச்சியாவது - வித்துமுதல் தாள் ஈறாகப் பரிணமித்து வருவனவற்றைக் காரணமாகிய நெல் என்றே வழங்குதலாம் எனவும் ஒரு பொருளின் தன்மை பலவற்றுள் ஒன்றனை மட்டு விதந்து வழங்குதல் எனவும் பல பொருள் தொடர்ந்ததனை மற்றொரு பெயரால் வழங்குதலாம் எனவும் நுண்ணிதிற் கண்டுகொள்க. தொகை வழக்கும் என்பதற்கு இயைந்துரைக்கும் வேறுபாடு தெரிந் தோதுவார் பல எழுத்துக் கூடி இறந்தொழியவும் அவ்வியைபிற்குச் சொல் என்று ஒரு பெயரிட்டாற் போல இறந்தொழிந்த பல நாளின் இயைபின் எல்லையைத் திங்கள் என்று வழங்குதல் என்றார். தொகைப் பொருளில் தொக்க பொருள் எல்லாம் உளவாதலும் இயைந்துரையில் இயைந்த எழுத்தும் நாளும் இல்லையாதலும் வேற்றுமை இதற்கிவ்வாறு பொருள் கூறாது வேறு கூறுவார் உரை பொருந்தாமை நுண்ணுணர்வால் தெளிந்து கொள்க.

இனிப் பௌத்தர்கள் கணபங்க வாதியாதலின் தொகைப்பொருளும் கணந்தோறும் கெட்டே பிறத்தலின் தொகைப் பொருட் கேட்டிற்கும் இயைந்துரையில் எழுத்தும் நாளும் அங்ஙனமே கெடுதலின் இவற்றுள் வேற்றுமையின்றும் பிறவெனின் அற்றன்று. தொகைப் பொருள் சந்தானத்தால் தொடர்ச்சியால் கெட்ட பொருளே மீண்டும் பிறக்கும் இயைந்துரைக்கண் எழுத்துக்களும் நாள்களும் கெடுங்கால் பொன்றக் கெடுவன ஆதலின் இவ்வேற்றுமை சாலப் பெரிது, இதனை அறியும் நுணுக்கமின்மையால் பிற்றைநாளில் இயைந்துரையைத் துவரக் கை விட்டனர் என்று விடுக்க.

இனி இவற்றை—

"கந்தமைந்தின் செறிவொருவ னென்பனபன்
மரச்செறிவு காடென் றூற்போன்
மைந்தவென்றல் தொகையுள்வழக் கயலொருவன்
அவையைந்தும் அடுப்பான் என்றல்
எந்தையியம் பியதொகையில் வழக்காகுங்
காரணகா ரியத்தாற் றேன்றி
அந்தமடைந் திடுவனென்றல் தொடர்ச்சியுண்மை
வழக்கென நூ லறையு மன்றே"

எனவும்,

"மாண்டவழி யேயுதிப்பன் என்னுமல்
ஒருவ னென்றும் வைகுவானென்
நீண்டவுரைப் பதுதொடர்ச்சி யில்வழக்காம்
உதித்தவெல்லா மிறக்குமென்றல்
வேண்டுமிகுத் துரையுள்வழக் காம்விழிக்குப்
போனதுபோல் வேறும் என்றல்
பூண்டமிகுத் துரையில்வழக் காகும்
இன்னுமவற் றினியல் புகலக்கேண்மே"

எனவும் வரும் மெய்ஞ்ஞான விளக்கச் செய்யுள்களானும் (சருக்கம் கஉ. செய் - க0-கக) நன்குணர்க.

ஈண்டுக் காட்டிய இச் செய்யுளினும் மணிமேகலை யாசிரியர் கூறிய இயைந்துரை வழக்குக் கைவிடப்பட் டிருத்தலு மறிதற் பாலதாம்.

## உள்வழக்கும் இல்வழக்கும்

உ0அ - உகசு : உள்வழக்கு......இல்லெண

(இ - ள்.) உள்வழக்கு உணர்வு இல்வழக்கு முயற்கோடு - உள் வழக்காவது உள்பொருளாகிய உணர்வு உண்டு என்றாற் போல்வதாம், இல்வழக்காவது இல்பொருளாகிய முயற் கொம்பு

இல்லை என்பது; உள்ளது சார்ந்த உள்வழக்கு சித்தத்துடனே நுகர்ச்சி ஒத்தது ஆகும் - உள்பொருளைச் சார்ந்து வருகின்ற உள்வழக்காவது உணர்ச்சிக்குப் பொருந்தியது நுகர்பொருள் என்பது போல்வன ஆம்; உள்ளது சார்ந்த இல்வழக்கு சித்தம் மின்போல் உற்பவித்தது என்கை - உள் பொருள் சார்ந்த இல் வழக்காவது உள் பொருளாகிய அறிவினை மின்னல் போன்று முன்னரில்லாமல் ஞெரேலென உண்டாயிற்று என்பது போல் வனவாம்; இல்லது சார்ந்த உண்மை வழக்கு - இல் பொருளைச் சார்ந்து பிறக்கும் பொருளாக உள்பொருளைக் கூறும் வழக்காவது; காரணம் இன்றிக் காரியம் நேர்தல் ஆகும் - காரணமில்லாமலே காரியம் நிகழ்ந்ததாகக் கட்டுரைத்தலாகும்; இல்லது சார்ந்த இல்வழக்கு ஆகும் - இல் பொருளைச் சார்ந்த இல்வழக்காவது; முயல் கோடு இன்மையின் - முயலுக்குக் கொம்பின்மையாலே; தோற்றமும் இல் எனல் - முயலுக்குக் கொம்பு முளைத்தலில்லை என்று கூறுதல், என்பதாம்; என்றார் என்க.

(வி - ம்.) அறுவகை வழக்கிற்கும் எடுத்துக் காட்டோடு மறுவின்றி விளக்கங் கூறியவாறும். இனி இவற்றிற்கு இங்ஙனமே—

"ஓதியபிடின் உள்வழக்கில் வழக்குண்மை
சார்ந்தவுண்மை உண்மை சார்ந்த
ஏதமுறு மில்வழக்கில் லதுசார்ந்த
உண்மையின்மை சார்ந்த இன்மை
பேதமிவை யாருமுள் வழக்குளதை
யுளதென்று பேசல் ஆகும்;
மூதுலகி னில்வழக்குச் சொலின்முயற் கோ
டில்லையென மொழிவ தாமால்"

எனவும்,

"அறிவினைச்சார்ந் தறிவுதிக்கு மென்பதுண்மை
சார்ந்தவுண்மை அறிவைச் சார்ந்தே
அறிவுபின்ன ருதியாதென் றுரைப்பதுண்மை
சார்ந்தவின்மை அறிவில் லாமல்
அறிவுபின்ன ருதிக்குமென்ப தில்லதுசார்
புண்மையின்மை யதுசார் இன்மை
அறிவினைக்கொண் டறிந்திடல் உள்ளங்கை
மயிர்க்கயி றென்பதாகு மென்றான்"

(கஉ - ஆம் சருக்கம்-புத்த-கஉ-கக)

எனவும், எடுத்துக் காட்டோடு மெய்ஞ்ஞான விளக்க நாலுடையாரும் இனிதின் விளக்குதலுணர்க.

## நால்வகை நயங்கள்

உகா - உஉ-அ : நான்கு...... இயல்பு நயம்

(இ - ள்.) நான்கு நயம் எனத் தோன்றப்படுவன - நான்கு நயங்கள் என்று நுண்ணறிவுடையோர்க்குத் தோன்றப்படுவன யாவை எனின்; ஒற்றுமை வேற்றுமை புரிவு இன்மை இயல்பு என்க - ஒற்றுமை நயமும் வேற்றுமை நயமும் புரிவின்மை நயமும் இயல்பு நயமும் என்று கூறுக; ஒற்றுமை நயம் - அவற்றுள் ஒற்றுமை நயமாவது; காரண காரியப் பொருள்களை - காரணமும் காரியமுமாகிய பொருள்களை ஆராய்ச்சி வகையாற் பிரித்து நோக்காமல்; ஒன்றாக உணர்தல் ஆம் - ஒன்றாகவே அறிவதாம்; வீற்று வீற்றாக வேதனை கொள்வது வேற்றுமை நயம் என வேண்டல் வேண்டும் - அவ்வாறன்றிக் காரணத்தையும் காரியத்தையும் வேறு வேறு பொருளாகக் கொள்வதனை வேற்றுமை நயம் என்று கோடல் வேண்டும்; பொன்றக்கெடா அப் பொருள் வழிப் பொருள்களுக்கு ஒன்றிய காரணம் உதவு காரியத்தைத் தருதற்கு உள்ளந்தான் இலை என்றல் - முழுதும் கெடாமல் தொடர்ச்சி வகையால் கெட்டகணத்திலேயே தோன்று மியல்புடைய பொருள்வழிப் பொருள்களுக்குப் பொருந்திய காரணமும் அக் காரணம் தோற்றுவிக்கின்ற காரியத்தைச் செய்து தருதற்கு வினைமுதலாகிய ஆன்மா என்று ஒன்று இல்லை என்று கூறுதல்; புரிவின்மை என்னும் நயமாகும் - புரிவின்மை நயம் எனப்படும்; நெல் வித்தகத்து நெல்முளை தோன்றுமெனல் - நெல்லாகிய வித்தினுள்ளிருந்து நெல்லின் முளையே தோன்றும் (பிறிதொன்றன் முளை தோன்றாது) என்று கூறுதல்; நல்ல இயல்பு நயம் - நன்மையுடைய இயல்பு நயம் ஆகும்; என்றார் என்க.

(வி - ம்.) காரண காரியத்தைப் பிரித்து நோக்காது ஒன்றாகக் காண்பது ஒற்றுமை நயம். அஃதாவது புகையையும் நெருப்பையும் நெருப்பென்று ஒன்றாகவே கூறுவது. புகை வேறு நெருப்பு வேறு என இரண்டாகக் கொள்வது வேற்றுமை நயம். அறிவு கணந்தோறும் கெட்டுப் பிறக்கும் என்பது பொன்றக் கெடாப் பொருள்வழிப் பொருளாம். இவற்றில் முற்கணத்தே கெட்ட அறிவு காரணம், அதன் வழிப் பொருள் அக் கணத்தின் பிற்பகுதியிலே பிறந்த அறிவு காரியம் ஆம். காரணம் ஆகிய அறிவு பிறப்பித்த காரியமாகிய அறிவு இயல் பாகவே நிகழ்வதன்றி இக்காரணத்தினின்றும் காரியத்தைத் தோற்று விக்கும் ஆன்மா என்று ஒரு வினைமுதல் இல்லை என்பது புரிவின்மை நயம் என்றவாறு. இனி நெல் விதையிலிருந்து நென் முளை தோன்றும் என்றது பிறமுளை தோன்றா என்று அறுதி செய்தவாறும். புரிவு இன்மை - செய்கை யில்லாமை. அஃதாவது ஒருவனால் செய்யப் படாமல் காரணத்தினின்றும் காரியம் பிறப்பது என்றவாறு. இந் நயங்கள் நான்கும் பௌத்தருடைய தத்துவங்கட்கு இன்றியமையாதன ஆகும் என்றுணர்க.

## நயங்களால் எய்தும் பயன்கள்

### உஉ௯ - உ௩௪ : இவற்றின்......நான்கும்

(இ - ள்.) இவற்றின் நாம் கொள் பயன் - இனி இந்த நான்குவகை நயங்களானும் பௌத்தர்களாகிய நம்மனோர் எய்தும் பயன்களைக் கூறுவல் கேட்பாயாக; தொக்க பொருள் அலது ஒன்று இல்லை என்றும் - பேதைமை முதலிய பன்னிரண்டு பொருள்களின் வேறாகப் பிறிதொரு பொருள் இல்லை என்றும்; அப் பொருளிடைப் பற்று ஆகாதென்றும் - மண்டில வகையாற் சூழும் இப் பொருள்களிடத்தே வழிமுறைத் தோற்றத்திற்குக் காரணமான பற்றினைச் செய்தல் அறிவாகா தென்றும்; செய்வானொடு கோட்பாடு இலை என்றும் - இப் பொருள்களை இவ்வாறு மண்டில வகையாற் சுழற்றுதற்கு ஒருவினை முதல்வனும் இங்ஙனம் சுழற்றுதற்கு அவனுக்கொரு நிமித்தமும் இல்லை என்றுணர்ந்து கோடலும்; எய்தும் காரணம் தாம் காரியம் என்றும் - அநாதியாயுள்ள காரணங்களே காரியங்களாய்ச் சார்பிற்றோன்றும் என்றும்; அதுவும் அன்று அலாததும் அன்று என்றும் - அக் காரியங்கள் காரியமாந் துணையுமன்று அஃதல்லாததும் அன்று என்றும்; விதிமுறை தொகையினால் விரிந்த நான்கும் - பிடகநூல் விதி முறையினாலே தொகுக்கப் பட்டமையால் ஈண்டு விரிக்கப்பட்ட நான்கினையும்; நாம் எய்தும் பயன் - இந்நயங்களாலே யாம் அடையும் பயன் என்றார்; என்க.

(வி - ம்.) நயங்கள் நான்கனுள் நிறுத்த முறையானே தொகுத்த பன்னிரண்டு மன்றிப் பிறிதொரு பொருளும் இல்லை என்று மெய்யுணர்வு பெறுதல், ஒற்றுமை நயத்தால் எய்தும் பயன். அவற்றைப் பிரித்து ஆராயுமாற்றால் இவற்றால் எய்துவது துன்பமே அன்றித் தொழுதக வில்லை என்றுணர்ந்து பற்றறுத்தல் வேற்றுமை நயத்தால் உண்டாகும் பயன் என்க. புரிவின்மை நயத்தால் தீதும் நன்றும் பிறர்தர வாரா, நமது துன்பத்திற்கு நாமே காரணம் என்றுணர்தலாம். உலகம் அநாதியாகவுளது, அதற்குச் செய்வோனும் அங்ஙனம் செய்தற்கு ஒரு நிமித்தமும் இல்லை என்றுணர்தலாம். இயல்பு நயத்தால் நம்முள்ளத்தின் வழி நமது கட்டும் வீடும் உள்ளன என்றுணர்தல் பயனும், என்றவாறு.

## வினாவிடை

### உ௩௫ - உ௩௭ : வினாவிடை......என

(இ - ள்.) வினாவிடை நான்கு உள - இனி மணிமேகலையே கேள்! நந்தம் திருவற மூர்த்தியாகிய புத்தபெருமான் போதி மூலம் பொருந்தி இருந்து திருவாய் மலர்ந்தருளிய அறவுரைகளை அறிந்து மேற்கோடற் கெண்ணியாதல் மறுத்துத் தங்கோளை நிலைநிறுத்துதற்காதல் ஏனையோர் நம்மை வினவும் வினாக்கள்

நான்குள்ளன, அவற்றிற்கு நாம் இறுக்க வேண்டிய விடைகளும் நான்குள்ளன, அவற்றையும் அறிவுறுத்துவல் கேட்பாயாக!; துணிந்து சொல்லல் கூறிட்டு மொழிதல் வினவின் விடுத்தல் - ஏனையோர் வினவிய பொருளை ஆராய்ந்து இதற்கிதுவே விடையாம் என்று தெளிந்து விடை கூறுதலும், வினவிய பொருளைப் பகுத்து வினவி அவற்றிற் கேற்ப விடையையும் பகுத்துப் பலவாக விடை கூறுதலும்; வினவின் விடுத்தல் - வினவியோர்க்கு எதிர்வினா வெழுப்பு மாற்றால் விடையிறுத் தலும்; வாய்வாளாமை என - வினாவிற்கு விடை கூறுதலின்றி வாய்வாளா திருக்கு மாற்றால் குறிப்பாக விடைபெறுமாறு செய் தலும் என்னும் இவை நான்குமே வினாவிற்குரிய விடைகளாம் என்றார் என்க.

(வி - ம்.) அறவொழுக்கத்தை மேற்கொண்டொழுகுவோர்க்கும் அவ் வறங்களை அறிய விரும்பி வந்து வினவும் பிறர்க்கும் அவற்றை அறி வுறுத்துதல் இன்றியமையாமையின் அறம் பரப்பவும் நிலைநிறுத்தவும் வேண்டி அதற்கியன்ற வினாக்களையும் அவ் வினாவிற்குரிய விடைகளையும் அறிவுறுத்தல் வேண்டிற்று. இதனாலாம் பயன் அறம் வளர்த்தலாம் என்க. அறமறிய அவாவியோ அல்லது மறுத்தற் கெண்ணியோ வினவும் வினாக்கள் இவை நான்குமே, இவற்றிற்கு விடையும் நான்கேயாம். பிறரால் ஏனைய வழியில் வினவப்படினும் வாய்வாளா திருத்தல் வேண்டும் என இதனானும் அறமே அறிவுறுத்தபடியாம்.

விடைகளை விரித்தறிவுறுத்தல்

௨௫௮ - ௨௪௬ : தோன்றியது...... இருத்தல்

(இ-ள்.) தோன்றியது கெடுமோ கெடாதோ என்றால்-தோன் றிய பொருள் அழியுமோ? அழியாதோ என்று ஒருவன் வினவினால்; கேடு உண்டு என்றல் துணிந்து சொலல் ஆகும் - யாதொரு பொருள் தோன்றிற்று அப் பொருட்கு ஒரு தலையாக அக் கணத்தினுள்ளேயே அழிவும் உண்டாம் என்றிறுத்தல், ஒரு தலையாகத் துணிந்து சொல்லுதல் என்னும் விடை யாகும்; செத்தான் பிறப்பானோ பிறவானோ என்று செப்பின் - ஒருவன் இறந்தவன் மீண்டும் பிறப்பானோ பிறவா தொழி வானோ என்று வினவியக்கால்; பற்று இறந்தானோ அல் லனோ எனல் - நின்னால் செத்தான் என்று குறிக்கப்பட்டவன் பற்றற்றுச் செத்தவனோ அல்லது பற்றுடையனாகவே செத்த வனோ என்று வினவிப் பற்றற்றவன் எனின் பிறவான் என்றும் பற்றுடையோன் எனின் பிறப்பான் என்றும் ஏற்றபெற்றி விடை யிறுத்தலே; மிகக் கூறிட்டு மொழிதல் என விளம்புவர் - பெரிதும் வினாவினைப் பகுத்து வினவி அவன் விடைக்குத் தக விடையிறுத்தல் என்று சான்றோர் கூறுவர்; வினவின

விடுத்தல் - இனி வினவியவனை அவ் வினவிற் கியன்ற விடையமையுமாற்றால் எதிர்வினா வெழுப்பி விடைபெற வைத்தல் என்னும் விடை வருமாறு; முட்டை முந்திற்றோ பனை முந்திற்றோ என கட்டுரை செய் என்றால் - ஒருவன விதை முந்தியதோ பனை முந்தியதோ என வினவி இதற்கு விடை கூறுதி என்றக்கால்; எம் முட்டைக் கெப்பனை என்றல் - அங்ஙனம் வினவியவனை நோக்கி நீ வினவியது எந்த வித்திற்கு எந்தப் பனையைக் குறித்து அதனைக் கூறுதி என்று எதிர்வினா வெழுப்புதலேயாம்; இனி, வாய்வாளாமை - வாய்வாளா திருத்தல் வாயிலாக விடையறிவித்து விடுதல் என்பது; ஆகாயப் பூ பழைதோ புதிதோ என்று புகல்வான் உரைக்கு - ஆகாயத்திற் பூத்த மலர் பழம்பூவோ புதிய பூவோ என்று வினவுவான் ஒருவனுடைய வினாவிற்கு; மாற்றம் உரையாது இருத்தல் - மறுமொழி கூறாமலே வாய்வாளா திருக்குமாற்றால் அவனைத் தகுந்த விடைபெற வைத்தலாம் என்றார் என்க.

(வி - ம்.) “தோற்றப் பெற்றிகள் நிலையா” (௩௦ - ௧௭௬)

என்பது வாமன் கூறிய ஏமக்கட்டுரையாதலின் அதற் கேற்பத் துணிந்து கேடுண்டு என்றிறுத்தல் துணிந்து சொலல் என்பதன்பாற் பட்ட விடை என்பது கருத்து.

“துன்பம் தோற்றம் பற்றே காரணம்
இன்பம் வீடே பற்றிலி காரணம்”

என்பது நம் கோட்பாடுகள் ஆகலின், செத்தான் பிறப்பானோ பிறவானோ என்றெழுந்த வினாவிற்குச் செத்தவனுடைய இயல்பறிந்து விடையிறுத்தல் வேண்டும் என்பார் கூறிட்டு வினவி அவன்தரும் விடைக்குத்தக நீ விடை கூறுக என்பார் கூறிட்டு மொழிதல் என்றார்.

இனி முட்டை முந்திற்றோ பனை முந்திற்றோ என்று வினவுவான் விடைபெற விரும்பி வினவியவன் அல்லன் ஆகலின், அவ்வினா விதண்டா வாதத்தின் பாற்படும். அத்தகையவனுக்கு அவ்விதண்டைக் கேற்ப விடையும் விதண்டையாக விருப்பின் அவன் வாயடங்குவன் என்பார் அங்ஙனம் வினவியவனை நோக்கி எம்முட்டைக்கு எப்பனை என்று எதிர் வினா வெழுப்பி வாயடங்கும்படி செய்தல் வேண்டும் என்பதே இவ் வினாவின் குறிக்கோள் என்றறிக.

இவ்வாறன்றி ஆசிரியர் தொல்காப்பியனார் சொல்லதிகாரத்திற் கூறுகின்ற “வினாவும் செப்பே வினாவெதிர் வரினே” எனக் காட்டிய இலக்கணத்திற்கும் இதற்கும் இயை பொன்றுமில்லை. என்னை முட்டை முந்திற்றோ பனை முந்திற்றோ என்னும் வினா அறியான் வினாவும் அன்று, ஐயவினாவும் அன்று. அறிபொருள் வினாவும் அன்று. ஒரு புடையானும் அறியப்படாத பொருள் பற்றிச் செருக்கினாலாதல் அறியாமையினாதல் மாற்றாராகிய சமயக் கணக்கர்களால் வினவப்படுவதாம். எனவே இஃதொரு வினாப் போலியே ஆம். ஆகவே இதற்கு விடையும் போலியே

யாகக் கூறி விடுத்து மாற்றூர் மீண்டும் வினவாவகை அடக்குதற் பொருட்டென்றுணர்க. இஃதறியாது இதனை அந்நூற்பாவிற்கு எடுத்துக் காட்டிய தெய்வச் சிலையாரை உள்ளிட்டார் உரை போலி என்றொழிக. என்னை? இவ்வினா வெதிர் எம்முட்டைக்கு எப்பனை என்றெழுப்பும் எதிர்வினா, விடையிறுத்தற் பொருட்டாகாமையும் அங்ஙனம் வினவப்பட்டான் அதற்கு விடையிறுக்க முன்வாராதடங்குதலே இயல்பாதலும் நுண்ணிதினுணர்க.

வாய்வாளாமை என்றதும் தம் சமய நூலுணர்ச்சியில்லாத மடவோர் வினாவிற்கு வாய்வாளாமையே தக்க விடை என்றறிவுறுத்தபடியாம். ஈண்டுக் கூறும் வினா விடைகள் தத்துவம் பற்றிப் பிறப்பன ஆதலின் தாம் இல்பொருள் என்று கொள்ளும் ஆன்மா முதலியவற்றின் இயல்பு வினவுவார்க்கு விடை வாய்வாளாமையேயாம் என்றறிவுறுத்தவாறாயிற்று. அங்ஙனம் இல் பொருள் பற்றிய வினாவென்றற்கே ஆகாயப்பூப் பழையதோ புதியதோ என்று புகல்வான் உரைக்கு மாற்றம் உரையாதிருத்தல் என்று எடுத்துக் காட்டினர். இனி இங்ஙனமே—

'சம்யுக்த நிகாயம்' என்னும் பௌத்த நூலில் வச்சகோத்திரன் என்ற ஒரு துறவி கௌதமபுத்தரிடம் சென்று ஆன்மா என்று ஒன்று உண்டோ என்று கேட்ட பொழுது புத்தர் மாற்றம் உரையாதிருந்தனர் என்றும், ஆனால், அங்ஙனம் ஒன்று இல்லையோ என்று அவன் மீண்டும் வினவிய போதும் அதற்கும் புத்தர் மாற்றமேதும் கூறாமல் வாய்வாளாதிருந்தார் என்றும் கூறப்பட்டிருத்தல் ஈண்டு நினைவு கூரற்பாற்று.

இவ்வாற்றால் ஈண்டு வினா விடை நான்குள என்றது தத்துவ ஆராய்ச்சி பற்றிய வினா விடை என்றுணர மாட்டாது, சொல்லாராய்ச்சியின் பாற்பட்ட வினா விடைகளோடு படுத்துக் கூறும் உரைகள் போலியாம் என்றறிக.

## கட்டும் வீடும்

### உருo-உருரு : கட்டும்......காரணம்

(இ - ள்.) கட்டும் வீடும் அதன் காரணத்தது - கட்டாதல் விடு ஆதல் அஃததற்கியன்ற காரணத்தினாலுண்டாகும் காரியமேயாம்; ஒட்டித் தருதற்கு உரியோர் இல்லை - பிறந்தோன் ஒருவனைச் சார்ந்து அக் கட்டினைச் செய்தற் குரியோராதல் அக் கட்டினின்றும் விடுதலை உண்டாக்கித் தருதற்குரியோராதல் பிறர் யாருமில்லை; யாம் மேல் உரைத்த பொருள்கட்கு எல்லாம் - யாம் முன்பு கூறிய பன்னிருவகைப் பொருள்கட்கு எல்லாம்; காமம் வெகுளி மயக்கம் காரணம் - காமமும் சினமும் மயக்கமும் ஆகிய மூன்றுமே காரணங்களாம் என்றார் என்க.

(வி - ம்.) கட்டு - பிறப்பினிற் கட்டுண்டு மண்டில வகையாற் சுழலுதல். வீடு - பிறப்பின் சுழற்சியினின்றும் விடுதலையடைதல்.

ஒருவனைப் பிறப்புச் சுழலிற்படுமாறு கட்டி வைத்தற் குரியாரும், அதனின்றும் வீடு செய்தற்குரியாரும் பிறர் இல்லை என்றவாறு. எனவே அவ் விரண்டிற்கும் உரியவன் அவனே என்றவாறாயிற்று. காமம் - வேட்கை. வெகுளி - சினம். மயக்கம் - பேதைமை. காமம் உடம்பிற் றோன்றும் தீவினை எனவும், வெகுளல் உள்ளத்திற் பிறக்கும் தீவினை எனவும் மயக்கத்தைப் பொல்லாக் காட்சி என்று கூறி இதுவும் மனத் தின்கட் பிறக்கும் தீவினை என்றும் இக் காதையில் சுஅ ஆம் அடி முதலாக எஉ ஆம் அடியீறாக வருகின்ற தீவினை வகையிற் கூறப்பட் டிருத்த லறிக. அங்ஙனம் கூறினும் எல்லாத் தீவினைகளும் இம் மூன்றனுள் அடங்கு மென்பார் காமம் வெகுளி மயக்கம் காரணம் என்றார்.

''காம வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்'' (குறள், ௩௬0)

எனவரும் திருக்குறளும் ஈண்டு நினைக்கப்படும்.

## துன்பம் துடைக்கும் நெறி

உ௫௭-உ௬௭ : அநித்தம்......நோற்றனளேன்

(இ - ள்.) அநித்தம் துக்கம் அநான்மா அசுசி எனத் தனித்துப் பார்த்து - மணிமேகலையே இனி வாமனர் மெய்க்காட்சி களுள் நான்காவதாகிய துன்பம் துடைக்கும் நெறிகூறுவல் கேட்பாயாக! யாம் முன்பு தொகைவகையானும் விரிவகை யானும் கூறப்பட்ட பேதைமை முதலிய பன்னிருவகைப் பொருள் களும் ஒருகணப் பொழுதும் நிலையாதனவும் துன்பந் தருவனவும் ஆன்மா இல்லாதனவும் தூய்மை யில்லாதனவும் ஆகும் என்று அவற்றின் இயல்புகளை வீற்று வீற்றாய் வேதனை செய்யுமாற்றால் தனித்தனியே ஆராய்ந்து பார்த்து; பற்று அறுத்திடுதல் - காமங் காரணமாக வுண்டாகிய பற்றினைத் துவர அறுத்தொழிக; மைத்திரி கருணா முதிதை என்று அறிந்து - இதற்குச் சிறந்த கருவி மைத்திரி பாவனையும் கருணைப் பாவனையும் முதிதைப் பாவனையும் ஆகிய இப்பாவனைகளேயாம் என்று அவற்றின் இயல்பறிந்து அவற்றை மேற்கொள்ளுமாற்றால்; திருந்தும் நல் உணர்வால் செற்றம் அற்றிடுக - திருந்திய நன்மையுடைய் மெய் யுணர்வினாலே இரண்டாவதாகிய சினந் தவிர்ந்திடுக; சுருதி சிந்தனா பாவனா தரிசனை கருதி உய்த்து - மெய்ந்நூல் கேட்டலும் கேட்டவற்றை ஆராய்ந்து தெளிதலும் தெளிந்தவாறே பாவித் தலும் மெய்யுணர்தலும் ஆகியவற்றை ஆராய்ந்து வாழ்க்கையின் பால் அவற்றைக் கடைப்பிடியாக மேற்கொண்டு செலுத்தியும்; மயக்கம் கடிக - இவற்றிற் கெல்லாம் முதலாயமைந்த பேதைமை யாகிய மயக்கத்தைப் போக்குக!; இந் நால்வகையான - இந்த

நான்குவகையுபாயங்களாலே; மனத்திருள் நீங்கு என்று - உள்ளத்தின் கண்ணதாகிய அறியாமை யிருளினின்றும் நீங்கி உய்வாயாக! என்று; மூன்பின் மலையா மங்கல மொழியின் - வாமன் திருவாய் மலர்ந்தருளிய முன்றுக்குப்பின் முரண்படாத ஆக்கந்தரும் மெய்ம் மொழியினாலே; ஞானதீபம் நன்கனம் காட்ட - அறவண அடிகளார் அம் மணிமேகலை யுள்ளத்திலே அறிவுச்சுடர் கொளுவி ஐயந் திரிபறுமாறு நன்றாகக் காட்டா நிற்றலாலே; பாவை - திருமகள் போல்வாளாகிய அம் மணிமேகலை தானும்; தருமம் கேட்டு - அந்த அறவுரைகளை விழிப்புடன் கேட்டு; பவத்திறம் அறுக என - அநாதியாக மண்டில வகையாற் சுழன்று வருகின்ற தன் பிறப்பினது தன்மை அற்றொழிவதாக வென்றுறுதி கொண்டு; தவத்திறம் பூண்டு - தவத்திற்கியன்ற பண்புகளை மேற்கொண்டு; நோற்றனள் - அதற்கியன்ற நோன்புகளை நோற்கலுற்றனள்; என்பதாம்.

(வி - ம்.) அநித்தம் - பொருள்கள் நிலையாமை யுடையன. ஈண்டு ஆசிரியர் பரிமேலழகர் திருக்குறளின்கண் (அதி-கூச) நிலையாமை என்பதற்கு—"அவற்றுள் நிலையாமையாவது தோற்ற முடையன யாவும் நிலையுதலிலவாந் தன்மை. மயங்கிய வழிப் பேய்த்தேரிற் புனல் போலத் தோன்றி, மெய்யுணர்ந்தவழிக் கயிற்றில் அரவு போலக் கெடுதலிற் பொய்யென்பாரும் 'நிலை வேறுபட்டு வருதலாற் கணந்தோறும் பிறந்திறக்கும் என்பாரும் ஒருவாற்றான் வேறுபடுதலும் ஒருவாற்றான் வேறுபடாமையும் உடைமையின் நிலையுதலும் நிலையாமையும் ஒருங்கே உடையவென்பாரும் எனப் பொருட்பெற்றி கூறுவார் பல திறத்தாராவார்; எல்லார்க்கும் அவற்றது நிலையாமை உடம்பாடாகலின் ஈண்டு அதனையே கூறுகின்றார். இஃதுணர்ந்துழி யல்லது பொருள்களிற் பற்று விடாதாகலின் இது முன் வைக்கப்பட்டது' என்றறிவுறுத்துவதும்,

ஆசிரியர் தொல்காப்பியனார்—

"பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே"

என அறிவுறுத்தும் பண்டைத் தமிழர் நூனெறி வழக்கமாகிய காஞ்சித் திணையியல்பும் நினைவிற் கொள்ளற் பாலனவாம்.

துக்கம்-துன்பம். பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம் என்றும், "குற்றமும் பயனும் விளைந்து நிலையிலவறிய துன்பம் என நோக்க" எனவும், "பிணியெனப்படுவது சார்பிற் பிறிதாய் இயற்கையிற் றிரிந்து உடம்பு இடும்பை புரிதல்" என்றும், தோற்றம் சார்பின் மூப்புப் பிணி சாக்காடு அவலக் கவலை கையாறெனத் தவலில் துன்பம் தலைவரும் என்றும், நான்காம் கண்டம் பிறப்பே பிணியே மூப்பே சாவென மொழிந்

திடும் துன்பம் என்றும், துன்பத் தோற்றம் என்றும் இவ்வாறு இந்நூலில் பற்பல விடங்களிலே பன்னிப்பன்னி அறிவுறுத்தலாலும் உணர்க.

அநான்மா-உயிரற்ற பொருள். ''எப்பொருளுக்கும் ஆன்மா இலை என இப்படி யுணரும் இவை விட்டியல்பாம்'' எனவும், ''வைசேடிகன் பௌத்தனைக் குறித்துச் சுகம் முதலிய தொகைப் பொருட்குக் காரணம் ஆன்மா என்றால் சுகமும் ஆன்மாவும் தாம் இசையாமையில் அப்பிர சித்தோபயம்'' என்றும் இந்நூலிற் கூறப்படுதலாலும் பௌத்தர்கள் அநான்மவாதிகள் எனப்படுவர். இதனை,

''இன்னவகை பகர்ந்தவிவை நான் கல்லாற் பொருள் இலவாயிருக்க ஆன்மா, மன்னிய விண் காலந்திக்கு இறையும் உளவெனச் சிலர்தாம் வகுத்தல் என்னே!'' எனவரும் மெய்ஞ்ஞானவிளக்கத்தாலும் (புத்த... செய் - கஙி) உணர்க.

அசுசி - தூயன அல்லாதன. இதனை, ''புனைவன நீங்கிற் புலால் புறத்திடுவது...மக்கள் யாக்கை'' எனவும், ''என்பும் தடியும் உதிரமு மியாக்கையென்று அன்புறு மாக்கட்கு அறிய வழுவொடு கிடந்த புழு லூன் பிண்டத்து'' எனவும், ''கழுநீர்க் கண்கள் வழுநீர் சுமந்தன குமிழ் மூக்கிவைகாண் உமிழ்சீ யொழுக்குவ'' எனவும் வருவனவற்றாலுணர்க.

யாக்கையின் நிலையாமை முதலிய இந்த நான்கு இயல்பினையும் சிறப்பாக ஆராய்ந்து நோக்குவார்க்கு அதன்கண் பற்றுவைத்தற்குரிய பெருந்தகைமை சிறிதும் தோன்றாமையின் பற்றறுதி யுண்டாகும் என்பார், ''தனித்துப் பார்த்துப் பற்றறுத் திடுதல்'' என்றார். அறுத்திடுதல் என்றது அல்லீற்று உடம்பாட்டு வியங்கோள், மக்கட்பதடி எனல் என்புழிப்போல.

அசுசி என்பதனை அசுப பாவனை என்பர். மைத்திரி - மித்திரத் தன்மை; அஃதாவது : எவ்வுயிர்க்கும் கேண்மை பூண் டொழுகுதல். இதனை—

''அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்'' (குறள், கூ0)

என்பதனானும்,

''மன்னுயி ரோம்பி அருள்ஆள்வார்க்கு இல்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை'' (குறள், உசச)

என்பதனானும் உணர்க.

கருணை - கருணை. அஃதாவது - எவ்வுயிரிடத்தும் இரக்கமுடைய காதல். முதிதை - இன்ப துன்பங்களைச் சமமாகக் கொண்டு எப்

பொழுதும் மகிழ்ந்திருத்தல். மைத்திரி முதலிய இம்மூன்றனோடு பொருள் நிலையில துன்ப முடையன உயிரில்லாதன தூயவல்லாதன என்னும் நான் குணர்வானும் உண்டாகின்ற இகழ்ச்சியானும், காம வெகுளி மயக்கங் களைக் கடிந்து இவற்றின்பாற் பற்றறுத்திடுக. மேலும் திருவற மூர்த்தி யாகிய புத்தர் அருளிய பிடக நூல்களைக் கேட்டும் ஆராய்ந்தும் தெளிந்த வழி மெய்யுணர்வு தோன்றும். அது தோன்றவே அனைத்தும் தானே ஆகிய பேதைமையும் அகலும். இவ் வுபாயங்களாலே அதனைக் கடிக என்று அறவண அடிகளார் மெய்யுணர்வு கொளுவினார் என்க. அது கேட்ட மணிமேகலையும் அவர் காட்டிய நன்னெறி நின்று பிறப் பொழிக! என்னும் மேற்கோளோடு நோற்றனள் என்க.

இனி, இதனை உணர்ந்தோள் சென்று அடைந்தபின் காட்டக் கேட்டுப் பூண்டு நோற்றனள் என்று இயைத்துக் கொள்க.

பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை

முற்றிற்று.

மணிமேகலைக்குப்

பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனார்

வகுத்த சொற்பொருள் உரையும் விளக்க வுரையும்

முற்றுப் பெற்றன.

## மணிமேகலையின் மாண்பு

இம் மணிமேகலைக்கண் சொல்நுட்பம் பொருள் நுட்பம் ஆகியன பெரிதும் அமைந்திருத்தலின் கற்பார்க்குக் களிபேருவகை யளிக்கும் ஆழ்ந்த கருத்துகள் ஆராய்வார்தம் அறிவு நலத்திற்கேற்பத் தோன்றுவனவாம் என்பது துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளாரின் பின்வரும் திருவெங்கைக் கோவைச் செய்யுளால் இனிது பெறப்படும்.

மந்தா கினியணி வேணிப்பி
　　ரான்வெங்கை மன்னவநீ
கொந்தார் குழன்மணி மேகலை
　　நூனுட்பங் கொள்வதெங்ஙன்
சிந்தா மணியுந் திருக்கோ
　　வையுமெழு திக்கொளினும்
நந்தா உரையை எழுதலெவ்
　　வாறு நவின்றருளே.

அருஞ்சொல் — காதை - அடி

இசையுந - ஒத்திருப்பன ௩-௧௫௭
இஞ்சி - மதில் ௫-௧௧௫
இடங்கர் - முதலை ௨௮-௧௮
இடங்கழி காமம் - வரம்பின்றிப் பெருகிய காமம் ௧௮-௧௧௯
இடபம் - இடபராசி ௧௫-௨௩
,, ,, வைகாசி ௧௧-௪௰
இடர் - துன்பம் ௧௪-௨௰
இடவயின் - இடத்தில் ௧௫-௪
இடர்வினை - தீவினை ௨௧ ௨௧
இடிக்குரல் முழக்கம் - இடிமுழக்கம் போன்ற பேரொலி முழக்கம் ௧-௨௨
இடுக்கண் - துன்பம் ௨௪-௨௬
இடுமணல் - எக்கரடித்த மணல் ௧௭-௨௬
இடும்பை - துன்பமொழி ௩-௬
இணர் - பூங்கொத்து ௭ - ௧௱
இணை - இரண்டு ௨௩ - ௪௫
இதன்பால் - இவ்வூரினிடத்தில் ௯ - ௨௩
இதை - கப்பற்பாய் ௧௪ - ௮௧
இந்திர கோடணை - இந்திர விழா ௫ - ௯௪
இந்திர திருவன் - இந்திரனைப் போன்ற செல்வமுடையவன் ௧௯ - ௧௧௬
இந்திர மருமான் - இந்திரனுடைய வழித்தோன்றல் ௨௬ - ௧௬௪
இந்திரவிகாரம் - இந்திரனால் அமைக்கப்பட்ட ஏழு அரங்குகள் ௨௬ - ௫௫
இப்பி - சிப்பி; கிளிஞ்சில் ௨௭ ௬௪
இமிரா - மூசுதல் செய்யாத ௩-௪௯
இமிர்தல் - ஒலித்தல் ௩ - ௪௯
இமிழ் முழக்கம் ௧௭ - ௫௰
இம்பர் - இவ்வுலகம் ௨௬-௩௮
இம்மை - இப்பிறப்பு ௩ - ௯௬
இயக்கம் - செல்லுதல் ௨௫-௮
இயல்பு - இயல்பென்னும் அளவை ௨௭ - ௪௭
இயமானன் - உயிர் ௨௭ - ௮௯
இயவு - வழி ௧௩ - ௧௬

இரங்கல் - இரங்காதே; வருந்தாதே ௬ - ௧௬௪
இரத்தல் - ஒன்றை வேண்டுதல் ௩ - ௧௰௩
இரத்தி - இலந்தை ௬ - ௮௯
இரவிவன்மன் - அசோதர நகரத்து அரசன் ௭ - ௯௮
இரிய - கெட; நீங்க ௨௧ - ௧௬௫
இரியல் மாக்கள் - இழிந்த பக்கள் ; விரைந்தேகுவோர் ௧௩ - ௮௨
இருக்கை - இருப்பிடம் ௪ - ௧௧௫
,, ,, கட்டில் ௧௬ - ௬௭
இருங்கடல் - பெரிய கடல் ௮ - ௧
இருங்கோவேட்கள் - குயவர் ௨௮ - ௩௪
இருசுடர் - ஞாயிறும் திங்களும் ௨௭ - ௮௯
இருடி - முனிவன் ௧௩ - ௬௬
இருத்தி - சித்தி ௨௬ - ௬௧
இருபாற்பெயரிய - பட்டினப்பாக்கம் மருவூர்ப்பாக்கம் என்னும் இரு பகுதியாகிய பெயர்களையுடைய ௪ - ௩௯
இருமை - பெருமை ௧௭ - ௩௰
இருள் மயக்கம் - இருட்கலப்பு ௧௪ - ௩
இலங்கிதழ் - விளங்குகிற இதழ் ௩ - ௧௰
இலஞ்சி - பொய்கை ௪ - ௭
இலவந்திகை - இயந்திரவாவி ௩ - ௪௫
இலவு - இலவம் பூ ௨௰ - ௫௧
இலி - இல்லாதவன் ௧௬ - ௧௰
இழிந்து - இறங்கி ௨௫ - ௩௧
இழுகிய - தீற்றிய ௬ - ௪௩
இழுக்கி - வழுக்கி வீழ்ந்து ௨௰ - ௫௫
இழும் என் சும்மை - இழும் என்னும் ஒலி ௧௪ - ௨௭
இளங்காற் செல்வன் - இளந்தென்றற் காற்று ௧௯ - ௧௰௧
இளங்கோன் - உதயகுமரன் ௫ - ௧
இளி - இசை ௧௯ - ௨௬
இளிவு - அருவருப்பு ௬ - ௬௮

அருஞ்சொல் காதை - அடி

இறந்த பிறவி - போன பிறப்பு ௨௫ - ௭௮
இறவின் உணங்கல் - இறா மீன் வற்றல் ௨௦ - ௪௯
இறுதி - முடிவு ௩ - ௯௯
இறுத்தல் - தங்குதல் ௫ - ௧௪௧
இறுத்தோர் - கொடுத்தோர் ௯ - ௧௫௦
இறு நுசுப்பு-ஒடிந்துபோகக் கூடிய இடை ௯ - ௭
இறுப்ப - தங்க ௨௫-௧௮௪
இறும்பு - குறுங்காடு ௧௯ - ௯௭
இறும்பூது - வியப்பு ௨௪ - ௩௦
இறுவரை - பெரிய மலை ௨௯ - ௩௦
இறை - இறப்பு ௭ - ௭௦
இறை கொள்ளுதல் - தங்குதல் ௪ - ௯௯
இறை - சிறிது ௧௮ - ௯௯
இறைஞ்சுதல்-வணங்குதல் ௨௯-௧
இற்று - இத்தன்மை யுடையது ௩௦ - ௪௮
இனைதல் - வருந்தல் ௩ - ௧௫௮
இன்சீர் - இனிய தாளவொற்று ௯௯ - ௨௯
இன்பம் - முத்தியின்பம் ௩ - ௯௯
இன்மை - ஒரு பொருளின் இல்லாமை ௨௭ - ௫௧
இன்னணம் - இவ்வாறு ௮ - ௧
இன்னாப் பிறவி - துன்பத்தைக் கொடுக்கும் பிறப்பு ௨௫ - ௪௮
ஈண்டுதல் - திரளுதல்; ஒன்றுசேர்தல் ௧௪ - ௨௫
ஈண்டு நீர் - கடல் ௧௪ - ௨௮
ஈமம் - பிணஞ்சுட அடுக்கிய விறகடுக்கு ௧௯ - ௨௩
ஈர்த்தல் - இழுத்தல் ௭ - ௫௫
ஈறுகடை - முடிபின் இறுதி ௨௧ - ௧௪௪
ஈற்றிளம் பெண்டிர் - மகவீன்ற இளம் பெண்கள் ௭-௮௧
ஈனோர் - இவ்வுலகத்தில் உள்ளவர்கள் ௨௧ - ௧௩௨
உகிர் - நகம் ௨௦ - ௫௯
உகுத்தல் - சொரிதல் ௯ - ௪
உகுநீர் - சிந்துகிற கண்ணீர் ௩ - ௨௨
உச்சிமீமிசை - மேலிடம் ௧௧-௨௨
உஞ்சை - உச்சயினி நகரம் ௧௫ - ௯௪
உடங்கு - ஒருங்கு யாவும் ௨௭-௩௨
உணங்கல் - வற்றல் ௧௯-௯௭
உணர்ந்ததை உணர்தல் - மீண்டும் உணர்தல் ௨௭-௯௦
உண்டாநெறி - சம்பவம் ௨௭-௧௨
உண்ணா நோன்பி - உண்ணா விரதமுடையவன் ௩-௧௦௨
உதைத்தல் - உந்துதல் தள்ளிக் கொண்டுசெல்லுதல் ௧௯ - ௧௪
உபத்தம் - ஆண், பெண் உறுப்பு ௨௭ ௨௩௭
உபநயம் - துணிந்தது துணிதல் ௨௯ - ௫௭
உபயம் - சபக்கம் விபக்கமாகிய இரண்டிடத்தும் ௨௯ - ௨௫௫
உபாசகர் - பௌத்தரில் இல்லறத்தோர் ௨௮ - ௧௨
உமிழ்சி-வெறுக்கத்தக்கசீ ௨௬-௪௮
உம்பர் - மேலிடம் ௨௯ - ௩௮
உம்பளம் - உப்பளம் ௨௪ - ௨௭
உம்மைவினை - பழவினை ௨௯-௩௨
உயக்கம் - வருத்தம் ௭ - ௯௯
உயங்கு நோய் - வாடுதலுக்குக் காரணமான நோய் ௩ - ௨
உயவல் - வருந்துதல் ௩ - ௯௦
உயா - வினவல் ௨௦ - ௯௩
உயிரீறு செய்தோர் - உயிரை விட்டு விட்டோர் ௨௨ - ௨௩
உயிர்த்து - பெருமூச்சு விட்டு ௨ - ௪௩
உயிர்ப் பதிப் பெயர்ப்பு - உடலில் இருந்து உயிரை நீக்குதல் ௧௪ - ௯௫
உயிர் மருந்து - சோறு ௨௫ - ௧௯௦
உயிர் முதல்வி - மணிமேகலை ௨௮ - ௨௩௭
உய்தி - பிழைப்பாய் ௨௫ - ௫
உய்ப்ப - செலுத்த ௧௯ - ௩௮
உய்யா நோய் - உயிர் உய்ய முடியாத நோய் ௨௩ - ௫௧

| அருஞ்சொல் | காதை - அடி |
|---|---|
| உய்யானம் - அரசர் விளையாடுஞ் சோலை | ௩ - ௫௨ |
| உரகர் - நாகர் | ௧௧ - ௭௦ |
| உரவுநீர் - கடல் | ௭ - ௧௨௫ |
| உரவோன் - அறவணவடிகள், அறிஞன் | ௨ - ௯௯ |
| உருகெழு - பகைவர்க்கு அச்சத்தைத் தருகிற | ௪ - ௨௮ |
| உருத்தல் ஒழியாது - ஊட்டாமற் போகாது | ௨௯ - ௩௨ |
| உருப்ப - அழல; வருத்த | ௧௫ - ௮௩ |
| உருப்பன - தோன்றுவன | ௨௪ - ௧௩௦ |
| உருப்பு - வெப்பம் | ௧௭ - ௫௯ |
| உருவிலாளன் - காமன் | ௫ - ௯ |
| உருவு - வடிவம் | ௭ - ௨௭ |
| உரைசால் - புகழ் நிறைந்த (பதிகம்) | ௪௫ |
| உரை முடிவு - தீர்ப்பு | ௪ - ௧௦௭ |
| உரை மூதாளன் - அறிவு மேம்பட்ட உரையாளன் | ௧௨ - ௪ |
| உலகம் - சான்றோர் | ௧ - ௧ |
| உலக விருத்தம் - உலக வியற்கைக்கு மாறுபாடாக உரைப்பது | ௨௯ - ௧௬௨ |
| உலந்த பிறவி - போன பிறப்பு | ௨௫ - ௧௩௫ |
| உலப்பு - கெடுதல் | ௬ - ௧௧௧ |
| உலையா - அழியாத | ௩௦ - ௩௧ |
| உவகை - மகிழ்ச்சி | ௧௨ - ௮௨ |
| உவப்பு - மகிழ்வு | ௧௫ - ௧௯ |
| உவமை - இருபொருளின் கண் கிடந்த ஒப்புமைத் தன்மை | ௨௭ - ௪௧ |
| உவாமதி முழுத் திங்கள் | ௨௨ - ௧௩ |
| உழத்தல் - வருந்திநீந்துதல் | ௨௯ - ௧௮ |
| உழந்த - அடைந்த, வருந்திய | ௩ - ௫ |
| உழப்போர் - வருந்துவோர் | ௨௨ - ௧௭௯ |
| உழிஞ்சில் - வாகை; உன்னம் | ௯ - ௮௦ |
| உழிஞைப் படை - மதில் வளைக்கும் பகை மன்னர் படை | ௨௮ - ௩ |
| உழையோர் - பக்கத்தில் இருப்பவர் | ௩ - ௪௬ |
| உளைக்கும் - ஊளையிடும் | ௯ - ௧௧௧ |
| உள்வரிக் கொண்டு - வேறு வடிவங்கொண்டு | ௨௨ - ௩௯ |
| உள்வரிக் கோலம் - மறைந்த வேடம் | ௨௭ - ௨௮௮ |
| உறும் - பலனைத் தரும் | ௩ - ௭௪ |
| உறைபதி - தங்கியிருக்குமிடம் | ௧௨ - ௯௪ |
| உறையுள் - இருக்குமிடம் | ௧௯ - ௨௯ |
| உற்றுணருடம்பு - தீண்டியுணரும் உடம்பு | ௨௪ - ௩௭ |
| ஊக்குதல் - ஆட்டுதல் | ௧௯ - ௭௪ |
| ஊங்கண் - முன்பு | ௨௧ - ௧௮௧ |
| ஊடு சென்று ஏறல் - நடுவிடத்தில் மேலேறிச் செல்லுதல் | ௨௦ - ௨௧ |
| ஊட்டிருள் - பேரிருள் | ௭ - ௮௭ |
| ஊட்டினை - உண்ணுமாறு செய்தாய் | ௨௩ - ௯௨ |
| ஊண் - உண்ணல் | ௬ - ௧௧௭ |
| ஊண்தலை துற்றிய - உணவாக மாந்தர் தலை மூளையை உண்ட | ௯ - ௭௭ |
| ஊராநல் தேர் - வலவன் ஏவா வான ஊர்தி | ௬ - ௩௯ |
| ஊருநீர் - பரந்த நீர் | ௧௮ - ௯௨ |
| ஊர்காப்பாளர் - ஊரைக் காவல் புரிவோர் | ௭ - ௬௯ |
| ஊர்க்குறுமாக்கள் - ஊரிலுள்ள இளஞ்சிறுவர் | ௧௫ - ௫௯ |
| ஊர்திரை - வீசுகின்ற அலை | ௧௬ - ௧௪ |
| ஊழ் - முறைமை; நியதி | ௫ - ௧௯ |
| ஊழ்படுதல் - முறையே வளர்ந்து முதிர்ந்து கெடுதல் | ௩௦ - ௩௭ |
| ஊறு - பொறி புலன்களின் இயைபு | ௨௪ - ௧௦௬ |
| ஊன்கணினர் - மனிதர் | ௨௧ - ௧௨௮ |
| ஊன்பிணி அவிழவும் - தசையின் பிணிப்பு ஒழியவும் | ௨௫ - ௨௧௯ |
| எஃகு - வேல் | ௧௯ - ௨௯ |
| எஞ்சா மண் - குறையாத நிலம் | ௧௯ - ௧௧௯ |
| எஞ்சியோர் - இறவா திருந்தோர் | ௯ - ௪ |

எஞ்சுதல்-குறைதல்; தோற்றுப் போதல் ௩ - ௧௫௭
எடுத்தல் - உயர்த்தல் ௨௨ - ௯௪
எடுப்ப - ஏற்ற ௫ - ௧௩௪
எடுப்பியது - எழுப்பியது (பதிகம்) ௪௧
எட்டி குமரன்-எட்டி யென்னுஞ் சிறப்புப் பெயர் பெற்றவனுடைய மகன் ௪ - ௫௮
எண் - எண்ணம் ௧௧ - ௬௫
எண்கு - கரடி ௧௬ - ௬௮
எண்பிறக் கொழிய - எண்ணங்கள் எட்டாமல் நீங்க ௧௧ - ௬௫
எண்பேராயம் - கரணத்தியலவர், கரும விதிகள், கனகச் சுற்றம், கடை காப்பாளர், நகர மாந்தர், படைத் தலைவர், யானை வீரர், குதிரை வீரர் என்போர் ௧ - ௧௭
எதிர்ந்துளது - எதிர்ப்பட்டுள்ளது ௩ - ௪
எந்திரவாவி - வேண்டும் பொழுதுநீர்பெருக்கவும் கழிக்கவும் பொறிகள் அமைக்கப்பட்ட செய்நீர் நிலை ௨௮ - ௭
எப்படித்து - எத்தன்மைத்து ௨௭ - ௮௮
எம்மிறைக்கு - எந்தலைவனாகிய கோவலனுக்கு ௨௬ - ௧௧
எயிறு - பல் ௧௮ - ௫௨
எயிற்புறம் - மதிற் பக்கம் ௩-௪௫
எய்யா - அறியாத ௧௮ - ௮௫
எரி ஊட்டுதல் - தீயில் இடுதல் ௧௬ - ௯௮
எரிபொத்தி-அழலைமூட்டி ௧௬-௨௬
எருவை - கழுகில் ஒருவகை; பருந்து ௬ - ௧௧௭
எல் - இரவு ௧௩ - ௮௨
எல் - ஒளி ௨௨ - ௧௫௨
எல்லையாள் - ஒளிதங்கிய வளையலையணிந்த மனைவி ௨௬ - ௨௨
எவ்வம் - துன்பம் ௨௯ - ௨௫

எழில் - அழகு ௧௧ - ௭௮
எழினி - திரைச் சீலை ௫ - ௩
எழுதுவரி-பத்திக் கீற்று ௩ ௧௨௨
எள்ளினை-இகழ்ந்தாய் ௨௧-௧௦௫,௧
எள்ளும் - இகழும் (பதிகம்) ௧
எள்ளுரை - இகழ்ச்சிச் சொல் ௧௮ - ௧௦
எறிதரு கோலம் - அடிக்குங் கோலம் ௨௩ - ௪௦
எறிதல் - கோலால் அடித்தல் ௨௩ - ௪௦
எறிந்த - அழித்த ௧ - ௪
எறிபயம்-அடித்தலால் உண்டாகும் அச்சம் ௧௩ - ௮௨
என்கோ - என்பேனோ ௫ - ௧௦௩
ஏகதேசம் - ஓரிடம் ௨௯ - ௨௫௫
ஏ - அம்பு ௭ - ௧௨௭
ஏகதேச விருத்தி - ஓரிடத்தேபொருந்துதல் ௨௯-௨௫௫
ஏகாந்தம் - அநைகாந்திகம்; ஒன்றுபட்டது ௨௯ - ௨௭௪
ஏடா-ஆண்பால் முன்னிலைப் பெயர் ௧௪ - ௧௨
ஏடு - மலரின் மடல் ௧௯ - ௩
ஏதம் இல்நெறி-குற்றமற்ற நன்னெறி ௭ - ௩௧
ஏது - கருவி ௨௯ - ௫௭
ஏது நிகழ்ச்சி - காரணச் செயல் ௩ - ௪
ஏதுப்போலி - குற்றமுடைய ஏதுக்கள் ௨௯ - ௧௯௧
ஏத்துதல் - வணங்குதல் ௧௨-௧௦௨
ஏந்தல் - நிமிர்தல் ௬ - ௧௧௬
ஏமம் - பாதுகாவல்; இன்பம் ௩௦ - ௧௩
ஏமாந்திருத்தல் - ஏக்கற்றிருத்தல் ௧௪ - ௫௦
ஏமுற - இன்பமடைய ௨௧ - ௧௧௫
ஏலம் - மணம் ௨௩ - ௬௮
ஏற்றுரி - ஆனேற்றின் தோல் ௧ - ௨௧
ஏற்றூண் - இரந்துண்ணும் உணவு ௧௪ - ௭
ஏனாதி - படைத் தலைவர்க்கு அரசனளிக்கும் பட்டப் பெயர் ௨௨ - ௨௦௫

ஐதிகம் - உலகுரை ௨௭ - ௧௧
ஐது - அழகியது ௧௦ - ௨
ஐம்பெருங்குழு - அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதுவர், ஒற்றர் ௧ - ௧௭
ஐயரி உண்கண் - அழகிய அரிபடர்ந்த மையுண்ட கண் (பதிகம்) ௭௭
ஐயவி - வெண்சிறு கடுகு ௭ - ௭௩
ஐயென - வியக்கும்படி, விரைவாக ௧௨ - ௨௪
ஐவில் - ஐந்து வில்லளவு ௪ - ௮௯
ஒடிமரம் - பாய்மரத்தின் ஒடிந்த மரம் ௧௬ - ௧௪
ஒடுவை - ஒருவகை மரம் ௬ - ௮௦
ஒட்டிய - சூளுரைத்த ௧ - ௬௦
ஒரீஇ - ஒருவி; நீங்கி ௪ - ௧௦௩
ஒருசிறை - ஓரிடம் ௨௪ - ௩௧
ஒருதலை - உறுதி ௧௧ - ௩௫
ஒருதனி - தன்னந்தனி ௧௪ - ௭௧
ஒருபத்தொருவர் - பதினொருவர் ௨௪ - ௮
ஒருபேரின்பம் - ஒப்பற்ற பெரிய இன்பம் ௯ - ௩௧
ஒழிந்தோர் - இறந்தோர் ௧௬ - ௨௦
ஒழிவின்று - தப்பாமல் ௨௩ - ௯௦
ஒளிறுவாள் - ஒளியை வெளிப்படுத்தும் வாள் ௧ - ௬௮
ஒள்ளியது - சிறப்புடையது ௨௧ - ௧௦௮
ஒறுக்கும் - தண்டிக்கும் ௧௯ - ௪௩
ஒற்கா - ஒல்கா; தளராத ௧௫ - ௧௮
ஒற்றன் - உளவறிந்து கூறுவோன் ௨௬ - ௨௭
ஒன்றுதல் - பொருந்துதல்; சேர்ந்து நிற்றல் ௧௯ - ௬
ஓங்குயர் - மிகவுயர்ந்த ௧௪ - ௫௪
ஓரா நெஞ்சம் - நிகழக் கூடியதை உய்த்துணர்ந்து கொள்ளாத மனம் ௩ - ௩௧
ஓடுதல் - பரவுதல் ௧௫ - ௫௩
ஓட்டிய - புறமுதுகிடச் செய்த ௩ - ௨௧
ஓதி - மெய்யறிவு ௫ - ௧௦௭
ஓதி - கூந்தல் ௨௩ - ௨௪
ஓதை - ஓசை ௭ - ௬௯
ஓத்து - மறை ௧௩ - ௨௫
ஓம்பல் - பாதுகாத்தல் ௧௪ - ௨௩
கங்குல் - இரவு ௬ - ௨௫
கச்சயம் - துச்சய மன்னனுடைய தலைநகர் ௧௦ - ௫௯
கச்சை - யானை அடிவயிற்றிற் கட்டுங் கயிறு ௧ - ௨௮
கஞ்சகாரர் - வெண்கலக் கன்னார் ௨௮ - ௩௫
கஞ்சம் - நீர் (பதிகம்) ௧௦
கஞ்சவேட்கை - நீரையுண்டாக்க வேண்டுமென்னும் விருப்பம் (பதிகம்) ௧௦
கஞ்சுகன் - மெய்ப்பை (சட்டை) யணிந்த கோத்தொழிலாளன் ௨௫ - ௧௧
கடகம் - கைவளை ௬ - ௧௧௪
கடம் - குடம் ௨௯ - ௨௭௧
கடம் - காடு ௨௩ - ௧௧௨
கடம் - கடன்; காணிக்கை ௩ - ௭௦
கடம் - அருநெறி; அரியவழி ௧௩ - ௪௧
கடம்பன் - முருகன் ௪ - ௪௯
கடல் வண்ணன் - திருமால் ௨௭ - ௯௮
கடல்வயிறு புகுதல் - கடல் கோட்குட்பட்டு மறைதல் ௨௪ - ௬௪
கடவார் - மாறுபட்டொழுகார் ௧ - ௧௦
கடவியம் - கடமையாகக் கொண்டுள்ளேம் ௧௮ - ௧௯
கடவுண் மண்டிலம் - கதிரவன் மண்டிலம் ௨௨ - ௧
கடவுள் எழுதிய - தெய்வமாகச் சமைத்த ௨௬ - ௪
கடாஅ யானை - மதங்கொண்ட யானை ௨௩ - ௧௨௦
கடாத்திறம் - மதங்கொண்ட தன்மை ௪ - ௪௯
கடாஅம் - மதநீர் ௧௯ - ௨௨
கடி - காவல்; காப்பு ௬ - ௧௦௫
கடி - பேய் ௬ - ௪௯
கடிஞை - பிச்சைப் பாத்திரம் (பதிகம்) ௬௩
கடிது - விரைவு ௧௯ - ௪௮

கடிப்பகை - பேய்க்குப் பகை; வேம்பும் வெண் சிறு கடுகும் எ - ௩௪
கடிப்பிடூஉம்-குறுந்தடியால் அடித்துமுழக்கும் க - ௬௧
கடிப்பு-பறையடிக்குந்தடி உ௫-௩௧
கடியின் காவல் - மணத்தின் பின் பாதுகாப்பு க௮ - ௬௮
கடுகுதல் - மிகுதல் க௪ - ௮0
கடுங்கண் - தறுகண்மை; அஞ்சாத தன்மை ௪ - ௪௬
கடுஞ்சூல் - முதற் கருப்பம் எ-௮௨
கடுஞ்சொல்-கேள்வியாலும் பயனாலும் இன்னாமை பயக்குஞ் சொல் ௯0 - ௬௮
கடுநகை - பெருநகை க௬ - ௬௧
கடுநவை-கொடிய துன்பம் ௬-௨௫
கடுவரல் - விரைந்து வருதல் கஎ - ௨௫
கடுவன் - ஆண் குரங்கு க௬ - எ௪
கடைகாப் பமைந்த-வாயில் காத்தற் கமைந்த உ௮ - ௨௧
கடைகொள-முடிவெய்த உக-கஎ௪
கடைப்பிடி - சித்தாந்தம் உஎ - ௪
கடைமணி - கண்ணின் கடைப் பகுதி ௯ - ௨௨
கட்டழல் - மிகுந்த நெருப்பு உ௩ - க௨
கட்டி - கருப்புக் கட்டி உஎ-உ௬௪
கட்டியதாகும் - சுற்றியுள்ள தாகும் உ௬ - ௯க
கட்டு-பிறப்பினிற் கட்டுண்டு மண்டில வகையாற் சுழலுதல் ௯0 - ௨௫0
கட்டுரை-பொருள் பொதிந்த சொல் உ௯ - ௫
கணவிரமாலை - அலரிப்பூமாலை ௯ - க0௪
கணி - காலக் கணிவன்; நிமித்திகன் உ௪ - ௫௬
கண் - ஞானம்; அஃதாவது மெய்யறிவு கக - ௬௬
கண் எறிதல் - அடித்தல் க௬-௮௨
கண்ட-அறிந்து கொண்ட உ௧-௯௨

கண்டம் - கழுத்து; கண்டத் தாற் பாடுதல்; மிடற் றுருவி க௬ - ௮௯
கண்ணடைத்தல்-இடத்தை மறைத்தல் க௨ - ௬0
கண்ணி - தலைமாலை க௮ - ௬௯
கண்ணி - கருதி உக - க௨௯
கண்ணிய - சொல்லப்பட்ட உஎ - உ௫
கண்ணிய துணர்தல் - எண் ணியதை யறிதல் உ - உ௫
கண்படை - உறக்கம் க௯ - கக௫
கண்மணி-கண்ணிடத்துள்ள கருமணி க௬ - ௪௮
கண்மாறி - கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து ௯ - ௪0
கண் மாறுதல் - விழித்தகண் இமைத்தல் ௯ - ௪0
கண்முரசு-முகத்தையுடைய முரசு க - ௬௬
கதலிகைக் கொடி - ஒரு வகைத் துகிற்கொடி க - ௫௨
கதழ்ந்து கிளர்ந்து-விரைந்து எழுந்து க௯ - ௪௮
கதி - பிறப்பு ௯0 - ௬௬
கதிக்குற - நடையில் மேம் பாடுற உ௮ - ௬௧
கதிர் - ஒளி ஞாயிறு (பதிகம்) க
கதிர்த்தானை - ஒளிகளாகிற படை ௪ - க
கந்சாலி-மணமுள்ள நெல் க0 - ௪௬
கந்தம் - தூண் உ௪ - க௬௨
கந்தவுத்தி - மணப் பொருளைத் தக்கபடி கலந்து செய்யும் முறை உ௮ - க௫
கந்து - தூண் எ - ௬௪
கந்துகக் கருத்து - பந்தாடு தொழில் உ - உ௨
கந்துகம் - பந்து உ - உ௨
கபிலை - ஊரின் பெயர் உ௬ - கஎ0
கம்பம் - நடுக்கம் கஎ - ௬௯
கம்பம் - முழக்கம் ௯ - க௨௬
கம்பலை - ஆரவாரம் ௯ - க௪௭

கம்பலை மாக்கள் - வெவ்வேறு காட்சிகளைக் கண்டு மயங்கித் திரிவோர் ௩ - ௧௪௭

கம்புள் - சம்பங்கோழி ௪ - ௧௨

கம்மியர் - தொழிலாளர் ௨௫ - ௧௨௪

கயக்கம் - தளர்ச்சி ௭ - ௭௫

கயக்கம் - கலக்கம் ௧௯ - ௮௫

கயவன் - இழிமகன் ௨௩ - ௯௪

கயற்கடை - கொக்கி; அணிகளைப்பொருத்துமிடம் ௩ - ௧௩௫

கரகம் - நீர்க்குண்டிகை (பதிகம்) ௧௨

கரணம் - செய்கை ௨ - ௨௦

கரண்டை - கரண்டகம், குண்டிகை, கரகம் ௩ - ௮௬

கரந்து - மறைந்து ௧ - ௬௫

கரந்துறை கணக்கு - மறைந்து வதிதற்கியன்ற முறை ௨ - ௨௬

கரப்பு - ஒளித்தல் ௨௨ - ௫௨

கராம் - முதலை ௨௮ - ௧௮

கராம் இடங்கர் - முதலை வகைகள் ௨௮ - ௧௮

கரி - சான்று; சாட்சி ௧௧ - ௧௨௦

கருகிய நெஞ்சு - இருண்ட மனம் ௨௨ - ௧௪௮

கருணை பாவனை - பிறவுயிர்கட்குண்டாகும் துன்பத்தை நீக்க விரைதல் ௩௦ - ௨௫௬

கருத்தளவு - அனுமானப் பிரமாணம் ௨௭ - ௨௫

கரும்புண் - பழம்பெரும் புண் ௧௮ - ௧

கருவுயிர்த்தல் - ஈனுதல் ௧௮ - ௫௫

கலக்குறுத்து - கலக்கத்தைச் செய்து ௪ - ௩௮

கலங்கஞர் - கலங்குதற்குக் காரணமான துன்பம் ௨௩ - ௮

கலம் - யாழ் முதலிய கருவி ௨௮ - ௪௨

கலம் - மரக்கலம் ௭ - ௭௦

கலம்பகர் பீடிகை - அணிகலம் விற்கும் அங்காடித் தெரு ௭ - ௧௨௨

கலாம் - கலகம் ௧ - ௯௩

கலுழ்தல் - கலங்கல் ௯ - ௪

கலை - ஆடை ௬ - ௧௧௨

கலைநியமம் - தென் மதுரையில் இருந்த கலைமகள் கோயில் ௧௩ - ௧௦௯

கல்லதரத்தம் - பருக்கைக் கற்கள் பொருந்திய சிறுவழி ௧௩ - ௩௯

கவயமா - காட்டுப் பசு ௨௭ - ௪௨

கவராக் கேள்வியோர் - ஐயத்திற் கிடமில்லாத கேள்வியை உடையவர்கள் ௯ - ௧௦

கவர் கோடல் - கண்ட பொருளை இரட்டுறவே கருதல் ௨௭ - ௨௨

கவான் - மடி (தொடை) (பதிகம்) ௨௭

கவிர் - முள் முருக்கு ௬ - ௧௨௩

கவினி - நன்மைகள் நிரம்பிப் பேரழகெய்தி ௧௮ - ௫௮

கவின் - அழகு ௨௧ - ௧௪௮

கவேர கன்னி - காவிரியாறு ௯ - ௫௨

கவேரன் - காவிரியைப் பிறப்பித்தவன் ௩ - ௫௯

கவையடி - பிளவுபட்ட பாதம் ௬ - ௧௨௫

கழி - மிகுதி ௧௨ - ௪௯

கழிவெண் பிறப்பு - மிக வெள்ளிய பிறப்பு ௨௭ - ௧௯௦

கழுமிய - கலந்த ௧௩ - ௧௮

கழூஉம் - போக்கும் ௨௫ - ௧௫௧

கழை - மூங்கில் ௨௦ - ௨௩

களர் - உவர்நிலம் ௩௦ - ௪௭

களவேர் வாழ்க்கையர் - களவுத் தொழிலையே உழவுத் தொழில் போற் கொண்டவர்கள் ௨௩ - ௧௨௯

களிப்பு மாண் - களித்து வாழ்தற்குப் பெரிதும் மாட்சியுடைய ௭ - ௨௯

களிமகன் - கள்ளுண்டு களிப் பவன் ங - க0ங

கள் அடு குழிசி - கள்ளைக் காய்ச்சுகிற பானை கசு - கூசு

கள்நொடையாட்டியர்-கள் விற்கும் வலைச்சியர் உஅ - ஙஉ

கள்ளாட் டயர்ந்து - கள்ளை யுண்டு விளையாடி சு - க0உ

கறவை--பசு, ஆ.: கஉ - கூங

கறையோர் கடமை கொடுப் போர் ககூ - கசுக

கற்குன்றம் - செய்குன்று ககூ-க0உ

கற்புக்கடன் பூண்டு - கற் புடைமையைக் கடமை யாகக் கொண்டு உசு - அ

கற்றலம்-கற்பாறை யாகிய இடம் உஅ - ககங

கனாமயக் குறுதல் - கனவி னால் மயக்கம்அடைதல் கக-க0ச

கனையெரி - மிகுந்தெரிகிற தீ உ - சஉ

கன்றிய - சினந்த உஅ - கஅ

கன்றிய - அடிப்பட்ட, முதிர்ந்த உஉ - உ0

கன்னல் - நாழிகை வட்டில் எ-கூச

கன்னி - சண்டு தூர்க்கை; சம்பாபதியுமாம் உஉ - உஎ

கன்னிக்காவல்-கன்னிப் பரு வப் பாதுகாப்பு கஅ - கூஅ

காசு - குற்றம் உசு - கரு

காஞ்சிநாடு - காஞ்சி நக ரத்தைத் தலைநகராகக் கொண்டமைந்தநாடு உஅ-கருகூ

காடமர் செல்வி - கொற் றவை சு - ருங

காணமிலி - பொன்னில்லா தவன் கசு - க0

காணம் - பொன் உங - சஅ

காணிய - காணும் பொருட்டு உசு - ச

காண்டற் பொருள் - கண் ணால் கண்ட பொருள் உஎ - ச0

காணதகு சிறப்பு - காணத் தக்கஅழகு கச - ஙகூ

காதலன் - புதல்வன் உஉ - ங0



காந்தமன் - காந்தன் என் னுஞ் சோழ மன்னவன் (பதிகம்) க0

காப்புக் கடை கழிதல் - கற் பொழுக்கம் நீங்குதல் கங - ரு

காமர் - விருப்பம் கஅ - ருக

காம்பு - மூங்கில் . உக - கக0

காயக் கரணம் - உடலால் நிகழுஞ் செய்கை உ - உரு

காயங்கரை - ஓர் ஆறு கூ - க0

காய்தல் - சினத்தல், வெகு ளுதல் உ0 - கச

காய்வெங் கோடை - முது வேனிற் பருவம் உரு - க0ரு

காராளர் - வேளாளர் எ - க0உ

காரிகை - அழகு உங - கங0

காரிகை மாதர் - மணிமேகலை ங - எ

காருக மடந்தை - இல்லறம் நடத்திய ஒருபெண் உங - க0ரு

காலக் கணிதர் - சோதிடர் உஅ - ச0

காலாகாயம் - காலமும் ஆகாயமும் உஎ - கஎங

கால் - காற்று கச - அ0

கால் கிளர்தல் - காற்றைப் போல் எழுதல் ககூ - உஉ

கால்கோள் - தொடக்கம் ங-கசச

காவல் தெய்வதம் - சம்பா பதி உ - உ

காவியங் கண்ணி - மணி மேகலை ரு - அ

காவிரிவாயில் - காவிரி கட லொடு கலக்குமிடம் உஉ - சங

காழியர் - பிட்டு வாணிகர் உஅ - கூஉ

காழோர் - குத்துக் கோற் காரர் ச - ஙரு

காழ் - குத்துக் கோல் ச - ஙரு

காழ் - வைரம் உஉ - கசஅ

காழ் ஊன்று விலோதம் - மூங்கில் நட்டுக் கட்டப் படுங் கொடி க - ருஉ

காழ்கொள - முற்ற உஉ - கஅசு

காழ்கொளின் - மிகுதிப்படு மாயின் ரு - உ

கானல் - கடற்கரைச் சோலை ௨௪ - ௨௮
கிரியை - தொழில் ௨௭ - ௨௪
கிருதகோடி - ஒரு முனிவர் ௨௭ - ௫
கிருத்தம் - செய்யப் படுவது ௨௯ - ௩௮௮
கிளவி - சொல் (பதிகம்) ௭௮
கிளை பயிர்தல் - இசைவகை
கிளை இசைத்தல் ௭ - ௪௯
குங்கும வருணம் - சிவந்த தொய்யிற் குழம்பு ௧௯ - ௮௭
குச்சரக் குடிகை - சம்பாபதி கோயில் ; சிறியகோயில் ௧௮ - ௧௪௫
குஞ்சி - குடுமி ; ஆண் மக்களின் தலைமயிர் ௨௨ - ௧௫௪
குடக்கண் - திரண்டகண் ௫ - ௧௩0
குடதிசை - மேற்குத் திக்கு ௫ ௧௨0
குடர்புய்த் துறுத்து - குடரைப் பிடுங்கி ௧௩ - ௪௭
குடர்த்தொடர்மாலை - குடரினால் தொடரப்பட்ட மாலை ௧௫ - ௧௩
குடிகை - குடிசை ௬ - ௬௩
குடுமி - உச்சி ; மலையின் கொடுமுடி ௨0 - ௨௨
குடைவோர் - அப்புவோர் ௧௯ - ௮௯
குணம் பலவேத்தி - பல குணங்களையும் புகழ்ந்து பாராட்டி ௨௯ - ௬
குண்டுநீர் - ஆழமாகிய நீர் ௮ - ௮
குப்பை - குவியல் ௧௬ - ௧௨௨
குமரன் - கலிங்க நாட்டுக் கபிலை நகர மன்னன் ௨௬ - ௧௬
குமரி - குமரியென்னும் ஆறு ௧௩ - ௭
குமரி - கன்னி ; பகவதி யென்னுந் தெய்வம் ௧௩ - ௭௪
குமரி மூத்த - கன்னிப் பெண்ணாக விருந்து வறிதே மூப்பினை யடைந்த ௨௨ - ௧௪௯
குமிழ் - குமிழம் பூ ௬ - ௧௨௩
கும்பம் - குடம் ௬ - ௯௪
குயிலுவக் கருவிகள் - குழல் முதலிய இசைக்கருவிகள் ௭ - ௪௫
குயிலுவர் - தோற் கருவிகளைப் பயில்வோர் ௭ - ௧௨௩
குயிற்றல் செய்தல் ௮ - ௪௭
குரம்பு - வரம்பு ௧௮ - ௩
குரல் - பூங்கொத்து ௮ - ௩௬
குரவர் - இருமுது குரவராகிய கோவலனுங் கண்ணகியும் ௩ - ௧௮
குரவை - குரவை யென்னுங் கூத்து ௧௯ - ௬௯
குரிசில் - பெருமை யுடையோன் ௧௮ - ௮௭
குருகு - குருக்கத்தி; மாதவி ௧௮ - ௫௫
குருகு கருவுயிர்ப்ப - பறவைகள் ஈனும் வண்ணம் ௧௮ - ௫௫
குருகு பெயர்க் குன்றம் - கிரௌஞ்ச மலை ௫ - ௧௩
குரூஉ - நிறம் ௧௩ - ௨௯
குவைஇய - குவித்த ௨௮ - ௪௯
குழலி - கூந்தலை யுடையாள் ௨0 - ௧௩
குழல் - கூந்தல் ௨௮ - ௬
குழவி - குழந்தை ௨௯ - ௫
குழிசி - பானை ௧௬ - ௬௬
குழீஇ - கூடி ௧ - ௧௮
குறங்கு - தொடை ௨0 - ௬௧
குறளை - கோள் ௨௪ - ௧௨௭
குறள் - குறுகிய வடிவம் ௧௯ - ௫௧
குறி - குறித்த இடம் ௨௫ - ௧௬௪
குறுநீர்க் கன்னல் - காலத்தை அளந்து காண்டற் குரியதொரு கருவி ௭ - ௬௪
குறுமாக்கள் - அறிவில்லாச் சிறியோர் ௧௫ - ௫௯
குறுவியர் - குறிய வியர்வை ௧௮ ௪0
குற்றம் - காம வெகுளிமயக்கம் ௫ - ௧00
குன்றங் கொன்றான் - முருகக் கடவுள் ௫ - ௧௩
கூஉம் - கூவுவான் ௩ - ௧௧0
கூஉய் - கூப்பிட்டு ௨ - ௮
கூக்குரல் - கூப்பீட்டு ஒலி ௧௩ - ௧௭
கூட்டம் - சமவாயம் ௨௭ - ௨௪௩
கூட்டுண்ணல் - ஒன்றுபடல்; சேர்ந்து நுகர்தல் ௭ - ௪௭

அருஞ்சொல் காதை - அடி

கூம்பு - பாய்மரம் ௪ - ௩௦
கூவியர் - அப்பவாணிகர் ௨௮ - ௩௩
கூவிளி - கூப்பீடாகிய முழக்கம் ௭ - ௬௭
கூறிட்டு மொழிதல் - பகுத்துச் சொல்லுதல் ௩௦ - ௨௩௯
கூறை - புடவை; ஆடை ௧௬ - ௩௦
கூற்று - கூற்றுவன் ௧ - ௩௦
கெழுதகை - நட்புரிமை ௨௫ - ௧௪
கேசகம்பளன் - நரி வயிற்றிற் பிறந்த ஒருமுனிவன் ௧௩ - ௬௫
கைத்து - கைப்பொருள் ௧௮ - ௧௬
கைத்தூண் - தீய வொழுக்கத்தால் கிடைத்த உணவு ௧௬ - ௬
கைங்கிறை-கை கொள்ளும் படி ௨௩ - ௪௮
கைபெய் - கையிற் கொண்டுள்ள ௩ - ௫௧
கைம்மலை - கையை யுடைய மலைபோல்வது; யானை ௨௬ - ௮௧
கைம்மை - சிறுமை; ஆராயாது செய்கை ௨௦ - ௧௨௨
கையகத்தாள் - கையிடத்தே யிருப்பாள் ௭ - ௫
கையற்று - வேறு யாதுஞ் செய்ய முடியாதவளாய் ௨ - ௭௫
கையாறு - மூர்ச்சித்தல் ௪ - ௧௧௮
கையுதிர்க்கோடல்-கையை அசைத்துப் போகச் செய்தல் ௧௬ - ௧௦
கைவிடலீயான் - கைவிடாதவனாய் ௫ - ௪௪
கைவினை - செய்தொழில் ௨௨ - ௮௫
கொடி - புருவம் ௩ - ௧௧௯
கொடைகெழு - வள்ளல் தன்மை பொருந்திய ௨௬ - ௩
கொட்பு - கொள்கை ௨௧ - ௭௭
கொண்டி மகளிர் - பொருளைக் கொள்ளும் பரத்தையர் ௧௮ - ௧௦௯
கொண்டோன் - கணவன் ௨௨ - ௫௧
கொப்பர் - கொப்பு; மரக்கிளை ௧௯ - ௫௭
கொலை - உடம்பொடு கூடி வாழும் உயிர்களை அவ்வுடம்புகளினின்றும் அகற்றுதல் ௩௦ - ௯௮

அருஞ்சொல் காதை - அடி

கொலைவன் - கொல்லுதலைச் செய்பவன் ௨௫ - ௧௭௪
கொழித்தல் - தெள்ளுதல் ௧௭ - ௨௫
கொளுத்துதல் - பொருத்துதல் ௪ - ௩
கொளை - பண்பாட்டு ௭ - ௪௭
கொள்கை - முறைமை; கோட்பாடு ௧௩ - ௭௪
கொற்கை-கொற்கை யென்னும் பெயருடைய ஊர் ௪௩ - ௮௪
கொற்றம் - வெற்றி ௨௩ - ௧௧
கொற்றவன் - அரசன் ௨௫ - ௧௮௯
கோங்கு - கோங்கமரம்; பாலைநிலக் கருப்பொருள்களுள் ஒன்று ௧௯ - ௯௭
கோசப்பிக் கோமகன் - கோசம்பி நகரத்தரசன் உதயணன் ௧௫ - ௬௧
கோடணை - ஆரவாரம் ௫ - ௯௪
கோடா - கோணுதலில்லாத (பதிகம்) ௨௩
கோடு - கரை ௨௪ - ௨௭
கோடு - மருப்பு; கொம்பு; கிளை ௧௯ - ௧௯
கோட்டம் - கண்ணகிகோயில் ௨௬ - ௫
கோட்டம் காவலர் - சிறையைப் பாதுகாப்போர் ௧௯ - ௪௮
கோட்டி - மன்றம், சபை ௧ - ௪௩
கோணச்சந்தி - கூடல்வாய்; வீட்டின் இறப்பு ஒன்றுபடுத்தி யிருக்கும் இடம் ௧௯ - ௧௧௩
கோணம் - தோட்டி; யானையை அடக்குங் கருவி ௧௮ - ௧௬௩
கோதமை - ஒருபார்ப்பனி ௬ - ௧௪௧
கோமகன் பீடிகை - புத்தனுடைய பாதபீடிகை ௧௧ - ௧௨௧
கோமுகி - மணிபல்லவத்தில் உள்ள ஒரு பொய்கை: இஃது ஆவின் முகம்போல் அமைந்தது. ௧௧ - ௩௯

கோலம் குயின்ற - அழகு செய்யப்பட்ட உஅ - கூஎ
கோலோன் - செங்கோலை யுடையவன் க - கூச
கோல்தொடி - திரட்சியாகிய வளையல் அ - சக
கோல்நிலை - செங்கோலின் நிலைமை எ - அ
கோல்முறை - செங்கோன் முறைமை; அரசநீதி கஅ - கசக
கோவலர் - இடையர் கரு - அகூ
கோவியன் வீதி - அரசர் பெருந்தெரு ச - ருஎ
கோவேட்கள் - குயவர் உஅ - கூச
கோள் - ஒன்பான் வகைக் கோள் எ - க
கோள்நிலை - கோள்கள் நிற்கின்ற தன்மை (பதிகம்) உச
சங்கயம் - ஐயம் உகூ - உரு0
சடையாட்டி - சடையை உடையவள் (பதிகம்) உ
சதுக்கத் தெய்வம் - சதுக்கப் பூதம் க - கூ
சந்தி - பலவழி ஒன்று சேருமிடம் சு - சுக
சபக்கம் - துணிபொருளை வற்புறுத்துதற்கு எடுத்துக் காட்டுகிற துணை மேற்கோள் உகூ - கருரு
சபக்க விபக்கம் - தன்பக்கமும் மறுதலைப் பக்கமும் உக - உஉகூ
சமந்தம் - சமந்தம் என்னும் மலை கக - கஉ
சமயக்கணக்கர் - சமய நூல்களில் வல்லவர்கள் (பதிகம்) அஅ
சம்பாதி - சடாயுவின் உடன் பிறந்தவன் ரு - கூச
சம்பாபதி - காவிரிப் பூம்பட்டினம் (பதிகம்) அ
சம்பு - நாவல் மரம் (பதிகம்) கூ
சம்புத்தீவு - நாவலந்தீவு கஎ - சுஉ
சயனுசனவான் - சயனுசனமாகிய உடைமைகளையுடையவன் உக - உகஅ
சயித்தம் - கோயில் உஅ - கருக
சலாகை - இரும்புச் சலாகை [illegible] கஉ - சுக
சன்னு - உள்பொருள் உகூ - ருசுரு
சாகை - கிளை (பதிகம்) கூ
சாதனம் - ஏது உகூ - உஅ0
சாதன வியாவிருத்தி - சாதனத் தன்மை மீட்சியுருமை உகூ - சகச
சாதன்மியம் - துணிபொருளோடு ஒத்த பண்புடைமை உகூ - கருஅ
சாதி - ஒரு நிகரனவாகிய பல பொருட்குப் பொதுவாவதொரு தன்மை உஎ - உரு
சாதுயர் - சாக்காட்டோடு நேரான துன்பம் கூ - சுக
சாதுவன் - ஆதிரையின் கணவன் கசு - ச
சாத்திய தன்மம் - துணிபொருளின் தன்மை உகூ - உஅரு
சாத்தியம் - துணிபொருள் உஎ - உக
சாந்தம் - சந்தனம் கசு - ருக
சாபசரத்தி - சாபமாகிய கணைகளை யுடையவள் கூ - சக
சாமானியம் பொதுமை உஎ - உசரு
சாயல் - மென்மை உ - கச
சாயை - நிழல்; வலிமை உ0 - கசக
சாரணர் - சஞ்சரிப்பவர் கசு - ககூ
சார்பில் தோன்றா - ஓரிடத்தில் தோன்றாத உஎ - க0ரு
சார்பு - பற்று உகூ - கஎக
சார்பு - அமைதி ச - க0க
சாலை - அறக் கோட்டம் உஅ - சுசு
சளரம் - பலகணி ச - கூரு
சிக்கு - வன்மை; திண்மை உஎ - கசரு
சிதவற்றுணி - கிழிந்து போன கந்தைத்துணி ரு - க0க
சித்தம் - உறுதி கா - அகூ
சித்திரம் - உருவம் கக - க
சிந்தனை - கேட்டவற்றை நினைவு கூர்தல் ரு0 - உகூஅ
சிந்தாவிளக்கு - கலைமகள் கரு - க0க
சிந்துபு - சிந்தி, ஈழ இறைத்து ரு - கருஅ

அருஞ்சொல் — காதை - அடி

சிந்தை - மனம் ௩ - ௭௪
சிந்தை நோய் - மனவருத்தம் ௧௫ - ௭௦
சிந்தா தேவி - கலைமகள் (பதிகம்) ௬௦
சிமயம் - உச்சி ௨௬ - ௮௮
சிமிலி - உறி ௩ - ௮௬
சிரல்-மீன்கொத்திப் பறவை ௪ - ௨௪
சிலம்பு - மலை ௨௮ - ௧௦௮
சில்பலி - சிறுபலி ௬ - ௯௫
சில்லை-மீன் கொத்திப் பறவை ௮ - ௨௯
சிவிறி - விசிறி ௨௮ - ௧௦
சிவிறி கொம்பு - நீர்வீசுங் கருவிகளுட் சில ௨௮ - ௧௦
சிறுபுழை - சிறியவாயில் ௭ - ௮௯
சிறுபுறம் - பிடர், முதுகு ௨ - ௫௧
சிறுபுறம் புதைப்ப-முதுகை மறைக்க ௨ - ௫௧
சிறுமை - குற்றம் ௨௩ - ௬௪
சிறை - பக்கம் ௧௮ - ௪௪
சிறை - அணை ௫ - ௧௯
சிறைக் கோட்டம் - சிறைச் சாலை (பதிகம்) ௭௧
சிறை வீடு செய்தது - சிறை யிலே யிருந்து வெளியே விட்டது (பதிகம்) ௮௦
சிற்றிடை முடுக்கர் - சிறிய இடமாகிய குறுந்தெரு ௭ - ௬௮
சிற்றில் - சிறிய இல்லம் ௨௨-௧௮௨
சினந்திருகி - முறுகிய சினத்தை யடைந்து ௨௨-௧௫௭
சினப்பாவம் - சினத்தால் உண்டாகிய தீவினை ௨௯ - ௩௯
சீத்தல் - அழித்தல்; கெடுத்தல் ௧௪ - ௯௯
சீத்து - நோக்கி ௧௪ - ௯௯
சீத்து - இடித்து ௧௯ - ௧௫௭
சீப்ப - ஓட்ட; போக்க ௨௨ - ௧
சீர்நிறுப்போர் - தாளவறுதி செய்வோர் ௧௯ - ௮௩
சீல உபாசகர்-பௌத்தருள் இல்லறத்தார் ௨௮ - ௧௨

அருஞ்சொல் — காதை - அடி

சீலம் - பஞ்சசீலம் முதலியன ௨௪ - ௧௩௭
சுகதன் - புத்தன் ௨௮ - ௯௫
சுகாதிகள் - இன்பம் முதலிய பண்புகள் ௨௯ - ௨௬௩
சுடர் - தீக்கொழுந்து ௬ - ௯௪
சுடர் வழக்கற்று - ஞாயிற்று மண்டிலம் தோன்று தொழிந்து ௧௦ - ௧௦
சுடலைக்கான் - சுடுகாடு ௧௬ - ௨௫
சுடுதல் - கொளுத்துதல் ௨௧ - ௧௨
சுடுமண் - செங்கல் ௩ - ௧௨௭
சுட்டல்-பொருள்மை காண்டல் ௨௭ - ௨௨
சுண்ணம் - மகரந்தப்பொடி; பூந்துகள் ௪ - ௧௮
சுந்தரச் சுண்ணம் - பொற்சுண்ணம் முதலியன செய்தல் ௨ - ௨௩
சும்மை - ஒலி ௬ - ௬௯
சுரத்தல் - பெருகுதல் ௧௪ - ௫௨
சுரியல்தாடி - சுருண்ட தாடி ௩ - ௧௧௬
சுருக்குவலை-இழுக்கும்போது சுருங்கிவரக் கூடிய ஒரு வகை வலை ௧௮ - ௧௦௬
சுருங்கை - மதகு ௧௨ - ௭௯
சுருங்கைத் தூம்பு-நீரோடுங் குழாய் வழிகள் ௨௮ - ௫
சுருதி - அறிவுரை கேட்டல் ௩௦ - ௨௫௮
சுருப்பு-சுரும்பு, வண்டு ௧௮ - ௧௦௫
சுரும்பு - மலை, வண்டு ௨௦ - ௧௦௭
சுவசனம் - தன்சொல் ௨௯ - ௧௬௦
சூதர் - நின்றேத்துவார் ௨௮ - ௫௦
சூது - சூதாடுதல், ஆயம் உருட்டுதல் ௧௪ - ௬௩
சூர் - அச்சம் ௧௬ - ௫௫
சூர்மலை - அச்சத்தைத் தருகிற மலை ௧௬ - ௫௫
சூழ்வோன் - சுற்றுவோன் ௫ - ௧௦
செங்குணக்கு - நேர்கிழக்கு (பதிகம்) ௧௩
செங்கோல்-செவ்விய கோல் முறை ௧௬ - ௫௦

